உ

சிவமயம்.

# ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகளால்

வடமொழியில் சுலோக வடிவமாகச் செய்யப்பட்டு

பின்னர்

## ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகளாலும்,
## ஸ்ரீ வீர. சுப்பையா சுவாமிகளாலும்

தமிழில் செய்யுள் வடிவமாக மொழிபெயர்க்கப்பட்ட

# ஸ்ரீ பஞ்சதசி

மூலமும்.

வேதாரண்யம், புனவாசல் மடங்களின் தலைவரும்,

கோவிலூர் மடாலயம் சன்னிதானம்

ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகரின் சிஷ்யருமான

பெருமாள் சுவாமி என்கின்ற

## மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகளால்

மூலவியாக்கியானுசாரமாக இயற்றப்பட்ட

உரையும்.

இவை

ஷை மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகளால்

வேலூர் (சேலம்) கருணாநிதி பவர் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டன.

1959.



ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள்
ஆறாவது சன்னிதானம்,
கோவிலூர் மடாலயம்.



ஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள்
ஏழாவது சன்னிதானம்,
கோவிலூர் மடாலயம்.



ஸ்ரீ மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகள்

உ

சிவமயம்

# முகவுரை.

இவ்வுலகின்கண் சகல சீவகோடிகளும் விரும்புவது, சுகத்தின் அடைவும் துக்கத்தின் நீக்கமுமாம். அஃதெங்ஙனமாமெனின் சில பாமர மக்கள் தார, புத்திர, தனாதிகளையே விரும்புகின்றனர். அற்ப விவேகிகள் சொர்க்கம் முதலிய போகங்களை விரும்புகின்றனர். மிக்க விவேகிகளோ நித்திய மோக்ஷத்தை விரும்புகின்றனர்.

இவ்வெல்லோராலும் விரும்பப்படுகின்ற போக மோக்ஷங்களுக்குச் சாதனங்களாகிய கருமம், உபாஸனை, ஞானமென்னும் இவைகள், பரமேஸ்வரனால் இயற்றப்பெற்ற வேத ஆகமங்களிலும், அவைகளை அநுசரித்துள்ள மநுஸ்மிருதி முதலியவைகளிலும் கூறப்பட்டுள்ளன. அச்சாதனங்களுள், சகாம கருமமும், சகாம உபாஸனையும், அநித்திய பயனைப் பயப்பனவாம். நிஷ்காமகருமம், சித்தசுத்தி வாயிலாகவும், நிஷ்காம உபாஸனை விக்ஷேப நிவிருத்தி வாயிலாகவும், தத்துவஞானத்திற்குச் சாதனங்களாம். தத்துவஞானம் நேரே மோக்ஷத்திற்குச் சாதனமாம்.

அத்தகைய தத்துவஞானத்தைப் பிரதிபாதிப்பவை, வேதங்களின் அந்திய பாகமாயுள்ள உபநிஷத்துக்களும் அவைகளின் விளக்கமாயுள்ள வியாசபகவானாலியற்றப்பெற்ற, பிரமசூத்திரம், பகவற்கீதை, சங்கரபாஷியம் முதலியவைகளுமாம். அவைகளை மந்த மதியுடையோர் விசாரித்தறியக் கூடாமையின், மந்தமதியுடையவரும், நன்றாக விளங்கிக் கொள்ளுதல் வேண்டுமெனத் திருவுளம் பற்றி, ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் சிருங்ககிரி ஜகத்குரு பீடத்தில் பன்னிரண்டாவது பட்டத்து ஜகதாச்சார்யராக எழுந்தருளியிருந்த

ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள் என்னும் பரமகாருணிக மூர்த்திகள் வேதாந்தம் எனப்படும் உபநிஷத்துக்களும், அவற்றின் வழிவந்த பிரமசூத்திரம், பகவற்கீதைகளும், அவற்றிற்குரையாகவெழுந்த சங்கர பாஷியங்களுமாகிய இவற்றின் பொருளைப் பகல் செய்வது போல, வேதாந்த பிரக்கிரியைகளெல்லாம் நன்கு விளங்கி

"முன்னோர் மொழி பொருளே யன்றி யவர் மொழியும்
பொன்னே போற் போற்றுவம்" — நன்னூல்

என்பதை நினைப்பூட்டுவது போல, சுருதி வாக்கியங்களையுமிடை மடுத்து, அடைவுபட அமைத்துப் பஞ்சதசியென்னுமோரருமந்த நூலை யாத்துள்ளார்கள். அது விவேக பஞ்சகம், தீப பஞ்சகம், ஆனந்த பஞ்சகம், எனமூன்று பிரிவோடு பதினைந்து பிரகரணங்களாக விளங்குவதால் பஞ்சதசியெனப் பெயரிடப்பட்டுள்ளது.

அவ்வருமந்த நூலும், வடமொழியிலமைந்திருப்பதால் அதனைப் படித்துணர மாட்டாத தமிழ் நூல் பயிற்சியொன்றுமே யுடையாரும் படித்து,

"ஆகியவச்சோயந் தேவதத் தன்னிடத்,
தாகியவிட்டு விடாத விலக்கணைத்
தாகுப சாந்தமே தொத்தசியென்ப
வாகிய சீவஇன் பரசிவனுமே" —திருமந்திரம்.

என்பது முதலிய சான்றோர் திருமொழிகளின் பொருளை நன்கு தெளிந்துளமாறியிருக்கவெண்ணி, அப்பஞ்சதசியென்னு நூலைத் தமிழ் மொழியில், வேத வேதாந்தங்களை நன்கு பயின்றவர்களும் தமிழறிவு சான்றவர்களுமாகிய, ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள், மொழிபெயர்க்கப் புகுந்து விவேக பஞ்சகத்தையும், தீப பஞ்சகத்தையும் தமிழ் விருத்தப் பாக்களினுல் யாத்திருக்கின்ருர்கள். ஆனந்த பஞ்சகத்தை வேதாந்த பாஸ்கர நியாய சந்திர வீர. சுப்பைய ஞானதேசிக சுவாமிகள் தமிழ் விருத்தப் பாவினுல் யாத்திருக்கின்ருர்கள்.

ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள், கோயிலூர் ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் அதிஷ்டானத்தில் இரண்டாவது ஞானதேசிகராக எழுந்தருளி இருந்த துறவாண்டவரென வழங்கும் ஸ்ரீலஸ்ரீ அருணுசல ஞானதேசிக சுவாமிகள் மாணவருள் ஒருவராவார்கள். இவர் சிதம்பரத்தில் கேணி மடத்தில் சமாதியாகியுள்ளார்கள்.

ஸ்ரீ சுப்பைய சுவாமிகள் அவ்வதிட்டானத்தில் ஐந்தாவது பட்டத்து ஞானதேசிகராக எழுந்தருளியிருந்த திருக்களராண்டவரென வழங்கும் ஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகளின் மாணவருள் ஒருவராவார்கள். இவ்விருவரும் செய்த அப்பஞ்சதசியென்னும் தமிழ் நூலும்,தமிழிலும் வேதாந்த நூல்களிலும் நல்ல பயிற்சி உடையவர்க் கன்றி ஏனையோருக்கு விளங்குவதாக இன்மையால் எல்லோர்க்கும் நன்கு பயன்பட வேண்டுமெனத் திருவுளம் பற்றி, அக்கோயிலூர் அவ்வதிட்டானத்தில், ஆருவது ஏழாவது பட்டங்களில் ஞானதேசிக மூர்த்திகளாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ அண்ணுமலை ஞானதேசிக மூர்த்திகள், ஸ்ரீமகாதேவ ஞானதேசிக மூர்த்திகளின் மாணவர்களுள் ஒருவரும், வடமொழி தமிழ் மொழிகளில் வல்லுநரும், நியாய வேதாந்த சாஸ்திரங்களை இருமொழியிலும் தெளிவு பெறப் பயின்ற வரும் அறிவு, பொறை முதலிய நறும் பண்புகள் நிறைவுறப் பெற்றவரும், தஞ்சைப் புனவாசல், வேதாரணியமாகிய இரு நகரங்களிலமைந்துள்ள வேதாந்த மடங்களின் தலைவருமாகிய, ஸ்ரீலஸ்ரீ அ. மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகள், மூலத்திற்கேற்பத் தமிழ்ப் பாக்களை ஒத்திட்டுப் பார்த்து சில திருத்தங்களும் செய்து, ஒரு அருமந்தவுரையியற்றி இருக்கின்ருர்கள்.

இவ்வுரை விளங்கத் தக்க வடமொழிப் பதங்களை இடைமடுத்து எழுதப்பட்டிருக்கின்றது.சாத்திரவுரையானதால் தனித்தமிழ் நடையில் எழுத யார்க்கும் இயலாததேயாகும். இவ்வுரையை நமக்கிவர்கள் தண்ணளியால் எழுதிப் பதித்ததோடமையாமல் இன்னும் வேதாந்த நூல்களின் உரைகளாகவுள்ள அத்வைத சித்தி முதலியவற்றையும், இவ்வெளிய நடையிலேயே மொழிபெயர்த்துதவுமாறு இறைவன் அவர்கட்கருள் புரிய வேண்டுமென, அவ்விறைவனை மெய் வாய் உள்ளங்களால் வணங்கி வாழ்த்திச் சிந்திப்போமாக.

இங்ஙனம்,

பண்டி.தி. சித. **நாராயணசாமி,**

கோயிலூர் மரபு.

அறுபத்து மூவர் மடம், திருவையாறு.

உ

சிவமயம்

# முன்னுரை.

---

அறிஞர்களுக்குப் பணிவுடன் அறிவிப்பதிதுவாம்:—

இவ்வுலகில் மந்த மதியுடையோரும் எளிதாகத் தத்துவத்தை விசாரித்துணர்தற் பொருட்டு தமிழில் கைவல்ய முதலிய பல நூல்கள் உரைகளுடன் இருக்கின்றன. அவ்வாறிருக்க, இந்த உரை வேண்டியதில்லை. அங்ஙனமாயினும் அடியேனது மனது தத்துவாநுசந்தானத்தால் தூய்மையடைதற் பொருட்டு இவ்வுரையை இயற்றினேன்.

மூலவியாக்கியானங்களைக் கொண்டு கிளிப்பிள்ளையைப் போல சொன்னேனேயன்றி சொந்தப் புத்தியால், நூதனமாக யாதொன்றும் இயற்றவில்லை. சீவர்கள் அற்ப அறிவினையுடையராதலால் இவ்வுரையில் தவறுதல்கள் இருக்கலாம். அறிஞர்கள் இந்நூலின் கவியினையும் உரையினையும் நன்கு ஆராய்ந்து தயவுசெய்து பிழைகளைத் தெரிவிப்பார்களானல் அடுத்த பதிப்பில் திருத்திப் போட உபகாரமாயிருக்குமெனப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த பஞ்சதசி உரையின்கண் உதாரணச் செய்யுள் (மேற்கோள்) கொடுக்காமைக்குக் காரணமென்னையெனின் இந்தப் பஞ்சதசியின் மூலகருத்தாவாகிய வித்தியாரண்ய ஸ்வாமிகளே மூலத்தில் இடை இடையே உபநிஷத்துக்கள் பிரமசூத்திரம் வாசிட்டம் பகவற்கீதை உபதேச சஹஸ்ரி வார்த்திகம் யோகசூத்திரம் மாண்டூக்கிய காரிகை முதலிய அனேக கிரந்தங்களை மேற்கோளாகக் கொடுத்து இருத்தலினுலும் உரையின்கண் மேற்கோள் கொடுத்தால் பயனின்மையோடு கிரந்தம் விரியும் என்னும் பயத்தானும் மேற்கோள் தேவையில்லையெனக் கருதி விடப்பட்டது.

விஷயாநுக்கிரமணிகையில் பிரசங்கத்தொகை போடவில்லை. செய்யுளின் பதவுரையில் இடையிடையே பெரும்பாலும் பிரசங்கம் வருகிறபடியால் நெம்பர் போட சாத்தியப்படவில்லை. விஷயாநுக்கிர மணிகையில் போடப்பட்டுள்ள பக்க நெம்பர்படி பக்கங்களை எடுத்து அப்பக்கங்களில் இடையிடையேபிரசங்கங்களையூகித்துணரவேண்டும்.

இந்தப் பஞ்சதசிக்கு உரையெழுதும்போது சில செய்யுட் பிழைகளை மூலத்திற்கு இயையத்திருத்திக்கொடுத்த காரியானூர் சாந்தி ஆசிரமம் நடேசசுவாமிகளுக்கும், காலஞ்சென்ற சித. திருநீலகண்ட சுவாமிகளுக்கும் திருவையாறு பண்டித சித. நாராயண சுவாமிகளுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன். இந்தப் பஞ்சதசியை அச்சுப்போடும்படி தூண்டுதலை செய்த திருப்பூவணம் சன்னிதானம் காசிகானந்த ஞானாசார்ய சுவாமிகளுக்கும், இந்த உரையைச் சுத்தமாக அடித்தல் திருத்தலின்றி அச்சிடுதற்குத் தகுந்தபடி இரண்டாந்தடவை எழுதி அச்சுப் போடுவதற்கு உபகாரியாயிருந்த துறையூர் சின்னமடம் பண்டித பெருமாளையா அவர்கட்கும், வேலூரில் அச்சிடுவதற்கு சகாயமாயிருந்த தலைமைத் தமிழாசிரியர் திரு. இராமராஜு ரெட்டியார் அவர்கட்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன். இந்தப் பஞ்சதசி அச்சிடுவதற்கு நான் கொடுத்த கைகாப்பிகளை நன்ருய்க் கவனித்து அச்சிட்டுக் கொடுத்த வேலூர் (சேலம்) கருணாநிதி மின்சக்தி அச்சக அதிபர் திரு. டி. கே. குமரேசன் அவர்கட்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

இங்ஙனம்,

*மஹேஸ்வரானந்தகிரி சுவாமி.*

௳

சிவமயம்.

## திருப்பூவணம், வேதாந்த மடம்,

# ஸ்ரீ காசிகானந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் இயற்றியம

### எண் சீர்க்கழி நெடில்அடி ஆசிரிய விருத்தம்.

அருமறையா கமமுதல அனைத்தும் தேர்ந்தே
அகிலமதங் கனை ஆய்ந்து பார்த்துப் பின்னர்
பெருமைதரும் பஞ்சதசி எனும்பேர் கொண்ட
பெட்புமிகும் நூல்ஒன்றைப் பெரிதாச் செய்தான்
தருமமிகும் சிருங்ககிரி தன்னில் வாழ்ந்த
சங்கரா னந்தகுரு பாதம் பூண்ட
உரிமைஉடை வித்தியா ரண்யர் என்னும்
உயர்தவத்தோன் உலகுபுகழ் பெருமை மிக்கோன். (1)

சொலற்கரிய அந்நூல்ஆ ரியத்தில் உள்ள
தொன்மைபெரும் தமிழ்மொழியில் கவியாச் செய்தான்
வெலற்கரிய வித்தைஉறு நித்தியா னந்த
மேலவனும் அதற்குநல் உரைஒன் றீந்தான்
பலற்குரிய கோவில்ஊர் அதனில் வாழ்ந்த
பண்ணவன்அண் ணாமலையின் பாதம் பூண்டு
மலற்கரிய மறைக்காட்டில் வாழும் சாந்தன்
மகேசுவரா நந்தன்எனும் மதிமிக் கோனே. (2)

—○—

உ
சிவமயம்.

# திருவண்ணாமலை நடேச சுவாமிகள் இயற்றிய

## உரைச்சிறப்புப் பாயிரம்.

### வெண்பா.

பாண்டிவள நாட்டிலுமை பாகருறை கோவிலூர்
ஆண்டவர்பா தம்போற் றருணிதிதாள்—பூண்டுமுடி
தூண்டுசுடர் போன்றொளிர் தூயவீ ரேசுரர்வந்
தாண்டபதந் தோய்சிரசி னார். (1)

அண்ணா மலைக்குரவ னார்மகா தேவகுரு
தண்ணா ரருளால் தவஞானக்—கண்ணார்
மகேசுரா நந்தகிரி மாண்பினுரை செய்தார்
குகேசுரனைப் பூரணமாக் கொண்டு. (2)

காசியையிம் மூர்த்தியுற்றுக் கற்றுக்கீர் வாணமிந்தி
ஆசிமண்ட லேசுரர்செய் தாங்குவிசு—வேசர்
விமலவருள் செய்ய வியாகரணந் தர்க்கம்
அமலமருள் வேதாந்தம் ஆய்ந்து. (3)

வித்தியா ரண்யகுரு மெய்ப்பா ரதிதீர்த்தர்
பத்தியநூல் செய்யவதைப் பண்பமைய—நித்தியா
நந்தகுரு சுப்பைய நற்குருபின் பாடினரச்
சந்ததமிழ்ப் பஞ்ச தசிக்கு. (4)

சாதனசம் பன்னரிதைச் சற்குருநா தற்குநிதம்
ஆதரவுள் ளத்தி னரும்பணிசெய்—தோதலொடு
கேட்டுச்சிந் தித்துக் கிளரத் தெளிந்தமல
நாட்டமுற்று நண்ண நலம். (5)

மாண்பின் = மதிநுட்பத்தால் ஆய்ந்து உரை செய்தார்,
பஞ்சதசிக்கு உரைசெய்தார், நலம் நண்ண
உரைசெய்தார் என இயையும்.

—○—

உ

சிவமயம்.

## திருவையாறு, அறுபத்துமூவர் மடாலயத்தின் தலைவர், கோயிலூர் மரபினர்

# பண்டித. சித. நாராயண சுவாமிகள் இயற்றிய

### சாற்றுக் கவிகள்.

செந்தமிழ்நா டெனச்சிறக்கும் வழுதியர்தந்
திருநாட்டிற் சிவணி நாளும்
பந்தமிழந் தறிவான பழையநிலை
தனையுணர்ந்து பரம வின்பம்
சொந்தவடி வெனத்தெளிந்தே யுலகநிலை
தனைமறந்த துரிய மேலோர்
சிந்தைமகிழ்ந் துறைவிடமாய்ச் செறிகழனித்
திருநகரிற் றிகழுஞ் சீர்த்தி (1)

கொற்றவா ளிறையருளாந் திருநெலைமா
துமையவடங் குழந்தை யாகப்
பெற்றமுத்து ராமலிங்கக் குருபரனு
ரமைத்ததிருத் தளியதனிற் பிறங்குமேன்மை
யுற்றதுற வரசரென வுயரருணாசல
முனிவருயருந் தாளைப்
பற்றறவே யுளங்கொண்டு பயிலுகின்ற
மாதவரிற் பண்பான் மிக்கோன். (2)

நித்தியா னந்தமுனி மறைமுடிவை
வடமொழியி னிரலாக் கோத்து
வித்தியா ரணியமுனி பஞ்சதசி
யெனுநூலை விளம்பப் பார்த்து
நத்தியே வரும்படித்து நிரதிசய
வின்பமுற நறிய பாவால்
புத்தமுதத் தமிழிலதை யாத்தனனு
லதன்பொருளைப் பொருத்த மாக. (3)

நிலைத்தநிலை யதையுணர்த்தக் கோயிலூர்த்
திருத்தளியில் நிலைத்த வண்ணா
மலைத்தவமா குருபரனா ரடிபரவித்
தனையுணர்ந்தோன் மலைவில் லாமல்
கலைத்தெளிவு மிகவுடையோன் தென்றமிழும்
வடமொழியுங் கற்ற தூயோன்
புலைத்துரிசை யறவொழித்தோன் பொறுமையுளான்
மகேசவின்பப் புனிதன் மேலாம். (4)

மறைவனத்தில் புனல்வாச றனிலமரும்
வேதாந்த மடங்க ளோம்பும்
இறைவனவன் ஏவருமே தெளிந்துணர
வினியவுரை யிசைத்தான் சான்றோர்
கறையிலதென் றுளமுணர்ந்து களிக்கவதை
யச்சினிலுங் கதுவித் தான்சீர்,
மறைமுடிவின் முடிவதுதான் மகிதலத்தில்
விரிகவென மகிழ்ந்து நன்றே. (5)

மறைமுடிவின் முடிவு = வேதாந்த சித்தாந்தம்.
குழந்தையாகப்பெற்ற = ஞானப்புதல்வனாகவடைந்த.

உ

சிவமயம்.

துறையூர் சின்ன மடம்,

# பெருமாளையா இயற்றிய

## சிறப்புப் பாயிரம்.

தெங்குங் கமுகுஞ் செழித்தோங்கித்
தேவர் திருநா டணைவுறநற்
பங்கப் பழனம் புடைசூழப்
பரந்த சோணாட் டெல்லையினுள்
தங்கு மறத்தின் பண்டகுலந்
தழைத்துப் புனித நெறிபலவும்
பொங்கும் பாடி பலவவற்றுட்
பூலாம் பாடி யொருபாடி. (1)

இந்தப் பாடி தனிலொருவ
ரிலக்கு மணப்பே ரியைந்தரிதாள்
வந்திப் பாடி வழிபாடு
வகைகள் பலவு மிகவாடி
சிந்தப் பாடிச் செய்தவத்தாற்
செனித்த குமர ரைவருள்ளும்
எந்தப் பாடி களுமுவக்கு
மினிய சேட்ட னியல்புரைப்பாம். (2)

பிள்ளைப் பருவ முதிராமுன்
பெருமா ளுருவ மகத்தடக்கிக்
கொள்ளும் பரிசா லிவன்பெயரே
கொண்டு குலவக் குணம்பெருகப்
பள்ளிக் கலைகள் பயின்றதற்பின்
பாரக் கலைகள் பயிலாத
உள்ளக் கவலை பிடித்துந்த
ஓதுங் கலைக்கு விரைந்தனனால் (3)

நினைக்க வினிக்குங் கோவிலூர்
நெறிகள் பயிற்றுங் கோவிலூர்
மனையுந் தனையு மனைவியையு
மறக்கச் செய்யுங் கோவிலூர்
வினைமை யொழிக்க வேதாந்த
விளக்கை யேற்றுங் கோவிலூர்
புனையும் பூதி யடியவரைப்
புனித மாக்குங் கோவிலூர் (4)

கண்ணுங் கருத்து மகமுகமாக்
கவிழச் செய்யுங் கோவிலூர்
அண்ணா மலையெங் குருராய
னடிக ளேந்துங் கோவிலூர்
நண்ணா தாரு நண்ணுதற்கு
நயக்குங் கோவி லூரென்றே
எண்ணா வுவந்து கோவிலூர்க்
கேமத் தோடு மினிதடைந்து (5)

அண்ணா மலையெங் குரவன்ற
னடியை முடியாற் றெழுதுதுதி
பண்ணா வவன்ற னருட்பெருக்காற்
பயில்வே தாந்தப் பனுவலெல்லாம்
எண்ணா முன்ன மிதயத்து
ளிரவி யொளிபோ லிலகியதால்
ஒண்ணா வடபாற் கலையனைத்து
முள்ளந் தெளிய வுணர்ந்துள்ளான். (6)

அன்ன கலைஞன் அறிவுபெருங்
கருணை யடக்கம் பொறைமுதலா
நன்னர் குணங்கட் கிருக்கையென
நான்கு மறையின் முடிப்பொருளுந்
துன்னுஞ் சரக்கி னரையென்னத்
தோன்ற வாரா ணசிதவத்து
மன்னு மெதிகள் மகேசுவரா
னந்த னெனப்பேர் வழங்கவந்து (7)

அடியார் குழாங்கள் சூலவமடா
லயத்துக் குயர்ந்த நாயகமாய்த்
துடியா ரிறைவன் வீற்றிருக்குந்
தூயமறைக்கா டமர்ந்து புகழ்
மடியாத் தேவ பாடையினின்
மணக்கும் பனுவற் றமிழ்மொழியி
னடையாய்ச் சுவையாய்ப் பெயர்த்துவரு
நாளி லருகாப் பெருவளங்கள் (8)

தங்குஞ் சிருங்க கிரிப்பதியிற்
சார தாபீ டத்ததிபன்
அங்க மாறோ டாரணங்க
ளனைத்து முணர்ந்த வறிவாளன்
திங்கள் முகத்து வித்தியா
ரணிய னெனும்பேர் தேசிகனோர்
வங்கம் பவமார் கலிக்கெனவாய்
மலர்ந்தான் பஞ்ச தசிப்பனுவல். (9)

அந்தப் பனுவ லாரியத்து
ளமர்ந்த வதனு லஃதுணரா
விந்தைத் தமிழின் சுவையறிவார்
விழையா ரதனை யெனநித்யா
னந்த முனியோ டருளார்சுப்
பைய முனியா மிருவோருஞ்
சந்தப் பாக்க ளாற்றமிழிற்
சமைத்துத் தந்தார் சகமுவக்க. (10)

நாரி கேள பாகமதாய்
நவின்ற பஞ்ச தசிச்செயுட்கு
யாரு முணர வவையங்க
ளாக்கிப் பதமுங் கருத்துரையுஞ்
சேரும் படியாய்த் தெளிவுரையாய்த்
தீட்டிப் பதிப்பித் தீந்தபெருந்
தீரச் செயற்கு மகேசுவரா
னந்தன் புகழைச் செபிப்பதுவே. (11)

ஓம்.
கம்பன் வாழ்க.

வேலூர் (சேலம்) கண்டர் உயர்நிலைப்பள்ளித்
தமிழாசிரியர்
S. K. இராமராசன் அவர்கள்
( கம்பராமன் )
இயற்றிய

## சாற்றுக் கவிகள்.

---

பொன்னிநதி யலைக்கரத்தால் வருடுந் தோறும்
பூரிக்கும் சோழவள நாட்டி னுக்கு
நன்னயஞ்சால் திலகமெனப் பொலியும்: ஞான
நற்சுரும்ப ரிசைபயின்று களிப்பின் மேவும்
தன்னிகரில் திவ்யப்ர பந்த மென்னும்
தமிழ்க்காவில் திருவொடமர் எம்பிரானை
மன்னியநற் சிந்தையினில் வைத்துப் போற்றும்
மாண்புடையோர் வாழ்கின்ற பூலசம் பாடி.

அப்பதியிற் பண்டகுலம் செய்த வத்தால்
அவதரித்தார் இலட்சுமண ரெட்டி என்பார்:
ஒப்பில்லார்: முப்போதும் மாயன் தாளை
உவந்தேத்தி அகங்கனிவோர்; ஞான நூலின்
திப்பியத்தைச் சுவைத் தறிந்தோர்; இல்லறத்தைச்
சீர்சான்ற சடையம்மை யுடன் புரிந்து
மெய்ப்பொருளின் மரபுணர்ந்து நிற்போர்; அன்னார்
மேலாய நற்பண்பு வாழி! வாழி!

அன்னவர்செய் தவப்பயனால் உலகம் வாழ
அன்புநெறி தழைத்தோங்க ஞானம் மல்கத்
தன்னிகரில் வேதாந்த விளக்கம் போலச்
சாந்தமே வடிவாகப் பெருமாள் என்னும்
பன்னரிய புகழாளர் பிறந்தார்; அன்னார்
பைந்துழாய் எனவியல்பிற் சீலம் பெற்றார்
மன்னியநற் கலைநூலை முறையாய்க் கற்று
வையத்தின் நிலையாமை நன்கு ணர்ந்தார்.

வயிரமலை யொத்தவர்கள் இறத்தல் கண்டும்
வளம்பெற் றோர் ஏழைகளாய் நலிதல் கண்டும்
உயிரனையார் பிரிதலினாற் காதன் மிக்கோர்
"ஓ"வென்று கதறுவதைக் கண்டும்; அந்தோ
நயமில்லை யிவ்வுலகில் என்று ணர்ந்து
ஞானத்தால் உள்ளத்தைப் புனித மாக்கிச்
செயலின்றி யிருந்திட்டார்; பொருட்பற் றின்றித்
தேவனையே பணிந்திட்டார்; சீலம் மிக்கார்.

வையகத்தின் இயல்புணர்ந்து யாவும் நீத்து
மாண்பார்ந்த குருநாதன் தன்னைத் தேடி
மெய்யுணர்ந்தோர் வாழ்கின்ற கோயி லூரை
விருப்பமுடன் எய்திஅண்ணா மலைப்பேர் பெற்ற
ஐயன்றன் திருவடியைக் கண்டு போற்றி
யகங்கனிந்து பேரின்பம் எய்தி அன்னான்
துய்யதிரு வருள்பெற்று ஞான நூலைத்
துய்த்திட்டார் உலகியலைக் கைத்திட் டாரே.

சித்துருவாய் ஒளிர்அண்ணு மலைப்பேர் பெற்ற
தேசிகன்பால்— கட்டளையைக் கடைப்பி டித்து—
முத்தரெலாம் புகழ்வசிட்டன் இராம னுக்கு
மொழிந்திட்ட தொன்னூலும் போர்க்க ளத்தில்
கைத்தலத்து வில்லேந்தும் விசய னுக்குக்
கார்வண்ணன் கட்டுரைத்த புனித நூலும்
பக்தியொடும் பயின்றுயர்ந்த ஞானம் எய்திப்
பண்புற்ருர்; எவ்வுயிர்க்கும் நண்புற் ருரே.

தேசிகன்றன் திருவருளை முறையாய்ப் பெற்ற
சீராளர் விசுவேசன் பாதம் போற்றிக்
காசியொளிர் கங்கையினில் மூழ்க வேண்டிக்
கனிவுடனே வடநாடு சென்ருர்; அங்கே
தேசுமிகு வடமொழியை முறையாய்க் கற்ருர்;
சீர்சான்ற வேதத்தின் பொருளு ணர்ந்து
மாசகன்ற உபநிடதப் பொருளைக் கண்டு
வாழ்வுற்ருர்; அன்பினிலே ஆழ்வுற் ருரே.

செவ்வியநற் கொன்றையொடு துளபம் நாறும்
சீர்சான்ற கங்கையினில் மூழ்கித் தீய
வெவ்வினையின் கட்டறுக்கும் ஞான மூர்த்தி
விசுவேசன் திருவடியைக் குழைந்து போற்றித்
திவ்வியநற் காட்சியினை எளிதாய்ப் பெற்ற
சீராளர் பண்புணர்ந்து காசி வாழும்
கவ்வையிலா முனிவரர்கள் இயல்புக் கேற்பக்
கனிந்துமகேஸ் வரானந்தா எனப்பேர் சொற்ருர்.

வடமொழியில் வேதாந்த நிலையைக் கண்டு
மாயையினை வேரோடும் அகழ்ந்தெ றிந்து
திடமுடைய மெய்ஞ்ஞான வுணர்வில் மூழ்கித்
தெய்வநலத் திறமறிந்து விருப்பத் தோடு
கடனறிந்தோர் வாழ்கின்ற தமிழ கத்தைக்
கனிந்தெய்திப் பக்குவமெய்ஞ் ஞானி கட்கு
மடமையினைச் சுட்டெரிக்கும் ஞான தானம்
மகிழ்ந்தளித்தார்; அன்பருளம் மலரச் செய்தார்.

சங்கையிலா மெய்ஞ்ஞான வுணர்வில் மூழ்கித்
தனையுணர்ந்த பேராளர்- அருட்கு றிப்பால்
மங்கலிலாப் புனவாசல் மடத்தி னுக்கும்
மறைக்காட்டு மடத்தினுக்கும் தலைவ ராகிப்
பங்கமிலாத் துறவறத்தை யினிது பேணிப்
பாரெல்லாம் மேன்மையுறத் தவம்பு ரிந்து
துங்கமுறும் அன்பர்களை வருத்தும் மாயை
துடைத்திட்டார்; அறவாழ்வைப் படைத்திட் டாரே.

சங்கரர்தம் வேதாந்தம் எனுஞ்சா லிக்குத்
தகவார்ந்த நல்வேலி எனத்தி கழ்ந்த
பங்கமிலா வித்தியா ரண்யர் யாத்த
பஞ்சதசி மொழிபெயர்ப்புக் கன்பர் வேண்டச்
சங்கையிலா நல்லுரையை இயற்றி யின்பத்
தமிழ்மொழிக்கு வாழ்வளித்தார்; தெய்வ ஞானக்
கங்கையினில் எல்லோரும் மூழ்க மேலாங்
கதியீந்தார்; யாவர்க்கும் மதீயீந் தாரே.

விஞ்சியசீர் மகேஸ்வரா னந்தர் ஆய்ந்து
மேலாய பொருள் நுட்பம் விளங்கும் வண்ணம்
பஞ்சதசிக் கெழுதியநல் லுரையைக் கற்றோர்
பவித்திரஞ்சேர் சிவத்தினையே யாண்டுங் காண்பார்
வஞ்சமுறு மாயையினை எளிதாய் வெல்வார்
மாண்புமிகு சமரசராய்ப் பொலிவர்; கூற்றுக்
கஞ்சுவரோ? மார்க்கண்டன் போல வாழ்வார்;
அருட்சோதி வீசிடுவார்; வாழி! வாழி!

வாழிமஹே சானந்தர் வாழிமஹே சானந்தர்
வாழிமஹே சானந்தர் வாழியரோ—சூழிருளை
ஓட்டுகின்ற பஞ்சதசிக் குற்ற வுரைவகுத்த
தீட்டறிய நல்லருளின் சீர்.



உ

சிவமயம்

இராசிபுரம் தலைமைத் தமிழாசிரியர்

M. இராமசாமி அவர்கள் இயற்றிய

# சாற்றுக் கவி.

வெவ்விய மாயையை வேரொடு மாய்க்கும்
செவ்விய நலத்தைச் சிறப்புற நல்கும்
பஞ்ச தசியெனும் பண்பார் நூற்கு
விஞ்சுநல் லுரையை விருப்பொடு வரைந்தனர்
வடமொழிக் கடலையும் தென்மொழிக் கடலையும்
திடனுறக் கற்றுச் சிவமென விளங்கும்
மகேஸ்வரா னந்தனும் மாண்புறு முனியே.
நாம்:
அந்நூல் கற்போம்: அமைதி காண்போம்
செந்நெறி யறிந்து சீர்பெறு வோமே.

—::—

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ பஞ்சதசியின்

## தத்துவ விவேகத்தின்

### *அநுக்கிரமணிகை.*

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

# பஞ்சமகாபூத விவேகத்தின் அநுக்கிர மணிகை

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|



# பஞ்சகோச விவேகத்தின் அநுக்கிர மணிகை

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|



# துவித விவேகத்தின் அநுக்கிரமணிகை

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|



# மகாவாக்கியத்தின் அநுக்கிர மணிகை.

## சித்திர தீபத்தின் அநுக்கிரமணிகை.

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|



# திருப்தி தீபத்தின் அநுக்கிர மணிகை.

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|



## கூடஸ்த தீபத்தின் அநுக்கிர மணிகை

| விஷயம். | பக்கத் தொகை |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

# தியான தீபத்தின் அநுக்கிரமணிகை.

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|



## நாடக தீபத்தின் அநுக்கிரமணிகை



## யோகாநந்தத்தின் அநுக்கிரமணிகை

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

## ஆன்மானந்தத்தின் அநுக்கிர மணிகை

| விஷயம். | பக்கத் தொகை. |
| --- | --- |

## அத்வைதானந்தத்தின் அநுக்கிர மணிகை

| விஷயம். | பக்கத் தொகை. |
|---|---|

# வித்தியானந்தத்தின் அநுக்கிரமணிகை

# விஷயானந்தத்தின் அநுக்கிர மணிகை

ஸ்ரீ பஞ்சதசிக் கிரந்தத்தின்

## அநுக்கிர மணிகை

முற்றிற்று.



உ

சிவமயம்.

# ஸ்ரீ பஞ்சதசி.

## பாயிரம்.

### மங்கலம்.

ஆனைமுக னறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு ணடு.

(அவதாரிகை)

இந்நூலின் மொழிபெயர்ப்பாசிரியர் தாமெடுத்துக்கொண்ட கிரந்தமானது விக்கினமின்றி யினிது முடிதற்பொருட்டுச் சிஷ்டாசாரத்தாற் பெற்ற இஷ்டதெய்வத்தின் நமஸ்கார வடிவமங்கலத்தைச் செய்கின்றார்.

அனகநிர வயவபர வமலவுணர் வுறவே
உனவரிய பகுதியதி னுருமுழுது மறவே
மனநிறைய வமுதசுக மகிழ்வுதரு மொளிசேர்
கனகசபை நடனமிடு கடவுளடி பணிவாம். 1

(பதவுரை) அனக = பாபமற்றதும், நிரவயவ = அஸ்தபாதாதி யுறுப்புக்களின்றியதும், பர = மேலானதும், அமல = அசுத்தமின்றி யதும் ஆகிய, உணர்வு = ஞானரூபபிரம்மத்தினை, உற = அடைதற் பொருட்டும், உன அரிய = சிந்தித்தற்கரிய, பகுதியதின் = மாயையினது,

உருமுழுதும் = காரிய காரண சொரூபங்களையும், அற = கெடுதற் பொருட்டும், மனம்நிறைய = பக்தர்களுக்கு மனது பூரணமாக, அமுத சுகமகிழ்வுதரும் = நித்தியாநந்த சந்தோஷத்தினைக் கொடுக்கும், ஒளிசேர் = பிரகாசம் பொருந்திய, கனகசபை = பொற்சபையின் கண், நடனம்இடு = நிர்த்தனஞ்செய்கின்ற, கடவுள் அடி = நடராஜப் பெருமானது திருப்பாதங்களை, பணிவாம் = வணங்குவாம்.

யாம், தோன்றா எழுவாய்,
ஏகாரமிரண்டும் அசை.

அமலவுணர்வு என்பதை அமலமாகியவுணர்வு எனப் பண்புத் தொகையாகக்கொண்டு இவ்வாறு உரை செய்யப்பட்டது. அமலத்தினது உணர்வு என ஆறும் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளின் பிரமத்தினது ஞானத்தினை எனப் பொருள்படும்.

உருமுழுதும் என்றதால் காரிய காரணங்கள் எனவுரைத்தாம். உணர்வுறவே என்றதால் சர்வாநந்தப் பிராப்தியையும், உருமுழுதும் அறவே என்றதால் சர்வ துக்கநிவர்த்தியையும் குறிப்பித்தனர். அதுவே பரம புருஷார்த்தமாதலின், மனநிறைய அமுதசுக மகிழ்வுதருமென்றதால், பக்தாநுக்கிரகத்தன்மை குறிப்பிக்கப்பட்டது.

கனகசபை நடனமிடு என்றதால் இஷ்ட சித்திக்கேதுவான அவரது சந்தோஷ அவஸ்தை குறிப்பிக்கப்பட்டது. ஒருவர் சந்தோஷமாயிருக்குங் காலத்தில் ஏதேனும் யாசிக்கின் இஷ்ட சித்தியாதல் உலகிற் கண்டுளோமாதலின் என்க. 1

(அ — கை)

குருபக்தியில்லாதோர்க்குச் சாஸ்திரார்த்த ஞானமும் அநுபவ ஞானமும் உள்ளபடியே உண்டாகாவெனச் சுருதி கூறலின் இந் நூலின் மொழிபெயர்ப்பாசிரியர் தம் பரமாசாரியரையும் ஆசாரியரையும் முறையே இரண்டு பாட்டால் துதிக்கின்றார்.

தேசமர் கழனிநற் றெய்வ மாநகர்
வாசநன் னேசன்சின் மயன்வெம் வன்பவ
மோசக னெனப்பகர் முத்தி ராமலிங்
கேசனை யிருதயத் திருத்தி யேத்துவாம். 2

(ப—ரை.) தேசு அமர் = பிரகாசம் பொருந்திய, கழனிநல் தெய்வமாநகர் = கழனிவாசல் என்னும் நல்ல தெய்வத்தன்மை பொருந்திய சிறந்த ஸ்தலத்தில், வாசநல்நேசன் = வாசஞ்செய்வதில் மிகுந்த பிரியமுள்ளவன் எனவும், சின்மயன் = சித்சொரூபன் எனவும், வெம் வன்பவமோசகன் என = (துக்கங்கள் நிறைந்த) கொடிய சமுசாரத்தினின்றும் விடுவிப்பவனெனவும், பகர் = உலகோரால் சொல்லப்படுகின்ற, முத்திராமலிங்கஈசனை = முத்திராமலிங்கன் என்னும் இறைவனை (பரமாசாரியனை), இருதயத்துஇருத்தி = மனத்தின் கண்ணே நன்கு தியானித்து, ஏத்துவாம் = (வாக்கால்) துதிப்பாம்.

ஏ

என என்னும் எண்ணிடைச்சொல்லை எல்லா விசேஷணங்களோடும் பிரித்துக்கூட்டுக.

தேசமர் என்னும் விசேஷணத்தால் ஞானப்பியாசத்திற்கு ஏதுவான பூமியென்பதும், நற்றெய்வமா என்னும் விசேஷணத்தால் வாசம்பண்ணுகிறவர்களுடைய பாபத்தை நிவர்த்திக்குந் தன்மையும் சூசிப்பிக்கப்பட்டது. வாசநன்னேசன் என்றதால், பூர்வஞ்செய்த புண்ணிய மேலீட்டால் பக்குவமடைந்து அப்புனிதத் தலத்தைத் தேடி வரும் அதிகாரிகட்கு ஞானோபதேசஞ்செய்து பந்தத்தை நிவர்த்திப்பான் வசிக்கும் கருணைக்கடல் என்பதும், சின்மயன் என்றதால் பிரமவித்து பிரமமே என்னுஞ்சுருதியால் பிரம்மவேத்தா சின்மயப் பிரம்மமே என்பதும், வெம்வன்பவமோசகன் என்றதால் சுரோத்திரியப் பிரம்மநிஷ்டனாய் நிக்கிரக அநுக்கிரக சாமர்த்தியம் வாய்ந்தவன் என்பதும், முத்திராமலிங்கேசனை என்றதால் பரமேஸ்வரனே சாதுக்களின் இரக்ஷணையின்பொருட்டு முத்துராமலிங்க ஞானதேசிகராக அவதரித்தனர் என்பதும் சூசிப்பிக்கப்பட்டது. 2

இதுவுமது

மாசிலா மணிசிவ மாயை தீரவி
நாசிமா சுகனரு ணாச லேசனுங்
காசினி யுயவரு கருணை யங்கடற்
றேசிகேந் திரன்சரண் சிந்தை செய்குவாம். 3

(ப—ரை.) மாசிலாமணிசிவமாயைதீர் = குற்றமற்ற இரத்தினம் போன்று சிறந்த பரமேசுவரனின் திரோதான சக்தியாகிய மாயை யற்றவரும் (அல்லது நிர்த்தோஷமான அழகிய பிரம்ம சொரூபரும் மாயையற்றவரும்.), அவிநாசிமாசுகன் = நித்திய நிரதிசயா நந்தா நுபவியும், காசினிஉயவரு = உலகமானது சுகமாகச்சீவிக்கும்பொருட்டு எழுந்தருளி வந்த அம்கருணைக்கடல் = அழகிய கிருபா சமுத்திரமு மாகிய, அருணாசலேசனும் தேசிகேந்திரன் சரண் = அருணாசலேசுவர னென்னும் சிறந்த ஆசாரியரின் திருவடிகளை, சிந்தைசெய்குவாம் = (யாம்) மனத்தாற்றியானிப்போமாக எ—று.

மாசிலாமணியென்பதால் குற்றமற்ற இரத்தினம்போன்று எல்லோராலும் போற்றத்தக்கவரெனவும், மாயைதீர் என்பதால் பிரஹ்மத்தை நன்குணர்ந்தவரெனவும், அவிநாசிமாசுகன் என்பதால் சீவன்முத்தரெனவும், அருணசல ஈசனென்பதால் ஈஸ்வராவதாரரென வும், காசினி உயவரு என்றதால் முமுக்ஷுக்களைப் பிரஹ்மோபதேசத் தாலும் ஏனைய ஜனங்களைக் கிருபாதிருஷ்டி மாத்திரத்தாலும் பவித்திர மாக்க வல்லவரெனவும், கருணையங்கடல் என்றதால் அன்னையானவள் புத்திரனிடத்தில் வைக்கும் கருணையானது தமது அந்தியகாலத்தில் ஈமக்கடன் முதலியன செய்து நற்கதி அடைவிக்கச்செய்வன் என்னும் பிரதிப் பிரயோஜனத்தை அபேக்ஷித்ததாம். மேகமானது பிரஜைகளி டத்தில் வைக்கும் கருணையானது பிரதிப் பிரயோஜனத்தை அபேக்ஷி யாததாயினும் தானியம் முதலிய அநித்தியப் பிரயோஜனத்தைத் தரு வதாம். குருமூர்த்தியானவர் அங்ஙனம் பிரதிப் பிரயோஜனத்தைக் கருதாமல் தம்மைச் சரணகதியடைந்த முமுக்ஷுக்களுக்கும் பக்தர் களுக்கும் அநர்த்தநிவர்த்தி ஆனந்தப்பிராப்தி வடிவ மோக்ஷமாகிய நித்தியப்பிரயோஜனத்தை அளித்தலின் அவ்விருவித கருணையினும்

சமுத்திரம் போன்று மிக்க கருணையுடையவரெனவும், தேசிகேந்திரன் என்பதால் இவ்வாசிரியருக்குச் சமானமாக வைராக்யாதி குணங்களால் நிறையப்பெற்றவர் உலகிலொருவருமிலரெனவும் குறிப்பிக்கப் பட்டது. 3

(அ — கை)

அவையடக்கங் கூறுகின்றார்.

தூண்டருஞ் சுடரே யாருஞ்
சுகமுற மணிமன் றுற்றுத்
தாண்டவம் புரிந்தெம் போல்வார்
தளர்வற மேனி சாத்தி
யீண்டணைந் தெனையு மாட்கொண்
டெனதகங் கோயில் கொண்ட,
ஆண்டவ னென்று மன்னி
யருளின னிதனை யம்மா 4

(ப—ரை.) தூண்ட அருஞ்சுடரே = சதோதிதமான பிரம்ம வடிவப்பிரகாசமே, யாரும்சுகம்உற = சகல ஜனங்களும்வந்து தெரிசித்துச் சுகத்தையடைதற்பொருட்டு, மணிமன்றுஉற்று = அழகிய கனகசபையின்கண் நடராஜ ரூபமாயெழுந்தருளி, தாண்டவம் புரிந்து = நிர்த்தனஞ்செய்து, எம்போல்வார்தளர்வுஅற = (சம்சார துக்கத்திற்குப் பயந்து நிவர்த்தித்துக்கொள்ள மார்க்கந்தெரியாது மயங்கிக்கிடக்கும்) எம்மைப்போன்ற ஏழைகளாகிய முமூக்ஷுக்களது சம்சார துன்பத்தாலுள்ள சோர்வு நீங்கும்பொருட்டு, மேனிசாத்தி = திவ்விய மாநுட அநுக்கிரக லீலாவிநோத விக்கிரகரூப குருமூர்த்தத்தைத்தரித்து, ஈண்டு அணைந்து = இப்பூவுலகின் கண்ணுள்ளசமிவனக்ஷேத்திரமென்னும் கோவிலூரிலெழுந்தருளி, எனையும் ஆட்கொண்டு = (நாயினுங்கடையனாய் அபக்குவனாயுள்ள) அடியேனையும் பக்குவனாக்கித் தடுத்தாட்கொண்டு, எனது அகம் = அடியேனது உள்ளத்தை, கோயில் கொண்ட = ஆலயமாகக்கொண்டுள்ள, ஆண்டவன் = அருணாசல ஞானதேசிகனென்னும் என் குருமூர்த்தியான

ஸ்ரீ துறவு ஆண்டவன், என் நாமன்னி = அடியேனது நாக்கிலிருந்து, இதனை அருளினன் = (ஸ்ரீ வித்தியாரணிய முநீஸ்வரரால் வடமொழியி லியற்றப்பட்ட ஸ்ரீ பஞ்சதசியின் மூலசுலோகங்கட்குச் செந்தமிழில் 791 செய்யுள் வடிவமான) இந்நூலினை யியற்றியருளினர் எ--று.

அம்மா என்பது வியப்பில் வந்த இடைச்சொல்

நிர்விசேஷ பரமாத்மாவே சாதாரணமான சகல ஜனங்களுக்கும் சுகத்தையுண்டாக்கும் பொருட்டுக் கனகசபையில் நடராஜ ரூபமா யெழுந்தருளி நிர்த்தனஞ்செய்து பின் எம்போலிகளான, முமுக்ஷுக் களுடைய சம்சாரதுன்பம் நீங்கும் பொருட்டுக் குரு ரூபமா யெழுந்தருளி அவர்களது சம்சாரதுக்கத்தை நிவர்த்தித்துப் பின் என் நாவிலிருந்து இந்நூலைச் செய்தனர் என்பது தாத்பரியம். எனதகங்கோயில்கொண்ட என்பதால் தனக்குக் குருமூர்த்தியினிடத்திலுள்ள விசேஷ பக்தியைக் குறிப்பித்தனர் என்பதாம். 4

பாயிரம் முற்றிற்று.



உ

ஸ்ரீ கணேசாய நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

★

## முதற்பிரகரணம்.

## பிரத்தியக் தத்துவ விவேகம்.

(அ — கை)

ஸ்ரீ வித்தியாரணிய முநீஸ்வரராகிய நூலாசிரியர் தாம் ஆரம்பிக்க இச்சிக்கப்பட்ட இக்கிரந்தமானது விக்கினமின்றி முடிவுபெறுதற்பொருட்டும் உலகில் இடையீடின்றி நிரந்தரமாய் வழங்கிவருதற்பொருட்டும் சிஷ்டாசாரத்தாற் பெற்றதும் கிரந்தகர்த்தாவாகிய தன்னால் அநுஷ்டிக்கப்பட்டதுமாகிய இஷ்டதெய்வ வடிவ குருவின் நமஸ்கார வடிவ மங்கலா சரணத்தை சீடர்களை சிக்ஷிக்கும்பொருட்டு யாப்பால் தொடுக்கின்றார். அர்த்தத்தால் விஷயப்பிரயோஜனங்களையும் சூசிப்பிக்கின்றார்.

சுலோகம்

திருவளர் சங்கரா னந்த தேசிகன்
பெருகுமா மோகமாம் பெருங்க ராத்தினைப்
பருகியின் பருளலே பரம வேலையா
மருமலி பாததா மரைவ ணங்குவாம். 1

(பதவுரை) திருவளர் = ஐஸ்வரியம் நிரம்பிய, சங்கரானந்த தேசிகன் = சங்கரானந்தர் எனப் பெயரிய குருமூர்த்தியினது, பெருகுமா மோகமாம் = காரியசகித மூலாஞ்ஞானமாகிய, பெருங் கராத்தினை = பெரிய முதலையை, பருகி = விழுங்கி, இன்புஅருளலே = சுகத்தைச் செய்வதையே, பரமவேலையாம் = முக்கியத்தொழிலாயுள்ள,

மருமலி = வாசனை நிரம்பிய, பாததாமரை = திருவடிக் கமலங்களை, வணங்குவாம் = நமஸ்கரிப்பாம் (யாம்) (எ—ரு)

தேசிகன் பாத தாமரை வணங்குவாம் எனக்கூட்டுக.

சம் + கர = சங்கர. சம் = சுகம், கர = செய்கின்றனர். எனவே சகல உலகிற்கும் ஆனந்தத்தைச் செய்கின்ற பரமான்மா, சங்கர சத்தத்திற்குப் பொருளாம், இவரே ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறார் என்னுஞ்சுருதியால். ஆனந்த பதத்திற்கு, நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாயிருத்தலால் பரமானந்தரூபராகிய பிரத்யக்கான்மா பொருளாம்.

எனவே சங்கரராகிய ஆனந்தர் = சங்கரானந்தர் என்னும் பண்புத்தொகையினையுடைய சங்கரானந்த சப்தத்திற்குப் பிரத்யக்க பின்ன பரமான்மா பொருளாம். அப்பரமான்மாவே தேசிகர், சங்கரானந்தராகிய தேசிகர் சங்கரானந்ததேசிகர். இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

பரமான்மாவே தேசிகர் என்பது யாங்ஙனம் எனின்:—

" மலமற்றவரை சம்சாரங்கெடுதற்கு ஏதுவான சக்தியின் வீழ்ச்சியினாலும் தீட்சையினாலும் பரமான்மாவே ஆசாரியமூர்த்தியிலிருந்து கொண்டு பரப்பிரமத்தின் கண்சேர்ப்பிக்கின்றார் " என்னும் ஆகமத்தாலென்க. சங்கர ஆனந்த என்னும் இருபதங்களின் சாமானாதிகரண்யத்தால் சீவப்பிரம்மங்களின் ஐக்கியமாகிய விஷயமும், சீவனுக்கு வியாபகபிரம்ம வடிவத் தன்மையிருத்தலால் அபரிசின்ன சுகத்தின் ஆவிர்ப்பாவ வடிவ பிரயோசனமும் சூசிப்பிக்கப்பட்டன. பெருகுமாமோகம் என்பது முதலியவற்றால் அனர்த்த நிவர்த்திவடிவ பிரயோஜனம் வெளிப்படையாகவே கூறப்பட்டது. முதலை முதலியவைபோல தனது வசமடைந்த புருஷருக்கு மீளற்கரிதாய் அதிக துக்கத்திற்குக் காரணமாயிருத்தலால் அஞ்ஞானத்தினை முதலை என்றார். திருவளர் என்னும் விசேஷணத்தால் அணிமாதி அஷ்ட சித்திகளையுமுடையவரெனச் சூசிப்பிக்கப்பட்டது. திருவளர் சங்கர என்னுஞ் சப்தத்திற்கு ஐஸ்வரியத்தாற் சுகத்தைச் செய்கின்றவரெனவும் பொருள் கொள்ளலாம். இதனால் குருவுக்குப் பத்தர்களின் இஷ்டத்தைச் சம்பாதிப்பதில் சாமர்த்தியம் சூசிப்பிக்கப்பட்டது. பிரத்தியக்தத்துவ

விவேகமாவது சருவத்தினும் உள்ளாயுள்ள சாக்ஷி ஆன்மாவை தேகாதியினின்றும் வேறுபிரித்தறிதலாம். அது அந்தக்கரணத்தின் விருத்திவடிவமா யிருத்தலால் இப்பிரகரணத்திற்குப் பெயர் ஆகா தாயினும் ஜன்னியஜனகங்களின் அபேத அபிப்பிராயத்தால் இப் பெயர் ஆயிற்று. விவேகம் ஜன்னியமும் நூல்ஜனகமுமாம், இவ்வாறே ஏனைய விவேகமெனப் பெயரிய பிரகரணங்களிலும் அறிந்துகொள்க. அன்றியும் ஆனந்தமெனப் பெயரிய ஐந்து பிரகரணங்களிலுமுள்ள ஆனந்தமென்னும் பெயர் வாச்சிய வாசகங்களின் அபேத அபிப் பிராயத்தினலாம்.

வேத விகித கருமத்தை அநுஷ்டிக்கும் வியாசர் முதலியோர் சிஷ்டர், அவர்களது ஆசாரம் சிஷ்டாசாரமாம், ஆன்ருேரொழுக்கம் என்பதுவும் அதுவே.

விக்கின நாசத்திற்கு அநுகூலமாகிய வியாபாரம் மங்கலா சரணமாம் அஃது மனதின் வியாபாரமாயிருத்தலால் வெளிப்படை யாகத் தோற்றமின்மையின் சீடர்களைச் சிக்ஷிக்கும் பொருட்டு யாப்பு வடிவமாகத் தொடுத்தனர். சிக்ஷித்தற்கு யோக்கியர் சிஷ்யரெனப் படுவர். ஈண்டு சிக்ஷித்தலாவது நூலாசிரியரிடத்து உண்டாகும் நாஸ்திகத் தன்மையின் பிராந்தியைநீக்கி ஜிஞ்ஞாசுக்கட்கு இந்நூலில் பிரியத்துடன் பிரவிருத்தியையுண்டாக்குதலாம்.

அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் என்னும் நான்கும் கிரந்தத்தின் ஆரம்பத்தில் அவசியம் சொல்லத்தக்கன. அவற்றுள் விஷயமும் பிரயோசனமும் முதற் செய்யுளில் குறிப்பிக் கப்பட்டிருக்கின்றன. இரண்டாவது செய்யுளில் அதிகாரியை வெளிப்படையாகவே கூறியிருக்கின்றனர்.

திரு = அழகு அல்லது பிரம்மவித்தை. 1

(அ — கை)

இப்போது அவாந்த்ரப் பிரயோசனத்தைச் சொல்லுதல் வாயி லாக கிரந்தத்திஞரம்பத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்ருர்.

அப்பதத் துவந்துவ வஞ்செந் தாமரை
யொப்பறு சேவையா லொளிரு நெஞ்சினர்க்
கிப்புவி தனிலுணர் வெளிது தித்திட
மெய்ப்புறு தத்துவ விவேகஞ் சாற்றுகேம். 2

(ப—ரை) அப்பதத்து வந்துவ = முற்கூறிய குருமூர்த்தியின் அவ்விரண்டு திருவடிகளாகிற, அம் செந்தாமரை = அழகிய சிவந்த கமலங்களுக்கு, ஒப்பறு சேவையால் = (செய்யப்பட்ட) சமானமற்ற (துதி நமஸ்காராதி வடிவ) கைங்கரியத்தினுல், ஒளிரும் நெஞ்சினர்க்கு = (இராகாதி மலங்களற்று நிர்மலமாக) விளங்குஞ் சித்தத்தினர்க்கு, இப்புவிதனில் = இந்த லோகத்தின்கண்ணே, உணர்வு எளிது உதித்திட = தத்துவஞானம் அநாயாசமாக உண்டாதற் பொருட்டு, மெய்ப்புறு தத்துவ விவேகம் = உண்மையாகப் பொருத்திய (அகண்ட சச்சிதாநந்த) ஆத்துமாவை (கற்பிக்கப்பட்ட பஞ்சகோச வடிவ சகத்தினின்றும்) பகுத்தறிதலை, சாற்றுவாம் = சொல்லுவாம் எ—று.

தத்துவ ஞானத்தின் உற்பத்தி அவாந்தரப் பிரயோசனமாம். ஈசுவரனது சேவைக்குப் புண்ணியத்தின் உற்பத்தி வாயிலாக அந்தக்கரணசுத்தியாகிய அதிருஷ்டம் பயனும். பிரமவித்தாகிய குருவின் சேவைக்கோ அதிருஷ்டமும், குருவின் சந்தோஷத்தால் உண்டாகும் உபதேசம் முதலிய திருஷ்டமும் பயனும்.

அந்தச்சேவை வாக்குக்காயம் மனம் திரவியம் என்பவற்றின் அர்ப்பணத்தாலுண்டாகிறது. வாக்கினுல் குருவைத் துதித்தல், நிந்தைசெய்யாதிருத்தல் முதலியன வாக்கினர்ப்பணத்தாலுண்டாகும் சேவையாம்.

சிஷ்யன் குருவின் பாதம் பிடித்தல், ஜலங்கொண்டு வருதல் முதலிய இட்ட வேலையைக் கடவாதிருத்தல், தீர்க்க தண்டம் புரிதல் முதலியன சரீரார்ப்பண சேவையாம்.

பதிவிரதையாகிய ஸ்திரீக்குப் பதியினிடத்தில் ஈஸ்வர பாவனையிருத்தல் போல முமுக்ஷுவிற்கும் குருவினிடத்துப் பரமேஸ்வர பாவனையிருத்தல் வேண்டும். குரு இராசதவியவகாரத்திலிருக்கும் போது அவரைப் பிரம்மாவாகவும், மாணுக்கனை இரக்ஷிக்கும்போது

விஷ்ணுவாகவும், கோபிக்குங் காலத்து உருத்திரராகவும், சாந்தமாய் இருக்குங் காலத்துக் கங்கை வடிவமாகவும், சாஸ்திரத்தில் தற்பரரா யிருக்குங் காலத்துக் கணேசராகவும், வசனமாகிற பிரகாசத்தால், சந்தேக விபரீதங்களுடன் அஞ்ஞானமென்னும் இருளைப் போக்குங் காலத்துச் சூரிய வடிவமாகவுமறிக.

இவ்வாறு குருவினிடத்தில் ஈசுவர பாவனையைக்கொள்ள வேண்டும். ஒருக்காலும் தோஷ திருஷ்டி செய்யலாகாது. குருவினிடத்து எல்லோரினும் மேலாந் தன்மையைச் சிந்தித்தல் முதலியன மனத்தின் அர்ப்பணத்தாலுண்டாகும் சேவையாம். திரவி யம் தானியம் வீடு மனைவி புத்திரன் பசு தாசன் தாசி காணிபூமி முதலிய பதார்த்தங்கள் தனமெனப்படும். அவைகள் எல்லாவற்றை யும் கிரகஸ்தராகிய குருவினிடத்துச் சமர்ப்பித்தலும், குரு சன்னியாசி யாயிருப்பின் அத்திரவியத்தை விட்டுக் குருவைச் சரணடைதலும் முதலியன தனத்தினர்ப்பணத்தினலுண்டாகும் சேவையாம். இவ் விதமாகிய குருவின் சேவை இங்கு உத்தேசஞ் செய்யப்பட்டிருக்கின் றது. பாத தாமரை அவரது வடிவத்திற்கும் உபலக்ஷணம்.

ஈண்டு நிர்மல சித்தமாகிய காரணத்தைச் சொன்னதால் அதன் காரியமாகிய விவேகம் வைராக்கியம் ஷட்க சம்பத்தி முமூக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதனங்களும் அர்த்தத்தால் சூசிப்பிக்கப்பட்டன. இதனல் மலவிக்ஷேப தோஷங்களில்லாதவனும் நான்கு சாதனங்களை யுமுடையவன் அதிகாரியெனப்பட்டது. 2

(அ — கை)

சீவப்பிரம்மங்களுக்குள்ள ஐக்கிய வடிவ விஷயம் சம்பவிக்கும் பொருட்டுச் சீவனுக்குச் சத்திய ஞானதி ரூபத்துவத்தைத் தெரிசிப் பிக்க இச்சையுடையவராய் முதலில் ஜாக்கிர முதலிய அவஸ்த்தை களில் ஞானத்திற்கு அபேதத்தைப் பிரதிபாதித்தலினல் அதன் நித்தியத் தன்மையைச் சாதிக்கின்றார். ஆண்டுமுதலில் வெளிப்படை யான வியவகாரத்தையுடைய சாக்கிராவஸ்தையில் ஞானத்திற்கு அபேதத்தைச் சாதிக்கின்றார்.

ஒலியொடு ருதியா மோதும் வேத்தியம்
மலிதரு நனவிடை வடிவின் வேறதாம்
நலிவுசெய் யவற்றின்வே ருகு ஞானந்தான்
பொலிதலி னேகமாய் வேறு பூணுமோ. 3

(ப—ரை) மலிதரு நனவிடை = இந்திரியாதி கருவிகள் நிறைந்து விளங்கும் சாக்கிராவஸ்தையில், ஒலியொடு ஊறு ஆதியாம் = (ஆகாசாதிகளின் குணங்களாகப் பிரசித்தமான) சப்தம் பரிசம் முதலிய குணங்களும் (அவற்றினுதாரத் தன்மையால் பிரசித்தமான ஆகாசாதிகளுமாக), ஓதும் வேத்தியம் = சொல்லாநின்ற விஷயங்களானவை, வடிவின் = (பசு குதிரை முதலியவை போன்று) சொரூபத்தில் (ஒன்றுக்கொன்று வேற்றுத் தர்மமுடையனவாயிருத்தலின்) வேறதாம் = பரஸ்பரம் பின்னமாம், நலிவுசெய் = (முமுக்ஷுக்களுக்கு) துன்பத்தைச்செய்யும், அவற்றின் = அச்சப்தாதி விஷயங்களினின்றும், வேருகு ஞானந்தான் = பின்னமாகிய அறிவானது, ஏகமாய் பொலிதலின் = (ஞானம் ஞானம் என) ஒரே ஆகாரமாய் விளங்குகின்றபடியினுல், வேறு பூணுமோ = பின்னமாகப் பொருந்துமோ, (ஆகாயம் போன்று பின்னமாகாது) எ—று.

தேவதைகளின் அநுக்கிரகத்தோடு கூடிய இந்திரியங்களால் தோன்றும் சப்தாதி விஷயங்களின் ஞானத்திற்காதாரமான காலம் சாக்கிராவஸ்தையாம் அல்லது இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கும் அந்த ஞான ஜன்னிய ஸம்ஸ்காரத்திற்கும் ஆதாரமான காலம் ஜாக்கிராவஸ்தையாம் என்றிப்படி பஞ்சீகரண வார்த்திகத்திலும் விருத்திப்பிரபாகரத்திலும் சொல்லப்பட்ட இலக்கணமுடையது ஜாக்கிராவஸ்தையாம், ஈண்டிஃதனுமானம் விவாதத்திற்கு விஷயமான ஞானம் சுவாபாவிக பேதமற்றது, §உபாதியின் சம்பந்தமின்றிப் பேதந்தோற்ருமையால், ஆகாசம்போல.

---

§ எந்த வஸ்து, தான் எவ்வளவிடத்தில் எந்தக்காலத்திலிருக்கிறதோ அவ்வளவிடத்திலுள்ள வஸ்துவை அந்தக்காலத்தில் மற்றவைகளினின்றும் வேறுபிரித்து அறிவித்துத் தான் வேருய் இருக்கிறதோ அது உபாதி எனப்படும். ஈண்டு சத்த முதலியனவும் ஆகாசம் முதலியனவுமாகிய சகல அநான்ம பதார்த்தங்களும் ஞானத்திற்கு உபாதியாம்.

மற்ெறாரு அநுமானம் சப்த ஞானம், பரிச ஞானத்தினின்றும் வேறன்று. ஞானத்தன்மையால். பரிச ஞானம் போல. ஆகாயத்திற்கு உபாதிகளின் கிரகணத்தால் பேதம் தோற்றுகிறதேயன்றிச் சொரூபத்தால் பேதம் தோற்றுகிறதில்லை. அதுபோல ஞானமும் சொரூபத்தால் பேதமில்லாததாம். ஒரே ஞானத்தில் ஆகாசத்திற்குப் போன்று ஔபாதிக பேதத்தாலும் பின்ன வியவகாரம் பொருந்தும் போது, வாஸ்தவ பேதத்தைக் கற்பிப்பதில் கௌரவமாகிய பாதகம் ஊகிக்கத்தக்கது. சொற்ப சாதனத்தால் நிருவாகமுண்டாகுமிடத்து அதிக சாதனத்தால் நிருவாகஞ் செய்தல் கௌரவ தோஷமாம். அது ஒரு காசினால் அடையப்படும் பதார்த்தத்தை அதிகப்பணம் செலவிட்டு வாங்குதல் போலாம்.

ஒடு எண்ணிடைச் சொல், கடாகாசம் மடாகாசம் கூபாகாசம் என்னுமிவை முதலியவிடங்களில் உபாதிகள் பின்ன பின்னமாயிருக்கினும் ஆகாசம் ஆகாசம் என்று ஒரு வடிவாகத்தோற்றும் ஆகாசம் பின்னமாகாமல் ஒன்றாகவே இருத்தல் போல ஞானமும் ஒன்றாகவே இருக்கிறது எ—று. 3

(அ—கை)

ஜாக்கிராவஸ்தையிற் கூறிய நியாயத்தை சொப்பனாவஸ்தையிலும் *அதிதேசம் செய்கின்றார்.

இன்னதாங் கனவினு மீண்டு வேத்தியம்
மன்னுரு நனவிடை மன்னி நின்றிடு
மன்னதாற் பேதமா மவற்றின் வேதனம்
பின்னமன் றேகமாய்ப் பிறங்கும் பெற்றியால். 4

(ப—ரை) கனவினும் = சொப்பனாவஸ்தையின்கண்ணும், இன்னதாம் = இவ்வாறேயாம் (அதாவது சாக்கிராவஸ்தையில் நாநா வடிவமாயிருத்தலால் விஷயங்களுக்கு பேதமும், ஒரே ஆகாரமாய்

* அதிதேசம் = அதுபோலென்று சொல்லுதல், அதாவது ஓரிடத்திற் கூறிய பொருளை மற்றோரிடத்தில் பொருத்துதலாம். இதனை மாட்டெறிந்தொழுகலென்ப.

இருத்தலால் ஞானத்திற்கு அபேதமுமிருக்கின்றமை போல சொப்பனத்திலும் விஷயங்கள் நானு வடிவமாயிருத்தலால் பரஸ்பரம் பேதமாயும் ஒரே யாகாரமாயிருத்தலால் ஞானம் அபேதமாயுமிருக்குந் தன்மையனவேயாம்) [இங்ஙனம் சொப்பனத்திற்கும் சாக்கிரத்திற்கும் விஷயங்களின் பேதத்தாலும் ஞானத்தின் அபேதத்தாலும் ஒரே வடிவத்தையொப்பிடின் சொப்பனமென்றும் சாக்கிரமென்றும் பேத வியவகாரம் எந்நிமித்தத்தாலுண்டானதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.] ஈண்டு = இச்சொப்பனத்தில், வேத்தியம் = காணப்படுகின்றவிடயங்கள், மன்னுரு = நிலைபெறாதனவாம் (பிரதீதிமாத்திர வடிவமாதலால்), நனவிடை மன்னரி நின்றிடும் = சாக்கிரத்திலோ (காணப்படுகிற விஷயங்கள்) நிலையுடையனவாம். † (காலாந்தரத்திலும் காண யோக்கியமாயிருத்தலால்), அன்னதால் = திரவிஷயத் தன்மை அத்திரவிஷயத்தன்மை வடிவ வேற்றுமையுடையனவாயிருத்தலால், பேதமாம் = சொப்பன சாக்கிரங்களுக்குப் பேதம் உளதாம். [இங்ஙனம் சொப்பனத்திற்கும் சாக்கிரத்திற்கும் பேதமுளதேல் அவற்றின் ஞானங்களுக்கும் பேதமுண்டாகுமே என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.] அவற்றின் வேதனம் = சொப்பன சாக்கிரங்களின் ஞானங்கள், பின்னமன்று = பரஸ்பரம் பின்னமன்றாம [அதில் ஏதுவைக் கூறுகின்றார்], ஏகமாய்ப்பிறங்கும் பெற்றியால் = அவை ஒரே வடிவமாக விளங்குந்தன்மையால் எ—று.

இந்திரியங்கள் ஒடுங்கியவிடத்துண்டாகும் ஜாக்கிர சமஸ்கார ஜன்னிய விஷயத்தோடு கூடிய ஞானம் சொப்பனமாம். அல்லது இந்திரியத்தாற்றோன்றாத ஞானத்திற்கும் அதன் விஷயத்திற்கும் ஆதாரமான காலம் சொப்பனமாம் என்று பஞ்சீகரண வார்த்திகத்திலும் விருத்திப் பிரபாகரத்திலும் சொப்பனவஸ்தையின் இலக்கணம் கூறப்பட்டுளது. ஏகம் என்பது ஏதுகர்ப்பவிசேஷணம், எந்த விசேஷணத்தின் கருப்பத்தில் (மத்தியில்) ஏது அடங்கி இருக்கிறதோ அந்த விசேஷணம் ஏதுகருப்ப விசேஷணம் எனப்படுகின்றது. ஈண்டு ஏகம் என்னும் விசேஷணத்தின் மத்தியில் ஏகமானதால் என்னும் வடிவினதாகிய ஏது அடங்கியிருத்தலால் இது ஏதுகருப்ப விசேஷணமாகும். இவ்வேதுவை மொழிபெயர்த்தோர் வெளிப்படையாகவே கூறியருளினர். 4

---

† காலாந்தரம் = வேறு ஜாக்கிரம்.

(அ — கை)

இவ்வாறிரண்டவத்தைகளிலும் ஞானம் ஒன்றுமென நன்கு சாதித்துச் சுழுத்தி காலத்திலுள்ள ஞானத்திற்குப் பூர்வாவஸ்தைகளின் ஞானத்தோட பேதத்தைச் சாதிக்கும்பொருட்டு ஆண்டுமுதலில் சுழுத்தியில் ஞானமுண்டென்பதைச் சாதிக்கின்றார்.

துயின்றெழுந் தோனுக்குச் சுழுத்தி காலையில்
இயைந்திடுந் தமவறி வெண்ணமா மதூஉம்
பயன்றரு மனுபவம் பற்றி வந்ததால்
அயர்தரு தமமப்போ தறியப் பட்டதே. 5

(ப—ரை) துயின்று எழுந்தோனுக்கு = தூங்கி எழுந்த புருஷனுக்கு, சுழுப்தி காலையில் = தூக்கத்தில், இயைந்திடும் தம அறிவு = பொருந்துகின்ற அஞ்ஞானத்தின் (யாதொரு) ஞானமானது, (நான் ஒன்றுமறியேனென உண்டாகிறதோ அது) எண்ணமாம் = ஸ்மிருதியேயாம், (அனுபவமன்று. அனுபவத்திற்குக் காரணமான இந்திரிய சம்பந்தம் வியாப்தி இலிங்கம் முதலியவை இன்மையின் என்பது பொருள்) [அதனாலென்ன சித்தித்ததெனில் கூறுகின்றார்.] அதூஉம் = அந்தஸ்மிருதியும், பயன்றரும் அனுபவம்பற்றி வந்தது = பிரயோசனத்தைக் கொடுக்குமனுபவத்தை யாசிரயித்து உண்டானதாம் (யாது யாது ஸ்மிருதியோ அது அது அனுபவத்தை முன்னிட்டதாம் என்னும் வியாப்தி உலகத்தில் காணப்பட்டதென்பது பொருள்) [அதனால் தான் என்னை எனில் கூறுகின்றார்], அயர்தருதமம் = துன்பத்தைச் செய்யும் அஞ்ஞானமானது, அப்போது = அச்சுழுத்தி காலத்தில், அறியப்பட்டது = அனுபவிக்கப்பட்டது (எனவறிய வேண்டும்) எ—று.

ஆல் = அசை

ஈண்டு இது அனுமானமாம். விவாத விஷயமான நான் ஒன்றுமறியேன் என்னும் ஞானம் அனுபவத்தை முன்னிட்டு வந்ததாம். ஸ்மிருதியாதலால், அவள் என்னுடைய தாய் என்னும் ஸ்மிருதி போல, சகல வியவகாரங்கட்கும் அனுபவம் காரணமாதலால் பயன்றருமென்றார். சுழுத்தியினின்றுமெழுந்த புருடனுக்குச் சுழுத்திகாலத்திலனுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்தோடு இந்திரிய சம்பந்தமில்லை.

அஞ்ஞானம் இந்திரியத்திற்கு விஷயமாகாமையின். அனுமிதி முதலிய வற்றிற்கு ஏதுவான இலிங்கம் முதலியனவையுமின்றாம். ஆதலால் எழுந்த புருடனுக்குண்டாகும் அஞ்ஞானத்தின் உணர்ச்சி ஸ்மிருதி வடிவமாம். அந்தஸ்மிருதிக்கேது சுழுத்தி காலத்திலுள்ள அனுபவ மாம். அந்த அனுபவம் அஞ்ஞான விருத்தியாலுபகிதமான சாக்ஷி வடிவமாம்.

சுழுப்தியில் அஞ்ஞானத்தின் அனுபவம் சாக்ஷிவடிவமாம் அதற்கு அஞ்ஞானத்தின் பரிணாமமாகிய விருத்தி உபாதியாம், அஃது ஜன்னியமாய் இருத்தலால், உபகித சாக்ஷி வடிவ அனுபவத்தில் ஜன்னியத்தன்மையும் சாக்ஷி வடிவ அனுபவம் சுபாவத்தால் அஜன்னியமாயிருத்தலால் நித்தியத் தன்மையும சாக்கிர சொப்பனங் களின் ஞானங்களோடு அதாவது அந்தக்கரண விருத்தியுபகித சாக்ஷி வடிவ ஞானத்தோடு அபேதமும் பொருந்துமாறறிக. இவ்வாறே சாக்கிர சொப்பனங்களில் சத்தாதிகளின் அனுபவம் சாக்ஷி வடிவமாம். அதற்கு அந்தக்கரணத்தின் பரிணாம வடிவ விருத்திகள் உபாதியாம். அஃது ஜன்னியமாய் இருத்தலால் விருத்தியுபகித சாக்ஷி வடிவ அனு பவத்தின்கண் ஜன்னியத் தன்மையும் அவ்வனுபவம் சுபாவத்தால் அஜன்னியமாயிருத்தலால் நித்தியத்தன்மையும், சுழுத்தி அனுபவத் தோடு அபேதமும் பொருந்துமாறறிக. கடம் நாசமாகும்போது கடாகாசம் நசித்தது என்று கூறுதல்போல சாக்ஷியின்கண் ஜன்னியத் தன்மையும் நாநாத் தன்மையும் ஔபாதிகமாம் என்பது பொருள். 5

•

(அ—கை)

அவ்வனுபவமாகிய ஞானத்திற்குத் தனது விஷயமான அஞ்ஞானத்தினின்றும் வேற்றுமையையும் அன்னிய ஜாக்கிர சொப்பனங்களின் ஞானத்தோடு அபேதத்தையும் கூறுகின்றார்.

அறிவது விடயத்தி னயல்மற் றன்றுகாண்
பிறவறி வினிற்கனுப் பிறங்கும் போதம்போல்
முறையிதி னறிவுமுப் புரத்து மேகமிந்
நெறிபிற மாதயற் றினத்து நிற்குமால். 6

(ப—ரை.) அதுஅறிவு = (சுழுத்தியிலுள்ள அஞ்ஞானத்தின்) அவ்வநுபவமாகிய ஞானமானது, விடயத்தின்அயல் = (தனது விஷய மான) அஞ்ஞானத்தினின்றும் வேறும். (அனுபவமாதலால்,கடத்தினநு பவம்போல) பிறஅறிவினில் மற்றன்று = அன்னியசாக்கிர சொப்பனங் களிலுள்ள ஞானத்தினும் வேறன்று, (ஞானமாதலால்) கனுப்பிறங்கும் போதம்போல் = சொப்பனத்தில் விளங்கும் ஞானம்போல, [பலிதார்த் தத்தைக் கூறுகின்றவராய்ச் சொல்லியநியாயத்தை வேறிடத்தும் அதி தேசம் செய்கின்றார்] இதின்முறை = இந்தக் கிரமமாக, முப்புரத்தும் = (ஒருதினத்திலிருக்கும்) சாக்கிராதிமூன்று அவஸ்தைகளிலும், அறிவு ஏகம் = ஞானமொன்றேயாம், (எல்லா வாக்கியமும் நிச்சயப்பொருளை யுணர்த்தும் ஏகாரத்தோடு கூடியதென்னும் நியாயத்தால் ஏகாரம் சேர்க்கப்பட்டது) இந்நெறி = (ஒருதினத்தில் மூன்றவஸ்தைகளிலும் ஞானத்திற்குள்ள அபேதமாகிய) இந்தக்கிரமம், அயல்தினத்தும் = அன்னிய நாட்களிலும், பிறழாதுநிற்கும் = தவறாதிருக்கும், ஞானத் திற்கு அபேதமேயாமென்பது பொருள் எ—று. காண், ஆல்-அசை. புரம் = உடலாகிய இடம், அது ஈண்டு அவ்வுடற்கண் நிகழும் அவஸ் தையைக் குறித்தது. 6

இதுவுமது

பேதமாய்ச் சென்றதும் பின்னர்ச் சார்வதாம்
மாதமாண் டுகமொடு மருவுகற் பத்துஞ்
சாதலும் பிறத்தலுந் தணந்த ஞானமொன்
றுதலி னிதுசுய மாகுஞ் சோதியே. 7

(ப—ரை) பேதமாய் = அனேகப் பிரகாரமாக, சென்றதும் = கழிந்தனவும், பின்னர்ச் சார்வது ஆம் = இனிமேல் வருவனவுமாகிய, மாதம் = சித்திரை முதலிய மாதங்களிலும், ஆண்டு = பிரபவ முதலிய வருஷங்களிலும், உகமொடு = கிருதம் முதலிய யுகங்களிலும், மருவு கற்பத்தும் = பொருந்தா நின்ற பிராஹ்மம் முதலிய கல்பங்களிலும், (இந்நெறிபிறழாது நிற்கும் என மேற்செய்யுளில் கூட்டி முடிக்க). [ஞானத்திற்கு ஐக்கியத்தைச் சாதித்ததின் பயன் கூறுகின்றார்] ஞான மொன்றுதலின் = ஞானமானது ஏகமாயிருத்தலின், பிறத்தலும் சாதலும்தணந்தது = உற்பத்தியும் நாசமுமின்றியதாம், (சாக்ஷியின்றிய உற்பத்தி விநாசங்கள் சித்திக்காவாகலானும் சாக்ஷியினது உற்பத்தி

விநாசங்கள் அச்சாக்ஷியினுல் கிரகிக்கமுடியாவாகலானும் வேறு சாக்ஷி யின்மையானும் என்பதுபொருள்) [வேறு ஞானமின்றேல் கிரகணம் செய்வதின்மையினுல் இந்த ஞானமும் விளங்காதபோது உலகு இருள்வடிவாகப் போய்விடும் எனின் அதற்குக் கூறுகின்ருர்] இது சுயமாகுஞ்சோதியே = இந்த ஞானமானது சொயம்பிரகாசமேயாம், எ—று. தணந்தது என்பதிலுள்ள 'து' விகுதி குறைந்துவந்தது.

ஈண்டு இஃது அனுமானமாம்:- ஞானம்சுயம்பிரகாசம், அவேத் தியமாயும் அபரோக்ஷமாயுமிருத்தலால், எதிர்மறைதிருஷ்டாந்தம் கடம்போல, இந்த ஏதுவில் அவேத்தியமாகிய விசேஷணம், அசித்தமா மென்னற்க, ஞானத்திற்கு தன்னுல் விஷயமாந்தன்மை யொப்பிடின், தானே கர்த்தாவும் கருமமுமாமென்னும் விரோதம் வரும். அன்னியத் தால் விஷயமாந்தன்மை யொப்பிடின், அநவஸ்தாதோஷம் வரும். ஆதலால் அவேத்தியமாகிய விசேஷணம் பிரசித்தமாம். ஆகையால் சொப்பிரகாசத் தன்மையால் விளங்கும் ஞானத்திற்கு எல்லாவற் றையும் விளக்கும் தன்மை சம்பவிக்குமாதலின், உலகு இருள்வடிவா கப்போகும் என்னுமாபத்தியின்ரும் என்பது பொருள். 7

(அ — கை)

இங்ஙனம் ஞானத்திற்கு நித்தியத்தன்மையும் சொப்பிர காசத்தன்மையுமிருக்குக, அதனுலென்னையெனின் அதற்குக் கூறுகின்ருர்.

ஓதுமான் மாவிதா முவப்பி னுக்கிட
மாதலாற் பரசுக மான்ம வத்துவிற்
சாதலோய்ந் திடநிதந் தரித்தல் வேண்டுமென்
றேதமாய்ந் திடுமுவப் பிலங்கு கின்றதால். 8

(ப—ரை) இது = இந்த ஞானமானது, ஓதும் ஆன்மாவாம் = சொல்லாநின்ற பிரத்தியக்ரூப கூடஸ்தனும், (நித்தியமாயும் சொப் பிரகாசமாயுமிருத்தலால், எது பிரத்தியக்ரூபகூடஸ்தனன்ரே, அது நித்திய சொப்பிரகாசமன்று. கடம்போல எனவெதிரேகி அனுமானம்

காண்க. ஆத்மாவிற்கு நித்திய ஞானரூபத்தன்மையைச்சாதித்தலால், சத்தியத்தன்மையும் சாதிக்கப்பட்டதாகின்றது, நித்தியத்தன்மையினும் சத்தியத்தன்மை வேறின்மையின், நித்தியத்தன்மையே சத்தியத் தன்மையாம். அதனையுடையது நித்தியமாகிய சத்தியமாம் என வாசஸ் பதி மிசிரராலுங் கூறப்பட்டிருத்தலின் என்க.) [ஆத்மாவிற்கு ஆனந்த ரூபத்தன்மையைச் சாதிக்கின்றார்.] பரசுகம் = (ஆத்மா) மேலாகிய ஆநந்தமாம், (நிரதிசய சுகசொரூபமென்பது பொருள்) [அதில் ஏதுவைக் கூறுகின்றார்] உவப்பினுக்கு இடம் ஆதலால் = நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாயிருத்தலால். (ஈண்டு இஃது அனுமானமாம். ஆத்மா பரமானந்த சொரூபமாம், பரமப் பிரேமைக்கு விஷயமாயிருத் தலால், எது பரமானந்த சொரூபமன்றோ அது பரமப்பிரேமைக்கு விஷயமுமன்று, கடம் போல, அதாவது இவ்வாத்மா பரமப் பிரேமைக்கு விஷயமன்றென்பது மின்று. அதனால் பரமாநந்த சொரூபமன்றென்பது மின்று. ஆனால் பரமாநந்த வடிவமேயாம்.) அற்றேல் ஆத்மாவின்கண் எனக்கு திக்காரமா மெனத் துவேஷம் காணப்படுகிறபடியால் பிரேமைக்கு விஷயமாந்தன்மையே சித்தியாதபோது பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மை யெங்ஙனமாமென்று ஆசங்கித்துத் துவேஷமானது துக்கசம்பந்தத்தை நிமித்தமாகவுடையதாக விருத்தலின், அன்னியதா சித்தமாயிருத்தலானும் பிரேமை ஆன்மாவின்கண் அநுபவ சித்தமா யிருத்தலானும் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்.] ஆன்மவத்து வில் = தனது சொரூபமாகிய கூடஸ்தனிடத்தில், சாதல் ஓய்ந்திட = மரணமின்றி, நிதந்தரித்தல் வேண்டும் என்று = எப்போது மிருத்தல் வேண்டும் என்று, ஏதம் மாய்ந்திடும் = கேடின்றிய, உவப்பு இலங்கு கின்றது = நிரதிசயப் பிரேமை (எல்லோருக்கும் அனுபவத்தால்) விளங்குகின்றது, (ஆதலால் ஆத்மாவினிடத்தில் பிரியத்திற்கு விஷய மாந்தன்மை சித்தியாதென்பதில்லை என்பது பொருள்) எ—று. ஆல் - அசை. (8)

(அ — கை)

அங்ஙனமாயின் பிரேமைக்குச் சொரூபாசித்தி நிவர்த்தியாகுக, பிரேமையினது பரத்துவத்தில் பிரமாணமின்றாதலின், ஏதுவின் விசே ஷணம் அசித்தமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

நேயந்தற் பொருட்டய னோர்வ தாமல
வேயதான் மாவிடை யிதர வேதுவோ
ஆயதா லதுபர மாகு மாகையாற்
றூயவான் மாப்பர சுகசொ ரூபனே. 9

(ப—ரை) அயல் = தன்னின் வேருன புத்திராதிகளில், நேர்வதாம் நேயம் = உளதாகும் பிரியமானது, தன் பொருட்டு = ஆத்ம (சேஷத்துவ) நிமித்தமாம், (அவைகளினிமித்தமாகப் பொருந்துவதின்ரும்) ஆன்மாவிடை = ஆன்மாவிடத்து, ஏயது = பொருந்தியுள்ள பிரியமானது, இதர ஏதுவோ அல = மற்றவைகளின் பொருட்டன்று (அன்னிய சேஷத்துவ நிமித்தம் அன்ருமென்பது பொருள். மற்ரு ஆத்மத் தன்மை நிமித்தகமேயாகும்) ஆயதால் = (இங்ஙனம் நிருபாதிகம்) ஆதலால், அது பரமாகும் = அந்தப் பிரியமானது மேலானதாகும் (நிரதிசயமாகும்), ஆகையால் = (நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாந் தன்மையாகிய) ஏதுவிருத்தலால், தூய ஆன்மா = பரிசுத்த மாய ஆன்மா, பரசுக சொரூபனே = நிரதிசயாநந்த சொரூபமேயாம் எ—று. அல—ஒருமையிற் பன்மை மயங்கியது, சேஷத்துவம் = அங்கத்துவம் எ—று. (9).

(அ—கை)

இந்த வேழு பாட்டானுங் கூறிய பொருளைச் சுருக்கிக் காட்டுகின்ருர்.

இவ்வகை மெய்யறி வெழிலின் பாமுயிர்
எவ்வமி லுத்தியா லிலகு தற்பரம்
அவ்வகை யவ்விரு வோர்க்கு மைக்கிய
மெய்வகை மறைமுடி விளம்பு கின்றதே. 10

(ப—ரை) இவ்வகை = இவ்வித (யுக்தியினுல்), "ஒலியொடுருதியும்" என்பதாதியால் ஞானத்திற்கு நித்தியத் தன்மையைச் சாதித்து, அந்த ஞானத்திற்கே "ஓதுமான்மாவிதாம்,, என ஆத்துமத் தன்மையைச் சாதித்தலால் ஆத்மாவிற்குச் சத்ரூபத்துவமும் சித்ரூபத்துவமும் சித்தித்தது "உவப்பினுக்கிடமாதலால்" என்பதாதியால் பரமாநந்தரூபத் தன்மையும் சாதிக்கப்பட்டது. இதனுல்) உயிர் = (மகாவாக்கியத்திலுள்ள துவம் பதத்தினர்த்தமாகிய) ஆன்மா, எவ்வமில்யுக்தியால் = குற்றமில்லாத இவ்வித நியாயத்தால், எழில் மெய் அறிவு இன்பமாம் = சிறந்த சச்சிதானந்த சொரூபமாம். [இங்ஙனம் யுத்தியினுலேயே

சச்சிதானந்த வடிவ ஆத்துமாவின் ஞானமுண்டாகுமாயின் வேதாந்தத்திற்கு அறியப்படாத விஷயமின்மையின் அப்பிரமாணத் தன்மையாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.] அவ்வகையிலகு தற்பரம்= இவ்விதம் சச்சிதானந்த வடிவாக விளங்கும் தத்பதார்த்தமாகிய பிரமத்தையும், அவ்விருவோர்க்கும் = தத்துவம் பதார்த்தங்களான கூடஸ்த பிரமங்களாகிய அவ்விரண்டற்கும், ஐக்கியம்=அகண்ட ஏக ரசத்தன்மையையும், மெய்வகை=உள்ளபடியே, மறைமுடி=வேதாந்தமானது, விளம்புகின்றது=கூறுகின்றது. (ஆகையால் வேதாந்தத்திற்கு நிர் விஷயத்தன்மை யின்றாம்.) எ-று. ஏ- அசை. (10)

(அ—கை)

ஆத்மாவின் பரமானந்த ரூபத்தன்மையை நிஷேதிக்கின்றான்

விளங்குறா தெனிலிலை மிகுதி நேயமும்
விளங்குறு மெனிலிலை விடய வேட்கையும்
விளங்கினு மாதலான் விளங்கு றாததாம்
விளங்குமான் மாப்பர மேனி யின்பமே. 11

(ப—ரை) (ஆத்மாவின் பரமானந்த ரூபத்துவம் விளங்குகின்றதா? இல்லையா? ) விளங்குறாதெனில்=(ஆன்மாவின் பரமானந்த ரூபத்துவம்) தோற்றவில்லையெனின், மிகுதி நேயமும் இலை = (ஆன்மாவின்கண்) நிரதிசயப் பிரேமை யுண்டாவதின்றாம், (பிரியமானது விஷயத்தின் சுந்தரத் தன்மை ஞானத்தாலுண்டாவதாகலின்.) விளங்குறுமெனில்=(அது) தோற்றுகின்றதெனின், விடயவேட்கையும்இலை=(சுகசாதனமான மாலை சந்தனம் முதலிய) விஷயங்களிலும் அதனாலுண்டாகிய சுகத்திலும் பிரியமுண்டாக லாகாது, ( பலம் கிடைத்தபோது சாதனத்தி லிச்சை பொருந்தாதபடியாலும் நித்திய நிரதிசயானந்தங் கிடைத்தபோது, க்ஷணிகமாயும் சாதனங்களின் பராதீனமாயுமுள்ள விஷய சுகத்தில் இச்சை பொருந்தாத படியாலும் என்க. ஆகையால் ஆத்மாவிற்குப் பரமானந்த ரூபத்தன்மை பொருத்தமன்றாமென்பது சங்கையின் தாற்பரியம்) [ஈண்டு விளங்குதல் விளங்காமை யென்னும் இரண்டினின்றும் வேறு பிரகாரம் பொருந்துகிறபடியால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] ஆதலால்=(தோன்றும் பக்ஷத்திலும் தோற்றாத பக்ஷத்திலும் தோஷமுண்டாகும்) காரணத்தினால், விளங்கினும் விளங்குறாததாம் = (சாமான்னிய வடிவத்தால்) தோன்றினும் (விசேஷ வடிவத்தால்) தோன்றாததாக விருக்கின்றது,

விளங்கும் ஆன்மா = (ஆதலின்) சுயம்பிரகாசமாகிய ஆன்மா, பர இன்ப மேனியே = நிரதிசயானந்த சொரூபமேயாம் எ—று.
ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (11)

(அ—கை)

அங்ஙனமாயின் ஒரே வஸ்துவிற்கு ஒரே காலத்தில் விளக்கம் விளக்கமின்மை இரண்டும் பொருந்தாதென்னும் சங்கைக்கு இந்தப் பொருத்தமின்மை அங்ஙன் உலகிற் காணப்படாமையினலா? அல்லது யுக்தியின்மையினலா? என்று விகற்பித்து அவற்றில் முதலாவதைப் பரிகரிக்கின்ருர்.

ஓதுவோர் குழுவிடை யுற்று நின்றிடும்
காதல ஞேதுறு கவின்கொ ளோசைபோல்
மேதக விளங்கினும் விளங்கு ருதுதற்
சோதியின் றடையினுற் சொல்ல லாகுமால். 12

(ப—ரை) ஓதுவோர் குழுவிடை = வேதாத்தியயனஞ் செய்வோரது கூட்டத்தில், உற்று நின்றிடும் = (மத்தியில்) பொருந்தியிருக்கும், காதலன் = புத்திரனது, ஓதுறு கவின்கொள் ஓசை போல் = சொல்லா நின்ற அழகிய(அதாவது)மதுரமாகிய சப்தத்தைப் போன்று, (வீட்டின் வெளியிலிருக்கும் பிதாவிற்குப் புத்திரனது அத்தியயன சப்தமானது சாமான்னியமாக விளங்கியும் பிறர் சப்தத் தடையினல் விசேஷமாக இது என்னுடைய புத்திரனது சப்தமென விளங்குவதின்ரும். அதுபோன்று) விளங்கினும் மேதக விளங்குருது = ஆனந்தமும் (சாமான்னிய ரூபத்தால்) விளங்கியும் (விசேஷ ரூபத்தால்) விளங்காமலிருக்கின்றது (என்பது பொருள்) [யுக்தியின்மையினலா? என்னும் இரண்டாவது பக்ஷத்தைப் பரிகரிக்கின்ருர்] தன்*சோதியின் = சுயஞ்சோதி சொரூபத்திற்கு, தடையினல் = (பின் 13வது செய்யுளில் சொல்லப்போகிற) பிரதிபந்தத்தினல், விளங்கினும் விளங்குருது = (சாமான்னிய ரூபத்தால்) தோற்றினும் (விசேஷ ரூபத்தால்) தோற்ருமை, சொல்லலாகும் = கூறல் பொருத்தமாம் (யுத்தி யுக்தமாமென்பது பொருள்) எ—று. ஆல்-அசை, விளங்கினும் விளங்குருது என்பது பின்புங் கூட்டப்பட்டது.

*சோதியின் என்பது உருபுமயக்கம்.

காரியத்தின் விரோதியைப் பிரதிபந்தமென்றும். பிரதி பந்தக மென்றும்சொல்லுவர். ஈண்டு பரமானந்தத் தன்மையின் விசேஷத் தோற்றமாகிய காரியத்திற்கு ஆவரணம் விரோதியாதலின் பிரதிபந்த மாம், ஈண்டு இஃதுஅபிப்பிராயமாம். அஞ்ஞானிகளுக்கு சாமானியமாக ஆன்மாவின் பரமானந்தத்தன்மை தோற்றுகின்றமையின் அதன்கண் நிரதிசயப்பிரீதியும், அஞ்ஞானத்தின் அம்சமாகிய ஆவரணமென்னும் பிரதிபந்தத்தால், விசேஷமாகத் தோற்ருமையின், சத்தாதிவிஷயங் களில் இச்சையும் பொருந்தும். ஞானிகளுக்கும் வியவகாரகாலத்தில் பகிர்முக விருத்தியாகிய பிரதிபந்தத்தால் பரமானந்தத்தன்மை விசேஷ மாகத் தோன்ருமையின் விஷயங்களில் இச்சையும் பகிர்முக விருத்தி யாகிய பிரதிபந்தம் ஒழிந்த காலத்தில் ஆன்மாவின்கண் நிரதிசயப் பிரீதியுமுண்டாகின்றது. அஃது ஈரமுள்ள ஆற்றில் ஓரிடத்துமணலை விலக்குவதனுல் பள்ளத்தில் ஜலம் வெளிப்பட்டு மறுபடியும் மணலைத் தள்ளுவதினுல் ஜலம் மறைக்கப்பட்டு மறுபடியும் மணலை விலக்குவ தினுல் ஜலம் ஆவரணமின்றித்தோற்றுவதுபோலாம். 12

(அ — கை)

அற்றேல் அத்தடையாது எனிற் கூறுகின்ருர்.

இருப்பது விளங்குவ தென்னற் பாலதாம்
பொருட்கணத் தகைமையைப் போக்கி மற்றதன்
விருத்தமா யிருப்பதில் விளங்கு ருதெனத்
தருக்குறச் சனிப்பது தடைய தென்பரால். 13

(ப—ரை) இருப்பது விளங்குவது என்னற்பாலதாம் பொருட் கண் = இருக்கின்றது விளங்குகின்றது என்னும் வியவகாரத்திற்கு யோக்கியமான வஸ்துவின்கண், அத்தகைமையைப்போக்கி = அவ்வித வியவகாரத்தைத்தள்ளி, அதாவது மறைத்து, அதன்விருத்தமாய் = அவ்வியவகாரத்திற்கு விரோதமாய், இருப்பதுஇல் = இருத்தல் இல்லை, விளங்குருது = தோற்றவில்லை, எனத்தருக்கு உறசனிப்பது = என்று அபிமானம் பொருந்த உண்டாவது; தடையதுஎன்பர் = பிரதிபந்த மென்று சொல்லுவர் சான்ருேர், எ—று.

ஆல் = அசை நிலை. 13

(அ — கை)

முற்கூறிய இலக்ஷணமுடைய பிரதிபந்தத்தின் காரணத்தை திருஷ்டாந்தத்திலும் தாஷ்டாந்தத்திலும் முறையாகக்காண்பிக்கின்ருர்

காதல ஞேதொலி காதுட் கோடலி
ஞேததற் கநேகரோ டியைவுற் ருேதுத
லோதுமிங் கதிமயக் குதித்தற் கேதுவா
மாதியில வித்தையே யாகு மென்பவே. 14

(ப—ரை) காதலன்ஓதுஒலி = புத்திரனது அத்தியயனசத்தத்தை, காதுள்கோடலின் = கேட்டல் வடிவ (திருஷ்டாந்தத்தில்) அதற்கு ஏது = அத்தடைக்குக் காரணம், அநேகரோடு இயைவுற்று ஓதுதல் ஆம் = வெகுபேர்களோடு சேர்ந்து படித்தலாம், ஓதும்இங்கு = சொல்லாநின்றதார்ஷ்டாந்தத்தின் கண், அதிமயக்கு உதித்தற்கு = மிக்க விபரீத ஞாநங்களுண்டாவதற்கு, ஏது = (முக்கிய) காரணமும், ஆதியில் = அநாதியும் ஆகிய, அவித்தையே = அஞ்ஞானமே, ஆகும் என்ப = பிரதிபந்த காரணமாமென்று (பெரியோர்) கூறுவர் எ — று. அவித்தையே என்பதில் ஏகாரம் தேற்றம். இறுதி ஏகாரம் அசைநிலை.14

(அ — கை)

இப்போது தடைக்கேதுவான அவித்தையைப் பிரதிபாதிப்பதற்காக அதற்குக்காரணமாயுள்ள பிரகிருதியைப் பிரதிபாதிக்கின்ருர்.

பிரமசிற் சுகநிழற் பெற்று முக்குண
வுருவமாம் பகுதிய துற்ற சத்துவ
நிருமல மலினத்தி னேரு மாயையு
மருவவித் தையுமென வகையி ரண்டரோ. 15

(ப—ரை) சிற்சுகபிரம = ஞாநாநந்த ரூபபிரமத்தினது, நிழல் = பிரதிபிம்பத்தை, பெற்று = அடைந்ததாயும், முக்குணஉருவம் ஆம் = சத்துவரஜதமோ குணங்களின் சாம்மியாவஸ்தா ரூபமாயுமிருப்பது (எதுவோஅது) பகுதி = பிரகிருதி (யென்று சொல்லப்படுகின்றது.) [பிரகிருதியின் பாகுபாட்டையும் அதில் ஏதுவையுங்கூறுகின்ருர்] அது = அந்தபிரகிருதியானது, உற்றசத்துவநிருமல மலினத்தின் நேரும் = பொருந்திய (பிரகாசவடிவ) சத்துவகுணத்தின் சுத்தியினுலும்

அசுத்தியினாலும், (முறையே) சம்பவிக்கின்ற, மருவுமாயையும் அவித்தையும் என = பொருந்தா நின்ற மாயையெனவும், அவித்தையெனவும், இரண்டுவகை = இருவிதமாம், எ — று. அரோ, அசைநிலை.

சத்துவகுணத்தின் சுத்தியாவது தமோகுண ரஜோகுணங்களால் மலினம் பண்ணப்படாமை, சத்துவகுணத்தின் அசுத்தியாவது அக்குணங்களால் மலினம் பண்ணப்பட்டதன்மையாம், விசுத்த சத்துவ குணப்பிரதானம் மாயையும் மலின சத்துவ குணப்பிரதானம் அவித்தையுமாம் என்பது பொருள். 15

(அ—கை)

எதன்பொருட்டு மாயையவித்தைகளுக்குப் பேதங்கூறப்பட்டதோ அதனையிப்போது காண்பிக்கின்றார்.

மாயைவிம் பித்தவன் வயஞ்செய் தேயதை
யேயமுற் றறிவனு மீசன் றானுமாந்
தேயவித் தையின்வயன் சீவன் மற்றதற்
காயவேற் றுமையினு லநேக னாகுமே. 16

(ப—ரை) மாயைவிம்பித்தவன் = மாயையில் பிரதிபலித்த சிதான்மா, அதைவயஞ்செய்து = அந்த மாயையைத் தனததீனஞ் செய்துகொண்டு, ஏயமுற்றறிவனும் = பொருந்தா நின்ற சர்வஞ்ஞனும், ஈசன்றானும்ஆம் = சர்வேசுவரனுமாவன் (சர்வஞ்ஞத்து வாதிகுண விசிஷ்ட ஈசுவரனவன் என்பது பொருள்) தேய் = (ஞானத்தால்) கெடுகின்ற, அவித்தையின்வயன் = (அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த சிதான்மா) அதனதீனனாய், சீவன் = கிஞ்சிஞ்ஞத்து வாதிகுணவிசிஷ்ட ஜீவனும், அதற்கு ஆயவேற்றுமையினால் = (உபாதியாயுள்ள) அவ்வவித்தைக்கு, உளதாய அசுத்தியின் தாரதம்மியத்தினால், அநேகன் ஆகும் = (அச்சீவன்) அநேகப்பிரகாரமாக ஆவன் (தேவமநுஷியபசு பக்ஷியாதி பேதத்தால் நாநாவிதமாவன்) எ—று.

ஏ-மற்று ஏ-அசைகள். 16

(அ — கை)

முஞ்சத்திற் பசும்புற்போல் என்னும் மேல் முப்பத்தெட்டாவது செய்யுளில் தீரர்களால் யுக்தியினால் மூன்று சரீரத்தினின்றும் பிரிக்கப்

பட்ட சீவனுக்கு பரப்பிரம ரூபத்துவம் சொல்லப்படுகிறது. ஆண்டு மூன்று சரீரங்கள் யாவை? அவைகளையுபாதியாகவுடைய சீவனுக்குச் சொரூபம்யாது? எனஆகாங்க்ஷையுண்டாக "அது காரணசரீரமா கின்றது" என்பன முதலியவற்றால் அவ்வெல்லாவற்றையுங்கிரமமாகப் பிரதிபாதிக்கின்றார்.

ஆமது காரண வாக்கை மானிதா
னேமநற் பிராஞ்ஞ மிவர்கட் கீசனாற்
றாமதப் பகுதியிற் சாரப் போகம்விண்
போமருத் தனலறல் பூமி வந்தவே. 17

(ப—ரை) அது = அந்த அவித்தை, காரண ஆக்கை ஆம் = காரண சரீரமாம், (தூலசூக்ஷும சரீராதிகளுக்குக் காரணமாயுள்ள பிரகிருதியின் அவஸ்தா விசேஷமாதலால் உபசாரத்தால் காரணம். தத்துவ ஞானத்தால் நாசமாகின்றபடியால் சரீரம்.) மானி = (காரண சரீரத்தில் தாதான்மிய அத்தியாசத்தால் நான் அஞ்ஞானி என்று) அபிமானமுள்ள சீவன், ஏமநல் பிராஞ்ஞன் ஆம் = சுகவடிவ நல்ல பிராஞ்ஞனவன், (அவிநாசி சொரூபாநுபவம் பிரஞ்ஞையாம் அதனை யுடையவன் பிரஞ்ஞன். பிரஞ்ஞனே, பிராஞ்ஞனும்.) [கிரமத்தால் பிராப்தமான சூக்ஷும சரீரத்தையும் அதனை யுபாதியாகவுடைய சீவனை யும் பிரதிபாதிப்பதற்காக அதற்குக் காரணமான ஆகாசாதிசிருஷ்டி யைக் கூறுகின்றார்.] இவர்கட்கு = இப்பிராஞ்ஞர்களுக்கு, போகம்சார = சுகதுக்க சாக்ஷாத்கார சித்தியின் பொருட்டு, தாமதப் பகுதியில் = (பூர்வம் 15-ஆம் செய்யுளில் சொல்லிய உபாதான காரணமாயுள்ள) தமோகுணப் பிரதானமான பிரகிருதியினின்றும், ஈசனால் = (பிரேரித்த லாதிசக்தி விசிஷ்டனும் ஜகத்தினதிஷ்டானனும் ஆகிய) இறைவனது ஆஞ்ஞையினால் (அஃதாவது ஈக்ஷண பூர்வகம் சிருஷ்டிக்க வேண்டும் என்கிற இச்சையாகிய நிமித்த காரணத்தால்) விண் = ஆகாசமும், போம்மருத்து = சலனமுள்ள வாயுவும், அனல் = அக்கினியும், அறல் = ஜலமும், பூமி = பிருதிவியும், (ஆகிய பஞ்சபூதங்களும்) வந்த = உண் டாயின எ—று. ஏ—அசை.

பஞ்சபூதங்களுக்குத் தமோகுணப்பிரதானப் பிரகிருதி யுபாதான காரணமும் ஈசுவராஞ்ஞை நிமித்த காரணமுமாமென்பது பொருள். (17)

(அ—கை)

பூதங்களின் சிருஷ்டியைக் கூறி, பௌதிக சிருஷ்டியைக் கூறுபவராய் முதலில் ஞானேந்திரிய சிருஷ்டியைக் கூறுகின்றார்.

அவைகளின் சத்துவத் தைந்து கூற்றினாற்
செவிதுவக் கக்கியுஞ் சிகுவை மூக்கெனு
மிவைமுறை யைந்துஞா னேந்தி யங்களாங்
கவினவை யனைத்தினுட் கரணம் வந்ததே. 18

(ப—ரை) அவைகளின் = ஆகாசாதி பஞ்சபூதங்களின், ஐந்து சத்துவக் கூற்றினால் = (உபாதானமாயுள்ள) பஞ்சசத்துவாம்சங்களால் செவி = சுரோத்திரமும், துவக்கு = பரிசமும், அக்கி = சக்ஷுவும், சிகுவை = இரசனமும், மூக்கு = கிராணமும், எனும் ஐந்து ஞானேந்தியங்கள் இவை = என்று சொல்லப்பட்ட பஞ்ச ஞானேந்திரியங்களாகிய இவைகள், முறையாம் = கிரமமாக உண்டாயின (ஒவ்வொரு பூதத்தின் சத்துவாம்சத்தால் ஒவ்வொரு இந்திரியமுண்டாயிற்றென்பது பொருள்) [சத்துவாம்சங்களின் தனித்தனி அசாதாரண காரியத்தைக் கூறி எல்லாவற்றின் சாதாரண காரியத்தைக் கூறுகின்றார்] கவின் அவையனைத்தின் = (ஒன்று சேர்ந்த) அழகிய அவ்வெல்லாவற்றினின்றும். அந்தக் கரணம் = (மனோபுத்திகளுக்கு உபாதான திரவியமாகிய) உட்கரணம், வந்தது = உண்டாயிற்று எ—று. ஏ—அசை.

ஞானேந்திரியங்களுக்கு வியஷ்டி சத்துவாம்சமும் அந்தக் கரணத்திற்குச் சமஷ்டி சத்துவாம்சமும் உபாதான காரணமாம். ஈஸ்வராஞ்ஞையே யாண்டும் நிமித்த காரணமாம். (18)

(அ—கை)

அந்தக் கரணத்தின் அவாந்தர பேதத்தையும் அதில் நிமித்தத்தையும் கூறுகின்றார்.

விருத்திபே தத்திரு விதம தாமன
முருச்சமு சயமதி யுருவ நிச்சய
மரத்தமா மிரசதத் தைந்து கூற்றினாற்
பரித்தவாய் கைபதம் பாயு குய்யமாம். 19

(ப—ரை) விருத்தி பேதத்து=(அவ்வந்தக்கரணம்) பரிணும விசேஷத்தால், இருவிதமதாம்=இரண்டு விதமாம். [பரிணும விசேஷத்தையே கூறுகின்ருர்.] மனம்=மனமானது, சமுசயஉரு=சமுசய வடிவத்தினையுடையது, மதி=புத்தியானது, நிச்சய உருவம்=அத்தியவசாய வடிவத்தினை யுடையது [கிரமத்தால் பிராப்தமான ரஜோ குணும்ஸங்களினது தனித்தனி அசாதாரண காரியங்களைக் கூறுகின்ருர்.] அரத்தம் ஆம் இரசதத்து=(ஆகாசாதிகளின்) சிகப்பு வடிவினதாகிய ரஜோ குணத்தினது, ஐந்து கூற்றினுல்=(உபாதானமாயுள்ள) பஞ்சாம்ஸங்களால், பரித்த=தத்தம் தொழிலைத் தரிக்கின்ற, வாய்=வாக்கும், கை=அஸ்தமும், பதம்=பாதமும், பாயு=குதமும், குய்யம்=உபஸ்தமும், ஆம்=உண்டாயினவாம் எ—று.

கூறிய நாமங்களையுடையனவாய் கிரியாஜனகமாயுள்ள ஐந்து கருமேந்திரியங்கள் உண்டாயினவென்பது பொருள். கருமேந்திரியங்களுக்கு உபாதான காரணம் பஞ்சபூதங்களின் வியஷ்டி ரஜோ குணும்ஸமாம். (19)

(அ—கை)

பூதங்களின் இரஜோம்ஸங்களினது சாதாரண காரியத்தைக் கூறுகின்ருர்.

சொனவவை யனைத்தினுற் றுவள்பி ராணனும்
பினமுறு விருத்தியாற் பிறழ்பி ராணனும்
அனகவ பானனு மவிர்ச மானனும்
வினைசெயு தானனும் வியானன் ருனுமாம். 20

(ப—ரை) சொன அவை அனைத்தினுல்=மேற்கூறிய ரஜோ குணும்ஸங்களெல்லாவற்ருலும், துவள் பிராணன் ஆகும்=சலனம் உள்ள பிராணவாயு உண்டாம். [அதனது அவாந்தர பேதத்தைக் கூறுகின்ருர்.] பினம் உறு விருத்தியால்=(அந்த வாயு) நாநாவாகப் பொருந்திய உசுவாசம் முதலிய வியாபார பேதத்தால், பிறழ்பிராணனும்=சலனமுள்ள பிராணனும், அனக அபானனும்=குற்றமற்ற அபானனும், அவிர்சமானனும்=விளங்காநின்ற சமானனும், வினைசெய் உதானனும்=தொழிலைச் செய்யும் உதானனும், வியானனும்=வியானனும், ஆம்=என ஐந்து விதமாம் எ—று-தான். அசை (பிராணுதி வாயுக்களுக்கு உபாதான காரணம் பஞ்சபூதங்களின் சமஷ்டி ரஜோ குணும்ஸமாம்.)

இருதய தேசத்திலிருந்து கொண்டு சுவாச உச்சுவாசமாக உள்ளும் வெளியும் வந்து போய்க் கொண்டிருக்கும் வாயுவிற்குப் பிராணன் என்று பெயர். குதத்திலிருந்துகொண்டு மல மூத்திரங்களை கீழே இறக்கும் வாயுவிற்கு அபானன் என்று பெயர். தோட்டக்காரன் கிணற்று நீரை வாய்க்காலின் வழியாய்த் தோட்ட முழுவதிலும் சேர்ப் பித்தல் போல நாபியிலிருந்து கொண்டு உண்ட அன்ன ரசங்களை நாடியின் வழியாய்ச் சரீரம் முழுவதிலும் அடைவிக்கும் வாயுவிற்குச் சமானன் என்று பெயர். கண்டத்திலிருந்துகொண்டு உண்ணப்பட்ட னவும், பருகப்பட்டனவுமாகிய அன்னஜலங்களை, வேறு பிரித்தலும் வாந்தி முதலியவற்றைச் செய்வித்தலுமாகிய வாயுவிற்கு உதானன் என்று பெயராம். சரீரம் முழுவதிலுமிருந்து கொண்டு சகல அங்கங்க ளின் மூட்டுகளையும் திருப்புகிற வாயுவிற்கு வியானன் என்று பெயராம். (20)

(அ—கை)

எதன்பொருட்டு ஆகாசம் முதல் பிராண பரியந்தமான தத்து வங்களின் சிருஷ்டி கூறப்பட்டதோ அதனையிப்போது தரிசிப்பிக்கின் றார்.

புத்திகன் மேந்தியம் புகல்பி ராணனைந்
தத்தொடு மனமதி யாக்கை சூக்குமஞ்
சொத்திடு மிலிங்கமிச் சூக்க மானத்தால்
உத்தமப் பிராஞ்ஞனுண் டொளிருந் தைசதன். 21

(ப—ரை) புத்தி (இந்தியம் ஐந்து)=ஞானத்திற்கேதுவாகிய ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்ம இந்தியம் (ஐந்து) = (வியாபாரத்திற் கேதுவாகிய) கருமேந்திரியங்கள் ஐந்து, புகல் பிராணன் ஐந்து= சொல்லா நின்ற பிராணவாயுக்கள் ஐந்து, அத்தொடு=அவைகளோடு மனம்=(சங்கல்ப வடிவமுள்ள) மனமும், மதி=(நிச்சய வடிவமுள்ள) புத்தியும், (ஆகிய பதினேழு தத்துவங்களால்) சூக்கும ஆக்கை= சூக்ஷ்ம சரீரமாம், [அதற்கே வேறு நாமங் கூறுகின்றார்] இலிங்கம் சொத்திடும்=அது இலிங்க சரீரமென்று (வேதாந்தங்களில்) சொல்லப் படும். [இவ்வாறு சூக்ஷ்ம சரீரத்தைக் கூறி அதனபிமானத் தன்மை யின் அதீனமான பிராஞ்ஞ ஈஸ்வரர்களது வேறு அவஸ்தையைக் கூறுகின்றார்.] உத்தமப் பிராஞ்ஞன்=(அவித்தையை யுபாதியாக வுடைய) மேலான பிராஞ்ஞனென்னும் சீவன், இச்சூக்க மானத்தால்=

இந்த (தேஜஸ் சப்தவாச்சிய அந்தக்கரண உபலக்ஷித) இலிங்க சரீரத்தில் உள்ள தாதாத்மிய அபிமானத்தால், ஆண்டு = அச் சரீரத்தில், தைசதன் = தைஜசனாக, ஒளிரும் = விளங்குவன் எ-று. சொற்றிடும் என்பது சொத்திடுமென எதுகை நோக்கி விகாரமாயிற்று.

"இலிங்கசரீரமென்பது இலிங்கமாகிய சரீரமாம். அது விசார வாயிலாகச் சரீரத்தில் ஆத்மா உண்டு" என்று அறிவிப்பதற்கு இலிங்கமாதலின் இலிங்க சரீரம் எனப்படும். அல்லது அநுமானத்தால் அறியப்படுதலின் இலிங்க சரீரமாம். ஈண்டு இஃது அநுமானம் சங்கற்ப விகற்ப ரூபக்கிரியை கரணஜன்னியமாம் என்பது பிரதிஞ்ஞை. கிரியை வடிவமாதலின் என்பது ஏது, வெட்டுதலாகிய கிரியை கோடரி முதலிய கருவிகளினின்றும் ஜன்னியமாவதுபோல வென்பது திருஷ்டாந்தமாம். இங்ஙனம் மற்ற தத்துவங்களிலும் ஊகிக்க. (21)

இதுவுமது

இரணிய கருப்பனு மீசன் மற்றிவன்
வரைவறு சமட்டியா மன்னுயிர் யாவையும்
மொருமையாத் தானென வுணர்த லின்மையால்
விரிவுறு சீவர்கள் வியட்டி யென்பவே 22

(ப—ரை) ஈசன் = மாயோபாதிகனான பரமேஸ்வரன், இரணிய கருப்பன் ஆம் = (அச்சூக்ஷ்ம சரீரத்தில் நானென்னு மபிமானத்தால்) இரணிய கருப்பன் ஆவன், [தைஜச இரணிய கருப்பர்களுக்குச் சூக்ஷ்ம சரீரத்தில் அபிமானம் சமானமாயின் அவ்விருவர்களுக்கும் பரஸ்பர பேதம் எக்காரணத்தாலெனின் கூறுகின்றார்.] இவன் = இவ்விரணிய கருப்பன், வரைவு அறு = எல்லையற்ற. சமட்டியாம் = சமட்டியாவன், (வியஷ்டித் தன்மை சமஷ்டித் தன்மையால் பேதமென்பது பொருள்.) [ஈசனுடைய சமஷ்டித் தன்மையிலும் சீவர்களுடைய வியஷ்டித் தன்மையிலும் காரணங் கூறுகின்றார்.] மன்னுயிர் யாவையும் ஒருமையாத் தானென உணர்தல் ஆல் = இலிங்க சரீரத்தை யுபாதியாகப் பொருந்திய தைஜஸரனைவரையும் தன்னோடு அபேதமாய்த் தானாக அறிதலின், (ஈசன் சமஷ்டியாவன்). இன்மையால் = அங்ஙனம் அறிதலின்மையின், விரிவுறு சீவர்கள் = விஸ்தாரமாகிய சீவர்கள், வியட்டியென்ப = வியட்டியாமென்று முதியோர் சொல்லுவர் எ-று. மற்று—ஏ—அசைகள்.

ஈச சீவர்களின் சமஷ்டிவியஷ்டிகட்கு ஏதுவாக முறையே உணர்தல் இன்மையாலெனக் கூறினமையின் இன்மையால் என்பதி லுள்ள ஆல் உணர்தலோடுஞ்சென்று இயைந்து ஏதுப்பொருள் பட்டமை காண்க. 22

(அ—கை)

இங்ஙனம் இலிங்கசரீரத்தையும் அதனையுபாதியாக வுடையதை ஐசஇரணிய கருப்பர் இருவரையும் தெரிவித்து தூலசரீராதிகளின் உற்பத்தி சித்திக்கும்பொருட்டு பஞ்சீகரணத்தைக் கூறுகின்றார்.

நுகர்வம ராலய நுகர்வுந் தோற்றிடப்
பகவன்விண் முதற்பஞ்சீ கரணம் பண்ணினன்
வகிர்ந்திரண் டொன்றுநால் வகைசெய் தாதியைத்
தகவித ரங்களிற் சாத்த வவ்வைந்தாம். 23

(ப—ரை) பகவன் = ஐஸ்வரியாதி ஆறுகுணங்களையுமுடைய பகவானாகிய பரமேஸ்வரன் (மீண்டும் அச்சீவர்களின் போகத்தின் பொருட்டு.) நுகர்வுஅமர்ஆலயம்=போகம் பொருந்துகின்ற, (சராயு ஜாதி நான்குவித) சரீரமும், நுகர்வும் = அன்னபானாதிபோக்கியங் களும், தோற்றிட=உண்டாதற்பொருட்டு, விண்முதல்=ஆகாசாதி (ஐந்துபூதங்)களை, பஞ்சீகரணம்பண்ணினன் = (ஒவ்வொன்றையும்) ஐந்தைந்துவடிவாகச் செய்தான். [எப்படி ஒவ்வொன்றற்குமைந் தைந்து வடிவமாந்தன்மை எனின் அதற்குக் கூறுகின்றார்] ஒன்று இரண்டு வகிர்ந்து = ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப்பகுத்து, ஆதியை நால்வகைசெய்து = (மீண்டும்) பிரதமபாகத்தை நந்நாலு பாகங்களாகச்செய்து, தகவு இதரங்களில்சாத்த=தகுதியான (தன்னி னின்றும்) வேறான (நான்குபூதங்களுடைய இரண்டாவது யாதொரு ஸ்தூலபாகங்களுண்டோ) அவற்றோடு (முன் முன்பாகங்களின் நன் நான்கம்ஸங்களில் ஒவ்வொன்றைச்) சேர்க்க, அவ்வைந்தாம்=ஐந் தைந்து வடிவமாம்—எ—று—போகாயதநமென்பார் நுகர்வமராலய மென்றார், நுகரப்படும் பொருளினைஈண்டுநுகர்வு என்றார். 23

(அ—கை)

இங்ஙனம் பஞ்சீகரணத்தைக்கூறி அப்பூதங்களாலுண்டாவ தானகாரியக்கூட்டத்தைக் காட்டுகின்றார்.

புகலவற் றண்டமும் புவன போக்கியம்
நுகர்வமர் தநுவுமா நுவலிவ் வாக்கையிற்
றகவிராட் டாகும்பொன் கருப்பன் றைசத
னகமுறு விசுவன்றே வாதி யாவனல் 24

(ப—ரை) புகல் அவற்று = சொல்லிய பஞ்சீகரணம் பண்ணப் பட்ட பூதங்களினால், ஈஸ்வராஞ்ஞையினால், அண்டமும் = பிரமாண்ட மும், புவனம் = (அப்பிரமாண்டத்தினுள்ளே மேல் பாகத்திலிருக்கிற பூலோக முதலிய ஏழு உலகங்களும், பூமியினுங் கீழிருக்கிற அதலம் முதலிய ஏழு) உலகங்களும், போக்கியம் = (அவ்வவ்வுலகங்களில் அவ்வப் பிராணிகளால் புசித்தற்கு யோக்கியமான) அந்நாதிகளும், நுகர்வு அமர் தநுவும் = (அவ்வவ்வுலகத்திற்கு உசிதமான) போகாசிரிய மாகப் பொருந்திய தூல சரீரங்களும், ஆம் = உண்டாயினவாம். [இங்ஙனம் தூல சரீர உற்பத்தியைக் கூறி அத்தூல சரீரங்களில் அபிமான மடையும்போது சமஷ்டி வடிவ இரணிய கருப்பனுக்கு வைஸ்வானரன் என்னும் பெயரும் தனித்தனி தூல சரீரத்தில் அபிமானமடையும்போது வியஷ்டிவடிவ தைஜசர்களுக்கு விசுவர்களென்னும் பெயரும் உண்டா கின்றன எனக் கூறுகின்றார்.] பொன்கருப்பன் = (இலிங்க சரீர அபிமானியாய) இரணிய கருப்பன், நுவலிவ் ஆக்கையில் = சொல்லிய இந்த சமஷ்டி தூல சரீரத்தின்கண் (அபிமானமடையும்போது) தகவிராட்டாகும் = மேலான வைசுவானரன் (எனும் நாமமுடையவன்) ஆவன், தைஜசன் = (வியஷ்டி இலிங்க சரீர அபிமானியாய) தைஜசன், உறு அகம் = (அவ்வியஷ்டி தூல சரீரத்தின்கண்) பொருந்தா நின்ற நான் என்னும் அபிமானத்தால், விசுவன் = விசுவனென்னும் பெயரை அடைபவனாவன். [விசுவர்களின் அவாந்திர பேதத்தைக் கூறுகின்றார்.] தேவாதி ஆவன் = சுரநரதிரியக்காதி அனந்த வடிவினனாவன் எ-று. ஆல்-அசை. தைசதன் விஸ்வன் என்பது சாதியில் ஒருமை. 24

(அ—கை)

இப்போது விசுவப்பெயரையடைந்த அச்சீவர்களுக்குத்தத்துவ ஞானமின்மையின் சமுசாரப் பிராப்தியின் பிரகாரத்தைத் திருஷ்டாந் தத்தோடு இரண்டுகவிகளால் கூறுகின்றார்.

அவர்பகி ருணர்வின ராகி வேறெளிர்
எவமறு தத்துவ போத மில்லராய்க்
கவர்தரு நுகர்வுறக் கரும மாற்றுவர்
தவமுறப் பயனையும் தாம்பு சிப்பரால். 25

(ப—ரை) அவர்=அந்தத் தேவர் முதலிய ஜீவர்கள், பகிர் உணர்வினர் ஆகி=வெளியிலுள்ள சப்தாதி விஷயங்களையே அறிகின்றவர்களாய், (ஆந்தர ஆத்மாவை அறிகின்றார்களில்லை) "பிரஹ்மாவாகிய சுயம்பு இந்திரியங்களை பகிர்முகமாக சிருஷ்டித்தார். அதனால், வெளிவிஷயங்களையே பார்க்கின்றார்கள். உள்ளே ஆத்மாவைக் காண்கின்றார்களில்லை" என்னுஞ்சுருதியால், [அற்றேல் தார்க்கீகர் முதலியோர் தேகத்தினும் வேறான ஆத்மாவை அறிகின்றார்களே யென்னுஞ் சங்கைக்கு அவர்கள் ஆத்மாவை அறிகிறவர்களாயிருப்பினும் சுருதியினால் சித்தித்த தத்துவமாகிய சுத்தாத்ம சொரூபத்தை அறிகிறார்களில்லை என்னுமபிப்பிராயத்தால் சொல்லப்பட்டது எனக் கூறுகின்றார்.] வேறு ஒளிர்=(அந்த ஜீவர்கள் தேகத்தினும்) வேறாக விளங்குகின்ற, எவம் அறு=தோஷமற்ற, தத்துவபோதம்=அசங்க கூடஸ்தனது ஞானம், இல்லராய்=இன்றியவர்களாய், கவர்தரு நுகர்வு உற=(அதனாலேயே) இச்சிக்கின்ற சுகாதி அனுபவத்தின் பொருட்டு, கருமம்=(அவ்வச்சரீரத்திற்கு உசிதமான) கருமங்களை, ஆற்றுவர்= செய்வார்கள், தவம் உற=(மீண்டும்) கருமஞ் செய்வதற்காக, பயனையும்=(தேவாதி சரீரங்களால்) அவ்வப் பயனையும், புசிப்பர்=அனுபவிப்பார்கள் எ—று. தாம், ஆல்=அசைகள். தவமற என்பதை தவமுற என மூலத்தை அனுசரித்துத் திருத்தப்பட்டது. எவ்வம் என்பது எதுகை நோக்கி எவம் எனக் குறுகி நின்றது. பலத்தின் அனுபவமின்றேல் அவ்வப்பலத்தின் சஜாதீய இச்சை பொருந்தாதபடியால் அவ்வப் பலத்தின் சாதனானுட்டானமும் பொருந்தாதலின், சுக போகங்களின் அனுபவம் யாகாதி சுப கருமங்களில் பிரவிருத்தித்தற்கு ஏதுவாமென அறிக. 25

இதுவுமது

நதியுறு புழுச்சுழி தோறு நண்ணியே
கதிபெறு தெனவவர் கடுகி யோர்பவத்
திதியொழிந் தோர்பவத் திதியை நண்ணியே
யதிகதுக் கந்தனை யடைவ ரென்பவே. 26

(ப—ரை) நதியுறு புழு = ஆற்றுப் பிரவாகத்தில் அகப்பட்ட புழுவானது, சுழிதோறும் நண்ணி = (அதிசீக்கிரமாக) ஒவ்வொரு நீர்ச்சுழலையுமடைந்து, கதிபெருது என = அதனால் சுகத்தையடையாது மிகுந்த துன்பத்தை அடைவதுபோன்று, அவர் = (சம்சாரத்திலிருக்கும்) அச்சீவர்கள், கடுகி = அதிசீக்கிரமாய், ஓர் பவத்தினி ஒழிந்து = ஒரு சன்மத்திலிருப்பை விட்டு, ஓர் பவத்தினை = மற்றோர் சன்மத்திலிருப்பை, நண்ணி = பொருந்தி, அதிக துக்கந்தனை = (இலேசமும் சுகமின்றியவர்களாய்) மிகுந்த துன்பத்தை, அனுபவர் என்ப = அநுபவிப்பார்கள் என்று சொல்லுவர் (பெரியோர்) எ—று. சன்மம் = தேகம், சீக்கிரமாய் ஒரு தேகத்தை விட்டு மற்றொரு தேகத்தை அடைவாரென்பது பொருள். ஏ மூன்றுமசைகள். 26

(அ—கை)

இவ்வாறு சமுசாரப் பிராப்தியைக் கூறி அதன் நிவர்த்தி யுபாயத்தைத் தெரிவிப்பதற்காக முதலில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

புண்ணிய முதிர்ச்சியாற் புகன்ற வப்புழு
தண்ணளிச் செல்வராற் சார்ந்து தீரமேல்
வண்ணமென் றளிர்விரி மரத்தி னீழலை
நண்ணியே தளர்ச்சிபோய் நன்கு மேவுமால் 27

(ப—ரை) புகன்ற அப்புழு = முன் சொல்லப்பட்ட அக்கீடமானது, புண்ணிய முதிர்ச்சியால் = (பூர்வஞ் செய்த) சத்கரும பரிபாகத்தால், தண் அளி செல்வரால் = (வழிப்போக்கர்களாகிய) குளிர்ந்த கிருபையையே செல்வமாகவுடைய புருஷரால், தீரமேல் சார்ந்து = கரையின்மேல் பொருந்தி (பிரவாகத்தினின்றும் தூக்கிவிடப்பட்டு) இரக்ஷிக்கப்பட்டு என்றபடி, வண்ணமென் தளிர்விரி = அழகிய மிருதுவான இலைகள் பரவியுள்ள, மரத்தின் நீழலை = தருவின் சாயையை, நண்ணியே = பொருந்தியே, தளர்ச்சிபோய் = துன்பம் நீங்கி, நன்கு மேவும் = (சுகத்தை) நன்றாயடையும் எ—று. ஆல் அசைநிலை. 27

(அ—கை)

இப்போது திருஷ்டாந்தத்தில் சித்தித்த பொருளை தாஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார்.

வஞ்சமி றத்துவ ஞான மன்னிய
தஞ்சமாங் குருவுப தேசஞ் சார்ந்துபின்
பஞ்சகோ சங்களின் பகர்வி வேகத்தா
லெஞ்சலில் சுகமவ்வா றிசைந்தி ருப்பரால். 28

(ப—ரை) (மேற்கூறியபடி புண்ணிய கரும பரிபாக வசத்தாலே யே) வஞ்சமில் தத்துவ ஞானம் மன்னிய=மறைவின்றிய ஆத்ம ஞானத்தினையுடைய, தஞ்சம் ஆம்=புகலிடமாகிய, குரு=ஆசாரியரி னின்றும், உபதேசம் சார்ந்து = (தத்துவமசி மகா வாக்கியார்த்த ஞானத்திற்குச் சாதனமான, பின்-49-ல் சொல்லப்போகிற) சிரவணம் என்னும் உபதேசத்தைப் பெற்று, பின்=சிரவணத்தின் பின்னர், பஞ்சகோசங்களின் = அன்னமயம் முதலிய ஐந்து கோசங்களின், பகர் விவேகத்தால்=சொல்லப்போகிற விசாரத்தால், எஞ்சல் இல் சுகம் = குறைவின்றிய பரிபூரணமான ஆனந்தத்தை, அவ்வாறு= அப் புழுப்போன்று, இசைந்திருப்பர்=அடைந்திருப்பார்கள் எ—று ஆல்–அசை.

தேகாத்ம புத்தியை விடாது கேவலம் தெய்வவாணி நற்செந் தமிழ் இயல் இசைகளாகிய வித்தைகளை மாத்திரம் கற்றுணர்ந்து அனுபவக்ஞானமின்றியும், தமக்கு அனுபவம் வந்திருப்பதுபோன்று நடித்துக்காட்டும் வாசாலஞானிகளுக்குண்டாயிருக்கும் வஞ்சக ஞானம் போலல்லாமல் "தத்துவமசி" முதலிய மகா வாக்கியத்தின் (பிர்ஹ்மாத்ம ஐக்கிய வடிவ) அர்த்தத்தின் ஞானம், சந்தேக விபரீதமின்றியதாய்ப் பூரணனுபவ சாக்ஷாத்கார யதார்த்த வடிவ ஞானமென்பான், "வஞ்ச மில் தத்துவ ஞானம்" என்றும், உலகில் நீயே கதியென்று தம்மைச் சரணடைந்தவர்கட்குப் பந்தஹேதுவான, உண்மையல்லாத யாதே னும் ஒன்றை காதினுள்ளே ஊதி "அந்த கோலாங்கூல நியாயமாக" ஜனன மரண ரூப மகத்தான துக்கத்திற்கு வழிகாட்டுபவர் தஞ்சராகார். மற்றோ தம்மைச் சரணடைந்த முமூக்ஷுக்கட்குக் கருணையோடு மோக்ஷ ஹேதுவான ஜீவப்பிரஹ்மைக்கிய வடிவஞானத்தை உபதே சித்து இன்பமார்க்கத்தை அளிப்பவரே தஞ்சராவார் என்பான் "தஞ்ச மாங்குரு" என்றுங் கூறினர். 28

(அ—கை)

அன்னமய முதலிய அப்பஞ்சகோசங்கள் யாவையென்னு மாகாங்க்ஷையுண்டாக அவைகளையுபதேசிக்கின்றார்.

அன்னமு முயிர்மன மறிவு மானந்த
மென்னுமைங் கோசமா மிவற்றி ணல்மறைத்
தின்னறீர் தன்னுரு வெனச்சொல் லாற்றுமா
தன்னுரு மறதியாற் சார்வன் வன்பவம். 29

(ப—ரை) அன்னமும் = அன்னமயமும், உயிர் = பிராணமய மும், மனம் = மனோமயமும், அறிவு = விஞ்ஞானமயமும், ஆனந்தம் = ஆனந்தமயமும், என்னும் = என்று சொல்லுகின்ற இவையே, ஐங் கோசமாம் = பஞ்சகோசங்களாம், [அவ்வன்னமயம் முதலியவைகளுக் குக் கோச சத்தத்தின் வாச்சியத் தன்மையில் காரணங் கூறுகின்றார்.] இவற்றினல் = இப்பஞ்சகோசங்களினல், மறைத்து = மூடப்பட்டு, இன்னல்தீர் = துக்கமின்றிய, தன்உரு எனச்சொல் ஆற்றுமா = தனது வடிவமாகச் சொல்லப்பட்ட ஆன்மா, தன்னுரு மறதியால் = தனது சொரூபத்தின் விஸ்மிருதியால், வன்பவம் = கொடிய ஜனனத்தை, சார்வன் = அடைவன் எ—று.

ஆத்துமா என்பது ஆற்றுமா எனவும் வழங்கப்பெறும். கோச மானது எப்படி கோசகாரக்கிருமிக்கு மறைக்குந் தன்மையால் துன்ப காரணமோ அப்படி அன்னமயாதிகளும் அத்துவயானந்தத்தை மறைக்குந் தன்மையால் ஆத்துமாவுக்குத் துன்ப காரணமாயிருத்தலின் கோசங்கள் எனப்படுகின்றன. ஆத்துமாவுக்குச் சத்துத்தன்மை, சேதனத்தன்மை, ஆனந்த வடிவத்தன்மை, அத்துவயத்தன்மை என நான்கு விசேஷணங்களும், தேகாதிகளுக்கு அசத்துத்தன்மை, ஜடத் தன்மை, துக்கவடிவத் தன்மை, துவைதத்தோடு கூடிய தன்மை என நான்கு விசேஷணங்களுமிருக்கின்றன. அவற்றுள் ஆத்மாவின் சத்துத்தன்மையும், சேதனத்தன்மையும், தேகாதிகளின் அசத்துத்தன் மை ஜடத்தன்மைகளை மறைத்திருக்கின்றன. அதனல் தேகாதிகள் சத் தைப் போலவும் சேதனத்தைப் போலவும் தோற்றுகின்றன. தேகாதி களின் துக்கவடிவத்தன்மையும் துவைதத்தோடு கூடிய தன்மையும் ஆன்மாவின் ஆனந்த வடிவத் தன்மையினையும் அத்வைத வடிவத் தன் மையினையும் மறைத்திருக்கின்றன. அதனல் ஆன்மா துக்கமுடையதும்

துவைதத்தோடு கூடியதுமாகத் தோற்றுகின்றது. இவ்விரண்டு விசேஷணங்களின் ஆவரணத்தால் மற்றப்பூரணத்தன்மை, நித்தியமுத்தத் தன்மை முதலிய விசேஷணங்களின் ஆவரணமும் சித்திக்கின்றது. இவ்வாறு ஆத்மாவிற்கும் பஞ்சகோசங்களுக்கும் ஒன்றற்கொன்று அத்தியாசமிருத்தலால் முமுக்ஷுக்கள் ஆன்மாவையும் பஞ்சகோசங்களையும் அவசியம் விவேகித்தல் தகுதியாம் என்க. 29

(அ—கை)

அக்கோசங்களின் சொரூபங்களைப் பஞ்சமா பூதத்தாமெனத் தொடங்கி மொழியுமானந்தமென்பதுவரை, இரண்டரைப் பாட்டால் கிரமமாகப் பிரதிபாதிக்கின்றார்.

பஞ்சமா பூதத்தாம் பருத்த வாக்கையே
யெஞ்சலி லன்னமா மிலிங்கத் தேய்வுறும்
விஞ்சிரா சதத்தெழு மிகுபி ராணனு
மைஞ்சுங்கன் மேந்திய மமர்பி ராணனும். 30

(ப—ரை) பஞ்சமா பூதத்து ஆம்=(பஞ்சீகரணம் பண்ணப்பட்ட) ஐந்து தூல பூதங்களினின்றும் உண்டாகிய, பருத்த ஆக்கையே= தூல சரீரமே, எஞ்சலில்=குறைவற்ற, அன்னமாம் = அன்னமய கோசமாம், இலிங்கத்து ஏய்வுறும்=சூக்ஷும சரீரத்தில் பொருந்தியிருப்பதும், விஞ்சு இராசதத்துஎழும்=மிகுந்த இரஜோகுணத்தினின்றும் உண்டானதும் ஆகிய, மிகுபிராணனும்=மிகுந்த பிராணவாயுவும் (அபானன் முதலிய வாயுக்களும்), கன்மேந்திரியம் ஐஞ்சும்=(வாக்கு முதலிய) கருமேந்திரியங்களைந்தும், அமர்=கூடி, பிராணன் ஆம்= பிராணமய கோசமாம், எ—று. அமர்ந்து என்னும் இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சம் அமர் என ஈறு தொக்கி நின்றது. 30

(இதுவுமது)

சத்துவத் தெழும்புத்தீந் திரியந் தன்னுடன்
செத்துரு மனமுமே சேர்ம னோமயம்
புத்திநிச் சயவுருப் போந்த வற்றொடே
சுத்தவிஞ் ஞானமாச் சொல்லுங் கோசமாம். 31

(ப—ரை) செத்துஉரு = (பஞ்சபூதங்களின் சத்துவகுண காரியமாகச் சொல்லப்பட்ட) சமுசய வடிவ, மனமும் = மனதும், சத்துவத்தெழும் = (தனித்தனி பூதங்களின்) சத்துவகுணத்தினின்று முண்டான, புத்தி இந்திரியந்தன்னுடன் = (சுரோத்திராதி ஐந்து) ஞானேந்திரியங்களுடன், சேர் = கூடி, மனோமயம் = மனோமய கோசமாம், நிச்சய உருபுத்தி = (பூதங்களின் சத்துவகுண காரியமான) நிச்சய வடிவ புத்தியானது, போந்த அவற்றொடு = மேற்சொல்லிவந்த அந்த ஞானேந்திரியங்களுடன் கூடி, சுத்த விஞ்ஞானமது, சொல்லுங் கோசமாம் = பரிசுத்தமான விஞ்ஞான மயமாக மொழியுங் கோசமாம் எ—று. ஏ ஏ அசைகள். செத்து = சமுசயம். **31**

(இதுவுமது)

ஓதுகா ரணத்துறு மொளிசெய் சத்துவ
மோதமுன் விருத்தியு மொழியு மானந்தஞ்
சேதன வாற்றுமா செறிந்தக் கோசத்தோ
டேதவம் மயமுமா யிருப்ப னென்பவே. **32**

(ப—ரை) ஓதுகாரணத்து உறும் = (முன் 17-வது செய்யுளில் சொல்லிய) காரணசரீரமாகிய அவித்தையின்கண் பொருந்தியிருக்கும், ஒளிசெய்சத்துவம் = பிரகாசத்தைச் செய்யுஞ் சத்துவ குணமும், மோதம் முன்விருத்தியும் = (இஷ்டவஸ்துவின் தரிசனத்தாலும் பிராப்தியினாலும் அனுபவத்தினாலும் முறையே உண்டாகா நிற்கும்) பிரியம் மோதம் முதலிய விருத்தி வடிவ சுக விசேஷங்களும், மொழியும் ஆனந்தம் = சொல்லா நின்ற ஆனந்தமய கோசமாம் [இங்ஙனம் தூல சரீராதிகள் அன்னமயாதி சப்தவாச்சியங்களாயின் சுருதியில் இப்புருஷனே அன்னரசமயன் என்றாரம்பித்து "அவ்விவ்வன்னரசமயனினின்றும் வேறாய் உள்ளேயிருக்கும் ஆன்மா பிராணமயனுவன் அதினின்றும் வேறாய் உள்ளாய் இருக்குமான்மா மனோமயனுவன்" என்பதாதி கேட்கப்படுகிறபடியால் ஆன்மாவிற்கு அன்னமயாதி சப்த வாச்சியத்துவமெப்படிச் சொல்லப்படுகிறது என்னுஞ் சங்கைக்குத் தேகாதிகள் அன்னாதிகளின் விகாரமாதலால் அன்னமயாதி சத்த வாச்சியங்களாம், ஆன்மாவோ அவ்வக்கோசத்தோடு தாதான்மிய அபிமானத்தால் அன்னமயாதி சத்த வாச்சியமாமெனக் கூறுகின்றார்.]

சேதன ஆற்றுமா = ஞானவடிவ பிரத்தியக்கான்மா, அக்கோசத்தோடு செறிந்து = அப்பஞ்சகோசங்களோடு தாதான்மியமாகப் பொருந்தி, ஏதஅம்மயமும் ஆய் = குற்றமுடைய அப்பஞ்சகோசங்களின் வடிவமாய் இருப்பன் என்ப = இருப்பான் என்று ஆன்றோர் சொல்லுவார்கள் எ—று. ஏ—அசை.

வியவகார காலத்தில் அன்னமயாதிகோசம் பிரதானமாவதால், அன்னமயாதி சத்த வாச்சியனென்பது பொருள். அம்மயமும் ஆய் என்றதிலுள்ள உம்மையானது ஆன்மாவிற்குக் கோசங்களினின்றும் வேற்றுமையைத் தெரிவிக்கும் பொருட்டாம். 32

(அ—கை)

அற்றேல் தேகாதிகளின் தாதான்மியமுற்ற ஆன்மாவிற்கு பிரம்மத்தன்மை எப்படிக் கூடும் என்னுஞ் சங்கைக்கு, கோசங்களினின்றும் வேறு பிரித்தலால் கூடுமென்று கூறுகின்றார்.

மன்னுடம் பாடெதிர் மறையி னுனுமாந்
துன்னுமைங் கோசத்தின் றொடர்வி வேகத்தாற்
றன்னதான் மாவினைத் தானு ணர்ந்துமேற்
பின்னமில் லாப்பரப் பிரம மாகுமால். 33

(ப—ரை) மன்உடம்பாடு எதிர்மறையினனும் = நிலைபெற்ற அன்வயவிய திரேக யுக்திகளினலும், துன்னும் ஆம் = ஒன்றை ஒன்று பூரித்துளதாகிய, ஐங்கோசத்தின் தொடர் விவேகத்தால் = தொடர்ந்து செய்யும் பஞ்சகோசங்களினின்றும் (ஆன்மாவை) வேறு செய்தலாகிய விசாரத்தால், அல்லது ஆன்மாவினின்றும் பஞ்சகோசங்களை வேறு செய்தலால், தன்னது ஆன்மாவினை = தனது பிரத்யக்கான்மாவை, தானுணர்ந்து = அதிகாரியான தான் சிதானந்த சொருபமாக நிச்சயஞ் செய்து, மேல் = பின்னர், பின்னம் இல்லா = பேதமற்ற, பரப்பிரமம் ஆகும் = பரபிரமமேயாவன் எ—று. ஆல்-அசை. 33

(அ—கை)

இப்போது சொல்ல விரும்பிய அன்வயவிய திரேக யுக்திகளைக் கூறுகின்றார்.

கனவிற் றூலமெய் கண்ணு ருதெனுந்
தனதுரு வொளிர்வது தனது டம்படா
மனகமாந் தன்னுரு வவிர்வ தென்னினும்
பினவுட லெதிர்மறை பிறங்கி டாமையே. 34

(ப—ரை) தூலமெய்கண்-உருது என்றும் தூல சரீரம் தோன்ருததாகிய, கனவில் = சொப்பனுவஸ்தையில், தனது உரு ஒளிர்வது=தனது (உண்மை வடிவ) பிரத்தியக்கான்மா (சொப்பன சாக்ஷியாக) விளங்குவது, தனது உடம்படாம்=ஆன்மாவின் அன்வயமாம், அனகமாந்தன் உரு அவிர்வது என்னினும்=(அச்சொப்பனுவஸ்தையில்) பாவமற்றதாகிய பிரத்தியக்கான்மா விளங்கினும், பினஉடல்=வேருன தூலதேகம்,பிறங்கிடாமையே=விளங்காமையே,எதிர்மறை=(தூல தேகத்தின்) வெதிரேகமாம் எ—று.

இந்தப் பிரகரணத்தில் அன்வயவியதிரேக சப்தங்களால் முறையே அநுவிருத்தி வியாவிருத்திகள் சொல்லப்படுகின்றன. அநுவிருத்தி தொடர்ந்திருத்தல், வியாவிருத்தி தொடர்ந்தில்லாமை. உடம்பாடாம் என்பது உடம்படாம் என இன்னிசை குறித்துக் குறுகிற்று. 34

(அ—கை)

இங்ஙனம் தூலதேகத்திற்கு அநான்மத் தன்மையைப் போதிக்கும் அன்வயவெதிரேகங்களை யறிவித்து இனி இலிங்க தேகத்திற்கு அநான்மத் தன்மையைப் போதிக்கும் அன்வயவெதிரேகங்களைத் தெரிவிக்கின்ருர்.

சூக்கமெய் மறையினுஞ் சுழுத்தி யிற்றன
தாக்கமாந் திகழ்வுடம் பாட தாகுமா
ணீக்கமா மெதிர்மறை நிகழி னுஞ்சொய
மூக்கமாஞ் சூக்கமெய் யொளிர்வு ருமையே. 35

(ப—ரை) சுழுத்தியில் = சுழுத்தியவஸ்தையில், சூக்கமெய் மறையினும்=இலிங்க சரீரம் தோன்ருதாயினும், தனது ஆக்கமாம் திகழ்வு=(அச்சுழுத்தியின் சாக்ஷிரூபமாக) பிரத்தியகாத்மாவின் மேலாகிய விளக்கம், உடம்பாடதாகும்=ஆன்மாவினன்வயமாம், சொயம் நிகழினும்=ஆன்மா விளங்கினும், ஊக்கமாம்=ஊக்கமுடையதாகிய,

சூக்க மெய் = இலிங்க தேகமானது, ஒளிர்வு உருமையே = விளங்கா மையே, நீக்கமாம் எதிர்மறை = வியாவிருத்தியாகிய வெதிரேகமாம் எ—று. ஆல்-அசை. 35

(அ—கை)

அற்றேல் பஞ்சகோசங்களின் விவேசனத்தை ஆரம்பித்து இலிங்க தேகத்தை விவேசனஞ் செய்தல் பிரகிருதத்தில் அசங்கதமா மென்னுஞ் சங்கைக்கு பிராணமயாதி மூன்று கோசங்களும் இலிங்க சரீரத்திலேயே அடங்கியிருத்தலின் பிரகிருதத்தில் அசங்கதமின்று எனக் கூறுகின்றார்.

உயிர்மன முணர்வென வோது கோசமும்
பயிலுமத் தேர்ச்சியாற் பகுக்கப் பட்டன
குயிலவை யாண்டன்றே குணவ வத்தையின்
வியனுறு பேதத்தின் வேறு பட்டன. 36

(ப—ரை) பயிலும் அத்தேர்ச்சியால் = சொல்லாநின்ற அச் சூக்ஷ்ம தேகத்தினை விவேசனஞ் செய்வதால், உயிர் = பிராணமயம், மனம் = மனோமயம், உணர்வு = விஞ்ஞானமயம், என ஓது கோசமும் = என்று சொல்லப்பட்ட மூன்று கோசங்களும், பகுக்கப்பட்டன = (ஆன்மாவினின்றும்) வேறு பிரிக்கப்பட்டனவாம் [எதனாலெனில் கூறுகின்றார்], குயில் அவை = சொல்லிய அம்மூன்று கோசங்களும், ஆண்டன்றே = அச்சூக்கும தேகத்தின் கண்ணல்லவா, குண அவஸ்தையின் = சத்துவகுண இரஜோ குணங்களினது குணப்பிரதான பாவ அவஸ்தைகளின், வியனுறு பேதத்தின் = அதிகமான தாரதம்மிய விசேஷத்தால், வேறுபட்டன = வேறு பிரிக்கப்பட்டனவாகின்றன (பேதமாக நிச்சயிக்கப்பட்டன) எ—று.

பிராணமயம் கேவல ரஜோ குணத்தின் அவஸ்தையாம், மனோமயம் ஞானேந்திரியத்தால் வியவகாரஞ் செய்தலாலும், இச்சை முதலிய ரஜோ குண விருத்தியோடு கூடியிருத்தலாலும் சாத்வீக ராஜசமென்னும் இரண்டு குணங்களின் அவஸ்தையாம். விஞ்ஞானமயம் கேவல சத்துவகுணமாத்திரத்தின் அவஸ்தையாம். இப்படி அவஸ்தைகளின் பேதத்தால் ஒரே இலிங்க சரீரத்தில் மூன்று கோசங்கள் வேருக சொல்லப்படுகின்றன. 36

(அ — கை)

இப்போது ஆனந்தமய கோசமாக விவக்ஷித்த காரண சரீரத்தின் விவேசனோபாயங் கூறுகின்றார்.

மறையினுஞ் சுழுத்திதான் மனுஞ்ச மாதியி
னிறைவுறு மாற்றுமா நிகழ்வ தன்வயம்
உறைவெதி ரேகந்தா னொளிர்வ தாகினும்
அறையுமச் சுழுத்திதோன் றாமை யாகுமே. 37

(ப—ரை) மனுஞ்சமாதியில் = (மேல் 51ல் சொல்லப்படும்) நிலைபெற்ற சமாதியவஸ்தையில், சுழுத்திதான் = சுழுத்தியவஸ்தையாலுபலக்ஷிக்கப்பட்ட காரண தேகவடிவ அஞ்ஞானமானது, மறையினும் = தோன்றாதாயினும், நிறைவு உறும் ஆற்றுமா = பரிபூரணமாகிய தான், நிகழ்வது = விளங்குவது, அன்வயம் = ஆன்மாவின் உடன்பாடாம், தான் ஒளிர்வதாகினும் = ஆன்மா விளங்குமாயினும், அறையும் அச்சுழுத்தி தோன்றாமையே = சொல்லாநின்ற அச்சுழுத்தியவஸ்தையாலுபலக்ஷிக்கப்பட்ட காரண தேக வடிவ அஞ்ஞானமானது விளங்காமையே, உறை வெதிரேகமாகும் = நிலைத்த எதிர்மறையாகும் எ—று.

ஈண்டிஃது அனுமானமாம். பிரத்தியகான்மா அன்னமயாதிகளினின்றும் வேறு, பரஸ்பரமவைகள் வேறுபடினும் தான் வேறுபடாமையால், எது எவைகள் வேறுபடும்போது வேறுபடுகிறதில்லையோ அது அவைகளினின்றும் வேறாம். புஷ்பங்களினின்றும் வேறான நூல் போல அல்லது கண்டாதி கோவியத்திகளினின்றும் வேறான கோத்தன்மை போலவாம், வேறுபடுதல் = வியாவிருத்தி, வேறுபடாமை = அனுவிருத்தி, கண்டவியத்தி = கால் வெட்டப்பட்ட பசு. 37

(அ—கை)

உடன்பாடெதிர்மறைகளால் பஞ்சகோசங்களினின்றும் வேறு பிரிக்கப்பட்ட ஆன்மாவிற்குப் பிரமத்தினடைவு உண்டாகின்றதென முன் 33-வது செய்யுளில் கூறப்பட்டது. அதனைப் பிரதிபாதிக்கும் "அங்குஷ்ட மாத்திரமாகிய புருஷன் அந்தரான்மா" என்பது முதல் "அவனைப் பரிசுத்தமாயும் அமிர்தமாயுமறிய வேண்டும்" என்பது வரையிலுள்ள கடவல்லி சுருதியை அர்த்தத்தாற் படிக்கின்றார்.

முஞ்சத்திற் பசும்புற்போல் மொழிநல் லுத்திகொண்
டுஞ்சிடுந் தீரரா லுடல மூன்றினின்
றெஞ்சலி லாற்றுமா வெடுக்கப் பட்டிடின்
விஞ்சிடு பிரமமாய் விளங்கு றுஞ்சொயம். 38

(ப—ரை) முஞ்சத்தின்=முஞ்சமென்னும் பேருள்ள திருண விசேஷத்தினின்றும், பசும்புல்போல்=(உள்ளே இருக்கும்) மிருதுவான தண்டு (எப்படி வெளியில் மறைத்துக் கொண்டிருக்கிற தூலமான பத்திரங்களைப் பிரித்தல் வடிவ உபாயமென்னும் யுக்தியினுல் எடுக்கப்படுகிறதோ அது) போல, மொழி நல் உத்திகொண்டு= சொல்லிய நல்ல அன்வயவெதிரேக வடிவ உபாயங்களால், உஞ்சிடும்=ஏவுதற்குரிய, தீரரால்=பிரமசரியாதி சாதன சம்பன்ன அதிகாரிகளாகிய தீர புருஷர்களால், உடலம் மூன்றினின்று = மூன்று தேகங்களினின்றும், எஞ்சல் இல் ஆற்றுமா=பரிபூரணமாகிய ஆத்மா, எடுக்கப்பட்டிடின் = வேருகப் பிரிக்கப்படின், விஞ்சிடுபிரமமாய் = பெருமை மிக்க பிரமமாய், சொயம் விளங்குறும்=தானே விளங்குவன் எ—று. சிதானந்த சொரூபம் சீவேசர் இருவர்க்குஞ் சமமாதலின் என்பது அபிப்பிராயம். 38

(அ—கை)

இவ்வளவு கிரந்த சமுதாயத்தால் ஸம்பூரணமாகத் தத்துவ ஞானம் நிரூபிக்கப்பட்டபடியால், உத்தர கிரந்தத்தின் பாகமாரம்பிக்க வேண்டியதில்லையே யென்னுஞ் சங்கைக்கு அதனாம்ப சித்தியின் பொருட்டுச் சொல்லியதை அனுவாதஞ் செய்தல் பூர்வகமாக உத்தர கிரந்தத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்ருர்.

அத்தகை பராபர வாற்று மாக்களி
னுத்தியா லுட்கொளு மொருமை மற்றினித்
தத்துவ மசிமுதற் சாற்றும் வாக்கிய
வத்துவாம் பாகங்கண் மனுந்தி யாகத்தால் 39

(ப—ரை) அத்தகை=கூறிய அப்பிரகாரத்தால், பராபர ஆற்றுமாக்களின் =(தத்துவம் பதார்த்தங்களான) பரமான்மா ஜீவான்மாக்களின், ஒருமை=ஐக்கியம், உத்தியால்=(இலக்ஷண சாமியத்தைத் தெரிவித்தலாதி) உபாயங்களால், உட்கொளும் ஆம்=அங்கீகாரஞ்

செய்யப்பட்டதாம், இனி = இனிமேல், வத்து = (அவ்வைக்கிய) அர்த்தத்தை, தத்துவமசி முதல் வாக்கியம் = தத்துவமசி முதலிய மகா வாக்கியம், பாகங்கண்மனுந் தியாகத்தால் = பாகத்தியாக லக்ஷணையால், சாற்றும் = வெளிப்படையாக பிரதிபாதிக்கும் எ—று. மற்று—அசை. ஆம் என்பது பிரித்துக் கூட்டப்பட்டது. 39

(அ—கை)

"தத்துவமசி"யென்னும் மகா வாக்கியார்த்த ஞானத்திற்குத் தத் முதலிய பதார்த்த ஞானம் காரணமாதலால் தத் பதத்தின் வாச்சியார்த்தத்தை முதலில் கூறுகின்றார்.

வத்துதா மதகுண மாயை தன்னையே
யொத்துபா தானமா முலகினுக் கெலாஞ்
சுத்தசத் துவமதைத் துனிநி மித்தமாந்
தத்தெனும் பதமது சாற்று றும்பரம். 40

(ப—ரை) வத்து = எந்தச் சச்சிதானந்த வடிவ பிரமம், தாமத குணமாயை தன்னையே = தமோகுணப் பிரதானமான மாயையை ஒத்து = உபாதியாகப் பொருந்தி, உலகினுக்கெலாம் = சராசர வடிவ காரிய சமூக ஜகத்தனைத்திற்கும், உபாதானமாம் = அத்தியாச அதிஷ்டானமாகிய விவர்த்தோபதானமாயும், சுத்த சத்துவம் அதை துனி = விசுத்த சத்துவப் பிரதானமான அம்மாயையை உபாதியாகப் பொருந்தி, நிமித்தம் ஆம் = நிமித்த காரணமாயும் ஆகின்றதோ, அதாவது உபாதானுதிகளையறியும் கர்த்தாவுமாகின்றதோ, அதுபரம் = அந்த நிமித்த உபாதான உபயவடிவப் பிரஹ்மத்தினை, தத் எனும் பதம் = (தத்துவமசி மாகாவாக்கியத்தின் கண்ணுள்ள) தத் என்கின்ற பதமானது, சாற்றும் = பிரதிபாதிக்கும் எ—று. "தத்" பதத்திற்கு வாச்சியார்த்தமாகின்றது என்பது பொருள். 40

(அ—கை)

துவம்பத வாச்சியார்த்தத்தைக் கூறுகின்றார்.

இலகுறு மப்பரப் பிரம மெப்பொழு
தலகறு காமகன் மாதி நிந்தைசேர்
மலினசத் துவமதை மருவு மப்பொழு
துலைவறுந் தொம்பத முரைக்கும் வத்துவாம். 41

(ப—ரை) இலகு உறும் உலைவு அறும் அப்பரமப் பிரமமே= விளங்கா நின்ற அழிவற்ற அந்தப் பரப்பிரஹ்மமே, எப்பொழுது= எந்தக் காலத்தில், அலகு அறு காமகன் மாதி = அளவற்ற காமகரு மாதிகளால், நிந்தை சேர்=தூஷிக்கப்பட்ட, மலின சத்துவமதை= (சொற்ப இரஜோ தமோகுணக் கலப்பினால்) மலின சத்துவப் பிரதான மான மாயையாகிய அவித்தையை, மருவும்=உபாதியாகப் பொருந்து மோ, அப்பொழுது = அந்தச் சமயத்தில், தொம்பதம் = துவம்பதத் தால், உரைக்கும் வத்து ஆம்=சொல்லப்படும் வாச்சியார்த்தமாகின் றது எ—று. 41

(அ—கை)

இவ்வாறு "தத்துவம்" பதார்த்தங்களைக் கூறி வாக்கியார்த்தத் தைக் கூறுகின்றார்.

மும்மையாய்த் தனித்தனி முழுவி ரோதியா
மைம்மல மகற்றியே வயங்க கண்டமாந்
தம்மையச் சச்சிதா நந்த தத்பரஞ்
செம்மைமா வாக்கியஞ் செப்பும் வத்துவாம். 42

(ப—ரை) மும்மையாய்=(தமப்பிரதான விசுத்த சத்துவப் பிரதான மலின சத்துவப் பிரதான பேதத்தால்) மூன்று விதமாய், தனித்தனி முழு விரோதியாம் = (இதனாலேயே) பரஸ்பரமத்தியந்தம் விரோதியாயுள்ள, மைமலம் = களங்கமாகிய மாயா ரூபமலத்தை, அகற்றியே = (பாகத்தியாகலக்ஷணையால்) பரித்தியாகஞ் செய்து, வயங்கு=இலக்ஷியார்த்தமாய் விளங்கா நின்ற, அகண்டமாம்=பேத ரகிதமான, தம்மய = தனது வடிவமாகிய, சச்சிதாநந்த தற்பரம் = சத்துசித்து ஆனந்தமாய பரப்பிரமம், செம்மை மா வாக்கியம்=சிறந்த தத்துவமசி மகா வாக்கியத்தினால், செப்பும் வத்துவாம்=சொல்லப் படும் பொருளாம் எ—று. தன்மய என்பது தம்மைய என எதுகை நோக்கித் திரிந்தது. 42

(அ—கை)

அற்றேல் இங்ஙனம் இலக்ஷணாவிருத்தியால் வாக்கியார்த்த ஞானம் எங்கே காணப்பட்டது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

மன்னிய சோயமாம் வாக்கி யங்களிற்
பன்னிய வதனிதன் பகைத்தி றத்தினற்
றுன்னிய பாகங்க டுறத்த லாலொரு
தன்னிய லிலக்கிய மாமித் தன்மைபோல். 43

(ப—ரை) மன்னிய=உலகிற் பொருந்திய, சோயமாம் (ஸ: அயம் ஆம்) வாக்கியங்களில் = அவனே இத்தேவதத்தன் என்பது முதலிய வாக்கியங்களில், பன்னிய அதனிதன் = சொல்லப்பட்ட ஸ: அயம் என்னும் பதங்களின் அர்த்தமாய பரோக்ஷ அத்தேச காலங்களும் அபரோக்ஷ இத்தேச காலங்களுமாய விசேடணங்களின், பகைத் திறத்தினல்=விரோத சுபாவத்தால், (ஐக்கியம் பொருந்தாதாதலின்) துன்னிய பாகங்கள் = அங்ஙனம் பொருந்திய விருத்தாம்சங்களை, துறத்தலால்=(பாகத்தியாக லக்ஷணையால்) பரித்தியாகம் செய்வதால், ஒருதன் இயல்=அவற்றிற்கு ஆசிரயமான ஒரே தேவதத்த சொரூபம், இலக்கியமாம் = (அம்மகா வாக்கியத்தின்) இலக்ஷியார்த்தமாம், இத் தன்மைபோல்=இத்திருஷ்டாந்தம் போல எ—று. 43

(அ—கை)

இங்ஙனம் திருஷ்டாந்தத்தைக் கூறி தாஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

பரனெடு சீவர்க்கும் பகரு பாதியா
விரவுமா யையுமவித் தையையும் விட்டுமேற்
றரமறு மகண்டமாஞ் சச்சி தாநந்தந்
திரமகா வாக்கியஞ் செப்பும் வத்துவாம். 44

(ப—ரை) பரனெடு சீவர்க்கும்=பிர்ம்மத்திற்கும் ஜீவனுக்கும், பகர்உபாதியா=சொல்லா நின்ற உபாதியாக, விரவு=(முறையே) பொருந்திய, மாயையும் அவித்தையும்=மாயை அவித்தைகளிரண்டையும், விட்டு=(பாகத்தியாகலக்ஷணையால்) பரித்தியாகம் செய்து, மேல்=பின்னர், தரம்அறும்=தாரதம்மியமற்ற, அகண்டமாம்=பேதரகிதமான, சச்சிதானந்தம்=சச்சிதானந்தப் பரப்பிரஹ்மமே, திரமகா வாக்கியம் = (யாதொரு பிரமாணங்களாலும்) பாதமாகாத தத்துமசி முதலிய மகா வாக்கியங்களால், செப்பும் வத்துவாம்=சொல்லப்படும் இலக்ஷிய வஸ்துவாம் எ—று. 44

(அ—கை)

அற்றேல் மகா வாக்கியத்திஞல் இலக்ஷிக்கப்பட்டவஸ்து சவிகற்பமா அல்லது நிருவிகற்பமா என விகற்பஞ்செய்து முதல்பக்ஷத்தில் பூருவபக்ஷவாதி தோஷங் கூறுகின்ருன்.

இலக்கியஞ் சவிகற்ப மாகு மென்னிலோ
விலக்கியந் தனக்கசத் தியம்வந் தெய்துமே
யிலக்கிய நிருவிகற் பகம தென்னிலோ
விலக்கியங் கண்டில மினியுண் டாகுமோ. 45

(ப—ரை) சவிகற்பம்=விகற்பத்தோடுகூடிய பிரமம், இலக்கியமாகுமென்னில் = (மகா வாக்கியத்திஞல் பாகத்தியாக இலக்ஷுணு விருத்திமூலம் போதிக்கப்படும்) இலக்ஷியவஸ்து எனின், இலக்கியந்தனக்கு=வாக்கியார்த்தமாக இலக்ஷிக்கப்பட்ட வஸ்துவிற்கு, அசத்தியம்வந்து எய்தும்=(பெயர் ஜாதி முதலிய தர்மங்களையுடைய கட முதலிய பதார்த்தங்களில் மித்தியாத்துவமிருத்தல்போல) மித்தியாத் தன்மைவந்து பொருந்தும், [இரண்டாவதுபக்ஷத்தில் தோஷங்கூறுகின்ருர்] நிருவிகற்பகமது=விகற்பமற்ற பிரமம், இலக்கியம்என்னில்= மகாவாக்கியத்தின் இலக்ஷியமாமெனின், இலக்கியம் = (நாமஜாதி முதலிய தின்றிய நிர்விசேஷவஸ்துவிற்கு) இலக்ஷியத்தன்மை, கண்டிலம் = உலகிற் கண்டோமில்லை, இனிஉண்டாகுமோ = இனிமேல் சம்பவிக்குமோ (சம்பவிக்கவும் மாட்டாது என்றபடி) எ—று.

அது யுத்தி யுக்தமன்ரும், இலக்ஷியத்தன்மைத் தருமமுடைய வஸ்துவிற்கு நிருவிகற்பத்தன்மையோடு விரோதமாதலின், விகற்பம்= விபரீதமாகக் கற்பிக்கப்பட்ட நாமம்ஜாதிமுதலியவை, ஓ—எதிர்மறைப் பொருள்பயக்கும் விஞக்குறிப்பில் வந்தது ஏ—அசை. 45

(அ—கை)

[இச்சங்கை சரியன்று சாதி உத்தரமாதலால் எனச்சித்தாந்தி விகற்ப பூர்வகம்தோஷங் கூறுகின்ருர்.]

சொனவிகற் பகநிரு விகற்பந் தோய்ந்ததோ
மனுஞ்சவி கற்பகம் வாய்ந்த தாங்கொலோ
முனமதேற் பொய்மையா மொழிமற் றுமெனில்
அனவத்தை யான்மா சிரய மாதியாம். 46

(ப—ரை) சொனவிகற்பகம் = (சவிகற்பத்திற்கு இலக்ஷியத் தன்மையா? அல்லது நிருவிகற்பத்திற்கு இலக்ஷியத்தன்மையா? என்றுஉன்னுல்) சொல்லப்பட்ட விகற்பமானது, நிருவிகற்பம்தோய்ந்ததோ = விகற்பமற்றவஸ்துவைப்பொருந்தியதா, மனுஞ்சவிகற்பகம் வாய்ந்ததுஆம்கொலோ = (அல்லது) அநித்தியம்வாய்ந்த விகற்பத்தோடுகூடிய வஸ்துவைப்பொருந்தியதாயுள்ளதோ, முனமதேல் = பிரதமபக்ஷமாகிய நிர்விகற்பத்திற்கு விகற்பஞ் செய்யப்பட்டதெனின், மொழிபொய்ம்மையாம் = உன்னுல்சொல்லப்பட்டஅவ்விகற்பவாக்கியம் வியாகாத தோஷமுடையதாம், மற்றுமெனில் = பிறிதாயஇரண்டாவது பக்ஷத்தில் விகற்பஞ்செய்யப்பட்டதாமெனின், அனவத்தை = (அதில்) அனவஸ்தைதோஷம், ஆன்மஆசிரயம் = ஆன்மாசிரயதோஷம், ஆதியாம் = முதலியனஉண்டாம் எ—று. கொல்—அசை.

ஆதிசப்தத்தால் அந்நியோன்னியாசிரயமும் சக்கிரிகையுங் கொள்க. அனவத்தை = வரம்பின்றிச்செல்வது, ஆன்மாசிரயம் = தனது உற்பத்தியில் தனது ஸ்திதியில் தனது ஞானத்தில் தன்னையே யபேக்ஷிப்பது, அன்னியோன்னியாசிரயம், இரண்டு பதார்த்தங்கள் தமது உற்பத்தியில் தமது ஸ்திதியில் தமது ஞானத்தில் பரஸ்பரம் அபேக்ஷித்தல், சக்கிரிகை = முதலதுஇரண்டாவதையும், இரண்டாவது மூன்றுவதையும், மூன்றுவது முதலாவதையும் அபேக்ஷித்தல், அஃதாமாறு சவிகற்பத்திற்கு விகற்பமென்னுமிடத்து விகற்பத்தோடு கூடியிருப்பது என்பதிலுள்ள மூன்றும் வேற்றுமை விகற்பபதத்தாலும் முதல் வேற்றுமை விகற்பபதத்தாலும் ஒரேவிகற்பம் கூறப்படுகிறதா அல்லது இரண்டா, ஒன்றேயெனின் தானென்றே விகற்ப ஆசிரயத்தின் விசேஷணத்தன்மையால் ஆசிரயமும், அதனையாசிரயித்த விகற்பமுமாயின், அப்போது ஆத்மா சிரயத்தன்மையாம், இரண்டெனின் அப்போது மூன்றும்வேற்றுமை விகற்பபதத்தாற் சொல்லப்பட்ட விகற்பமும் விகற்பவடிவாயிருத்தலின் அதனது ஆசிரயத்திற்கும் சவிகற்பத்தன்மையுளதாமாதலின் அதன்விசேஷணமாயுள்ள விகற்பம் முதல் வேற்றுமையுடைய சத்தத்தால் சொல்லப்பட்ட விகற்பந்தானு,

அல்லது அவ்விரண்டினின்றும் வேறு, முதற்பக்ஷத்தில் அன்னியோன்னியாசிரயத்தன்மையாம். இரண்டாவது பக்ஷத்திலும் தருமியின் விசேஷணமாயுள்ள விகற்பம், முதல் வேற்றுமையுடைய சத்தத்தாற் கூறப்பட்டவிகற்பம்தானு அல்லது அவைகளினின்றும்வேறு, முதற்பக்ஷத்தில் சக்கிரிகைதோஷமாம், இரண்டாவது பக்ஷத்தில் அதற்கும் அன்னியம், அதற்கும் அன்னியம் என அநவஸ்தாதோஷத்தினடைவாம், சாதி உத்தரம் = அசத்துஉத்தரம், தன்னையே பாதஞ்செய்யுமுத்தரமென்பது பொருள். 46

(அ — கை)

கேவலம் ஈண்டே இத்தூஷணமென்பதன்று மற்றேயாண்டும் இப்படிப்பட்ட விகற்பபூர்வகதூஷணம்பரவுகின்றது எனக்கூறுகின்றார்.

இதுகுணங் கிரியையு மியைந்த சாதியென்
பதுந்திர வியமுஞ்சம் பந்த மைந்தினும்
பொதுவத னுலிங்குப் புகலு மீதெலா
மெதுவடி வதனிடை யிருக்கு மென்கவே. 47

(ப—ரை) இது = இந்த விகற்பதூஷண சமுதாயம், குணம் = குணமும், கிரியையும் = தொழிலும், இயைந்தசாதியென்பதும் = அநுகதமாகப்பொருந்தியசாதியும், திரவியமும் = திரவியமும், சம்பந்தம் = சம்பந்தமும் ஆகிய, ஐந்தினும் = பஞ்சபதார்த்தங்களிலும், பொது = சமமாம், (அஃதெங்ஙனமெனின் குணமானது குணமின்றியதன்கண் இருக்கின்றதா, அல்லது குணமுடையதன்கண் இருக்கின்றதா, தொழிலும், தொழிலின்றியதன்கண் உளதா, அல்லது தொழிலுடையதன்கண் உளதா, முதற்பக்ஷத்தில் வியாகாததோஷமாம். இரண்டாவது பக்ஷத்தில் ஆன்மாசிரயாதி தோஷங்கள் உண்டாம். இவ்வாறு எல்லாவிடங்களிலும் ஊகிக்கத்தக்கது) [இது அசத்து உத்தரமாயின், சத்து உத்தரம் யாதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] அதனுல் = இப்படிப்பட்ட விகற்பம் அசங்கதமாயிருத்தலால், இங்குப் புகலும் ஈதெலாம் = ஈண்டுக் கூறப்படும் குணுதிகளனைத்தும், எது வடிவு அதனிடை = யாதொரு வஸ்து சொரூபமுண்டோ அதில், இருக்கும் என்க = சொரூபதர்மமாக அதாவது தாதாத்மிய சம்பந்தத்தால் இருக்கின்றனவென்க் கூறுவர் (பெரியோர்) எ—று. ஏ-அசை.

ஈண்டுத்தாதான்மியம் = கற்பிதபேத வாஸ்தவா பேதமாம். 47

(அ—கை)

அந்நியவிடங்களில் இப்படியிருக்கட்டும் எடுத்துக்கொண்ட விஷயத்தில் என்ன சித்தித்தது எனிற் கூறுகின்ருர்.

நெடுவிகற் பமுமத னிகழ பாவமுந்
தொடவரும் பொருட்கணே சொலும் விகற்பிதந்
தடையதற் றிலக்கியத் தன்மை சம்பந்த
மடியெலாஞ் சொரூபத்தி லத்தி யாசமே. 48

(ப—ரை) நெடுவிகற்பமும் = மிகுந்த விகற்பங்களோடும், நிகழ் = விளங்கா நின்ற, அதன் அபாவமும் = அவ்விகற்பங்களின பாவத்தோடும், தொடஅரும் = சம்பந்தமற்ற, பொருட்கணே = பரமான் மவஸ்துவினது, சொரூபத்தில் = வடிவத்தில், சொலும்விகற்பிதம் = (சவிகற்பத்திற்கா நிருவிகற்பத்திற்கா இலக்ஷியத்தன்மை எனக்)கூறிய விகற்பிதத் தன்மை, தடையதற்ற = உபாதிகளற்ற, இலக்கியத் தன்மை = இலக்ஷியத் தன்மை, சம்பந்தம் = சம்யோகாதி சம்பந்தம், அடியெலாம் = முதலிய அனைத்தும், அத்தியாசமே = கற்பிதமேயாம் எ—று. அற்ற என்பதில் அகரம் தொகுத்தல் விகாரம்.

இலக்ஷியத்துவம் = இலக்ஷணுவிருத்தியால் அறியப்படுந் தன்மை, சம்யோக ஆதி சப்தத்தால், திரவியம் முதலியவை கிரகிக் கப்படுகின்றன. அவைகளுள் திரவியமென்பது, குணங்களுக்காசிரய மான பொருள் அல்லது சமவாயிகாரணம் திரவியமாம். கருமத்தினும் வேருய் சாதிமாத்திரத்திற்கு ஆசிரயமான வஸ்து குணமாம். நித்திய மாயும் ஏகமாயும் அநேகத்திலிருப்பதாயுமுள்ள பொதுத் தன்மை, சாதியாம். சம்யோகத்திற்கும் வியோகத்திற்கும் அசமவாயிகாரணம் கருமமாம் என தார்க்கீகர்களால் இலக்ஷணத்திஞல் போதிக்கப்பட்டு ளது. இலக்ஷியத்தன்மை முதலிய இவ்வனைத்தும் சொரூபத்தின்கண் கற்பிதமேயாமென்பது பொருள். 48

(அ — கை)

இவ்வளவு பாக்களிஞல் என்ன சொல்லப்பட்டது என்னும் ஆகாங்க்ஷையுண்டாக பலிதத்தைக் கூறுகின்ருர்.

இத்திறம் வாக்கியத் திதன ருத்தத்தின்
சத்தியத் தேர்ச்சியே சவண மாகுமா
லுத்தியாற் கேட்டவத் துடைய சிந்தனம்
வத்தியா நிற்குமோர் மனன மாகுமே. 49

(ப—ரை) இத்திறம்=இந்தப் பிரகாரமாக (அதாவது "வத்து தாமத குணமாயை தன்னேயே" என்பது முதலிய பாக்களால் சொல் லப்பட்ட பிரகாரத்தால்), வாக்கியத்து = தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களினால், இதன் அருத்தத்தின் = இவ்வாக்கியத்தினது ஜீவப்பிரமங்களினைக்கியவடிவப் பொருளின், சத்தியத் தேர்ச்சியே= உண்மை அநுசந்தானமே, சவணம் ஆகும்=சிரவணம் என்று சொல் லப்படும், உத்தியால்=('ஒலியொடுருதியு'மென்பது முதலாக 'அத்தகை பராபரவாற்றுமாக்களின்' என்பதீறாகவுள்ள பாக்களினால் சொல்லப் பட்ட பிரகாரமான) யுத்தியினால், கேட்டவத்துடைய சிந்தனம்= சிரவணித்த பொருளின் (யுக்திசகித) அநுசந்தானம், வத்தியா நிற்கும் = ஞானத்தைப் பெருக்கும், ஓர் மனனம் ஆகும்=ஒப்பற்ற மனனமென்று சொல்லப்படும் எ—று.

ஆல் ஏ—அசைகள். 49

(அ—கை)

இப்போது நிதித்தியாசனத்தைக் கூறுகின்றார்.

அவ்விரண் டானுமே யய்ய மின்றிய
செவ்விய பொருளிலே திதித்த சித்தத்தின்
றிவ்விய வொருமைத்தாய்த் திகழும் சிந்தையே
தவ்விகழ் நிதித்தியா சனமென் றோதுப. 50

(ப—ரை) அவ்விரண்டானுமே=அந்த (முற்கூறிய) சிரவண மனனங்களாகிய இரண்டினாலுமே, அய்யம் இன்றிய=சந்தேகமற்ற, செவ்விய பொருளிலே=சிறந்த ஆன்ம வஸ்துவில், திதித்த சித்தத் தின்=தாரணையையுடைய மனத்தின், திவ்விய ஒருமைத்தாய்=மேன் மையான ஏகாகாரமாய், திகழும் சிந்தையே = விளங்கும் விருத்திப் பிரவாகமே, தவ்இகழ் = சலனத்தை இகழும்படியான, நிதித்தியாச னம் என்று ஓதுப=நிதித்தியாசனம் என்று சொல்லுவார்கள் (பெரியோர்) எ—று.

செவ்விய என்பது ஈண்டு சச்சிதானந்த இயல்பைக் குறித்துளது. தாரணை "தேசபந்த: சித்தஸ்யதாரணா" என பதஞ்சலி சூத்திரத்தாற் கூறப்பட்டுளது. சூத்திரார்த்தமாவது, சித்தத்திற்கு இருதயம் முதலிய தேசங்களில் உள்ள ஒரு வஸ்துவில் விருத்திரூப சம்பந்தத்தால் ஸ்திதி தாரணையாம். நிதித்தியாசனமும் யோக சாஸ்திரத்தில் பிரசித்தமாம். சூத்திரம் "தத்திரப்ரத்தியை கதாநதா தியானம்". இதன் பொருள் இருதயாதி தேசங்களில் தியேய விஷயக விருத்திக்கு இதர விருத்திகளின்றிச் சதிருசப்பிரவாகம் நிதித்தியாசனமாம். அய்யம், ஐயம் என்பதன் போலி. 50

(அ—கை)

அந்த நிதித்தியாசனத்தின் பரிபாக தசைவடிவ சமாதியைக் கூறுகின்றார்.

நினைபவ னினைவையு நெறியி னீக்கியே
யுணவுரித் தொன்றையே யுணரு நெஞ்சகம்
புனைதரு நிவாததீ பத்தைப் போலுமே
தனைநிகர்த் தொளிர்வது சமாதி யென்பரால். 51

(ப—ரை) (நிதித்தியாசனத்தில் முதலில் அபக்குவ தசையில் தியாதா தியானம் தியேயம் என்னும் இம்மூன்றும் தோற்றுகின்றன. அவற்றுள்) நெஞ்சகம் = சித்தமானது, (அப்பியாசவசத்தால்) நினைபவன் = தியாதாவையும், நினைவையும் = தியானத்தையும், நெறியின் = கிரமமாக, நீக்கி = பரித்தியாகஞ் செய்து, உனஉரித்து ஒன்றையே = தியானிக்கப்படு பொருளாகிய தியேயம் (பிரஹ்மம்) ஒன்றையே உணரும் = விஷயஞ் செய்வதாய், புனைதரு = அலங்காரமாயுள்ள, நிவாத தீபத்தைப் போலும் = காற்றில்லாவிடத்திலுள்ள தீபத்தைப் போல, தனைநிகர்த்து ஒளிர்வது = ஆன்மாகாரமாக விளங்குவது, சமாதியென்பர் = சமாதியாமென்று (பெரியோர்) கூறுவர் எ—று. ஏ-ஏ-ஆல்—அசைகள். 51

(அ—கை)

அற்றேல் சமாதியில் விருத்திகளின் விளக்கமின்றேல், தியேயமொன்றையே யுணருந்தன்மையும் நிச்சயிக்க முடியாதாமென்னுஞ் சங்கைக்கு விருத்தியிருப்பு அனுமானத்திற்கு விஷயமாவதால் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்.

தனையுணர் விருத்தியத் தருணந் தோன்றுரு
தெனினுமே லெழுந்தவற் கெழுங்க ருத்தினு
லனுமித மாமவற் ருக்க முன்னல
முனுஞ்சமற் காரமோ டுறைத லாலெழும். 52

(ப—ரை) தனையுணர்விருத்தி=ஆன்மவிஷயகமான விருத்திகள், அத்தருணம்=அந்தச் சமாதி காலத்தில், தோன்றுருது எனினும்=அறியப்படாதனவாயிருக்கினும், மேல் எழுந்தவற்கு=பின்னர் சமாதியினின்றும் விழித்த புருடனுக்கு, எழுங்கருத்தினல்=உண்டாகும் (இவ்வளவு கால பரியந்தமும் சமாதியுடையவனுக இருந்தேன் என்னும்) ஸ்மிருதியால், அனுமிதம் ஆம் = அனுமிக்கப்படுகின்றனவாம், (எது எது ஸ்மிருதி ஞானத்திற்கு விஷயமோ அது அது அனுபவிக்கப்பட்டதாம் என்னும் வியாப்தி உலகத்தில் காணப்பட்டிருத்தலால் என்பது பொருள்)[அற்றேல் அப்போது விருத்தியை உண்டுபண்ணும் பிரயத்தனமின்மையினுல் விருத்திகளின் அனுவிருத்தி எப்படிக் கூடுமென்னுஞ் சங்கைக்கு அப்போது முயற்சியில்லாவிடினும் அதிருஷ்டம் முதலிய சஹகாரியோடுகூடிய முன்னுள்ள முயற்சியினுலேயே உண்டாகின்றன எனக் கூறுகின்ருர்], அவற்று ஆக்கம்=(தியேயம் ஒன்றனையே விஷயமாகவுடைய) அவ்விருத்திகளினது அனுவிருத்தியானது, முன்நலம்=(அசுக்கில கிருஷ்ணமென்னும் யோகிகளது) பூர்வபுண்ய விசேஷமும், உனும் சமற்காரமோடு=(அடிக்கடி செய்யப்பட்ட) தியான அப்பியாசத்தினுலுண்டாகிய வாசனையும் ஆகிய இவைகளோடு, உறைதலால் = சேர்ந்துள்ள பூர்வ பிரயத்தனத்தினுல், எழும்=உண்டாகும் எ—று.

அனுவிருத்தி=பிரவாக ரூபமாகத் தொடர்ந்திருத்தல், சமாதிக் கேதுவான புண்ணியம் அசுக்கில கிருஷ்ண கருமமாம். அஃது "கருமாசுக்கில கிருஷ்ணம் யோகிந: திரிவிதமிதரேஷாம்" எனப் பதஞ்சலி பகவானுலும் கூறப்பட்டுளது. இதன் பொருள் யோகிக்கு அசுக்கில கிருஷ்ணமென்னும் கருமமாம். ஏனையோர்க்கு புண்ணிய கருமம் பாபகருமம் புண்ணிய பாப மிசிர கருமமென மூன்று விதமாம். சுக்கிலம்=புண்ணியம். கிருஷ்ணம்=பாவம். இவற்றினின்றும் வேருனது அசுக்கில கிருஷ்ண கருமமாம். 52

(அ—கை)

அற்றேல் இச்சமாதி பூருவாசிரியர்களால் நிருபிக்கப்பட்டதாகக் காணப்படவில்லையே யென்னுஞ் சங்கைக்கு எல்லோருக்கும் குருவா யுள்ள ஸ்ரீ புருஷோத்தமனுகிய கிருஷ்ண பகவானல் நிருபிக்கப்பட்டி ருத்தலால் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்.

எத்தகைத் தாம்விளக் கென்ப தாதியாற்
பத்தனுக் கிதைமிகப் பகவ னோதினு
னித்தினுற் சஞ்சித கருமம் யாவும்போ
முத்தமச் சுத்தமாந் தரும மோங்குமே. 53

(ப—ரை) விளக்கு = தீபமானது, எத்தகைத்து ஆம் = (காற் றில்லாதவிடத்தில்) அசைவின்றி எத்தன்மையது ஆமோ, என்பது ஆதியால் = என்பது முதலிய உவமான சகித பாக்களால், மிக = அநே கப் பிரகாரமாக, இதை = (நிருவிகற்ப சமாதிரூப) இவ் அர்த்தத்தை, பத்தனுக்கு = தன்னிடத்திலன்புள்ள சிஷ்யனுகிய அருச்சுனனுக்கு, பகவன் = ஞானஐஸ்வரியாதி சம்பன்னனுகிய கிருஷ்ண பரமான்மா, ஓதினுன் = உபதேசித்தான், [இச்சமாதிக்கு அவாந்தர பலங் கூறுகின் ருர்] இத்தினுல் = இந்தச் சமாதியினுல், சஞ்சித கருமம் யாவும் = (அனுதியாகிய இச்சமுசாரத்தில்) சம்பாதித்துள்ள, சஞ்சித வினை முழுதும், போம் = விநாசமாகும், [ "மேலுக்கும் மேலாகிய பரமான்மா பார்க்கப்பட்டபோது இப்புருஷனுடைய சகல கருமங்களும் விநாசமா கின்றன" என்னுஞ் சுருதியினுலும், "ஞானுக்கினி சகல கருமங்களையும் சாம்பலாக்குகின்றது" என்னும் கீதாஸ்மிருதியினுலும் என்க] உத்த மச் சுத்தமாந் தருமம் = (விலாசத்தோடு கூடிய அவித்தையை நிவர்த் திக்கும் சாக்ஷாத்காரத்துக்குப் பிரதிபந்தத்தின் நிவர்த்தி வாயிலாகச் சாதனமாகிய) மேலாகிய பரிசுத்த புண்ணியம், ஓங்கும் = விருத்தியா கும் எ—று. ஏ—அசை. 53

(அ—கை)

சமாதியால் தருமம் விருத்தியாகின்றதென்பதில் பிரமாணம் யாதெனிற் கூறுகின்ருர்.

பரிமித மின்றியிப் பகர்ச மாதிதான்
சொரிதலிற் றருமமாஞ் சுதைநற் ருரைகள்
விரிதரு தருமமா மேக மாமென்பா
ருரியதாம் யோகமிக் குணர்ந்து ளோர்களே. 54

(ப—ரை) பகர் இச்சமாதிதான் = கூறிய இச்சமாதியானது, பரிமிதம் இன்றி = அளவில்லாமல், தருமமாஞ்சுதை நல்தாரைகள் = புண்ணியங்களாகிய நல்ல அமிர்த தாரைகளை, சொரிதலின் = பொழிகின்றபடியால், விரிதரு = விசாலமாகிய, தருமம் மேகம் ஆம் = தரும மேகமாகும், உரியதாம் = உரித்தாகிய, யோகம் = சமாதியை, மிக்கு உணர்ந்துளோர்கள் = நன்ருக அறிந்த பெரியோர்கள், என்பார் = என்று கூறுவார்கள் (ஒருக்ஷணமுள்ளதாகிய சமாதியும் நூறு யாகத்திற்குச் சமமாம் என்னும் சுருதியால் அது சித்தித்தது) எ—று. தரும மேகமாமென்று கூறுவர் எனக் கூட்டுக.

தருமமாம் என்பதில் ஆம்—அசைநிலை, ஏ—ஈற்றசை.
தருமமேகம் = தருமத்தை வருஷிக்கும் மேகம். 54

(அ—கை)

இப்போது சமாதியின் பரமப் பிரயோஜனத்தைக் கூறுகின்ருர்.

சொல்லிது வாதனைத் தொகுதி மாயமாய்த்
தில்லெனக் கருமவே ரீர்க்க வாக்கிய
மல்லறீர்ந் தன்றுள தங்கை நெல்லிபோ
னல்லப ரோக்ஷஞா னத்தை நல்குமே. 55

(ப—ரை) சொல் இது = கூறிய இச்சமாதியானது, வாதனைத் தொகுதி = (அகங்கார மமகார கர்த் திருத்துவாதி அபிமானத்திற்கு ஏதுவாயும் ஞானத்திற்கு விரோதியாயும் உள்ள) சம்ஸ்கார சமூகத்தை, மாய மாய்த்து = அத்தியந்தம் கெடும்படியாக நசிப்பித்து, (மேலும்) இல் என = இல்லையென்று சொல்லும்படியாக, கருமவேர் = புண்ணிய பாவ கருமத்தையும் அதனது மூலத்தையும், ஈர்க்க = கெடுக்க, (அவ்வுதவியால்) வாக்கியம் = தத்துவமசி முதலிய மகாவாக்கியம், அல்லல் தீர்ந்து = (கருமத்தினுலும் வாசனையினுலும் ஆகும்) பிரதிபந்தமின்றியதாய், அன்று உளது = பூருவம் பரோக்ஷமாக விளங்கிய பிரவஸ்துவில்,

அங்கை நெல்லிபோல்=கரதலா மலகம் போன்று, நல் அபரோக்ஷ ஞானத்தை = அபரோக்ஷமாக தத்துவத்தை விஷயஞ்செய்யும் திட அபரோக்ஷ ஞானத்தை, நல்கும்=உண்டுபண்ணும் எ—று. ஏ-அசை.

கருமவேர்=மூலத்தோடு கூட கருமத்தையென்பது பொருள். மூலம்=காமம், அஞ்ஞானத்தைக் கொள்ளினும் பொருந்தும். ஆயினும் பின்பு அபரோக்ஷ ஞானத்தைக் கூறுதலால் முன்பு அஞ்ஞானம் கெடவில்லை என்பது பெறப்படுகின்றது. 55

(அ—கை)

இப்போது பரோக்ஷ ஞானத்தின் பயனைக் கூறுகின்றார்.

தேசிகன் மொழிவரு சிவநற் போதமே
மாசிகி யெனமதி மறமெ லாஞ்சுடு
மாசிகழ் தன்மய வறிவஞ் ஞானமா
மாசிரு ணூறிடு மதியப் பானுவாம். 56

(ப—ரை) தேசிகன் மொழிவரு=ஆசாரியரது உபதேசத்தால் பரோக்ஷமாக உண்டாகும், சிவநல்போதம்=நல்ல பிரம ஞானமானது, மாசிகி என=பெரிய அக்கினி (அறிந்து தொடினும் சுடுவது) போன்று, மதிமறம் எலாம்=புத்தி பூர்வகமாக செய்யப்பட்ட பாபங்களனைத்தையும், சுடும்=தகிக்கும் [அபரோக்ஷ ஞானத்தின் பயனைக் கூறுகின்றார்] மாசுஇகழ் = (சந்தேக விபரீதமாகிய) குற்றங்களைத் திரஸ்கரிக்கும் படியான, தன்மய அறிவு=பிரஹ்மா பின்ன ஆன்ம விஷயக அபரோக்ஷ ஞானமானது, மாசு ஆம் அஞ்ஞான இருள் = தோஷமாகிய அவித்தையென்னும் உள்ளந் தகாரத்தை, நூறிடும் = கெடுக்கும்படியான, மதிய பானுவாம்=மத்தியான சூரியனும் எ—று. ஏ-அசை.

மத்தியான சூரியன் வெளியிருளை நிவர்த்தி செய்வதுபோல ஞானம் உள் அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்வதாம். மாசு இகழ் என்றதால் சந்தேக விபரீத குற்றங்களைத் திரஸ்கரித்து குருமுகமாக உண்டானதென்பது சூசிப்பிக்கப்பட்டது. 56

(அ—கை)

கிரந்தாப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார்.

இப்படித் தத்து வத்தி னெழிலுறு விவேகஞ் செய்தே
ஒப்பறு விதிதப் பாம லுளத்தினைத் திரம தாக்கி
வெப்பமை பவபந் தத்தை விடுத்துள னாகி மேலாஞ்
செப்பரும் பதத்தைப் பூமான் சீக்கிரம் சேர்வ னன்றே.
57

(ப—ரை) பூமான் = புருஷனானவன், இப்படி = இங்ஙனஞ் சொல்லிய பிரகாரமாக, தத்துவத்தின் = பிரம்மாபின்ன கூடஸ்த வஸ்துவினது, எழில் உறு = அழகுபொருந்திய, விவேகஞ் செய்து = (பஞ்சகோசங்களினின்றும்) வேற்றுமையைச் செய்து, விதி தப்பாமல் = சாஸ்திரத்தில் கூறிய பிரகாரம் தவறாமல், ஒப்பறு = சமானமற்ற, உளத்தினைத் திரமதாக்கி = மனத்தினை (அந்த தத்துவத்தில்) நிலை பெறச்செய்து, வெப்பு அமை பவபந்தத்தை = தாபம் பொருந்திய சமுசார பந்தத்தை, விடுத்துளனாகி = அபரோக்ஷ ஞானத்தினால் விடுத்தவனாகி, செப்பு அரும் = சொல்லுதற்கரிய, மேலாம் பதத்தை = நிரதிசயானந்த ரூப மோக்ஷத்தை, சீக்கிரம் = தாமதமின்றி, சேர்வன் = அடைவன் (சச்சிதானந்தப் பிரமமே ஆகின்றான் என்பது பொருள்) எ—று. ஏ-அன்று—ஏ—அசைகள். 57

முதலாவது தத்துவ விவேகம் முற்றிற்று.

ஓம் தத் சத்.
கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## இரண்டாவது பிரகரணம்.

## பஞ்ச பூத விவேகம்.

ஸ்ரீ பாரதீதீர்த்த வித்தியாரணிய முநீஸ்வரர்களை நமஸ்கரித்துப் பஞ்ச பூத விவேகத்திற்கு வியாக்கியானஞ் செய்கின்றேன்.

(அ—கை)

ஹே ஸௌம்மிய சிருஷ்டிக்குப் பூர்வம் இவ்வெல்லாம் சத்தாகவேயிருந்தது. ஒரே அத்துவி தீயப்பிரம்மமாம் என்னுஞ் சுருதியால் உலகினுற்பத்திக்குப் பூர்வம் யாதொரு சகத்காரண சத்துரூப அத்துவிதீய பிரமம் கேட்கப்பட்டதோ அது வாக்குக்கும் மனதுக்குமெட்டாமையின் தன்ஞல் அறிய முடியாதாகலான் அதனது காரியத் தன்மையால் அதற்கு உபாதியாயுள்ள பஞ்ச பூதங்களின் விவேக வாயிலாக அதனையறிதற் பொருட்டு உபோற்காதமாகப் பஞ்ச பூதங்களின் விவேகத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்ருர்

சத்தொடத் துவிதமென்னச் சாற்றுறு பொருளைம்பூத
உத்தம விவேகந்தன்ஞ லுணர்வுற வெளியதாமற்
றித்திஞ லதன்விவேக மியம்புகே மிதன்குணங்கள்
சத்தமூ றுருவத்தோடு தகுசுவை கந்தமாமே. 1

(ப—ரை) சத்தொடு அத்துவிதமென்னச் சாற்றுறு பொருள் = (சிருஷ்டிக்கு முன்) சத்துரூபமாய் அத்துவிதமாய் உளதென்பதாகச் சொல்லப்பட்ட பிரம்ம வஸ்துவை, ஐம்பூத உத்தம விவேகந் தன்ஞல் =

பஞ்சபூதங்களினது மேலாகிய விசாரத்தினால்,உணர்வுற = அறிவதற்கு, எளியதாம் = சுலபமாம், இத்தினால் = இக்காரணத்தினால், அதன் விவேகம் = அப்பஞ்சபூதங்களினது விசாரத்தை, இயம்புவோம் = கூறுகின்றோம், [ஆண்டு முதலில் ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களுக்குக் குணத்தினால் பேதத்தை அறிவித்தற் பொருட்டு அவைகளின் குணங்களைக் கூறுகின்றார்] இதன் குணங்கள் = இவ்வாகாசாதி பஞ்ச பூதங்களின் குணங்களாவன, சத்தம் = சப்தமும், ஊறு = பரிசமும், உருவத்தோடு = நிறமும், தகுசுவை = தகுந்த இரசமும், கந்தம் = நாற்றமும், ஆம் = ஆகிய இவைகளாம் எ—று. மற்று-ஏ—அசைகள்.

பிரம்மத்தினின்றும் பஞ்ச மகா பூதங்களின் விவேகம் அல்லது பஞ்ச மகா பூதங்களினின்றும் பிரம்மத்தின் விவேகம் எதன்கண் செய்யப்படுகின்றதோ அது பஞ்ச மகா பூத விவேகமாம்.

மண்ணின் காரியமாகிய கடம் மண்ணின் அன்வயவிய திரேகங்களோடு கூடியிருத்தலால் மற்ற நூல் முதலியவற்றினின்றும் தனது காரணமாகிய மண்ணை வேறுபிரித்தறிவிப்பதாயிருக்கின்றது.ஆதலால் மண்ணிற்குக் கடம் உபாதியாம். அதுபோலப் பிரம்மத்தின் காரியமாகிய ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களும் சச்சிதானந்தப் பிரம்மத்தின் அன்வயவிய திரேகங்களோடு கூடியிருத்தலால் அசத்து முதலியவற்றினின்றும் பிரம்மத்தை வேறு பிரித்தறிவிப்பனவாயிருக்கின்றன. ஆகையால் பிரம்மத்தின் உபாதியாய்ச் சொல்லப்படுகின்றன. அந்த உபாதிகளோடு பிரம்மத்திற்குத் தாதான்மிய சம்பந்தமுண்டு. ஆகையால் அவைகளும் பிரம்மமும் ஒன்றற்கொன்று விவேகிக்கப்படுகின்றன. சொல்லத் தகுந்த பொருளை மனதில் வைத்துக்கொண்டு அதற்கு அனுகூலமாக வேறொன்றைச் சொல்லுதல் உபோற்காதமெனப்படும். ஒருவனுக்கு மற்றொருவன் வீட்டினின்றும் மோர் வாங்க வேண்டியிருக்குமானால் அப்போது அவன் முதலிலே சென்று 'மோர் கொடு' என்று கேட்குமிடத்து உலோபியாயுள்ளவன் மோர் கொடானாகலின் அந்தப் பிரயோஜனத்தை மனதில் வைத்துக்கொண்டு அதற்கனுகூலமாக உங்கள் பசு பால் கறக்கிறதா இல்லையா என்று வினவுதல், உபோற்காதமாம். அதுபோல இங்கே அத்துவிதீயப் பிரம்மத்தையறிதலாகிய பிரயோஜனத்தை மனதில் வைத்துக் கொண்டு அதற்கனுகூலமாக பஞ்ச பூதங்களின் விவேகம் முதலியவற்றைக் கூறுதல், உபோற்காதமாம். இப்படியே மற்ற இடங்களிலும் உபோற்காதத்தினை அறிக. 1

(அ—கை)

அற்றேல் இவ்வைந்து குணங்களும் எல்லாவற்றிற்குமா? அல்லது ஒவ்வொரு பூதத்திற்கு ஒவ்வொரு குணமா? என விசாரிக்கின்றவராய் இரண்டு பிரகாரமும் பொருத்தமன்று. மற்றொரு வேறு பிரகாரமாமென்னும் அபிப்பிராயத்தால கூறுகின்றார்.

ஒன்றிரண் டொருமூன் றோர்நான் கோரைந்துகுணம்வானாதி
துன்றிடு நெறியே வானிற் றொனியெதி ரொலியாங் காற்றின்
றன்றி றம்வீசி யோசை தகுகுளிர் கொதிப்பி லூறும்
வன் றொனி புகுபுகென்னும் வன்னியின் வெம்மை காந்தி. 2

(ப—ரை) வானாதி = ஆகாசாதிகளில், நெறியே = கூறிய கிரமமாக, ஒன்று இரண்டு ஒரு மூன்று ஓர் நான்கு ஓர் ஐந்து குணம் = ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து குணங்கள், துன்றிடும் = பொருந்தியிருக்கும், [அவ்வேறு பிரகாரத்தையே வெளிப்படுத்துகின்றார்] வானில் = ஆகாசத்தில், தொனி = சப்தமொன்றே குணமாம், எதிரொலியாம் = (அதுவும்) பிரதித் தொனி வடிவமாம், காற்றின்றன் திறம் = வாயுவினது குணங்கள், வீசிஓசை = வீசி என்னும் சப்தமும், தகுகுளிர் கொதிப்பு இல் ஊறும் = தகுந்த சீதமும் உஷ்ணமுமில்லாத பரிசமும் (ஆக இரண்டு குணங்கள்) ஆம், வன்னியின் = அக்கினியில், புகுபுகு என்னும் வன்தொனி = புகுபுகு என்னும் கொடிய சப்தமும், வெம்மை = உஷ்ணபரிசமும், காந்தி = பிரகாச உருவமும் (ஆக மூன்று குணங்களாம்) எ—று.

வீசியென்பது சப்தத்தின் அனுகரணமாம். அதாவது ஒரு சப்தத்தைப் போல வேறு சப்தம் செய்தற்கு சப்தத்தின் அனுகரணமென்று பெயராம். இவ்வாறே பின்னுள்ளவைகளிலும் அனுகரண (சமான) சப்தத்தையறிக. 2

(அ—கை)

எஞ்சிய நீரிலும் மண்ணிலுமுள்ள குணங்களைக் கூறத்தொடங்கி முதலில் நீரில் சப்தம் முதலாக இரசபரியந்தமாக உள்ள நான்கு குணங்களைக் கூறுகின்றார்.

செலஞ் சுலுசுலுவென் ஞேசை சீதளம் வெண்மை தீயம்
நிலம்கட கடவென் ஞேசை நேர்தரு கடின மூறே
பலவுரு நீலமாதி பகர் சுவை மதுர முன்னுங்
குலவுறு மிருமைக் கந்தங் குணமிவை வகுத்து ரைத்தாம். 3

(ப—ரை) செலம்=ஜலத்தில், சுலுசுலு என்னோசை=சுலுசுலு என்னுஞ் சப்தமும், சீதளம்=குளிர்ந்த பரிசமும், வெண்மை=சுக்கில உருவமும், தீயம்=மதுரஇரசமும், (ஆக நான்கு குணங்களுண்டு) [பூமியில் சப்தம் முதல் கந்த பரியந்தமாக ஐந்து குணங்கள் உள்ளன எனக் கூறுகின்றார்] நிலம்=பூமியில், கடகட என்னோசை=கடகட என்னும் சப்தமும், நேர்தருகடினம் ஊறு=பொருந்தாநின்ற கடின பரிசமும், நீலம் ஆதிபல உரு=நீலம் முதலிய நாநா உருவங்களும், பகர் மதுரம் முன்னும் சுவை = சொல்லாநின்ற தித்திப்பு முதலிய இரசங்களும், குலவுறும்=விளங்காநின்ற, இருமைக்கந்தம்=(நற்கந்த துற்கந்தமென்னும்) இரண்டுவித நாற்றங்களும், (ஆகிய ஐந்து குணங் களுண்டு) [கூறிய பொருளை யுபசம்மாரஞ் செய்கின்றார்] குணம் இவை = (இங்ஙனம் பஞ்சபூதங்களின்) இச்சப்தாதி குணங்களை, வகுத்து உரைத்தாம்= நன்றாகப் பிரித்துக் கூறினும் எ—று. ஏ-அசை 3

(அ—கை)

இவ்வாறு பஞ்சபூதங்களுக்குக் குணத்தால் பேதத்தைக் கூறிக் காரியத்தால் பேதத்தையுணர்த்துதற் பொருட்டு அவைகளின் காரியங் களான ஞானேந்திரியங்களை முதலிற் கூறுகின்றார்.

சோத்திரந் துவக்கே சட்சு சொற்றிடுஞ் சிகுவை கிராணம்
பூத்த விந்திரிய மைந்தாம் புகுமிடங் காதே யாதி
யேத்த சத்தாதி காணு மிதுமுறை சூக்கு மத்தால்
கோத் தகாரியத்தால் மேயங் குணம் பகிர் முகமேயாதல். 4

(ப—ரை) சோத்திரம்=சுரோத்திரமும், துவக்கு=பரிசனமும், சட்சு=நேத்திரமும், சொற்றிடும் சிகுவை=சொல்லாநின்ற இரசனை யும், கிராணம் = கிராணமுமாக, பூத்த = ஆகாசாதிகளினின்றும் முறையேயுண்டான, இந்திரியம் ஐந்தாம்=ஐந்து ஞானேந்திரியங்

களாம், [அவைகளின் தானங்களையும், வியாபாரங்களையும் தெரிவிக்கின்றார்] புகும் இடம்=அவ்விந்திரியங்கள் பிரவேசித்திருக்கும் ஸ்தானம், காது ஆதி=முறையே காது முதலியவைகளாம் (அவை காது, தொக்கு, கண், நா, மூக்கு என்பன), இது=இவ்விந்திரியங்கள், முறை=கிரமமாக, ஏத்த=தத்தமக்குரிய, சத்தாதி காணும்=சத்தாதிகளைக் கிரகிக்கும், [இந்திரியங்களினிருப்பில் பிரமாணம் யாதென்னுமாகாங்க்ஷையுண்டாக காரியத்தினை யேதுவாகவுடைய அநுமானம் பிரமாணமாம் என்று கூறுகின்றார்] சூக்குமத்தால்=(இவ்விந்திரியங்கள்) நுட்பமாயிருத்தலால், கோத்த காரியத்தால் மேயம்=தொடுத்த (செய்கின்ற) காரியங்களால் (அவற்றினிருப்பு) அனுமிக்கத் தக்கதாம் (ஈண்டு இஃது அனுமானம், உருவஞானம் ஒருகரணத்தால் தோன்றியது, கிரியையாதலால், பிளத்தல் கிரியைபோலும் என்பது முதலியவை இந்திரியமுண்டெனென்பதில் பிரமாணமென்றறிக), [இவைகளின் சுபாவத்தைக் கூறுகின்றார்] குணம்=இவைகளுக்குச் சுபாவம், பகிர்முகமே ஆதல்=(பெரும்பாலும்) வெளிவிஷயங்களில் பிரவிருத்தித்தல் ஆம் எ—று. ஏ, ஏ—அசைகள்.

சுவயம்பு (பரமாத்மா) வானவர் இந்திரியங்களைப் பகிர்முகமாகச் சிருஷ்டித்தார். அதனால் "புருஷன் வெளிவிஷயங்களைக் காண்கின்றான், உள் ஆத்மாவை அறிகிறதில்லை" என்று அருமறை அன்னை கூறும் வாக்கியம் இங்குப் பிரமாணமாதல் காண்க. இது = பன்மையில் ஒருமை மயக்கம்.

பகிர்முகமே என்பதிலுள்ள 'ஏ' பிரிநிலையும் தேற்றமுமாம். 4

(அ—கை)

பெரும்பாலும் வெளிவிஷயங்களில் பிரவிருத்தித்தல் ஆம் என்பதால் இந்திரியங்கள் சிலவிடத்து ஆந்தர விஷயத்தையும் கிரகிக்கும் என சூசிப்பிக்கப்பட்டது. அதனை இப்போது தெரிவிக்கின்றார்.

சிரவமே புதைக்கி னோர்காற் செடர வக்கினி பிராணன்
மருவக வொலிநீ ரன்ன மாந்திடி னுண்ணி னூறு
மிருவிழி மூடி னுள்ளா ரிருளுமுக் காரஞ் செய்யின் 5
றெரிதலிற் சுவையே கந்தம் பொறிக்ககத் தெரிவு முண்டே.

(ப—ரை) ஓர்கால் சிரவமே புதைக்கின் = ஒருபொழுது காதை கையினுல் மூடின், செடர அக்கினி = வயிற்றிலுள்ள வன்னியிடத்தும், பிராணன் = பிராணவாயுவிலும், மருவு அக ஒலி = பொருந்தியிருக்கும் ஆந்தர சப்தமும், நீர் அன்னம் = ஜலத்தையும் உணவையும், மாந்திடின் உண்ணின் = முறையே பருகினும் புசிக்கினும், ஊறு = (அவற்றின் சீதோஷ்ணம் முதலிய) ஆந்தர பரிசமும், இருவிழி மூடின் = இரண்டு கண்களையும் மறைக்கின், உள் ஆர் இருளும் = உள்ளே நிறைந்த அந்தகாரமும், உக்காரஞ் செய்யின் = வாந்தி செய்யின், சுவையே கந்தம் = ஆந்தர இரசமும் கந்தமும், தெரிதலின் = தோற்று கின்றபடியால், பொறிக்கு = ஞானேந்திரியங்களுக்கு, அகத் தெரிவும் உண்டு = ஆந்தர விஷயங்களின் உணர்ச்சியும் இருக்கின்றது எ—று. ஏ—அசை. 5

(அ—கை)

இங்ஙனம் ஞானேந்திரிய வியாபாரங்களைக் கூறிக் கருமேந்திரி யங்களில்லை என்று கூறும் வாதிக்கு அதனுண்மையைச் சமர்த்தனஞ் செய்தற்பொருட்டு அதன் இலிங்க வடிவ வியாபாரத்தைக் கூறுகின்ருர்.

சாற்றுத லீத லேக றள்ளுத லின்பஞ் செய்தல்
ஆற்றுமைந் தொழிலிவ் வைந்துள் ளடங்குறு முழவே யாதி
தோற்றுகா ரணமாம் வாக்குத் தோள்பாதம் பாயு பத்தம்
போற்றுகன் மேந்தி யங்கள் புகுமிட முகமே யாதி. 6

(ப—ரை) சாற்றுதல் = பேசுதலும், ஈதல் = கொடுத்தலும், ஏகல் = நடத்தலும், தள்ளுதல் = மலஜலங்களை விசர்ச்சனஞ் செய்த லும், இன்பஞ் செய்தல் = (புணர்ச்சியில்) ஆனந்தஞ் செய்தலும், ஆற்றும் ஐந்தொழில் = (ஆகிய இவை கருமேந்திரியங்கள்) செய்யும் பஞ்ச வியாபாரங்களாமென்பது பிரசித்தமாம், [உழவாதி வேறு வியா பாரங்களுமிருக்கின்றபடியால் ஐந்து வியாபாரங்களென எப்படி எல்லை சொல்லப்பட்டதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] இவ்வைந்துள் = கூறிய ஐந்து தொழில்களுள்ளே, உழவேயாதி அடங்குறும் = கிருஷி முதலியவை அந்தர்ப்பூதமாம், [அவ்வியாபாரங்களையுண்டுபண்ணும் இந்திரியங்கள் யாவையெனிற் கூறுகின்ருர்] வாக்கு = வாக்கும்,

தோள்=பாணியும், பாதம்=பாதமும், பாயு=பாயுருவும், உபத்தம்= உபஸ்தமும், (ஆகிய இவ்விந்திரியங்கள்) தோற்றுகாரணம் ஆம்= கூறிய வியாபாரங்கள் உண்டாவதற்கு (முறையே) காரணங்களாம் (ஈண்டும் வசனம் ஒரு கரணத்தினால் தோன்றியது, கிரியையாதலால், பிளத்தல் கிரியைபோல் என்பது முதலிய காரியலிங்க அனுமானமறி யத்தக்கது) [கருமேந்திரியங்களுக்கு இடங்களைக் கூறுகின்றார்] போற்றுகன்மேந்திரியங்கள் = சொல்லிய கருமேந்திரிய பஞ்சகம், புகும் இடம்=பிரவேசிக்கும் ஸ்தானம், முகமே ஆதி=(முறையே) முகம் முதலியனவாம் எ—று.

ஆதிசப்தத்தால் கையும் காலும் குதத்துவாரமும் மூத்திரத் துவாரமும் கிரகிக்கப்படுகின்றன. 6

(அ—கை)

இப்போது கூறிய பத்து இந்திரியங்களை பிரேரிக்கும் மனதின் வியாபாரத்தையும் இடத்தையுந் தெரிவிக்கின்றார்.

மனந் தசேந் திரியகத்தா மனுமித யாம்பு யத்தே
யினையதுட் கரண மாகு மிந்திரி யங்க ளின்றித்
தனிமை யாய்ப் புறத்தெஞ் ஞான்றுஞ் சார்ந்திடா தாதலாலே
துனினவை புலன்க டம்மிற் சுபாசுப நாடு மீதே. 7

(ப—ரை) மனம்=மனமானது, தசேந்திரியகத்தா=(ஞானேந் திரியம் ஐந்து, கருமேந்திரியம் ஐந்து ஆகிய) பத்து இந்திரியங்களுக் கும், (பிரேரிக்குஞ் செய்கையால், அதிஷ்டாதாவாய்) இதய அம்புயத் தேமனும்=இருதய கமலத்தில் நிலைபெற்றிருக்கும், [அம்மனதிற்கு அந்தரிந்திரியத் தன்மையைக் காரணத்தோடு கூறுகின்றார்] இனையது = இத்தகைய மனமானது, இந்திரியங்களின்றி = சக்ஷு முதலிய இந்திரியங்களை விடுத்து, தனிமையாய்=தான் மாத்திரமாக, புறத்து=பாகிய விஷயங்களில், எஞ்ஞான்றும்=எக்காலத்தும், சார்ந் திடாது=செல்லாது, ஆதலால்=ஆதலின், உட்கரணமாகும்=அந்தக் கரணமென்று சொல்லப்படும், [மனம் பத்து இந்திரியங்களின் அதிபதி யாமென்பதை வெளிப்படுத்துகின்றார்] அவை=அவ்விந்திரியங்கள்,

புலன்கள் தம்மில் = விஷயங்களில், துனின் = பொருந்தும்போது, ஈது = இம்மனமானது, சுபாசுபம் நாடும் = இது நல்லதெனவும் இது கெட்டதெனவும் (குணதோஷங்களின்) விசாரத்தைச் செய்யும் எ—று. ஏ — அசை.

அபிப்பிராயமிதுவாம் ஆன்மா பிரமாதா ரூபமாய்ச் சர்வ ஞானங்களுக்கும் சாதாரண காரணமாதலானும், சக்ஷுராதிகள் உருவாதி ஞானங்களையுண்டுபண்ணுதல் மாத்திரத்தில் சரிதார்த்தமானதாலும் (முடிவையடைதலாலும்) தோற்றப்படுகிற குணதோஷ விசாரமானது மனதின்றிப் பொருந்தாதபடியால் அவ்விசாரத்திற்குக் காரணமாக மனது அங்கீகரிக்கத்தக்கது என்பதாம். 7

(அ—கை)

மனதிற்கு வைராக்கியம் காமம் முதலிய அநேகப் பிரகாரமான விருத்திகளையுடையதாந்தன்மையைத் தெரிவித்தற் பொருட்டு சத்துவாதி குணமுடைமையை உணர்த்துகின்றார்.

இதன்குணஞ் சத்து வாதி யிவற்றினூற் றிரிபா மன்றே
வுதயமாஞ் சத்து வத்தி லுதாரமு நிராசை சாந்தி
முதலவு மிராச தத்தின் முயற்சியு முலோபங் காமங்
கதமுமத் தமத்திற் சோம்பர் களிப்பதி மயக்க மன்றே. 8

(ப—ரை) இதன் குணம் = இம்மனதின் குணங்கள், சத்துவாதி = சத்துவம் முதலியவாம், (முதலிய என்றமையால் இரஜஸும் தமஸும் கொள்க) [சத்துவாதிகள் மனதின் குணங்களென்பதில் காரணங் கூறுகின்றார்] இவற்றினால் = இச்சத்துவாதி குணங்களால், திரிபாமன்றே = மனம் விகாரத்தையடைகின்றதல்லவா, [குணங்களினால் அதன் விகாரத்தையே விஸ்தரிக்கின்றார்] சத்துவத்தில் = சத்துவ குணத்தினின்றும், உதாரமும் = கொடையும், நிராசை = வைராக்கியமும், சாந்தி முதலவும் = பொறுமை முதலிய குணங்களும், இராசதத்தின் = இரஜோகுணத்தினின்றும், முயற்சியும் = பிரயத்தினமும், உலோபமும் = தனாதிகளில் பேராசையும், காமம் = (விஷயங்களில்) இச்சையும், கதமும் = குரோதமும், அத்தமத்தில் = (எஞ்சிய) அத்தமோ குணத்தினின்றும், சோம்பர் = ஆலசியமும், களிப்பு = மயக்கமும், அதிமயக்கம் = நித்திரையும், உதயமாம் = உண்டாகும் எ—று. அன்று, ஏ — அசைகள்.

உதயமாமென்பது இறுதியில் அன்வயிக்கப்பட்டது. உம்மைகள் எண்ணில் வந்தன. 8

(அ—கை)

வைராக்கியாதிகளின் காரியங்களை வேறு பிரித்து உணர்த்துகின்றார்.

சத்துவங் களினுற் றோன்றுந்
தருமமே பாவ முண்டா
மத்திமங் களினு லேதா
மதங்களா லிரண்டு மின்றி
யொத்தவோர் வாணுள் வாளா
வொழியுநா னென்னும் போதன்
கத்தனெ ன்றுலகி லிங்ஙன்
கழறுவ ரெவரு மாதோ. 9

(ப—ரை) சத்துவங்களினுல் = சத்துவகுண காரியங்களா(ன வைராக்கியாதிகளா)ல், தருமமே தோன்றும் = புண்ணியமேயுண்டாகும், மத்திமங்களினுலே = நடுவிலுள்ள இரஜோகுண காரியங்களா(ன காமாதிகளா)ல், பாவம் உண்டாம் = பாவமுண்டாகும், தாமதங்களால் = தமோகுணத்தின் காரியங்களா(ன சோம்பல் முதலியவைகளா)ல், இரண்டும் இன்றி = புண்ணிய பாவங்களிரண்டுமில்லாமல், ஒத்தஓர்வாணுள் = பொருந்திய ஒப்பற்ற ஆயுளானது,வாளா ஒழியும் = வியர்த்தமாகவே கழியும், [இவைகள் புத்தியின் கண்ணிருப்பதால் அந்தக்கரணம் முதலிய அனைத்திற்கும் சுவாமியைக் கூறுகின்றார்] நான் என்னும் போதன் = (அந்தக்கரணுதிகளில்) நானென்னும் புத்தியுள்ளவன், கத்தன் என்று = சுவாமியாம் என. இங்ஙன் = இப்படி, உலகில் = உலகத்தில், எவரும் கழறுவர் = யாவரும் கூறுவார்கள் எ—று. மாதோ—அசை.

காரியத்தைச் செய்பவனே கர்த்தாவாம், சுவாமியாம் என்பது பொருள். 9

(அ—கை)

இங்ஙனம் சகத்தின் ஸ்திதியைக் கூறி இப்போது அதன் பௌதிகத் தன்மையின் ஞானத்தினுபாயங் கூறுகின்றார்.

இலகொலி யாதி வாய்ந்த விவைபவு திகமாந் திண்ண
மலகினூ லுத்தி தம்மா லக்கமா தியுமற் றென்கப்
புலன்பதி ஞென்ரே டுத்தி புனிதநூ லிவற்ருற் காணு
முலகம தனைத்து மீதென் றுரைத்திட நிகழு மன்றே. 10

(ப—ரை) இலகு ஒலியாதி வாய்ந்த இவை = வெளிப்படையாக விளங்கா நின்ற சத்தபரிசம் முதலிய குணங்களோடு கூடிய கடாதிகளாகிய இவை, பவுதிகம் = பூதகாரியமென்பது, திண்ணம் ஆம் = நிச்சிதமாம், [இந்திரியங்களைப் பூதகாரியமாகவுணர்வது எப்படியென்னுஞ் சங்கைக்கு ஆகம அனுமானங்களாலெனக் கூறுகின்ருர்] அலகு இல் = அளவில்லாத, நூல் உத்தி தம்மால் = சாஸ்திரத்தாலும் (அனுமானத்தாலும்), அக்கம் ஆதியும் = நேத்திரம் முதலானவைகளும், அற்று என்க = அப்படியே (பூதகாரியங்களாம்) என்று சொல்லுக, ("சௌம்மியனே மனம் அன்னமயமாம், பிராணன் ஜலமயமும், வாக்கு தேஜோமயமாம்" என்பது முதலியவை சாஸ்திரமாம், அனுமானமாவது:விவாத விஷயங்களான சுரோத்திராதிகள், பூத காரியங்களாக யோக்கியமாம், பூதங்களினுடன்பாடெதிர்மறைகளை அனுசரித்திருத்தலால், எதுஎதனது உடன்பாடெதிர்மறைகளை அனுசரித்திருப்பதாமோ அது அதனது காரியமாகக் காணப்படுகின்றது, அது மண்ணினுடன்பாடெதிர்மறையை அனுசரித்திருக்கும் கடம் மண்ணின் காரியமாதல் போலவாம், மண்ணிருந்தால் கடமுண்டு என்பது உடன்பாடு, மண்ணின்றேல் கடமில்லை என்பது எதிர்மறையாம், அப்படியே இவைகளுமாம். ஆதலாலிங்ஙனம், மனதிற்கு அன்னத்தின் அன்வயவெதிரேகத்தை அனுசரித்திருக்குந் தன்மை "சௌமிய பதினறு கலைகளையுடையவன் புருஷன்" என்பது முதலிய வசனத்தால் சாந்தோக்கிய சுருதியில் கேட்கப்பட்டுளது, அதுபோன்று வேறிடங்களிலும் கண்டுகொள்க)

[இங்ஙனம் பூதங்களையும் பௌதிகங்களையும் வேறு பிரித்துக்காண்பித்து இப்பிரகரணத்தின் ஆதியிலுள்ள "இது உற்பத்திக்குப் பூருவம் சத்தாகவேயிருந்தது" என்பது முதலிய அத்துவிதப்பிரம்மத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியை வியாக்கியானஞ் செய்கின்றவராய் அவ்வாக்கியத்தின் கண்ணுள்ள 'இது' என்னும் பதத்தின் பொருளைக் கூறுகின்ருர்] புலன் பதினென்ரோடு = பதினேரு இந்திரியங்களும், உத்தி = (உபமானம், அர்த்தாபத்தி, அனுபலப்திகளோடு) அனுமானமும், புனித

நூல்=பரிசுத்தமான சாஸ்திரமும் ஆகிய, இவற்றால்=இவைகளால் (சகலப் பிரமாணங்களாலும் என்பது பொருள்), காணும்=அறியப்படுகின்ற, உலகமது அனைத்தும்=நாமரூபவடிவப் பிரபஞ்சமனைத்தும், ஈது என்று உரைத்திட நிகழும் = (அவ்வாக்கியத்திலுள்ள) 'இது' என்னும் சப்தத்தால் சொல்லும்படி விளங்கும் எ—று.

அன்று, ஏ—அசைகள். 10

(அ—கை)

இங்ஙனம் இது என்னும் சப்தத்தின் பொருளைக் கூறி இப்போது அச்சுருதியைத் தானே அர்த்தத்தாற் படிக்கின்றார்.

ஈதெலா முனஞ்சத் தேயா மேகமே வாத்து வீத
மேது கொன் ஹுமரூப மென்பதா ருணியின் வாக்காம்
பாதவச் சுவகத பேதம் பழமல ரிலையி லாந்தன்
சாதிமற் றொன்றான் வேறு சாதிகல் லாதி யாலாம். 11

(ப—ரை) ஈது எலாம்=இந்நாமரூபப் பிரபஞ்சங்களனைத்தும், முனம்=சிருஷ்டிக்குப் பூர்வம், ஏகம் ஏவ் அத்து வீதம்=ஒரே துவைதமற்ற, சத்தேஆம் = சத்தாகவேயிருந்தது, நாமரூபம் ஏதுகொல்= நாமரூபப் பிரபஞ்சமென்பதாக எது உள்ளது? (சற்றுமின்றாம்), என்பது ஆருணியின் வாக்காம்=என்னும் இது அருணி மகரிஷியின் புத்திரராகிய உத்தாலகரது வசனமாம் (அதாவது அருணியின் புத்திரரான உத்தாலகர் தன் புத்திரன் சுவேதகேதுவுக்குக் கூறிய வசனமாம்), ["ஏகம், ஏவ, அத்துவிதம்"என்னும் மூன்று பதங்களால் பிரம்மத்தினிடத்துப் பிராந்தியால் பிராப்தமான சுவகதம் முதலிய முப்பேதங்களையும் நிவர்த்திப்பதற்காக உலகிலுள்ள சுவகதம் முதலிய முப்பேதத்தை முதலில் தெரிவிக்கின்றார்] பாதவம்=விருக்ஷத்திற்கு, பழம் மலர் இலையில்=தன் பத்திரபுஷ்ப பலாதிகளோடு (உள்ளபேதம்), சுவகதபேதம்ஆம் = சுவகதபேதமென்று சொல்லப்படுவதாகும், மற்றொன்றான்=அன்னிய விருக்ஷத்தால் (உண்டாகிய பேதம்), தன்சாதி (ஆம்)=தனது சஜாதீய்பேதம் என்று சொல்லப்படுவதாகும், கல்லாதியால்=சிலை முதலியவற்றால் (உண்டாகியபேதம்), வேறுசாதிஆம் = விஜாதீயபேதம் என்று சொல்லப்படுவதாகும் எ—று. அருணியின் புத்திரர் ஆருணி எனப்படுவர். அவர் இங்கே உத்தாலகராம். 11

(அ—கை)

இங்ஙனமனுன்ம வஸ்துக்களில் முப்பேதங்களைக் காண்பித்து சத்துரூபவஸ்துவில் பிராந்தியால் பிராப்தமான அம்முப்பேதங்களையும் சுருதியானது மூன்று பதங்களால் நிவர்த்தி செய்கின்றதெனக் கூறுகின்றார்.

அப்பரி சுண்மைக் காமுப் பேதமு மடைவி னீக்குந்
துப்பம ரயிக்கந் தேற்றந் தொய்த நீக் கமதி வற்ரு
லப்பொருட் குறுப்புண் டென்ன லங்கிச மன்மை யாலே
செப்புறுப் புருப்பே ராகாச் செனித்திடா மையினிப் போதும்.
12

(ப—ரை) அப்பரிசு = அவ்விதமே (அதாவது அனுன்மவஸ்துக்களுக்கு முப்பேதமிருப்பதுபோல்), உண்மைக்கு = சத்துரூப வஸ்துவிற்கும், முப்பேதமும்ஆம் = (வஸ்துத்தன்மையின் சமத்துவப்பிராந்தியால் சுவகதாதி) மூன்றுபேதங்களுமுண்டாம், துப்புஅமர் = மேன்மை பொருந்திய, அயிக்கம்தேற்றம் தொய்தநீக்கமது இவற்ருல் = ஐக்கியத்தையும் நிச்சயத்தையும் துவைதாபாவத்தையும் முறையே போதிக்கிற ஏகம்ஏவ அத்துவிதீயம்என்னும் இம்மூன்று பதங்களால், அடைவின் = கிரமமாக, நீக்கும் = அப்பேதங்களைச்சுருதி நிவர்த்திசெய்யும், [சத்திற்கு சுவகதாதிபேதங்கள் சங்கிக்கத்தக்கதல்ல சத்து நிரவயவமாதலால் எனக்கூறுகின்ருர்] அப்பொருட்கு = அச்சத்வஸ்துவிற்கு, உறுப்பு = அவயவங்கள், உண்டுஎன்னல் = உண்டு என்று சொல்லற்க, அங்கிசம் = அதற்குளவையும் அவயவங்கள், அன்மையால் = அல்லாமையின் (நிரூபிக்கமுடியாதுஎன்றபடி) [நாமரூபங்கள் சத்தின்அவயவங்களாகலாமே யென்னுஞ் சங்கைக்கு உற்பத்திக்குப்பூர்வம் அவைகளின்மையினுல் சத்திற்கு அவயவங்களாகாவெனக்கூறுகின்ருர்], உருபேர் = நாமரூபங்கள், செப்புஉறுப்புஆகா = (சத்திற்கு) சொல்லானின்ற அவயவங்கள் ஆகமாட்டா, இப்போதும் செனித்திடாமையின் = இப்பொழுதும் (அதாவது சிருஷ்டிக்கு முற்காலம் வரையிலும்) உண்டாகாமையின் எ—று. ஏ—அசை. 12

(அ—கை)

சிருஷ்டிக்குமுன் நாமரூபங்கள் எதனுலில்லையென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

பெயருருத் தோற்ற மேயாம் பிறவியா தலினுண் டாமு
னயனமற் றவற்றுக் கின்று மாகையா லிரங்கி சந்தா
னுயருண்மை விசும்பு போலு முண்மையந் தரந்தன் சாதி
யியலுறு விலக்ஷணந்தா னிசைந்திடா மையினா லன்றே. 13

(ப—ரை)பெயர்உருத்தோற்றமே = நாமரூபங்களினுற்பத்தியே, பிறவியாம் = சிருஷ்டியாம், ஆதலின் = ஆதலால், உண்டாம்முன் = சிருஷ்டிக்குப்பூர்வம், அவற்றுக்கு = அந்நாமரூபங்களுக்கு, அயனம் இன்றும் = உற்பத்தி இல்லையாம், [சித்தித்ததைக்கூறுகின்றார்] ஆகையால் = நாமரூபங்களின்மையினால், உயர்உண்மை = மேலாகிய சத்வஸ்து, நிரங்கிசந்தான் = நிரவயவமேயாம், விசும்புபோலும் = ஆகாசம் போன்று, (ஈண்டிஃதனுமானம். சத்வஸ்து சுவகதபேதமின்றியது, நிரவயவமாதலால், ஆகாசம்போல) [சத்வஸ்துவிற்குச் சுவகதபேதம் இல்லாமற்போகுக. சஜாதீய பேதமேனில்லையென்னுஞ் சங்கைக்குச், சத்துக்குச்சஜாதீயம் வேறு சத்துஎன்று சொல்லவேண்டும், அதை நிரூபித்தல் முடியாது. சத்தினின்றும் வேறுசத்திற்கு விலக்ஷணத் தன்மையின்மையினால் எனக்கூறுகின்றார்] அந்தரம் உண்மை = வேறு சத்து, தன்சாதி = சஜாதீயமாக, இயலுறு = பொருந்தாது, விலக்ஷணந்தானிசைந்திடாமையினால் = அதற்குப் பின்னலக்ஷணமானது பொருந்தாமையினால் (இலக்ஷண பேதத்தினால் வஸ்துவிற்குப்பேதம் சித்திக்கும், அஃதின்மையால் அது சித்திக்காது என்பது பொருள்) எ—று.

மற்று-அன்று-ஏ-அசைகள்.

இயலுறுது என்பது துவ்விகுதிகுறைந்து இயலுறு என்றாயிற்று. 13

(அ—கை)

அற்றேல் கடசத்தை படசத்தை யெனச்சத்தின்பேதம் தோற்றுகிறதே யென்னும் சங்கைக்குக் கடாகாச மடாகாசங்களுக்குப்போல ஔபாதிகபேதமாம். சொரூபமாகப்பேதம் தோற்றுகிறதில்லையெனக் கூறுகின்றார்.

ஒன்றிய நாம ரூப வுபாதிபே தத்தை யன்றி
யின்றுசத் தினுக்கே பேத மில்லது விசாதி யந்தா
னென்றுமுண் டென்னத்தோன்ரு தெதிர்மறை யன்மை 14
பின்றபு விசாதி யத்தாற் பேதமெவ் வாரு மன்றே. [யாலே

(ப—ரை) ஒன்றிய=பொருந்திய, நாமரூப உபாதி பேதத்தை யன்றி= நாமரூபங்களாகிற உபாதிகளுக்கு (அத்தோற்றும்) பேதமே யல்லாமல், சத்தினுக்குபேதம்இன்று=சத்துவஸ்துவிற்கு பேதமில்லை யாம், (ஈண்டிஃதனுமானம்: சத்து சஜாதீயபேதமின்றியது. உபாதி சம்பந்தமின்றிப் பேதந்தோன்ருமையினுல், ஆகாசம்போல)[அற்றேல் விஜாதீயத்தால்பேதமுண்டாகட்டுமேயென்னுஞ் சங்கைக்குச் சத்துக்கு விஜாதீயம் அசத்து: அஃது அசத்தானபடியால் அதற்குப்பிரதியோகித் தன்மை பொருந்தாது, பொருந்தாதபடியால் அதனைப்பிரதியோகியாக வுடைய பேதமில்லையெனக் கூறுகின்ருர்] விசாதியந்தான்=விஜாதீய பேதமானது, இல்லது=அசத்தாம், [அதனையே சமர்த்தனஞ்செய் கின்ருர்] உண்டு என்ன = அவ்வசத்து இருக்கிறதென்று, என்றும் தோன்ருது=ஓர்போதும் பிரதீதியாகாது, (ஆதலின்) எதிர்மறையன் மையாலே=(அசத்துப்) பேதப்பிரதியோகியாக ஆகாமையால், பின் தபு = ஞானத்தின்பின் அத்தியந்தம் பாதமாய்க்கெடுகின்ற, விசாதி யத்தால் = விஜாதீயத்தினுல், பேதம்எவ்வாறுஆம் = பேதம் எப்படிச் சித்திக்கும் எ—று. ஏ–அன்று–ஏ–அசைகள்.
பேதத்தை–அத்து–ஐ–சாரியைகள். 14

(அ—கை)

சித்தித்த பொருளைக் கூறுகின்ருர்.

ஏகமே வாத்தொய் தஞ்சத் தென்பது சித்த மங்கே
மூகரி தசத்தே யாகி முன்னின்ற தெனவன் னித்துச்
சாகரத் தாழ்ந்தோர் கண்க டமிற்கலங் குவரின் ஞேருண்
மாகவி னென்றைக் கேட்டு மாறியின் னதினின் றஞ்சும். 15

(ப—ரை) ஏகம் ஏவ அத்தொய்தம் சத்து என்பது = ஒரேதுவித மற்றசத்துரூபபிரஹ்மவஸ்து என்பதுவே, சிந்தம் = சிந்தித்தது, [இப் போது § தூணு கநந நியாயத்தால் அத்துவிதத்தைப் திடஞ்செய் வதற்காகப் பூருவபக்ஷத்தைக்கூறுகின்றார்] அங்கே = அவ்விஷயத்தில், மூகர் = அறிவில்லாதவர்கள், முன் = சிருஷ்டிக்குப்பூருவம், இது = இந்த நாமரூபவடிவப் பிரபஞ்சம், அசத்தேயாகிநின்றது = அசத்தாகவே யிருந்தது, எனவன்னித்து = என்றுவர்ணித்து, சாகரத்துஆழ்ந்தோர் = கடலில் மூழ்கினவர்களது, கண்கள் தமில் = இந்திரியங்களைப்போல, கலங்குவர் = துன்பத்தையடைவார்கள், இன்னோர் = இப்படிப்பட்டவர் களின், உள் = புத்தியானது, மாகவின் = மிகஅழகிய, ஒன்றைக் கேட்டு = அகண்டைகரச பிரம்மத்தைச்சிரவணித்து, மாறி = (சாகார வஸ்துவினிடத்தில் செல்வதுபோல இதிற்செல்லாது) மறுமுகமாகி, இன்னதில்நின்றும் = இவ்அகண்டைகரசவஸ்துவினின்றும், அஞ்சும் = பயத்தையடைகின்றது எ—று. கண்கள் ஏனையவிந்திரியங்களுக்கும் உபலக்ஷணமாம். 15

(அ—கை)

கூறிய அர்த்தத்தில் ஆசாரியரது சம்மதியை யுணர்த்துகின்றார்.

இங்குயர் நிருவிகற்பத் திதரயோ கியர்க்கூங் கச்சந்
தங்குமென் றுரைத்தார் கௌடா சாரிய ருயர்ச மாதிச்
சங்கம தெளிசோ யார்க்குந் தனிமையா மபயத் தஞ்சு
மங்கயோ கியர்மற் றீதி னதிபய மடைவ ரன்றே. 16

(ப—ரை) கௌடாசாரியர் = ஸ்ரீ கௌடபாதாசாரியசுவாமிகள், இங்கு = ஈண்டு, உயர் நிருவிகற்பத்து = மேலாகிய நிருவிகற்பசமாதியில், இதரயோகியர்க்கு = (ஸாகாரபிரம்மநிஷ்டர்களான) அன்னியயோகி களுக்கு, அச்சம்தங்குமென்று = (மிகவும்) பயமுண்டாகுமென்று,

§ தூணு என்பது கம்பம், கநநமென்பது அசைப்பித்துநாட்டுதல், நியா யம் என்பது திருஷ்டாந்தம். அதாவது நாட்டிய கம்பத்தை அசைத்து அசைத்து கெட்டித்தல்போல அத்துவிதீய ஞானமாகிய கம்பத்தை பூருவபக்ஷத்தைக் கூறுதலாகிய அசைப்பால் அசைப்பித்து சமா தானத்தைக் கூறுதலாகிய கடப்பாரையினால் இடித்தலால் திடமாகின்றது.

உரைத்தார் = கூறினுர்கள், [ஸ்ரீ கௌடபாதாசாரியர் எவ்வாக்கியத்தால் கூறினுர்கள் என்ருகாங்க்ஷையுண்டாகஅவரதுவார்த்திகத்தையே படிக்கின்ருர்] யார்க்கும் = ஸாகாரத்தியான நிஷ்டர் எவர்க்கும், உயர் சமாதிச்சங்கமது = மேலான (அஸ்பரிஸயோகமென்னும் இந்த) நிருவிகற்பசமாதியின்பிராப்தி,எளிசோ = சுலபமாமோ(கிடைப்பதரிதென்பது பொருள்), [அதில்உபபத்தி(யுக்தி)யைக் கூறுகின்ருர்] தனிமையாம் = ஒப்பற்ற, அபயத்து = பயமின்றிய நிர்விகற்பசமாதியில், அஞ்சும்அங்க யோகியர் = (நிர்ச்சனப்பிரதேசத்தில்பாலர்கள்போன்று)பயப்படுகின்ற அதாவது பயஏதுத்தன்மையை கற்பிக்கின்ற சாகார நிஷ்டயோகியர், ஈதின் = இந் நிருவிகற்பசமாதியினின்றும், அதிபயம்அடைவர் = மிகுந்த அச்சத்தை அடைவார்கள் எ—று. ஊங்கு, மற்று, அன்று, ஏ–அசைகள்.

வர்ணுசிரமமுதலிய தர்மங்களோடாவது பாவமாகிய மலத்தோடாவது அல்லது அநாத்ம வஸ்துவோடாவது எதனுல் ஸ்பரிஸ (சம்பந்த)ம் உண்டாகாமல் ஜீவனைப் பிரஹ்மத்தன்மையோடு பொருத்துகின்றதோஅப்படிப்பட்டஅத்வைத(பிரஹ்ம)த்தின்அனுபவம்(சாக்ஷாத்காரம்) அஸ்பரிசயோகம். அது உபநிஷத்தில் பிரசித்தமாம். அந்த அஸ்பரிசயோகத்தோடுகூடியயோகி (நிர்க்குணப்பிரஹ்மநிஷ்டஞானி) களினதாம் இந்த அஸ்பரிசமென்னும்யோகம். 16

(அ—கை)

ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளாலும் இது கூறப்பட்டதெனக் கூறுகின்ருர்.

பகவற்பூச் சியநற் பாதர் பரமதிற் பசையி றர்க்க
விகலுறு மாத்தி மீக ரிருண்டன றென்ருர் வேதச்
சிகையினை மூகத் தோவித் தீத்தராம் பௌத்த ரான்மா
தகையனு மானக் கண்ணே சார்ந்துள ராயின் றென்பார். 17

(ப—ரை) பகவன் = வித்தை முதலிய ஆறுகுணங்களையுடையவரும், பூச்சியநல்பாதர் = பூஜிக்கத்தகுந்த நல்லபாதத்தினையுடையவரும்ஆகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், பசையில்தர்க்க = பசையற்ற சுஷ்கதர்க்கத்தில், இகல்உறு = வலிமைபொருந்திய, மாத்திமீகர் = மாத்திமிக பௌத்தரை, பரமதில் = மேலாகியசத்துரூப ஆன்மவஸ்து

வில், இருண்டனர் = மோகமடைந்தனர் (அஞ்ஞானத்தினர்), என்றூர் = என்று கூறினுர்கள், [அவரது வார்த்திகத்தைப் படிக்கின்றூர்] தீத்தர் ஆம் = கொடியவர்களான, பௌத்தர் = பௌத்தர்கள், தகைஅனுமானக் கண்ணே = அனுமானப்பிரமாணத்தையே முக்கிய நேத்திரமாக, சார்ந்துளராய் = பொருந்தினவர்களாய், வேதச்சிகையினை = வேதங்களின் சிரசாயுள்ள உபநிஷத்துக்களை, மூகத்து = மூர்க்கத்தன்மையால், ஒவி = திரஸ்கரித்து, ஆன்மாஇன்றுஎன்பார் = ஆன்மாசூனியமாமென்பார்கள் எ—று. 17

தீதர் என்பது தீத்தரெனத் தகரம்தோன்றல் விகாரம்.

(அ—கை)

இப்போது அசத்து வாதத்தை விகற்பித்துத் தூஷிக்கின்றூர்.

சூனியஞ் சத்தோ டொத்தோ சொன்னின்ற ததுதா ஞயோ
சூனியத் தினுக்கி ரண்டுந் தோய்வுரு விரோதந் தன்ஞற்
சூனியத் தமத்தோ டொன்றூன் சூரியன் றமமு மாகான்
சூனியஞ் சத்துந் தெவ்வாஞ் சொன்னின்றதது வெவ் வாறே 18

(ப—ரை) (ஹே சூனியவாதி! சிருஷ்டிக்குமுன் சூனியமேயிருந்தது என்னும் வாக்கியத்திற்கு யாதுபொருள்?) சூனியம் சத்தோடு ஒத்தோ நின்றது = சூனியம் சத்துரூபவஸ்துவோடு கூடியிருந்ததோ, (அல்லது) அதுதாஞயோ = அச்சத்து ரூபமாகவேயிருந்ததோ, சொல் = சொல்லுவாயாக, சூனியத்தினுக்கு = அசத்திற்கு, இரண்டும் = சத்தோடுகூடியிருக்குந்தன்மையும் சத்துரூபத்தன்மையும் ஆகிய இருவிதமும், விரோதந்தன்ஞல் = வியாகாததோஷத்தினுல், தோய்வுஉரு = பொருந்தா, [வியாகாதத்தையே திருஷ்டாந்த பூர்வகம் திடஞ்செய்கின்றூர்] சூரியன் = பிரகாசவடிவசூரியனுனவன், சூனியத்தமத்தோடு = பிரகாச சூனிய (அதாவது அப்பிரகாசவடிவ) அந்தகாரத்தோடு, ஒன்றூன் = சேரான், தமமும்ஆகான் = அந்தகார சொரூபமுமாகமாட்டான், (அதுபோல) சூனியம் சத்தும் = அசத்தும் (இருப்பின்மையும்) சத்தும் (இருப்பும்), தெவ்வாம் = (ஒன்றுக்கொன்று) பகையாம் ஆதலின், அது நின்றது = சூனியம் (இருப்பின்மை) இருந்தது, (என்பது) எவ்வாறு = எங்ஙனம், (கூடும்) சொல் = நீ சொல்வாயாக எ—று. ஏ-அசை. 18

(அ—கை)

அற்றேல் ஹே சித்தாந்தி தங்களுடைய வேதாந்த மதத்தில் ஆகாசாதிகள் நிருவிகற்ப பிரஹ்மத்தின் கண்ணேயிருத்தல் வியாகாத மாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

வானமா திகளி னுமம் வடிவங்கற் பிதமாஞ் சத்திற்
சூனிய நாம ரூப மற்றெனிற் சுகிநீ நீணு
ளானசன் னும ரூப மற்றெனி னீங்கென் றேது
தானிரா தார மோகஞ் சார்ந்ததோ ரிடத்துங் காணேம். 19

(ப—ரை) வானம் ஆதிகளின் = ஆகாயம் முதலியவைகளின், நாமம் வடிவம் = பெயரும் உருவமும், சத்தில் = பிரஹ்மமாகிய சத்வஸ்துவில், கற்பிதம்ஆம் = (மாயையால்) ஆரோபிக்கப்பட்டனவாம், [அங்ஙனமாயின் சூனியத்தினுடைய நாமரூபங்களும் சத்துவஸ்துவில் கற்பிக்கப்பட்டனவாம் என்று கூறும் வாதிக்குப் பௌத்தசித்தாந்தம் பங்கமாம் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்] சூனியநாமரூபம் = சூனியத்தினுடைய பெயரும் உருவமும், அற்றுஎனில் = அப்படியே (மாயையினால் சத்தில் கற்பிக்கப்பட்டனவே)யாம் எனின், நீ நீள்நாள் = நீ நீண்டகாலம், சுகி = சுகமாகவாழக்கடவாய், [அற்றேல் சூனியத்திற்குப் போலச் சத்துவஸ்துவின் நாமரூபங்களும் கற்பிக்கப்பட்டனவாகவே அங்கீகரித்தல் தகுதியாம், தங்கள் மதத்தில் வாஸ்தவநாமரூபங்களின்மையால் எனச்சங்கிக்கின்றான்] ஆனசத்நாமரூபம் = என்றுமுளதாகிய சத்தினதுபெயரும் உருவமும், அற்றெனின் = அப்படியே கற்பிதமாமெனின், [இந்த உனது பூர்வபக்ஷம் விகற்பத்தைச் சகியாமையின் பொருந்தாதென்னுமபிப்பிராயத்தால் சங்கையைப் பரிகரிக்கின்றார்] ஈங்குஎன்று ஓது = இன்ன இடத்து (அதிஷ்டானத்தில்) என்றுசொல், (அபிப்பிராயமிதுவாம், சத்தின் நாமரூபங்கள் சத்திற்கற்பிக்கப்பட்டனவா அல்லதுஅசத்திற்கற்பிக்கப்பட்டனவா,அல்லது சகத்திற்கற்பிக்கப்பட்டனவா? முதற்பக்ஷம் சரியன்று, ஏனெனின் சுத்தி முதலியவற்றிற்கு வேருயுள்ள வெள்ளி முதலியவைகளின் நாமரூபங்களின் ஆரோபம் வெள்ளிக்கு வேருயுள்ள சுத்தி முதலியவற்றில் கற்பிக்கப்பட்டனவாகக்காணப்படுதலின். சத்தின் நாமரூபங்களுக்குசத்திலேயேகற்பனை பொருந்தாமையினால், இரண்டாவதுபக்ஷமும் சரியன்று, சொரூபமின்றிய அசத்திற்கு அதிஷ்டானத்தன்மை பொருந்தாதபடியால். மூன்

வில், இருண்டனர் = மோகமடைந்தனர் (அஞ்ஞானத்தினர்), என்றூர் = என்று கூறினுர்கள், [அவரது வார்த்திகத்தைப் படிக்கின்றூர்] தீத்தர் ஆம் = கொடியவர்களான, பௌத்தர் = பௌத்தர்கள், தகைஅனுமானக் கண்ணே = அனுமானப்பிரமாணத்தையே முக்கிய நேத்திரமாக, சார்ந்துளராய் = பொருந்தினவர்களாய், வேதச்சிகையினே = வேதங்களின் சிரசாயுள்ள உபநிஷத்துக்களே, மூகத்து = மூர்க்கத்தன்மையால், ஓவி = திரஸ்கரித்து, ஆன்மாஇன்றுஎன்பார் = ஆன்மாசூனியமாமென்பார்கள் எ—று. 17

தீதர் என்பது தீத்தரெனத் தகரம்தோன்றல் விகாரம்.

(அ—கை)

இப்போது அசத்து வாதத்தை விகற்பித்துத் தூஷிக்கின்றூர்.

சூனியஞ் சத்தோ டொத்தோ சொன்னின்ற ததுதா னுயோ
சூனியத் தினுக்கி ரண்டுந் தோய்வுரு விரோதந் தன்னுற்
சூனியத் தமத்தோ டொன்றூன் சூரியன் றமமு மாகான்
சூனியஞ் சத்துந் தெவ்வாஞ் சொன்னின்றதது வெவ் வாறே 18

(ப—ரை) (ஹே சூனியவாதி! சிருஷ்டிக்குமுன் சூனியமேயிருந்தது என்னும் வாக்கியத்திற்கு யாதுபொருள்?) சூனியம் சத்தோடு ஒத்தோ நின்றது = சூனியம் சத்துரூபவஸ்துவோடு கூடியிருந்ததோ, (அல்லது) அதுதானுயோ = அச்சத்து ரூபமாகவேயிருந்ததோ, சொல் = சொல்லுவாயாக, சூனியத்தினுக்கு = அசத்திற்கு, இரண்டும் = சத்தோடுகூடியிருக்குந்தன்மையும் சத்துரூபத்தன்மையும் ஆகிய இருவிதமும், விரோதந்தன்னுல் = வியாகாததோஷத்தினுல், தோய்வுஉரு = பொருந்தா, [வியாகாதத்தையே திருஷ்டாந்த பூர்வகம் திடஞ்செய்கின்றூர்] சூரியன் = பிரகாசவடிவசூரியனுனவன், சூனியத்தமத்தோடு = பிரகாச சூனிய (அதாவது அப்பிரகாசவடிவ) அந்தகாரத்தோடு, ஒன்றூன் = சேரான், தமமும்ஆகான் = அந்தகார சொரூபமுமாகமாட்டான், (அதுபோல) சூனியம் சத்தும் = அசத்தும் (இருப்பின்மையும்) சத்தும் (இருப்பும்), தெவ்வாம் = (ஒன்றுக்கொன்று) பகையாம் ஆதலின், அது நின்றது = சூனியம் (இருப்பின்மை) இருந்தது, (என்பது) எவ்வாறு = எங்ஙனம், (கூடும்) சொல் = நீ சொல்வாயாக எ—று. ஏ–அசை. 18

(அ—கை)

அற்றேல் ஹேற சித்தாந்தி தங்களுடைய வேதாந்த மதத்தில் ஆகாசாதிகள் நிருவிகற்ப பிரஹ்மத்தின் கண்ணேயிருத்தல் வியாகாத மாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

வானமா திகளி னுமம் வடிவங்கற் பிதமாஞ் சத்திற்
சூனிய நாம ரூப மற்றெனிற் சுகிநீ நீணு
ளானசன் னும ரூப மற்றெனி னீங்கென் றேது
தானிரா தார மோகஞ் சார்ந்ததோ ரிடத்துங் காணோம். 19

(ப—ரை) வானம் ஆதிகளின் = ஆகாயம் முதலியவைகளின், நாமம் வடிவம் = பெயரும் உருவமும், சத்தில் = பிரஹ்மமாகிய சத்வஸ்துவில், கற்பிதம்ஆம் = (மாயையால்) ஆரோபிக்கப்பட்டனவாம், [அங்ஙனமாயின் சூனியத்தினுடைய நாமரூபங்களும் சத்துவஸ்துவில் கற்பிக்கப்பட்டனவாம் என்று கூறும் வாதிக்குப் பௌத்தசித்தாந்தம் பங்கமாம் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்] சூனியநாமரூபம் = சூனியத்தினுடைய பெயரும் உருவமும், அற்றுஎனில் = அப்படியே (மாயையினால் சத்தில் கற்பிக்கப்பட்டனவே)யாம் எனின், நீ நீள்நாள் = நீ நீண்டகாலம், சுகி = சுகமாகவாழக்கடவாய், [அற்றேல் சூனியத்திற்குப் போலச் சத்துவஸ்துவின் நாமரூபங்களும் கற்பிக்கப்பட்டனவாகவே அங்கீகரித்தல் தகுதியாம், தங்கள் மதத்தில் வாஸ்தவநாமரூபங்களின்மையால் எனச்சங்கிக்கின்றான்] ஆனசத்நாமரூபம் = என்றுமுளதாகிய சத்தினதுபெயரும் உருவமும், அற்றெனின் = அப்படியே கற்பிதமாமெனின், [இந்த உனது பூர்வபக்ஷம் விகற்பத்தைச் சகியாமையின் பொருந்தாதென்னுமபிப்பிராயத்தால் சங்கையைப் பரிகரிக்கின்றார்] ஈங்குஎன்று ஓது = இன்ன இடத்து (அதிஷ்டானத்தில்) என்றுசொல், (அபிப்பிராயமிதுவாம், சத்தின் நாமரூபங்கள் சத்திற்கற்பிக்கப்பட்டனவா அல்லதுஅசத்திற்கற்பிக்கப்பட்டனவா,அல்லது சகத்திற்கற்பிக்கப்பட்டனவா? முதற்பக்ஷம் சரியன்று, ஏனெனின் சுத்தி முதலியவற்றிற்கு வேருயுள்ள வெள்ளி முதலியவைகளின் நாமரூபங்களின் ஆரோபம் வெள்ளிக்கு வேருயுள்ள சுத்தி முதலியவற்றில் கற்பிக்கப்பட்டனவாகக்காணப்படுதலின். சத்தின் நாமரூபங்களுக்குசத்திலேயேகற்பனை பொருந்தாமையினுல், இரண்டாவதுபக்ஷமும் சரியன்று, சொரூபமின்றிய அசத்திற்கு அதிஷ்டானத்தன்மை பொருந்தாதபடியால். மூன்

ருவது பக்ஷமும் சரியன்று, சத்தினின்றுமுண்டானசகத்திற்குச் சத்தினது நாமரூபகற்பனையின் அதிஷ்டானத்தன்மைபொருந்தாதாதலின்) [அதிஷ்டானமின்றியும், சத்தின் நாமரூபங்களின் கற்பனை ஏன் உண்டாகலாகாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] நிராதாரமோகம் = அதிஷ்டானமின்றிய கற்பனை (ஆரோபம்), சார்ந்தது = உண்டானது, ஓரிடத்தும் காணோம் = எவ்விடத்தும் கண்டிலேம் எ—று. தான்-அசை.
19

(அ—கை)

அற்றேல் "இதுமுன் அசத்தாகவேயிருந்தது" என்பதில் எப்படி வியாகாதம்சொல்லப்பட்டதோ அப்படி சௌமியனே இதுமுன்சத்தாகவேயிருந்தது என்பதிலும் தோஷமுளதென வாதி சங்கிக்கின்றான்.

இருந்தது சத்தெனுஞ் சொல் லிருமை யேற் றுவிதமாகு
மொருமையேற் சொன்னதோதலொழிகவீ துலகிற்கண்டேம்
புரிவது புரிந்தான் வாக்குப் புகன்றன னென்ப வாதி
பரவுவா தனையுற் றேனைப் பார்த்துமெய் யிருந்த தென்னும்
20

(ப—ரை) (இருந்தது சத்து என்னுமிரண்டு சப்தங்களுக்குப் பொருள்வேற்றுமையுளதா? இன்றா?) இருந்ததுசத்துஎனும்சொல் = சத்து இருந்தது என்னுமிரண்டு சப்தங்களுக்கும், இருமையேல் = இரண்டுபொருளுளதெனில், துவிதம்ஆகும் = துவைதம் சித்திக்கும், (அத்துவிதத்திற்கு ஆனியுண்டாம்) ஒருமையேல் = ஒருபொருளெனின், சொன்னதுஓதல் = கூறியது கூறலென்னும்புனருத்திதோஷமாம், (ஆதலால் சத்து இருந்தது என்பது பொருந்தாது) [சித்தாந்தி இரண்டாவது அபேத பக்ஷத்தை அங்கீகரித்து உத்தரங்கூறுகின்றார்] ஈதுஒழிக = இச்சங்கையைவிட்டுவிடு, [அப்படியானால் புனருத்திதோஷத்திற்குப் பரிகாரம் யாதென்னுஞ் சங்கைக்குக்கூறுகின்றார்] உலகில் கண்டேம் = உலகத்தில் அவ்விதப்பிரயோகத்தைப் பார்க்கின்றேம், [உலகத்திலிப்படிப்பட்ட பிரயோகங்களில் புனருத்தியினபாவம் எங்கே காணப்பட்டது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] புரிவது = செய்யத்தக்க தொழிலை, புரிந்தான் = செய்தான், வாக்கு புகன்றனன் = வசனத்தைச் சொன்னான், [உலகிலிவ்வாறிருக்கட்டும், சுருதியில் என்ன சித்தித்தது எனிற் கூறுகின்றார்] என்பதுஆதி = என்றுசொல்லப்படுகின்ற இவை முதலிய, பரவுவாதனைஉற்றேனை = (உலகப்பிரசித்தப்

பிரயோகங்களில்)விரிந்தசமஸ்காரத்தோடுகூடியபுருஷனை, பார்த்து= நோக்கி, மெய்இருந்தது=சத்து இருந்தது, என்னும்=என்று சுருதி சொல்லிற்று எ—று.

ஆதி என்பதனுல் "தரிக்கத்தக்கதனைத் தரிக்கின்ருன்" என்னும் மூலத்திலுள்ள வாக்கியம் முதலியவற்றைக்கொள்க. என்னும் என்பது காலவழுவமைதி. 20

(அ—கை)

அற்றேல் அத்துவிதீயவஸ்துவில் பூதகாலமின்மையினுல் "முன் னிருந்தது" என்னும் சொல் பொருந்தாது என்னுஞ்சங்கைக்குக் கூறு கின்ருர்.

காலவா தனைசேர்ந் தோனைக்
கருதியே காலா தீதத்
தேலவே யெனுமிச் சொல்லா
மீண்டுதொய் தமதுண் டென்னேற்
சாலவுங் கடாவ லோடுத்
தரந்தொய்த மொழியி னேதற்
பாலவத் துவிதப் பேச்சிற்
பகரவை யிரண்டு மின்றே. 21

(ப—ரை) காலவாதனை சேர்ந்தோனை=(அத்துவிதீயவஸ்துவில்பூதமுதலியகாலங்களில்லாதிருக்கவும்)பூதபௌஷியத்துவமுதலிய கால்முளதென்னும்(சமஸ்காரத்தோடுகூடியுள்ளசிஷ்யனை),கருதியே= உத்தேசித்து, காலாதீதத்து=காலத்தைக்கடந்துள்ள பிரஹ்மத்தில், ஏலவே எனும் இச்சொல்=முன்பு என்கிற இந்தச்சுருதிசத்தம், (பிரவிர்த்தித்தது) [அற்றேல் உலகினுற்பத்திக்குப் பூர்வம் சகத்தினபாவ மிருத்தலால் பிரஹ்மத்திற்கு ஸத்துவிதீயத்தன்மையாமென்னுஞ் சங் கைக்குச் சுருதியின் பிரவிருத்தியானது துவித வாசனையோடுகூடிய சுரோதாவுக்குப் போதமுண்டாக்குதற்பொருட்டாதலால் அதிகமாகச் சங்கிக்கத்தக்கதன்றெனக் கூறுகின்ருர்] ஈண்டு = (ஜகத்தின்உற்பத் திக்குமுன்) இப்பிரஹ்மத்தின்கண், தொய்தமது=பிரபஞ்சாபாவமாகிய துவிதம், உண்டுஎன்னேல் = இருக்கின்றதென்றுசொல்லற்க, [இப் போது சித்தாந்த இரகஸ்யத்தைக் கூறுகின்ருர்] சாலவும் = மிகவும், கடாவலோடுஉத்தரம் = சங்கையும் சமாதானமும், தொய்தமொழி யின் = துவைதவசனத்தால், ஓதற்பால = சொல்லத்தக்கனவாம், அத்துவிதப்பேச்சில்=அத்துவித வசனத்தால், பகர்அவையிரண்டும்=

மேற்சொல்லிய அவ்விரு சங்கையும் சமாதானமும், இன்று = இல்லையாம், (வியவகாரகாலத்தில் சங்கை முதலியவை செய்யவேண்டியது, பரமார்த்தத்திலோ அத்துவிதமே வாஸ்தவமாமென்பது பொருள்) எ—று. ஆல்-ஏ-அசைகள்-இன்று, பன்மையில் ஒருமை மயக்கம். பிரவிர்த்தித்தது என்னும் சொல் அவாய்நிலையால் வருவிக்கப்பட்டது. 21

(அ—கை)

பரமார்த்தமாகத் துவைதமில்லையென்பதில் ஸ்மிருதியைப் பிரமாணமாக்குகின்றார்.

எண்டரு மலைவு தோற்றம் பெயரெலா மின்றி யாழ்ந்து
தண்டலி லிருடே சின்றித் தனித்தவோ ருண்மை நிற்கு
மண்டுரு தவனி யாதி யணுவரை நசித்த லாலே
விண்டபு மெனலெவ் வாறுன் மேதையிற் படுமென் பாயேல். 22

(ப—ரை) அலைவு = சலனமும், தோற்றம் = வெளிப்படுதலும் பெயர் = நாமத்தாற் சொல்லப்படுதலும், எண்தரும் = இவ்வாறு கணிக்கும்படியான, எலாமின்றி = அனைத்துமின்றி, ஆழ்ந்து = கம்பீரமாய் தண்டல் இல் = விலகல் இல்லாத. (அதாவது) வியாபகமாய், இருள் தேசு இன்றி = மறைப்பும் பிரகாசத் தன்மையும் இல்லாததாய், தனித்த = ஒப்பற்ற, ஓர் உண்மை = ஒரு சத்துருப வஸ்து, நிற்கும் = (துவித நிஷேதத்திற்கு) ஆதாரமாய் இருக்கும், [உற்பத்தியுடையதாந் தன்மையால் அநித்தியமான பிருதிவியாதிகளுக்கு அசத்துத் தன்மையிருக்கட்டும் நித்தியமான ஆகாசத்திற்கு அசத்துத்தன்மை அத்வைதவாதியாகிய உம்மால் எப்படி அங்கீகரிக்கப்படுகின்றது என்று வாதி சங்கிக்கின்றான்.] அவனியாதி = பூமி முதலியன, அணுவரை நசித்தலாலே = பரமாணுபரியந்தமாக நாசமாகிறபடியால், மண்டுருது = நிலைபெருது (அதாவது) சத்தியமாகாதொழிக. அங்ஙனமாயினும், விண்தபும் எனல் = ஆகாசம் கெடும் என்று சொல்லுதல், எவ்வாறு = எவ்விதத்தில், உன்மேதையிற்படும் = உனது புத்தியில் பதியும், என்பாயேல் = என்று கூறுவையாயின் எ—று.

சக்ஷு முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகாமையின் தோற்றமின்றியென்றும், வசனத்தாற் பிரதிபாதிப்பதற்கசக்கியமாதலின் பெயரின்றி என்றும், மனதினால் விஷயம் பண்ணப்படாமையின் ஆழ்ந்து என்றுங் கூறினரென்க. 22

(அ—கை)

சித்தாந்தியானவர் திருஷ்டாந்தத்தை ஆசிரயித்து முற்சங்கையைப் பரிகரிக்கின்றார்.

உலகமாத் திரந்தீர் வான முன்மதி தனைச்சார்ந் தாங்கே
யிலகொரு நிரம்ப ரச்சத் துன்மதி சேரா தேனோ
புலமுறப் பெறுமவ் வானேற் புகலொளி யிருணீத் தெங்கே
யலதுநின் பக்கத் தாமோ வம்பரம் பிரத்தி யக்கம். 23

(ப—ரை) உலகம் மாத்திரம் தீர்=ஜகத்து அத்தியந்தமின்றிய, வானம்=ஆகாசம், உன்மதிதனை = உன்னுடைய புத்தியை, சார்ந்தாங்கு=பொருந்தினது போல், இலகு ஒரு=விளங்கா நின்ற ஒப்பற்ற, நிரம்பரச்சத்து=(அத்தகையசூக்ஷும) நிராகாச சத்து, உன்மதி= உனது புத்தியை, சேராது ஏனோ=பொருந்தாதது எதனால்?, [பார்க்கப்பட்ட வஸ்துவில் அனுபபத்தியின்றும் என்னும் நியாயத்தை ஆசிரயித்து வாதி வினவுகின்றான்] அவ்வான்=சகத்தின்றிய கேவல ஆகாசம், புலம் உற=இந்திரிய ஞானத்திற்கு விஷயமாக, பெறுமேல்= சித்திக்குமெனின்,[அந்த ஞானம் அசித்தமாமெனச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்] புகல் ஒளி இருள் நீத்து=சொல்லா நின்ற பிரகாசத்தையும் அந்தகாரத்தையும் விட்டு, எங்கே=(ஆகாசத்தை) எங்கே (கண்டாய்? சொல்) (பிரகாசமும் இருளுமே இந்திரியத்திற்கு விஷயமாம். ஆகாசம் விஷயமன்றென்பது பொருள்) [உன்னுடையது அபசித்தாந்தமுமாம் எனக் கூறுகின்றார்] அலது=அன்றியும், நின்பக்கத்து=உனது மதத்தில், அம்பரம் பிரத்தியக்கம் ஆமோ=ஆகாசம் இந்திரியப் பிரத்தியக்ஷம் ஆகுமா? (ஆகாது என்றபடி) எ—று. ஏ—அசை.

ஆகாயம், உருவம் ஸ்பரிசம் முதலிய குணங்களற்றதாதலின் இந்திரிய கோசரப் பிரத்தியக்ஷமாகாதென்பார். "உலகமாத்திரந் தீர்வானம்" என்றார். விரிந்த சூரியன் முதலியவற்றின் பிரகாசமும் இருளுமாகிய இரண்டன் சம்பந்தத்தால் உருவமில்லாத ஆகாயத்தில் பிராந்தியினால் கருமையுருவம் தோற்றுகின்றது. அக்கருமையே

பார்வைக்கு விஷயமாகின்றது, ஆகாயமன்று. அந்தக் கருமையை ஆகாயத்தில் ஆரோபித்து "நான் ஆகாயத்தைப் பார்க்கின்றேன்" என்று சொல்லுகிருய். ஆனுல் ஒளியுமிருளுமின்றி ஓரிடத்தும் ஆகாயம் தோற்றுதல் பொருந்தாது. நிரம்பரச் சத்து என்பதனுல் ஆகாசத்திற்கும் அவனியாதியிற்போன்று அநித்தியத்தன்மையை அறிவித்தனர் என்றுணர்க. 23

(அ—கை)

அப்படியானுல் தெரிசனத்தின் அசித்தி சத்வஸ்துவிலும் சமானமாம் என்னுஞ் சங்கைக்குச் சர்வாநுபவ சித்தமாதலால் அங்ஙனமன்றெனக் கூறுகின்ருர்.

புனிதமெய்ப் பொருளு மெல்லாம் பொருந்தநிச் சயமாக் கண்
டேந்னிநிலே தனில பாவந் தானிலே யனைய துண்டென் [டேந்
றுனுமுணர் வின்மை யாலே யுண்மையி னுரமு மின்ரு
மெனினது வேண்டே முண்மை யிலகிநிற் றலினுற் ருனே24

(ப—ரை) தனிநிலேதனில் = தூஷ்ணீம் பூதாவஸ்தையில், (உதாசீனதசையில்) புனித மெய்ப்பொருள் = சுத்தமாயும் சத்தாயும் உள்ள ஆன்ம வஸ்துவை, நாமெல்லாம் = நாமெல்லோரும், பொருந்த = அமைய, நிச்சயமாக் கண்டேம் = நிச்சயமாக அனுபவித்துள்ளேம், [அற்றேல் தூஷ்ணீம் பூதாவஸ்தையில் சூனியந்தானுளது வேறொன்றும் தோற்ருமையினுல் என்னுஞ் சங்கைக்குச் சூனியப் பிரதீதியுமின்மையினுல் சூனியமும் சம்பவியாதெனக் கூறுகின்ருர்] அபாவந்தான் இலே = (தூஷ்ணீம் பூதாவஸ்தையில்) சூனியம் இல்லேயாம், அனையது உண்டு என்று = அத்தகைய சூனியமுளதென்று, உனும் உணர்வு இன்மையாலே = (சூனியத்தை) அறியும் ஞானம் இல்லாதபடியால், [அற்றேல் தூஷ்ணீம் அவஸ்தையில் சத்தின் புத்தியின்மையினுல் சத்துவமும் சித்திக்காது என்று சங்கித்து அது சொப்பிரகாசமாயிருத்தலாலதன் புத்தியினபாவம் அநிஷ்டமன்ருமெனப் பரிகரிக்கின்ருர்] உண்மையின் உரமும் = சத்தின் ஞானமும், இன்ரும் எனின் = இல்லேயாமெனின், அது வேண்டேம் = சத்தினே விஷயிக்கும் ஞானத்தை அபேக்ஷியேம், உண்மை = சத்துருப ஆன்மவஸ்து, தானேயிலகிநிற்றலினுல் = சுயம்பிரகாசமாயிருத்தலினுல் எ—று.

தன்–சாரியை. தான், ஏ, ஏ—அசை. 24

(அ—கை)

சத்துவஸ்துவை விஷயஞ் செய்யும் புத்தியில்லாவிடின் சத்து வஸ்துவை அறிவதெப்படி? என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

மனமிலா நிலைக்கே சாட்சி
மாத்திர மாதலாற் சத்
தனைவரு மெளிது சேர
வகம்விரி வுறுமுன் சாட்சி
மனநிரா குலமெவ் வாறே
மாயையே விரியு முன்னந்
தனிமையாஞ் சத்தவ் வாறு
தானிரா குலமா மன்றே. 25

(ப—ரை) மனம் இலா நிலைக்கு = மனமின்றிய நிருவிகற்ப ஸ்திதிக்கு, சாட்சி ஆதலால் = சாட்சியாயிருத்தலால், சத்துமாத்திரம் = கேவல சத்துரூப ஆன்ம வஸ்து, அனைவரும் = சகலரும், எளிது சேர = (நானிருக்கின்றேன் என்று) சுலபமாக அடையுமாறு தோற்றுகின்றது. [இங்ஙனம் தூஷ்ணீம் பூதாவஸ்தையில் நிஷ்பிரபஞ்ச சாட்சியினது பாநத்தைக் காண்பித்து இந்தத் திருஷ்டாந்த பலத்திஞல் சிருஷ்டிக்குப் பூருவமும் சத்துவஸ்து அங்ஙனம் தோற்றத்தக்கது எனக்கூறுகின்ருர்] மனம்அகம் விரிவுறுமுன் = மனத்தினின்று நானென்னும் பரிணமமுண்டாவதற்கு முன்னம், எவ்வாறு = எப்படி, சாட்சி நிராகுலமோ = சத்ரூப சாட்சி கலக்கமின்றித் தோற்றியதோ, அவ்வாறு = அப்படி, மாயை விரியுமுன்னம் = மாயையினின்றும் சகத்து வடிவ பரிணமமுண்டாவதற்கு முன்னம், (பிரளயாவஸ்தையில்) தனிமையாம்சத்து = ஒப்பற்ற சாட்சியாய உண்மை வடிவ பிரஹ்மம், நிராகுலம் ஆம் = கலக்கமின்றி விளங்குவதாம் எ—று. ஏ, ஏ, தான், அன்று, ஏ — அசைகள். ஓகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. 25

(அ—கை)

மாயையின் இலக்ஷணம் யாதெனிற் கூறுகின்ருர்.

அதத்துவ மேயாய்க் காரி
யத்தினு லறிவ தாமத்
திதப்பொருட் சத்தி மாயை
செஞ்சுடர்ச் சத்தி போலும்
மதத்தது காரி யந்தான்
வருமுன முணர்தற் காகா
நிதப்பொரு ளலவச் சத்தி
நெருப்புத் தன்சத்தி யாமோ. 26

(ப—ரை) அதத்துவமாய் = (சகத்காரணமாயுள்ள பிரம்மத்தினும் வேருக) யதார்த்த சொரூபமின்றியதும், காரியத்தினுல் அறிவது ஆம் = ஆகாசாதி காரியவடிவ இலிங்கத்தினுல் அனுமிக்கத்தக்கதுமாகிய, அத்திதப் பொருள் சத்தி = அத்தகைய சத்வஸ்துவின் (ஆகாசாதி காரியத்தையுண்டுபண்ணும்) சாமர்த்தியமே, மாயை = மாயையென்பது [வஸ்து சொரூபத்தினும் வேருகச் சத்தியிருப்பதில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்] செம்சுடர் சத்திபோலும் = சிவந்த அக்கினியினது தாக சத்தி (எப்படி அக்கினியினும் வேருய் கொப்பளம் முதலிய காரியத்தால் அனுமிக்கத்தக்கதாய் உளதோ அப்படிப்) போலவாம், [சத்தியானது காரியத்தாலனுமிக்கத்தக்கதென்பதை வெதிரேக முகத்தாற்றிடஞ் செய்கின்ருர்] மதத்தது = கொளுத்த மாயா சத்தியானது, காரியந்தான் வருமுனம் = காரியமுண்டாவதற்குப் பூருவம், உணர்தற்கு ஆகா = (ஒருவராலும் ஒரிடத்தும்) அறிதற்கு முடியாது, [இங்ஙனம் சத்தி காரியத்தாலறியப்படுவதாமென்பதைப் பிரதிபாதித்து அதத்துவமேயாமென்பதைப் பிரதிபாதனஞ் செய்கின்ருர்] அச்சத்தி = அந்தச் சத்வஸ்துவின் சத்தி, நிதப்பொருள் அல = சத்வஸ்து அன்று, (அபிப்பிராயமிதுவாம்:- சத்துவஸ்துவின் சத்தி சத்தா? அல்லது அசத்தா என்பன இரண்டு விகற்பம். அவற்றுள் முதற்பக்ஷம் பொருந்தாது. ஏனெனின் சத்தாயின் சத்தினுமபின்னமாதலால் அதனது சத்தியாகப் பொருந்துவதின்ரும்) [கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்] நெருப்பு = அக்கினியானது, தன் சத்தியாமோ = தனது சத்தி வடிவமாகுமா (ஆகாது என்றபடி) எ—று. அதத்துவமே என்பதில் உள்ள ஏகாரம் பிரிநிலை அல்லது தேற்றம் சத்தி என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. அல— ஒருமையிற் பன்மை மயக்கம். 26

(அ—கை)

இரண்டாவதான அசத்துப்பக்ஷத்திலும் மனுஷக் கோட்டுக்குச் சமானமாகத் துச்சமா அல்லது சத்தின் விலக்ஷணமாகப் பாதமாகத் தக்கதா என்னும் விகற்பத்தின் அபிப்பிராயத்தால் சித்தாந்தி வாதியை வினவுகின்றார்.

உண்மையின் வேருஞ் சத்திக்
குருவம தேது சொல்வா
யெண்மையிற் சூனியத்தி னிய
லெனிற் சூனி யந்தான்
றிண்மையின் மாயை யாலே
சேர்ந்ததென் றிசைத்தாம் முன்ன
மண்மையி னசத்துஞ் சத்து
மல்லிதன் னுருவென் றேசொல். 27

(ப—ரை) உண்மையின் வேரும்=சத்தினின்றும் விலக்ஷணமான, சத்திக்கு உருவமது ஏது=மாயாசத்திக்குச் சொரூபம் யாது, சொல்வாய்=கூறுவாய், [அதில் முதற்பக்ஷத்தையனுவதித்துத் தூஷிக்கின்றார்] எண்மையில்=கருதத்தகாத, சூனியத்தினியல் எனில்= சூனிய சொரூபம் என்று சொல்லில், சூனியந்தான்=சூனியமானது, திண்மையில் மாயையாலே=அநித்தியமாகிய மாயாசத்தியால், சேர்ந்தது என்று=கற்பிக்கப்பட்டதென்று, அண்மையில் = சமீபத்தில், முன்னம்=பூருவம், (சூனிய நாமரூப மற்றெனிற் சுகிநீநீணுளென்னுமிடத்து, இருபதாவது செய்யுளில்) இசைத்தேம்=கூறியிருக்கின்றேம், [ஆகையால் இரண்டாவதான சத்தின் விலக்ஷணமாமென்னும் பக்ஷம் பரிசேஷத்தால் சித்திக்கிறதெனக் கூறுகின்றார்] இதன் உரு=இம் மாயையின் சொரூபமானது, அசத்தும் சத்தும் அல என்றே சொல்= அசத்தின் விலக்ஷணமும் சத்தின் விலக்ஷணமும் ஆம் என்று சொல்லுவாயாக எ—று.

மாயையின் சொரூபம் சத்தாகவும் அசத்தாகவும் நிர்ணயஞ் செய்யத்தகாதது. அதாவது அநிர்வசநீயமாம் என்பது பொருள். இங்கே இது சங்கையாம். சத்திற்கு விலக்ஷணம் அசத்தாம். அதனை அசத்திற்கு விலக்ஷணமென்று சொல்லுதல் விருத்தமாம். அதுபோல

அசத்திற்கு விலக்ஷணம் சத்தாம், அதனைச் சத்திற்கு விலக்ஷணம் எனல் விருத்தமாம். ஆகையால் சத்த சத்திற்கு விலக்ஷணமென்று சொல்லுதலால் மாயைக்கு யாதொரு சொரூபமும் சித்திக்கவில்லை. அஃதின்றி ஞானத்தினால் நிவர்த்தியாகத்தக்க பிரபஞ்சம் சித்தியாது. இதனால் ஞானம் முதலியவை வியர்த்தமாம்.

இச்சங்கைக்குச் சமாதானமிதுவாம். இங்கே சத்திற்கு விலக்ஷணமென்னுஞ் சொல்லிற்குப் பொருள் அசத்தென்பது கருத்தன்று. ஆனால் மூன்று காலத்திலும் பாதிக்கத்தகாதது சத்து. அதனினும் விலக்ஷணமென்றதனால் பாதிக்கத்தக்கதென்பது சத்விலக்ஷணமென்னுஞ் சொல்லிற்குப் பொருளாம். அசத்திற்கு விலக்ஷணமென்னுஞ் சத்தத்திற்கு அர்த்தம் சத்தென்பது கருத்தன்று. ஆனால் அசத்தென்பது சொரூபமில்லாதது(சூனியமா)ம். அதற்கு விலக்ஷணமென்றதனால் சொரூபமுடையதென்பது அசத்விலக்ஷணமென்னும் சொல்லிற்குப் பொருளாம். இவ்வாறாகவே பாதயோக்கிய சொரூபமுடைய வஸ்து சதசத் விலக்ஷணமெனச் சித்தித்தது. அதனையே அநிர்வசநீயமென்றுங் கூறுவர். இவ்வாற்றால் மாயையினும் அதன் காரியமான ஆகாயம் முதலிய வியாவகாரிக வஸ்துக்களிலும் சொப்பனம் இரச்சு சர்ப்பம் முதலிய பிராதிபாஸிக வஸ்துக்களிலும் முழுவதிலும் பாதயோக்கிய சொரூபமுடையதென்பதே அநிர்வசநீயமென்னும் பதத்திற்கு அர்த்தமாம். 27

(அ—கை)

இவ்வர்த்தத்தில் சுருதிப் பிரமாணத்தைக் கூறுகின்றார்.

அசத்ததுஞ் சத்து நின்ற தன்றுமுன் றமமற் றாகும்
நிசத்தினெற் றுமையா லன்றி நிற்பது தமத்துக் கில்லை
வசைத்திற மதனாலின்மை மானவே றுண்டென் றெண்ணே
மிசைத்தசித் திரிகன் சத்திக் கிருக்கைவே றென்ன லாமோ
28

(ப—ரை) முன் = சிருஷ்டிக்குப் பூருவம், அசத்ததும் = அசத்தும், சத்தும் = சத்தும், நின்றதன்று = இருந்தனவல்ல, மற்று = பின்னையோ, தமம் ஆகும் = அஞ்ஞானமேயிருந்தது, (சிருஷ்டிக்கு முன்பு தமமேயிருந்தது "தமசால் மறைக்கப்பட்டதாய் பிரஹ்மம் இருந்தது" என்பது முதலியசுருதி பிரமாணமாமென்பது பொருள்) [அற்றேல்

"தமமிருந்தது" என்று அஞ்ஞானத்திற்கு சத்துத்தன்மை எப்படிச் சொல்லலாம் எனிற் கூறுகின்ருர்] நிசத்தின் ஒற்றுமையால் (ஆம்) = சத்துரூப ஆன்மாவின் கற்பித தாதாத்மிய வடிவ சம்பந்தத்தால் தமத்துக்குச் சத்தாகிய இருப்புக்கூடும், அன்றி = அங்ஙனமன்றி, தமத்துக்கு = அஞ்ஞானத்திற்கு, நிற்பது இலை = சொரூபமாகச் சத்துவமின்ரும், [எதனுலெனிற் கூறுகின்ருர்] வசைத்திறமதனுல் = ("சத்திருந்த தில்லை" என்னுஞ் சுருதி வாக்கியத்தால்) அதனை நிஷேதித்தலால், [சித்தித்ததைக் கூறுகின்ருர்] இன்மைமமான = (எதனுல் மாயைக்குச் சொரூபமாகச் சத்துவமின்ருே அதனுலேயே) சூனியத்திற்குச் சத்துவிதீயத்தன்மையில்லாதது போன்று, வேறு உண்டு என்று = (மாயையை) இரண்டாவது வஸ்துவாக உளதென்று, எண்ணேம் = கருதேம், (ஆதரஞ் செய்யேமென்பது பொருள்) [கற்பிதத்தை இரண்டாவது பதார்த்தமாக அங்கீகாரஞ் செய்யாமையில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்] இசைத்த = (உலகில் பிரசித்தமாக) சொல்லப்பட்ட, சித்திரிகன் சத்திக்கு = சித்திரிகனுக்கும் அவனுடைய சாமர்த்தியத்திற்கும், இருக்கை = இருப்பு, வேறு என்னல் ஆமோ = அப்புருஷனினின்றும் அன்னியமாக சொரூபமாக வேறுவேருகச் சொல்லக்கூடுமா கூடாது எ—று. 28

(அ—கை)

அற்றேல் சாமர்த்தியம் மிகுதியாயிருக்கின் பிழைப்பின் மிகுதி உலகத்தில் காணப்படுகிறது. ஆனதால் சத்திக்கும் தனிமையாக இருப்பு உளது என்னுஞ் சங்கைக்கு ஜீவிப்பின் விருத்தியில் சத்தி காரணமன்று. மற்ருே சத்தியின் காரியமாகிய யுத்தம் முதலியன ஜீவிப்பின் விருத்தியில் காரணமாமென்று சித்தாந்தி பரிகரிக்கின்ருர்.

சத்தியின் பெருக்கான் வாழ்க்கை
தழைக்குமே லதற்கு மூலஞ்
சத்தியன் ருமச் செய்கை
சமருழ வாதியாம் போற்
சத்திமாத் திரத்தெவ் வாற்றுந்
தனுவும்வேற் றெண்ண மின்ருஞ்
சத்திகா ரியமே இல்லை
சாற்றுதி பினமெவ் வாரும். 29

(ப—ரை) சத்தியின் பெருக்கால்=சாமர்த்தியத்தின் மேம்பாட்டால், வாழ்க்கை தழைக்குமேல்=பிழைப்பு மிகுதியாமெனின், அதற்கு மூலம்=அப்பிழைப்பின் மேம்பாட்டிற்குக் காரணம்,அச்சத்திஅன்ரும்= அச்சாமர்த்தியம் அன்ரும், (மற்ருே) சமர் உழவு ஆதி செய்கையாம் = அதன் காரியமாகிய யுத்தம் கிருஷி முதலிய செயல்களாம், [முற்கூறிய பொருளை தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்ருர்] அதுபோல=அது போல, (மாயாசத்தி பிரஹ்மத்திற்கு வேறன்று) [முற்கூறிய பொருளைச் சருவசத்திகளின் ஸ்தானங்களிலும் பிரதிஞ்ஞை செய்கின்ருர்] சத்தி மாத்திரத்து=கேவலம் ஆற்றலே, எவ்வாற்றும்=எந்த விதத்திஞலும், தனுவும் = சிறிதும், (ஓரிடத்தும்) வேற்றெண்ணம் = தனிமையாகக் கருதுதல். இன்ரும்=இல்லையாம், [சத்திற்கு சத்தியிஞல் சத்துவிதீயத்தன்மையின்ருகுக. அதன் காரியத்திஞல் அது அவசியம் உண்டாமென்னுஞ்சங்கைக்கு, காரியம் அப்போது (பிரளய காலத்தில்) இல்லாமையிஞல் அதஞலும் சத்துவிதீயத் தன்மையின்றெனக் கூறுகின்ருர்] சத்தி காரியமே இல்லை=(சிருஷ்டிக்குமுன்) மாயாசத்தியின் காரியம் இல்லவே இல்லை, எவ்வாறு பின்னமாம்=ஆகையால் எப்படி பேதம் சித்திக்கும், சாற்றுதி=சொல்லுவாய் எ—று. அ என்னும் சுட்டு பிரித்துக் கூட்டப்பட்டது. 29

(அ — கை)

அற்றேல் சத்துரூப பிரஹ்மத்தின் சத்தி பிரஹ்மத்தில் யாண்டுமிருக்கிறதா அல்லது ஓரிடத்தில் இருக்கிறதா? என இரண்டு விகற்பம். அவற்றுள் முதற்பக்ஷம் சரியன்று, முத்தர்களாலடையத்தக்க சுத்தப் பிரஹ்மமின்ருய் விடுமாதலின். இரண்டாவது பக்ஷமும் சரியன்று, அதன் நிரவயவத் தன்மையோடு விரோதமுண்டாமாதலின் என்னுஞ் சங்கைக்கு முதலாவது பக்ஷமங்கீகரிக்கப்படாமையிஞல் இரண்டாவது பக்ஷத்திற்குப்பின், 33-வது கவியால் பரிகாரம் சொல்லப்படுகிறது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்.

பிரஹ்மத்தோ ரிடத்தல் லாது பிறங்குரு தன்ன தெங்கும்
வருகுட சத்தி மென்மை மண்ணினி னிகழு மாபோ
லொருபத மனைத்தா மீதி ஞெளிருமுப் பதமற் றுண்டு
சுருதியோ ரிடத்து மாயை துன்னிடு மென்றுஞ் சொல்லும். 30

(ப—ரை) அன்னது = அந்த மாயை, பிரம்மத்து ஓரிடத்து அல்லாது = பிரஹ்மத்தின் ஏக தேசத்தில் இருப்பதேயன்றி, எங்கும் பிறங்குறுது = பிரஹ்ம முழுவதிலும் விளங்காது, [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] வருகுட சத்தி = காரியமாய்வரும் கடத்தினையுண்டு பண்ணுஞ் சாமர்த்தியம், மென்மை மண்ணினில் = மிருதுவான (களி மண் வடிவஏகதேச) பிருதிவியில், நிகழுமாபோல் = விளங்குவதுபோல வாம், [மாயை ஏக தேசத்திருப்பதில் பிரமாணங் கூறுகின்றார்] ஈதின் = இப்பிரஹ்மத்தினுடைய, ஒருபதம் = ஒரு பாகம், அனைத்தாம் = சகல பூதங்களாம், மற்று முப்பதம் = ஏனைய மூன்று பாதங்கள், ஒளிரும் = சுயம் பிரகாசமாய், உண்டு = உள்ளன, சுருதி = என்னுமிச் சுருதியானது, ஓரிடத்து = பிரஹ்மத்தின் ஏகதேசத்தில், மாயை துன்னிடும் = மாயாசத்தி பொருந்தியிருக்கும், என்று சொல்லும் = எனப் பிரதிபாதியா நிற்கும் எ—று. மற்று பிறிதென்னும் பொருளில் வந்தது. எங்கும், உம் — முற்றும்மை. 30

(அ—கை)

கேவலம் சுருதி மாத்திரம் பிரமாணமன்று. கீதாஸ்மிருதியும் பிரமாணமாமெனக் கூறுகின்றார்.

இவ்வுல கெல்லா மோரங் கிசத்திடை யிருத்தி நிற்கேன்
பவ்விய பார்த்த வென்றான் பகவன்மற் றவனி யெங்கு
மெவ்வியங் குலங்கள் பத்தாய் விகாரமு மின்றி நிற்பன்
றிவ்விய னெனவே யோதுந் திகழ்மறை வியாசன் வாக்கும். 31

(ப—ரை) பவ்விய பார்த்த = சத்தியம் வாய்ந்த அருச்சுனா, இவ்வுலகு எல்லாம் = இப்பிரபஞ்சமனைத்தையும், ஓர் அங்கிசத்திடை = (எனது சொரூபத்தின்) ஏக தேச அம்சத்தில், இருத்தி நிற்கேன் = வைத்திருக்கின்றேன், என்றான் பகவன் = என்று கிருஷ்ண பகவான் அருச்சுனனுக்குக் கூறியருளினார், [இப்போது மாயா ரகித பிரஹ்ம சொரூபத்தின் சற்பாவத்தில் பிரமாணமாகிய சுருதியையும் வியாச சூத்திரத்தையுங் கூறுகின்றார்] திவ்வியன் = பரிசுத்த பரமான்மா, அவனி யெங்கும் மெவ்வி = பிரபஞ்சமனைத்தையும் வியாபித்து, அங்குலங்கள் பத்தாய் = பத்து அங்குலங்கள் அதிக்கிரமித்தவனாயும், விகாரம் இன்றியும் = விகாரமில்லாதவனாயும், நிற்பன் = இருப்பான்,

எனவே=என்றிந்தப் பிரகாரம், திகழ்மறை = விளங்கா நின்ற வேத வாணியும், வியாசன் வாக்கும் = வியாச பகவானுடைய கூற்றாகிய பிரஹ்ம சூத்திரமும், ஓதும்=(முறையே) சொல்லும் எ—று.

மற்று-அசை. மேவி என்பது எதுகை நோக்கி மெவ்வி என விகாரமாயிற்று. பத்து அங்குலம் அதிகரித்திருக்கிறது என்பது உபசார வாக்காம். தாற்பரியமிதுவாம். பரமான்மா சகலப் பிரபஞ்சங் களினும் அதிகரித்து வேருய் அளவு படாதவராய் இருக்கின்ருர் என்பதாம். 31

(அ—கை)

அற்றேல் பிரஹ்மத்தின் நிரவயவத் தன்மைக்கு விரோதமாகு மென்று முன் 31ல் கூறினதற்கு, யாது பரிகாரம் என்னுஞ் சங்கைக்கு வாஸ்தவ நிரவயவத்தன்மையை அங்கீகரித்தலாலும் ஆரோபிதமாகிய ஏகதேசத்தில் மாயையை ஒப்புக்கொள்ளுதலாலும் விரோதமின்று மென்னுமபிப்பிராயத்தால் உதாகரிக்கப்பட்ட சுருதியின் அபிப்பிராயங் கூறுகின்ருர்.

நிரங்கிசத் தங்கி சத்தை
நிறுவியே யெங்கு மென்று
வரம்பயில் வேத மோதும்
வத்துவின் சத்தி மெய்யிற்
றரம்பெற வெல்லாஞ் செய்யுஞ்
சார்நிறஞ் சுவரின் கண்ணே
திரம்படப் பலவ கைத்தாம்
சித்திரஞ் செறித்த லொக்கும். 32

(ப—ரை) வரம்பயில் = மாதாவைப்போலும் கேட்பவனுக்கு மேன்மையைச் சொல்லும், வேதம்=சுருதியானது, நிரங்கிசத்து= நிரவயவப் பிரஹ்மத்தில், எங்கும் என்று = (வினவுவோனை அனுசரித்தே) எவ்விடத்திலுமெனவும், (ஓரிடத்திலெனவும்) அங்கிசத்தை நிறுவியே=அவயவத்தை ஆரோபித்தே, ஓதும்=பதில் சொல்லும், (பிரஹ்மத்தில் அவயவத்தை ஆரோபித்தது சம்பூர்ணத்திலா? அல்லது ஏகதேசத்திலா? என்று வினவும் அதிகாரிக்கு அவனது புத்தியை அனுசரித்தே சுருதியிவ்வாறு கூறிற்று என்பது பொருள்) [எதன்

பொருட்டுப் பிரஹ்மத்தில் மாயை சமர்த்தனஞ் செய்யப்பட்டதோ அதையிப்போது கூறுகின்றார்] வத்துவின் சத்தி = உண்மை வடிவப் பிரஹ்மத்தையாசிரயித்த சத்தியாகிய மாயை, மெய்யில் = உண்மை வடிவப் பிரஹ்மத்தில், தாம் பெற = நாநாப் பிரகாரமாக, எல்லாம் செய்யும் = காரியங்களனைத்தையும் உண்டாக்கும், [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] சுவரின் கண்ணே சார் நிறம் = சுவரில் பொருந்திய வர்ணமானது, திரம்பட = உறுதியாக, பலவகைத்தாம் சித்திரம் = நாநாப் பிரகாரமான சித்திரத்தை, செறித்தல் ஒக்கும் = அச்சுவரில் ஆரோபித்ததற்குச் சமானமாகும் எ—று. வர்ணம் = இரத்தம் பீதம் முதலிய நாது விசேஷங்கள். 32

(அ—கை)

அதில் முதலாவது காரிய விசேஷத்தைத் தெரிவிக்கின்றார்.

ஆதியின் விகாரம் வானு
மதனியல் வெளியே யாகும்
மாதிர முண்டென் றுண்மை
வடிவமா திரத்து மெய்து
நீதிவத் தியல்பொன் ருகு
மிருமைநீர் மையது வானு
மோதிய வெளி மெய்யில்லை
யும்பர்மெய் வெளியு நிற்கும். 33

(ப—ரை) ஆதியின் விகாரம் = முதலாவது காரியம், வானும் = ஆகாசமாம், [அதன் சொரூபத்தைக் கூறுகின்றார்] அதன் இயல் = ஆகாசத்தின் சொரூபம், வெளியே ஆகும் = அவகாசமேயாம், [ஆகாசம் பிரம்மத்தின் காரியமாமென்பதில் ஏதுவைக் கூறுகின்றார்] மாதிரம் உண்டென்று = ஆகாசமுளதென்று, உண்மை வடிவம் = சத்தின் சொரூபம், மாதிரத்தும் = ஆகாசத்திலும், எய்தும் = (அனுகூதமாகப்) பொருந்துகின்றது, [அதனுலென்னெனிற் கூறுகின்றார்] நீதிவத்து = உண்மை வஸ்து, இயல்பு ஒன்ருகும் = சத்தை வடிவ ஒரு சுபாவமுடையதாம், வான் = ஆகாசம், இருமை நீர்மையது ஆம் = இரண்டு சுபாவத்தினையுடையதாம், [கூறிய அர்த்தத்தையே விஸ்தரிக்கின்றார்] மெய் = சத்தில், ஓதிய வெளியில்லை = கூறிய அவகாசமின்றும், (மற்றேரு உண்மை வடிவமொன்றேயாம்) உம்பர் = ஆகாசத்திலோ, மெய் வெளியும் = உண்மை வடிவமும் அவகாச வடிவமும் ஆகிய இரண்டும், நிற்கும் = இருக்கின்றன எ—று. 33

(அ—கை)

சத்தில் ஒரு சுபாவமும் ஆகாசத்திலிரண்டு சுபாவமும் உண்டு என்பதை வேறு பிரகாரத்தால் பிரதிபாதிக்கின்றார்.

அன்றியும் பிரதி யோசை யம்பர குணமவ் வோசை
யின்றிமெய் யொன்றும் வான மெதிரொலி மெய்யுங் கூடும்
முன்றரு வானச் சத்தி முடித்துமெய் வானு மொன்றுப்
பின்றிகழ் தரும தன்மிப் பெற்றியுந் திரிபாச் செய்யும். 34

(ப—ரை) அன்றியும் = கூறிய பிரகாரத்தால் அல்லாமலும், பிரதி ஓசை = பிரதித் தொனி, அம்பர குணம் = ஆகாசத்தின் குணமாம், அவ்வோசையின்றி = அப்பிரதித்தொனி இல்லாமல், மெய் ஒன்றும் = சத்து ஏக வடிவமாம், வானம் = ஆகாசமானது, எதிர் ஒலி = பிரதித் தொனியும், மெய்யும் = சத்துமாகிய இரண்டு தருமத்தினையும், கூடும் = பொருந்தும், (பிரதித்தொனி சத்துவஸ்துவில் தோற்றுகிறதில்லை, ஆகாசத்திலோ சத்தும் தொனியும் தோற்றுகின்றனவானதால் சத்து ஒரு சுபாவத்தினையுடையது என்பது பொருள்) [இங்ஙனம் ஆகாசம் சத்துருபப் பிரஹ்மத்தின் காரியமாயின் "ஆகாசத்தின் சத்தையெனச் சத்தானது ஆகாசத்தின் தருமமாக எதனுல் தோற்றுகிறது" என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] முன்வான் தரு அச்சத்தி = முதலில் ஆகாசத்தை உண்டாக்கிய அந்த மாயா சத்தியானது, மெய்வானும் ஒன்று முடித்து = சத்திற்கும் ஆகாசத்திற்கும் அபேதத்தைக் கற்பித்து, பின் = அதன் பின்பு, திகழ் தரும தன்மிப் பெற்றியும் = விளங்கா நின்ற தரும தருமி பாவத்தையும், திரிபாச் செய்யும் = விபரீதமாகக்கற்பிக்கும் எ-று.

ஆனதால் ஆகாசத்தின் சத்தையெனப் பிரதீதி பொருந்தும் என்பது பொருள். 34

(அ—கை)

மாயையினுல் விபரீதத்தன்மை எப்படிச் செய்யப்பட்டதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

வானியல் மெய்யிற் றங்கும் வானிடை மெய்மை கொள்வர்
தானுல கருந்தார்க் கீகர் தமத்தினுக் குரித்த தன்றே
மேனிலை மானத் தாலே விளங்குமற் றது மோகத்தி
னுனிகழ் தருமிந் நீதி யகிலர்க்கு மடுத்த தாமே. 35

(ப—ரை) (வஸ்து தத்துவத்தின் விசாரத்தைச் செய்யின் மண்ணில் கடமிருப்பது போல) மெய்யில் = பிரஹ்மத்தில், வான் இயல் = ஆகாசத்தின் சொரூபம், தங்கும் = இருக்கும், (வாஸ்தவத்தில் பிரஹ்மம் தருமியும் ஆகாசாதி தருமமுமாமென்பது பொருள்) உலகரும் = இலௌகீகரும், தார்க்கீகரும் = நையாயிகரும், வானிடை = (அதன் விபரீதமாக) ஆகாசத்தில், மெய்மை கொள்வர் = சத்தா ஜாதியை அங்கீகரிப்பார்கள், (ஆகாசத்தைத் தருமியாகவும் சத்துரூப பிரஹ்மத்தைத் தருமமாகவும் கற்பிக்கின்றார்கள் என்பது பொருள்) [ஒரு வஸ்து மற்றொன்றாகத் தோன்றுதல் பொருந்தாதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] தமத்தினுக்கு = மாயைக்கு, அது = அவ்விபரீத தரிசனத்தின் காரணத்துவம், உரித்தன்றே = யுக்தமன்றே, [மாயைக்கு விபரீதப் பிரதீதியின் காரணத்தன்மையை இலௌகீக நியாயத்தைத்தெரிவித்தலால் ஸ்பஷ்டஞ் செய்கின்றார்] மேல்நிலை = வஸ்துவின் யதார்த்த சொரூபம், மானத்தாலே = பிரமாணத்தாலே, விளங்கும் = தோற்றும், மற்றது = அதன் வேற்று வடிவம், மோகத்தினால் நிகழ்தரும் = பிராந்தியினால் தோற்றும், இந்நீதி = இந்த நியாயம், அகிலர்க்கும் = சகலருக்கும், அடுத்தது ஆம் = சம்மதமேயாம் எ—று.

நியாயம் = திருஷ்டாந்தம். அஃது சுத்தியின் சொரூபம் பிரமாணத்தினாலும் அதனினும் வேறான இரஜதத்தின் சொரூபம் பிராந்தியினாலும் பார்க்கப்படுகின்றன என்பதாம். தார்க்கீகர் என்பதில் உம்மை வருவித்துச் சேர்க்கப்பட்டது. தான்-எ — அசை. 35

(அ—கை)

இங்ஙனம் பிராந்தியினால் விபரீதப் பிரதீதியைக் காண்பித்து அதன் நிவர்த்தியுபாயங் கூறுகின்றார்.

இன்னண முனஞ்சேர் வத்து
வெண்ணின்மா றுறுமா லவ்வா
னுன்னுக வானுஞ் சத்து
மொன்றல சத்தம் புத்தி
தன்னின் வேற்றுமையான் வாயு
வாதியிற் றழைக்குஞ் சத்தே
யென்னவம் பரந்தான் றேன்று
தெனவரும் புத்தி பேதம். 36

(ப—ரை) இன்னணம் = கூறிய இப்பிரகாரமாக, முனம் = சுருதி விசாரத்திற்குப் பூருவம், சேர்வத்து = (ஆகாசாதி வடிவமாக) விபரீதத்தையடைந்த சத்ரூபப் பிரஹ்மம், எனின் = (சுருதியின் அர்த்தத்தை) விசாரிக்குமிடத்து, மாறுஉறும் = ஆகாசாதி வடிவைப் பரித்தியாகஞ் செய்து, அதற்கு மாருன சத்ரூபப் பிரஹ்மமேயாகும், அவ்வான் உன்னுக = (சுருதியின் அர்த்தத்தை விசாரித்தலால் யதார்த்த வடிவம் சம்பவித்தலின்) அந்த ஆகாசத்தை விசாரிக்குக. [விசார சொரூபத்தைத் தெரிசிப்பிக்கின்ருர்] வானும் சத்தும் = ஆகாசமும் உண்மையும், ஒன்று அல = ஏகமல்ல, பின்னமாம், [அதில் ஏதுவைக் கூறுகின்ருர்] சத்தம் புத்திதன்னின் வேற்றுமையால் = சத்தின் பேதத்தினுலும் ஞானத்தின் பேதத்தாலும், (பின்னமாம்) (சத்த பேதமாவது ஆகாசமென்னுஞ் சத்தமும் சத்து என்னும் சத்தமும் அபரியாயமென்பது பொருள்) [ஞானபேதத்தை விஸ்தரிக்கின்ருர்] வாயுவாதியில் = வாயுமுதலியவைகளில், சத்து = உண்மையானது, தழைக்கும் = (வாயு உளது, அக்கினி உளது, நீருளது என்னும் வடிவத்தால்) தொடர்ந்திருக்கும், என்ன = எனவும், அம்பரந்தான் = ஆகாசமானது, தோன்ருது என் = அவ்வாறு தொடர்ந்து பிரதீதியாகாதெனவும், புத்தி பேதம் = ஞானத்தின் வேற்றுமை, வரும் = உண்டாம் எ—று. ஆல், ஏ—அசை. 36

(அ—கை)

இங்ஙனம் சத்திற்கும் ஆகாசத்திற்கும் பேதத்தை நன்கு சாதித்து ஆகாசத்தின் சத்தையெனப் பிராந்தியினல் தோற்றிய தருமிதரும பாவத்திற்கு விசாரத்தால் மாருதலையுணர்த்துகின்ருர்.

திகழுமெய்ப் பொருளெங் கண்ணுஞ்
செறிதலிற் றருமி யாகும்
ககனமாந் தரும மெய்யைக்
கழற்றின்வான் வடிவம் யாது
புகல்வெளி யுருவ மென்னிற்
பொய்ம்மைய தெனத்தேர் மெய்யி
னகல்வது பொய்மை யன்றே
லதுநினக் கிடையூ ருமே. 37

(ப—ரை) திகழும் மெய்ப்பொருள் = விளங்கா நிற்கும் உண்மை (சத்து) வஸ்து, எங்கணும் = (ரூபரசாதிகளிலனுவிருத்தமான திரவியம்போன்று ஆகாசம் வாயு முதலிய) எல்லாவிடங்களிலும், செறிதலின் = பொருந்தியிருத்தலின், தருமியாகும் = §தருமி என்று சொல்லப்படும், ககனம் தருமம் ஆம் = (இரசாதிகளினின்றும் வேறான ரூபம் போன்று, வாயு வாதிகளினின்றும் வேறான) ஆகாசம் தருமம் என்று சொல்லப்படும், [அற்றேல் கடத்தினும் வேறான உருவம் வாஸ்தவமாயிருப்பது போலச் சத்தினும் வேறான ஆகாசமும் வாஸ்தவமாகுமேயென்னுஞ் சங்கைக்குச் சத்தினும் வேறான ஆகாசத்தை நிரூபிக்கக் கூடாமையின் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்] மெய்யை கழற்றின் = (புத்தியினால்) சத்தை ஆகாசத்தினின்றும் வேறாக்கின், வான்வடிவம் = ஆகாசத்தின் சொரூபம், யாது = எத்தன்மையது, புகல் = சொல்லுவாயாக, (சொரூப சூனியமாமென்பது பொருள்) [துர்நிரூபணம் அசித்தமாமென வினவுகின்றான்] வெளிஉருவம் என்னில் = (சத்தினின்றும் வேறாக்கிய அவ்வாகாயம்) அவகாச சொரூபமாமென்று கூறின், [அற்றேல் சத்தின் விலக்ஷணமாவதால் அசத்தேயாம் எனப் பரிகரிக்கின்றார்] அது = அந்த அவகாச சொரூபம், பொய்மை என = அசத்தியமாமென்று, தேர் = சிந்திப்பாயாக, [சத்தினும் வேறானதற்கு அசத்துவமில்லையென்னும் வாதிக்குத் தோஷங் கூறுகின்றார்] மெய்யின்

§ எந்த வஸ்து அதிக தேசத்திலுள்ளதோ அது வியாபகமாம். அதுவே ஆதாரமென்னும் தருமியாம். உருவம் இரசம் முதலிய குணங்களுக்கு ஆசிரயமான திரவியம், உருவம் முதலிய குணத்தினும் அதிகதேசத்திருத்தலால் வியாபகமாம். ஆகையால் தருமியாம். அதுபோல ஆகாயமிருக்கின்றது, வாயு இருக்கின்றது, தேயு இருக்கின்றது என்பதாக ஒவ்வொரு பூதத்திலுமிருக்கும் அவ்வியபிசாரியாகிய சத்தாகிய பிரமம் வியாபகமாயிருக்கின்றது. ஆகையால் தருமியாம்.

எந்த வஸ்து அற்ப தேசத்திலிருக்கின்றதோ அது வியாப்பியமாம். அதுவே ஆதேயம். அதாவது அன்னிய மகத்வஸ்துவின் ஆசிரத, மென்னும் தருமமாம். எங்ஙனம் உருவம் முதலிய குணம் அற்ப தேசத்தில் ஒன்றற்கொன்றும் தன்க்காசிரயமான திரவியத்தினோடும் வியபிசாரியாயிருத்தலால் வியாப்பிய (ஆதேய)மாம். ஆகையால் தருமமாம். அதுபோலூ அற்ப தேசத்திலுள்ள வாயு முதலியவற்றிற்கும் சத்திற்கும் வியபிசாரியாகிய ஆகாயம் வியாப்பியமாம். ஆகையால் தருமமாம்.

அகல்வது = சத்தினும் வேருயிருப்பது, பொய்மை அன்றேல் = அசத் தன்றெனின், அது = அங்ஙனம் சொல்லுதல், நினக்கு = உனக்கு, (உன்னுடைய வார்த்தைக்கு) இடையூறு ஆம் = வியாகாத தோஷம் உண்டாகும் எ—று. ஏ—அசை. 37

(அ—கை)

ஆகாயம் அசத்தாயின் தோற்றலாகாதென்னுஞ் சங்கைக்குத் துச்சவிலக்ஷண அநிர்வசநீயமாவதால் தோற்றத்திற்கு விரோத மின்ருமெனக் கூறுகின்ருர்.

இலகுமே லிலக மாயைக் கிழையதா மின்மை தோன்றல்
புலம்று கனவின்வேழ மாதிபோற் பொய்மை யாமாற்
குலவலின் வியத்தி சாதி குணங்குணி தேகந் தேகி
நிலவவான் மெய்யும் வேரு நிற்குமற் புதமிங் கென்னே. 38

(ப—ரை) இலகுமேல் இலக = ஆ கா ச ம் விளங்குமாயின் விளங்குக, இன்மை தோன்றல் = அசத்துப் பிரதீதியாதல், மாயைக்கு = அவித்தைக்கு, இழையதாம் = ஆபரணமாம், [அவிரோதத்தைத் தெரி விப்பதற்காக மித்தியா வஸ்துவின் இலக்கணம் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்ருர்] இன்மை தோன்றல் = அசத்தாயிருந்து பிரதீதியாதல், புலம் அறு கனவின் = விஷயமின்றிய சொப்பனவஸ்தையில், வேழம் ஆதிபோல் = தோற்றும் யானை முதலியன போல, பொய்மையாம் = மித்தையாம், (எந்த வஸ்து சொரூபமாக இல்லாதிருந்து தோற்றுகின் றதோ அது சொப்பன கஜம் போல மித்தையாமென்பது பொருள்) [நியமமாகச் சேர்ந்து தோற்றுகிற பதார்த்தங்களுக்குப் பேதங்காணப் படவில்லையே என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] † சாதி வியத்தி =

† அநேக தருமங்களில் அனுசூதமாயுள்ள தருமம் ஜாதியாம். அதற் கும் அதன் ஆசிரயமாகிய வியத்திக்கும் தருமதருமி பாவமிருத்தலால் பேதமுண்டு. தேகியாகிய ஆன்மாவிற்கும் தேகத்திற்கும் சத்தியம் முதலிய வடிவத்தாலும் மித்தியாத்துவம் முதலிய வடிவத்தாலும் பேத முண்டு. குணத்திற்கும் திரவியத்திற்கும் குணத்தன்மை குணித் தன்மைகளால் பேதமுண்டு. சித்தாந்தத்தில் வாஸ்தவமாக அதிஷ் டானத்திற்கு வேருகச் சத்தையில்லாமையால் சகல வஸ்துக்களுக்கும் அதிஷ்டானப் பிரம்மத்தோடு அபேதமேயிருக்கின்றது. ஆனலும் வியவகாரத்தின் பொருட்டு கற்பிதபேதம் ஒப்பப்பட்டிருக்கின்றது.

(நியமமாகச்சேர்ந்து தோற்றுகிற) கடத்தன்மைச் சாதியும் கடவியத்தியும், குணம்குணி = நீலாதி குணமும் அவற்றினையுடைய கடாதிகுணியும், தேகம் தேகி = தூல தேகமும் அதனையுடைய சீவனாகிய தேகியும், குலவலின் = (பேதமாக) விளங்குதல் போன்று, வான்மெய்யும் = (சேர்ந்து தோற்றும்) ஆகாசமும் சத்தும், வேறு நிலவ நிற்கும் = பின்னமாக விளங்க இருக்கும், இங்கு = இவ்விஷயத்தில், அற்புதமென்னே = ஆச்சரியம் என்னை, (ஆச்சரியம் ஒன்றுமில்லையென்றபடி) எ—று

ஆல், ஏ—அசைகள். குலவலின், இன் ஒப்புப்பொருளில் வந்த ஐந்தனுருபு. 38

(அ—கை)

பேதமறியப்படுகின்றதாயினும் நிச்சயிக்கப்படுகிறதில்லையென வினவுகின்றான்.

தெரியினும் பேத நெஞ்சிற்
றேற்றம்வந் திலதென் பாயேற்
றிரிபினா லையத் தானோ
தேற்றமின் மையது நீசொல்
தரிசம நிலைதி யானத்
தான்முன தேல் விசாரம்
புரிதிமற் றெனின்மா னத்தோ
டுகத்தால் பொருந்துந் தேற்றம். 39

(ப—ரை) பேதம் தெரியினும் = (சத்திற்கும் ஆகாசத்திற்கும் உள்ள) வேற்றுமை தோன்றுமாயினும், நெஞ்சில் = சித்தத்தில், தேற்றம் வந்திலது = (அதன்) நிச்சயம் வரவில்லை, என்பாயேல் = என்று சொல்லுவையாயின், [வினாவிற்கு விடையளிப்பதற்காக நிச்சயமின்மையில் காரணத்தைச் சித்தாந்தி வினவுகின்றார்] தேற்றம் இன்மையது = நிச்சயமில்லாதது, திரிபினான் (ஓ) = ஏகாக்கிரமின்மையினாலா, ஐயத்தானோ = சம்சயத்தினாலா?, நீ சொல் = நீ சொல்வாய், [முதற்பக்ஷத்தில் பரிகாரங்கூறுகின்றார்] முனதேல் = முதற்பக்ஷமாயின் (அதாவது) (ஏகாக்கிரமின்மையினால் நிச்சயமுண்டாகவில்லையெனின்) தியானத்தால் = விஜாதீய விருத்தியின்றிய சஜாதீயவிருத்திப் பிரவாகரூப தியானத்தினால், சமநிலைதரி = சமமான ஸ்திதியைத் தரிப்பாய்

(சாவதான மனதுள்ளவனுயாவாய் என்பது பொருள்). [இரண்டாவது பக்ஷத்தில் பரிகாரங் கூறுகின்ருர்] மற்றெனின் = மற்றைய இரண்டாவது பக்ஷமெனின் அதாவது சமுசயத்தினுல் நிச்சயமுண்டாகவில்லை யெனின், மானத்தோடு ஊகத்தால் = பிரமாணத்தினுலும் யுக்தியினுலும், விசாரம்புரிதி = விவேசனத்தைச் செய்வாய், [அதனுல் என்னை யெனிற் கூறுகின்ருர்] தேற்றம் பொருந்தும் = (சத்து ஆகாயங்களின்) பேத நிச்சயம் உண்டாகும் எ—று. 39

(அ—கை)

அதனுல் என்னையெனிற் கூறுகின்ருர் .

சித்திர மெய்யின் பேதந் தியானமா திகளாற் றேறிற்
சித்திர மநிசம் பொய்மை செம்பொரு ளதுபோ லாகா
சித்திரம் பொருளன் ருகித் திகழ்ந்திடு மறிந்தோ னுக்குச்
சித்திர மிலதா யென்றுஞ் செம்பொரு டிகழுந் தானே. 40

(ப—ரை) தியானமாதிகளால் = தியான முதலியவைகளால், (அதாவது தியானம் பிரமாணம் யுத்தியென்னுமிவைகளால்) சித்திர மெய்யின் பேதம் = ஆகாசத்திற்கும் சத்திற்குமுள்ள பேதம்,தேறின் = திடப்படின், சித்திரம் = ஆகாசம், அநிசம் = எப்போதும், பொய்மை = மித்தையாகவே தோற்றும், செம்பொருள் = சத்வஸ்து, அதுபோல் = அவ்வாகாசம் போன்று, ஆகா = பொய்மையாகாது, [ஆகாசத்தையும் சத்தையும் விவேசனஞ் செய்வதில் பயனைக் கூறுகின்ருர்] அறிந்தோனுக்கு = (அங்ஙன் அவற்றின் வேற்றுமையை) உணர்ந்த புருஷனுக்கு, சித்திரம் = ஆகாசம், பொருள் அன்ருகி = நிஸ்தத்துவமாய், திகழ்ந்திடும் = விளங்கும், செம்பொருள் = சத்துருப வஸ்து, சித்திரம் இலதாய் = ஆகாசமின்றியதாய், என்றும் = எப்போதும், திகழும் = விளங்கும் எ—று. தான்-ஏ-அசைகள். ஆகாது என்பது து வ் வீ று குறைந்து ஆகா என நின்றது.

தியானம் = விஜாதீய விருத்தியின் வியவதானமின்றிய சஜாதீய விருத்தியின் பிரவாகம், பிரமாணம் 36-வது செய்யுளிற் கூறிய வானும் சத்துமொன்றல சத்தம் புத்திதன்னின் வேற்றுமையான் என்பது முதலியனவாம். உத்தி, 37-வது செய்யுளிற் கூறிய திகழு மெய்ப்பொருளெங்கண்ணுஞ் செறிதலிற்றருமியாகும் என்பது. 40

(அ—கை)

ஆகாசத்தின் மித்தியாத்தன்மையையும் சத்தினது வஸ்துத் தன்மையையும் எப்போதுஞ் சிந்திக்கும் புருஷனுக்கு என்ன உண்டாகின்றதெனிற் கூறுகின்றார்.

அனையவா தனைவ ளர்ந்தா லறிஞன்வா னிசமென் பானைத்
தனிநிச போத மில்லான் றனையுங்கண் டதிசயிப் பன்
இனையவான் மித்தை சத்தே யிருப்பதென் றறிந்தா லிவ்வா
றனிலமே முதல வற்றி னழிவிலாப் பொருளைத் தேர்வாய். 41

(ப—ரை) அனைய வாதனை = ஆகாசம் மித்தை, சத்து வாஸ்தவமென்னும் அச்சம்ஸ்காரமானது, வளர்ந்தால் = அதிகரிக்குமாயின், அறிஞன் = ஆகாச சத்துக்களின் தத்துவத்தையறிந்தவனாகிய ஞானி, வான் நிசம் என்பானை = ஆகாசம் சத்தியமென்று சொல்லுபவனையும், தனிநிச போதம் இல்லான்றனையும் = கேவல சத்தின் ஞானமில்லாதவனையும், கண்டு = பார்த்து, அதிசயிப்பன் = ஆச்சரியத்தையடைவன். [கூறிய நியாயத்தை வேறிடத்தும் (வாயு முதலியவற்றிலும்) அதிதேசஞ் செய்கின்றார்] இவ்வாறு = இங்ஙனம், வான்மித்தை = ஆகாசம் பொய்யாம், சத்தேயிருப்பது = சத்துரூப வஸ்துவே சத்தியமாம், என்று அறிந்தால் = என்று உணர்ந்திடின், இனைய = இத்தன்மைய, அனிலமே முதலவற்றின் = வாயு முதலியவைகளினின்றும், அழிவிலாப் பொருளை = நாசமின்றிய சத்துரூப வஸ்துவை, தேர்வாய் = விசாரிப்பாய் (வேறு பிரித்தறிவாயென்பது பொருள்) எ—று. 41

(அ—கை)

அற்றேல் ஆகாசத்தின் காரியமான வாயுவுக்குக் காரணமல்லாத சத்துவஸ்துவோடு தாதான்மியப்பிரதீதி பொருந்தாமையின் சத்தை விவேசனம் பண்ணுதல் உபயோகமின்றாம் என்னுஞ்சங்கைக்கு வாயுவிற்குச் சத்தோடு சாக்ஷாத் சம்பந்தமில்லாவிடினும் பரம்பரையாகச் சம்பந்தமுளதெனக் கூறுகின்றார்.

அழிவிலாப் பொருண்மேன் மாயை யதினிடை வான மவ்வா
னுழிமருத் தேக தேசக் கற்பித மாய்நின் றெல்குங்
கழிதரு பரிசம் வேகங் கதியிவை தரும மாங்காற்
றிழிவின்மெய் மாயை வான மிவற்றின்மூ வியல்பு மேவும். 42

(ப—ரை) அழிவிலாப் பொருள்மேல்=விநாசமின்றிய சத்து வஸ்துவில், மாயை = (ஏகதேசத்தில்) மாயையிருக்கின்றது, அதனிடை=அம்மாயையில், வானம் = (ஏகதேசத்தில்) ஆகாசம் கற்பிதமாம், அவ்வானுழி=அவ்வாகாசத்தில், மருத்து=வாயுவானது, ஏகதேசக்கற்பிதமாய்=ஏகதேசத்தில் கற்பிக்கப்பட்டதாய், நின்று ஒல்கும்=இருந்து துவளும், [இங்ஙனம் சத்திற்கும் வாயுவிற்கும் ஆகாச வாயிலாய் சம்பந்தத்தைக் காண்பித்து அவ்விரண்டற்கும் தருமத்தால் பேதத்தையறிதற்பொருட்டு வாயுவில் தோற்றுகிற தருமங்களைக் கூறுகின்றார்] பரிசம்=பரிசமும், கழிதருவேகம்=மிகுந்த வேகமும், கதி=செல்லுதலும், உலர்த்துதலும், இவை=ஆகிய இவைகள், தருமம் ஆம்=வாயுவின் சுபாவங்களாம், [இங்ஙனம் அசாதாரண தருமங்களைக்கூறிக் காரணத்தினால் உண்டான தருமங்களைக்கூறுகின்றார்] காற்று=வாயுவானது, இழிவு இல்மெய் = விநாசமின்றிய சத்தும், மாயை=மாயையும், வானம்=ஆகாசமும், இவற்றின்=ஆகிய இவைகளின், மூஇயல்பு=மூன்று தருமங்களையும், மேவும்=பொருந்தியிருக்கும் எ—று. உலர்த்தல் ஈங்கு வருவிக்கப்பட்டது.

ஆகாயம் மாயாவுபகிதசேதனத்தில் கற்பிதமாயிருத்தலால் அது வேறு கற்பிதத்திற்கு அதிஷ்டானமாதல் பொருந்தாது. ஆகையால் இங்கே ஆகாய உபகிதசேதனத்தில் வாயு கற்பிதமாமென்பது அபிப்பிராயமாம். இப்படியே எல்லாவிடத்தும் அறிந்துகொள்க. 42

(அ—கை)

அத்தருமங்கள் யாவையெனிற் கூறுகின்றார்.

மருத்துள தெனல்சற் பாவ மருத்திடைச் சத்தை நீக்கிற்
பொருட்படா மையது மாயை புகுமொலி வியோம நீர்மை
யிருக்குஞ்சத் தெங்கும் வான மியைவுரு தென்றிங் கிவ்வா
றெருப்படு மென்றீ ரிச்சொல் லொவ்வாமை யெவ்வா
[றன்றாம். 43

(ப—ரை) மருத்து உளது=வாயு இருக்கின்றது, (என்பதில், (உளது) எனல்=இருக்கின்றது என்பது, சற்பாவம்=சத்துவஸ்துவினுடைய தருமம் ஆம், மருத்திடை=வாயுவினின்று, சத்தை நீக்கில்= (அந்த) உண்மையைப் பிரிக்கின், பொருட்படாமையது=நிஸ்தத்துவரூபத்வம் (அதாவது உண்மையாகாமையாகிய மித்தியாத் தன்மை),

மாயை புகும் = மாயையை அடையும். அதாவது மாயையின் தருமமாம், ஒலி = (வாயுவில் 'சீர் சீர்' என்னும்) சப்தம், வியோம நீர்மை = ஆகாசத்தின் குணமாம், [அற்றேல் சத்தினின்றும் ஆகாயத்தை வேறு பிரிக்கும் பிரசங்கத்தில் வாயுவாதிகளிலுண்மை தொடர்ந்துளது. ஆகாயமன்று என்பது பேத புத்தியாம் என்று கூறிய 37-வது செய்யுளில், வாயுவாதிகளில் ஆகாசத்தினனுவிருத்தி நிவர்த்திக்கப்பட்டிருக்கின்றது. இப்போது வாயுவில் ஆகாசத்தினனுவிருத்தி உம்மாற்சொல்லப்படுகின்றது. ஆகையால் முன்னுக்குப்பின் விரோதமாமென வாதி வினவுகின்றான்] சத்து எங்கும் இருக்கும் = உண்மை வாயுமுதலிய எல்லாவிடங்களிலும் தொடர்ந்திருக்கும், வானம் = ஆகாசம், இயைவுருது = எங்குந் தொடர்ந்திராது, என்று = என (37-வது செய்யுளில்) கூறி, இங்கு = இவ்விடத்து, அவ்வாறொருப்படுமென்றீர் = அவ்வாகாசம் வாயுவாதிகளிலும் தொடர்ந்திருக்குமென்று சொன்னீர், இச்சொல் = இவ்வார்த்தை, ஒவ்வாமை = பொருந்தாமை, எவ்வாறு அன்றும் = எப்படி அல்லதாகும், (பொருந்தாமையேயாம் என்றபடி) எ—று. 43

(அ—கை)

முன் 37-வது செய்யுளில் ஆகாசத்தின் அவகாசவடிவ சொரூபத்தினது விருத்தி நிஷேதிக்கப்பட்டது இப்போது சத்தவடிவ தருமத்தின் அனுவிருத்தியே கூறப்படுகின்றது. அவகாச வடிவ சொரூபத்தின் அனுவிருத்தியன்று. ஆதலால் வியாகாதமன்றுமெனப் பரிகரிக்கின்றார்.

சித்திர முனமெங் கண்ணுஞ் செறிவுரு தென்றே மிங்குச்
சத்தமே செறியு மென்று சாற்றினே முரணெங் கேயோ
வத்துவைப் பிரிக்கிற் பொய்யேல் வாயுவவ் வியத்த மாயைக்
கொத்துருமையினற் றன்றுமென்பதேனெவ்வா தென்னின். 44

(ப—ரை) முனம் = பூருவம், (36-வது செய்யுளில்) சித்திரம் = அவகாசவடிவ ஆகாசம், எங்கண்ணும் = (வாயு முதலிய) எவ்விடங்களிலும், செறிவுஉருது = தொடர்ந்திராது, என்றேம் = என்றுகூறினேம், இங்கு = இவ்விடத்தில், சத்தமே செறியும் என்று = சப்தவடிவ தருமமே தொடர்ந்திருக்குமென்று, சாற்றினேம் = கூறினேம், முரண் எங்கே = (இதனால் முன்பின்உள்ளவசனங்களுக்கு) விரோதம் எங்கிருக்கின்றது, (முரணில்லையென்றபடி) [அற்றேல் வாயுவுக்கு சத்துரூபப் பிரஹ்மத்

தின் விலக்ஷணத்தன்மையுண்மையால் அசத்துவ வடிவ மாயாமயத் தன்மை கூறப்படுமேல் அவ்வியத்தவடிவ மாயையின் விலக்ஷணத்தன் மையிருத்தலால் வாயுவிற்கு அமாயாமயத்தன்மை ஏன்கூடாது என வினவுகின்றார்] வத்துவைப்பிரிக்கில் = உண்மையை (வாயுவினின்றும்) வேறுசெய்யின், பொய்யேல் = வாயுமித்தையாகுமேல், வாயு = காற்ருனது, அவ்வியத்தமாயைக்கு ஒத்துஉருமையின் = அவ்வியாகிருதவடிவ மாயையினும் வைலக்ஷண்ணியமாயிருத்தலின், அற்றுஅன்ரும் என்பது = பொய்மையன்ருமென்றல், ஏன்ஒவ்வாது = ஏன் பொருந்தாது, என்னின் = என்றுசங்கிக்கின் எ—று. 44

(அ—கை)

அவ்வியத்தத்தன்மை மாயாமயத் தன்மையில் காரணமன்ரும். மற்ரே நிஸ்தத்துவமாம். (வாஸ்தவசொரூபமில்லாமையாம்.) அது மாயையிலிருப்பதுபோல வாயுவாதிகளிலுமிருக்கின்றதாதலின் மாயா மயத் தன்மைக்குக்கேடின்ருமெனப் பரிகரிக்கின்ருர்.

மாயத்வ வேதிங் குண்மை வடிவின்மை யதுசத்திக் கண்
ணுயகா ரியத்து மொக்கு மவியத்தம் வியத்த மாகும்
மேயசத் தசத்தின் றேர்ச்சி வேண்டுமிங் கதுவே செய்வாய்
நீயசத் திடையார் பேத நினைவொழி யதினிங் கென்னே. 45

(ப—ரை) இங்கு = இங்கே (வாயுவில்), மாயத்வ ஏது = மாயாமயத் தன்மைக்குக் காரணம், உண்மைவடிவு இன்மை = நிஸ்தத்துவ ரூபத் துவமேயாம், அதாவது வாஸ்தவ சொரூபமின்மையேயாம், அது = அவ் வுண்மை வடிவின்மை, அவ்வியத்தம் வியத்தமாகும் = முறையே அவ் வியத்தமும் வியத்தமுமாகிய பேதமுடைய, சத்திக்கண் ஆயகாரியத் தும் = மாயையினிடத்தும் அதனுலுண்டாகிய காரியத்தினிடத்தும், ஒக்கும் = சமமாம், [மாயை அதன் காரியமாகிய இரண்டிலும் உண்மை வடிவின்மை சமமாயின் வியத்தத்தன்மை அவ்வியத்தத்தன்மை வடிவ பேதம் எதனுல் என்னுஞ்சங்கைக்கு அதன் விசாரம் பிரகிருதத்தில் உபயோகமின்ருமெனப் பரிகரிக்கின்ருர்] மேய = (எடுத்துக்கொண்டதற்குப்) பொருந்த, சத்து அசத்தின் = உண்மை இன்மைகளின், தேர்ச்சிவேண்டும் = விசாரம் செய்யவேண்டும், (ஆதலின்) இங்கு = இவ்விடத்து, அதுவே நீ செய்வாய் = அவ்விசாரத்தையே நீ செய்வாயாக, அசத்திடை ஆர் = (மாயை அதன் காரியவடிவ) அசத்து வஸ்துக்

களிடையே பொருந்திய, பேத நினைவு ஒழி = (வியத்த அவ்வியத்த வடிவ அவாந்தர) பேதத்தின் நினைப்பை விட்டுவிடுவாய், இங்கு= இவ்விடத்து, அதின் என்னே = அவ்விசாரத்தால் என்ன பிரயோஜனம் எ—று.

மாயைத்வ என்பது எதுகை நோக்கி மாயத்வ எனத் திரிந்தது. 45

(அ—கை)

சித்தித்ததைக் கூறுகின்றார்.

நிலைமைதான் பிரமஞ் சிட்டம்
நிழலிவான் போல மித்தை
யலைவற விதனை நீணா
ளநுட்டித்து மருத்தை நீப்பாய்
யுலவையிற் றாழ்வாம் வன்னி
தனையுமிப் பரிசே யோர்வாய்
தலைமைதாழ் விவற்றின் றேர்ச்சி
தாம்பிர மாண்டத் துள்ளே. 46

(ப—ரை) நிலைமைதான் = (வாயுவில்) சத்தம்ஸம், பிரமம் = பிரஹ்மமாம், சிட்டம் = (நிஸ்தத்துவம் முதலிய) மிஞ்சிய அம்சமாகிய, நிழலி = வாயு, வான்போலமித்தை = (நிஸ்தத்துவமாதலானே) ஆகாயம் போன்று பொய்யாம், அலைவு அற = சலனமில்லாமல், இதனை = இவ்விசாரத்தை, நீள்நாள் அனுட்டித்து = நெடுங்காலம் அப்பியாசஞ் செய்து, மருத்தை நீப்பாய் = வாயுவை விடுவாய் (அதாவது வாயு சத்தியமென்னும் புத்தியைவிடுவாய்), [வாயுவிற்சொல்லிய விசாரத்தை அக்கினியிலுமதிதேசஞ் செய்கின்றார்] உலவையின் = வாயுவைப் பார்க்கிலும், தாழ்வாம் வன்னிதனையும் = (பத்துப் பங்கு) குறைந்திருக்கும் அக்கினியையும், இப்பரிசே ஓர்வாய் = வாயுவிற் சொல்லிய பிரகாரம் சிந்திப்பாய், [அழிவிலாப் பொருண்மேன்மாயை என்பது முதலிய வாக்கியங்களால் ஆகாசாதிகளுக்கு ஏற்றக்குறைவுகள் இயம்பப்பட்டன. அவை உலகில் ஓரிடத்துங் காணப்படுதலில்லையேயென்னுஞ் சங்கைக்கு உத்தரங்கூறுகின்றார்] தலைமை தாழ்வு இவற்றின்றேர்ச்சி = உயர்வு தாழ்வாகிய இவைகளின் விசாரம், பிரமாண்டத்துள்ளே = பிரமாண்டத்தில் (அதாவது அதன் ஆவரணங்களில்) செய்யப்படுகின்றது, ஆதலால் பிரத்தியக்ஷமன்றென்பது பொருள் எ—று.

தாம் — அசை. பிரமாண்டத்தின் ஆவரணங்களாவன பஞ்ச பூதங்கள் மகதத்துவம் அவ்வியத்தம் என்பனவாம். 46

(அ—கை)

வாயுவைப் பார்க்கிலும் எத்தனை மடங்கு வன்னி குறைந்துளது எனிற் கூறுகின்றார்.

ஊதையிற் பதின்பங் கஃகு
மொளிமருத் தூடு தோற்றும்
பூதபஞ் சகத்தின் றார
தம்மியம் புராணங் கூறுஞ்
சோதியுட் டணந்தீ மேனி
சொலு மூலகுணமுஞ் சாரு
மோதஃ துண்மை யின்மை
யோசையூ றுடைய தாமே. 47

(ப—ரை) ஒளி = வன்னியானது, ஊதையின் = வாயுவினும், பதின் பங்கு = பத்து அம்சங்கள், அஃகும் = குறைந்திருக்கும், [வன்னியில் வாஸ்தவத்தன்மைச் சங்கையை நிவர்த்திக்கின்றார்] மருத்தூடு = வாயுவில் (அதாவது வாயு உபகித சைதன்னியத்தில்), தோற்றும் = (வன்னியானது கற்பிதமாகப்) பிரதீதியாம், [இத்தாரதம்மியம் உமது கபோல கற்பிதமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] பூத பஞ்சகத்தின் தாரதம்மியம் = ஆகாசாதி ஐந்து பூதங்களுடைய உயர்வு தாழ்வுகளை, புராணங்கூறும் = புராணங்கள் எடுத்துச் சொல்லா நிற்கும், [வன்னியின் சொரூபத்தைக்கூறுகின்றார்] சோதி உட்டணம் = பிரகாசமும் வெம்மையுமே, தீமேனி = வன்னியின்சொரூபமாம், [ஈண்டும் வாயுவினிடத்திற் போலக் காரண தருமங்கள் தொடர்ந்துள்ளன எனக் கூறுகின்றார்] சொலும் மூலகுணமும் = சொல்லிய காரண குணங்களும், சாரும் = (வன்னியிலும் அனுகதமாகப்) பொருந்தியிருக்கும், [அத்தருமங்கள் யாவையென ஆகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றார்] ஓது அஃது = சொல்லிய அவ்வன்னியானது, உண்மை = சத்தின் இயல்பாகிய இருப்பு, இன்மை = மாயையின் நிஸ்தத்துவம், ஓசை = ஆகாசத்தின் சத்தம், ஊறு = வாயுவின் பரிசம், உடையதாம் = ஆகிய இவைகளை உடையதாம் எ—று. ஏ—அசை. 47

(அ—கை)

இவ்வாறு அக்கினியில் காரண தருமங்களின் அனுவிருத்தியை அனுவாதஞ் செய்தல் பூர்வகமாக அதனது சொந்தத் தருமத்தைத் தெரிவிக்கின்றார்.

சத்தொடு மாயை வான்கா
றம்முறுப் புறுதீ ரூபம்
அத்தின்மெய் யதின்மற் றெல்லா
மறிவினாற் பிரித்தி மெய்யை
இத்திறம் வேறாக் கித்தீ
யிலதென வழுந்திற் றெண்ணீர்
பத்திலொன் றருகி வந்த
பண்பினைச் சிந்தை செய்வாய். 48

(ப—ரை) சத்தொடு மாயை வான் கால் தம் = சத்தும் மாயையும் ஆகாசமும் வாயுவும் ஆகிய இக்காரணங்களின், உறுப்பு உறுதீ = அம்ஸங்க(தருமங்க)ளாகிய இருக்கை மித்தியாத்துவம் சப்தம் பரிஸங்களையடைந்துள்ள வன்னியினது சொந்த குணம், ரூபம் = உருவம், அத்தில் = அவற்றில், மெய்யதின் மற்றெல்லாம் = சத்தினும் அன்னியமான தர்ம சமூகங்களனைத்தையும், அறிவினாற் பிரித்தி = மித்தையென்னும் புத்தியினால் வேறாக்குவாய், [இங்ஙனம்வன்னியில் மித்தியாத் தன்மையின் நிச்சயத்தின் பின் ஜலத்தில் மித்தியாத் தன்மையைச் சிந்திக்க வேண்டுமென்று சொல்லுகிறார்] இத்திறம் = கூறிய இப்பிரகாரம், மெய்யை வேறாக்கி = வன்னியினின்றுமுண்மையை வேறுபடுத்தி, தீ இலது என அழுந்தின் = அக்கினி மித்தையாமெனத் திட நிச்சயமுண்டாயின், தெள்நீர் = தெளிந்த ஜலம், ஒன்றுபத்தில் = அக்கினியிலும் ஒரு பத்து மடங்கான முறையில், அருகிவந்த = குறைந்து அக்கினி உபகித சேதனத்தில் (கற்பிதமாக) உண்டான, பண்பினை = இயல்பினை, சிந்தை செய்வாய் = சிந்திப்பாயாக எ—று. அத்தின் பன்மையின் ஒருமை மயக்கம். 48

(அ—கை)

நீரிலும் காரண தருமங்களையும் அதனது சொந்த தருமத்தையும் வேறு பிரித்து உணர்த்துகின்றார்.

நீரிடை யுண்மை யின்மை
நிகழொலி யூறு ரூப
நேருவ விதர தன்ம
நிசகுண மிரத மாகுஞ்
சாரிருப் பதைப்பி ரிக்கிற்
றண்மித்தை யெனவ ழுந்திற்
பாரதிற் பதின்பங் கெஞ்சி
வந்தபண் பினைச்சிந் திப்பாய். 49

(ப—ரை) நீரிடை=ஜலத்தில், நேருவ=பொருந்தியிருப்பன வாய, உண்மை=சத்தும், இன்மை=நிஸ்தத்துவமும், நிகழ் ஒலி= விளங்கா நின்ற சப்தமும், ஊறு=பரிசமும், ரூபம்=உருவமும்(ஆகிய இவைகள்), இதர தன்மம்=(சொந்தத்தினும்) வேறான காரண தருமங் களாம், இரதம்=இரசமானது,நிசகுணமாகும்=தனது சுய தருமமாம், [விவேகத்தாலும் தியானத்தாலும் ஜலத்தின் மித்தியாத் தன்மையை நிச்சயஞ் செய்து, பின்னர் பூமியின் மித்தியாத் தன்மையைச் சிந்திக்க வேண்டுமென்று கூறுகின்றார்] சார் இருப்பைப் பிரிக்கின் = நீரிற் பொருந்திய சத்தையை வேறு பிரிக்கின், தண் மித்தை யென அழுந்தின்=நீர் பொய்யாமெனத்திட நிச்சயமுண்டாயின், அதில்= அந்த நீரில், பதின்பங்கு எஞ்சிவந்த=பத்து மடங்கு குறைந்து (ஜல உபகிதசேதனத்தில் கற்பிதமாக) உண்டான, பார்பண்பினை=பூமியி னது இயல்பினை, சிந்திப்பாய்=சிந்தனை செய்வாயாக எ—று.

இருப்பதை என்பதில் அது என்பது பகுதிப்பொருள் விகுதி.49

(அ—கை)

பூமியின் மித்தியாத் தன்மையின் சிந்தனத்தின் பொருட்டு அதன் தருமங்களையும் வேறு பிரிக்கின்றார்.

பூமியி னுண்மை யின்மை புகுமொலி பரிசத் தோடு
தாமுரு விரத மூல தருமமா நிசகுணந் தா
னேமுறு கந்த மாகு மிவற்றின்மெய் யினைப்ப குப்பா
யாமத்தைப் பகுக்கின் மித்தை யாய்மிஞ்சும் பூமி தானே. 50

(ப—ரை) பூமியின் = பிருதிவியில், (உள்ள) உண்மை = சத்தும், இன்மை = நிஸ்தத்துவமும், புகுமொலி = பிரவேசியா நின்ற சப்தமும், பரிசத்தோடு உரு = பரிசமும் உருவமும், இரதம் = இரசமும், மூல தருமமாம் = காரண தருமங்களாம், ஏமம் உறு கந்தம் = இனிமை பொருந்திய நாற்றம், நிசகுணம் ஆகும் = தனது சுயதருமமாகும், [அவைகளினின்றும் சத்தாமாத்திரத்தை வேருக்கவேண்டுமென்று சொல்லுகிருர்] இவற்றின் = இத்தருமங்களினின்றும், மெய்யினைப் பகுப்பாய் = உண்மையை வேறு பிரிப்பாய், [சத்தையை வேறு பிரிப்பதில் பயனைக் கூறுகின்ருர்] அதைப் பகுக்கின் = (பிருதிவியினின்றும்) மெய்யைப் பிரிக்கின், பூமி மித்தையாய் மிஞ்சும் = பிருதிவி பொய்யாக அவசேஷிக்கும் எ—று. தாம்-தான்-ஆம்-ஏ—அசைகள். ஏமம் என்பது கடைக்குறையாய் நின்று புணர்ந்தது. 50

(அ — கை)

இப்போது பௌதிகமான பிரமாண்டாதிகளினின்றும் சத்தையை வேருக்கும் பொருட்டு அது இருக்கும் விதத்தைக் காண்பிக்கின்ருர்.

அவனியிற் பதின்பங் கெஞ்சி
யாங்குறும் பிரமாண் டத்திற்
புவனமீ ரேழு மீங்கே
பொருந்துறு முயிர்க டேக
மிவைகளின் மெய்யை நீக்கி
லிலங்கும்பொய் யாய்மற் றெல்லாம்
அவைகளீங் கிலங்கி னுந்தா
மானிவந் துறுவ தென்னே. 51

(ப—ரை) பிரமாண்டம் = பிரமாண்டமானது, அவனியின் = பிருதிவியைப் பார்க்கிலும், பதின்பங்கு எஞ்சி = பத்து மடங்கு குறைந்து, ஆங்கு = அவ்விடத்து (அதாவது பிருதிவியின் மத்தியில்), உறும் = பொருந்தியிருக்கும், [பிரமாண்டத்தினுள்ளிருக்கும் பதார்த்தங்களைக் கூறுகின்ருர்] அத்தில் = அப்பிரமாண்டத்தின் மத்தியில், புவனம் ஈரேழும் உறும் = பதினுன்கு உலகங்களும் பொருந்தியிருக்கும், ஈங்கு = இப்பதினுன்கு உலகங்களில், உயிர்கள் தேகம் = பிராணிகளின் தேகங்கள், பொருந்துறும் = (யோக்கியப்படி) பொருந்தியிருக்கின்றன,

[அவைகளின் சத்தையைப் பிரிப்பதின் பயனைக் கூறுகின்றார்] இவைகளில் = இப்பிரமாண்டாதிகளில், மெய்யை நீக்கில் = (அநுகதமாயுள்ள) உண்மையை வேறு பிரிக்கின், மற்றெல்லாம் = ஏனைப் பிரமாண்டாதிகளனைத்தும், பொய்யாய் இலங்கும் = மித்தையாகத் தோன்றும், அவைகள் = பிரமாண்டாதிகள், ஈங்கு இலங்கினும் = இந்த அத்வைதப் பிரஹ்மத்தில் (சுத்தியில் இரஜதம் போலத்) தோற்றினும், ஆனி வந்து உறுவது என்னே = பிரஹ்மத்தில் என்ன குறைவு வந்து பொருந்தும், ஒன்றுமில்லையென்றபடி ஏ—று. ஏ—அசை.

உலகங்கள் பதினன்காவன, கீழே அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் என்னும் ஏழும், மேலே பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜனலோகம், தபோலோகம், சத்திய (பிரஹ்ம) லோகம் என்னும் ஏழும் ஆம். 51

(அ—கை)

இலங்கினும் ஆனி வந்து உறுவது என்னே என்றதையே வெளிப்படுத்துகின்றார்.

பூதபவு திகமே மாயை
 பொய்மையென் றுள்ளந் தேறி
னேதந்தீர் பொருளொன் றேயா
 மெனுமதி மாறு தென்றும்
பேதமாம் பூமியாதி பிரியின்
 மெய் யொருமை யின்மு
னேதந்தப் பொருட்கன் மந்தா
 னுலகினவ் வாறே தோற்றும். 52

(ப—ரை) பூத பவுதிகம் மாயை = ஆகாசாதி பூதங்களும், பிரமாண்டாதி பவுதிகங்களும், அவற்றின் காரணமான மாயையும், பொய்மை என்று = மித்தையாமென்று, உள்ளம் தேறின் = (விவேகத்தாலும் தியானத்தாலும்) சித்தமானது திட நிச்சயமுடையதாயின், ஏதம் தீர் பொருள் = தோஷமின்றிய சத்துவஸ்து, ஒன்றே ஆம் எனும் மதி = அத்துவிதமேயாமென்னும் புத்தி, என்றும் மாறுது = எப்போதும் கெடாது, [பூமி முதலியவை அசத்தாமேல் வித்துவானுக்கு வியவகாரம்

உண்டாகலாகாது என்னுஞ் சங்கைக்கு விவேகத்தால் மித்தியாத் தன்மை நிச்சயமுளதாயினும் பூமி முதலியவற்றின் வியாவகாரிக சொருபத்திற்கு நாசமின்மையின் ஞானியின் வியவகாரம் லோபமாகிற தில்லையெனக் கூறுகின்ருர்] மெய் ஒருமையின்= சத்துருப அத்துவிதத் தினின்றும், பேதமாம் பூமியாதிபிரியின்= துவிதமாகிய பூமி முதலிய வை வேறுபடின், ஓது அந்தப் பொருட்கன்மம் = சொல்லாநின்ற அந்தந்தப் பதார்த்தத்தின் வியவகாரம், உலகின்= உலகத்தில், முன் அவ்வாறே= முந்திய (அஞ்ஞான தசையில் எப்படிக் காணப்பட்டதோ) அப்படியே, தோற்றும்= உண்டாகும் எ—று. ஏ-தான்—அசை. முன்—பிரித்துக் கூட்டப்பட்டது. 25

(அ—கை)

சத்தத்துவம் அத்துவிதமாமேல் சாங்கியன் முதலோரால் சொல்லப்படுகிற பேதத்தை ஏன் நிராகரிப்பதில்லை யென்னுஞ் சங்கைக்கு வியாவகாரிக பேதம் நம்மாலும் அங்கீகரிக்கப்படுவதால் அதனை நிராகரிக்கும் பொருட்டுப் பிரயத்தனம் செய்வதில்லையெனக் கூறுகின்ருர்.

சாங்கியன் முதலா னோர்கள் சகப்பேதம் பலவூ கத்தா
லீங்குறைத் திடுவ ரவ்வா றேற்குமற் றவர்க ளையம்
நீங்கமெய் யொருமை யோரா நெறியினப் பேதங் காணே
நாங்களா தலினெ மக்கு நண்ணுறு மானி யென்னே. 53

(ப—ரை) சாங்கியன் முதலானோர்கள் = காபிலன் கணாதன் முதலியவர்கள், பல ஊகத்தால்= நாநாவித யுக்திகளால், ஈங்கு = இப்பிரஹ்மத்தில், சகப்பேதம் உரைத்திடுவர்= உலகின் வேற்றுமையைக் கூறுவார்கள், அவ்வாறு ஏற்கும்= அவ்விதம் தகும், (அதாவது) வியவகார தசையில், வியாவகாரிக பேதம் தகும், [பிரமாணத்தால் சித்தித்த சத்திய பேதத்தை முன் ஆகாயமாதிய விவேசனப் பிரசங்கத்திற் கூறிய மித்தியா புத்தியினல் திரஸ்கரித்தல் தகுதியன்ரும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்]ஐயம் நீங்க= சமுசயம் நீங்க,மெய் ஒருமை= சுருதி சித்தமான சத்துருப அத்துவிதத்தை, மற்றவர்கள்= அன்னிய வாதிகள், ஓராநெறியின் = அறியாது (அநாதரஞ் செய்யும்) விதம் போல, நாங்கள் அப்பேதங் காணேம்= யாங்கள் அவர்களது சுருதி விரோதமான அந்தப்பேதத்தை,உண்மை யெனயறியேம், ஆதலின் =

ஆனதால், எமக்கு=எங்களுக்கு, நண்ணுறும்=பொருந்தும், ஆனி என்னே=கெடுதியாதுளது, ஒருகெடுதியுமில்லை என்றபடி எ—று.

சாங்கியர்களால் சங்கையின்றிச்சுருதியாற் சித்தித்த அத்துவிதம் அவமதிக்கப்படுகிறது,சுருதி யுத்தி அனுபவங்களையாசிரயித்து நாங்கள் அவர்களது துவிதத்தை அநாதரஞ் செய்தலில் எங்கட்கு ஹானி யாதுண்டாம், ஒன்றுமின்று என்பது பொருள். சங்கை=பயம். 53

(அ—கை)

துவிதத்தை திரஸ்கரித்தல் நிஷ்பிரயோஜனமாமென்னுஞ் சங்கைக்கு ஜீவன் முத்தி வடிவ பிரயோஜனமிருத்தலால் அங்ஙன மன்றெனக் கூறுகின்றார்.

துவிதசிந் தனைமாய்ந் தாலத் துவிதசிந் தனைதான் றேறும்
புவியிலத் திதிவ லுத்த புருடனே ஜீவன் முத்தன்
நவிலிலித் திதியைப் பார்த்த அண்டிநீ மோகந் தீர்தி
தவிர்தரு பொழுது மன்னித் தற்பதந் தனைச் சார்வாயே. 54

(ப—ரை) துவிதசிந்தனை மாய்ந்தால்=துவைத சங்கற்பங்கள் நாசமாயின், அத்துவித சிந்தனை தேறும்=அத்துவிதப் பிரமத்தில் புத்தி திடப்படும், புவியில்=உலகில், அத்திதி வலுத்த புருடனே= அத்துவிதப் பிரஹ்மத்தில் அத்திடமான திதியையுடைய புருஷனே, ஜீவன் முத்தன்=ஜீவன் முத்தனென்று சொல்லப்படுவன் [கேவலம் ஜீவன் முத்தியே பிரயோஜனமன்று: மற்றோ விதேக முத்தியுமாம் என்னுமபிப்பிராயத்தால் ஸ்ரீ கிருஷ்ணபகவானது வாக்கியத்தை உதா கரிக்கின்றார்] பார்த்த=ஹே அர்ச்சுனா, நவிலில்=மேலும் சொல்லப் புகில், இத்திதியை=இந்த அத்துவிதப் பிரஹ்மநிஷ்டையினை, நீ அண்டி=நீ சேர்ந்து, மோகந்தீர்தி = பிராந்திநீங்கி முத்தனுவாய், தவிர்தரு பொழுதும்=அந்திய காலத்திலும், மன்னி=பிரமத்தில் திதி யடைந்து, தற்பதந்தனைச் சார்வாய்=பிரமபதத்தையடைவாய் எ—று. தான்–ஏ—அசைகள்.

பிரஹ்ம நிஷ்டையினை அடைந்து எப்புருஷனும் மோகத்தை அடைவதேயில்லை. அந்திய அவஸ்தையின்கண்ணே இந்த ஸ்திதி யிலிருந்த போதிலும் இப்புருஷன் பிரஹ்ம நிர்வாணத்தை அடைவன் ஆதலின். 54

(அ — கை)

அந்திய கால சத்தத்தால் வர்த்தமான தேகத்தின் வீ ழ் ச் சி சொல்லப்படுகிறதென்னுஞ் சந்தேகத்தை நிவர்த்திப்பதற்காக அந்திய கால பதத்திற்குச் சொல்லக் கருதிய அர்த்தத்தைக் கூறுகின்றார்.

ஒன்றெனு மெய்மை பொய்மை யுறுந்தமி னொருமை ஞானம்
பொன்றுறு பொழுதப் பேத புந்தியே யாமற் றன்று
மன்றியப் பொழுது சீவ னகல்வதும் பிரசித் தந்தா
னின்றவப் பொழுது மோக நீக்குமேற் பிறப்ப தின்றே. 55

(ப — ரை) ஒன்றெனும் மெய்மை = ஏக அத்துவிதமாகிய சத்தி லும், பொய்மை = துவிதமாகிய மித்தையிலும், தமின் உறும் ஒருமை ஞானம் = பரஸ்பரத்தில் பொருந்தா நின்ற தாதான்மிய விஷயகப் பிராந்தி ஞானத்தின், பொன்றுறு பொழுது = அந்திய (முடிவு) கால மாவது, அப்பேத புந்தியேயாம் = (அத்துவிதத் துவிதங்களைச் சத்திய ரூபத்தாலும் மித்தியா ரூபத்தாலும் விளக்கும்) பேத ஞானமேயாம், மற்றன்றும் = வர்த்தமான தேகத்தின் வீழ்ச்சியன்றும் [இப்போது உலகப் பிரசித்தமான அர்த்தத்தைக் கொள்ளினும் தோஷமின்றும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்] அன்றி = அல்லது, அப்பொ ழுது = அந்த அந்திய காலமாவது, சீவன் அகல்வதும் = பிராணவியோ கமும், அதாவது தூல தேகத்தினின்றும் பிராணப் பிரதானமாகிய இலிங்கதேகத்தின் நீக்கமும், பிரசித்தந்தான் = உலகப் பிரசித்தமே யாம், நின்ற அப்பொழுது = உண்டாயிருக்கின்ற அம்மரண காலத்தில், நீக்குமோகம் = முன் நீக்கப்பட்ட பிராந்தியானது, மேல் பிறப்பது இன்று = மீண்டும் உண்டாதலில்லையாம் எ — று. 55

(அ — கை)

கூறிய அர்த்தத்தினையே விஸ்தரிக்கின்றார்.

நோயில னுய்நின் றேனு நோயினுற் சுழன்று மூர்ச்சை
யாயெனும் பிராணன் விட்டு மவன்மய லுருனெவ் வாற்றுந்
தோய்வுறுங் கல்வி நாளுஞ் சொப்பன துயிலிற் போயு
மாய்வுரு மறுதி வாவிவ் வகையறி வழிவு ருதே. 56

(ப—ரை) அவன்=அச்சீவன் முத்தனானவன், நோய் இலனாய் நின்றேனும்=வியாதியில்லாதவனாயிருந்துகொண்டாவது,நோயினால் சுழன்றும்=வியாதியினால் பிருதிவியில் புரளுகின்றவனாயாவது, மூர்ச்சையாயெனும்=துக்க மிகுதியால் மூர்ச்சையையடைந்தவனாயாவது, பிராணன் விட்டும்=பிராணனைப் பரித்தியாகித்தாலும், எவ்வாற்றும் மயலுறான்=எந்தவிதத்தும் பிராந்தியையடையான் [பிராணவியோக காலத்தில் மூர்ச்சை முதலியவற்றால் ஞான நாசமாகுங்கால் அவசியம் பிராந்தியுண்டாமென்னுஞ் சங்கைக்கு அக்காலத்தில் ஞான நாசமின்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] தோய்வுறுங்கல்வி=அப்பியாசிக்கப்பட்ட வித்தையானது, நாளும்=ஒவ்வொரு தினமும், சொப்பன துயிலில்=சொப்பனாவஸ்தையிலும் சுழுத்தியவஸ்தையிலும்,போயும்=விஸ்மிருதமாயினும் (மறக்கப்படினும்), மறுதிவா = மறுதினத்தில், மாய்வுறா=விநாசமாகாது, படிக்கப்படாததாக ஆகிறதில்லையென்பது பொருள், இவ்வகை=இவ்விதம், (அதாவது இத்திருஷ்டாந்தத்திற் போல) அறிவு=ஆன்ம ஞானமானது, அழிவுறாது=(மரண காலத்திலும் தத்துவாநு சந்தானமில்லாத காலத்திலும்) விநாசமாகாது, சமஸ்கார வடிவமாயிருக்குமென்பது பொருள் எ—று.ஏ—அசை.

மூர்ச்சையாயெனும்; யேனும் என்பது ஓசை குறித்து எனும் எனக் குறுகி நின்றது.

இங்கே இது இரகசியமாம். நான் பிரஹ்மமாயிருக்கிறேன் என்னும் திட நிச்சயமாகிய அபரோக்ஷப் பிரஹ்ம நிஷ்டை ஒருக்ஷணத்திலுதயமாய் இரண்டாவது க்ஷணத்தில் நிலைபெற்று அவித்தையையும் அதன் காரியத்தையும் பாதிக்கத் தொடங்குகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தியாகிய பாதத்தைச் செய்கின்றது. அதே க்ஷணத்தில் தேற்றாம் பொடியைப்போல விருத்தி ஞானத்திற்கும் மித்தியாத்துவ நிச்சயம் அல்லது மூன்று காலத்தினுமில்லையென்னும் நிச்சயமாகிய பாதமுண்டாகின்றது. இதனாற்றான் ஞானி ஜீவன் முத்தனாவான். மறுபடியும் ஞானிக்கு ஜீவன் முத்தியின் விலக்ஷணாநந்தத்தின் இச்சையிருக்குமாயின் பிரஹ்மாகார விருத்தியின் ஆவிருத்தியைச் செய்க, ஆனால் "தத்துவமசி" முதலிய சுருதிப்பிரமாணத்தால் ஒருமுறை நாசமாகிய அவித்தை மறுபடியுமுண்டாகாதாகையால் அவித்தை நீங்கும் பொருட்டு ஞானிக்கு மறுபடியும் பிரஹ்மாகார விருத்தியினது ஆவிருத்தியாகிய

அநுசந்தானத்தின் பிரயோஜனமில்லை. மறுபடியும் அநுசந்தானத்தில் வித்துவானைப் பிரேரிக்கும் பிரமாணவடிவ விதியுமில்லை. மரண காலத்தில் ஒரு க்ஷணம் அல்லது ஒரு கடிகை அல்லது அதிக காலம் வரையிலும் மூர்ச்சையுமுண்டாம். அம்மூர்ச்சையில் பிரஹ்மாகார விருத்தியின் அப்பியாசமும் சம்பவியாது. ஆவரண ஏது, விக்ஷேப ஏதுவென்னும் சக்திகளையுடைய அவித்தையிலுள்ள ஆவரண ஏதுவாகிய சக்திக்கு ஞான சமகாலத்திலேயே நாசமும் பாதமுமாகிய இரண்டுமுண்டாகின்றன. விக்ஷேப ஏதுவாகிய சக்திக்குக் காரியப் பிரபஞ்சத்தோடு ஞான சமகாலத்தில் பாதமுண்டாகின்றது. ஆனால் பிராரப்த பலத்தால் அது நாசமாகிறதில்லை. போகத்தால் பிராரப்தம் முடியுங் காலத்து விக்ஷேப ஏது சத்தியாகிய அஞ்ஞானலேசமும் நாசமாகின்றது. ஆனால் அது அவித்தையாயிருத்தலால் வித்தையின்றி நாசம் உண்டாகாதாதலால் அது நசிக்கும் பொருட்டுப் பிரஹ்ம நிஷ்டையாகிய வித்தையும் வேண்டியதாமென்றாலும் மூர்ச்சைக்காலத்தில் சம்ஸ்காரவடிவமாக வித்தை நிலைத்திருத்தலால் அந்த வித்தையாகிய விருத்தியில் ஆரூட சேதனத்தினால் அவ்வவித்தையின் லேசமும் பிரபஞ்சமும் அதன் ஞானமும் அத்தியந்தம் நாசமாகின்றன. அதே சமயத்தில் கட்டையிலுள்ள அக்கினியால் வேறு கட்டை செத்தைகளோடு அந்தக் கட்டை எரிதல் போல அந்த வித்தையின் சம்ஸ்காரமும் தன்னோடு (சம்ஸ்காரத்தோடு) கூடிய சேதனத்தினாலேயே நாசமாகின்றது. ஆகையால் ஞானமுண்டாகிய பின் ஞானிக்குக் கர்த்தவ்யம் இல்லை. விதேக மோக்ஷம் வரையிலும் அநுசந்தானமிருந்தாலும் இல்லாவிடினும் ஞானமில்லை என்பதில்லை. அனால் விசேஷ ரூபமாக வேனும் அல்லது சாமான்னிய ரூபமாகவேனும் அல்லது சம்ஸ்கார ரூபமாகவேனும் ஞானம் நிலைத்திருக்குமாகையால் 54-வது செய்யுளில் கூறிய அந்திய காலத்திலும் பிரஹ்ம நிஷ்டையின் நிலை சம்பவித்தலால் ஜீவன் முத்தனாகிய ஞானி விதேக முக்தியையடைவன் என்னும் அர்த்தமும் சித்தமாயிற்று. 56

(அ—கை)

ஞானத்தின் நாசமின்மையையே யுத்தியாற் பிரதிபாதிக்கின்றார்.

மானத்தால் வந்த ஞான
மானமேம் பாட்டா லன்றி
யீனமா காவே தாந்தத்
தேற்றமா மான மின்று
மானதால் வேதாந் தத்தா
மத்தொய்தப் பொருள்மாய் வாகா
தூனகா லத்தும் பூத
விவேகத்தா லுறுநன் முத்தி. 57

(ப—ரை) மானத்தால் வந்த ஞானம் = தத்துவமசியாதி பிரமாணங்களால் சனித்த ஞானம், மானமேம்பாட்டாலன்றி = (அதிலும்) பிரபல பிரமாணத்தால் நசிக்குமேயல்லாமல், ஈனமாகா = (வேறு எவ்விதத்தாலும்) விநாசமாகாது, வேதாந்தத்து = வேதத்தின் முடிவாகிய உபநிஷத்தைப் பார்க்கிலும், ஏற்றமாம் மானம் இன்றும் = உயர்வாகிய பிரமாணமில்லையாம் [உபபாதனஞ் செய்த அருத்தத்தை யுபசம்மாரஞ் செய்கின்றார்] ஆனதால் = இக்காரணத்தினால், வேதாந்தத்து ஆம் அத்தொய்தப் பொருள் = வேதாந்தத்தால் சித்தித்த அத்துவிதப் பிரமம், ஊன காலத்தும் = அந்திய காலத்தும், மாய்வு ஆகாது = பாதிக்கப்படாது, பூத விவேகத்தால் = ஆகவே பஞ்ச பூதங்களின் விசாரத்தால், நன்முத்தி உறும் = சுகவடிவ மோக்ஷமானது அடையப்படும் எ—று.

ஈனமாகாது என்பது துவ்வீறு குறைந்து ஈனமாகா என நின்றது.

இரண்டாவது பஞ்சபூத விவேகம் முற்றிற்று.

ஆகக் கவி 114.

உ

ஓம் தத் சத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## மூன்ருவது பிரகரணம்.

## பஞ்சகோச விவேகம்.

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ய முனீஸ்வரர்களை நமஸ்கரித்துப் பஞ்சகோச விவேகத்திற்குச் சுருக்கமாக வியாக்கியானஞ் செய்கின்றேன்.

(அ—கை)

தைத்திரீய உபநிஷத்தின் தாற்பரிய வியாக்கியான வடிவ பஞ்சகோச விவேகமென்னும் மூன்ருவது பிரகரணத்தை ஆரம்பித்து ஆசாரியராகிய வித்தியாரண்ய சுவாமிகள் அதில் சுரோதாவுக்குப் பிரவிருத்தியுண்டாதற் பொருட்டு இந்தக் கிரந்தத்தின் பிரயோஜனத்தையும் விஷயத்தையும் சூசிப்பிக்கின்றவராய் முகத்திஞல் தாம் செய்ய விரும்பிய கிரந்தத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்ருர்.

குகையிலுறும் பிரமமதைக் கோசமைந்தின்
விவேகத்தாற் குறிக்க லாமித்
தகைமையிஞ லைங்கோசந் தனைப்பிரித்துத்
தெரிக்கின்றேஞ் சரீரந் தன்னி
ஞகமருவும் பிராணனதற் ககமாகு
மனமனதுக் ககமாங் கத்தன்
புகலதற்குட் புசிப்பாஞ மொன்றற்கொன்
றிதுகுகையாப் புகல லாமே. 1

(ப—ரை) குகையில் உறும் பிரமமதை=(எவன் பஞ்சகோசக் குகையிலிருக்கும் பிரஹ்மத்தையறிவனே என்னுஞ் சுருதியால்) பஞ்ச கோசக் குகையில் இருப்பதாகச் சொல்லப்பட்ட பிரஹ்மத்தை, கோசம் ஐந்தின் விவேகத்தால்=(குகையென்னும் சப்தத்திற்கு வாச்சியார்த்த மாகிய அன்னமயாதி)பஞ்சகோசங்களின் விசாரத்தால்,குறிக்கலாம்= அறியலாம், இத்தகைமையினுல் = இத்தகைய காரணத்தினுல், ஐங் கோசந்தனைப் பிரித்து=பஞ்சகோசங்களை ஆன்மாவினின்றும் வேறு பிரித்து, தெரிக்கின்றேம்=காட்டுகின்றேம்,[எக்குகையிலிருக்கும் பிரஹ் மம் பஞ்சகோச விவேகத்தால் அறியப்படுகிறதோ அக்குகையாவது யாது என்னுஞ் சங்கைக்குச் சுருதியினுல் குகை சப்தத்தால் விவக்ஷித்த அர்த்தத்தைக் கூறுகின்றுர்] சரீரந்தன்னின்=அன்னமயமான தூல தேகத்தைப் பார்க்கிலும், பிராணன் அகமருவும்=பிராணமயன் ஆந்தர மாகப் பொருந்தியிருக்கும், அதற்கு=அப்பிராணமயனுக்கும், மனம் அகம் ஆகும் = மனேமயம் ஆந்தரமாயிருக்கும்,. மனதுக்கு கத்தன் அகமாம்=மனேமயனுக்கும் கர்த்தாவடிவ விஞ்ஞான மயன் ஆந்தர மாம், புகலதற்குள்=சொல்லிய அவ்விஞ்ஞான மயனுக்குள்ளே, புசிப் பான் ஆம்=ஆனந்தமயன் உள்ளாவன், ஒன்றற்கொன்று இது= ஒன்றினுக்கொன்று ஆந்தரமாயிருக்குமிப்பரம்பரை, குகையாப் புகல லாம் = (ஆன்மாவை மறைக்கும்) குகையாகச் சொல்லப்படுவதாம் எ—று. ஏ—அசை. 1

(அ—கை)

இப்போது அன்னமய கோசத்தின் சொரூபத்தையும் அதன் அநான்மத் தன்மையையும் அறிவிக்கின்றுர்.

தந்தைநுக ரன்னத்தாம் வீரியத்திற்
சனித்தன்னத் தாலே நீடு
மிந்தவுடம் பன்னமய மீதான்மா
வலமுன்பின் னின்மை யாலே
முந்தையுறு பவத்தின்ரு மாதலினிப்
பவமெங்ஙன் முயன்று நேடும்
பிந்தைவரு பவத்தின்ரு மாதலினிங்
கீட்டுகன்மம் பேறற் றேகும். 2

(ப—ரை) தந்தை நுகர் அன்னத்து ஆம் வீரியத்தின்= மாதா பிதாக்கள் புசித்த (யவை விரீஹி முதலிய) அன்னத்தினுல் உண்டாகிய சுக்கில சுரோணிதத்தினுல், சனித்து=உற்பத்தியாகி, அன்னத்தாலே நீடும்=(உற்பத்தியனந்தரம்) பால் முதலிய அன்னத் தாலேயே விருத்தியாகும், இந்தஉடம்பு=இந்தத்தூல சரீரமே,அன்ன மயம்=அன்னத்தின் விகார வடிவ அன்னமய கோசமாம், ஈது=இந்த அன்னமயம், ஆன்மா அல=ஆன்மா அன்று, [எதனுலெனிற் கூறு கின்ருர்] முன்பின் இன்மையால்=உற்பத்திக்கு முன்னும் மரணத்திற் குப் பின்னும் இல்லாதபடியால், (ஈண்டு இஃது அனுமானமாம்) தேகம் ஆன்மாவன்று, காரியமாதலால், கடம்போல என்பது,[முற்கூறப்பட்ட காரியமாதலால் என்னும் ஏது இருக்குக, ஆத்மாவன்று என்னும் சாத்தியம் இராதொழிக என்னும் விபக்ஷத்தில் பாதக தருக்கமின்மை யின் இவ்வேது அப்பிரயோஜகமாம் என்னுஞ் சங்கைக்குச் செய்யாததி னடைவும் செய்ததின் விநாசமும் ஆகிய பாதக தருக்கமிருத்தலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்ருர்] முந்தை உறு பவத்து=பூருவம் அடைந்த சன்மத்தில், இன்ரும் ஆதலின்=இந்தத் தேகவடிவ ஆன்மா இல்லாதபடியால், இப்பவம் = இந்த ஜன்மத்தை, எங்ஙன் முயன்று நேடும்=எப்படி முயற்சித்துச் சம்பாதிக்கும், (இந்தச் சன்மத் திற்குக் காரணமான அதிர்ஷ்டமில்லாமலே இச்சன்மத்தையங்கீகரிக் கிறபடியால் அகிருதாப்பியாகமமாம், அதாவது செய்யாதது வருதல் என்னும் தோஷமுண்டாம்) பிந்தை வருபவத்து = மரணத்தின்பின் உண்டாகும் ஜன்மத்தில், இன்ரும் ஆதலின்=இந்தத் தேகவடிவ ஆன்மா இல்லாதபடியால், இங்கு ஈட்டு கன்மம்=இந்தச் சன்மத்தில் சம்பாதித்த புண்ணிய பாபங்கள், பேறு அற்று ஏகும்=(பலனை அனுப விக்கும் ஆன்மா இல்லாதபடியால்) பலனின்றியே விநாசமாகும், இது கிருத நாசமாம். அதாவது செய்தது நசித்தல் என்னும் தோஷ மாம். இங்ஙனம் கிருதநாச அகிருதாப்பியாகம வடிவ பாதக தருக்க மிருத்தலால் ஆன்மாவிற்குக் காரியத்தன்மையங்கீகரிக்கத் தக்கதன் றென்பது பொருள் எ—று. ஏ—அசை.

கிருதம்=செய்யப்பட்டது, நாசம்=அழிவு, அகிருதம்=செய்யப் படாதது, அப்பியாகமம்=அடைவு, அப்பிரயோஜகம்=அனுகூலதர்க்க மின்றியது.

(அ — கை)

இங்ஙனம் அன்னமயகோசத்தின் அநான்மத் தன்மையை அறிவித்து இப்போது பிராணமயகோசத்தின் சொரூபத்தையும் அதன் அநான்மத் தன்மையையுந் தெரிவிக்கின்றார்.

யாதுடலிற் பூரணமாய்ப் பெலந்தந்திந்
தியங்களைத்தா மியக்கா நிற்கு
மூதையது பிராணமய மிதுவான்மா
வன்றாகு முணரா வாற்றா
லேதுடலி லகந்தையுறுங் கிரகாதி
தனின்மமதை யிசையு மிந்த
வோதுமனோ மயமான்மா வன்றாகுங்
காமாதி யுறுத லாலே. 3

(ப—ரை) யாது ஊதை=யாதொரு வாயுவானது, உடலில் பூரணமாய்=தேகத்தில் (பாதமுதல் மத்தக பரியந்தம்) வியாபித்ததாய், பெலம் தந்து=(வியான ரூபத்தால் தேகத்திற்கு) சாமர்த்தியத்தைக் கொடுத்து, இந்தியங்களை இயக்கா நிற்கும்=சட்சு முதலிய இந்திரியங் களைப் பிரேரணை செய்கின்றதோ, அது=அந்த வாயு, பிராண மயம்= பிராணமயகோசமென்று சொல்லப்படுகின்றது, இது=இந்தப் பிராண மயம், ஆன்மா அன்றாகும்=ஆன்மா அல்லாததாம், [அதில் ஏதுவைக் கூறுகின்றார்] உணராவாற்றால்=ஒன்றையும் அறியாதபடியால் (சேத னத்தன்மையின்மையால் என்றபடி) (பிராணன் ஆன்மாவன்று. சட மாதலால், கடம்போல என்பது கருத்து) [இப்போது மனோமயகோசத் தின் சொரூபத்தைத் தெரிவித்தல் வாயிலாக அதன் அநான்மத்தன் மையைக் கூறுகின்றார்] ஏது=யாது, உடலில் அகந்தையுறும்=தேகத் தில் நானென்னுமபிமானத்தைச் செய்யுமோ, கிரகாதிதனில் மமதை யிசையும் = வீடு முதலியவற்றில் எனதென்னும் அபிமானத்தைச் செய்யுமோ, மனோமயம் ஓதும்=(அது) மனோமயகோசமென்று சொல் லப்படும், இந்த(மனோமயம்)=இந்த மனோமயகோசமானது, ஆன்மா அன்றாகும் = ஆன்மா அல்லாததாம் [எதனாலெனிற்கூறுகின்றார்] காமாதி உறுதலால்=காமக்குரோதம் முதலிய விருத்திகளையுடையதாந் தன்மையால் அநியத சுபாவமாயிருத்தலின் (மனோமயம் ஆன்மா அன்று, விகாரியாதலால், தேகம்போல என்பது கருத்து) எ—று. தாம்-ஏ—அசைகள். 3

(அ—கை)

இப்போது கருத்தா என்னும் சத்தத்தின் வாச்சிய வடிவ விஞ் ஞானமயனது சொரூபத்தையுணர்த்துகின்றவராய் அதன் அனுன்மத் தன்மையையுணர்த்துகின்ருர்.

மன்றசுழுத் தியிலடங்கி நனவினக
சிகைகாறு மன்னு நிற்கு
மொன்றறிவின் சாயைபெறு மதியதுவிஞ்
ஞானமய முணர்வா காவாந்
துன்றுமந்த ரிந்திரியங் கருத்தகர
ணத்தியல்பாற் றுன்னும் பேத
நன்றறிவு மனமதுவுந் தனித்தனியே
யகம்புறமாய் நணுகு மன்றே. 4

(ப—ரை) சுழுத்தியில் அடங்கி = சுழுத்தியவஸ்தையில் விலீனமாகி, நனவில் நகசிகைகாறும் மன்னு நிற்கும் = சாக்கிராவஸ்தை யில் நகநுனி முதல் சிரசுபரியந்தம் (தூல சரீரத்தில்) வியாபித்திருக் கின்றதும், ஒன்று அறிவின் சாயை பெறும் = அத்துவிதீய ஆன்மா வின் பிரதிபிம்பத்தை அடைந்துள்ளதுமாகிய, மதி = புத்தி, விஞ்ஞான மயம் = விஞ்ஞானமயகோசமென்று சொல்லப்படும், அது = அந்த விஞ்ஞானமயமும், உணர்வு ஆகாவாம் = ஆன்மா அன்ரும், விலயாதி யவஸ்தைகளையுடையதாயிருத்தலால், நெய் முதலிய போலவென்பது பொருள் [மனதிற்கும் புத்திக்கும் அந்தக்கரணத்தன்மை சமமாதலால், ஒரே அந்தக்கரணத்தில் மனோமய ரூபத்தாலும் விஞ்ஞானமய ரூபத்தா லும் இரண்டு கோசங்களைக் கற்பித்தல் பொருந்தாதென்னுஞ் சங்கைக்கு கருத்திருத்தின்மை கரணத்தன்மைகளால் பேதமிருத்த லால்மனோமயத்தன்மைமுதலியபேதம்ஒரேஅந்தக்கரணத்தில்பொருத் தந்தானென்று சொல்லுகின்ருர்] துன்றும் அந்தரிந்திரியம் = சரீரத் தினுட் பொருந்தியிருக்கும் அந்தக்கரணம், கருத்த கரணத்தியல்பால் (கிரியைக்கு ஆசிரயரூப)கருத்தாரூபத்தாலும்,(கிரியைக்குச் சாதனரூப) கரணவடிவத்தாலும், அறிவுமனம் = விஞ்ஞான மயமும் மனோமயமும் என்ற, பேதம் நன்று துன்னும் = வேற்றுமையை நன்ருயடையும், பரிணமிக்குமென்பது பொருள், அதுவும் = அவையும் (விஞ்ஞானமய மும் மனோமயமும்) தனித்தனியே = வேறுவேருய், அகம் புறமாய்

நணுகும்=(ஒன்றுக்கொன்று முறையே) உள்ளும் வெளியுமாய்ப் பொருந்தியிருக்கும், (ஆனதால் கோசத்துவயம் பொருத்தமேயாம்) எ—று. மன்ற, அன்று, ஏ—அசைகள்.

ஆகா—ஒருமையில் பன்மை மயக்கம், அதுவும்—பன்மையில் ஒருமை மயக்கம். 4

(அ—கை)

இப்போது போக்திரு சப்தத்தின் வாச்சியார்த்தமான ஆனந்த மயகோசத்தின் அனான்மத்தன்மையைத் தெரிவிப்பதற்காக அதன் சொரூபத்தைக் கூறுகின்றார்.

அறநுகரும் பொழுதெணமொன் றகமுகமா
யானந்த நிழலை நண்ணு
மிறநுகர்வு நித்திரையா வொடுங்கிடுமா
னந்தமய மீதோர் காலத்
துறுதலினா லலவான்மா விதன்விம்ப
மயமாகி யொளிரா னந்த
நிறைவெதுவா மதுவான்மா வாகுமன
வரதமுமே நிகழ்வ தாலே. 5

(ப—ரை) அறம் நுகரும்பொழுது=புண்ணிய கரும பலனை யனுபவிக்கும்போது, எணம் ஒன்று = ஓர் விருத்தியானது, அகமுகமாய்=அந்தர்முகமாய், ஆனந்த நிழலைநண்ணும்=ஆன்ம சொரூப ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தைப் பொருந்தும், நுகர்வு இற=(அவ் விருத்தியானது) புண்ணியகரும பலானுபவம் நிவர்த்தியாகும்போது, நித்திரையா ஒடுங்கிடும்=நித்திரை வடிவமாக விலீனமாகும், ஆனந்த மயம்=(ஒடுங்கிய இவ்விருத்தியே)ஆனந்தமயகோசமென்று சொல்லப் படுகின்றது [அதன் அனான்மத்தன்மையைக் கூறுகின்றார்] ஈது= இந்த ஆனந்தமயன், ஓர் காலத்து உறுதலினால் = ஒருபோதிருப்ப தால், ஆன்மாவல=ஆன்மாவன்றாம்,(மேக முதலியவற்றைப் போன்று என்பது பொருள்) [அற்றேல் உள்ளனவாகிய ஆனந்தமயம் முதலிய அனைத்தினும் ஆன்மத்தன்மையை நிஷேதிக்கின் சூனியத்தன்மை பிராப்தமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] இதன் விம்பமயமாகி=

(புத்தி முதலியதில் பிரதிபிம்ப ரூபமாகவுள்ள பிரியசத்தவாச்சிய)இந்த ஆனந்தமயனது காரணமாய்ப் பிம்பபூதமாக, ஒளிர் ஆனந்த நிறைவு எதுவாம் அது=பிரகாசியாநின்ற பூரண சுகவடிவம் யாது அதுவே, ஆன்மாவாகும்=பிரத்தியக்ரூப ஆன்மாவாகும் [எதனாலெனிற் கூறுகின்றார்] அனவரதமும் நிகழ்வதால்=எப்போதுமிருத்தலால் எ—று. ஏ-ஏ—அசை.

விவாதத்திற்கு விஷயமான ஆனந்தம் ஆன்மாவாக யோக்கியமாம், நித்தியமாதலால், எது ஆன்மாவன்றோ அது நித்தியமுமன்று, தேகாதிகளைப்போல. ஆகாசாதிகள் உற்பத்தியுடையதாந் தன்மையால் அநித்தியமாதலின், ஆத்மாவின் நித்தியத்தன்மையாகிய ஏதுவில் வியபிசாரமின்றாம், வியபிசாரமாவது சாத்திய அபாவமுடையதன்கண் ஏது இருப்பது. பிரகிருதத்தில் சாத்தியம் ஆன்மத்தன்மையாம். அதன் அபாவமுடையது ஆகாசமாம், அதில் நையாயிக மதப்படி நித்தியத்தன்மை வடிவ ஏது இருப்பினும் வேதாந்த மதப்படி இல்லாமையின் வியபிசாரமின்றாம் என்பது பொருள். 5

(அ—கை)

வாதியின் சங்கை.

தேகாதி துயிலானந் தங்காறு
முறுபொருள்கள் சேத னந்தா
னாகாவன் னியமொன்றுங் காண்குகிலே
னென்பாயே லவைக ளெல்லாம்
வாகாக்கண் டனனிதரங் காண்கிலனென்
பதுநிசமா மற்றற் றேனும்
போகாவெத் தாலவைகா ணப்படுவ
வதனையெவன் போக்கு வானே. 6

(ப—ரை) தேகாதி துயில் ஆனந்தங் காறும்=அன்னமயந் தொடங்கி நித்திரையிலுள்ள ஆனந்தமய பரியந்தமாக, உறுபொருள்கள்=பொருந்தும் வஸ்துக்கள், சேதனம் ஆகா=(கூறிய ஏதுக்களால்) ஆன்மா ஆகாதனவாயொழிக, அன்னியம் ஒன்றுங் காண்குகிலேன்=பஞ்சகோசத்திற்கு வேறாகவும் யாதொன்றையும் அறியேன், என்பா

யேல்=என்று கூறுவையேல் [சித்தாந்தி பரிகரிக்கின்ருர்] அவைக ளெல்லாம் வாகாக்கண்டனன்=அப்பஞ்சகோசங்களேயும் பாகியமாய் அநான்மாவாயறிந்தனன், இதரம் காண்கிலன் = அன்னியத்தை அறியேன், என்பது=என்று நீ சொன்னது, நிசமாம்=வாஸ்தவமாம், [அப்படியாஞல் அதன் வேருன ஆன்மாவை அங்கீகரிப்பது எப்படி யெனிற் கூறுகின்ருர்] அற்றேனும்=அங்ஙனமாயினும் அதாவது அன்னியந் தோற்ருதாயினும், போகா எத்தால்= நிவர்த்திக்கத்தகாத எவ்வநுபவத்தால், அவை காணப்படுவ=அப்பஞ்சகோசங்களும் அறியப்படுகின்றனவோ, அதனை=அவ்வநுபவத்தை, எவன் போக்குவான்=நிவர்த்தி செய்பவன் யாவன்? ஒருவனும் நிவர்த்தி செய்யான் எ—று. தான்-மற்று-ஏ—அசைகள். 6

(அ—கை)

அற்றேல் முற்கூறிய பஞ்சகோசங்களினின்றும் வேருக ஆன்மா இருக்குமேல் அறியப்படவேண்டும், அறியப்படுகிறதில்லேயானதால் ஆன்மா இன்ருமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

அநுபூதி மயமதனுற் ருஞகி
யேயிருக்கு மறியொ ணுதா
மெனலுணர்வா னேடுணர்வும் வேறிலா
மையினன்றி யில்ல தாலன்
றினிமைமுத லியவடிவா யிதரங்கட்
கவைகொடுக்கு மெவைக்குந் தம்பா
லனையவிய னேடுமவா விலேயவற்றை
யளிப்பதுவா மயலு மின்றே. 7

(ப—ரை) தான் அநுபூதிமயமே ஆகியிருக்கும் அதனுல் = (பஞ்சகோசங்களுக்கும் சாக்ஷியாகிய) தானே அறிவு சொரூபமாயிருத்தலால், அறியொணுதாம் எனல்=அறியப்படுவதின்ரும் என்பதாம், [ஆன்மா அறிவு சொரூபமாயினும் அறியப்படுந்தன்மை எதனுலின்ரும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] வேறு = தனக்கு அன்னியமாக, உணர்வாஞெடு உணர்வும்=ஞாதாவும் ஞானமும், இலாமையின் = இல்லாதபடியால் அறியொணுது, (கடத்தையறிவதற்குக் கடத்தினும் அன்னியமாக ஞாதா முதலானவை இருப்பதுபோல ஆன்மாவையறிவ

தற்கு ஆன்மாவினும் அன்னியமாக ஞாதா முதலியவையில்லாதபடி யால் ஆன்மா அறியப்படுவதின்று மென்பது பொருள்) [ஞாதா முதலி யவையில்லாதபடியால் அறியப்படுவதின்று? அல்லது அசத்துத்தன் மையினலா? ஈண்டு விநிகமனத்திற் காரணம் யாதெனிற் கூறுகின் றார்] அன்றி = கூறிய பிரகாரத்தாலல்லாமல், இல்லதால் அன்று = அசத்துத்தன்மையால் ஆன்மா அறியப்படாததன்று, (ஆனந்தமயம் முதலியவற்றிற்குச் சாக்ஷியாயிருத்தலால் அசத்துத்தன்மை முன்னமே நிராகரிக்கப்பட்டதென்பது பொருள்)[அறிவு வடிவ ஆன்மா விற்கு அறியப்படுந்தன்மை இன்றென்பதில் திருஷ்டாந்தங் கூறுகின் றார்] இனிமை முதலிய வடிவாய் = மதுரம் முதலியவற்றையே சொரூப மாகவுடையனவாய், இதரங்கட்கு அவைகொடுக்கும் = ஏனைய கட்லை முதலியவற்றிற்கு அவ்வினிமை முதலியவற்றைத்தரும், எவைக்கும் = வெல்லம் முதலிய எப்பதார்த்தங்கட்கும், தம்பால் = தம்மிடத்து, அனைய இயல் நேடும் அவா இலை = அன்னியத்தால் அம்மதுராதிகளை யடைய விரும்புதலின்றும்,அவற்றை அளிப்பது ஆம் அயலும் இன்று = வெல்லம் முதலியவற்றிற்கு அம்மதுரம் முதலியவைகளைக் கொடுப்பன வாகிய அன்னிய பதார்த்தங்களுமின்றும், அதுபோல விளக்க சொரூப மான ஆன்மா பிறவற்றால் தனக்கு விளக்கத்தை விரும்புவதுமில்லை. அங்ஙன் தனக்கு விளக்கங்கொடுக்கும் வேறு வஸ்துவுமில்லையென்பது தாஷ்டாந்தம் எ — று. ஏ — அசை. விநிகமனம் = இரண்டில் ஒன்றை நிர்ணயஞ் செய்யும் யுத்தி. 7

(அ—கை)

திருஷ்டாந்த சகிதமாய் சித்தித்ததைக் கூறுகின்றார்.

தருபொருள்வே றிலதேனு மவைகள்மது
ராதிகுணந் தமைதீங் காவா
ரெருருதனுரு வான்மாவு மறியவொணா
தெனினுமுணர் வுருவை நீங்கா
புருடனிவன் சொயஞ்சோதி யாகுவனி
தனைத்தினுமுன் பொலிவன் மின்னு
முருவவவன் றனைமருவி யொளிருமெலா
மவனொளியா லுலகந் தோன்றும். 8

(ப—ரை) தருபொருள் வேறிலதேனும்=வெல்ல முதலியவற்றிற்கு மதுராதிகளைக்கொடுக்கும் வஸ்துக்கள் அன்னியங்களில்லாவிடினும், அவைகள் மதுராதிகுணந்தமை நீங்காவாறு=அவ்வெல்லம் முதலியவை இனிமை முதலிய சுபாவத்தை விடாமைபோல், ஒருதன் உரு ஆன்மாவும்=ஒப்பற்ற தனது சொரூபமாகிய ஆன்மாவும், அறிய ஒணுது எனினும்=பிறிதால் அறியப்படுந்தன்மையின்றியதாயினும், உணர்வு உருவை நீங்கா=அறிவு சொரூபத்தை விடாதாம், [ஆன்மாவின் சொப்பிரகாசத்தன்மையில் சுருதிப் பிரமாணங் கூறுகின்ருர்] புருடன் இவன் சொயஞ்சோதி ஆகுவன்=இவ்வான்மா சுயம்பிரகாச சொரூபமாம், ஈதனைத்தினும் முன் பொலிவன்=இவ்வெல்லாவற்றைப் பார்க்கிலும் முதலில் விளங்குவன், மின்னும் உருவ அவன்றனை மருவி=பிரகாசவடிவ ஆன்மாவை யாசிரயித்தே, எலாம் ஒளிரும்= உலகனைத்தும் விளங்கும், அவனொளியால் உலகந்தோன்றும்=ஆன்மாவின் பிரகாசத்தால் சகத்து விளங்கும் எ—று. இவை முதலிய சுருதிகள் ஆன்மாவின் சொப்பிரகாசத்தன்மையைப் போதிக்கின்றன என்பது பொருள்.

நீங்காது என்பது ஈறு குறைந்து நீங்கா என நின்றது. 8

(அ—கை)

"எதனுலிவ்வனைத்தையும் அறிகின்ருனே அதனை எதனுலறிவன், விஞ்ஞாதாவையெதனுலறிவன்" என்னும் சுருதி வாக்கியத்தை ஆன்மா சுயம்பிரகாசம் என்னும் பொருளில் பிரமாணமாகக் கூறுகின்ருர்,

அறிபடுமீ தனைத்துமெவ னுலவனை
  யயலெதனு லறிய லாகு
மறிவுயர்வான் றனையெதனுற் றெரிந்திடலா
  மனம்விடயத் தாற்றல் சேரு
மறிவனவன் விடயமெலா மவன்றனக்குப்
  பின்னமதா வறிவா னின்ரு
மறிவுவடி வறிபடும்வத் தறிபடா
  வத்தினுக்கு மயலா மன்றே. 9

(ப—ரை) எவனால்=எந்த சாக்ஷிசைதன்னிய வடிவ ஆன்மாவி னால் ஈதனைத்தும் அறிபடும்=இந்தத்திருசியக்கூட்டமெல்லாம்அறியப் படுகின்றனவோ, அவனை=அந்தச்சாட்சி வடிவ ஆன்மாவை, அயல் எதனால் அறியலாகும்=ஆன்மாவிற்கு அன்னிய (திருசிய வடிவ) எந்தச் சடத்தால் அறிதல் கூடும் (அது ஒன்றாலும் அறியப்படாது என்பது பொருள்), [இவ்வாக்கியத்திற்கே தாற்பரியங் கூறுகின்றார்] உயர்வு அறிவான்றனை=(திருசிய சமூகத்தையறியும்) சிறந்த ஞாதாவை, எதனால் தெரிந்திடலாம்=எந்தச் சாதனத்தால் அறியலாம் (எதனாலும் அறிதல் ஆகாது என்பது பொருள்) [அற்றேல் சீவன் மனமாகிய சாதனத்தாலறிவானென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] மனம் விடயத்து ஆற்றல் சேரும்=ஞானசாதன மனமானது திருசிய விஷயத்தில் சாமர்த்தியமுடையது, (அம்மனத்திற்கு அனைத்தையும் பிரகாசிப்பதாகிய அதிருசிய ஆன்மாவையறிவதில் ஆற்றலின்றாம்) வாக்காலும் மனதாலும் ஆன்மா அறியப்படமாட்டாதென்னுஞ் சுருதியினாலும் தன்னாற்றானறியப்படுமெனின் ஒன்றற்கே கரும கருத்திருத் தன்மை விரோதம் வருதலினாலும் ஆத்மா அனுபவத்திற்கு விஷயமாகாது. ஆதலின் ஆத்மா சுயம்பிரகாசமாம். [ஆன்மாவின் சொப்பிர காசத்தன்மையிலேயே, "அவன் வேத்தியமனைத்தையும் அறிகின்றான், அவனையறிபவனின்றாம், அறியப்பட்டதினின்றும் அறியப்படாததினின்றும் ஆன்மா வேறு" என்னுமிரண்டு சுருதி வாக்கியமும் பிரமாணமாமென்று கருதுகின்றவராய் அவ்வாக்கியமிரண்டனையும் அர்த்தத் தாற் படிக்கின்றார்] அவன்=அவ்வான்மா, விடயமெலாம் அறிவன்=விஷயங்களனைத்தையுமறிவான், அவன்றனக்கு=அவ்வான்மாவிற்கு, பின்னமதா அறிவானின்றாம் = அன்னியமாக அறிபவனில்லையாம், அறிவு வடிவு=போத சொரூபமாகிய பிரத்தியகபின்ன பிரஹ்மம், அறிபடும் வத்து அறிபடாவத்தினுக்கும் அயலாம் = ஞாத வஸ்துவிற்கும் அஞ்ஞாத வஸ்துவிற்கும் விலக்ஷணமாம் (அறிவு வடிவாயிருத்தலின் என்பது பொருள்) எ—று. அன்று-ஏ—அசை.

ஞாதவஸ்து=அறியப்பட்ட மாயாகாரிய உலகு, அதனை வியாகிருதம் என்பர், அஞ்ஞாத வஸ்து = அறியப்படாத மூலப்பிரகிருதி, அதனை அவ்வியாகிருதமென்பர்.



(அ—கை)

அற்றேல் அறியப்பட்டதினின்றும் அறியப்படாததினின்றும்

அன்னியமானபோதம் அநுபவிக்கப்படவில்லேயே யென்னுஞ் சங் கைக்கு அறியப்பட்டதில் விசேஷணமாயுள்ள அறிவு, போதவடிவ மாதலின் அவ்விசேஷணமாகிய போதத்தின் அனுபவமின்றேல், அறி யப்பட்டதாகிய விசிட்டத்தின் அனுபவமின்ருய்விடுமாதலின் போதா நுபவம் அவசியம் அங்கீகரிக்கவேண்டுமெனப் பரிகாசத்தோடு விடை கூறுகின்ருர்.

போதமது தனிலுமநு பவமெவனுக்
கெவ்வாற்றும் பொருந்து ருதோ
வோதுமந்த நரவடிவா மோட்டினையெவ்
வாறுநன்னூ லுணர்த்து கிற்குஞ்
சீதமுறுஞ் சிகுவையெனக் குளதிலதோ
வெனும்வசனம் சிரிப்புக் காம்போல்
மேதையையா னறிந்திலன்மே லுணர்வுறவே
வேண்டுமென விளம்ப லாமே. 10

(ப—ரை) எவனுக்கு=எந்த மந்தனுக்கு, போதமதுதனிலும்= கடாதிகளின் ஸ்புரணத்திலும் (ஞானத்திலும்), அநுபவம்=சாக்ஷாத் காரம், எவ்வாற்றும்பொருந்துருதோ = எந்தவிதத்திலும் உண்டா கிறதில்லேயோ, ஓதும் அந்தநரவடிவாம் ஓட்டினை=சொல்லாநின்ற அந்தமநுஷ்யாகாரமாய மண்ணுங்கட்டிபோன்ற சடபுருஷனே, நன் னூல்=நல்ல சாஸ்திரமானது, எவ்வாறு உணர்த்துகிற்கும்=எப்படி அறிவிக்கும், (எந்த விதத்தாலும் அறிவித்தல் இயலாதென்பது பொருள்) [என்ருல் போதம் அறியப்படுகிறதில்லேயென்னும் வசனமே வியாகாதமாமெனத் திருஷ்டாந்த சகிதமாகக் கூறுகின்ருர்] சீதம் உறும் சிகுவை=குளிர்ச்சி பொருந்திய நாக்கானது, எனக்கு உளது இலதோஎனும்வசனம்=எனக்கு இருக்கிறதா இல்லேயா என்னும் (ஓர் உன்மத்தபுருஷனது) வாக்கியம், சிரிப்புக்கு ஆம்போல்=நகைப்புக் கிடமாவதுபோல, அதாவது கூறிய வாக்கியம் கேவலம் நகைப்புக்கிட மேயன்றிப் புத்தியின் மேம்பாட்டைப் போதிப்பதற்கன்ரும், ஏனெனில் நாக்கின்றி எனக்கு நாக்கிருக்கிறதா இல்லேயாவென்று வசனித்தல் பொருந்தாமையின்; மேதையையான் அறிந்திலன்=(அதுபோலவே கடமுதலியவற்றின்) ஞானத்தை யான் அறிந்திலேன், மேல்உணர்வு உறவேண்டும்=இனிமேல் அறியவேண்டும், எனவிளம்பல் = என்று

சொல்லுதல், ஆம் = நகைப்புக்கேதுவாம், ஏனெனின் அறிவினலன்றி அந்தப்போதத்தை நான் அறியவில்லை என்னும் வசனவியவகாரம் சித்தியாகாமையின் என்பது பொருள் எ—று. ஏ—அசை.

அவதாரிகையில் அறியப்பட்டது என்பதற்கு அறிவுக்கு விஷயம் என்பது பொருளாம்,

அதில் அறிவு விசேஷணம், விஷயம் விசேஷியமாம். விசிட்டப் பிரத்தியக்ஷத்தில் விசேஷணத்தின் ஞானம் காரணமாம். அஃதெங்ஙனமெனின், தண்டிபுருஷன் என்பதில் தண்டம் விசேஷணம், புருஷன் விசேஷியம், ஈண்டுத்தண்டஞானம் முதலில் உண்டாகிப்பின்னர் தண்டவிசிட்ட புருஷஞானமுண்டாகின்றது, தண்டஞானமின்றித் தண்டவிசிட்ட புருஷஞானமுண்டாகிறதில்லை, அதுபோல அறிவாகிய விசேஷணத்தின் ஞானமுண்டாகியே அறிவுவிசிஷ்ட விஷயத்தின் ஞானமுண்டாகின்றது. விசேஷணமாகிய அறிவின் அநுபவமின்றேல் அறிவுவிசிட்ட விஷயவடிவ அறியப்பட்டது என்னும் ஞானமுண்டாகாது, விசேஷணத்திற்கு விசேஷியத்தோடுள்ள சம்பந்தம் தண்டீ புருஷன் என்னும் திருஷ்டாந்தத்தில் சம்யோகமாம். அறியப்பட்டது என்னும் தாஷ்டாந்தத்தில், அறிவு (ஞாநம்) என்னும் விசேஷணத்திற்கு அறியப்பட்ட வஸ்துவாகிய விஷயத்தோடு விஷயத்தன்மைச் சம்பந்தமாம். 10

(அ — கை)

உலகில் இப்படிப்பட்ட ஞானம் இருக்கட்டும் அப்படியானலும் பிரகிருதத்தில்பிரஹ்மத்தின் ஞானத்தில் என்ன சித்தித்தது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

உலகிலுணர் வதனைவிடிற் பிரமமது
வெனுமதியே யுண்மை ஞானம்
விலகினைங்கோ சமுமிஞ்சுங் கரியுணர்வே
தற்சொருபம் வெறும்பொய் யாகா
விலகியதோர் தானுளதாம் வழக்கிடற்பாற்
றன்மையிற்றன் னிடத்துங் கூற
வலகில்வழக் குளவெனிலோ விவ்வழக்கி
னெதிர்வாதி யாகும் யாவன். 11

(ப—ரை) உலகில் = சகத்தில், உணர்வதனை = அறியப்படும் விஷயத்தினை (அதாவது விளக்கப்படும் கடாதிகளை), விடில் = நீக்கின், அது = கடாதி விஷயங்களை விளக்கும் அவ்விஷயாவச்சின்னசேதனம், பிரமம் எனும்மதியே = பிரஹ்மமென்கின்ற நிச்சயமே, உண்மை ஞானம் = யதார்த்த பிரஹ்மஞானமாம், [அற்றேல் கடாதிவிஷயங் களையுபேக்ஷித்தலாலேயே அவ்விஷயங்களின் அநுபவவடிவ பிரம்மம் அறியப்படுமேல்,இப்பிரகரணத்திலுள்ள பஞ்சகோசங்களின் விவேகம் பயனற்றதாகுமென்னுஞ் சங்கைக்குப் பிரஹ்மத்தின் பிரத்தியக்கு வடிவத்தன்மையின் ஞானத்தாலன்றிச் சோகவடிவசம்சார நிவிர்த்தி கூடாமையின், அப்படிப்பட்ட ஞானத்தில் பஞ்சகோசங்களின் விவே கம் உபயோகியாயிருத்தலால் அதற்கும் வியர்த்தத்தன்மையின்றும் எனக்கூறுகின்றார்] ஐங்கோசமும்விலகின் = பஞ்சகோசங்களும் நீங் கிடின் அதாவது புத்தியினால் அநான்மாவாக நிச்சயிக்கப்படின், மிஞ் சும்கரியுணர்வே = சேஷமாகும்சாக்ஷிவடிவஞானமே, தற்சொருபம் = தனது சொரூபமாம், [அற்றேல் அநுபவத்தால் சித்தித்துள்ள அன்ன மயம் முதலிய ஐங்கோசங்களையும் பரித்தியாகஞ்செய்யின் சூனியமே பரிசேஷிக்கும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] வெறும் பொய் யாகா = (எஞ்சியுள்ள அது) சூனியம் ஆகமாட்டாது (சாக்ஷிரூபஞானத் திற்குச்சூனியத்தன்மையைச் சம்பாதித்தல்முடியாது என்பதுபொருள்) [அங்ஙன் சம்பாதித்தல் முடியாதென்பதையே உபபாதனஞ்செய்கின் றார்] இலகியது ஓர்தான்உளதாம் = விளங்குகின்றதாகிய ஒப்பற்ற சுயம்சத்தவாச்சிய நமது சொரூபம், (உலகினர்க்கும் வைதிகர்க்கும்) இருக்கின்றதாம், [எதனாலெனிற்கூறுகின்றார்] வழக்கிடற்பாற்று அன் மையின் = விவாதித்தற்றன்மையதாகாமையின், அதாவது தனது சொரூபம் நானிருக்கின்றேனா? இல்லையா என்னும் விவாதத்திற்கு விஷயமாகாமையினால் தனது சொரூபம் எல்லோருக்கும் இருக்கவே இருக்கின்றது என்பது பொருள். [தனது சொரூபம் விவாதத்திற்கு விஷயமாமென்னும்விபக்ஷத்தில்பாதகங்கூறுகின்றார்] தன்னிடத்தும் = தனதுசொரூபத்திலும், கூற அலகில்வழக்கு உளவெனில் = சொல்ல அளவின்றிய விவாதங்கள் இருக்கின்றனவெனில், இவ்வழக்கின் = இந்த விவாதத்தில், எதிர்வாதி யாவன்ஆகும் = பிரதிவாதி எவன் ஆவன் ஒருவனுமாகானென்பது பொருள் எ—று. ஓ–அசை. ஆகாது என்பது ஈறுதொக்கு ஆகா என நின்றது. 11

(அ—கை)

அற்றேல் தனது அசத்துவத்தைக்கூறும் வாதியே பிரதிவாதி யாவன் என்னுஞ் சங்கைக்கு அப்படிப்பட்டவன் ஒருவனுமில்லையெனக் கூறுகின்ருர்,

மயலன்றித் தனக்கின்மை யெவருக்கு
மிசையாது மற்ற தாலே
செயலற்ற பொய்வாதிக் கழிவினையே
யருமறைதான் செப்புஞ் செப்பு
மயலற்ற பிரமமில தெனவுணரிற்
ருனேயில் லாதா ஞமா
லியலற்ற பிரமமறி படுவதல
தனக்குண்மை யெய்தப் பார்ப்பாய். 12

(ப—ரை) மயலன்றி=பிராந்தியினுலல்லாமல், (மற்றக்காலத்தில்) தனக்குஇன்மை=தன்னுடைய அசத்துவமானது, எவருக்கும் இசையாது=ஒருவருக்கும் சம்மதமாகது, [எதனுலிங்ஙனம்நிச்சயிக்கப் படுகின்றதென்னுஞ் சங்கைக்குக்கூறுகின்ருர்]அதாலே = (ஒருவருக்குஞ்சம்மதமாகாத) அக்காரணத்தினுலேயே, அருமறைதான்=அருமையாகிய உபநிடதமானது, செயலற்ற பொய்வாதிக்கு = தத்துவமற்றுப்போன சூனியவாதிக்கு, அழிவினைச்செப்பும்=விநாசத்தைக்கூறுகின்றது, [அச்சுருதியாதென்னு மாகாங்க்ஷையுண்டாக "அசத்தேயாகின்ருன்" என்பது முதலிய சுருதியைப் பொருளாற்படிக்கின்ருர்] செப்பும் அயலற்ற பிரமம்=இலக்ஷியார்த்தமாகச் சுருதிகூறும் தன்னினும் பின்னமின்றிய பிரமத்தை, இலதுஎனஉணரில் = அசத்துஎன அறிவாஞயின், தானே இல்லாதாஞம்=அந்தப்புருஷன்தானே அசத்தாவன், ஏனெனின் தாஞகிய ஆத்மாவே பிரமமாயிருத்தலாலென்பது பொருள், [சித்தித்ததைக்கூறுகின்ருர்] இயல்அற்ற பிரமம் = (ஆகையால்) சூனியஇயல்பின்றிய பிரமமானது, அறிபடுவதுஅல=வேத்தியமன்ரும், தனக்கு உண்மையெய்தப் பார்ப்பாய்=தனக்கு சத்துவம் பொருந்தும்படிக் காண்பாயாக, தனது சத்துவத்தை அங்கீகரிக்க வேண்டுமென்பது பொருள் எ—று. மற்று-ஏ-ஆல்—அசைகள். 12

(அ—கை)

இப்போது ஆன்மாவிற்குச் சொப்பிரகாசத்தன்மையைச்சொல்லு மிச்சையுடையவராய் அதற்கு வேத்தியத்தன்மையின்றேல் எவ்வித சொரூபமாமென்னும் வினவையெழுப்புகின்றார்]

இத்தகையே லெத்தகைய தெனக்கேட்கி
னித்தகைத்தா மியல்பங் கில்லை
இத்தகையு மத்தகையு மில்லாத
பொருள்வடிவை யிலக வோர்வாய்
யித்தகையிந் தியவிடயம் பரோட்சந்தா
னத்தகைய தெனலாங் காண்பா
னித்தகையிந் தியவிடயம் பரோட்சமுந்தா
னலத்தானு யிருத்த லாலே. 13

(ப—ரை) இத்தகையேல்=ஆன்மா இங்ஙன் வேத்தியமன்று யின், எத்தகையது எனக்கேட்கில்=பின் எப்படிப்பட்டசொரூபமுடைய தெனவினவில் (ஆன்மாவிற்கு இப்படிப்பட்டதென ஏதேனும் ஒரு சொரூபத்தை அங்கீகரிக்கின் அந்தச் சொரூபத்தால் ஆன்மாவேத்தி யமாம், ஏதேனும் ஒருவடிவையங்கீகரியாவிடின் சூனியமாமென்பது சங்கையின் அபிப்பிராயம்)நீ கூறியது வாஸ்தவந்தான். இப்படிப்பட்ட தென ஏதேனும் ஒருவடிவத்தையங்கீகரிக்கின் சொல்லியபடி வேத்தி யமாம், அதை அங்கீகரிக்கிறதில்லையெனக் கூறுகின்றார்] அங்கு = ஆன்மாவில், இத்தகைத்தாமியல்பு இல்லை=இப்படிப்பட்டதென்னும் சுபாவமின்றும், அப்படிப்பட்டதென்பதுமில்லையெனவுணர்க, [இரண் டினின்மையையே கூறுகின்றார்] இத்தகையும் அத்தகையும் இல்லாத பொருள்வடிவை=இப்படிப்பட்டதென்பதும் அப்படிப்பட்டதென்பதும் அற்ற ஆன்மவஸ்துவின் சொரூபத்தை, இலகவோர்வாய்=விளங்கும்படி நிச்சயஞ்செய்வாய், [பிரதிஞ்ஞை மாத்திரத்தால் வஸ்து சித்திக்கிற தில்லையே என்னுஞ் சங்கைக்கு இப்படிப்பட்டது அப்படிப்பட்டது என் னுஞ் சப்தங்களுக்கு அர்த்தத்தைக் கூறுகின்றவராய் அச்சப்தங்களின் அவாச்சியத்தன்மையை ஆன்மாவில் உபபாதனஞ்செய்கின்றார்] இந் திய விடயம் = நேத்திராதியிந்திரியங்களுக்கு விஷயமாயுள்ளகடாதி களே, இத்தகை=இப்படிப்பட்டதென்னும் சப்தத்திற்குப் பொருளாம்,

பரோட்சந்தான் = பரோக்ஷஞானத்திற்கு விஷயமாயுள்ள தருமாதிகளே, அத்தகையது எனலாம் = அப்படிப்பட்டது என்னும் சப்தத்தாற் சொல்லப்படுகின்றன, காண்பான் = திருஷ்டாவாகிய ஆன்மா, தானுயிருத்தலால் = தனது சொரூபமாக விருத்தலால், இத்தகை இந்திய விடயமும் பரோக்ஷமுமல = இப்படிப்பட்டதென்னும் பிரத்தியக்ஷவிஷயமும் பரோக்ஷவிஷயமும்அன்ரும், ஆகையால் ஆன்மாவிற்கு இப்படிப்பட்ட தென்னுந்தன்மையும் அப்படிப்பட்டதென்னுந் தன்மையுமின்ரும் எ—று.

இத்தகைத்தாமியல்பு இல்லை என்றது அத்தகைத்தாமியல்பு இல்லையென்பதற்கு உபலக்ஷணமாம். 13

(அ—கை)

[அப்படியானுல் சூனியமாமென்னு மிரண்டாவது பக்ஷத்தை பயனைத்தெரிவித்தலாகிய வியாஜத்தால் பரிகரிக்கின்ருர்]

வேத்தியமன் றேனுமப ரோட்சமதா
　　தலிற்ருனய் விளங்கு வோன்ருன்
சாத்தியமாம் வாய்மையறி வனந்தமெனும்
　　பிரமவியல் தன்னி லுண்டு
பாத்தியமில் லதுவாய்மை செகப்பாட்டுக்
　　கொருகரிக்குப் பாடிங் கேதோ
வேத்தியவக் கரியாது சொல்லுதியப்
　　பாடென்று மிசையா தாமால். 14

(ப—ரை) வேத்தியம்அன்றேனும் = இந்திரியஜன்னிய ஞானத்திற்கு விஷயமாகாவிடினும், அபரோக்ஷமது ஆதலின் = அபரோக்ஷமாயிருத்தலால், தான்ஆய்விளங்குவோன் = ஆன்மா சொப்பிரகாசமாமென்பது, சாத்தியமாம் = சாதிக்கத்தகுந்தது. ஈண்டிஃதனுமானமாம், ஆன்மா சொப்பிரகாசமாம், ஞானத்திற்குக் கருமமாகாமல் அபரோக்ஷமாயிருத்தலால், ஞானம்போன்று, ஏதுவில் ஞானத்திற்குக் கருமமல்லாமல், என்னும்விசேஷணம் அசித்தமாமென்னற்க, ஆன்மாவைஞானத்திற்குக் கருமமாகக்கொள்ளின் கருமகருத்திருத்தன்மை விரோதம்வருமாதலால், தனது சேதனமாத்திர சாக்ஷிசொரூபத்தால் கருத்திருத்தன்மையும் சுகாதிவிசிட்டரூபத்தால் கருமத்தன்மையும் அவிரோதமா

மெனின், செல்லுதலாகிய தொழிலிலும் ஒருவனுக்கே ஜீவவடிவதனது சொரூபத்தால் கருத்திருத்தன்மையும் தேகவிசிட்ட ரூபத்தால் கருமத் தன்மையுமாம்என்னும் அதிவியாப்தியுண்டாம், திருஷ்டாந்தத்தில் ஏதுஇல்லையென்னற்க, ஞானத்திற்கு வேறுஞானத்தை யபேக்ஷிக்கின் அநவஸ்தையாமாதலின், நியாயமதத்தில் கடம் கடஞானத்தால் விளங்குகிறது கடஞானம் அநுவியவசாயஞானத்தால் விளங்குகிறது ஆதலால் ஞானம்போன்று என்னும் திருஷ்டாந்தம் ஏதுவின்றியதா மெனின், ஞானத்திற்கு வேறு ஞானத்தால் விளக்கமின்மையினுல்ஏது வின்றியதன்று, [ஆன்மாவிற்கு சொப்பிரகாசத்தன்மை சித்திக்கினும் பிரமவிலக்கணமின்மையினுல் பிரமத்தன்மையின் சித்தியின்ரும் என் னுஞ் சங்கைக்கு பிரமத்தின் இலக்கணத்தை ஆன்மாவில் பொருத்து கின்ருர்] வாய்மை அறிவு அனந்தம்எனும் பிரமஇயல் = சத்தியம் ஞானம் அனந்தமெனும் சுருதியாற்சொல்லப்பட்ட பிரமத்தின் லக்ஷ ணம், தன்னிலுண்டு = ஆன்மாவிலுமிருக்கிறது, [ஆன்மாவிற்குச் சத்தி யத்தன்மையை உபபாதனஞ்செய்தற்பொருட்டு முதலில் சத்தியத்தி னிலக்கணங் கூறுகின்ருர்] பாத்தியம்இல்லது வாய்மை = பாதிக்கப் படாதது சத்தியமாம், "அபாத்தியம்சத்தியம் பாத்தியம்மித்தை யென் பது சத்தியமித்தைகளின் பாகுபாடு" என முன்னேர்களால் மொழியப் பட்டிருத்தலின், [அப்படியாகட்டும் பிரகிருதத்தில் என்ன சித்தித்த தெனிற் கூறுகின்ருர்] செகப்பாட்டுக்கு ஒருகரிக்கு = (சுழுத்திமூர்ச்சை சமாதிகளில், தூலசூக்கும முதலிய) சகத்தின் பாதவடிவஅபாவத்திற்கு ஒப்பற்ற யாதொரு சாக்ஷியுண்டோ அதனது, பாடு = இன்மை, இங்கு ஏதோ = ஈண்டு எதனுற்சித்திக்குமோ, வேத்தியஅக்கரியாது = அறியத் தகுந்த அச்சாக்ஷி யாது, சொல்லுதி = சொல்வாய், யாதொருசாக்ஷியு மின்றென்பதுபொருள், [சாக்ஷியின்றியே ஆன்மாவின்பாதம் ஏனுண் டாவதில்லையென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] அப்பாடு = சாக்ஷி யின்றிய அந்தப்பாதமானது, என்றும்இசையாதாம் = ஓர்போதும் பொருந்தாதாம், சாக்ஷியின்றியபாதம் அங்கீகரிக்கத்தக்கதன்று அதி வியாப்தியாமாதலின் எ—று. தான், ஆல்-அசை.

வியாஜம் = கபடம், அதாவது மனதில் ஒன்றைவைத்துக் கொண்டு வேருென்றைச் சொல்லுதல். 14

(அ—கை)

கூறிய அருத்தத்தைத் திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்து கின்ருர்.

தொக்கவுருக் களைவிடினு மருவமதாஞ்
சேண்மிஞ்சித் துன்னு மாபோற்
றக்கனவெல் லாம்விடின்மே லெதுசேடித்
திருக்குமது தானே தானு
மொக்கவொழிந் திடினென்று மில்லையெனி
னென்றுமிலா ததுவே யாமாம்
பொக்கமிலிங் குரைகணனி வேற்றுமையாம்
பொய்மையிலாப் பொருளே நிற்கும். 15

(ப—ரை) தொக்கஉருக்களைவிடினும் = (வீடுமுதலியவைகளி லுள்ள) கூட்டமாகிய கடாதிமூர்த்தபதார்த்தங்களை வீடுமுதலியவற்றி னின்றும் வெளிப்படுத்தினும், அருவமதாம்சேண் = அமூர்த்தமாகிய ஆகாசம், மிஞ்சித்துன்னுமாபோல் = (வெளிப்படுத்தத்தகுதியற்றதாய்) அவசேஷித்திருப்பதுபோல, தக்கனஎல்லாம்விடின் = தள்ளத்தக்கன வாகிய தேகேந்திரியம் முதலிய மூர்த்தா மூர்த்தங்களனைத்தையும் "இதுவுமல்ல இதுவுமல்லவென்னுஞ் சுருதியால் நிஷேதிக்கின்' மேல் = கடைசியில், எதுசேஷித்திருக்கும் = சகலநிஷேதத்திற்கும் சாக்ஷியாகயாதொருஞானமானதுமிஞ்சியிருக்கின்றதோ, அதுதானே = பாதமின்றிய அந்த ஞானமே, தானும் = ஆன்மாவாம். [அற்றேல் பிர தீதியாகின்ற அனைத்தையும் நிஷேதிக்கும்போது யாதொன்றும் மிஞ்சு கிறதில்லை ஆகையால் மேலெது சேடித்திருக்குமதுவே தானுமென எப்படிக்கூறப்படுகிறதென சங்கிக்கின்ருன்], ஒக்கஒழிந்திடின் = ஒருமிக்கஅனைத்தும் நிஷேதமாகும்போது, ஒன்றும் இல்லையெனின் = யாதொன்றுமில்லையே யென்றுகூறின், [ஒன்றுமில்லையென்றுகூறும் வாதியினுலும் அப்படிப்பட்ட வசனப்பிரயோகம் சித்திக்கும்பொருட்டு எல்லாவற்றின் அபாவத்தை விஷயம்பண்ணும் ஞானம் அவசியம்அங்கீ கரிக்கத்தக்கது ஆகையால் அதுவே நமதபிமதமாகிய ஆன்மசொரூபமா மென்னு மபிப்பிராயத்தால் பரிகரிக்கின்ருர்] ஒன்றும் இலாததுவே = ஒன்றுமில்லையென்னும் சத்தத்தால் யாதொருசைதன்னியம் சொல்லப் படுகிறதோ அதுவே, யாம் ஆம் = ஆன்மசொரூபமாம், [அற்றேல்அபா வத்தையுணர்த்துவதாகிய ஒன்றுமில்லையென்னும் சத்தத்தால் சைதன் னியமெப்படி சொல்லப்படுகிறதென்னுஞ் சங்கைக்கு நிஷேதத்தின் சாக்ஷியையவசியமங்கீகரிக்க வேண்டியதாயிருத்தலால் வாசகமாகிய

சத்தங்களிலே விவாதமேயன்றி வாச்சியமாகிய அர்த்தத்தில் விவாத மன்றெனப்பரிகரிக்கின்ருர்] பொக்கம்இல் = பொய்மையற்ற, உரை கள் = (ஒன்றுமில்லே, சைதன்னியம் என்பது முதலிய) சத்தங்களே, இங்கு = (பாதசாக்ஷியாகிய)ஆன்மாவில், நனிவேற்றுமையாம் = மிகவும் பின்னமாம், பொய்மையிலாப் பொருள்நிற்குமே = பாதமின்றிய சாக்ஷிசைதன்னியம் இருக்கின்றதேயாம் எ—று. 15

(அ — கை)

கூறியபொருளேச் சுருதியினுல் திடஞ்செய்கின்ருர்.

அதுகொண்டே யான்மாவன் றன்றெனவே
யதத்துவா விருத்தி யாலே
பொதுவேத மிகழ்வதனை யிகழ்ந்துபா
தேயமிதைப் பொருளாக் கொள்ளும்
இதுவென்னும் வடிவமெது வதுவெல்லா
மிகழ்வுறப்பாற் றிகழ வொண்ணு
தெதுவிதுவாம் வடிவமல வதுவான்மா
வென்றுமுள தென்ன லாமே. 16

(ப—ரை) அதுகொண்டே = (எதனுல் சாக்ஷிசைதன்னியம் அபாத்தியமோ) அக்காரணத்தினுல், பொதுவேதம் = பக்ஷபாதமற்ற சுருதியானது, ஆன்மா அன்று அன்று எனவே = இதுவும் ஆன்மா வன்று இதுவும் ஆன்மாவன்று என்று, அதத்துவாவிருத்தியாலே = (அனன்மபதார்த்தங்களே நிஷேதிக்கும்) அதத்துவாவிருத்தியினுல், இகழ்வதனை இகழ்ந்து = பாதிக்கத்தகுந்த சகல அனன்ம பதார்த்தங் களேயும் பாதித்து, உபாதேயமிதை = கொள்ளத்தகுந்த பிரத்தியகான் மாவை, பொருளாக்கொள்ளும் = வஸ்துவாகக்கிரகிக்கும், மிஞ்சவைக் கிறதென்பது பொருள், [இதுவுமன்று இதுவுமன்று என்னுஞ் சுருதி யானது இகழ்வதனை இகழ்ந்து உபாதேயத்தை மிஞ்சவைக்குமெனக் கூறப்பட்டது அவற்றுள் பாதிக்கத்தகுந்த பொருள் எப்படிப்பட்டது, பாதிக்கத்தகாத பொருள் எப்படிப்பட்டது என்னும் ஆகாங்க்ஷையுண் டாக அவ்விரண்டனையும் வேறுபிரித்து அவைகளேக் காட்டுகின்ருர்] இதுஎன்னும்வடிவம்எது அதுஎல்லாம் = இதுஎன்று திருசியத்தன்மை யாக அநுபவிக்கப்படுகிற தேகாதிபொருளெதுவோ அவ்வனைத்தும்,

இகழ்வுறப்பாற்று = தள்ளத்தக்கதாம், எதுஇதுவாம்வடிவம்அலஅது = யாது தானுயிருத்தலின் இதுஎன்னுந்தன்மையா லறியத்தக்க சொருப மன்றோ அந்தப்பிரத்தியகான்மாவே, இகழவொண்ணுது = தள்ளத் தகாதாம். [சித்தித்ததைக் கூறுகின்ருர்] என்றும்உள்ளது = எப்போது மிருப்பதாகிய பாத மின்றிய யாதொரு சாக்ஷியுண்டோ அது, ஆன்மா என்னலாம் = ஆன்மா என்று சொல்லப்படும், அகங்காராதி திருசியங் கள் ஆன்மாவன்றென்பது பொருள் எ—று. 16

(அ—கை)

ஆன்மா அபாத்தியமாகட்டும் பிரகிருதத்தில் என்ன சித்தித்த தெனிற் கூறுகின்ருர்.

சம்பவித்த தாம்பிரமத் துண்மைநிலை
ஞானநிலை சாற்றி னோநன்
கும்பரனு பூதிமய மதனுலென்
பதுமுதலா முரைக ளாலே
யிம்பரெங்கு நிறைதலினித் தியத்தினு
லெல்லாமா மியல்பி னுனும்
பம்பலிடங் காலவத்து வாலுமுடி
வாகாதப் பரம ரூபம். 17

(ப—ரை) பிரமத்து உண்மைநிலை = பிரமலக்ஷணத்திற் சொல் லப்பட்ட சத்தியத்தன்மையானது, சம்பவித்ததாம் = ஆன்மாவில் சித் தித்தது, [சத்தியத்தன்மையிருக்கட்டும் ஞானத்தன்மை யெப்படிஎன்ரு காங்க்ஷையுண்டாக அதுமுன்பேசொல்லப்பட்டதாமெனக்கூறுகின்ருர்] ஞாநநிலை = ஞானத்தன்மையானது, உம்பரநுபூதிமயமதனுல் = ஆன் மா அனுபவவடிவமாயிருத்தலால், என்பது முதலாம் உரைகளாலே = என்பது முதலிய வசனங்களால், நன்குசாற்றினோம் = (முன்பே) ஸ்பஷ்டமாகக்கூறினோம், [அற்றேல் சத்தியத்தன்மை ஞானத்தன் மைகள் ஆன்மாவில் சித்தித்தனவாயினும் அநந்தத்தன்மை பொருந் தாது, பிரமத்திலும் அது அசித்தமாதலினுல் என்னுஞ் சங்கைக்கு முத லில் பிரமத்தில் அனந்தத்தன்மையினைச் சாதிக்கின்ருர்] இம்பர்எங்கும் நிறைதலின் = இவ்விடத்தும் மற்ற எவ்விடங்களிலும் வியாபகமாயிருத் தலாலும், நித்தியத்தினுல் = நித்தியமாதலானும், எல்லாமாம் இயல்பி

ஞலும் = சருவான்மகமாதலானும், அப்பரமரூபம் = அப்பரப்பிரமமானது முறையே, பம்பல்இடம் காலவத்துவாலும் = நாநாவிதமான தேசத்தாலும் காலத்தாலும்வத்துவிஞலும், முடிவு ஆகாது = பரிச்சின்னமெனப்பெயரிய அந்தமற்றதாம் எ—று.

"நித்தியம்விபு சருவகதம்சுசூட்சுமம்" ஆகாசம்போன்று சருவகதமும் நித்தியமுமாம், நித்தியங்களுக்குள் நித்தியன், சேதனங்களுக்குள் சேதனன்; இவ்வெல்லா மிவ்வான்மாவே, எல்லாம் பிரமமே" என்பது முதலிய சுருதிகளால் பிரமத்தில் வியாபகத்தன்மை நித்தியத்தன்மை சருவான்மகத் தன்மைகள் உணரத்தக்கனவாம். 17

(அ—கை)

பிரமத்தின் அனந்தத்தன்மை கேவலம் சுருதியினுல் சித்திக்கின்றதென்பதில்லை, மற்ருேயுத்தியினுலுமாமெனக் கூறுகின்ருர்.

தேசமத னுடன்காலந் திரவியமு
மாயையினுற் செனித்த லாலும்
ஆசைமுத லானதுசெய் யந்தமிலை
யாதலின்வத் தனந்த மேயாம்
நாசமின்மெய் யறிவனந்த மாம்பிரம
மேபொருளா நணும தற்கே
யீசனியல் சீவனிய லிருமையுபா
திகளால்வந் திசையா நிற்கும். 18

(ப—ரை) தேசம் அதனுடன் காலம் திரவியமும் = (பரிச்சேதத்திற்குக்காரணங்களான) தேசகால வஸ்துக்கள், மாயையினுல்செனித்தலாலும் = மாயையினுற் கற்பிக்கப்பட்டனவாயிருத்தலானும், ஆசை முதலானதுசெய் அந்தமிலை = (கந்தருவ நகராதிகளால் ஆகாசம் பரிச்சின்னம் பண்ணப்படாததுபோல) திக்குமுதலானவையால் செய்யப்பட்ட பாரமார்த்திக பரிச்சேதம் பிரமத்திலின்ரும், ஆதலின் வத்து அனந்தமேயாம் = ஆகையால் பிரமம் அனந்தமாம், "அந்த இந்த சத்தியரூப ஆன்மா பிரம்மமேயாம், பிரம்மம் ஆன்மாவேயாம், இதில் சமுசயம் செய்யவேண்டியதில்லை, ஆன்மாவே சத்தியம், நிருசிம்மதேவன் பிரம்மமாயிருக்கிறது, இவ்வான்மாவே பிரம்மம்" என்பது முதலிய

சுருதிகளால் ஆன்மாவிற்குப் பிரமத்தின் அபேதத்தைப் பிரதிபாதனஞ் செய்வதால் ஆன்மாவிற்கும் அபரிச்சின்னத்தன்மை சித்தித்ததென்பது தாற்பரியம், [அற்றேல் சடசகத்து பிரமத்திற் கற்பிக்கப்பட்டிருத்தலால் பிரமத்திற்குப் பரிச்சேதகமாகாதாயினும் சேதனரானதால் சீவேஸ்வரர்கள் அங்ஙனம் கற்பிதமின்மையினுல் அவராற் செய்யப்பட்ட பரிச்சேதமுடையதாந்தன்மையுண்மையால் பிரமத்திற்கு அனந்தத் தன்மை பொருந்தாதென்னுஞ் சங்கைக்கு அவர்களும் சோபாதிகராதலால் பாரமார்த்திகரன்று, ஆதலால் அவரும் வாஸ்தவபரிச்சேதகாரணரன்றென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்] நாசம்இல்மெய் அறிவு அனந்தமாம் பிரமமே=அழிவற்ற சத்தியஞான அனந்தவடிவ பிரமமே, பொருளாநணும் = பாரமார்த்திகமாகப் பொருந்தியிருக்கும், அதற்கே=அந்தப்பிரமத்திற்கே, ஈசன்இயல் சீவன்இயல் = உலகப் பிரசித்தமான ஈசத்தன்மையும் சீவத்தன்மையும், இருமையுபாதிகளால் வந்துஇசையாநிற்கும்=பின்சொல்லப்போகிற இரண்டுஉபாதிகளால் வந்து பொருந்தா நிற்கும், சீவேசுரரும் உபாதிகற்பிதராயிருக்குங் காரணத்தினுல் சடசகம்போன்று பிரமத்தின் பரிச்சேதகரன்ரு மென்பது பொருள் எ—று. 18

(அ—கை)

அவ்விரண்டு உபாதியும் யாதென்னும் ஆகாங்க்ஷையுண்டாக அவ்விரண்டையும் கிரமமாகத் தெரிவிக்க இச்சையுடையராய் முதலில் ஈஸ்வரோபாதியாயுள்ள மாயாசத்தியை நிரூபணஞ் செய்கின்ருர்.

ஈசனிடைத் தாயொன்ரு யெப்பொருளு
நியமனஞ்செய் திருக்குஞ் சத்தி
மாசதிலா வானந்த மயமுதலெப்
பொருளிடத்து மறைந்து நிற்கும்
ஏசரிய சத்தியது பொருட்டரும
நியமியா தென்ரே வன்றே
நாசமுறுந் தம்மிற்ருந் தருமங்க
ளொருமிப்பான் ஞாலந் தானே. 19

(ப—ரை) ஈசனிடைத்தாய் = (ஈசுவரஉபாதித் தன்மையால்) ஈசுவரனை சம்பந்தித்ததாய், ஒன்ருய்=அநிர்வசனீயமாய், எப்பொருளும் நியமனஞ்செய்து=(அந்தர்யாமிப் பிராமணத்திற் சொல்லப்பட்ட

நியமிக்கத்தகுந்த பிருதிவிமுதலிய) எல்லாவற்றினையும் நியமிப்பதாய், சத்தியிருக்கும் = ஒரு மாயையாகிய சத்தியுளது. [அது எவ்விடத்து இருக்கின்றது எதனுற்றோற்றுவதில்லை யென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] மாசதுஇலா ஆனந்தமயமுதல் எப்பொருளிடத்தும் = குற்றமற்ற ஆனந்தமயந்தொடங்கி பிரமாண்ட பரியந்தமான சகல வஸ்துக்களிலும், மறைந்துநிற்கும் = மறைக்கப்பட்டதாயிருக்கின்றது. ஆனதால் தோற்றுகிறதில்லையென்பது பொருள். [நியமமாகத் தோற்றாததாகிய மாயைக்கு அசத்துத்தன்மை ஏன்கூடாது என்னுஞ் சங்கைக்கு சகத்தின் நியமனம் வேறுவிதமாகப் பொருந்தாமையால் மாயையை யவசியம் அங்கீகரிக்கவேண்டுமெனக் கூறுகின்றார்] ஏசரியசத்தியது = தள்ளுதற்கரிய மாயாசத்தியானது,என்று பொருள் தருமம்நியமியாதோ = எப்போது பிருதிவி முதலிய வஸ்துக்களின், (கடினத்தன்மை திரவத்தன்மை முதலிய) தருமங்களை வியவஸ்தாபனஞ் செய்யாதோ, அன்றே = அப்போதே, தருமங்கள் தம்மிற்றும் ஒருமிப்பால் = (கடினத்தன்மைமுதலிய) தருமங்கள் பரஸ்பரம்கலத்தலால் ஓரிடத்து இருக்குமாதலின், ஞாலந்தான் = பிரபஞ்சமானது, நாசமுறும் = அநியதவியவகார விஷயத்தன்மையையடையும் எ—று.

கலத்தலால் நாசம் பொருந்தாமையின்,இவ்வாறு பொருளுரைக்கப்பட்டது. ஏகாரம்தெரிநிலையில்வந்தது. ஒகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. 19

(அ—கை)

அற்றேல் சடமாகிய மாயைக்கு சகத்தின் நியாமகத்தன்மை பொருந்ாதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

சின்னிழல்புக் கிடுதலினு லச்சத்தி
சேதனம்போற் றிகழா நிற்கும்
இன்னவுபா தியின்புணர்வாற் பிரமமதே
யீசனுடை யியல்பை மேவும்
அன்னமய கோசமுனு முபாதியெணிற்
சீவனியல் பதுவு மாரும்
தன்னையன்மற் றவன்மகனைக் குறித்தொருவன்
றாதைமூ தாதை யாம்போல். 20

(ப—ரை) அச்சத்தி=அந்த மாயையானது, சின்னிழல் புக்கிடுதலினால் = சிதாபாசன் பிரவேசித்திருத்தலால், சேதனம்போல் திகழா நிற்கும்=சேதனத்தன்மையை அடைந்ததுபோன்று விளங்கா நிற்கும், ஆகையால் மாயைக்கு நியாமகத்தன்மை பொருந்துமென்பது பொருள் [இங்ஙனமிருக்கட்டும் பிரகிருதத்தில் என்ன சித்தித்ததெனிற் கூறுகின்றார்] இன்ன உபாதியின் புணர்வால்=இந்த மாயையாகிய உபாதியின் சம்பந்தத்தால், பிரமமதே=சச்சிதாநந்த வடிவப் பிரமமே, ஈசனுடை இயல்பை மேவும் = (சர்வக்ஞத்து வாதி தருமவிசிட்ட) ஈசுரத்தன்மையை அடையும், [சீவத்தன்மைக்கு உபாதியாயுள்ள கோசங்களை முன்னமே கூறியிருத்தலின், அவைகளை நிமித்தமாகவுடைய சீவத்தன்மையை இப்போது கூறுகின்றார்] அன்னமய கோசமுன் ஆம் உபாதியெணில்=அன்னமய கோசம் முதலிய உபாதிகளைக் கருதுங்கால், அது=சச்சிதானந்த வடிவப் பிரம்மமே, சீவன் இயல்பும்ஆரும்=சீவத்தன்மையையும் அதாவது சீவனென்னும்வியவகாரத்திற்கு விஷயமாந்தன்மையையும் பொருந்தும் [அற்றேல் ஒன்றற்கே ஒரேகாலத்தில் விருத்தமான இருதருமங்களின் சம்பந்தம் உலகில் ஓரிடத்தும் காணப்படவில்லையேயென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] ஒருவன்=ஒரே தேவதத்தன் (ஒரே காலத்தில்) தனையன் அவன் மகனைக் குறித்து = புத்திரனையும் பௌத்திரனையும் உத்தேசித்து, தாதை மூதாதையாம்போல் = பிதாவும் பிதாமகனும் ஆவது போல எ—று.

பிரம்மமே கோசமாகிய உபாதியை விவக்ஷிக்கும்போது ஜீவனாகின்றது. மாயையாகிய உபாதியை விவக்ஷிக்கும்போது ஈசுரனாகின்றது என்பது பொருள், பிதாமகன் =பாட்டன், தனையனென்பதில் னகர மெய் தோன்றல் விகாரம். தனையனென உணர்க.

மற்று-அசை, சித்நிழல் சின்னிழலென சம்ஸ்கிருத விதியால் புணரும்.

20

(அ—கை)

வாஸ்தவமாக சீவத் தன்மையாவது ஈசுரத் தன்மையாவது பிரமத்திற்கின்றுமென்பதைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்.

புத்திரன்முன் னோர்குறிப்பின் றெனிற்ருதை
மூதாதை புகல வில்லை
யத்திறனே யீசனுயி ரிலைச்சத்தி
கோசநினை வகலி னன்றே
யித்திறனே யெவன்பிரம முணர்வனிவன்
பிரமமே யென்ன லாந்தான்
சத்தியவத் துவுக்கில்லைப் பவமதனுன்
மீண்டிவனுஞ் சனித்தி டானே. 21

(ப—ரை) புத்திரன் முன்னோர் குறிப்பு இன்றெனில் = தனையன் முதலியவரைக் கருதாதபோது, தாதை மூதாதை புகல இல்லை = (தேவதத்தன்) பிதாவெனவும் பிதாமகனெனவும் சொல்லப்படுவதில்லை, அத்திறனே = அதுபோலவே, சத்திகோச நினைவு அகலின் = மாயையையும் கோசங்களையும் கருதாதபோது, ஈசன் உயிர் இலை = ஈஸ்வரனும் சீவனும் இன்ரும், [இப்போது சொல்லிய ஞானத்தின் பயனைக் கூறுகின்ருர்] எவன் = சாதனசதுஷ்டய சம்பன்னனுகிய எவ்வதிகாரி, இத்திறனே பிரமம் உணர்வன் = கூறிய பிரகாரத்தால் பஞ்சகோசங்களை வேறு பிரித்தல் பூருவகம் பிரத்தியகபின்ன சச்சிதானந்த வடிவப் பிரஹ்மத்தை சாக்ஷாத்கரிப்பனே, இவன் பிரமமே என்னலாம் = இவனைப் பிரஹ்மமென்றே சொல்லலாம், "எவன் பிரமத்தை யறிகின்ருனே அவன் பிரமமேயாகின்ருன், பிரமத்தை யுணர்ந்தவன் பரத்தையடைகின்ருன்" என்பது முதலிய சுருதிகளால், [அதனுற்ருன் என்னையெனிற் கூறுகின்ருர்]

சத்தியவத்துவுக்கு பவம் இல்லை = "பிறக்கிறதுமில்லை இறக்கிறதுமில்லை ஆன்மா" என்பது முதலிய சுருதியால்; பிரமத்திற்குப் பிறப்பின்ரும், அதனுல் = அக்காரணத்தினுலேயே, இவனும் = அறிஞனும், (தன்னைப் பிரம்ம ரூபமாக அறிந்ததனுல்) மீண்டும் சனித்திடான் = மறுபடியும் பிறவான், அவன் மீண்டும் திரும்புகிறதில்லை என்னுஞ் சுருதியால் எ—று. 21

பஞ்சகோச விவேகம் முற்றிற்று.

ஆகக் கவி 135.

உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## நான்காவது பிரகரணம்.

## *துவித விவேகம்.

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ்கரித்து துவித விவேகத்திற்குப் பத யோசனை செய்யப்படுகிறது.

(அ — கை)

இயற்ற விரும்பிய நூலிடையூறின்றி முடிதற்பொருட்டு இஷ்ட தேவதையின் சொரூப ஸ்மரண வடிவ மங்கலத்தையனுஷ்டிக்கின்றவராய் இந் நூல் வேதாந்தத்தின் பிரகரணமாதலால் சாஸ்திரத்திற் சொல்லிய அனுபந்த சதுஷ்டயத்தையே மீண்டும் சித்தித்ததாகக் கருதிக்கொண்டு கிரந்தத்திறாரம்பத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.

இறைவனாலு முயிராலு மியற்றுந்
துவிதம் வகுத்திசைப் பாம்
நிறைவிவேகஞ் செயிற் சீவ
னீக்கும்பந்த மேல் வெளியா
மறிக மாயை பகுதியென
வண்ணல் மேலா மாயாவி
பிறிவி லவன்செய் வானென்றே
பேசுஞ் சுவேதா சுவதரங்கள். 1

* இரண்டுவிதத்தினையடைவது எதுவோ அது துவைதமாம். அதன் விவேகம் அதாவது சீவனாற் செய்யப்பட்ட ஜகத்து ஈசுரனாற் செய்யப்பட்ட ஜகத்து என்றல் முதலிய பேதமாக விவேகித்தல் எதிலிருக்கின்றதோ அது துவைத விவேகமாம்.

(ப—ரை) இறைவனாலும் = (காரண உபாதியையுடைய) அந்தர்யாமியினாலும், உயிராலும் = (காரிய உபாதியையுடைய) சீவனாலும், இயற்றுந் துவிதம் = உண்டுபண்ணப்பட்ட உலகை, வகுத்து இசைப்பாம் = பிரித்துக் கூறுவாம், [இந்தத் துவித விவேசனம் காக்கையின் பல்லைப் பரீக்ஷித்தல் போன்று பயனற்றதாமென்னும் சங்கையைப் பரிகரிக்கின்றார்] நிறைவிவேகஞ்செயின் = (சீவேசுவரர்களாற்சிருஷ்டிக்கப்பட்ட துவிதத்தை) பூரணமாக விசாரஞ் செய்யின், மேல் சீவன் நீக்கும் பந்தம் வெளியாம் = அதன்பின் பூருவம் சொல்லிய சீவனால் தள்ளத்தக்க பந்த ஏது துவிதம் ஸ்பஷ்டமாம், இவ்வளவு துவிதம் சீவனால் தள்ளத்தக்கதென்பது நிச்சயிக்கப்படுமென்பது பொருள். [அதிருஷ்ட வாயிலாகச் சீவர்களே சகத்திற்குக் காரணமாமென வாதிகள் கூறுகின்றார்கள். ஆகையால் சகத்து ஈஸ்வரனால் சிருஷ்டிக்கப்பட்டதென்று எப்படிச் சொல்லலாம் என்னுஞ் சங்கைக்கு அநேக சுருதிகளுக்கு விரோதம் வருதலால் இச்சங்கையை எழுப்புவது சரியன்றாமென்று அபிப்பிராயஞ்செய்து சுவேதாசுவதர வாக்கியத்தை முதலில் அருத்தத்தாற் படிக்கின்றார்] மாயை பகுதியென அறிக = மாயையைப் பிரகிருதியென்றறிய வேண்டும், மாயாவி மேலாம் அண்ணல் = மாயா விசிட்ட பிரமத்தை மேலாகிய பரமேஸ்வரனென்று அறிய வேண்டும், பிறிவில் அவன் செய்வான் என்றே = நீக்கமின்றிய அப்பரமேசுரனே சகத்தைச் சிருஷ்டிப்பவனென்று, சுவேதாசுவதரங்கள் பேசும் = (அவ்வீசுரனுக்கே சகத்தின் காரணத்தன்மையை) சுவேதா சுவதர உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன எ—று. 1

(அ—கை)

ஐதரேய உபநிஷத்தின் வாக்கியத்தை அருத்தத்தால் அனுசரிக்கின்றார்.

ஆன்மா விதுவாய் முன்னின்று
  னவன்கண் டாக்கி னென்றுந்
தான்மா நினைவால் ஞாலமெலாந்
  தந்தா னென்று மிருக்கோதும்
வான்மா ருதந்தீ நீர்பார்கூழ்
  மற்றுமன்ன முடன் முறையே
யூன்மா யையிலப் பொருளாமிவ்
  வுணர்வி னின்றும் வந்ததெலாம். 2

(ப—ரை) இது = நாமரூபான்மகமான சகலப் பிரபஞ்சமும், முன் = சிருஷ்டிக்குப் பூருவம், ஆன்மாவாய்நின்ருன் = ஆன்ம சொரூபமாகவேயிருந்தது, அவன் = அவ்வான்மாவே, கண்டு = ஈக்ஷணஞ் செய்து, ஆக்கினன் என்றும் = சிருஷ்டித்தான் எனவும், தான் = அவ்வான்மாவே, மாநினைவால் = பெரிதாகிய சங்கற்பத்தினுல், ஞாலம் எலாம் தந்தான் என்றும் = உலகமனைத்தையுமுண்டாக்கினனெனவும், இருக்கு ஓதும் = இருக்கு வேதம் (அத்துவிதீய பரமான்மாவுக்கே சகத்தின் காரணத்தன்மையைக்) கூறுகின்றது, [ஈஸ்வரன் உலகின் காரணமாம் என்பதில் தைத்திரீய சுருதியும் பிரமாணமாமென்றபிப்பிராயப்பட்டு அவ்வாக்கியத்தை அருத்தத்தாற் படிக்கின்ருர்] வான் = ஆகாசம், மாருதம் = வாயு, தீ = அக்கினி, நீர் = ஜலம், பார் = பிருதிவி, கூழ் = ஓஷதி, அன்னம் = நெல்யவை முதலிய அன்னம், உடல் = தேகம், எலாம் = ஆகிய இவையனைத்தும், முறையே = கிரமமாக, ஊன்மாயையில் = இழிவாகிய மாயையாகிய உபாதியினுல், அப்பொருளாம் இவ்வுணர்வினின்றும் = அந்தப் பிரம்மவடிவ இந்தப்பிரத்தியக்கான்மாவினின்றும், வந்தது = உண்டாயிற்று எ—று. 2

(இதுவுமது)

பின்னு நானே வெகுவாவேன்
பிரசை யாவே னெனக்காமித்
துன்னித் தவஞ்செய் தீன்ருனிவ்
வுலகை யென்னுந் தித்திரிதான்
முன்ன மிருந்த திதுசத்தாய்
முழுதா குவமென் றதுநோக்கி
வன்னி படைத்தண் டசமாதி
வகுத்ததென்பர் சாமகரே. 3

(ப—ரை) பின்னும் = மற்றும் (வாக்கியமுளது அஃதாவது), நானே வெகு ஆவேன் = நான் அநேக வடிவங்களாக ஆவேனுக, பிரசை ஆவேன் = சகல ஜனங்களாக ஆவேனுக, எனக்காமித்து = என்றிவ்வாறு இச்சித்து, உன்னித்தவஞ்செய்து = நிலைத்துத் தவத்தினைச்செய்து, இவவுலகை ஈன்ருன் = இச்சகத்தைச் சிருஷ்டித்தான், என்னும் தித்திரிதான் = என்று தைத்திரீய உபநிடதமானது கூறும்,

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம்" என்றூரம்பித்து "அவ்விவ் வான்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று" என்பது முதல் "அன்னத் தினின்றும் புருஷன்" என்பது பரியந்தமான வாக்கியத்தால் குகையி லிருப்பதால் பிரத்தியக்கான்மாவோடு அபின்னமான பிரமத்தினின் றும் ஆகாசாதி பரியந்தமான சகத்து உண்டாயிற்றென்று கூறிப் பின்னரும் "அவர் அனேக வடிவமாக ஆவேனென்றிச்சித்தார்; அவர் தபசைச் செய்து இவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித்தார்" என்னும் வாக்கியத்தால் அப்பிரமத்திற்கே சகத் சிருஷ்டியினிச்சாபூருவக விசா ரத்தால் சகத்தின் காரணத்தன்மையைத் தைத்திரீய உடநிஷத்துக் கூறுகிறதென்பது பொருள், [சாந்தோக்கியத்திலும் பிரமத்திற்கே சகத்தின் காரணத்தன்மை கேட்கப்பட்டுளது எனக் கூறுகின்ருர்] இது = இச்சகத்து, முன்னம் = சிருஷ்டிக்குப் பூருவம், சத்தாய் இருந் தது = உண்மை வடிவப் பிரமமாகவேயிருந்தது, அது முழுது ஆகுவ மென்று நோக்கி = அப்பிரமம் எல்லாம் ஆவோமென்றீக்ஷணஞ் செய்து, வன்னி படைத்து = அக்கினி (ஜலம் பிருதிவியாகிய இவை களைச்) சிருஷ்டித்து, அண்டசம் ஆதி வகுத்தது = பக்ஷிசரீரம் முதலிய வற்றையும் சிருஷ்டித்தது, என்பர் சாமகர் = என்று சாமவேதிகள் கூறுவார்கள் எ—று.

ஏ — அசை.

"இது பூருவம் சத்தாகவேயிருந்தது. அது ஒரே அத்துவிதீயப் பிரம்மமாம்" என்று சத்துருப அத்துவிதீயப் பிரம்மத்தையாரம்பித்து "அது அனேக வடிவமாவோமென்றீக்ஷித்தது. அது வன்னியைச் சிருஷ்டித்தது" என்பதாதியால் அதற்கே ஈக்ஷண பூருவகம் வன்னி சலப் பிருதிவிகளின் காரணத்தன்மையைக் கூறி "அவ்விப்பூதங் களுக்கு (பிராணிகளின் சரீரங்கட்கு) மூன்று பீஜங்களேயுள்ளன. அவை அண்டஜம், சீவஜம், உற்பிஜ்ஜமாம்" என்பது முதலிய வாக்கி யத்தால் அண்டஜம் முதலிய சரீர காரணத்தன்மையையும் சாமவேதி கள் கூறுகின்றனர் என்பது பொருள். 3

(அ—கை)

முண்டக உபநிடதத்திலும் "அவ்விது சத்தியம், ஜொலிக்கப்பட்ட அக்கினியினின்றும் பொறிகள் சமான வடிவமுள்ளவைகளாய் ஆயிரக் கணக்காக எப்படி உண்டாகின்றனவோ அதுபோல அக்ஷரப்பிரமத்தி னின்றும் சௌமிய! நாநாவிதமான பொருள்கள் உண்டாகின்றன."

அதிலேயே லயத்தையடைகின்றன என்று அக்ஷர சத்தவர்ச்சியப் பிர மத்தினின்றும் உலகினுற்பத்தி கேட்கப்படுகின்றது எனக்கூறுகின்றார்.

பொறிக ணெருப்பி லெழுவனபோற்
பொலியக் கரவத் துவின்விவித
வறிவு செடபா வங்களுமா
மென்னு மதர்வ ணச்சுருதி
பிறிவற் றுலகா யிருந்ததுமுன்
பெயரோ டுருவாய்ப் பிரிந்ததுபின்
னெறியுற் றிடுமற் றவைவிராட்
டாதிகளிலே நிகழு மால். 4

(ப—ரை) நெருப்பில் பொறிகள் எழுவனபோல் = (சொலிக்கின்ற) வன்னியிலிருந்து விஸ்புலிங்கங்கள் (பொறிகள்) ஆயிரக்கணக்காக உண்டாவனபோன்று, பொலி அக்கரவத்துவின் = விளங்காநின்ற அக்ஷரப்பிரமத்தினின்றும், விவித அறிவு செடபாவங்களும்ஆம் = நாநாப்பிரகாரமான சேதன அசேதனபதார்த்தங்கள் உண்டாகின்றன, என்னும் அதர்வணச்சுருதி = என்று கூறுகின்றது முண்டகோபநிடதம், அக்கினிக்குச்சாமான்யம் விசேஷம் என இரண்டு வடிவமுளது. அவற்றுள் நிருபாதிகம் சாமானியவடிவமாம். அது ஜலத்தினும் சூக்ஷ்மமும் பத்துமடங்கு வியாபகமுமாம். காஷ்டம் முதலிய உபாதிகளையுடைய அக்கினி விசேஷ வடிவமாம். அது உபாதிகளின் பேதத்தால் பலவகையும் பரிச்சின்னமுமாம். இங்கே சோபாதிக அக்கினியின் புஞ்சமாகிய கூட்டத்தினின்றும் உபாதியின் அம்ஸங்களால் பொறி யென்னும் அம்ஸம் உண்டாவதுபோன்று அம்ஸங்கள் உண்டாகின்றன. மறுபடியும் உபாதியின் அம்ஸங்களின் விலயத்தால் விலயமாவதுபோல விலயமாகின்றன. அக்கினிக்கு வாஸ்தவமாக நாநாத்தன்மையும் உற்பத்தியும் விநசமுமின்றாம். அதுபோல சேதனத்திற்கும் சாமானியம் விசேஷமென இரண்டு வடிவமுண்டு. அவற்றுள் நிருபாதிகப் பிரமம் சாமான்ய வடிவமாம். அது ஏகமும் வியாபகமுமாம். மாயை அவித்தை யென்னும் உபாதிகளையுடைய சிதாபாசன் சேதனத்தின் விசேஷவடிவமாம். அச்சிதாபாசன் நாநாவும் பரிச்சின்னமுமாம். அந்த விசேஷாம்ஸமாகிய ஆபாசனுக்கு உபாதிகளின் நாநாத்துவத்தால் நாநாத்தன்மையும் உற்பத்தியும் விநாசம் முதலியவையுமுண்டாம். சேதனத்திற்கு

வாஸ்தவமாக நாநாத்தன்மை முதலியவையின்ரும். ஆதலால் சீவப் பிரமங்களுக்கு அம்ஸாம்ஸி பாவமின்ரும். [சாந்தோக்கியத்திற்போன்று பிரகதாரண்யக உபநிடதத்திலும் அவ்வியாகிருத சத்தவாச்சிய பிரமத்தி னின்றும் நாமரூபவடிவ சகத்து உண்டானது எனக்கேட்கப்பட்டது என்று கூறுகின்ருர்] உலகு = பிரபஞ்சமானது, முன் = சிருஷ்டிக்கு முன், பிரிவற்றுஆயிருந்தது = அவ்வியாகிருத பிரமவடிவமாகவேயிருந் தது, பின்பெயரோடு உருவாய் பிரிந்தது = பின்பு சிருஷ்டிகாலத்தில் நாமரூபமாய் வெளிப்பட்டது, அவை = அந்நாமரூபங்கள், நெறிஉற்றி டும் விராட்டு ஆதிகளில் நிகழும் = கிரமமாகப் பொருந்தியுள்ள விராட் புருஷன் முதலானவர்களிடத்து வெளிப்படையாம் எ—று.

ஏ-ஆல்—அசை. 4

(அ—கை)

விராட்டாதிகள் யாவையெனிற் கூறுகின்ருர்.

அவ்வி ராட்டு மனுநரர்க
ளாக்கள் கரங்கள் பரியயங்க
ளிவ்வி தந்தான் ருெந்தமெறும்
பீரு மெனும்வா யதநேயி
சிவ்வி ரூபாந் தரஞ்செய்து
தேகம் புக்கா னீசனென
செவ்வி தாமம் மறைகள்
சொலுஞ் சீவனுவி தரித்தலினும். 5

(ப—ரை) அவ்விராட்டு = விராட்புருஷனும், மனு = மனுபகவா னும், நரர்கள் = மனுஷ்யர்களும், ஆக்கள் = பசுக்களும், கரங்கள் = கழுதைகளும், பரி = குதிரைகளும், அயங்கள் = ஆடுகளும், இவ்விதம் = இப்படியே, எறும்புஈரும் = பிபீலிகை பரியந்தமான, தொந்தம் = ஆண் பெண் மிதுனவடிவங்களும், ஆகியஇவைகளையே, எனும்வாயதநேயி = (விராட்டாதி) யென்று கூறுவார்கள் வாஜசநேயிரிஷிகள். "பிரசித்த மாகிய இவ்வனைத்தும் அப்போது அவ்வியாகிருதமாக இருந்தது, அது நாமரூபங்களால் வெளிப்பட்டது, இது நாமம், இது ரூபம்" என் னும் வாக்கியத்தால் சிருஷ்டிக்குப் பூர்வம் அஸ்பஷ்ட நாமரூபத் தன் மையால் அவ்வியாகிருத சத்தவாச்சிய மாயோபகித பிரமத்தினின்றும் நாமரூபங்கள் வெளிப்படையாதலாகிய சிருஷ்டி சொல்லப்பட்டது,

விராட்டாதி தூலகாரியங்களில் அந்நாமரூபங்களின் வெளிப்படையும், "அந்த இந்த அவ்வியாகிருதம் இப்போது இது நாமம் இது ரூபம் என நாமரூபங்களால் வெளிப்பட்டது" என்னும் வாக்கியத்தால் கூறப்பட்டது. "இது முன்பு ஆன்மாவாகவே இருந்தது புருஷ வடிவன்" என்பதுமுதல் "இப்படியே எறும்பு பரியந்தமாக யாதொரு மிதுனங்களுண்டோ அவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித்தார்" என்பது பரியந்தமான வாக்கியத்தால் அவ்விராட்டாதிகள் தெரிவிக்கப்பட்டன என்பது பொருள். [உதாகரிக்கப்பட்ட சுருதிகளால் துவிதசிருஷ்டியைச் சொன்னதின்பின் பிரமத்திற்குச் சீவரூபத்தால் அதில் பிரவேசமும் சொல்லப்பட்டதெனக் கூறுகின்றார்] சிவ்விரூபாந்தரஞ்செய்து = சீவசம்பந்தி விகாரி ரூபத்தைச்செய்து, ஈசன் = பரமான்மா, தேகம் புக்கான்என = சரீர சமுதாயத்தில் பிரவேசித்தான் என்று, செவ்விதாம் அம்மறைகள் சொலும் = உயர்வாகிய அவ்வுபநிடதங்கள் உரைக்கின்றன, [சீவத்தன்மையெதனாலெனிற் கூறுகின்றார்] ஆவி தரித்தலினால் = பிராணனைத் தாரணஞ்செய்வதால், சீவன்ஆம் = சீவனென்று சொல்லப்படும் எ—று.

நிருவிகாரப் பிரமத்திற்கு விலக்ஷணம் விகாரிரூபம் ரூபாந்தரமாம், பிராணதாரணமாவது பிராணாதிகளைச் சுவாமியாயிருந்து பிரேரிப்பது. அதனால் சீவரூபத்தைச் செய்து பிரவேசித்ததென்று சொல்லப்பட்டது. தான்-அசை. 5

(அ—கை)

அச்சீவரூபம் யாதென்னுமாகாங்கைஷயுண்டாகக் கூறுகின்றார்.

இடமாம் போத மிலிங்கவுட
லியையும் போத நிழலொன்றித்
திடமாஞ் சீவன் பரைமாயை
செகஞ்செய் வலிமை யுடைத்தாம்போன்
மடமாம் வலியு முடைத்தவனை
மயக்கு மிந்த மடமையினாற்
சடமா முடலின் மூழ்கியிறைத்
தன்மை யொருவிச் சோருவனால். 6

(ப—ரை) இடமாம்போதம் = (இலிங்கதேக கற்பனைக்கு) ஆதாரமான சைதன்னியமும், இலிங்கஉடல் = (அதில் கற்பிதமான) சூக்ஷ்ம

சரீரமும், இயையும்போதநிழல்=சூக்கும சரீரத்திற் பொருந்தியுள்ள சிதாபாசனும், ஒன்றி =(ஆகிய மூன்றுஞ்)சேர்ந்து, திடமாஞ் சீவன்= திடமாகிய சீவனென்று சொல்லப்படும், [ஈஸ்வரனே சீவரூபமாகப் பிரவேசித்திருப்பின் அந்த சீவரூபமாகிய ஈசுரனுக்கு அஞ்ஞத்தன்மை துக்கித்தன்மை முதலிய விருத்த தருமமுடையதாந்தன்மை யெதனு லென்னுஞ் சங்கைக்குக்கூறுகின்றார்]பரைமாயை = மகேஸ்வரஸம்பந்தி மாயையானது, செகஞ் செய்வலிமை உடைத்தாம்போல் = உலகை யுண்டுபண்ணுஞ் சாமர்த்தியமுடையது போன்று, மடம்ஆம் வலியும் உடைத்து=மோகன சத்தியையுமுடையது, "அந்த இதுசடம் மோக வடிவம்" என்னுஞ் சுருதியினுல் [அதனுலென்னெனிற் கூறுகின்றார்] அவனே மயக்கும் = (இந்த மோகன சத்தியையுடைய மாயையானது) பூருவஞ்சொல்லிய சீவனே மயக்குகின்றது. அதாவது சிதானந்தவடிவ ஆன்ம ஞானமின்றியவனுகச் செய்கின்றது. [அதனுற்றன் என்னே யெனிற் கூறுகின்றார்] இந்த மடமையினுல் = இந்த மோகன சத்தி யினுல், இறைத்தன்மை ஒருவி = ஈசுரத்தன்மையை விட்டு, சடமாம் உடலில் மூழ்கி = சடமாகிய தேகத்தில் தாதான்மியாபிமானமுற்று, சோருவன்=சோகத்தையடைவன் எ—று.

ஆல்-அசை.

ஈஸ்வரத்தன்மையாவது இஷ்டப்பிராப்தியிலும் அநிஷ்டநிவர்த் தியிலும் சாமர்த்தியமாம். சோகம்=நான் துக்கி என்பது முதலிய அபி மானம், "ஒரே தேகவடிவ விருக்ஷத்தில் புருஷன் மூழ்கினவனுய் அநீ சுவரத்தன்மையால் மோகமுற்றவனுய் சோகத்தையடைகின்றான்" என்னும் சுருதியாலென்பது பொருள். 6

(அ—கை)

பின்சொல்லப்போகிற சாங்கரியத்தைப் பரிகரிக்கும்பொருட்டுச் சொல்லியதை முடிக்கின்றார்.

இறைசெய் துவிதந் தொகுத்துரைத்தே
மேழா மனப்பி ராமணந்தா
னறையு முயிர்செய் துவிதம்வகுத்
தன்ன மேழாம் ஞானத்தோ
டுறையுந் தவத்தாற் பிதாத்தந்தா
னென்று நரர்க்குச் சுரர்க்கிரண்டா
நிறையு மான்மாக் கொருமூன்று
நியோக மன்னம் பசுக்கொன்றே. 7

(ப—ரை) இறைசெய் துவிதம்=ஈசுரனுல் சிருஷ்டிக்கப்பட்ட இந்தத்துவிதப் பிரபஞ்சமனைத்தையும், தொகுத்துஉரைத்தேம்=சுருக்கமாகக் கூறினேம், [அற்றேல் சீவனுக்கு துவிதத்தையுண்டுபண்ணுந் தன்மையில் பிரமாணம் யாதுஎன்னும் சங்கைக்குக்கூறுகின்ருர்] ஏழாம் அனப்பிராமணந்தான்=சப்தான்னப் பிராமணச் சுருதியானது, உயிர்செய் துவிதம் அறையும்=சீவனுல் சிருஷ்டிக்கப்பட்ட துவிதப்பிரபஞ்சத்தைப் பிரதிபாதிக்கும், [அதில் எவ்வாறு பிரதிபாதிக்கப்பட்டதென்னுஞ் சங்கைக்குச் சப்தான்ன சத்தத்தின்வாச்சிய துவிதசிருஷ்டியைப் பிரதிபாதிக்கின்ற "பிதாவானவர் ஞானத்தாலும் கருமத்தாலும் ஏழன்னங்களை உண்டுபண்ணினுர்" என்னும் சுருதிவாக்கியத்தைப் பொருளாற் சங்கிரகிக்கின்ருர்] பிதா=பிதாவானவர், உறையும் ஞானத்தோடு தவத்தால்=திட ஞானத்தாலும் கருமத்தாலும், ஏழாம் அன்னம் வகுத்துத் தந்தான்=சப்தான்னங்களையும் தனித்தனி சிருஷ்டித்தார், [அற்றேல் ஏழன்னங்களையும் சிருஷ்டித்தல் எதற்காகவென்னுஞ் சங்கைக்கு அதனுபயோகமும் "இம்மனிதர்க்குச் சாதாரணமாகிய ஒரு அன்னத்தையும், தேவர்களுக்கு இரண்டு அன்னத்தையும் பங்கிட்டுக் கொடுத்தார், தன்பொருட்டு மூன்றன்னங்களைச் செய்தார், பசுக்களுக்கு ஒரு அன்னத்தைக் கொடுத்தார்" என்னும் வாக்கியத்தால் சொல்லப்பட்டதெனக் கூறுகின்ருர்] நரர்க்கு ஒன்று=மனிதர்களுக்கு ஒரு அன்னமும், சுரர்க்கு இரண்டு=தேவர்களுக்கு இரண்டு அன்னமும், நிறையும் ஆன்மாவுக்கு ஒரு மூன்றும்=நிறைந்த சீவர்களின் பொருட்டு மூன்றன்னமும், பசுக்கு ஒன்று அன்னம்=பசுக்களுக்கு ஒரு அன்னமும் ஆக, நியோகம் ஆம்=உபயோகமாம், இவ்விதம் கூறப்பட்டுளது என்பது பொருள், பிதா=தனத திருஷ்ட வாயிலாக உலகை உற்பத்தி செய்வதனுல் சகல உலகையும் பாலனஞ் செய்யுஞ் சீவன் ஆம் எ—று.

ஆம் பிரித்துக் கூட்டப்பட்டது. ஏ—அசை. 7

(அ—கை)

அவ்வேழு அன்னங்களும் "ஒன்று இவருக்கு சாதாரணுன்னமாம். யாதொரு இது புசிக்கப்படுகிறதோ அதுவே சாதாரணுன்னம்" என்பது முதல் "இவ்வான்மா வாங்மயன் மனேமயன் பிராணமயன்" என்பதீருகவுள்ள வாக்கியக் கூட்டத்தால் தெரிவிக்கப்பட்டன எனக் கூறுகின்ருர்.

சனமாம் விரீகி யெழுவாயுந்
தரிச பூர்ண மாசங்கள்
மனவாக் குயிருங் கீரமுமே
வயங்கே ழன்ன மென்றுணர்க
முனமோ திறையா லிவையுருவாய்
முளைத்த வெனினுஞ் சீவனவை
யனமா நீர்மை யுஞற்றினு
னறிவாற் கரும மதனுனும். 8

(ப—ரை) சனமாம் விரீகி எழுவாயும்=உற்பத்தியுடையனவாகிய நெல் முதலியனவும், தரிச பூர்ண மாசங்கள்=தரிச பூர்ண மாச யாகங்களும், மனம் வாக்கு உயிரும்=மனமும் வாக்கிந்திரியமும் பிராண வாயுவும், கீரமும்=பாலும், (ஆகிய இவைகளே) வயங்கு ஏழ் அன்னம் என்று உணர்க=விளங்காநின்ற சப்தான்னமாமென்று அறிவாய், [அற்றேல் சொல்லிய சத்தான்னமும் சகத்தினுள் அடங்கினபடியால் ஈசுரனால் உண்டுபண்ணப்பட்டதாதலின் சீவனுலுண்டுபண்ணப்பட்ட தென்று கூறுதல் பொருந்தாது என்னுஞ் சங்கைக்கு அதன் சொருபம் ஈசுரனுலுண்டுபண்ணப்பட்டதாயினும் போக்கியத்தன்மை வடிவம் சீவனுலுண்டுபண்ணப்பட்டபடியாலங்ஙனமன்றெனக் கூறுகின்றார்]முனம் ஓது இறையால்=பூருவஞ் சொல்லிய பரமேஸ்வரனால், இவை உருவாய் முளைத்த எனினும்=இவ்வேழன்னங்களும் சொருபமாக உண்டாயினவாயினும், சீவன்=சீவனானவன், அறிவாலும் கருமமதனுலும்=ஞானத்தாலும் கருமத்தாலும், அவை அனமா நீர்மை=ஈசுரனால் சிருஷ்டிக்கப்பட்ட அவ்வேழன்னங்களில் போக்கியத் தன்மையை, உஞற்றினன்=செய்தான் எ—று.

கருமமதனுலும் என்பதிலுள்ள உம்மை அறிவால் என்பதனோடும் சேர்க்கப்பட்டது.

தரிசம் என்னுஞ்சொல் = அமாவாசையின் பெயராம், ஈண்டு அமாவாசையில் செய்யப்படுகிற ஆக்கினேயம், ஐந்திரந்ததி, ஐந்திரம் பய என்னும் மூன்று யாகங்களுக்கும் தரிசமென்று பெயராம். அப்படியே பூர்ணமாச சப்தமும் பூரணிமை தினத்திற்குப் பெயராம். பூரணிமை திதியில் செய்யப்படுகிற ஆக்கினேயம், அக்கினிஷ்டோமீயம், உபாம்ஸு என்னும் மூன்று யாகங்களுக்கும் பெயராம். ஆகவே ஆறு யாகங்களும் தரிச பூர்ண மாச சப்தத்தாற் சொல்லப்படுகின்றன. ஞானமும்

விகிதம் நிஷித்தம் என இருவிதம். தேவதாத்தியானம் விகிதம். பரஸ்திரீயைச் சிந்தித்தல் நிஷித்தம். ஞானமென்பது உபாசனைக்காம். கருமமும் விகிதம் நிஷித்தமென இருவிதம். விகிதம் யக்ஞாதி, நிஷித்தம் பிராணிகட்குத் துன்பஞ் செய்தல் முதலியன.

போக்கியத்தன்மை=போகசாதனத்தன்மை. 8

(அ—கை)

இதனால் (மேற்செய்யுளால்) என்ன சொல்லப்பட்டதெனிற் கூறுகின்றார்.

ஈசன் செய்கை யுயிருணவிவ்
விரண்டோ டொருமித் துறுஞால
நேச மகளிர் தாதையினு
னேர்ந்து பதிக்கே நுகர்வாம்போற்
பாச மாயா விருத்திமயப்
பகவ னினைவு தங்கருவி
நீச மனத்தின் விருத்தியுயிர்
நினைவு நுகர்வின் சாதனமே. 9

(ப—ரை) ஞாலம்=(சத்தான்னமாகச் சொல்லப்பட்ட விரீகி முதலிய) சகத்து, ஈசன் செய்கை=கடவுளின் காரியத் தன்மையும், உயிர் உணவு=சீவர்களின் போக்கியத் தன்மையுமாகிய, இவ்விரண்டோடு ஒருமித்து உறும்=இவ்விரண்டினோடும் சேர்ந்திருக்கும், [ஒன்றற்கு இரண்டின் சம்பந்தத்தில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] நேச மகளிர்=வாஞ்சிக்கத் தகுந்த ஸ்திரீயானவள், தாதையினால்நேர்ந்து=பிதாவினால் சனித்து, பதிக்கு நுகர்வாம் போல்=கணவனுக்குப் போக்கியமாவது போல, [ஈசுரனுக்கும் சீவனுக்கும் சகத்தையுண்டுபண்ணுவதில் சாதனம் யாதெனிற் கூறுகின்றார்] மாயா விருத்தி மயப் பகவன்தன் நினைவு=மாயா விருத்தி ரூப பரமேஸ்வரனது சங்கற்பம்,கருவி=(உலகினுற்பத்தியிற்) சாதனமாம், பாசநீச மனத்தின் விருத்தி உயிர் நினைவு=பந்த ஏதுவான இழிவாகிய மனோவிருத்தி வடிவ சீவ சங்கற்பம், நுகர்வின் சாதனமே = சுகதுக்காதி போகத்தின் சாதனமாம் எ—று. 9

(அ—கை)

அற்றேல் ஈசுரனல் சிருஷ்டிக்கப்பட்ட வஸ்து சொரூபத்தினும் வேருக போக்கியத்தன்மை வடிவமேயின்ரும். சீவனலெது சிருஷ்டிக் கப்படுகிறது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

பகவா னுஞற்று மணியாதி
பதார்த்த மொருபண் பாய்நிற்க
நுகர்வான் மதிப்பல் விருத்திகளா
னுகர்ச்சி நான விதமாகும்
தகவா மணிபெற் றவன்மகிழ்வன்
சாரா மையின் மற்றவனயர்வன்
மிகநோக் கினுமன் னதின்விரத்தன்
மேவா னுவகை யிடும்பையுமே. 10

(ப—ரை) பகவான் உஞற்றுமணியாதி பதார்த்தம் = ஈசுரனல் சிருஷ்டிக்கப்பட்ட மணி முதலிய வஸ்துக்கள், ஒரு பண்பாய் நிற்க = ஒரே விதமாயிருக்க, நுகர்வான் மதிப்பல் விருத்திகளால் = போக்தாக் களின் புத்தி விருத்திகளின் பேதத்தால், நுகர்ச்சி நானவிதம் ஆகும் = அதன் போகமும் அநேக விதமாக அங்கீகரிக்கப்படுகின்றது, ஒரே விஷயத்திலனுபவிக்கப்படுகிற அநேகவிதமான போகங்கள் அதற்குக் காரணமான போக்கியத்தினகார பேதத்தைச் சாதிக்கின்றன என்பது பொருள், [அற்றேல் அநேக விதமான போகங்களுளதேல் அதற்குக் காரணமாக போக்கியத்தினகார விசேஷங்களைக் கற்பிக்கலாம். அவை யேயின்ருமென்னுஞ் சங்கைக்கு, காணப்படுகிறபடியால் அங்ஙனமன் றெனக் கூறுகின்ருர்] தகவான் மணிபெற்றவன் மகிழ்வன் = (மணியி னிச்சையுள்ள ஒருவன்) உயர்வாகிய மணியை அடைந்தவனய்ச் சந்தோஷிப்பன், மற்றவன் = (மணியினிச்சையுள்ளவனய்) மணியைப் பெருதவன், சாராமையின் அயர்வன் = மணி கிடைக்காமையினல் வெறுப்பையடைவன், அன்னதின் விரத்தன் = மணி விஷயத்தில் விராகமுள்ள சந்நியாசியானவன், மிக நோக்கினும் = நன்ருக மணி யைப் பார்ப்பவனயினும், உவகை இடும்பையும் மேவான் = (பிராப்தி அப்பிராப்தி நிமித்தகமான) சந்தோஷத்தையும் குரோதத்தையும் அடையான் எ—று.

ஏ—அசை. 10

(அ—கை)

போகபேதத்தோடு கூடியதாய் சீவனுல் சிருஷ்டிக்கப்பட்டதா யுள்ள அவ்வாகார விசேஷங்கள் யாவையெனிற் கூறுகின்ருர்.

விருப்பு வெறுப்பு பேக்ஷை
யெனும் வேறுபாடு மணிமருவும்
சிருட்டி யுயிரி ஞமீசன்
சிருட்டி பொதுமை வடிவாகும்
மருக்கி மனைவி மதுனிமகள்
மாதா யெனப்பல் விதமாவ
ளொருத்தி மாமன் முதலானே
ருணர்வா லுருவிற் பிரிவிலளே. 11

(ப—ரை) மணிமருவும் = மணியிற் பொருந்தியுள்ள, விருப்பு வெறுப்பு உபேட்சை எனும் வேறுபாடு = பிரியத்தன்மை அப்பிரியத் தன்மை உபேக்ஷியத்தன்மைகளாகிய ஆகார விசேஷங்கள், உயிரின் சிருஷ்டியாம் = சீவனுல் சிருஷ்டிக்கப்பட்டனவாம், பொதுமைவடிவு = மூன்றிலும்அநுகூதமாயுள்ளமணியின்சொரூபம், ஈசன்சிருட்டிஆகும் = ஈசுரனுல் சிருஷ்டிக்கப்பட்டதாம், [சொல்லிய சீவனுற் சிருஷ்டிக்கப் பட்ட ஆகாரவிசேஷத்தையே வேறுதிருஷ்டாந்தத்தால்வெளிப்படுத்து கின்ருர்] ஒருத்தி = ஒரே ஸ்திரீயானவள், மாமன் முதலானேர் உணர் வால் = மாமன் கணவன் முதலானவர்களுடைய புத்தியினுல், மருக்கி = மருமகளாகவும்,மனைவி = பத்தினியாகவும், மதுனி = நாத்தினுளாகவும், மகள் = புத்திரியாகவும், மாதா = தாயாகவும், என பல்விதமாவள் = என் றிவ்விதம் நாநா சொரூபமுடையவளாவள், உருவில் பிரிவிலள் = (ஈசு ரனுல் சிருஷ்டிக்கப்பட்ட)சொரூபத்தால் பேதமின்றியவளாவள் எ—று. ஏ-அசை. 11

(அ—கை)

அற்றேல் ஸ்திரீவிஷயகமான மனைவி மருமகள் என்பனமுதலிய ஞானங்களே பேதமுடையனவாய்த் தோற்றுகின்றன. அவைகளின் விஷய வடிவ ஸ்திரீயின் சொரூபத்தில் பேதந் தோற்றவில்லையாகை யால் மாமன் முதலானேரது புத்தியினுல் ஸ்திரீயானவள் நாநாவித சொரூபமுடையவளாவள் என்று கூறியது பொருத்தமன்ருமென வினவுகின்ருன்.

ஆயின் ஞானம் பலபிரிவா
மாகா ரந்தான் பிரிவிலதா
மேய வொருத்தி வடிவிலுயி
ரியற்றும் வியப்பின்ரு மென்ன
னேய வொருத்தி தசைவடிவி
நினைவின் வடிவி மற்றெருத்தி
மேய தசைமேனிய ளொன்ரு
மேனும் வேரு நினைவுருவி. 12

(ப—ரை) ஆயின் = அற்றேல், ஞானம் பலபிரிவாம் = மனைவி மருமகளென்பது முதலிய ஞானங்களே நாநா வடிவின வாய்ப்பேத முடையனவாம், ஆகாரந்தான் = அவைகளின் விஷயமாகிய ஸ்திரீயின் சொரூபமோ, பிரிவு இலதாம் = பேதமின்றியதாம், மேய ஒருத்திவடிவில் = (ஈசனுற்) பொருந்திய ஒரு ஸ்திரீயின் சொரூபத்தில், உயிர் இயற்றும் வியப்பு = சீவனுல் சிருஷ்டிக்கப்பட்ட அதிசயம், இன்ரும் = காணப்படவில்லை ஆதலின், [ஞானங்களுக்குள்ள வேற்றுமையானது விஷயங்களின் வேற்றுமையின்றிப் பொருந்தாதாதலின் விஷயத்தில் ஆகாரபேதத்தை அங்கீகரிக்க வேண்டியதே யாமென்னுமபிப்பிராயத் தால் பரிகரிக்கின்ருர்] என்னல் = என்று சங்கைசெய்யற்க, நேய ஒருத்திதசைவடிவி = (ஈசனுற் சிருஷ்டிக்கப்பட்ட) அன்புள்ள ஒரு ஸ்திரீயானவள் மாம்சவடிவினள், மற்றெருத்தி நினைவின் வடிவி = சீவனுற் சிருஷ்டிக்கப்பட்ட மற்றெரு ஸ்திரீயானவள் சங்கற்ப வடிவினள், மேயதசை மேனியள் ஒன்ருமேனும் = ஈசுரனுற் பொருந்திய மாம்ச வடிவினள் பேதமின்றியவளாயினும், நினைவுஉருவிவேரும் = சீவனது சங்கற்ப வடிவினள் பேதமுடையவளேயாம் எ—று. 12

(அ—கை)

அற்றேல் பிராந்தி முதலிய இடத்தில் பாகியவிஷயமின்மையால் ஆண்டுள்ள வஸ்து மனேமயமாயிருக்குக பிரமிதி ஸ்தலத்திலோ அது பொருந்தாது, பாகிய விஷயமிருப்பதனுலென்று வினவுகின்ருன்.

மயக்கங் கனவு மனோரதத்தால்
வருசிந் தைகளின் மனோமயமாம்
வியக்கு நனவின் மானத்தான்
மேயமதுவா காதெனின்மெய்
நயக்கு மான மேயத்தா
ணணலின் விடயா கிருதியாம்
பயக்கும் பாடி யமும்வார்த்தி
கமுமிவ் வருத்தம் பகர்வனவாம். 13

(ப—ரை) மயக்கம் = (பழுதையில் பாம்பு முதலிய) பிராந்தியிலும், கனவு = சொப்பனத்திலும், மனோரதத்து = மனோராஜ்யத்திலும், வருசிந்தைகளில் = வாசனையாலுண்டாகா நிற்கும் ஸ்மிருதிகளிலும் மனோமயம்ஆம் = விஷயம் சங்கற்ப வடிவமாயிருக்குக, வியக்குநனவில் = மகத்தாகிய சாக்கிரா வஸ்தையில், மானத்தால் மேயம் = பிரத்தியக்ஷாதி பிரமாணத்தால் சனித்த பிரமிதியின் விஷயமானது, அது = சங்கற்ப வடிவம், ஆகாது எனின் = ஆகமாட்டாதென்று சொல்லின், [பிரமிதிஸ்தலத்தில் பாகிய விஷயமுண்டென்பதை அங்கீகரிக்கின்றார்] மெய் = நீ சொல்வது உண்மைதான், [அப்படியானல் அதன் விஷயத்திற்கு மனோமயத்தன்மையெப்படிச் சொல்லப்படுகிறது எனிற் கூறுகின்றார்] நயக்குமானம் = சிறந்த பிரமாணஜன்னியவிருத்தி, மேயத்தால் நணலின் = விஷயத்தோடு சம்பந்தித்தலால், விடயாகிருதியாம் = விஷயாகாரத்தையடையும், அதாவது கட முதலிய விஷயாகாரத்தை யடைந்த அந்தக்கரணவிருத்தி சீவனாற் சிருஷ்டிக்கப்பட்ட துவிதப் பிரபஞ்சமா மென்பதுகருத்து, [அற்றேல் இது உமதுகபோல கற்பிதமா மென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] பயக்கும் பாடியமும் வார்த்திகமும் = நன்மையைச் செய்யும் (பூச்சியபாத சங்கராசாரிய சுவாமிகளால் செய்யப்பட்ட) பாஷியமும், (சுரேஸ்வராசாரிய சுவாமிகளால் செய்யப்பட்ட)வார்த்திகமும், இவ்வருத்தத்தைப்பகர்வனவாம் = இப்பொருளைக் கூறுகின்றனவாம் எ—று.

ஆல்–அசை. 13

(அ—கை)

அவற்றுள் முதலில் பாஷியக்காரரது வசனத்தை உதாகரிக்கின்றார்.

செம்பைக் குகையின் வார்க்கவதன்
　　றிறமா மதுபோ லுருவாதி
பம்புஞ் சித்தம் விரைந்தந்தப்
　　பண்பாய்த் தோன்றுமொளி வெயிலுங்
கும்பமுதலி னுருவு பெறுங்கொள்கை
　　மதியும் பொரு ளனைத்து
மிம்பர் விளக்கு மதனுலே
　　யிலகும் பொருளின் வடிவாயே. 14

(ப—ரை) செம்பை=உருக்கிய தாம்பிரத்தை, குகையின்வார்க்க =அச்சுக்கருவில் விட, அதன் திறமாம்=அவ்வச்சுக்கருவின் சமாகாரமாம், அதுபோல்=இத்திருஷ்டாந்தம்போல, உருவாதிபம்புஞ்சித்தம் = உருவாதி விஷயங்களை வியாபிக்கும் மனமானது, விரைந்து அந்தப்பண்பாய் தோன்றும்=சீக்கிரமாய் அவ்விஷயாகாரமாய்ப்பிரதீதியாகின்றது, [அற்றேல் அக்கினிசம்பந்தத்தால்இளகிய தாம்பிரம்முதலியவை அச்சுக்கருவில் விடப்பட்டனவாய் கடின அச்சுக்கருவின் சம்பந்தத்தால் சீதளமாகும்போது அச்சுக்கருவின் ஆகாரத்தையடையினும் அமூர்த்தமாய்த் தாம்பிராதியினின்றும் விலக்ஷணமாயுள்ள புத்திக்கு விஷயவியாப்தி (சம்பந்தம்) உளதாயினும் அவ்விஷயாகாரத்தன்மை எதனுலென்னுஞ் சங்கைக்கு வேறு திருஷ்டாந்தங் கூறுகின்றுர்] ஒளிவெயில்=பிரகாசஞ்செய்யும் ஆதபம் முதலிய ஆலோகம், கும்பம் முதலின் உருவுபெறும் கொள்கை=பிரகாசிய கடம் முதலிய ஆகாரத்தையடைவது போன்று, மதியும்=புத்தியும், இம்பர் பொருளனைத்தும் விளக்கும் அதனுல்=ஈண்டு சகல பதார்த்தங்களையும் பிரகாசிப்பதால், பொருளின் வடிவாய் இலகும்=அர்த்தத்தின் சமாகாரமுடையதாய் விளங்கும், தோற்றுகின்றதென்பது பொருள் எ—று.

உம்-அசைநிலை. 14

(அ—கை)

இப்போது வார்த்திகக்காரரது வசனத்தைக் கூறுகின்றுர்.

மாது ருவினின் றெழுமானம்
வருமம் மானமேய முறும்
போது மதுமே யத்துடனே
பொருந்தி மேய நிகருருவா
மேது விதனுற் கடவிடய
மிரண்டா மணுரு மதியுருவென்
றோது மணுரு மேயமதா
முணர்வா லொளிரு மதியுருவே. 15

(ப—ரை) மாதுருவினின்று மானம் எழும் = பிரமாதாவினின்றும் ஆபாச சகித அந்தக்கரண விருத்தி யுற்பத்தியாகும், வரும் அம் மானம் மேயம்உறும்=உற்பன்னமாகிய அவ்விருத்தி கடாதி விஷயங்களையடையும், போதும்அது = உண்டாகிய அவ்விருத்தியானது, மேயத்துடனே பொருந்தி=கடாதி விஷயங்களோடு சம்பந்தப்பட்டதாய், மேயநிகர் உருவாம்=கடாதி விஷயங்களின் சமாணுகாரத்தையடையும், [இங்ஙனம் விருத்திகள் விஷயசமாணுகாரமாயிருக்குக பிரகிருதத்தில் என்ன சித்தித்ததெனிற் கூறுகின்ருர்] ஏது இதனுல் = இக்காரணத்தினுல், கடவிடயம்=கடமாகிய விஷயம், மண்உரு மதிஉரு என்று இரண்டாம் = மண்மயமெனவும் மதிமயமெனவும் இரண்டு சொரூபமுடையதாம், [அற்றேல் மண்மயகடம்போன்று மனேமய கடமானது அதேமனதால் கிரகிக்க அசக்கியமாதலானும் கிரகணஞ்செய்வது வேறின்மையானும் மனேமயகடம் இல்லையாமென்ருு சங்கித்து கிரகணஞ்செய்வது வேறின்றென்பது அசித்தமாமெனக் கூறுகின்ருர்] ஓதுமண் உருமேயமதாம்=சொல்லிய மண்மய கடமானது பிரமிதிக்கு விஷயமாம், அதாவது பிரமாதாபாஸியமாம் (அதுபோன்று) மதிஉரு= மனேமயகடமானது, உணர்வால் ஒளிரும் = சாக்ஷியால் விளங்கும், அதாவது சாக்ஷி பாஸியமாம் எ—று.

ஏ-அசை.

பிரமாதா=அதிஷ்டான சகித புத்தியிலுள்ள சிதாபாசன், பிரமாண ஜன்னிய விருத்திவாயிலாக எவற்றைசாக்ஷி பிரகாசிக்கின்றதோ அப்படிப்பட்ட பாகிய கடம் முதலியவைகள் பிரமாதாபாஸியமெனப்படுகின்றன. அவித்தையின் விருத்தி வாயிலாக அல்லது உள்ளேயே யுண்டாகிய விருத்தி வாயிலாக எவற்றை சாக்ஷி பிரகாசிக்கின்றதோ

அப்படிப்பட்ட இரச்சுசர்ப்பம் சொப்பனம் சுகம் துக்கம் காமம் முதலிய மனோமய பதார்த்தங்கள் சாக்ஷி பாஸியமெனப்படுகின்றன. 15

(அ—கை)

இப்படி ஈசுரனால் உண்டாக்கப்பட்டதும் சீவனாலுண்டாக்கப் பட்டதுமாகிய பேதத்தால் இரண்டு விதம் துவிதமிருக்குக. இவற்றுள் தள்ளத்தக்கதெது தள்ளத்தகாததெது என்பது அறியப்படுகிறதில்லை யென்னுஞ் சங்கைக்கு சீவனாற்சிருஷ்டிக்கப்பட்ட மனோமய பதார்த்தங் களே தள்ளத்தக்கனவாமென்றபிப்பிராயப்பட்டு அவற்றில் பந்த ஏதுத் தன்மையைக் காண்பிக்கின்றார்.

பறையு முடன்பாடெதிர் மறையாற்
பந்திப் பதுயிர் மதியுருவா
முறையி னிதுதான் சுகதுக்க
முளதா மிலதே லிலதாகும்
மறையு மெனினும் புறப்பொருடான்
மனுயிர் கனவிற் பந்தமுறும்
நிறையுஞ் சமாதி துயின்மூர்ச்சை
நேரத்து நினும் விடுபடுமால் 16

(ப—ரை) பறையும் உடன்பாடெதிர் மறையால் = சொல்லா நின்ற அன்வயவெதிரேகங்களால், மதி உரு = மனோமய பதார்த்தமே உயிர்பந்திப்பது ஆம் = ஜீவனைப்பந்தப்படுத்துவதாம், [உடன்பாடெதிர் மறைகளையே யுணர்த்துகின்றார்] இது உறையின் = (சீவனாற் சிருஷ் டிக்கப்பட்ட) மானசப் பிரபஞ்சமானதிருக்கின், சுகதுக்கம் உளதாம் = சுக துக்கங்களுண்டாகின்றன, இலதேல் = சீவசிருஷ்டியான மானசப் பிரபஞ்சமின்றேல், இலதாகும் = சுகதுக்கங்களில்லையாம், [அப்படியா னால் சொல்லிய அன்வயவெதிரேகங்கள் ஈசுரனாலுண்டாக்கப்பட்ட வெளிப்பொருள் விஷயகமாக ஏன் ஆகாவெனிற் கூறுகின்றார்] கனவில் = சொப்பனாவஸ்தையில், புறப்பொருள் தான் மறையும் எனி னும் = (அனுகூலமான ஸ்திரீ முதலியவையும் பிரதிகூலமான புலி முதலியவையும் ஆகிய பாரமார்த்திக) பாகிய பதார்த்தங்களில்லா விடி னும், மன்உயிர் = அவ்வவஸ்தையிற் பொருந்திய சீவனானவன், பந் தம் உறும் = சுகதுக்கங்களோடு கூடுகின்றான், நிறையும் சமாதி துயில்

மூர்ச்சை நேரத்து=பூரணமாகிய நிருவிகற்ப சமாதியிலும் சுழுத்தி காலத்திலும் மூர்ச்சை காலத்திலும், உறினும்=புறப்பொருள்களிருப்பினும், விடுபடும்=சுக துக்காதியினின்றும் விடுபடுவன், ஆகையால் புறப்பொருள் விஷயகமாக அன்வயவெதிரேகங்களின்ரும் என்பது பொருள் எ—று. தான்-ஆல்—அசை. 16

(அ—கை)

மனோமயப் பிரபஞ்சத்திற்கு பந்தஹேதுத்தன்மையாகச் சொல்லிய அன்வயவெதிரேகங்களை திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துகின்ருர்.

தூர தேசத் துறும்புதல்வன்
சுகமா யிருப்ப வவன்ருதை
தீரப் பரவஞ் சகன்சொல்லாற்
செத்தா னெனக்கொண் டரற்றுவனுற்
சாரங் கவன்றுஞ் சியுமச்சொற்
ருன்கேளா மையா லற்ருன்
பாரிங் கிதனு லுயிரையெலாம்
பந்திப் பதுமா னதசகமே. 17

(ப—ரை) தூர தேசத்து உறும் புதல்வன்=தூர தேசத்திலிருக்கும் மகன், சுகமாயிருப்ப = ஆரோக்கியமாய் சீவித்துக்கொண்டிருக்க, அவன் தாதை=(வீட்டில்) அவனுடைய பிதாவானவர், பர வஞ்சகன் திரசொல்லால் = வாய்மொழிகளால் அன்னியரை வஞ்சிக்கும் புருஷனுடைய உனது புத்திரனிறந்தானென்னும் திடமாகிய வாக்கியத்தால், செத்தான் எனக்கொண்டு=தனது புத்திரனிறந்தானென்று கருதிக்கொண்டு, அரற்றுவன் = அழுவன், அங்குசார் அவன் துஞ்சியும்=தேசாந்திரத்திற் பொருந்தியுள்ள புத்திரன் ஆண்டிறந்தொழியினும், அச்சொல் கேளாமையால்=அம்மரண வார்த்தையைக் கேளாதபடியால், அற்ருன் = அழுகையின்றியவனுயிருக்கின்றனன், [திரண்ட பொருளைக் கூறுகின்ருர்] இதனுல் = இக்காரணத்தினுல், மானதசகமே = மானசப் பிரபஞ்சமே, உயிரையெலாம் பந்திப்பது= பிராணிகளனைத்தையும் பந்தப்படுத்துவதாம், இங்குபார்=ஈண்டு பிரத்தியக்ஷமாகப் பார்ப்பாய் எ—று. ஆல்— அசை.

*திர என்பது தீர என இசையைக்குறித்து நீண்டது.* 17

(அ—கை)

மனோமயப் பிரபஞ்சத்திற்கே பந்தஹேதுத்தன்மையை அங்கீகரிக்கின் வெளிப்பொருள்களை நீக்குதலால் அபசித்தாந்தத்தினடைவுண்டாமென வினவுகின்றான்.

பயனற் றமையிற் புறப்பொருள்கள்
பௌத்த வாதமெனி னன்றாம்
பயனி னெஞ்ச வுருநேடப்
பகர்வாகிய மிங்குட்கொள லாற்
பயனற் றதுமாம் வாகியத்தைப்
பற்றற் றொழிக்கக் கருதேமாற்
பயனை விரும்பா மானங்கள்
பற்று மிதுவே நிலையாகும். 18.

(ப—ரை) புறப்பொருள்கள் பயன் அற்றமையின் = வெளிப்பொருள்கள் வியர்த்தமானமையால், பௌத்தவாதமெனின் = விஞ்ஞான வாதம் நேருமென்று சொல்லின், [பரிகரிக்கின்றார்] அன்றாம் = விஞ்ஞான வாதத்தின் பிராப்தியின்றாம், பயனின் நெஞ்ச உரு நேட = பயனையுடைய மனோமய வடிவத்தைச் சம்பாதிக்கும் பொருட்டு, பகர் வாகியம் இங்கு உட்கொளலால் = சொல்லாநின்றவெளிப்பொருள்களை ஈண்டங்கீகரித்தலால், அ தா வ து மானசப் பிரபஞ்சத்திற்கே பந்தஹேதுத் தன்மையுளதாயினும் அதற்குக் கா ர ண மா க வெளிப்பொருள்களையங்கீகரித்தலால் விஞ்ஞான வாதப் பிரசங்கமின்றாம் என்பது கருத்து, [அற்றேல் மானசப் பிரபஞ்சமுண்டாதற் பொருட்டு வெளிப்பொருள்கள் அபேக்ஷிக்கத்தக்கனவன்று, பூருவ பூருவ மானசப் பிரபஞ்சத்தின் சம்ஸ்காரம் உத்தர உத்தர மானசப் பிரபஞ்சத்திற்குக் காரணமாகப் பொருந்துகின்றபடியால் என்னுஞ் சங்கைக்குப் பிரௌடிவாதத்தால் அதனையங்கீகரிக்கின்றார்] பயனற்றதும் ஆம் = பாகிய பதார்த்தம் பயனின்றியதும் ஆகுக, [அப்படியானால் விஞ்ஞான வாதத்தினும் விசேஷம் யாதெனிற் கூறுகின்றார்] வாகியத்தைப் பற்றற்று ஒழிக்கக் கருதேம் = வெளிப்பொருளை யபேக்ஷித்தலின்றி நிவர்த்திக்க நினையேம், விஞ்ஞான வாதிகள் வெளிப்பொருளையே நிவர்த்திக்கின்றார்கள். நாங்களங்ஙனமன்று. இதுவே விசேஷமாமென்பது பொருள், [பயனின்மையாலங்கீகரித்தலும் பொருத்தமன்றாமென்னும் சங்கைக்கு

கூறுகின்றார்] மானங்கள் பயனை விரும்பா=பிரமாணங்கள் பிரயோசனத்தை யபேக்ஷியா, இதுவே பற்றும் நிலையாகும்=என்னுமிதுவே பொருந்திய மரியாதையாம் எ—று.

வஸ்துவின் சித்தி பிரமாணத்தின தீனமாம் பிரயோஜனத்தின் அதீனமன்று, பிரமாணத்தால் சித்தித்த வழியிற் கிடக்கின்ற புல்முள் முதலிய வஸ்துவிற்குப் பயனின்மை மாத்திரத்தால் அசத்துத் தன்மையை இலௌகீகராலும் வாதிகளாலும் அங்கீகரிக்காமையினால் என்பது கருத்து. துர்ச்சன தோஷமென்னும் நியாயத்தால் தனது மேன்மையைக் குறித்துச் சொல்லுதல் எதுவோ அது பிரௌடிவாதமாம். இங்கே பாகிய வஸ்துக்களுக்கு வியர்த்தத் தன்மை யில்லாதிருந்தும் அதையங்கீகரித்தல் பிரௌடிவாதமாம்.

ஆல்—அசைநிலை 18

(அ—கை)

மானசத் துவைதத்திற்கே பந்தகாரணத்தன்மையிருக்கின் அதற்குச் சித்தவிருத்தி நிரோவடிவ யோகத்தினாலேயே நிவர்த்தி சம்பவிக்குமாதலின் பிரம ஞானத்திற்கு பந்த நிவர்த்தகத் தன்மையை அங்கீகரித்தல் விருத்தமாமென வினவுகின்றான்.

மனத்தின் துவிதம் பந்தமெனின்
மனம தொடுங்கிற் கெடுமதனால்
பனித்து மியோகஞ் செயவேண்டும்
பரம வுணர்வா லென்கொலெனி
னனித்த மப்போ தாமெனினு
மதுபிற் பிறவா தொழிவதுதான்
கனத்த பிரம வுணர்வொழிந்து
கைகூடாதென் றுரலிக்கு மறை. 19

(ப—ரை) மனத்தின் துவிதம் பந்தமெனின்=மானசப் பிரபஞ்சமே பந்த காரணமாமென்று சொல்லில், மனமது ஒடுங்கின் கெடும்=மனது நிரோதமாயின் அதன் விகாரமாகிய பிரபஞ்சமும் சாந்தமாம், அதனால்=அக்காரணத்தினால், பனித்தும் யோகம் செயவேண்டும்=வருந்தியும் சித்தவிருத்தி நிரோத வடிவ யோகத்தையப்பியசிக்க வேண்டும், பரம உணர்வால் என்கொல்=பிரம ஞானத்தால் என்ன

பிரயோஜனம், எனின் = என்று வினவில், [யோகத்தால் தாற்காலிக துவைத நிவர்த்தி சொல்லப்படுகிறதா அல்லது ஆத்தியந்திக நிவர்த்தி சொல்லப்படுகிறதா என்று விகற்பஞ் செய்து முதலாவதை அங்கீ கரித்து இரண்டாவதைத் தூஷிக்கின்றூர்] அது அப்போது அநித்தம் ஆம் எனினும் = மானசப் பிரபஞ்சமானது சமாதி காலத்தில் சாந்தி யாயினும், பின் பிறவாது ஒழிவது தான் = எதிர்காலத்தில் சனனமா காமல் சாந்தியாவது, கனத்த பிரம உணர்வு ஒழிந்து = மேலாகிய பிரம ஞானமின்றி, கைகூடாது = சித்திக்காது, என்று மறை ஒலிக் கும் = என்றிவ்வாறு வேதாந்தம் பறையறைகின்றது எ—று.

"தேவனையறிந்து சகல பாசங்களினின்றும் விடுபடுகின்றுன். சிவனையறிந்து ஆத்தியந்திக சாந்தியையடைகின்றுன். எப்போது தோலைப்போல ஆகாசத்தை மனிதர்கள் சுருட்டுவார்களோ அப்போது தேவனையறியாது துக்கத்தின் சாந்தியுண்டாம்" என்பது முதலிய சுருதிகளில் அன்வயவெதிரேகங்களால் பிரமஞானத்தாலேயே பந்த நிவர்த்தி கூறப்படுகின்றது. அதாவது யோகத்தால் துவைதத்தின் தாற்காலிக நிவர்த்தியுண்டாகின்றது. தத்துவ ஞானத்தால் ஆத்தி யந்திக நிவர்த்தியுண்டாகின்றது. எந்தக் காலத்தில் சித்தத்தின் நிரோதமுண்டாகிறதோ அந்தக் காலத்தில் மாத்திரம் துவைதத்தின் நிவர்த்தியுண்டாகின்றது. அது தாற்காலிக நிவர்த்தியாம். துவைதம் நிவர்த்தியாகிய பின் உண்டாகாமலிருப்பது அதாவது காரணத்தோடு கூட துவைதம் நீங்குதல் ஆத்தியந்திக நிவர்த்தியாம். 19

(அ—கை)

அற்றேல் வெளிப்பிரபஞ்சத்தின் நிவர்த்தியின்றி அத்துவிதீய பிரமஞானமே யுண்டாகாதென்னுஞ் சங்கைக்கு அதன் நிவர்த்தி இன்றேனும்அதன் மித்தியாத்தன்மை ஞானத்தாலேயே பாரமார்த்திக அத்துவிதத்தை அறியக்கூடுமென்று கூறுகின்றூர்.

இறைவன் சிருட்டி யாந்துவித
மிருப்ப வதனைப் பொய்மையென
வறியிற் பிரமத் தொருமையெளி
தறிதற் கொருமை வாதிகளால்
வெறுமைக் காலத் ததுவொழிய
விரோதித் துவித மிலதேனும்
உறநற் குருநூன் முதலிலதா
லுணர்தற் கரிதா மொருமையையே. 20

(ப—ரை) இறைவன் சிருட்டியாம் துவிதம் இருப்ப=ஈஸ்வர சிருட்டியாகிய துவைதப் பிரபஞ்சமானது நிவர்த்திக்கப்படாமலிருப்பினும், அதனை பொய்மையென அறியின்=அவ்வீசுவர சிருட்டியாகிய துவைதப் பிரபஞ்சத்தை மித்தையென்றுணரின், பிரமத்து ஒருமை= அத்துவிதீயப் பிரமத்தை, ஒருமைவாதிகளால்=ஐக்கியவாதிகளாகிய வேதாந்திகளால், அறிதற்கு எளிது=உணர்தற்கு சுலபமாம், [துவிதம் மித்தையென்னும் ஞானம் அத்துவித ஞானத்திற்குக் காரணமன்றாம், மற்றே துவித நிவர்த்தியே காரணமாம் என்றாக்கிரகஞ் செய்யும் புருஷனைக் குறித்துக் கூறுகின்றார்] வெறுமைக் காலத்து=பிரளய காலத்தில், அது ஒழிய=துவிதப் பிரபஞ்சம் நிவர்த்தியாக, விரோதித் துவிதம் இலதேனும்=அத்துவித ஞானத்திற்கு விரோதியாகத் (தங்களால் கருதப்பட்ட) துவிதப் பிரபஞ்சமின்றேனும், உறநற்குரு நூல் முதல் இலதால்=ஞானம் பொருந்தும் வண்ணம் நல்ல ஆசாரியர் ஞான சாஸ்திரம் முதலியவையின்மையால், ஒருமையை = அத்துவிதீயப் பிரமத்தை, உணர்தற்கு அரிது ஆம்=அறிதற்கு அசக்கியமாம், ஆகையால் துவைத நிவர்த்தி அத்துவிதீய ஆன்மாவையுணர்தற்குக் காரணமன்றென்பது கருத்து எ—று.

ஏ—அசை. 20

(அ—கை)

ஈசுரத் துவிதத்தின் நாசம் அத்துவித ஞானத்திற்குக் காரணமன்றெனினும் துவைதமிருக்கும்போது அத்துவித ஞானமெப்படியுண்டாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

அண்ண னிருமி தத்துவித
மலவாதிப்ப தாங் கருவி
யொண்ணு மதுவோ நழுவலிதா
லுறைக வேறெவ் வாறுகு
மெண்ணில் சீவத் துவிதமிரண்
டெழினு னூலி லாமையென
நண்ணற் பாற்றுந் தத்துவத்தின்
ஞான நண்ணும் வரைநூலே. 21

(ப—ரை) அண்ணல் நிருமிதத் துவிதம்=ஈசுரனால் சிருஷ்டிக்கப்பட்ட துவிதப் பிரபஞ்சமானது, வாதிப்பது அல = அத்துவித

ஞானத்திற்குப் பாதகமன்று, எப்படி கடம் குண்டலம் முதலியவற்றின் வடிவம் மண், பொன் முதலியவற்றின் ஞானத்திற்குப் பாதகமன்றே அப்படித் துவிதம் அத்துவித ஞானத்திற்குப் பாதகமன்றாம். அதன் மித்தையாத்தன்மை ஞானத்தாலேயே அத்துவித ஞானத்தினுற்பத்தியைக்கூறி வந்துளேமாதலின், மற்றே, கருவி ஆம்=சாதகமாம், குரு சாஸ்திராதி வடிவ துவிதப் பிரபஞ்சம் அத்துவித ஞானத்திற்குச் சாதனமாதலால், ஒண்ணும் அது=பொருந்திய ஆகாசாதிப் பிரபஞ்சமானது, நழுவல்=நம்மால் நிவர்த்திக்க அசக்கியமுமாம், இதால்=இக்காரணத்தால், உறைக=ஈசுவர சிருட்டியான துவிதமிருக்குக, வேறு எவ்வாறு ஆகும்=பேதம் எப்படிச் சித்திக்கும், அல்லது, வேறு=பேத மூலகமான துவேஷம், எவ்வாறு ஆகும் = பிரபஞ்சத்தில் எதனால் செய்யப்படுகிறது, [இப்போது சீவனாற் சிருஷ்டிக்கப்பட்ட துவைதப் பிரபஞ்சத்தைப் பிரிக்கின்றார்] எண்ணில்=கருதுமிடத்து, சீவத்துவிதம்=சீவனாற் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சமானது, எழில் நூல் நூலிலாமையென இரண்டு=சிறந்த சாஸ்திரீயமெனவும் அதாவது சாஸ்திரத்தால் விதிக்கப்பட்டதெனவும், அசாஸ்திரீயமெனவும், அதாவது சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டதெனவும் இரண்டு விதமாம், [அவ்விரண்டு விதமும் எப்போதும் தள்ளத்தக்கதா எனின் அன்றென்று கூறுகின்றார்] தத்துவத்தின் ஞானம் நண்ணும் வரை=ஆன்ம சாக்ஷாத்காரம் உண்டாகும் பரியந்தமும், நூல் நண்ணற்பாற்று ஆம்= சாஸ்திரீயப் பிரபஞ்சமானது கொள்ளத்தக்கதாம் எ—று.

ஓ, ஏ — அசைகள். 21

(அ—கை)

அச்சாஸ்திரீயப் பிரபஞ்சம் யாது என்னும் இச்சையுண்டாகக் கூறுகின்றார்.

சீவப் பிரம விசாரணையே
செப்பு நூன்மா னதசெகமா
மேவத் தகுதத் துவமுணரின்
விடற்பாற் றதுவென் றிடுஞ்சுருதி
மாவல் லபநூல் கற்றறிஞன்
மாறி மாறித் தான்பயிற்சித்
தோவ வரிய பரம்பொருடேர்ந்
துற்கை போற்பின் பதைவிடுக. 22

(ப—ரை) சீவப்பிரம விசாரணையே=பிரத்தியக்கு வடிவ பிரமத்தினது சிரவணாதிகளே, நூல் மானத செகமா செப்பும்=சாஸ்திரீய மானசப் பிரபஞ்சமென்று சொல்லப்படும், [அற்றேல் தத்துவ சாக்ஷாத்கார பரியந்தமுமென்று சொல்லியது பொருந்தாது, சுழுத்தி பரியந்தமும் மரண பரியந்தமும் வேதாந்த விசாரத்தால் காலத்தைக் கழிக்குக என்று ஸ்மிருதியிற் கூறியிருத்தலால் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] மேவத் தகுதத்துவம் உணரின் = அடையத் தகுந்த பிரமான்மைக்கிய வடிவ தத்துவத்தைச் சாக்ஷாத்கரிக்கின், அது விடற்பாற்று = சாஸ்திரீயப் பிரபஞ்சமானது விடத்தக்கதாம், என்றிடும் சுருதி=என்று கூறுகின்றது உபநிடதம், அப்படியாலுல் மரண பரியந்தமும் என்னும் வாக்கியத்திற்கு என்ன கதியெனின்,காமாதிகளுக்கு இலேசங்கூட அவகாசத்தைக் கொடுக்கலாகாது என்னுமுற்பாதியில் காமாதிகளுக்கு அவகாசங் கொடுத்தலை நிஷேதித்திருப்பதால் அதன்கண் தாற்பரியமாமென்று கூறுகின்றேம். ஆகையால் யாதொரு அனுப பத்தியுமின்ரும் என்பது அபிப்பிராயம், [தத்துவ ஞானத்திற்குப் பின்பு அதன் தியாகத்தைப் பிரதிபாதிப்பதற்ருற்பரியமுடைய சுருதிகளையுதாகரிக்கின்ருர்] அ;றிஞன்=மேதாவியாகிய புருஷன், மாவல்லப நூல் கற்று=மிகச் சாமர்த்தியமுள்ள சாஸ்திரத்தைப் படித்து, மாறி மாறிப் பயிற்சித்து = மீண்டும் மீண்டும் அப்பியாசஞ் செய்து, ஓவ அரிய பரம்பொருள் தேர்ந்து = தள்ளத் தகாத பரமான்மாவைச் சாக்ஷாத்கரித்து, பின்பு=பிறகு, உற்கை போல்=கொள்ளிக்கட்டையைப்போல, அதை விடுக=சாஸ்திரீயப் பிரபஞ்சத்தை விடுவாயாக எ—று.

தான்—அசை.

சமையல் செய்பவன் சமையல் முடிந்தபின் எரிந்த கட்டைகளைத் தள்ளிவிடுவது போல் முமுக்ஷுவானவன் பரப்பிரமத்தை அறிந்தபின் சாஸ்திரத்தை விடவேண்டும், ஞானத்திற்குமுன் விடலாகாது. ஏனெனின் பிரமத்தையறிதலே சாஸ்திரத்திற்குப் பிரயோசனமாம். வேறில்லை. அதனை ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளும் விவேக சூடாமணியென்னும் நூலில் பரத்தையறியாமல் வித்தையைப் படித்தல் பிரயோசனமில்லாததாம், பரத்தையறிந்த பின்னும் வித்தையைப் படித்தல் பிரயோசனமில்லாததாமெனக் கூறியிருக்கின்றனர்.

[இதுவுமது]

நூலைப் பயிற்சித் தறிஞன்மதி
நுண்மை மதி பெற்றவனாய்வைக்
கோலை விடல்போற் றானியங்கைக்
கொண்டோ னூலை யறவிடுக
மேலைப் பொருடேர்ந் தந்தணனும்
விறலோன் பிரஞ்ஞை பெறல்வேண்டும்
மாலைத் தருமிக் கொலிநினையல்
வாக்குக் கதுமிக் கிளைப்பன்றே. 23

(ப—ரை) அறிஞன்=புத்திமானாகிய புருஷன், நூலைப்பயிற்சித்து=சாஸ்திரத்தையப்பியசித்து, மதி=ஞானத்தையும், நுண்மை மதி=விஞ்ஞானத்தையும், பெற்றவனாய்=அடைந்தவனாய், தானியம் கைக்கொண்டோன் = தானியத்தைக் கைப்பற்றிய புருஷனானவன், வைக்கோலை விடல்போல் = வைக்கோலைப் பரித்தியாகஞ் செய்வது போல, நூலை அற விடுக=சாஸ்திரத்தை யத்தியந்தம் விட்டு விடுக, அந்தணனும் விறலோன் = பிராம்மணனாகிய தீர புருஷன், மேலைப் பொருள் தேர்ந்து=பூருவங் கூறிய ஆன்ம தத்துவத்தையேயறிந்து, பிரஞ்ஞைபெறல்வேண்டும்=நிதித்தியாசனத்தைச்செய்தல்வேண்டும், மாலைத்தரும் மிக்கு ஒலி=மயக்கத்தைக் கொடுக்கும் மிகுந்த சப்தங்களை, நினையல்=சிந்தனை செய்யலாகாது, [அதிலேதுவைக் கூறுகின்றார்] அது=அதிகமாகச் சப்தங்களை நினைத்தலும் உச்சரித்தலும், வாக்குக்கு மிக்கு இளைப்பு அன்றே=மனதிற்கும் வாக்குக்கும் மிகுந்த பரிசிரமமல்லவா எ—று.

நினைத்தல் உச்சரித்தலுக்கும், வாக்கு மனத்திற்கும் உபலக்ஷணமாம். ஞானம் = பரோக்ஷ ஞானம், விஞ்ஞானம் = அபரோக்ஷ ஞானம். 23

[இதுவுமது]

ஆக்க மவனே கனைத்தெரிக
வயலாம் வாக்கு களையொழிக
வாக்கை யறிஞன் மனத்தொடுக்க
வென்ப தாதி மறைதெரிக்கு
மாக்க னூலி லாமையிரு
வகைதீ விரமந் தமுமென்றே
தாக்குங் காமா திகடீவிரஞ்
சலிக்கு மனோ ராச்சியமந்தம். 24

(ப—ரை) ஆக்கம் அவன் ஏகனை(யே) தெரிக = உயர்வாகிய அவ்வான்மா ஒன்றனையேயறிவாய், அயலாம் வாக்குகளை ஒழிக= அன்னியமான வசனங்களை விட்டுவிடுவாய்,அறிஞன்=புத்திமானாகிய புருஷன், வாக்கை மனத்து ஒடுக்க=வாக்கிந்திரியத்தை மனதில் லயஞ் செய்க, என்பது ஆதிமறை தெரிக்கும் = என்பது முதலிய சுருதி வெளிப்படையாகக் கூறும், [அசாஸ்திரீயப் பிரபஞ்சத்தின் அவாந்தர பேதத்தைக் கூறுகின்றார்] ஆக்கல் நூல் இலாமை = மிருதியாகிய அசாஸ்திரீயப் பிரபஞ்சமும், தீவிர மந்தமும் என்று இருவகை = தீவிரப் பிரபஞ்சமென்றும், மந்தப் பிரபஞ்சமென்றுமிரண்டு விதமாம், [இரண்டு விதத்தையும் கிரமமாக உதாகரிக்கின்றார்] தாக்கும் காமாதிகள் தீவிரம்=துன்பத்தைச் செய்யா நின்ற இச்சை துவேஷம் முதலிய வைகளே தீவிரப் பிரபஞ்சமாம், சலிக்கும் மனோராச்சியம் மந்தம் = சலித்தல் வடிவ மனோராச்சியமே மந்தப் பிரபஞ்சமாம் எ—று. 24

ஏ — அசை.

(அ—கை)

தீவிரம் மந்தம் என்னும் இவ்விரண்டினையும் சாஸ்திரீயப் பிர பஞ்சம் போன்று தத்துவ ஞானத்தின் பின்னரே விடவேண்டியதாமோ எனின் அன்றெனக் கூறுகின்றார்.

போதம் பெறமெய்க் காட்சியின்முன்
புரையா மிரண்டும் விடற்பாற்றுஞ்
சாதனங்க ளிடைச் சமையுஞ்
சமாதா னமுங்கேட் டனமதனன்
மீதக் காட்சி மேலுமவை
விடற்பாற் றரிய முத்திபெறக்
காத லாதி பந்தமொடு
கலப்போன் முத்தி கலவானல். 25

(ப—ரை) போதம் பெற = தத்துவ ஞானத்தை அடைதற் பொருட்டு, மெய்க்காட்சியின் முன் = ஆன்ம சாக்ஷாத்காரத்திற்குப் பூருவம், புரையாம் இரண்டும்=(ஆன்ம ஞானத்திற்கு விரோதியாய்) தோஷத்தோடு கூடியதாய் உள்ள தீவிரம் ,மந்தமென்னுமிரண்டு பிர பஞ்சமும், விடற்பாற்று ஆம்=தள்ளத்தக்கதாம், போதம் பெற என்ற தனால் முன்பு எதற்காக விடவேண்டுமென்னுஞ் சங்கை நிவர்த்திக்

கப்பட்டது. [அதிலேதுவைக் கூறுகின்றார்] எதனால் தத்துவ ஞானத்திற்குப் பூருவமவ்விரண்டும் விடத்தக்கனவோ, அதனால் = அக்காரணத்தினால், சாதனங்களிடை = நித்தியா நித்திய வத்து விவேகம் முதலிய பிரமஞான சாதனங்களின் மத்தியில், சமையும் சமாதானமும் கேட்டனம் = (சாந்தன் சமாகிதன் என்னும் பதங்களால்) சாந்தியும் சமாதியும் கேட்டுளேம், [அற்றேல் தத்துவ ஞானத்திற்குப் பூருவம் விடத்தக்கதென்பதனால் பிற்காலத்தில் அவற்றை அங்கீகரிக்கலாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] அரிய முத்தி பெற = அடைதற்கரிய சீவன் முத்தியையடைதற் பொருட்டு, மீது அக்காட்சி மேலும் = மேலாகிய தத்துவ ஞானத்தின் பின்னரும், அவை விடற்பாற்று = அவ்விரண்டும் தள்ளத்தக்கனவாம், [கூறிய பொருளையே வெதிரேக முகத்தால் திடஞ் செய்கின்றார்] காதலாதி பந்தமொடு கலப்போன் = காமம் முதலிய வடிவ பந்தத்தோடு சேர்ந்திருக்கும் புருஷன், முத்தி கலவான் = சீவன் முத்தியைச் சேரான் எ—று.

ஆல்—அசை. 25

(அ—கை)

அற்றேல் சனனம் முதலிய சமுசாரத்தாற் பயத்தையடைந்த புருஷனுக்கு ஆத்தியந்திக புருஷார்த்த வடிவ விதேக முத்தியே போதுமானது. நசித்துப் போவதாகிய இச்சீவன் முத்தியினாலென்ன பிரயோஜனம் என்று வினவுகின்றான்.

சீவன் முத்தி யிதுவேண்டாஞ்
சென்ம மொழியின் யான்சுகியே
லாவ தேயாம் பவமுமுனக்
கண்ட ருலகந் தனிற்சுகிநீ
யேவ முறலா லழிவுவியப்
பென்னும் சுவர்க்கம் விடற்பாற்றே
லீர்வ தெனுமிக் கிழிவுருவா
மிக்கா மாதி கொளற்பாற்றே. 26

(ப—ரை) இது சீவன் முத்தி வேண்டாம் = இச்சீவன் முத்தியானது எனக்கு வேண்டியதில்லை, சென்மம் ஒழியின் யான் சுகியேல் = தத்துவ ஞானத்தால் பிறப்பொழிந்திடின் யான் கிருதார்த்தனாவேன்

என்று சொல்லில், [இகலோக போக நிவர்த்தியின் பயத்தால் சீவன் முத்தியைத் தியாகஞ் செய்யின் பரலோக போக நிவர்த்தியின் பயத்தால் விதேக முத்தியும் விடத்தக்கதாம் என்று பிரதி வந்தியால் பரிகரிக்கின்றார்] உனக்கு பவமும் ஆவதேயாம் = உனக்கு சன்மமும் உண்டாகுக, அண்டர் உலகந்தனில் நீ சுகி = சொர்க்க மாத்திரத்தால் நீ கிருதார்த்தனுவாய், [பிரதிவந்தியின் விமோசனமாகிய சங்கையைச் செய்கின்றான்] அழிவு வியப்பு என்னும் ஏவம் உறலால் = குறைவு மிகுதியாகிய தோஷத்தோடு கூடியிருத்தலால், சுவர்க்கம் விடற்பாற்றேல் = சுவர்க்கம் விடத்தக்கதாமேல், [தோஷத்தோடு கூடியதால் சுவர்க்காதி விடத்தக்கதாமேல் சகல புருஷார்த்தத்தையும் நாசஞ் செய்யுந் தன்மையால் மிகவுந் தோஷவடிவ காமாதிகளையத்தியந்தம் விட வேண்டியதெனக் கூறுகின்றார்] ஈர்வது மிக்கு இழிவு உருவாம் எனும் = மனத்தையறுக்கின்றதாகிய மிகுந்த தோஷவடிவமென்னும், இக்காமாதி கொளற்பாற்றோ = இவ்விச்சை முதலியவை கொள்ளத் தக்கனவாமோ எ—று.

பிரதிவந்தி = சமானமான உத்தரம். 26

(அ—கை)

அற்றேல் வைராக்கியாதியைச் சம்பாதித்தலால் அத்தியந்தம் அனர்த்தத்திற்குக் காரணமான காமாதிகள் விடப்பட்டபடியால் இக லோகபோக மாத்திரத்திலுபயோகியான காமாதிகளை யங்கீகரித்தலில் யாது தோஷம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

உள்ள துணர்ந்துங் காமாதி
யொருங்கே யொழிக்கின் றிலையென்னிற்
கொள்ளல் விடனூ றவிருனக்குக்
குறித்த படிபோ குதன்மேவுந்
தெள்ள வொருமைப் பொருடெரிந்தோன்
சித்தப் படிபோ குதலாமேற்
றள்ள வசுசி தினிநாய்க்குந்
தத்துவ னுக்கும் பேதமெனே. 27

(ப—ரை) உள்ளது உணர்ந்தும் = தத்துவத்தையறிந்தும், காமாதி ஒருங்கே ஒழிக்கின்றிலையென்னில் = காமாதிகளையத்தியந்தம்

விடமாட்டாயேல்,கொள்ளல் விடல் நூல் தவிர் உனக்கு = விதிநிஷேத சாஸ்திரங்களை யதிக்கிரமித்த உனக்கு, குறித்தபடி போகுதல் மேவும் = நினைத்தபடி சஞ்சாரம் நேரும், ஞானியென்னும் அபிமானத்தால் விதிநிஷேத சாஸ்திரத்தைக் கடந்து காமாதியின் அதீனமாயிருக்கின்ற உனக்கு யதேஷ்டா சரணம் நேருமென்பது பொருள், [இருக்குக என்ன தோஷம் என்னுஞ் சங்கைக்கு அதன் அனிஷ்டத் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுரேசுவராசாரியரது வசனத்தையுதாகரிக்கின்றார்] தெள்ள ஒருமைப்பொருள் தேர்ந்தோன் = தெளிவாக அத்துவிதீய ஆன்மாவையறிந்த புருஷனுக்கு, சித்தப்படி போகுதல் ஆமேல் = யதேஷ்டா சரணம் பொருந்துமேல் (அசுசிபக்ஷணம் முதலியதும் நேரும். அப்படியாகும்போது) தள்ள அசுசிதினி நாய்க்கும் = தள்ளத்தகுந்த மலம் முதலியவற்றைப் புசிக்கும் நாய்க்கும், தத்துவனுக்கும் = ஆன்ம ஞானிக்கும், பேதம் என் = பேதமேது, இல்லையென்றபடி, அல்லது நாய்க்கும் தத்துவனுக்கும், தள்ள அசுசிதினி = விடத்தகுந்த விட்டை முதலியவற்றைப் பக்ஷணஞ்செய்வதில், பேதம் என் = பேதமில்லையாம், இது மூலத்தின் அனுசாரமான அர்த்தம் எ—று.

யதேஷ்டாசரணம் = தன் இச்சைப்படி திரிதல். 27

(அ—கை)

இவ்வளவு கூறியதால் என்ன அநிஷ்டம் சம்பாதிக்கப்பட்டது என்னுஞ் சங்கைக்கு பரிஹாசத்துடனுத்தரங் கூறுகின்றார்.

ஞானம் பெறுமுன் மனத்தீங்கா
  னலிவு பூண்டாய் பின்பிதுநா
ளான வகில சனநிந்தை
  யமைந்தா யகோநின் மதிமகிமை
யேன முதலுக் கொப்பாத
  லெழிலார் மதிபோய் நீவேண்டேல்
மான தத்தீங் கொழிந்துலகால்
  வணங்கப் பெறுதி தேவனென. 28

(ப—ரை) ஞானம் பெறுமுன் = தத்துவஞானமடைவதற்குப் பூருவம், மனத் தீங்கால் நலிவு பூண்டாய் = (காமக் குரோதம் முதலிய) சித்ததோஷத்தால் துன்பத்தையடைந்தாய், பின்பு இது நாள் = பின்

இப்போது (ஞான காலத்தில்), அகில சனநிந்தை அமைந்தாய்= சகல சனங்களின் நிந்தைமொழிகளேயுஞ் சகிக்கின்ருய், அகோநின் மதிமகிமை = ஆச்சரியம் உனது ஞானத்தின் பெருமை, முன்னர் காமாதி மாத்திரம் கிலேசம், பின்னர் காமாதியும் லோக நிந்தையும் ஆக இருமடங்கு கிலேசமென்பது கருத்து. [அப்படியானல் என்ன செய்யவேண்டியதெனிற் கூறுகின்ருர்] எழில் ஆர் மதிபோய்=வலிமை பொருந்திய தத்துவ அனுசந்தானத்தை விட்டு, ஏனம் முதலுக்கு ஒப்பாதல்=(மலத்தைப் புசிக்கும்) பன்றி முதலியவைகளுக்குச் சமானமாதலே, நீ வேண்டேல்=நீ விரும்பாதே, அல்லது எழிலார் மதி நீ= திடம் பொருந்திய தத்துவ ஞானமுடையவனுகிய நீ, போய்= நிஷித்த மார்க்கத்திற் சென்று, ஏனம் முதலுக்கொப்பாதல் வேண்டேல் எனக் கூட்டுக, இது மூலானுசாரமான அர்த்தம், அதாவது சகல உத்கிருஷ்டத்திற்கும் காரணமான ஞானமுடைய நீ காமாதி பரித்தியாகத்தில் அசமர்த்தத் தன்மையால் சருவத்தினும் கீழாகிய மலப்பன்றியின் சாம்மியத்தை விரும்பாதே, மற்ருே, மானதத் தீங்கு ஒழிந்து=காமாதி வடிவ சகல மனோ தோஷங்களேயும் விட்டு, தேவன் என=விஷ்ணு முதலிய தேவர்களேப் போன்று, உலகால் வணங்கப் பெறுதி=சகல சனங்களாலும் பூசிக்கத்தக்கவனுவாய் எ—று. 28

(அ—கை)

காமாதியின் தியாகத்தில் உபாயத்தைக் கூறுகின்ருர்.

காமி யாதி தீங்கோர்தல்
காமா திகள்போம் வழியாகும்
சேம முத்தி நூலிவணஞ்
செப்பு மவைதேர்ந் துறச்சுகிப்பாய்
காம மாதி விடற்பாற்றுட்
கற்ப னேயின்மற் ருனியெனே
தீமை யனேத்தின் வித்ததனுற்
றிருமா லானி யாமென்ருன். 29

(ப—ரை) காமியாதி தீங்கோர்தல்=இச்சை முதலியவற்றிற்கு விஷயமாயுள்ள மாலே சந்தனம் முதலிய விஷயங்களில் (அநித்தியத் தன்மை ஸாதிசயத்தன்மை முதலிய) தோஷங்களேப் பார்த்தல்,

காமாதிகள் போம்வழியாகும் = இச்சை முதலியவைகளின் நிவர்த்தியில் மார்க்கமாம். [தோஷ திருஷ்டி காமாதியின் நிவர்த்தியில் காரணமாம் என்பதில் பிரமாணங் கூறுகின்றார்] க்ஷேம முத்தி நூல் இவணம் செப்பும் = சுகவடிவ மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரம் இந்தப் பிரகாரம் கூறும். [இருக்குக அதனால் என்ன சித்தித்ததெனிற் கூறுகின்றார்] அவை தேர்ந்து உற சுகிப்பாய் = அந்த முத்தி சாஸ்திரங்களை விசாரித்துத் திடமாகச் சுகியாகக்கடவாய். [அற்றேல் காமாதிகள் அனர்த்த காரணமாந் தன்மையால் விடத்தக்கனவாருக. மனோராஜ்ஜியம் அங்ஙனமன்மையின் அதன் தியாகம் அபேக்ஷிக்கப்படுவதில்லையென வினவுகின்றான்] காமம் ஆதி விடற்பாற்று = இச்சை முதலியவை விடத்தக்கனவாம். உட் கற்பனையில் = மனோராஜ்ஜியத்தில். ஆனி என் = தோஷமென்னை. [சாக்ஷாத்தாக அனர்த்த காரணமன்றேனும் பரம்பரையாக அனர்த்தத்திற்குக் காரணமாதலால் விடத்தக்கதேயாம் என்றபிப்பிராயஞ் செய்து பரிகரிக்கின்றார்] தீமை அனைத்தின் வித்ததனால் = சகல தோஷத்திற்கும் பீஜமாயிருத்தலால், திருமால் = ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஆனியாம் என்றான் = தீங்காம் என்று கூறியருளினன் எ—று.

மற்று, ஓ—அசை. காமியம் = விரும்பப்படும் பொருள். 29

(அ—கை)

பரம்பரையாய் அனர்த்த காரணத் தன்மையைத் தெரிவிக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானது வாக்கியத்தை யுதாகரிக்கின்றார்.

விடய சிந்தை பெறுநரர்க்கவ்
விடயங் களின்மேற் சங்கம்வரு
மடையுஞ் சங்கத் தாற்காம
மதனாற் குரோத மதிகரிக்கும்
மிடையு மதனான் மிகுமோக
மிகுமோ கத்தா னினைவயரு
முடனவ் வயர்வாற் புத்திகெடு
முண்டா நாச மதனாலே. 30

(ப—ரை) விடய சிந்தை பெறும் நரர்க்கு = சப்தாதி விஷயங்களைச் சிந்திக்கும் புருஷர்களுக்கு, அவ்விடயங்களின் மேல் சங்கம்

வரும் = அச்சப்தாதி விஷயங்களில் இது சுக சாதனமென்னும் புத்தி வடிவ ஆசக்தியுண்டாகும், அடையும் சங்கத்தால் = பொருந்தியஆசக்தியினுல், காமம் = (இவ்விஷயம் நமக்கெப்போது அடையப்படுமென்னுந்) திருஷ்ணையுண்டாம், அதனுல் குரோதம் அதிகரிக்கும் = அத்திருஷ்ணையினுல் (காமித்த (இச்சித்த) பதார்த்தம் தனக்கு அடையாமற்போகும்படி ஒருவனுல் தடைசெய்யப்படில்) குரோதம் மிகுதியாகும், மிடையும் அதனுல் மோகம் மிகும் = நெருங்கிய அக்குரோதத்தால்(காரியாகாரிய விவேகாபாவரூபமான) மயக்கம் அதிகரிக்கும், மிகுமோகத்தால் நினைவு அயரும் = அதிகரித்த அம்மயக்கத்தால்(குருசாஸ்திரங்களாலறிந்த அர்த்தங்களினனுசந்தானரூப) ஸ்மிருதிகள் கெடும், அவ்வயர்வால் = மேற்சொல்லிய ஸ்மிருதிகளின் விநாசத்தால், உடன் புத்திகெடும் = அப்பொழுதே அத்துவித ஆன்மாகார மனோவிருத்திரூப புத்தியானது விநாசமாகும், அதனுல் நாசம் உண்டாம் = அப்புத்தியின் விநாசத்தால் சகல புருஷார்த்தங்களும் அடையப்படாமல் போய்விடும் எ—று. 30

ஏ—அசை.

(அ — கை)

அப்படியானுல் இம்மனோராச்சியத்தை நிவர்த்தி செய்வதில் உபாயம் யாதெனிற் கூறுகின்றார்.

நிருவி கற்ப சமாதியினுண்
 ணினைவு மாயு மதுதானு
மருவுஞ் சவிகற் பகமதனுன்
 மற்ற துண்மை தெரிந்துளத்தீங்
கருகி யேகாந் தத்தமர்ந்தங்
 களவோங் காரஞ் சொலமாயு
மொருவி னதுமூ கன்போலு
 முளமுந் தொழில்விட்டி ருந்திடுமே. 31

(ப—ரை) நிருவிகற்பசமாதியின் உள்நினைவு மாயும் = நிருவிகற்பசமாதியினுல் மனோராச்சியம்நாசமாகும்,[அதுவுமெதனுற்சித்திக்குமெனிற்கூறுகின்றார்] அதுதானும் = அந்நிருவிகற்பசமாதியும், சவிகற்பமதனுல் மருவும் = சவிகற்பசமாதியினுல் கிரமமாக வந்து பொருந்தும், [அற்றேல் அஷ்டாங்கயோகத்தோடுகூடிய புருஷனுக்கு அப்படியாகுக,

அஃதின்றியவனுக்கு வழியாதெனிற்கூறுகின்றூர்] உண்மைதெரிந்து= பிரத்தியக்க பின்ன பிரமத்தையறிந்து, உளத்தீங்கு அருகி=காமக் குரோதம் முதலிய மனோதோஷங்களின்றி, ஏகாந்தத்து அமர்ந்து= நிர்ச்சன தேசத்தில் இருந்து கொண்டு, அளவு ஓங்காரஞ்சொல=ஆறு மாத்திரை பனிரெண்டு மாத்திரை முதலியதோடு கூடியுள்ள பிரண வத்தையுச்சரித்தலால், அது மாயும்=அம்மனோராச்சியம் கெடும்,[மனோ ராச்சிய விஜயத்தினுல் என்ன உண்டாகிறது எனிற்கூறுகின்றூர்] அது ஒருவின்=அம்மனோராச்சியம் நீங்கிடின், மூகன்போலும்=ஊமையனு னவன் சகலவாக்கு வியாபாரங்களுமின்றியிருத்தல் போல, உளமும் தொழில் விட்டு இருந்திடும்=மனமும் சகல வியாபார ரகிதமாய்த்திரமா யிருக்கும் எ—று.

அங்கு-மற்று-ஏ—அசை நிலைகள். 31

(அ—கை)

விருத்தியின்றிய மனதின் திதிபுருஷார்த்தமாமென்பதில் பிரமா ணங் கூறுகின்றூர்.

இந்தப் பதமிக் கிராகவனுக்
கிசைத்தான் வசிட்டன் காண்பதிலென்
னுந்து முணர்வா லதுமனத்துக்
கொழியி னுயரும் பரசுகமாம்
பந்த மறுநூ லோர்ந்துதமிற்
பன்னுட் டெளிந்தேம் வாதனையின்
ருெந்த மகன்ற மௌனமலாற்
றுனுநற் கதிவே றிலையன்றே. 32

(ப—ரை) இந்தப் பதம்=விருத்தியின்றிய மனதின் திதியை, வசிட்டன்=வசிஷ்ட மகரிஷியானவர், இராகவனுக்கு = இராமமூர்த் திக்கு, மிக்கு இசைத்தான் = அநேகப்பிரகாரமாகக் கூறியருளினர், [வாசிட்டக் கவிகளை யுதாகரிக்கின்றூர்] காண்பது இல் என் உந்தும் உணர்வால்= (ஈண்டு நாநா வானவை சிறிதுமில்லை என்னுஞ் சுருதி யால் அத்துவிதீய பிரமத்தினும் வேருக) திருசியமில்லை யென்னும் மேலாகிய ஞானத்தால், மனத்துக்கு அது ஒழியின்=மனதினின்றும் திருசியம் நிவர்த்தியாயின், உயரும் பரசுகம் ஆம்= நிரதிசயமோக்ஷசுக முண்டாகும், பந்தம் அறு நூல் ஓர்ந்து=பந்தத்தை நிவர்த்தி செய்யும்

(அத்துவித மோக்ஷ) சாஸ்திரங்களை நன்கு விசாரித்து, பன்னாள் தமில் தெளிந்தேம் = நீண்டகாலம் பரஸ்பரம் குருசிஷ்யாதி சம்வாதவாயிலாக தெளிவையடைந்தேம், போதிப்பிக்கப்பட்டதென்பது பொருள்), [இப்படிச்செய்து என்ன நிச்சயிக்கப்பட்டதெனிற் கூறுகின்றார்] வாத னையின் தொந்தம் அகன்ற மௌனமலால் = காமாதி வாசனைகளின் தொடர்பு நீங்கிய மனதின் தூஷ்ணீம் ஸ்திதியையன்றி, துனும் நற்கதி வேறில்லை = நிலைத்த மேலாகிய புருஷார்த்தம் வேறின்றுமென நிச்ச யிக்கப்பட்டது எ—று. தெளிவு = ஞானம்.

அன்று, ஏ—அசைகள். 32

(அ—கை)

இவ்வாறு விருத்தியின்றிய மனதிற்கு பிராரத்த கருமவசத்தால் விக்ஷேபமுளதாயின் அதன்னிவர்த்தியுபாயம் யாதென்னும் அபேக்ஷை யுண்டாகக் கூறுகின்றார்.

போக மளிக்குங் கருமத்தாற்
புத்தி யோர்காற் சலிக்குமெனி
னேக சமாதி மீண்டுடனே
யியையும் பழக்க வலிமையினற்
சோக மறுசஞ் சலமிலியைத்
துய்ய பிரம வித்தென்னல்
மோக மிலிவன் பிரமமே
யென்பர் முனியாய்க் கரைகண்டோர். 33

(ப—ரை) போகம் அளிக்கும் கருமத்தால் = போகத்தைக் கொடுக் கின்ற பிராரத்த கருமத்தால், புத்தி ஓர்கால் சலிக்கும் எனின் = புத்தி யானது ஓர்போது விக்ஷேபத்தையடையுமென்று சொல்லில், பழக்க வலி மையினல் = அப்பியாசத்தின் சாமர்த்தியத்தால், மீண்டும் = மறுபடியும், உடனே = அப்போதே, ஏகசமாதி இயையும் = (புத்தியானது) அத்துவி தீய நிருவிகற்பசமாதியையடையும், [எப்போதும் சித்த விக்ஷேபமின்றியி ருக்கும் புருஷனைப் பிரமத்தையுணர்ந்தவனென்று சொல்லுதலும் உப சாரந்தானெனக் கூறுகின்றார்] சோகம் அறுசஞ்சலம் இலியை = சருவ துக்க நிவர்த்திவடிவ விக்ஷேபமின்றிய அவஸ்தையினையுடைய புருஷ னை, துய்யபிரமவித்து என்னல் = பரிசுத்தமாகிய பிரமஞானியென்று

சொல்லற்க, முனியாய் = மனன சீலர்களாய், கரைகண்டோர் = வேதாந்தத்தின் தீரத்தைத் தெரிந்தவர்கள், மோகம் இல் இவன் பிரமமே என்பர் = அஞ்ஞானமின்றிய இந்த பிரமஞானி பிரமமேயாம் என்று சொல்லுவார்கள் எ—று.

மீண்டும் என்பது மீண்டு எனக்கடைக்குறையாயிற்று. 33

(அ—கை)

பிரமவித்து பிரமமே என்னும் இவ்விஷயத்தின் கண்ணும் வசிஷ்ட மகரிஷியின் வாக்கியத்தையுதாகரிக்கின்றார்.

தெரிவுந் தெரியா மையுந்தீர்ந்து
திகழ்கே வலமே தானாகிப்
பிரிவற் றிருப்போ னவன்பிரமம்
பிரம வித்துத் தானலனாந்
திரிவில் சீவன் முத்தியின்மேற்
செறியுங் காட்டை யிதுபேரு
மிரியிற் சீவத் துவிதமிதா
லீசத் துவிதம் பகுத்துரைத்தேம். 34

(ப—ரை) தெரிவும் தெரியாமையும் தீர்ந்து = யாவன் பிரமத்தையறிகின்றேன் அறிகின்றிலேன் என்னுமிரண்டு வியவகாரத்தையும் பரித்தியாகஞ் செய்து, திகழ் கேவலமே தானாகி = விளங்கா நின்ற அத்துவிதீயப் பிரமமேதானாய், பிரிவு அற்றிருப்போன் = நீக்கமின்றி எப்போதும் நிலைத்திருப்பனோ, அவன்தான் பிரமம் = அப்புருஷன் சொயம்பிரமமேயாம், பிரமவித்து அலனும் = பிரமஞானியன்றாம், [சகல துவித விவேசனத்தை முடிக்கின்றார்] திரிவு இல் சீவன் முத்தியின் செறியும் மேல்காட்டை இது = கெடாத சீவன் முத்தியினுடைய பொருந்திய இப்பரமகாஷ்டையானது, (அதாவது நிரதிசய பரியவசான பூமி) சீவத்துவிதம் இரியின் = மனோமயப் பிரபஞ்சத்தின் பரித்தியாகத்தால், பேறு ஆம் = அடையப்படும், இதால் = இக்காரணத்தால், (அதாவது மனோமயப் பிரபஞ்சத்தின் தியாகத்தால் முத்தியடையப்படுதலின்) ஈசத்துவிதம் பகுத்து உரைத்தேம் = (சீவகற்பிதப் பிரபஞ்சத்தினின்றும்) ஈசகற்பிதப் பிரபஞ்சத்தைப் பிரித்துக் கூறினேம் எ—று. 34

நான்காவது துவித விவேகம் முற்றிற்று.

ஆகக் கவி 169.

ஓம் தத் ஸத்.
கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## ஐந்தாவது பிரகரணம்.

## மகா வாக்கிய விவேகம்.

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ்கரித்து மகாவாக்கியத்தின் விவேகத்திற்குச் சுருக்கமாக வியாக்கியானஞ் செய்கின்றேன்.

(அ—கை)

முமுக்ஷுவுக்கு மோக்ஷ சாதனமான சீவப்பிரமங்களினைக்கிய ஞானம் சித்தித்தற்பொருட்டு பிரசித்தமாயுள்ள நான்கு மகாவாக்கியங்களின் பொருளை நிருபணஞ் செய்கின்றவராய் பரமதயாளுவாகிய ஆசாரியர் ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் முதலில் ஐதரேய ஆரண்ணியத்திலுள்ள பிரஞ்ஞானம் பிரம்மம் என்னும் மகாவாக்கியத்திலுள்ள பிரஞ்ஞான சப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்.

எதனிற் காண்ப னிதனை வினவுவன்
வதுவை கொள்வன் வழக்கிடு வான்மிக
மதுர மல்லது மற்றதுந் தேருவ
னதுகொ லாம்பிரஞ் ஞானம தென்பதே. 1

(ப—ரை) எதனில் = (சக்ஷு வாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரண விருத்தியுபகித) எச்சைதன்னியத்தால், இதனை = தெரிசன யோக்கியவுருவாதிகளை, காண்பன் = புருஷன் பார்ப்பனோ, எதனில் இதனை வினவுவன் = (அப்படியே சுரோத்திர வாயிலாக வெளிப்பட்ட

அந்தக்கரண விருத்தியுபகித) எச்சைதன்னியத்தால் சப்தசமுகத்தைக் கேட்பனே, எதனில் வதுவை கொள்வன் = (கிராணேந்திரியத்தால் வெளிப்பட்ட அந்தக்கரண விருத்தியுபகித) எச்சைதன்னியத்தால் கந்த சமுகத்தைக் கவர்வனே, எதனில் வழக்கிடுவான் = (வாக்கிந்திரியாவச்சின்ன) எச்சைதன்னியத்தால் சப்த சமுதாயத்தையுச்சரிப்பனே. எதனில் = (இரசனேந்திரிய வாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணவிருத்தியுபகித) எச்சைதன்னியத்தால், மிக மதுரம் அது அல்லதும் = மிகுந்த ருசியும் ருசியின்றியதுமாகிய ரசங்களை, தேருவன் = அறிவனே, அது பிரஞ்ஞானமதென்பதாம் = அச்சைதன்னியமே ஈண்டு பிரஞ்ஞான சப்தத்தாற் சொல்லப்படுகின்றது எ—று.

மற்றதும் என்பதிலுள்ள எச்ச உம்மையால் சொல்லப்படாத சகலேந்திரியங்களாலும் அந்தக்கரணவிருத்தி விசேஷங்களாலும் அவச்சின்னமாகிய யாதொரு சைதன்னியமுண்டோ அதனையும் கிரகிக்குக. இச்செய்யுளால் எதனுற் காண்கின்ருன் என்பது முதல் இவ்வெல்லாம் பிரஞ்ஞானத்தினுடைய நாமதேயங்களாம் என்பது பரியந்தமாயுள்ள அவாந்தர வாக்கியத் தொகுதியின் பொருள் சுருக்கமாகத் தெரிவிக்கப்பட்டது. எதனில் என்பது எல்லாவற்ருேடுங் கூட்டப்பட்டது. ஆம் பிரித்துக் கூட்டப்பட்டது.

மற்று-கொல்-ஏ—அசை நிலைகள்.

நான்கு மகாவாக்கியங்களின் விவேகம் அதாவது வாச்சிய லக்ஷிய வடிவ அர்த்தங்களின் விபாகம் எதன் கண்ணிருக்கின்றதோ அது மகாவாக்கிய விவேகம். 1

(அ—கை)

இவ்வாறு பிரஞ்ஞான சப்தத்தின் பொருளைக் கூறிப் பிரம்ம சப்தத்தின் பொருளைக் கூறுகின்ருர்.

திசைமு கேந்திர தேவர்கண் மானுட
ரசுவங் கோமுத லானவற் றுள்ளுமே
யிசையு ஞானமொன் றேபர மாதலா
னசைப ரம்பிரஞ் ஞானமென் பாலுமாம். 2

(ப—ரை) திசைமுக இந்திர தேவர்கள் = உத்தமமாகிய பிரம்மா இந்திரன் முதலியதேவர்களிடத்தும், மானுடர் = மத்திமமாகிய மனுஷி யர்களிடத்தும், அசுவம் கோ முதலானவற்றுள்ளும் = அதமமாகிய குதிரை, பசு முதலிய தேகதாரிகளிடத்தும் ஆகாசாதி பூதங்களிடத் தும், இசையும் ஞானம் ஒன்றே பரம் = (சகச்சன்மாதி காரண பூதமாய்) பொருந்தியிருக்கும் யாதொரு அத்துவிதீய சைதன்னியமுண்டோ அதுவே பிரம்மமாம், இதனால் இதுவே பிரம்மம், இதுவே இந்திரன் என்பது முதல் பிரஞ்ஞை பிரதிஷ்டை என்பது பரியந்தமான அவாந் தர வாக்கியத்தின் பொருள் சுருக்கமாகத் தெரிவிக்கப்பட்டது. [இந்தப் பிரகாரம் பதப்பொருளைக் கூறி வாக்கியப் பொருளைக் கூறுகின்றார்] ஆதலால் = (எதனால் சகலத்திலுமிருக்கும் பிரஞ்ஞானம் பிரம்மமோ) அக்காரணத்தினால், என்பாலும் பிரஞ்ஞானம் = என்னிடத்துள்ள பிரஞ்ஞானமும், நசை பரம் ஆம் = ஆனந்தசொரூபப் பிரம்மமாம் பிரஞ் ஞானத்தன்மை சமானமாதலால் என்பது பொருள் எ—று. 2

ஏ—அசை.

(அ—கை)

இப்படி இருக்கு வேதத்திலுள்ள மகாவாக்கியப் பொருளை நிரூபித்து யஜுர் வேதத்திலுள்ள பிரகதாரண்ணியக உபநிஷத்தில் உள்ள நான் பிரம்மமாயிருக்கின்றேனென்னும் மகாவாக்கியத்தின் பொருளை வெளிப்படுத்தும் பொருட்டு நானென்னும் சப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்.

அறவும் பூரண மாம்பர மாற்றுமா
வுறுமிங் கேயுணர் வுக்குரித் தாமுடற்
செறியும் புத்தியின் சீர்க்கரி யாய்மரீஇப்
பிறிவி லாதக மென்றுபி றங்குவான். 3

(ப—ரை) அறவும் பூரணமாம் பரமாற்றுமா = அத்தியந்தம் (அதாவது இயற்கையாகவே) தேசகால வஸ்துக்களால் அபரிச்சின்ன மாகிய பரமான்மா, உறும் இங்கே = (மாயையாற் கற்பிதமாகப்) பொருந்திய இச்சகத்தில், உணர்வுக்கு உரித்தாம் உடல் = (சமம் முத லிய சாதனத்தையுடையதாந் தன்மையால்) வித்தை சம்பாதிக்கயோக் கியமான (சிரவணாதி அனுஷ்டானத்தையுடைய) மனுஷிய சரீரத்தில், செறியும் புத்தியின் சீர்க்கரியாய் மரீஇ = பொருந்ியுள்ள புத்திக்குச்

சிறந்த சாக்ஷியாய்ப் பொருந்தியிருந்து, அகம் என்று = நான் என்னும் சப்தத்தால் சொல்லப்படுகின்றவனுய், பிறிவிலாது பிறங்குவான் = நீக்கமின்றி விளங்குபவனுவன் எ—று.

மனுஷிய தேகத்தில் புத்திக்குச் சாக்ஷியாய் விளங்கும் ஆன்மா நான் என்னும் சப்தத்தால் லக்ஷணை விருத்தியால் சொல்லப்படுகின்றது என்பது பொருள். ஈண்டு புத்தி சூக்ஷும சரீரத்திற்கு உபலக்ஷணமாம். 3

(அ—கை)

பிரம சப்தத்தின் பொருளைக் கூறுகின்றுர்.

உரிமைப் பூன்றமென் ருேதுப ரம்பொருள்
பிரம மென்பதாம் பின்னுமிங் காகின
ஞெருமைத் தாமென்று ணர்த்துவ தாதலா
லருமைச் சன்மய மாகின ஞனரோ. 4

(ப—ரை) உரிமை பூன்றம் என்று ஓது பரம்பொருள் = இயற்கையாக தேசகாலாதியனவச் சின்னமாய்ப் பூருவம் சொல்லப்பட்ட பரமான்மா, இங்கு பிரமம் என்பதாம் = இந்த மகாவாக்கியத்தில் பிரம சப்தத்தால் லக்ஷணையால் சொல்லப்படுகிறது, [இந்த வாக்கியத்திலுள்ள இருக்கின்றேனென்னும் பதத்தால் இரண்டு பதங்களின் சாமானுதி கரண்ணியத்தால் பிராப்தமான சீவப்பிரமங்களின் ஐக்கியம் பராமரிசம் செய்யப்படுகிறதெனக் கூறுகின்றுர்] பின்னும் = மேலும், ஆகினன் = (இந்த வாக்கியத்திலுள்ள) இருக்கின்றேனென்னும் பதமானது, ஒருமை என்று உணர்த்துவது = (ஜீவப்பிரம்மங்களின்) ஐக்கியத்தை அறிவிப்பதாம், [சித்தித்ததைக் கூறுகின்றுர்] ஆதலால் = அக்காரணத்தினுல், நான் அருமைச் சன்மயம் ஆகினன் = யான் அடைதற்கரிய சத்துருபப் பிரம்மமாகவிருக்கின்றேன் எ—று.

அரோ, தாம்—அசை நிலைகள். 4

(அ—கை)

இப்போது சாந்தோக்கிய சுருதியிலுள்ள தத்துவமசி மகாவாக்கியத்தின் பொருளைத் தெரிவித்தற் பொருட்டுத் தற்பதலக்ஷியார்த்தத்தைக் கூறுகின்றுர்.

ஏக மேவாத் துவிதமெ னுஞ்சத்தே
யாகு நாம வுருவம கன்றது
மாக மாதி வருமுனு மின்றுறும்
பாகு பாடிலப் பண்பது வென்பதாம். 5

(ப—ரை) மாகம் ஆதிவருமுன் = ("இது முன்சத்தாகவே யிருந்தது, ஒரே அத்துவிதீயப்பிரம்மமாம்" என்னும் வாக்கியத்தால்) ஆகாசாதி யுண்டாவதற்குப்பூருவம், ஏகம் ஏவ அத்துவிதம் = சுவகதாதிபேதமின்றியதும், நாம உருவம் அகன்றது = நாமரூபம் இன்றியதும் ஆகிய, சத்தே ஆகும் எனும் = சத்வஸ்து ஒன்றே உளது என பிரதிபாதிக்கப் பட்டிருக்கின்றது, இன்றும் = இப்போதும் (அதாவது சிருஷ்டிக்கு பின்னரும் இச்சத்துருபவஸ்துவிற்கு), பாகுபாடில் = விசாரதிருஷ்டியினுல், உறு அப்பண்பு = பொருந்தா நின்ற அப்படிப்பட்டதன்மை (அதாவது சுவகதாதி பேதமும் நாமரூபமுமற்ற சத்துத்தன்மை), அது என்பதாம் = தத் என்னும்பதத்தால் சொல்லப்படுகிறது,லக்ஷணுவிருத்தியால் போதிக்கப்படுகிறதென்பது பொருள் எ—று. 5

(அ—கை)

துவம்பத லக்ஷியார்த்தத்தைக் கூறுகின்றுர்.

வினவு வோனுட லிந்திய மேலதாய்த்
துனுமெய் வத்திங்கு தொம்பத மென்பதா
மனு நல் லொற்றுமை மற்றசி தேற்றிடுந்
தனிமை தொந்தத்தின் ருன்பெறற் பாலதே. 6

(ப—ரை) வினவுவோன் = சிரவணுதியனுஷ்டானத்தால் (மகாவாக்கியப் பொருளை) யறிபவனது, உடல் இந்தியம் மேலதாய் = தேகேந்திரியாதி (களாலுபலக்ஷிக்கப்பட்ட மூன்று சரீரங்களுக்கும் சாக்ஷியாதலால் அவைகளினின்றும்) விலக்ஷணமாய், துனுமெய்வத்து = பொருந்தியிருக்கும் சத்துவஸ்துவே, இங்கு தொம்பதம் என்பதாம் = தத்துவமசிவாக்கியத்திலுள்ள துவம்பதத்தால் லக்ஷணையால் சொல்லப்படுகிறது [இவ்வாக்கியத்திலுள்ள அசியென்னும் பதத்தால் தத்பத துவம் பதங்களின் சாமானுதிகரண்ணியத்தால் பிராப்தமான இரண்டு பதார்த்தங்களினைக்கியம் சிஷ்யனைக்குறித்து போதிக்கப்படுகிறது எனக்கூறு

கின்ருர்]. அசி = அசியென்னும் பதம், மனுநல்ஒற்றுமை தேற்றிடும் = நிலயுள்ள நல்ல ஐக்கியத்தைத் தெரிவிக்கும். [சித்தித்த பொருளைக் கூறுகின்ருர்] தொந்தத்தின் தனிமை = அவ்விரண்டுகளின் பிரமாணத் தாற் சித்தித்த ஐக்கியம், பெறற்பாலது = முமுக்ஷுக்களால் அனுபவிக் கத்தக்கது எ—று.

மற்று, தான், ஏ—அசைகள். 6

(அ—கை)

கிரமத்தால் பிராப்தமான அதர்வணவேதத்திலுள்ள "இவ்வான்மா பிரம்மமாம்" என்னும் வாக்கியத்தின் பொருளை விரித்துரைக்குமிச்சை யுடையராய் முதலில் இவ் ஆன்மா என்னும் இரண்டு பதங்களால் விவக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தைக் கிரமமாகத் தெரிவிக்கின்ருர்.

சொயம்வி ளங்கிய சோதிநற் காட்சியே
யயமெ னுஞ்சொலி ஞலுட்கொ ளத்தகுந்
துயர கங்கரந் தொக்கிறு வாயின்வே
றியைவ தாற்றுமா வென்றுரை செய்வதாம். 7

(ப—ரை) அயம் எனும் சொலினல் = இது எனும் சப்தத்தால் சொயம் விளங்கிய சோதிநற்காட்சியே = சொப்பிரகாசத்தால் அபரோக்ஷத்தன்மையே, உட்கொளத்தகும் = சம்மதமாம், அதிருஷ்டாதி போன்று நித்தியபரோக்ஷத்தன்மையையும் கடாதி போன்று திருசியத் தன்மையையும் விலக்குவதற்கு சொப்பிரகாசமும் அபரோக்ஷத்தன்மை யுமாகிய இரண்டு விசேஷணங்களாமென உணர்க. [தேகாதிகளிலும் நானென்னும் சப்தத்தின் பிரயோகம் காண்டலின் ஈண்டு நானென் னும் சப்தத்தால் யாது விவக்ஷிக்கப்பட்டது என்று ஆகாங்க்ஷையுண்டா கக்கூறுகின்ருர்] துயர்அகங்கரம் தொக்கு இறுவாயின் வேறு இயை வது = துன்ப ஹேதுவான அகங்காரம் முதல் தேகபரியந்தமான சங்கா தத்தினின்றும் (அதிஷ்டானத்தன்மையாலும் சாக்ஷித்தன்மையாலும்) விலக்ஷணமாயிருப்பது, ஆற்றுமா என்று உரை செய்வதாம் = இந்த வாக்கியத்திலுள்ள ஆன்ம பதத்தால் சொல்லப்படுகின்றது எ—று.

தொக்கு = தேகம். 7

(அ—கை)

பிராம்மணுதிகளிடத்திலும் பிரம்ம சப்தத்தின் பிரயோகத்தைப் பார்க்கின்றபடியால் அவைகளை விலக்குதற்பொருட்டு ஈண்டு விவக்ஷிக் கப்பட்ட பொருளைக் கூறுகின்றார்.

திரிசி யம்பொய்ச் செகமுழு துக்குமோர்
பிரிவின் மெய்ம்மைப் பிரமம தென்பதா
மரிய வப்பொரு ளான்றதற் சோதியாந்
துரிய வான்மசொ ரூபம தாகுமே. 8

(ப—ரை) திரிசியம் = திருசியமாயும் (ஸப்பிரகாசக விருத்தி வியாப்பியமாயும்), பொய் = (அதனுலேயே) மித்தையாயும்உள்ள, செகம் முழுதுக்கும் = ஆகாசாதி சகல சகத்திற்கும், ஓர் பிரிவில் மெய்ம்மை = (அதிஷ்டானத்தன்மையாலும் பாத அவதித்தன்மையாலும்) ஒப்பற்ற நீக்கமின்றிய பாரமார்த்திக சச்சிதானந்த வடிவம் யாதொன்றுண்டோ அது, பிரமமது என்பதாம் = பிரம்மசப்தத்தால் சொல்லப்படுகின்றது, [வாக்கியத்தின் பொருளைக்கூறுகின்றார்] அரிய அப்பொருள் = அறிதற் கரிய சச்சிதானந்த வடிவப்பிரம்மமானது, ஆன்றதற்சோதியாம் துரிய ஆன்ம சொரூபமது ஆகும் = மாக்ஷிமை பொருந்திய சொப்பிரகாச கூடஸ்த ஆன்ம வடிவமாம் எ—று.

ஏ—அசை.

ஈண்டு முமுக்ஷுக்களுக்கு அறியவேண்டிய விஷயங்களிவையாம். வாக்கியார்த்தத்தின் ஞானத்தில் பதார்த்தத்தின் ஞானம் உபயோக முடையதாம். பதார்த்தத்தின் ஞானத்தில் சப்தத்தினது விருத்தியின் (சத்தி இலக்ஷணைகளின்) ஞானம் உபயோகமுள்ளதாம். பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் விருத்தியெனப்படும். அந்த விருத்தி சக்தி விருத்தி இலக்ஷண விருத்தி என இரண்டு வகையாம்.

பதத்திலுள்ள பொருளைத் தெரிவிக்கும் சாமர்த்தியம் எதுவோ அது பதத்தின் சக்தி விருத்தியாம். கடம் என்னும் பதத்தைக் கேட் பவனுக்குக் கலச வடிவப் பொருளின் ஞானத்தையுண்டுபண்ணும் கடம் என்னும் பதத்திலுள்ள சாமர்த்தியமே கடபதத்தின் சக்தி விருத்தியாம். இப்படியே எல்லாப் பதங்களிலும் அறிந்துகொள்க. பதத்தின் சக்தி

விருத்தியால் எந்தப் பொருளின் ஞானம் உண்டாகின்றதோ அந்தப் பொருள் சக்கியார்த்தமெனப்படும். அதனையே வாச்சியார்த்தமென் றும் கூறுவர்.

சக்கியார்த்தத்தின் சம்பந்தம் இலக்ஷணு விருத்தி எனப்படும். அந்த இலக்ஷணு விருத்தி (1) ஜகத்லக்ஷணை (2) அஜகத்லக்ஷணை (3) பாகத்தியாகலக்ஷணை என மூன்று வகையாம். எங்கே வாச்சியார்த்த முழுதும் விடுபட்டு வாச்சியார்த்தத்தின் சம்பந்தி தோற்றுகின்றதோ அங்கு ஜகத்திலக்ஷணை (விட்டலக்கணை) சொல்லப்படுகின்றது. எங்ஙனம் கங்கையில் கிராமமிருக்கின்றது என்னுமிடத்துக் கங்கை என்னும் பதத்திற்குக் கரையில் ஜகத்திலக்ஷணையாம். ஏனெனின் கங்கை என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவாகத்தில் கிராமத்தின் இருப்புச் சம்பவியாதாகையால் வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டுக் கரையில் கங்கையென்னும் பதத்திற்கு ஜகத்திலக்ஷணையாம். எங்கே வாச்சியார்த்தத்தோடு கூட வாச்சிய சம்பந்தியின் ஞானமுண்டாகின்றதோ அங்கே அஜகத்திலக்ஷணை (விடாதலக்கணை) சொல்லப்படுகின்றது. எங்ஙனம் சிவப்பு ஓடுகின்றது என்னுமிடத்துச் சிவப்பென்னும் பதத்திற்குச் செந்நிறமுடைய குதிரையில் அஜகத்திலக்ஷணையிருக்கின்றது; செந்நிற மாத்திரத்தில் ஓடுதல் பொருந்தாமையால், இதனுல் சிவப்பென்னும் பதத்திற்கு வாச்சியமாகிய சிவப்பு நிறத்தன்மையோடு கூடிய குதிரையில் சிவப்பென்னும் பதத்திற்கு அஜகத்திலக்ஷணையாம். எங்கே வாச்சியார்த்தத்தினுள் (விரோதம் உள்ள) ஒருபாகத்தைவிட்டு (விரோதமில்லாத) ஒருபாகம் கொள்ளப் படுகின்றதோ அங்கே பாகத்தியாகலக்ஷணை (விட்டுவிடாத லக்கணை) சொல்லப்படுகின்றது. எங்ஙனம் முன்கண்ட வஸ்துவை வேறிடத்தில் கண்டு ஒருவன் அதுவே இதுவென்று சொல்லுமிடத்துப் பாகத்தியாகலக்ஷணையாம். ஏனெனின் பூத காலத்திலும் அந்நிய தேசத்திலுமுள்ள வஸ்துவை அதுவென்பர். ஆகையால் பூதகால அந்நிய தேசங்களோடு கூடிய வஸ்து அதுவென்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம். வர்த்தமான கால சமீப தேசங்களிலுள்ள வஸ்துவினை இதுவென்பர். ஆதலால் வர்த்தமானகால சமீப தேசத்தோடு கூடிய வஸ்து இதுவென்னும் பதத்திற்கு வாச்சியமாம். பூதகால அந்நிய தேசங்களோடு கூடிய வஸ்து எதுவோ அதுவே வர்த்தமான கால சமீப தேசங்களோடு கூடியதாயிருக்கின்றது என்பது முழுவாக்கியத்தின் வாச்சியார்த்தமாகின்றது. அது பொருந்தாது. ஏனெனின் பூதகாலத்திற்கும் வர்த்தமான காலத்திற்கும் விரோதமிருக்கின்றது.

அதுபோல தூர தேசத்திற்கும் சமீப தேசத்திற்கும் விரோதமிருக்கின்றது. ஆகையால் இரண்டு பதங்களிலுமுள்ள தேச காலங்களாகிய வாச்சிய பாகத்தைவிட வஸ்து மாத்திரத்தில் இரண்டு பதங்களுக்கும் பாகத்தியாகலக்ஷணையாம்.

சப்தத்தின் இலக்ஷணாவிருத்தியால் எந்த அர்த்தத்தின் ஞானமுண்டாகின்றதோ அவ்வர்த்தம் இலக்ஷியார்த்தமெனப்படும். பலாச விருக்ஷத்தின் ஒரே சிறிய கிளையில் மூன்று இலைகளிருப்பதுபோல ஒரே வேதாந்த சித்தாந்தத்தில் உத்தம மத்திம கனிஷ்ட அதிகாரிகளுக்கு அறிவிக்கும் பொருட்டு மூன்று பக்ஷங்களிருக்கின்றன. அவையாவன? அஜாதவாதம், திருஷ்டி சிருஷ்டி வாதம், வியாவகாரிக பக்ஷமென்னும் சிருஷ்டி திருஷ்டிவாதம் என்பனவாம். எதில் ஒரேபாரமார்த்திக சத்தையாகிய சேதனம் அங்கீகரிக்கப்படுகின்றதோ சிருஷ்டி அங்கீகரிக்கப் படுகிறதில்லையோ அது அஜாதவாதமெனப்படும். எதில் பாரமார்த்திக சத்தை பிராதிபாஸிகசத்தை என்னுமிரண்டும்அங்கீகரிக்கப்படுகின்றனவோ அது திருஷ்டி சிருஷ்டி வாதமெனப்படும். எதில் பரமார்த்தம் பிராதிபாஸிகம் வியாவகாரிகமென்னும் மூன்று சத்தைகளும் ஒப்பப் பட்டிருக்கின்றனவோ அது வியாவகாரிகபக்ஷம் அல்லது சிருஷ்டி திருஷ்டி வாதமெனப்படும். அவற்றுள் அஜாத வாதத்திலோ ஆரோப அபவாதங்களில்லாமையால் வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களின் கற்பனை பொருந்தாது. திருஷ்டி சிருஷ்டி வாதத்தில் சொப்பன கற்பித இராஜாவைப்போல ஜீவகற்பிதமாகிய ஈசுவரன் தத்பதத்திற்கு வாச்சியார்த்தமாம். அவித்தையினால் மறைக்கப்பட்ட அஞ்ஞாத (அறியப்படாத)பிரஹ்மரூப ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தமாம். இவ்விரண்டு பதங்களுக்கும் சுத்தப்பிரஹ்மம் இலக்ஷியார்த்தமாம். வியாவகாரிக பக்ஷத்தில் பிம்பப் பிரதிபிம்பவாதம் காரிய காரண உபாதி வாதம் அவச்சின்ன அநவச்சின்னவாதம் அவச்சேதவாதம் ஆபாச வாதம் என்னும் ஐந்து பக்ஷங்களும் அடங்கியிருக்கின்றன.

அவற்றுள் பிம்பப்பிரதிபிம்ப வாதத்தின்படி அஞ்ஞானவுபகித சுத்தப்பிரம்மமாகிய பிம்பம் ஈசுவரனும். அது தத் பதத்திற்கு வாச்சியார்த்தமாம். சமஷ்டியஞ்ஞான சம்பந்தத்தால் பிராந்தியினால் பிரதிபிம்பத் தன்மையை அடைந்த பிரஹ்மமாகிய ஒரு ஜீவனே துவம்பதத்திற்கு வாச்சியார்த்தமாம். பிம்பப்பிரதி பிம்பத்தன்மைகளின் கற்பனையின்றிய அசங்க சுத்த சைதன்னியம் அவ்விரண்டு பதங்களுக்கும்

இலக்ஷியார்த்தமாம். காரிய காரணவுபாதி வாதத்தின்படி மாயையாகிய காரணவுபாதியையுடைய சேதனம் ஈசுவரனும் (தத்பதத்தின் வாச்சியமாம்). அந்தக்கரணமாகிய காரியவுபாதியையுடைய சேதனம் ஜீவனும் (துவம்பதத்தின் வாச்சியமாம்). இரண்டு உபாதிகளுமின்றிய சுத்தப் பிரஹ்மம் அவ்விரண்டு பதங்களுக்கும் இலக்ஷியார்த்தமாம். அவச்சேத வாதத்தின்படி மாயையினால் அவச்சின்ன (விசிஷ்ட) சேதனமாகிய ஈசுவரன் தத்பதத்தின் வாச்சியார்த்தமாம். மாயா அநவச்சின்ன பிரஹ்மசேதனம் தத்பதத்தின் இலக்ஷியார்த்தமாம். அந்தக்கரணம் அல்லது வியஷ்டி அஞ்ஞானத்தால் அவச்சின்ன (விசிஷ்ட) சேதனமாகிய ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தமாம். அந்தக்கரண அல்லது வியஷ்டி அஞ்ஞான அநவச்சின்ன கூடஸ்தசேதனம் துவம் பதத்தின் லக்ஷியார்த்தமாம். அவ்விரண்டு லக்ஷியார்த்தத்திற்கும் (பிரஹ்ம கூடஸ்தருக்கு) அகண்டைகரசத்துவமுண்டு.

இந்நூலிற் கூறிய ஆபாசவாதத்தின்படி ஸாபாச (சிதாபாசனோடு கூடிய) மாயா விசிஷ்ட சேதனமாகிய ஈசுவரன் தத்பதத்தின் வாச்சியார்த்தமாம். ஸாபாச மாயாபாகத்தைவிட்டு மிஞ்சிய சுத்தப் பிரஹ்மம் இலக்ஷியார்த்தமாம். ஸாபாச அந்தக்கரண அல்லது வியஷ்டி அஞ்ஞானும்ச விசிஷ்ட சேதனமாகிய ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தமாம். ஸாபாச அந்தக்கரணம் அல்லது வியஷ்டி அஞ்ஞானும்சமென்னும் உபாதி (விசேஷண) பாகத்தைவிட்டு மிஞ்சியசேதனம் (கூடஸ்தன்) இலக்ஷியார்த்தமாம். இவ்விரண்டு இலக்ஷியார்த்தங்களுக்கும் அகண்டைகரசத்துவமுண்டு. முற்கூறிய சகலப்பிரக்கிரியைகளுக்கும் ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மை ஜகத்து என்பவற்றை ஆரோபித்து அவற்றின் அபவாத வாயிலாக அத்துவிதீயப் பிரஹ்மத்தையறிவிப்பதில் தாற்பரியமாம். ஆகையால் எந்த முமுக்ஷுவுக்கு எந்தப் பிரக்கிரியையின்படி அத்வைதப் பிரஹ்மத்தின் ஞானமுண்டாகுமோ அவனுக்கு அதே பிரக்கிரியை நலமுடையதாம். இப்படித் தத்துவமசி மகா வாக்கியத்தில் காட்டப்பட்ட வாச்சிய லக்ஷியங்களின் கிரமம் மற்ற மூன்று மகா வாக்கியங்களிலும் அறிந்துகொள்ளத்தக்கதாம். இந்த மகா வாக்கிய விவேகப் பிரகரணத்தில் சகல மகா வாக்கியங்களிலும் இரண்டிரண்டு பதங்களின் இலக்ஷியார்த்தங்களைக் கூறி அவற்றின் ஐக்கியம் பரஸ்பரம் அறிவிக்கப்பட்டிருக்கின்றது. அதுவே முமுக்ஷுக்களுக்குக் கொள்ளத்தக்கதாம். அவ்வாறாயினும் வாச்சியார்த்த ஞானமின்றி வாச்சியார்த்தத்தில் பிரவேசித்துள்ள இலக்ஷியார்த்தத்தின்

தெளிவாகிய ஞானம் உண்டாகாதாகையால் இந்தப் பிரகரணத்தில் முன்னும்பின்னும் அநேக இடங்களில் வாச்சிய இலக்ஷியங்களிரண்டும் சொல்லப்பட்டிருக்கின்றன. அதனையறியாமல் முமுக்ஷுக்களுக்குப் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயமாகிய தத்துவ ஞானமுண்டாகாது.

இங்குச் சங்கை சமாதானமாகிய விவாதமநேகமிருக்கின்றது. அது சுத்தபுத்தியுடைய ஜிஞ்ஞாசுக்களுக்கு உபயோகமில்லாமையாலும் நூல் விரியுமென்னும் பயத்தாலும் எழுதப்படவில்லை. ஆனால் அதன் தன்மை மாத்திரம் காட்டப்பட்டது. முற்கூறிய நான்கு மகா வாக்கியங்களிலும் கிரமமாக இருக்கும் "பிரஞ்ஞானம்" "அகம்" "துவம்" "இது என்பதை விசேஷணமாகவுடைய ஆத்மா" என்னும் நான்கு பதங்களுக்கும் வாச்சியார்த்தம் சகல மதத்தின்படி ஜீவனும். இவ்வாறே "பிரஹ்மம்" "பிரஹ்மம்" "தத்" "பிரஹ்மம்" என்னும் நான்கு பதங்களுக்கும் வாச்சியார்த்தம் ஈசுவரனும். இச்சீவேசுவரரிருவருக்கும் சிற்றறிவுடைமை முதலியனவும் பேரறிவுடைமை முதலியனவுமாகிய விரோத தர்மம் இருத்தலால் அவ்விருவரின் ஐக்கியம் கடாகாச (கட விசிஷ்ட ஆகாச) மடாகாச (மடவிசிஷ்ட ஆகாச)ங்களின் ஐக்கியத்தைப் போலச் சம்பவியாது என்றாலும் கடமட திருஷ்டிகளைவிட்டு அவ்விரண்டிலுமுள்ள ஆகாயமாத்திரத்தில் ஐக்கியம் சம்பவித்தல்போல இலக்ஷணையினால் தர்மத்தோடு உபாதி பாகத்தைவிட்டு ஜீவேசுவரர்களிருவரிடத்துமுள்ள இலக்ஷியார்த்தமாகிய சேதனமாத்திரத்திற்கு ஐக்கியம் சம்பவிக்கின்றது.

இங்கு மகாவாக்கியங்களின் இரண்டிரண்டு பதங்களுக்கு ஜகத்திலக்ஷணை சம்பவியாது. ஏனெனின் இலக்ஷியார்த்தமாகிய ஆத்மாவும் பிரஹ்மமும் வாச்சியார்த்தத்தில் (ஜீவேசுவரரிருவர்களிடத்துப்) பிரவேசித்திருக்கின்றன. ஜகத்திலக்ஷணையின்படி வாச்சியார்த்த முழுவதையும் விட்டால் அதனோடு இலக்ஷியார்த்தமும் விடுபடும்.

அஜகத்திலக்ஷணையும் பொருந்தாது. ஏனெனின் அஜகத்திலக்ஷணையின்படி வாச்சியார்த்தத்தை விடாவிடின் விரோதமிருத்தலால் இலக்ஷணை வியர்த்தமாமென்னும் பிரசங்கமுண்டாம்.

ஆகையால் "அவன் இந்தத் தேவதத்தன்" என்று முன்கூறிய திருஷ்டாந்தத்தைப்போல விரோதமில்லாத பாகத்தைக் கொள்ளுதலால் ஐக்கியம் சம்பவித்தலின் இங்குப்பாகத்தியாக லக்ஷணையே பொருந்துகின்றது. இப்படி ஆசாரியர் இலக்ஷணையால் அறிவித்த

இரண்டு பதங்களின் இலக்ஷியார்த்தத்திலும் அதிகாரிக்கு யதார்த்த அபேத ஞானம் உண்டாகின்றதில்லை. எதனாலெனின் மாயை அவித்தைகளால் உண்டாகிய தற்பதார்த்தப் பிரம்மத்தின் கண் பரோக்ஷத் தன்மைப் பிராந்தியும் துவம்பதார்த்த சாக்ஷியின் கண் பரிச்சின்னத் தன்மைப் பிராந்தியும் தடையாயிருத்தலின் அதை நிவர்த்திக்கும் பொருட்டு ஓதப்புரோதபாவம் (குறுக்கு நெடுக்குத்தன்மை) செய்ய வேண்டியதாம். அந்த ஓதப்புரோத பாவத்தின் கிரமம் இதுவாம். "தத்" பதத்தின் அர்த்தத்தின் பரோக்ஷத்தன்மைப் பிராந்தியை நிவிருத்திக்கும்பொருட்டு "அதுநீ" என்று "தத்" பதத்தின் அர்த்தத்தை உத்தேசித்துத் துவம் பதத்தின் அர்த்தரூபத்துவம் விதேயமாம். துவம் பதத்தின் அர்த்தத்தில் பரிச்சின்னத்தன்மைப் பிராந்தியை நிவிர்த்திக்கும்பொருட்டு நீ அது என்று துவம் பதத்தின் அர்த்தத்தை உத்தேசித்துத் "தத்" பதத்தின் அர்த்தரூபத்துவம் விதேயமாம். ஏனெனின் தத்பதத்தின் அர்த்தமாகிய பிரஹ்மத்திற்குத் துவம் பதத்தின் அர்த்தமாகிய நித்தியாபரோக்ஷ சாக்ஷிரூபத்தன்மை சித்தித்தமையால் பரோக்ஷத்தன்மைப்பிராந்தி கெடுகின்றது. துவம் பதார்த்தமாகிய சாக்ஷிக்குத் தத் பதத்தின் அர்த்தமாகிய வியாபகப் பிரஹ்ம ரூபத்தன்மை சித்தித்தமையால் பரிச்சின்னத்தன்மைப் பிராந்தி நீங்குகின்றது. அதுபோல "நான் பிரஹ்மம், பிரஞ்ஞானம் பிரஹ்மம், ஆத்மா பிரஹ்மம்" என்று அறிதலால் பரிச்சின்னத்தன்மைப்பிராந்தியும் "பிரஹ்மம் நான், பிரஹ்மம் பிரஞ்ஞானம், பிரஹ்மம் ஆத்மா" என்றறிதலால் பரோக்ஷத் தன்மைப் பிராந்தியும் கெடுகின்றன.

இவ்வாறு ஓதப்புரோதத் தன்மை சொல்லப்பட்டது. அது ஸ்ரீமத் பாகவதத்தின் 12-வது ஸ்கந்தத்திலுள்ள 5-வது அத்தியாயத்தின் 11-வது சுலோகத்தில் ஸ்ரீ சுகதேவர் "நான் பரமதாம (நிரதிசய சொரூப)ப் பிரஹ்மமாயிருக்கின்றேன், பரமபதப் பிரஹ்மம் நான் என்று செவ்வையாகக் காண் (விசாரிக்) கின்றவனாய் ஆத்மாவை (மனதை) நிஷ்களா (நிருபாதிக) ஆத்மாவில் (பிரஹ்மத்தில்) தாரணை செய்து தேக முதலிய சகலத்தையும் தனக்கு வேருகப் பாரான்" என்று பரீக்ஷித்து ராஜாவை நோக்கிச் சொல்லியிருக்கின்றார். ஆசாரியர்களும் அந்தந்த மகாவாக்கியத்தின் பிரசங்கத்தில் எழுதியிருக்கின்றார்கள். ஆகையால் ஜீவனது பரிச்சின்னத்தன்மைப் பிராந்தியும் பிரஹ்மத்தின் பரோக்ஷத்தன்மை முதலிய பிராந்தியும் நிவிருத்தியாதற் பொருட்டு முற்கூறிய ஓதப்புரோதத் தன்மை அவசியம் செய்யவேண்டியதாம்.

முற்கூறிய பிரகாரம் முமுக்ஷுக்கள் சத்சாஸ்திர சத்குரு கிருபையால் விரும்பிய பிரக்கிரியையின் ஞானத்தால் மூன்றுவித பரிச்சேதமில்லாததும், அகண்ட சச்சிதானந்த முதலிய விசேஷணத்தோடு கூடியதும், சமஷ்டி வியஷ்டி என்னும் சகலப் பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டானமும், மாயை அவித்தை அதன் காரியமென்னும் பிரபஞ்சமில்லாததும், உபாதியினாலாகிய ஜீவேசுவர பேதமுதலிய ஐந்து பேதமில்லாததும், பந்தமோக்ஷம் அதன் சாதனமென்பவற்றின் கற்பனையில்லாததும், பிரவிருத்தி நிவிருத்தியில்லாததும், சுத்தமும் ஏகரசமும்பரமார்த்த தத்துவமுமாகிய தன்னை யதார்த்தத்திட அபரோக்ஷமாக அறிந்து கிருதார்த்தர்களாகுக. 8

ஐந்தாவது மகா வாக்கிய விவேகம் முற்றிற்று.

ஆகக் கவி 177.

உ
ஓம் தத் ஸத்.
கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## ஆறுவது பிரகரணம்.

## *சித்திரதீபம்.

வெள்ளை வஸ்திரத்தைத் தரித்தவரும் வியாபகமானவரும் சந்திரனது நிறத்தைப்போன்ற நிறமுள்ளவரும் நான்கு புஜமுள்ளவரும் பிரசன்னமான முகமுடையவருமாகிய விநாயக்கக்கடவுளைச் சகல விக்கினங்களும் சாந்தியாகும் பொருட்டுத்தியானம் செய்யவேண்டும்.

எவரை நினைத்த மாத்திரத்தினுல் விக்கினங்கள் தூரமாகச் சென்று விடுகின்றனவோ, இச்சித்த பொருளைக் கொடுப்பவரும் யானை முகத்தையுடையவருமாகிய அவரை யான் துதிக்கின்றேன்.

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ்கரித்து சித்திர தீபத்திற்கு தாற்பரியபோதினியென்னும் வியாக்கியானம் செய்யப்படுகின்றது.

(அ—கை)

செய்யவிரும்பிய நூல் விக்கினமின்றி முடிதற்பொருட்டு "பரம் பொருளிடத்து" என்னும் பதத்தால் இஷ்டதேவதையின் சொரூபானுசந்தானவடிவ மங்கலத்தை அனுஷ்டிக்கின்றவராய் இக்கிரந்தம் வேதாந்த சாஸ்திரத்தின் பிரகரணமாயிருத்தலால் அந்த சாஸ்திரத்

* பரமான்ம வடிவ வஸ்திரத்தில் ஜகத்து வடிவ சித்திரத்தை தீபம் போல் பிரகாசஞ்செய்தலின் இந்தப் பிரகரணத்திற்கு சித்திரதீபம் எனப் பெயராயிற்று.

தினது விஷயம் முதலிய நான்கு அனுபந்தங்களினுலேயே அவ்வனு பந்தத்தையுடையதாந்தன்மை சித்திக்கின்றது என்பதை மனதில் வைத்துக்கொண்டு "அத்தியாரோப அபவாதங்களால் பிரபஞ்சசூன்யப் பிரமம் விஸ்தரிக்கப்படுகின்றது" என்னும் நியாயத்தை அனுசரித்து பரமாத்மாவில் ஆரோபிக்கப்பட்ட செகத்தின் திதிப் பிரகாரத்தை திருஷ்டாந்த சகிதமாகப் பிரதிஞ்ஞை செய்கின்ருர்.

சித்திர படத்திற் றவுதங்கட் டிதமுந்
திகழிலாஞ் சிதமிரஞ் சிதமென்
றெத்திற மவத்தை நால்வகை தோற்று
மிணையிலாப் பரம்பொரு ளிடத்து
மத்திறஞ் சித்தோ டந்தரி யாமி
யணிதிகழ் சூத்திரான் மாவோ
டொத்திடு விராட்டிவ் வவத்தைநால் வகையு
மொளிருமென் றுணர்ந்திடல் வேண்டும். 1

(ப—ரை) சித்திர படத்தில் = சித்திரத்தின் ஆதாரமான வஸ்திரத்தில், எத்திறம் = எப்படி, தவுதம் = தவுதமெனவும், கட்டிதம் = கட்டிதமெனவும், திகழ்இலாஞ்சிதம் = விளங்கா நின்ற லாஞ்சிதமெனவும், இரஞ்சிதமென்று = இரஞ்சிதமெனவும், நால்வகை அவத்தைதோற்றும் = நான்குவித அவத்தைகள் தோற்றுகின்றனவோ, அத்திறம் = அப்படி, இணை இலாப் பரம்பொருளிடத்தும் = சமானமற்ற பரமான்மாவிலும், சித்தோடு = சித்தும், அந்தரியாமி = அந்தரியாமியும், சூத்திர ஆன்மாவோடு = சூத்திரான்மாவும், ஒத்திடுவிராட்டு = சகலத்திலும் ஒத்திருக்கின்ற விராட்டுமாகிய, அணிதிகழ் இவ் அவத்தை நால் வகையும் = முறையாக விளங்கா நின்ற இந்த நான்குவித அவஸ்தைகளும், ஒளிருமென்று உணர்ந்திடல்வேண்டும் = விளங்கா நிற்குமென அறியவேண்டும்.

ஒடு—எண்ணிடைச் சொல்.

(அ—கை)

திருஷ்டாந்தத்திலுள்ள நான்கு அவஸ்தைகளின் சொருபத்தைக் கிரமமாகப் பிரதி பாதிக்கின்ருர்.

இங்குதன் னியல்பின் வெண்மைகாண் டவுத
மிணைதலி னன்னங்கட் டிதமா
மங்குறு மசிமே னியினிலாஞ் சிதமாம்
வன்னங்க ணிறைந்திரஞ் சிதமா
மங்குநற் பரந்தன் னியல்பினிற் சித்தா
மந்தரி யாமிமா யாவி
தங்குறச் சூக்கஞ் சூத்திரான் மாவாந்
தடிப்புட லான்விராட் டாமே. 2

(ப—ரை) இங்கு = இந்த அவஸ்தைகளுக்குள், தன்னியல்பின் = தானுகவே அதாவது திரவியாந்தர சம்பந்தம் இன்றி இருக்கும், வெண்மை = வெள்ளை வஸ்திரம், தவுதம் = தவுதமென்று சொல்லப்படும், அன்னம் இணைதலின் = கஞ்சியைப் பூசுவதனுல், கட்டிதமாம் = கட்டிதம் என்று சொல்லப்படும், மங்குறு மசிமேனியின் = மங்கலாகத் தோற்றுகின்றமைவடிவ ஆகாரத்தால், இலாஞ்சிதமாம் = இலாஞ்சிதமென்று சொல்லப்படும், வன்னங்கள் நிறைந்து = நிறங்களால் பூரிக்கப்பட்டு, இரஞ்சிதமாம் = இரஞ்சிதமென்று சொல்லப்படும், [தாஷ்டாந்தத்தில் அவ்வவஸ்தைகளைப் பிரதிபாதிக்கின்ருர்] அங்கு = அந்நால்வகை அவஸ்தைகளுள்ளே, நற்பரம் = நல்ல பரமான்மா, தன் இயல்பினில் = சுபாவமாகவே அதாவது மாயை மாயாகாரியம் இன்றியதாய், சித்தாம் = சித்தென்று சொல்லப்படும், மாயாவி = மாயையோடு கூடியதாய், அந்தரியாமி = அந்தரியாமியென்று சொல்லப்படும், சூக்கம் தங்குற = (அபஞ்சீகிருத பூதங்களின் காரியமான சமஷ்டி) சூக்ஷும பூதங்களின் சம்பந்தத்தால், சூத்திரான்மாவாம் = இரண்யகர்ப்பனென்று சொல்லப்படும், தடிப்பு உடலான் = (பஞ்சீகிருத பூதங்களின் காரியமான சமஷ்டி) தூலசரீர சம்பந்தத்தால், விராட்டாம் = விராட்டென்று சொல்லப்படும் எ—று.

காண், ஏ—அசை நிலைகள். 2

(அ—கை)

பரமான்மா சித்திர படம் போன்று இருப்பின் அதனை ஆசிரயித்த சித்திரங்கள் சொல்லத்தக்கனவாம் எனின் அதற்குக் கூறுகின்ருர்.

திரத்தினிற் பிரமன் முதற்றம்ப மீருஞ்
சேதனங் களுஞ்செடங் களும்வத்
திரத்திலோ வியம்போ லுத்தம வதமத்
திரத்தினு லுறைவன வாஞ்சித்
திரத்தினிற் கோட்டு மானுடர்க் குறுவத்
திரத்துடைப் போலிவே ருச்சித்
திரத்தினுக் கிடவத் திரத்திஞே டுறழ்வாய்த்
திகழ்வபோற் செயப்பட்ட வன்றே. 3

(ப—ரை) திரத்தினில் = சலனமற்ற பரமான்வில், உத்தம அதமத் திரத்தினுல் உறைவன = மேன்மை கீழ்மைத் தன்மையால் இருப்பனவாகிய, பிரமன்முதல் தம்பம் ஈருஞ்சேதனங்களும் = பிரமாதி ஸ்தம்ப பரியந்தமானபிராணிகளும், செடங்களும் = (மலைஆறுமுதலான) சடசமுதாயமும், வத்திரத்தில் ஓவியம்போல் ஆம் = படத்திலுள்ள சித்திரத்தின்சமானமாம், [பிரமாதிசெகத்து சேதனம்போன்றுஇருக்கும் தன்மையில் காரணம் கூறுதற்குத் திருஷ்டாந்தம் கூறுகின்ருர்] சித்திரத்தினில் கோட்டு மானுடர்க்கு = சித்திரத்தில் எழுதப்பட்ட மனுஷியாதி சரீரங்களுக்கு, சித்திரத்தினுக்கு இடவத்திரத்திஞேடு உறழ்வாய் = சித்திர ஆதார வஸ்திரத்திற்குச் சமானமாய், திகழ்வ போல் = விளங்குவனபோல, உறுவத்திரத்துடைப்போலி = பொருந்தா நின்ற வஸ்திராபாசங்கள், வேருச் செய்யப்பட்ட = தனித்தனி நாஞ வர்ணங்களோடு கூடினவாய் கற்பிக்கப்பட்டன எ—று.

அன்று, ஏ — அசைகள்.

அவைகள் குளிர் முதலியவற்றை நிவர்த்திக்காமையால் போலி வஸ்திரங்களேயாம். 3

(அ—கை)

தாஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர்.

சித்திலாந் தேகி களுக்குவெவ் வேறு
சீவரென் றிடுசிதா பாச
ரொத்துவந் தனர்மிக் கிவர்சமு சார
முறுவர்வத் திரத்துடைப் போலி
தொத்துறு நிறங்க டமையதிட் டானத்
துகின்மரு வியவெனச் சொலல்போற்
புத்தியற் றவர்க ளுயிர்ச்சமு சாரம்
போதமே வியதென மதிப்பார். 4

(ப—ரை) சித்திலாந்தேகிகளுக்கு = இங்ஙனம் பரமான்வில் ஆரோபிக்கப்பட்ட தேவாதி சரீரங்களுக்கே, சீவரென்றிடு சிதாபாசர் = சீவர்கள் எனப்பெயரிய சிதாபாசர்கள், வெவ்வேறு ஒத்து வந்தனர் = தனித்தனியாகப் பொருந்திவந்தார்கள்,(கற்பிக்கப்பட்டார்கள் என்பது பொருள், பருவதாதிகளுக்கன்றும்) [அத்தேவாதி சரீரங்கட்குச் சிதாபாசகற்பனையில் காரணம் கூறுகின்றார்] இவர்மிக்கு சமுசாரமுறுவர் = இச்சீவர்கள் (தேவதிரியக்கு மனுஷியாதி சரீரப் பிராப்தியால்) அநேகப் பிரகாரமாகச் சமுசாரத்தை அடைவார்கள், (பரமான்மா அடையார், நிருவிகாரியாதலால் என்பது அபிப்பிராயம்) [அற்றேல் எல்லாவாதிகளும் இலௌகீகரும் ஆத்மாவுக்கே சமுசாரமென்று கூறுகின்றார்கள். அதில் காரணம் யாது என்னும் சங்கைக்கு அஞ்ஞானமே காரணமாமென திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்] வத்திரத்துடைப்போலி = ஆபாச வஸ்திரத்தில், தொத்துறு நிறங்கள்தமை = பொருந்தியுள்ள வர்ணங்களை,அதிஷ்டானத்துகில் = ஆதார வஸ்திரத்தில், மருவிய என சொலல் போல் = பொருந்தியுள்ளன என்று சொல்லுதல்போல், புத்தியற்றவர்கள் = ஞானமில்லாதவர்கள், உயிர் சமுசாரம் = சீவனது சம்சாரத்தை, போதம் மேவியது என மதிப்பார் = ஆன்மாவில் இருப்பதாக அறிவார்கள் எ—று. 4

(அ—கை)

மலை, ஆறு முதலியவைகளுக்குச் சிதாபாச கற்பனையின்மையைத் திருஷ்டாந்த பூருவமாகக் கூறுகின்றார்.

ஓவியத் தமைந்த கிரியெழு வாய்கட்
கொண்டுகிற் போலியில் லதுபோன்
மேவிய சிருட்டி மண்ணெழு வாய்க்கு
வித்தையின் போலியு மிலதாந்
தாவிறன் வடிவி லிச்சமு சாரஞ்
சத்திய மாய்ப்புணர்ந் ததென
வாவிய பிரமை யவித்தையா மிதுதான்
மன்னிய வித்தையான் மடியும். 5

(ப—ரை) ஓவியத்து அமைந்த கிரி எழுவாய்கட்கு = சித்திரத்திலுள்ள பருவதம் முதலியவைகளுக்கு, ஒண்துகிற்போலி இல்லது

போல்=அழகிய வஸ்திராபாசம் எழுதப்படாதது போல, சிருஷ்டி மேவிய மண் எழுவாய்க்கு=சிருஷ்டியிலுள்ள மிருத்திகை முதலியவைகளுக்கு, வித்தையின் போலியும் இலதாம்=சிதாபாசனும் இன்றாம், (பிரயோசனம் இன்மையாலென்பது தாற்பரியம்) [இங்ஙனம் ஆன்மாவில் ஆரோபிக்கப்பட்ட சம்சாரத்திற்கு ஞானத்தால் நிவர்த்திக்கப்படுந்தன்மை சித்தித்தற்பொருட்டு அதன் காரணமாயுள்ள அவித்தையைக் கூறுகின்றார்] தாவு இல் தன்வடிவில்=கெடாத ஆன்ம வஸ்துவில், இச்சமுசாரம் சத்தியமாய் புணர்ந்ததென=இச்சமுசார பந்தமானது பாரமார்த்திகமாய் பொருந்தியுளதென்று, வாவிய பிரமை அவித்தையாம்=உண்டாகா நின்ற பிராந்தியே அஞ்ஞானமாம், இது தான்= இந்த அஞ்ஞானமானது, மன்னிய வித்தையால் மடியும் = நிலைத்த பிரமஞானத்தால் நிவர்த்தியாகும் எ—று. 5

(அ—கை)

இந்த ஞானமானது யாது? அதன் பிராப்தி உபாயம் யாது? என்னும் ஆகாங்க்ஷை உண்டாக ஞானத்தின் சொரூபத்தையும் அதன் பிராப்தி உபாயத்தையும் தெரிவிக்கின்றார்.

தன்னுடைப் போலி யாகிய சீவன்
றனையுறு பவந்தனக் கில்லை
யென்னுமெய் யறிவே வித்தையா மிதுதா
னெழில்விசா ரத்தின்வந் தெய்தும்
மின்னுறு சீவ செகபரான் மாவை
விசாரணை நிதஞ்செயல் வேண்டு
முன்னுறு சீவ செகச்சுபா வங்க
ளொழிந்திடிற் சொரூபமே மிஞ்சும். 6

(ப—ரை) தன்னுடைப் போலியாகிய சீவன்றனை=சிதாபாசனாகிய சீவனை, உறுபவம்=பொருந்தா நின்ற சமுசாரமானது, தனக்கு இல்லை=ஆன்மாவுக்கின்றாம், என்னும் மெய்அறிவே=என்றிப்படிப் பட்ட தத்துவஞானமே, வித்தையாம்=ஆன்மஞானமாம், இதுதான்= இந்த வித்தையானது, எழில் விசாரத்தின் வந்தெய்தும்=திடவிசாரத்தால் வந்து பொருந்தும், [விசாரத்தால் வித்தையானது பொருந்துமென்று கூறப்பட்டது, எதன் விசாரத்தால் வித்தை அடையப்படும்

என்னும் சங்கைக்குக் கூறுகின்றூர்] மின்னுறுசீவசெக பரான்மாவை= பிரகாசியா நின்ற சீவசெக பரங்களை, நிதம்விசாரணைசெயல்வேண்டும்= எப்போதும் விசாரிக்கவேண்டும், [அற்றேல் பரமான்மா விசாரிக்கத் தக்கது, மோக்ஷ காலத்தில் பல ரூபமாயிருத்தலினல்;சீவனையும் செகத்தையும் விசாரித்தல் எங்கே உபயோகமாம் என்னும் சங்கைக்கு அவைகளின் அபவாதத்தால் பரமான்மாவை மிஞ்ச வைப்பதில் உபயோகமாம் எனக் கூறுகின்றூர்] உன்னுறு சீவசெகச் சுபாவங்கள்=கருதா நின்ற சீவனது சொரூபத்தையும் செகத்தின் சொரூபத்தையும், ஒழிந்திடில்= நிவர்த்திக்கில், சொரூபமே மிஞ்சும்=பரமான்மாவே அவசேஷமாம் எ—று. 6

(அ—கை)

அப்படியானுல் விசாரத்தால் சீவனும் செகத்தும் பாதமாகும் போது தனது ஆன்மாவே மிஞ்சுகிறதெனச் சொல்லப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின் விசாரத்தால் சீவனுக்கும் செகத்துக்கும் பாதம் உண்டாகும்போது அவைகளின் தோற்றம் இன்மையினுல் விவகாரத்தின் இன்மை நேருமென்னும் சங்கைக்கு பாதசப்தத்திற்கு விவக்ஷிக்கப்பட்ட பொருளையும், விபக்ஷத்தில் அதாவது சீவனதும் ஜகத்தினதும் பிரதீதியை ஒப்பாதவிடத்து, அனிஷ்டத்தைத் தரும் தருக்கவடிவ தண்டத்தையும் கூறுகின்றூர்.

புலனுரு தொழித லவற்றெழி வன்ரும்
பொய்மையே யென்றிடு துணிவா
மலவெனிற் சுழுத்தி யாதியின் முயல்வற்
றடைந்திடு முயிர்பர கதியை
மலமிலா வான்ம சொரூபமிஞ் சுதருன்
மற்றது மெய்யெனுந் துணிவா
முலகுதோற் ருமை யலவல வென்னி
லுயிருறு முத்தியின் ருமால். 7

(ப—ரை) புலனுருது ஒழிதல் = (இந்திரியங்களுக்கு) விஷயமாகாது நீங்குதலே, அவற்று ஒழிவு அன்ரும் = அச்சீவ செகத்துக்களின் பாதமல்லவாம், (மற்ரே) பொய்மையே என்றிடு துணிவாம்= மித்தையாமென்னும் நிச்சயம் பாதமாம், அலவெனில் = இங்ஙனம் ஒப்பாவிடில், சுழுத்தி ஆதியில் = நித்திரை மூர்ச்சை முதலியவை

களில், முயல்வற்று=பிரயத்தனமின்றியே, உயிர் பரகதியை அடைந் திடும்=சீவன் மேலான கதியை அடைவன், (சுழுத்தியாதிகளில் இயல்பாகவே தொய்தப் பிரதீதி இன்மையால், தத்துவ ஞானமின்றி யும் முத்தியுண்டாமென்பது பொருள்) [தனது ஆத்மாவே மிஞ்சுகிற தென்னும் வாக்கியத்தினுலும் பரமாத்மாவின் சத்தியத்தன்மை ஞானமே விவக்ஷிதமாம், அதனினும் வேருன செகத்தின் விஸ்மரணம் அன்ரும், சீவன்முத்தியின்மை நேரிடுமாதலினெனக் கூறுகின்ருர்] மலம் இலா ஆன்ம சொரூபம் மிஞ்சுதல்தான்=அசுத்தமின்றிய ஆன் மாவினது அவசேஷமாவது, அது மெய்யெனும் துணிவாம் = அவ்வான்மா சத்தியமென்னும் நிச்சயமாம், உலகு தோற்ருமை அல= சகத்தின் அப்பிரதீதி அன்ரும், அலவென்னில்=இங்ஙனம் கொள்ளா விடின், உயிருறு முத்தி இன்ரும்=சீவன்முத்தியின்ருய்விடும் எ—று. மற்று, ஆல்—அசை. 7

(அ—கை)

எப்போதும் விசாரிக்க வேண்டுமென்னும் வசனத்தால் தேக வீழ்ச்சி பரியந்தம் விசாரம் பிராப்தமாகும்போது அதனது அவதி (எல்லை)யைக் கூறுகின்ருர்.

திரவிசா ரத்தாம் வித்தையே பரோட்சந்
திகழப ரோட்சமு மென்ன
விருவகை யவற்றி னுறினப ரோட்ச
மியம்பிய விசாரமுற் றுறுமாற்
பரமமுண் டென்ன வுணர்வுறி லதுதான்
பயன்றரு பரோட்சமா ஞானம்
பிரமநா னென்ன வுணர்வுறி லதுவே
பிறங்கப ரோட்சமெய்ஞ் ஞானம் 8

(ப—ரை) விசாரத்தாம் திரவித்தை=விசாரத்திஞல் உண்டா கும் திடமாகிய ஞானமானது, பரோட்சம் திகழ் அபரோட்சம் என்ன இருவகை=பரோட்சமும் விளங்காநின்ற அபரோட்சமுமென இருவித மாம், அவற்றின் = அவ்விரண்டனுள்ளே, அபரோட்சமுறின்=அப ரோட்ச ஞானம் பிராப்தமாயின், இயம்பிய விசாரம் முற்றுறும்=சொல் லிய விசாரமானது சமாப்தியையடையும், [விசாரத்திஞல் உண்டாகிய

வித்தையானது பரோட்சத்தன்மை அபரோட்சத்தன்மைப் பேதத்தால் இரண்டுவிதமாமென்று சொல்லப்பட்டது. அவ்விரண்டனது சொரூபத்தைத் தெரிவிக்கின்றார்] பரம் உண்டென்னும் உணர்வு உறில்=பிரமம் இருக்கின்றதென்று அறியின், அதுதான் பயன்தரு பரோட்சமாம் ஞானம்=அதுவே(அசத்துவாபாதக ஆவரண நிவர்த்திரூப) பலனைக் கொடுக்கும் பரோட்ச ஞானமாம்,பிரமம் நான் என்ன உணர்வு உறில்= நானே பிரமமென்று அறியின், அதுவே பிறங்கு அபரோட்ச மெய்ஞ் ஞானம்=அதுவே விளங்கா நின்ற பிரமத்தின் அபரோட்ச ஞானமாம் எ—று. ஆல்—அசை. 8

(அ—கை)

இப்படிப்பட்ட ஆன்ம சாட்சாத்காரத்திற்கு அசாதாரண காரணமாயுள்ள ஆன்ம தத்துவ விவேகத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.

நனியுட னெதனு லிவன்சமு சார
மனைத்தையு நண்ணுரு னந்தத்
தனிமைவிஞ் ஞானம் பெற்றிட வுணர்வின்
றத்துவம் வகுத்துரை செய்கே
னினியகூ டத்தன் பிரமஞ்சீ வேச
ரெனவுஞ்சித் தீரிரு வகைத்தாம்
புனிதவான் கடவம் பரமகா வானம்
புனல்வெளி மேகவிண் போலும். 9

(ப—ரை) நனியுடன்=அதிசீக்கிரமாக, எதனுல் = எந்தப் பிரம்ம ஞானத்தினுல், இவன்=இவ்வதிகாரி புருஷன், சமுசாரம் அனைத்தையும் நண்ணுருன்=சகல சமுசாரத்தினின்றும் விடுபடுவானோ, அந்தத் தனிமை விஞ்ஞானம் பெற்றிட=அந்த ஒப்பற்ற ஆன்ம சாட்சாத்காரத்தை அடையும் பொருட்டு, உணர்வின் தத்துவம்=ஆன்மாவின் சொரூபத்தை, வகுத்து உரை செய்கேன்=பிரித்துக் கூறுகின்றேன், [சிதாத்மாவின் பாரமார்த்திக ஏகத்தன்மை நிச்சயம் செய்தற்பொருட்டு வியவகார தசையில் தோற்றுகின்ற சைதன்னிய பேதத்தை நாமமாத்திரத்தாற் கூறுகின்றார்] இனிய கூடத்தன்= ஆனந்த வடிவ கூடஸ்தனெனவும், பிரமம்=பிரமமெனவும், சீவேசரெனவும்=சீவனெனவும் ஈசனெனவும், சித்து=ஒரே சேதனமானது,

ஈரிருவகைத்தாம்=நான்கு விதமாம், [ஒரே சித்திற்கு நான்கு விதமாய் இருக்குந்தன்மையில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] புனிதவான்=பரி சுத்தமாகிய ஆகாசமானது, கட அம்பரம்=கடாகாசமெனவும், மகா வானம்=மகாகாசமெனவும், புனல்வெளி=சலாகாசமெனவும். மேக விண்=மேகாகாசமெனவும், போலும்=சொல்லப்படுவது போன்றும் எ—று. 9

(அ—கை)

கடத்தால் வளைபட்ட கடாகாசமும் அதனால் வளைவுபடாத மகாகாசமும் பிரசித்தமாயிருத்தலின் அவற்றை விடுத்து அப்பிரசித்த மாயுள்ள சலாகாசத்தைப் பிரதிபாதனம் செய்கின்றார்]

கடத்தவச் சின்ன வானினீ ரகத்துக்
கதுவிமே கத்தொடு விண்மீ
னடுத்தவா னீர்வா னுமகா வானி
னகத்தமர் மேகமண் டலநீ
ரிடத்தனு மேக வான்புயற் றுளியா
யிருக்குநீ ரங்கிச வடிவிற்
றடத்தவான் பிரதி விம்பமா மிதுநீர்த்
தன்மையாற் கருதிடப் படுமே. 10

(ப—ரை) கடத்து அவச்சின்னவானில்=குடத்தால் வளைபட்ட ஆகாசத்திலுள்ள, நீர் அகத்து=சலத்தில், கதுவி = பிரதிவிம்பித் துள்ள, மேகத்தொடு விண்மீன் அடுத்தவான்=மேகம் நக்ஷத்திரம் ஆகிய இவைகளோடு கூடிய ஆகாசம், நீர்வானும்=சலாகாசமென்று சொல்லப்படும், [மேகாகாசத்தைப் பிரதிபாதிக்கின்றார்] மகாவானின் அகத்து=மகாகாசத்தின் மத்தியில், அமர்மேக மண்டல நீர் இடத்து= பொருந்தியுள்ள மேக சமுதாயத்திலுள்ள சலத்தில், அனுமேகவான்= பொருந்தியுள்ள அதாவது பிர்திவிம்பித்துள்ள ஆகாசம் மேகாகாச மாம், [அற்றேல் மேகசலம் தோன்றாமையினாலே அதில் ஆகாசத்தின் பிரதிவிம்பத்தின் ஞானம் எப்படியுண்டாமென்னுஞ் சங்கைக்குக் கூறு கின்றார்] புயல் துளியாய் இருக்கும்=மேகத்தின் சூக்ஷ்ம அவயவமா யுள்ள, நீர் அங்கிச வடிவில்=சல வடிவக் கூற்றில், தடத்தவான் பிரதிவிம்பமாம் இது=விசாலமாகிய ஆகாசத்தின் பிரதிவிம்பமாகிய இது, நீர்த்தன்மையால் கருதிடப்படும்=சலத்தன்மையால் அனுமிக் கப்படும் எ—று.

மேகத்திலுள்ள சலமானது பிரத்தியக்ஷமாகத் தோன்றுதாயினும் மழை வடிவ காரியத்தால் மேகத்தில் அதனுபாதானமான சூக்ஷ்ம அவயவ வடிவ சலம் இருக்கிறதென்று அனுமிக்கப்படுகின்றது. அவ்வனுமானமிதுவாம்:- மேகம் ஜலத்தையுடையது, விருஷ்டியையுடையதால், துருத்திபோன்று, சலத்தன்மையாகிய ஏதுவினாலேயே பிரதிவிம்பம் உடையதாந்தன்மையுட் அனுமிக்கப்படுகிறது அஃதாவது விவாத விஷயமான சலம், ஆகாசத்தின் பிரதிவிம்பத்தினையுடையது. சலத்தன்மையால், கடத்திலுள்ள சலம்போன்று என்னும் அனுமானத்தால் மேகத்தின் அம்சவடிவ சலத்திலும் ஆகாசப்பிரதிவிம்பத்தின் உண்மை அறியப்படுகின்றதென்பது பொருள்.

ஏ—அசை. கடத்து என்பதில் 'அத்து'—சாரியை 10

(அ—கை)

இப்படி திருஷ்டாந்தமாயுள்ள நான்கு ஆகாசங்களையும் பிரதிபாதனஞ் செய்து தாஷ்டாந்தத்தில் முதலில் சொல்லப்பட்ட கூடஸ்தனைப் பிரதிபாதிக்கின்றார்.

நிலைமை யாலுட லிரண்டுறை சேதன
னிகழ்தரு கூடம் போ
லுலைவிலா மையாற் கூடத்த னுமிதி
லுறுமதிச் சிற் சாயை
விலக லற்றுயிர் தரித்தலிற் சீவனும்
வெம்பவ மிவன் சேர்வன்
செல விண்ணுற்கட விண்ணெனக் கூடத்தன்
சீவனுன் மறை வாமால். 11

(ப—ரை) நிலைமையால்=(பஞ்சீகிருத அபஞ்சீகிருத பூதங்களின் காரியத்தன்மையால் தூலசூக்ஷ்ம வடிவமாயும் அவித்தையினால் கற்பிக்கப்பட்டதாயும் உள்ள இரண்டு தேகங்களுக்கும்) ஆதாரமாக இருக்குந்தன்மையால், உடல் இரண்டுறை சேதனன்=அவ்விரண்டு தேகங்களாலும் அவச்சின்னமான ஆன்மா, நிகழ்தரு கூடம் போல்= விளங்கா நின்ற கொல்லன் அடைகல் போல, உலைவு இலாமையால்= சலனம் இல்லாமையால் அதாவது நிருவிகாரமாயிருத்தலினால், கூடத்தனும் = கூடஸ்தன் என்று சொல்லப்படும், [கூடம்போல் உலைவு

இலாமை கூடஸ்த சப்தத்தின் பிரவிர்த்தி நிமித்தமாமென்பது பொருள். இங்ஙனம் கூடஸ்தனைப் பிரதிபாதித்து சீவன் கூடஸ்தனிடத்தில் கற்பிக்கப்பட்ட புத்தியில் பிரதிவிம்பமாயிருத்தலினால் அதன் பக்ஷபாதியாமாதலின் அவனைப் பிரதிபாதிக்கின்றார்]இதில் உறும்மதி= இக்கூடஸ்தனிடத்தில் கற்பிக்கப்பட்ட புத்தியிலுள்ள, சிற்சாயை= சித்தின் பிரதிவிம்பம், விலகல் அற்று உயிர் தரித்தலின்= நீங்காது பிராணனைத் தரித்தலினால், சீவனும் = சீவனென்று சொல்லப்படும், (உயிர்தரித்தல் சீவசப்தத்தின் பிரவிருத்தி நிமித்தமாமென்பது பொருள்) [கூடஸ்தனினும் வேருக சீவனைக் கற்பித்தல் நிஷ்பிரயோசனமாமென்னும் சங்கைக்கு நிருவிகாரியாகிய கூடஸ்தனுக்கு சமுசாரம் சம்பவியாமையின் அச்சமுசாரத்தை நிருவகிக்கும் பொருட்டு சீவனை அங்கீகரிக்க வேண்டுமென்று கூறுகின்றார்] இவன் = இச்சீவனானவன், வெம்பவம் சேர்வன்=கொடிய சமுசாரத்தை அடைவன், [இங்ஙனம் சீவனினும் வேருகக் கூடஸ்தன் இருப்பனேல், ஏன் தோற்றுகிறதில்லை என்னும் சங்கைக்கு சீவனால் மறைக்கப்பட்டபடியால் தோற்றவில்லை என்று திருஷ்டாந்த சகிதமாகக் கூறுகின்றார்] செலவிண்ணால் கடவிண்ணென=ஜலாகாசத்தால் கடாகாசம் மறைக்கப்பட்டது போல, சீவனால் கூடத்தன் மறைவாம் = சிதாபாசனால் கூடஸ்த சேதனம் மறைக்கப்பட்டுளது எ—று.

ஆல்—அசைநிலை.

கடாகாசத்தை ஆசிரயித்துள்ள ஜலம் நிரம்பிய கடத்தில் மகாகாசத்தின் பிரதிபிம்பம் போலக் கூடஸ்தனிடத்தில் கற்பிக்கப்பட்ட ஸ்தூல தேகமாகிய கடத்திலுள்ள அந்தக்கரணம் அல்லது அவித்தையின் கூறென்னும் ஜலத்திலுள்ள வியாபக சேதனத்தின் பிரதிபிம்பமாகிய சிதாபாசன் அதிஷ்டான கூடஸ்தனோடு ஜீவனெனப்படுவன்.

இங்கே சிலர் சங்கிக்கின்றார்கள்:- உருவமில்லாத ஆகாயத்தின் பிரதிபிம்பம் உருவமுள்ள ஜலத்திலும், உருவமின்றிய சிவப்புக் குணத்தின் பிரதிபிம்பம் உருவமுள்ள கண்ணாடி முதலியவற்றிலும் காணப்படுகின்றது. என்றாலும் உருவமில்லாத உபாதியில் பிரதிபிம்பம் காணப்படுகிறதில்லை. ஆகையால் உருவமில்லாத அதாவது சக்ஷு இந்திரியத்திற்கு விஷயமாகாத அந்தக்கரணத்திலாவது அல்லது அவித்தையின் அம்சத்திலாவது உருவமில்லாத சேதனத்தின் பிரதிபிம்பம் சம்பவியாது.

இச்சங்கைக்கு இது சமாதானமாம்:- உருவமுள்ள வஸ்துவில் அவசியம் பிரதிபிம்பமுண்டாகுமென்பது நியமமின்று; ஏனெனின், நீல முதலிய உருவமுள்ள கட முதலியவற்றில் பிரதிபிம்பம் காணப் படாமையால், சொச்சத்திரவியத்தில் அவசியம் பிரதிபிம்பமுண்டாம் என்பது நியமமாம். ஆகையால் உருவமுள்ள வஸ்து பிரதிபிம்பமுடை யதாகத் தக்கதாம். உருவமுடையதாயிருத்தலால் என்னும் அனுமா னம் உருவமுடைய வஸ்துவில் பிரதிபிம்பத்திற்குச் சாதகமன்று; ஏனெனின், யாது யாது உருவமுடையதோ அது அது பிரதிபிம்பம் உடையதாம் என்னும் வியாப்தி கருமை முதலிய உருவமுடைய கட முதலியவற்றில் பிறழ்தலால். சொச்சவஸ்து பிரதிபிம்பமுடையதாகத் தக்கதாம்; சொச்சமாயிருத்தலால் என்னும் அனுமானம் சொச்சத்தில் பிரதிபிம்பமுடைமைக்குச் சாதகமாம். ஏனெனின், யாது யாது சொச் சமோ அது அது பிரதிபிம்பம் உடையதாம் என்னும் வியாப்திக்கு வியபிசாரமில்லாமையால்.

இப்படி அந்தக்கரணம் அல்லது அவித்தையின் அம்சம் உருவ மில்லாததாயினும், சத்துவ குணத்தோடு கூடிய தன்மையால் சொச்ச மாம்; ஆதலால் சேதனத்தின் பிரதிபிம்பமுடையதாம். இங்கே இது அனுமானமாம்:- அந்தக்கரணம் அல்லது அவித்தையின் அம்சம் சேதனத்தின் பிரதிபிம்பமுடையதாகத் தக்கதாம்; சொச்சமாயிருத்த லால், கண்ணாடி முதலியவற்றைப்போல.

அன்றியும் விசாரித்துப் பார்க்குமிடத்துச் சுருதியிற் பிரதிபா திக்கப்பட்ட அர்த்தத்தில் தர்க்கஞ் செய்தல் தகுதியின்றாம். திருஷ்ட கற்பனையாகிய யுக்தியானது புருஷனது புத்தி கற்பனையாயிருத்தலால் அதைச்சுருதியின் அர்த்தத்தில் பொருத்துதல் சரியன்று. ஏனெனின், சுருதியிற் பிரதிபாதிக்கப்பட்ட சுவர்க்க முதலியவற்றில் திருஷ்ட கற்பனையில்லை. ஆகையால் "ஜீவேசுவரர்களை ஆபாசமாகச் செய் கின்றது," "நிழல் வெயில்களைப் போல அதாவது பிரதிபிம்பத்தையும் சூரியனையும் போல விலக்ஷணமாக ஜீவனையும் பரமாத்மாவையும் பிரஹ்மவித்துக்கள் சொல்லுகின்றனர்," "உருவங்கள்தோறும் அதா வது உபாதிகள்தோறும் பிரதி உருவம் (பிரதிபிம்பம்) உண்டாயிற்று," "ஒரே பூதாத்மா பூதங்கள்தோறும் உள்ளதாய் ஜலசந்திரனைப்போல ஒருவிதமாகவும் பலவிதமாகவுங் காணப்படுகின்றது" என்னும் இவை முதலிய சுருதியாற் கூறியதும்,"இதனாற்றான் (ஜலத்தின் கண்ணுள்ள) சூரியன் முதலியவற்றைப்போல் உவமையாம்" என்னுஞ் சூத்திரத்திற் கூறியதுமாகிய சிதாபாசன் ஆரோபத்தில் ஒப்பவேண்டியதாம். 11

(அ—கை)

இந்த மறைப்பானது ஓரிடத்தும் சாஸ்திரங்களில் பிரதிபாதிக் கப்படவில்லேயே என்னும் சங்கைக்கு அதனே அன்னியோன்னியாத்தி யாச சப்தத்தால் சாஸ்திரங்களிற் கூறியிருக்கின்றதெனக் கூறுகின்ருர்.

அனேய தேயன்னி யோன்னியாத் தியாசமா
மாவியோர் காற் கூடத்
தனேம றத்தலே யனுதியா கியவவி
வேக மாந் தானீதே
நினேக மூலமா மவித்தையென் றின்னது
நினேப்பொடு மறைப் பென்ரும்
வினேயி லானிலேத் தெரிபடா னென்பது
விளம்பிய மறைப் பாகும். 12

(ப—ரை) அனேயதே=அவ்வாவரணமே, அன்னியோன்னி யாத்தியாசமாம் = பரஸ்பராத்தியாசமென்று பாஷியாதிகளில் சொல் லப்படுகின்றது, [இதுவே அத்தியாசமாமேல் இதற்குக் காரணரூபமா கிய அவித்தை சொல்லத்தக்கதாமென்னும் சங்கைக்கு சீவனுக்கும் கூடஸ்தனுக்கும் சமுசாரதசையில் பேதப் பிரதீதியின்மையே அவித் தையாமெனக் கூறுகின்ருர்] ஆவி=இச்சீவனுனவன், ஓர்கால் கூடத் தனே மறத்தலே = ஓர்போது அசங்க ஆன்மாவை விசாரித்துணரா மையே, அனுதியாகிய அவிவேகமாம்=அனுதியாகிய அவிவேகம் என்று சொல்லப்படும், ஈதே=இவ்வவிவேகமே, மூலமாம் அவித்தை என்று நினேக=மூலாஞ்ஞானமென்று அறிவாய், [பூர்வம் சொல்லிய சீவனுக்கு அவித்தையினுல் கற்பிக்கப்பட்ட தன்மையை ஸ்பஷ்டம் செய்தற்பொருட்டு அவித்தையைப் பிரிக்கின்ருர்] இன்னது=*இந்த மூலாவித்தையானது, நினேப்பொடு மறைப்பு என்று ஆம்=

* விசாரிக்குமிடத்து எது இல்லேயோ அது அவித்தை. அல்லது ஆவரண விக்ஷேப சத்திகளேயுடைய அநாதிபாவ பதார்த்தம் அவித்தை எனப்படும். அந்த அவித்தை மூலாவித்தை தூலாவித்தையென இரண்டு வகையாம். பிரஹ்மான்ம சொரூபத்தை மறைக்கும் அவித் தை மூலாவித்தையாம். கடம் முதலிய விஷயாவச்சின்ன சேதனத்தை மறைக்கும் அவித்தை தூலாவித்தையாம். இதுவே பிராதிபாசிக இர ஜதம் முதலியவற்றிற்கு உபாதான காரணமாம்.

§ விக்ஷேபமும் ஆவரணமும் என இரண்டு விதமாம், [விக்ஷேபத்திற்குக் காரணமாதலால் ஆவரணம் சிரேஷ்டமாயாதலின் அதனை முதலில் தெரிவிக்கின்றார்] வினையிலான் = நிஷ்கிரிய கூடஸ்தன், இலை தெரிபடான் என்பது = இல்லை தோற்றவில்லையென்னும் வியவகாரத் திற்கு ஏது, விளம்பிய மறைப்பு ஆகும் = சொல்லிய ஆவரணமாம் எ-று. தான்—அசை. 12

(அ—கை)

அப்படியானல் அவித்தையும் அதனாற் செய்யப்பட்ட ஆவரண மும் உள்ளன என்பதில் யாது பிரமாணம் என்னும் சங்கைக்கு உலக அனுபவமே பிரமாணமாமென்று கூறுகின்றார்.

ஞானகீ னன்மற் றறிஞனல் வினவமெய்
நானறிந் திலன்போத
மானதில் லையிங் கிலகுரு தெனவுணர்ந்
தறைகுவன் சொயஞ்சோதி
மேனலம் பெரு வவித்தையே தனைவிட
மேவுமோ மறைப்பென்னன்
மோனை யாம்பல தருக்கந்தன் னனுபவ
முழுதையு மறநூறும். 13

(ப—ரை) ஞானகீனன் = அஞ்ஞானியானவன், அறிஞனல் வினவ = வித்துவானல் (கூடஸ்தனை அறிவாயாவென்று) வினவப்பட, மெய் நான் அறிந்திலன் = கூடஸ்தனை யான் அறியேன், போதமா னது = கூடஸ்தனானவன், இல்லை இங்கு இலகுரது என = இல்லை ஈண்டு விளங்கவில்லை என்று, உணர்ந்து அறைகுவன் = அறிந்து சொல்லுவன், (அஃதாவது ஞானியினல் வினவப்பட்ட அஞ்ஞானியா னவன் கூடஸ்தனை யான் அறியேனென்று அஞ்ஞானத்தை அனுப வித்துக் கூறுகின்றான். இது அவித்தையின் அனுபவமாம். கேவலம் அஞ்ஞானத்தின் அனுபவத்தையே கூறுகின்றனன் என்பதின்றும் -

§ கருத்திருத்தன்மை போத்திருத்தன்மை முதலிய சோகவடிவ சமுசா ரத்தோடு கூடிய தேகாதிப் பிரபஞ்சமும் அதன் ஞானமும் விக்ஷேபம் எனப்படும்.

மற்றோ கூடஸ்தன் இல்லை விளங்கவில்லை என்று கூடஸ்தனது அசத்துவத்தையும் அபானத்தையும் அனுபவித்துக் கூறுகின்றான். இது ஆவரணத்தின் அனுபவமாம். ஆகையால் இரண்டிலும் அனுபவம் பிரமாணமாம் என்பது தாற்பரியம்) [அற்றேல் தங்கள் மதத்தில் ஆத்மா சொப்பிரகாசமாயிருத்தலின் அதில் அவித்தை பொருந்தாது. பிரகாசத்திற்கும் அந்தகாரத்திற்கும் போல விருத்த சுபாவமுடைமையால், இவ்விரண்டற்கும் சம்பந்தம் பொருந்தாமையின், அவித்தை இன்மையாகவே அதனால் செய்யப்பட்ட ஆவரணமும் நிரூபிக்க முடியாதாம். அஃது இன்மையாகவே அதனை மூலமாகவுடைய விக்ஷேபமும் சம்பவியாது. விக்ஷேபம் இன்மையாகவே ஞானத்தால் நிவர்த்திக்கத்தகுந்த அனர்த்தமின்மையின் ஞானம் வியர்த்தமாம். அதனால் அதனைப் பிரதிபாதிக்கின்ற சாஸ்திரமும் அப்பிரமாணமாமென்று சங்கித்து இவ்வெல்லாமும் பூருவம் சொல்லிய அனுபவத்தால் பாதிக்கப்பட்டதாம் என்று கூறுகின்றார்] சொயஞ்சோதி மேல் நலம் பெரு அவித்தை ஏது = சொப்பிரகாச ஆன்மாவில் அமங்கள வடிவு அஞ்ஞானமானது எப்படியிருக்கும், அதை விட = அவ்வஞ்ஞானமின்றி, மறைப்பு மேவுமோ = ஆவரணம் பொருந்துமோ, என்னல் மோனையாம் பலதருக்கம் முழுதையும் = என்பது முதலிய அநேகப் பிரகாரமான தர்க்கங்களனைத்தையும், தன் அனுபவம் = முன்சொல்லிய சுவானுபூதியானது, அறநூறும் = அத்தியந்தம் கெடுக்கும் (காணப்பட்டதில் அனுபபத்தியின்றும் என்னும் நியாயத்தால் என்பது தாற்பரியம்) எ—று. 13

மற்று—அசைநிலை. அனுபபத்தி = பொருந்தாமை.

(அ—கை)

அங்ஙனமாயின் அனுபவமானது சொல்லிய தர்க்கங்களுக்கு விரோதமாயிருத்தலால் ஆபாசமாம். ஆதலால் அவ்வனுபவத்தால் தத்துவ நிச்சயம் கூடாதென்னும் சங்கைக்கு அனுபவத்திற்குப் பிராமாண்யத்தை அங்கீகரியாவிடின் கேவல தர்க்கத்திற்கு நிச்சயிக்குந் தன்மையின்மை உன்னாலேயே அங்கீகரிக்கப்பட்டபடியினால் தார்க்கீகனாகிய உனக்கு தத்துவ நிச்சயம் ஓரிடத்துமுண்டாகாதெனக் கூறுகின்றார்.

தனது ணர்ச்சிநம் பிக்கையின்
றேற்றர்க்கந் தான்மனு மையினலே
பினையெங்கே மெய்மை நிச்சயந்
தார்க்கிகன் பிறன்பெறு வானன்றே
மனது றைத்திடத் தருக்கம்வேண்
டுவதெனின் வாய்த்ததன் னனுபூதி
யனுசரித் ததாந் தருக்கஞ்செய்
குதர்க்கம்விட் டகலுதி திடமாமே. 14

(ப—ரை) தனது உணர்ச்சி நம்பிக்கை இன்றேல் = சுவானுபூதியில் விசுவாசம் இன்றேல், தர்க்கம் = தர்க்கமானது, மனுமையினல் = நிலைபெருமையினலே, தார்க்கிகன் பிறன் = தார்க்கீகனுகிய அன்னியன், பினை எங்கே = மற்று எவ்விடத்து, மெய்மை நிச்சயம் பெறுவான் = தத்துவ நிச்சயத்தை அடைவான், [அற்றேல் அனுபவமானது தத்துவ நிச்சயத்திற்கு ஏதுவாயினும் அனுபவிக்கப்படுகின்ற பொருளின் சம்பாவிதத்தன்மை ஞானத்தின் பொருட்டு தர்க்கமும் அங்கீகரிக்கத்தக்கதாம் என்னுஞ் சங்கையை அனுவாதஞ்செய்து அப்போது அனுபவானுசாரமாகவே தர்க்கம் செய்யத்தக்கதாம்; அதன் விரோதமாகச் செய்யத்தக்கதன்ரும் எனக் கூறுகின்ருர்] மனது உறைத்திட = புத்தி திடமாதற்பொருட்டு, தருக்கம் வேண்டுவது எனின் = தர்க்கம் அபேட்சிக்கப்படுவதாமேல், வாய்த்த = புண்ணியத்தாற் பெற்ற, தன் அனுபூதி அனுசரித்ததாந் தருக்கஞ்செய் = தனது அனுபவத்தை அனுசரித்ததாகிய தர்க்கத்தைச் செய்வாய், குதர்க்கம் விட்டகலுதி = குதர்க்கத்தை விட்டொழிப்பாய், திடம் ஆம் = இங்ஙனம் செய்யின் அனுபவம் திடப்படும் எ—று.

தான், ஏ, அன்று, ஏ, ஏ—அசைநிலைகள். 14

(அ—கை)

எதன் அனுசாரமாகத் தர்க்கம் வர்ணிக்கத்தக்கதோ அவ்வனுபவம் யாது என்னும் ஆகாங்க்ஷையுண்டாக பூருவம் சொல்லிய அவித்தையாதி விஷயக அனுபவத்தை நினைப்பூட்டுகின்ருர்.

தன்னு ணர்ச்சிதா னவித்தையா
வரணத்துந் தகவுறத் தெரிவித்தே
மன்ன தானிச வுணர்வவி
ரோதியென் றறிவுறத் தருக்கிப்பாய்
சொன்ன வன்னது விரோதியே
லியாதினுற் றுகண்மறைப் புணர்வாயோ
துன்னு மாவிவே கம்மதன்
விரோதியாந் தூயமே லோர்பாற்காண். 15

(ப—ரை) தன்னுணர்ச்சி = தனது அனுபவத்தை, அவித்தை ஆவரணத்தும் = அஞ்ஞானத்திலும் அதனுல் செய்யப்பட்ட ஆவரணத்திலும், தகவுறத் தெரிவித்தேம் = தெளிவாக அறிவித்தேம், [பலிதத்தைக் கூறுகின்ருர்] அன்னதால் = அக்காரணத்தினுல், நிசவுணர்வு = தனது சொருபவடிவ ஞானமானது, அவிரோதி என்று = அஞ்ஞானத்திற்கு அவிரோதமாம் என்று, அறிவு உற தருக்கிப்பாய் = ஞானம் உண்டாகும்படி தருக்கம் செய்வாய், [அத்தருக்கத்தினையே அபிநயஞ் செய்து காட்டுகின்ருர்] சொன்ன அன்னது விரோதியேல் = சொல்லிய அவித்தை ஆவரணங்களின் சாதனமான சைதன்னியமானது அவ் அவித்தைக்கு விரோதியாயின், துகள் மறைப்புயாதினுல் உணர்வாயோ = தோஷவடிவ அஞ்ஞானத்தை எதனுல் அறிவாய் (அஞ்ஞானத்தின் பிரதீதியே இன்ருய்விடும் என்பது பொருள்), [அப்படியானுல் அவித்தைக்கு விரோதி யாதெனிற் கூறுகின்ருர்] துன்னுமாவிவேகம் = உபநிஷத்தின் விசாரத்தால் உண்டாவதாகிய மேலாகிய ஞானம், அதன் விரோதியாம் = அஞ்ஞானத்திற்கு விரோதியாம், [ஞானத்திற்கு அஞ்ஞான விரோதித் தன்மை எங்கே காணப்பட்டதெனின் கூறுகின்ருர்] தூய மேலோர்பால் காண் = பரிசுத்தமாகிய தத்துவ ஞானிகளிடத்துப் பார்ப்பாய் எ—று. 15

தான்—அசை.

(அ—கை)

இங்ஙனம் அவித்தையையும் ஆவரணத்தையும் தெரிவித்து விக்ஷேபத்தின் அத்தியாசத்தைக் கூறுகின்ருர்.

சுத்தி வெள்ளிபோ லவித்தையா
வரணஞ்சேர் சோதியி லிருதேகத்
தொத்த சீவன்விட் சேபவாரோபமா
மோதிது வெனுங் கூற்றும்
சத்தியத் தன்மை சுத்திமே
வுறும்வெள்ளி தனினிகழ் வுறுமாப்போல்
சித்தின் மேவுறுஞ் சொயத்தன்மை
பொருண்மையுந் திகழும்விட் சேபத்தே 16

(ப—ரை) சுத்திவெள்ளிபோல் = கிளிஞ்சிலிடத்தே வெள்ளி அத்தியஸ்தமாவதுபோல், அவித்தை ஆவரணஞ்சேர் சோதியில் = பூர்வம்சொல்லிய அவித்தை ஆவரணங்களோடு கூடிய கூடஸ்தனிடத்து, இருதேகத்து ஒத்தசீவன் = ஆரோபிக்கப்பட்ட தூலசூக்ஷ்ம மென்னுமிரண்டு சரீரத்தோடுகூடிய சிதாபாசன், விட்சேப ஆரோபமாம் = விக்ஷேபத்தின் அத்தியாசமாம், [இந்த விக்ஷேபத்தில் அத்தியாசத்தன்மை சித்தித்தற் பொருட்டு சுத்தியில் இரசதாத்தியாசத்தின் சாமியத்தன்மையைத் தெரிவிக்கின்றார்] சுத்தி மேவுறும் = கிளிஞ்சிலில் பொருந்தியுள்ள, ஓது இதுவெனும் கூற்றும் சத்தியத் தன்மையும் = சொல்லாநின்ற இதுவென்னும் அம்சமும் அபாத்தியத் தன்மையும், வெள்ளிதனில் நிகழ்வுறுமாப்போல் = இரசதத்தினிடத்தில் தோற்றுவது போல, சித்தில் மேவுறும் = கூடஸ்தனிடத்தில் பொருந்தியுள்ள, சொயத் தன்மையும் பொருண்மையும் = தானென்னும் தன்மையும் வஸ்துத்தன்மையும், விக்ஷேபத்தே திகழும் = சிதாபாசனிடத்தே தோற்றும் எ—று.

இதுவென்னும் அம்சம் = புரோதேச சம்பந்தித்தன்மை. மூல சுலோகார்த்தத்தையனுசரித்து தன்மையிரண்டிடத்தும் உம்மை வருவிக்கப்பட்டது. 16

(அ—கை)

இங்ஙனம் சாமானியாம்சத்தின் பிரதீதியை சுத்தியும் கூடஸ்தனுமாகிய இரண்டிடங்களிலும் காண்பித்து, விசேஷாம்சத்தின் அப்பிரதீதியினது சாம்மியத்தைத் தெரிவிக்கின்றார்.

நீனிறப் புறத் தோடுமுக்
கோணமு நிகழுரு திப்பிக்கண்
மானக் கூடத்த னிடத்தசங்
கானந்த மாதியு மறைவாகுந்
தானவ் விப்பியிற் கற்பிதம்
வெள்ளியாந் தன்மைபோற் கூடத்த
ஞான மீதத்தி யாசவிட்
சேபமு நானெனும் பெயர்மேவும். 17

(ப—ரை) இப்பிக்கண் நீனிறப்புறத்தோடு முக்கோணமும்= கிளிஞ்சிலின்கண் நீலப்பிருட்டமும் மூன்றுவளைவும், நிகழுருதுமான= மறைபட்டது போல, கூடத்தனிடத்து= நிருவிகார ஆன்மாவிடத்தும், அசங்க ஆனந்தமாதியும்= அசங்கத்தன்மை ஆனந்தத்தன்மை முதலியவையும், மறைவு ஆகும்= திரோகிதமாம், [வேறு சாமியத்தைத் தெரிசிப்பிக்கின்றார்] அவ் இப்பியில் கற்பிதம்= அச்சுத்தியில் ஆரோபிக்கப்பட்ட பதார்த்தமானது, வெள்ளியாந் தன்மை போல் = வெள்ளி என்னும் பெயரை அடைவது போல், கூடத்த ஞான மீது= நிருவிகார சித்தில், அத்தியாச விட்சேபமும் = கற்பிக்கப்பட்ட சிதாபாச ரூப விக்ஷேபமும், நான் என்னும் பெயர் மேவும் = நான் என்னும் நாமத்தைப் பொருந்தும் எ—று.

எது பிராந்தியோடு தோற்றுகின்றதோ எதன் தோற்றமின்றிப் பிராந்தி உண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட அம்சம் சாமானிய அம்சமெனப்படும். அதனையே ஆதாரமென்றும் கூறுவர். இப்படிப் பட்டது திருஷ்டாந்தத்தில் இதந்தையும் அபாத்தியத்தன்மையும் தாஷ்டாந்தத்தில் தானெனுந் தன்மையும் வாஸ்தவத் தன்மையும் சாமானிய அம்சமாம்.

எது பிராந்தி காலத்தில் தோற்றுகிறதில்லையோ எது தோற்றுவதனால் பிராந்தி நீங்குகின்றதோ அது விசேஷ அம்சமெனப்படும். அதனையே அதிஷ்டானமெனவும் கூறுவர். இப்படிப்பட்டவை சுத்தி திருஷ்டாந்தத்தில் நீலமுதுகுடைமை திரிகோணத்தன்மை சுத்தித் தன்மை முதலியனவாம். தாஷ்டாந்தத்தில் சேதனத்தன்மை ஆனந்தத்தன்மை அசங்கத்தன்மை அத்வைதத்தன்மை முதலியனவாம். இவை விசேஷ அம்சமெனப்படும். தான்—அசை. 17

(அ—கை)

அற்றேல் திருஷ்டாந்தத்தில் எதிரேயுள்ள சுத்தி துண்டத்தில் இந்திரியத்திற்குச் சம்சர்க்கம் உண்டாகும்போது சுத்தியின் சாமான்ய அம்சம் விளங்குதலால் இது இரசதம் என்று அதனினும் வேருன இரசதாபிமானம் பொருந்தும். இங்ஙனம் தாஷ்டாந்தத்தில் ஆத்மா விளங்காமையினுல் அதனினும் வேருன வஸ்துவின் அபிமானம் பொருந்தாது என்னும் சங்கைக்கு ஈண்டும் சொப்பிரகாசத்தன்மையால் சித்துருப ஆத்மா விளங்குதலின் அதனினும் வேருன நான் என்னும் அபிமானம் பொருந்தும். ஆகையால் திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களுக்கு விஷமத்தன்மை இன்ரும் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்.

இதுவென் னங்கிசந் தான்தெரிந்
திரசத மென்றெணு மாப்போலத்
திதிபெறுந்தனை நானென வெண்ணுவன்
றிகழிது வொடு வெள்ளி
மதிசெயிற்பினந் தானுநா னென்பது
மற்றத னிகர் காண்டி
பொதுமை யேசிறப் பேயென
வுபயத்தும் பொலிந்திலங் கிடுமன்றே. 18

(ப—ரை) இது என் அங்கிசந்தான் தெரிந்து=சுத்தியினது இதம் அம்சத்தைச்சுயம் அறிந்து, இரசதம் என்று எணுமாப்போல= இது வெள்ளி என்று கருதி அபிமானிப்பதுபோல, திதி பெறுந்தனை= நிலைபெற்ற ஆன்மாவை, (சுயம்பார்க்கின்றவனுய்) நான்என வெண்ணுவன்=நான் என்று அபிமானிப்பன், [அப்படியானுல் சொயம் சப்தத்திற்கும் அகம் சப்தத்திற்கும் ஒரே பொருளானதால், திருஷ்டாந்தத்திற்கும் தாஷ்டாந்தத்திற்கும் சமத்தன்மை எப்படி என்று ஆசங்கித்து, இது, வெள்ளி என்னும் சப்தங்களின் அர்த்தங்களுக்கும்தான் நான் என்னும் சப்தங்களின் அர்த்தங்களுக்கும் சாமானிய விசேஷ ரூபத்தன்மை இரண்டிடத்தும் சமமாதலால் சமத்தன்மையெப்படியென்னுஞ் சங்கை பொருத்தம் அன்றெனக் கூறுகின்ருர்] திகழ் இதுவொடு வெள்ளி=விளங்கா நின்ற இதம் அம்சமும் வெள்ளியும், மதிசெயில் பினம்=விசாரஞ்செய்யில் பரஸ்பரம்வேரும், தானும் நான் என்பதும்=

சொயம் சப்தார்த்தமும் அகம் சப்தார்த்தமும், அதன் நிகர்காண்டி= அதுபோலப் பரஸ்பரம் பின்னமாகவறிவாய்,உபயத்தும்=திருஷ்டாந்த தாஷ்டாந்தமாகிய இரண்டிடங்களிலும்,பொதுமையே சிறப்பேயென= சாமானியமும் விசேஷமுமென, பொலிந்து இலங்கிடும்=சமானமாய்ப் பொருந்தி விளங்கும் எ—று.

தான், மற்று, அன்று, ஏ—அசை.

பின்னம் என்பது பினமென இடைக்குறையாயிற்று. ஏகாரம் இரண்டும் உம்மைப்பொருளில் வந்தது. 18

(அ—கை)

தான் என்னும் சொற்பொருளின் சாமானிய வடிவத்தை ஸ்பஷ்டம் செய்வதற்கு லௌகிகப்பிரயோகத்தை முதலில் காண்பிக்கின்ருர்.

தேவதத் தன்ருன் செல்பவ
னவ்வழி தெரிகுவை நீதான்மற்
ருவியில் லிநான் ருனென
வோதுசொல் லகிலத்தின் வழக்காகு
மேவ மற்றிடு வெள்ளியீ
திதுதுகி லென்பதி லிதுபோலத்
தாவி லன்னவ னீயக
மென்பதிற் ருனென்ப துறத்தோன்றும். 19

(ப—ரை) தேவதத்தன் தான் செல்பவன் = தேவதத்தன் சொயம் போவான், அவ்வழி நீ தான் தெரிகுவை = அப்படியே நீ சொயம் பார்ப்பாய், நான் தான் ஆவி இல்லி=நான் சொயம் சாமர்த்தியம் இன்றியவனாய் இருக்கின்றேன், எனவோது சொல் = என்று சொல்லா நின்ற வசனமானது, அகிலத்தின் வழக்காகும் = உலகத்தின் வியவகாரமாகும், [இங்ஙனம் உலகில் வியவகாரம் இருக்குக, இவ்வளவு மாத்திரத்தினுல், தான் என்னும் சொற்பொருளுக்குச் சாமானிய ரூபத்தன்மை எப்படியாம் என்று ஆசங்கித்து இதுவென்னும் சொற்பொருள் போல் எனக் கூறுகின்ருர்] ஏவ மற்றிடு வெள்ளியீது = தோஷமின்றிய வெள்ளி இது, இது துகில் = இது வஸ்திரம், என்பதில்=என்னும் பிரயோகங்களில், இதுபோல் = இதுவென்னும்

சொற்பொருள் போல், தாவில் அன்னவன் நீ அகம் என்பதில் = அழிவு இன்றிய அவன் நீ நான் என்ற பிரயோகங்களில், தான் என்பது உறத்தோன்றும் = சொயம் சப்தார்த்தமானது அனுகதமாய்ப் பிரதீதியாம் எ—று.

மற்று — அசை.

வெள்ளி, வஸ்திரம் முதலிய எல்லா இடங்களிலும் இதுவென் னும் சொல்லைப் பிரயோகம் செய்வதால் அதன் பொருளுக்கு சாமானிய வடிவத்தன்மை எப்படியோ அப்படி அவன் நீ நான் என்பது முதலிய எல்லாவிடங்களிலும், தான் என்னும் சொல்லைப் பிரயோகம் செய்வ தால் அதன் பொருளுக்கும் சாமானிய வடிவத்தன்மை அறியப்படுகின் றதென்பது பொருள்.

இங்கு இது தாற்பரியமாம். புத்தியிலுள்ள சிதாபாசனுக்கும் கூடஸ்தனுக்கும் அன்னியோன்னியாத்தியாசம் இருக்கின்றது. ஏனெனின், சிதாபாச விசிஷ்ட புத்திக்கு அதிஷ்டானம் கூடஸ்தனும். நான் என்னும் தோற்றத்திற்கு விஷயம் சிதாபாச விசிஷ்ட புத்தியாம். தான் என்னும் தோற்றத்திற்கு விஷயம் கூடஸ்தன். மேற்கூறியபடி சகல தோற்றத்திலும் அனுசூதமாயுள்ளது தானென்னுஞ் சப்தத்திற்கு அர்த்தமாம். நான் நீ முதலிய சப்தங்களின் அர்த்தம் வியபிசாரியாம். தான் என்னும் சப்தத்தின் அர்த்தமாகிய கூடஸ்தன் முழுவதிலும் அனுசூதமாயிருத்தலால் அதிஷ்டானமாம். நான் நீ முதலிய சப்தங் களுக்கு அர்த்தமாகிய சிதாபாச விசிஷ்ட புத்தி என்னும் சீவன் வியபி சாரியாயிருத்தலால் அத்தியஸ்தமாம். கூடஸ்தனிடத்தில் சீவனுக்கு சொரூபாத்தியாசமாம். சீவனிடத்தில் கூடஸ்தனுக்கு சம்பந்தாத்தி யாசமாம். இங்ஙனம் கூடஸ்த சீவர்களுக்கு அன்னியோன்னியாத்தி யாசமிருத்தலால் அஞ்ஞர்கட்கு பரஸ்பரம் விவேகமுண்டாகிறதில்லை. ஆனால் கூடஸ்தன் சிதாபாசன் இரண்டும் பின்னமாம். 19

(அ—கை)

தான் நான் என்னும் சப்தங்களுக்கு உலகில் பேதம் இருக்குக, இவ்வளவினால் கூடஸ்தான்மாவில் என்ன சித்தித்ததென வினவு கின்றார்.

தானென் கிற்பது நானெனற்
கயலதாந் தன்மயத் ததனலென்
ருனென் கிற்பதே கூடத்த
னுமெனுந் தனிப்பய னெமக்காமாற்
ருனென் கிற்பது புறம்பகற்
றுவதென்னிற் சாற்றுத லவ்வாறே
தானென கிற்பதே சொரூபமென்
போர்க்கென்றுஞ் சம்மத மேயாகும். 20

(ப—ரை) தான் என்கிற்பது=சொயம் என்னும் தன்மை, நான் எனற்கு அயலதாம்=அகந்தன்மையினும் வேருகக, அதனல்=அவ் வேற்றுமையால், தன்மயத்து என்=கூடஸ்தனிடத்து (உமக்கு) என்ன சித்தித்தது, [சாமானிய வடிவ தான் என்னும் சொற்பொருளே கூடஸ் தன் என இது சித்தித்ததெனக் கூறுகின்ருர்] தான் என்கிற்பதே= சொயம் சப்தார்த்தமே, கூடத்தனும்=நிருவிகார ஆன்மாவாம், எனும் தனிப்பயன் எமக்கு ஆம்=என்கின்ற ஒப்பற்ற பிரயோஜனம் எமக்கு சித்தித்தது, [அற்றேல் தானென்னும் தன்மை வடிவதருமம் அன்னியத் தன்மையை நிவர்த்திக்கின்றது, கூடஸ்தத் தன்மையை உணர்த்துவ தின்ரும் என வினவுகின்ரர்] தான் என்கிற்பது=சொயம் தன்மைத் தருமமானது, புறம்பு அகற்றுவது என்னின்=அன்னியத் தன்மையை நிவர்த்திக்கின்றது என்று சொல்லின், [தான் என்னும் சொற்பொரு ளாகிய கூடஸ்தனே ஆன்மாவாதலால் அன்னியத் தன்மையை நிவர்த்தி செய்வது சம்மதந்தானெனப் பரிகரிக்கின்ருர்] அவ்வாறு சாற்றுதல்=அப்படிச் சொல்லுதல், தான் என்கிற்பதே சொரூபம் என்போர்க்கு=சொயம் சப்தார்த்தமே ஆன்மாவென்றுகூறும் எமக்கு, என்றும் சம்மதமே ஆகும்=எப்போதும் இஷ்டமேயாம் எ—று.

ஆல், ஏ—அசை. 20

(அ—கை)

அற்றேல் பின்னப் பிரவிர்த்தி நிமித்தகமான சொயம் சப்த ஆன்ம சப்தங்களுக்குப் பசு, குதிரை முதலிய சப்தங்களுக்குப் போன்று ஓர் பொருளைப் போதிக்குந் தன்மை இன்மையால் சொயம் சப்தத்தின் பொருளாகிய கூடஸ்தன் ஆன்மாவாவது எங்ஙனம் என்று சங்கித்து

அஸ்தம், கரம் முதலிய சப்தங்கள் போன்று ஓர் பொருளையுடையதாந் தன்மை பொருந்துதலின் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்.

தானென்பது மெய்மையுஞ் சார்பரி யாயமத்தா
லூனந் தவிரிவ்வுல கின்கணு டனிகழ்ச்சி
யீனம்பெறு மற்றவைக் காதலி னீடிருனு
மானம்பெறு மெய்மையு மன்னிய மாற்றமாமால். 2

(ப—ரை) தான் என்பதும் மெய்மையும் = சொயம் சப்தமும் ஆன்ம சப்தமும், சார்பரியாயம்=பொருந்திய பரியாய சப்தங்களாம், [ஸஹப்பிரயோகத்தின் அபாவ வடிவ ஏதுவைக் காட்டுகின்றார்] அத்தால்=பரியாயமாகிய அஃக்காரணத்தால், ஊனந்தவிர் இவ்வுலகின்கண்=சாரமின்றிய இவ்வுலகத்தில், அவைக்கு=அச்சப்தங்களுக்கு, உடனிகழ்ச்சி=சேர்ந்து பிரயோகமாதல், ஈனம் பெறும் = இன்றாம், [பலிதத்தைக் கூறுகின்றார்] ஆதலின்=பரியாயமாதலின், ஈடு இல் தானும்=ஒப்பற்ற சொத்துவமும், மானம்பெறு மெய்மையும்=பிரமாணத்தால் சித்தித்துள்ள ஆன்மத் தன்மையும், அன்னியமாற்றமாம்= இதரத்தை நிவர்த்தி செய்வதாம் எ—று.

மற்று, ஆல்—அசை.

ஸஹப்பிரயோகம் = சேர்த்துப் பிரயோகித்தல், கடம் படம் போன்று என்பது. 21

(அ—கை)

அற்றேல் அசேதனங்களாகிய கடாதிகளிலும் சொயம் சப்தத்தின் பிரயோகத்தைக் காண்டலால் சொயந்தன்மை ஆத்மத்தன்மைகளுக்கு அபேதம் பொருந்தாது எனச் சங்கிக்கின்றார்.

கடந்தா னறியா தெனத்
தன்மைக டாதி யான
செடந் தோன்றுறு மேவெனிற்
றேன்றுறுஞ் சின்ம யான்மா
வடர்ந் தாதலிற் சிற்சடபே
தமான் மாவின் வந்தன்
றிடந் தோயுயி ராலது
வந்ததென் றெண்ணு வாயே. 22

(ப—ரை) கடந்தான் அறியாது என=கடமானது சொயம் அறியாது என்று, தன்மை=சொத்துவமானது, கடாதியான செடம்= கடம் முதலிய அசேதன பதார்த்தங்களில், தோன்றுமே எனின்= பிரதீதியாகின்றதே என்று சொல்லின், [கடாதிகளிலும் புரணரூபமாக ஆத்ம சைதன்னியம் இருத்தலினால் அவைகளிலும் சொயம் சப்தத்தின் பிரயோகம் விரோதம் இன்றுமெனக் கூறுகின்றார்] சின்மய ஆன்மா அடர்ந்ததாதலின்=சித்ரூப ஆன்மாவின் சேர்க்கையினால், தோன்றுறும் = கடாதிகளில் சொத்துவம் பிரதீதியாம், [அப்படியாயின் கடாதிகளிலும் ஆத்ம சைதன்யம் இருப்பின் சேதனா சேதனங்களின் வேற்றுமை நிர்நிமித்தமாம் என்னும் சங்கைக்கு சடசேதனங்களின் வேற்றுமைக்கு சிதாபாசனது உண்மையின்மை வடிவக் காரணமிருத்தலால் அங்ஙனம் அன்றெனப் பரிகரிக்கின்றார்]சிற்சடபேதம்=சேதனா சேதனங்களுக்குள்ள பேதமானது,ஆன்மாவின் வந்தன்று=கூடஸ்த ஆன்மாவினால் செய்யப்பட்டதன்றும், மற்றோ, இடந்தோய் உயிரால் = விசாலமாகிய புத்தியில் பிரதிவிம்பித்த சிதாபாசர்களால், அது வந்ததென்று எண்ணுவாய்=சிற்சட பேதமானது உண்டானது என்று அறிவாய் எ—று.

ஏ—அசை. 22

(அ—கை)

அற்றேல் சிற்சடங்களின் வேற்றுமைக்குச் சிதாபாசர்களின் உண்மையின்மைகளின் அதீனத்தன்மையை அங்கீகரிக்கின், அசேதனங்களில் ஆன்மசத்தையை அங்கீகரித்தல் நிஷ்பிரயோசனமாம் என்னும் சங்கைக்குச் சிற்சடவிபாகத்திற்குக் காரணமாகக் கூடத்தனை அங்கீகரியாவிடினும், சடகற்பனைக்கு அதிஷ்டானத் தன்மையால் கூடஸ்தன் அங்கீகரிக்கத் தக்கதாம் என்னும் அபிப்பிராயத்தால் கடாதிகள் சேதனத்தினில் கற்பிதங்களாமெனத் திருஷ்டாந்த சகிதமாகக் கூறுகின்றார்.,

எவ்வாறுயிர் தன்னிடை மாயையா லேய்ந்ததாமோ
வவ்வாறு கடாதி சடங்களு மானவாங்கே
தவ்வாவது வென்பதி துந்தன்மை போலவெங்குஞ்
செவ்வாயுறு மாதலிற் சித்தெனச் செப்புவாயேல் 23

(ப—ரை) தன்னிடை = கூடஸ்த சேதனத்தினிடத்தில், உயிர் = சிதாபாசன், எவ்வாறு மாயையால் ஏய்ந்ததாமோ = எப்படி மாயையால் கற்பிக்கப்பட்டதாமோ, அவ்வாறு = அப்படி, அங்கே கடாதிசடங்களும் ஆன = அச்சேதனத்திலேயே கடாதிசட பதார்த்தங் களும் கற்பிக்கப்பட்டனவாம், [தான் என்னுந்தன்மையும் ஆன்மத் தன் மையும் அபேதமாமேல் அதிவியாப்தியாமெனச் சங்கிக்கின்றார்] தவ்வா = கெடாத, அது இது என்பதும் = அதுவென்னுந்தன்மையும் இதுவென்னுந்தன்மையும், தன்மைபோல் = தான் என்னுந்தன்மை போல, எங்கும் = (நீ நான் என்னும்) எல்லாவிடங்களிலும், செவ்வாய் உறும் = அனுகதமாய்ப் பொருந்தியுள்ளது, ஆகலின் = அக்காரணத் தால், சித்தெனச் செப்புவாயேல் = அதுவென்னுந்தன்மையும் இது வென்னுந்தன்மையும் ஆன்மாவென்று சொல்லுவையாயின் எ—று.

நீ நான் முதலிய எல்லாவிடங்களிலும் அனுகதமான சொத் வம் போன்று எல்லாவிடங்களிலும் அனுகதமான அதுவென்னுந் தன்மையும் இதுவென்னுந்தன்மையும் ஆன்ம சொரூபம் ஏன் ஆகாது என்பது சங்கையின் தாற்பரியம். 23

(அ—கை)

அதுவென்னுந் தன்மைக்கும் இதுவென்னுந் தன்மைக்கும் ஆத்மத்தன்மையாகிய அதிக தேசத்தில் இருக்குந்தன்மையால் ஆத்மத்தன்மை பொருந்தாதெனக் கூறுகின்றார்.

அதுவோ டிதுமெய்ம்மை யிடத்துறு மாதலாலே
யதுவோ டிதுமெய்ம்மை யன்றுநன்மை யாதிபோலு
மதுவோடிது தன்மையு மன்னிய நீயுநானென்
றதுவாதி யெதிர்மறை யாகுமிங் கையமின்றே. 24

(ப—ரை) அதுவோடு இது = அதுவென்னுந் தன்மையும் இதுவென்னுந் தன்மையும், மெய்மை இடத்து உறும் = ஆத்மத்தன் மையிலும் அனுகதமாகப் பொருந்தியிருக்கும், ஆதலால் = அக்காரணத் தால், அதுவோடு இது = அதுவென்னுந்தன்மையும் இதுவென்னுந் தன்மையும், மெய்மையன்றும் = ஆன்மா அன்றும், [அதில் திருஷ்டாந் தம் கூறுகின்றார்] நன்மையாதி போலும் = (ஆன்மத்தன்மை நல்லது ஆன்மத்தன்மை தீயது என்னும் வியவகாரவசத்தால் ஆன்மத்தன்

மையிலும் அனுவர்த்திக்கின்ற) நல்லது தீயது முதலியவை போன்று, (அதுவென்னுந்தன்மையும் இதுவென்னுந்தன்மையும் தான் என்னுந் தன்மைபோன்று நீ நான் முதலியவைகளில் அனுகதமாயினும் அவை களில் அனுவர்த்திக்கின்ற ஆத்மத்தன்மையிலும் அனுகதமாம். அவ்வான்மத்தன்மை இவ்வான்மத்தன்மை என்பது முதலிய வியவ காரம் சம்பவிக்கின்றபடியால் ஆகலின் அவைகளுக்கு ஆத்மத்தன் மையாகிய அதிக தேசத்தில் இருக்குந்தன்மையால் ஆத்மவடிவத் தன்மை சம்பவியாது) [இவ்வாறு பிரசங்கத்தால் வந்ததை சமாப்தி செய்து சித்தித்ததைத் தெரிவிக்கும்பொருட்டு உலக வியவகாரத்தால் சித்தித்த பொருளை அனுவாதம் செய்கின்றூர்] அதுவோடு இது= அதுவென்னுந்தன்மையும் இதுவென்னுந்தன்மையும், தன்மை அன் னியமும்=தான் என்னுந்தன்மையும் அன்னியமென்னுந்தன்மையும், நீ நானும்=நீ என்னும் தன்மையும் நான் என்னும் தன்மையும், என்றது ஆதி=என்பது முதலியவை, எதிர்மறையாகும்=பரஸ்பரம் விரோதியாய்ப் பிரசித்தமாம், இங்கு ஐயம் இன்று=இவ்விஷயத்தில் சமுசயமில்லை எ—று.

அதுவென்னும் தன்மைக்கு விரோதி இது என்னும் தன்மை யாம். தான் என்னுந்தன்மைக்கு விரோதி அன்னியத்தன்மையாம். நீ என்னுந்தன்மைக்கு விரோதி நான் என்னுந்தன்மையாம்.முறையே அது இது என்றும் தான் அன்னியன் என்றும் நீதான் என்றும் உலகில் பிரதிதொந்தியாய் பிரயோகம் காண்டலின், பிரசித்தம் என்பது அபிப்பிராயம்.

ஏ—அசை. 24

(அ—கை)

உலகில் இங்ஙனம் இருக்குக பிரகிருதத்தில் என்ன சித்தித்தது எனிற் கூறுகின்றூர்.

அன்னியத்தி னெதிர்மறை தானினக் கன்னதேநா
னெனவத்துவிற் கற்பிதமென் றறியென் றனென்றூன்
பினமுற்றுற வெள்ளியி தென்றிடு பெற்றிபோல
நனிமின்னவு மோகரொன் றென்றுமதிப் பர்மாதோ. 25

(ப—ரை) அன்னியத்தின் எதிர்மறை=அன்னியத்தன்மையின் விரோதி, தான்=சொயம் சப்தார்த்தமான கூடஸ்தனும், நினக்கு அன்னது=நீ என்னுந்தன்மைக்கு விரோதி (நான்) அகம் சப்தார்த்த சிதாபாசனும், வத்துவில் நான் என கற்பிதம் என்று அறி=கூடஸ் தனிடத்தில் நான் என்று அச்சிதாபாசனனவன் கற்பிக்கப்பட்டான் என்று அறிவாய், [அற்றேல் கூறிய பிரகாரத்தால் சீவனுக்கும் கூடஸ் தனுக்கும் பேதம் இருப்பினும் எல்லோரும் இவ்விதம் ஏன் அறிகிற தில்லை என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்] நான் தான் என்றல்= நானென்னும் தன்மையும் தானென்னும் தன்மையும், வெள்ளி இது என்றிடு பெற்றிபோல = வெள்ளி என்னுந்தன்மைக்கும் இது வென்னும் தன்மைக்கும் பேதம் இருப்பது போல, பினம் முற்றுறநனி மின்னவும்=பேதமானது பூரணமாய் மிகவும் பிரகாசிக்கவும், மோகர்= பிராந்தியுடைய புருஷர்கள், ஒன்று என்று மதிப்பர்=ஏகமாகக்கருதுவர் எ—று.

புத்தி சாட்சியாகிய கூடஸ்தனை புத்தியினால் பிரத்தியக்ஷம்செய்ய முடியாமையின் நான் என்று தோற்றுகிறசீவ கூடஸ்தர்களைப்பிராந்தி யினால் அபேதமாக அறிந்துளார்கள் என்பது பொருள். பின்னம் என்பது பினமென ஆயிற்று.

ஏ, மாதோ — அசை நிலைகள்.

நான் என்பது முன்னருங் கூட்டப்பட்டது. 25

(அ—கை)

அற்றேல் சீவனுக்கும் கூடஸ்தனுக்கும் உள்ள இந்த அபேதப் பிராந்திக்குக்காரணம் யாது என்று அபேட்சையுண்டாகக்கூறுகின்றார்.

தாதான்மிய கற்பனை யிங்குமுற் சாற்றவித்தை
யேதாலுறு மீதிறி லன்னது மில்லதாகு
மோதாவர ணத்திேனா டொற்றுமை யோடுஞ்சித்தாற்
கோதாமெணம் பிராரத்த நாசங் குறித்துநிற்கும். 26

(ப—ரை) தாதான்மிய கற்பனை=சீவனுக்கும் கூடஸ்தனுக்கும் உள்ள ஐக்கிய அத்தியாசமானது, இங்கு=இந்த நூலில், முன்சாற்று அவித்தையேதால்=முன் பனிரண்டாவது செய்யுளிற்கூறிய அவிவேக மாகிய காரணத்தால், உறும்=பொருந்தும், [இந்த ஐக்கிய அத்தியாச மானது அவித்தையின் காரியமாதலால் அவித்தையை நிவர்த்திக்கும்

ஞானத்தினாலேயே அதன் நிவர்த்தியாம் எனக்கூறுகின்றார்] ஈது இறில்=இந்த அவித்தையானது நிவர்த்தியாயின், அன்னதும் இல்ல தாகும் = அதனது காரியமாகிய தாதான்மியாத்தியாசமும் நிவர்த்தி யாகும், [அற்றேல் அத்தியாசமானது அவித்தையின் காரியமாதலால் அதன் நிவர்த்தியால் நிவர்த்தியாம் என்பது பொருந்தாது. சீவப்பிர மங்களின் ஐக்கிய சாக்ஷாத்காரம் உண்டாகியும் அவித்தையின் காரிய மாகிய தேகாதிகள் தோற்றுகின்றபடியினால் எனிற்கூறுகின்றார்] ஓது ஆவரணத்தினோடு ஒற்றுமை=சொல்லா நின்ற ஆவரணமும் தாதாத் மியஅத்தியாசமும், சித்தால் ஓடும் = ஞானத்தாற் கெடும், கோதாம் எணம் = தோஷமாகிய விக்ஷேபத்தின் சொரூபம், பிராரத்த நாசம் குறித்து நிற்கும் = பிராரத்த கருமத்தின் க்ஷயத்தை அபேக்ஷித்துக் கொண்டிருக்கும் எ—று.

அவித்தை ஒன்றையே காரணமாகவுடைய ஆவரணமும், தாதான்மியத்தியாசமும் வித்தையினாலே நிவர்த்தியாகும், கருமத் தோடு கூடிய அவித்தையினால் உண்டாகிய விக்ஷேபத்தின் சொரூப மோ, கருமத்தின் விநாசபரியந்தம் இருக்கும்.ஆதலால் விரோதமின்றாம் என்பது தாற்பரியம். ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்களோடு கூடிய சிதாபாசன் விக்ஷேபமெனப்படும். 26

(அ—கை)

அற்றேல் பிராரத்த கருமமானது நிமித்த மாத்திரமாதலால் அதன் உண்மை மாத்திரத்தால் உபாதான காரணம் நசித்தும் எப்படி காரியமாகிய விக்ஷேபத்தின் அனுவிர்த்தியாம் என்று சங்கித்து வேறு சாஸ்திரத்தால் சித்தித்துள்ள திருஷ்டாந்தத்தால் அதனது அனு விர்த்தியைப் பொருத்துகின்றார்.

முதற்காரணங் கெட்டுங் கணங்கன்ம முந்துமென்பர்
மதத்தார்க்கிகர் போலெமக் கேனது வாய்த்திடாதோ
மிதத்தாந்தின நூற்கவ ரோர்கணம் வேண்டுவாரேற்
சதக்காற்ப மயற்குரித் தாங்கணந் தானுட்கொள்ளே. 27

(ப—ரை) மததார்க்கிகர் = அபிமானிகளாகிய நையாகிகர்கள், முதற்காரணம் கெட்டும் = உபாதான காரணம்நசித்தும், கணம் கன்மம்

முந்தும் என்பர் = ஒரு க்ஷணம் காரியம் இருக்கும் என்று சொல்லு வார்கள், அதுபோல் = அதுபோல, எமக்கு அது ஏன் வாய்த்திடாது = எங்களுக்கு உபாதானம் கெட்டும் காரியத்தின் அனுவிர்த்தி ஏன் சம்ப விக்காது, [அற்றேல் தார்க்கிகரால் காரியத்திற்கு ஒருக்ஷண மாத்திரம் இருத்தல் அங்கீகரிக்கப்பட்டுள்ளது, நீண்டகாலம் அன்று என்னும் சங்கைக்கு கூறுகின்றார் ] தினம் மிதத்து ஆம் நூற்கு = சில தினங்களின் அளவாக உண்டாகாநின்ற தந்துவிற்கு, அவர் ஓர் கணம் வேண்டு வாரேல் = நையாகிகர்கள் ஒருக்ஷணகாலஇருப்பை அபேக்ஷிப்பார்களே யாயின், சதக்காற்பமயற்கு = நூறு கற்பங்களிலுள்ள சமுசாரப்பிராந் திக்கு, உரித்தாங்கணம் உட்கொள்ளே = யோக்கியக்ஷணத்தை அங்கீ கரிப்பாய் எ—று.

சம்சாரம் அனுதிகாலம் தொடங்கி வந்து கொண்டிருத்தலால் அதன் சமஸ்கார வசத்தால் குயவனது சக்கர சுழற்சி போன்று நீண்ட கால அனுவிருத்தி விரோதமன்றும் என்பது தாற்பரியம். யோக்கியம் என்பது நீண்ட காலத்தை.கற்பமென்பது காற்பமென விகாரமாயிற்று.

ஓ, தான்—அசை. அனுவிருத்தி = பாதமாகிய பின்னிருத்தல்.27

(அ - கை)

நையாகிகர்களால் எப்படிப்பொருத்தமின்றிப் பொருள் சொல்லப்பட்டதோ அப்படி தங்களாலும் பொருத்தமின்றியே பொருள் சொல்லப்பட்டதாம் என்னும் சங்கைக்கு தனது வாக்கியத்தில் அதினின்றும் விலக்ஷணத் தன்மையைத் தெரிவிக்கின்றார்.

பிரமாணமொன் றற்றவர் வீண்மிகப் பேசுவார்நூ
லூரமூகம தாலுரைப் போர்க்கரி தென்னையோசொற்
றுருத்தார்க்கிக வாதமிங் கேநிற்கச் சொல்லுகேஞ்சிற்
பரிணுமசொ யத்தகத் தொற்றுமை பற்றன்மோகம். 28

(ப—ரை) அவர் = நையாயிகர், பிரமாணம் ஒன்று அற்று= யாதொரு பிரமாணமும் இன்றியே, வீண்மிகப்பேசுவார் = வியர்த்த மாகவே மிகவும் பிதற்றுவார்கள், நூல் ஊகம் உரமதால் = சுருதியுத்தி அனுபவங்களால், உரைப்போர்க்கு = பிரதிபாதனம் செய்கின்ற எங்க ளுக்கு, அரிது என்னையோ சொல் = அசாத்தியம் யாது சொல்வாய், [பிரகிருதத்தை அனுசரிக்கின்றார்] துருதார்க்கிக வாதம் = துஷ்ட நையாயிகரோடு செய்யும் விவாதமானது, இங்கே நிற்க = ஈண்டு

இருக்குக, சொல்லுகேம்=பிரகிருதத்தைக் கூறுகின்றேம், சிற்பரிணும சொயத்து அகத்து=கூடஸ்தனும் பரிணுமியுமாகிய சொயம் சப்தார்த் தத்திற்கும் அகம் சப்தார்த்தத்திற்கும், ஒற்றுமை பற்றல் = ஐக்கியம் பொருந்துதல், மோகம்=பிராந்தியாம், பிராந்தியினுலே கூடஸ்தன் சீவன் என்னும் இரண்டற்கும் ஐக்கியம் சித்தித்தது 'என்பது பொருள் எ—று. 28

(அ—கை)

அற்றேல் கூடஸ்தனுக்கும் சீவனுக்கும் உள்ள ஐக்கியம் பிராந்தியினுல் சித்தமாமேல் இது பிராந்தியினுல் சித்தித்ததென எதனுல் ஒருவரும் அறிகிறதில்லை என்னும் சங்கைக்குச் சுருதி தாற் பரிய பரியாலோசனை இன்மையால் எனக் கூறுகின்றுர்.

தக்கோர்க்கயற் பாமரர் தார்க்கிகர் தாமயக்கான்
மிக்காமறை நீத்துத்தி யொன்றுற்று மெய்ம்மறந்தார்
மக்காமுன்பி ஞேர்வொழிந் தேசிலர் வாக்கின்போலி
யுட்கேயில ராய்த்தத்தம் பக்கத்தி யோசிப்பாரே. 29

(ப—ரை) தக்கோர்க்கு அயல்=மேலோரினும் வேருன, பாமரர் தார்க்கிகர்=உலகினரும் நையாயிகரும், மயக்கால்=மூடத்தன்மையால், மிக்காமறை நீத்து = மேலாகிய சுருதியை அநாதரம் செய்து, உத்தி ஒன்று உற்று = யுக்தி மாத்திரத்தை ஆசிரயித்து, மெய்மறந்தார்=ஆன்ம தத்துவத்தை மறந்தார்கள், [அப்படியானுல் சுருதியின் பொருளை நன்கு பிரதிபாதிக்கின்றவருங்கூட சிலர் இப்படி எதனுல் அறிகின்றதில்லை என்னும் சங்கைக்கு அவர்களுக்கு பூரணமாக சுருதிப் பொருளின் விசாரம் இன்மையால் எனக்கூறுகின்றுர்] மக்கா=விஷயங்களில் மூழ்கி, முன்பின் ஓர்வுஒழிந்தே=பூர்வாபரவிசாரம் இல்லாதவர்களாய், சிலர்=சிலபேர்கள், உட்குஇலராய்=வெட்கம் இன்றியவர்களாய், வாக்கின்போலி = ஆபாசவாக்கியங்களை, தத்தம் பக்கத்து யோசிப்பார்=தமது தமது பக்ஷத்தில் பொருத்துவார்கள் எ—று. 29

ஏ, தாம்—அசை.

(அ—கை)

அப்பக்ஷங்களுள் பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றையே அங்கீகரித்தலால் மிகவும் ஸ்தூலமாமாதலின் உலகாயதமதம் முதலிய பக்ஷங்களை முதலில் அனுவதிக்கின்றுர்.

சாட்சிமுத லுடலந்தச் சேர்க்கை யான்மாத்
தானெனுல காயதரு மூடர் தாமும்
காட்சியின்போ லியையடைந்தா ரிவர்தம் பட்சங்
காட்டிடுவான் கோசமன்ன மயமவ் வாறே
மாட்சிவிரோ சனன்கொள்கை மான மென்பர்
மன்னுயிர்போ யிடிற்றேக மரித்த லாலிங்
காட்சியிலாத் தேகவிலட் சணனே யான்மா
வாகுமென்ப ரவ்வுலகா யதரின் மேலோர். 30

(ப—ரை) உலகாயதரும் மூடரும் = லோகாயதர்களும் பாமரர்களும், காட்சியின் போலியை அடைந்தார் = பிரத்தியக்ஷத்தின் ஆபாசத்தை ஆசிரயித்தவர்களாய், சாட்சிமுதல் உடல் அந்தச் சேர்க்கை = கூடஸ்தன் முதலாக தேகபரியந்தமாயுள்ள சங்காதத்தை, ஆன்மா எனும் = ஆன்மாவென்று கூறுவார்கள், (பிரத்தியக்ஷ ஞானத்தின் ஆபாசத்தை ஆசிரயித்தவர்கள் என்பதனுல் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் தேகாதிகளுக்கு ஆன்மத்தன்மை சித்தித்தபடியினுல் பாரமார்த்திகமாம் என்னும் சங்கை நிவர்த்திக்கப்பட்டது) [பிரத்தியக்ஷம் ஒன்றையே பிரமாணமாகக்கூறுகின்ற அவர்களும் அன்னியர்களைமோகிப்பித்தற்பொருட்டு தமது மதம் சுருதி சித்தமாம் எனத்தெரிவித்தற்காக சுருதிவாக்கியத்தையும் உதாகரிக்கின்றுர்கள் எனக் கூறுகின்றுர்] இவர் = மேற்சொல்லிய இவ் உலகாயதர், தம்பட்சம் காட்டிடுவான் = தமது மதத்தைசுருதிமூலம் ஆக்குவதற்கு, கோசம் அன்னமயம் = அன்னமயகோசமே ஆன்மாவென்னும் சுருதி வாக்கியமும், அவ்வாறே மாட்சி விரோசனன் கொள்கை = அப்படியேஸ்தூல புத்தியில் மேலாகிய விரோசனனது அபிப்பிராயமாகிய மதத்தைக்கூறும் ஆன்மா தேகமயனென்னும் வாக்கியமும், மானம் என்பர் = பிரமாணமாம் என்று பிரதிக்ஞைசெய்வர் (உபபாதனம் செய்வதில் சமர்த்தர் ஆகார், பிரகரண விரோதமாதலால் என்பது தாற்பரியம்), [இம்மதத்தில் தோஷத்தைக் காண்பித்தல் வாயிலாக அன்னிய மதத்தை எழுப்புகின்றுர்] மன்னுயிர் போயிடில் = தேகத்தில் தங்கிய சீவனுனவன் தேகத்தினின்றும் வெளிப்பட்டிடில், இங்கு தேகமரித்தலால் = இவ்வுலகின் கண்ணே தூலதேகம் நசித்துப்போகின்றபடியால், ஆட்சி இலாதேக விலட்சணனே = ஆளுதலற்ற தூல தேகத்தினும் வேருனவனே, ஆன்மாவாகும் என்பர் =

ஆன்மாவாமென்று கூறுவர், அவ்வுலகாயதரின் மேலோர்=தேகான்மவாதிகளினும் மேன்மையான இந்திரிய ஆன்மவாதியர்கள் எ—று.

தான், தாம்—அசை நிலை. எனும் என்பதில் உம் வருவிக்கப்பட்டது.

சாருவாக உலகாயத மதத்தையனுசரித்தவர்கள் வாயு முதலிய நான்கு பூதங்களின் சங்காதமாகிய அல்லது ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களின் சங்காதமாகிய தேகத்தை ஆத்மாவென்று மதித்து இந்த யுக்தியைக் கூறுகின்றனர்.

எது யான் என்னும் புத்திக்கு விஷயமாகின்றதோ அது ஆன்மாவாம். நான் மனிதன். பருத்தவன் இளைத்தவன் பிராம்மணன் என்னும் இவை முதலிய, அனுபவத்தால் மனிதத்தன்மை முதலிய தருமவிசிஷ்ட தூல தேகமே நானென்னும் ஞானத்திற்கு விஷயமாகின்றது. ஆகையால் தேகம் ஆன்மாவாம்.

அல்லது எது மிகுந்த பிரியத்திற்கு விஷயமாகின்றதோ அது ஆன்மாவாம் இந்தத் தேகத்திற்கு உபகாரஞ் செய்தலாகிய நிமித்தத்தால் ஸ்திரீபுத்திரதனாதிகள் பிரியத்திற்கு விஷயமாகக் காணப்படுகின்றன. அந்தத் தேகமோ மிகுந்த பிரியத்திற்கு விஷயமாம். ஆகையால் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாதல் வடிவ லக்ஷணத்தாலும் தூலதேகமே ஆன்மாவாம்.

அந்தத் தேகமாகிய ஆன்மாவிற்கு குளித்தல், மைதீட்டல், வஸ்திரம், ஆபரணம் இவைகளால் அலங்கரித்தலும் நா நா வித போஜனங்களால் போஷித்தலுமாகிய போகமே பரம புருஷார்த்தமாம்.

மரணமே மோக்ஷமாம். பிரத்தியக்ஷம் ஒன்றே பிரமாணம். வேறு பிரமாணங்களில்லை. இது சாருவாகர் முதலியோரது மதம். இந்த மதம் அசங்கதமாம்.

ஏனெனின், நான் காண்கின்றேன் கேட்கின்றேன் பேசுகின்றேன் என்றிவ்வாறு இந்திரியமும் நான் என்னும் ஞானத்திற்கு விஷயமாகத் தோற்றுகின்றது, அன்றியும் எனது தேகம் பருத்திருக்கின்றது இளைத்திருக்கின்றது என்றிவ்வாறு தேகத்தில் மமதைக்கு விஷயமாகுந்தன்மையும் காணப்படுகின்றது. எது மமதைக்கு விஷயமாகின்றதோ அது அகந்தைக்கு விஷயமாகிறதில்லை. ஆகையால் தூலதே

கத்திற்கு நானென்னும் ஞானத்திற்கு விஷயமாகுந்தன்மை வியபிசார முடையதாம். ஆகையால் தூலதேகம் ஆன்மா அன்று.

ஸ்திரீபுத்திரதனம் முதலியவற்றைப் பார்க்கிலும் தேகத்தில் அதிகப்பிரியம் காணப்படுவதுபோலத் தேகத்தைவிட இந்திரியங்களில் அதிகப் பிரியம் காணப்படுகின்றது. ஆகையால் தேகத்தில் எல்லாவற்றினும் அதிகப் பிரியமில்லாமையால் தேகம் மிகுந்த பிரியத்திற்கு விஷயமன்று. இதனாலும் தூலதேகம் ஆன்மாவன்று.

அன்றியும் சேதனமே ஆன்மாவாம். சடபூதங்களின் சங்காதமாகிய தேகத்தில் சேதனத்தன்மையில்லை. இதனாலும் தேகம் ஆன்மாவன்று. சாருவாகர் முதலியோர் கூறுவதாவது, வெற்றிலை பாக்கு சுண்ணும்பு முதலியவற்றோடு கூடிய தாம்பூலத்தில் சிவப்புநிறமாகிய சத்தியுண்டாவதுபோலப் பூதசமுதாயமாகிய தேகத்தில் ஞானசத்தியுண்டாகின்றது என்பது, அது பொருந்தாது. ஏனெனின், அப்படியானால் பூதங்களின் சமுதாயமாகிய கடத்திலும் சேதனத்துவமுண்டாகவேண்டும். அங்ஙனமாகிறதில்லை. அன்றியும் சுழுத்தி மூர்ச்சை மரணம் முதலிய அவஸ்தைகளில் கடத்தைப்போலத் தேகம் சடமாயிருத்தல் பிரசித்தமாம். சடமாயிருத்தலாலும் தேகம்ஆன்மாவாதல் பொருந்தாது.

அன்றியும் தேகம் ஆன்மாவாயிருக்குமாயின் பாலிய சரீரத்திற்கு வேறாகிய யௌவன சரீரத்திலும் அதுவே நானென்னும் பிரத்திய பிரஞ்ஞையுண்டாகலாகாது, உண்டாகின்றது இதனானும் தேகம் ஆன்மாவன்று.

அன்றியும் தேகம் ஜன்மமரணமுடையதாயிருத்தலால் பிறத்தற்கு முன்னும் மரணத்திற்குப்பின்னும் இன்றாம். இதனானும் தேகம் ஆன்மாவன்று.

அன்றியும் கிருதநாசம் அகிருதாப்பியாகமம் அதாவது செய்தது கெடுதல் செய்யாததுவருதல் என்னும் தோஷமுண்டாம், அத்தோஷத்தையங்கீகரித்தலும் அசங்கதமாம், ஏனெனின் மரணத்திற்குப்பின் போக்தாவாகிய ஆத்மா இல்லாமையால் செய்யப்பட்ட கருமங்கள் பயனின்றியே நாசமாகும், இவ்வாறாகும்போது எவரும் வேதத்திற்கூறிய கருமங்களையனுஷ்டிக்கலாகாது அனுஷ்டிக்கக் காண்கின்றோம், உண்டாகிய பால்யம் முதலிய அவஸ்தைகளின் பேதத்தால் சரீரமாகிய ஆன்மா வேறாயிருத்தலால் பாலர் முதலியோரால் செய்யப்பட்ட

வேதாத்தியயனம் முதலிய கருமங்களின் பலன்களை யௌவனவிருத்த சரீரங்களால் அனுபவிக்கக்கூடாமையின் இவ்வுலகத்திற் செய்த கருமமும் வியர்த்தமாகும். ஆகையால் கிருதநாசத்தை அங்கீகரித்தல் அநிஷ்டமாம். அதாவது விரும்பத்தக்கதன்று, முன்ஜன்மத்தில்கருத்தா இன்மையால் செய்யப்படாத கருமத்தின்போகம் வர்த்தமான ஜன்மத்தில் உண்டாகலாமாயினும் சகல ஜனங்களுக்கும் போகத்தின் வேறுபாடு உண்டாகலாகாது, வேறுபாடோ காணப்படுகின்றது, ஆகையால் அகிருதாப்பியாகமம் (செய்யாதது வருதல்) என்பதை அங்கீகரித்தல் பொருந்தாது. ஆதலின் தேகம் ஆன்மாவன்று.

சார்வாகர் முதலியோர் தேகத்தை அலங்கரித்தல் போஷித்தலாகிய போகத்தினைப்பரம புருஷார்த்தமென்பர். அதுவும் பொருந்தாது ஏனெனின் புருஷனது இச்சைக்கு எது விஷயமோ அது புருஷார்த்தமெனப்படும் சுகத்தின் அடைவும் துக்கத்தினிவிருத்தியும் சகல புருஷர்களின் இச்சைக்கு விஷயமாம், அதுவே புருஷார்த்தமாம், எல்லாவற்றினும் அதிக சுகமும் அத்தியந்த துக்கமின்மையுமே பரம புருஷார்த்தமாம், அதுவே சித்தாந்தத்தில் மோக்ஷமாம், போகம் சாதிசயத்தன்மை முதலிய தோஷங்களால் விழுங்கப்பட்டதாயிருத்தலால் பரம புருஷார்த்தமாகாது

மரணத்தின் பின் எரிதல் முதலியவற்றோடு கூடியிருக்கும் தேகமாகிய ஆன்மாவேயில்லாமையால் மரணம் மோக்ஷமாமெனல் பிதற்றுதல் மாத்திரமாம், சாப்பிடாத போஜனம் திருப்திக்கு ஏது வாதல் அனுமானப்பிரமாணத்தால் சித்தித்தலாலும் அன்னிய தேசத்தில் இறந்த பிதாவின் மரணம் சப்தப் பிரமாணத்தால் சித்தித்தலாலும் இவை முதலிய வேறு பிரமாணங்களாலும் வியவகாரம் சித்திக்கின்றது. ஆகையால் பிரத்தியக்ஷப் பிரமாண மொன்றை மாத்திரம் அங்கீகரித்தல் ஹடமாத்திரமாம், இவ்வாற்றால் சாருவாகராகிய தேகான்மவாதிகளின் மதம் அசங்கதமாம்.

30

(அ—கை)

தேகத்தினும் வேறான ஆன்மா எப்படிப்பட்டது எந்தப் பிரமாணத்தால் அறியப்படுகின்றது என்னும் ஆசங்கையுண்டாகக் கூறுகின்றார்.

பிரத்தியக்க மாக்கொளுநா னெனலும் புத்தி
பேசுகின்றே னெனன்முதலாம் பிரயோ கத்தாற்
றிரத்துவமில் லுடற்கயலிந் தியமான் மாவாத்
தெருட்டிடும்வாக் காதிசண்டை செய்த தாக
வுரத்தசுரு திகள்கேட்டே மாத லாலே
யுணர்வாகு மவையதனு லான்மா வேயாஞ்
சிரத்தையிர ணியகருப்ப ருயிரான் மாவா
தியரின்னந் தேர்ந்துநிதஞ் செப்பு வாரே. **31**

(ப—ரை) பேசுகின்றேன் எனல் முதலாம் பிரயோகத்தால்= நான் வசனிக்கின்றேன் நான் காண்கின்றேன் என்பதுமுதலிய வியவகாரத்தால், பிரத்தியக்க மாக்கொளும் நான் எனலும் புத்தி = பிரத்தியக்ஷமாக அங்கீகரிக்கப்பட்ட அகம் புத்தியானது, திரத்துவமில் உடற்கு=அநித்தியமாகிய சரீரத்தினும், அயல்இந்தியம் = வேருகிய இந்திரியத்தை, ஆன்மாவாதெருட்டிடும்=ஆன்மாவாகப் போதிக்கும், (நானென்னும் புத்திக்கு விஷயமான இந்திரியம் ஆன்மாவென்று பொருள்) [அற்றேல் சடமாகிய இந்திரியங்களுக்கு ஆன்மத்தன்மை எப்படி என்று ஆசங்கித்து சுருதிகளில் இந்திரிய சம்வாதம் கேட்கப்படுவதால் சடத்தன்மை அசித்தமாமெனக் கூறுகின்ருர்] வாக்காதி சண்டைசெய்ததாக=வாக்கு முதலிய இந்திரியங்கள் பரஸ்பரம் கலகஞ்செய்ததாக, உரத்த சுருதிகள் கேட்டேம்= நிடமாகிய உபநிடதங்களில் சிரவணித்துளேம், ஆதலாலே=அக்காரணத்தினுல், அவைஉணர்வு ஆகும் = அவ்வாக்காதி இந்திரியங்கள் சேதனங்களாம், [சைதன்னியமே ஆன்மாவின் வடிவமாதலால் சேதனங்களான இந்திரியங்களுக்கு ஆன்மத்தன்மை உசிதமாமெனக் கூறுகின்ருர்] அதனுலேயே = சேதனத் தன்மையினுலேயே, ஆன்மாவாம்=வாக்காதி இந்திரியங்கள் ஆன்மாவாம், [அன்னிய மதத்தை எழுப்புகின்ருர்] சிரத்தை இரண்ணியகர்ப்பர்=சிரத்தையோடு இரணியகர்ப்பரை உபாசிப்பவர், உயிர் ஆன்மாவாதியர் = பிராணனை ஆன்மாவென்று கூறுபவர்களாய், தேர்ந்துஇன்னணம்=விசாரித்து இந்தப்பிரகாரம், நிதம்செப்புவரே= எப்போதும் சொல்லுவார்கள் எ—று.

இன்னணமென்பது இனணமென இடைக்குறையாயிற்று.

ஏ, எ—அசை.

சார்வாகர்களது ஏகதேசியாகிய இந்திரியாத்மவாதி மதம் அசங்கதமாம். ஏனெனின், எஃதின்றிச் சரீரம் இருக்கமாட்டாதோ அஃது ஆத்மாவாம், நேத்திர முதலிய ஒவ்வொரு இந்திரியமும் நாசமாயினும் குருடு செவிடு முதலியனவாகச் சரீரம் நிலைக்கின்றது. ஆகையால் இந்திரியம் ஆத்மாவன்று.

"நான் பார்க்கிறேன் கேட்கிறேன்" என்றிவ்வாறு நானெனும் ஞானத்திற்கு விஷயமாதலால் இந்திரியம் ஆத்மாவாமென்று இந்திரியாத்மவாதிகள் கூறுகின்றனர்.

அதுவும் பொருந்தாது. இங்கு "நேத்திரமுடைய நான் பார்க்கிறேன்" "சுரோத்திரமுடைய நான் கேட்கின்றேன்" என்பது புருஷனது அபிப்பிராயமாம்; "நேத்திரமாகிய நான் பார்க்கிறேன், சுரோத்திரமாகிய நான் கேட்கிறேன்" என்பது புருஷனது அபிப்பிராயமன்று. ஆகையால் இந்த நானென்னும் ஞானத்திற்கு விஷயம் இந்திரியத்திற்கு வேருகச் சித்திக்கின்றது, இந்திரியமன்று.

"என் பார்வை மந்தமாயிருக்கின்றது, என் வாக்கு ஸ்பஷ்டமாயிருக்கின்றது" என்று இந்திரியங்களில் மமதைக்கு விஷயமாகுந் தன்மை காணப்படுதலால் அவை நானென்னும் ஞானத்திற்கு விஷயமாதல் வியபிசாரமாகின்றது. ஆகையால் இந்திரியம் ஆத்மாவன்று, எவன் எதை அறிகின்ருனே அவன் கடதிருஷ்டாவைப்போல அதனினும் வேருவன் என்னும் நியமத்தால் இந்திரியங்களின் மந்தத்தன்மையையும் தெளிவையும் அறியும் ஆத்மா அவற்றினும் வேருகச் சித்திக்கின்றது.

மனது வியாகுல முதலியவற்றை அடையுங்காலத்து இந்திரியங்களால் சிரவண முதலிய தத்தம் வியாபாரங்களும் சித்தியாமையால் இந்திரியங்களும் ஜடமாதல் அனுவபசித்தமாம். இவ்வாறு ஜடமாயிருத்தலாலும் இந்திரியம் ஆத்மாவன்று. இப்படி இருந்தும் இந்திரியங்களுக்குச் சேதனத்தன்மை யுண்டென்று ஹடஞ்செய்யும் வாதி இது கேட்கத்தக்கவனுவன்:—

ஒரு இந்திரியமே சேதனமா? அல்லது இந்திரியங்களின் சமுதாயமே சேதனமா? அல்லது எல்லா இந்திரியங்களும் தனித்தனி சேதனமா? என்னும் இவை மூன்று விகற்பமாம். இவற்றுள்

ஒரு இந்திரியமே சேதனமாமென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது. ஏனெனின், சுரோத்திரேந்திரிய முதலியவற்றினின்றும் எந்த இந்திரியத்தைச் சேதனமென்று சொல்லுவாயோ அந்த இந்திரியமில்லாமலும் ஞானமும் ஜீவனமும் காணப்படுதலால் ஒரு இந்திரியமே சேதனமாகாது.

இந்திரியங்களின் சமுதாயம் சேதனமென்னும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், ஒரு இந்திரியம் நாசமானுல் சமுதாயத்தன்மைகெடும்.கெடவே ஞானமும்ஜீவனமும் உண்டாகலாகாது; உண்டாகின்றமையால் இந்திரியங்களின் சமுதாயமும் சேதனமன்று.

எல்லா இந்திரியங்களும் தனித்தனி சேதனமாமென்னும் மூன்ருவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின் அப்படியிருந்தால் ஒரு சரீரத்தில் பத்து சேதனமா (ஆத்மாவா)ம். அவை எல்லாவற்றிற்கும் தனித்தனி இச்சையுண்டாதலால் ஒரு வாழை மரத்திற்கட்டிய பத்து யானைகளால் வாழை மரம் நாசமாதல் போலச்சரீரம் பங்கமாகும். ஆகையால் சகல இந்திரியங்களும் தனித்தனி சேதனமன்று.

இப்படி அசேதனமாய் இருத்தலால் இந்திரியம் ஆத்மாவன்று இந்திரியங்களுக்குச் சுருதியில் கேட்கப்பட்டிருக்கும் சம்வாதம் இந்திரியாபிமானிகளாகிய தேவர்களதேயாம். அதனுலும் இந்திரியங்களுக்குச்சேதனத்துவமில்லை. ஆகையால் இந்திரியாத்ம வாதிகளின் மதம் அசங்கதமாம்.

31

(இதுவுமது)

நேத்திரமுன் னிந்தியங்க ளகன்றுமாவி
நிற்கினுய்வாந் துயில்விழித்து நிற்குமாவி
சாத்திரங்க ளாவியுயர் வென்பதாதி
சாற்றும்வகுத் தாவிமய கோசந்தன்னைத்
தோத்திரிப்ப ருபாசகர்நெஞ் சான்மாவென்றே
சொலுமாவிக் கில்லைபுசிப் பானுந்தன்மை
போத்துருநெஞ் சாகுமெனக் கேட்டேநெஞ்சே
புருடருக்குப் பந்தமுத்தி கொடுப்பதாமே. 32

(ப—ரை) நேத்திர முன் இந்தியங்கள் அகன்றும்=சட்சுமுதலிய இந்திரியங்கள் நிவர்த்தியாகியும், ஆவிநிற்கின்=பிராணன் இருப்பின், உய்வாம்=பிழைப்பு உண்டாம், [பிராணனுக்கு ஆத்மத்தன்மையில் சுருதியிலுள்ள லிங்கங்களைக்கூறுகின்றார்] துயில்=சுழுத்தியவஸ்தையினும், ஆவி விழித்து நிற்கும் = பிராணன் லீனமாகாமல் இருக்கும் (பிராணாதிகளே இந்தத் தேகமாகிய புரத்தில் விழித்துக் கொண்டிருக்கின்றன என்பது முதலிய சுருதியால் பிராணனது சாகரணம் (விழிப்பு) கேட்சப்படுகிறது), சாத்திரங்கள் ஆவியுயர்வு என்பதாதிசாற்றும்=சுருதிகள் பிராணனது சிரேஷ்டத்தன்மை முதலியவற்றைப் பிரதிபாதிக்கும்,(பிராணன் வெளிக்கிளம்பும்போது வாக்காதியும் வெளிக்கிளம்பிற்று, அந்த பிராணன் உக்தமாயிற்று என்று பிராணனது மேன்மை முதலியவை கேட்கப்படுகின்றது) ஆவிமய கோசந்தன்னை = இங்ஙனம் பிராணமய கோசத்தை, உபாசகர் வகுத்து தோத்தரிப்பர் = இரண்ணியகற்ப உபாசகர் விஸ்தாரமாகக் கூறுவர், ("அன்னியமாய் ஆந்தரமாய் உள்ள பிராணமயனே ஆன்மாவாம்" என்பது முதலிய சுருதியால் பிராணமய கோசம் வருணிக்கப்பட்டுளது, முதலிய சப்தத்தால் பிராண சம்வாதம் பிரவேசம் முதலியவை கொள்ளத்தக்கன) [பிராணனினும் ஆந்தரமாய் உள்ள மனதை ஆத்மாவெனக் கூறுபவரது மதத்தைத் தெரிவிக்கின்றார்] உபாசகர்= உபாசனையில் தற்பரரான மனிதர்கள், நெஞ்சே ஆன்மாவென்று சொலும்=மனதையே ஆன்மாவென்று கூறுவார்கள், [பிராணனது அநான்மத்தன்மையில் யுத்தி கூறுகின்றார்] ஆவிக்கு புசிப்பாணும் தன்மை இல்லை = பிராணனனுக்கு போத்துருத்தன்மை இன்றாம், ஆகையால், நெஞ்சு போத்துருவாகும்=மனமே போகத்தைப் புசிக்கும், [மனதிற்கு ஆன்மத்தன்மையில் யுத்தியைக் கூறும் சுருதியைக் கூறுகின்றார்]நெஞ்சே புருடருக்கு பந்தமுத்தி கொடுப்பதாம்=மனமே மனுஷியர்களுக்கு பந்தத்தையும் மோக்ஷத்தையும் செய்வதாம், எனக்கேட்டோம்=என்று கேட்டுளேம் எ—று.

ஏ—அசைநிலை.

உக்தம் என்பது பிராணனது பெயர். உபாசகர் ஏன்பது பின்னும் கூட்டப்பட்டது.

இந்தப் பிராணன்ம வாதிகளின் மதமும் அசங்கதமாம். அஃதா மாறு:—

1 பிராணன் ஆத்மாவன்று; வாயுவாகையால்; வெளிவாயுவைப் போல.

2 பிராணன் தோன்ருமையால் நியமமாக மரணமுண்டாகிறதில்லே. ஏனெனின் விருக்ஷ முதலியவற்றில் பிராணன் தோன்ருதிருந்தும் மரணம் காணப்படவில்லே. மனிதர் முதலிய பிராணிகளிடத்தும் மூர்ச்சை முதலிய காலங்களில் பிராணன் காணப்படுகிறதில்லே. அப்படித் தோற்ருவிடினும் அப்பிராணிகள் இறக்கிறதில்லே; ஜீவித்துக் கொண்டிருக்கிருர்கள். ஆகையால் பிராணன் ஆன்மாவன்று.

3 நித்திரைக் காலத்தில் பிராணன் விழித்துக் கொண்டிருக்கினும், அப்போது எவனுவது சரீரத்திலுள்ள ஆபரண முதலியவற்றை எடுத்துக்கொண்டு போனுலும் தடுக்கிறதில்லே; சம்பந்தியாகிய ஒருவன் வந்திருந்தால் அவனே உபசரிக்கிறதுமில்லே; ஆகையால் பிராணன் ஜடமாம். அதனுற்ருன் ஆத்மாவன்று.

4 பிராணுத்ம வாதிகள் பிராணன் வெளிப்படுதலால் தேகத்திற்கு மரணமுண்டாகின்றமையால் பிராணன் ஆத்மாவென்று கூறுத லும் அசங்கதமாம். ஏனெனின், ஜடராக்கினி வெளிப்படுதலா லும் தேகத்திற்கு மரணம் உண்டாகின்றது. அங்கே வியபிசாரம் இருக்கின்றது. ஆகையால் ஆத்மாவன்று.

5 சுருதியில் சொல்லியிருக்கும் பிராணனது சிரேஷ்டத்தன்மை முதலியவை பிராணனது உபாசனேயில் பிரவிருத்திக்கும் பொருட் டுத் துதிமாத்திரமேயாம். ஆகையால் அது அர்த்தவாத ரூபமாம். அன்றியும் சுருதியில் மனேமய கோசத்திற்கு ஆத்மத்தன்மை யைப் பிரதிபாதிக்கும் வசனத்தால் பிராணமய கோசத்திற்கு ஆன்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் வசனம் பாதமாகுதலால் அந்தப் பிராணமய கோசத்திற்கு ஆத்மத்தன்மையைப் பிரதிபா திக்கும் சுருதி வசனத்திற்குத் தூலாருந்ததி நியாயத்தால் அதிஷ் டானப் பிரத்தியக பின்ன பிரஹ்மத்தை அறிவித்தலிலேயே தாற் பரியமாம். இந்தத் தாற்பரியத்தையெல்லாக் கோசங்களுக்கும் ஆத்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிகளிற் காண்க. இந்திரி

யங்களோடு பிராணனுக்குச் சம்வாதமும் சரீரத்திற் பிரவேசமும் சொல்லப்பட்டிருக்கின்றது. அதுவும் வாயுவின் அபிமானியாகிய தேவதைக்காம்.

6 "பசியினுல் என் பிராணன் போய்விடும்" அல்லது "போஜனத்தால் என் பிராணன் சந்தோஷமடைந்தது" என்றிப்படிப் பிராணனிடத்து மமதைக்கு விஷயமாகுந்தன்மை காணப்படுதலால் நான் என்னும் தோற்றத்திற்கு விஷயமாகுந்தன்மை இல்லை. இதனுலும் பிராணன் ஆத்மாவன்று.

7 தன் பிராணனது போக்குவரவு முதலியன தன்னுலறியப் படுதலால் பிராணனை அறியும் ஆத்மாவாகிய தான் பிராணனை விட வேரும். 32

(இதுவுமது)

அந்த இந்தப் பிராணமயனினும் அன்னியமாய் ஆந்தரமாய் உள்ள மனோமயன் ஆன்மாவாம் என்னும் வேறு சுருதியையும் தெரிவிக்கின்ருர்.

மனமயகோ சஞ்சுருதி புகறலாலே
மனமான்மா வெனலாம்விஞ் ஞானமான்மா
வெனவுரைப்பர் மேற்கணிக வாதியானே
ரிம்மனத்தின் காரணம்விஞ் ஞானமத்தாற்
கனதையகம் விருத்தியிதம் விருத்தியென்றுட்
கரணமிரு வகையவற்றின் விஞ்ஞானந்தான்
முனமுரைசெய் யகம்விருத்தி யென்னலாகு
மொழிந்தவித மெனும்விருத்தி மனமதாமே. 33

(ப—ரை) சுருதி மனோமய கோசம் புகறலாலே=உபநிடதமானது மனோமயகோசத்தை ஆன்மாவெனக் கூறுதலால், மனம் ஆன்மா எனலாம்=மனதை ஆன்மாவென்று சொல்லலாம், [மனதினும் ஆந்தரமாயுள்ள விஞ்ஞானத்தை ஆன்மாவெனக்கூறும் பௌத்தனது மதத்தைக் கூறுகின்ருர்] மேல் கணிகவாதி ஆனோர்=அன்னியரான க்ஷணிக விஞ்ஞானவாதியர், விஞ்ஞானம் ஆன்மாவென உரைப்பர்= விஞ்ஞானமய கோசத்தை ஆன்மாவென்று கூறுவார், [விஞ்ஞானத்

திற்கு ஆந்தரத்தன்மையில் யுத்தியைக் கூறுகின்றூர்] இம்மனத்தின் காரணம் விஞ்ஞானம் அத்தால்=சங்கற்ப விகற்ப வடிவ மனதிற்குக் காரணம் புத்தியாம் அதனுல், [விஞ்ஞான சப்தத்திற்கும் மன சப்தத் திற்கும் வாச்சியமான அந்தக்கரணம் ஒன்ருகலின் மனதிற்கும் விஞ்ஞா னத்திற்கும் காரிய காரணத்தன்மை எப்படியென்ருசங்கித்து, அதனை உபபாதனஞ் செய்வதற்காக அவ்விரண்டிற்கும் பேதத்தை முதலில் தெரிவிக்கின்றூர்] கனதை உட்கரணம்=மேன்மையாகிய அந்தக்கரண மானது, அகம்விருத்தி இதம் விருத்தி என்று இருவகை=அகமாகார விருத்தியும் இதமாகார விருத்தியுமென இரண்டுவிதமாம், அவற்றின்= அவ்விரண்டினுள்ளே, முனம் உரைசெய் அகம் விருத்தி=மேன்மை யாகச் சொல்லப்பட்ட அகமாகார விருத்தியானது, விஞ்ஞானம் என்ன லாகும்=விஞ்ஞானமென்று சொல்லப்படும், மொழிந்த இதமெனும் விருத்தி=சொல்லிய இதமாகார விருத்தியானது, மனமது ஆம்= மனமென்று சொல்லப்படும் எ—று.

இந்த மனமும் ஆத்மாவன்று; கரணமாய் அதாவது சாதனமா யிருத்தலால்; வாச்சி முதலியவற்றைப் போல.

சுழுத்தி முதலியவற்றில் சாமானிய சேதனமிருத்தலால் ' மன மிருந்தால் சேதனத்தன்மையிருக்கும், மனமில்லா விட்டால் இராது, என்னும் அந்வயவிய திரேகம் பங்கமாதலால் மனம் சேதனமன்று; ஆனுல் ஜடமாம். இதனுலும் மனம் ஆத்மாவன்று.

" முன்என்மனம் வேறிடத்திற் சென்றிருந்தது " " இப்பொழுது என் மனம் ஸ்திரமாயிருக்கின்றது " என்று மனதினிடத்து மமதைக்கு விஷயமாகுந் தன்மையிருத்தலால் நானென்னுந் தோற்றத்திற்கு விஷ யமாகுந் தன்மையில்லை. ஆகையால் மனதின் நிலையையும் நிலையின்மை யினையும் அறியும் ஆத்மா மனதைவிட வேருகச் சித்திக்கின்றது.

சேதனத்தின் ஆபாச விசிஷ்டமாயிருத்தலால் மனதிற்குப் போக்திருத்துவமுண்டு; சுதந்தரமாயில்லை. ஆதலால் போக்திருத்தன் மையினுலும் மனதிற்கு ஆத்மத் தன்மையில்லை.

" மனிதர்களுக்குப் பந்த மோக்ஷத்திற்குக் காரணம் மனமேயாம். விஷயத்தில் ஆசக்தியினையுடைய மனம் பந்தத்தின் பொருட்டாம். நிர் விஷயமாகிய அதாவது விஷய வாசனையின்றிய மனம் முக்தியின் பொருட்டாம் " என்னும் சுருதி மனதிற்கு ஞானப்பிராப்தி வாயிலாக

மனதின் பாதத்தால் மோக்ஷத்திற்கு ஏதுவாகுந் தன்மையினையும் விஷயவாசனையால் மோக்ஷ சாதனத்தைப் பிரதிபந்திக்கும் வாயிலாக அத்தியாசம் இருத்தலால் பந்தத்திற்கு ஏதுவாகுந் தன்மையினையும் கூறுகின்றது; மனதின் ஆத்மரூபத்தன்மையைக் கூறுகிறதில்லை. ஆகையால் இந்தச் சுருதி மனம், ஆத்மாவென்பதில் பிரமாணமன்று; ஆனால் பந்தத்தினது சாதனங்களினின்றும் நீங்குதலையும் மோக்ஷத்தின் சாதனங்களில் பிரவிருத்தித் தலையும் போதிப்பதாம்.

சுருதியில் மனோமய கோசத்திற்கு ஆத்மத்தன்மை சொல்லப் பட்டிருக்கிறது. அது மனோமயனினும் அன்னியமாய் ஆந்தரமாயுள்ள விஞ்ஞானமயன் ஆன்மாவாம் என்னும் சுருதியினாலேயே பாதிக்கப் பட்டிருக்கின்றது. இவ்வாற்றால் மனதிற்கு ஆத்மத்தன்மை அசங்கதமாம். 33

(அ—கை)

மனதிற்கும் புத்திக்கும் காரிய காரணத்தன்மையைக் கூறுகின்றார்.

இதம்விருத்திக் ககமெனும்பா வனைவித்தாந்தன்
 னியல்புணரா விடிற்புறம்பெவ் வளவுந்தோன்றா
வுதயமிறப் படிக்கடியு மகம்விருத்திக்
 குளவதனான் விஞ்ஞானங் கணிகமாகும்
திதமுறுசொப் பிரகாசந் தன்னாற்காட்சி
 சேர்தலின்விஞ் ஞானமய கோசஞ்சீவன்
அதுதனக்குற் பவநாசஞ் சுகதுக்காதி
 யகிலசமு சாரமென்றா கமங்களோதும். 34

(ப—ரை) இதம் விருத்திக்கு = இதமாகார விருத்திக்கு, அகம் எனும் பாவனை வித்தாம் = அகமாகார விருத்தி பீஜமாம், [அதனையே யுபபாதனஞ்செய்கின்றார்] தன் இயல்பு உணராவிடின் = புருஷன் தனது சொரூபத்தை யறியாவிடின், புறம்பு எவ்வளவுந் தோன்றா = வெளிப்பொருள் கொஞ்சமும் பிரதீதியாகாது, (அகமாகார விருத்தியினுற்பத்தியின்றேல் இதமாகார விருத்தியினுதயமுமின்றாம். ஆதலின் இவைகளுக்குக் காரிய காரணத் தன்மையுளதென்பது பொருள்) [அவ்விஞ்ஞானத்தின் க்ஷணிகத் தன்மையில் அநுபவத்தைப் பிரமாணமாக்குகின்றார்] அடிக்கடியும் = ஒவ்வொரு க்ஷணமும், அகம் விருத்

திக்கு = அகமாகார விருத்திக்கு, உதயம் இறப்பு உள = உற்பத்தியும் விநாசமும் அநுபவிக்கப்படுகின்றது, அதனல் = அக்காரணத்திஞல், விஞ்ஞானம் கணிகமாகும் = விஞ்ஞானம் க்ஷணிகமென்று சொல்லப் படும், [ க்ஷணிகத் தன்மையை உபபாதனஞ் செய்து சொப்பிரகாசத் தன்மையை யுபபாதனஞ் செய்கின்ருர்] தன்ஞற் காட்சி சேர்தலின் = தன்ஞலேயே விளக்கம் பொருந்துதலின், திதம் உறு சொப்பிரகாசம் = நிலைத்த சொப்பிரகாசமாம், [விஞ்ஞானத்தின் ஆன்மத்தன்மையில் ஆகமம் பிரமாணமாமெனக் கூறுகின்ருர்] விஞ்ஞான மயகோசம் ஜீவன் = விஞ்ஞானமயனே ஜீவனும், அது தனக்கு = அச்சீவனுக்கு, உற்பவம் நாசம் சுகதுக்காதி = பிறப்பும் இறப்பும் சுகமும் துக்கமும் முதலிய, அகில சமுசாரம் என்று = சகல சமுசாரமுமாமென்று, ஆக மங்கள் ஓதும் = சாஸ்திரங்கள் கூறுகின்றன எ—று.

"அந்த இந்த மனேமயனினும் அன்னியமாய் ஆந்தரமாயுள்ள விஞ்ஞானமயனே ஆன்மாவாம், விஞ்ஞானம் யஞ்ஞத்தைச் செய் கின்றது" என்பது முதலிய வாக்கியம் விஞ்ஞானத்திற்கு ஆன்மத்தன் மையைப் பிரதிபாதிக்கின்றது என்பது பொருள்.

க்ஷணிக விஞ்ஞான வாதிகளாகிய யோகாசாராநுசாரிகள் விஞ் ஞானமய புத்தியை ஆத்மாவாக மதிக்கின்றனர். அவர்களது அபிப் பிராயமிதுவாம்:- உள்ளும் வெளியுமாகிய சகல பதார்த்தங்களும் விஞ்ஞான வடிவமேயாம். அந்த விஞ்ஞானம் மின்னல் மேகம் கண்ணி மைகளைப் போல் கணத்திற்குக்கணம் உற்பத்தி நாசத்தையடை கின்றமையால் க்ஷணிகமாம்; தன்னையும் பிறவற்றையும் பிரகாசிக்கும் ஞான வடிவமாயிருத்தலால் சொப்பிரகாசமாம்.

முதல் விஞ்ஞானத்திற்குச் சமானமாக வேறு விஞ்ஞானமுண்டா கவே அம்முதல் விஞ்ஞானம் கெடுகின்றது.மூன்ருவதுவிஞ்ஞானம்உண் டாகவே இரண்டாவது விஞ்ஞானம் கெடுகின்றது. இவ்வாறு தீபச்சோ திபோலவும், ஆற்றின் பிரவாகம் போலவும் விஞ்ஞானத்தின் தாரை பொருந்தியிருக்கின்றது. ஆலய விஞ்ஞான தாரை பிரவிருத்தி விஞ்ஞா னதாரை என்று விஞ்ஞானதாரை இரண்டுவகையாம். 'நான் நான்' என் னும் வடிவுடையது ஆலயவிஞ்ஞான தாரையாம். அதுபுத்தி வடிவமாம். 'இது கடம்; இது தேகம்' என்று இதுவெனும் வடிவுடையது பிரவிருத்தி விஞ்ஞான தாரையாம். அதுமனமுதலிய பாகியபதார்த்தவடிவமாம்.முத லில் ஆலயவிஞ்ஞான தாரையுண்டான பிறகு பிரவிருத்தி விஞ்ஞான

தாரையுண்டாகின்றமையால் ஆலய விஞ்ஞான தாரையாகிய புத்திக்குப் பிரவிருத்தி விஞ்ஞானதாரை காரியமாம். அந்த ஆலய விஞ்ஞானதாரை யாகிய புத்தியே ஆத்மாவாம். அதில் பிரவிருத்தி விஞ்ஞான தாரை யாகிய மனமுதலியவற்றின் பாதத்தைச்சிந்தித்து ஏகரசமாகிய க்ஷணிக விஞ்ஞான தாரையின் நிலேயே மோக்ஷமாம். இந்த விஞ்ஞான வாதியின் மதம் அசங்கதமாம். ஏனெனின் உருவ முதலியவற்றின் ஞான வடிவ மாகிய காரியத்திற்குக் கரணமாகிய நேத்திர முதலிய இந்திரியங்களேப் போல நிச்சியமாகிய காரியத்திற்குக் கரணமாயிருத்தலால் புத்தி ஆத் மாவாகாது. ஆனுல் சகல பதார்த்தங்களேயும் நிச்சயஞ்செய்யும் புத்தியை எது அறிகிறதோ அது ஆத்மா. அவ்வாத்மா பிரகாசரூபமாக எப்போ தும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. ஆகையால் பிராகாசிக்கப்படுவது (உருவம்) பிரகாசிப்பது (சூரியன் முதலிய பிரகாசம்) என்பவற்றின் பேதம் போலப் பிராகசிக்கப்படும் புத்திக்கு வேருகப்பிரகாசிப்பது ஆத் மாவாம். தீபம் முதலியவற்றின் பிரகாசம் கடமுதலியவற்றின் ஆகாரத் தையடைந்து கலப்புத் தன்மையாகப் பிரகாசித்துக்கொண்டிருக் கினும் வாஸ்தவமாக பின்னமேயாம். அதுபோல ஞானசொரூபமாகிய ஆத்மா புத்தி விருத்திகளோடு ஏகவடிவத் தன்மையையடைந்து கலப்புத் தன்மையாகத் தோற்றிக் கொண்டிருக்கினும் வாஸ்தவமாகப் புத்தி விருத்திகளுக்கு வேருகிய நித்திய சுத்தமேயாம். ஒரு பிராஹ்மண னே படிக்குங்கிரியையால் பாடகனென்றும், பாகஞ்செய்யும் கிரியையால் பாசக (சமையற்கார)னென்றுஞ் சொல்லப்படுவது போல அபஞ்சீ கிருத பூதங்களின் கலப்பாகிய சத்துவகுணும்சங்களின்காரியமாகியஅந் தக்கரணம் நிச்சயிக்கும் கிரியையால் புத்தி என்றும், சங்கவிகற்பமாகிய கிரியையால் மனமென்றும் சொல்லப்படுகின்றது. ஆகையால் நானென் னும் வடிவுடைய ஆந்திர விருத்தியாகிய புத்திக்கும் இதுவென்னும் வடிவுடைய பாகிய விருத்தியாகிய மனத்திற்கும் அந்தக்கரணத்தை விட வேற்றுமை சித்திக்கிறதில்லே. இப்படிப் பௌதிகமாயிருத்தலால் தேகேந்திரிய மனங்களேப்போல் புத்தி அநாத்மாவாம்.

கடவல்லி உபநிஷத்தின் மூன்ருவது வல்லியில் "ஆத்மாவை இரதிகனுகவும் சரீரத்தை இரதமாகவும் புத்தியைச் சாரதியாகவும் மன தைக் கடிவாளமாகவும் உருவ முதலிய விஷயங்களேக்கோசுர (மார்க்க) மாகவும், சரீரேந்திரிய மனதோடு கூடிய ஆத்மாவைப் போக்தாவாக (சம்சாரியாக)வும் அறிகவென்று (பண்டிதர்கள்) கூறியிருக்கின்றனர்" என்னும் சுருதியிற்கூறிய உருவகத்தில் புத்தியின் அநாத்மத் தன்மை

அதாவது சாரதி வடிவத்தால் ஆத்மாவிற்கு வேருகுந்தன்மை பிரசித்தமாம்.

விஞ்ஞான வாதிகள் ஆத்மாவிற்கு க்ஷணிகவடிவம் அங்கீகரிக்கின்றனர். அதுவும் அசங்கதமாம். ஏனெனின் ஆத்மா க்ஷணிகமாயின் முன் பணங்கொடுத்தல் முதலிய காரியங்களைச் செய்தவனுகிய ஆத்மா நாசமாகவே சில ஆண்டு தினங்கட்குப்பின் அப்பணத்தை வாங்குதல் முதலிய காரியம் சம்பவியாது. அன்றியும் முதல் க்ஷணத்தில் போஜனம் செய்கின்றவனுக்கு இரண்டாவது க்ஷணத்தில் தனது நாசத்தால் போஜனத்திற்குப்பிறகு "போஜனஞ்செய்து உட்கார்ந்த நானே இப்போது திருப்தியடைந்திருக்கிறேன்" என்று பிரத்திய பிஞ்ஞை உண்டாகின்றது. அஃது உண்டாகலாகாது. அன்றியும் விஞ்ஞான தாரை சமானமாகவேயுண்டாகின்றதென்னும் நியமம் சித்தியாது? அதாவது நஷ்டமாகிய மனிதன் உத்தரக்ஷணத்தில் பசுவாவன் போஜனம் செய்தற்குக்கொண்ட பால் முதலியன உத்தரக்ஷணத்தில் விஷமாகும்

க்ஷணிக விஞ்ஞான வாதிகள் "பிராந்தியினுல் பிரத்திய பிஞ்ஞையுண்டாகின்றது. முன் நஷ்டமாகிய ஆத்மா முதலியவற்றின் சமஸ்காரத்தால் இரண்டாவது ஆத்மா முதலியன உண்டாகின்றன. ஆகையால் முற்கூறிய பிரத்திய பிஞ்ஞையும் முன்னையதற்கு சமானமாகிய வேறு பதார்த்தத்தின் உற்பத்தியும் சம்பவிக்கு" மென்று கூறுதல் பொருந்தாது. ஏனெனின் விஞ்ஞான வாதியின் மதத்தில் க்ஷணிகமாகிய ஆத்மா அடுத்த க்ஷணத்தில் நாசமுடையதாயிருத்தலால் பிராந்தியின் திருஷ்டாவும் அதிஷ்டானமும் இல்லாமையால் பிராந்தி சம்பவியாது. விஞ்ஞானம் நிர்விசேஷமாயிருத்தலால் சமஸ்காரத்தின்அங்கீகாரமும் பொருத்தமுடையதன்று. சமாதான விருப்பத்தால் சமஸ்காரத்தை அங்கீகரிக்கினும் சமஸ்காரத்தின் ஆசிரயத்தை அங்கீகரிக்க வேண்டும். அவ்வாசிரயத்தை விஞ்ஞானவடிவமாகக்கூறின் நிர்விசேஷ சித்தாந்தத்திற்குப் பங்கமுண்டாகும். விஞ்ஞானத்திற்கு வேருகிய பதார்த்தங்களில்லை. ஆகையால் சமஸ்காரம் விஞ்ஞான வடிவமாயிருத்தலால் ஆத்மாசிரய தோஷத்தினடைவுண்டாகும்.

ஆத்மா க்ஷணிகமாயிருத்தலால் முதல் க்ஷணத்திலிருக்கும் தான் அடுத்த க்ஷணத்திலில்லாமையால் மோக்ஷத்தின் பொருட்டுக் கூறிய வைராக்கிய முதலிய சாதனங்களில் பிரவிருத்தியுண்டாகாது. ஆனுல் தீவினைகளில் பிரவிருத்தியுண்டாய் அவர்களுக்கு நரகப் பிராப்தியுண்

டாம்.க்ஷணிக விஞ்ஞான தாரையின் நிலையாகிய அவர்களது மோக்ஷத்தில் விசிராந்தியும் தனது இருப்புமில்லாமையால் யாதொரு குசலத்தின் இச்சையும் உண்டாகாது.

அன்றியும், "எனது புத்தி மந்தமாயிருக்கின்றது, அல்லது தீவிரமாயிருக்கின்றது" என்று மமதைக்கு விஷயமாகும் புத்தியின் மந்தத் தன்மை முதலியவற்றை அறியும் ஆத்மா பின்னமாகச் சித்தித்திருக்கின்றது. ஆகையால் புத்தி சொப்பிரகாசமன்று; ஆனால் பரப்பிரகாசமாம், இவ்வாற்றால் விஞ்ஞான வாதியின் மதம் அசங்கதமாம். 34

(அ—கை)

இப்பொழுது பௌத்தரின் அவாந்தர பேதமான சூனியவாதியாகிய மாத்தியமிகனது மதத்தைத் தெரிவிக்கின்றார்.

மின்னலொடு மேகநிமைக் கொட்டல்போலும்
விஞ்ஞானங் கணநிலையீ தான்மாவாகா
வன்னியமொன் றறிபடா தாலேபாழே
யான்மாவா மென்பர்மாத் திமிகரானோர்
முன்னமிது விலதாயே யிருந்ததென்ன
மொழியுமறை யதனாலே ஞானஞேயம்
என்னுமிரு வடிவுடைய வகிலமோகத்
தியன்றதென வையமற வெண்ணற்பாற்றே. 35

(ப—ரை) கணநிலை ஈது விஞ்ஞானம் = ஒருக்ஷணமிருப்பதாகிய இந்த விஞ்ஞானமானது, ஆன்மா ஆகா = ஆன்மாவன்றாம், (க்ஷணிகமாதலால்) மின்னல் ஒடு மேகம் நிமைக்கொட்டல் போலும் = மின்னலும் மேகமும் கண்ணிமையும்போல, அன்னியம் ஒன்று அறிபடாதாலே = பஞ்சகோசங்களின் வேறாய் யாதொரு வஸ்துவுமறியப்படாதபடியினால், மாத்திமிகரானோர் = மாத்தியமிக பௌத்தர், பாழே ஆன்மாவாம்என்பர் = சூனியமே ஆன்மாவாமென்று கூறுவர், [அதில் சுருதியைக் கூறுகின்றார்] முன்னம் இது இலதாயே இருந்தது = சிருஷ்டிக்குப் பூருவம் இந்த நாமரூபம் அனைத்தும் அசத்தாகவே இருந்தது, என்ன மறைமொழியும் = என்று சுருதி கூறும், [சூனியமே பரமார்த்தமாயின் தோற்றுகின்ற சகத்திற்கு யாது கதியெனிற் கூறுகின்றார்] அதனாலே = அக்காரணத்தினால், ஞானஞேயம் என்னும் இருவடிவு

உடைய அகிலம் = ஞானகாரமும் விஷயாகாரமும் என இரு வடிவினை யுடைய அனைத்தும், மோகத்து இயன்றது என = பிராந்தியால் கற்பிக்கப்பட்டது என்று, ஐயம் அற எண்ணற்பாற்று = சமுசயமின்றி கருதத்தக்கது எ—று. 35

(அ—கை)

சூனியவாதியின் மதத்தைத் தூஷிக்கின்றார்.

நிராதாரப் பிரமையிலா மையினுண்டான்மா
நிகழ்தலிற்சூ னியத்துக்குங் கரியாயன்றே
னிராகிற் சொன்னிகழா விஞ்ஞானத்துள்
ளிதரமா யானந்த மயனுண்டென்றே
தராதலத்தி லறிதரற்பாற் றெனன்வைதீக
தரிசனமா மணுமகத்தோ நடுவென்றிங்ஙன்
வராநிற்கு மங்கும்வெகு வாதஞ்செய்வர்
வாதியர்மா மறையுத்தி வழக்கினாலே. 36

(ப—ரை) நிராதாரப் பிரமை இலாமையின் = அதிஷ்டானமின்றி பிராந்தி பொருந்தாமையினால், ஆன்மா உண்டு = (சகத்தின் கற்பனைக்கு அதிஷ்டானமாக) ஆன்மா உளது (என அங்கீகரிக்கத் தக்கது, வடிவமின்றிய சூனியத்திற்கு அதிஷ்டானத்தன்மை பொருந்தாமையின்), சூனியத்திற்கும் கரியாய் நிகழ்தலின் = சூனியத்திற்கும் சாக்ஷியாய் விளங்குகின்றபடியால், சூனியவாதிக்கும் சூனியத்தின் சாக்ஷியாய் அவசியம் ஆன்மா அங்கீகரிக்கத்தக்கது. அன்றேன் இராணுகின் = சூனிய அதிஷ்டானமான ஆன்மாயின்றேல், சொல்நிகழா = சூனியம் உளது என்னும் சொல் உனது மதத்தில் சித்தியாது, [அற்றேல் ஆன்மா யாதெனில் நையாயிகப் பிரபாகரர் கூறுகின்றார்] விஞ்ஞான மயத்துள் இதரமாயானந்தமயன் = விஞ்ஞான மயத்தினின்றும் ஆந்தரமாய் வேறாயுள்ள ஆனந்தமயனே ஆன்மாவாம் என்பதும், உண்டென்றே தராதலத்திலறிதாற்பாற்று எனல் = இருக்கின்றதென்றே உலகிலுணரத்தக்கதென்று சொல்லுதலும், வைதீக தரிசனமாம் = வைதீக சித்தாந்தமாம், [இங்ஙனமான்மாவின் சொரூபத்தில் விவாதத்தைத் தெரிவித்து அதன் பரிமாண விசேஷத்திலும் வாதிகளின் விவாதத்தைத் தெரிவிக்கின்றார்] அணுமகத்து நடு

என்று = ஆன்மாவின் சொரூபம் அணுபரிமாணமென்றும் மகத்து பரிமாணமென்றும் மத்திம பரிமாணமென்றும், இங்ஙன் = இந்தப் பிர காரமாக, வரா நிற்கும் = வாரா நின்ற, அங்கும் = அப்பரிமாண விசேஷத் திலும், வாதியர் = நையாயிகர் முதலிய வாதிகள், மாமறை உத்தி வழக்கினுல் = மகத்தாகிய சுருதியையும் யுத்தியையும் ஆசிரயித்தலாகிய வியவகாரத்தால், வெகுவாதஞ்செய்வர் = அநேகப் பிரகாரமாகவாதஞ் செய்வார்கள் எ—று.

ஓ—அசை. 36

(அ—கை)

அவற்றுள் முதலில் ஆன்மா அணு என்னும் வாதியின் மதத்தைத் தெரிவிக்கின்ருர்.

சூக்குமநா டியிற்புகலா லந்தராளர்
சொற்பமென்ப ருரோமமா யிரங்கூற்ருெப்பிற்
போக்குவர வுறுவனணுக்கணுவா மின்னேன்
புகல்சூக்கத் ததிசூக்க னதனுன்வேத
வாக்குவெகு தரமணுவாமெனவே சொல்லும்
வாலநுனி கோடிபங்கிட் டதிலோர்பங்குக்
கேற்குமிவன் சீவனென வுணர்தற்பாற்ரு
மெனவிதர மாமறையு மியம்புமன்றே. 37

(ப—ரை) அந்தராளர் = அந்தராளவாதிகள், சூக்குமநாடியில் புகலால் = சூக்குமநாடியில் சஞ்சரிப்பதால், சொற்பம் என்பர் = ஆன்மா அணுவென்று சொல்லுவார்கள். [அதனையுபபாதனஞ் செய்கின்ருர்] உரோமம் ஆயிரங்கூற்று ஒப்பில் = மயிரின் ஆயிரம் பாகத்தில் ஒரு பாகத்தோடு சமானமாயுள்ள நாடிகளில், போக்குவரவு உறுவன் = போதல் வருதலைச் செய்வன், (சூக்ஷ்ம நாடிகளில் சஞ்சாரமானது அணுத்தன்மையின்றிப் பொருந்தாதென்பது அபிப்பிராயம்) [அணுத் தன்மையிற் பிரமாணம் யாதெனிற் கூறுகின்ருர்] அணுக்கு அணு வாம் = இவ்வான்மா அணுவைப் பார்க்கிலும் அணுவாம், இன்னேன் புகல் சூக்கத்து அதிசூக்கன் = இந்த ஆன்மா சூக்ஷ்மத்தைப் பார்க் கிலும் அத்தியந்த சூக்ஷ்மன், அதனுல் = என்னும் வடிவத்தால், வேதவாக்கு = சுருதி வாக்கியங்கள், வெகுதரம் அணுவாம் எனவே

சொல்லும் = நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அணுத் தன்மையைப் பிரதிபாதிக்கின்றன, [வேறு சுருதியையுதாகரிக்கின்றார்] வால நுனி கோடி பங்கிட்டு = மயிரின் நுனியைக் கோடி விபாகஞ் செய்து, அதில் ஓர் பங்குக்கு = அவற்றுள் ஓர் பாகத்திற்கு, இவன் சீவன் ஏற்கும் = இச்சீவனுனவன் சமானமாவன், என உணர்தற் பாற்றும் = என்று அறியத்தக்கது, என இதரமாம் மறையும் இயம் பும் = என வேறு சுருதியும் கூறும் எ—று.

அன்று, ஏ — அசைகள்.

ஆத்மாவின் அணுபரிமாண வாதிகளாகிய ஆந்தராளர் முதலி யோர் மதம் அசங்கதமாம். ஏனெனின், ஆத்மா அணுவாயிருக்குமா யின் ஞாதாவாகிய ஆத்மா அணுவடிவமாயிருப்பதால் சரீரத்தின் ஏக தேசத்தில் நிலைத்திருக்கின்றது. அதனுல் பாதம் சிரசு என்னுமிரண் டிடங்களிலும் உண்டாகும் துக்கத்தின் அல்லது சுகத்தின் ஞானம் ஒரே காலத்திலுண்டாகலாகாது.

ஓரிடத்திலுள்ள புஷ்ப முதலியவற்றின் வாசனை அநேகவிடங் களில் பரவுதல் போலச் சரீரத்தின் ஓரிடத்திலுள்ள அணுவாகிய ஆத்மாவின் ஞான குணம் சரீர முழுவதிலும் வியாபிக்குமாகையால் கால் தலைகளில் உண்டாகும் துக்கத்தின் அல்லது சுகத்தின் ஞானம் ஏக காலத்தில் சம்பவிக்குமென்று அணுவாதிகள் கூறுதல் அடாது. ஏனெனின், கடமுதலியவற்றிலுள்ள நீல முதலிய குணங்களைப்போலக் குணியைவிட்டு வெளியில் குணமிராது என்னும் நியமத்தால் ஆத்மா விற்கு வெளியே ஞானகுணமிராது.

சரீரத்தின் ஏகதேசத்தில் பரிசத்தையடைந்த சந்தனத்தின் குளிர்ச்சி சரீரமுழுவதிலும் வியாபித்தல் போலச் சரீரத்தின் ஏகதேசத் திலுள்ள அணுவடிவமாகிய ஆத்மாவின் ஞானம் சரீரமுழுவதினும் வியாபிக்கிறதென்று அணுவாதிகள் கூறுதலும் பொருந்தாது. ஏனெ னின், சரீரத்தின் ஏகதேசத்தில் சந்தனத்தின் பரிசத்தால் சரீரமுழுவ தினும் வியாபித்த ஜலாம்சத்தினது தடிப்பின் எழுச்சி உண்டாகின்றது. அதனுல் சரீர முழுவதினும் குளிர்ச்சியுண்டாகின்றது. அக்குளிர்ச்சி சந்தனத்தினதன்று. ஆகையால் இந்தத் திருஷ்டாந்தம் தாஷ்டாந் தத்தினும் விஷமமாம்.

ஏகதேசத்திலுள்ள பிரகாசம் வீடுமுழுவதும் பிரகாசித்தல்போல ஏகதேசத்திலுள்ள ஆத்மாவின் ஞானம் சரீர முழுவதினும் வியாபிக்கிறதென்று அவ்வணுவாதிகள் கூறுதலும் பொருந்தாது. ஏனெனின், தீபம்போல் ஆத்மா அவயவமுடையதும் வேறொன்றால் பிரகாசிக்கப்படுவதுமாகுதலால் திருசியமும் விநாசமுடையதுமாம். ஆகையால் ஆத்மாவை அணுவடிவமாக ஒப்புதலால் வட்டிக்காசைப்படுகிறவன் முதலையிழந்தாற்போல ஆத்மாவே இல்லாமையாகிய பெரிய அநர்த்தமுண்டாகும். ஆத்மாவிற்கு அணுத்தன்மையைக் கூறியிருக்கும் சுருதிகளுக்கும் ஸ்தூல புத்தியுடைய புருஷர்களுக்கு ஆத்மா அணுவைப்போல அறிதற்கரியதென்பது தாற்பரியமாம். ஏனெனின், உபநிஷத்துக்களில் அநேக இடங்களில் ஆத்மா வியாபக வடிவமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. அதனால் ஆத்மா அணுவடிவமன்று. இவ்வாற்றால் அணுவாதிகளாகிய உபாசகர் முதலியோர் மதம் அசங்கதமாம். 37

(அ—கை)

இப்போது மத்திமபரிமாணவாதியராகிய திகம்பரரது மதத்தைத் தெரிவிக்கின்றார்.

திகம்பரர்மத் திமமென்பர் பாதந் தொட்டுச்
சிரசீரு யறிவுநிறைந் திலக லானு
நகம்பரியந் தமெனுமறை யானுஞ் சூக்க
நாடிபுக லாற்சூக்க வுறுப்பா லாங்கஞ்
சுகம்புகல்போற் கரங்களினாற் றூல தேகஞ்
சுருங்கல்விரி வுறுமுடலிற் புகுத றானும்
அகம்பயிலான் மாவுறுப்பின் வளர்வு தேய்வா
லாமதனான் மத்திமமென் றறியல் வேண்டும். 38

(ப—ரை) திகம்பரர் மத்திமம் என்பர் = திகம்பரவாதிகள் ஆன்மா மத்திம பரிமாணமுடையதெனக்கூறுவர், [ஆன்மாவின் மத்திம பரிமாணத்தில் யுத்தியைக் கூறுகின்றார்] பாதந்தொட்டு சிரசு ஈறாய் = கால்முதல் தலை பரியந்தம், அறிவு நிறைந்து இலகலானும் = சைதன்னியம் வியாபகமாய் விளங்குகின்றபடியினாலும், ["அவ்விவ்வான்மாவே ஈண்டு நகநுனிபரியந்தம் பிரவேசித்தது" என்னுஞ் சுருதியுமிதில்

பிரமாணமாமெனக் கூறுகின்றார்] நகம்பரியந்தம் எனும் மறையானும்= நகநுனி பரியந்தம் எனும் சுருதிப் பிரமாணத்தானும் என்க, [இங்ஙனம் மத்திம பரிமாணமுடையதாமேல் சுருதி சித்தமான நாடீசஞ்சாரம் பொருந்தாதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] கரங்களினால் தூல தேகம் கஞ்சுகம்புகல்போல் = கைகளால் தூல சரீரம் சட்டையில் பிரவேசிப்பதுபோல், (அதாவது தேகத்தின் அவயவங்களான கைகளுக்குச் சட்டையில் பிரவேசமிருத்தலால் தேகத்திற்குச் சட்டையினுள் பிரவேசமாம் அதுபோல்) சூக்கநாடி புகல்=சூக்ஷ்ம நாடிகளில் சஞ்சாரமானது, சூக்க உறுப்பால் ஆம் = சூக்ஷ்ம அவயவங்களால் பொருந்தும், (ஆன்மாவின் சூக்ஷ்ம அவயவங்களுக்கு நாடிகளில் சஞ்சாரமிருத்தலால் ஆன்மாவிற்கும் சஞ்சாரம் உபசாரத்தால் சொல்லப்படுகின்றதென்பது பொருள்), [இங்ஙனமான்மா நியதமாக மத்திம பரிமாணமுடையதாமேல் கரும வசத்தால் யானை எறும்பு முதலிய உயர்வு தாழ்வான சரீரங்களில் பிரவேசம் பொருந்தாது என்னுஞ் சங்கைக்கு அவயவங்களின் வரவு போக்குகளினால் ஆன்மாவிற்கு அநியத மத்திம பரிமாணமிருத்தலால் தேகம்போன்று சிறிதிற் பிரவேசித்தல் பெரிதிற் பிரவேசித்தலென்னும் இரண்டும் விரோதிப்பதன்றெனக் கூறுகின்றார்] சுருங்கல் விரிவுறும் உடலில் புகுதல்தானும்= குறைவு மிகுதியான சரீரங்களில் பிரவேசித்தலும், அகம்பயில் ஆன்மா உறுப்பின் தேய்வு வளர்வால் ஆம்= நானென்னுமான்மாவினது அவயவங்களின் செல்கை வருகைகளால் ஆகும், [பலிதத்தைக்கூறுகின்றார்] அதனால் மத்திமம் என்றறியல்வேண்டும்= அக்காரணத்தினால் ஆன்மா மத்திம பரிமாணமுடையதென உணரவேண்டும் எ—று.

ஆல்—அசை.

மத்திம பரிமாணம் = சரீரத்தின் சமானாகாரம், அதாவது ஆன்மாவிற்கு யானையின் சரீரம் பிராப்தமாகும்போது ஆன்மா யானை சரீரத்தின் சமானமாய்ப் பெரிதாகும். எறும்பு சரீரம் பிராப்தமாகும் போது எறும்பு சரீரத்தின் சமானமாய் சிறிதாகும் என்பது பொருள். 38

(அ—கை)

ஆன்மா அவயவமுடையதாயின் கடாதிபோல் அநித்தியத் தன்மைப் பிராப்தியாம் என இம்மதத்தைத் தூஷிக்கின்றார்.

உறுப்புடையோன் கடம்போல மாய்வன் மாய்ந்தா
லுஞற்றியதி னொழிவுஞற்ற ததன்வ ரத்தும்
மறுப்பதெவ னதனலே மகத்தா மான்மா
மத்திமமு மணுவுமல வான மென்னக்
குறிப்பறவெங் கணுநிறைந்தோ னுறுப்பொன்
குணவேத சம்மதனு மென்று கூறிச் [றில்லோன்
சிறப்பிடையும் வெகுகலகஞ் செய்வர் சித்தோ
செடந்தானே சிற்செடமோ வென்ன நின்றே.
39

(ப—ரை) உறுப்புடையோன் = அவயவமுடையவன், கடம் போல மாய்வன்=குடம்போன்று நாசமாவன், [நாசமாகுக தோஷ மென்னையெனிற் கூறுகின்றார்] மாய்ந்தால் = ஆன்மா அழிவுறின், உஞற்றியதின் ஒழிவும் உஞற்றாததன் வரத்தும்=செய்ததினழிவையும் செய்யாததினடைவ்வும், மறுப்பது எவன் = நிவர்த்தி செய்பவன் யாவன், (செய்யப்பட்ட புண்ணிய பாபங்களுக்குப் போகமின்றியே நாசம் செய்ததினழிவாம். செய்யப்படாத புண்ணிய பாபங்களுக்கு நிமித்தமின்றி போகத்தைக் கொடுக்குந்தன்மை, செய்யாததினடை வாம்.இவ்விரண்டு தோஷமும் ஆன்மாவை அநித்தியமாக அங்கீகரிக் கின் உண்டாம் என்பது கருத்து) [ஆன்மாவிற்கு அணுபரிமாணம் மத்திம பரிமாணம் என்னுமிரண்டு பக்ஷங்களிலும் தோஷமிருத்தலால் பரிசேஷத்தால் ஆன்மாவிற்கு விபுத்தன்மை சித்தித்ததெனக் கூறு கின்றார்] அதனல்=ஆகையால் அதாவது பரிசேஷத்தால், ஆன்மா மகத்தாம்=ஆன்மா மகத்பரிமாணமுடையதாம், மத்திமமும் அணுவும் அல=மத்திம பரிமாணமும் அணு பரிமாணமுமன்றாம், [ஆன்மாவின் விபுத்தன்மையில் பிரமாணம் கூறுகின்றார்] வானம் என்ன=ஆகாசம் போன்று, குறிப்புஅற=பரிச்சின்னமின்றி,எங்ஙணும்நிறைந்தோன்= எல்லாவிடங்களிலும் வியாபித்துளன், உறுப்பு ஒன்று இல்லோன்= நிரவயவன், குணவேத சம்மதன்ஆம் = (பிரமாதம் வஞ்சகம் முதலிய தோஷங்களின்றி மாதாவைப் போன்று கருணை முதலிய) நற்குண முடைய சுருதிக்குச் சம்மதமாவன், (ஆகாசம்போன்று சர்வகதன் நித்தியன் நிஷ்களன் நிஷ்கிரியன் என்பதுமுதலிய ஆகமம் பிரமாணமா மென்பது பொருள்) [இங்ஙனம் ஆன்மாவின் விபுத்தன்மையைச் சாதித்து அதன் சித்து வடிவத்தை நிச்சயஞ் செய்வதற்காக முதலில்

வாதிகளின் விவாதத்தைத் தெரிவிக்கின்றார்] என்று கூறிச் சிறப் பிடையும் = இவ்விதங் கூறி ஆன்மாவின் சொரூப விசேஷத்திலும், சித்தோ = சேதன வடிவமெனவும், செடந்தானோ = சடவடிவமெனவும், சிற்செடமோ என்றுநின்று = சேதனமும் சடமுமாகிய உபய வடிவ மெனவும், வெகு கலகம் செய்வர் = அனேகப் பிரகாரமாகக் கலகஞ் செய்வார்கள் எ—று.

(குறிப்பு அற = அடையாளமின்றியதாய், எனினுமாம்) ஒழிவும் என்பதில் உம்மை சேர்க்கப்பட்டது. 39

(அ—கை)

*ஆன்மாவிற்கு சடத்தன்மையைக் கூறும் வாதியின் மதத்தைத் தெரிவிக்கின்றார்*

பிரபாக ரருந்தார்க்கி கருமற் றான்மாப்
பேசிலசித் தாமென்ப ரம்ப ரம்போற்
பொருளான்மா வொலிபோற்றற் குணஞ்சித் தாமிப்
புந்தியென விருப்புவெறுப் புடன்மு யற்சி
தருமாதன் மமுமின்ப துன்பத் தோடு
தற்சமுக்கா ரமுங்குண்மா மனதோ டான்மா
மருவாநின் றிடிற்றனதிட் டத்தா லெல்லாம்
வருமதிட்ட மறிற்றுயிலின் மடியு மன்றே. 40

(ப—ரை) பிரபாகரரும் தார்க்கிகரும் = (பட்டபாதரின் சிஷ்ய ரான) பிரபாகரரும் நையாயிகரும், பேசில் ஆன்மா அசித்தாம் என்பர் = சொல்லுமிடத்து ஆன்மா சடமாமென்று கூறுவர், [அவரது பிரக்கிரியையை யநுவதிக்கின்றார்] அம்பரம்போல் = ஆகாசம்போல, ஆன்மா பொருள் = ஆன்மா திரவியமாம், (குணமுடைமையால் என்னு மநுமானம் சூசிப்பிக்கப்பட்டது) [ஆன்மாவிற்குப் பிருதிவி முதலிய வற்றினின்றும் பேதத்தைச் சாதிக்கும் விசேஷ குணத்தைத் தெரிவிக் கின்றார்] ஒலிபோல் = ஆகாசத்திற்குச் சப்தம் குணமாவதுபோல, தன்குணம் சித்தாம் = ஆன்மாவின் குணம் சேதனமாம், (ஆன்மா பிருதிவி முதலியதினின்றும் வேறு, ஞானமுடையதால், எது பிருதி வியாதியினின்றும் வேறன்றோ அது ஞான குணமுடையதுமன்று, பிருதிவி முதலியவை போன்று, என்னுமநுமானத்தை யீண்டறிக) [ஆன்மாவின் இதர விசேஷ குணங்களையும் கூறுகின்றார்] இப்புந்தி

என = இந்த ஞானம் குணமாவதுபோல, விருப்பு வெறுப்பு உடன் = இச்சையும் துவேஷமும், முயற்சி = பிரயத்தினமும், தருமாதன்மமும் = புண்ணிய பாபங்களும், இன்ப துன்பத்தோடு = சுகதுக்கங்களும், தற்சமுக்காரமும் = அவைகளின் வாசனையும், குணமாம் = ஆன்மாவின் விசேஷ குணங்களாம், [இக்குணங்களினுற்பத்தி விநாச காரணத்தைக் கூறுகின்றார்] தன் அதிஷ்டத்தால் மனது ஆன்மாவோடு மருவா நின்றிடில் = தனது கரும வசத்தால் மனது ஆன்மாவோடு கூடும்போது, எல்லாம் வரும் = கூறிய குணங்களனைத்துமுண்டாகின்றன, அதிட்டம் அறில் துயிலில் மடியும் = கரும விநாசத்தால் சுழுத்தியவஸ்தையில் விநாசமாகின்றன எ—று.

மற்று, அன்று, ஏ—அசைநிலைகள்.
உடன், ஓடு என்பவை எண்ணிடைச்சொற்கள். 40

(அ—கை)

ஆன்மாவிற்குச் சடத்தன்மையிருப்பின் சேதனத்தன்மையின் அங்கீகாரமெங்ஙனம் என்னுஞ் சங்கைக்கு ஞான குணமுடைமையாலெனக் கூறுகின்றார்

அறிவுடைமை யாலிவன்சே தனனு மிச்சை
யநிச்சைமுயற் சியுமுளனுந் துன்ப மாதி
யுறுதலிற்றன் மாதருமஞ் செய்வா னுண்பா
னுடலிலொரு காற்கருமத் தாலின் பாதி
பெறுமதுபோல் வேற்றுலகத் துடலிற் கன்ம
பெலத்தினு லிச்சைமுதற் பிறக்கு மிங்ஙன்
நிறைபவனும் போவன்வரு வானி தற்கு
நிகழ்கரும காண்டமெலா மான மென்பர். 41

(ப—ரை) அறிவு உடைமையால் = ஞான குணமுடைமையால், இவன் சேதனன்ஆம் = இவ்வான்மா சேதனனுவன், [ஆன்மாவிற்குச் சேதனத்தன்மையில் வேறு ஏதுவைக் கூறுகின்றார்] இச்சை அநிச்சை முயற்சியும் உளன்ஆம் = இராகத் துவேஷ யத்தினங்களையுமுடையனும், [ஆன்மாவிற்கு ஈசுரனினின்றும் விலக்ஷணத் தன்மையைக் கூறுகின்றார்] துன்பம் ஆதி உறுதலின் = துக்கம் முதலியவைகளையுடையதாந் தன்மையால், தருமாதருமம் செய்வான் = புண்ணிய பாபங்களின்

கருத்தாவும், உண்பான் = போக்தாவும் ஆவன். [ஆன்மா விபுவாமேல் லோகாந்தரத்திற்குச் செல்லுதல் முதலியவை யெங்ஙனம் பொருந்தும் என்னுஞ் சங்கைக்கு இந்தத் தேகத்தில் கரும வசத்தால் இச்சை முதலியவையுண்டாகும்போது ஈண்டு ஆன்மாவிற்குத் திதி முதலிய வியவகாரம் உண்டாவது போன்று கரும வசத்தால் வேறு லோகத்தில் வேறு தேகமுண்டாகும்போது அதனுல் அவச்சின்னமான ஆன்மப் பிரதேசத்தில் சுகாதிகளினுற்பத்தி வசத்தால் ஆண்டு ஆன்மாவிற்குச் செல்லுதல் முதலிய வியவகாரமுண்டாம் என உபசாரமாக ஆன்மா விற்குக் கமனுதியாமென்றபிப்பிராயப்பட்டுக், கூறுகின்ருர்] உடலில் = இத்தேகத்தில், கருமத்தால் = கருமவசத்தால். ஒருகால் இன்பு ஆதி பெறும் = ஓர்கால் சுகாதிகளேயடைவன். அதுபோல் = இத்திருஷ்டாந் தம் போன்று, கன்ம பெலத்தினுல் = அதிருஷ்ட வசத்தால், வேற்று உலகத்து உடலில் = அன்னிய உலகில் உற்பத்தியான சரீரத்தில், இச்சை முதல் பிறக்கும் = விருப்பு முதலியவை உண்டாகும், இங்ஙன் = இந்தப்பிரகாரம், நிறைபவனும் = சருவகதமான ஆன்மாவும், போவன் வருவான் = கமனுகமனங்களேச் செய்வன், [ஆன்மாவிற்கு கருத்திருத் தன்மை முதலிய தருமமுடையதாந் தன்மையில் யாது பிரமாணமெனிற் கூறுகின்ருர்] இதற்கு = இவ்விஷயத்தில், நிகழ்கருமகாண்டமெலாம் = சருவோற் கிருஷ்டமாய் விளங்கா நின்ற கருமகாண்ட சுருதிகளனைத் தும், மானம் என்பர் = பிரமாணமாமென்று கூறுவர் பிரபாகரரும் நையாயிகரும் எ—று.

இந்த நையாயிகப் பிரபாகரர்களது மதம் அசங்கதமாம். ஏனெனின், இவர்கள் " சுழுத்தியில் ஞானமில்லாமையால் ஆத்மா ஜடவடிவமாக மிஞ்சுகின்றது" என்று கூறுகின்றனர். அது சுழுத்தியில் நின்றும் எழுந்த புருஷனுக்கு " நான் ஒன்றும் தெரியாமல் சுகமாய்த் தூங்கினேன் " என்று உண்டாகும் சுழுத்திகாலத்தில் அனுபவிக்கப் பட்ட சுக அஞ்ஞானங்களின் ஸ்மிருதியால் பாதிக்கப்படுகின்றது. ஆத்மா ஜடமாயிருக்குமாயின் முற்கூறிய ஸ்மிருதி யுண்டாகலாகாது; ஸ்மிருதியோ உண்டாகின்றது. ஆகையால் ஆத்மா ஜடவடிவமன்று; சேதனவடிவாம்.

சுருதியில் ஆத்மா நிர்க்குணமென்று சொல்லப்பட்டிருக்கின்ற மையால் ஆத்மா இச்சை முதலிய குணங்கள் உடையதன்று. ஆனல் அந்தக்கரணத்தின் தர்மமாகிய இச்சை முதலியன ஆத்மாவினிடத்து

அத்தியாசமாகத் தோற்றுகின்றன. இச்சை முதலியன அந்தக் கரணத்தின் தர்மமென்பது சுருதியில் பிரசித்தம். ஜாக்கிர சொப்பனங் களில் அந்தக்கரணமுள்ளபோது இச்சை முதலியன தோற்றுகின்றன. சுழுத்தியில் அந்தக்கரணம் ஒடுங்கியிருத்தலால் இச்சை முதலியவை களுமில்லை என்னும் யுத்தியினுலும் இச்சை முதலியன அந்தக்கரணத் தின் தர்மங்களெனச் சித்திக்கின்றன; ஆத்மாவினுடையவன்று. நையாயிகர் முதலியோர் ஆத்மாவை நாநாவென்றும் விபுவென்றும் அங்கீகரித்திருத்தலால் எல்லா ஆத்மாவிற்கும் சகலதேக சகலகர்ம சகலபோக சர்வமனங்களோடும் சம்பந்தமுண்டாகின்றது. உண் டாகவே எந்த ஆத்மாவிற்கு எந்தத் தேகாதிகளென்னும் வியவஸ்தை துர்லபமாமென்னுமிவைமுதலிய அநேக தோஷங்களோடு கூடி யிருத்தலால் நையாயிகப் பிரபாகரர்களது மதம் அசங்கதமாம். 41

(அ—கை)

அற்றேல் விஞ்ஞானமயனினும் வேருய் உள்ளாய் இருப்பது ஆனந்தமயனென்னுமிடத்து ஆனந்தமயனுக்கு ஆன்மத்தன்மை கூறப்பட்டது இப்போது இச்சை முதலியவற்றினையுடைய அன்னியன் பிரதிபாதிக்கப்படுகின்ருன். ஆகையால் முன்னுக்குப்பின் விரோதமாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

துயிலிலசித் தானந்த மயகோ சந்தான்
றுன்னுமுதற் கோசமிவர்க் கான்மா வாகும்
பயிலிவனுக் கவைகுணமா மசித்தென் ருேர்ந்து
பாட்டர்கள்சிற் சடமான்மா வென்பர் சித்துச்
செயிரிலெழுந் தோனினைப்பாற் கருத லாமாற்
செடனுகி யப்பொழுது துயின்றே னென்னக்
குயிறருசாட் டியமிருதிச் செடாநு பூதிக்
கொள்கையன்றி யோர்போதுங் குலவு ருதே. 42

(ப—ரை) துயிலில் = சுழுத்தியில், அசித்து = சடமாயும் (அஸ் பஷ்ட சித்வடிவமென்பது பொருள்), முதற்கோசம் = (சுருதியில் சொல்லப்பட்ட பஞ்சகோசங்களுள்) பிரதமமாயும், துன்னும் ஆனந்த மயகோசந்தான் = பொருந்தியுள்ள ஆனந்தமய கோசமானது, இவர்க்கு ஆன்மாவாகும் = இப்பிரபாகரருக்கு ஆன்மாவாம், பயில் இவ

னுக்கு=சொல்லா நின்ற இவ்வான்மாவுக்கு, அவைகுணமாம்=பூரு வஞ் சொல்லிய ஞானம் ஆனந்தம் முதலியவை குணங்களாம், [இவ் வான்மாவிற்கே சேதனு சேதன வடிவத்தைப் பாட்டர்கள் வருணிக் கின்றார்களெனக் கூறுகின்றார்] பாட்டர்கள்=குமாரிலபட்டர் மதத்தை யனுசரித்தவர்கள், அசித்தென்று ஓர்ந்து=ஆன்மாவிற்கு அஸ்பஷ்ட சித்து வடிவம் உளதென்று ஊகித்து, சிற்சடம் ஆன்மா என்பர்= சேதன அசேதன உபய வடிவம் ஆன்மா என்று கூறுவர், [சைதன்னி யத்தின் உற்பிரேக்ஷையில் காரணங் கூறுகின்றார்] எழுந்தோன் நினைப்பால் = நித்திரையினின்று எழுந்த புருஷனது ஸ்மிருதியால், செயிர் இல்சித்து கருதலாம் = (சுழுத்திகாலத்திலுள்ள) குற்றமற்ற சைதன்னியத்தை ஊகிக்கலாம், [சேதனத்தை ஊகிக்கும் பிரகாரத் தையே ஸ்பஷ்டஞ் செய்கின்றார்] அப்பொழுது செடனுகிதுயின்றேன்= சுழுத்தி காலத்தில் சடனாய்த் தூங்கினேன், என்னக்குயில்தரு=என்று சொல்லா நின்ற, சாட்டிய மிருதி = (எழுந்தவனுக்குண்டாகும்) சடத் தன்மையின் ஸ்மிருதியானது, செட அநுபூதிக் கொள்கை அன்றி= சுழுத்தி காலத்தில் சடத்தினநுபவமின்றி, ஓர் போதும் குலவுறுது= ஒருகாலத்தும் விளங்காது எ—று.

(எழுந்தவனுக்கு உண்டாகும் சடத்தின் ஸ்மிருதியானது சுழுத்தி காலத்தில் சாட்டியத்தின் அநுபவமின்றிப் பொருந்தாததாய் அப்போதுள்ள சாட்டியத்தின் அநுபவத்தைக் கற்பிக்கின்றது என்பது கருத்து) ஆல், ஏ—அசைகள். 42

(அ—கை)

சுழுத்தியில் சைதன்னியத்தின் லோபமின்மையில் பிரமாணங் கூறுகின்றார்.

சுழுத்தியிற்காண் பான்காட்சிக் கழிவி லாமை
சொலுமதனு லிவனெளிமற் றின்மை சேர்ந்தோ
னழுத்தமில்மின் மினிபோலா நிரங்கி சன்று
ஞவதொருக் காலுமிலை யுபய ரூபம்
வழுத்ததனு லான்மாச்சித் துருவ மென்பர்
மதியுடைய சாங்கியர்செ டாங்கி சந்தான்
கொழுத்தபகு தியினுருமுக் குணம்வி காரி
கொடுப்பநுகர் வொடுகதிதான் வந்த தாமே. 43

(ப—ரை) சுழுத்தியில் காண்பான் காட்சிக்கு = சுழுத்தியவஸ்தையில் திருஷ்டாவின் திருஷ்டிக்கு, அழிவிலாமை சொலும் = நாசமின்மையை சுருதி கூறுகின்றது, (அதாவது திருஷ்டாவின் திருஷ்டிக்கு லோபமுண்டாகிறதில்லை, அவிநாசித் தன்மையால் என்னும் சுருதியில் திருஷ்டா வடிவ ஆன்மாவின் சொரூப வடிவ திருஷ்டிக்கு லோபமில்லை, விநாசரகித சுபாவமுடைமையால் இங்ஙனம் கொள்ளாக்கால் நாசத்தைக் கூறுபவனுக்கும் சாக்ஷியின்றிய விநாசத்தைக் கூற முடியாதாதலால் சுழுத்தியில் சைதன்னியத்தின் நாசமின்மை கேட்கப் படுகின்றது) அதனால் = அக்காரணத்தினால், இவன் = இவ்வான்மா, அழுத்தமில் மின்மினிபோல் = ஸ்திரமின்றிய மின்மினிப்பூச்சியைப் போன்று, ஒளி மற்றின்மை சேர்ந்தோன்ஆம் = பிரகாச அப்பிரகாசங்களோடு கூடியதாம், [இந்தப் பாட்ட மதத்தில் தூஷணத்தைச் சொல்லுதல் வாயிலாக சாங்கிய மதத்தை யெழுப்புகின்றார்] நிரங்கிசன் தான் = நிரவயவ ஆன்மா, ஒருக்காலும் உபய ரூபம் ஆவதில்லை = ஓர் போதும் இரண்டு வடிவமுள்ளதாக ஆகாது, வழுத்து அதனால் = சொல்லா நின்ற அக்காரணத்தினால், மதியுடைய சாங்கியர் = விவேகிகளான சாங்கியர்கள், ஆன்மா சித்துஉருவம் என்பர் = ஆன்மா சேதன வடிவமே என்று சொல்லுவார்கள், [அப்படியானால் சடத்தின் ஸ்மிருதிக்கு யாது கதியென்னுஞ் சங்கைக் கூறுகின்றார்] செட அங்கிசம் = (ஸ்மிருதியால் கற்பிக்கப்பட்ட) சட அம்ஸமானது, கொழுத்தபகுதியின் உரு = மதமுள்ள பிரகிருதியின் சொரூபமாம், முக்குணம் விகாரி = (அந்தப் பிரகிருதியின் சொரூபம்) சத்துவரஜ தமோவடிவ முக்குணமும் பரிணாமியுமாம்,[பிரகிருதியைக் கற்பிப்பதில் பிரயோஜனங் கூறுகின்றார்] நுகர்வுஒடு கதிதான் கொடுப்ப = புருஷனுக்கு போக மோக்ஷங்களைக் கொடுக்கும் பொருட்டு, வந்ததாம் = பிரதானம் பிரவிருத்திக்கின்றது எ—று. ஏ—அசை.

ஆத்மாவிற்கு ஜடசேதனமாகிய இரண்டு வடிவத்தை ஒப்பும் பாட்டர்மதம் அசங்கதமாம்.ஏனெனின்,ஒளியும் இருளும் போலவாவது இம்மனிதன் கடம் என்பதைப்போலவாவது ஒருவஸ்துவில் ஜடசேதன மாகிய இரண்டுவடிவம் விருத்தமாம். இரண்டு அம்சங்களையும் அங்கீகரிக்கின், ஜடாம்சம் கோசரமாம். சேதனம்சம் அகோசரமாம். இரண்டம்சங்களும் அனுபவகோசரமாகா. ஒரே ஆத்மாவினிடத்து இவ் வேறுபாடு சம்பவியாது. தண்டமொன்றைப் பார்த்தே தண்டியென்று சொல்லுகிறதில்லை. தண்டம் புருஷன் என்னுமிரண்டையும் பார்த்தால்

தண்டியென்று சொல்லுதலுண்டு. அதுபோல ஒரே ஜடாம்சத்தின் ஞானத்தால் ஆத்மா உபயவடிவமெனச் சித்தியாது. சேதனம்சத்தை யும் அனுபவகோசரமென்று ஒப்பினல் அது சடமும் கற்பிதமுமாம். 43

(அ—கை)

அற்றேல் புருஷன் அசங்கனுதலால், பிரதானத்திற்கும் புருஷ னுக்கும் அத்தியந்தம் வேற்றுமையுளது. அதனுல் பிரகிருதியின் பிர விருத்தியினுல் புருஷனுக்குப் போக மோக்ஷங்கள் எப்படிக்கூடும் என்னுஞ் சங்கைக்கு அவ்விரண்டற்குமுள்ள பேதத்தையுணராமை யினுல் புருஷனிடத்தில் போக மோக்ஷங்கள் வியவகரிக்கப்படுகின்றன எனக் கூறுகின்றுர்.

சங்கமிலா வறிவதற்குப் பந்த முத்தி
சாற்றுதருன் பகுத்துணராத் தன்மை யாலாம்
பங்கமுறு பந்தமுத்தி நிலைப்ப தற்குப்
பகர்ந்தவர்போல் சாங்கியர்சிற் பகுப்புட் கொள்வர்
மங்கலிலா மகத்தின்மே லவ்வி யத்த
மருவுபிர கிருதியெனச் சொல்லல் போலத்
துங்கமறை யசங்கனுஞ் சீவ னென்றே
சொல்லுதலா லவனசங்கன் றுணிவி தாமே. 44

(ப—ரை) சங்கம் இலா அறிவதற்கு = அசங்க ஆன்மாவிற்கு, பந்தமுத்தி சாற்றுதல் = பந்த மோக்ஷங்களைச் சொல்லுதல், பகுத்து உணராத் தன்மையால்ஆம் = பிரித்து அறியாமையால் கூடும், [தார்க் கிகர் முதலியோர் போன்று சாங்கியர்களாலும் ஆன்ம பேதமங்கீகரிக் கப்படுகின்றதெனக் கூறுகின்றுர்] பங்கம் உறுபந்த முத்திநிலைப் பதற்கு = விநாசமாகா நின்ற பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையின் பொருட்டு, பகர்ந்தவர்போல் = கூறிய நையாயிகர் முதலியோர் போன்று, சாங்கியர் சிற்பகுப்பு உட்கொள்வர் = சாங்கியர்கள் ஆன்ம பேதத்தை அங்கீகரிப்பார்கள், [பிரகிருதியின் உண்மையிலும் புருஷ னது அசங்கத் தன்மையிலும் சுருதியை யுதாகரிக்கின்றுர்] மங்கல் இலா = வியத்தமாகிய, மகத்தின்மேல் அவ்வியத்தம்என = மகதத்து வத்தினும் பரம் அவ்வியத்தமாமென்று, மருவு பிரகிருதி சொல்லல் போல் = பொருந்தா நின்ற பிரகிருதியைச் சுருதி சொல்வதுபோல,

துங்கமறை = உயர்வாகிய சுருதியானது, சீவன் அசங்கனேயாம் என்று சொல்லுதலால் = இப்புருஷன் அசங்கனேயாமெனப் பிரதி பாதித்தலால், அவன் அசங்கன் = ஆன்மா சங்கமின்றியவனும், இது துணிவாம் = என்பது வெளிப்படையாம் எ—று.

தான், ஏ—அசை.

சாங்கியர்களது மதத்தில் பிரகிருதியை ஜகத்காரணமாகக் கொண்டு புருஷனது போக மோக்ஷங்களுக்குக் காரணமாகச்சொல்லப் பட்டிருக்கின்றது. அது பொருந்தாது. ஏனெனின் பிரளயகாலத்தில் சத்துவ முதலிய குணங்களின் சாம்மிய (கலப்பு) அவஸ்தையைப் பிரதானமென்பர். அது சிருஷ்டி காலத்தில் சாம்யாவஸ்தையை விடு மாயின் அப்போது ஜகத்தின் உற்பத்தியுண்டாகின்றது. பிரதானம் ஜடமாயிருத்தலால் சாம்யாவஸ்தையை விடுவதில் சாமர்த்தியமுடைய தாகாது. சேதனமாகிய புருஷன் அசங்கமாயிருத்தலால் அதற்குப் பிரதானத்தோடு சம்பந்தமில்லை சேதன சம்பந்தமின்றி ஜடத்தினுல் காரிய உற்பத்தியுண்டாகாது. ஆகையால் பிரதானத்தினின்றும் சிருஷ்டி சம்பவியாது. அதனுல் பிரதானமென்னும் மாயா விசிஷ்ட சேதனம் அந்தரியாமியாகிய ஈசுவரனும். அவரே ஜகத்திற்கு கர்த்தா.

சாங்கிய மதத்தில் விபுசேதனமாகிய ஆத்மாவிற்கு நாநாத் துவம் ஒப்பியிருக்கின்றனர். அது நிஷ்பலமாம். ஏனெனின் ஒரே வியாபகசேதனத்தை அங்கீகரிக்கின் நாநா அந்தக்கரண உபாதிகளால் போக முதலியவற்றிற்குக் கலப்பின்றிய வியவஸ்தையுண்டாகும். மீண்டும் அந்த வியவஸ்தையின் பொருட்டே ஆத்மாவின் நாநாத்து வத்தை அங்கீகரித்தல் வியர்த்தமாம்.

ஆத்மாவின் நாநாத்துவத்தையும் பிரகிருதியின் நித்தியத் தன்மையையும் அங்கீகரித்தலால் ஆத்மாவினிடத்துச் சஜாதீய விஜா தீய சம்பந்தங்கள் வந்தடைதலால் நாநாவாகிய ஆத்மாவிற்கு அசங் கத்தன்மையைக் கூறுவதிலும் வியாகாத தோஷமுளதாம். இவ்வாற் றுல் சாங்கியர்கள் மதம் அசங்கதமாம். 44

(அ—கை)

இங்ஙனம் சீவவிஷயகமான வாதிகளின் விவாதத்தைக் காண் பித்து ஈஸ்வர விஷயகமான விவாதத்தைக் காண்பிப்பதற்காக முதலில் ஈசுர சொரூபத்தை ஸ்தாபிக்கின்றுர்.

சித்தின்கண் ணெழு பகுதி யாலெலாஞ்
செய்வ னீச்சுர னென்ப ரியோகியர்
அத்தினே டுயிர் களி னயற்பர
னுமெனும் பிர தான மென்பதோ
டொத்தசேத் திரஞ் ஞர்க்கு மேப்தி
யொண்குணே சனென் பது நலாரணஞ்
சுத்தவந் தரி யாமி தன்னையே
சொல்லு மாரணி யகமுவப் பொடே. 45

(ப—ரை) சித்தின் கண் = சேதன சந்நிதியில், எழுபகுதியால் = பிரவிருத்திக்கின்ற பிரகிருதியால், ஈச்சுரன் எலாம் செய்வன் = ஈசுவரன் உலகனைத்தையுமுண்டுபண்ணுவன், என்பர் யோகியர் = என்று சொல்லுவார்கள் யோகிகள், (பிரதானத்தை நியமனஞ் செய்பவன் ஈசுரனென்பது பொருள்) [அற்றேல் பிரகிருதி புருஷர்களின் வேருக ஈசுரனைக் கற்பித்தல் அப்பிரமாணமாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] அத்திேனாடு உயிர்களின் = அந்தப் பிரதானத்தினும் சீவர்களினும். அயல்பரன் ஆம் எனும் = வேருயுளன் ஈசுரன் என்று சுருதிசொல்லும், [ஈசுரனைப் பிரதிபாதிக்கின்ற அச்சுருதியினையே படிக்கின்ருர்] ஒத்த பிரதானம் என்பதோடு சேத்திரஞ்ஞர்க்கும்பதி = குணங்களின் சாம்மியாவஸ்தை வடிவ பிரதானத்திற்கும் சீவர்களுக்கும் சுவாமி எனவும், ஒண்குண ஈசன் = ஒள்ளிய சத்துவாதி குணங்களுக்கு நியாமகனுகிய ஈசன் எனவும், நல் ஆரணம் என்பது = இனிமையான சுருதி இங்ஙனம் கூறுகின்றது, [கேவலமிச்சுருதியே ஈசுரனைப் பிரதிபாதிப்பதன்று, மற்றோ அந்தரியாமிப் பிராமணமுமாமெனக் கூறுகின்ருர்] ஆரண்ணியகம் = பிரகதாரண்ணிய சுருதி, உவப்பொடு = சந்தோஷத்தோடு, சுத்த அந்தரியாமி தன்னை சொல்லும் = பரிசுத்தமான பரமான்மாவை பிரதிபாதிக்கும் எ—று.

ஏ, ஏ—அசை. 45

(அ—கை)

அந்த ஈசுரனை விஷயஞ் செய்யும் வாதிகளின் விவாதத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்ருர்.

ஈண்டும்வா திகடத்த முத்தியா
லெதிரியாய் வெகுகல கமாற்றுவார்
தாண்டுரு வணமதி திடப்படத்
தக்கவாக் கியமெடுத்துக் காட்டுவார்
ஆண்டுறுங் கிலேசங் கன்மம்பய
'னவற்றின்வா தனையோடு மென்றுமே
தீண்டுருப் புமான்மேன்மை யீசனுஞ்
சீவன் போலவன்பற்றில் சித்துமாம். 46

(ப—ரை) ஈண்டும் = ஈசுரனிடத்தும், வாதிகள் = யோகி முதலி யோர், எதிரியாய் = பரஸ்பரம் விரோதிகளாய், தம் தம் உத்தியால் = தமது தமது யுத்திகளால், வெகு கலகம் ஆற்றுவார் = மிகுந்த கல கத்தைச் செய்வார்கள், திடப்பட = தமது பக்ஷம் திடமாதற் பொருட்டு, மதிதாண்டுரு வண்ணம் = புத்தியை யதிக்கிரமிக்காமல்(புத்திக்கெட்டின வளவு என்பது பொருள்) ஆண்டு = அவ்வீசுரனிடத்து, தக்க வாக்கியம் எடுத்துக் காட்டுவார் = மேலான சுருதியாதி வாக்கியங்களை உதாகரிப் பார்கள், [இப்போது பதஞ்சலி பகவானால் சொல்லப்பட்டதும் ஈசுரனைப் பிரதிபாதிப்பதுமாகிய "கிலேசம் கருமம் விபாகம் ஆசயம் ஆகிய இவை களால் சம்பந்தப்படாத புருஷ விசேஷன் ஈசுரன்" என்னும் சூத்தி ரத்தைப் பொருளாற் படிக்கின்றார்] கிலேசம் = அவித்தை முதலிய ஐந்து கிலேசங்களும், கன்மம் = புண்ணிய பாபங்களும், பயன் = சன்மம் ஆயுள் போகமும், அவற்றின் வாதனையோடும் = அவைகளின் ஸம்ஸ் காரமும் ஆகிய இவைகளால், என்றும் தீண்டுரு = எப்போதும் சம்பந் தப்படாத, புமான் மேன்மை = புருஷ விசேஷன், ஈசனும் = ஈசுரனும், சீவன்போல் அவன் பற்று இல் சித்துமாம் = புருஷன் போல அவ்வீசுர னும் அசங்கனும் சித்து ரூபனுமாம் எ—று.

பதஞ்சலி பகவானது சூத்திரத்திரத்திற்குப் பொருளிதுவாம். அவித்தை அஸ்மிதை இராகம் துவேஷம் அபினிவேசம் என்னும் இவை பஞ்சக் கிலேசங்களாம். கருமம் யோகிக்கு அசுக்ல கிருஷ்ண மாம். அதாவது புண்ணிய பாபத்தினும் வேறாகிய கருமமாம். சீவர் களுக்குப் புண்ணியம் பாபம் மிசிரம் என மூன்றுவிதமாம். இக்கருமம் பதஞ்சலி பகவானது சூத்திரத்தின்படியாம். கருமமாகிய காரண மிருக்கும்போது அதன் விபாகமென்னும் பயனாகிய சன்மம் ஆயுள்

போகம் என்னுமிவையுண்டாம். கிலேசம் கருமம் விபாகம் என்னுமிவை களின் வாசனை ஆசயமாம். இவற்றோடு சம்பந்தமின்றிய புருஷ விசேஷன் ஈசுரனும்.

ஏ—அசை.

சாங்கிய மதத்தில் ஜீவன் அசங்க சொப்பிரகாச கூடஸ்த சேதன வடிவமாகக் கொண்டிருத்தல்போல யோகமதத்திலும் கொண் டிருக்கின்றனர். அந்த ஜீவன் போக்தா மாத்திரமேயாம்; கர்த்தா அன்று. புத்தியின் தர்மமாகிய சுகதுக்கங்கள் புத்தியோடு தனது அவிவேகத்தால் உபலக்ஷிக்கப்பட்ட அனுபவ சொரூபமாகிய போக் திருத்துவம் அதற்குண்டு. புத்தியே கர்த்தாவாம். அந்தப் புத்தியின் அவிவேகத்தால் ஆத்மாவிற்குக் கர்த்திருத்துவ வியவகாரமுண்டு. அந்தப் போக்தாவாகிய ஆத்மாவிற்குச் சம்பிரஞ்ஞாத (சவிகற்ப) அசம் பிரஞ்ஞாத (நிருவிகற்ப) சமாதியின் பரிபாகம் வரையில் புத்தியின் விவேக ஞானத்தால் அவிவேக நிவிருத்தி வாயிலாகத் துக்கத்திற்கு அத்தியந்த நிவிருத்தியுண்டாகின்றது. அது யோக மதத்தில் மோக்ஷ மாம். நிரீசுவர சாங்கிய மதத்தில் ஈசுவரனது அங்கீகாரமில்லை; யோக மதத்தில் அங்கீகாரமாம். அவ்வீசுவரனும் ஜீவனைப்போல அசங்க சேதனமாம். 46

(அ—கை)

ஈசுரன் அசங்கசித்ரூபமாமேல் அவனுக்கு நியமிக்கும் தன்மை எப்படிக் கூடுமெனிற் கூறுகின்றார்.

அன்னதா யினும்புருட மேன்மையா
லவனுக்கண் டுறுநிய மிப்பாந்திற
மின்னதன் றெனிற்பந்த முத்தியு
மிங்குமன்னி நில்லாமை யேயுமா
லுன்னறீ ரிவன்பயத்தி னென்பவா
முரையசங் கனும்பரனுக் கின்னதுண்
டென்னவோது மிக்கிவனுக் கேற்குமற்
றின்மையாற் கிலேசங்கன் மாதியே. 47

(ப—ரை) அன்னதாயினும் = ஈசுரன் அசங்கனாயினும், புருட மேன்மையால் = புருஷ விசேஷத் தன்மையால், அவனுக்கு = அவ்வீசு

ரனுக்கு, நியமிப்பாந்திறம் அண்டுறும்= நியாமகத்தன்மைபொருந்தும், [ஈசுரனுக்கு நியமிக்குந் தன்மையை யங்கீகரியாவிடின் தோஷங் கூறுகின்றார்] இன்னது அன்றெனில்= நியாமகத் தன்மை இல்லையென்று சொல்லில், இங்கு= இவ்வுலகில், பந்தமுத்தியும்= பந்த மோக்ஷங்கள், மன்னி நில்லாமை ஏயும்= வியவஸ்தையின்மையைப் பொருந்தும், [அசங்க ஈசுரனுக்கு நியாமகத் தன்மையில் பிரமாணமின்றாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] உன்னல் தீர் இவன்= அசிந்திய வடிவம் உள்ள இப்பரமான்மாவின், பயத்தின்= பயத்தினால், (வாயு முதலிய தேவதைகள் தத்தம் காரியங்களைச் செய்கின்றன) என்பவாம் உரை= என்பது முதலிய சுருதி, அசங்கனும் பரனுக்கு= அசங்கனாகிய ஈசுரனுக்கு, இன்னது உண்டு என்ன ஓதும்= இந் நியாமகத்தன்மை உள்ளதென்று சொல்லும், [அற்றேல் சுருதியிற் சொல்லப்பட்டதாயினும் பொருத்தமின்றிய பொருள் எப்படி அங்கீகரிக்கப்படும் எனிற் கூறுகின்றார்] மிக்க இவனுக்கு= உயர்வாகிய இவ்ஈசுரனுக்கு, கிலேசம் கன்மஆதி இன்மையால் = சீவ தருமங்களான அவித்தை முதலிய பஞ்சகிலேசம் கருமம் முதலியவை இல்லாதபடியால், ஏற்கும் = நியாமகத்தன்மை யுரியதாம் எ—று.

ஆல், மற்று—அசை.

ஜகத்திற்கு நியந்திருத்துவ மில்லாவிடின் இராஜாவின்றிய பிரஜைகளுக்குச் சுபகர்மத்தால் உத்தமமானபதவியும் அசுபகர்மத்தால் பந்த முதலிய தண்டமுமாகிய இவற்றிற்கு விவஸ்தை யில்லாமைபோல இந்த ஜீவனுக்குப் பந்தமுண்டாகும், இந்தச் சீவனுக்கே மோக்ஷமுண்டாகுமென்பதாக வியவஸ்தையாகிய மரியாதையைச் செய்பவனில்லாமையால் பந்தமோக்ஷம் வியவஸ்தையில்லாதனவாகும். இது யோகமதத்தின் அபிப்பிராயமாகும். 47

(அ—கை)

அற்றேல் அசங்கசித்துரூபர்களான சீவர்களும் கிலேசம் முதலியவையின்றியவர்களேயாகையால் ஈசுரனிடத்தில் யாது விசேஷம் என்னும் சங்கைக்கு சீவர்களுக்கு சுயமாய்க் கிலேசாதிகளில்லாவிட்டாலும் புத்தியோடு பேதத்தையுணராமையினால் கிலேசாதியுளதென்று பூருவஞ்சொல்லியதை நினைப்பூட்டுகின்றார்.

சீவர்பற்றி லாத்தன்மை பெற்றதாற்
சேர்வுருர் கிலேசாதி யென்னினும்
மாவிவே கமற்றமை யினன்னது
மன்னுமென்ன முன்சொன்ன தெண்ணுவாய்
தாவிலிச்சை யுங்கிரியை ஞாநமுந்
தன்மையீ சனுக்கென்னத் தேருவா
ரேவுபற் றிலான் றனக்கெவ்வாறுறு
மியக்குந் தன்மையென் றிடுதருக்கரே. 48

(ப—ரை) சீவர்பற்றிலாத்தன்மை பெற்றதால் = புருஷர்கள் அசங்கத்தன்மையை யடைந்திருப்பதால், கிலேசாதி சேர்வுருர் = கிலேசம் முதலியவற்றைப் பொருந்தார், என்னினும் = என்ருலும், மாவிவேகம் அற்றமையின் = மேன்மையாகிய பேத ஞாநமில்லாதபடியால், அன்னது மன்னும் என்ன = அக்கிலேசாதி பொருந்துமென்று, முன் சொன்னது எண்ணுவாய் = பூருவம் 44-வது செய்யுளிற் கூறியதை நினைத்துப் பார்ப்பாய், [தார்க்கிகரோ அசங்கபரமேஸ்வரனுக்கு நியாமகத் தன்மையைச் சகியாதவராய் சீவபேத சித்தியின் பொருட்டு நித்திய ஞாநாதி முக்குணங்களை யங்கீகரிக்கின்றனர் எனக் கூறுகின்ருர்] பற்றிலான்றனக்கு = அசங்க பரமேஸ்வரனுக்கு, இயக்குந் தன்மை = பிரேரகத்தன்மை, எவ்வாறு உறும் = எப்படிப் பொருந்தும், (மற்ருே பொருந்தாது) என்றிடுதருக்கர் = என்று கூறுகின்றவராய் நையாயிகர், தாவுஇல் இச்சையும் கிரியையும் ஞானமும் = நித்திய இச்சைப் பிரயத்தின ஞானங்கள், ஈசனுக்கு தன்மை என்ன = பரமேஸ்வரனுக்கு குணங்களாமென்று, தேருவார் = கருதுவார்கள் எ—று. 48

(அ—கை)

அப்படியானல் இச்சை முதலிய குணமுடைய அவ்வீசுரனுக்கு சீவர்களினின்றும் பேதமெப்படி யென்னுஞ் சங்கைக்கு ஞான முதலிய குணங்களின் நித்தியத்தன்மையாலேயே பேதமாம் எனப் பரிகரிக்கின்ருர்.

புருடமேன்மை தானிவனுக் குக்குணப்
பொலிவினு லுளதல்ல தில்லேயே
யெரிமெய்க்கா மன்சத்திய சங்கற்பனே
யென்பதாதிய சுருதி சொல்லுமே
பரன்மெய்ஞ்ஞா னமாதிய வுளோனெனிற்
படைப்பெநா ளுமேபயில வேண்டுமா
லிரண்ய கர்ப்பனேயீச ஞகுமற்
றிலிங்கதே கத்தோ டிணங்கிநிற்பனே. 49

(ப—ரை) இவனுக்கு = இவ்வீசுரனுக்கு, புருடமேன்மை தான் = புருஷ விசேஷத் தன்மையும், குணப்பொலிவினுலேயே உளது = குணவிசேஷத்தாலேயே இருக்கின்றது, அல்லது இல்லே = வேறுவிதத்தாலன்று, [ஈசுவரனது குணங்களின் நித்தியத் தன்மையில் பிரமாணங் கூறுகின்ருர்] எரிமெய்க்காமன் = விளங்கா நின்ற சத்திய காமன், சத்திய சங்கற்பன் = சத்திய சங்கற்பன், என்பது ஆதிய சுருதி சொல்லும் = என்பது முதலிய உபநிடதங்கள் கூறுகின்றன, [இந்த நையாயிக மதத்தின் கண்ணும் தோஷமிருத்தலால் வேறு மதத்தைக் கூறுகின்ருர்] பரன் மெய்ஞ்ஞான மாதிய உளோன் எனில் = ஈசுரன் நித்திய ஞானுதிகளேயுடையனென்று சொல்லில், படைப்பு என்னுளுமே பயில வேண்டும் = சிருட்டியானது எப்போதுமே உண்டாகவேண்டும், ஆகையால், இரண்ணிய கருப்பனே ஈசனுகும் = இரண்ணிய கருப்பன்தான் ஈசுரனுவன், [அவ்விரண்ணிய கருப்பனுக்கு யாது சொரூபமெனிற் கூறுகின்ருர்] இலிங்க தேகத்தோடு இணங்கி நிற்பன் = சூக்ஷும சரீரத்தோடு கூடியிருப்பன் எ—று.

மாயையை உபாதியாகவுடைய பரமான்மா சமஷ்டி சூக்ஷும சரீர அபிமானத்தால் இரண்ணிய கருப்பனென்று சொல்லப்படுகின்ருன் என்பது பொருள்.

ஆல், ஏ—அசைநிலேகள்.

எந்நாளுமென்பது எநாளுமென இடைக்குறையாயிற்று.

ஈசுவரனது ஞான முதலியன நித்தியமெனக் கூறின் சுருதியில் சிருஷ்டியினுரம்ப காலத்தில் ஈசுவரனது ஞானத்திற்கு உற்பத்தி கூறப் பட்டிருக்கின்றது. அதற்கும் சுருதியிற் சொல்லப்பட்ட அத்வைத

சித்தாந்தத்திற்கும் விரோதமுண்டாகின்றது. "சத்தியகாமன் சத்திய சங்கற்பன்" என்னும் சுருதியில் 'சத்திய' மென்னுஞ் சப்தத்திற்கு யதார்த்தம் அல்லது பிரளய பரியந்தமுள்ளது என்பது அர்த்தமாம். நித்தியம் என்பது அர்த்தமன்று. ஆகையால் நையாயிகர் மதம் அசங்கதமாம். 49

(அ—கை)

இரண்ணிய கருப்பனுடைய ஈசுரத் தன்மையில் பிரமாண மென்னையெனிற் கூறுகின்றார்.

அவன்மகான் மியமதி விசாலமா
யழகுறும் பிராமணம் புகன்றிடு
மிவனிலிங்க முண்டெனினுஞ் சீவனு
மியல்பின்றுங் கருமாதி யின்மையாற்
கவினுந் தூலமெய் விட்டிலிங்கமெய்
காணநிற்ப தெங்கண்ணு மில்லையாற்
றவிர்கிலா தவைராச மெய்யிறை
தலைமுகாதி மற்றெங்கு மேயுளான். 50

(ப—ரை) அழகுறும் பிராமணம் = அழகு பொருந்திய உத்கீதப் பிராமணமானது, அவன் மகான்மியம் = அவ்இரண்ணிய கருப்பனுடைய மாகான்மியத்தை, அதிவிசாலமாய்ப் புகன்றிடும் = மிக விஸ்தாரமாய்ப் பிரதிபாதிக்கும், [அப்படியானால் இலிங்க சரீரத்தின் சம்பந்த மிருத்தலால் சீவனுவன் என்னுஞ் சங்கைக்கு அவித்தைகாம கருமங்களின்மையால் சீவன் ஆகானென்று கூறுகின்றார்] இவன் இலிங்கம் உண்டெனினும் = இவனுக்குச் சூக்ஷ்ம சரீரமிருப்பினும், கருமாதி யின்மையால் = அவித்தை கருமம் முதலியவையின்மையால், சீவனு மியல்பு இன்றும் = சீவத்தன்மையின்றும், [கேவலம் இலிங்க சரீரம் தூலதேகத்தை விட்டுத் தோற்றமையினல் தூல சரீர சமஷ்டி அபிமானியாகிய விராட்புருஷனே ஈசுரனும் என விராட்டினுபாசகர்கள் கூறுகின்றார்கள்] கவின்தூல மெய்விட்டு = அழகிய தூலசரீரத்தை விட்டு, இலிங்கமெய் = சூக்ஷ்ம சரீரமானது, எங்கண்ணும் = எவ்விடத்தும், காணநிற்பது இல்லையால் = பார்க்கப்படுகின்றது இல்லாதபடியால், (காணப்படாதபடியாலென்பது பொருள்) தவிர்குஇலாத =

குற்றமின்றிய, வைராசமெய்இறை = விராட் சரீரமுடையன் ஈசுரன் ஆம், எங்கும் தலைமுகாதியுளான் = அவன் எவ்விடங்களிலும் சிரசு, வாய் முதலியவைகளையுடையவன் எ—று.

ஏ—சை. 50

(அ—கை).

விராட் புருஷனது இருப்பின்கண் பிரமாணத்தைக் கூறுகின்றார்.

சென்னியாயிர மெங்குஞ் சட்சுவே
சேர்ந்துளானெனு மொழிவினவினே
மென்னவோதுவார் விசுவரூபமே
யென்று மெண்ணுவோ ரிங்ஙனெங்கணுந்
துன்னுறுங்கரங் காலெனிற்புழுத்
தொடக்கமும்பர னுகுமாதலான்
மன்னுநான்முகன் றேவதேவனு
மற்றையோரலர் மனுடராகுமே. 51

(ப—ரை) சென்னி ஆயிரம் = ஆயிரம் சிரசுகளையுடையவன், எங்கும் சட்சு சேர்ந்துளான் = எல்லாவிடங்களிலும் நேத்திரமுடையோன், எனும் மொழி = என்னும் சுருதி வாக்கியத்தை, வினவினேம் என்ன = கேட்டுளேம் என்று, என்றும் விசுவரூபமே எண்ணுவோர் = எப்போதும் விராட்புருஷனையே யுபாசிப்பவர்கள், ஓதுவார் = பிரமாணமாகக் கூறுவார்கள், [விராட்புருஷனிடத்தும் தோஷதிருஷ்டியினால் சிலர் வேறு தேவதையை யாசிரயிக்கின்றாரெனக் கூறுகின்றார்]. இங்ஙன் எங்கணுந் துன்னுறுங்கரங்கால் எனில் = இப்படி எவ்விடங்களிலும் பொருந்தியுள்ள கை கால்களையுடையன் ஈசுரனென்று சொல்லில், புழுத்தொடக்கமும் பரன் ஆகும் = கிருமி முதலியதும் ஈசுரனாகும், ஆதலால் = அக்காரணத்தால், மன்னும் நான்முகன் = நிலைபெற்ற சதுர்முகப் பிரம்மாவே, தேவ தேவனும் = இந்திராதி தேவதைகளுக்கும் தேவனாகிய பரமேசுரனும், மற்றையோர் அலர் = ஏனையர்கள் ஈசுரரல்லர், (மற்றோர்) மனுடரே ஆகும் = சீவர்களேயாவார்கள் எ—று. 51

சட்சுவே என்பதிலுள்ள ஏ — அசை.

(அ—கை)

இங்ஙனம் எவரால் சொல்லப்படுகின்றதெனிற் கூறுகின்றார்.

புத்திரப்பொருட் டவனையெண்ணுவோர்
புகல்வரிங்ஙனம் பிரசைநாதனே
யித்தலப்பிர சைகளையாக்கின
னென்பதாதிவாக் கியமுங்காட்டுவார்
மெத்துபங்கயன் வேதனென்பவன்
விண்டுநாபியின் வந்துளானதாற்
கத்தன்விண்டுவே யென்பரிங்குபா
கவதரென்னவே கருதுசீவரே. 52

(ப—ரை) புத்திரப் பொருட்டு அவனை எண்ணுவோர் = புத்திரோற்பத்தியின் பொருட்டுப் பிரம்மாவையுபாசிக்கின்றவர்கள், இங்ஙனம் புகல்வர் = இப்படிக் கூறுவார்கள், [ பி ர ஜ ா ப தி பிரஜைகளை சிருட்டித்தாரென்பது முதலிய சுருதி வாக்கியம் அந்தப் பிரம்மாவின் ஈஸ்வரத்தன்மையில் பிரமாணமெனக் கூறுகின்றார்கள் எனக் கூறுகின்றார்] பிரசை நாதனே = பிரம்மாவே, இத்தலப் பி ர சை க ளை ஆக்கினன் = இவ்வுலகிலுள்ள ஜந்துக்களனைத்தையும் உண்டுபண்ணினார், என்பதாதி வாக்கியமும் காட்டுவார் = என்பது முதலிய சுருதி வாக்கியத்தையும் பிரமாணமாக எடுத்துக் காண்பிப்பர், [பா க வ த ர் க ள து மதத்தைக் கூறுகின்றார்] மெத்து பங்கயன் வேதன் என்பவன் = மேன்மையாகிய கமலோனாகிய பிரம்மாவென்பவன், விண்டு நாபியின் வந்துளான் = மகாவிஷ்ணுவின் நாபிக் கமலத்திலிருந்து உற்பன்னமாயினன், அதால் = அக்காரணத்தால், விண்டுவே கத்தன் = ஸ்ரீ மகாவிஷ்ணுவே ஈசுரனும், என்பர் = என்று கூறுவார்கள், இங்கு பாகவதர் என்னவே கருது சீவர் = இவ்வுலகில் விஷ்ணு பக்தர்களாகக் கருதப் பட்ட சீவர்கள் எ—று.

ஏ — அசை. 52

(அ—கை)

சிவனது பக்தர்களாகிய சைவர்களின் மதத்தைக் கூறுகின்றார்.

சிவன்றன்பாதமே காணச்சார்ங்கிதான்
றிடமழிந்துளா னுதலாற்சிவன்
புவனதேவன்மா லல்லவென்பர்காண்
புனிதவாகம மானிச்சைவரே
தவறின்முப்புரந் தன்னைவென்றிடத்
தாணுவிக்கினே சனைவணங்கினன்
கவுரிசேயனே கடவுளென்பர்கள்
காணபத்திய மதத்தன்பாளரே. 53

(ப—ரை) சிவன் தன் பாதமே காண = பரமேசுவரனுடைய திருவடியைக் காண்பதற்கு, சார்ங்கி திடம் அழிந்துளான் = விஷ்ணுவானவர் சாமர்த்தியமின்றியவர் ஆனார், ஆதலால் = இக்காரணத்தால், சிவன் புவனதேவன் = சங்கரனே உலகிற்கு ஈசுரனும், மால் அல்ல = விஷ்ணுவல்ல, என்பர் = என்று சொல்லுவார்கள், புனித ஆகமமானிச் சைவர் = பரிசுத்தமான ஆகமத்தை அங்கீகரிக்கின்ற சைவ சித்தாந்திகள், [கணபதியின் பக்தர்களாகிய காணபத்தியரின் மதத்தைக் கூறுகின்றார்] தவறின் முப்புரந்தன்னை வென்றிட = தோஷத்தோடு கூடிய திரிபுரத்தைச் சம்மரிக்க, தாணு விக்கினேசனை வணங்கினன் = சங்கரர் கணேசனைப் பூசித்தார், ஆகையால், கவுரி சேயனே = உமாதேவியின் புத்திரரான கணேசப் பெருமானே, கடவுள் என்பர்கள் = ஈசுரனுமென்று சொல்லுவார்கள், காணபத்திய மதத்து அன்பாளர் = காணபத்திய மதத்தில் பிரியமுடையவர்கள் எ—று.

காண், ஏ, ஏ — அசை. 53

(அ—கை)

கூறிய நியாயத்தை வேறிடத்தும் அதிதேசம் செய்கின்றார்.

இப்படித்தத்தம் பக்கத்தேனைய
ரியையுமானத்தால் வேறுவேறதா
வொப்பின்மந்திரா ருத்தவாதகற்
பாதியொண்டிமிக் குரைசெய்வார்களாற்
செப்பினந்தரி யாமியைமுதற்
செறிவர்தாவராந் தேசவாதிகள்
கொப்புமேவர செருக்குவேயெலாங்
குலத்தின்றெய்வமாய்க் குறித்தல்காண்டலின். 54

(ப—ரை) இப்படி = இந்தப் பிரகாரம், ஏனையர் = பைரவ மைராலாதி தேவதைகளையுபாசிப்பவர்கள், தத்தம் பக்கத்து இயையும் மானத்தால் = தமது தமது பக்ஷத்தில் பொருந்திய அபிமானத்தால், ஒப்பு இல் = சமானமற்ற, மந்திர அருத்தவாத கற்பாதி ஒண்டி = வேதத்திலுள்ள மந்திர பாகங்களையும் அருத்தவாதங்களையும் கற்ப சாஸ்திர முதலியவற்றையும் ஆசிரயித்து, மிக்கு வேறு வேறதா உரை செய்வார்கள் = மிகவும் பின்ன பின்னப் பிரகாரமாகக் கூறுவார்கள், [இப்படி எத்தனை மதங்கள் உள்ளன என்னுஞ் சங்கைக்கு எண்ணிக்கையற்ற மதங்களுள்ளனவெனக் கூறுகின்றார்] செப்பின் = சொல்லுமிடத்து, அந்தரியாமியை முதல் = காரண உபாதிகனன ஈசுரனையாரம்பித்து, தாவர அந்த ஈச வாதிகள் = அரசு முதலிய ஸ்தாவர பரியந்தமாக ஈசனென்று சொல்லும் வாதிகள், செறிவர் = இருக்கின்றார்கள், [அற்றேல் தாவரங்களை ஈசுரனைச் சொல்லுபவர்கள் உலகில் ஒரிடத்துங் காணப்படவில்லையேயென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] கொப்பு மேவு அரசு எருக்கு வேய் எலாம் = கிளைகள் பொருந்திய அரச விருக்ஷம் எருக்கஞ்செடி மூங்கில் ஆகிய அனைத்தையும், குலத்தின் தெய்வமாய் = குலதெய்வமாக, குறித்தல் காண்டலின் = நினைத்துப் பூசித்தலைப் பார்க்கின்றபடியினால் எ—று.

தத்தம் பக்கத்தியையும் மானத்தாலென்றதால் வேறு வேருக வருணிப்பதில் காரணங் கூறப்பட்டது. மந்திராதியென்பதால் பிரமாணங் கூறப்பட்டது. 54

(அ—கை)

அப்படியானல் இந்த மத பேதங்களில் எதனைக் கொள்வது எதனைத் தள்ளுவது என்னு மாகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றார்.

உண்மை நிச்சய விருப்பினு லொண்ணியா யத்தோ
டண்மி யாகம விசாரமே யாற்றிடு மவர்க்குத்
திண்மை யாகிய பிரதிபத் தியதொன்றே சேரும்
வண்மை யன்னது மிங்குத்தோன் றுறவகுத் துரைப்பாம். 55

(ப—ரை) உண்மை நிச்சய விருப்பினல் = தத்துவ ஞானத்தினிச்சையினல், ஒண் நியாயத்தோடு அண்மி = நல்ல யுத்தியோடுகூடி,

ஆகமவிசாரமே ஆற்றிடுமவர்க்கு = சாஸ்திர விசார மாத்திரத்தைச் செய்கின்ற புருஷர்களுக்கு, திண்மையாகிய பிரதிபத்தியது ஒன்றே சேரும் = திடமாகிய ஒரே ஞானமுண்டாகும் [அந்த ஞானம் எப்படிப் பட்டதெனிற் கூறுகின்றார்] வண்மை அன்னதும் = திடமாகிய அந்த ஞானத்தையும், இங்கு தோன்றுற = இவ்விடத்துத் தோன்றும்படி, வகுத்து உரைப்பாம் = பிரித்துக் கூறுவாம் எ—று.

பிரதிபத்தியது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. 55

(அ—கை)

அந்த ஞானத்தினையே தெரிவிப்பதற்காக அதற்கநுகூலமான சுருதியைப் படிக்கின்றார்.

மாயை யைப்பிர கிருதியென் றேமதித் திடுக
மாயை பெற்றுளான் றன்னையு மகேசனு மென்றே
யாய வின்னவன் றனதவ யவங்க ளினாலே
யேயஞா லங்களி யாவையும் நிறைந்ததா யிருக்கும். 56

(ப—ரை) மாயைப் பிரகிருதியென்றே மதித்திடுக = மாயையைச் சகத்திற்கு உபாதான காரணமாக அறிக, மாயை பெற்றுளான் றன்னையும் = மாயையையுபாதியாகவுடைய அந்தர்யாமியையும், மகேசனும் என்றே (மதித்திடுக) = மாயைக் கதிஷ்டானமான பரமேஸ்வரனாகவே அறிவாய், இன்னவன்றனது = மாயையையுபாதியாக வுடைய மகேஸ்வரனது, அவயவங்களினால் = சராசரான்மகமான அம்ஸங்களால், ஏய ஞாலங்கள் யாவையும் = பொருந்திய சகத்தனைத்தையும், நிறைந்ததாய் இருக்கும் = வியாபித்ததாயிருக்கும் எ—று.

ஏ — அசை.

மதித்திடுக என்பது பின்பும் கூட்டப்பட்டது.

மகேசுரனது அவயவங்களான சராசரான் மகமாகிய சீவர்களால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றதென்பது பொருள். 56

(அ—கை)

இங்ஙனம் கூறிய சுருதியின் அனுசாரமாக ஈசுவரவிஷயகமான நிச்சயம் பொருத்தமாமெனக் கூறுகின்றார்.

என்னு மாமறைக் கேற்பவே யீசநிர் ணயந்தான்
றுன்ன னீதியா மாகவே முரணது தொலையு
மன்னு தாவராந் தேசவா தியர்க்கிந்த மாயை
தன்னு ருத்தமந் தாபநீ யமதுரை தருமால். 57

(ப—ரை) என்னும் மாமறைக்கு ஏற்ப = இங்ஙனம் கூறிய மகத்தாகிய சுருதிக்கு ஒக்கும் வண்ணம், ஈச நிர்ணயம் துன்னல் = பரமேசுவரனை நிச்சயித்தல், நீதியாம் = நியாயமாம், [எதனால் நியாயம் என்னுஞ் சங்கைக்கு யாண்டும் விரோதமின்மையாலெனக் கூறுகின்றார்] ஆகவே = இங்ஙனம் கொள்ளவே, மன்னு தாவர அந்த ஈச வாதியர்க்கு = நிலைபெற்ற தாவர பரியந்தமான ஈசனைப் பிரதிபாதிக்கும் மதஸ்தரனைவர்க்கும், முரணது தொலையும் = விரோதம் நாசமாம், எல்லோருடைய ஈசுவரத்தன்மையையுமங்கீகரித்தலால் ஒருவரோடும் விரோதமின்றாமென்பது கருத்து, [அப்படியானால் உலகினுபாதான காரணமாயுள்ள மாயைக்கு வடிவமென்னையெனிற் கூறுகின்றார்] இந்த மாயை தன் உருத்தமம் = உலகின் காரணமான மாயையின் சொரூபம் தமோ குண வடிவமாம், [எதனாலெனிற் கூறுகின்றார்] தாபநீயம் = நிருசிம்ம தாப நீய உபநிடதமானது, அது = "மாயை தமோ வடிவம்" என தமோவடிவத்தை, உரை தரும் = பிரதிபாதிக்கும் எ—று.

ஏ, தான், ஆல் — அசைநிலைகள். 57

(அ—கை)

மாயைக்குத் தமம் வடிவமென்பதில் பிரமாணம் யாது என்று இச்சையுண்டாக "அநுபூதியினால்" என்னுஞ் சுருதியே ஈண்டு அனுபவம் பிரமாணமாமெனப் பிரதிஞ்ஞை செய்கின்றதெனக் கூறுகின்றார்.

அனுப வம்பிர மாணமென் றறிவிக்கும் வேதம்
பினுமதாஞ்செட மோகரூ பமுமெனப் பேசு
மினிய பாலகோ பாந்தத்து மிலகுறு தலினாற்
பனுமதற்குள தனந்தநீர் மையுமெனப் பகரும். 58

(ப—ரை) அனுபவம் பிரமாணம் என்று வேதம் அறிவிக்கும் = தனதனுபவமே பிரமாணமாமென சுருதிசுயம் தெரிவிக்கின்றது, [ஆண்டு மாயை தமோ வடிவமென்பதில் அவ்வனுபவம் யாது என

இச்சையுண்டாக "அந்த இது சடம் மோக வடிவம்" என்னும் சுருதியே இதில் அனுபவத்தை ஸ்பஷ்டஞ் செய்கின்றதெனக் கூறுகின்றார்] பினும் = மேலும், அது = மாயை, செடமோக ரூபமும் ஆம் எனப் பேசும் = சடமும் மோக வடிவமுமாமென்று சுருதி சொல்லும், ["அநந்தம்" என்னும் சுருதியால் சகல புருஷரினனுபவசித்தத்தன்மை சொல்லப்படுகின்றதெனக் கூறுகின்றார்] இனிய பால கோப அந்தத்தும் = இனிமையான சிறு குழந்தையாகிய மாடு மேய்க்கின்றவன் பரியந்தம் (சகலருக்கும்), இலகுறுதலினுல் = விளங்குகின்றபடியினுல், பனும் அதற்கு = சொல்லா நின்ற அம்மாயைக்கு, அனந்தநீர்மையும் உளது எனப்பகரும் = அனந்தத்தன்மையும் உண்டென்று சுருதி சொல்லும் எ—று.

சடமும் மோகமும் பிரகிருதியின் காரியமாமென்று, குழந்தை கோபாலன் முதலான எல்லாருக்கும் அனுபவமென்பது பொருள். 58

(அ—கை)

சடசப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்.

அறிவி லாக்கட மாதிய வுருச்சட மன்றோ
பொறிம ழுங்கிட முலகர்மோ கமதெனப் புகல்வர்
செறியு மிவ்வகை யுலகர்தந் திட்டியா லிதுதா
னுறையு மியாவர்க்கு மனுபவ மாவுள தாகும். 59

(ப—ரை) அறிவிலாக்கடம் ஆதிய உரு = சேதனமற்ற குடம் முதலியவைகளின் சொரூபம், சடம் அன்றோ = சடமல்லவா, [மோக சப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்] பொறி மழுங்கு இடம் = புத்தி தடைப்படும் ஸ்தானம், உலகர் மோகமது எனப் புகல்வர் = இலௌகிகர் மோகமென்று சொல்லுவார்கள், [கூறிய பிரகாரத்தால் சகல புருஷரினனுபவ சித்தமான அனந்தத்தன்மை சித்தித்ததெனக் கூறுகின்றார்] இவ்வகை = இந்தப் பிரகாரம், செறியும் உலகர் தம் திட்டியால் = பொருந்தா நின்ற இலௌகிகரது திருஷ்டியினுல், இது தான் = இந்தச் சடமோக வடிவ தமோரூபம், உறையும் யாவர்க்கும் = இவ்வுலகில் வசிக்கும் அனைவர்க்கும், அனுபவமா உளதாகும் = அனுபவிக்கப்படுகின்றது எ—று. 59

(அ—கை)

இப்படி மாயையானது சருவானுபவ சித்தமாயின் ஞானத்தால் நிவர்த்திக்கத் தகாததாகும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

உத்தி திட்டியான் மற்றனிர் வாச்சிய மொண்டா
தித்த லத்தசத் தெனுமறை யாலசத் திராது
தத்த விர்தலாற் சத்தலத் தாழநீங் குதலான்
வித்தை நோக்கினாற் றுச்சமா மேவுரு மையினே. 60

(ப—ரை) உத்தி திட்டியால் = விசார திருஷ்டியால், அநிர் வாச்சியம் = (சத்ரூபத்தாலும் அசத்துரூபத்தாலும்) நிர்வசனஞ்செய் யத்தகாதது, [அதில் பிரமாணம் யாதெனிற் கூறுகின்றார்] இத்தலத்து அசத்து ஒண்டாது = இவ்வுலகில் அசத்து இல்லை, எனும் மறை யால் = என்னுஞ் சுருதியால், [இந்தச் சுருதியின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்] அசத்து இராது = இவ்வுலகு அசத்தன்றும், தத்து அவிர்தலால் = அது தோற்றுகின்றபடியால், சத்து அல = சத்தும் அன்றும், தாழ நீங்குதலான் = (ஈண்டு நாநானவானவை சிறிதும் இல்லை என்னுஞ் சுருதியால்) பாதிக்கப்படுகிறபடியால், (சதசத்து ரூபம் விருத்தமாதலால் சுருதியினாலுபேக்ஷிக்கப்பட்டது) [இங்ஙனம் யுக்தி திருஷ்டியினால் அநிர்வச நீயத்தன்மையைக் காண்பித்து "இதற்கு இவ்வடிவம் துச்சம்" என்னும் சுருதி வித்துவானுடைய அனுபவத்தால் அதற்குத் துச்சத் தன்மையைத் தெரிவிக்கின்றது எனக் கூறுகின்றார்] வித்தை நோக்கினால் = அறிஞனுக்கு ஞான திருஷ்டியினால், துச்சமாம் = முயற்கொம்பு போல சொரூப சூனியமாம், [துச்சத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்] மேவுருமையின் = நித்திய நிவிருத்தி ரூபமாதலால் எ—று.

மற்று, ஏ — அசைநிலைகள். 60

(அ—கை)

உபபாதனஞ் செய்த பொருளை முடிக்கின்றார்.

சுருதி யுத்தியோ டுலகுடைத் தொந்தஞா னத்தான்
மருவு துச்சமோ டநிர்வச னீயம்வாத் தவமென்
றெருமுப் பேதமா மாயையென் றுணர்வுறற் பாற்றும்
வருமி தற்குண்மை யின்மையுங் காட்டுறு மாயை. 61

(ப—ரை) சுருதியுத்தி ஓடு உலகுடை தொந்த ஞானத்தால்=சாஸ்திர திருஷ்டியினாலும் விசார திருஷ்டியினாலும் உலகரின் திருஷ்டியினாலும், ஒரு மாயை = ஒரே மாயையானது, மருவு துச்சம் ஓடு அநிர்வசனீயம் வாத்தவம் என்று=முறையே பொருந்தா நின்ற மூன்று காலத்திலுமில்லாமை வடிவ துச்சமெனவும் அநிர்வாச்சிய மெனவும் சத்தியமெனவும், முப்பேதமாமென்று உணர்வு உறற்பாற்றும்=மூன்று விதமாக அறியத்தக்கது, ["சகத்தின் சத்துவத்தையும் அசத்துவத்தையும் தெரிவிக்கின்றது" என்னும் சுருதியின் பொருளான மாயையின் வியாபாரத்தைக் கூறுகின்றார்] வரும் இதற்கு=உண்டாகா நின்ற இச்சகத்திற்கு, உண்மை இன்மையும் = சத்துவத்தையும் அசத்துவத்தையும், மாயை காட்டுறும் = மாயையானது தோற்றுவிக்கின்றது எ—று.

ஓடு — எண்ணிடைச்சொல். 61

(அ—கை)

ஒரே மாயைக்குச் சகத்தின்கண் சத்துவத்தையும் அசத்துவத்தையும் தோற்றுவிக்குந் தன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

விரிவி னாற்குவி வாலுமோ வியப்படம் போலும்
தெரிப டாமையாற் சித்தைவிட் டில்சுதந் தரையா
மரிய சங்கமி லான்றனை யனியமாக் குதலின்
வரிசை சார்சுதந் தரையுமவ் வண்ணமா மாயை. 62

(ப—ரை) விரிவினாலும் குவிவாலும் = விரிதலினாலும் சுருங்குதலினாலும், (சித்திரத்தினுண்மையையும் இன்மையையும் காட்டுகின்ற) ஓவியப்படம் போலும் = சித்திரமுள்ள வஸ்திரம் போலும், [சுவதந்திராசுவதந்திரத் தன்மையால் என்னுஞ்சுருதியால் மாயைக்கு சுவதந்திரத்தன்மை அசுவதந்திரத்தன்மைகள் தெரிவிக்கப்பட்டன. அவ்விரண்டின்கண்ணும் யுக்தியைக் கூறுகின்றார்] மாயை = மாயையானது, சித்தைவிட்டு தெரிபடாமையால் = தன்னை விளக்குகின்ற சைதன்னியத்தை விட்டு விளங்காமையினால், இல் சுதந்தரையாம்=சுதந்திரமின்றியதாம், அரிய சங்கம் இலான்றனை = அறிதற்கு அரிய அசங்க ஆன்மாவை, அனியம் ஆக்குதலின் = வேறு பிரகாரமாகச் செய்தலின், அவ்வண்ணம்=அப்படியே, வரிசைசார் சுதந்திரை

யும் ஆம் = மேன்மை பொருந்திய சுதந்திரமும் ஆம் எ—று.

விரிவினுல் என்பதில் உம்மை சேர்க்கப்பட்டது. 62

(அ—கை)

அன்னியமாக்குதலையே வெளிப்படுத்துகின்ருர்.

மாயை யீதுதான் கூடத்த வசங்க வான்மாவை
மேய சாட்டிய மாக்குஞ்சீ வேசரை வெறுஞ்சிற்
சாயை யாகவும் வகுக்குங்கூ டத்தனேச் சாரா
தோயு மிச்சக முதலெலா முஞற்றுறு மன்றே. 63

(ப—ரை) மாயையீதுதான் = இந்த மாயையானது, கூடஸ்த அசங்க ஆன்மாவை = நிருவிகார அசங்க சேதனத்தை, மேயசாட்டியம் ஆக்கும் = பிரமேய வடிவ சகத்து ரூபமாகச் செய்யும், [சீவேசுரர்களை ஆபாசமாகச் செய்கின்றது என்னுஞ் சுருதியால் சொல்லப்பட்ட சீவேசுர விபாகத்தையும் செய்கிறதெனக் கூறுகின்ருர்] வெறும் சிற்சாயையாக = கேவல சிதாபாச ரூபத்தால், சீவ ஈசரையும் வகுக்கும் = சீவேசுரர்களையும் உண்டுபண்ணும், [அற்றேல் ஆன்மாவை அன்னியமாகச் செயின் கூடஸ்தத் தன்மைக்கு ஆனியாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] கூடஸ்தனேச் சாராது = நிருவிகாரத் தன்மையைக் கெடுக்காமல், ஓயும் இச்சகம் முதல் எலாம் = விநாசமாகும் இச்சகத்தனைத்தையும், உஞற்றுறும் = உண்டாக்கா நிற்கும் எ—று.

அன்று, ஏ—அசைநிலைகள். 63

(அ—கை)

அற்றேல் கூடஸ்தத்தன்மைக்குப் பங்கமின்றி சகத்து முதலியவற்றின் சொரூபத்தைச் செய்தல் கூடாது என்னுஞ் சங்கைக்கு மாயைக்குக் கூடாததைக் கூட்டுவிக்குந் தன்மையுண்மையால் இது ஆச்சரிய காரணமன்றெனக் கூறுகின்ருர்.

செயற்க ருஞ்செய லுஞற்றுறு மாயையிற் செறியும்
வியப்பென் னீரிடை நெகிழ்ச்சியக் கினியின்கண் வெம்மை
பயுக்கு மண்டனிற் றிண்மைபோன் மாயையிற் பயிலும்
நயக்கு மச்செய லொன்றிஞ னண்ணிய தன்ரும். 64

(ப—ரை) செயற்கு அருஞ்செயல்=செய்யத்தகாத செய்கையை, உஞற்றுறும் மாயையில்=செய்யும் மாயையின்கண், (அதாவது கூடாததைக்கூட்டுவிக்கும் மாயையின்கண்) செறியும் வியப்பு என் = பொருந்தாநின்ற ஆச்சரியம் யாது, (இங்ஙனம் செய்யாதாயின் மாயைத் தன்மையே பங்கமாம்) [மாயைக்குக் கூடாததைக் கூட்டுவிக்குந்தன்மையில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] நீரிடை நெகிழ்ச்சி = சலத்தில் இளக்கமும், அக்கினியின்கண் வெம்மை = நெருப்பில் சூடும், பயக்கும் மண்தனில் திண்மை போல் = (தானியாதி) பலன்களைக் கொடுக்கும் பூமியில் கடினத் தன்மையும்போல, மாயையில் நயக்கும் அச்செயல் = மாயையின்கண் கூடாததைக் கூட்டுவிக்குந்தன்மை, பயிலும் = இயல்பாகவே பொருந்தியுளது, ஒன்றினுல் நண்ணியது அன்றும் = ஒரு சாதனத்தால் வந்ததன்றும் எ—று.

எப்படி ஜலம் முதலியவற்றிற்கு நெகிழ்ச்சி முதலியவை சுபாவமோ அப்படி மாயைக்குக் கூடாததைக் கூட்டுவிக்குந் தன்மை சுபாவமாமென்பது பொருள். 64

(அ—கை)

அற்றேல் மாயைக்குக் கூடாததைக் கூட்டுவிக்குந் தன்மை ஆச்சரிய காரணமன்றுமெனக் கூறப்பட்டது. அது பொருந்தாது. உலகில் மாயைக்கு ஆச்சரிய காரணத் தன்மையைக் காண்டலால் என்னுஞ் சங்கைக்கு மாயையைப் பிரயோகிக்கும் புருஷனது சாக்ஷாத்கார பரியந்தந்தான் இந்த மாயைக்கு ஆச்சரிய காரணத்தன்மை உளது. பின்பு இன்றும் எனக் கூறுகின்றார்.

உலகர் முன்னிலை யவன்றனை யுணர்வுறு மட்டு
மிலகு நெஞ்சிடை வியப்புமேற் பொய்யென விறுமா
லுலக மெய்யெனும் வாதிபாற் சோத்திய மொளிரு
மிலகு ருதிவ ணிருத்தலின் மாயையவ் வியல்பாய். 65

(ப—ரை) உலகர் = ஜனங்கள், அவன்றனை = மாயாவியை, முன்னிலை உணர்வுறு மட்டும்=சாக்ஷாத்தாக அறிகிற பரியந்தம், நெஞ்சிடை வியப்பு இலகும்=அவர்கள் மனதில் ஆச்சரியம் தோன்றும் நிற்கும், மேல்பொய் என இறும்=அறிந்த பின்பு இது மித்தையாம்

என வினுசமாகும், [மேலும் சகத்தைச் சத்தியமாகக்கூறும் நையா யிகன் முதலியோரைக் குறித்து இப்படிப்பட்ட சங்கைகள் செய்யத் தக்கனவாம். சகத்தைப் பொய்யென்று கூறும் வேதாந்தியாகிய மாயா வாதியைக் குறித்துச் செய்யத்தக்கன அன்ருமெனக் கூறுகின்ருர்] உலகம் மெய் எனும் வாதிபால் = பிரபஞ்சத்தைச் சத்தியமென்று கூறுகின்ற வாதிகளிடத்தில், சோத்தியம் ஒளிரும் = வினுக்கள் விளங்காநின்றன, (எழும்புகின்றன என்பது பொருள்) இவண் இல குருது = மாயையில் விளங்காது (வினவத்தக்கதன்று என்பது பொருள்), மாயை அவ்வியல்பாய் இருத்தலின் = மாயையானது சங்கை வடிவமாயிருத்தலின் எ—று.

ஆல் — அசை. 65

(அ—கை)

மாயாவாதியைக் குறித்துச் சங்கை செய்யின் அதிவியாப்தியா மெனக் கூறுகின்ருர்.

சோத்திய மீதுமுண் டேலுறு
சோத்தியஞ் சோத்திய மேற்பெறுமால்
சோத்திய மாற்றுவ தல்லது
மீண்டெதிர்ச் சோத்திய மாற்றவொணு
சோத்திய ரூபம தோடு
வியப்பே தொக்குடை மாயையிதன்
சோத்திய மோய்வழி நேடுக
முயல்வாற் றுகளறு மதியுடையோர். 66

(பு—ரை) உறு சோத்திய மீதும் சோத்தியம் உண்டேல் = பொருந்தாநின்ற வினுவின்மீதும் வினுஉண்டாகுமேல், சோத்தியமேல் சோத்தியம் பெறும் = உனது வினுவின் மீது எனது வினு உண்டாகும், [அப்படியானுல் என்ன செய்யத் தக்கதெனிற் கூறுகின்ருர்] ஆகையால், சோத்தியம் மாற்றுவது = வினு தள்ளத்தக்கதாம், அல்லது = அங்ஙன மன்றி, மீண்டு எதிர்ச்சோத்தியம் ஆற்ற ஒணு = மறுபடியும் விரோத சங்கை செய்யத்தக்கதன்று, [கூறிய பொருளினையே விஸ்தரிக்கின்ருர்] சோத்திய ரூபமதோடு = சங்கை வடிவமதாயும், வியப்பே தொக்கு உடை = ஆச்சரிய வடிவமாயும் உள்ள, மாயை இதன் = இந்த மாயை

யின், சோத்தியம் ஒய் வழி = சங்கை நீங்கு மார்க்கத்தை, தூகள் அறுமதியுடையோர் = குற்றமற்ற புத்தியையுடையவர்கள், முயல்வால் = பிரயத்தனத்தால், நேடுக = தேடுவாராக எ—று.

ஆல், ஏ — அசை. ஓடு — உம்மைப்பொருளது. 66

(அ—கை)

மாயைத்தன்மையின் நிச்சயமுளதேல் அம்மாயையின் பரிகாரத்தைத் தேடுதல் உசிதமாம். அந்த நிச்சயமே இதுவரையும் சித்திக்கவில்லையென வினவுகின்றான்.

மாயையி னீர்மை மதிப்பது
வேதகை யென்னின் மதித்திடுவாய்
மாயையி லக்கண ஞாலவி
ளக்கம தென்று மதிக்கொளுவாய்
மாயையி தென்ன வுரைப்பரி
தாகிவ யங்கும் வெளிப்படவே
மாயையி தென்றிந் திரசா
லாதியின் வையமி நாட்புகலும். 67

(ப—ரை) மாயையின் நீர்மை மதிப்பதுவே தகை என்னின் = மாயையின் இயல்பை நிச்சயிப்பதுவே யோக்கியமாமென்று சொல்லில், [மாயைக்கு லக்ஷணமிருத்தலின் மாயையின் சுபாவம் நிச்சயிக்கத் தக்கதெனக்கூறுகின்றார்] மதித்திடுவாய் = நிச்சயிப்பாய், [மாயைக்கு லக்ஷணம் யாதெனிற் கூறுகின்றார்] ஞால விளக்கமது மாயை இலக்கணம் என்று = உலகில் பிரசித்தமான இந்திர ஜால வடிவ மாயைக்கு யாது இலக்கணம் அதுவேயாமென்று, மதி கொளுவாய் = அறிவாய், [அதற்குத்தான் யாதிலக்கணமெனிற் கூறுகின்றார்] மாயையிது என்ன உரைப்ப அரிதாகி = மாயையிப்படிப்பட்டதென்று சொல்லுதற்கரியதாகி, வெளிப்படவே வயங்கும் = ஸ்பஷ்டமாய் விளங்குவது, மாயை இது வென்று = மாயையாமென்று, இந்திரசாலாதியில் = இந்திரசாலம் முதலியவற்றில், வையம் = உலகத்தார், இநாள் புகலும் = இப்போதும் சொல்லுவார்கள் எ—று. 67

(அ—கை)

திருஷ்டாந்தத்தில் சித்தித்த லக்ஷணத்தைத் தாஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

ஈதுல கும்வெளி யாகியி லங்குமி தென்ன வுரைப்பரிதா
மாதலி ஞன்மா யாமய முலகென் றறிவா யோரமறத்
தீதிதி னிகிலபண் டிதரெனு மறிஞர் செப்ப முயன்றிடினே
வோதுறு மன்னே ருடைமுன் போர்புடை யொளிர்தரு
மஞ்ஞானம். 68

(ப—ரை) ஈது உலகும் = இந்தச் சகத்தும், வெளியாகி இலங்கும் = ஸ்பஷ்டமாய் விளங்குவதாய், இது என்ன உரைப் பரிதாம் = இப்படிப்பட்டதென்று சொல்லுதற்கு அயோக்கியமாம், ஆதலினுல் = அக்காரணத்தினுல், உலகு மாயாமயம் என்று = பிர பஞ்சம் மாயா காரியமென்று, ஓரம் அற அறிவாய் = பக்ஷபாதம் இன்றி உணருவாய், [உலகை நிரூபித்தல் அசக்கியமாமென்பது எப்படியென்னுஞ் சங்கைக்கு அதனைத் தெரிவிக்கின்ருர்] தீது இதின் = தோஷத்தோடு கூடிய இவ்வுலகை, நிகில பண்டிதரெனும் அறிஞர் = சகல வித்துவான்களாகிய புத்திமான்கள், செப்ப முயன்றிடினே = கூறத் தொடங்கிடினே, ஓதுறும் அன்னோ ருடைய = சொல்லாநின்ற அவ்வித்துவான்களுடைய, முன்பு = எதிரே, ஓர்புடை = சிலகோடிகளில், அஞ்ஞானம் ஒளிர் தரும் = அஞ்ஞானம் விளங்குகின்றது எ—று. 68

(அ—கை)

ஜகத்தினை நிரூபணஞ் செய்யமுடியாமையையே திருஷ்டாந் தத்தால் வெளிப்படுத்துகின்ருர்.

தேகமொ டிந்திரி யாதிய வீரிய சென்னி யமானவெனே
வாகம தற்கறி வானதெவ் வாறெனி னதனுத் தரமென்னே
பாகுறு வீரிய வியல்பிது வெனினப் பண்பறி திறநீயென்
போகுத லாற்பய னற்றது டன்பா டெதிர்மறை யும்போமே.
69

(ப—ரை) தேகம் ஒடு இந்திரியாதிய = சரீரம் இந்திரியம் முதலிய பதார்த்தங்கள், என் வீரிய சென்னியம் ஆன = எப்படி மாதா பிதாக்களின் சுக்கில சுரோணிதத்தால் உற்பத்தியாயின, ஆகமதற்கு = தேகத்திற்கு, எவ்வாறு அறிவு ஆனது = எப்படி

சைதன்னியமுண்டாயிற்று. எனின் = என்று வினவின், அதன் உத்தரமென் = அவ்வினவின் மறுமொழி யாது, [ஜகத்தினுற்பத்தி சுபாவமென்னும் சுபாவவாதி வினவுகின்ருன்] பாகு உறு வீரிய இயல்பு இது எனின் = பரிபக்குவமடைந்த வீரியத்திற்கு சரீரத்தை உண்டுபண்ணுதல் சுபாவமாம் என்று சொல்லின், [சித்தாந்தி கேட்கிருர்] அப்பண்பு அறிதிறம் நீஎன் = வீரியத்திற்குள்ள அப்படிப் பட்ட சுபாவத்தையறியும் சாமர்த்தியம் உனக்கு எப்படி, [அன்வய வெதிரேகங்களாலறிகிறேன் என்னுஞ் சங்கைக்கு வியாப்தியின்மை யினுல் அங்ஙனமன்றெனக் கூறுகின்ருர்] அது = அந்த வீரிய மானது, பயன் அற்றுப் போகுதலால் = மலடியினிடத்தில் பிரயோ ஜனமின்றி நாசமாவதால், உடன்பாடு எதிர்மறையும் போம் = அன் வயவெதிரேகமும் பங்கமாம் எ—று.

ஓ, ஓ, ஏ—அசை.

அன்வயமாவது யாண்டு யாண்டு வீரியம் ஆண்டு ஆண்டு தேகாதி. வெதிரேகமாவது யாண்டு வீரியமின்ருே ஆண்டு தேகாதி யின்ரும், மலடியினிடத்தில் வீரியம் விடப்பட்டும் தேகமுண்டாகாமை யால் அன்வய வியாப்திக்குப் பங்கமாம். வீரியமில்லாமலே திருஷ்டத்துய்மனன் திரௌபதி முதலானவர்கள் அக்கினி முதலிய வற்றி விருந்து உண்டாயிருக்கின்றபடியால் வியதிரேக வியாப் திக்குப் பங்கமாம். 69

(அ—கை)

இப்படி மீண்டும் மீண்டும் வினவும்போது யாதொன்றையு மறியேன் என்றே உத்தரம் கொடுக்கத் தக்கதென சித்தித்ததெனக் கூறுகின்ருர்.

நின்றிடு மிதனியல் பாகிய
தெவளவு நிகழ்தர வறிகில்லே
னென்றிட லேமுடி வின்கணி
னக்குறை விடம தெனுஞ்சரணு
நன்றறி வாளர்க ளென்றுரை
பெரியோர் நாட்டிய வதனுலே
யொன்றிய விதனியல் பிந்திர
சாலமென் ருேதுறு வார்மிகவே. 70

(ப—ரை) நின்றிடும் இதன் இயல்பாகியது=கருமவசத்தால் நிற்கின்ற இச்சரீரத்தின் சுபாவத்தை, எவ்வளவும் நிகழ்தர அறிகில் லேன் = கொஞ்சமும் விளங்கும்படி அறியேன், என்றிடலே=என்று சொல்லுதலே, முடிவின்கண் நினக்கு உறைவிடமது எனும் சரணும்= அந்தியத்தில் உனக்கு ஆசிரயமாகிய அடைக்கலஸ்தானமாம், [கூறிய அநிர்வசநீயத்தன்மையில் பெரியோர்களின் சம்மதியைக் காண்பிக் கின்றார்] நன்றறிவாளர்கள் என்று உரை பெரியோர்=நன்மையை அறியும் புத்தியுடையவர்களென்று சொல்லப்பட்ட மகான்கள், நாட்டிய அதனால்= (அநிர்வசநீயமாக) நிலைநிறுத்திய அக்காரணத்தால், ஒன் றிய இதனியல்பு=பொருந்தாநின்ற இச்சரீரத்தின் சுபாவத்தை, மிக இந்திரசாலம் என்று ஓதுறுவார் =பெரிய இந்திரசாலமென்று சொல்லு வார்கள் எ—று. ஏ, ஏ — ஈற்றசை. 70

(அ—கை)

கூறிய இந்திரசாலத்தையே விஸ்தரிக்கின்றார்.

கர்ப்பமவ சித்திடு வீரியமறியுங் கைதலே பதமேவும்
பற்பல வங்குரமாமுறை சிசுவெவ் வனசரை பலபிணியா
முற்படல்கண்டிடு முண்டிடும் வினவுறு மோக்கும் வரும்
[போகும்
அற்புத மிதனினும் வேறுறு விந்திரசாலமெ னும்போலும்
71

(ப—ரை) கர்ப்பம் வசித்திடு வீரியம் = மாதாவின் கர்ப்பத்தில் வசிக்கும் வீரியமானது, அறியும் =உணருகின்றது, மேவும் கைதலே பதம்=உண்டாகாநின்ற அஸ்தம் சிரசுபாதமாகிய, பற்பல அங்கு ரமாம் = நாநாவித முளைகளோடு கூடியதாம், முறை=கிரமமாக, சிசு எவ்வனம்சரைபலபிணிமுற்படலாம் = பாலியம்யௌவனம் வயோதிகம் நாநாவியாதிகள் என்னும் இவைகளால் சூழப்பட்டதாகும், கண்டிடும்=கண்ணால் உருவத்தைப் பார்க்கின்றது, உண்டிடும் =வா யால்=அன்னத்தைப் புசிக்கின்றது, வினவுறும்=செவியால் ஒலியைக் கேட்கின்றது, மோக்கும் = மூக்கால் கந்தத்தை முகருகின்றது, வரும்=காலால் வருகின்றது, போகும்=பின்பு போகின்றது, அற்புதம் இதனினும்=ஆச்சரியமாகிய இவ்விந்திரசாலத்தைப் பார்க்கிலும், வேறு உறு இந்திரசாலம் என் ஆம் = வேறாகப் பொருந்திய இந்திர

சாலம் யாதுளது (இதுவே மகத்தான இந்திரசாலமாம் என்பது கருத்து) எ—று. போலும் — அசை 71

(அ—கை)

கேவலம் தேகத்திற்கே அநிர்வசனீயத் தன்மையின்றும். மற்றூ ஆலவிருக்ஷம் முதலியவைகளுக்கு மநிர்வசனீயத் தன்மையுள தெனக் கூறுகின்றூர்.

உடலது போல்வட விதையின
திடையு மோர்ந்துற நோக்குதியால்
வடவிதை தானெங் கேமர
மெங்கே மாயையி தென்றுணர்வாய்
தடமுறு மூகத் தபிமா
னம்புனே தார்க்கிகர் முதலோரைத்
திடமுறு மரிடமி சிரன்முத
லோர்கண் டனையுழி தெண்டித்தார். 72

(ப—ரை) உடலது போல்=தேகத்தைப் போல, வடவிதையின திடையும்=ஆலம் விதையிலும், ஓர்ந்து = விசாரித்து, உறநோக்குதி = நன்ருகப் பார்ப்பாய், வடவிதை எங்கே = ஆலம்விதை எங்கே, மரம் எங்கே=விருக்ஷம் எங்கே, எங்கேயென்னுஞ்சொல் அத்தியந்தம் வைலக்ஷண்ணியத் தன்மையை உணர்த்துவது (அதாவது அதி நுட்பமான வட பீஜத்தினின்றும் அதிமகத்தான வடவிருக்ஷமுண்டாவதால்), இதுமாயை என்று உணர்வாய்=வடவிருக்ஷம் அநிர்வசநீயமென்றறிவாய், (அற்றேல் எம்மால் நிருபணஞ் செய்யமுடியாதாயினும் உதயனுசாரியர் முதலியோரால் நிருபணஞ் செய்யப்படுகின்றது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] தடம் உறும் ஊகத்து = விசாலம் பொருந்திய யுத்தியில், (அதாவது நிருபணஞ் செய்வதில்) அபிமானம் புனே தார்க்கிகர் முதலோரை=அபிமானத்தைச் செய்கின்ற நையாயிகர் முதலியோரை, திடம் உறும் அரிடமிசிரன் முதலோர்=வலிமை பொருந்திய ஹர்ஷ மிசிராசாரியர் முதலானேர், கண்டனையுழி தெண்டித்தார் = கண்டன கண்டகாத்தியம் முதலிய கிரந்தங்களில் கண்டித்தார்கள் எ—று. ஆல், தான் — அசை. 72

(அ—கை)

சகத்தின் அநிர்வசனீயத் தன்மையில் வேதாந்த சம்பிரதாயத் திணையுடைய பெரியோரது வாக்கியத்தைச் சம்வாதஞ் செய்கின்றார்.

எண்ண வொணுப்பொரு ளவைகடருக்கத்
திடையி லணைக்கவொணு
வெண்ண வொணுமன தாலுமிவுலகத்
தியல்வடி வதுவன்றேவெண்ண
வொணுவியல் வல்லபகாரண
மென்றறி மாயையதே
யெண்ண வொணுத்துயி
றனினக்காரண மெய்துறுமறிதரவே. 73

(ப—ரை) எண்ண ஒணுப் பொருளவைகள் = சிந்திக்கத் தகாத பதார்த்தங்களை, தருக்கத்திடையில் அணைக்க ஒணு = தருக்கங்களில் சேர்க்கலாகாது, (அசிந்தியவஸ்து அதர்க்கியமாமென்பது கருத்து) இவ்வுலகத்து இயல் வடிவது = இந்தச் சகத்தின் கண் பொருந்திய ஆகார விசேஷம், மனதாலும் எண்ண ஒணு அன்றே = மனதினுலும் நினைக்கத் தகாததல்லவா, [இங்ஙனம் உலகின் வடிவம் நினைக்கத்தகாததாயிருக்குக, மாயையில் வந்ததென்னையெனிற் கூறுகின்றார்] எண்ண ஒணு இயல் வல்லப காரணம் = சிந்திக்கத் தகாத உலக ரசனையின் சாமர்த்தியமுடைய யாதொரு காரணமுண்டோ அதுவே, மாயை என்று அறி = மாயை யாமென்று அறிவாய், [அப்படியானுல் இப்படிப்பட்ட காரணம் எங்கே காணப்பட்டதெனிற் கூறுகின்றார்] துயில்தனின் = சுழுத்திய வஸ்தையில், எண்ண ஒணு அக்காரணம் = நினைக்கத்தகாத அம்மாயா வடிவ பீஜம், அறிதர எய்துறும் = அறியும்படியாகப் பொருந்து கின்றது, (அனுபவிக்கப்படுகின்றது என்பது பொருள்) எ—று.

மாயையது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. 73

ஏ—அசை.

(அ—கை)

அம்மாயைக்கு சகத்தின் காரணத் தன்மையெப்படியெனிற் கூறுகின்றார்.

சாக்கிர சொப்பன வுலகதி
　　லீனந் தருவிதை யிடைபோலாந்
தாக்குறு மதுகொடு முழுதுல
　　கதின்வா தனையவ ணிலைமேவும்
வீக்குறு புத்தியின் வாதனை
　　களிலே விம்பித் திடுஞானம்
போக்குறு புயல்விண் ணெனமிளி
　　ராச்சிற் போலிகொ ளப்படுமால். 74

(ப—ரை) விதையிடை தருபோல் = பீஜத்தில் விருக்ஷம் லயத்தையடைவது போல், சாக்கிர சொப்பன உலகு அதில் லீனமாம் = நனுக்கனுப் பிரபஞ்சங்கள் மாயையில் லயமாயிருக்கின்றன. [அதனுலென்னை யெனிற் கூறுகின்றார்] தாக்குறும் அது கொடு = வலுவுள்ள அக்காரணத்தால், (அதாவது மாயையானது சகத்தின் காரணமாயிருத்தலால்) முழுதுஉலகதின்வாதனை = அசேஷ சகத்தின் வாசனைகள், அவண் நிலைமேவும் = அந்த மாயையில் நிலைபெற்றிருக்கின்றன, [அதனுற்ருன் என்னையெனிற் கூறுகின்ருர்] வீக்குறு புத்தியின் வாதனைகளில் = கனமான அந்தக்கரணத்திலுள்ள வாசனைகளில், ஞானம் விம்பித்திடும் = சைதன்னியம் பிரதிபிம்பிக் கின்றது, [அற்றேல் வாசனைகளில் பிரதிபிம்பமிருக்கு மேல் எதனுல் அனுபவிக்கப்படுகிறதில்லை என்னுஞ் சங்கைக்கு ஸ்பஷ்டம் (வெளிப் படை) இன்மையாலெனக் கூறுகின்ருர்] போக்கு உறுபுயல்விண் என = சலனமுடைய மேகாகாசம்போல், மிளிராச்சிற் போலி = அஸ் பஷ்ட (வெளிப்படையின்றிய) சிதாபாசன், கொளப்படும் = அனு மானத்தாற் கிரகிக்கப்படும் எ—று. ஏ, ஆல்—அசை.

போலாம் என்பதிலுள்ள ஆம் பிரித்துக் கூட்டப்பட்டது. 74

(அ—கை)

அற்றேல் மேகத்தினம்ஸவடிவஜலம் வெளிப்படையின்றிய ஆகாசப் பிரதிபிம்பமுடையதேனும் அதன் சாதியாயுள்ள கடசலம் வெளிப்படையான ஆகாசப் பிரதிபிம்பமுடையதாயிருத்தலினுல் மேகா காச அனுமானம்பொருந்தும். ஈண்டு அப்படிப்பட்ட திருஷ்டாந்தமின் மையினுல் எப்படி அனுமானத்தினுற்பத்தியாமென்னுஞ் சங்கைக்கு ஈண்டும் அப்படிப்பட்ட திருஷ்டாந்தத்தைச் சம்பாதிக்கும் பொருட்டுக் கூறுகின்ருர்.

சித்துச் சாயையை யார்விதை யன்னது தீயுரு வாயெழுமாற்
புத்தியி லேசிற் சாயைமி ளிர்ந்து பொலிந்திடு மாயையதே
மித்தைய தாச்சீ வேசரை யாக்கு மெனச்சொலும் வேதமெ
[லாம்
தத்துறு புயல்விண் சலவிண் போலவர் தழுவியி ருந்திடு
[வார். 75

(ப—ரை) சித்துச்சாயையை ஆர் அன்னதுவிதை=சிதாபாச விசிஷ்ட அந்த அஞ்ஞானமாகிய பீஜமே, தீஉருவாய் எழும் = புத்தி ரூபமாய்ப்பரிணமிக்கின்றது, (ஆகையால்) புத்தியிலே சிற்சாயை= அந்தக்கரணத்தில் சிதாபாசன், மிளிர்ந்து பொலிந்திடும்=விஸ்பஷ்டமாய் விளங்கும், (ஈண்டு இவ்வனுமானம் சூசிப்பிக்கப்பட்டது, விவாத விஷயமான புத்திவாசனைகள் சேதனத்தின் பிரதிபிம்பமுடையன வாயிருக்கின்றன, புத்தியினவஸ்தா விசேஷமாவதால், புத்தி விருத்திகள் போன்று) [இங்ஙனம் சீவேசுரர்களுக்குள்ள சுருதியால் சொல்லப்பட்டதும் உபபாதனஞ் செய்யப்பட்டதும் ஆகிய மாயிகத் தன்மையையுபசம்மாரஞ் செய்கின்ருர்] மாயையே = மாயையே, மித்தையதா சீவேசுரரை ஆக்கும் என = ஆபாச வடிவமாக சீவேசுரர்களைச் செய்யும் என்று, வேதமெலாம் சொலும்=சுருதிகளனைத்தும் கூறும், [அற்றேல் சீவேசுரர்களுக்கு மாயிகத்தன்மை சமானமாமேல் இவன் சீவன் இவர் ஈசுரர் என்னும் பேதத்தின் சித்தியெப்படி என்னுஞ் சங்கைக்கு அஸ்பஷ்ட ஸ்பஷ்ட உபாதிகளையுடையதாந் தன்மையால் மேக ஆகாச ஜல ஆகாசங்களுக்குப் போல அவர்களுக்குப் பேதம் சித்தியாமெனக் கூறுகின்ருர்] தத்துறு புயல்விண் சலவிண் போல = சலனம் பொருந்திய மேக ஆகாசமும் சல ஆகாசமும் போன்று, அவர்=சீவேசுரர்கள், தழுவி இருந்திடுவார் = பொருந்தியுள்ளார்கள் எ—று.

மாயையதே என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

ஆல், ஏ—அசை.

ஜீவேசுவரர்கள் மாயிகமாம். இங்கே மாயிக மென்னுஞ் சொல்லிற்கு "ஜீவேசுரர் மாயையின் காரியம்" என்பது பொருளன்று; ஆனல் "மாயையினது சித்தியின் அதீனமாய்த் தம் சித்தியையுடையனவாயிருக்கின்றனர்" என்பது பொருள். ஏனெனின் ஜீவன், ஈசுவரன், சுத்த சேதனம், அவித்தை, அவித்தைக்கும் சுத்த சேதனத்

திற்குமுள்ள சம்பந்தம், இவ்வைந்திற்கும் ஒன்றற்கொன்றுள்ள பேதம் என்னும் இந்தஆறு பதார்த்தங்களும் சொரூபமாக அநாதியாம் என்னும் வார்த்திககாரராற் சொல்லப்பட்ட சித்தாந்தத்திற்கு விரோதப்படுதலால், "மாயை ஜீவேசுவரரை ஆபாசமாகச் செய்கின்றது" என்னும் சுருதியிலுள்ள செய்கின்றது என்னும் பதத்திற்கும் மாயை தனது சித்தியின் அதீனமாய் ஜீவேசுவரர்களின் சித்தியைக் காட்டுகின்றது என்பதே பொருள். 75

(அ—கை)

ஈசுரனுக்கு மேகா காச சமானத் தன்மையை ஸ்பஷ்டஞ் செய்கின்றார்.

மேகநி கர்த்துறு மாயைய மேக மிடைந்திடு பனிநீர்போ
லாகிடு மதிவா தனைபனி நீர்விண் ணெனவாஞ் சிற்சாயை
மோகமு றாச்சின் னிழன்மா யோன்மறை மொழியும கேச [னென
வேகனொ ருங்குண ரந்தரி யாமி யிவைக்கவனே நிபமாம். 76

(ப—ரை) மேகம் நிகர்த்து மாயை உறும் = மேகத்துக்குச் சமானமாக மாயையிருக்கின்றது, அம்மேகம் மிடைந்திடு பனிநீர் போல் = அம்மேகத்திலுள்ள குளிர்ந்த ஜலம்போன்று, மதிவர்தனை ஆகிடும் = புத்திவாசனையுள்ளது, பனிநீர்விண் என சிற்சாயை ஆம் = குளிர்ந்தசல ஆகாசம்போன்று சிதாபாசன் உளன், [மாயையிலுள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுரத்தன்மையில் யாது பிரமாணம் என்னுஞ் சங்கைக்குச் சுருதியே பிரமாணமாமெனக் கூறுகின்றார்] மோகம் உறா = மோகத்தையடையாத, (அல்லது மாயையின் அதீனமான) சின் நிழல் = சிதாபாசனை, மாயோன் மகேசன்என = மாயையையுடையவன் மகேஸ்வரனென்று, மறைமொழியும் = வேதம் கூறுகின்றது, [மாயாப் பிரதிபிம்பனுக்கு ஈசுரத்தன்மை மாத்திரம் கூறப்பட்டதன்று மற்றோ அந்தரியாமித்தன்மை முதலிய தரும சமூகமும் கூறப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றார்] ஏகன் = அத்துவிதீயன், ஒருங்கு உணர் = சருவத்தையுமறியும், அந்தரியாமி = உள்ளிருந்து பிரேரணை செய்பவன், இவைக்கு = இவ்வுலகிற்கு, அவனே நிபமாம் = அவ்வீசுரனே காரணன் ஆம் எ—று. 76

(அ—கை)

அற்றேல் புத்திவாசனையில் உள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுரத் தன்மை முதலியது எப்படிச் சுருதியாற் சித்தித்தது என்னுஞ் சங்கைக்கு அதனையுபபாதனஞ்செய்கின்ற சுருதியைத் தெரிவிக்கின்ருர்.

துயிலுறு மாநந்த மயனை
யாரம் பித்துச் சுருதிதனி
னியலிவ னேசரு வேசனெ
னச்சொலு மிவன்மறை புகலீச
னயமுறு முழுதுணர் வாதிக
ளவனண் ணுவென நவிலவொணு
தயைமறை பொருளய மலமா
யையிலே தங்குமெலா மதனல். 77

(ப—ரை) துயிலுறும் ஆனந்தமயனை ஆரம்பித்து=சுழுத்தியிலுள்ள ஆனந்தமய ஆன்மாவையுபக்கிரமஞ்செய்து, சுருதி=உபநிடதமானது, தனின் இயல்=தனித்த சுபாவமுடைய, இவனே சருவேசன் எனச்சொலும் = இவ்வானந்தமய ஆன்மாவே சருவேசுரனுமென்று கூறும், இவன் மறைபுகல் ஈசன் =புத்திவாசனையிலுள்ள இப்பிரதிபிம்பமே சுருதியினுற் சொல்லப்பட்ட ஈசுரனும், ("சுழுத்தி அவஸ்தையையுடையவன் ஏகீபூதன் பிரஞ்ஞானகனன்" என்பது முதலிய சுருதி புத்திவாசனையிலுள்ள பிரதிவிம்பவடிவ ஆனந்தமயனுக்கு ஈசுரத்தன்மை முதலியவற்றைப் பிரதிபாதிக்கின்றதென்பது பொருள்) [அப்படியானுல் ஆனந்தமயனுக்கு சருவஞ்ஞத்தன்மை முதலியது அனுபவ விருத்தமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] நயம் உறு முழுதுஉணர்வு ஆதிகள் =சிரேஷ்டம் பொருந்திய சருவஞ்ஞத்தன்மை முதலியவைகள், அவன் நண்ணுஎன =ஆனந்தமயனுக்குப் பொருந்தாவென்று, நவிலவொணு=கூறத்தகாது, [எதனுலெனிற் கூறுகின்ருர்] தயைமறை பொருள் =மாதாவைப்போன்று கருணையுள்ள சுருதியின் அருத்தம், அயம்அல=தோஷமுடையதன்று, [இதனுலும் விவாதஞ் செய்யத்தக்கதன்றெனக் கூறுகின்ருர்] மாயையிலே எலாம் தங்கு மதனல்=மாயையில் சகலமும் பொருந்துதலின் எ—று.

சங்கை:— இங்கே ஆனந்தமயனுக்கு ஈசுவரத்தன்மை கூறுதல் அசங்கதமாம். ஏனெனின், ஜாக்கிரசொப்பனத்தில் ஸ்தூலாவஸ்தையோடு கூடிய பிரதிபிம்பசகித அந்தக்கரணத்தை விஞ்ஞானமயமென்பர். விஞ்ஞானமயஜீவனே சுழுத்தி காலத்தில் சூக்ஷ்மவடிவமாக ஒடுங்கி ஆனந்தமயம் எனப்படுகின்றது. அதை ஈசுரனென்று கொள்ளின், ஜாக்கிரசொப்பனங்களில் அந்தக்கரணமொடுங்கிய அவஸ்தையாகிய ஆனந்தமயன் இல்லாமையால் ஈசுவரனும் இல்லாததாக வேண்டும். அநேக புருஷர்களது சுழுத்தியில் அநேக ஈசுவரர்கள் உண்டாகவேண்டும். ஜீவனுக்குப் பஞ்சகோசத்தை சகல நூலாசிரியரும் கூறியிருக்கின்றனர். பஞ்சகோச விவேகத்தில் வித்தியாரணிய சுவாமிகள் தாமும் ஜீவனுக்குப் பஞ்சகோசம் கூறியிருக்கின்றனர். ஆனந்தமயனே ஈசுரனென்று அங்கீகரித்தால் சகல வாக்கியங்களும் பொருந்தாதனவாம். ஆகையால் ஆனந்தமயனுக்கு ஈசுவரத்துவம் சம்பவியாது.

சமாதானம்:— மகாவாக்கிய விசாரத்தால் தத்துவஞானம் உண்டாகாத மந்தபுத்தியுடைய புருஷர்கள் பிரணவசிந்தனஞ் செய்ய வேண்டும். அதனியல்பு மாண்டூக்கிய உபநிஷத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. அங்கே ஆனந்தமயனுக்குச் சர்வஞ்ஞத்துவம் சர்வேசுவரத்துவம் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த மாண்டூக்கிய வசனத்திற்கு ஜீவேசுவரர்களது அபேதசிந்தனத்தில் தாற்பரியமிருத்தல்போல வித்தியாரணிய சுவாமிகளுக்கும் ஜீவேசுவரர்களது அபேத சிந்தனத்தில் தாற்பரியமாம். ஆனந்தமயனுக்கு ஈசுவரத்துவம் சொல்லுதல் கருத்தாயின் பஞ்சதசியின்பிரஹ்மானந்தமென்னும்11வது பிரகரணத்தில் "உருகுறும் நெய்யென" என்னும் 30 வது செய்யுளில் "ஜீவனது அவஸ்தாவிசேஷம் ஆனந்தமயகோசமாம்" என்று எழுதப்பட்டிருக்கின்றது. அதற்கு விரோதமாகுமாகையால் வித்தியாரணிய சுவாமிகளுக்கு ஆனந்தமயனுக்கு ஈசுவரத்துவம் சொல்லுதல் கருத்தன்று. ஆனால் மந்தபுத்தியுடைய புருஷர்களுக்கு ஜீவேசுவரர்களது அபேதத்தன்மையைச் சிந்திக்கும்பொருட்டு ஆனந்தமயனிடத்தில் ஈசுவரத்துவம் ஆரோபிக்கப்பட்டிருக்கின்றது.



(அ—கை)

அப்படியானால் அனுகூலயுத்தியில்லாதபோது சுருதியும் கல் மிதக்கின்றது என்னும் வாக்கியம்போன்று அருத்தவாதமாம் என்னுஞ்

சங்கைக்கு சுருதியில் பிரமாணத்தன்மை சித்திக்கும்பொருட்டு ஆனந்த மயனுக்கு சருவேசுரத்தன்மை முதலியதையுபபாதனஞ் செய்கின்றார்.

இன்னவ னாக்கிய தாமுல
கினைவே றுக்கவெ வர்க்குமரி
தன்னத னாற்சரு வேசனெ
னச்சொலு மாரண மங்ககில
மன்னுயிர் மதிகளின் வாசனை
செறியு மவற்றா லகிலமுமே
மின்னுற வுணர்தலி னான்முழு
துணர்வுள னென்றும்வி ளம்புறுமே. 78

(ப—ரை) இன்னவன் = இவ்வானந்தமயன், ஆக்கியதாம் உலகினை = உண்டுபண்ணின சாக்கிர முதலியப் பிரபஞ்சத்தினை, எவர்க்கும் = ஒருவருக்கும், வேறுக்கஅரிது = மாறுபடுத்த ஆற்றலின்றாம், அன்னதனால் = அக்காரணத்தால், சருவேசன் என ஆரணம் சொலும் = சருவேசுரனென்று சுருதி கூறுகின்றது. [இப்போது சர்வஞ்ஞத்தன்மையை யுபபாதனஞ் செய்கின்றார்] அங்கு = (காரணமாயுள்ளதும் சுழுத்திகாலத்திலுள்ளதுமாகிய) அவ்அஞ்ஞானத்தில், அகிலமன் உயிர்மதிகளின் = காரியமாயுள்ள சருவப் பிராணி புத்திகளின், வாசனை செறியும் = வாசனைகள் நிறைந்திருக்கின்றன, அவற்றால் = அந்த வாசனைகளினால், அகிலமும் மின் உற உணர்தலினால் = இந்தச் சகல சகத்தையும் தெளிவாயறிகின்றபடியால், முழுது உணர்வு உளன் என்று விளம்புறும் = சருவஞ்ஞத்தன்மையுடையனென்று சொல்லப் படும் எ—று.

ஏ, ஏ—அசை.

அதாவது சருவப்பிராணி புத்தி வாசனைகளினால் சகல சகத்தும் விஷயம் பண்ணப்பட்டுளது. சகல புத்தி வாசனைகளையுடைய அஞ்ஞானத்தையுபாதியாயுடையதனால் சருவஞ்ஞனென்று சொல்லப்படுகின்றானென்பது பொருள்.

நிந்தையையாவது துதியையாவது அறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாதமெனப்படும். அவ்வர்த்தவாதம் பூதார்த்தவாதம் அபூதார்த்தவாதம் என இரண்டு வகையாம்.

"வச்சிரத்தோடு கூடிய கையையுடையவன் இந்திரன்" என்று இந்திரனது துதியையறிவிக்கும் வாக்கியம் யதார்த்த அர்த்தத்தின் வாசகமாயிருத்தலால் பூதார்த்தவாதமாம்.

"கல் மிதக்கின்றது" "இந்த யக்ஞஸ்தம்பம் சூரியன்" என்னும் இவை முதலிய வாக்கியங்கள் யதார்த்தமல்லாத அர்த்தத்தினை அறிவிப்பனவாயிருத்தலால் அபூதார்த்தவாதமாம்.

அதுபோல "இந்தப் புருஷன் பாபி" என்று நிந்தையையறிவிக்கும் வாக்கியம் பூதார்த்தவாதமாம்.

"இந்தப் புருஷன் பிசாசு" என்று புருஷனது நிந்தையையறிவிக்கும் வாக்கியம் அபூதார்த்தவாதமாம்.

சிலவிடங்களில் குணவாதம் அநுவாதம் பூதவாதம் என்று அர்த்தவாதம் மூன்று விதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அது மத பேதத்தாலாம். 78

(அ—கை)

சருவஞ்ஞத்தன்மையிருக்குமேல் அது ஏன் அனுபவிக்கப்படுகிறதில்லையென்னுஞ் சங்கைக்கு சருவஞ்ஞத்தன்மைக்கு நிமித்தமாயுள்ள வாசனைகள் பரோக்ஷமாயிருத்தலால் அனுபவமின்றாமெனக் கூறுகின்றார்.

வாதனை காட்சிய லாமையின்
முழுதுணர் வுடைமை மதிக்கவொணா
போதம னைத்தினு மன்னது
காணுபு வாதனை புகலிடுவாய்
மேதைம யப்பிர தானமெ
னுங்கோ சங்களின் வேற்றினுமே
யாதியு ணின்று நடாத்துவ
தாதலி னுமந் தரியாமி. 79

(ப—ரை) வாதனை காட்சியலாமையின் = வாசனை பிரத்தியக்ஷமில்லாமையினால், முழுது உணர்வு உடைமை = சருவஞ்ஞத்தன்மையை, மதிக்கவொணாது = அறியமுடியாது, [அப்படியானால் சருவஞ்ஞத்தன்மையையெப்படியறிவது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] போதம்

அனைத்திலும் = சகலபுத்திகளிலும், அன்னது காணுபு = அச்சருவஞ்ஞுத்தன்மையைக்கண்டு, வாதனை புகலிடுவாய் = வாசனைகளிலும் (அதனை அனுமானத்தால்) அறிவாய், அனுமானமாவது:- சகல புத்தியிலுள்ள சருவஞ்ஞுத்தன்மை தனது காரணமாயுள்ள வாசனையிலுள்ள சருவஞ்ஞுத்தன்மை பூருவகமிருக்க யோக்கியமாம், காரியத்திலுள்ள தரும விசேஷமாதலால், வஸ்திரத்திலுள்ள உருவாதியைப் போன்று, யாது யாது காரியத்திலுள்ள தரும விசேஷமோ அது அது தனது காரணத்திலுள்ள தரும விசேஷ பூருவகமாம் என சாமான்னிய வியாப்தியையுணருக, [சருவஞ்ஞுத்தன்மையை யுபபாதனஞ் செய்து "இவன் அந்தரியாமி" என்னும் சுருதியாற் சொல்லப்பட்ட அந்தரியாமித்தன்மையை யுபபாதனஞ் செய்கின்றார்] மேதை மயப்பிரதானம் எனும் கோசங்களின் = விஞ்ஞானமயனை முக்கியமாகவுடையதாகிய பஞ்சகோசங்களிலும், வேற்றினுமே ஆதி = பிற பிருதிவி முதலியவற்றிலும், உள் நின்று நடாத்துவது = உள்ளேயிருந்து பிரேரிப்பது, ஆதலின் = அக்காரணத்தினல், அந்தரியாமியாம் = அந்தரியாமித்தன்மையையடையும் எ—று.

ஒணுது என்பது து விகுதி குறைந்து வந்தது. 79

(அ—கை)

ஈசுரன் அந்தரியாமி என்னும் இப்பொருளில் அந்தரியாமிப் பிராமணம் முழுவதும் பிரமாணமாமெனத்தெரிவிக்கும் பொருட்டு அதனேகதேசமாயுள்ள "எவன் விஞ்ஞானத்திலிருந்து கொண்டு" என்பது முதலிய வாக்கியத்தைப் பொருளாலனுசரிக்கின்றார்.

புத்தியி னின்றத னகமாய்
மதியாற் புலன்மருவான் மதியின்
மெத்துரு வாயதை யுள்ளின
டாத்துவ னெனமறை மிகவோது
மொத்துறு தந்துப டத்தின்
முதற்கா ரணமா யுறைவதுபோல்
வத்துமு தற்கா ரணமா
தலினிவன் மன்னுவ னெங்கணுமே. 80

(ப—ரை) புத்தியில் நின்று = விஞ்ஞானத்திலிருந்து, அதன்

அகமாய்=விஞ்ஞானத்தின் உள்ளாய், மதியாற்புலன் மருவான் = புத்தியால் விஷயீகரிக்கப்படாதவன், மதியின்மெத்து உருவாய் = புத்தியினை சரீரமாயுடையதாய், அதை உள்ளில் நடாத்துவன் = புத்தியை உள்ளிருந்து பிரேரணை செய்பவன், எனமறை மிகஓதும்=என்று சுருதியானது கூச்சலிடுகின்றது, [இப்போது அந்தரியாமிப் பிராமணத்தின் ஒவ்வொரு பரியாயத்தையும் வியாக்கியானஞ் செய்யின் கிரந்தம் விரியுமென்னும் பயத்தால் வியாக்கியானத்திற்கு சகலபரியாயத்திலும் சஞ்சரிக்குந்தன்மை சித்திக்கும் பொருட்டுஎவன் சகலபூதங்களிலும் என்னும் பரியாயத்தை வியாக்கியானஞ் செய்கின்றவராய் "எவன் சகலத்திலுமிருக்கின்றவன்" என்பதன் பொருளை திருஷ்டாந்தத்தாற் கூறுகின்றார்] ஒத்து உறு தந்து=அநுசூதமாய்ப் பொருந்தா நின்ற நூலானது, படத்தில்=வஸ்திரத்தில், முதற்காரணமாய் உறைவது போல் =உபாதான காரணமாயிருப்பதுபோல, வத்துமுதற்காரணமாதலின் = சகல வத்துவிற்குமுபாதான காரணமாயிருத்தலின், இவன் = இவ்வீசுரன், எங்கணும் மன்னுவன் = எல்லாவிடங்களிலும் இருப்பன் எ—று.

நூல் உபாதானத் தன்மையால் வஸ்திரத்திலிருப்பது போன்று பரமான்மா உபாதானத் தன்மையால் எங்கணு முளனென்பதுபொருள்.

ஏ—அசை. 80

(அ—கை)

இங்ஙனம் இவ்வீசுரன் உபாதானத் தன்மையால் எவ்விடங்களிலுமிருப்பனேல் ஏனெவ்விடங்களிலும் தோற்றுகிறதில்லையென்னுஞ் சங்கைக்கு சருவத்திநுமுள்ளாயிருத்தலால் தோற்றுகிறதில்லையெனக் கூறுகின்றார்.

படமத னினுநூ லந்தர நூலினும் பஞ்சந் தரமாகு
மிடமெதி லாமந் தரவிசி ராந்தியவ் விடமநு மானிப்பாந்
திடதுவி திரியந் தரகட் சங்களின் றெரிசன மதிலிவனுள்
ளுடையன் னறிபடு கிலனத னுன்மறை யுத்திக ளாற்று
[ணிவாம். 81

(ப—ரை) படமதனினும் நூல்அந்தரம் = வேஷ்டியைப் பார்க்கிலும் நூலானது உள்ளாயிருக்கிறது, நூலினும் = தந்துவைப்பார்க்

கிலும், பஞ்சுஅந்தரமாகும் = பருத்தி உள்ளாயிருக்கின்றது, அந்தர விசிராந்தி=ஆந்தரத் தன்மையின் முடிவு, இடம் எதில் ஆம் = எந்த வஸ்துவிலுண்டாகின்றதோ, அவ்விடம் அநுமானிப்பாம் = அந்த வஸ்து அனுமானிக்கத்தக்கது, (ஈண்டிஃதநுமானம். ஆந்தரத் தன்மையின் தாரதம்மியம் ஓரிடத்து முடிவையடைகின்றது. தாரதம்மியமாதலால் அணுத்தன்மையின் தாரதம்மியம் போன்று) [இங்ஙனமாந்தரத்தன்மையிருப்பினும் பஞ்சு முதலியவை போன்று அந்தரியாமியின் தெரிசனம் ஏனுண்டாவதில்லை யென்னுஞ் சங்கைக்கு அவைகளுக்குப் போன்று பாகியத்தன்மையின்மையால் தோற்றுகிறதில்லை என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்] திட துவி திரி அந்தர கட்சங்களின் = தூலமாகிய இரண்டு மூன்று ஆந்தரத்தன்மை கோடிகளாகிய பஞ்சு முதலியவற்றின், தெரிசனமதில் = பிரத்தியக்ஷம் போன்று, உள்ளுடையன் இவன் = சருவாந்தரனாகிய இவ்வந்தரியாமி, அறிபடுகிலன் = உணரப்படான், [அப்படியானால் அதன் நிச்சயம் எதனாலுண்டாமெனிற் கூறுகின்றார்] அதனால் = பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாகாமையினால், மறையுத்திகளால் துணிவாம் = மேற்கூறிய சுருதியினாலும் யுத்தியினாலும் அந்தரியாமியின் நிச்சயமுண்டாகும் எ—று.

யுத்தியாவது - அசேதனத்திற்கு சேதனவடிவ அதிஷ்டானமின்றி பிரவிருத்தி பொருந்தாமை, சுருதியாவது "புத்தியினின்றதனகமாய்" என்னும் 80 வது செய்யுளிற் கூறப்பட்டுளது. 81

(அ—கை)

எவனுக்கு சகல பூதங்களும் சரீரமோ என்னும் சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

படவடி வாய்மன் னுதலா னூலது படிவம் படமாபோல்
வடிவமெ லாமாய் மனலா லிவனது வடிவமெ லாமாகும்
இடையுறு நூலது குவிவுடன் விரிவொடி யங்குத லாலியையு
முடன்மரு வும்பட மீதுசுதந்தர மொன்றுமு றாதாமால். 82

(ப—ரை) படவடிவாய் மன்னுதலால் = வஸ்திர வடிவமாயிருத்தலால், நூலது படம் படிவம் ஆபோல் = தந்துவுக்கு வஸ்திரம் சரீரமாவது போன்று, வடிவம் எலாமாய் மனலால் = சருவரூபமாயிருத்தலால், இவனது வடிவம் எலாமாகும் = இவ்வந்தரியாமிக்குச் சருவமும்

சரீரமாம், (படரூபமாகவிருக்கும் தந்துவிற்கு படமெப்படி சரீரமோ அதுபோல சருவரூபமாகவிருக்குமந்தரியாமிக்குச் சருவமும் சரீரமாம்) [எவன் சகல பிராணிகளையும் உள்ளேயிருந்து இயக்குகின்றானோ என்னும் வாக்கியத்தின் தாற்பரியத்தைத் திருஷ்டாந்தசகிதம் கூறு கின்றார்] இடை உறு நூலது=மத்தியிலுள்ள தந்துவின், குவிவுடன் விரிவொடு இயங்குதலால்=சங்கோச விகாச சலனம் முதலியவற்றால், இயையும் = அத்தந்துவினால் சன்னியமான படமும், உடன் மருவுமம=கூடவே (சங்கோசம் முதலியவற்றைப்) பொருந்தும், பட மீது=வஸ்திரத்தில், சுதந்தரம் ஒன்றும் உறாதாம் = தன்வயத்தல் கொஞ்சமுமின்றாம் எ—று.

ஆல்—அசை. 82

[இதுவுமது]

இன்னண மந்தரி யாமியெ வாறெவ ணெவ்வா தனையாலே
பின்னம தாகுவ னவ்வா றுடனே பேறு மையமிலை
மன்னுயி ரிருதயத் தீசன ருச்சுன மன்னுவ னெந்திரமேற்
றுன்னுறு முயிர்முழு தையுமா யையினாற் சுற்றுதல்
செய்விப்பான். 83

(ப—ரை) இன்னணம்=இந்தப்பிரகாரம், (அதாவது தந்து வின் சங்கோசம் முதலியவற்றால் படத்திற்கு சங்கோசம் முதலியவை உண்டாவதுபோன்று) அந்தரியாமி = பிருதிவி முதலியவைகளில் உபாதானத்தன்மையால் இருக்கின்ற பரமேஸ்வரன், எவண்=எந்த இடத்தில், எவ்வாதனையால்=எந்த வாசனையால், எவாறு=எப்படி, (அதாவது எந்த கடாதிகாரிய ரூபத்தால்) பின்னமதாகுவன்=பரிணா மத்தையடைவனோ, அவ்வாறு=அப்படியே, உடனே பேறும்=அக் காரியக்கூட்டம் சீக்கிரம் உண்டாகின்றது, ஐயம் இலை=இவ்விஷயத் தில் சம்சயமில்லை, [இங்ஙனம் அந்தரியாமியைப் பிரதிபாதிக்கும் சுருதி யைக்கூறி ஸ்மிருதியையுங் கூறுகின்றார்] அருச்சுன = தனஞ்சய, ஈசன்=பரமேசுரன், மன்உயிர் இருதயத்து=சகல சீவர்களது இருத யத்தில், மன்னுவன்=இருப்பான், எந்திரமேல் துன்னுறும் உயிர் முழுதையும்=எந்திரத்திலேறியுள்ள சகல சீவர்களையும், மாயையினால் சுற்றுதல் செய்விப்பான்=மாயையால் ஆட்டுவிப்பான் எ—று. 83

(அ—கை)

மன்னுயிர் என்னும் பதத்தின் பொருளைக் கூறுகின்றார்.

மன்னுயிர் விஞ்ஞான மயர்களி
　　வர்கள் மனக்கம லத்துறைவர்
அன்னவ ரின்முதற் காரண
　　விறையங் காகுவன் வேற்றுமைதான்
மின்னுடன் முதலிய பஞ்சர
　　மெந்திர மேற்றன லபிமானஞ்
சொன்ன நன்விதிகள் விலக்குக
　　ளின்னமை சுற்றுத லாமன்றே. 84

(ப—ரை) மன்னுயிர் விஞ்ஞானமயர்கள்=மன்னுயிரென்னும் பதத்திற்குப் பொருள் விஞ்ஞானமய சீவர்கள், இவர்கள் = இந்த விஞ்ஞானமய சீவர்கள், மனக்கமலத்து உறைவர் = இருதய புண்டரீகத்தில் இருக்கின்றார்கள், [அப்படியானல் அவர்களுக்கு இருதயத்திலிருப்பு எதனல் என்னுஞ் சங்கைக்கு இருதயத்தில் அந்தரியாமி விஞ்ஞானமய வடிவமாகப் பரிணமிக்கின்றதால் எனக் கூறுகின்றார்]அன்னவரின் முதற் காரண இறை = அவ்விஞ்ஞானமய சீவர்களின் உபாதான காரணமாயுள்ள பரமேஸ்வரன், அங்கு வேற்றுமை ஆகுவன்=அவ் இருதயத்தில் விஞ்ஞானமய வடிவத்தால் பரிணமிப்பன், [யந்திரமேற்றுன்னுறும் என்பதிலுள்ள யந்திரபதத்திற்கும் மேற்றுனல் பதத்திற்கும் பொருள் கூறுகின்றார்] மின் உடல் முதலிய பஞ்சரம் எந்திரம்=தோன்று நின்ற தேகம் முதலிய கூண்டு எந்திரபதத்தின் பொருளாம், மேற்றுனல் அபிமானம் = மேற்றுனல் பதத்தின் பொருள் அபிமானமாம், [சுற்றுதல் செய்விப்பான் என்பதில் உள்ள சுற்றுதல் பதத்தின் பொருளைக் கூறுகின்றார்] சொன்னநன் விதிகள் விலக்குகளின் அமை=சாஸ்திரத்திற் சொல்லிய நல்ல விதிக்கப்பட்ட கருமங்களிலும் நிஷேதிக்கப்பட்ட கருமங்களிலும் பிரவிருத்தி, சுற்றுதலாம்=சுற்றுதல் பதத்தின் பொருளாம் எ—று.

தான், அன்று, ஏ—அசை. 84

(அ—கை)

இப்போது செய்விப்பானென்னும் பதத்திற்கும் மாயாபதத்திற்கும் பொருள் கூறுகின்ருர்.

அண்ணறன்மாயா சத்தியினுல்விஞ்
ஞானமயாகா ரத்துருவாகவும்
நண்ணடைவடிவம தாகவும்வேற்றுமை
நண்ணுவ னதுசுழல்வாம்
உண்ணனிமேவி நடாத்துவனெனலுக்
கோத்திது பொருளென்னும்
மண்ணெழுவாயெங் கணுமிதுநீதி
கொளத்தகு மதியாலே. 85

(ப—ரை) அண்ணல்=பரமேசுரன், தன் சத்தியினுல் விஞ்ஞானமய ஆகாரத்து உருவாகவும் = தனது சக்தியினுல் விஞ்ஞானமய வடிவாகவும், நல்நடை வடிவமதாகவும்=அவனது நல்ல பிரவிருத்திரூபமாகவும், வேற்றுமை நண்ணுவன்=பரிணமத்தையடைவன், அது மாயா சுழல்வாம்=அதுவே மாயையால் சுழற்றுவிப்பன் என்னும் பதங்களுக்குப் பொருளாம், [சுருதியிலுள்ள "இயக்குகின்ருன்" என்னும் பதத்திற்கும் இதுவே பொருளெனக் கூறுகின்ருர்] உள்மேவி நனி நடாத்துவன் எனலுக்கு=இருதயத்துள்ளே இருந்து மிகவும் இயக்குவன் என்னும் பதத்திற்கு, ஓத்து இது பொருள் என்னும் = சுருதி இதுவே பொருளாமென்று கூறும், [கூறிய வியாக்கியானத்தை வேறு பரியாயங்களிலும் அதிதேசஞ் செய்கின்ருர்] மண்எழுவாய் எங்கணும் = பிருதிவி முதலிய எல்லாவிடங்களிலும், இது நீதிமதியால் கொளத்தகும்=இந்த நியாயம் புத்தியால் கொள்ளத்தக்கது (பொருத்தத்தக்கதென்பது பொருள்) எ—று.

நன்னடை என்பது எதுகைநோக்கி நண்ணடை எனத் திரிதல் விகாரம் பெற்றது. 85

(அ—கை)

பிரவிருத்தியனைத்து மீசுராதீனமென்பதில் வேறு வசனத்தை உதாகரிக்கின்ருர்.

தருமமுமிதுவென வறிவேனதனிற் சார்நடையிலையெற்கு
மருவுறுமதன்மமு மிதுவெனவறிவேன்
வரவிலையொழிவுநனி
யிருதயநிலைபெறு தேவனெனப்படு மெவனேவெம்முறையா
லருளினிலாட்டுவ னம்முறையேயா னாடிடுகின்றேனால். 86

(ப—ரை) தருமமும் இது என அறிவேன் = தருமத்தையுமிப் படிப்பட்டதென உணருவேன், அதனில் எற்குசார் நடை இலை = அத் தருமத்தில் எனக்குப் பிரவிருத்தியில்லை, மருவுறும் அதன்மமும் இது வென அறிவேன் = பொருந்தாநின்ற அதன்மத்தையுமிப்படிப்பட்ட தென்று உணருவேன், ஒழிவும் நனிவரவிலை = அதினின்றும் நிவர்த்தி யும் அத்தியந்தம் உண்டாகவில்லை, இருதய நிலைபெறு தேவனெனப் படும் எவனே = இருதயத்திலிருக்கின்ற தேவனென்று சொல்லப்படும் எவனே ஒருவன் (இருதயத்திலுள்ள ஒரு தேவனென்பது பொருள்), எம்முறையால் = எந்தப் பிரகாரம், அருளினில் ஆட்டுவன் = கிருபையி னால் அல்லது மாயையால் இயக்குவன், அம்முறையே யான் ஆடிடு கின்றேன் = அந்தப் பிரகாரமே நான் நடிக்கின்றேன் எ—று.

ஆல்—அசை. 86

(அ—கை)

பிரவிருத்தி யீசுராதீனமாமேல் புருஷப் பிரயத்தினம் வியர்த்த மாம் என்னுஞ் சங்கைக்கு புருஷப் பிரயத்தினமும் ஈசுர வடிவமாதலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்.

நரன்றன் செயலாற் பயனின் றென்று நவிலேலீச
னரன்றன் செயலி னுருவாய் நண்ண லாலிவ் வறிவாற்
பரன்றன் செயலெ த்தினமும் பாருதாகு மனைய
பரன்ற னுணர்வாற் றனக்குப் பற்றிலுணர்வு பயிலும். 87

(ப—ரை) நரன்தன்செயலால் = புருஷப் பிரயத்தினத்தால், பயன் இன்று என்று நவிலேல் = பிரயோஜனமில்லையென்று சொல் லற்க, ஈசன் நரன்றன் செயலினுருவாய் நண்ணலால் = பரமேசுரன்

புருஷப் பிரயத்தின வடிவமாய்ப் பரிணமித்தலால், [இங்ஙனம் புருஷப் பிரயத்தினமும் ஈசுர வடிவமாமேல் இயக்குகின்ருன் சுழற்றுகின்ருன் என்று பிரதிபாதிக்கப்பட்ட அந்தரியாமியின் பிரரேணம் வியர்த்தமாம் என்னுஞ் சங்கைக்கு, அந்த அந்தரியாமியே பிரேரிக்கின்ருர் என்னும் போதத்தால் தனது ஆன்மாவின் அசங்கத்தன்மை ஞானவடிவ பிர யோஜனமிருத்தலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்ருர்] இவ்வறிவால்=ஈசுரன் புருஷப் பிரயத்தின வடிவமாகப் பரிணமிக்கின்ருன் என்னும் ஞானத்தால், பரன்றன்செயல் எத்தினமும்=பரமேசுரனது பிரேரணை வடிவ பிரயத்தினமும், பாருதாகும்=நிவர்த்திக்கத்தகாது, அனைய பரன்றன் உணர்வால்=கூறிய அத்தன்மைய பரமேசுவரனது ஞானத்தால், தனக்கு பற்று இல் உணர்வு பயிலும்=ஆன்மாவின் அசங்கத்தன்மையின் ஞானமுண்டாம் எ—று.

செயல்=அந்தரியாமி ரூபத்தால் பிரேரணை. 87

(அ—கை)

ஆன்மாவின் அசங்கத்தன்மை ஞானத்தாற்ருனென்னை பிர யோஜனம் எனிற் கூறுகின்ருர்.

அதனுன் முத்தியாமென் றறையுஞ் சுருதிமிருதி
யிதமாஞ் சுருதிமிருதி யென்ன தாஞ்ஞையெனவே
திதனுமீசன் சொற்ருன் செப்புமாஞ்ஞை பயமே
யுதவாநிற்கு மிந்தப் பயத்தினெனவே யோதும். 88

(ப—ரை) அதனுல்=அசங்கத்தன்மையின் ஞானத்தால், முத்தியாம் என்று=மோக்ஷமுண்டாமென்று, சுருதி மிருதி அறையும்=சுருதிகளும் ஸ்மிருதிகளும் கூறுகின்றன, [சுருதிமிருதிகளாற் சொல்லப்பட்ட அர்த்தத்தைக் கடக்கலாகாதென்பதில் ஸ்மிருதியைத் தெரிவிக்கின்ருர்] இதமாம் சுருதி மிருதி=நன்மைக்கேதுவான சுருதி ஸ்மிருதிகள், என்னது ஆஞ்ஞை எனவே=பரமேசுரனை என்னுடைய ஆஞ்ஞை யாமென்று, திதனும் ஈசன் சொற்ருன்=தாணுவாகிய ஈசுரன் சொன்னுன், [சுருதியினுலும் ஈசுரனுக்குப் பயகாரணத்தன்மை கூறப்பட்டுளதெனக் கூறுகின்ருர்] செப்பும் ஆஞ்ஞை பயமே உதவா நிற்கும் எனவே = கூறிய பரமேசுர ஆஞ்ஞையானது அச்சத்தைக் கொடுக்கும் என்று, இந்தப் பயத்தின் = இந்தப் பரமேசுரனின்றும்

பயத்தினுல் என்னுஞ் சுருதியானது, ஓதும் = கூறுகின்றது, அல்லது செப்பும் ஆஞ்ஞை = சொல்லிய ஆஞ்ஞைக்கு,பயமே உதவா நிற்கும் = பயகாரணத்தன்மையை, இந்தப் பயத்தின் எனவே = பரமேசுரனின் இந்தப் பயத்தினுல் என்னுஞ் சுருதியானது, ஓதும் = கூறும் எ—று. 88

(அ—கை)

சுருதியும் பரமேசுரனுக்கு பய காரணத்தன்மை எதற்காக சொல்லிற்று என்னுஞ் சங்கைக்கு சருவேசுரத்தன்மைக்கு அந்தரியாமித்தன்மையினும் வேற்றுமை சித்திக்கும்பொருட்டுக் கூறிற்று என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர்.

இந்தச் சருவே சன்ற னியல்பந் தரியா மியின
தந்த வியல்பின் வேரு மக்க ரமெனு மிவன்ற
னுந்து மிகுசா சனமென் றுரைக்குஞ் சுருதி யுயிருள்
வந்து புகுசாத் தனிவ னென்றுஞ் சுருதி வழங்கும். 89

(ப—ரை) இந்தச் சருவேசன்றன் இயல்பு = இந்தச் சருவேசுரத்தன்மை, அந்த அந்தரியாமியினது இயல்பின் வேரும் = அந்த அந்தரியாமித்தன்மையினுமன்னியமாம், [உள்ளிலும் வெளியிலுமீசுரனே நியாமகனென்பதில் இரண்டு சுருதியைக் கூறுகின்ருர்] அக்கரம் எனும் இவன்றன் = அக்ஷரவடிவ இப்பரமேசுரனது, உந்துமிகு சாசனம் என்று = பிரேரணை வடிவ மேலான ஆஞ்ஞையாமென்று, சுருதி உரைக்கும் = ஒரு சுருதியானது கூறுகின்றது, உயிருள் வந்துபுகு = சீவர்களுக்கு உள்ளே பிரவேசித்து, சாத்தன் இவன் என்றும் = ஆளுகிறவன் இப்பரமேசுரனென்றும், சுருதி வழங்கும் = மற்ருெரு சுருதியானது உரைக்கின்றது எ—று. 89

(அ—கை)

கிரமத்தால் பிராப்தமான "இவர் யோனி" என்னும் சுருதியின் பொருளைக் கூறுகின்ருர்.

ஆக்க லழித்தலாலே யகிலயோனி யிவனுந்
தாக்கும் பிறப்போடிறப்பு த்தயக்கங் கரத்தலாகும்
வாய்க்கச் செய்வன்றன்னுண் மருவுஞ் சகத்தையெல்லாம்
வீக்கு முயிர்க்கன்மத்தால் விரிந்தபட மொப்பாயே. 90

(ப—ரை) ஆக்கல் அழித்தலாலே = உண்டாக்கலொடுக்கலாலே, இவன் அகிலயோனியாம் = இப்பரமேசுரன் சகத்தின் காரணமாம், [உற்பத்தி பிரளய சப்தங்களுக்கு விவக்ஷித்த பொருளைக் கூறுகின்றார்] தாக்கும் பிறப்போடு இறப்பு = துன்பத்தைக் கொடுக்கும் சனனமரணங்களென்பவை, தயக்கம் கரத்தல் ஆகும் = ஆவிர்ப்பாவ திரோபாவங்களாகக்கருதப்படும், [ஈசுரன் சகத்தின் ஆவிர்ப்பாவத்தைச் செய்யுந்தன்மையைத் திருஷ்டாந்த சகிதம் உபபாதனஞ் செய்கின்றார்] விரிந்தபடம் ஒப்பாய் = பரவிய வேஷ்டிபோல (அதாவது சங்குசித சித்திரபடமானது தனது விகாசத்தினாலே தன்னிடத்திலுள்ள சித்திரங்களை ஆவிர்ப்பாவஞ் செய்கின்றது போல) ஈசுரனும், தன்னுள் மருவும் சகத்தை எல்லாம் = தன்னிடத்தில் விலீனமான சகல சகத்தையும், வீக்கும் உயிர்க்கன்மத்தால் = பந்தப்படுத்துகின்ற சீவர்களது அதிருஷ்ட வசத்தால், வாய்க்கச் செய்வன் = ஆவிர்ப்பவிக்கச் செய்வன் எ—று. ஏ—அசை. 90

(அ—கை)

அவ்வீசுரனுக்கே பிரளய காரணத்தன்மையைத் தெரிவிக்கின்றார்.

தன்னுளகிலங் கரப்பான் சாற்றக்கன்ம வொழிவா
லின்னுங்குவிந்த படம்போ லிரவுபகலுஞ் சுழுத்தி
மின்னு நனவு மிமைத்தல் விழித்தல் சும்மாவிருத்தல்
பின்னுமனக் கற்பனைபோற் பிறப்போ டிறப்புமாமே. 91

(ப—ரை) குவிந்தபடம்போல் = சங்குசித வஸ்திரம்போல, (அதாவது அவ்விரிந்த படமானது குவிந்ததாய்ச் சித்திரங்களைத் திரோதானஞ் செய்கின்றது போல) சாற்று அக்கன்ம ஒழிவால் = சொல்லாநின்ற பிராணிகளின் அதிருஷ்ட விநாசத்தால், இன்னும் = மறுபடியும், தன் உள் அகிலம் கரப்பான் = தன்னிடத்தில் சகலசகத்தையும் திரோபாவஞ் செய்வன், [ஆவிர்ப்பாவ திரோபாவங்களுக்கு வேறு திருஷ்டாந்தங்களையும் தெரிவிக்கின்றார்] இரவு பகலும் = இராத்திரியும் தினமும் போலவும், சுழுத்தி மின்னு நனவும் = நித்திரையும் விளங்காநின்ற சாக்கிரமும் போலவும், இமைத்தல் விழித்தல் = கண்ணைத் திறத்தலும் மூடுதலும் போலவும், பின்னும் சும்மா இருத்தல் மனக் கற்பனைபோல் = மற்றும் தூஷ்ணீம் பாவமும் மனோ

ராச்சியமும் போலவும், பிறப்போடு இறப்பும் ஆம்=உற்பத்தியும் விநாசமும் ஆம் எ—று.

ஏ—அசை.

ஒடு—எண்ணிடைச்சொல். 91

(அ—கை)

அற்றேல் ஈசுரனுக்குச் சகத்தின் காரணத்தன்மை ஆரம்பகத் தன்மையாலா அல்லது அதனுகார பரிணுமித்தன்மையாலா. முதற் பக்ஷம் சரியன்று. அத்துவிதீய வஸ்துவிற்கு ஆரம்பகத்தன்மை பொருந்தாமையின், இரண்டாவது பக்ஷமும் சரியன்று. நிரவயவ வஸ்துவிற்கு பரிணுமம் பொருந்தாமையின் என்னுஞ் சங்கைக்கு விவர்த்தவாதத்தையாசிரயித்தலால் தோஷம் அன்றெனப் பரிகரிக்கின்ருர்.

தோற்றங் கரத்தற்சத்தித் தொடர்ச்சி யேதுவாலே
யாற்று மாரம்பத்தோ டானபரிணு மாதி
யேற்ற சோத்தியங்கட் கீண்டுபொருத்த மின்ரும்
சாற்றுஞ் சடவொற்றுமையாற் சடங்கட் கீசன்முதலாம். 92

(ப—ரை) தோற்றம் கரத்தற்சத்தித் தொடர்ச்சி ஏதுவால்= ஆவிர்ப்பாவ திரோபாவ சத்தியையுடையதாந்தன்மையாகிய காரணத்தினுல், ஆரம்பத்தோடு ஆன பரிணுமாதி ஆற்றும் ஏற்ற சோத்தியங்கட்கு=ஆரம்பமா பரிணுமமா என்பது முதலிய செய்யாநின்ற தகுந்த சங்கைகளுக்கு, ஈண்டு பொருத்தம் இன்ரும் = இவ்வீசுரனிடத்தில் சம்பவமின்ரும், [அப்படியானுல் ஒரே ஈசுரன் சேதனுசேதன சகத்திற்கு எப்படியுபாதானமாவன் என்னுஞ் சங்கைக்கு மாயையாகிய உபாதிப் பிரதானத்தினுல் அசேதனத்திற்கு உபாதானமும் சித்துப்பிரதானத்தினுல் சேதனத்திற்கு உபாதானமும் ஆவனெனக் கூறுகின்ருர்] சாற்றும் சட ஒற்றுமையால்=சொல்லாநின்ற மாயையாகிய சட அம்ஸத்தால், சடங்கட்கு ஈசன் முதலாம்=அசேதனங்கட்குப் பரமேசுரன் காரணன் ஆவன் எ—று. 92

(இதுவுமது)

ஆங்குசித்தின் போலி யங்கி சத்தாற் சீவர்க்
கோங்குமுத லாந்தமத்தி னுயர்வாற் சேத்தி ரங்கட்
கீங்குசித்தி னுயர்வா லேனைய ருக்கும் பரனே
பாங்கின் மூலமாவான் பாவ னையெழு வாயால். 93

(ப—ரை) சித்தின் போலி அங்கிசத்தால்=சிதாபாச அம்ஸத்தால் ஈசுரன், சீவர்க்கு ஓங்கு முதலாம்=சீவர்களுக்கு உயர்ந்த காரணனுவன், [அப்படியானுல் மாயாவியாகிய ஈசுரனுக்குச் சகத்தின் காரணத்தன்மையைச் சொல்லுதல் பொருந்தாது, சுரேசுராசாரியரால் பரமான்மாவிற்கே அது சொல்லப்பட்டிருத்தலால் என்று சங்கிக்கின்ருர்] பரனே=சுத்த பரமான்மாவே, பாவனை எழுவாயால்=சம்ஸ்காரம் முதலிய நிமித்தத்தால், தமத்தின் உயர்வால்=தமோ குணத்தின் பிரதானத்தால், சேத்திரங்கட்கு=சடங்களுக்கும், சித்தின் உயர்வால்=சித்தின் பிரதானத்தால், ஏனையருக்கும்=சீவர்களுக்கும், ஈங்குபாங்கில் மூலமாவான்=இவ்வுலகில் செவ்வையுாய்க் காரணமாவன் எ—று.

ஆங்கு — அசை.

பாவனை எழுவாய் என்றதால் ஞானத்தையுந் தருமத்தையுங் கொள்க. ஞானம்=தேவதையின் தியானம் முதலியவை. கருமம்=புண்ணிய பாபம். பாவனை, ஞானம், கருமம் என்னும் இம்மூன்று நிமித்தங்களால் பரமான்மா ஜட சேதனமாகிய ஜகத்திற்குக் காரணமாம் என்பது பொருள். 93

(இதுவுமது)

எனவார்த்தீகக்கார ரெவைக்கும்பரமான்மாவே
யினியவேதுவீச ஞகானென்ரு ரெனிற்கே
ளனியொனியாத்தியாச மாவிக்கறிவுக்கும்போற்
சொனவீசனுக்குமதற்குஞ் சுரேசுரர்சொற்றனரே. 94

(ப—ரை) என வார்த்தீககாரர்=என்று இந்தப்பிரகாரம் சுரேசுராச்சாரியார், எவைக்கும்=சடசேதனங்களனைத்திற்கும், இனிய பரமான்மாவே ஏது=சிதானந்த பிரமமே காரணமாம், ஈசன் ஆகான்=மாயா விசிஷ்ட பரமேசுரன் காரணமன்ரும், என்ருர் எனில் = என்று

ராச்சியமும் போலவும், பிறப்போடு இறப்பும் ஆம்=உற்பத்தியும் விநா சமும் ஆம் எ—று.

ஏ—அசை.

ஒடு—எண்ணிடைச்சொல். 91

(அ—கை)

அற்றேல் ஈசுரனுக்குச் சகத்தின் காரணத்தன்மை ஆரம்பகத் தன்மையாலா அல்லது அதனுகார பரிணுமித்தன்மையாலா. முதற் பக்ஷம் சரியன்று. அத்துவிதீய வஸ்துவிற்கு ஆரம்பகத்தன்மை பொருந்தாமையின், இரண்டாவது பக்ஷமும் சரியன்று. நிரவயவ வஸ்துவிற்கு பரிணுமம் பொருந்தாமையின் என்னுஞ் சங்கைக்கு விவர்த்தவாதத்தையாசிரயித்தலால் தோஷம் அன்றெனப் பரிகரிக் கின்ருர்.

தோற்றங் கரத்தற்சத்தித் தொடர்ச்சி யேதுவாலே
யாற்று மாரம்பத்தோ டானபரிணு மாதி
யேற்ற சோத்தியங்கட் கீண்டுபொருத்த மின்ரும்
சாற்றுஞ் சடவொற்றுமையாற் சடங்கட் கீசன்முதலாம். 92

(ப—ரை) தோற்றம் கரத்தற்சத்தித் தொடர்ச்சி ஏதுவால்= ஆவிர்ப்பாவ திரோபாவ சத்தியையுடையதாந்தன்மையாகிய காரணத் திஞல், ஆரம்பத்தோடு ஆன பரிணுமாதி ஆற்றும் ஏற்ற சோத்தியங் கட்கு=ஆரம்பமா பரிணுமமா என்பது முதலிய செய்யாநின்ற தகுந்த சங்கைகளுக்கு, ஈண்டு பொருத்தம் இன்ரும் = இவ்வீசுரனிடத்தில் சம்பவமின்ரும், [அப்படியாஞல் ஒரே ஈசுரன் சேதனுசேதன சகத் திற்கு எப்படியுபாதானமாவன் என்னுஞ் சங்கைக்கு மாயையாகிய உபாதிப் பிரதானத்திஞல் அசேதனத்திற்கு உபாதானமும் சித்துப்பிர தானத்திஞல் சேதனத்திற்கு உபாதானமும் ஆவனெனக் கூறுகின் ருர்] சாற்றும் சட ஒற்றுமையால்=சொல்லாநின்ற மாயையாகிய சட அம்ஸத்தால், சடங்கட்கு ஈசன் முதலாம்=அசேதனங்கட்குப் பரமேசு ரன் காரணன் ஆவன் எ—று. 92

(இதுவுமது)

ஆங்குசித்தின் போலி யங்கி சத்தாற் சீவர்க்
கோங்குமுத லாந்தமத்தி னுயர்வாற் சேத்தி ரங்கட்
கீங்குசித்தி னுயர்வா லேனைய ருக்கும் பரனே
பாங்கின் மூலமாவான் பாவ னையெழு வாயால். 93

(ப—ரை) சித்தின் போலி அங்கிசத்தால்=சிதாபாச அம்ஸத்தால் ஈசுரன், சீவர்க்கு ஓங்கு முதலாம்=சீவர்களுக்கு உயர்ந்த காரணனுவன், [அப்படியானுல் மாயாவியாகிய ஈசுரனுக்குச் சகத்தின் காரணத்தன்மையைச் சொல்லுதல் பொருந்தாது, சுரேசுராசாரியரால் பரமான்மாவிற்கே அது சொல்லப்பட்டிருத்தலால் என்று சங்கிக்கின்ருர்] பரனே=சுத்த பரமான்மாவே, பாவனை எழுவாயால்=சம்ஸ்காரம் முதலிய நிமித்தத்தால், தமத்தின் உயர்வால்=தமோ குணத்தின் பிரதானத்தால், சேத்திரங்கட்கு=சடங்களுக்கும், சித்தின் உயர்வால்=சித்தின் பிரதானத்தால், ஏனையருக்கும்=சீவர்களுக்கும், ஈங்குபாங்கில் மூலமாவான்=இவ்வுலகில் செவ்வையுாய்க் காரணமாவன் எ—று.

ஆங்கு — அசை.

பாவனை எழுவாய் என்றதால் ஞானத்தையுந் தருமத்தையுங் கொள்க. ஞானம்=தேவதையின் தியானம் முதலியவை. கருமம்=புண்ணிய பாபம். பாவனை, ஞானம், கருமம் என்னும் இம்மூன்று நிமித்தங்களால் பரமான்மா ஜட சேதனமாகிய ஜகத்திற்குக் காரணமாம் என்பது பொருள். 93

(இதுவுமது)

எனவார்த்தீகக்கார ரெவைக்கும்பரமான்மாவே
யினியவேதுவீச ஞகானென்ரு ரெனிற்கே
ளனியொனியாத்தியாச மாவிக்கறிவுக்கும்போற்
சொனவீசனுக்குமதற்குஞ் சுரேசுரர்சொற்றனரே. 94

(ப—ரை) என வார்த்தீககாரர்=என்று இந்தப்பிரகாரம் சுரேசுராச்சாரியார், எவைக்கும்=சடசேதனங்களனைத்திற்கும், இனிய பரமான்மாவே ஏது=சிதானந்த பிரமமே காரணமாம், ஈசன் ஆகான்=மாயா விசிஷ்ட பரமேசுரன் காரணமன்ரும், என்ருர் எனில் = என்று

சொல்லியிருக்கின்றாரென்று வினவில், கேள் = அதற்குத் தரங்கூறுதும் கேட்பாய், [துவம் பதார்த்தத்திற்போன்று தற்பதார்த்தத்திலும் அதிஷ்டான ஆரோபங்களுக்கு அன்னியோன்னியாத்தியாசத்தை விவக்ஷித்தபடியால் மாயா விசிட்ட சேதனத்திற்கு ஜகத்காரணத்துவம் தோஷம் அன்றெனப் பரிகரிக்கின்றார்] ஆவிக்கும் அறிவுக்கும் போல் = சீவனுக்கும் கூடஸ்தனுக்கும் அன்னியோன்னியாத்தியாசமிருப்பதுபோல, சொன ஈசனுக்கும் அதற்கும் = சொல்லிய மாயா விசிஷ்ட அந்தரியாமிக்கும் சுத்தப் பிரமத்திற்கும், அன்னியோன்னியாத்தியாசம் = பரஸ்பராத்தியாசத்தை, சுரேசுரர் சொற்றனர் = சுரேஸ்வராசாரியர் சொன்னார்கள் எ—று.

ஏ—அசை. **94**

(அ—கை)

அற்றேல் சுரேசுராசாரியரால் ஈசுரனுக்கும் பிரமத்திற்கும் அன்னியோன்னியாத்தியாசம் சித்தமாகச் செய்து வியவகரிக்கப்பட்டது என்பது எதனாலறியப்படுகின்றது என்னுஞ் சங்கைக்கு சுருதியின் பொருளை நன்கு விசாரித்தலால் அறியப்படுகின்றதெனத் தெரிவிக்கும் பொருட்டு சுருதியைப் பொருளாற் படிக்கின்றார்.

அனந்தஞானமெய்மை யதின்வான்வாயுவன்னி
வனந்தலம்பைங்கூழுண் வடிவம்வந்தவெனுமோத்
துனுந்தன்னுணர்வின்மையினங் கொளிரும்பிரமநிபமாய்க்
கனந்தங்கீசன்மெய்யாங் காண்டிதமிலாரோபம் **95**

(ப—ரை) அனந்தஞான மெய்மையதின் = அபரிச்சின்னமாயும் சித்துருபமாயும் சத்தியமாயுமுள்ள பிரமத்தினின்றும், வான் = ஆகாசமும், வாயு = காற்றும், வன்னி = நெருப்பும், வனம் = ஜலமும், தலம் = பிருதிவியும், பைங்கூழ் = ஓஷதியும், ஊண் = அன்னமும், வடிவம் = தேகமும், வந்த = உண்டாயின, எனும் ஓத்து = என்று கூறுகின்றது சுருதி, [இங்ஙனம் சுருதியிருக்குக, இச்சுருதியால் அன்னியோன்னியாத்தியாசத்தின் ஞானமெப்படியெனிற் கூறுகின்றார்] உனும் = கருதாநின்ற, உணர்வு இன்மையின் = விசாரமில்லாதபடியால், (அதாவது ஆபாத திருஷ்டியினால்) அங்கு = அச்சுருதியில், பிரமம் நிபமாய் ஒளிரும் = சத்தியாதி வடிவ நிர்க்குணப் பிரம்மமானது

சகத் காரணமாக விளங்குகின்றது, கனம் தங்கு ஈசன் மெய்யாம்= மேன்மை பொருந்திய பரமேசுரன் (அதாவது சகத்தின் காரணனுன மாயாதீன சிதாபாசன்) சத்தியமாய் விளங்குவன், தமில் ஆரோபம் காண்டி =(ஆகையால்) பிரமத்திலும் ஈசுரனிடத்தும் அன்னியோன்னி யாத்தியாசத்தைப் பார்ப்பாய் எ—று.

நிர்க்குணப் பிரமத்தில் ஆபாத திருஷ்டியால் தோற்றுகின்ற சகத்காரணத்தன்மையும் சகத்காரணனுன மாயையின் அதீனமான சிதாபாசனிடத்தில் தோற்றுகின்ற சத்தியத்தன்மையும் அன்னியோன் னியாத்தியாசமின்றிப் பொருந்தாது என்பது கருத்து ஆபாத திருஷ்டி =போலி ஞானம், பிராந்தி ஞானமென்பது பொருள்.

தன் என்பது தான் என்னும் அசையின் போலி. 95

(அ—கை)

இங்ஙனம் அன்னியோன்னியாத்தியாசத்தால் சித்தித்த ஈசுவர பிரமங்களினேகத் தன்மையைப் பூருவமுதாகரிக்கப்பட்ட கட்டிதபட திருஷ்டாந்தத்தினிணைப்பையூட்டுவதால் திடஞ் செய்கின்றார்.

தமிலாரோபமன்னஞ் சார்ந்தபடங்கட்டிதமா
யமையுமதுபோன்மயலா லயிக்கமாகும்புயல்விண்
விமலமாவிண்மூடர் வேறுகாணுரதுபோற்
சுமடர்பிரமேசர்க்குந் தோன்றவொருமைகாண்பார். 96

(ப—ரை) தமில் ஆரோபம்= இது அன்னியோன்னித்தியாசமாம் அல்லது அன்னியோன்னியாத்தியாசமாகிய இது, அன்னஞ் சார்ந்த படம்=அன்னம் பூசிய வஸ்திரம், கட்டிதமாய் அமையும் அதுபோல= கட்டித வஸ்திரத்தோடு ஐக்கியமுறுவதுபோல, மயலால் அயிக்கமா கும் = பிராந்தியால் ஏகத்தன்மையையடைந்துளது, [பிராந்தியால் ஐக்கியப் பிராப்தியில் திருஷ்டாந்தத்தைக்கூறி ஆபாத தரிசிகளுக்கு பேதத்தின் அப்பிரதீதியில் பூருவஞ் சொல்லிய வேறு திருஷ்டாந்தத் தையே தெரிவிக்கின்றார்] புயல்விண்=மேக ஆகாசத்தையும், விமல மாம் விண்=பரிசுத்தமான மகா காசத்தையும், மூடர்=பாமரர்கள், வேறு காணுர்=பின்னமாக அறியார்கள், அதுபோல்=அதுபோன்று,

சொல்லியிருக்கின்ருரென்று வினவில், கேள் = அதற்குத் தரங்கூறுதும் கேட்பாய், [துவம் பதார்த்தத்திற்போன்று தற்பதார்த்தத்திலும் அதிஷ்டான ஆரோபங்களுக்கு அன்னியோன்னியாத்தியாசத்தை விவக்ஷித்தபடியால் மாயா விசிட்ட சேதனத்திற்கு ஜகத்காரணத்துவம் தோஷம் அன்றெனப் பரிகரிக்கின்ருர்] ஆவிக்கும் அறிவுக்கும் போல் = சீவனுக்கும் கூடஸ்தனுக்கும் அன்னியோன்னியாத்தியாச மிருப்பதுபோல, சொன ஈசனுக்கும் அதற்கும் = சொல்லிய மாயா விசிஷ்ட அந்தரியாமிக்கும் சுத்தப் பிரமத்திற்கும், அன்னியோன்னி யாத்தியாசம் = பரஸ்பராத்தியாசத்தை, சுரேசுரர் சொற்றனர் = சுரேஸ் வராசாரியர் சொன்ஞர்கள் எ—று.

ஏ—அசை. 94

(அ—கை)

அற்றேல் சுரேசுராசாரியரால் ஈசுரனுக்கும் பிரமத்திற்கும் அன்னியோன்னியாத்தியாசம் சித்தமாகச் செய்து வியவகரிக்கப்பட்டது என்பது எதனுலறியப்படுகின்றது என்னுஞ் சங்கைக்கு சுருதியின் பொருளை நன்கு விசாரித்தலால் அறியப்படுகின்றதெனத் தெரிவிக்கும் பொருட்டு சுருதியைப் பொருளாற் படிக்கின்ருர்.

அனந்தஞானமெய்மை யதின்வான்வாயுவன்னி
வனந்தலம்பைங்கூழுண் வடிவம்வந்தவெனுமோத்
துனுந்தன்னுணர்வின்மையினங் கொளிரும்பிரமநிபமாய்க்
கனந்தங்கீசன்மெய்யாங் காண்டிதமிலாரோபம் 95

(ப—ரை) அனந்தஞான மெய்மையதின் = அபரிச்சின்னமாயும் சித்துருபமாயும் சத்தியமாயுமுள்ள பிரமத்தினின்றும், வான் = ஆகாசமும், வாயு = காற்றும், வன்னி = நெருப்பும், வனம் = ஜலமும், தலம் = பிருதிவியும், பைங்கூழ் = ஒஷதியும், ஊண் = அன்னமும், வடிவம் = தேகமும், வந்த = உண்டாயின, எனும் ஓத்து = என்று கூறுகின்றது சுருதி, [இங்ஙனம் சுருதியிருக்குக, இச்சுருதியால் அன்னியோன்னியாத்தியாசத்தின் ஞானமெப்படியெனிற் கூறுகின்ருர்] உனும் = கருதாநின்ற, உணர்வு இன்மையின் = விசாரமில்லாதபடியால், (அதாவது ஆபாத திருஷ்டியினுல்) அங்கு = அச்சுருதியில், பிரமம் நிபமாய் ஒளிரும் = சத்தியாதி வடிவ நிர்க்குணப் பிரம்மமானது

சகத் காரணமாக விளங்குகின்றது, கனம் தங்கு ஈசன் மெய்யாம்= மேன்மை பொருந்திய பரமேசுரன் (அதாவது சகத்தின் காரணனான மாயாதீன சிதாபாசன்) சத்தியமாய் விளங்குவன், தமில் ஆரோபம் காண்டி =(ஆகையால்) பிரமத்திலும் ஈசுரனிடத்தும் அன்னியோன்னி யாத்தியாசத்தைப் பார்ப்பாய் எ—று.

நிர்க்குணப் பிரமத்தில் ஆபாத திருஷ்டியால் தோற்றுகின்ற சகத்காரணத்தன்மையும் சகத்காரணனான மாயையின் அதீனமான சிதாபாசனிடத்தில் தோற்றுகின்ற சத்தியத்தன்மையும் அன்னியோன் னியாத்தியாசமின்றிப் பொருந்தாது என்பது கருத்து ஆபாத திருஷ்டி =போலி ஞானம், பிராந்தி ஞானமென்பது பொருள்.

தன் என்பது தான் என்னும் அசையின் போலி. 95

(அ—கை)

இங்ஙனம் அன்னியோன்னியாத்தியாசத்தால் சித்தித்த ஈசுவர பிரமங்களினேகத் தன்மையைப் பூருவமுதாகரிக்கப்பட்ட கட்டிதபட திருஷ்டாந்தத்தினினைப்பையூட்டுவதால் திடஞ் செய்கின்றார்.

தமிலாரோபமன்னஞ் சார்ந்தபடங்கட்டிதமா
யமையுமதுபோன்மயலா லயிக்கமாகும்புயல்விண்
விமலமாவிண்மூடர் வேறுகாணாரதுபோற்
சுமடர்பிரமேசர்க்குந் தோன்றவொருமைகாண்பார். 96

(ப—ரை) தமில் ஆரோபம்= இது அன்னியோன்னித்தியாசமாம் அல்லது அன்னியோன்னியாத்தியாசமாகிய இது, அன்னஞ் சார்ந்த படம்= அன்னம் பூசிய வஸ்திரம், கட்டிதமாய் அமையும் அதுபோல= கட்டித வஸ்திரத்தோடு ஐக்கியமுறுவதுபோல, மயலால் அயிக்கமா கும் = பிராந்தியால் ஏகத்தன்மையையடைந்துளது, [பிராந்தியால் ஐக்கியப் பிராப்தியில் திருஷ்டாந்தத்தைக்கூறி ஆபாத தரிசிகளுக்கு பேதத்தின் அப்பிரதீதியில் பூருவஞ் சொல்லிய வேறு திருஷ்டாந்தத் தையே தெரிவிக்கின்றார்] புயல்விண் =மேக ஆகாசத்தையும், விமல மாம் விண் =பரிசுத்தமான மகா காசத்தையும், மூடர் =பாமரர்கள், வேறு காணார் =பின்னமாக அறியார்கள், அதுபோல் =அதுபோன்று,

சுமடர் = அறிவிலிகள், பிரம ஈசர்க்கும் = நிர்க்குணப் பிரமத்திற்கும் சகுண ஈசுரனுக்கும், ஒருமை தோன்ற காண்பார் = ஐக்கியத்தை ஸ்பஷ்டமாய்ப் பார்ப்பார்கள், பேதத்தைப் பாரார்கள் எ—று. 96

(அ—கை)

அப்படியானுல் பிரமத்திற்கும் ஈசுரனுக்கும் உள்ள பேதஞானம் எதனுலுண்டாமெனிற் கூறுகின்ருர்.

உபக்கிரம மாதிலிங் கங்களாற்
றாற்பரிய வொண்விசா ரத்தினுலே
விபுத்துவ மெனும்பரம சங்கமா
யாவிசெயன் மேவுவா னிவன்மகேசன்
சுபப்பிரத மெய்யறிவ னந்தமென
வேமறை துவக்கியுப சங்கரிக்கு
மபத்தமறு வாக்குக டிரும்புமெதி
னதனுல சங்கமென் றுணிவாகுமே. 97

(ப—ரை) உபக்கிரமமாதிலிங்கங்களால் = உபக்கிரமம் உபசம்மாரம் அப்பியாசம் அபூர்வதை பலம் அருத்தவாதம் உபபத்தியென்னுமாறு லிங்கங்களாலும், தாற்பரிய ஒண் விசாரத்தினுல் = சுருதியின் தாற்பரியத்தை நன்ருய் விசாரித்தலால், விபுத்துவம் எனும் பரம் அசங்கம் = வியாபகமாகிய பிரமமானது அசங்கமென்றும், மாயாவி செயல் மேவுவான் = மாயையையுடையவன் சகத்தைச் சிருஷ்டிப்பவனென்றும், இவன் மகேசன் = இவனே மகேசுரனென்றும், ஞானமுண்டாகுமென்பது எஞ்சி நின்றது, [சுருதியில் உபக்கிரம உபசம்மாரங்களுக்கு ஏக வடிவத்தைக் காண்பித்தலால் சொல்லப்பட்ட பிரமத்தின் அசங்கத்தன்மையை ஸ்பஷ்டஞ் செய்கின்ருர்] சுபப்பிரத மறை = சுகத்தைக் கொடுக்கும் சுருதியானது, மெய் அறிவு அனந்தம் என துவக்கி = சத்தியம் ஞானம் அனந்தமென்று ஆரம்பித்து, அபத்தம் அறு வாக்குகள் எதின் திரும்பும் = தோஷமற்ற வசனங்கள் எந்தப் பிரமத்தினின்றும் நிவர்த்தியாகின்றனவோ என்று, உபசங்கரிக்கும் = முடிக்கும், அதனுல் = இவ்வுபக்கிரம உப சம்மாரங்களினையிக்கத்தினுல், அசங்கம் என் துணிவு ஆகும் = பிரமம் அசங்கமென்று நிச்சய முண்டாகும் எ—று.

ஏகாரம் மூன்றும் அசை.

உபக்கிரமம் முதலிய ஆறுலிங்கங்களின் இலக்கணத்தை 63-வது செய்யுளின் உரையிற் காண்க. 97

(அ—கை)

மாயாவியாகிய ஈசுரனுக்கு சிருஷ்டி கருத்திருத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியைப் பொருளாற் தெரிவிக்கின்றார்.

மாயாவிவிஸ்வமதை யாக்குவானதிலனியன்
மாயையா லார்ப்புண்ணுவா
னோயாமலெனவேறு சுருதிசொலுமதனினு
லுண்டாக்குவோ னிறைவனும்
வீயாதவாநந்த மயவீசனுகுமிவன்
வெகுவாகு வோமெனப்பார்த்
தேயாததுயில்கனவ தாமுறைமைபோலவே
யிரணியக ருப்பவடிவாம். 98

(ப—ரை) மாயாவி விஸ்வமதை ஆக்குவான்=அந்தரியாமி உலகையுண்டுபண்ணுவான், அதில் = மாயாவியினுல் சிருஷ்டிக்கப் பட்ட அச்சகத்தில், அனியன்=சீவனுனவன், மாயையால் ஓயாமல் ஆர்ப்புண்ணுவான்=மாயையால் நிரந்தரம் கட்டப்படுவன்,என வேறு சுருதி சொலும்=என்று மற்றொரு உபநிடதமானது கூறுகின்றது, அதனினுல்=இங்ஙனம் சுருதி கூறுவதால், இறைவன் உண்டாக்கு வோன் ஆம்=பரமேசுரனே சிருஷ்டி கருத்தாவாம், [ இங்ஙனம் ஆனந்தமய வடிவ ஈசுரனுக்கு சகத்தின் காரணத்தன்மையைப் பிரதி பாதித்து அவனினின்றும் உலகினுற்பத்திப் பிரகாரத்தைக் கூறுகின் ருர்] வீயாத ஆனந்தமய ஈசனுகும் இவன்=சத்திய ஆனந்தமயனுகிய இப்பரமேசுரன், வெகு ஆகுவோம் எனப்பார்த்து=அநேக வடிவங் களாவோமென்று ஈக்ஷித்து, ஏயாத துயில் கனவதாம் முறைமை போல்=கெடாத சுழுத்தியானது சொப்பனமாவது போன்று, இரணிய கருப்ப வடிவாம்= இரண்ணியகருப்ப ரூபமாயினன் எ—று. 98

(அ—கை)

அந்த இந்த ஆன்மாவினின்றும் ஆ கா ச ம் உண்டாயிற்று என்பது முதலிய சுருதியில் கிரம சிருஷ்டி கேட்கப்படுகிறபடியினுலும் "இவ்வனைத்தையும் சிருஷ்டித்தது" என்று யுகபற்சிருஷ்டி கேட்கப்படுகிறதாலும் கொள்ளத்தக்கது எது? தள்ளத்தக்கது எது? என்ருகாங்கைஷயுண்டாக சுருதி யுத்திகளோடு கூடினதால் இரண்டு பக்ஷங்களும் கொள்ளத்தக்கதெனக் கூறுகின்ருர்.

இந்தவுலகாதலிரு வகைசுருதியுடைமையா
லியலாக வேனுமொன்ருய்
வந்ததெனவேனுமறை முறையுணர்தல்வேண்டுமிரு
வகைமையினையுங் கண்டனந்
தந்துருவுளோன்சூக்க தேகனெனு நாமனே
சகலவுயிர் மிக்குருவனு
மெந்தெவையுநானெனலி னிச்சைஞானங்கிரியை
யேயும்வல் லபனுகுமே. 99

(ப—ரை) இந்த உலகு ஆதல் = இச்சகத்தின் சிருஷ்டியை, இருவகை சுருதியுடைமையால் = (இரண்டு பிரகாரமான சிருஷ்டியைப் போதிக்கின்ற) இரண்டு பிரகாரமான சுருதியிருத்தலால், இயலாக வேனும் = கிரமமாகவாவது, ஒன்ருய் வந்தது எனவேனும் = யுகபத்தாகவாவது, மறைமுறை உணர்தல் வேண்டும் = சுருதியினநுசாரமாக அறியவேண்டும், [அவ்விருவகைச் சிருஷ்டியில் உபபத்தியைக் கூறுகின்ருர்] இருவகைமையினையும் கண்டனம் = சொப்பனத்தில் கிரமமுடையதும் கிரமமின்றியதுமாகிய இருவிதப் பொருள்களையும் அநுபவித்துளேம், [இரண்ணியகருப்பனது சொரூபத்தை நிரூபணஞ் செய்கின்ருர்] தந்து உருவுளோன் = சூத்திரம் போன்ற சொரூபமுடையவன், அதாவது நூலானது வேஷ்டியில் அநுசூதமாயிருப்பதுபோல சகத்தில் அநுசூதமான சொரூபமுடையவனுகிய சூத்திரான்மாவும், சூக்க தேகன் எனும் நாமன் = சூக்கும தேகனெனும் பெயரையுடையவனும், சகல உயிர்மிக்கு உருவனும் = இலிங்க தேகத்தையுபாதியாக உடைய சகல சீவர்களின் சமஷ்டி வடிவனும் ஆவன் [அந்த இரண்ணிய கருப்பனது சமஷ்டித் தன்மையிலேது கூறுகின்ருர்] எந்தை = எமது பிதாவாகிய இரண்ணியகருப்பன், எவையும் நான் எனலின் = சகல

லிங்க சரீரங்களையும் நான் என்று அபிமானஞ் செய்தலின், [இன்னும் அவர் எப்படியிருக்கின்றரெனிற் கூறுகின்றார்] ஏயும் இச்சை ஞானம் கிரியை வல்லபன் ஆகும்=பொருந்தாநின்ற இச்சை ஞானம் கிரியையாகிய சக்தியுடையவனும் ஆவன் எ—று.

எந்தையென்பது எந்து என கடைக்குறையாயிற்று.

ஏ—அசை.

இங்கே கிரமசிருஷ்டியென்னும் சத்தத்தால் சிருஷ்டி திருஷ்டி வாதம் (வியாவகாரிக பக்ஷம்) சொல்லப்படுகின்றது. அக்கிரமசிருஷ்டி யென்னும் சொல்லால் திருஷ்டி சிருஷ்டி வாதம் சொல்லப்படுகின்றது.

சில நூலாசிரியர் ஸ்தூல புத்தியுடைய புருஷர்கள் அறிதற் பொருட்டுச் சிருஷ்டி திருஷ்டி வாதம் சொல்லியிருக்கிறார்கள்.

முதலில் சிருஷ்டி இருக்கின்றது. பின் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களின் சம்பந்தத்தால் திருஷ்டி (ஞானம்) உண்டாகின்றது என்பது சிருஷ்டி திருஷ்டியென்னும் சத்தத்திற்கு அர்த்தமாம். இந்தப் பக்ஷத்தில் கடமுதலிய அநாத்ம வஸ்துக்களுக்குச் சேதனத்தைப் போல அஞ்ஞாத சத்தையாம். சுத்திரஜத முதலியவற்றிற்கு ஞாத சத்தையாம். கடமுதலிய அநாத்ம பதார்த்தங்கள் வியாவகாரிக சத்தையுடையனவாம். சுத்தி வெள்ளி முதலியவைகள் பிராதிபாஸிக சத்தையுடையனவாம். கட முதலிய அநாத்ம பதார்த்தங்கள் பிரமாணத்திற்கு விஷயமாம். ஆகையால் குரு சாஸ்திர முதலியனவும் வியாவகாரிகமாம்.

திருஷ்டி சிருஷ்டி பக்ஷத்தில் சகல அநாத்ம பதார்த்தங்களுக்கும் ஞாதசத்தையேயாம். சுத்திரஜத முதலியவற்றைப் போலச் சகல அநாத்ம பதார்த்தங்களும் பிராதிபாஸிகமாயிருத்தலால் சாக்ஷி பாஸியமாம். பிரமாணத்திற்கு விஷ்யமன்று. அவற்றுள் பிரமாணத்திற்கு விஷயமாவதாகத் தோற்றுதல் பிராந்தி வடிவமேயாம். பதார்த்தங்களைக் காணுதலே உற்பத்தியும் காணமையே நாசமுமாம். அவன் இத்தேவதத்தன் என்பது முதலிய பிரத்தியபிஞ்ஞையும் நதி தீபஜோதி இவற்றின் பிரவாகம் போலும் சொப்பன பதார்த்தங்களின் பிரத்திய பிஞ்ஞையைப்போலும் பிராந்திவடிவமாம். குரு சாஸ்திர முதலியவைகளும் பிராதிபாஸிகமாம். இந்தத் திருஷ்டி சிருஷ்டி பக்ஷத்தில் இரண்டு

பேதமுண்டு. திருஷ்டியே (ஞான சொரூபமே) சிருஷ்டியாம். ஞானத்திற்கு வேருக சிருஷ்டியில்லை. இது சித்தாந்த முக்தாவலி முதலிய கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கின்றது.

திருஷ்டியின் (ஞானத்தின்) சமகாலத்திலேயே சிருஷ்டி உண்டாகின்றது. ஞானத்திற்குமுன் அநாத்ம வஸ்துக்களில்லை. இப்படி ஆகர கிரந்தங்களில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இது அத்வைத சாஸ்திரங்களிலும் சம்மதமாம். இவ்வாறு சிருஷ்டி திருஷ்டி வாதம் திருஷ்டி சிருஷ்டி வாதம் என்னுமிரண்டும் சுருதியனுசாரமாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் வியாவகாரிக பொன் முதலிய பதார்த்தங்களினின்றும் குண்டல முதலிய காரியங்கள் சித்திக்கின்றன. பிராதிபாஸிகங்களினின்றும் உண்டாகிறதில்லை என்ருலும் அதிஷ்டான ஞானத்தால் பாதமும் சத்தசத்திற்கு விலக்ஷணத்துவ (பாத யோக்கியத்துவ)மாகிய அநிர்வசநீயத்தன்மையும் தனது அதிஷ்டானத்தில் பாரமார்த்திக அபாவமுடைமையும் வியாவகாரிக பிராதிபாஸிகங்களிலிரண்டிலும் சமமாம். ஆதலால் வியாவகாரிக பக்ஷத்தை ஒப்புதலாலும் தோஷமில்லை. இப்படி அதிகாரி பேதத்தால் இரண்டுபக்ஷங்களும் சுருதியிலும் அத்வைத கிரந்தங்களிலும் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆகரக்கிரந்தம் = பாஷியம். 99

(அ—கை)

இரண்ணியகருப்பாவஸ்தையில் சகத்தின் பிரதீதியில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்.

புலருமுனு மிரவின்முற் பொழுதுமிரு
திருளினுட் புகுமுலக மென்னமறைவா
யிலகுமிது கட்டிதப் படமசி
தனுலிலாஞ் சிதமான லெனவிறையுருப்
பலவிலிங் காகார மதினிலாஞ்
சிதமுரும் பயிர்சாக சாதமேனும்
விலகலற் றெங்குமுளே யாதல்போல்
விமலமாய் மிருதுவிச் சகமுளேயுமாம். 100

(ப—ரை) புலரும் முனும் = உஷக்காலத்திலும், இரவின் முற்பொழுதும் = பிரதோஷகாலத்திலும், மிருது இருளினுள் = மந்த அந்த

காரத்தில், புகும் உலகம் என்ன = சம்பந்தித்துள்ள உலகம் விளங்குவதுபோன்று, மறைவாய் இது இலகும் = (இரண்ணிய கருப்பாவஸ்தையில்) அஸ்பஷ்டமாக இச்சகத்து விளங்கும், [இங்ஙனம் உலகப் பிரசித்தமான திருஷ்டாந்தத்தைக் கூறி இச்சித்திரதீபத்தின் முதற் செய்யுளிற் கூறப்பட்ட இலாஞ்சித படத்தைத் திருஷ்டாந்தமாக்குகிறார்] கட்டிதபடம் = கஞ்சி பூசிய வஸ்திரம், மசிதனுல் இலாஞ்சிதமாதல் என = மையின் விகாரவடிவ ஆகார விசேஷங்களால் இலாஞ்சித வஸ்திரமாவது போல், இறை உரு = மாயாவியாகிய பரமேசுரனது சரீரம், பல இலிங்க ஆகாரமதின் = அபஞ்சீகிருத பூத காரியங்களான சகல லிங்க சரீரங்களினுலும், இலாஞ்சிதம் உறும் = இலாஞ்சிதமாம், [சீடனது புத்தியிலேறும் பொருட்டுத் தனது சாமர்த்தியத்தால் வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்] பயிர் சாக சாதமேனும் = நெற்பயிர் முதலியனவும் புடலை அவரை முதலிய செடி கொடிகளும், விலகல் அற்று எங்கும் முளையாதல் போல் = நீக்கமின்றியெவ்விடங்களிலும் அங்குரத்தையுடையனவாய் விளங்குவது போன்று, விமலமாய் = (இரண்ணியகருப்பர்) கோமளமாய், மிருது = நுட்பமாய், இச்சக முளையும் ஆம் = இச்சகத்தின் அங்குரமும் ஆவர் எ—று. 100

(அ—கை)

இங்ஙனம் சூத்திரான்மாவின் சொரூபத்தை வெளிப்படுத்தி அவரது அவஸ்தா விசேஷமும் பஞ்சீகிருத பூத காரியத்தையுபாதியாக வுடையதுமான விராட் புருஷனை மூன்று திருஷ்டாந்தங்களால் வெளிப்படுத்துகின்றார்.

ஆதபத்திலகுலகும் வன்னநிறைபடமுமுதிர்
வாம்பயிரு மெனநிகழுரு
வேதமில்விராட்டாகு மிதைவிசுவரூபமே
யெனுமத்தி யாயமதுவும்
சாகபவுருடசூத்த மும்புகலுமயனுதி
தம்பாந்த மானவெல்லாந்
தீதகலு மிவ்விறைவ னுடையவய
வங்களாய்த் திகழுமென மொழிவர்பெரியோர். 101

(ப—ரை) ஆதபத்து இலகு உலகும் = சூரியோதயத்தின் பின்னர் வெய்யிலால் பிரகாசிக்கப்பட்ட உலகமும், வன்ன நிறைபடமும் = வர்ணங்களால் பூரிக்கப்பட்ட ரஞ்சிதவஸ்திரமும், முதிர்வாம் பயிரும் என = விளைந்தசஸ்யங்களும்போல, நிகழ்உரு = விளங்காநின்ற ஸ்பஷ்ட சரீரத்தையுடைவன், ஏதம் இல் விராட்டாகும் = தோஷமின்றிய விராட்டென்று சொல்லப்படும், [அவனது இருப்பில் பிரமாணங் கூறுகின்றார்] இதை = இவ்விராட் புருஷனை, விசுவரூபமே எனும் அத்தியாயமதுவும் = பகவத்கீதையில் பதினொன்றாவதான விசுவரூப அத்தியாயமும், சாதபவுருட சூத்தமும் = சிறந்த புருஷ சூக்தமும், புகலும் = பிரதிபாதிக்கும், [விசுவரூப அத்தியாயம் முதலியவற்றில் எப்படிப்பட்ட வடிவம் சொல்லப்பட்டது என்னும் ஆகாங்க்ஷையுண்டாக பிரம்மா முதல் ஸ்தம்ப பரியந்தமான சகத்வடிவம் கூறப்பட்டதெனக் கூறுகின்றார்] அயனுதிதம்பாந்தம் ஆன எல்லாம் = பிரமன் முதல் ஸ்தம்ப பரியந்தமான அனைத்தும், தீது அகலும் இவ்விறைவனுடை = தோஷமற்ற இவ்விராட் புருஷனுடைய, அவயவங்களாய் திகழும் என = உறுப்புக்களாய் விளங்குமென்று, பெரியோர் மொழிவர் = மகான்கள் கூறுவார்கள் எ—று. 101

(அ—கை)

இவ்வளவு கூறியதால் பிரகிருதத்தில் என்ன சித்தித்தது என்னுஞ் சங்கைக்கு அந்தரியாமி முதல் குந்தால பரியந்தமான வஸ்துக்களனைத்தும் ஒவ்வொன்றும் ஈசுர சொரூபமாகப் பூசிக்கத்தக்கதெனக் கூறுகின்றார்.

ஈசசூத்திரவிராட் டயன்விண்டு
சிவனிந்த்ர னெரியும்விக் கினபைரவர்
மாசின்மயிராலமொடு மாரிராக்கதர்யட்சர்
வருணங்கண் மிருகபக்கி
வீசுதருயவமாதி யப்புசிலைமண்காட்ட
மிளிர்வாச்சி யாதியெல்லாம்
நேசமுடனிறைவடிவ மென்றுபூசிக்கலாய்
நிகழ்பயனளிப்பதாமே. 102

(ப—ரை) ஈச = அந்தரியாமியும், சூத்திர = இரண்ணியகருப்ப

னும், விராட்டு = விராட் புருஷனும், அயன் = பிரம்மாவும், விண்டு = விஷ்ணுவும், சிவன் = உருத்திரனும், இந்திரன் = தேவேந்திரனும், எரி = அக்கினியும், விக்கின பைரவர் = விக்கினேசுரரும் பைரவரும், மாசு இல் மயிராலம் ஒடு = தோஷமின்றிய மயிராலமும், மாரி = மாரியம்மனும், ராக்கதர் = இராக்ஷஸர்களும், யக்ஷர் = யக்ஷர்களும், வருணங்கள் = பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களும், மிருகபக்கி = பசு குதிரை முதலிய மிருகங்களும் பக்ஷிகளும், வீசுதரு = காற்றை வீசுகின்ற அரசு ஆல் மா முதலிய விருக்ஷங்களும், யவம் ஆதி = யவை விரீஹிதிருணம் முதலியவைகளும், அப்பு = ஜலமும், சிலே = பாஷாணமும், மண் = மிருத்திகையும், காட்டம் = தாருவும், மிளிர்வாச்சியாதி = விளங்குகின்ற வாச்சிகுந்தாலம் முதலியவைகளும், எல்லாம் = ஆகிய அனைத்தும், நேசமுடன் = விசுவாசத்தோடு, இறை வடிவம் என்று பூசிக்கலாய் = பரமேசுரனது திருமேனியாமென்று கருதி ஆராதிக்கப் பட்டவர்களாய், நிகழ்பயன் அளிப்பதாம் = விளங்காநின்ற அப்பூசைக் குரிய பலனைக் கொடுப்பவராவர் எ—று. 102

ஏ—அசை.

(அ—கை)

அந்த ஈசுரனை எப்படியெப்படியுபாசிக்கிறுர்களோ அப்படியப்படியாகின்றுர்கள் என்னும் சுருதியானது அந்தந்த ஈசுர பூசையினுல் அந்தந்த பலனுண்டாமென்பதில் பிரமாணமாமெனக் கூறுகின்றுர்.

அவ்வண்ண றனையெந்த முறைமையாற்
பூசிப்ப ரந்தமுறை பயனையடைவார்
பொய்வண்ண மற்றபூச் சியபூசை
யின்றெடர்பிற் போதுபய னுயர்வுதாழ்வா
மெய்வண்ண முத்திதான் பிரமதத்
துவஞான மேவினல துண்டாகுமோ
தவ்வலறு தன்னனவை யன்றியேதற்கனவு
தவிருமோ விதுபோலவே. 103

(ப—ரை) அவ்வண்ணல்தனை = அந்தப் பரமேசுரனை, எந்த முறைமையால் பூசிப்பர் = எந்தப் பிரகாரமாக உபாசிப்பார்களோ, அந்த முறைபயனை அடைவார் = அந்தப்பிரகாரமாகப் பலனையடை

வார்கள், [அற்றேல் எல்லோருக்கும் ஈசுரத்தன்மை இருக்கின் பலத்தின் வேற்றுமை எதனுல் என்னுஞ் சங்கைக்கு பூசிக்கத்தகுந்த அதிஷ்டான தேவதைகளுக்கும் பூசையாகிய அருச்சனை முதலியவைகளுக்கும் சாத்துவிகம் முதலிய பேதத்தால் பயனுக்கு வேற்றுமையாமெனக் கூறுகின்ருர்] பொய்வண்ணம் அற்ற=பொய்மை இல்லாத, பூச்சிய பூசையின் தொடர்பின் = ஆராத்திய ஆராதனைகளினனுசாரத்தால், போதுபயன் உயர்வு தாழ்வாம்=உண்டாகின்ற பலத்தின் ஏற்றக் குறைவுகளாம், [சாம்சாரி கபலத்தின் சித்தியிங்ஙனமிருக்குக. முத்தி எதனுபாசனையாலுண்டாகும் என்னுஞ் சங்கைக்கு ஞானத்தாலன்றி வேறெதனுலுமுண்டாகிறதில்லை எனக் கூறுகின்ருர்] மெய்வண்ணம் முத்திதான்=யதார்த்தமான மோக்ஷமானது, பிரம தத்துவ ஞானம் மேவின் அலது உண்டாகுமோ=பிரமவடிவ தத்துவத்தினது ஞானத்தையடைந்தாலன்றி வேறு பிரகாரத்தாலுண்டாகுமோ,[அதில் திருஷ்டாந்தம் கூறுகின்ருர்] தவ்வல் அறு=சலனமற்ற திடமான, தன் நனவை அன்றியே=தனது சாக்கிரத்தாலல்லாமல், தன் கனவு தவிருமோ=தனது சொப்பனம் நீங்குமா, இதுபோல = இத்திருஷ்டாந்தம் போல அறிக எ—று.

ஏ—அசை.

தனது சாக்கிரமின்றி தனது நித்திரையாற் கற்பிக்கப்பட்ட சொப்பனம் எப்படி நீங்குகிறதில்லையோ அதுபோல பிரமஞானமின்றி பிரமத்தினஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட தனது சம்சாரம் நிவர்த்தியாகிறதில்லை என்பது கருத்து. 103

(அ—கை)

அற்றேல் துவைத நிவர்த்திவடிவ முத்திக்கு சொப்பன திருஷ்டாந்தத்தால் தத்துவ ஞானத்தால் சாதிக்கப்படுந்தன்மை கூறுதல் பொருந்தாது. நிவர்த்திக்கத் தகுந்த துவைதத்திற்கு சொப்பன சமத்தன்மையின்மையின் என்ருசங்கித்து விபரீதமாகக் கிரகிக்குந் தன்மையால் சொப்பன சமத்துவமிருக்கின்றதேயாம். "இந்த மூன்றும் (அதாவது சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியாகிய மூன்றும்) சுழுப்தமும் சொப்பனமும் மாயா மாத்திரமுமாம்" என சுருதியாற் கூறப்பட்டிருத்தலால், அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்ருர்.

ஈசசீவாதியுரு வாகியறிவறியாமை
யென்னும்வடி வாஞ்செகமெலா
மாசிலாவத்துவித மாம்பிரமதத்துவ
மதன்கணே கனவாகுமே
மாசிலானந்தமய விஞ்ஞானமயராகு
மற்றீச சீவரென்போர்
நீசமாமாயையா லிவர்கள்கற்பிதர்களா
நேர்ந்ததவ ரான்முழுதுமே. 104

(ப—ரை) ஈச சீவாதி உருவாகி=ஈசுர சீவாதி ரூபத்தாலிருப்பதாகிய, அறிவு அறியாமை வடிவாம் என்னும் செகம் எலாம்=சேதனு சேதனுன்மகமான செகத்தனைத்தும், மாசு இலா அத்துவிதமாம் பிரம தத்துவமதன்கண் = தோஷமற்ற அத்துவிதீயப் பிரமத்தில், கனவாகும்=சொப்பனமாம், [அப்படியானல் பிரமத்தோட பின்னமானதால் ஈசுரசீவர்களுக்கு செகத்தினுளடங்குந் தன்மையெப்படியென்னுஞ்சங்கைக்கு அவ்வீசுர சீவர்கள் மாயாகற்பிதராகையால் செகத்தினுளடங்குவரெனக் கூறுகின்ருர்] மாசுஇல் ஆனந்தமய விஞ்ஞான மயராகும் ஈச சீவரென்போர் இவர்கள்=குற்றமற்ற காரணுபாதிக காரியோபாதிகரான ஆனந்தமய விஞ்ஞானமயரென்னும் இவ்வீசுரசீவர்கள், நீசமாம் மாயையால் கற்பிதர்களாம் = இழிவாகிய மாயையால் கற்பிதராவர், அவரால்=அவ் ஈசசீவர்களால்,முழுதும் நேர்ந்தது=சகலமும் கற்பிக்கப்பட்டது எ—று.

ஏகாரம் மூன்றும் அசை. மற்று—அசை. 104

(அ—கை)

அவ்விருவராலும் அனைத்தும் கற்பிக்கப்பட்டதெனக் கூறப்பட்டது. அவற்றுள் யாரால் எவ்வளவு கற்பிக்கப்பட்டதென இச்சையுண்டாகக் கூறுகின்ருர்.

நோக்கமுதற் பிரவேசம் வரையுறு
சிருட்டிதா னுவலிறை வனுற்செய்ததாஞ்
சாக்கிரம தாதிநிரு வாணம்வரை
யானசமு சாரமுயிர் செய்ததாகும்
தாக்கரு மசங்கவத் துவிதமா
கியபிரம தத்துவந் தனையுணர்கிலார்
வீக்குமா மோகமய மானசீ
வேசர்பால் வீண்கலகமே செய்குவார். 105

(ப—ரை) நோக்கம் முதல் பிரவேசம் வரை உறுசிருஷ்டிதான் = ஈக்ஷணம் முதல் பிரவேச பரியந்தமாகப் பொருந்திய சிருஷ்டி, நுவல் இறைவனுல் செய்ததாம் = சொல்லா நின்ற பரமேஸ்வரனுற் கற்பிக்கப்பட்டதாம், (அதாவது "உலகங்களைச் சிருஷ்டிப்பேனுக என்று ஈக்ஷணஞ்செய்தார்" என்பது முதல் "இந்தச் சிரசின் மத்தியிலுள்ள பிரமரந்திரமாகிய துவாரத்தால் அடைந்தார்.அதாவது சரீரத்தில் சீவரூபமாகப் பிரவேசித்தார்" என்பது பரியந்தமான சுருதியால் பிரதிபாதிக்கப்பட்ட சிருஷ்டி ஈசுரனைக் கருத்தாவாகவுடையது) சாக்கிரமது ஆதி நிருவாணம் வரையான சமுசாரம் = நனவு முதல் சுழுத்தி பரியந்தமான சமுசாரம், உயிர் செய்ததாகும் = சீவனுற் கற்பிக்கப்பட்டதாம், (அதாவது "அவனுக்கு மூன்று அவஸ்தைகள்" என்பது முதல் "அவன் இந்தப் புருஷ வடிவ வியாபகப் பிரமத்தைப் பார்த்தான்" என்பது பரியந்தமான சுருதியால் பிரதிபாதிக்கப்பட்ட சமுசாரம் சீவனைக் கருத்தாவாகவுடையது, [இப்படிப் பிரமத்திற்கே பாரமார்த்திகத் தன்மையிருக்குமேல் வாதிகளுக்கு சீவேசுர விஷயகமான விவாதமெதனுல் உண்டாகிறது என்னுஞ் சங்கைக்குச் சுருதியால் சித்தித்த தத்துவ ஞானமின்மையாலெனக் கூறுகின்றுர்] தாக்கு அரும் = தள்ளத் தகாததாய், அசங்க அத்துவிதமாகிய பிரமதத்துவந்தனை உணர்கிலார் = சங்கமற்றதாய் துவிதமற்றதாய் உள்ள பிரமவடிவ தத்துவத்தை அறியாதவர்கள்,வீக்குமா மோகமயமான சீவேசர்பால் = பந்திப்பிக்கிற மகாமாயையாற் கற்பிக்கப்பட்ட சீவேசுரர்களிடத்து, வீண் கலகமே செய்குவார் = வியர்த்தமாகவே சண்டை செய்வார்கள் எ—று.

தாக்குதல் = தள்ளுதல். 105

(அ—கை)

சீவேசுர விஷயமான வாதிகளின்விப்பிரதிபத்தி அஞ்ஞான மூலமாமேல் அவ்வாறு அவ்வாதிகள் உம்மால் அறிவிக்கத் தக்கவராவர் என்னுஞ் சங்கைக்கு வீண் பரிசிரமமாதலால் எம்மால் அவர்களுக்கு அறிவிக்க வேண்டியதில்லையெனப் பரிகரிக்கின்றுர்.

தத்துவந ணிட்டையரை யாங்கண்டு
சந்ததமுஞ் சந்தோட மிக்காருவேஞ்
சித்தநிலே பெற்றிலரை நோக்கின்மிக்
கயருவேந் தியக்கினர்க ளொடுபேசிலேஞ்
செத்தையர்ச் சகராதி யோகர்கடை
யீசன்மய றுன்னிநின் றுளராகுமாற்
பித்தனுல காயதன் முதற்சாங்கி
யாந்தமுயிர்ப் பிரமையினை மேவினர்களாம். 106

(ப—ரை) யாம்=யாங்கள், தத்துவநல்நிட்டரைக்கண்டு=நல்ல பிரம நிஷ்டர்களைப் பார்த்து, சந்ததமும்=எப்போதும், மிக்கு சந்தோடம் ஆருவேம் = மிகுந்த சந்தோஷத்தையடைவேம், சித்தநிலே பெற்றிலரை நோக்கின் = சித்தசாந்தி இல்லாத அன்னியரைப் பார்க்கின், மிக்கு அயருவேம்=மிகவும் சோகத்தையடைவோம்,தியக்கினர்களொடு பேசிலேம் = பிராந்தர்களோடு விவாதஞ் செய்யேம், [ஈசுரனிடத்தும் சீவனிடத்தும் விவாதமுற்ற வாதியரை வேறு பிரித்துத் தெரிவிக்கின்றார்] செத்தை அர்ச்சகராதி யோகர்கடை=புல்லைப் பூசிக்கின்றவர் முதல் யோகி பரியந்தமாக அனைவரும், ஈசன்மயல் துன்னி நின்றுளராகும் = பரமேசுரனிடத்துப் பிராந்தியையடைந்துள்ளார்கள், பித்தன் உலகாயதன் முதல்= உன்மத்தனை தேகான்ம வாதியாகிய உலகாயதன் முதல், சாங்கிய அந்தம் = கூடஸ்தான்ம வாதியாகிய சாங்கியன் பரியந்தம், உயிர்ப்பிரமையினை மேவினர்கள் = சீவனிடத்துப் பிராந்தியையடைந்துள்ளார்கள் எ—று. ஆம், ஆல்—அசை. 106

(அ—கை)

அவர்களுக்குப் பிராந்தியையுடையதாந்தன்மையெதனுலெனிற் கூறுகின்றார்.

அத்துவித மாம்பிரம வத்துதெரி
யாதபோ தனைவர்களு மேபிராந்தர்
முத்தியவர் கட்கேது மற்றின்ப
மிங்கேது முதன்மைய தமத்தன்மைதான்
பத்திவரு மெனின்வருக வதுகொடேனை
சொப்பனம் பற்றிவரு முலகினேடு
மெய்த்துவரு பிச்சையொடு நனவையுற்
றவரென்று மேய்வுரு ராகுமன்றே. 107

(ப—ரை) அத்துவிதமாம் பிரமவத்து தெரியாதபோது = அத்துவிதமாகிய பிரமதத்துவத்தையறியாதபோது, அனைவர்களும் பிராந்தரே = சகலரும் மயக்கமுடையவரே யாவர், [அதனுலென்னையெனிற் கூறுகின்ருர்] அவர்கட்கு முத்தி ஏது = அப்பிராந்தர்களுக்கு மோக்ஷம் இன்ரும், [தாம் பற்றிய பக்ஷத்தைப் பிரதிபாதனஞ் செய்வதில் அபினிவேசத்தால் சித்த விசிராந்தியின்மையின் அவருக்கு இகலோக சுகமும் இன்ருமெனக் கூறுகின்ருர்] இங்கு இன்பம் ஏது = இவ்வுலகிலும் சுகம் இன்ரும் [அற்றேல் அவர்களுக்குப் பிரம வித்தையின்றேனும் அன்னிய வித்தையினுலுண்டான உயர்வு தாழ்வு காணப்படுகிறதே. உயர்வை முன்னிட்டு சிலருக்குச் சுகம் கூடுமென்னுஞ் சங்கைக்கு அச்சுகம் முமுக்ஷுக்களால் திரஸ்கரிக்கத்தக்கதெனத் திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்] முதன்மை அதமத்தன்மை பத்தி வரும் எனின் = உத்தமத்தன்மை அதமத்தன்மைகள் (அப்பிராந்தருக்கு இதர வித்தையால்) பொருந்திவருமென்று சொல்லில், வருக = உண்டாகட்டும், அது கொடு எனை = அதனுலென்னபயன், சொப்பனம் பற்றிவரும் உலகினேடும் = கனவில் உண்டாகும் இராச்சியத்தோடும், எய்த்து வருபிச்சையொடும் = சொப்பனத்தில் வருத்திவரும் பிச்சையோடும், நனவை உற்றவர் = சாக்கிரத்தை அடைந்தவர்கள், என்றும் ஏய்வுருர் ஆகும் = எப்போதும் சம்பந்தத்தையடையார்கள் எ—று.

மற்று, தான், அன்று, ஏ—அசைநிலைகள்.

பற்றி என்பது எதுகை நோக்கிப் பத்தி எனத் திரிந்தது. 107

(அ—கை)

சீவேசுரவாதங்களுக்கு மோக்ஷகாரணத் தன்மையின்மையின் முமுக்ஷுக்களால் அவைகளில் புத்தி பிரவேசிக்கத்தக்கதல்ல என முடிக்கின்ருர்.

அத்தகையின் முத்தியை நயந்தவர்கள்
சீவேச ரதுவிவா தங்களின்மதி
வைத்திடுதல் செய்கையல பிரமதத்
துவநாடி மதிசெய்ய வேண்டுமன்றே
தத்துவவுணர்ச் சியவை தந்திடுவ
தேற்பூர்வ பட்சமாச் சாருவதனு
லித்துணையி னுலவச னுகியவை
களின்மூழ்கி யிடருரு தொழிதிநீயே. 108

(ப—ரை) அத்தகையின்=ஆதலால் அதாவது சீவேசவாதம் மோக்ஷகாரணமன்மையினுல், முத்தியை நயந்தவர்கள்=முமுக்ஷுக்கள், சீவேசரது விவாதங்களில்= சீவவாதத்திலும், ஈசுரவாதத்திலும், மதி வைத்திடுதல்=புத்தியைப் பிரவேசித்தல், செய்கை அல=உரிமை அன்று,[அப்படியானுல் யாது செய்யத்தக்கதென்னுஞ் சங்கைக்கு சுருதி விசாரத்தால் பிரமஞானமே செய்யத்தக்கதெனக் கூறுகின்ருர்] பிரம தத்துவம் நாடி = பிரமவடிவ தத்துவத்தை நன்கு விசாரித்து, மதி செய்ய வேண்டும்=அறிய வேண்டும், [அற்றேல் பிரம்ம சொரூபத்தின் நிச்சயத்தின் பொருட்டு சீவேசரது சொரூபம் ஹேயத்தன்மையால் அறியத்தக்கது என்னுஞ் சங்கைக்கு அப்படியானுல்சீவேசவாதங்களில் புத்தி முடிக்கத்தக்கதன்றெனக் கூறுகின்ருர்] பூர்வபட்சமாச்சாருவதனுல்=பூருவபக்ஷமாகப் பொருந்துந்தன்மையால், அவை=அச்சீவேச வாதங்கள், தத்துவ உணர்ச்சி தந்திடுவதேல் = பிரமஞானத்தைக் கொடுக்குமாயின், இத்துணையினுல்=இவ்வளவு மாத்திரத்தால், அதாவது பூருவபக்ஷத்தன்மையால் தத்துவ உணர்ச்சிக்கு காரணத்தன்மை சம்பவத்தால், அவைகளில்=சீவேசவாதங்களில், அவசனுகி=பரவசனுகி அதாவது விவேகஞான சூனியனுய், மூழ்கி இடருருது ஒழிதிநீ= முழுகி துன்பத்தையடையாது ஒழிவாய் நீ எ-று. அன்று, ஏ-அசை. ஹேயம்=விடத்தக்கது. 108

(அ—கை)

சாங்கிய சாஸ்திரத்திலும் யோக சாஸ்திரத்திலும் சொல்லப் பட்ட சீவேசருக்கு சுத்த சித்துருபத்தன்மையிருத்தலால் அத்வைத வாதிகளாகிய தங்களாலும் அது கொள்ளப்படுதலால் அவருக்கு பூருவபக்ஷத்தன்மை அ.தாவது நீக்கப்படுந்தன்மை இன்ருமென வினவுகின்ருன்.

சாங்கிய மசங்கமொடு சித்துவிபு
சீவனெனுந் தான்வா றீசனுமெனத்
தூங்கியோகஞ் சொலுந் தத்துவப்
பொருளவர்கள் சுத்தரா மென்னினீகே
டீங்கிறத் துவமத னிரண்டுபொருள்
களுநமது சித்தாந்த மதனைமருவா
வோங்குமொரு மைப்போத முண்டாக
வப்பட்ச மோர்புடை யுடன்பாடதாம். 109

(ப—ரை) சாங்கியம் = சாங்கிய சாஸ்திரமானது, சீவன் அசங்கம் ஒடு சித்துவிபு எனும் = சீவான்மா அசங்கமும் சித்து ரூபமும் வியாபகமும் ஆம் என்று கூறும், ஈசனும் அவ்வாறு என = பரமேசுரனும் அப்படியே, அசங்க சித்து விபுவாமென்று, தூங்கியோகம் சொலும் = சீர் தூக்கி யோக சாஸ்திரம் கூறுகின்றது, சுத்தராம் அவர்கள் = (சாங்கிய யோகியருக்கு சம்மதரான) பரிசுத்தராகிய சீவேசர்கள், தத்துவப் பொருள் = தத்பத துவம்பதங்களின் அர்த்தங்களாம்,என்னின் = என்று சொல்லின், [சாங்கிய சாஸ்திரத்திலும் யோக சாஸ்திரத்திலும் சொல்லப்பட்ட சீவேசருக்கு சுத்த சித்துரூபத் தன்மையிருப்பினும் அவருக்கு வாஸ்தவ பேதத்தையவர்கள் அங்கீகரிக்கின்றபடியால் இது நமது சித்தாந்தமன்றெனக் கூறுகின்றார்] நீ கேள் = நீ உத்தரம் கேட்பாய், தீங்குஇல் தத்துவம் அதன் = குற்றமற்ற தத்பத துவம்தபங்களின், இரண்டு பொருள்கள் = இரண்டு வஸ்துக்கள், நமது சித்தாந்தமதனை மருவா = நமது சித்தாந்தத்தை அடையாவாம் அதாவது தத்பத துவம் பதங்களுக்கு இரண்டு வஸ்துக்கள் அன்றாம். மற்றோ ஒரே வஸ்துவாமென்பது கருத்து [அற்றேல் கூடஸ்த பிரம்மசத்தங்களால் சுத்த தற்பத துவம்பதங்களின் இலக்ஷியப் பொருள்கள் உம்மாலும் பின்னமாக நிரூபிக்கப்பட்டன என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] ஓங்கும் ஒருமைப்போதம் உண்டாக = உயர்வாகிய அத்துவிதஞானமுண்டாதற் பொருட்டு, ஓர்புடை அப்பட்சம் = ஒருவாறு அப்பேதபக்ஷம், உடன்பாடதாம் = சம்மதமாம் எ—று.

தான்—அசை நிலை. ஒடு—எண்ணுப்பொருளில் வந்தது.

உலகப் பிரசித்தமான பேதத்தை நிராகரிக்கும் வாயிலாக அவற்றினைக்கியத்தைப் பிரதிபாதனஞ் செய்தற்பொருட்டே அச்சீவேசுரர் பேதமாக அநுவதிக்கப்பட்டார். அவருக்கு பேதம் பிரதிபாதிக்கப்படுகிறதில்லையென்பது கருத்து. தூக்கியென்பது தூங்கி எனத் திரிந்தது.

109

(அ—கை)

அப்படியானால் பதார்த்த சோதனம் எதன் பொருட்டெனிற் கூறுகின்றார்.

ஆதியறுமாயையான் மோகமுற்றவர்சீவ
வனகரும் விலக்ஷணரென
போதமுறுவாரதனை நனிமாற்றவவைகளின்
போதுசோ தனைசெய்வதா
மாதலாலேயிவ ணுரித்தானதிட்டாந்த
மழகுறமுனம் புகன்றேங்
கோதறுகடாகாய மாவானமம்புவெளி
கொண்மூவின் வடிவமாமே. 110

(ப—ரை) ஆதி அறும் மாயையால் = அனாதியாகிய அவித்தையால், மோகம் உற்றவர் = விபரீதத்தையடைந்தவர்கள், சீவ அனகரும் = சீவேசுரர்கள், விலக்ஷணர் என = பேதமுடையராமென்று, போதம் உறுவார் = அறிவார்கள், அதாவது சீவனுக்கு கருத்திருத்தன்மை முதலியவற்றையும் ஈசுரனுக்கு சருவஞ்ஞத்தன்மை முதலிய குணங்களையும் பாரமார்த்திகமெனக் கருதுவார், ஆகையால், அதனை நனிமாற்ற = அம்மோகத்தையத்தியந்தம் நீக்கும்பொருட்டு, அவைகளின் = தத்துவம் பதார்த்தங்களின், போது சோதனை செய்வதாம் = மிகவும் சோதனை செய்யப்படுகிறது, [பதார்த்த சோதனத்தின் பிரகாரத்தையே தெரிவிக்க இச்சையுடையராய் அதனுபாயத் தன்மையால் முன்பு கூறிய திருஷ்டாந்தத்தை நினைப்பூட்டுகின்றார்] ஆதலாலே = எதனால் பதார்த்த சோதனம் செய்யத்தக்கதாமோ அக்காரணத்தாலேயே, இவண் = இவ்விடத்து, உரித்தான திட்டாந்தம் = யோக்கிய திருஷ்டாந்தம், அழகுற முனம் புகன்றேம் = அழகாக பூருவம் கூறியுள்ளேம், [அவை யாவையெனிற் கூறுகின்றார்] கோது அறு கடாகாயம் = குற்றமற்ற கடாகாயமும், மாவானம் = மகாகாசமும், அம்புவெளி = ஜலாகாசமும், கொண்மூவின் வடிவம் ஆம் = மேகாகாசமும் ஆம் எ—று.

ஈண்டு மாயா சத்தத்தால் தனது ஆசிரயத்தை மோகிப்பிக்கும் அவித்தை கொள்ளப்படுகிறது. ஏ—அசை. 110

(அ—கை)

பதார்த்த சோதனப் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

செலவிஞெடு மேகவிண் செலமேக
சேர்க்கையொடு சேர்ந்தன வவற்றினிலையாக்
குலவுகட வானுமா வானுநிரு
மலமாமிக் கொள்கையா னந்தமயனு
மிலகுவிஞ் ஞானமய னென்பவனு
மாயைமதி யின்வசர்க ளாமிவர்களி
னிலயமுறு கூடத்த ஞெடுபிரம
மென்பதுவு நிருமலம தென்னலாமே. 111

(ப—ரை) செலவின் ஒடு மேகவிண் = ஜலாகாசமும் மேகாகாசமும், செலமேக சேர்க்கையொடு சேர்ந்தன = ஜலமும் மேகமுமாகிய உபாதியின் அதீனமாயுள்ளன, [உபாதியின் அதீனமாதலால் அபாரமார்த்திகமாம்] அவற்றின் நிலையாக்குலவு = அச்சலாகாச மேகாகாசங்களின் ஆதாரமாக விளங்குகின்ற, கடவானும் மாவானும் = கடாகாசமும் மகாகாசமும், நிருமலமாம் = சுத்தமாம். அதாவது ஜலம் முதலிய உபாதி நிரபேக்ஷ ஆகாச மாத்திர வடிவமென்பது பொருள் [தாஷ்டாந்தம் கூறுகின்ருர்] இக்கொள்கை = இந்தப்பிரகாரம், இலகு ஆனந்தமயனும் விஞ்ஞானமயன் என்பவனும் = விளங்கா நின்ற ஈசுரனும் சீவனும், மாயை மதியின் வசர்களாம் = மாயையும் புத்தியுமாகிய உபாதிகளின தீனர்களாம், (ஆகையால் அபாரமார்த்திகர்) இவர்களின் நிலயம் உறு = இச்சீவேசுரர்களின் ஆதாரமாக இருக்கின்ற, கூடத்தன் ஒடு பிரமம் என்பதுவும் = கூடஸ்தனும் பிரமமும், நிருமலமது என்னல் ஆம் = பரிசுத்தமாமென்று சொல்லப்படும் அதாவது மாயையும் புத்தியுமாகிய உபாதிகளின் நிரபேக்ஷ சேதனமாத்திர சொரூபமாம் எ—று.

ஒடு எண்ணிடைச்சொல். ஏ—அசை. 111

(அ—கை)

அற்றேல் இரண்டு பதார்த்தங்களின் சோதனகோடியில் உபயோகமாயிருத்தலாலும் சாங்கிய யோகமாகிய இரு மதமுமங்கீகரிக்கத்தக்கதாமெனின் சொற்பமிது சொல்லப்படுகிறது. உலகாயுதர் முதலியோரது சாஸ்திரங்களும் அச்சோதனகோடியில் உபயோகமாக நம்மாலங்கீகரிக்கப்படுதலால் எனக் கூறுகின்ருர்.

இப்பக்க வுபயோக மாதலாற்
சாங்கியமு மெழில்யோக முங்கொள்வதேற்
றப்புற்ற வுடலன்ன மயபக்க
மாதலாற் றாஞக வுட்கோடியா
லெய்ப்பற்ற வான்மபே தத்திஞே
டுலகுண்மை யீசனய லெனுமும்மையு
மெய்ப்பட விடுக்கினப் பொழுதுசாங்
கியயோகம் வேதாந்தக் கோட்பாடதாம். 112

(ப—ரை) இப்பக்கம் உபயோகமாதலால்=இந்த பதார்த்த சோதனைப்பக்ஷத்தில் அநுகூலமாயிருத்தலால், சாங்கியமும் எழில் யோகமும் கொள்வதேல்=சாங்கிய மதமும் சிறந்த யோக மதமும் அங்கீகரிக்கப்படுமேல், தப்பு உற்ற உடல்=தோஷத்தோடு கூடிய இச்சரீரமானது, அன்னமயபக்கமாதலால்=அன்னமயத்தின் சோதனகோடியில் அநுகூலமாயிருத்தலால், தாஞக உட்கோடி = ஆன்மாவாக அங்கீகரிக்கத்தக்கது, [அப்படியாஞல் சாங்கிய யோகங்களுக்கு வேதாந்த விரோதித்தன்மையெதஞல் என்னுஞ் சங்கைக்கு ஆன்ம பேதம் சகத்தின் சத்தியத்தன்மை ஈசுவரன் சீவனைவிட வேறு என்னும் இம்மூன்றம்ஸத்தில் விரோதமாமெனக் கூறுகின்ருர்] எய்ப்பு அற்ற ஆன்ம பேதத்திஞேடு=குறைவின்றிய பரிபூரண ஆன்மாவின் பேதம், உலகு உண்மை=சகத்து சத்தியம், ஈசன் அயல்=ஈசுரன்அன்னியன், எனும் மும்மையும் = என்கின்ற இந்த மூன்றையும், மெய்ப்பட விடுக்கின் = யதார்த்தமாகப் பரித்தியாகஞ் செய்யின், அப்பொழுது= அப்போது, சாங்கிய யோகம்=சாங்கிய மதமும் யோக மதமும், வேதாந்தக்கோட்பாடதாம்=வேதாந்தத்திற்குச் சம்மதமாம் எ—று.

ஆல்—அசை. 112

(அ—கை)

சீவனது அசங்கத் தன்மை ஞானத்தாலேயே முத்தி சித்தித்தலின் அத்துவைத ஞானத்தாலென்னை பயன் என்னுஞ் சங்கைக்கு அத்துவித ஞானமின்றி அசங்கத்தன்மை முதலியதும் சம்பவிக்கிறதில்லை என்னும் அபிப்பிராயத்தை இருதயத்தில் வைத்துக்கொண்டு உத்தரங் கூறுகின்ருர்.

சங்கமிலி சீவனெனன் மாத்திரையி
ஞற்சொல்கிரு தார்த்தனு னென்னினக்காற்
கொங்குகமழ் மாலைசந் தனமாதி
மெய்மையெனல் கொண்டுகிரு தார்த்தனுவாய்
தொங்கலெழு வாய்க்குண்மை நேடலரி
ததுபோலச் சொற்றவான் மாத்தனக்குஞ்
சங்கமிலை யென்னலரி தாம்பண்பி
பண்பாய்த் தயங்குசக வீசர்பாலே. 113

(ப—ரை) சீவன் சங்கமிலி எனல் மாத்திரையினுல்=சீவன் அசங்கன் என்னும் ஞான மாத்திரத்தால், சொல் நான் கிருதார்த்தன் என்னின்=சொல்லாநின்ற யான் கிருதகிருத்தியனென்று சொல்லில், அக்கால்=அப்போது, கொங்கு கமழ் மாலை சந்தனம் ஆதி = வாசனை பரிமளிக்கின்ற பூமாலை சந்தனம் முதலியவற்றின், மெய்மை எனல் கொண்டு=நித்தியத் தன்மை ஞான மாத்திரத்தால், கிருதார்த்தன் ஆவாய் = கிருதகிருத்தியனுவாய், [அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்றுர்] தொங்கல் எழுவாய்க்கு=மாலை முதலியவைகளுக்கு, உண்மை நேடல் அரிது=நித்தியத் தன்மையைச் சம்பாதித்தல் அருமையாம், அதுபோல = அத்திருஷ்டாந்தம் போல, சொற்ற ஆன்மாத்தனக்கும் = சொல்லிய ஆன்மாவுக்கும், சங்கம் இலை என்னல் அரிதாம்=அசங்தத்தன்மையைச் சொல்லுதல் அசம்பவமாம், பண்பி பண்பாய் தயங்குசக ஈசர்பால்=விசேஷிய விசேஷணமாய் விளங்கா நின்ற சகத்தும் ஈசுரனுமிருக்குங்கால், அதாவது சகத்தும் ஈசுரனும் விசேஷிய விசேஷணமாய் விளங்கிக்கொண்டிருத்தலின் ஆன்மாவிற்கு அசங்கத் தன்மை சம்பவியாது என்பது பொருள் எ—று.

ஏ—அசை. 113

(அ—கை)

ஜகத்தும் ஈசுரனும் இருக்கின் ஆன்மாவிற்கு அசங்கத்தன்மை சம்பவியாதென்பதையே வெளிப்படுத்துகின்றுர்.

பிரகிருதி முன்போல் விரைந்துசங்
கத்திற் பிணித்திடு மவாறீசனு
மிருமைபெறு மிளையளை யொடுக்கிடுவ
ஞதலா லிவனுக்கு முத்தியேதோ
தரமிலவி வேகமே சங்கமொடு
நியமமுந் தருவதெனி னக்காலேயே
மருளதுறு சாங்கியளை வந்துமா
யாவாதம் வலிமையி னணைந்ததாமே. 114

(ப—ரை) பிரகிருதி=(சாங்கிய சம்மத திரிகுணான்மகமான சுதந்திர) மூலப்பிரகிருதி, முன்போல்=அவிசார காலத்திற் போன்று, விரைந்து சங்கத்தில் பிணித்திடும்=வேகமாய்ச் சம்சாரத்தில் பந்தப் படுத்தும், அவ்வாறு ஈசனும்=அப்படியே பரமேசுரனும், இருமை பெறும் இளையளை=புண்ணிய பாபமுடைய இச்சீவளை, ஒடுக்கிடுவன்=நியமனஞ் செய்வன், [திரண்ட பொருளைக் கூறுகின்ருர்] ஆதலால்=சங்கமும் நியமனமும் சம்பவித்தலால், இவனுக்கு முத்தி ஏது=இச்சீவனுக்கு மோக்ஷம் எப்படியுண்டாகும், [சங்கமும் நியமனமும் அஞ்ஞானத்தின்காரியமாதலால் விவேகஞானத்தால் அஞ்ஞானம் நிவர்த்தியாகும்போது மீண்டும் சங்காதியினுற்பத்தியெப்படியுண்டாமென்று சங்கிக்கின்ருன்] தரம் இல் அவிவேகமே=உயர்வின்றிய அஞ்ஞானமே, சங்கமொடு நியமமும் தருவதெனின்=தேகாதிகளோடு சம்பந்தத்தையும் ஈசனுல் நியமிக்கப்படுதலையும் செய்வது என்று சொல்லின், [இப்படியாமேல் அபசித்தாந்தத்தின் அடைவுண்டாமெனப் பரிகரிக்கின்ருர்] அக்காலே=அப்போது,மருளது உறு சாங்கியளை=மயக்கமுற்ற அதாவது துர்ப்புத்தியினையுடைய சாங்கியளை, மாயாவாதம் = மாயாவாதமானது, வலிமையின் வந்து அணைந்தது ஆம் = பலாத்காரத்தால் வந்து பொருந்தினதாகும் எ—று.

ஓ, ஏ—அசை.

அபிப்பிராயமிதுவாம்:- அஞ்ஞானமென்பது ஞானத்தின்அபாவமா? அல்லது ஞானத்தினும் வேரு அல்லது ஞானத்தின் விரோதியா? முதற் பக்ஷம் சரியன்று. அபாவ மாத்திரத்திற்குச் சங்கமும் பிரேரணையுமாகிய பாவ காரியத்தையுண்டாக்குந் தன்மை பொருந்தாமையின், இரண்டாவது பக்ஷமும் சரியன்று. ஞானத்தினும் வேருன கடாதி

களுக்கு சங்க காரணத் தன்மையைக் காணுமையின். மூன்ருவது பக்ஷத்தில் ஞானத்தின் விரோதி பாவ ரூப அஞ்ஞான சொரூபமேயாத லால் சாங்கியனுக்கு மாயாவாதப் பிராப்தியாம். 114

(அ—கை)

அத்துவிதத்தை அங்கீகரிக்கின் பந்தமோக்ஷ வியவஸ்தை பொருந்தாமையின் ஆன்மபேதம் அங்கீகரிக்கத்தக்கதாமென வினவு கின்ருன்.

பந்தமுத்திக ணிலைமையாக வான்மாப்
பன்மை பாங்கிற்கொளற் பாற்றெனின்
விந்தைபெறு மாயைநிலை மையதுதர
வல்லதாம் வேண்டுகில மாதலாலே
யுந்துதல்செய் கூடாமை கூட்டுவிப்
பேனென்ற லொவ்வாமை கண்டிலைகொலோ
வெந்துயர்செய் பந்தமொடு முத்தியது
மெய்ம்மையெனன் மெய்ம்மறை சகித்திடாதே.

115

(ப—ரை) பந்தமுத்திகள் நிலைமையாக = பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையின் பொருட்டு, ஆன்மாப் பன்மை = ஆன்மாவின் நாநாத் தன்மை, பாங்கில் கொளற்பாற்று எனின் = சிறப்பாக அங்கீகரிக்கத் தக்கது என்று சொல்லின், [ஒரே ஆன்மாவிற்கு மாயையால் பந்த் மோக்ஷ வியவஸ்தை பொருந்துதலின் அதன் பொருட்டு ஆன்மபேதம் அங்கீகரிக்கத்தக்கதன்றெனப் பரிகரிக்கின்ருர்] விந்தைபெறு மாயை = ஆச்சரிய வடிவமுற்ற மாயையானது, நிலைமையது தரவல்ல தாம் = பந்தமோக்ஷ வியவஸ்தையைச் செய்ய சாமர்த்தியமுடையதாம், ஆதலால் = ஏகான்மபக்ஷத்தில் பந்தமோக்ஷ வியவஸ்தையின் காரண மாய் மாயை இருத்தலால், வேண்டுகிலம் = ஆன்மாவின் நாநாத்து வத்தை விரும்பேம், உந்துதல் செய் = ஆன்மாவின் நாநாத்துவத்தை ஒழிப்பாய், [மாயையும் எப்படி பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையைச் செய்யும் என்னுஞ் சங்கைக்கு அதற்குக் கூடாததைக் கூட்டுவிக்குந் தன்மையிருத்தலால் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையைச் செய்வ தில் சாமர்த்தியமுடையதெனக் கூறுகின்ருர்] கூடாமை கூட்டுவிப்பேன்

என்றல் ஒவ்வாமை=பொருந்தாததைப் பொருத்துவிப்பேன் என்றல்வடிவ விரோதத்தை, கண்டிலை கொலோ=பார்க்கின்றாயில்லையா, [பந்தத்திற்கு அவித்தையால் கற்பிதத்தன்மையிருப்பினும் மோக்ஷம் வாஸ்தவமாயங்கீகரிக்கத்தக்கது என்னுஞ் சங்கைக்கு சுருதி விரோதமாவதால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] வெம்துயர் செய்பந்தம் ஒடு=கொடிய துன்பத்தைச் செய்யா நின்ற பந்தமும், முத்தியதும்=பந்தநிவர்த்தி வடிவ மோக்ஷமும்,மெய்மை எனல்=சத்தியமாம் என்று கூறுதல், மெய் மறை=(இதரப் பிரமாணங்களால் பாதிக்கப் படாத) சுருதியானது, சகித்திடாது=பொறுக்காது எ—று. 115

(அ—கை)

மோக்ஷம் முதலியவைக்கு வாஸ்தவத்தன்மையை நிஷேதிக்கும் சுருதியைப் படிக்கின்றார்.

நாசமிலை யுற்பத்தி யில்லைபெத்
தனுமில்லை நண்ணுசா தகனுமில்லை
யேசறுமு முட்சுவிலை யில்லைமுத்
தனுமென்ப திதுமெய்ம்மை மாயையென்னுங்
காசதறு காமதே னுவினுக்கி
ரண்டுண்டு கன்றுசீ வேசராகும்
நேசமுறு படிதுவித மேபருகு
முண்மையா கின்றதத் துவிதமேயாம். 116

(ப—ரை) நாசம்இலை=அழிவும் இன்றாம்,உற்பத்தி இல்லை=தேக சம்பந்தவடிவ சனனமுமின்றாம், பெத்தனும் இல்லை=சுகதுக்காதி தருமமுடைய சமுசாரியுமின்றாம்,நண்ணு சாதகனும் இல்லை=ஆசாரியனை அடைந்து சிரவணாதிகளையனுஷ்டிப்பவனுமின்றாம், ஏசு அறு முமுட்சு இலை=நிந்தையற்ற சாதன சதுஷ்டய சம்பன்னனுமின்றாம்,முத்தனும் இல்லை=அவித்தையின் நிவர்த்தியையுடைய முத்தனுமின்றாம்,என்பது இது மெய்மை=என்னுமிதுவே வாஸ்தவமாம், [இப்படி சீவேசுர பேதத்திற்கு உபபாதனஞ்செய்த மாயாமயத்தன்மையை முடிக்கின்றார்] மாயை என்னும் காசது அறு காமதேனுவினுக்கு=மாயையாகிய குற்றமற்ற காமதேனுவிற்கு, சீவேசராகும் இரண்டு கன்று உண்டு=

சீவனும் ஈசுரனுமாகிய இரண்டு கன்றுக்குட்டிகள் இருக்கின்றன, நேசம் உறுபடி = இச்சைப்படி, துவிதமே பருகும் = துவிதமாகிய பாலைக் குடிக்கும், உண்மையாகின்றது = வாஸ்தவமாவது, அத்துவிதமே யாம் = அத்துவிதப் பிரம்மமேயாம் எ—று. 116

(அ—கை)

அற்றேல் சீவேசுரர்கள் மாயா கற்பிதராகையால் அவரது பேதமும் மித்தையாம். ஆயினும் கூடஸ்த பிரம்மங்கள் பாரமார்த்திகரா கையால் அவரது பேதமும் பாரமார்த்திகமாம் என்னுஞ் சங்கைக்கு பேதத்திற்குக் காரணமான சொரூபத்தில் விலக்ஷணத் தன்மையின்மை யினால் பேதம் பாரமார்த்திகமன்றெனப் பரிகரிக்கின்றார்.

கூடத்த பிரமவேற் றுமைநாம
மாத்திரங் கொண்டதல தேதுமில்லைக்
கேடற்ற கடவானு மாவானு
மெங்கணுங் கிட்டுமோ வேற்றுமையினை
யீடுற்ற வத்துவித மெதுசிருட்
டியின்முன மிருந்தது வேயின்றுமேல்
வீடுற்ற போதுமுறு மாயைசென
மனைவரையும் வீணா மயக்குமன்றே. 117

(ப—ரை) கூடத்த பிரம வேற்றுமை = கூடத்தனுக்கும் பிரமத் திற்கும் பேதமானது, நாம மாத்திரம் கொண்டது அலது = பெயர் மாத் திரத்தாலிருப்பதன்றி, ஏதும் இல்லை = சொரூபத்தால் கிஞ்சித்தும் பேத மின்றாம், [ நாமமாத்திரத்தால் பேதம் பிரதீதியாயினும் வாஸ்தவமாக பேதமின்மையில் பூருவஞ் சொல்லிய திருஷ்டாந்தத்தை நினைப்பூட்டு கின்றார்] கேடு அற்ற கடவானும் மாவானும் = நாசமின்றிய கடாகாசமும் மகாகாசமும், எங்கணும் வேற்றுமையினை கிட்டுமோ = எங்கேயாவது பேதத்தையடையுமோ? ஓரிடத்தும் பேதத்தைப் பொருந்தா,[இங்ஙனம் பேதத்திற்கு மித்தியாத்தன்மையைச் சமர்த்தனம் செய்வதால் பயனென்னையெனிற் கூறுகின்றார்] சிருஷ்டியின் முனம் = உலகினுற் பத்திக்குப் பூருவம், ஈடு உற்ற எது அத்துவிதம் இருந்தது = பெருமை பொருந்திய யாதொரு அத்துவிதப் பிரம்மமிருந்ததோ, அதுவே இன்றும் = அந்தப் பிரம்மமே இப்போதும், மேல் வீடுற்ற போதும் = உல

கத்தின் விநாச காலத்திலும் மோக்ஷ காலத்திலும், உறும்=இருக்கின்றது, "சௌமிய சிருஷ்டிக்கு முன் சத்துரூப அத்துவிதப் பிரம்மமே இருந்தது" என்னுஞ் சுருதியில் யாதொரு அத்துவிதப் பிரம்மம் பிரதி பாதிக்கப்பட்டுளதோ அதுவே மூன்று காலத்திலும் பாதிக்கப்படாத் தன்மையால் வாஸ்தவமாம்,பேதம் வாஸ்தவமன்றும் என்பது கருத்து, [அப்படியானால் எல்லாரும் எதனுற் பேதத்திலபினிவேசஞ் செய்கின்றூர்கள் எனிற் கூறுகின்றூர்] மாயை=மாயையானது, செனம் அனை வரையும்=ஜனங்களெல்லாரையும், வீணுமயக்கும்=வியர்த்தமாகவே மோகிப்பிக்கும், தத்துவ ஞானமின்மையினுல் அபினிவேசஞ் செய்கின்றூர்கள் என்பது கருத்து எ—று.

அன்று,' ஏ—அசை. 117

(அ—கை)

அற்றேல் பிரபஞ்சத்திற்கு மாயாமயத் தன்மையையும் ஆன்மாவிற்கு அத்துவிதீயத் தன்மையையும் எவர்கள் வருணிக்கின்றூர்களோ அவர்களும் சமுசாரமுடையராய்க் காணப்படுகின்றூர்களே. ஆகையால் தத்துவ ஞானத்தால் பிரயோசனமின்றுமென வினவுகின்றுன்.

இவ்வா றுரைசெயு மவரும
 வித்தையி னிங்குமய ங்கின ரென்னென்னி
னெவ்வா ருமுன மவ்வா
 றிவர்கட் கிங்குமய ங்குத லெய்தாவா
லொவ்வா விகபர முறுசமு
 சாரமொ ருங்குள தாமெனு மதனுலே
தவ்வா வொருமையி லங்கில
 திலையென் றுனறி விலர்துணி வாமன்றே. 118

(ப—ரை) இவ்வாறு உரைசெயும் அவரும்=(பிரபஞ்சம் பொய் ஆன்மாவே பிரமம் அதுவே சத்தியமாம்) என்றிப்படிக் கூறுகின்ற மனிதரும், அவித்தையின் இங்கு மயங்கினர்=அஞ்ஞானத்தால் இச் சமுசாரத்தில் மோகமுற்றூர், என் என்னின்=என்னை என்று வினவின் அதாவது வித்தையால் யாது பயனெனின் [பிராரப்தகருமவசத்தால்

சிலஞானிகளுக்கு வியவகாரமிருப்பினும் அஞ்ஞான காலத்திற் போன்று அபினிவேசமின்மையால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] முனம் எவ்வாறு அவ்வாறு = அஞ்ஞான காலத்தில் எப்படியோ அப்படி, இவர் கட்கு = ஆன்மாவை யறிந்து கருமவசத்தால் வியவகாரத்தில் இருப் பவருக்கு, இங்கு மயங்குதல் எய்தாவாம் = இச்சம்சாரத்தில் அபினி வேசவடிவமோகம் பொருந்தாவாம், [ஞானிகளுக்கு பிராந்தியின் பாவத்தைத் தெரிவிக்கும் பொருட்டு அஞ்ஞானிகளின் நிச்சயத்தை முதலிற் கூறுகின்றார்] ஒவ்வா = விவேகிகளால் பொருந்தத் தகாத, இகபரம் உறு சமுசாரம் ஒருங்கு = இவ்வுலகிலுள்ள புத்திரகளத்திராதி களைப் போஷித்தல் வடிவ சமுசாரமும் பரலோகத்திலுள்ள சொர்க்க சுகாதிகளின் அனுபவமும் ஆகிய அனைத்தும், உளதாம் = வாஸ்தவ மாம், எனும் அதனால் = அக்காரணத்தினால், தவ்வா ஒருமை = அசஞ் சல அத்துவிதீயப் பிரமம், இலங்கிலது = விளங்கவில்லை, இலை = இல்லை, என்று அறிவிலர் துணிவாம் = என்றஞ்ஞானிகளின் நிச்சயமாம் எ—று.

ஆல், ஆன், அன்று, ஏ—அசைநிலைகள்.

ஆம்—பிரித்துக் கூட்டப்பட்டது. 118

(அ—கை)

தத்துவ நிச்சயத்திற்கு அஞ்ஞானிகளின் நிச்சயத்தினின்றும் விலக்ஷணத்தன்மையைத் தெரிவிக்கின்றார்.

ஞானிக ணிச்சய மிதனினும்
வேறா நன்கறி யப்படு மேதத்தம்
பானிக ணிச்சய வணம்வன்
பவமுளன் பவமிலி நானென நினைவாராற்
றானொரு மையதப ரோக்கம
தன்றெனி னன்றறி வாய்நிகழ் தலினாலே
மேனிகி லமுமில கிலதெனி
னிருமைதான் மிளிர்தரு மோமுழு வதுமென்னே.

119

(ப—ரை) ஞானிகள் நிச்சயம் = அறிஞரின் துணிவு, இதனினும் வேரு நன்கு அறியப்படும் = அஞ்ஞானிகளின் நிச்சயத்தினும் மாருய் செவ்வையாயுணரப்படும், அத்துவிதம் பாரமார்த்திகமாயும் பிரகாச மாயுமிருக்கின்றது, சமுசாரமோ அபாரமார்த்திகமாயும் அப்பிரகாச மாயுமுளது என நிச்சயமாமென்பது பொருள், [அதனுலென்னை யென்னுஞ் சங்கைக்குத் தத்தம் நிச்சயானுசாரத்தால் பலனுண்டாகிற தெனக்கூறுகின்ருர்] தத்தம் பால் நிகழ் நிச்சயவணம் = தம்மில் தம்மில் விளங்கா நின்ற நிச்சயானுசாரமாக, நான் பவமுளன் = நான் பெத்த னென்றும்,(நான்) பவமிலி என = நான் முத்தனென்றும், நினைவார் = அஞ்ஞானியும் ஞானியும் கருதுவார்கள், [அத்துவிதம் விளங்குகின்றது என்னுஞ் சொல் சாஸ்திரத்தினுலேயேயாம்; அனுபவத்தாலன்று. ஆகையால் அதன் நிச்சயம் பொருத்தமன்ருமெனச் சங்கிக்கின்ருன்] ஒருமையது அபரோக்கமது அன்று எனின் = அத்துவிதீயப் பிரமம் அபரோக்ஷமன்று என்று சொல்லின்,[அனுபவத்தின் அவிஷயத்துவம் அசித்தமெனப்பரிகரிக்கின்ருர்]அன்று = அற்றன்று,அறிவாய் நிகழ்தலி னுலே = சித்துருபமாய் விளங்குகின்றபடியினுலே, கடம் விளங்குகின் றது படம் விளங்குகின்றது என கடாதிகளிலநுஸ்யூதமான ஸ்புரண ரூபத்தால் விளங்குதலின் என்பது பொருள், [சித்துரூபத்தன்மை விளங்கினும் அது சம்பூரணமாகத் தோற்றுகிறதில்லையென வினவு கின்ருன்] மேனிநிகிலமும் இலகிலது எனின் = சித்துவடிவம் சம்பூரண மாக விளங்கவில்லையே என்று வினவின் [சம்பூரணத்தன்மையால் பானத்தினபாவம் (தோற்ருமை) துவைதத்திலும் சமானமாமெனக் கூறுகின்ருர்] இருமைதான் = துவிதமானது, முழுவதும் மிளிர்தருமோ என்னே = சகலமும் விளங்குகின்றதா என்னை எ—று.

மேனி நிகிலமென்பதில் நி கெடுதல் விகாரமாய் மேனிகிலமென்ருயிற்று. 119

ஏ, ஆல், தான்—அசை.

(அ—கை)

இங்ஙனம் தோஷத்தின் சமானத்தன்மையைக் கூறி பரிகாரத் தின் சமானத்தன்மையைக் கூறுகின்ருர்.

திசைமாத் திரமத ஞலில குதருன்
றிகழிரு மைக்குஞ் சமமாகும்
மிசையா மிதஞற் றுவிதம தெனவத்
துவிதமு மேவுவ தாகாதோ
நசைசே ரொருமைய திருமைய லதிதின்
ஞானம துறினது நணுமோதா
ணிசைவா மறிவில குதலவி ரோதியிவ்
விருமை தனக்கதி ஞெப்பன்றே. 120

(ப—ரை) திசை மாத்திரமதஞல் இலகுதல்=ஏகதேசத்தால் விளங்குதல், திகழ் இருமைக்கும் சமம் ஆகும் = விளங்காநின்ற துவிதம் அத்துவிதமாகிய இரண்டற்கும் சமானமாம், [இவ்வளவால் எப்படி பரிகாரத்திற்குச் சமானத்தன்மையாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] மிசையாம் இதஞல்=(உனது பக்ஷத்தில் ஏகதேசப் பிரதீதியினுண்மையிஞல், துவிதமது என = துவைத நிச்சயம் உண்டாவதுபோல, அத்துவிதமும் மேவுவது ஆகாதோ=அத்துவித நிச்சயமும் ஏகதேசப் பிரதீதியிஞல் ஏன் பொருந்தாது, மற்ரே பொருந்தும் [பூருவ வாதி வேறு பிரகாரத்தால் அத்துவிதத்தின் அசித்தியைச் சங்கிக்கின்ருன்] நசைசேர் ஒருமையது இருமை அலது=வாஞ்சிக்கத் தகுந்த அத்துவிதமானது துவைதமற்றதாம், துவிதத்திற்கும் அத்துவிதத்திற்கும் பரஸ்பரம் விரோதமாவதால், இவ்வாருகும்போது, இதின் ஞானமது உறின்=இத்துவிதப் பிரபஞ்சத்தின் பிரதீதி இருக்கும்போது, அதுநணுமோ = அத்துவிதம் பொருந்துமோ, பொருந்தாதென்பது பொருள், [அப்படியாஞல் துவைதமும் அத்துவிதத்திற்கு விரோதியாவதால் அத்துவிதம் பிரதீதியாகும்போது துவிதமும் சித்திக்காது என்னுஞ் சங்கையும் சமானமாம் என்னுஞ் சங்கைக்குப் பூருவ வாதி கூறுகின்ருன்] இசைவு ஆம் அறிவு இலகுதல் = பொருத்தமாகிய சேதனத்தின் பிரதீதி, இவ்விருமை தனக்கு அவிரோதி=இத்துவிதப் பிரபஞ்சத்திற்கு விரோதியன்ரும், அதின்=ஆதலால், ஒப்பு அன்று = (உமது சங்கையும் எமது சங்கையும்) சமமன்ரும் எ—று.

உமது மதத்தில் சித்துருபப் பிரதீதியே அத்துவிதப் பிரதீதி யாவதாலும் அது துவித விரோதியாகாமையினுலும் இரண்டு சங்கைகளுக்கும் சமத்தன்மையின்ரும் என்பது கருத்து.

மிசை=பிரதீதி. தான், தான், ஏ—அசை. 120

(அ—கை)

தோற்றுகின்ற துவிதப் பிரபஞ்சத்திற்கு வாஸ்தவத் தன்மை இன்மையினுல் வாஸ்தவ அத்துவிதத்திற்கு விரோதியன்றெனச் சித்தாந்தி பரிகரிக்கின்ருர்.

இத்தகை யேற்கே டுவிதம்வெ றும்பொய்
யேமா யாமய மதனுலே
யத்தகை யாலத் துவிதமெய் சேடித்
தமர்தலி னுலில கா நிற்குஞ்
சித்தம தாலெண வொண்ணு வடிவினிற்
செகமுழு துஞ்செறி பொய்யேயென்
ெறுத்தெணி வாத்தவ வத்துவி தந்தனே
யொளிபெற விஞ்சச் செயல்வேண்டும். 121

(ப—ரை) இத்தகையேல்=கூறியவிதமாமேல், கேள்=அதற்கு உத்தரம் கூறுதும் கேட்பாய், துவிதம் வெறும் பொய்யே=நாநாவாகிய பிரபஞ்சமானதுவெறும்மித்தையேயாம், மாயாமயமதனுல்=மாயையின் காரியமாதலால், அத்தகையால்=அத்தன்மையால் அதாவது துவிதம் மித்தையாவதால், சேடித்து அமர்தலினுல் = பரிசேஷத்தால், அத்துவிதம் மெய் இலகா நிற்கும்=அத்துவிதம் வாஸ்தவமாய் விளங்கா நிற்கும், பரிசேஷமாவது பிராப்தமானதை நிஷேதிக்கும் போது வேறிடத்தில் பிராப்தியில்லாமையால் எஞ்சிய வஸ்துவின் நிச்சயம் ஆம், [பரிசேஷப் பிரகாரத்தையே தெரிவிக்கின்ருர்] சித்தமதால் எண ஒண்ணுவடிவினின்=மனத்தினுல் நினைக்கத்தகாத வடிவம் உடைய, செறிசெகம் முழுதும்=நெருங்கிய உலகனைத்தும், பொய்யே என்று = (அநிர்வசனீயமாவதால்) மித்தையேயாமென்று, ஒத்து எணி = (சுருதியாதிகளை) அனுசரித்து நிச்சயித்து, வாத்தவ அத்துவிதந்தனை=வாஸ்தவமான அத்துவிதப் பிரமத்தை அதாவது அத்துவிதத்தில் வாஸ்தவத்தன்மையை, ஒளிபெற = விளங்கும்படி, விஞ்சச் செயல் வேண்டும்=பரிசேஷஞ் செய்யவேண்டும் எ—று.

ஈண்டு பிரசங்கத்தில் பரிசேஷ லக்ஷணம் பொருந்துமாறு துவிதத்தில் வஸ்துத்தன்மைப் பிரசத்தமாம். அதில் அதை நிஷேதிக்கவே வேறிடத்தில் வஸ்துத்தன்மையின் பிரசத்தமின்றாக மிஞ்சிய அத்துவிதத்தில் வஸ்துத்தன்மையின் நிச்சயமுண்டாகின்றது என்பது பொருள். பிரசத்தம் = பிராப்தம். 121

(அ—கை)

இங்ஙனம் அத்துவித நிச்சயத்தைச் செய்தபோதினும் மீண்டும் மீண்டும் துவிதத்தின் சத்தியத்தன்மை பூருவ வாசனையால் தோற்று கிறதென்னுஞ் சங்கைக்கு அதன் நிவர்த்தியின் பொருட்டு மீண்டும் மீண்டும் மித்தியாத்தன்மையை விசாரித்தல் வேண்டுமெனக் கூறுகின்றார்.

பின்னரு மிருமைய துண்மைய தாகப்
  பிறழ்தரு மெனினீ மேன்மேலும்
இன்னமு முயலுதி யதனு னிற்கிட
  ரென்னே யிங்குரை யெம்மட்டோ
மன்னுறு காலமெ னிற்றுய ரிதுதான்
  மருவுவ தாமிரு மைக்கண்ணே
துன்னரு மொருமை யிடத்திது மேவா
  துயரமெ லாந்தெறு மதனலே. 122

(ப—ரை) பின்னரும் = அத்துவித நிச்சயத்தின் அனந்தரமும், இருமையது உண்மையதாக பிறழ் தரும் எனின் = துவிதமானது சத்தியமாக விளங்குகிறது என்று சொல்லின், நீ மேன்மேலும் இன்னமும் முயலுதி = நீ மீண்டும் மீண்டும் மித்தியாத்துவ விசாரத்தில் பிரயத்தினஞ் செய்வாய், அதனல் = மித்தியாத்துவ விசாரஞ் செய்வதனல், இங்கு நிற்கு இடர் என் = இவ்விஷயத்தில் உனக்கு என்ன பிரயாசம், உரை = சொல்லுவாய், "ஆவிருத்திர ஸகிருதுபதேசாத்" என்று நாலாவது அத்தியாயத்தில் ஆன்மாவின் சிரவணுதிகளின் ஆவிருத்தியை வியாசபகவனல் விதிக்கப்பட்டிருத் தலின் என்க, [எவ்வளவு காலம் இந்தப்பிரகாரம் விசாரிக்கத்தக்கது என்னுஞ் சங்கைக்கு "அபரோக்ஷஞானம் பிராப்தியாகும்போது இவ்விசாரம் சமாப்தியாகின்றது" என விசார காலத்தின் அவதி

கூறப்பட்டிருத்தலால் அத்துவித விசாரத்தில்துன்பம் பொருத்தமன்று, மற்றோ துவிதப்பிரதீதியின்கண்ணேயே துன்பம் பொருத்தமாமெனக் கூறுகின்றார்] எம்மட்டுஉறு காலம் எனில் = எவ்வளவு காலம் ஆன்ம விசாரஞ் செய்யத்தக்கதெனின், இருமைக்கண் இது துயர் மருவுவதாம் = துவிதத்தில் இத்துன்பம் பொருந்துகின்றது, துன்னரும் ஒருமையிடத்து = அடைதற்கரிய அத்துவிதத்தில், இதுமேவா = இத்துன்பம் பொருந்தாது, துயரம் எலாம் தெறுமதனால் = சருவ அநர்த்தங்களையும் நிவாரணஞ் செய்வதால் எ—று.

ஓ, ஓ, மன், ஏ, ஏ—அசை. 122

(அ—கை)

இப்படியாமேல் அத்துவித ஆன்ம தத்துவத்தின் அபரோக்ஷ ஞானமுடைய என்னிடத்தும் பசி தாக வடிவ அநர்த்தம் காணப்படுதலின் அனர்த்த நிவாரகத்தன்மை ஆன்மஞானத்திற்கு அசித்தமாம் என்று வினவுகின்றான்.

பசிதா காதிகள் பூருவ மெனவென்
 பானிகழ் கின்றன வென்பாயே
லொசியா தியானெனு மாங்கா ரத்திடை
 யொளிர்தரு மிலையென் பவனியாவன்
சுசிசே ரறிவினுந் தாதான் மியகற்
 பனையாற் றேன்றுறு மென்பாயே
னிசிநேர் கற்பனை தனையொழி நீதா
 னிதமும் விவேகம தனைமேவே. 123

(ப—ரை) பசிதாகாதிகள் = க்ஷுத்பிபாஸை முதலியவைகள், பூருவம் என = அஞ்ஞானகாலத்திற்போன்று, ஒசியாது = குறைவுபடாமல், என்பால் நிகழ்கின்றன என்பாயேல் = என்னிடத்துத் தோற்றுகின்றன என்று சொல்லுவையேல், [அகம் சத்தத்தின் வாச்சியமாகிய அகங்காரத்தில் தோற்றுகின்றனவா அல்லது அகம் சத்தத்தால் உபலக்ஷிதமான சிதான்மாவில் தோற்றுகின்றனவா என விகற்பஞ்செய்து முதலாவதை அங்கீகரிக்கின்றார்] யான் எனும் அகங்காரத்திடை ஒளிர் தரும் = அகம்சத்தத்தின் வாச்சிய அந்தக்கரணத்தில் விளங்குகின்றனவாயிருக்குக, இலை என்பவன்

யாவன் = அந்தக்கரணத்தில் பசி முதலியவை தோற்றுதல் இல்லை என்று சொல்பவன் எவன், இரண்டாவது பக்ஷம் சரியன்றும், சித்துருப ஆன்மா அசங்கமாயும் அ வி ஷ ய மா யு ம் இ ரு த் த லா ல் என சமாதானத்தைப் புறம்பேயுணர்க, [வாஸ்தவமாகப் பசி முதலிய வற்றின் பிரதீதியின்றேனும் பிராந்தியால் அவற்றின் பிரசத்தியாம் என வினவுகின்றான்] சுசிசேர் அறிவினும் = பரிசுத்தமாகிய சித்துருப ஆன்மாவினிடத்தும், தாதான்மிய கற்பனையால் = அந்தக்கரணத்தின் தாதான்மிய அத்தியாசத்தால், தோன்றுறும் என்பாயேல் = பிரதீதி யாமென்று சொல்லுவையேல் [இப்படியா மேல் அ ன ர் த் த த் தி ன் ஏதுவான அத்தியாச நிவர்த்தியின் பொருட்டு எப்போதும் விவேகம் செய்யவேண்டுமெனக் கூறுகின்றார்] நி சி நே ர் க ற் ப னை த னை ஒழிநீ = அந்தகாரத்திற்குச் சமானமாகிய அ த் தி யா ச த் தை விட்டு விடுவாய் நீ, நிதமும் விவேகமதனை மேவு = எப்போதும் விசாரத்தைச் செய்வாய் எ—று. பிரசத்தி = பிராப்தி. தான், ஏ—அசை. 123

(அ—கை)

அனாதிவாசனையின் வசத்தால் மீண்டும் அத்தியாசமுண்டாயின் அதன் நிவர்த்தியின் பொருட்டு விவேகத்தை ஆவிருத்தி செய்ய வேண்டும் வேறு உபாயமின்றுமெனக் கூறுகின்றார்.

விரைவாய்க் கற்பனை திடவா தனையான்
  மேவுறு மென்னின் விவேகத்தைப்
புரைதீ ரதிதிட மாநிலை பெறவெப்
  பொழுது மறித்தும் புரிவாயா
லுரையா ராய்ச்சியி னிருமைய சங்கத
  முற்றிட லுத்தியி னுலென்னேல்
கரைதீர் கருதரு செயலின தனுபவங்
  கரியா கத்தனை யுறுமன்றே. 124

(ப—ரை) திடவாதனையால் = நீண்டகாலம் பழகிய திடமாகிய சமுசாரவாசனையால், விரைவாய் = சீக்கிரம், கற்பனை மேவுறும் என் னின் = தாதான்மியாத்தியாசம் வருகின்றது என்று சொல்லின், விவேகத்தை = ஆன்மாவிற்கும்அனான்மாவிற்குமுள்ளபேதவிசாரத்தை, புரைதீர் அதிதிடமாநிலை பெற = குற்றமற்ற மிகவும் தி ட மா கி ய

திதியைப் பெறுதற்பொருட்டு, அபேதவாசனை திடமாதற்பொருட்டு என்பது பொருள், எப்பொழுதும் மறித்தும் புரிவாய் = சருவகாலத்திலும் மீண்டும் மீண்டும் செய்வாய், [அற்றேல் விசாரத்தால் துவிதத்திற்கு மாயாமயத்தன்மை யுத்தியினலேயே சித்திக்கின்றது அனுபவத்தாலன்று என்னுஞ் சங்கைக்கு அசிந்தியரசனைத்தன்மை வடிவமித்தியாத்தன்மையினநுபவம் தன் சாக்ஷி சித்தமாதலாலங்ஙன மன்றெனப் பரிகரிக்கின்ருர்] உரை ஆராய்ச்சியின்=சொல்லா நின்ற விசாரத்தால், இருமை அசங்கதம் உற்றிடல்=துவிதம் மித்தையாதல், உத்தியால் என்னேல் = யுத்தியினலேதான் என்று சொல்லற்க, கரைதீர் கருது அருசெயலினது அனுபவம்=உலகின் அளவற்ற அசிந்தியரசனையின் அனுபவமானது, தனைகரியாகஉறும்=சுவசாக்ஷிகமாம், அதாவது தனது சாக்ஷியினல் சித்தமாம் எ—று.

ஆல், அன்று, ஏ—அசைநிலைகள். 124

(அ—கை)

அற்றேல் மித்தியாத்தன்மைக்கு இலக்கணமாகக் கூறப்பட்ட அசிந்தியரசனைத்தன்மை சிதான்மாவில் அதிவியாப்தமாமென்று வினவுகின்ருன்.

அறிவும் வெங்கரு தருசெய லுளதெனி
னவ்வா ருகுக யாஞ்சித்தைக்
குறிதரு கருதுறு செயலுடை யதுவாக்
கூறில நிதகா ரணமதனுற்
பொறியுரு வுடைமுன் னின்மைய தனுபவம்
புக்கா தாதலி னிதஞானம்
பிறிபொரு ளதன்முன் னின்மைய துணர்வாற்
பெட்புறு காட்சிப் படுமன்றே. 125

(ப—ரை) அறிவும்=சித்துருப ஆன்மாவும், வெம் = கடுமையான, கருது அருசெயலுளது எனின்=அசிந்தியரசனையையுடையதென்று சொல்லின், [பிராகபாவத்தோடு கூடியதாய் அசிந்தியரசனைத் தன்மை மித்தையினிலக்கணமாம் எனச்சொல்ல இச்சையுடையவராய் ஆன்மாவிற்கு அசிந்தியரசனைத் தன்மையை அங்கீகரிக்கின்ருர்] அவ்வாறு ஆகுக=அப்படியே இருக்குக அதாவது ஆன்மாவில் அசிந்தியரசனைத்தன்மையிருக்குக, [இப்படியங்கீகரிக்கின் அபசித்தாந்தமாமென்று சங்கித்துப் பரிகரிக்கின்ருர்] சித்தை = சித்துருப

ஆன்மாவை,யாம் குறிதரு கருது உறு செயலுடையதுவாக் கூறிலம்= நாங்கள் சின்னமுடையதாகவும் ஸுசிந்தியரசனையையுடைதாகவும் கூறுகின்றிலேம், [அதிலேதுவைக் கூறுகின்றார்] நிதகாரணமதனுல்= நித்தியத்தன்மையாகிய காரணத்தால், ஜன்னிய கடாதிகளில் ஸுசிந்தியரசனைத் தன்மையுளது, ஆன்மா ஜன்னியமன்ருகையால் ஸுசிந்தியரசனைத் தன்மையின்ருமென்பது கருத்து, [சித்திற்கு நித்தியத்தன்மையெதனுலென்னுஞ் சங்கைக்கு முன்னின்மையின நுபவமின்மையாலெனக் கூறுகின்ருர்] பொறி உருவுடை=சித்து ருபத்தின், முன் இன்மையதனுபவம் = பிராகபாவத்தினனுபவம் புக்காது=பொருந்தாது, ஆதலின் = அக்காரணத்தினுல், ஞானம் நிதம்=சித்து நித்தியமாம்.

ஈண்டிஃதபிப்பிராயமாம், சித்தின்முன்னின்மை சித்தாலநுப விக்கப்படுகிறதா அல்லது அன்னியத்தாலா, அன்னியத்தாலென்பது கூடாது சித்தினும் வேருனது சடமாவதால் அனுபவிக்குந்தன்மை பொருந்தாமையின், சித்தாலனுபவிக்கப்படுகிறதென்னும் முதற்பக்ஷத் திலும் வேறு சித்தினுலா அல்லது தன்னுலேயா,முதற்பக்ஷம் சரியன்று. அத்துவிதவாதத்தில் வேறு சித்தேயில்லாமையினுல், அதையங்கீகரிக் கினும் சித்தைப் பிரதியோகியாகவுடைய பேதத்தை சித்தின் ஞான மின்றி கிரகிக்க அசக்கியமாதலின் அவ்வேறு சித்தையும் கிரஹண விஷயமாகக் கொள்ளின் கடாதிபோன்று சடத்தன்மை நேருமாதலால், இரண்டாவது பக்ஷமும் சரியன்று. தனதபாவகாலத்தில் தானில்லாத படியால் தனது அபாவத்தைத் தன்னுல் கிரகிக்கமுடியாதாதலால் என்க [அற்றேல் துவிதமானது பிரமாதா முதலிய பேத வடிவமாதலா லும் அதன் அபாவம் அதனுலேயே அனுபவிக்க அசக்கியமாதலாலும் அனுபவிப்பதாய் வேறு இல்லாமையாலும் சைதன்னியம் போன்றே துவிதத்திற்கும் நித்தியத்தன்மை நேரும் என்னுஞ் சங்கைக்கு அனுபவிப்பது வேறு இல்லையென்னல் அசித்தமாம் எனப் பரிகரிக் கின்ருர்] பிறிபொருளதன் முன்னின்மையது = துவிதத்தின் பிராக பாவம், பெட்பு உறு உணர்வால் காட்சிப்படும்=பெருமை பொருந்திய சைதன்னியத்தால் அனுபவிக்கப்படுகின்றது எ—று.

சாக்கிரம் முதலிய துவிதத்தின் அபாவம் சுழுத்தியில் சாக்ஷியா லனுபவிக்கப்படுகிறபடியாலும் "தமசிற்குசாக்ஷி, சருவத்திற்கும் சாக்ஷி" என்னும் சுருதியாலும் என்பது கருத்து.

அன்று, ஏ—அசைநிலைகள். 125

(அ—கை)

இங்ஙனம் பிராகபாவத்தோடு கூடியதாய் அசிந்தியரசனைத் தன்மைவடிவ மித்தியாத் தன்மையினிலக்கணமிருத்தலால் துவிதத் திற்குமித்தையாத்தன்மை சித்தமாமெனக் கூறுகின்றார்.

குடமுத லியபோ லிருமைமுன் னின்மையிற்
குயிற்றிடு பொருளே யாமேனு
மிடவிய செய்கை யசிந்திய மதனு
லிந்திரசால மெனப் பொய்யா ந்
தொடரறி வதுகாட் சியுமா மதினய
றுகள்பொய் யுருவமு மாய்த்தோன்றுந்
திடவொரு மையதப் ரோக்ஷம தன்றெனிற்
சேரிது தான்றிரி பேயாமால். 126

(ப—ரை) குடம் முதலியபோல்=கடாதி போன்று, இருமை= துவிதமானது, முன் இன்மையின்=உற்பத்திக்குப் பூருவம் இல்லாத படியால், குயிற்றிடு பொருளே = செய்யப்படுகிறவஸ்துவேயாம், ஆமேனும் = அப்படியாயினும் அதாவது செய்யப்படுகிறதாயினும், இடவியசெய்கைஅசிந்தியம்=விசாலமாகிய பிரபஞ்சத்தின்ரசனை சிந்திக்கத்தகாதது, அதனுல்=அக்காரணத்திஞல் அதாவது செய்யப் படுகிறதாய் அசிந்தியரசனைத்தன்மையாயிருத்தலால், இந்திரசாலம் எனபொய்யாம்=இந்திரசாலமனைபோன்று மித்தையாம், [சித்தானது சொப்பிரகாசத்தன்மையால் நித்தியமும் அபரோக்ஷமுமாய் விளங்கு கின்றது. சித்தினும் வேருனதற்கு மித்தியாத்தன்மையும் அச்சித்திஞலேயே அனுபவிக்கப்படுகின்றது என அறிவிக்கப்பட்டது. இவ்வாருகும்போது அத்துவிதத்திற்கு அபரோக்ஷத்தன்மை இன்றெனக் கூறும் வாதிக்கு வியாகாதமுமாமெனக் கூறுகின்றார்] தொடர்அறிவது=சருவத்திலும் அநுசூதமான சித்தானது, காட்சியும் ஆம்=பிரத்தியக்ஷமாம், அதின்=அச்சித்திஞல், அயல்துகள்= அன்னியமான தோஷவடிவ துவிதங்கள், பொய் உருவமுமாய்த் தோன்றும்=மித்தியா,வடிவங்களாய்ப் பிரதீதியாகும். [சங்கிக்கின்ருன்] திடஒருமையது அபரோக்ஷமது அன்று எனின் = ஸ்திர அத்துவிதம் அபரோக்ஷம் அல்லவென்று சொல்லின், சேர் இதுதான்=பொருந்தா நின்ற அத்துவிதமபரோக்ஷமன்றென்று சொல்லுதல், திரிபேயாம்= (எனக்கு நாக்கில்லையென்பது போன்று) வியாகாதமாம் எ—று.

வியாகாதமாவது பரஸ்பரவிருத்த இருதருமங்கள் ஓரதிகரணத்தின்கண் தோற்றுதல், அஃதெப்படியெனின் நாக்கில்லை என்று சொல்லுதல் வடிவ தருமமும் நாக்கினது அபாவ வடிவ தருமமும் பரஸ்பரம் விருத்தமாம். அவ்விரண்டும் ஓர் புருஷனிடத்தில் தோற்றுகின்றன. மற்றொரு திருட்டாந்தம் என் தாய் மலடியென்னுமிடத்து மாதாத்தன்மையும் மலடித்தன்மையும் பரஸ்பரம் விருத்தமாம். அவ்விரண்டும் ஒரு ஸ்திரீவியத்தியில் தோற்றுகின்றன. அதுபோல அத்துவிதத் தன்மையும் அபரோக்ஷத்தன்மையின் அபாவமும் பரஸ்பரம் விருத்த தருமங்களாம் அத்துவிதமே அபரோக்ஷ சித்துருபமாதலின், அத்துவிதம் அபரோக்ஷமன்றென்னுமிடத்து ஒரே சித்தில் அவ்விரு தருமங்களும் தோற்றுகின்றன ஆதலால் வியாகாதமாம்,பொய்யுருவமுமாய் என்றதிலுள்ள உம்மையானது 119-வது செய்யுளிற் கூறிய அறிவாய் நிகழ்தலினாலே என்னும் உத்தியைக்கவரும் பொருட்டாம். இடவியது = அகலமுள்ளது. அது பிரபஞ்சமாம் இடவிய செய்கை என்பது ஆரும் வேற்றுமைத்தொகை. ஆல்—அசை. 126

(அ—கை)

இப்படி வேதாந்தத்தின் பொருளையறிகின்றவர்களுக்குள்ளும் சில புருஷருக்கு இதில் எதனால் விசுவாசம் உண்டாகிறதில்லையென்று வினவுகின்றான்.

சில்லோ ரின்னண மோர்ந்து மகிழ்ச்சி
செறிந்தில ரெதனா னீர்சொல்லீர்
வல்லா ரெனுமுல காயதன் முதலோர்
வடிவினை நானென லென்சொல்வாய்
பொல்லா மதியினி வர்க்கு நலோர்ச்சி
புணர்ந்தில தேலவ் வகைமகிழ்வைப்
புல்லா தவரும மைப்பொரு ணன்குபொ
ருந்துற வாக்கில ராமன்றே. 127

(ப—ரை) சில்லோர் = சிலபுருஷர்கள், இன்னணம் ஓர்ந்தும் = கூறிய பிரகாரம் அத்துவித அபரோக்ஷப்பிரமமே தாமென்று அறிந்தும், எதனால் மகிழ்ச்சி செறிந்திலர் = எக்காரணத்தினால் சந்தோஷத்தை அடைந்திலர், நீர் சொல்லீர் = தேவரீர் கூறுவீராக, [நன்றாய்

விசாரிக்காமையினுல் என விவக்ஷையுடையவராய் பிரதிவந்தியை கிரகிக்கின்ருர்] வல்லார் எனும் உலகாயதன் முதலோர் = ஊஹா போஹத்தில் சமர்த்தரான சாருவாகர்கள் முதலானவர்கள், வடிவினை நான் எனல் என் = தேகத்தை ஆன்மாவென்று சொல்லுதல் எதனுல், சொல்வாய் = கூறுவாய், முதல் சத்தத்தால் பாமரரைக் கவருக. [பிரதி வந்தியின் விமோசனவடிவ சங்கையைச் செய்கின்ருன்] பொல்லா மதியின் = கெட்ட புத்தியினுல், இவர்க்கு = சாருவாகர் முதலிய பேருக்கு, நல்ஓர்ச்சி புணர்ந்திலதேல் = நல்ல விசாரமானது உண்டாக வில்லையென்பையேல், [சமத்தன்மையால் சமாதானஞ் செய்கின்ருர்] அவ்வகை = அப்படியே, மகிழ்வை புல்லாதவரும் = சந்தோஷத்தை அடையாதவரும், புத்தி தோஷத்தால், மறைப்பொருள் = சாஸ்திரார்த் தத்தை, நன்கு பொருந்துற ஆக்கிலர் = விசேஷமாக பொருந்தும்படி விசாரித்திலர் எ—று. ஆம், அன்று, ஏ—அசை. 127

(அ—கை)

இந்தப் பிரகாரம் தத்துவத்தை விசாரித்து அதனுலுண்டாகிய தத்துவ ஞானத்தின் பலனை விசாரிப்பதற்காக அதனைப் பிரதிபாதிக் கின்ற சுருதியைப் படிக்கின்ருர்.

இவனி தயஞ்செறி காமம தெல்லா
மெப்பொழு தொழிவன வென்றுபய
னெமெற வினவின மல்லது ணர்ந்தில
மென்றிடி னன்னது ணர்ந்தனமியா
மவமுறு மிதயமு டிச்சுக ளியாவு
மவிழ்ந்தன வென்றெனு மிம்மொழியாற்
றவமழி காமமு டிச்சுரு வெனவே
சாற்றிய தாமென நீதேறே. 128

(ப—ரை) இவன் இதயஞ்செறி காமமது எல்லாம் = இந்த முமுக்ஷுவினது இருதயத்திலுள்ள (தாதான்மியஅத்தியாசத்தை மூல மாக உடைய) இச்சை முதலிய அனைத்தும், எப்பொழுது ஒழிவன = எந்தக்காலத்தில் (தத்துவ ஞானத்தால் அத்தியாசம் நிவர்த்தியாகும் போது) நிவர்த்தியாகின்றனவோ, இது சுருதியின் முற்பாதியாம், இனி பிற்பாதி வருமாறு; "அப்பொழுது மர்த்தியன் அமிருதனுகின்ருன், ஈண்டு

பிரமத்தை அடைகின்றான்", இதன் பதப்பொருள், அப்பொழுது= ஆசை முதலியவை நிவர்த்தியான அக்காலத்திலேயே, மர்த்தியன்= (பூருவம் தேகதாதான்மிய அத்தியாசத்தால்) மரணசீவனான புருஷன், அமிருதன் ஆகின்றான் = (அத்தியாசமின்மையினால்) மரணமின்றி யவனாகின்றான், [அதிலேதுவைக் கூறுகின்றார்] ஈண்டு = இதே தேகத்தில், பிரமத்தை=சத்தியாதிவடிவ பிரமத்தை, அடைகின்றான்= நன்கு வியாபிக்கின்றான், [அற்றேல் சுருதியாற் பிரதிபாதிக்கப்பட்ட இச்சையின் நிவர்த்தி முதலிய தத்துவ ஞானத்தின் பயன் அனுபவ சித்தமன்றாம், மற்றோ சத்தத்தால் சித்தமாமென வினவுகின்றான்] என்று=இந்தப்பிரகாரம், பயன் = (இச்சை முதலிய அனர்த்தத்தின் நிவர்த்தியும் பரமானந்தரூப பிரம்மப் பிராப்தியுமாகிய) பிரயோசனம், எவம் அறவினவினம் அல்லது=தோஷமின்றிக் கேட்டோமேயன்றி, உணர்ந்திலம்=அபரோக்ஷமாயறிந்திலேம், என்றிடின் = என்று சொல்லின், [பின்னுள்ள சுருதி வாக்கியத்தின் தாற்பரியத்தை ஆலோசித்தலால் காமநிவர்த்தி முதலியவற்றிற்கு திருஷ்டத்தன்மை சித்திக்கின்றதென்னுமபிப்பிராயத்தால் பரிகரிக்கின்றார்] யாம் அன்னது உணர்ந்தனம்=நாங்கள் கூறிய அப்பயனை அனுபவித்துளேம், [அதனது பிரத்தியக்ஷத்தன்மையை ஸ்பஷ்டஞ் செய்யும்பொருட்டு அவ்வாக்கியத்தையுதாகரித்து அதன் பொருளைக் கூறுகின்றார்] அவம் உறும் இதயமுடிச்சுகள்யாவும்=இழிவுபொருந்திய இருதயக்கிரந்திகள் அனைத்தும், அவிழ்ந்தன=விநாசமாகின்றன, என்றெனும் இம்மொழியால்=என்னும் இவ்வாக்கிய சேஷத்தால், தவம் அழிகாமம் = தவத்தைக் கெடுக்கின்ற காமமானது, முடிச்சுஉரு எனவே = கிரந்தி வடிவமாமென்று, சாற்றியதாம் என = சொல்லப்பட்டதாமென, நீ தேறு=நீ தெளிவாய்.

இவ்வாக்கியசேஷத்தால் காமநிவர்த்தியானது கிரந்திபேத ரூபமாக வியாக்கியானஞ் செய்யப்பட்டபடியால் அகங்காரத்திற்கும் சிதான்மாவிற்குமுள்ள தாதான்மிய அத்தியாசத்தின் நிவர்த்திவடிவ கிரந்தி பேதத்திற்கு அனுபவத்தாற் சித்திக்கப்பட்ட தன்மையிருத்தலால் அப்பிரத்தியக்ஷத்தன்மையின்றாமென்பது கருத்து.

ஏகாரம் இரண்டும் அசை. 128

(அ—கை)

அற்றேல் உலகில் காமசத்தத்தால் இச்சாவிசேஷமே சொல்லப் படுகின்றது. ஆதலால் அதற்கு கிரந்தித்தன்மையால் வியாக்கியானம்

எப்படியென்னுஞ் சங்கைக்கு அத்தியாசத்தை மூலமாகவுடைய இச்சாவிசேஷத்திற்கே காமசத்தவாச்சியத் தன்மையாம் இச்சை மாத்திரத்திற்கு அன்றுமெனக் கூறுகின்றூர்.

ஆங்கா ரத்தையு மறிவுரு வையுமொன்
றுக்கி விவேக மழிந்தமையால்
ஈங்கே யெற்கிது வாகுக வாகுக
வென்னு மவாவே காமமதாம்
வாங்கா வறிவுரு வந்தனை வேறுற
மன்னும கந்தைத னைக்கண்டாற்
றீங்கார் பொருளொரு கோடிய வாவினுஞ்
சேரா வாதைமு டிச்சறலால். 129

(ப—ரை) விவேகம் அழிந்தமையால் = அவிவேகத்தால், அகங்காரத்தையும் அறிவு உருவையும் ஒன்றுக்கி = அந்தக் கரணத்தையும் சிதான்மாவையும் ஐக்கிய அத்தியாசஞ்செய்து, ஈங்கு = இவ்வுலகில், எற்கு இது ஆகுக ஆகுக என்னும் அவாவே = எனக்கு இவ்வஸ்து கிடைக்குக இவ்வஸ்து கிடைக்குக என்னும் இச்சையே, காமமது ஆம் = காமசத்தவாச்சியமாம், [இப்படி அத்தியாசத்தை மூலமாகவுடைய காமத்திற்கே தள்ளத்தக்க தன்மையாமேல் இதர காமம் கொள்ளத்தக்கதாகநேரும் என்னுஞ் சங்கைக்கு பாதிக்குந் தன்மையின்மையினுல் அங்கீகரிக்கப்படுகிறதேயெனக் கூறுகின்றூர்.] அறிவுருவந்தனை = சிதான்மாவை, வாங்கா = (தாதான்மிய அத்தியாசத்தால் அகங்காரத்தில்) பிரவேசிப்பியாமல், மன்னும் அகந்தை தனை = அத்தியாசத்தால் நிலைபெற்றுள்ள அகங்காரத்தை வேறு உறகண்டால் = ஆன்மாவினும் பின்னமாகப் பார்க்கின், தீங்கு ஆர் ஒரு கோடி பொருள் அவாவினும் = தோஷங்கணிறைந்துள்ள கோடி வஸ்துக்களை இச்சிக்கினும், வாதைசேரா = துன்பம் பொருந்தாவாம், முடிச்சு அறலால் = கிரந்திபேதமானதால் எ—று.

அவிவேகம் = அவித்தை. பேதம் = விநாசம்.

ஈண்டு இது இரகசியமாம்:— சிதாபாசன் தேகம் சாக்ஷி என்னுமிவைகளோடு கிரமமாகச் சகஜம் கர்மஜம் பிரமஜம் என்னும் வேறுபாட்டால் அகங்காரத்தின் தாதாத்மிய அத்தியாசம் மூன்று வகையாம். சிதாபாசனேடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் சகஜ

(சுபாவீக) தாதாத்மியாத்தியாசமாம். ஏனெனின், அகங்காரமும் சிதாபாசனும் கூடவே தோன்றிக் கெடுதலால். வர்த்தமானதேகத்தோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் கர்மஜ (பிராரப்த கர்மத்தால் உண்டாகிய) தாதாத்மிய அத்தியாசமாம். ஏனெனின், ஜீவித்திருக்கும் அவஸ்தையில் "நான் மனிதன்" என்று சகல ஜனங்களுக்கும் அனுபவம் இருக்கின்றது. பிராரப்த கர்மமாகிய உபாதிநாசமாகத்தேகத்தோடுள்ள தாதாத்மியம் நாசமாவதால் தேகம் விழுந்தபின் தேகத்தில் நான் என்பன முதலிய விவகாரங்காணப்படுகிறதில்லை. ஆதலால் அது கர்மஜன்னியமாம். அசங்கசாக்ஷி சேதனத்தோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் பிரமஜ (அஞ்ஞானத்தாலாகிய பூர்வ பூர்வ பிராந்தியினுல் சித்தித்துள்ள) தாதாத்மிய அத்தியாசமாம். தத்துவ ஞானத்தால் பிராந்திநிவிருத்தியாயின் தாதாத்மியமில்லாமையால் ஞானிக்குச்சாக்ஷியிடத்து "நான் கர்த்தாபோக்தா சுகிதுக்கி" என்னும் அபிமானமில்லை. ஆகையால் அது பிரமஜமாம். இப்படி ஸ்ரீசங்கராசாரியசுவாமிகள் வாக்கிய விருத்தியில் மூன்றுவிதமான அகங்காரத்தின் தாதாத்மியத்தைக் கூறியிருக்கின்ருர். இம்மூன்றில் சகஜமும் கர்மஜமும் ஞானிகளிடத்திலும் எப்போதாவது தோன்றுகின்றது. ஞானிக்கு அஞ்ஞானமும் பிராந்தியும் நீங்குதலால் மூன்ருவது பிரமஜ தாதாத்மியம் உண்டாகிறதில்லை. ஆகையால் அகங்காரத்தின் தர்மமான ஆபாச வடிவ இச்சை முதலியவற்ருல் முன்போல ஞானியின் சொரூபமாகிய சாக்ஷிக்குப் பாதமுண்டாகிறதில்லை. 129

(அ—கை)

அற்றேல் அத்தியாசமின்றேல் இச்சை முதலியவைகளுக்கு உற்பத்தியேயின்ருய்விடும் என்னுஞ் சங்கைக்கு பிராரப்த கருமவசத்தால் அவைகளுக்கு உற்பத்தி சம்பவிக்குமெனக் கூறுகின்ருர்.

இறினு முடிச்சது பழவினை யின்ற
  னிழுக்கா லிச்சைகண் மிக்குண்டா
மறிவுறி னுந்தீ வினைமிகு தியினிற்
  ககமகிழ் வின்மை பிறப்பதுபோல்
வறிதுட னேய்முத லாற்ருன் றருமுதன்
  மன்னிய சென்மா தியினுற்ரு
னெறியக மருவுறு மிச்சை முனலே
  நிறையறி வுருவிடை யாவதெனே. 130

(ப—ரை) முடிச்சது இறினும் = (தத்துவ ஞானத்தால் தாதான்மிய அத்தியாசவடிவ) கிரந்திநாசமாயினும், பழவினையின்றன் இழுக்கால் = பிராரத்தகரும தோஷத்தால், இச்சைகள் மிக்கு உண்டாம் = காமங்கள் மிகுதியாக உண்டாகும் [இதில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] அறிவுறினும் = ஆன்மாவை உணர்ந்தும், தீவினை மிகுதியின் = பாபபாகுல்லியத்தால், நிற்கு = உனக்கு, அகமகிழ்வு பிறப்பது இன்மைபோல் = மனச்சந்தோஷம் உண்டாகாதது போன்றும், [அத்தியாசமில்லாதபோது இச்சை முதலியவைக்கு பாதிக்காத்தன்மையை இரண்டு திருஷ்டாந்தங்களைக் காட்டுதலால் விஸ்தரிக்கின்றார்] வறிது உடல் நோய் முதலால் தான் = சிறுமையான தேகத்திலுள்ள வியாதி முதலியவைகளாலாவது, தருமுதல் மன்னிய சென்மாதியினால் தான் = விருக்ஷம் முதலியவைகளிலுள்ள உற்பத்தி விநாசங்களாலாவது, நெறிமருவு அகம் உறும் இச்சைமுதலே = சாஸ்திர நெறியை அனுசரித்த அந்தக்கரணத்திலுள்ள இராகம் முதலியவற்றாலாவது, நிறை அறிவு உருவிடை = பரிபூரண சிதான்மாவினிடத்து, என் ஆவது = என்ன உண்டாகும், பாதமின்றுமென்பது பொருள்.

தேக சம்பந்தமின்மையினால் எப்படி தேகத்திலுள்ள வியாதி முதலியவைகளால் அகங்காரசாக்ஷிக்குப் பாதமின்றோ எப்படி விருக்ஷம் முதலியவைகளிலுள்ள சன்மம் முதலியவற்றால் பாதமின்றோ, அப்படி அத்தியாசம் நிவர்த்தியாகும்போது அகங்காரத்திலுள்ள இச்சை முதலியவற்றாலும் பாதமின்றுமென்பது கருத்து. 130

(அ—கை)

சிதான்மாவின் அசங்கத்தன்மையெப்போதும் ஒரே படித்தாயிருத்தலால் கிரந்தி பேதத்திற்குப் பூருவமும் காமாதியால் பாதமின்றுமெனச் சங்கிக்கின்றான்.

அல்லன் முடிச்சறு முன்னரு மிவ்வா
றுமெனி னதுதனை மறவேல்கா
ணல்லன் முடிச்சற னிற்கது வேயா
மதனு னீதன் னியனுவாய்
அல்லன் முடிச்சது வேயாம் வேறல
வறிவில ரித்தகை யுணராரே
லல்லன் முடிச்சத னழிவா லஞ்ஞரு
மறிஞரும் வேறு குவரன்றே. 131

(ப—ரை) அல்லல் முடிச்சு அறும் முன்னரும் = துன்ப வடிவ கிரந்தி பேதத்தின் பூருவமும், இவ்வாறும் எனின் = இப்படியேயாம் அதாவது சிதான்மா காமாதிகளால் பாதிக்கப்படுவதின்றுமென்று சொல்லின், [இப்படிப்பட்ட ஞானமே கிரந்திபேத ரூபமாக நம்மால் சொல்லப்படுகிறபடியால் இந்த சங்கையானது நமக்கு அநுகூலமாமெனக் கூறுகின்றார்] அதுதனை மறவேல் = சிதான்மா எப்போதும் அசங்கமாமென்பதனை மறக்காதே, அதுவே = ஆன்மா எப்போதும் அசங்கமென்கின்ற இப்படிப்பட்ட ஞானமே, நிற்கு அல்லல் முடிச்சு, அறல் ஆம் = உனக்கு துன்பவேதுவாகிய கிரந்தியின் பேதமாம், அதனால் = அப்படிப்பட்ட ஞானத்தினால், நீ தன்னியன் ஆவாய் = நீ கிருதார்த்தனாவாய், [இப்படிப்பட்ட ஞானமின்மையே கிரந்தியாமெனக் கூறுகின்றார்] அறிவிலர் = மூடர்கள், இத்தகை உணராரேல் = இப்படி ஆன்மாவையசங்கமாக அறிகின்றிலரென்று சொல்லின், அதுவே அல்லல் முடிச்சு ஆம் = இப்படியறியாமையே துன்பவேதுவாகிய கிரந்தியாம், வேறு அல = அதனினும் அன்னியமன்று, [இங்ஙனம் ஞானிக்குமிச்சையையங்கீகரிக்கின் ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதம் எதனால் என்னுஞ் சங்கைக்கு கிரந்தி விநாசத்தினும் வேறாக ஒன்றினாலும் பேதமன்றுமெனக் கூறுகின்றார்] அல்லல் முடிச்சு அதன் அழிவால் = துன்ப ஏதுவாகிய கிரந்தியினுண்மையினாலும் அதன் விநாசத்தானும், அஞ்ஞரும் அறிஞரும் வேறாகுவர் = மூடரும் புத்தரும் பேதமாவர் எ—று.

காண் முன்னிலையசை. அன்று, ஏ—அசை. 131

(அ—கை)

வேறு ஒன்றினாலும் பேதமன்றுமென்பதையேவிஸ்தரிக்கின்றார்.

தொழிறொழி லின்மையி னுதன்மே யிந்தியந்
துவள்மன தொடுமதி யாலாதல்
பழிபடு மஞ்ஞ ரறிஞர் தமக்கும்
பற்றறு வேற்றுமை சிறிதுமிலை
வழியில் விராத்திய சோத்திரி யர்க்குநன்
மறைவிட லோதுத லாலன்றிக்
கழிபடு முணன்முத லாலிலை வேற்றுமை
காணுக விங்கிம் முறையன்றே. 132

(ப—ரை) மெய்இந்தியம் துவள்மனதொடு மதியால் ஆதல்= தேகம் இந்திரியம் சஞ்சலமனது புத்தியாகிய இவைகளால் உண்டாகிய, தொழில் ஆதல் = பிரவிருத்தியிலாவது,தொழில் இன்மையின் ஆதல்= நிவர்த்தியிலாவது, பழிபடும் அறிஞர் அஞ்ஞர் தமக்கும் = நிந்தையுறும் அஞ்ஞானிகளுக்கும் ஞானிகளுக்கும், பற்றுறு வேற்றுமை=பொருந்தா நின்ற பேதமானது, சிறிதும் இலை = கிஞ்சித்தும் இன்றும், [கூறிய பொருளில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] விராத்திய வழியில் சோத்திரி யர்க்கு=வேதாத்தியயனஞ் செய்யாதவனுக்கும் கிரமமாக வேதாத்திய யனஞ்செய்தவனுக்கும், நன்மறை விடல் ஓதுதலால் அன்றி = நல்ல வேதத்தைப் படியாமையாலும் படித்தலாலும் பேதமேயன்றி, கழிபடும் உணல் முதலால் வேற்றுமை இலை = தாழ்வாகிய ஆகாரம் முதலிய வற்றால் பேதம் இன்றும், இங்கு = ஞானி அஞ்ஞானிகளிடத்தும், இம்முறை காணுக=இந்த நியாயத்தைப் பார்க்குக எ—று.

அன்று, ஏ — அசை 132

(அ—கை)

ஞானிக்குக் கிரந்தியின் சூனியத்தன்மையில் கீதை வாக்கி யத்தைப் பிரமாணமாக்குகின்றார்.

வாளா நிற்பவ னெனவே வந்தன
வரையா தோய்ந்தன வாவாமே
மூளா நின்றவ னிந்தமு டிச்சை
முறித்தவ னுகு முதாசீன
மாளா நிலையை விதித்தது வாமெனின்
மன்னிய வெனவெனு மொழிவீணு
மீளா விவனுட லாதிகள் வல்லன
மேவிய வலவெனி னதுநோயே. 133

(ப—ரை) வந்தன = பிராப்தமான துக்கங்களை, வரையாது= துவேஷஞ் செய்யாது, ஓய்ந்தன = நிவிருத்தியடைந்த சுகங்களை, ஆவாமே = இச்சியாது, வாளாநிற்பவன் எனவே = உதாசீனனைப் போல, மூளாநின்றவன் = யாதொரு முயற்சியுமின்றியிருப்பவன், இந்த முடிச்சை முறித்தவன் ஆகும்=இந்தத் தாதான்மிய அத்தியாச வடிவக் கிரந்தியைக் கெடுத்தவன் என்று சொல்லப்படும், [இந்த கீதா

வாக்கியமானது உதாசீனத் தன்மையின் விதிபரமாம்,கிரந்திபேதத்தில் பிரமாணமன்ரும் என வினவுகின்ருன்] மாளா உதாசீன நிலையை விதித்ததுவாம் எனின் = இக் கீதா வாக்கியம் கெடாத உதாசீனத் திதியை விதிக்கின்றது என்று சொல்லின், [ விதிபரமாமேல்போல என்னும் சொல் வியர்த்தமாமெனப் பரிகரிக்கின்ருர்]மன்னிய எனஎனும் மொழி வீணும் = பொருந்திய போல என்னுஞ் சொல் பொருளின்றிய தாகும், [ஞானியின் தேகாதிகளுக்குக் காரியஞ்செய்வதில் சாமர்த்திய மில்லாமையிஞல் அப்பிரவிருத்தியாம் கிரந்திபேதத்தாலன்ருமெனச் சங்கித்துப் பரிகாசஞ் செய்கின்ருர்] இவன் மீளா உடலாதிகள் = இந்த ஞானியினது நீங்காத தேகம் முதலியவை, வல்லமை மேவிய அல எனின் = தொழில் செய்வதில் சாமர்த்தியமுடையனவன்றென்று சொல்லின், அது நோயே = அந்த ஞானம் வியாதியேயாம் எ—று.

133

(அ—கை)

அற்றேல் தத்துவ ஞானம் வியாதியாயிருக்குக என்னைதோஷம் எனின் அதற்குக் கூறுகின்ருர்.

மெய்யறி வினையழி நோயென் றெண்ணுறு
மேதாவியர்மிதி மிகுதெளிவாந்
துய்யவ ஞர்க்கினி வேண்டுவ தென்னைகொல்
சொல்லுதி பரதனை முதலானோர்க்
கய்யபு ராணந் தொழிலிலை யெனவே
யறைதரு மெனினுண் பினும்லீலை
செய்யினு மிரதிப் பினுமெனு மறைமொழி
சிரவணை மேசெய் திலைபோலும். 134

(ப—ரை) மெய் அறிவினை = தத்துவ ஞானத்தை, அழி நோய் என்று எண்ணுறும் = க்ஷய வியாதியென்று கருதுகின்ற. மேதாவியர் மிதி = மகாமதியினையுடையோரது பிரஞ்ஞையானது, மிகுதெளிவாம் = அதிசொச்சமாம், துய்யஅஞர்க்கு = பரிசுத்தரான அப்படிப்பட்டவருக்கு, இனிவேண்டுவது என்னை கொல் = இனி விரும்பத்தக்க வஸ்து யாதிருக்கின்றது, சொல்லுதி = கூறுவாய், தத்துவ ஞானத்தை வியாதி யென்று கருதுகின்றவர் மூர்க்கரென்பது பொருள், [அகாலத்தில்

இப்பரிகாசம் செய்யப்படுகிறது, ஞானிகளுக்குப் பிரவிருத்தியினபாவம் புராண சித்தமாதலாலெனச் சங்கிக்கின்ருன்] அய்ய=குருவே, பரதன் முதலானோர்க்கு = சடபரதன் முதலான ஞானிகளுக்கு, தொழில் இலை எனவே = பிரவிருத்தியில்லையென்று, புராணம் அறைதரும் எனின் = புராணங் கூறுகின்றது என்று சொல்லின், [சுருதியை அறியாதவனுய் நீசங்கிக்கின்ருய் என்று பரிகரிக்கின்ருர்]உண்பினும்= அன்னம் முதலியவற்றைப் புசிக்கினும், லீலை செயினும் = தனது இச்சையால் விளையாடினும், இரதிப்பினும்=ஸ்திரீ வாகனம் ஞாதிகள் மித்திரர்கள் ஆகிய இவர்களோடு ரமிக்கின்றவனுயினும், எனும் மறைமொழி = என்கின்ற இந்த சுருதி வாக்கியத்தை, சிரவணம் செய்திலை போலும் = கேட்கவில்லை போலும் எ—று.

பரதனை என்பதில் ஐ சாரியை.

ஏ—அசை. 134

(அ—கை)

அப்படியானுல் புராண வாக்கியத்திற்கு யாது கதியென்னுஞ் சங்கைக்கு புராண வாக்கியமும் உதாசீனத்தன்மையை போதிப்பதில் தாற்பரியமுடையதாம். பிரவிருத்தியின் அபாவத்தில் தாற்பரியமுடையதன்று என்று அபிப்பிராயப்பட்டுக் கூறுகின்ருர்.

> காட்டங் கல்லென வேபர தாதியர்
> கனியுணன் முதலிய வறவிட்டோர்
> மாட்டி லிருந்திலர் மற்றெனை சங்க
> மருண்டன ராய்வா ளாநின்ருர்
> நாட்டினி லேசங் கம்பெற் றுண்பார்
> னற்சுக மதுதனை விடலாமாற்
> கூட்டுற வறவிடல் வேண்டு மெநாளுங்
> கோதற்று சுகம்வேண் டுனர்தாமே. 135

(ப—ரை) காட்டம் கல் எனவே=விறகு போலவும் பாஷாணம் போலவும், பரதாதியர்=சடபரதன் முதலான மகரிஷிகள்,கனி உணல் முதலிய அறவிட்டு = பழம் சாப்பிடுதல் முதலியவற்றை யத்தியந்தம் விட்டு, ஓர்மாட்டில் இருந்திலர் = ஓரிடத்தில் ஸ்திதி பெற்றிலர்,

வாக்கியமானது உதாசீனத் தன்மையின் விதிபரமாம்,கிரந்திபேதத்தில் பிரமாணமன்ரும் என வினவுகின்ருன்] மாளா உதாசீன நிலையை விதித்ததுவாம் எனின் = இக் கீதா வாக்கியம் கெடாத உதாசீனத் திதியை விதிக்கின்றது என்று சொல்லின், [விதிபரமாமேல்போல என்னும் சொல் வியர்த்தமாமெனப் பரிகரிக்கின்ருர்]மன்னிய எனஎனும் மொழி வீணும்=பொருந்திய போல என்னுஞ் சொல் பொருளின்றிய தாகும், [ஞானியின் தேகாதிகளுக்குக் காரியஞ்செய்வதில் சாமர்த்திய மில்லாமையினுல் அப்பிரவிருத்தியாம் கிரந்திபேதத்தாலன்ருமெனச் சங்கித்துப் பரிகாசஞ் செய்கின்ருர்] இவன் மீளா உடலாதிகள்=இந்த ஞானியினது நீங்காத தேகம் முதலியவை, வல்லமை மேவிய அல எனின் = தொழில் செய்வதில் சாமர்த்தியமுடையனவன்றென்று சொல்லின், அது நோயே=அந்த ஞானம் வியாதியேயாம் எ—று.

133

(அ—கை)

அற்றேல் தத்துவ ஞானம் வியாதியாயிருக்குக என்னைதோஷம் எனின் அதற்குக் கூறுகின்ருர்.

மெய்யறி வினையழி நோயென் றெண்ணுறு
மேதாவியர்மிதி மிகுதெளிவாந்
துய்யவ ஞர்க்கினி வேண்டுவ தென்னைகொல்
சொல்லுதி பரதனை முதலானோர்க்
கய்யபு ராணந் தொழிலிலை யெனவே
யறைதரு மெனினுண் பினும்லீலை
செய்யினு மிரதிப் பினுமெனு மறைமொழி
சிரவண மேசெய் திலைபோலும். 134

(ப—ரை) மெய் அறிவினை=தத்துவ ஞானத்தை, அழிநோய் என்று எண்ணுறும்=க்ஷய வியாதியென்று கருதுகின்ற, மேதாவியர் மிதி=மகாமதியினையுடையோரது பிரஞ்ஞையானது, மிகுதெளிவாம்= அதிசொச்சமாம்,துய்யஅஞர்க்கு=பரிசுத்தரான அப்படிப்பட்டவருக்கு, இனிவேண்டுவது என்னை கொல் = இனி விரும்பத்தக்க வஸ்து யாதிருக்கின்றது, சொல்லுதி=கூறுவாய்,தத்துவ ஞானத்தை வியாதி யென்று கருதுகின்றவர் மூர்க்கரென்பது பொருள், [அகாலத்தில்

இப்பரிகாசம் செய்யப்படுகிறது, ஞானிகளுக்குப் பிரவிருத்தியினபாவம் புராண சித்தமாதலாலெனச் சங்கிக்கின்றான்] அய்ய=குருவே, பரதன் முதலானோர்க்கு = சடபரதன் முதலான ஞானிகளுக்கு, தொழில் இலை எனவே = பிரவிருத்தியில்லையென்று, புராணம் அறைதரும் எனின் = புராணங் கூறுகின்றது என்று சொல்லின், [சுருதியை அறியாதவனாய் நீசங்கிக்கின்றாய் என்று பரிகரிக்கின்றார்]உண்பினும்= அன்னம் முதலியவற்றைப் புசிக்கினும், லீலை செயினும் = தனது இச்சையால் விளையாடினும், இரதிப்பினும்=ஸ்திரீ வாகனம் ஞாதிகள் மித்திரர்கள் ஆகிய இவர்களோடு ரமிக்கின்றவனாயினும், எனும் மறைமொழி = என்கின்ற இந்த சுருதி வாக்கியத்தை, சிரவணம் செய்திலை போலும் = கேட்கவில்லை போலும் எ—று.

பரதனை என்பதில் ஐ சாரியை.

ஏ—அசை. 134

(அ—கை)

அப்படியானால் புராண வாக்கியத்திற்கு யாது கதியென்னுஞ் சங்கைக்கு புராண வாக்கியமும் உதாசீனத்தன்மையை போதிப்பதில் தாற்பரியமுடையதாம். பிரவிருத்தியின் அபாவத்தில் தாற்பரியமுடையதன்று என்று அபிப்பிராயப்பட்டுக் கூறுகின்றார்.

காட்டங் கல்லென வேபர தாதியர்
கனியுணன் முதலிய வறவிட்டோர்
மாட்டி லிருந்திலர் மற்றெனை சங்க
மருண்டன ராய்வா ளாநின்றார்
நாட்டினி லேசங் கம்பெற் றுண்பா
னற்சுக மதுதனை விடலாமாற்
கூட்டுற வறவிடல் வேண்டு மெநாளுங்
கோதறு சுகம்வேண் டுனர்தாமே. 135

(ப—ரை) காட்டம் கல் எனவே=விறகு போலவும் பாஷாணம் போலவும், பரதாதியர்=சடபரதன் முதலான மகரிஷிகள்,கனி உணல் முதலிய அறவிட்டு = பழம் சாப்பிடுதல் முதலியவற்றை யத்தியந்தம் விட்டு, ஓர்மாட்டில் இருந்திலர் = ஓரிடத்தில் ஸ்திதி பெற்றிலர்,

மற்றெனே = பின்னையென்னையெனின், சங்கமருண்டனராய் = சேர்க்கையினின்றும் பயந்தவராய், வாளாநின்றார் = உதாசீனமாயிருந்தார்கள், [சங்கத்தையுமேன் விடவேண்டும் எனிற் கூறுகின்றார்] நாட்டினிலே = உலகின்கண், புருஷன், சங்கம் பெற்று = பற்றையடைந்தால், உண்பான் = பாதிக்கப்படுவன், அதுதனை விடலால் சுகமாம் = அச்சங்கத்தை விடலால் சுகமுண்டாம், ஆதலால், கோது அறு சுகம் வேண்டுனர் = குற்றமற்ற ஆனந்தத்தை விரும்பினவர்கள், எநாளும் = எப்போதும், கூட்டுறவு அறவிடல் வேண்டும் = சங்கத்தை அத்தியந்தம் பரித்தியாகஞ் செய்யவேண்டும் எ—று.

தாம், ஏ—அசை.

ஆல், ஆம் இரண்டும் பிரித்துக் கூட்டப்பட்டது.

எந்நாளும் என்பது எநாளுமென இடைக்குறையாயிற்று.

ஈண்டு உண்டல், போகமாம். அதனுல் புருஷன் பாதிக்கப்படுதலின் பாதத்தை உண்டல் என்றார். உண்பான் என்பதற்கு மூலத்தையநுசரித்து பாதிக்கப்படுவனெனப் பொருள் கொள்ளப்பட்டது. 135

(அ—கை)

அப்படியானுல் மானசப்பற்றிற்கே தள்ளத்தக்கதாந்தன்மை இருக்குமேல் உட்பற்றின்றியவராய் வெளியில் வியவகரிக்கும் ஞானிகளுக்கு அஞ்ஞத்தன்மை முதலியது சனங்களால் ஏன் சொல்லப்படுகிறது என்று சங்கித்து சாஸ்திரத்தின் தாற்பரிய ஞானமின்மையினுல் எனக் கூறுகின்றார்.

நன்னூற் கருத்தை யுணராது
நவில்வர் மூடர் வெவ்வேரு
வன்னோர் துணிவிங் கேநிற்க
வதன தறுதி யியம்புமாற்
றன்னோர் விராகம் போதோப
ரதிக டமிற்ரு மன்பாகி
யொன்றுய்க் கொளற்பாற் ருய்நிற்கு
மோர்பாற் பிறிபட் டிருக்குமால். 136

(ப—ரை) நன்னூல் கருத்தை உணராது = நல்லசாஸ்திரத்தின் அபிப்பிராயத்தையறியாது, மூடர் வெவ்வேரு நவில்வர் = அறிவிலிகள் வேறு வேறு பிரகாரமாயறைகுவர், [ஆகையால் மூடரின் வியவகாரம் ஈண்டு விசாரிக்கத்தக்கதல்லவெனக் கூறுகின்ருர்] அன்னோர் துணிவு = அம்மூடரின் நிச்சயம், இங்கே நிற்க = இந்தஞான சாஸ்திரத்தில் (உதாசீனமாய்) ஒழிக, [அப்படியானல் அநுசந்திக்கத் தக்கது யாதென்னுமாகாங்க்ஷையுண்டாக சாஸ்திர ஹிருதயமாமெனக் கூறுகின்ருர்] அதனது அறுதி இயம்புதும் = அந்நன்னூற்றுணிவைக் கூறுதும், [அந்நூற்றுணிவு யாதெனிற் கூறுகின்ருர்] தன்நேர் = தனக்குத்தானே சமானமாகிய, விராகம் போத உபரதிகள் = வைராக்கியம் ஞானம் உபரமம் ஆகிய மூன்றும், தமில் தாம் அன்பாகி = பரஸ்பரம் சகாயமுடையதாய், ஒன்ருய் = பெரும்பாலும், கொளற்பாற்ருய் நிற்கும் = சுகர் முதலியோரிடத்துச் சேர்ந்திருக்கும், ஓர்பால் பிறிபட்டு இருக்கும் = சனகன் முதலிய ஒவ்வோரிடத்தில் வேறுபட்டு தனித்தனியாகவிருக்கும் எ—று.

ஆல் இரண்டும் அசைநிலைகள். 136

(அ—கை)

வைராக்கியம் முதலியவைகட்குப் பரஸ்பரம் விலகாமலிருத்தலைக் காண்டலின் அபேதமாமென்னுமாசங்கையுண்டாக அவற்றின் ஹேது முதலியவைகளின் பேதத்தால் பேதமறியத்தக்கதாமெனக் கூறுகின்ருர்.

ஏது சொரூபங் காரியம்வெவ்
வேரு மிவைக்குக் கலப்பிலதென்
ரேது நன்னூற் பொருளுணர்ந்தோ
ருண்மை யாவுட் கொளல்வேண்டுந்
தீது நோக்க லருவருப்புந்
திரும்பப் போகத் தாசையற
லீது மூன்றும் விராகத்துக்
கெழிலா ரேது முதலியவாம். 137

(ப—ரை) இவைக்கு = வைராக்கியம் முதலியவைகட்கு, ஏது சொரூபம் காரியம் = காரணமும் வடிவமும் காரியமும், வெவ்வேரும் = பின்னபின்னமாம், ஆகையால், கலப்பு இலதென்று = சங்கர

மற்றதென்று, ஓது நன்னூற் பொருள் உணர்ந்தோர் = சொல்லா நின்ற நல்ல சாஸ்திரார்த்தத்தை அறிந்தவர்கள்,உண்மையா உட்கொளல்வேண்டும்=உள்ளபடியே தெரிந்துகொள்ளவேண்டும், [அவற்றுள் வைராக்கியத்தின் ஏது முதலிய மூன்றனையும் உணர்த்துகின்றார்] தீது நோக்கல் = விஷயங்களில் தோஷதிருஷ்டி, அருவருப்பு= ஜிஹாஸை, திரும்பப்போகத்து ஆசை அறல்=மீண்டும் போகத்திலிச்சையில்லாமை, ஈதுமூன்றும் = ஆகிய இந்த மூன்றும், எழில்ஆர் விராகத்திற்கு = வலிமை பொருந்திய வைராக்கியத்திற்கு, ஏது முதலியவாம்=(முறையே) அசாதாரண காரணமும் சொரூபமும் காரியமும் ஆம் எ—று.

ஜிஹாஸை = விடுதற்கிச்சை. 137

(அ—கை)

இப்போது தத்துவ ஞானத்திற்குக் காரணம் முதலியவற்றைக் காண்பிக்கின்றார்.

வினவ லாதி யொருமூன்று
மெய்ம்மை பொய்ம்மை பகுத்தறிதல்
பினைவன் முடிச்சு முளையாமை
பெரும்போ தத்துக் கிவைமூன்று
மனக வியமா திகள்புத்தி
யடக்கம் விவகா ரத்தழிவு
மினிய வேது வாதியுப
ரதிக்கா மிதுதான் கலப்பிலதாம். 138

(ப—ரை) வினவல் ஆதி ஒரு மூன்று = சிரவணாதித்திரயம், மெய்ம்மை பொய்ம்மை பகுத்தறிதல் = கூடஸ்தனுக்கும் அகங்காராதிகளுக்கும் பேதஞானம், பினை வன்முடிச்சு முளையாமை = மீண்டும் அன்னியோன்னியாத்தியாச வடிவ வலிய கிரந்தியின் உத்பத்தியின்மை, இவை மூன்று=ஆகிய இந்த மூன்றும், பெரும் போதத்துக்கு ஆம் = மேலாகிய தத்துவ ஞானத்திற்கு முறையே காரணமும் சொருபமும் காரியமுமாம், சிரவணாதிசத்தத்தால் மனன நிதித்தியாசனங்களைக் கொள்க. "ஆன்மா காணத்தக்கது சிரவணஞ் செய்யத்தக்கது மனனஞ் செய்யத்தக்கது நிதித்தியாசனஞ்

செய்யத்தக்கது" என்று ஆன்ம ஞான சாதனத் தன்மையால் சிரவணுதிகளை விதித்தலால் சிரவணுதிகளுக்கு ஞான காரணத்தன்மை யாமென்றுணர்க,[உபரதிக்கு ஏது முதலிய மூன்றனையும் காட்டுகின்ருர்] அனக இயமாதிகள் = பரிசுத்தமாகிய இயமம் முதலியவைகளும், புத்தி அடக்கம் = சித்தவிருத்தி நிரோதவடிவயோகமும், விவகாரத்து அழிவும் = வியவகாரத்தின் விநாசமும் ஆகிய இம்மூன்றும், இனிய உபரதிக்கு = இனிமையான உபசாந்திக்கு, ஏதுவாதியாம் = முறையே காரணமும் சொரூபமும் காரியமும் ஆம், (ஆகையால்) இதுதான் = வைராக்கியம் போதம் உபரதி ஆகிய இம்மூன்றும், கலப்பு இலதாம் = சங்கரமின்றியதாம் அதாவது அபேதமின்ரும். மற்றுே பரஸ்பரம் பின்னமாம் எ—று.

அனக என்பதைப் பிரித்து பாபமற்றமைந்தா எனவும் பொருள் கொள்ளலாம். இயமம் முதலிய சத்தத்தால் நியமம் முதலிய எல்லா யோகாங்கங்களையும் கொள்க.அதாவது இயமம் நியமம் ஆஸனம் பிரா ணுயாமம் பிரத்தியாஹாரம் தாரணை தியானம் சமாதியென யோகாங் கங்கள் எட்டாம்,இயமமாவதுஅஹிம்சை சத்தியம் அஸ்தேயம் பிரம்மசரி யம் அபரிக்கிரகம் என்பனவாம். நியமமாவது ஸௌசம் சந்தோஷம் தபஸ் சுவாத்தியாயம் ஈசுவரப் பிரணிதானம் என்பனவாம். ஸ்திரசுகம் ஆஸனமாம். (அதாவது நிச்சலமாய் சுகஹேதுவாயிருப்பது ஆஸனம். அது பதுமாசனம் முதலிய பேதத்தால் அநேகமாம்) பிராணவாயுக்களை அடக்குவது பிராணுயாமமாம். பிராணுயாமத்தால் சித்தம் ஜெயிக்கப் பட்டபோது இந்திரியங்களுக்கு தத்தம் விஷயத்தில் ஆபிமுக்கியா பாவ நிமித்தக சித்தத்தின் சொரூபத்தையநுசரித்தல் பிரத்தியாஹாரமாம். ஹிருதயம் முதலிய தேசங்களில் சித்தத்தை வைத்தல் தாரணையாம். அத்தேசத்தில்தியேய விஷயகமான விருத்திக்கு விஜாதீய விருத்தியால் வியவதானமின்றி சதிருசப்பிரவாஹம் தியானமாம். அத்தியானமே தியேயாகாரமாய் விளங்குவதாய் தியானவடிவ சொரூபமில்லாதது போல எப்போது ஆகின்றதோ அப்போது சமாதி என்று சொல்லப் படுகின்றது. 138

(அ—கை)

வைராக்கியம் முதலிய மூன்றற்கும் சமப்பிரதானத்தன்மை உண்டா இல்லையா என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

நிகழ்மெய்ப் போதந் தலைமையதா
நேரே முத்தி யளிப்பதனுன்
மிகநற் போதம் வளர்ப்பனவாம்
விராக வுபர திகளிரண்டுந்
திகழிம் மூன்று மிகமுதிரிற்
றீர்க்க காலத் தவப்பயனு
முகண்வெம் பாவத் தொருபாலொன்
ருேர்காற் றடைப்பட் டிருக்குமால். 139

(ப—ரை) நிகழ்மெய்ப்போதம்=விளங்கா நின்ற தத்துவஞானம் நேரே முத்திஅளிப்பதனுல்=சாக்ஷாத் மோக்ஷத்தைக் கொடுப்பதனுல், தலைமையதாம்=பிரதானமாம், ("ஆன்மாவினையே அறிந்து மிருத்தியுவைக் கடக்கின்ருன், மோக்ஷத்தின் பொருட்டு வேறு வழியில்லை" என்னுஞ் சுருதியாலென்பது பொருள்)விராக உபரதிகள் இரண்டும்= வைராக்கிய உபரமங்களாகிய உபயமும், மிக நற்போதம் வளர்ப்பனவாம்=மிகவுஞ்சிறந்த தத்துவஞானத்திற்கு உபகாரிகளாம், (இவ்விரண்டன்கண்ணுள்ள உபகாரித்தன்மை "பிராம்மணன் வைராக்கியத்தையடைகுக மோக்ஷம் தொழிலால் உண்டாவதன்று) அதனையறியும் பொருட்டு குருவின் சமீபத்திற் செல்க, சாந்தனுய் தாந்தனுய் உபரதனுய் திதிக்ஷுவாய் சமாஹிதனுய் இருந்துகொண்டு ஆன்மாவிலேயே ஆன்மாவைப் பார்க்குக" என்னும் சுருதிகளாலறியப் படுகின்றது,[ஒன்ருய் கொளற்பாற்ருய் நிற்கும் ஓர்பாற்பிறிபட்டிருக்கும் என்று முன் 136-வது செய்யுளில் கூறப்பட்டது. அதில் காரணங்கூறுகின்ருர்] திகழ் இம் மூன்றும் மிகமுதிரில் = விளங்கா நின்ற வைராக்கியாதி மூன்றும் அத்தியந்தம் பக்குவமாமேல், தீர்க்க காலத் தவப் பயனும் = அது மகத்தான புண்ணியத்தின் பிரயோசனமாம், உகள் வெம்பாவத்து = கெடுகின்ற கொடிய பாபத்தினுல், ஒருபால் = ஒருவனிட்த்து, ஒன்று = வைராக்கியாதி மூன்றனுள் ஏதேனும் ஒன்று, ஓர் கால் = ஓர் போது, தடைபட்டிருக்கும் = பிரதிபந்தம் பண்ணப் பட்டிருக்கும் எ—று.

அனேக ஜன்மத்தில் செய்யப்பட்ட புண்ணிய புஞ்சம் பரிபாகமாகும்போது மூன்றற்கும் சேர்க்கையுண்டாகிறது. இல்லாவிட்டால்

பிரதிபந்தகபாபானுசாரத்தால் எவனேனுமொருவனிடத்தில் கால விசேஷத்தால் ஒன்றற்கு பிரதிபந்தமுண்டாகின்றது என்பது அபிப் பிராயம். ஆல்—அசைநிலை. 139

(அ—கை)

அம்மூன்றனுள்ளும் தத்துவஞானம் பிரதிபந்திக்கப்படின் மோக்ஷமில்லையெனக் கூறுகின்றார்.

விரதி யுபர திகணிறைந்து
மேலாம் போதந் தடைப்பட்டோர்
நிரதி சயமுத் தியையடையார்
நேர்வர் தவத்தான் மேலுலகம்
புரண போத நிறைந்தேனை
யிரண்டுந் தடைதான் புகுமெனினுந்
திரமெய் முத்தி நிலைவரமாந்
திட்ட துக்கஞ் சிதையாதால். 140

(ப—ரை) விரதி உபரதிகள் நிறைந்து=வைராக்கிய உபரதி களாகிய இரண்டும் பூரணமாகி, மேலாம் போதம் தடைப்பட்டோர்= உயர்வாகிய ஞானத்தின் பிரதிபந்தத்தினையுடையவர், நிரதிசய முத் தியை அடையார்=சருவோற்கிருஷ்ட மோக்ஷத்தையடையமாட்டர்கள் [அப்படியானால் வைராக்கியாதியைச் சம்பாதித்தல் பயனற்றதாமென் னுஞ்சங்கைக்கு "புண்ணியவான்களுடைய உலகத்தில் அநேகமாயிரம் வருஷம் வாசஞ்செய்து சுசியாயும் ஐஸ்வரியமுடையவர்களாயும் உள்ள வரது குலத்தில் யோகப்பிரஷ்டன் பிறக்கின்றான்" என்னும் பகவானது வாக்கியத்தால் புண்ணியலோகப் பிராப்தியுண்டாகிறதெனக் கூறுகின்றார்] தவத்தால் = வைராக்கியாதி புண்ணியத்தால், மேல் உலகம் நேர்வர்=பிர்மலோகத்தையடைவார்கள், [வைராக்கிய உபரதி களுக்குப் பிரதிபந்தமுளதேல் சீவன் முத்திச் சுகம் சித்திக்கிறதில்லை எனக் கூறுகின்றார்] புரணபோதம் நிறைந்து = பிரமத்தின் ஞான மானது பூரணமாகி, ஏனை இரண்டும் தடை புகுமெனினும்=வைராக்கிய உபரதிகளாகிய உபயமும் பிரதிபந்திக்கப்படினும், திரமெய் முத்தி நிலைவரமாம்=புனராவிருத்திரகித சத்திய மோக்ஷமானது விநிஸ்ச்சித மாம், அப்படியானாலும், திட்டதுக்கம் சிதையாது=பிரத்தியக்ஷ துக்க மானது நாசமாகாது எ—று. 140

தான், ஆல்—அசைநிலைகள்.

(அ—கை)

இப்போது வைராக்கியம் முதலியவைகளின் அவதியை உணர்த்துகின்றார்.

அயன்பே ருலகந் திரணமென
வறிதல் விரதிக் கவதியுடல்
சொயமா வதுபோற் பரந்தானுந்
துணிவே போதத் தினுக்கவதி
துயில்போன் முழுது மறப்பதுதான்
றுகடீ ருபர திக்கவதி
வியனார் மதியா லவாந்தரமாம்
வேறு பாடோர்ந் திடல்வேண்டும். 141

(ப—ரை) அயன் பேர் உலகம் திரணம் என அறிதல் = பிரம லோகத்தையும் துரும்பாகக் கருதுதல், விரதிக்கு அவதி = வைராக்கியத்திற்கு முடிவாம், உடல் சொயமாவதுபோல் = (அஞ்ஞானகாலத்தில்) தேகந் தானாக இருந்ததுபோல, பரம் தானும் துணிவே = பிர்மமே தானென்கின்ற நிச்சயமே, போதத்தினுக்கு அவதி = தத்துவஞானத்திற்கு முடிவாம், துயில் போல் முழுதும் மறப்பதுதான் = சுழுத்தியிற் போன்று எல்லாவற்றையும் மறந்திருத்தலே, துகள்தீர் உபரதிக்கு அவதி = தோஷமற்ற உபரதிக்கு முடிவாம் [வைராக்கியம் முதலியவற்றின் அவாந்தர தாரதம்மியம் தன் தன் புத்தியால் அறியத்தக்கதெனக் கூறுகின்றார்] வியன்ஆர் மதியால் = உயர்வு பொருந்திய புத்தியினால், அவாந்தரமாம் வேறுபாடு = இம்மூன்றனது அவாந்தர பேதத்தை, ஓர்ந்திடல் வேண்டும் = (கூறிய மார்க்கத்தால்) விசாரித்து அறியவேண்டும் எ—று. 141

(அ—கை)

அற்றேல் தத்துவஞானமுடையவருக்கும் இராகாதியுடையதாந் தன்மையால் விஷமத்தன்மை தோற்றுதலால் ஞானத்திற்கும் முத்தி ஹேதுத்தன்மையை நிச்சயஞ் செய்யமுடியாதாம் என்று சங்கித்து, இராகாதிகளுக்கு வியாதி முதலியவை போன்று பிராரத்த கருமத்தின் பலத்தன்மையிருத்தலால் முத்திப் பிரதிபந்தகத் தன்மையசித்தமாம்.

ஆனதால் சாஸ்திரார்த்தத்தில் விவாதஞ் செய்யத்தக்கதன்றெனக் கூறுகின்ருர்.

பெற்ற வினைநா நாத்துவத்தாற்
பெரியோர் நாநா விதமாவர்
பற்று மதனு னூற்பொருளின்
மயங்க வேண்டா பண்டிதர்க
ளுற்ற தத்தம் வினைவயத்தா
லவர்க ளெவ்வா றுறைந்தாலு
முற்றும் போத மொருபடித்தா
முத்தி நிலைமை சமனுமே. 142

(ப—ரை) பெற்ற வினைநாநாத்துவத்தால்=பிராரத்த கருமங்களின் பேதத்தால், பெரியோர் நாநாவிதமாவர் = பிரமத்தையுணர்ந்தவர்கள் வெவ்வேறு பிரகாரமாயிருப்பார்கள், அதனுல் = அக்காரணத்தால், பற்றும் நூற்பொருளில்=பொருந்திய சாஸ்திரார்த்தங்களில், பண்டிதர்கள் மயங்கவேண்டா = விவேகிகள் பிராந்தியையடையாதவராயிருக்கவேண்டும், [அப்படியானுல் அறியத்தக்கது யாதெனிற் கூறுகின்ருர்]அவர்கள் = பிரமத்தைச்சாக்ஷாத்கரித்தவர்கள்,உற்றதத்தம் வினைவயத்தால்=பொருந்திய தமது தமது கருமாநுசாரத்தால், எவ்வாறு உறைந்தாலும் = எவ்விதமாக இருந்தபோதிலும், முற்றும் போதம் ஒருபடித்தாம் = எல்லோர்க்கும் நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் ஞானம் ஏகாகாரமாம், முத்திநிலைமை சமனும்=நிர்த்தோஷப் பிரம்ம ரூபத்தால் அவஸ்தாநமும் சமானமாம் எ—று.

ஏ—அசை. 142

(அ—கை)

இந்தப்பிரகரணத்தின் தாத்பரியத்தைச்சுருக்கிக் காட்டுகின்ருர்.

செகச்சித் திரந்தன் னறிவிடைவத்
திரச்சித் திரம்போன் மாயைசெயு
மிகழ்ச்சித் திதனை யறிவுருவ
மென்றுந் தானு யிடல்வேண்டும்
புகழ்ச்சித் திரநற் றீபமிதைப்
போது மநுசந் திப்பவர்தா
முகச்சித் திரத்தை நோக்கிடினு
மொன்று முன்போன் மயங்காரே. 143

(ப—ரை) செகச்சித்திரம்=பூத பௌதிகங்களாகிய சித்திரத்தை, தன் அறிவிடை=தனது சைதன்னியத்தில், வத்திரச் சித்திரம்போல்= (சித்திரமெழுதுவோன்) படத்தில் சித்திரத்தைக் கற்பிப்பது போல, மாயை செயும்=மாயையானது கற்பிக்கும், இதனை இகழ்ச்சித்து= (மாயாகற்பித) இப்பிரபஞ்சத்தையுபேக்ஷித்து, அறிவு உருவம் என்றும் தானுயிடல் வேண்டும்=சைதன்னிய சொரூபம் எப்போதும் தானுக வேண்டும், (சைதன்னியமாகப் பரிசேஷிக்கத்தக்கதென்பது பொருள்) [கிரந்தாப்பியாசத்தின் பயனைக் கூறுகின்ருர்] புகழ் சித்திர நல்தீபம் இது=துதிக்கும்படியான சித்திரதீபமென்னும் இச்சிறந்த நூலை, எப்போதும் அநுசந்திப்பவர் = நித்தியம் அநுசந்தானஞ் செய்கின்றவர்கள், உகச்சித்திரத்தை நோக்கிடினும் = சகமாகிய சித்திரத்தைப் பார்க்கின்றவராயினும், முன்போல் ஒன்றும் மயங்கார்=அஞ்ஞான காலத்திற்போல கிஞ்சித்தும் மோகத்தையடையார்கள் எ—று.

உலகமென்பது நடுக்குறைந்து உகமென வந்தது.

தாம், ஏ—அசைநிலை. 143

ஆருவது சித்திரதீபம் முற்றிற்று.

ஆகக்கவி 320



உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## ஏழாவது பிரகரணம்.

## *திருப்தி தீபம்.

அகண்டானந்த சொருபரும் மங்கள சொருபரும் சிஷ்யனது அஞ்ஞானவடிவ இருளை நாசஞ்செய்வதில் சமர்த்தரான சூரியசந்திர அக்கினிமூர்த்தியாயிருப்பவரும் ஆகிய குருவின் பொருட்டு நமஸ்காரம்.

வேதார்த்தத்தைப் பிரகாசிப்பித்தலால் இருதயத்திலுள்ள இருளை நிவர்த்திக்கின்றவராய், வித்தியாதீர்த்த மஹேஸ்வரர் நான்கு வித புருஷார்த்தங்களைக் கொடுப்பாராக.

ஸ்ரீ பாரதீதீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ் கரித்து குருவின் அநுக்கிரகத்தால் திருப்தி தீபத்தின் வியாக்கியானம் செய்யப்படுகின்றது.

(அ—கை)

திருத்தி தீபமென்னும் பிரகரணத்தையாரம்பிக்கின்றவராய் ஸ்ரீ பாரதீதீர்த்த குருவானவர் அது வியாக்கியான வடிவமாதலால் அதன் மூலமாயுள்ள வியாக்கியானிக்கத் தகுந்த சுருதியை முதலிற் படிக்கின்றார்.

---

* அனுகூலவஸ்துவின் அனுபவ வடிவ போகத்தின் ஆவிருத்தி யுண்டாக எந்தச் சுகமுண்டாகிறதோ அது திருப்தியெனப்படுகின்றது. அதனை தீபத்தைப்போல் விளக்குவதால் இப்பிரகரணம் திருப்தி தீபமாம்.

இந்தப்புரு டன்றானென வேதன்னை யுணர்ந்தா
லெந்தப்பொரு ளிச்சித்தெவ னின்புக்குடல் வேவா
மிந்தச்சுரு தியினுட்பொரு ளிங்கோர்பெற வோர்வே
மந்தத்தகை யான்முத்தர்த மானந்தம் விளங்கும். 1

(ப—ரை) இந்தப் புருடன் தான் எனவே = இந்தப் பிரத்தியக்கு வடிவ புருஷனே யானென்று, தன்னையுணர்ந்தால் = ஆன்மாவை யறிந்தால், எந்தப் பொருள் இச்சித்து = எந்த வஸ்துவை விரும்பி, எவன் இன்புக்கு = எவனுடைய காமத்தின்பொருட்டு, உடல்வேவாம் = சரீரத்தைப்பற்றித் தாபப்படுவன், [இப்போது செய்ய விரும்பிய விசாரத்தையும் அதனது பயனையும் தெரிவிக்கின்றார்] இங்கு = இந்தத் திருப்தி தீபமென்னும் கிரந்தத்தில், இந்தச் சுருதியின் உட்பொருள் = இந்தப் புருடன்றானெனவேயென்பது முதலிய சுருதியின் அபிப்பிராயத்தை, ஏர்பெற ஓர்வேம் = நன்றாக விசாரிப்பேம், அந்தத் தகையால் = அப்படி அபிப்பிராயத்தை விசாரித்தலால், முத்தர்தம் ஆனந்தம் = சீவன்முத்தருடைய சுருதிப் பிரசித்தமான திருப்தியானது, விளங்கும் = ஸ்பஷ்டமாகும் எ—று. 1

(அ—கை)

பதப்பிரிவு, பதத்தின் பொருளைச் சொல்லுதல், விக்கிரஹம், (தொகை மொழியை விரித்துக் காட்டுதல்) வாக்கிய யோசனை, (அன்வயம்) ஆக்ஷேபத்திற்குச் சமாதானம், ஆகிய இந்த ஐந்து லக்ஷணங்களையுமுடையது வியாக்கியானமாம் என வியாக்கியானத் தினிலக்கணம் கூறப்பட்டிருத்தலால் புருடன் என்னும் பதத்தின் பொருளைச் சொல்வதற்காக அப்பொருளின் உபோற்காதத் தன்மையால் சிருஷ்டியைச் சுருக்கமாகத் தெரிவிக்கின்றார்.

செனவீசரை யாபாசமாச் செய்கிற்பது மாயை
யெனவோதலி னிவர்கற்பித ரிவர்செய்தன ரெல்லாங்
கனவீட்சண முதலுட்படல் காறுஞ்செய்த திறைவ
னனவாதிகை வலியம்வரை ஞாதாசெய்த தாமே. 2

(ப—ரை) மாயை = (சிதானந்தமயப் பிரமத்தின் பிரதிபிம்பத் தோடு கூடினதாய் சத்துவரஜ தமோகுணவடிவமாய் சகத்தினுபாதான

மாயுள்ள) பிரகிருதியானது, செனஈசரை = சீவனையும் ஈசுரனையும், ஆபாசமா செய்கிற்பது = ஆபாச ரூபத்தால் கற்பிக்கின்றது, என ஓதலின் = என்று சுருதி கூறுதலின், இவர் கற்பிதர் = இச்சீவேசுரர் கற்பிதராவர், இவர்எல்லாம் செய்தனர் = இச்சீவேசுரர்சர்வசகத்தையும் கற்பித்தனர். [அவற்றுள் யாரால் எவ்வளவு கற்பிக்கப்பட்டதெனிற் கூறுகின்றார்] கனஈட்சணம் முதல் = "அநேக வடிவங்களாவேனென்று பரமான்மா ஈக்ஷித்தது" என்று சுருதியிற் கூறிய சிறந்த ஈக்ஷணம் முதல், உட்படல்காறும் = "இந்தச் சீவரூபத்தால் பிரவேசித்தது" என்று சுருதியில் கூறிய பிரவேசபரியந்தமும், இறைவன் செய்தது = ஈசனுற் கற்பிதமாம், நனவாதி கைவலியம்வரை = சாக்கிரத்தை முதலாக வுடையதும் மோக்ஷத்தையந்தமாகவுடையதுமான சமுசாரம், ஞாதா செய்ததாம் = சீவனுற் கற்பிதமாம் எ—று.

சீவனுக்கு அதனபிமானித் தன்மையிருத்தலாலென்பது பொருள். ஏ—அசை.

உபோற்காதமாவது பிரதிபாதிக்கத் தகுந்த பொருளை மனதில் வைத்துக்கொண்டு அதற்கு அனுகூலமான வேறுபொருளை வருணித்தல். மேற்கூறிய பிரகிருதியானது சத்துவகுணத்தின் சுத்தி அவிசுத்திகளால் இரண்டு விதமாகப் பிரிவுபட்டுக் கிரமமாக மாயையும் அவித்தையும் ஆகின்றது. அந்த மாயையிலும் அவித்தையிலும் பிரதி பிம்பித்த பிரம சைதன்னியமே ஈசுரனும் சீவனுமாகச் சொல்லப்படு கின்றது. இந்த விஷயம் தத்துவ விவேகமென்னுமிந்நூலின் முதற் பிரகரணத்தில் வித்தியாரண்ணிய சுவாமிகளால் பிரமசிற்சுக நிழற் பெற்று என்பது முதல் மூன்று கவிகளால் நிரூபிக்கப்பட்டுளது. இதே அருத்தத்தை மனதில்வைத்துக்கொண்டு "சீவேசுரரை ஆபாசமாகச் செய்கிறது. மாயையும் அவித்தையும் தானே ஆகிறது" என்னுஞ் சுருதியும் பிரவிருத்தித்தது, ஆகையால் சீவேசுரருக்கு மாயையாற் கற்பிக்கப்பட்ட தன்மையும் மற்ற சகத்தனைத்திற்கும் அவராற் கற்பிக்கப்பட்ட தன்மையும் சித்தித்தன.

சாக்கிரம் முதலிய அவஸ்தைகள் சுருதியில் இவ்வாறு கேட்கப் படுகின்றன. மாயையால் மோகமுற்ற ஆன்மா தேகத்தைத் தரித்துக் கொண்டு அனைத்தையும் செய்கின்றது. ஸ்திரீ அன்னம் பானம் முதலிய

விசித்திர போகங்களால் அவனே சாக்கிரத்தில் திருப்தியையடைகின்றுன். சொப்பனத்திலும் சீவன் தனது மாயையாற் கற்பிக்கப்பட்ட விசுவலோகத்தில்சுகதுக்கங்களையனுபவிக்கின்றுன். சுழுத்திகாலத்தில் சகலமும் விலீனமாகும்போது தமசினுல் மறைக்கப்பட்டவனுய் சுக ரூபத்தையடைகின்றுன். மீண்டும் சன்மாந்தர கருமவசத்தால் அதே சீவன் சொப்பனத்தையும் சாக்கிரத்தையுமடைகின்றுன். எச்சீவன் முப்புரங்களிலும் விளையாடுகின்றுனே அவனினின்றும் சகல விசித்திரமும் உண்டானது. சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி முதலிய பிரபஞ்சத்தை எது விளக்குகிறதோ அந்தப் பிரம்மமே யானுயிருக்கின்றேன் என்று அறிந்து சகல பந்தங்களினின்றும் விடுபடுகின்றுன். 2

(அ—கை)

இங்ஙனம் புருட சத்தத்தின் பொருளுணர்ச்சியிலுபயோகியாயுள்ள சிருஷ்டியைக்கூறி இப்போது புருஷ சத்தத்தின் பொருளைக் கூறுகின்றுர்.

கூடத்தவ சங்கத்தியல் குலவும்மறி வுருவாய்
வீடத்தகு பிரமைக்கிட மாய்மேவுறு விமலன்
சாடத்தகு மொன்றென்றிடை சார்கற்பனை யாற்றன்
னேடத்தகு மதிசேருயி ரொளிர்பூருட னிங்காம். 3

(ப—ரை) கூடத்த அசங்கத்து இயல் = அவிகாரியாய் அசங்க சுபாவமாய், குலவும் அறிவுருவாய்=விளங்காநின்ற சித்துருபமாய், வீடத்தகு பிரமைக்கு இடமாய்=நிவர்த்திக்கத் தகுந்த தேகேந்திரியாதி அத்தியாசத்திற்கு அதிஷ்டானமாய்,மேவுறுவிமலன் =பொருந்தியிருக்கின்ற பரமான்மாவே, சாடத்தகும் ஒன்றென்றிடைசார் கற்பனையால்= நிவர்த்திக்கத் தகுந்த அன்னியோன்னியாத்தியாசத்தால், அதாவது "பரஸ்பரத்தில் பரஸ்பரான்மகத்தன்மையையும் பரஸ்பர தருமங்களையும் அத்தியாசஞ்செய்து சருவ வியவகாரங்களையும் உடையனுகின்றுன்" என்று ஆசாரியாளால் நிரூபிக்கப்பட்ட தாதான்மிய அத்தியாசத்தால், தன்னேடு அத்தகுமதிசேர் உயிர் = ஆன்மாவோடு பாரமார்த்திக சம்பந்தமற்ற புத்தியில் உள்ள சீவனுயிருந்துகொண்டு, இங்கு ஒளிர் பூருடனும்= இந்தச் சுருதியில் புருஷனென்று சொல்லப்படுகின்றது எ—று.

எல்லாப் புரிகளிலும் உள்ள அந்த இப்புருடனே "புரிசயன்" என்னுஞ் சுருதியால் புருஷ சத்தம் வியுத்பாதனஞ் செய்யப்பட்டிருத்தலினென்க. புருஷனே பூருஷனும். புத்தியாதி கற்பனைக்கு அதிஷ்டானமான கூடஸ்த சைதன்னியமே புத்தியில் பிரதிபலித்திருக்குந்தன்மையால் சீவத்தன்மையையடைந்ததாயிருந்துகொண்டு புருஷ சத்தத்தால் சொல்லப்படுகின்றதென்பது அபிப்பிராயம், தகு= சம்பந்தம், அத்தகு=சம்பந்தமற்ற.

அத்தியாசத்தின் இலக்கணம்:— அதிஷ்டானத்தினும் விஷம சத்தையுடையதின் அவபாசம் அல்லது தனது அபாவாதிகரணத்தில் தனது அவபாசம் அத்தியாசமாம். அஃது ஞானத்தியாசமெனவும் அர்த்தாத்தியாசமெனவும் இரண்டு விதமாம். பிறவற்றில் பிறவற்றின் பிரதீதி ஞானத்தியாசமாம். அந்தப் பிராந்தி ஞானத்தின் விஷயம் அர்த்தாத்தியாசமாம். அவற்றுள் பரோக்ஷம் அபரோக்ஷமென்னும் பேதத்தால் ஞானத்தியாசம் இருவகைத்தாம். அர்த்தாத்தியாசமும் கேவல சம்பந்தத்தின் அத்தியாசம் சம்பந்த விசிஷ்ட சம்பந்தியின் அத்தியாசம் கேவல தருமத்தின் அத்தியாசம் தரும விசிஷ்ட தருமியின் அத்தியாசம் அன்னியோன்னியாத்தியாசம் அன்னியதராத்தியாசம் என்னும் பேதத்தால் அறுவகையாம். இந்த ஆறு அத்தியாசங்களும் சொரூபாத்தியாசம், சம்சர்க்காத்தியாசம் என்னும் இரண்டினுள் அடங்கும். அவை அடங்குமாறு, கேவல சம்பந்தாத்தியாசம் சம்சர்க்காத்தியாச வடிவமாயிருத்தலாலும் அன்னியோன்னியாத்தியாசம் சகல அத்தியாசங்களிலும் கலந்திருத்தலாலும் அன்னியதராத்தியாசம், கேவல தருமாத்தியாசம் தருமசகித தருமியின் அத்தியாசம் என்பவை சம்பந்த சகித சம்பந்தியின் அத்தியாச வடிவமாய் சொரூபாத்தியாசமாயிருத்தலாலும் என்க.

யான் அஞ்ஞன், என்று அஞ்ஞானத்தின் அத்தியாசம் சுத்த சைதன்னியத்திலுண்டாகின்றது.

யானிருக்கின்றேன், என்று அஞ்ஞான உபகித சேதனத்தில் அகங்காரமாகிய அந்தக்கரணத்தின் அத்தியாசமுண்டாகின்றது.

யான் சுகி, யான் துக்கி, யான் கருத்தா, யான் போக்தா என்று சுகம் துக்கம் முதலிய அந்தக்கரண தருமங்களின் அத்தியாசம், அந்தக்கரண உபகித சேதனத்தில் உண்டாகின்றது.

யான் குருடன், செவிடன், காண்கின்றேன், கேட்கின்றேன், நடக்கின்றேன், பேசுகின்றேன் என்று இந்திரியங்களினது தருமங்களின் அத்தியாசமும் அந்தக்கரண உபகித சேதனத்தில் உண்டாகின்றது.

யான் மனிதன், பாலகன், யௌவனமுடையோன், பிராம்மணன் என்றல் முதலிய தருமவிசிஷ்ட தேகத்தின் அத்தியாசம் அந்தக்கரண இந்திரியங்களினது தரும உபகித சேதனத்திலுண்டாகின்றது.

நான் பருத்தவன், இளைத்தவன், செவத்தவன், கருத்தவன் என்றல் முதலிய தேகத்தின் தருமங்களின் அத்தியாசம் தேக உபகித சேதனத்திலுண்டாகின்றது.

புத்திரன் ஸ்திரீ முதலியவற்றின் சுகதுக்கம் முதலிய தருமங்களின் அத்தியாசம் தேக தரும உபகித சேதனத்திலுண்டாகின்றது. இந்திரியத்திற்கும் தேகத்திற்கும் சொரூபமாகக் கூடஸ்தனிடத்து அத்தியாசமில்லை, பிரம்மசேதனத்தினிடத்திலேயே இருக்கின்றது. ஆனால் தருமத்தோடு கூடிய அவற்றின் அபேதப் பிரதீதி கூடஸ்தனிடத்து உண்டாகின்றது. யான் கண், யான் தேகம் என்று கேவல இந்திரிய தேகங்களின் அபேத உணர்ச்சியுண்டாகின்றதில்லை. இவ்வாற்றால் அஞ்ஞானம் முதலியவற்றின் சொரூபாத்தியாசம் சேதனத்திலிருக்கின்றது.

ஆனந்தம் முதலிய தருமங்களோடு கூடிய சேதனத்தின் சம்சர்க்காத்தியாசம் அஞ்ஞானம் முதலியவற்றில் உண்டாகின்றது.

எங்கு பதார்த்தத்தின் சொரூபம் அநிர்வசனீயமாக உற்பத்தியாகின்றதோ அங்கு சொரூபாத்தியாசம் சொல்லப்படுகின்றது.

எங்கு பதார்த்தத்தின் சொரூபம் வியாவகாரிகமாகவாவது பாரமார்த்திகமாகவாவது முதலிற் சித்தித்திருக்க அதன் அநிர்வசநீய சம்பந்தம் உற்பத்தியாகின்றதோ அங்கு சம்சர்க்காத்தியாசம் சொல்லப்படுகின்றது.

இவ்வாற்றால் ஆன்மாவிற்கும் அனான்மாவிற்கும் அன்னியோன்னியாத்தியாசமிருக்கின்றதென்பது சுருக்கமாகக் காட்டப்பட்டது. 3

(அ—கை)

அற்றேல் ஈண்டு புருடசத்தத்தால் கேவல சிதாபாச ரூபசீவனே சொல்லத்தக்கதாம். அதிஷ்டானமாயுள்ள இந்தக் கூடஸ்த சைதன்னியத்தால் என்னை பயன் என்று சங்கித்து அச்சிதாபாசனுக்கு மோக்ஷம் முதலியவற்றில் தொடர்ந்திருக்குந்தன்மை சித்திக்கும் பொருட்டு கூடஸ்த சேதனமுங் கொள்ளத்தக்கதெனக் கூறுகின்றார்.

நிலையோடம ருயிர்முத்திமு னேரும்முரி மையதா
மலவாந்தனி நிலையற்றதி ஞரோப முருதா
னிலையார்ந்துயிர் மயலங்கிச நேர்கின்றிடு பொழுதே
யலவாபவ முளனுனென வபிமானமது றுமே. 4

(ப—ரை) நிலையோடு அமர் உயிர் = அதிஷ்டானவடிவ கூடஸ்தனோடு கூடியசீவன், முத்திமுன் = மோக்ஷம் சுவர்க்கம் முதலிய வற்றின் சாதனுநுஷ்டானத்தில், நேரும் உரிமையதாம் = பொருந்த யோக்கியனுகின்றான், அதிகாரியாகின்றானென்பது பொருள், தனி அலவாம் = கேவல சிதாபாசனன்றும், [எதனுலெனிற் கூறுகின்றார்] நிலை அற்றதின் ஆரோபம் உருது = அதிஷ்டானமின்றிய பிராந்தி பொருந்தாது, அதிஷ்டானமின்றிய ஆரோப்பியம் உலகில் காணப் படாமையாலென்பது அபிப்பிராயம் [இப்போது அதிஷ்டானத்தோடு கூடிய சிதாபாசனுக்கே சமுசாரம் முதலியவற்றில் தொடர்ந்திருக்குந் தன்மையை இக்கவியின் பிற்பாதியாலும் வருகவியின் முற்பாதியாலும் விபாகஞ்செய்து உணர்த்துகின்றார்] உயிர் = சீவனுனவன், நிலையார்ந்து = அதிஷ்டானவடிவ கூடஸ்த சகிதமாய், மயல்அங்கிசம் = பிராந்தி அம்ஸமாகிய சிதாபாசனேடு கூடிய இரண்டு சரீரங்களையும், நேர்கின்றிடுபொழுதே அலவா = தனது வடிவமாகச் சுவீகரிக்குங் காலத்திலேயல்லவா, நான் பவம் உளன் என = நான் சமுசாரி யென்று, அபிமானமது உறும் = அபிமானத்தையடைவன் எ—று. ஆல், ஏ—அசை. 4

(இதுவுமது)

மயலங்கிசம் விட்டேநிலை மனிநின்றிடு பொழுதே
சொயசித்துரு நான்சங்கமில் தூயோனென வுணர்வா
னியைசங்கமி லதினுனுரு தெஙனுனெனி னதுகேள்
அயர்முக்கிய மின்முக்கிய மகமொன்றிரு டிரண்டாம். 5

(ப—ரை) மயல் அங்கிசம் விட்டு=பிராந்தி அம்சமாகிய தேக மிரண்டோடு கூடிய சிதாபாசனை (மித்தையாத்தன்மை ஞானத்தால்) அநாதரஞ்செய்து, நிலைமனி நின்றிடு பொழுது=அதிஷ்டானவடிவ கூடஸ்தனது சொரூபத்தைத் தானுக சீவன் சுவீகரிக்கும்போது, நான் சொயசித்து உரு=யான் சொயம்பிரகாசன், சங்கம் இல் தூயோன்= அசங்க பரிசுத்தன், என உணர்வான்=என்று அறிவான், [அற்றேல் அதிஷ்டான சைதன்னியத்திற்கே சீவசொரூபத்தன்மையையங்கீ கரிக்கின் சொயசித்துருநான்சங்கமில்தூயோன் எனவுணர்வானென்று யாதொன்று சொல்லப்பட்டதோ அது பொருத்தமற்றதாய்ப்போய் விடும். அசங்க சித்துருப கூடஸ்தனுக்கு அகம் பிரத்தியய விஷயத் தன்மையின்மையால் என்று வினவுகின்ருன்] சங்கம் இலதில்=அசங்க அவிஷய சிதான்மாவில், நான் இயை உருது=அகம் பிரத்தியயம் (விருத்தி) பொருந்தாது, அக்காரணத்தால், எஙன்நான் எனின்=நானிருக்கின்றேன் என்று எப்படியறிவன், எவ்விதமுமறியான் என்று வினவில், [முக்கிய விருத்தியால் அகம் பிரத்தியய விஷயத் தன்மையின்றேனும் லக்ஷணையால் அஃதிருக்கின்றதென்று விவக்ஷை யுடையவராய் அகம்சத்தார்த்தத்தை முதலில் பிரிக்கின்ருர்] அதுகேள்=அதற்கு உத்தரங்கேட்பாய், அகம்= நான் என்னும் சத்தத் திற்கு, ஒன்று அயர் முக்கியம் = ஒன்று வருத்தமுறுகின்ற முக்கி யார்த்தமாம், இரண்டு இல் முக்கியம்=இரண்டு அமுக்கியார்த்தமாம், ஒன்று ஒடு இரண்டாம்=இப்படி மூன்றுவித அருத்தமாம் எ—று.

ஒன்ருேடிரண்டாம் என்பது முன்னும் கூட்டப்பட்டது.

ஏ, ஏ—அசைகள். 5

(அ—கை)

முக்கியார்த்தமெப்படிப்பட்டது என்னுமாகாங்க்ஷையுண்டாக அதனைத் தெரிவிக்கின்ருர்.

அனியோனிய வாரோபம தாற்சின்மயப் போலி
தனினைக்கிய மாமுக்கியஞ் சடர்சேர்த்தலி ஞங்கே
நனிபோலிசின் மயம்வேறுற நணன்மற்றவை யறிஞர்
பனிநானென லுலகாரண பரியாய மமைப்பார். 6

(ப—ரை) சின்மயப்போலிதனின் = கூடஸ்த சிதாபாசர்களின் சொரூபம், அன்னியோன்னிய ஆரோபமதால் = பரஸ்பராத்தியாசத்தால், ஐக்கியமாம் = ஐக்கியம் பிராப்தமாம், முக்கியம் = அதுவே அகம் சத்தத்தின் வாச்சியத்தன்மையால் முக்கியார்த்தமாகின்றது, [இதற்கு முக்கியத்தன்மையெதனுலெனிற் கூறுகின்றார்] ஆங்கு = விவேகிக்கப் படாத அந்த கூடஸ்த சிதாபாசர்களின் சொரூபத்தில், சடர் = விவேக ஞான சூனியரான மூடரனைவரும், சேர்த்தலின் = அகம்சத்தத்தைப் பிரயோகம் செய்தலின், இதற்கு முக்கியத்துவம் என்பது பொருள், [இப்போது இரண்டு அமுக்கியார்த்தங்களைத் தெரிவிக்கின்றார்] போலி சின்மயம் = சிதாபாச கூடஸ்தர்கள், நனிவேறு உறநண்ணல் = அத்தியந்தம் பின்னமாக இருத்தல், அதாவது ஒவ்வொருவரும் தனித் தனியே அகம்சத்தார்த்தமாக விவக்ஷிக்கபட்டபோது, மற்றவை = அமுக்கியார்த்தங்களாம், [இவர்களுக்கு அமுக்கியத் தன்மையில் காரணம் கூறுகின்றார்] யாதொரு காரணத்தினால், அறிஞர் = தத்துவத்தையறிந்த ஞானிகள், பனிநான் எனல் = அஞ்ஞர்களுக்கு துக்க காரணமான நான் என்பதை, பரியாயம் = கிரமமாக, உலகு = உலகவியவகாரத்திலும், ஆரணம் = வைதீகவியவகாரத்திலும், அமைப்பார் = சிதாபாச கூடஸ்தர்களிடத்தில் பிரயோகிப்பார் எ—று.

அபிப்பிராயமிதுவாம்: சிதாபாச கூடஸ்தர்களின் அவிவிக்த சொரூபம் சருவ சனங்களின் வியவகாரத்திற்கு விஷயமாயிருத்தலால் முக்கியார்த்தமாம். விவிக்த சொரூபமோ சில அறிஞர்களால் ஓர்போதே விசாரகாலத்தில் வியவகரிக்கப்படுவதாயிருத்தலால் அமுக்கியார்த்தமாம் என்பது, அவிவிக்தம் = பிரிக்கப்படாதது, விவிக்தம் = பிரிக்கப்பட்டது. 6

(அ—கை)

பரியாயமமைப்பார் என்று சொல்லிய பொருளையே சுலபமாக அறியும் பொருட்டு விஸ்தரிக்கின்றார்.

ஏகின்றன னெனலேமுத லிலௌகீக வழக்கிற்<br>
பாகொண்டறி விற்போலி பகுத்தோதுவ ரறிஞ<br>
ராகொட்டிலி நான்சித்துரு வாநூலுணர் வாலென்<br>
றாகந்தனி யறிவில்லக வுரையொட் டிடுவாரே. 7

(ப—ரை) அறிஞர் = வித்வான்கள், ஏகின்றனன் என முதல் இலௌகீக வழக்கில் = நான் செல்கின்றேன் என்பது முதலிய உலக வியவகாரத்தில், பாகொண்ட அறிவில் = விளக்கம் பொருந்திய கூடஸ்தனில் நின்றும், போலி = சிதாபாசனை, பகுத்து ஓதுவர் = வேறு பிரித்து அகம் சத்தத்தால் கூறுவர், இவ் வறிஞனே, நூல் உணர்வால் = வேதாந்த சிரவணத்தால் உண்டாகிய ஞானத்தால், ஊகந்தனி அறிவில் = உண்மைவடிவ கேவல கூடஸ்தனிடத்தில், நான் ஆ கொட்டிலி = நான் அசங்கன், சித்துருவாம் = யான் சிதான்மா, என்று அகவுரை ஒட்டிடுவார் = என இந்தப் பிரகாரம் இலக்ஷணையால் அகம் சப்தத்தைப் பிரயோகிப்பார் எ—று.

ஆகையால் இலக்ஷணையால் அகம் சப்தத்தின் பொருளதாந் தன்மையால், அகம் பிரத்தியய விஷயத்தன்மை பொருந்துமாதலின் நான் அசங்கனாய் இருக்கின்றேன் என்னும் ஞானம் பொருத்த முடையது என்பது அபிப்பிராயம். ஏ—அசை.

ஊக்கமென்பது எதுகைநோக்கி ஊகமெனத் திரிந்தது.

ஊக்கம் = உண்மை, ஆ கொட்டு இலி = அற்பமும் சம்பந்தம் இல்லாதவன், அசங்கனென்பது பொருள். 7

(அ—கை)

அற்றேல் போலி சின்மயம் வேறுற நணல் மற்றவை என்று சொல்லப்பட்டது. அவ்விரண்டினுள்ளே அஞ்ஞான நிவர்த்தியின் பொருட்டு நான் அசங்கனாய் இருக்கின்றேன் என்று கூடஸ்தன் அறிகின்றானா? அல்லது சிதாபாசன் அறிகின்றானா? அவற்றுள் கூடஸ்தன் அறிகின்றானென்பது பொருந்தாது. அவனுக்கு அசங்க சித்துருபத்தன்மையுண்மையால் ஞானித்தன்மை அஞ்ஞானித் தன்மைகள் பொருந்தாமையின் ஆகையால் சிதாபாசனுக்கு ஞானித் தன்மை முதலியது சொல்லவேண்டும். அங்ஙனம் ஆகுங்கால் கூடஸ் தனினின்றும் வேறான சிதாபாசன், நான் கூடஸ்தனாய் இருக்கின்றேன் என்று அறிய யோக்கியன் ஆகான் என்று சங்கிக்கின்றான்.

போலிக்கறி வறியாமை பொருந்தும் மறிவுக்கின்
றலெங்ஙன மாபாசன்மெய் யறிவாகின னெனலா
மேலின்ன திழுக்கன்றறி விற்போலி யபேத
மேலும்பொய்மை யாபாசன்மெய் மிஞ்சும் மதனாலே. 8

(ப—ரை) போலிக்கு = சிதாபாசனுக்கு, அறிவு அறியாமை பொருந்தும்=ஞானித்தன்மை அஞ்ஞானித்தன்மை உபபன்னமாம், அறிவுக்கு இன்று=ஆன்மாவுக்குப் பொருத்தம் இன்ரும், இங்ஙனம் ஆகுங்கால், எங்ஙனம் ஆபாசன் மெய்அறிவு ஆகினன்=எப்படி சிதாபாசனவன் கூடஸ்தனய் இருக்கின்றேன், எனலாமேல்=என்று அறியலாம் எனின், [அவனுக்குக் கூடஸ்தனினும் அன்னியத் தன்மையே அசித்தமெனப் பரிகரிக்கின்ருர்] இன்னது இழுக்கு அன்று = இது தோஷமல்ல, போலி = சிதாபாசன், அறிவில் அபேதம்=கூடஸ்தனிடத்தில் அபேதமாம், அதாவது கூடஸ்தனையே முக்கிய சுபாவமாகவுடையவன், [அதிலுபபத்தியைக் கூறுகின்ருர்] மேலும் ஆபாசன் பொய்மை=மற்றும் சிதாபாசன் மித்தையாம், மெய்மிஞ்சும்=கூடஸ்தன் எஞ்சிநிற்கும், அதனல்=அக்காரணத்தால் எ—று.

எப்படி கண்ணுடியில் தோற்றுகிற பிரதிபிம்ப முகத்திற்கு கழுத்திலுள்ள முகமே சொரூபமோ அதுபோல் சிதாபாசனுக்கு கூடஸ்தனே வாஸ்தவ சொரூபமாம் என்பது கருத்து.

ஆல்—அசை.

அதாவது ஆபாச வாதத்தின்படி எப்படிக் கண்ணுடியில் முகத்தின் பிரதிபிம்பத்திற்கு அதிஷ்டானம் கண்ணுடியவச்சின்ன சேதனமோ, அப்படியே அந்தக்கரணத்தில் பிரம்ம சேதனத்தின் பிரதிபிம்பவடிவ சிதாபாசனுக்கு அதிஷ்டானம் அந்தக்கரணவச்சின்ன கூடஸ்த சேதனமாம். கற்பிதவஸ்து அதிஷ்டானத்தினும் வேருகச் சித்தியாது. ஆதலால் பிரதிபிம்பத்தன்மை விசிஷ்ட பிரதிபிம்பத்தினைப் பாதித்து மிஞ்சும் அதிஷ்டான கூடஸ்த சேதனமே பிரதிபிம்பத்தின் சொரூபமாம். பிரம்ம கூடஸ்தர்களுக்கு மகாகாச கடாகாசங்களுக்குப் போல முக்கிய சாமானுதிகரண்யமுண்டு. சிதாபாச கூடஸ்தர்களுக்கு தாணுவிற்கும் புருஷனுக்கும்போல பாத சாமானுதிகரண்யமுண்டு. ஆதலால் பாதஞ் செய்தாலன்றிச் சிதாபாசனுக்கும் கூடஸ்தனுக்கும் அபேதமில்லை. ஆனல் புருஷனைப் பாதித்துத் தாணுவோடு அபேதஞ் செய்தல்போல சிதாபாசனைப் பாதித்தே கூடஸ்தனேடு பேதமாம். 8

(அ—கை)

அற்றேல் சிதாபாசன் மித்தையாமேல் அவனையாசிரயித்த கூடஸ்தனுயிருக்கின்றேனென்னும் ஞானமும் மித்தையாகுமென்று சங்கிக்கின்ருன்.

தனிஞானமெய் நானென்றிடு தகுபோதமு மெய்யன்
றெனின்வாத்தவ மென்றாரெவ ரிங்கேகயிற் றரவ
நனியோடுதன் மெய்யாமென நாடேமந்த வியல்பா
மனிநீடுறு மறிவாற்கொடு மாயப்பவ மாய்வாம். 9

(ப—ரை) தனிஞானமெய் = ஒப்பற்ற சச்சித்துரூப கூடஸ்தனே, நான் என்றிடு தகுபோதமும் = யானுயிருக்கின்றேன் என்னும் சிரேஷ்டமாகிய ஞானமும், மெய் அன்றெனின் = மித்தையென்று சொல்லின், [கூடஸ்தனினும் வேறான அனைத்திற்கும் மித்தியாத் தன்மையையங்கீகரித்தலால் அதன் மித்தியாத்தன்மையெங்களுக் கிஷ்டந்தானெனப் பரிகரிக்கின்றார்] எவர் வாத்தவம் என்றார் = யார் மித்தையல்லவென்று சொன்னார், [கூறிய பொருளையே திருஷ்டாந்தத் தால் வெளிப்படுத்துகின்றார்] இங்கே = இவ்வுலகில், கயிற்று அரவம் நனிஓடுதல் = இரச்சுவில் கற்பிக்கப்பட்ட சர்ப்பத்தினது வேகமான கதி முதலியவை, மெய்யாம் என நாடேம் = சத்தியமாகக் கருதேம், அது போலென்பது கருத்து, [ஞானம் மித்தையாமேல் அதனால் சமுசாரம் நிவிருத்தியாகாது என்று சங்கித்து நிவர்த்திக்கத் தகுந்த சமுசாரமும் மித்தையாதலால் அதன்னிவர்த்தி பொருந்தும். சொப்பனத்தில் புலியைக் காண்டலால் நித்திரையின்னிவர்த்தியாவதுபோல் என்னு மபிப்பிராயத்தாற் கூறுகின்றார்] மனி நீடு உறும் அந்த இயல்பாம் அறிவால் = மிகவும் நீண்ட காலமாகப் பொருந்தியுள்ள அதாவது சமுசயாதிகளற்ற அப்படிப்பட்ட மித்தையாகிய ஞானத்தால், கொடு மாயப்பவம் = துக்க ரூபமாயும் மித்தை ரூபமாயுமுள்ள சமுசாரம் மாய்வாம் = நிவர்த்தியாகும் எ—று. 9

(அ—கை)

மித்தையாகிய ஞானத்தினால் மித்தையாகிய சமுசார நிவர்த்தியின்கண் யக்ஷனுக்குத் தக்க பலியாம் என்னும் லௌகீக வாக்கியத்தை சம்வாதம் செய்கின்றார்.

உலகத்தரி யக்கர்க்கற வொப்புள்ளது பலியென்
றிலகச்சொல்வ ரதனாலறி வின்போலியென் புருட
னலகின்றிய வதைவேறுசெய் தறிவாகின னெனவே
நலவோர்வுற வலனாமென நாடிச்சொலு மறையே. 10

(ப—ரை) உலகத்தர் = இலௌகீக ஜனங்கள், இயக்கர்க்கு அற ஒப்புள்ளது பலி என்று = யக்ஷருக்கு மிகவும் சமானமாக இருப்பது பூசையாம் என்று, இலகச் சொல்வர் = விளங்கும்படி கூறுவார்கள், அதாவது யக்ஷனுக்குத் தகுந்த பூசையாமென்பர், [உபபாதனஞ் செய்த பொருளை உபசம்மாரஞ் செய்கின்றார்] அதனால் = (எதனால் கூடஸ்தனே சிதாபாசனுக்கு நிசசொரூபமோ) அக்காரணத்தினால், அறிவின்போலி என் புருடன் = கூடஸ்தசகித சிதாபாசனென்னும் புருடசத்த வாச்சியனான சீவன், அலகு இன்றிய அதை = பிரிவின்றிய கூடஸ்தனை, வேறு செய்து = மித்தியா பூதனை தன்னினின்றும் பிரித்து, அறிவு ஆகினன் எனவே = லக்ஷணையால் நான் கூடஸ்தனாயிருக்கின்றே னென்று, நல ஓர்வுற வலனும் என நாடி = நன்கு அறிய சமர்த்தனும் என்று கருதி, மறை சொலும் = சுருதியானது இருக்கின்றேனென்று சொல்லிற்றென்பது பொருள் எ—று.

யக்ஷனுக்குத் தக்க பலி என்பதன் கருத்திதுவாம்:- சமான சத்தையையுடைய பதார்த்தமே ஒன்றற்கொன்று சாதக பாதகமாம், விஷமசத்தையையுடையனவன்று. எப்படியெனின் வியாவகாரிக அன்னத்தினாலாவது ஜலத்தினாலாவது வியாவகாரிகமான பசி அல்லது தாகம் நீங்கிவிடுகிறது. பிராதிபாசிகமான அன்னஜலங்களால் நீங்குகிறதில்லை. வியாவகாரிக இரஜதம் முதலியவற்றால் வியாவகாரிக கடகம் முதலிய ஆபரண வடிவ காரிய சித்தியுண்டாகிறது. பிராதிபாசிக மான இரஜதம் முதலியவற்றால் உண்டாகிறதில்லை; சொப்பனத்திலுள்ள பிராதிபாசிகவியாதி பசி முதலியவற்றின் நிவர்த்தி பிராதிபாசிக மருந்து அன்னம் முதலியவற்றால் உண்டாகின்றது, வியாவகாரிக மருந்து முதலியவற்றால் உண்டாகிறதில்லை. அப்படியே திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்படி பிராதிபாசிகமும் சிருஷ்டி திருஷ்டிவாதத்தின்படி வியாவகாரிகமுமான மித்தையான சமுசாரத்தின் நிவர்த்தி அதன் சமானசத்தையையுடைய மித்தையான ஞானத்தினாலேயே சம்பவிக் கின்றது, பாரமார்த்திக ஞானத்தாலன்று. 10

(அ—கை)

இங்ஙனம் புருஷன் இருக்கின்றேன் என்னும் இருபதங்களினது பிரயோகத்தின் அபிப்பிராயத்தைக்கூறி இவன் என்னும் பதப் பிரயோகத்தின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

அய்யந் திரிபொழி யறிவுட றன்பால்
எய்தும் படியிங் கெய்துக வேண்டு
முய்யும் படியென் றுறுதி பிறக்கத்
துய்யிச் சுட்டுரை செய்தது சுருதி. 11

(ப—ரை) அய்யம் திரிபு ஒழி அறிவு=சந்தேக விபரீதமற்ற ஞானமானது, உடல் தன்பால்=பிரசித்த தேகரூப ஆன்மாவில், எய்தும்படி=(இலௌகிகருக்கு இதுவே யானுயிருக்கின்றேன் என்று) உண்டாவதுபோல, இங்கு=பிரத்தியக்கான்மாவில், உய்யும்படி=சமுசாரத்தினின்றும் பிழைக்கும்பொருட்டு, எய்துகவேண்டும் என்று=அப்படிப்பட்ட ஞானத்தையடையவேண்டுமென்று, உறுதி பிறக்க=நிருணயஞ் செய்ய, துய்சுருதி=பரிசுத்தமான உபநிடதம், இச்சுட்டு உரை செய்தது=இவன் என்னும் சொல்லைப் பிரயோகித்தது எ—று. 11

(அ—கை)

இப்படிப்பட்ட ஞானத்திற்கே மோக்ஷசாதனத்தன்மையுளதென்பதில் ஆசாரியரது வாக்கியத்தை சம்வாதஞ் செய்கின்றார்.

ஆகந் தனிலிசை யறிவு நிகர்ப்பத்
தேகந் தனிலிசை யறிவு சிதைக்கு
மேகந் தனிலிசை யறிவை யியைந்தோன்
றாகந் தவிரினு மாகதி சார்வான். 12

(ப—ரை) ஆகந்தனில் = தேகத்தில், இசை அறிவு நிகர்ப்ப=நான் மநுஷியன் என்றுண்டாகும் திடஞானத்திற்குச் சமானமாக, ஏகந்தனில்=அத்துவிதீய பிரத்தியக்கான்மாவில், தேகந்தனில் இசை அறிவு சிதைக்கும் = தேகமே ஆன்மாவென்னும் தேகான்ம ஞானத்தைப் பாதிக்கின்ற, இசை அறிவை = நான் பிர்மமாயிருக்கின்றேன் என்றுண்டாகும் ஞானத்தை, இயைந்தோன் = அடைந்தவன், தாகம் தவிரினும்=மோக்ஷேச்சையின்றியவனாயினும், மாகதி சார்வான்=பரமபதத்தையடைவான் எ—று.

சமுசார ஹேதுவான அஞ்ஞானம் ஞானத்தால் பாதிக்கப்பட்டபடியாலென்பது கருத்து. 12

(அ—கை)

இவன் என்னும் பதப்பிரயோகத்திற்கு வேறு அபிப்பிராயத்தை சங்கிக்கின்ருன்.

இதுவென் ருனப ரோக்கம தென்னி
னதுவுள தாஞ்சொய மாக விளங்கிப்
பொதுவென வாய்நிகழ் போதமெஞ் ஞான்றுங்
கதுவப ரோக்ஷம தாயில கலினே. 13

(ப—ரை) இது என்று = (இது கடம் என்பது முதலிய பிரயோகங் களில் இது என்னும் சொல்லால் நிர்த்தேசம் பண்ணப்பட்ட வஸ்து விற்கு அபரோக்ஷத்தன்மை காணப்பட்டதுபோல இவன் யானுகின் றேனென்னுமிடத்தும்) இது என்னும் சொல்லால், அபரோக்கமது என்னின் = அபரோக்ஷத்தன்மை சொல்லப்படுகிறதென்று சொல்லில். [அதுவும் நமக்கிஷ்டந்தானெனக் கூறுகின்ருர்] அது உளதாம் = அவ் அபரோக்ஷத்தன்மையுமிருக்குக, [எதனுலெனிற் கூறுகின்ருர்] சொய மாக விளங்கி = சாதனுந்தர நிரபேக்ஷத்தன்மையால் பிரகாசித்து, பொது எனவாய் நிகழ்போதம் = சருவசாமான்யமாய் விளங்காநின்ற ஞானமானது, எஞ்ஞான்றும் = எப்போதும், கது அபரோக்ஷமதாய் இலகலின் = வெளிப்படையாய் பிரத்தியக்ஷமாய் விளங்குகின்ற படியினுல் எ—று.

மறைப்பதின்மையினுல் நித்தியாபரோக்ஷமென்று எம்மால் அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் என்பது பொருள்.

ஈண்டிஃதிரகசியமாம்:- சைதன்யம் அஞ்ஞானத்தால் மறை பட்டதாமேல் சகத்தைப் பிரகாசிப்பிப்பதின்மையின் அச்சகத்திற்கு அந்தத்தன்மை (தோற்ருமை) பிராப்தியாம், அஞ்ஞானத்தால் மறைப்பை அங்கீகரியாவிடினும் ஆசாரியர்கள் நான் அஞ்ஞானி பிரமத்தையறியேன் என்னும் அநுபவாநுசாரமாக அஞ்ஞானம் பிரமத்திஞசிரிதமும் பிரமத்தை விஷயஞ்செய்வது (மறைப்பது) மாயிருத்தலின் அதனைச் சுவாசிரய சுவவிஷயமென்று கூறியிருக் கின்றனர். அவ்வாசாரியர்களது வார்த்தைக்குப் பங்கமுண்டாம். ஆதலால் சாமான்ய அம்சத்தின் தோற்றத்தையும் விசேஷ அம்சத்தின் தோற்ருமையையும் அங்கீகரித்தலால் விரோதமின்ரும், கது = வெடிப்பு. ஆன், ஏ—அசைநிலை. 13

(அ—கை)

அற்றேல் ஆன்மாவிற்கு சொப்பிரகாச சித்துருபத்தன்மையால் நித்திய அபரோக்ஷத்தன்மையையங்கீகரிக்கின் இதுவென்னும் பதப் பிரயோகத்திற்கு வேறு அபிப்பிராயத்தை வருணித்தலேயங்கீகாரஞ் செய்தல் வடிவ பலத்தால் வந்த ஆன்மாவிற்கு பரோக்ஷ விஷயத் தன்மையும் அபரோக்ஷ விஷயத்தன்மையும் முன்பு எட்டாவது செய்யுளிற் கூறிய ஞாதுஞ் ஞானங்களின் ஆசிரய விஷயத்தன்மையும் பொருத்தமற்றதாமென்று சங்கித்து தசமனிடத்திற்போல சகலமும் பொருந்துமெனக் கூறுகின்றார்.

உதவுப ரோக்கமொ டேயப ரோக்க
மிதமுறு ஞான மஞானமு மென்னத்
திதமுறி ரண்டுந் தெசமனி னுறல்போ
னிதவப ரோக்கமெய் தன்னிலு நேரும். 14

(ப—ரை) உதவு= (ஆவரண நிவர்த்தி முதலிய பயன்களைக்) கொடுக்கும், பரோக்கம் ஒடு ஏய் அபரோக்கம்=பரோக்ஷமும் பொருந்தா நின்ற அபரோக்ஷமும் ஆகிய ஒரு துவந்துவம், இதம் உறு ஞானம் அஞானமும்=நன்மைக்கேதுவான அறிவும் அறியாமையுமாகிய ஒரு துவந்துவம், என்னத்திதம் உறு இரண்டும்=என்று சொல்லப்பட்ட கனம் பொருந்திய இவ்விரண்டு துவந்தமும், தெசமனின் உறல் போல்=பத்தாமவனிடத்துப் பொருந்துவதுபோல, நித அபரோக்க மெய்தன்னிலும் = நித்தியாபரோக்ஷமாயுள்ள ஆன்மாவிலும், நேரும்=பொருந்தும் எ—று. ஏ—அசை. 14

(அ—கை)

தசம திருஷ்டாந்தத்தைப் பிரதிபாதனஞ்செய்கின்றார்.

ஒன்பதெ னெண்ணு லுரனெறி தசமன்
பின்பவ ரொன்பது பேரை யுணர்ந்துந்
தன்புடை சார்தரு மயல்கொடு தசம
னென்பவ னெனன வேயுண ராஞல். 15

(ப—ரை) ஒன்பது என் எண்ணல்=எண்ணத்தகுந்த புருஷர்ளிலுள்ள நவசங்கியையால், உரன் ஒழி தசமன்=விவேக விஞ்ஞானமற்ற பத்தாமவன், பின்பவர் ஒன்பதுபேரை உணர்ந்தும்=அப்போது பரிகணிக்கத்தகுந்த நவசங்கியையுடைய புருஷரைப்பார்ப்பவனுயினும், தன்புடைசார் தருமயல் கொடு=தன்னிடத்திற் பொருந்திய பிராந்தியினல், தசமன் என்பவன் நான் எனவே உணரான்=எண்ணுதற் கருத்தாவாகிய தன்னை நான் பத்தாமவனென்றறியான் எ—று. 15
ஆல்—அசை.

(அ—கை)

இங்ஙனம் தசமனிடத்தில் அஞ்ஞானத்தைக் காண்பித்து அதன் காரியமான ஆவரணத்தைக் காண்பிக்கின்றூர்.

தசமனெ னப்பகர் தானுறை தரவு
நிசவடி வொன்று நிகழ்ந்தில திலதென்
றிசையவெ ணிச்சொல் வனீதறி யாமை
வசம்வழு மூட லெனப்பகர் வாரே. 16

(ப—ரை) அப்போது, தசமன் எனப்பகர்தான் உறை தரவும்=பத்தாமவனுக சொல்லப்பட்ட தான் இருக்கவும், நிசவடிவு ஒன்றும் நிகழ்ந்திலது = தசமன் கிஞ்சித்தும் விளங்கவில்லை, இலது=இல்லை, என்று எணி இசையச் சொல்வன்=என்று கருதி பொருந்தக் கூறுவான், ஈது=இவ்வியவகாரத்தின் காரணத்தை, அறியாமை வசம் வழுமூடல் என = அஞ்ஞானத்தின் காரியமான தோஷமுள்ள ஆவரணமென்று, பகர்வார் = சொல்லுவார்கள் அறிஞர்கள் எ—று. ஏ—அசை. 16

(அ—கை)

அஞ்ஞானத்தின் காரிய விசேஷமான விக்ஷேபத்தைத் தெரிவிக்கின்றூர்.

நதியு ளிறந்தன னவனென நலிவுற்
றதிருற வழுவனவ் வழன்முத லியதாற்
றிதமயல் வருவிட் சேபமதா மென்
றிதமரு ளறிஞ ரியம்புவ ரன்றே. 17

(ப—ரை) அவன் நதியுள் இறந்தனன் என = தசமன் ஆற்றில் மரித்தனனென்று, நலிவுஉற்று = சோகமடைந்து, அதிருற வழுவன் = கோவென்று அழுவன், அவ்அழல் முதலியது = அந்த ரோதனுதியை, திதமயல் வருவிட்சேபமதாம் என்று = ஞானபரியந்த மும் நிலைத்துள்ள அஞ்ஞானத்தின் காரியமான விக்ஷேபமாமென்று, இதம் அருள் அறிஞர் = சருவ ஜனங்களுக்கும் தெரிசனுதியால் நன்மையைச் செய்யும் பெரியோர், இயம்புவர் = கூறுவார்கள் எ—று.

ஆல், அன்று, ஏ—அசைநிலைகள். 17

(அ—கை)

தசமனுக்கு அசத்துவாம்ஸத்தை நிவர்த்திக்கும் பரோக்ஷ ஞானத்தைக் கூறுகின்றுர்.

மாய்ந்தில னத்தச மன்னுள னெனமேல்
வாய்ந்தநல் லாத்தனின் வாய்மொழி கேளா
வேய்ந்த சுவர்க்க மெனத்தச மனேயே
தோய்ந்த பரோக்கம தாய்த்துணி வானுல் 18

(ப—ரை) மேல் = அதன் பின்பு, அத் தசமன் மாய்ந்திலன் உளன் என = அப் பத்தாமவன் சாகவில்லை இருக்கின்றுன் என்று, வாய்ந்தநல் ஆத்தனின் வாய்மொழி கேளா = சிறந்த நல்ல உண்மை கூறுவோனது வாக்கியத்தைக்கேட்டு, ஏய்ந்த சுவர்க்கம் என = புண்ணியத்தால் பொருந்தாநின்ற சொர்க்கம்போல, அதாவது சொர்க்கமிருக்கின்றது என்னும் வாக்கியத்தைக்கேட்டு சொர்க்கத்தைப் பரோக்ஷமாயறிவதுபோல, தோய்ந்த தசமனே = ஒன்பதுபேரோடு கலந்துள்ள பத்தாமவனை, பரோக்கமதாய்த் துணிவான் = பரோக்ஷ மாய் நிச்சயிப்பன் எ—று.

ஆல், ஏ—அசை. 18

(அ—கை)

அவனுக்கே அபானும்ஸத்தை நிவர்த்திக்கும் அபரோக்ஷ ஞானத்தைத் தெரிவிக்கின்றுர்.

நீதச மன்ரு னென்று கணிப்பித்
தேதம றக்காட் டிடவப ரோக்க
மாத றெரிந்துள் ளகமகிழ் வெய்தி
வேதனே யோடழு குதறனே விடுவான். 19

(ப—ரை) கணிப்பித்து= (தன்னுல் எண்ணப்பட்ட ஒன்பது பேரோடுகூட தன்னேயும்) எண்ணுவித்து, நீ தான் தசமன் என்று ஏதம் அறக்காட்டிட= நீயே பத்தாமவனென்று நிர்த்தோஷமாக ஆப்த புருஷன் தெரிவிக்க, அபரோக்கம் ஆதல் தெரிந்து= (நான் தசமனு யிருக்கின்றேனென்று) அபரோக்ஷமாயறிந்து, உள் அகமகிழ்வு எய்தி=மனதினுள் சந்தோஷத்தையடைந்து, வேதனே ஒடு அழுகுதல் தனே விடுவான் = துன்பத்தையும் உரோதனத்தையும் தியாகஞ் செய்வான் எ—று.

தான் பிரித்துக் கூட்டப்பட்டது. 19

(அ—கை)

இங்ஙனம் திருஷ்டாந்தமாயுள்ள தசமனிடத்தில் காண்பிக்கப் பட்ட ஏழவஸ்தைகளேயும் அனுவாதஞ்செய்து தாஷ்டாந்தமாயுள்ள ஆன்மாவிலும் அவை பொருத்தத் தக்கனவாமென்று கூறுகின்ருர்.

மடமொடு மூடலு மனும்விட் சேபத்
துடனிரு ஞானமு முறுகணி லாமையு
மிடமுறு மாமகிழ் வெனுமிவை யேழு
மடைவி னல்லறிவுரு வதனினு மறிவாய். 20

(ப—ரை) மடம் ஒடு=அஞ்ஞானமும், மூடலும்=ஆவரணமும், மனும் விட்சேபத்துடன் = பொருந்தாநின்ற விக்ஷேபமும், இரு ஞானமும் = பரோக்ஷம் அபரோக்ஷம் என்னும் இரண்டு ஞானமும், உறுகண் இலாமையும்=சோக நிவர்த்தியும், இடம் உறு மாமகிழ்வு= விலாசம் பொருந்திய பெரிய திருப்தியும், நிரங்குச திருப்தியென்றபடி, எனும் இவை ஏழும்=என்று சொல்லப்பட்ட இச்சப்தாவஸ்தை களேயும், நல் அறிவுருவதனினும்= நல்ல சிதான்மாவிலும், அடைவின் அறிவாய்=முறையே உணருவாய் எ—று.

ஒடு, உடன் என்பவை எண்ணிடைச் சொற்கள். 20

(அ—கை)

ஆன்மாவில் அஞ்ஞானம் முதலியவற்றைக் கிரமமாகத் தெரிவிக்கின்ருர் நான்கு கவிகளால்.

சமுசார மருவாசை தனைமேவு முளனுய்த்
தமசீவ னொருபோது தனதான வுருவாய்
நிமிர்சோதி மயமாகி நிகழ்கூட மெனவே
யமைவானை யறியாமை யதுவாகு மடமே. 21

(ப—ரை) தமசீவன்=துக்கமுடைய இச்சிதாபாசன், சமுசார மருவு ஆசைதனைமேவும் உளன் ஆய்=சமுசாரத்தில் சத்தாதி விஷயங்களில் ஆசையுள்ள சித்தமுடையவனாய், ஒருபோது=சுருதி விசாரத்திற்கு முன் ஒருகாலத்தில், தனதான உருவாய்=தனது வடிவமாய், நிமிர்சோதிமயமாகி=உயர்ந்த சொயம்பிரகாசமாய், நிகழ்கூடம் என அமைவானை=விளங்காநின்ற கூடம்போன்றிருக்கும் பிரத்தியக் கான்மாவை, அறியாமையே = உணராமையே, மடமாகும் = அஞ்ஞானமாம் எ—று.

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

அது பகுதிப்பொருள் விகுதி. ஏ—அசை.

கூடம்போன்று இருத்தலின் கூடஸ்தனும். அதாவது கூடம் என்பது கொல்லன் அடைகல்லாம். அஃது எப்படி ஈட்டி வாள் முதலிய ஆயுதங்களை வைத்து அடித்தலால் அசைவின்றி நிருவிகாரமாய் இருக்கின்றதோ அப்படி ஆன்மாவும் கருத்திருத்தன்மை முதலிய சமுசார சம்பந்தமின்றி நிருவிகாரமாயிருத்தலின் கூடஸ்தனும், தமம்=துக்கம். 21

(இதுவுமது)

இயல்பான கூடத்த னிலைகாணெ ணனென்
றுயர்வான கேள்விக்கி வுரைகூறன் மூடல்
செயன்மேவு வானுண்ணல் செய்வானு நானென்
றயர்வாகும் விட்சேப மதன்மூல மாமே. 22

(ப—ரை) உயர்வான கேள்விக்கு = (சிதான்மாவையறிந்தனையா என்னும்) மேலான வினவிற்கு, இயல்பான கூடஸ்தன் இலகாஞெஞன் என்று = சுபாவமான நிருவிகார பிரத்தியக்கான்மா இல்லை விளங்கவில்லையென்று, இவ் உரை கூறல் = இந்த உத்தரங் கூறல், மூடல் = அஞ்ஞான காரியமான ஆவரணமாம், நான் செயல் மேவுவான் = நான் கருத்தா, உண்ணல் செய்வான் = நான் போக்தா, என்று அயர்வாகும் = என்று ஆரோபமுண்டாகும், அதாவது கூடஸ்தனிடத்தில் அசத்துவத்தையும் அபானத்தையும் சொல்வதுபோல் கருத்திருத்தன்மை முதலியதை ஆன்மாவிலாரோபிக்கின்றுன். அதன் மூலம் = அவ்வாரோபத்திற்குக் காரணமாகிய, தேகமிரண்டோடு கூடிய சிதாபாசன், விட்சேபம் ஆம் = விக்ஷேபமாகும் எ—று. 22

(இதுவுமது)

மொழிகொண்டு கூடத்தன் முன்புண்டு மெனவே
தெழிகின்ற தேநன்கு செப்பும் பரோக்கம்
விழிகொண்டு கூடத்தன் மெய்ப்புற்ற நானென்
றெழுகின்ற போதங் கணிற்கண்ட ஞானம். 23

(ப—ரை) முன்பு = முதலில், மொழி கொண்டு = அவாந்தர வாக்கியத்தால், கூடத்தன் உண்டு என = கூடத்தனிருக்கின்றுன் என்று, நன்கு தெளிகின்றதே = நன்குயறிவதே, செப்பும் பரோக்கம் = சொல்லா நின்ற பரோக்ஷ ஞானமாம், விழிகொண்டு = விசாரத்தால், அதாவது சிரவணுதி பரிபாகவசத்தால், மெய்ப்பு உற்ற கூடத்தன் = உண்மையாயுள்ள நிருவிகார சேதனமே, நான் என்று எழுகின்ற போதம் = நானென்று உண்டாகின்ற ஞானம், கணில் கண்ட ஞானம் = அபரோக்ஷ ஞானமாம் எ—று.

உம்—அசை.

தெளிகின்றது என்பது எதுகை நோக்கி தெழிகின்றதெனத் திரிந்தது. 23

(இதுவுமது)

அனகர்த்த னகமுண்ணு மவனென்றன் முதலாச்
சொனதுக்கம் விடன்மிக்க துயர்கெட்ட ததுசெய்
வனசெய்து பெறல்வேண்டு வனபெற்று மகிழ்த
லினமற்ற பரிசுத்த வெழிலின்ப மெனலாம். 24

(ப—ரை) கூடஸ்த அசங்க ஆன்ம ஞானத்தின் பிறகு, அகம் அனகர்த்தன் = நான் கருத்தா, உண்ணுமவன் = நான் போக்தா, என்றல் முதலாசொன தூக்கம்விடல்=என்பது முதலாகச் சொல்லப் பட்ட சோக சமுதாயத்தைத் தியாகஞ் செய்தல், மிக்க துயர்கெட்டது அது=மேலான சோக நிவர்த்தியாம், செய்வன செய்து=செய்யத் தக்கன அனைத்தையும் செய்து முடித்தவனாகி, பெறல் வேண்டுவன பெற்று மகிழ்தல்=அடையத்தக்கன அனைத்தையும் அடைந்து இருப்ப வனாய் சந்தோஷித்தலே, இனம் அற்ற=சங்கமற்ற, பரிசுத்த எழில் இன்பம் எனலாம்=பரிசுத்த சிறந்த ஆனந்தமென்று சொல்லப்படும், நிரங்குச திருப்தியென்பது பொருள் எ—று.

அது பகுதிப்பொருள் விகுதி. 24

(அ—கை)

அற்றேல் சொல்லிய ஏழவஸ்தைகளும் ஆன்மாவின் தருமங் களாமென அங்கீகரிக்கின் அதற்கு நிருவிகாரத்தன்மை பங்கமாம் என்று சங்கித்து இந்த ஏழவஸ்தைகளும் சிதாபாசனுக்கேயாம், கூடஸ்தனுக்கின்றாமெனக் கூறுகின்றார்.

இவ்வேழு மாபாச னுக்குண்ட வேழி
னெவ்வாத மாபாச மொண்முத்தி மேவு
மவ்வேழி னூமூன்று மப்பந்த மேதா
னெவ்வாறு மேயீனு மிங்கென்பர் மேலோர். 25

(ப—ரை) இவ் ஏழும் = (அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் பரோக்ஷ ஞானம் அபரோக்ஷ ஞானம் சோக நிவிருத்தி நிரங்குச திருப்தியென்னும்) இந்தச் சத்தாவஸ்தைகளும், ஆபாசனுக்கு உண்டு = சிதாபாசனுக்கேயிருக்கின்றன, கூடஸ்தனுக்கின்றாம், எல்லா வாக்கியமும் நிச்சயத்தோடு கூடியது என்னும் நியாயத்தால் ஏகாரம் சேர்க்கப்பட்டது, [இந்த ஏழவஸ்தைகளையும் ஈண்டு சொல்லுதல் வியர்த்தமாம் என்று சங்கித்து வியர்த்தமன்றாம் சொல்லு தலுக்குப் பந்தமோக்ஷங்களைச் செய்யுந் தன்மையை வெளிப்படுத்தல் வடிவ பயனிருத்தாலால், என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்] அவ் ஏழின் = இந்த சப்தாவஸ்தைகளுள், ஒவ்வாத மாபாசம்=அறிஞ ரிடத்திற் பொருந்தாத பெரிய பந்தமும், ஒண்முத்தி = ஒள்ளிய மோக்ஷமும், மேவும்=பொருந்தியிருக்கும், [இந்த ஏழவஸ்தைகட்கும்

சமானமாக பந்த மோக்ஷங்களைச் செய்யுந் தன்மையா எனின் அன்றெனக் கூறுகின்றார்] அவ் ஏழின் = இந்தச் சப்தா வஸ்தைகளுள், மூன்றும் = அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் என்னும் மூன்றவஸ்தைகளும், இங்கு = இச்சரீரத்தின்கண்ணே, எவ்வாறுமே = எந்தப் பிரகாரமும், அப்பந்தமே ஈனும் = பந்தத்தையே கொடுக்கும், என்பர் மேலோர் = என்று சொல்லுவர் பெரியோர் எ—று.

ஆம், தான்—அசைகள். 25

(அ—கை)

இவைகளுக்கு பந்த காரணத் தன்மையைத் தெரிவிக்கும் பொருட்டு மூன்றனுடைய சொரூபத்தையும் தனித்தனி காரியத்தைக் காட்டலால் ஸ்பஷ்டஞ் செய்ய இச்சையுடையவராய் அஞ்ஞானத்தின் சொரூபத்தை முதலிற் காட்டுகின்றார்.

தனதுண்மை யதனெண்ணின் முதலின்மை தனையேய்ந்
துனவிங்க ரியசெய்கை யுறமன்னும் வழியாய்த்
துனவெங்கு மறிகின்ற திலனென்று துயரே
மனநண்ணு வதுசொல்லின் மடமென்பர் பெரியோர். 26

(ப—ரை) தனது உண்மையதன் எண்ணின் = ஆன்ம தத்துவ விசாரத்தின், முதல் இன்மை ஏய்ந்து = பிராக பாவத்தோடு கூடியதாய், இங்கு உன அரிய செய்கை உற = ஈண்டு கருதுதற்கரிய உதாசீன வியவகாரத்திற்கு, மன்னும் வழியாய் = பொருந்தும் காரணமாய், எங்கும் துயரே துன = எவ்விடங்களிலும் துக்கத்தையே பொருந்த, அறிகின்றது இலன் என்று மனம் நண்ணுவது = யானறிகின்றிலேனென்று மனதாலனுபவிக்கப்படுவதாய் இருப்பது, சொல்லின் = சொல்லுமிடத்து, மடம் என்பர் பெரியோர் = அஞ்ஞானமென்று சொல்லுவர் அறிஞர் எ—று. 26

(அ—கை)

ஆவரணத்தின் சொரூபத்தையும் அதன் காரியத்தையும் தெரிவிக்கின்றார்.

வழியின்றி யதினெண்ணி வருபின்னர் நிலேகூ
ரொழிவின்றி யதுவில்லே யொளிர்கின்றி லவெனு
விழிபொன்று திரிபென்ன வியைகின்ற செயலே
யெழில்குன்ற மறைவெய்ய விகல்வந்த தொழிலே. 27

(ப—ரை) வழி இன்றியதின் எண்ணி = அமார்க்கத்தால் விசாரித்து, அதாவது சாஸ்திரத்தில் சொல்லிய பிரகாரத்தைக் கடந்து கேவலம் தருக்கத்தால் விசாரித்து, வருபின்னர் = அனந்தரம், நிலேகூர் ஒழிவு இன்றியது = கூடஸ்தனவன், இல்லே ஒளிர்கின்றில எனு = இல்லே விளங்கவில்லேயென்று, இழிபு ஒன்று திரிபு என்ன இயைகின்ற செயலே = இழிவு பொருந்திய விபரீதமாக வருகின்ற வியவகாரமே, எழில் குன்ற = அழகு கெட, மறைவு இகல்வந்த எய்ய தொழிலே = ஆவரண பலத்தாலுண்டான நெருங்கிய காரியமாம் எ—று. 27

(அ—கை)

விக்ஷேபத்தின் சொரூபத்தையும் அதன் காரியத்தையும் தெரிவிக்கின்றார்.

இருதேக மொடுகூடு மியமான னென்பா
னுருதோயு மெணமாகு முகள்பாச நிபமாய்
வருதீய சமுசார மெனுநாம மருவா
கருதாதி யிடரியாவு மிவன்வேலே கருதே. 28

(ப—ரை) இரு தேகம் ஒடு கூடும் = தூலம் சூக்ஷமம் என்னுமிரண்டு சரீரங்களோடு கூடிய, இயமானன் என்பான் = சீவனவன், உருதோயும் எணமாகும் = விக்ஷேபமென்று சொல்லப் படுவன், உகள்பாச நிபமாய் = தள்ளத்தகுந்த பந்த காரணமாய், தீய சமுசாரம் எனும் நாமம் மருவாவரு = கொடிய சமுசாரமென்னும் பெயரைப் பொருந்தி வாராநின்ற, கருதாதி இடர் யாவும் = கருத்திருத் தன்மை முதலிய சோகமனைத்தும், இவன் வேலே கருது = விக்ஷேப வடிவ இச்சீவனது காரியமென்று கருதுவாய் எ—று.

ஆதி சத்தத்தால் பிரமாத்திருத்தன்மை முதலியவற்றைக் கொள்க. ஏ—அசை.

கருத்தா என்பது கருதா என இடைக் குறையாயிற்று. 28

(அ—கை)

அற்றேல் ஏழவஸ்தைகளும் சிதாபாசனுக்கு என்று சொன்னது பொருந்தாது. அஞ்ஞானமும் ஆவரணமும் விக்ஷேபத்தின் உற்பத்திக்கு முன்பேயிருத்தலாலும் சிதாபாசன் விக்ஷேபத்தினுள்ளடங்கியவனுதலாலும் அவனதவஸ்தையாந்தன்மை பொருத்தமின்மையாலென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

மடமையுட ஞவரண வகையிவைக டாமெணமு
னிடமுடைய தாய்நிகழு மெனினுமெங னேனுமிகு
திடநிலைமை யாமவைகள் செரியுமெண மேயலது
சுடர்விடொளி யாமறிவு தொடர்வதொரு நாளுமிலை. 29

(ப—ரை) மடமையுடன் ஆவரண வகை இவைகள்=அஞ்ஞானமும் ஆவரணமுமாகிய இவைகள், எணம் முன்=விக்ஷேபத்திற்குப் பூருவம், இடமுடையதாய் நிகழுமெனினும் = பிரசித்தமாய் விளங்கினும், எஙனேனும் = எப்படியாவது, திடநிலைமையாம் அவைகள் = அவ்விரண்டு அவஸ்தைகளும், மிகு எணம் செறியுமே அல்லது=மிகுந்த விக்ஷேப வடிவ சிதாபாசனுக்குப் பொருந்துமேயன்றி, சுடர்விடு ஒளியாம் அறிவு = சுயம் பிரகாசமாகிய சிதான்மாவுக்கு, ஒருநாளும் தொடர்வது இலை = ஓர்போதும் பொருந்துவதின்ரும். எ—று.

இவ்வஞ்ஞான ஆவரணங்கள் விக்ஷேபத்திற்குப் பூருவம் இருப்பினும் ஆன்மாவின் அவஸ்தைகளாகா, ஆன்மா அசங்கனுதலால் அவஸ்தையையுடையதாந்தன்மை பொருந்தாமையால், ஆகையால் பரிசேஷத்தால் சிதாபாசனது அவஸ்தைகளாகவே அவைகள் சொல்லத்தக்கனவாமென்பது கருத்து.

எண்ணமென்பது எணமென இடைக்குறையாயிற்று.

எணம்=விக்ஷேபம், திடநிலைமை=அவஸ்தை.

தாம்—அசை. 29

(அ—கை)

அற்றேல் அவஸ்தையையுடைய விக்ஷேபம் அப்போது அதாவது உற்பத்திக்கு முன் இன்மையினுல் அஞ்ஞானமும் ஆவரணமும் விக்ஷேபத்தின் அவஸ்தையாகச் சொல்லுதல் பொருந்தாதென்ரு சங்கித்து

விக்ஷேபமில்லாவிடினும் அதன் சம்ஸ்காரம் அப்போதிருத்தலால் விக்ஷேபத்தினது அவஸ்தையாகச் சொல்லுதல் விருத்தமன்றுமெனக் கூறுகின்றார்.

எண்ணமெழு வதன்முனமு மெண்ணமதன் முதனிலைமை
நண்ணுமது கொடவைகளி னண்ணுமிய லதனையுற
றிண்ணமிவை பிரமமெழ றிண்ணமதி னதனினிலை
யண்ணுமென லறவிடுதி யண்ணுதலி னதின்முழுதும். 30

(ப—ரை) எண்ணம் எழுவதன் முனமும்=விக்ஷேபமுற்பத்தியாவதற்குப் பூருவமும், எண்ணமதன் முதல் நிலைமை நண்ணும்=விக்ஷேபத்தின் சம்ஸ்காரம் இருக்கின்றது, அது கொடு=அக்காரணத்தால், அவைகளின் = அஞ்ஞான ஆவரணங்களுக்கு, அதனை நண்ணும் இயல் = விக்ஷேபத்தைப் பொருந்துந்தன்மை அதாவது சீவனது அவஸ்தையாந்தன்மை, திண்ணம் உறல் = மெய்மையாம், விரோதமின்றாம், [அற்றேல் அப்பிரசித்த சம்ஸ்காரத்தையங்கீகரித்தல் வாயிலாக விக்ஷேபத்தினது அவஸ்தையாக வருணிப்பதைப் பார்க்கிலும் அதிஷ்டானத் தன்மையால் பிரசித்தமான பிரமத்தினது அவஸ்தையாக வருணித்தல் வரமாமென்று சங்கித்து அதிவியாப்தி உண்டாவதால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] இவை = இவ் அஞ்ஞான ஆவரணங்கள், திண்ணம் பிரமம் எழலின்=மெய்மையாகிய பிரமத்தில் ஆரோபிக்கப்பட்டபடியால், அதனில் நிலை அண்ணும்= பிரமத்தில் திதியையடையும், பிரமத்தினவஸ்தையாமென்பது பொருள், எனல் அறவிடுதி=என்று சங்கித்தலை அத்தியந்தம் விட்டு விடுவாய், அதில் முழுதும் அண்ணுதலின்=பிரமத்தில் சகல சகமும் கற்பிக்கப்பட்டபடியால் எ—று. வரம்=சிரேஷ்டம்.

அவைகளின் என்பது வேற்றுமை மயக்கம்.

இன் என்பது பிரித்துக் கூட்டப்பட்டது.

அது பகுதிப்பொருள் விகுதி. 30

(அ—கை)

அற்றேல் பிரமத்தில் எல்லா அவஸ்தைகட்கும் கற்பிக்கப்பட்ட தன்மை சமமாயினும் விக்ஷேப உற்பத்தியினுத்தர காலத்திலுண்டாவதான சமுசாரித் தன்மை முதலிய அவஸ்தைகள் சீவாசிரிதமாக அனுபவிக்கப்படுதலால் பிரமத்தின் அவஸ்தையன்றும் என வினவுகின்றான்.

ஏனையபவ முளனறிஞ னிடரதிலி மகிழ்வுடைய
னெனவும்வரு மியலுயிரி னிகழுமதி னிகழ்வதிலை
யெனினகமு ணர்விலிப ரவியைபுகழ் வெனதுகணி
லெனமுனுள வியலுமுயி ரிடைநிகழ்வ துணர்கிலைகொல். 31

(ப—ரை) பவமுளன்=கருத்திருத்தன்மை முதலிய தரும முடைய சமுசாரி, அறிஞன் = தத்துவசாக்ஷாத்காரமுடையவன், இடரது இலி=சோகரகிதன், மகிழ்வுடையன்= (இனி சொல்லப்போகிற கிருத கிருத்தியத்தன்மை முதலியவற்றாலுண்டான) சந்தோஷமுடையவன், எனவும் வரும் ஏனைய இயல் = என்று உண்டாகின்ற உத்தரா வஸ்தைகள், உயிரில் நிகழும் = சீவாசிரிதமாக விளங்குகின்றன, அதில் நிகழ்வது இலை=பிரமத்தில் விளங்குவனவின்றாம், எனின்= என்று சொல்லின், [இப்படியாமேல் அஞ்ஞான ஆவரணங்களும் சீவாசிரிதமாக அனுபவிக்கப்படுதலால் சீவனது அவஸ்தைகளே யாமெனப் பரிகரிக்கின்றார்] அகம் உணர்விலி = நான் அஞ்ஞன், பரஇயை புகழ்வு = பிரமத்தின் சத்துவமும் விளக்கமும், எனது கணில்=எனது திருஷ்டியினால், (இலை) என=இல்லை என்று, முன் உள இயலும்=பூருவ அவஸ்தைகளும், உயிரிடை நிகழ்வது=சீவனி டத்து விளங்குவது, உணர்கிலை கொல்= அறிகின்றிலையா எ—று.

அறிகின்றாய் என்பது பொருள். இலையென்பது முன்னுங் கூட்டப்பட்டது. திருஷ்டி=அனுபவம். 31

(அ—கை)

அப்படியானால் அஞ்ஞானாசிரயத்தன்மை பிரமத்திற்கு பூருவா சாரியர்களால் எப்படி சொல்லப்பட்டது என்னுஞ் சங்கைக்கு அவரது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கின்றார்.

மடமையினில் பிரமமென மனுநிலைமை கொடுபகர்வர்
மடமைகரு துதலினுயிர் மருவுமியல் பெனவொதின
மடமையிரு வகையுணர்வின் மடியினில திலகிலதென்
மடமைதரு மிவிருவகை மறைவுமற மடிவுபெறும். 32

(ப—ரை) மனு நிலைமைகொடு = பொருந்தாநின்ற அதிஷ்டானத் தன்மையால், மடமையின் இல் பிரமம் என=அஞ்ஞா

னத்தின் ஆசிரயம் பிரமமென்று, பகர்வர்=சொல்லுவார்கள், பிரமத்திற்கு அஞ்ஞானத்தின் அதிஷ்டானத் தன்மையின் விவக்ஷையால் அதனாசிரயத் தன்மை சொல்லப்பட்டது என்பது பொருள், [அப்படியானால் உம்மால் என்ன அபிப்பிராயத்தால் சீவனது அவஸ்தையாக சொல்லப்பட்டது என்று சங்கித்து தனது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கின்றார்] மடமை கருதுதலின்=நான் அஞ்ஞானி என அஞ்ஞானத்தின் அபிமானித் தன்மையால், மருவும் உயிர் இயல்பு என ஓதினம்=பொருந்தாநின்ற சீவனது அவஸ்தையாமென்று கூறினோம், [இங்ஙனம் பந்தஹேதுவாயுள்ள மூன்றவஸ்தைகளைக் காண்பித்து மீந்திருக்கும் நான்கு அவஸ்தைகளுள் முன் சொல்லிய அஞ்ஞான ஆவரண நிவிருத்தி வாயிலாக முத்திக் கேதுவான இரண்டவஸ்தையைத் தெரிவிக்கின்றார்] இரு வகை உணர்வின்= (பரோக்ஷம் அபரோக்ஷம் என்னும்) இருவித ஞானத்தால், மடமை மடியின் = ஆவரண காரணமான அஞ்ஞானம் நஷ்டமாயின், மடமை தரும்=அவ்வஞ்ஞானத்தாலுண்டுபண்ணப்பட்ட, இலது இலகிலது என் இவ்விருவகை மறைவும்=பிரமம் இல்லை விளங்கவில்லை என்னும் வியவகாரத்திற்குக் காரணமான இருவித ஆவரணமும், அறமடிவு பெறும்=(காரணமின்மையால்) அத்தியந்தம் விநாசமாம் எ—று.

ஓதினமென்பது இசையை நோக்கிக் குறுகிற்று. 32

(அ—கை)

எந்த ஞானத்தால் அஞ்ஞானத்தின் எவ்வம்ஸத்திற்கு நிவர்த்தியாம் என்று அபேக்ஷையுண்டாக இரண்டையும் வேறு பிரித்து உணர்த்துகின்றார்.

உரையுணர்வி னொலொழியு முணர்வில தெனுவரண
மிருமுணர்வி னொலொழியு மிலகிலதெ னுவரண
மருகினிது சீவமய லழியுமிது தானழியின்
கருதுருவ மாதிபவ கவலைகளெ லாமழியும். 33

(ப—ரை) உரை உணர்வினால்=சத்த ஜன்னிய கூடஸ்தனிருக்கின்றானென்னும் பரோக்ஷ ஞானத்தினால், உணர்வு இலது என் ஆவரணம்=கூடஸ்தனில்லையென்னும் அசத்துவா பாதக ஆவரண காரணத் தன்மை, ஒழியும்=நிவர்த்தியாம், இரும் உணர்வினால்=நான்

கூடஸ்தனுயிருக்கின்றேனென்னும் அ ப ரோ க்ஷ ஞானத்தினல், இலகிலது என் ஆவரணம்=கூடஸ்தன் விளங்கவில்லையென்னும் அபானு பாதக ஆவரண காரணத் தன்மை, ஒழியும்=நிவர்த்தியாம், ஞானம் அஞ்ஞானத்தையே கெடுக்குமென்னும் மதத்தையாசிரயித்து காரணத் தன்மை பரியந்தமும் உரைசெய்யப்பட்டது, காரணத்தன்மை அஞ்ஞானத்தின் தருமமாம், [இப்போது ஞானத்தின் பல வடிவ இருவ வஸ்தைகளுள் முதலவஸ்தையாகிய சோக நிவிருத்தியைக் கூறு கின்ருர்] இது அருகின்=இந்த அபானுவரணம் நாசமாயின், சீவமயல் அழியும்=சீவத்துவப் பிராந்தி கெடும், இதுதான் அழியின்=இந்தச் சீவத்தன்மைப் பிராந்தி கெடுமாயின், கருதுருவம் ஆதி = அப்பிராந் தியை நிமித்தமாகவுடைய கருத்திருத் தன்மை முதலிய, பவகவலைகள் எலாம்=சமுசார சோகங்களனைத்தும், அழியும் = நிவர்த்தியாகும் எ—று.

கருத்துரு என்பது கருதுரு என இடைக் குறையாயிற்று. 33

(அ—கை)

இங்ஙனம் சோக நிவர்த்தி வடிவ அவஸ்தையைக் காண்பித்து நிரங்குச திருப்தி வடிவ இரண்டாவது அவஸ்தையையுணர்த்து கின்ருர்.

பவமுழுது மேயழியிற் பரமகதி சேருதலிற்
கவலைபினு ருமையினற் கனமகிழ்வு தான்மருவுஞ்
சுவவடிவை யோரினெனுஞ் சுருதியப ரோட்சமிடர்
தவர்தலென வோதுமிரு தகையுமுயிர் மேவுமெனும். 34

(ப—ரை) பவ முழுதும் அழியின் = சகல சமுசாரங்களும் நிவர்த்தியாவதால், பரமகதி சேருதலின்=நித்தியமுக்தத் தன்மை விளங்குதலால், பின் கவலை உருமையின்=மறுபடி சோகமுற்பத்தி யாகாமையினுல், நல்கன மகிழ்வு மருவும் = நிரங்குச திருப்தி பொருந்தும் [அற்றேல் இந்தப் புருடன்ருனெனவே தன்னை யுணர்ந்தாலென்னும் மந்திரத்திற்கு வியாக்கியானஞ் செய்வதில் பிரவிருத்தித்தபடியால் அதனைவிட்டு மத்தியில் அஞ்ஞாதி ஏழ வஸ்தைகளை நிருபணஞ் செய்தல் பிருகிருதத்தில் அசங்கதமாமென்ரு சங்கித்து இந்தப் புருடன்ருனெனவே என்னுஞ் சுருதியின் தாற்பரிய நிருபணத்தில் சகாயமாகக் கூறப்பட்டபடியால் பிரகிருதத்தில் அசங்கத

மன்று என்றபிப்பிராயப்பட்டு சுருதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்] சுவ வடிவை ஓரின் எனும் சுருதி = இந்தப் புருடன் தன்னையுணரின் என்னுஞ் சுருதியானது, அபரோட்சம் இடர் தவிர்தல் என ஓதும் இருதகையும் = அபரோக்ஷ ஞானம் சோக நிவர்த்தி என்று சொல்லப்பட்ட இரண்டு அவஸ்தைகளையும், உயிர் மேவும் எனும் = சீவன் அடைவன் என்று சொல்லும் எ—று.

சிதாபாசனிடத்திலுள்ள ஏழ வஸ்தைகளுள் அபரோக்ஷ ஞான மும் சோக நிவர்த்தியுமாகிய இரண்ட வஸ்தைகளைப் பிரதிபாதிப் பதற்காக மந்திரம் பிரவிருத்தித்தது என்பது அபிப்பிராயம்.

ஏ. தான், அசை நிலைகள். 34

(அ—கை)

இதுவென்றனபரோக்கமது என்னும் 13-வது செய்யுளில் இது வென்னும் பதத்தால் அபரோக்ஷத் தன்மை சொல்லப்படுகின்றதென்று சொல்லப்பட்டது. அப்படியாயின் அபரோக்ஷ ஞான விஷயத்துவமே ஆகும். பரோக்ஷ ஞான விஷயத்துவமாகாது என்று சங்கித்து அதனை யுபபாதனஞ் செய்தற்பொருட்டு அபரோக்ஷ ஞானத்தைப் பிரிக்கின்றார்.

தெரிநிலை யிவனேதான் செறியிரு வகையாமே
திருசிய மினலாலே திகழ்தலி னதுதீயா
லுரையுணர் வுறுகாலே யுணர்வொளி றுதலாநேர்
பிரமந லொளிதானே பிறழ்தலி லுளதேயாம். 35

(ப—ரை) செறி இவனே தெரிநிலை = சுருதியிலுள்ள இவனென்னும் சத்தத்தால் சொல்லப்பட்ட அபரோக்ஷம், இரு வகையாம் = இரண்டு விதமாம், [இருவகையிற் காரணங் கூறுகின்றார்] திருசியம் மினலாலே = விஷயத்தின் சொப்பிரகாசத் தன்மையாலும், அதாவது சித்துரூப ஆன்மவடிவ விஷயத்திற்கு தனது வியவகாரத்தில் சாதனாந்தர நிரபேக்ஷைத் தன்மையாலும், தீயால் அது திகழ்தலின் = புத்தியினால் விஷயவடிவ ஆன்மா சொப்பிரகாசத் தன்மையால் விளங்கு தலினாலும் என்க, [இருக்குக இருவிதம் இவ்வளவால் பரோக்ஷ ஞான விஷயத் தன்மையில் என்ன வந்தது என்று சங்கித்து விஷயத்தின்

சொப்பிரகாசத் தன்மை வடிவ அபரோக்ஷத் தன்மை பரோக்ஷ ஞான விஷயத் தன்மைக்கு விரோதியன்றெனக் கூறுகின்றார்] உரை உணர்வு உறுகால் = பரோக்ஷ ஞான காலத்திலும், உணர்வு ஒளிருதல் நேராம் = (அபரோக்ஷ ஞான காலத்திற்போல) பிரமத்தின் சொப்பிர காசத் தன்மைவடிவ அபரோக்ஷத் தன்மை சமானமாம், இருக்கின்ற தென்பது பொருள், [அதில் உபபத்தியைக் கூறுகின்றார்] பிரமம் நல் ஒளிதானே உளது = பிரமம் சொப்பிரகாசமாயிருக்கின்றது என்று, பிறழ்தலில் = அறிகின்றபடியால் எ—று.

உபபத்தி = பொருத்தம் அல்லது காரணம்.

ஏகாரம் நான்கும், தானும்— அசைநிலைகள். 35

(அ—கை)

பிரத்தியகபின்ன பிரமத்தை விஷயம் பண்ணும் ஞானத்திற்கு எதனால் பரோக்ஷத் தன்மையென்று சங்கித்து பிரத்தியக அம்சத்தை விஷயஞ்செய்யாதபடியாலெனக் கூறுகின்றார்.

அகமது வெனவோரா ததுவுள தெனவோர்தல்
புகலுணர் விதுமாலோ பொடிபட லுளதாகா
சுகமிலை யெனமானந் துனுமெனி னிசமாய்வா
மிகலள வைகள்காணே மிதுகொடு நசியாதால். 36

(ப—ரை) புகல்உணர்வு = சொல்லிய பரோக்ஷ ஞானமானது, அகம் அது என ஓராது = நான் பிரமமென்று விஷயஞ்செய்யாது, அது உளது என ஓர்தல் = பிரமமிருக்கின்றதென்று விஷயஞ்செய்யும், [அப்படியானால் இது பிராந்தி ஞானமாமென்று சங்கித்து இந்த ஞானத்திற்கு பிராந்தித்தன்மை பாதிக்கப்படுந்தன்மையாலா அல்லது வியக்தியை விஷயம் பண்ணுமையாலா அல்லது அபரோக்ஷத் தன்மையால் கிரகண யோக்கிய வஸ்துவை பரோக்ஷத் தன்மையால் கிரகணஞ் செய்வதினலா அல்லது அம்சத்தை கிரகணம் செய்யாமையாலா என்று நான்கு விதமாக விகற்பஞ்செய்து முதலாவது பக்ஷத்தை மறுக்கின்றார்] இது மாலோ = இந்த பரோக்ஷ ஞானம் பிராந்தியோ பிராந்தியன்றும், பொடிபடல் உளது ஆகா = பாதமில்லாதபடியால், அதாவது பாதத்தை நிருபணஞ்செய்ய முடியாததால், [ஏதுவை விவரணஞ்செய்கின்றார்] சுகம் இலை என மானம் துனுமெனின் = பிரமம்

இல்லை என்று பிரமாணம் இருக்குமேல், நிசம் மாய்வாம்=உண்மையாய் பாதம் உண்டாம், இகல் அளவைகள் காணேம்=வலிமையுள்ள பிரமாணங்கள் பார்க்கின்றிலேம், இது கொடு = இக்காரணத்தால், நசியாது = பிரம்மம் இருக்கின்றதென்னும் ஞானம் பாதிக்கப்பட மாட்டாது எ—று. ஆல்—அசை நிலை. 36

(அ—கை)

பிரஹ்மவடிவ வியத்தியை விஷயஞ் செய்யாமையால் பரோக்ஷ ஞானம் பிராந்தியாமென்னும் இரண்டாவது பக்ஷத்தை அதிப்பிர சங்கத்தால் தூஷிக்கின்றார்.

உருநிகழ் வறலாலே லுயருல குரமாலா
முருநிகழ் வறலாலு மொருபடி மினலாலு
முருநிகழ் வுறுநீர்மைக் குரையுர மயலாகா
வுருநிகழ் வறவோரே முரையுர முரையாலாம். 37

(ப—ரை) உருநிகழ்வு அறலாலேல்=வியக்தி விளங்காமையால் பிராந்தியாமேல், உயர்உலகு உரம் மாலாம்=சொர்க்க (மிருக்கின்ற தென்னும்) ஞானமும் பிராந்தியாகும், உருநிகழ்வு அறலாலும்=இது சுவர்க்கம் என்னும் வடிவாக விளங்காததாலும், ஒருபடி மினலாலும்= மற்ரூ சுவர்க்கமிருக்கின்றதென்று சாமான்னியாகாரத்தால் விளங்குதலாலும் என்க, [அபரோக்ஷத்தன்மையால் கிரகிக்கத்தக்க பிரஹ்மத்தை பரோக்ஷமாகக் கிரகித்தலால் பிராந்தியாமென்னும் மூன்ருவதை நிராகரிக்கின்ருர்] உரு நிகழ்வுறும் நீர்மைக்கு = அபரோக்ஷத் தன்மையால் கிரகண யோக்கிய பிரத்தியக பின்ன பிரம்மத்தின்,உரை உரம் மயல் ஆகா=பரோக்ஷ ஞானம் பிராந்தியாகா, [எதனுலெனிற் கூறுகின்ருர்] உரு நிகழ்வு அற ஓரேம்=பிரம்மம் பரோக்ஷம் என்னும் வடிவத்தால் அறியேம், [அப்படியானுல் எதனு லதற்கு பரோக்ஷத்தன்மையென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] உரையால்=அருத்தத்தால், உரை உரமாம்=பரோக்ஷத்தன்மையாம் எ—று.

இது பிரம்மமென்று வியத்தியை விஷயஞ்செய்யாமை வடிவ சாமர்த்தியத்தால் பரோக்ஷத்தன்மை சித்தியாமென்பது கருத்து. 37

(அ—கை)

அம்ஸத்தைக் கிரகணஞ்செய்யாமையால் பிராந்தியாம் என்னும் நான்காவது பக்ஷத்தை சங்கிக்கின்ருன்.

பாலில கறன்மாலேற் பகர்கட வுரமாலாம்
பாலில ததுவாதல் பகுமறை தருபாலாற்
பாலில தெனுமாயும் பனுவலி னறவாலே
பாலில கிலதேகும் பரமந லறிவாலே. 38

(ப—ரை) பால் அகறலில்=அம்ஸத்தின் அக்கிரகணத்தால் அதாவது பிரம்ம அம்ஸம் கிரகணமாயினும் பிரத்தியகம்ஸத்தினக் கிரகணத்தால், மாலேல் = பிராந்தியாமேல், [இப்படியாமேல் கடாதி ஞானத்திற்கும் பிராந்தித் தன்மை நேருமெனப் பரிகரிக்கின்ருர்] பகர்கட உரம் மாலாம்=சொல்லா நின்ற கட ஞானமும் பிராந்தியாம், உள்ளிருக்குமவயவங்களைக்கிரகியாமையாலென்பதுகருத்து.[அற்றேல் கடம் சாவயவமாதலால் ஒரு அம்ஸம் கிரகணமாயினும் மற்ருெரு அம்ஸத்தின் அக்கிரகணம் சம்பவிக்கிறது. பிரமம் நிரம்ஸமாதலால் அம்ஸத்தின் அக்கிரகணம் எப்படிப் பொருந்துமென்ரு சங்கித்து நிவர்த்திக்கத்தகுந்தஅம்ஸமாகியஉபாதிவடிவநிமித்தத்தால் ஸாம்ஸத் தன்மை அதற்குப் பொருந்துமெனக் கூறுகின்ருர்] பால் இலது= நிரம்ஸமாகிய பிரமம், அதுவாதல் = சாம்ஸமாதல், அறைதரு பகும்பாலால்=சொல்லாநின்ற வியாவர்த்தியாம்ஸங்களின் பேதத் தால் ஆம், [அவ்வியாவர்த்தியாம்ஸங்கள் யாவையென்னுமாகாங்க்ஷை யுண்டாகக் கூறுகின்ருர்] பனுவலின் அறிவாலே=பரோக்ஷ ஞானத் தாலே, இலது எனும் பால் மாயும்=அசத்துவாம்ஸம் நிவர்த்தியாகும், பரம நல் அறிவாலே=அபரோக்ஷ ஞானத்தால், இலகிலது பால் ஏகும்=அபானும்ஸம் நிவர்த்தியாகும் எ—று.

வியாவர்த்திய அம்ஸம்= நிவர்த்திக்கத்தகுந்த அம்ஸம், அஃது அசத்துவாம்ஸமும் அபானும்ஸமுமாம். 38

(அ—கை)

அபரோக்ஷத் தன்மையால் கிரகண யோக்கிய பிரம்ம விஷயக பரோக்ஷஞானம் பிராந்தியாகிறதில்லையென்பதைத் திருஷ்டாந் தத்தைக் காட்டலாலும் திடஞ்செய்கின்ருர்.

தசமனுண் டெனவெயுரை தருமுரம் பிரமையல
வசமதுண் டெனலுமதி னறிவிலா வரணநிகர்
நிசமதென் றிடுசொலுரை நிகிலநன் குறவினவிற்
றசமனீ யெனலினுரு தடையிலா தறநிகழும். 39

(ப—ரை) தசமன் உண்டு எனவே உரை தரும் உரம் = பத்தாமவன் இருக்கின்றானென்னும் ஆப்த வாக்கியத்தாலுண்டான பரோக்ஷ ஞானம், பிரமை அல = பிராந்தியன்று, அதின் = அதுபோன்று, அசமது உண்டு எனலும் = பிரமம் இருக்கின்றதென்னும் வாக்கிய ஜன்னிய ஞானமும் பிராந்தியன்றாம், அறிவில் ஆவரணம் நிகர் = அஞ்ஞாவரணம் சமமாம், அதாவது அஞ்ஞானத்தாற் செய்யப்பட்ட அசத்துவாவரணம்ஸம் சமமாதலால் என்பது கருத்து, [அற்றேல் வாக்கியத்தால் பரோக்ஷ ஞானமுண்டாகுமேல் அபரோக்ஷ ஞானமெதனாலுண்டாகிறது என்று சங்கித்து விசார சகித வாக்கியத்தாலேயேயுண்டாகிறதெனக் கூறுகின்றார்] நிசம் அது என்றிடுசொல் உரை = இவ்வான்மா பிரம்மமென்னும் மகாவாக்கியார்த்தத்தை, நிகிலம் நன்குற வினவில் = நிஸ்ஸேஷமாக நன்றாய் விசாரிக்கின், தசமன் நீ எனலின் = பத்தாமவன் நீ ஆகின்றாய் என்னும் வாக்கியத்தால் (தன்னிடத்து தசமத்தன்மையெப்படி சாக்ஷாத்கரிக்கப்படுகிறதோ அதுபோல), உரு தடை இலாது அறநிகழும் = பிரத்தியக வடிவ வியத்தி தடையின்றி மிகவும் விளங்கும் எ—று.

அதாவது முன்பு இருக்கின்றதென்று பரோக்ஷத் தன்மையால் அறியப்பட்ட பிரமத்திற்கு பிரத்தியக பின்னத்தன்மை சாக்ஷாத்கரிக்கப்படுகின்றது. எனவே என்பது இசையை நோக்கிக் குறுகிற்று.

ஈண்டு விசாரமிதுவாம்:- உத்தமாதிகாரிக்கோ சிரவணாதிகள் ஞானத்திற்குச் சாதனங்களாம். மத்திமாதிகாரிக்கு நிர்க்குணப் பிரம்மத்தின் அகங்கிரக உபாஸனையே ஞானத்திற்குச் சாதனமாம். இது எல்லா அத்வைத நூல்களின் சித்தாந்தம். ஆனால் இரண்டிடங்களிலும் விருத்தியின் பிரவாகவடிவ பிரசங்கியானமாகிய தியானமே ஞானத்தின் கரணவடிவ பிரமாணமாம். மத்திமாதிகாரிக்கு நிர்க்குணப் பிரம்மத்தின் நிரந்தர விருத்தி வடிவ உபாசனை செய்யத்தக்கதாம். அதுவே பிரசங்கியானமாம். அவ்வாறே உத்தமாதிகாரிக்கும் சிரவண மனனங்களுக்குப் பின் நிதித்தியாசன வடிவ பிரசங்கியானமுளது. அதுவே பிரம்ம

சாக்ஷாத்காரத்தின் அசாதாரணகாரணமாகிய கரணமாம். அறுவகைப் பிரமாணங்களில் பிரசங்கியான மில்லையாகலின் அது பிரமையின் கரண மாதல் பொருந்தாதெனினும் சகுணப் பிரம்மத்தின் தியானம் சகுணப் பிரம்மத்தின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதலும் நிர்க்குணப் பிரம் மத்தின் தியானம் நிர்க்குணப் பிரம்மத்தின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதலும் சகல சுருதி ஸ்மிருதிகளிலும் பிரசித்தமாம். தேசகாலங் களின் அந்தராயமுடைய ஸ்திரீயின் தியானமாகிய பிரசங்கியானம் ஸ்திரீயின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதல் உலகில் பிரசித்தமாம். அதனுல் நிதித்தியாசன வடிவ பிரசங்கியானம் பிரம்ம சாக்ஷாத் காரத் திற்குக் கரணமாதல் பொருந்துகின்றது. அன்றியும் சம்வாதிப் பிராந் தியினைப்போல விஷயம் பாதிக்கப்படாமையினுலாவது பிரசங்கியானம் சப்தப் பிரமாணவடிவ மூலப் பிரமாணமுடையதாயிருத்தலாலாவது பிரசங்கியானத்தினுலுண்டாகிய பிரமஞானத்திற்குப் பிரமாண ஜன்னியத் தன்மையில்லையாயினும் பிரமாத்தன்மையிருக்கின்ற தென்பது சில நூலாசியர் மதம், வாசஸ்பதியின் மதத்தில் பிரமஞானத் தின் கரணம் மனமாம். பிரசங்கியானம் மனதிற்குச் சஹகாரியாம்.

அத்வைத நூல்களின் முக்கிய மதம் இதுவாம்:- மகாவாக்கியத் தினுல் ஞானமுண்டாகியபின் பிர்சங்கியானத்தின் அபேக்ஷையில்லை. ஆனுல் மகாவாக்கியத்தினுலேயே அத்வைதப் பிரம்மத்தின் சாக்ஷாத் காரமுண்டாகின்றது. ஆதலால் வேதாந்த வடிவ சப்தமே பிரம்மத்தின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாம். நிதித்தியாசன வடிவ பிரசங்கி யானத்தாற்றோன்றிய ஏகாக்கிரத்தன்மையோடுகூடிய மனம் அதற்குச் சஹகாரியாம். அங்கும் பிறநூலாசிரியரது மதத்தில் விசாரத்தோடு கூடிய மகாவாக்கியம் அபரோக்ஷ ஞானத்திற்குக் கரணமாம். சங்க்ஷேப சாரீரகரது மதத்தில் எல்லாவிதத்தாலும் மகாவாக்கியமே அபரோக்ஷ ஞானத்திற்குக் கரணமாம். இம்மதம் விசேஷமுடையது. பிரமா ஞானத் தின் கரணத்தினைப் பிரமாணமென்பர். எதனுல் மகாவாக்கிய வடிவ சத்தம் பிரத்தியக பின்னப் பிரம்மத்தைக் கோசரிக்கும் பிரமா ஞானத் திற்குக் கரணமாதலால் பிரமாணமாகின்றதோ அதனுல் மகாவாக்கிய வடிவப் பிரமாணத்தால் அபரோக்ஷ ஞானத்தின் உற்பத்தியைக் கூறுதல் தகுதியாம்.



(அ—கை)

விசாரத்தாலுபகரிக்கப்பட்ட வாக்கியத்தால் அபரோக்ஷ ஞானத் தினுற்பத்திப் பிரகாரத்தை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றுர்.

தசமனு ரெனவினவத் தானெனு விடைபுகலத்
தசமனுந் தனுடனெணித் தானவன் றனையறிவன்
றசமனு னெனுநன்மொழி தருமுரங் கெடுவதிலை
தசமனென் பதின்மரடி தலைநடுச் சமுசயமில். 40

(ப—ரை) தசமன் ஆர் என வினவ = (உன்னால் இருக்கின்றா னென்று நிரூபிக்கப்பட்ட) பத்தாமவன் யார் என்று பிரசினஞ்செய்ய, தான் எனு விடைபுகல = (அச்சங்கைக்கு) நீயேயென்று உத்தரங்கூற, தன் உடன் எணி = தன்னோடுகூட மற்ற ஒன்பதுபேரையும் கணித்து, அவன் தனை தசமனும் அறிவன் = அவன் நான் தசமனாகின்றேனென்று தன்னைப் பத்தாமவனாக உணருவன். [நான் தசமனாகின்றேனென்னும் இந்த ஞானம் விசாரசகித வாக்கியத்தாலுண்டானதால் விபர்யயாதி வடிவமன்றெனக் கூறுகின்றார்] நன்மொழி தரும் தசமன் நான் எனும் உரம் = (பரிகணனாதிவடிவ விசார சகித நீ தசமனாகின்றாய் என்னும்) வாக்கியத்தாலுண்டான நான் தசமனாகின்றேனென்னும் ஞானம், கெடுவது இலை = எந்த ஞானத்தாலும் பாதிக்கப்படுவதில்லை, ஒன்பதின்மர் அடி நடு தலை = (பரிகணனக் கிரியையிலும்) நவபுருஷர்களின் ஆதிமத்தியாவசானங்களில் எண்ணினும், தசமன் சமுசயம் இல் = தசமனுக்கு நான் தசமனா அன்றா எனச் சந்தேகமுண்டாவதில்லை எ—று.

ஆகையால் அந்த ஞானம் திட அபரோக்ஷ ரூபமாமென்பது பொருள். பரிகணனம் = எண்ணுதல்.

தான்—அசை. 40

(அ—கை)

இவ்வெல்லாவற்றையும் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

சத்தே யென்பது முன்றொடர் மொழியாற் சத்துண்மை
யொத்தே தத்துவ மசிமுதல் வாக்கியத் துருநேர்வாஞ்
சித்தே யடிநடு கடையினு மதுவாத் திகழ்ஞானந்
தத்தா தாதலி னுலபரோட்சந் தனிநிற்கும். 41

(ப—ரை) சத்தே என்பது முன்தொடர் மொழியால் = சிருஷ்டிக்குமுன் இவ்வெல்லாம் சத்தாகவே இருந்தது ஏகமேவாத்துவிதீயம்

என்பது முதலிய வாக்கியத்தால், சத்து உண்மை ஒத்து=பிரமத்தினிருப்பை பரோக்ஷமாக முதலில் நிச்சயித்து, (அதற்கு சீவரூபத்தால் பிரவேசம் முதலிய யுத்தி பரியாலோசனையால் பிரத்தியக் ரூபத் தன்மையைச் சம்பாவனைசெய்து) தத்துவமசி முதல் வாக்கியத்து= தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தால், உருநேர்வாம் = அத்துவிதீயப் பிரம்மவடிவ, ஆன்மாவை (நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்று) சாக்ஷாத்கரிப்பன், சித்து அதுவா திகழ் ஞானம் = ஆகையால் சிதான்மாவிற்கு பிரமத்தன்மையை விஷயஞ்செய்யும் ஞானம், அடிநடு கடையினும் = பஞ்சகோசங்களின் ஆதிமத்திய அவசானங்களில் ஆன்மாவை வியவகரிப்பினும், தத்தாது=வியபிசாரமாகாது (மாறுபடாதென்பது பொருள்), ஆதலினுல்=ஆகையால், அபரோக்ஷம் தனிநிற்கும்=அபரோக்ஷ ஞானம் ஸ்திரமாம் எ—று.

ஏ, ஏ—அசைநிலைகள்.

இந்தப் புத்திக்கு அபரோக்ஷத் தன்மை ஸ்திரமாம் என்பது பொருள். 41

(அ—கை)

அற்றேல் முதலில் கேவலம் வாக்கியத்தால் பரோக்ஷ ஞானமுண்டாகின்றது. பின்பு விசாரசகித வாக்கியத்தால் அபரோக்ஷ ஞானமுண்டாகிறது என்பது எதனுலறியப்படுகின்றதென்று சங்கித்து தைத்திரீயம் முதலிய சுருதிப் பொருளின் பரியாலோசனையால் அறியப்படுகின்றது எனக் கூறுகின்றுர்.

பிறவிமு தற்குநி மித்தமெ னியல்முன் பிருகோர்ந்தே
மறையி னதற்பின் விசாரம தாலுரு வைக்கண்டா
னறிவது வென்றிங் குரையில தேனு மவன்றுதை
செறிதரு மனமுயி ரெனநா டுந்தலஞ் செப்புற்றுன். 42

(ப—ரை) பிருகுமுன்=பிருகுவெனப் பெயரிய ஒரு ரிஷியானவர் பூருவம், மறையின்= ("எதினின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ, எதனுல் உண்டான பூதங்கள் சீவிக்கின்றனவோ, எதில் இலயத்தையடைகின்றனவோ அது பிரம்மமாம். அதனையறிய விரும்புவாய்" என்னும்) வேதவாக்கியத்தால் (கேட்கப்பட்ட), பிறவிமுதற்கு நிமித்த

மென் இயல்=சகத்தின் சன்மாதி காரணத் தன்மையாகிய இலக்ஷணத்தால், ஓர்ந்து = சகத்காரணப் பிரமத்தை பரோக்ஷமாயறிந்து, அதன்பின்=அச்சுருதி விசாரத்தின் பிறகு, விசாரமதால்=பஞ்சகோசங்களின் விசாரத்தால், உருவைக்கண்டான்=பிரத்தியக்கான்ம வடிவ பிரமத்தைப் பார்த்தான், [அற்றேல் நீ பிரம்மமாகின்ருய் என்பது முதலிய இவ்வித உபதேச வாக்கியமின்மையினுல் பிருகுவிற்கு ஆன்மசாக்ஷாத்காரம் எங்ஙனமுண்டாம் என்ரு சங்கித்து ஆன்ம சாக்ஷாத்காரத்திற்கு ஏதுவான விசாரயோக்கிய ஸ்தலத்தைக் காட்டலாலெனக் கூறுகின்ருர்] அறிவு அது என்று=சிதான்மாவான நீ பிரம்மமென்று, இங்கு=தைத்திரீய சுருதியில், அவன் தாதை=பிருகுவின்பிதாவாகிய வருண மகரிஷி, உரை இலதேனும்=கூறவில்லையாயினும், செறிதரும் அனம் உயிர்என=நெருங்கிய அன்னமும் பிராணனும் என்று, நாடும் தலம் செப்புற்ருன்=விசார ஸ்தலத்தைக் கூறினுன் ஏ—று.

ஏ—அசை. 42

(அ—கை)

அற்றேல் அன்னமயம் முதலிய கோசங்கள் விசாரிக்கப்பட்டபோது பிரத்தியக்கான்மாவின் சாக்ஷாத்காரமுண்டாகுக. பிரமத்தின் சாக்ஷத்காரமெங்ஙனமுண்டாம் என்ரு சங்கித்து பிரத்தியக்கே பிரம்மமாதலால் பஞ்சகோச விசாரத்தால் ஆனந்தான்ம வியக்தியை சாக்ஷாத்கரித்து "ஆனந்தத்திலிருந்தே இப்பூதங்களுண்டாகின்றன. ஆனந்தத்தால் உண்டானவை சீவிக்கின்றன. ஆனந்தத்தில் லயமடைகின்றன" என்றிவ்விதம் பிரம்ம லக்ஷணத்தையும் பிரத்தியக்கான்மாவிலேயே பிருகுவானவர் பொருத்தினுரெனக் கூறுகின்ருர்.

அன்னமு தற்கோ சங்களை மேன்மே லாராய்ந்தே
பின்னமி லின்புரு கண்டதி னியல்பும் பெறவைத்தான்
மன்னுமெய்ஞ் ஞானம னந்தமெ னும்பிர மப்பண்பைப்
பன்னியி ருப்பது வாக்குகை கோசம் பகர்வுற்ருன். 43

(ப—ரை) அன்னம்முதல் கோசங்களை=அன்னமயம் முதலிய பஞ்சகோசங்களை, மேல் மேல் ஆராய்ந்து = மீண்டும் மீண்டும் விசாரித்து, பின்னம் இல் இன்பு உருகண்டு=பேதமற்ற ஆனந்த

ஆன்ம வியத்தியைப் பார்த்து, அதின் இயல்பும்=பிரமத்தின் லக்ஷணத்தையும், பெறவைத்தான்=ஆன்மாவில் அடைவித்தான், [அற்றேல் பிரமத்தினிலக்கணத்தை ஆனந்தான்மரூபத்தால் பிரத்தியக்கான்மாவில் பொருத்துதல் பொருந்தாது. பிரமம் தடஸ்த வடிவமாயிருத்தலால் பிரத்தியக் வடிவ சாக்ஷியினின்றும் வேருயிருத்தலின் என்னுஞ் சங்கைக்கு பேதமன்று சத்தியாதி வடிவ பிரமத்திற்கு பிரத்தியக் ரூபத்தால் இருப்பு கேட்கப்படுகிறபடியாலெனக் கூறுகின்ருர்] மன்னுமெய்ஞ் ஞானம் அனந்தம் எனும் பிரமப்பண்பை=பொருந்தா நின்ற சத்தியம் ஞானம் அனந்தம் என்னும் பிரமத்தின் சொரூப லக்ஷணத்தை, பன்னி=கூறி, குகை இருப்பதுவா = ("எவன் குகையில் பரம வியோமத்தில் இருக்கும் பிரமத்தையறிவனே" என்னும் வாக்கியத்தால் பஞ்சகோசவடிவ) குகையினுள் இருப்பதாக, கோசம் பகர்வுற்ருன்=அந்த பிரமத்திற்கு கோசங்களில் பிரத்தியக் வடிவத் தன்மையைச் சொன்ஞன் எ—று.

ஈண்டு பிரசங்கத்தால் லக்ஷணத்தை விசாரித்தல் தகுதியாம். அசாதாரண தருமத்தினை இலக்ஷணமென்பர். அசம்பவம் அவ்வியாப்தி அதிவியாப்தியென்னும் மூன்று குற்றங்களுமில்லாத தருமத்தினை அசாதாரணமென்பர். அஃது ஆவிற்கு அலைதாடி கோடுடைமை அசாதாரண தருமமாவது போன்று. அந்த இலக்ஷணம் தடஸ்தலக்ஷணம் சொரூபலக்ஷணம் என்னும் வேறுபாட்டால் இரண்டு வகையினதாம். ஒரு காலத்திருப்பதாய் வியாவர்த்தகம் (பிறவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பது) யாதோ அது தடஸ்தலக்ஷணமாம். அதுவே உபலக்ஷணமாம். "காகமிருப்பது தேவதத்தனது வீடு" என்னுமிடத்து காகத்தோடு கூடிய தன்மை ஒர் காலத்திருப்பதாய் மற்றைய வீடுகளினின்றும் தேவதத்தனது வீட்டை வேறு பிரித்தறிவிப்பதாம். ஆதலால் அது வீட்டிற்கு தடஸ்தலக்ஷணமாம். அதுபோல் "எதினின்றும் இப்பூதங்களுண்டாகின்றனவோ உண்டானவை எதனுல் சீவிக்கின்றனவோ எதன்கண் இறந்து பிரவேசத்தையடைகின்றனவோ அதனைப் பிரம்மமென்று அறிக" என்று சுருதியிற் கூறியதும், "இச்சகத்தின் பிறப்பு முதலியன எதினின்றும் உண்டாகின்றனவோ" என்னும் வியாச சூத்திரத்திற்கூறியதுமான ஜகத்தின் உற்பத்தி ஸ்திதிலயங்களின் காரணத் தன்மையும் அதனுல் உபலக்ஷிக்கப்பட்ட சருவஞ்ஞத் தன்மை முதலியவற்ருேடு கூடிய தன்மையும் பிரம்மத்தில் ஒருகாலத்து (அஞ்ஞான காலத்தில்)

இருப்பனவாய் மாயையதன் காரியமென்பவற்றினின்றும் பிரம்மத்தை வேறு பிரிப்பனவாம். ஆதலால் அவை பிரம்மத்தின் தடஸ்த லக்ஷணமாம்.

எப்போதுமிருப்பதாய் வியாவர்த்தகம் யாது அது சொரூப லக்ஷணமாம். "வெண்ணிறத்தோடு கூடியது தேவதத்தனது வீடு" என்னுமிடத்து வெண்ணிறத்தோடு கூடிய தன்மை கிரகத்தின் சொரூபமாயிருத்தலால் எல்லாக் காலத்திலும் வீட்டிலிருப்பதாய் மற்றக் கருமை பொன்மை முதலிய நிறமுடைய வீடுகளினின்றும் தேவதத்தனது வீட்டை வேறு பிரித்தறிவிப்பதாயிருத்தலால், அது வீட்டிற்குச் சொரூபலக்ஷணமாம். அதுபோல "சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம்" என்னும் சுருதியிற் கூறிய சத்திய ஞானாதிவடிவத் தன்மை பிரமத்தின் சொரூபமாயிருத்தலால் சருவ காலத்திலும் (ஞான அஞ்ஞான தசைகளிலும்) பிரம்மத்திலிருப்பதாய் அன்னியமான அசத்து ஜடபரிச்சின்னமாகிய பிரபஞ்சத்தினின்றும் பிரம்மத்தை வேறு பிரிப்பதாயிருத்தலால் அது பிரம்மத்தின் சொரூபலக்ஷணமாம் என்க. 43

(அ—கை)

இங்ஙனம் தைத்திரீய சுருதியை விசாரித்துப் பார்த்தலால் பிருகு மகரிஷியின் சாக்ஷாத்காரத்தின்கண் பரோக்ஷ ஞான பூருவகம் விசார ஜன்னியத் தன்மையை காண்பித்து சாந்தோக்கிய சுருதியை விசாரித்துப் பார்த்தலாலும் அதனைத் தெரிவிக்கின்றார்.

இந்திர னான்மா வெனுமிய லாலுண் டெனவோர்ந்தே
முந்துற விச்சித் தீரிரு காலயன் முன்னுற்று
னந்தமி லான்மா வெனன்முத லாலுண் டதுவென்றே
வந்தொழி நெறியா லறிவது வென்று மதித்தேமால். 44

(ப—ரை) இந்திரன் = தேவேந்திரன், ஆன்மா எனும் இயலால் = "யாதொரு ஆன்மா பாபமற்றது சரையற்றது மிருத்துயு அற்றது சோகமற்றது" என்பது முதலிய வாக்கியத்தாற் பிரதிபாதிக்கப் பட்ட லக்ஷணத்தால், உண்டு என ஓர்ந்து = இருக்கின்றதென்று பரோக்ஷமாய் ஆன்மாவையறிந்து, முந்துற இச்சித்து = (விசாரத்தால் சரீரத்திரய நிராகரணத்தால்) அதை சாக்ஷாத்கரிக்க இச்சித்து, ஈரிரு

கால் = நான்கு தடவை, அயன் முன்னுற்ருன் = குருவாகிய பிரம்மாவை சரண் அடைந்தான், என்று சாந்தோக்கிய உபநிஷத்தில் எட்டாவதத்தியாயத்தில் கேட்கப்படுகிறது. [இப்போது ஐதரேய சுருதியிலும் அதனைத் தெரிவிக்கின்ருர்] அந்தம் இல் ஆன்மா எனல் முதலால் = பரிச்சின்னமற்ற ஆன்மா என்பது முதலிய வாக்கியத்தால், அது உண்டு என்று மதித்தேம் = பிரம்மம் உளதென்று பரோக்ஷமாக அறிந்தேம், வந்து ஒழி நெறியால் = அத்தியாரோப அபவாதக் கிரமத்தால், அறிவு அது என்று மதித்தேம் = பிரஞ்ஞானம் பிரம்மமென்று உணர்ந்தேம் எ—று. மதித்தேமென்பது முன்னுங் கூட்டப்பட்டது.

அபிப்பிராயமிதுவாம்:— "இவ்வனைத்தும் முன்பு ஒரே ஆன்மாவாய் இருந்தது. வேறு கிஞ்சித்துமின்ரும்" என்னும் வாக்கியத்தால், பிரமமத்தின் லக்ஷணத்தைக்கூறி "உலகங்களைச் சிருஷ்டிப்பேனுகவென்று அவர் ஈக்ஷணஞ்செய்தார்" என்று உபக்கிரமித்து "அவருக்கு மூன்றவஸ்தைகள். நனவு கனவு சுழுத்தியென்னும் மூன்றவஸ்தைகள் சொப்பனங்களாம்"என்னும் வாக்கியத்தால் பரமான்மாவில் சகத்தினத்தியாரோபப் பிரகாரத்தைக் கூறி "பிறந்த அவர் ஈண்டு அன்னியமாக எதனை வசனிப்பேன் என்று பூதங்களைப் பார்த்தார்"என்று ஆரோபிக்கப்பட்டதற்கு அபவாதங்கூறி "அவர் இந்தப் புருஷனையே வியாபகதமப் பிரம்மமாகப் பார்த்தார் இதைப் பார்த்தார்" என்று பிரத்தியக்கான்மாவிற்கு பிரமவடிவத்துவம் கூறப்பட்டுளது. மறுபடியும் "புருஷன்" என்பது முதலிய வாக்கியத்தால் ஞானசாதன வைராக்கிய உற்பத்தியின் பொருட்டு கர்ப்பவாசம் முதலிய துக்கங்களைக் காண்பித்து "இவ்வான்மா யாது எதை யாங்கள் உபாசிப்பேம்" என்பது முதலிய விசாரத்தால் தத் துவம் புதார்த்தங்களின் பரிசோதன பூருவகம் பிரஞ்ஞானம் பிரம்ம"மென்று பிரஞ்ஞானவடிவ ஆன்மாவிற்குப் பிரமத்தன்மை ஐதரேய உபநிடத்தில் தெரிவிக்கப்பட்டது.

ஏ, ஏ, ஆல்—அசைநிலைகள். 44

(அ—கை)

இவ்வாறு தைத்திரீயம் சாந்தோக்கியம் ஐதரேயம் என்னும் உபநிடதங்களிற் கூறிய நியாயத்தை வேறு சுருதிகளிலும் அதிதேசஞ் செய்கின்ருர்.

பங்கில வாந்தர மொழியா லாமெய் பரோக்கவறி
வெங்கும காவாக் கியநல்வி சாரத் தெழிலறிவா
மிங்கப ரோக்கமு துற்றிட மாமொழி யேசொன்னூர்
சங்கையி லதனாற் பரமப ரோக்கந் தானுமே. 45

(ப—ரை) பங்கு இல் = ஈனமற்ற, எங்கும் = எல்லா சுருதி களிலும், அவாந்தர மொழியால் = (சத்தியம் ஞானமனந்தம் பிரம்மம் என்பது முதலிய) அவாந்தர வாக்கியத்தால், மெய் பரோக்க அறிவு ஆம் = பிரமத்தின் பரோக்ஷ ஞானமுண்டாம், மகாவாக்கியநல் விசாரத்து = தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தின் சிறந்த விசாரத் தால், எழில்அறிவு ஆம் = அபரோக்ஷ ஞானமுண்டாம், [அற்றேல் மகா வாக்கிய விசாரத்திற்கு அபரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந் தன்மை தனது கபோல கற்பிதமாம் என்னுஞ் சங்கைக்கு வாக்கிய விருத்தியில் சங்கராசாரிய சுவாமிகளால் இவ்விதம் பிரதிபாதிக்கப் பட்டிருத்தலால் எமது கபோல கற்பிதமன்றெனப் பரிகரிக்கின்றார்] அபரோக்கமது உற்றிட = பிரமத்தின் அபரோக்ஷ ஞானம் சித்திக்கும் பொருட்டு, மாமொழியே = மகாவாக்கியத்தையே, இங்கு சொன்னூர் = வாக்கிய விருத்தியில் பாஷியக்காரர் கூறியருளினர், அதனால் = ஆதலால், பரம் அபரோக்கம் = மகாவாக்கியத்தால் பிரமத்தின பரோக்ஷ ஞானம் உண்டாதல், சங்கை இல் ஆம் = விவாதமற்றதாம் எ—று.

தான், ஏ—அசைநிலைகள். 45

(அ—கை)

வாக்கிய விருத்தியில் மகாவாக்கியத்தால் அபரோக்ஷ ஞான முண்டாகும் பிரகாரத்தைக் காண்பிக்கின்றார்.

அகமென் றுணர்வொலி கட்கா லம்பன மாய்த்தோன்றுந்
தகவுட் கரணஞ் சாரறி வேதொம் பதனுகும்
பகமுற் றவன்மா யாவிசெ கத்தின் பயின்மூல
னிகழ்வில் பரோக்கன் மெய்ம்முத லான்றற் பதனுமே. 46

(ப—ரை) அகம் என்று உணர்வு ஒலிகட்கு = நானென்னும் ஞானத்திற்கும் சத்தத்திற்கும், ஆலம்பனமாய்த்தோன்றும் = விஷயமாய்

விளங்குகின்ற, தகவு உட்கரணம் சார் அறிவே = விவேகமுள்ள அந்தக் கரண விசிஷ்ட சிதான்மாவே, தொம் பதன் ஆகும் = துவம்பத வாச்சியனுவன், [இங்ஙனம் துவம்பத வாச்சியார்த்தத்தைக் கூறி தத்பத வாச்சியார்த்தத்தைக் கூறுகின்றார்] பகம் உற்றவன் = சருவஞ்ஞத் தன்மை முதலிய ஆறு குணங்களையுடையவன், மாயாவி = மாயையை யுபாதியாகவுடையவன், பயில் செகத்தின் மூலன் = சொல்லா நின்ற உலகின் காரணன், பரோக்கன் = பரோக்ஷத் தன்மைத் தரும விசிஷ்டன், [இப்படி தடஸ்த லக்ஷணத்தைக் கூறி சொரூப லக்ஷணத்தைக் கூறுகின்றார்] இகழ்வு இல் = நிந்தையற்ற, மெய்ம் முதலான் = சத்தியாதி வடிவமுடையவன், தற்பதனும் = தற்பத வாச்சியனும் எ—று.

ஆதிசத்தத்தால் ஞானம் முதலியவற்றைக் கொள்க, தகவு = அறிவு. ஏ—அசை. 46

(அ—கை)

இப்படி தத் துவம் என்னும் பதங்களின் அர்த்தங்களைக் கூறி வாக்கியார்த்த ஞானத்தின் பொருட்டு லக்ஷணவிருத்தி ஆசிரயிக்கத் தக்கதெனக் கூறுகின்றார்.

ஒருபொ ருட்கி லங்குநீர்மை யோடி லங்கு ருமையு
மிருமை யோட கண்டநீர்மை யேய்வு ருமையாற் கொள்வார்
மருவு நல்லி லக்க ணைவ யங்குதத்து வமசிமுன்
பெருமை வாக்கி யங்கண் மீது பேசுபாக லக்கணை. 47

(ப—ரை) ஒரு பொருட்கு = ஒரு வஸ்துவிற்கு, இலங்கு நீர்மையோடு இலங்குருமையும் = பிரத்தியக்ஷத் தன்மை பரோக்ஷத் தன்மைகளும், இருமையோடு அகண்ட நீர்மை = ஸத்துவிதீயத் தன்மை பூரணத் தன்மைகளும், ஏய்வுருமையால் = விரோதமாவதால், மருவு நல் இலக்கணை கொள்வார் = பொருந்தா நின்ற நல்ல லக்ஷணவிருத்தியை பெரியோர் அங்கீகரிப்பர், [அதுவும் எப்படிப்பட்டதெனிற் கூறுகின்றார்] வயங்கு தத்துவமசிமுன் பெருமை வாக்கியங்கள் மீது = விளங்கா நின்ற தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களில், பேசுபாக லக்கணை = சொல்லா நின்ற பாகத்தியாக லக்ஷணையாம் எ—று. 47

(அ—கை)

அந்தப் பாகத்தியாக லக்ஷணையில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

சோய மென்ப தாதிவாக்கி யத்த சொற்கள் போலவே
ருய தேய்வு ருசஞ்சர்க்க மாத ருன் விசிட்டமு
மேய வாக்கி யார்த்த மிங்கு மேவுருவ கண்டமா
யேய வோர் நல்வாக்கி யார்த்த மேகொள்வா ரறிஞரே. 48

(ப—ரை) சோயம் என்பது ஆதி வாக்கியத்த சொற்கள் போல=அவனே இத்தேவதத்தன் என்பது முதலிய வாக்கியங்களிலுள்ள அவன் இவன் என்னும் பதங்களுக்கு பாகத்தியாக லக்ஷணை யாசிரயிக்கப்படுகிறது போலவும், வேருயது ஏய்வுரு=ஜகல் லக்ஷணை யாவது அஜகல் லக்ஷணையாவது பொருந்தாது போலவும். ஈண்டுமாமென்பது,பொருள்,[அற்றேல்ஆவைக்கொண்டுவாஎன்பது முதலிய வாக்கியங்களில் லக்ஷணவிருத்தியின்றியும் வாக்கியார்த்த ஞானம் காணப்படுகிறதே அதுபோல் ஈண்டும் ஏனுகாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] சஞ்சர்க்கம் ஆதல்தான் = சம்சர்க்கமாவது, விசிட்டமும்= விசிட்டமாவது, மேய வாக்கியார்த்தம்=பொருந்திய வாக்கியார்த்தம், இங்கு மேவுரு=ஈண்டு மகாவாக்கியங்களில் சம்மதமன்ரும், மற்ருே, அகண்டமாய்=சுவகதாதி பேத சூனியவஸ்து மாத்திரமாய், ஏயஓர் நல் வாக்கியார்த்தம்=பொருந்த ஒப்பற்ற நல்ல வாக்கியார்த்தத்தினை, அறிஞர் கொள்வார்=வித்துவான்கள் அங்கீகரிப்பர் எ—று.

ஏ மூன்றும் அசைநிலைகள்.

உலகில் பசுவைக் கொண்டுவா என்பது முதலிய இடங்களில் பதங்களால் நினைப்பூட்டப்பட்டனவாயும் ஆகாங்க்ஷை முதலியவற்றை யுடையனவாயும் இருக்கின்ற பசு முதலிய பதார்த்தங்களுக்குள்ள சம்சர்க்கமென்னும் அன்வயம் வாக்கியார்த்தமாக அங்கீகரிக்கப் பட்டுளது. நீலம் மகத் சுகந்தி உத்பலம் என்பது முதலியவிடங்களில் நீலத்தன்மை முதலிய விசிட்ட நீலோத்பலமென்னும் புஷ்பத்திற்கு வாக்கியார்த்தத் தன்மை அங்கீகரிக்கப்பட்டுளது. அதுபோல், மகா வாக்கியத்தில் வாக்கியார்த்தம் சம்மதமின்ரும். மற்ருே, அகண்டை

கரசத் தன்மையாக சம்மதமாம். ஆகையால், லக்ஷணையாசிரயிக்கத் தக்கது என்பது பொருள்.

இங்கு இது பிரசினமாம்:— வாச்சியார்த்தத்திற்கு லக்ஷியார்த்தவடிவ சேதனத்தோடு சம்பந்தத்தை அங்கீகரிக்கின் லக்ஷியார்த்தத்தில் அசங்கத் தன்மையின் ஹாநியுண்டாகும். சம்பந்தத்தை அங்கீகரிக்காவிடின் லக்ஷணை பொருந்தாது. ஏனெனின், சக்கிய சம்பந்தத்திற்கு அல்லது போத்திய சம்பந்தத்திற்கு லக்ஷணையென்று பெயராம். அது அசங்கத்திற் சம்பவியாது.

இதன் உத்தரமிதுவாம்:— தத்பத துவம்பதங்களினது வாச்சியார்த்தத்தில் சேதனமும் ஜடமுமென இரண்டு பாகங்களுண்டு. அவற்றுள், சேதன பாகத்திற்கு லக்ஷியார்த்தத்தில் தாதாத்மிய (அபேத) சம்பந்தமிருக்கின்றது. ஜடபாகத்திற்கு லக்ஷியத்தோடு அதிஷ்டானத் தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. கற்பிதத்தின் சம்பந்தத்தினுலாவது அல்லது தனது தாதாத்மிய சம்பந்தத்தினுலாவது லக்ஷியார்த்தமாகிய சேதனத்தின் அசங்கத் தன்மைவடிவ சுபாவத்திற்குக் கேடுண்டாகிறதில்லை.

சங்கை:— தத்பதம் துவம்பதம் இரண்டற்கும் அகண்ட சேதனத்தில் லக்ஷணை அங்கீகரிக்கின், கடம் கடம் என்னும் வாக்கியத்தினைப்போலப் புநருத்தி தோஷம் வருதலால் மகாவாக்கியம் அப்பிரமாணமாகும். இரண்டு பதங்களுக்கும் லக்ஷியார்த்தம் வேறெனக்கொள்ளின் மகாவாக்கியத்திற்கு அபேத அர்த்தத்தை அறிவிக்குந் தன்மை சம்பவியாது.

உத்தரம்:— மாயா விசிட்ட சேதனமும் அந்தக்கரண விசிஷ்ட சேதனமும் தத்பத துவம்பதங்கட்கு வாச்சியார்த்தமாம். மாயா உபகித சேதனமும் அந்தக்கரண உபகித சேதனமும் இரண்டற்கும் லக்ஷியார்த்தமாம். எந்தப் பிரஹ்ம சேதனத்தை இலக்ஷியமெனக்கொள்ளின் புநருத்தி தோஷமுண்டாகின்றதோ அந்தப்பிரஹ்ம சேதனம் லக்ஷியமன்று. ஆனுல் மாயை அந்தக்கரண உபகித சேதனம் லக்ஷியமாம். அதற்கு உபாதி பேதத்தால் பேதமுண்டு; புநருத்தி தோஷமில்லை. மாயை அந்தக்கரண உபகிதமான இரண்டு சேதனங்கட்கும் வாஸ்தவமாக அபேதமுண்டு. ஆதலால் தத்பதார்த்த துவம்பதார்த்தங்கட்கு மகாவாக்கிய விவேகத்திற் கூறிய ஒன்றற்கொன்று உத்தேஸ்ய விதேய பாவத்தைக்கொண்டு மகாவாக்கியத்திற்கு அபேத அர்த்தத்தைப்

போதிக்குந் தன்மை சம்பவிக்கின்றது. அன்றியும் இரண்டு பதங்கட்கும் வேறு வேறு இலக்ஷகத் தன்மை அங்கீகரிக்கின் புநருத்தியின் சங்கையுண்டாகின்றது. அந்த வேறு வேறு இலக்ஷகத் தன்மை இல்லை. ஆனால் இரண்டு பதங்களுஞ்சேர்ந்து அகண்ட பிரஹ்மத்தின் லக்ஷகங்களாம். அதனால் புநருத்தி தோஷமில்லை.

இவ்விதத்தால் அகண்ட ஏகரசத் தன்மைவடிவ மகாவாக்கியத்தின் அர்த்தம் சம்பவிக்கின்றது. 48

(அ—கை)

அகண்டைகரச வாக்கியார்த்தத்தைத் தெரிசிப்பிக்கின்றார்.

எந்த வேறு போத நின்றி லங்கு மன்ன தொருமையா
னந்த ரூப மாமி தேக நல்ல போத மாமதே
யிந்த வாறொன் றொன்றி னொன்று ணர்ச்சி யேயு நாணி
[னக்
கந்த வத்து வத்து நீர்மை யொடுப ரோக்க மகலுமே. 49

(ப—ரை) எந்த வேறுபோதம் = யாதொரு பிரத்தியக்கு வடிவ சருவாந்தர சிதான்மா, நின்று இலங்கும் = புத்தியாதி சாக்ஷியாயிருந்து விளங்குகின்றதோ, அன்னது ஒருமை ஆனந்தரூபமாம் = அது அத்துவிதீய ஆனந்தரூப பரமான்மாவாம், ஏக நல்ல போதமாம்இது = அத்துவிதீய ஆனந்த சித்துரூப பரமான்மா, அது = சிதேகரச பிரத்தியக்கான்மாவாம், [இங்ஙனம் அகண்டார்த்த ஞானத்தால் என்ன உண்டாகுமெனிற் கூறுகின்றார்] இந்தவாறு = இந்தப் பிரகாரம், ஒன்றொன்றின் ஒன்று உணர்ச்சி = அன்னியோன்னிய தாதான்மிய ஞானம், ஏயு நாள் = பொருந்துங் காலத்தில், நினக்கு = துவம்பதார்த்த பிரத்தியக்கான்மாவிற்கு, அந்தவத்து நீர்மையோடு = பரிச்சின்ன வஸ்துத் தன்மை வடிவ அப்பிரமத்தன்மையும், வத்து = தற்பதார்த்த பிரமத்திற்கு, பரோக்க (நீர்மை) = பரோக்ஷத் தன்மையும், அகலும் = நிவர்த்தியாகும் எ—று.

பரோக்ஷத் தன்மை = பரோக்ஷ ஞானமாத்திரத்திற்கு விஷயமாந் தன்மை.

ஏ இரண்டும் அசை.
ஒடு—எண்ணிடைச்சொல்.
அப்பிரமத் தன்மை = பிரம்மமல்லாத் தன்மை. 49

(அ—கை)

அதனாற்றுனென்னேயென்று வினவுகின்றுன்.

என்னி னும்மென் னென்னி னீகே
ளெங்கு மாமொ ரின்பமாய்
மன்னும் வேறு போத மன்ன
மாநல் வாக்கி யத்திஞ
லுன்னு மோர்ப ரோக்க ஞான
மொன்று மென்று வோதுவார்
துன்னு நூற்சித் தாந்த ஞானஞ்
சோபை மிக்க தாகுமே. 50

(ப—ரை) என்னினும் என் என்னின் = அங்ஙனமாயினும் அதாவது பரோக்ஷத் தன்மையும் பரிச்சின்னத் தன்மையும் நிவர்த்தி யாயினும் என்ன பிரயோசனமென்று வினவில், [உத்தரங் கூறுகின்றுர்] நீ கேள் = நீ சமாதானங் கேட்பாய், வேறு போதம் = தேகாதியின் வேருன பிரத்தியக்வடிவ சிதான்மா, எங்கும் ஆம் ஓர் இன்பமாய் மன்னும் = பூரண அத்துவிதீய ஆனந்தரூபமாய் நிலைபெறும், [அற்றேல் "சத்தியின் வலிமையால் நன்கு பரோக்ஷ ஞான சாதனம் ஆகமம்" என ஆகமத்தின் இலக்கணமாம். ஆகையால் வாக்கியத்திற்கு அபரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந் தன்மையெப்படி சொல்லப் படுகிறது என்னுஞ் சங்கைக்கு இவன் சித்தாந்த ஞானமின்றியவனும் என்று மனதில் வைத்துக்கொண்டு பரிகாசஞ் செய்கின்றுர்] அன்ன = இங்ஙனமாகும்போது, மாநல் வாக்கியத்திஞல் = தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தால், உன்னும் ஓர் பரோக்க ஞானம் = கருதாநின்ற பரோக்ஷ ஞானமானது, ஒன்றும் என்று ஓதுவார் = பொருந்துமென்று கூறுகின்றவர்களுக்கு, துன்னும் நூல் சித்தாந்த ஞானம் = பொருந்தா நின்ற சாஸ்திர சித்தாந்த ஞானம், சோபை மிக்கது ஆகும் = மிகவும் பிரகாசிக்கும் எ—று.

இங்ஙனம் கூறுகின்றவர்கள் சித்தாந்த ரகஸ்யத்தையறியார் கள் என்பது பொருள். 50

(அ—கை)

அற்றேல். சித்தாந்தமிருக்குக. வாக்கியத்திற்கு பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந்தன்மையோ அநுமானத்தால் சித்தித்தது எனச் சங்கிக்கின்ருன்.

நிற்க நூற்க ருத்த துத்தி நெறியின் வாக்கி யத்திஞற்
சொற்க மாதி வாக்கி யம்போற் றுன்னு றும்ப ரோக்கதீ
யிக்க ருத்த டாபி றழ்ச்சி தசம னின்க ணெய்தலா
லக்க ரத்த வா்வு யிர்க்க டுத்த பண்பு நீங்குமால். 51

(ப—ரை) நூற்கருத்தது நிற்க=சாஸ்திரத்தின் சித்தாந்தமிருக்குக, உத்தி நெறியின்=யுத்தி மார்க்கத்தால், வாக்கியத்திஞல்= தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தால், சொற்கம் ஆதி வாக்கியம் போல்=சுவர்க்கம் முதலியவற்றைப் பிரதிபாதிக்கும் வாக்கியம்போன்று, பரோக்க தீதுன்னுறும்=பரோக்ஷ ஞானமுண்டாகும், விவாத விஷய மான வாக்கியம் பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணும் யோக்கியமாம், வாக்கியமாதலால், சொர்க்காதிப் பிரதிபாதகவாக்கியம் போன்று, என்னுமநுமானத்தால் பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந் தன்மை சித்தமாமென்பது பொருள், [இவ்வேது வியபிசாரமாமெனப் பரிகரிக்கின்ருர்] அடா=மூட, அங்ஙனமன்று, இக்கருத்து=இந்த யுத்திவடிவ ஏது, தசமனின்கண் பிறழ்ச்சி எய்தலால்=பத்தாமவனிடத்து வியபிசாரத்தையடைவதால், நீ தசமஞகின்ருய் என்னும் வாக்கியத்தில் வாக்கியத் தன்மையும் அபரோக்ஷ ஞான சனகத் தன்மையும் தோற்றுவதால், [மேலும் துவம்பதார்த்தமாகிய சீவனுக்கு அபரோக்ஷத் தன்மையினின்மை நேருமாதலாலும் மகாவாக்கியம் பரோக்ஷ ஞான சனகமின்ருமென்றங்கீகரிக்கத்தக்கதெனக் கூறுகின்ருர்] அக்கரத்து அவா உயிர்க்கு=பிரமத்தன்மையை வாஞ்சிக்கின்ற சீவனுக்கு, அடுத்த பண்பு நீங்கும்=சுபாவசித்தமான பிரத்தியக்ஷத்தன்மை நசிக்கும் எ—று. ஆல்—அசை. 51

(இதுவுமது)

சித்த மான முன்னி லைத்தி
றங்கெ டும்மி ஙன்சொலன்
மெத்த மேன்மை யாம கோவி
ருத்தி வேண்டு வாற்குறும்
வித்த முந்தொ லைந்த தாவி
ளம்பு லோக வசனநன்
கர்த்த மேவ லுற்ற தாநி
னருளினு லகோ வகோ. 52

(ப—ரை) இஙன் = இந்தப்பிரகாரம், சித்தமான முன்னிலைத் திறம் கெடும் சொலல் = சருவ சனங்களுக்கும் சுபாவசித்தமாயுள்ள பிரத்தியக்ஷத்தன்மை நசிக்குமென்று சொல்லுதல், மெத்த மேன்மை யாம் = மிகவும் உயர்வாம், அகோ = ஆச்சரியம், இங்ஙனம் கூறும் யுத்திநிகிருஷ்டமும் பரிகாசத்திற்கிடமுமாம் என்பது கருத்து, [இஷ்டாபத்தியாமென்னுஞ் சங்கைக்குக்கூறுகின்றார்]விருத்திவேண்டுவாற்கு = வட்டிப்பணத்தை விரும்பினவருக்கு, உறும் வித்தமும் = உள்ள மூலதனமும், தொலைந்ததா விளம்புலோக வசனம் = நசித்ததாகக் கூறும் லௌகிக வாக்கியம், நின் அருளினால் = உனது கிருபையினால், நன்கு அர்த்தம் மேவலுற்றதாம் = நல்ல பொருளைப் பொருந்தப் பெற்றதாம், ஸார்த்தகமாமென்பது கருத்து, அகோ அகோ = ஆச்சரியம் ஆச்சரியம் எ—று. 52

இங்ஙன் என்பது இஙனென இடைக்குறையாயிற்று.

(அ—கை)

அற்றேல் அந்தக்கரணமாகிய உபாதியோடு கூடியிருத்தலால் சீவனுக்கு அபரோக்ஷத்தன்மை பொருத்தந்தான் பிரமத்திற்கோ நிருபாதிகத்தன்மையாமாதலின் அஃது பொருத்தமன்று என்று சங்கிக்கின்றான்.

உள்ள மொண்டு சீவ போத முணர்வு றத்த குந்ததா
மெள்ளு பாதி யுண்மை யாலி தின்மை யாற்ப ரந்தகா
தள்ளிவ் வண்ணம் வத்து ஞான்ஞ் சார்ந்து பாதி தோன்ற
விள்ள லாமை யாலு பாதி விதேக முத்தி மட்டுமே. [லால் 53

(ப—ரை) உள்ளம் ஒண்டுபோதம் சீவன் = அந்தக்கரண விசிஷ்ட சிதான்மாவாகிய சீவன், எள்உபாதி உண்மையால்=தள்ளத் தகுந்த மனவடிவ உபாதியோடு கூடியிருத்தலால், உணர்வு உறத் தகுந்ததாம்=பிரத்தியக்ஷமாக யோக்கியனும், இது இன்மையால்=இவ் உபாதி இல்லாமையால், பரம்தகா=பிரம்மம் பிரத்தியக்ஷ யோக்கிய மன்றும், [பிரமத்திற்கு நிருபாதிகத்தன்மை அசித்தமாமெனப் பரிகரிக்கின்ருர்] இவ்வண்ணம்தள்=இந்தப் பிரகாரமன்று, அதாவது பிரமத்திற்கு நிருபாதிகத்தன்மையை சங்கித்தல் சரியன்று, வத்து ஞானம் = சீவனுக்கு பிரமத்தன்மையை விஷயஞ்செய்யும் ஞானம், உபாதிசார்ந்து தோன்றலால் = சோபாதிகவஸ்து விஷயகமாவதால், (அதன் விஷயமான பிரமத்திற்கும் சோபாதிகத்தன்மையாம். ஞானத்திற்கு சோபாதிக விஷயத்தன்மை ஞேயத்திற்கு சோபாதிகத் தன்மை இன்றிப்பொருந்தாது என்பது கருத்து)[ஞானத்திற்குத்தான் சோபாதிக விஷயத்தன்மை எதனுலெனிற் கூறுகின்ருர்] விதேகமுத்தி மட்டும்=விதேக கைவல்லிய பரியந்தமும், உபாதி விள்ளலாமையால்= உபாதி தள்ளத் தகாதபடியால் எ—று.

ஏ—அசை. 53

(அ—கை)

அப்படியானுல். சீவனுக்கும் பிரமத்திற்கும் விலக்ஷணமாக இரண்டு உபாதி சொல்லத்தக்கதென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

சீவ நீர்மை வத்து நீர்மை சித்த மேவ னீங்கலான்
மேவு பாதி யல்ல தில்லை விதியு பாதி யாதல்போ
லோவ லென்கொ லாகி டாவு யர்ந்த பொன்னி ரும்பெனும்
வீவில் வேறு பாட்டி னுல்வி லங்கி னீர்மை மாறுமோ. 54

(ப—ரை) சீவநீர்மை = சீவத்தன்மைக்கும், வத்துநீர்மை= பிரமத்தன்மைக்கும், சித்தம் மேவல் நீங்கல் மேவு உபாதி = அந்தக்கரணத்தின் சேர்க்கையும் பிரிவுமே முறையே பொருந்தாநின்ற உபாதியாம், அல்லது இல்லை=வேறு பிரகாரத்தால் இன்ரும், [அந்தக்கரண சம்பந்தத்திற்கு பாவரூபத் தன்மையால் உபாதித் தன்மை இருக்குக. அபாவ வடிவ அதன் பிரிவிற்கு அஃது உசிதமன்ரும் என்று சங்கித்து "காரியமுள்ள பரியந்தம் இருப்பதும் பேதத்தைச் செய்வதும்

யாது அது உபாதியாம்" என்று கூறிய உபாதியின் லக்ஷணம் அந்தக் கரணத்தின் சேர்க்கை பிரிவுகளென்னுமிரண்டிலும் இருத்தலால் உபாதித்தன்மையுசிதந்தானென்னுமபிப்பிராயத்தால் பரிகரிக்கின்றூர்] விதி = பாவ வடிவ அந்தக்கரண சம்பந்தம், உபாதியாதல் போல் = எப்படி உபாதியாகின்றதோ அதுபோல, ஓவல் = (அபாவ வடிவ அந்தக்கரணத்தின்) வியோகம், என் கொல் ஆகிடா = உபாதி ஏனுகாது, அவசியம் ஆகும் என்பது பொருள், [அப்படியாயினும் பாவா பாவத் தன்மை வடிவ அவாந்தர விலக்ஷணத் தன்மை காணப்படு கின்றதேயென்னுஞ் சங்கைக்கு அவ்விலக்ஷணத் தன்மை நிஷ் பிரயோசனமாதலால் ஆதரிக்கத்தக்கதன்ருமென்றபிப்பிராயப்பட்டு திருஷ்டாந்தம் கூறுகின்றூர்] உயர்ந்த பொன் இரும்பு எனும் வீவு இல் வேறுபாட்டிஞல் = மேலாகிய சுவர்ணமென்றும் லோஹமென்றும் சொல்லாநின்ற கெடாத பேதத்திஞல், விலங்கின் நீர்மை மாறுமோ = சிருங்கலைத் தன்மை பேதமாகுமா, பேதமாகாது எ—று.

புருஷனது சஞ்சாரத்தை நிரோதஞ் செய்யுந் தன்மையில் உபயோகமற்ற சுவர்ணத்தன்மை லோஹத்தன்மை முதலிய வேற்றுமை எப்படி ஆதரிக்கத் தக்கதன்றே அதுபோல விதி நிஷேத வடிவ உபாதியின் பாவா பாவ வடிவ விலக்ஷணத் தன்மையும் ஆதரிக்கத் தக்கதன்ரும் என்பது பொருள். 54

சிருங்கலை = பந்தனவேதுவான சங்கிலி.

(அ—கை)

விதியைப் போன்று நிஷேதத்திற்கும் பிரம ஞானத்தின் உபாயத் தன்மை இருத்தலால் பிரம்மத்தின் உபாதித் தன்மையுண்டு எனத் திடஞ்செய்வதற்காக விதிநிஷேதங்களாகியஇரண்டற்கும் பிரம ஞானத்தின் உபாயத்தன்மை ஆசாரியரால் நிரூபிக்கப்பட்டுளதென்று தெரிவிக்கின்றூர்.

அதத்து வாவி ருத்தி ரூப மதனி ஞலு நேரதாய்
விதித்த தாமு கத்தி ஞலும் வேத மத்த கங்கடா
முதித்த வத்து தன்னை யோத லுபய மாம்வி தத்ததென்
றிதத்து வந்த குரிசி ருமி யம்பி ஞர்வி ளங்கவே. 55

(ப—ரை) அதத்துவா விருத்திரூபமதனினுலும் = அதத்துவா விருத்தி வடிவத்தாலும், நேரதாய் விதித்த தா முகத்தினுலும் = சாக்ஷாத் விதிமுகத்தாலும், வேதமத்தகங்கள் = உபநிடதங்களுக்கு, உதித்த வத்துதன்னை = சதோதிதமான பிரமத்தை,உபயமாம் விதத்து ஓதல் என்று = இரண்டு பிரகாரமாகப் பிரதிபாதித்தல் உளதென்று, இதத்துவந்த குரிசில் = சகல ஜனங்களுக்கும் இதமுண்டாக எழுந்தருளி வந்த ஆசாரிய சுவாமிகள், விளங்க இயம்பினர் = ஸ்பஷ்டமாகச் சொன்னர் எ—று.

தத்சத்தத்தால் பிரம்மம் சொல்லப்படுகிறது. அதத் சத்தத்தால் அதனினும் வேறான அஞ்ஞானம் முதலிய பிரபஞ்சம் சொல்லப்படுகிறது, வியா விருத்தி சத்தத்தால் இதுவுமல்ல இதுவுமல்லவென்னும் நிஷேதம் சொல்லப்படுகிறது, அதத்து = பிரபஞ்சத்தை, வியா விருத்தி = நிஷேதித்தலே, ரூபம் = உபாயம், அதனல், விதிவிதானம் = சாக்ஷாத் வாசக சத்தப் பிரயோகம் அஃது சத்தியம் ஞானமனந்தமென்பது முதலியது, முகம் = துவாரம், அதன் வாயிலாலும் என்பது பொருள்.

தாம், தாம், ஏ—அசைநிலைகள்.

55

(அ—கை)

அற்றேல் வேதாந்தங்களுக்கு அதத்து வியாவிருத்தியால் பிரமத்தைப்போதிக்குந் தன்மையங்கீகரிக்கின் நானென்னும் சொற்பொருளான கூடஸ்தனுக்கும் தியாகம் நேரிடுமாதலால் நான் பிர்ம்மமாயிருக்கின்றேனென்று சாமானாதி கரண்ணியத்தால் ஞானமுண்டாக யோக்கியமன்றுமென்று சங்கிக்கின்ருன்.

நானெ னும்பொரு ணீக்குறி னுன்பர மென்னுஞான
மேனுறு மெனல் பாகவி லக்கணை யேகுமங்கந்
தானு ணீக்குறின் விஞ்சிய சின்மய சாட்சிதன்பா
னை தாமெனும் வாக்கியத் தாலது நாடலாமால். 56

(ப—ரை) நான் எனும் பொருள் நீக்குறின் = அகம் சத்தார்த்த கூடஸ்தனைத் தள்ளின், நான் பரம் என்னும் ஞானம் = நான் பிரம்மமாகின்றேனென்னும் ஞானம்,ஏன் உறும் = எப்படிப்பொருந்தும்,

[நானென்னும் சொற்பொருண் முழுதையும் தியாகம் செய்யாமையால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்ருர்] எனல் = என்று வினவற்க. பாகலக்கணே = பாகத்தியாக லக்ஷணையால், அங்கம் ஏகும் = அந்தக் கரணவடிவ அம்ஸத்தின் தியாகமுண்டாம், [அம்ஸத்தியாகத்தால் அறியும் பிரகாரத்தை அபிநயஞ்செய்து அறிவிக்கின்ருர்] உள்நீக் குறின் = அந்தக்கரணம் தள்ளப்படின், விஞ்சிய சின்மயசாட்சி தன் பால்=மிஞ்சிய சித்துரூப சாக்ஷியினிடத்து, நான் அது எனும் வாக்கியத்தால்=நான் பிர்ம்மமாகின்றேனென்னும் வாக்கியத்தால், அது நாடலாம்=பிரமத்தன்மையையறியலாம் எ—று. 56

தான், ஆம், ஆல்—அசை.

(அ—கை)

கேவல பிரத்தியக்கான்மாவிற்கு சொப்பிரகாசத்தன்மையுண் மையால் புத்தி விருத்தி விஷயத்தன்மை பொருந்தாதென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

கரிய தாமிது தன்னொளி யேனுங் கடாதிபோல
யுரிய புத்தி விருத்தியி னோர்வுற லாகுமிந்தத்
துரிய நற்பொரு டன்னைப் பலத்தினுற் சுட்டொணுவென்
றரிய நூல்புக லாரிய ரோதின ரன்பினுலே. 57

(ப—ரை) கரியதாம் இது=சாக்ஷியாகிய இவ்வான்மா, தன் ஒளியேனும்=சொப்பிரகாசமாயினும், கடாதி போல=குடம் முதலியது (விருத்தி வியாப்பியமாவது) போன்று, உரிய புத்தி விருத்தியின் = யோக்கியமாகிய அந்தக்கரண விருத்தியினுல், ஓர்வுறல் ஆகும் = அறியலாகும், சொப்பிரகாசன் நான் என்றிவ்விதம் புத்தி விருத்தி சம்பவிப்பதால் என்பது கருத்து, [அப்படியானுல் அப சித்தாந்தத்தின் அடைவு உண்டாமென்ரு சங்கித்து பூருவாசாரியர்களாலும் விருத்தி வியாப்பியத் தன்மையங்கீகரிக்கப்பட்டிருத்தலால் இது அப சித்தாந்த மன்றெனப் பரிகரிக்கின்ருர்] இந்தத் துரிய நல்பொருள் தன்னை = அபரோக்ஷ ஆனந்தவடிவ கூடஸ்தனை, பலத்தினுல் = விருத்தியிற் பிரதிபலித்த சிதாபாசனுல், சுட்டொணு என்று=அறியத்தகாதென்று, அரியநூல் புகல் ஆரியர் = அருமையான சாஸ்திர கர்த்தாக்களாகிய பெரியோர்கள். அன்பினுல் ஓதினர் = பிரியத்தினுற் கூறினுர்கள், தனக்கு ஸ்புரண ரூபத்தன்மையிருத்தலாலென்பது கருத்து எ—று. 57

ஏ—அசை.

(அ—கை)

ஆன்மாவில் பல வியாப்தியினின்மையைத் தெரிவிப்பதற்காக அநான்மாவுக்கு விருத்தியினலும் பலத்தினலும் வியாப்பியத் தன்மையைத் தெரிவிக்கின்ருர்.

புத்தியுட்செறி போலியு மோர்குடம் புக்குநிற்கும்
அத்தினுட்புத்தி யாலறி யாமைய ழிந்துபோகுஞ்
சித்தின்போலியி ஞற்குடந் தோன்றுறுஞ் சேதனத்தின்
மெத்துபேதமை மாய்ந்திடப் புத்திவி ருத்திவேண்டும். 58

(ப—ரை) புத்தி உட்செறிபோலியும் = அந்தக்கரண விருத்தியும் அதனுள்ளிருக்கும் சிதாபாசனும், ஓர்குடம் புக்கு நிற்கும் = ஒருகடத்தை வியாபித்திருக்கும், அதாவது விஷயஞ்செய்யும் [விருத்தி சிதாபாசன் என்னும் இரண்டினது வியாப்தியின் பயனைக் கூறுகின்ருர்] அத்தினுள் = அப்புத்தி சிதாபாசர்களுள், புத்தியால் = பிரமை வடிவ புத்தி விருத்தியால், அறியாமை அழிந்துபோகும் = கடாவச்சின்ன சேதனசிரித அஞ்ஞானம் நசித்துப்போகும், ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமாவதால், சித்தின் போலியினல் = சிதாபாசனல், குடந்தோன்றுறும் = கடம் ஸ்புரணமாகும், சடத் தன்மையால் சுயம் விளக்கம் பொருந்தாமையாலென்பது கருத்து, [இப்போது ஆன்மாவில் அநான்மாவினின்றும் விலக்ஷணத் தன்மையைத் தெரிவிக்கின்ருர்] சேதனத்தில் = பிரமத்தில், மெத்து பேதமை மாய்ந்திட = பொருந்தாநின்ற அஞ்ஞானம் நாசமாதற் பொருட்டு, புத்தி விருத்தி வேண்டும் = அந்தக்கரண விருத்தி வியாப்தி வேண்டும் எ—று.

பிரத்தியக்கான்மாவிற்கும் பிரமத்திற்கும் உள்ள ஏகத்தன்மை அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டபடியால் அவ்வஞ்ஞானநிவிருத்தியின் பொருட்டு வாக்கிய ஜன்னிய நான் பிரமமாகின்றேனென்னுமிவ்வித புத்தி விருத்தியின் வியாப்தி அபேக்ஷிக்கப்படுகிறது. 58

(இதுவுமது)

சொயமிலங்குரு வாதலிற் றுன்னுறு சித்தின்போலி
பயனுருது கடாதிக ளோக்கப் பயின்றகாலை
நயனமுங்கிளர் தீபமும் வேண்டுநற் றீபநோக்க
வியனதாமொரு நேத்திரம் வேண்டுமவ் வாறுவேண்டா. 59

(ப—ரை) சொயம் இலங்கு உருவாதலின்=தான் ஸ்புரண ரூப மாதலால், துன்னுறு சித்தின்போலி = (தனது ஸ்புரணத்தின் பொருட்டு) விருத்தியில் பொருந்தியுள்ள சிதாபாசன், பயன் உறுது= பிரயோசனத்தையடையான், ஆகையால் விருத்தியிலிருப்பினும் சிதா பாசன் உபயோகப்படுவதில்லையென்பது பொருள், [கூறிய பொருளை திருஷ்டாந்தத்தைக் காட்டலால் வெளிப்படையாக்குகின்றார்] கடாதிகள் நோக்கப்பயின்ற காலை=அந்தகாரத்தால் மறைவுபட்ட கடம் முதலிய வைகளைப் பார்க்கப்போகின்றபோது, நயனமும் கிளர் தீபமும் வேண்டும்=நேத்திரமும் விளங்காநின்ற விளக்கும் ஆகிய இரண்டும் வேண்டும், நல்தீபம் நோக்க=நல்ல விளக்கைப் பார்க்க, வியனதாம் ஒரு நேத்திரம்வேண்டும்=உயர்வாகிய கண்ணொன்றே அபேக்ஷிக்கப் படும், அவ்வாறுவேண்டா = அப்படி இரண்டும் அபேக்ஷிக்கப்படுவ தின்றும், அதுபோன்று பிரமத்தில் அஞ்ஞான நாசத்தின் பொருட்டு விருத்தி வியாப்தி மாத்திரம் அபேக்ஷிக்கப்படுகின்றது என மேற் செய்யுளில் கூட்டி முடிக்க. 59

(அ—கை)

அற்றேல் அந்தக்கரணத்திற்கும் அதன் விருத்திகளுக்கும் சிதாபாசனோடு கூடியிருத்தல் சுபாவமாவதால் கடாதிகளிற்போல பிரமத்திலும் பலவியாப்தி பலாத்காரத்தாலுண்டாகும் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்.

இருப்பதேனுஞ்சிற் போலிப ரத்தினொ டேகமாய்ப்போம்
பரத்திலேகுடம் போல்வியப் புப்பலம் பண்ணிடாதாற்
சரிப்பிலப்பிர மேயம ஞதியென் றிங்குச்சாற்றுங்
கருத்திற்கிட்டுமி தென்பது புத்தியாற் காணலாகும். 60

(ப—ரை) சிற்போலி இருப்பதேனும்= (கடாகார விருத்தியிற் போல பிரம்மாகார விருத்தியில்) சிதாபாசனிருப்பினும், பரத்தினொடு ஏகமாய்ப்போம்=மத்தியான்ன வெயிலிலிருக்கும் தீபப்பிரபைபோன்று பிரமத்தோட பேதம் போலாகிறது, பேதமாகத் தோற்றுவதின்றும் ஆகையால், குடம்போல்=கடத்தில் ஸ்புரண வடிவ அதிசயத்தை உண்டுபண்ணுவதுபோல, பரத்தில் வியப்புப்பலம் பண்ணிடாது=பிர டித்தில் ஸ்புரண வடிவ அதிசயமாகிய பிரயோசனத்தைச் செய்யாது, [அற்றேல் பிரமத்தில் பலவியாப்தியின்று விருத்தி வியாப்தியோ

இருக்கின்றது என்று கூறப்பட்டது. அதிற் பிரமாணம் யாது என்னுஞ் சங்கைக்கு ஆகமம் பிரமாணமாமென்று கூறுகின்றார்] சரிப்பு இல் அப்பிரமேயம்=கெடாத அப்பிரமேயமென்றும், அனாதி என்று இங்கு= அனாதியென்றும் கூறுமிடங்களில், (இது) சாற்றும்=இதனை அதாவது பிரமத்தின்கண் சிதாபாசனுக்கு விஷயமாகாமையைச் சுருதி சொல்லும், கருத்தில் இது கிட்டும் என்பது=மனதால் இவ்வான்மா அடையத்தக்கது என்று சொல்லுவது, புத்தியால் காணலாகும்= விருத்தியால் விஷயமாதலைச் சொல்லும் எ—று.

"நிருவிகற்பமும் அனந்தமும் ஹேது திருஷ்டாந்தங்களற்றதும் அப்பிரமேயமும் அனாதியும் ஆகிய வஸ்துவையறிந்து வித்துவான் விடுபடுகின்றான்" என்னுமிம் மந்திரத்தில் அமிர்தபிந்து உபநிஷத்தால் அப்பிரமேய சத்தத்தால் பிரமத்தின்கண் பலவியாப்தியினின்மை கூறப்பட்டுளது. "மனதினாலேயே இது அடையத்தக்கது, ஈண்டு நாநாவானவை சிறிதுமில்லை" என்னும் கடவல்லியில் பிரமத்தின்கண் விருத்தி வியாப்பியத் தன்மை கேட்கப்பட்டுளது எ—று. ஆல்—அசை. 60

(அ—கை)

இந்தப் புருடன் தன்னையுணரின் என்னும் மந்திரத்தால் அபரோக்ஷ ஞானமும் சோக நிவர்த்தியும் ஆகிய இரண்டவஸ்தைகள் சீவனுக்குக் கூறப்படுகின்றதென்று கூறப்பட்டது. சுவ வடிவை யோரினெனும் 34-வது செய்யுளால், அதிலெவ்வளவு அம்ஸத்தால் அபரோக்ஷ ஞானம் சொல்லப்படுகிறது என்னுமாகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றார்.

இவன்மற்றுமெனத் தன்னையு ணர்ந்திடி னென்னும்வாக்
சிவந்தன்மேனியு ணர்ந்தெழு போதமே செப்பலாகுந் [காற்
தவநல்வாக்கியத் திங்குர மேவினுந் தான்மொய்ம்பாகா
சவணமாதிகள் சற்குருப் பின்னருஞ் சாற்றலாலே. 61

(ப—ரை) இவன் ஆம் என=இவ்வான்மாவே யானாகின்றேன் என்று, தன்னை உணர்ந்திடின் = ஆன்மாவையறியின், என்னும் வாக்கால் = என்னுமிவ் வசனத்தால், சிவம்தன்மேனி = சத்தியாதி வடிவ பிரம்மா பின்ன பிரத்தியக்கான்ம சொரூபத்தை, உணர்ந்து எழு போதமே=விஷயஞ்செய்து நான் பிரம்மமாயிருக்கின்றேனென்று

எழுகின்ற ஞானமே, செப்பலாகும்=சொல்லப்படும், [அப்படியானால் பூருவங் கூறிய ரீதியால் ஒருதடவை வாக்கியத்தின் விசாரத்தாலேயே அபரோக்ஷ ஞானம் சித்தித்தலால் "சிரவணுதிகளை ஆவிருத்தி செய்க, அநேகந்தடவையுபதேசித்தலால்" என்பது முதலிய இடங்களில் விதிக்கப்பட்ட சிரவணுதிகளின் ஆவிருத்தி அனுஷ்டிக்கத்தகாததாகும் என்னும் சங்கைக்கு ஞானந்திடமாதற்பொருட்டு அதனுவிருத்தியின் அனுஷ்டானம் ஆசாரியரால் கூறப்பட்டிருத்தலால் அனுஷ்டிக்கத் தக்கதேயாமெனக் கூறுகின்றார்] இங்கு=பிரமான்ம விஷயத்தில், தவநல்வாக்கியத்து=மேலாகிய நல்ல(ஒருதடவை கேட்ட விசாரசகித) மகா வாக்கியத்தினுல், உரம் மேவினும்=அபரோக்ஷ ஞானமுண்டாயினும், மொய்ம்பு ஆகா=திடமன்றாம், ஆகையால் சிரவணுதிகளின் ஆவிருத்தி செய்யத்தக்கது, சற்குரு = சங்கராசாரிய சுவாமிகள், பின்னரும்=வாக்கியார்த்த ஞானத்தின் உற்பத்தியின் அனந்தரமும், சவணமாதிகள் சாற்றலால் = சிரவணுதிகளின் ஆவிருத்தியைச் சொல்லுதலால், ஞான திடத்தன்மையின் பொருட்டு என்பது பொருளால் பெறப்படுகின்றது எ—று.

மற்று, தான், ஏ—அசைநிலைகள். 61

(அ—கை)

ஆசாரியர்களால் எவ்வாக்கியத்தாற் சிரவணுதிகளின் ஆவிருத்தி கூறப்பட்டது என்னுஞ் சங்கைக்கு அவ்வாக்கியத்தைப் படிக்கின்றார்.

பிரமநானெனுஞ் சொற்பொருட் போதம்பெ லக்குமட்டுஞ்
சிரவணுதிச மைமுத லண்மியே செய்தல்வேண்டுந்
திரமுருமையி னேதும றைபஃறி றத்தவாதல்
பரவத்தின்றெனும் பாவனை வேற்றுமைப் பாவமாமே. 62

(ப—ரை) நான் பிரமம் எனும் சொற்பொருள் போதம்=நான் பிரமமென்னும் வாக்கியார்த்த ஞானம், பெலக்கு மட்டும்=திடமாகும் பரியந்தமும், சமை முதலண்மியே=சமை முதலான சாதனங்களோடு கூடியே, சிரவணுதி செய்தல்வேண்டும்=சிரவணம் முதலியவைகளை அப்பியசிக்கவேண்டும், [அற்றேல் வாக்கியப் பிரமாணத்தாலுண்டாகிய ஞானத்திற்கு அதிடத் தன்மையெதனுலென்னும் சங்கைக்குக் கூறுகின்றார்] திரம் உருமையின்=ஞானம் திடமாகாமையில், மறைபல்

*திறத்த வாதல்* = சுருதிகளின் அனேகத்துவமும், பரவத்து இன்று எனும் பாவனை = அகண்டைகரச அத்துவிதியப் பிரமம் அலௌகிகத் தன்மையால் சம்பவியாது எனும் அசம்பாவனையும், வேற்றுமைப் பாவம் = கருத்திருத்துவாபிமான வடிவ விபரீத பாவனையும், ஏது ஆம் = காரணங்களாம் எ—று.

ஆகையால் அபரோக்ஷாநுபவ திடத்தின்பொருட்டு சிரவணாதி யின் ஆவிருத்தி செய்யத்தக்கதென்பது கருத்து.

ஏ—அசை. 62

(அ—கை)

ஞானத்தின் அதிடத் தன்மையில் இப்படி மூன்றுவிதமான காரணங்களைக்கூறி சுருதிகளின் நாநாத்துவத்தாலுண்டாகிய அதிடத் தன்மையின் நிவர்த்தியின்பொருட்டு சிரவணத்தின் ஆவிருத்தி செய்யத்தக்கதெனக் கூறுகின்றார்.

> சாகைகாமபே தங்கொடு கன்மம்வெவ் வேறுகண்டே
> மாகையாலிங்கு மவ்வகை யையுறல் கேள்வியாற்று
> யோகைவேதச் சிரங்கட் கடிநடு வோடந்தத்து
> மேகமெய்யறி விற்கருத் தென்மதி கேள்வியாமே. 63

(ப—ரை) சாகை காம பேதங்கொடு = சாகையின் பேதத்தாலும் இச்சையின் பேதத்தாலும், கன்மம் வெவ்வேறு கண்டேம் = கருமத்தை பின்ன பின்னமாகப் பார்த்தேம், அதாவது "இருக்கினால் ஹௌத்திரம் கருமம் செய்யப்படுகிறது, யஜுஷால் ஆத்துவர்யவம் கருமம் செய்யப் படுகின்றது, சாமத்தால் உத்கீதம்" என்பதும், "விருஷ்டியை யிச்சித் தவன் காரீரியால் யஜிக்கக்கடவன்." "ஆயுளை விரும்பினவன் நூறு குன்றுமணியளவுள்ள பொன்னை யஜிக்கக்கடவன்" என்பது முதலியனவும், ஆகிய கருமபேதம் எப்படிக் கேட்கப்படுகின்றதோ, அவ்வகை = அப்படி, இங்கும் = எல்லா உபநிடதங்களிலும், ஐயுறல் = (பிரதிபாதிக்கத்தகுந்த தத்துவம் பின்னமாமென்று) சமுசயம் செய்யற்க, ஆகையால் = அப்பேத சங்கையின் நிவிர்த்திக்காக, கேள்வி ஆற்றுய் = சிரவணத்தை மீண்டும் மீண்டும் செய்யவேண்டும், [சிரவணம் என்பது என்ன என்னும் ஆகாங்க்ஷையுண்டாக அதனிலக்கணங் கூறுகின்றார்] ஓகை வேதச்சிரங்கட்கு = சத்தவடிவ

மாகிய வேதாந்தங்கட்கு, அடி நடுவோடு அந்தத்தும் = ஆதிமத்தியாவசானத்திலும், ஏகமெய் அறிவில்=அத்துவீதியப் பிரமான்மாவில், கருத்து என்மதி = தாற்பரியமாமென்னும் நிச்சயம், கேள்வியாம் = சிரவணமாம் எ—று.

சகல உபநிடதங்களுக்கும் உபக்கிரம உபசங்காராதி லிங்கங்களால் பரியாலோசனை செய்யும்போது பிரம்ம வடிவ பிரத்தியக்கான்மாவிலேயே பாரம் பரியத்தால் பரியவசானமாமென்னும் நிச்சயம் சிரவணமாம் என்பது பொருள்.

ஓசையென்பது ஓகையென்று எதுகை நோக்கித் திரிந்தது.

சாகை பேதமாவது:— இருக்கு வேதத்திற்கு 21 சாகையும் யஜுர் வேதத்திற்கு 109 சாகையும், சாம வேதத்திற்கு 1000 சாகையும், அதர்வண வேதத்திற்கு 50 சாகையும் உண்டு. எப்படி விருக்ஷத்திற்கு அதிபதியானவன் தனது புத்திரர்களுக்கு விருக்ஷத்தின் சாகைகளை விபாகஞ்செய்து விடுகிருனே, அதுபோல மந்தபுத்தியுடைய புருஷர்களைப் பார்த்து வியாச பகவான் ஒரு வேதத்தினை இருக்கு, யஜுஸ், சாமம், அதர்வணம் என்னும் பேதத்தால் நால்வகையாகச் செய்தனர். அவற்றிற்குச் சாகையினைக் கற்பித்து அச்சாகையினை அபிமானிக்கும் பிராஹ்மணர்களுக்குக் கர்மத்தின் பேதமும் நிர்ணயஞ் செய்திருக்கின்றனர். அதனுல் "இந்த இருக்குவேதி இன்ன சாகையுடைய பிராமணன்" என்றல் முதலிய வியவகாரமுண்டாகின்றது. அவ்வொவ்வொரு சாகைக்கும் ஒவ்வொரு உபநிஷத்துண்டு. இது முக்திகோப நிஷத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. வெகுவாய்ச் சாகைகளுக்கும் உபநிஷத்துக்களுக்கும் சமானப் பெயருண்டு. எல்லாஞ் சேர்ந்து 1180 சாகைகளும் உபநிஷத்துக்களுமாம். அவற்றுள், எண்ணூற்று நாற்பது உபநிஷத்துக்கள் கருமத்தைப் போதிப்பனவாயிருத்தலால் கரும காண்டமெனப்படும். 232 உபநிஷத்துக்கள் தியேயப்பிரமத்தையறிவிப்பனவாயிருத்தலால் உபாசனு காண்டமெனப்படும். 108 உபநிஷத்துக்கள் ஞேயப்பிரமத்தை பிரதிபாதித்தலால் வேதாந்தமென்றும், ஞான காண்டமென்றும் சொல்லப்படும். அந்நூற்றெட்டில் ஈசம் கேனம் கடம் பிரசினம் முண்டகம் மாண்டூக்யம் தைத்திரீயம் ஐதரேயம் சாந்தோக்யம் பிரகதாரண்யகம் என்னுமிப் பத்து உபநிடதங்களும் முக்கியமாம். எவ்வளவு சாகைகளுண்டோ அவ்வளவு உபநிஷத்துக்கள் உண்டு. இவ்வாறு சாகைகளின் பேதமிருக்கின்றது. அதனுல் கருமத்திற்கும் பேதமுண்டு.

இருக்கு வேதமுணர்ந்தவன் ஹோதாவெனப்படுவன். அவனது கருமம் ஹோத்திரமாம். யஜுர் வேதம் படித்தவன் அத்வர்யு. அவனது கருமம் ஆத்வர்யவம் எனப்படும். சாமவேதம் படித்தவன் சாமகாயகன். அவனது கருமம் உற்கீதமாம்.

காமபேதத்தால் கர்ம (யஞ்ஞ) பேதமாவது விருஷ்டியை விரும்பியவனுக்குக் காரீரியாகமும், ஆயுளை விரும்பியவனுக்கு சத கிருஷ்ணலமென்னும் யாகமும் கேட்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறு உபநிஷத்துக்களிலும் பிரதிபாதிக்கத்தக்க தத்துவமாகிய பிரமாத்மாவின் பேதத்தின் சங்கையுண்டாக அச்சங்கையை நிவிர்த்தித்தற் பொருட்டு அடிக்கடி சிரவணஞ் செய்யவேண்டுமென்பது பொருள்.

அச்சிரவணம் அங்கி சிரவணமெனவும் அங்க சிரவணமெனவும் இருவகைத்து. தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தினைக் கேட்டல் அங்கி சிரவணமாம். நேரே பிரம்ம சாக்ஷாற்காரத்திற்கு ஏதுவாதலின், ஷட்வித லிங்கங்களால் வேதாந்த வாக்கியங்களின் தாற்பரிய நிச்சயம் அங்க சிரவணமாம். பிரமாணகத அசம்பாவனை நிவர்த்தி வாயிலாக பிரம்ம சாக்ஷாத்காரத்தின் திடத்தன்மைக்கு ஏதுவாதலின்.

ஷட்வித லிங்கங்களாவன:— உபக்கிரமம், உபசம்மாரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அருத்தவாதம், உபபத்தி என்பனவாம். எப்படி அக்கினியின் ஞானம் தூமத்தால் உண்டாகுதலால் தூமம் அக்கினிக்கு லிங்கமெனப்படுகின்றதோ அப்படி வைதீக வாக்கியங்களின் தாற்பரிய ஞானம் உபக்கிரமம் முதலியவற்றால் உண்டாவதால் அவை தாற்பரியத்தின் லிங்கங்களாம்.

இனி முறையே அவ்வறுவகையிலிங்கங்களின் இலக்கணமும் உதாரணமும் கூறுதும்,

பிரகணத்திற் பிரதிபாதிக்கப்படும் அத்துவீதியப் பிரம்ம வஸ்துவை அப்பிரகரணத்தின் முதலிலும் கடையிலுங் கூறுதல் உபக்கிரம உபசம்மாரமாம். ஆண்டு முதலிற் கூறுதல் உபக்கிரமும் ஈற்றிற் கூறுதல் உபசம்மாரமுமாம். எங்ஙனமெனின் சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆருவது அத்தியாயத்தின் முதலில் உத்தாலக முனிவராற் சுவேதகேதுவென்னும் புத்திரனுக்கு "சுவேதகேதுவே! இந்தத் திருசியமான சருவ ஜகத்தும் தனது உற்பத்திக்கு முன் சத்துவடிவ பிரம்மமாகவேயிருந்தது. அச்சத்வஸ்து ஏக அத்

துவிதீய வடிவமாம்." அதாவது சஜாதீய விஜாதீய சுவகதபேதரகிதமாம் என்னும் வசனத்தைக் கூறினர். இங்ஙனம் அவ்ஆருவது அத்தியாயத்தின் முதலில் அத்துவிதீய வஸ்துவைப் பிரதிபாதித்தல் எதுவோ அது உபக்கிரமமெனப்படும். "இத்திருசியமான சருவ சகத்தும் அத்துவீதியப் பிரம்ம வடிவமே" என இங்ஙனம் அவ்ஆருவது அத்தியாயத்தின் ஈற்றில் அத்துவீதியப் பிரம்மத்தைப் பிரதிபாதித்தல் உபசங்காரமெனப்படும். இவ்வுபக்கிரம உபசங்காரமாகிய இரண்டினையுஞ் சேர்த்து ஒரு லிங்கமாகக் கூறலாயிற்று.

பிரகரணத்தின் முதலிலுங் கடையிலும் பிரதிபாதிக்கும் வஸ்துவை அதனிடையில் மீண்டும் மீண்டும் பிரதிபாதித்தல் அப்பியாசமாம். எங்ஙனமெனின் அவ்ஆருவது அத்தியாயத்தின் கண்ணே "சுவேதகேதுவே அது நீயாயிருக்கின்ருய்" என்னும் வாக்கியத்தை ஒன்பது தடவை படித்தலால் அவ்வத்துவிதீய சத் வஸ்துவே மீண்டும் மீண்டும் பிரதிபாதிக்கப்பட்டுளது.

பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்படும் வஸ்து சுருதிப் பிரமாணத்தைவிட வேருன பிரத்தியக்ஷம் முதலான பிரமாணங்கட்கு விஷயப் படாமை அபூர்வதையாம். அவ்வத்துவிதீய வஸ்துவின் அபூர்வதை அவ்ஆருவது அத்தியாயத்தின்கண் "சௌம்மியனே மிக்வும் நுண்ணியனை யாதொரு இவனை வேறு பிரமாணத்தால் அறியலாகாதோ" என்பது முதலிய வசனத்தால் பிரதிபாதிக்கப்பட்டுளது.

பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட அத்துவிதீய வஸ்துவின் ஞானத்தால் அவ்வஸ்துவின் பிராப்தியாகிய பயன் பலமெனப்படும். எங்ஙனமெனின் அவ்வாருவது அத்தியாயத்தின்கண் "ஆசாரியனையுடைய புருஷன் அறிகின்ருன். அவனுக்கு எவ்வளவு காலம்வரை பிராரத்த கருமம் உளதாமோ அவ்வளவு காலம் முத்தியின் அடைவில் தாமதமாம். பிராரத்த கருமம் போகத்தால் நாசமாகும்போது நித்திய நிரதிசயானந்த வடிவமோக்ஷப் பிராப்தியாம்" என்னுமிச்சுருதி அத்துவிதீயப் பிரம ஞானத்தால் அவ்வத்துவிதீயப் பிரம்மப் பிராப்தியாகிய பயனைக் கூறியுளது. இஃது பலமெனப்படும்.

பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட அத்துவிதீய வஸ்துவின் துதியாகிய பிரசம்ஸை அர்த்தவாதமெனப்படும். எங்ஙனமெனின் அவ்வாருவது அத்தியாயத்தின்கண் "சுவேதகேதுவே எவ்வஸ்துவைக் கேட்டலால் கேட்கப்படாத வஸ்துவும் கேட்கப்பட்டதாகின்றதோ

எவ்வஸ்துவை மனனஞ் செய்தலால் மனனஞ் செய்யப்படாத வஸ்துவும் மனனஞ் செய்யப்பட்டதாகின்றதோ எவ்வஸ்துவையறிதலால் அறியப்படாத வஸ்துவும் அறியப்பட்டதாகின்றதோ அந்த வஸ்துவை உனது குருவினிடத்து வினவினையா" என்னும் வசனத்தால் அவ்வத்துவிதீயப் பிரம்ம வஸ்து துதிக்கப்பட்டிருக்கின்றது. இஃது அர்த்தவாதமெனப்படும்.

பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்படும் வஸ்துவைப் பல திருஷ்டாந்தங்களால் உதாகரித்தல் உபபத்தி எனப்படும். எங்ஙனமெனின் அவ்வாறுவது அத்தியாயத்தின்கண் மண் பொன் முதலிய உதாரணங்களால் காரணத்திற்கு வேருகக் காரியமுண்டென்பது நிஷேதிக்கப்பட்டு அத்துவிதீயப் பிரம்ம வஸ்து பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இஃது உபபத்தியெனப்படும்.

இவ்வாறு கூறிய ஆறு இலிங்கங்களால் சருவ வேதாந்த வாக்கியங்கட்கு அத்துவிதீயப் பிரமத்தின்கண்ணே தாற்பரியம் நிச்சயிக்கப்படுகின்றது.

63

(அ—கை)

இப்படிப்பட்ட சிரவணமெங்கே நிரூபிக்கப்பட்டது எனிற் கூறுகின்ருர்.

சமன்வயாத்தியா யத்திது சொன்னதாஞ் சாற்றிரண்டில்
அமலமாக்குந்த ருக்கமெய்ப் பாவனை யார்த்ததாமாற்
றமயப்பறப வப்பழக் கத்துட ருன்மெய்ஞ்ஞாலஞ்
சுமவடிக்கடி யென்றிடு புத்தியுந் தோன்றுமீட்டே. 64

(ப—ரை) சமன்வய அத்தியாயத்து = பிரம சூத்திரத்தின்சமன்வயமெனப்பெயரிய முதலாவது அத்தியாயத்தில், இது = இந்த சிரவணம், சொன்னது = (வியாசர் முதலானவர்களால் நன்கு) சொல்லப்பட்டுளது, [அருத்தத்தின் அசம்பாவனையின் நிவிர்த்திஹேதுவான மனனமோ இரண்டாவதத்தியாயத்தில் நிரூபிக்கப்பட்டதெனக் கூறுகின்ருர்] சாற்று இரண்டில் = சொல்லாநின்ற இரண்டாவது அத்தியாயத்தில், அமலம் ஆக்கும் தர்க்கம் = (பிரமேயத்தின்கண்ணுள்ள சந்தேகத்தை நிவிர்த்திக்கும் வாயிலாக புத்தியை)

ஸொஸ்தம் (தூய்மை) ஆக்கும் யுத்தி சத்த வாச்சிய தருக்கங்களால், மெய்ப்பாவனை = பொருளின் சம்பாவிதத்துவ அனுசந்தான வடிவ மனனம், ஆர்த்தது = நிருபிக்கப்பட்டுள்ளது, [இப்போது விபரீத பாவனையையும் அதன் நிவிர்த்தியுபாயத்தையும் தெரிவிக்கின்றார்] தமமய பற்பவப் பழக்கத்து = அஞ்ஞானத்தோடு கூடிய அநேக சன்மங் களின் திடஅப்பியாசத்தால், உடல்தான் என்றிடு புத்தியும் = தேகம் தானென்கின்ற ஞானமும், ஞாலம்மெய்யென்றிடு புத்தியும் = பிரபஞ்சம் சத்தியமென்கின்ற ஞானமும், சும அடிக்கடி மீட்டு தோன்றும் = மிகவும் மீண்டும் மீண்டும் திரும்பவும் க்ஷணத்தில் உண்டாகும் எ—று.

ஆல், ஏ—அசை.

என்றிடு புத்தியும் என்பது முன்னுங் கூட்டப்பட்டது. 64

(இதுவுமது)

இனையதேவிப ரீதமே காக்கிரத் தீதுமாளும்
அனையதுண்மையின் றீக்கைமுன் ஞர்வழி பாட்டினலாம்
புனையுபாசனை யிங்குமெய்ந் நூலினும் போந்ததாகும்
முனையனர்க்குப்பின் மெய்ப்பழக் கத்தினன் முற்றுமன்றே.
65

(ப—ரை) இனையதே விபரீதம் = மேற்கூறிய புத்தியே விபரீத பாவனையாம், ஈது = இந்த விபரீத பாவனை, ஏகாக்கிரத்து மாளும் = சித் தத்தினேகாக்கிரத்தால் நிவிர்த்தியாகும், [விபரீத பாவனையை நிவிர்த் திக்கும் ஏகாக்கிரத்தன்மையெதனலுண்டாகுமென்றுசங்கித்துக் கூறுகின்றார்] அனையது = அவ்வேகாக்கிரம், உண்மையின் தீக்கை முன் = பிரம்மோபதேசத்திற்குப் பூருவம், ஆர்வழிபாட்டினல் ஆம் = பொருந்தாநின்ற சகுணப் பிரமத்தின் உபாசனையாலுண்டாம், [அற் றேலிது எதனலறியப்பட்டது என்று சங்கித்து உபாசனையின் விசாரம் வேதாந்த சாஸ்திரத்திற் செய்யப்பட்டிருத்தலால் எனக் கூறுகின்றார்] புனை உபாசனை = சிறந்த உபாசனைகள், இங்கு மெய்நூலினும் = ஈண்டு பிரம்மசாஸ்திரத்திலும், போந்ததாகும் = சிந்திக்கப்பட்டுள்ளன. [அகிருதோபாசகனுக்கு எதனல் அவ்வேகாக்கிரம் உண்டாமெனிற் கூறுகின்றார்] முனை அனர்க்கு = முன்பு அப்பியாசஞ்செய்யாதவருக்கு, பின் = பின்பு, மெய்ப்பழக்கத்தினல் முற்றும் = பிரம்மாப்பியாசத்தால் அவ்ஏகாக்கிரம் உண்டாகும் எ—று.

அன்று, ஏ—அசை.

ஆர்த்தல் = அப்பியாசித்தல், அனார்த்தல் = அப்பியாசஞ் செய்யாமை. 65

(அ—கை)

பிரமாப்பியாசமுமெப்படிப்பட்டதென்று ஆகாங்கைஷயுண்டாகக் கூறுகின்றார்.

அதனை நாடலு மோதலுந் தம்மிற்று மாய்தருனு
மிதனிலேயொரு மித்தலு மெய்ப்பயில் வென்பர்மேலோர்
அதனைத்தீரன் பிராமணன் கண்டறி வாக்கல்வேண்டு
மிதரச்சொற்களை யெண்ணொ வாக்குக்கி ளைப்பதன்றே.66

(ப—ரை) அதனை நாடலும் = பிரமத்தைச் சிந்தித்தலும், ஓதலும் = பிரமத்தை சிஷ்யருக்கு உபதேசித்தலும், தம்மிற்றும் ஆய்தலும் = சமானமானவர்கள் பிரமத்தைப் பரஸ்பரம் ஆராய்ச்சி செய்தலும், இதனிலே ஒருமித்தலும் = பிரமத்திலே ஐக்கியமாதலும், மெய்ப்பயில்வு என்பர் மேலோர் = பிரமாப்பியாசமென்று சொல்லுவர் பெரியோர், [இதனிலே ஒருமித்தலென்பதை வெளிப்படையாக்குவதற்காக சுருதியைக் கூறுகின்றார்] தீரன் = பிரம்மசரியாதி சாதன சம்பன்னனும், பிராமணன் = பிரமமாக விச்சிக்கும் முமுக்ஷுவும் ஆகிய புருஷன், அதனை = பிரத்தியக்குவடிவ பரமான்மாவினை, கண்டு = சமுசயாதிகளுண்டாகாவண்ணமறிந்து, அறிவு = பிரம்மான்மைக்கிய ஞான சந்ததிவடிவ ஏகாக்கிரத்தை, ஆக்கல் வேண்டும் = சம்பாதிக்க வேண்டும், இதர சொற்களை = அனான்ம கோசரங்களான அதிக சப்தங்களை, எண் ஒணு = மனதால் தியானிக்கலாகாது, எண், வசனத்திற்கும் உபலக்ஷணமாம், வாக்கால் வசனிக்கவுங் கூடாது, இவ்வாறு அர்த்தங்கொள்ளாக்கால் சத்தங்களின் தியானத்தால் வாக்கிற்கிளைப்புப் பொருந்தாதாதலின், [ஏன் தியானிக்கலாகாதெனிற் கூறுகின்றார்] அது = அதிக சத்தங்களை வசனித்தலும் தியானித்தலும், வாக்குக்கு இளைப்பு அன்றே = வாக்கிற்கும் மனதிற்கும் சிரம காரணமல்லவா எ—று.

வசனித்தல் சிந்தித்தலுக்கும், வாக்கு மனதிற்கும் உபலக்ஷணமாம்.

அபிப்பிராயமிதுவாம்:— அநான்ம கோசரமான இதர சத்தங்களை அநுசந்தானஞ்செய்தலில் மனதிற்கு சிரமமுண்டாகிறது. அவற்றை வசனித்தலில் வாக்குக்கு சிரமமுண்டாகிறது.

தான்—அசை. 66

(அ—கை)

இங்ஙனம் ஏகாக்கிரத்தைப் பிரதிபாதிக்கின்ற சுருதியைக் கூறி ஸ்மிருதியையுங் கூறுகின்றார்.

அயலற் றென்றனைச் சிந்தித்து பாசிப்ப ராரவர்க்கே
நியத மியோகமுஞ் சேமமு நானன்னி ருவகிக்கே
னியலும் வேதமி ருதியு மேவிப ரீதமேகச்
சுயசொ ரூபத் தொருப்படற் பாற்றெனச் சொல்லு
[மென்றும். 67

(ப—ரை) ஆர் = எந்த ஜனங்கள், அயலற்று = (நான் பிரமமாகின்றேனென்னும் ஞானத்தால்) எனத பின்னமாயிருப்பவராய், என்றனைச் சிந்தித்து=அப்படியே யென்னை நினைத்து, உபாசிப்பர்= உபாசிக்கின்றார்களோ அதாவது (எவ்விடங்களிலும் எல்லாக் காலங் களிலும்) எனது வடிவமாகவேயிருக்கின்றனரோ, நியதம் அவர்க்கு= எப்போதுமென்னிடத்திற் சித்தமுள்ள அவருக்கு, நான் = அவரது ஆன்மாவாக அநுசந்திக்கப்படுகிற யான், யோகமும்=யோகத்தையும், சேமமும்= க்ஷேமத்தையும், நல்நிருவகிக்கேன் = நன்கு சம்பாதனஞ் செய்வேன், யோகம் = அடையப்படாத வஸ்துவையடைவித்தல், க்ஷேமம்=அடையப்பட்ட வஸ்துவை இரக்ஷித்தல் [உதாகரிக்கப்பட்ட சுருதி ஸ்மிருதிகளின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்] இயலும் வேத மிருதியும் = தகுதியாகிய இந்தச் சு ரு தி யு ம் ஸ்மிருதியும், விபரீதம் ஏக=விபரீத பாவனை நிவிர்த்தியாகும் பொருட்டு, சுய சொரூபத்து= தனதான்மாவில், எ ன் று ம் , ஒருப்படற்பாற்று என = எப்போதும் ஏகாக்கிரத் தன்மையாயிருக்க வேண்டுமென்று, சொல்லும் = பிரதி பாதிக்கும் எ—று. 67

ஏ—அசை.

(அ—கை)

அற்றேல் தேகாதியிலான்மத்துவ புத்தியும் சகத்திற் சத்தியத் துவ புத்தியும் எக்காரணத்தால் விபரீத பாவனையாம் என்று சங்கித்து

அதன் லக்ஷணம் பொருந்துவதால் எனத் தெரிவிப்பதற்காக அதன் லக்ஷணத்தைக் கூறுகின்றார்.

யாதெவா றுறு மன்னத னுண்மைய கற்றிமாறு
போதமாம்விப ரீதந்தெவ் வையனிற் புத்திபோலத்
தீதிருனுட லாதியின் வேறிச்செ கம்பொயாகும்
பேதபாவனை மாறுறக் காண்பதிப் பெற்றிவிட்டே. 68

(ப—ரை) யாது = எந்தச் சுத்தியாதி, எவாறு உறும் = எந்த சுத்தியாதி ரூபத்தாலிருக்குமோ, அன்னதன் உண்மை அகற்றி = அந்தச்சுத்தியாதியினது சுத்தியாதி ரூபத்துவத்தைப் பரித்தியாகஞ் செய்து, மாறுபோதம் விபரீதமாம் = சுத்தியாதி ரூபத்துவத்தைப் பரித்தியாகஞ் செய்து, மாறுபோதம் விபரீதமாம் = சுத்தியாதிக்கு மாறான இரஜதாதி ரூபத்துவ புத்தி விபரீத பாவனையாம், தனதபாவாதி கரணத்தில் தனது புத்தியென்பது பொருள், [அவ்விபரீத பாவனையை உதாரணத்தால் கூறுகின்றார்] ஐயனில் தெவ்புத்திபோல = பிதாவினிடத்தில் பகைவன் என்னும் ஞானம் போன்று, [கூறிய லக்ஷணத்தைப் பிரகிருதத்தில் பொருத்துகின்றார்] தீது இல்தான் = குற்றமற்ற ஆன்மா, உடலாதியின் வேறு = வாஸ்தவமாக தேகாதியினின்றும் பின்னமாம், இச்செகம் பொய் ஆகும் = இந்த உலகமும் மித்தையாம், இங்ஙனமாயினும், இப்பெற்றி விட்டு = இந்தத் தன்மையைப் பரித்தியாகஞ்செய்து, மாறு உறக்காண்பது = மாறாகப்பார்ப்பது அதாவது ஆன்மாவிலும் சகத்திலும் முறையே தேகாதி ரூபத்துவ புத்தியும் சத்தியத்துவ புத்தியும், பேதபாவனை = விபரீதபாவனையாம் எ—று. ஏ—அசை. 68

(அ—கை)

முன்பு ஏகாக்கிரத்தால் அவ்விபரீத பாவனை நிவர்த்தியாகுமென்று சாமான்னிய ரூபத்தால் கூறிய பொருளை விசேஷ ரூபத்தாற் கூறுகின்றார்.

மெய்ம்மை நாட்டத்தி றுமிது வாகலின் மெய்மெய்வேறும்
பொய்ம்மை யாஞ்செக மென்றுநி ரந்தரம் புந்திசெய்க
மெய்ம்மை மந்திர பாவனை போலத்தான் வேறுஞாலம்
பொய்ம்மை யென்றெணும் போதநி யதம்பொ ருந்துமற்றே. 69

(ப—ரை) இது = (தேகாதி ஆன்மத்துவ, சகத் சத்தியத்துவ புத்தி வடிவ) இந்த விபரீத பாவனையானது, மெய்ம்மை நாட்டத்து = (ஆன்மா தேகாதியினின்றும் வேறு சகத்து மித்தை என்று நிரந்தரம் செய்கின்ற) தத்துவ பாவனையால், இறும் = நாசமாகும், ஆகலின் = இக் காரணத்தால், மெய் = பிரத்தியக்கான்மா, மெய் வேறும் = தேகாதி யினின்றும் பின்னமாம், செகம் பொய்மையாம் = தேகம் முதலிய சகத்து மித்தையாம், என்று நிரந்தரம் புந்தி செய்க = என்று இந்தப் பிரகாரம் எப்போதும் பாவனை செய்க, [அப்பாவனையின் கண் ஜபாதி களிற் போன்று நியமத்தினபேக்ஷையுண்டா இல்லையா என்று வினவுகின்றான்] மெய்மை பாவனை மந்திர பாவனை போல = மூர்த்தித் தியானம் போலவும் மந்திர ஜெபம் போலவும், தான் வேறு என்று எணும் போதம் = ஆன்மா தேகாதிகளினின்றும் பின்னமாமென்று கருதாநின்ற ஞானமும், ஞாலம் பொய்ம்மை என்று எணும் போதம் = பிரபஞ்சம் மித்தையென்று பாவிக்கின்ற ஞானமும், நியதம் பொருந்துமோ = நியமமாக அநுஷ்டிக்கத்தக்கதா, மற்றோ = நியமமின்றியதா? அதாவது இலௌகிக வியவகாரம்போன்று நியமமின்றியும் அநுஷ்டிக்க லாமா எ—று.

ஓகாரம் முன்புங் கூட்டப்பட்டது. 69

(அ—கை)

தத்துவ பாவனை வடிவ நிதித்தியாசனம் திருஷ்டபலனையுடைய தானதால் ஈண்டு யாதொரு நியமமும் இன்றாமெனக் கூறுகின்றார்.

மற்ற தென்றுணர்தி திட்ட வத்துவத
னலருந்த னிகர் மாயவூண்
பற்று ளான்செப மியற்று வானை நிகர்
பருகிலா னெதுவு நியதமாய்ப்
பெற்ற தேலுணுவ னுணிலன் மற்றவழி
பேணுமா றலது நுகருவா
னுற்ற வெந்தவகை யாலுமே பசி
யொருங்க மிக்கு விழைவானரோ. 70

(ப—ரை) திட்டவத்துவதனால் = பிரத்தியக்ஷப் பயனையுடைய தால், மற்றது என்று உணர்தி = நியமமின்றியும் அநுஷ்டிக்கலாம்

என்றறிவாய், [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] அருந்தல் நிகர் = சாப்பிடுதலுக்குச் சமானமாக, [பிரத்தியக்ஷப் பயனையுடைய போசனத்தின்கண்ணும் நியமங்கள் சுருதி ஸ்மிருதிகளில் அறியப் படுகின்றன என்று சங்கித்துக் கூறுகின்றார்] மாய ஊண் பற்றுளான் = பசியை நிவர்த்திக்கும் பொருட்டு போசனத்தில் ஆசையுள்ளவன், புபுக்ஷு என்றபடி, செபம் இயற்றுவானை நிகர் = செபம் செய்பவனைப் போன்று, நியதமாய் எதுவும் பருகிலான் = நியமமாக யாதொன்றையும் புசியான், மற்று பசி பீடையின் சாந்தியெவ்வண்ணமாமோ அவ்வண்ணம் புசிப்பன், [இதனையே விஸ்தரிக்கின்றார்] பெற்றதேல் உணுவன் = அன்னம் கிடைக்கின் புசிப்பன், அலது உணிலன் = அன்னம் கிடைக்காவிடின் (பசி பீடையை மறக்கச்செய்யும் சூதாட்டம் முதலிய வியாபாரத்தால்) புசியாதவனாய் காலங்கழிப்பன், மற்ற வழி = அன்னியப் பிரகாரத்தால், அதாவது நின்றுகொண்டும் நடந்து கொண்டும் படுத்துக்கொண்டும், பேணுமாறு = தனது இச்சைப்படி, நுகருவான் = புசிப்பான், எந்த வகையாலுமே = எந்தப்பிரகாரத்தாலும், உற்ற பசி ஒருங்க = பொருந்திய தற்காலத்திலுள்ள பசிபீடை நிவர்த்தி யாகும்பொருட்டு, மிக்கு விழைவான் = மிகவும் இச்சிப்பன் எ—று.

அபிப்பிராயமிதுவாம்:— க்ஷுத்பாதை நிவர்த்தி வடிவ திருஷ்டப் பிரயோசனத்தின் பொருட்டு புசித்தல் செய்யத்தக்கது. நியமங்களோ பரலோகத்திற்கு ஏதுக்களாமென்பது பொருள்.

அரோ—முன்னிலை அசை. 70

(அ—கை)

ஜபம் முதலியவற்றில் போசனத்தினின்றும் வேற்றுமையைத் தெரிவிக்கின்றார்.

நியம மாச்செப மியற்றல் வேண்டுமில
தேன்மி குந்தமற நேர்தலாற்
செயினொ ழிந்தவழி யாம னத்தமிசை
செப்பு வன்னமுர ணுதலினுற்
றுயர்செ யும்பசியின் வேறு பாவனை
தொலைக்க வேண்டுமெவி தத்துமே
நயம தாகுமிவ ணுறுப யிற்சிமிசை
நண்ணு ருதுமுறை சிறிதுமே. 71

(ப—ரை) நியமமாச்செபம் இயற்றல் வேண்டும்=நியமமாகச் செபத்தைச் செய்யவேண்டும், [அதிலேதுவைக் கூறுகின்றார்] இலதேல் = நியமமாகச் செபம் செய்யாவிடின், மிகுந்தமறம் நேர்தலால்=மிகுந்த பாவமுண்டாவதால், [இங்ஙனம் ஜபம் செய்யாவிடின் பிரத்தியவாயம் உண்டாகுக. வேறு விதமாகச் செய்யில் அஃதின்றுமென்று சங்கித்துக் கூறுகின்றார்] ஒழிந்த வழி செயின் = சாஸ்திர மொழிந்த மார்க்கத்தாற் செய்யின், அனர்த்தமாம்=கெடுதியுண்டாம், செப்பு இசைவன்னம் முரணுதலினால் = சொல்லாநின்ற சுரம் அக்ஷரம் ஆகிய இவைகளின் விபர்யயத்தால், "சுரத்தாலும் வர்ணத்தாலும் குறைவையடைந்ததும் மித்தையாகப் பிரயோகிக்கப் பட்டதும் ஆகிய மந்திரம் அப்பொருளைக் கூறுகின்றதில்லை. அது வாக்குவச்சிரமாயிருந்துகொண்டுயஜமானனைத் துன்பஞ்செய்கின்றது. எப்படி இந்திரசத்துரு என்னும் மந்திரம் சுரத்தின் அபராதத்தால்" என்று சொல்லப்பட்டபடியாலென்பது கருத்து, [அற்றேல் பசியானது பிரத்தியக்ஷ துன்பத்திற்கேதுவாதலால் அதன் நிவிர்த்தியின் பொருட்டு நியமமின்றியும் புசிக்கத் தக்கதுதான், விபரீத பாவனையப்படிப் பிரத்தியக்ஷத் துன்பத்திற்கு ஏதுவாக இல்லாமையால் அதனை நிவிர்த்திக்கும் தியானம் அதிருஷ்ட பலத்தின் பொருட்டு நியமமாக அநுஷ்டிக்கத்தக்கதென்று சங்கித்துக் கூறுகின்றார்] பசியின்=பசியைப் போன்று, வேறு பாவனை=விபரீத பாவனையும், துயர் செயும்=திருஷ்ட துக்கத்தைச் செய்யும், (ஆதலின் அதனை) எவிதத்தும் தொலைக்க வேண்டும்=எந்த உபாயத்தினாலும் செயிக்கவேண்டும், இவண் உறு நயமதாகு பயிற்சிமிசை = ஈண்டு பொருந்தாநின்ற சிறந்த அநுஷ்டானத்தில், முறை சிறிதும் நண்ணுறாது = கிரமம் கொஞ்சமும் பொருந்தாது எ—று.

விபரீத பாவனைக்கு துக்க ஹேதுத்தன்மையனுபவசித்தமாதலால் என்பது கருத்து.

ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். 71

(அ—கை)

அப்படியானால் விபரீத பாவனையை நிவர்த்திக்கும் உபாயம் தெரிவிக்கத்தக்கதென்று ஆசங்கித்து அஃது முன்பே தெரிவிக்கப் பட்டுளது எனக் கூறுகின்றார்.

அதனை நாடலெழு வாயு பாயமிது
வாங்கு முன்னமுரை செய்ததா
லிதனி லொன்றுபடு தலிறி யானநிக
ரில்லை யாகும்வலுக் கட்டதே
மதியின் விக்கிரக வுணர்வு நீங்கலற
மற்று ணர்ச்சிமரு வாமையே
முதிர்தி யானமிதை யலைசெய் நெஞ்சணுகின்
மொய்த்த ப்ந்தவலு வாகுமே. 72

(ப—ரை) அதனை நாடல் எழுவாய் உபாயம் இது = பிரமத்தைச் சிந்தித்தல் முதலிய இவ்வுபாயம், முன்னம் உரை செய்தது = முன்பு கூறப்பட்டுளது, [அற்றேல் செபம் போல கிழக்கு முகமாய் இருத்தல் முதலிய நியமமின்ருகுக, தியானத்திற்போன்று பிரமத்தில் ஒன்றுபடுதல் வடிவ ஏகாக்கிரத்தன்மையில் நிர்ப்பந்தமிருக்கிற தென்ருசங்கித்துக் கூறுகின்ருர்] இதனில் ஒன்றுபடுதலில் = பிரமத்தில் ஏகாக்கிரமாயிருத்தலில், தியான நிகர் = தியானத்திற்குச் சமானமாக, வலுக்கட்டதுஇல்லையாகும் = நிர்ப்பந்தமின்ரும், [அற்றேல் தியானம் தியேயசிந்தைமாத்திரவடிவமாதலால் அதிலென்ன நிர்ப்பந்தமென்ருசங்கித்து தியானத்தில் நிர்ப்பந்தத்தைத் தெரிவிப்பதற்காக தியானத்தின் சொரூபத்தை முதலிற் கூறுகின்ருர்] மதியின் விக்கிரக உணர்வு நீங்கலற = புத்தியின் சம்பந்த தேவாதிமூர்த்தி கோசரவிருத்திகளுக்கு விச்சின்னமின்றியிருக்குந்தன்மையும், மற்று உணர்ச்சி மருவாமையே = விசாதீய விருத்திகளால் வியவஹிதமின்றி இருத்தலும் முதிர் தியானம் = மேன்மையாகிய தியானமென்று சொல்லப்படும் [இவ்வண்ணம் தியானத்தின் சொரூபத்தை நிரூபித்து அதில் நிர்ப்பந்தத்தைத் தெரிவிக்கின்ருர்] இதை அணுகின் = இந்தத் தியானத்தைப் பொருந்துவதில், அலைசெய்நெஞ்சு = சஞ்சலமுள்ள மனதிற்கு, மொய்த்த பந்த வலுவாகும் = மிகவும் அதிநிர்ப்பந்தமாம் எ—று.

எப்போதும் திரிதல் சுபாவமுள்ள யானை, குதிரை முதலியவைகளுக்கு ஓரிடத்தில் ஸ்தம்பாதியில் எப்படி நிரோதமாகிறதோ அதுபோல் சஞ்சலமுள்ள மனதிற்கும் தியானத்தில் நிரோதமுண்டாகின்றது என்பது கருத்து.

ஆங்கு, ஆல், ஏ—அசைநிலைகள். 72

(அ—கை)

மனதின் சஞ்சலத்தன்மை முதலியவற்றில் கீதா வாக்கியத்தைப் பிரமாணமாக்குகின்ருர்.

மாத வாசலன மாகுமே மனது
மதன னீர்மைவலி யதுதிட
மாத லாலிதை யடக்கல் வாயுவை
யடக்கன் மானுமென வெண்ணுகேன்
சாது வேகட லருந்தி வேரினெடு
தான்பெ யர்த்துமக மேருவை
மோது வெங்கனல் விழுங்கி னும்மனதை
முடிவு செய்தலரி தாகுமால். 73

(ப—ரை) (அருச்சுனன் சொல்லுகின்ருன்) மாதவா = கிருஷ்ணு, மனது சலனமாகுமே = மனது சஞ்சல சுபாவமுள்ளது, மதனனீர்மை = கலக்குந்தன்மையது அதாவது புருஷனது வியாகுலத்திற்குக் காரணம், வலியது = சாமர்த்தியமுடையது, நிக்கிரகிக்கத் தகாதது என்பது பொருள், திடம் = சத்விஷயத்திலோ அசத் விஷயத்திலோ பற்றுள்ளது அதினின்றும் நிவர்த்திக்க முடியாதது என்பது பொருள், ஆதலால் = இக்காரணத்தால், இதை அடக்கல் = இந்த மனதை நிக்கிரகித்தல், வாயுவை அடக்கன் மானும் என = காற்றை நிக்கிரஞ்செய்வதுபோன்று, துஷ்கரமாமென்று, எண்ணுகேன் = நினைக்கிறேன், [மனதின் துர்நிக்கிரகத்தன்மையில் வாசிட்ட வாக்கியத்தையும் பிரமாணமாக்குகின்ருர்] சாதுவே = நற்குணமுடைய ஸ்ரீ ராமா, கடல் அருந்தி = சமுத்திரத்தைப்பருகி, மகமேருவை = மகாமேரு பருவதத்தை, வேரினெடு பெயர்த்து = வேரோடு பிடுங்கி, மோது வெங்கனல் விழுங்கினும் = தாக்காநின்ற கொடிய அக்கினியைப் புசிக்கினும், மனதை முடிவு செய்தல் அரிதாகும் = மனதை நிக்கிரகஞ் செய்தல் முடியாது எ—று.

தான், ஆல்—அசை. 73

(அ—கை)

பிரகிருதத்தில் அதாவது பிரம்மாப்பியாசத்தில் முற்கூறிய தியானத்தினும் விலக்ஷணத்தன்மையைத் தெரிவிக்கின்ருர்.

ஓத லாதியில் விலங்க கன்றவுட
னுறழ வன்மையுறு பந்தமற்
றேது மட்டிலிதி காச மாதிகொடு
ளக்கி லீலைநட னத்தினும்
போத மேசொரூப ஞால மித்தையிது
பொருளின் முற்றுதலி னற்பழங்
காதை யாதிகளி னுலகத் தெளிவு
காண் கலக்கமத டைந்திடா. 74

(ப—ரை) ஓதல் ஆதியில் = பிரமத்தை வசனித்தல் முதலியவைகளில், விலங்கு அகன்ற உடல் உறழ = சிருங்கலையற்ற தேகம் (நிர்ப்பந்தமடையாதது) போல, வன்மையுறு பந்தம் ஏது = வலிமை பொருந்திய நிர்ப்பந்தமின்றும், ஆதி சத்தத்தால் பிரம்ம சிந்தனம் முதலியவைகளைக்கொள்க, [கேவலம் நிர்ப்பந்தத்தினின்மையின்றும் மாருய் புத்திக்கு விநோதமாமெனக் கூறுகின்ருர்] மட்டு இல் இதிகாசமாதிகொடு = அளவில்லாத இதிகாசம் முதலியவைகளால், உளக்கு = உனது புத்திக்கு, நடனத்தின் = நடனக்கிரியையைப் பார்த்தல் போன்று, இலீலையாம் = விளையாட்டுக்கு விஷயமாகின்றது, இதிகாசம் = முன்னோரது கதை, ஆதி = அதனை முதலாவதாகவுடைய இலௌகிக கதையினனுகூலமானயுத்தி திருஷ்டாந்தங்களைக் காட்டல் முதலியவை, [அற்றேல் கதை முதலியவற்ருலும் அதனிலொருமித்தலுக்கு விநாசமுண்டாமென்று சங்கித்துக் கூறுகின்ருர்] சொரூபம் போதமே = (இதிகாசம் முதலியவைகளுக்கும்) ஆன்மா சின்மாத்திர வடிவம், தேகாதி வடிவமன்ரும், ஞாலம் மித்தை = பிரபஞ்சம் பொய், இது பொருளில் = என்னுமிவ்வருத்தத்தில், முற்றுதலினல் = பரியவசானமிருத்தலால், பழங்காதையாதிகளினல் = இதிகாசம் முதலியவைகளால், அகத்தெளிவு = அதனிலொருமித்தல் வடிவ நிதித்தியாசனம், கலக்கமது அடைந்திடாது = விக்ஷேபத்தையடையாது எ—று.

மற்று, காண்—அசை நிலைகள்.
பரியவசானம் = முடிவு, அதாவது தாற்பரியம்.
அடைந்திடாது என்பதில் து விகுதி குறைவாயிற்று.

உள்ளத்துக்கு எனற்பாலது ளகரமெய்யும் அத்துச்சாரியையும் குறைந்து உளக்கு எனவந்தது.

74

(அ—கை)

அற்றேல் இதிகாசாதிகளையங்கீகரிக்கின் உழவு முதலியவை களுக்கும் பிராப்தியுண்டாம் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

உழவு வாணிபம தாதி காவிய
முணர்த்து தர்க்கமெழு வாய்மிசைப்
பழகு நெஞ்சது கலங்கு மெய்யுணர்வு
பாறலா னவைக ளாலிவ
ணழுவு றுதுணர்வு போச னுதிகளி
னண்ண மிக்கவெளி தாகுமா
லிழிக லக்கமுழு தின்மை யால்விரைவி
னெய்த லான்மிருதி மீட்டுமே. 75

(ப—ரை) உழவு வாணிபமது ஆதி = கிருஷி வாணிச்சியம் ஸேவை முதலியவைகளிலும், காவியம் உணர்த்து தர்க்கம் எழுவாய் மிசை = காவியம் சுஷ்கதர்க்கம் முதலியவைகளிலும், பழகு நெஞ்சது = பிரவிருத்திக்கின்ற மனமானது, கலங்கும் = விக்ஷேபத்தையடையும், அவைகளால் = அவ் உழவாதி காவ்வியாதிகளால், மெய்யுணர்வு பாறலான் = தத்துவ ஸ்மிருதி நீங்கிவிடுகின்றபடியால், சம்பவியாத படியாலென்றபடி, [அற்றேல் கிருஷியாதிகளுக்குத் தத்துவாநு சந்தானத்தைக் கெடுக்குந்தன்மையால் தள்ளத்தக்க தன்மையிருக்கு மேல் போசனுதிகளுக்கும் அப்படிப்பட்ட தன்மையிருத்தலால் அதுவும் தியாச்சியமாமென்று சங்கித்துக் கூறுகின்றார்] இவண் போசனுதி களில் = ஈண்டு புசிப்பு முதலானவைகளில், உணர்வு நழுவுறுது = தத்துவ ஸ்மிருதி நீங்காதிருக்கும். இவ்வாறுகவே அதாவது தத்துவ ஸ்மிருதியோடு கூடியே, நண்ணமிக்க எளிதாகும் = பிரவிருத்திக்க மிகவும் சுலபமாகும், [எதனுலெனிற் கூறுகின்றார்] இழிக்லக்கம்முழுது இன்மையால் = இழிவு பொருந்திய விக்ஷேபம் அத்தியந்தம் இல்லாத படியால், [விக்ஷேபத்தினின்மையுமெதனுலெனிற் கூறுகின்றார்] மீட்டும் மிருதி விரைவின் எய்தலால் = மறுபடியும் தத்துவத்தின் நினைவு சீக்கிரம் உண்டாகின்றபடியால் எ—று.

ஆல், ஏ—அசைநிலைகள். 75

(அ—கை)

அற்றேல் அப்போது விக்ஷேபமின்றேனும் தத்துவத்தின் விஸ்மிருதியிருத்தலால் புருஷார்த்த ஹானியுண்டாம் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

உண்மை யெண்ணமறன் மாத்தி ரத்தினிட
றுற்றி டாதுதிரி பாலுறுந்
திண்மை யுற்றுவிரை வெண்ணு வான்றிரிபு
சேர நேரமில தெங்கணு
நுண்மை யெண்ணமுற நேர மில்லையய
னூற்ப யிற்சிவல னுக்குமேல்
வண்மை மன்னுபரி சயம ழிக்குதலின்
வலியின் மெய்ம்மைநிலை தவறுமால். 76

(ப—ரை) உண்மை எண்ணம் அறல் மாத்திரத்தின் = தத்துவத்தின் மறதிமாத்திரத்தால், இடர் உற்றிடாது = அனர்த்தம் உண்டாகாது, [அப்படியானால் அனர்த்தமெதனாலுண்டாமெனிற் கூறுகின்றார்] திரிபால் உறும் = விபர்யயத்தால் உண்டாம், [மறதி இருக்கின் விபர்யயமுமுண்டாகுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] திண்மையுற்று விரைவு எண்ணுவான் = திடத்தைப் பொருந்தி சீக்கிரமாகத் தத்துவத்தை நினைப்பவனுக்கு, எங்கணும் திரிபு சேர நேரமிலது = எவ்விடங்களிலும் விபரீதத்தையடைய அவகாசமின்றாம், [அற்றேல் போசனாதிகளில் பிரவிருத்தித்த புருஷனுக்கு தத்துவ நினைவு உண்டாவது போன்று தருக்காதிகளினப்பியாசத்தில் பிரவிருத்தித்தவனுக்கும் தத்துவ நினைவு ஏனுண்டாகாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] அயல் நூல் பயிற்சி வலனுக்கு = அன்னிய தருக்காதி சாஸ்திரங்களையப்பியாசஞ் செய்வதில் சமர்த்த புருஷனுக்கு, நுண்மை எண்ணம் உற நேரம் இல்லை = தத்துவ நினைவு உண்டாக அவசரமின்றாம், [கேவலம் தத்துவாநுசந்தானத்தின் அவகாசத்தினின்மை மாத்திரமன்றாம் மற்றே, காவ்விய தருக்காதியப்பியாசம் தத்துவாப்பியாசத்திற்கு விரோதியாவதால், அப்போது தத்துவம் நினைக்கப்படினும் பலாத்காரத்தால் உபேக்ஷிக்கப்படுகிறதெனக் கூறுகின்றார்] மேல் = மாறாய், வண்மை மன்னு பரிசயம் அழிக்குதலின் = திடம் பொருந்திய அப்பியாசத்தைக் கெடுத்தலின், வலியின் மெய்ம்மை நிலை தவறும் = பலாற்காரத்தால் தத்துவத்தின் ஸ்திதி கெடும் எ—று.

ஆல்—அசை. 76

(அ—கை)

தத்துவாநுசந்தான விரோதியான வாக்கு வியவகாரத்தைவிட வேண்டுமென்பதில் பிரமாணமாக "ஆன்மா ஒன்றினையேயறியுங்கள் அன்னியமான வாக்குகளை விடுங்கள் மோக்ஷமாகிய அமிருதத்திற்கு இவ்வான்மா கரையாம்" என்னும் சுருதி வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்.

ஒருவ .னுமவனை யேயு ணர்ந்திடுதி
யனிய வாக்குகளை யொழியென
மருவு மற்றவகை வாக்கி னுக்கது
வருத்த மாமெனவும் வினவினேம்
பருக லாதிவிடி னுய்யொணு விதர
பனுவ றன்னைவிடி னென்கொலோ
வருகு வாயிவ ணிழித்து ராக்கிரக
மாற்று கின்றனையென் மூலமோ. 77

(ப—ரை) ஒருவனுமவனையேயுணர்ந்திடுதி = அத்துவிதீய ஆன்மாவினையேயறியுங்கள், அனிய வாக்குகளை ஒழி = அனான்ம விஷயக வசனங்களை விடுங்கள், என வினவினேம் = என்று கேட்டுளேம், [அநேக சத்தங்களைத் தியானிக்கலாகாது வாக்கிற்கது இளைப்பன்றோ என்னும் வாக்கியமும் கேட்கப்படுகிறதெனக் கூறுகின்றார்] மருவும் அ(வ்)வகை = பொருந்தாநின்ற அப்படியே, வாக்கினுக்கு அது வருத்தமாமெனவும் = வாக்கிற்கும் மனதிற்கும் அனேக சத்தங்களை உச்சரித்தலும் தியானித்தலும் பரிசிரம காரணமாமென்றும், வினவினேம் = கேட்டுளேம் [அற்றேல் தத்துவாநுசந்தானத்தினும் வேறான ஆகாராதியையெப்படி விடுகிறதில்லையோ அதுபோல இதர சாஸ்திராதியப்பியாசமும் செய்யத்தக்கதாமென்று ஆக்கிரகஞ் செய்யும் புருஷனைக்குறித்துக் கூறுகின்றார்] பருகல் ஆதிவிடின் = புசித்தல் முதலியவற்றைத் தியாகஞ்செய்யின், உய்யொணு = பிழைக்க முடியாது, இதர பனுவல் தன்னைவிடின் = அன்னியமான காவியாதி நூல்களைப் பரித்தியாகஞ்செய்யின், அருகுவாய் என் கொலோ = இறந்து விடுவாயா பிழைக்க மாட்டாயா, பிழைப்பாய் ஆகையால், இவண் = என்று, இழித்து துராக்கிரகம் ஆற்றுகின்றனை = துச்சமாகிய கெட்ட பிடிவாதத்தைச் செய்கின்றாய், என் மூலம் = என்ன காரணம் என—று.

மற்று, ஓ—அசை.

வினவினேமென்பது முன்பும் கூட்டப்பட்டது. 77

(அ—கை)

அற்றேல் அப்போது விக்ஷேபமின்றேனும் தத்துவத்தின் விஸ்மிருதியிருத்தலால் புருஷார்த்த ஹானியுண்டாம் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

உண்மை யெண்ணமறன் மாத்தி ரத்தினிட
  ருற்றி டாதுதிரி பாலுறுந்
திண்மை யுற்றுவிரை வெண்ணு வான்றிரிபு
  சேர நேரமில தெங்கணு
நுண்மை யெண்ணமுற நேர மில்லையய
  னூற்ப யிற்சிவல னுக்குமேல்
வண்மை மன்னுபரி சயம ழிக்குதலின்
  வலியின் மெய்ம்மைநிலை தவறுமால். 76

(ப—ரை) உண்மை எண்ணம் அறல் மாத்திரத்தின் = தத்துவத்தின் மறதிமாத்திரத்தால், இடர் உற்றிடாது = அனர்த்தம் உண்டாகாது, [அப்படியானால் அனர்த்தமெதனுலுண்டாமெனிற் கூறுகின்றார்] திரிபால் உறும் = விபர்யயத்தால் உண்டாம், [மறதி இருக்கின் விபர்யயமுமுண்டாகுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] திண்மையுற்று விரைவு எண்ணுவான் = திடத்தைப் பொருந்தி சீக்கிரமாகத் தத்துவத்தை நினைப்பவனுக்கு, எங்கணும் திரிபு சேர நேரமிலது = எவ்விடங்களிலும் விபரீதத்தையடைய அவகாசமின்றாம், [அற்றேல் போசனுதிகளில் பிரவிருத்தித்த புருஷனுக்கு தத்துவ நினைவு உண்டாவது போன்று தருக்காதிகளினப்பியாசத்தில் பிரவிருத்தித்தவனுக்கும் தத்துவ நினைவு ஏனுண்டாகாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] அயல் நூல் பயிற்சி வலனுக்கு = அன்னிய தருக்காதி சாஸ்திரங்களையப்பியாசஞ் செய்வதில் சமர்த்த புருஷனுக்கு, நுண்மை எண்ணம் உற நேரம் இல்லை = தத்துவ நினைவு உண்டாக அவசரமின்றாம், [கேவலம் தத்துவாநுசந்தானத்தின் அவகாசத்தினின்மை மாத்திரமன்றாம் மற்றே, காவ்விய தருக்காதியப்பியாசம் தத்துவாப்பியாசத்திற்கு விரோதியாவதால், அப்போது தத்துவம் நினைக்கப்படினும் பலாத்காரத்தால் உபேக்ஷிக்கப்படுகிறதெனக் கூறுகின்றார்] மேல் = மாறாய், வண்மை மன்னு பரிசயம் அழிக்குதலின் = திடம் பொருந்திய அப்பியாசத்தைக் கெடுத்தலின், வலியின் மெய்ம்மை நிலை தவறும் = பலாற்காரத்தால் தத்துவத்தின் ஸ்திதி கெடும் எ—று.

ஆல்—அசை. 76

(அ—கை)

தத்துவாநுசந்தான விரோதியான வாக்கு வியவகாரத்தைவிட வேண்டுமென்பதில் பிரமாணமாக "ஆன்மா ஒன்றினையேயறியுங்கள் அன்னியமான வாக்குகளை விடுங்கள் மோக்ஷமாகிய அமிருதத்திற்கு இவ்வான்மா கரையாம்" என்னும் சுருதி வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்.

ஒருவ .ளுமவனை யேயு ணர்ந்திடுதி
யனிய வாக்குகளை யொழியெனு
மருவு மற்றவகை வாக்கி னுக்கது
வருத்த மாமெனவும் வினவினேம்
பருக லாதிவிடி னுய்யொணு விதர
பனுவ றன்னைவிடி னென்கொலோ
வருகு வாயிவ ணிழித்து ராக்கிரக
மாற்று கின்றனையென் மூலமோ. 77

(ப—ரை) ஒருவனுமவனையேயுணர்ந்திடுதி = அத்துவிதீய ஆன்மாவினையேயறியுங்கள், அனிய வாக்குகளை ஒழி = அனுன்ம விஷயக வசனங்களை விடுங்கள், எனு வினவினேம் = என்று கேட்டுளேம், [அநேக சத்தங்களைத் தியானிக்கலாகாது வாக்கிற்கது இளைப்பன்றோ என்னும் வாக்கியமும் கேட்கப்படுகிறதெனக் கூறுகின்றார்] மருவும் அ(வ்)வகை = பொருந்தாநின்ற அப்படியே, வாக்கினுக்கு அது வருத்தமாமெனவும் = வாக்கிற்கும் மனதிற்கும் அனேக சத்தங்களை உச்சரித்தலும் தியானித்தலும் பரிசிரம காரணமாமென்றும், வினவினேம் = கேட்டுளேம் [அற்றேல் தத்துவாநுசந்தானத்தினும் வேறான ஆகாராதியையெப்படி விடுகிறதில்லையோ அதுபோல இதர சாஸ்திராதியப்பியாசமும் செய்யத்தக்கதாமென்று ஆக்கிரகஞ் செய்யும் புருஷனைக்குறித்துக் கூறுகின்றார்] பருகல் ஆதிவிடின் = புசித்தல் முதலியவற்றைத் தியாகஞ்செய்யின், உய்யொணு = பிழைக்க முடியாது, இதர பனுவல் தன்னைவிடின் = அன்னியமான காவியாதி நூல்களைப் பரித்தியாகஞ்செய்யின், அருகுவாய் என் கொலோ = இறந்து விடுவாயா பிழைக்க மாட்டாயா, பிழைப்பாய் ஆகையால், இவண் = ஈண்டு, இழித் துராக்கிரகம் ஆற்றுகின்றனை = துச்சமாகிய கெட்ட பிடிவாதத்தைச் செய்கின்றாய், என் மூலம் = என்ன காரணம் எ—று.

மற்று, ஓ—அசை.

வினவினேமென்பது முன்பும் கூட்டப்பட்டது. 77

(அ—கை)

அப்படியானல் ஜனகன் முதலிய தத்துவ ஞானிகளுக்கும் இராச்சிய பரிபாலனுதியில் எப்படிப் பிரவிருத்தி கூடும் என்று வினவுகின்ருன்.

செனக ஞதியர்க ளுலகை யாண்டனர்க
டிகழுமெய் யறிவின் வலிமையா
லனைய வாபுரிய நீயும் வல்லையெனி
னதுபடித்தி யல துழவுசெய்
துனிசெய் மற்றிதுபொய் யென்னும் வாதனை
துலங்கி னூழ்கெட நயந்துதம்
வினைவ யத்தின்வழு வறந டந்திடுவர்
மேவு ருரொரு கிலேசமே. 78

(ப—ரை) செனகன் ஆதியர்கள் = சனக ராஜா முதலான வர்கள், உலகை ஆண்டனர்கள் = சகத்தைப் பாலனஞ்செய்தார்களே யெனின், [திடாபரோக்ஷ ஞானமுடையவராதலால் அவருக்கு அது பாதகமன்ருமெனப் பரிகரிக்கின்ருர்] திகழும் மெய்யறிவின் வலிமை யால் = விளங்காநின்ற தத்துவ ஞானத்தின் பலத்தால், வியவகாரத் தைச் செய்தனர், [அப்படியானல் எனக்கும் திட ஞானமிருக்கின்ற தென்று கூறுபவனைக்குறித்துக் கூறுகின்ருர்] அனையவா = அப்படியே, அதாவது சனகாதியரைப் போன்று திட ஞானமுள்ளவனுகி, புரிய = காரியங்களைச்செய்ய, நீயும் வல்லையெனின் = நீயும் சமர்த்தனுவாயா யின், அது படித்தி = தருக்கத்தைப் படிப்பாய், அலது உழவு செய் = அல்லது கிருஷியைச் செய்வாய், [அற்றேல் சமுசாரத்தைச் சார மின்றியதாக அறியும் தத்துவ ஞானிகள் அதில் எதனுல் பிரவிருத்திக் கிருர்கள் என்ரு சங்கித்து பிராரத்த கருமமானது அவசியம் பயனைக் கொடுத்தே தீருமானதால் போகத்தால் அதன் விநாசத்தின் பொருட்டு தத்துவ ஞானிக்கு பிரவிருத்தியுண்டாமெனக் கூறுகின்ருர்] துனி செய் இது = துன்பத்தைச் செய்யாநின்ற இந்த சமுசாரமானது, பொய் என்னும் வாதனை துலங்கின் = மித்தையாமென்னும் வாசனை திடப்படின், ஊழ்கெட நயந்து = பிராரத்த கருமம் க்ஷயமாக இச்சித்து,

தம் வினைவயத்தின் = தத்தம் கருமாநுசாரத்தால், வழுவு அற நடந்திடுவர் = குற்றமின்றி பிரவிருத்திப்பார்கள், ஒரு கிலேசம் மேவுறார் = பிரவிருத்திப்பினும் யாதொரு துன்பத்தையுமடையார்கள் எ—று. மற்று, ஏ—அசைகள். 78

(அ—கை)

அப்படியானல் அநுசாரத்திலும் பிரவிருத்தியுண்டாகுமே என்று சங்கித்துக் கூறுகின்றார்.

தத்த மக்குரிய வினைவ யத்தர்நிலை
தவறி டாரலது தவறுக
வித்த லத்துவினை தனைய கற்றிவிட
யாவ னுக்கெளிய தாமுரை
சத்த றிந்தவ னறிந்தி லானிருவ
ருக்கு மிங்குவினை சமனெனும்
முத்த னுக்குறுதி யாற்கி லேசமறு
மூட னுக்கதிட னுலுறும். 79

(ப—ரை) தத்தமக்குரிய வினைவயத்தர் = தங்கள் தங்களுக்குரிய கருமத்தினதீனமாகவிருப்பவர்கள், நிலை தவறிடார் = சதாசாரத்தினின்றும் நீங்கார்கள், [பிராரத்த வசத்தாலேயே நிலைதவறுதலுண்டாமென்று சங்கித்து அங்கீகரிக்கின்றார்] அலது தவறுக = அல்லது அநுசாரத்திற் பிரவிருத்திக்குக, இத்தலத்து = இப்பூமியின்கண்ணே, வினைதனை அகற்றிவிட = தன்னாற் செய்யப்பட்ட கருமத்தை நிவர்த்திக்க, யாவனுக்கு எளியதாம் = எவனுக்கு சுலபமாகும், யாரால் முடியும் என்றபடி, உரை = சொல்வாய், [அற்றேல் ஞானி அஞ்ஞானிகளாகிய இருவருக்கும் பிராரத்த கருமமானது அவசியமனுபவிக்கத் தக்கதாந் தன்மையால் சமானமாகும்போது அவ்விருவருக்கும் விலக்ஷணத் தன்மையின் சித்தியெதனால் என்று சங்கித்துக் கூறுகின்றார்] சத்து அறிந்தவன் அறிந்திலான் இருவருக்கும் = பிரமத்தையுணர்ந்தவனும் உணராதவனுமாகிய உபயருக்கும், இங்கு = இவ்வுலகில், வினை சமன் எனும் = பிராரத்த கருமம் சமானமென்று சொல்லப்படும், ஆயினும்,

முத்தனுக்கு=ஞானிக்கு, உறுதியால் கிலேசம் அறும்=தைரியத்தால் துன்பம் இன்றாம், மூடனுக்கு=அஞ்ஞனுக்கு, அதிடனால் உறும்=தைரியமின்மையினால் துன்பம் பொருந்தும் எ—று. 79

(அ—கை)

அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

பாதை போமிருவ ருக்குமே தளர்வு
பாடு நேரெனினு மண்மையென்
றீது தேர்ந்தவனு ரத்தின் வற்செலுவ
னிதர னோர்விலி யிருப்பனு
லோது போதமதை நன்கு நேர்பட
வுணர்ந்து ளான்றிரிபி னலமரான்
யாது பேணியெவ னின்ப மேவலுற
யாக்கை தாபமுற வேண்டுமே. 80

(ப—ரை) பாதைபோம் இருவருக்கும்=மார்க்கத்திற் செல்லும் இரு புருஷருக்கும், தளர்வுபாடு நேர் எனினும்=களைப்பு சமானமாயினும், ஈது அண்மை என்று தேர்ந்தவன்=இவ்வழி சமீபமாமென்று அறிந்தவன், உரத்தின்=தைரியத்தினால், வற்செலுவன்=வேகமாய்ப் போவன், இதரன்=வழியினளவையறியாதவன், ஓர்விலி இருப்பன்=தீனபுத்தியுள்ளவனாய் நிற்பன். [இவ்வாறு உபபாதனஞ் செய்த "இப்புருடன்" என்னும் மந்திரத்தின் முற்பாதியின் பொருளாகிய அபரோக்ஷ ஞானத்தை அநுவதிக்கின்றவராய் சோகநிவர்த்தி வடிவ பயனைப் போதிக்கும் பிற்பாதியையாரம்பிக்கின்றார்] ஓது போதமதை=சொல்லாநின்ற பிரத்தியக்குவடிவ பிரமத்தை, நன்கு நேர்பட உணர்ந்துளான் = நன்றாக சாக்ஷாத்கரித்தவனும், திரிபின் அலமரான்=தேகாதியில் ஆன்மத்துவ புத்திவடிவ விபர்யயத்தால் பாதிக்கப்படாதவனுமாகிய புருஷன். இரண்டும் ஏதுகர்ப்ப விசேஷணமாம், யாதுபேணி=எதை விரும்பி, எவன் இன்பம் மேவலுற=எவனது போகத்தின் பொருட்டு, யாக்கை தாபம் உற வேண்டும்=சரீரத்தைப் பின்பற்றி வருந்துவன் எ—று.

ஆல், ஏ—அசைநிலைகள். 80

(அ—கை)

இந்த மந்திரத்தின் பிற்பாதிக்கு அதாவது எதை விரும்பி எவனது போகத்தின் பொருட்டு சரீரதாபப்படுவன் என்பதற்குத் தாற்பரியத்தைக் கூறுகின்றார்.

ஞால மித்தையெனும் ஞான முண்மையி
னயப்ப தோடிலே நயப்பவன்
சால மாயினவை தாப மென்பது
சமிக்கு மெண்ணெயறு தீபநேர்
கோல கந்தருவ நகரி னொன்றுமிது
கொடிய மாயைபுரி வான்செயற்
சீல மென்றுளன நயந்திடான் முறுவல்
செய்து விட்டுவிட நினைகுவான். 81

(ப—ரை) ஞாலம் மித்தை எனும் ஞானம் உண்மையின் = பிரபஞ்சம் பொய் என்னும் புத்தியிருத்தலினால், நயப்பதோடு நயப்பவன் இலை = காம்மியமும் காமுகனுமின்றாம், [காம்மியத்தையும் காமுகனையும் நிஷேதிப்பதனாலென்னையெனிற் கூறுகின்றார்] அவ்வ சால மாயின் = இச்சையின் விஷயமும் இச்சிப்பவனும் அத்தியந்தம் நாசமாயின், தாபம் என்பது = இச்சையை முன்னிட்ட சந்தாபமும், எண்ணெய் அறுதீபநேர் = எண்ணெயில்லாத விளக்குபோல, சமிக்கும் = அழிந்துபோகும், [காமியத்தினின்மையால் காமத்தினின்மையெங்கே காணப்பட்டது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] கோல கந்தருவ நகரின் = அழகிய கந்தருவ பட்டணத்தில், ஒன்றும் இது = இருக்கும் யாதொரு வஸ்துவையும், கொடிய மாயை புரிவான் செயல் சீலம் என்று உளன் = இந்திர ஜாலக்காரனாற் செய்யப்பட்டதென்று அறிந்தவன், நயந்திடான் = விரும்பான், [இச்சையினின்மை மாத்திரமன்றாம் மாறாய் இது பொய் என்று நகைத்துவிட இச்சிப்பானெனக் கூறுகின்றார்] முறுவல் செய்து = இது பொய்யென்று நகைத்து, விட்டுவிட நினைகுவான் = பரித்தியாகஞ் செய்ய இச்சிப்பன் எ—று. 81

(அ—கை)

திருஷ்டாந்தத்திற் கூறிய பொருளைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

வந்த போதினிமை யான போகமதை
மன்னு மிந்தமுறை நாடுவோன்
சிந்தை பேணுகில னன்றி மாசது
தெரிந்து விட்டுவிட நினைகுவா
னந்த மாம்பொருளை யீட்ட றுன்புபி
னளித்த றுன்பினி யழித்தறுன்
பிந்த வாவிபிரி தறுன்பு சீசிபொரு
ளெண்ணி றுன்பமதி யற்றுமால். 82

(ப—ரை) வந்தபோது இனிமையான போகமதை=பிரதீதி மாத்திரத்தால் இரம்மியமான மாலை சந்தனம் வனிதை முதலிய விஷயங்களை, இந்த முறை மன்னும் நாடுவோன் = இந்தப் பிரகாரம் வந்தபோது இனிமையாமென்று திடமாக அநுசந்தானஞ் செய்பவன், சிந்தை பேணுகிலன்=ஆசக்தியைச் செய்யான், அன்றி=மற்றே, மாசது தெரிந்து=விஷயங்களில் தோஷங்களைக் கண்டு, விட்டுவிட நினைகுவான்=பரித்தியாகஞ் செய்ய இச்சிப்பன். [அவ்விஷய தோஷங்கள் யாவையெனிற் கூறுகின்றார்] அந்தமாம் பொருளை ஈட்டல் துன்பு=விநாச சீலமாகிய திரவியத்தைச் சம்பாதித்தலிலும் கிலேசம், பின் அளித்தல் துன்பு=சம்பாதித்த பின்பு அதைக் காப்பதிலும் கிலேசம், இனி அழித்தல் துன்பு=அதன்பின் செலவு செய்வதிலும் துக்கமாம், இந்த ஆவி பிரிதல் துன்பு=இந்தப் பிராணன் நீங்குங் காலத்திலும் ஐயோ இவ்வளவு தனத்தை விட்டுவிட்டுப் போகிறேமே என்று துக்கமாம், அல்லது இந்த பிராணசமானமான திரவியம் திருடர் முதலியோரால் விநாசமாகுங் காலத்திலும் துக்கம், சீசி, பொருள் எண் இல் துன்பமது இயற்றும்=திரவியம் அளவில்லாத கிலேசத்தைச் செய்யும் எ—று.

சீசீ என்பது, அத்தியந்தம் நிகிருஷ்டத்தைப் போதிப்பது.

ஆல்—அசை. 82

(அ—கை)

இப்படி விஷயங்களில் துக்ககாரணத்துவத்தைக் காண்பித்து அசுத்தத்தையும் சில விஷயங்களிற் காட்டுகின்றார்.

சந்து மேவுறு நரம்பெ லும்பினொடு
தசைக டுன்றியிடு பாவையர்
எந்தி ரத்துலையு மங்க பஞ்சர
மிதன்கணே யினிமை யென்னையோ
முந்து குற்றமெழி னூல்கள் செவ்விதின்
விரித்த றிந்திட மொழிந்திடுஞ்
சிந்தை செய்பவ னிவற்றை நாளுமிடர்
சேர்வ தில்லையிது திண்ணமே. 83

(ப—ரை) சந்து = துவாரங்களும், மேவுறு நரம்பு எலும்பினொடு = பொருந்தாநின்ற நரம்புகளும் எலும்புகளும், தசைகள் = மாமிசங்களும் ஆகிய இவைகள், துன்றியிடு பாவையர் = நிறைந்துள்ள ஸ்திரீகளது, எந்திரத்து உலையும் அங்க பஞ்சரமிதன்கண் = யந்திரம் போன்று சஞ்சல சுபாவமுள்ள சரீரமாகிய கூட்டில், இனிமை என்னை = சோபனம் ஏது, யாதொரு சோபனமுமின்ரும், முந்து எழில் நூல்கள் = இது முதலிய ஞானசாஸ்திரங்களில், குற்றம் = தோஷங்கள், அறிந்திட = அறியும்பொருட்டு, செவ்விதின் விரித்துமொழிந்திடும் = நன்ருய் விஸ்தாரமாகக் கூறப்படுகின்றன, இவற்றை நாளும் சிந்தை செய்பவன் = கூறிய அசுத்தம் துக்க முதலிய தோஷங்களை எப்போதும் விசாரிப்பவன், இடர்சேர்வது இல்லை = துக்கத்தையடைவதின்ரும், இது திண்ணமே = இது நிச்சயந்தான் எ—று. 83

(அ—கை)

விஷயங்களில் தோஷத்தைக் காணும்போது போகத்தினிச்சையின்மையில் யுத்திசகித திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர்.

பசிவ ருத்தமுறு வானு நஞ்சுகொடு
பருகு தற்குநய வானெனின்
வசிவி வேகியுண வால வாவிலி
தெரிந்து மற்றதை நயப்பனோ
வுசித முன்னைவினை வலியி னுற்புலனி
லுறுமவா வெனின வேலையுங்
கசிவு றுதிவன் வருந்தி யுண்பனரி
கைவ யத்தனை நிகர்ப்பவே. 84

(ப—ரை) பசி வருத்தமுறுவானும் = பசியால் பீடிக்கப்படுபவனும், கொடுநஞ்சு = கொடுமையாகிய விஷத்தை,பருகுதற்குநயவான் எனின் = புசிப்பதற்கு இச்சியானென்றால், வசிவிவேகி = கூர்மையான பகுத்தறிவுள்ளவனும், உணவால் அவாஇலி = சர்க்கரை சாதத்தால் திருப்தியுள்ளவனுமாகிய புருஷன், தெரிந்து = இது விஷமாமென்று அறிந்து அதன்பின், அதை நயப்பனோ = அவ்விஷத்தைப் புசிக்க இச்சிப்பனோ இச்சியான், [அற்றேல் பிராரத்த கருமத்தின் பிரபலத் தன்மையால் ஞானிக்கும் இச்சையுண்டாகுமென்று சங்கித்து இச்சை இருப்பினும் பிரீதிபூர்வகம் புசியானெனக் கூறுகின்றார்] உசிதமுன்னை வினைவலியினால் = யோக்கியமான பிராரத்த கருமத்தின் சாமர்த்தியத்தால், புலனில் அவாஉறும்எனின் = விஷயங்களில்இச்சையுண்டாகுமென்று சொல்லில். அ(வ்)வேலையும் = அப்போதும், இவன் = இந்த ஞானியானவன், கசிவு உறாது = அன்பைச்செய்யாமல், அரிகை வயத்தனை நிகர்ப்ப = சத்துருவின் கைவசமான புருஷனைப்போன்று, வருந்திஉண்பன் = கிலேசமுற்றுப் புசிப்பன் எ—று.

மற்று, ஏ—அசைநிலைகள். 84

(அ—கை)

ஞானி கிலேசத்தையடைந்தவனாகியே புசிக்கின்றானென்பது எதனால் அறியப்படுகிறது என்னுஞ் சங்கைக்கு உலகிற்காண்டலாலெனக் கூறுகின்றார்.

அன்ன போகநுகர் வுறினு மன்புடைய
ராங்கு டும்பிகளெ னறிஞர்தா
மின்ன முங்கரும மாய்ந்த தில்லைகொ
லெமக்கென வயர்வர் சந்ததம்
பன்னு மிவ்வயர்வு தாப மல்லவிது
பவவி ரத்தியென லாகுமே
முன்னு துட்டசமு சார தாபமதன்
மூல மையலறி வென்பரால். 85

(ப—ரை) அன்புடையராம் குடும்பிகள் என்அறிஞர் = (குருவினாலும் சாஸ்திரத்தினாலும் உபதேசிக்கப்பட்ட அருத்தத்தில்)

சிரத்தையுடையவராய் குடும்பிகளாயுள்ள வித்துவான்கள், அன்ன போகம் நுகர்வுறினும்=உணவு முதலிய விஷயங்களைப் புசிக்கினும், எமக்கு இன்னமும் கருமம் மாய்ந்ததில்லைகொல் = எங்களுக்கு இது பரியந்தமும் பிராரத்தகருமம் நாசமாகவில்லையே, எனுசந்ததம் அயர்வர்=என்று எப்போதும் கிலேசத்தையடைவார்கள் [அற்றேல் தத்துவத்தை அறிந்தவருக்கு சமுசார நிமித்தகமான தாபம் பொருத்த மன்று, ஞானத்திற்கு வியர்த்தத்துவம்நேருமாதலால்என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] பன்னும் இவ்வயர்வு=(இன்னமுங் கருமம் மாய்ந்ததில்லை கொலெமக்கு என்று) சொல்லாநின்ற இந்தக்கிலேசம், தாபம் அல்ல= சமுசார தாபமன்ரும், மற்ருே, இது பவவிரத்தி எனலாகும்=இந்தக் கிலேசம் சமுசாரத்தில் வைராக்கிய வடிவமாம் என்று சொல்லப்படும், [தாபகத்தன்மையின பாவத்தில் யுத்தியைக் கூறுகின்ருர்] முன்னு துட்ட சமுசாரமதன் மூலம்=கருதாநின்ற பொல்லாத சமுசார தாபத் திற்குக் காரணம், மையல் அறிவு என்பர்=பிராந்தி ஞானமென்று சொல்லுவர் பூருவாசாரியர்கள் எ—று.

சாம்சாரிகதாபம் பிராந்தி ஞானத்தை நிமித்தமாக உடையது. இதுவோ விவேக ஞானத்தை மூலமாக உடையது ஆனதால் அது போன்றன்றென்று பொருள்.

தாம், ஏ, ஆல்—அசைநிலைகள். 85

(அ—கை)

இந்தக் கிலேசம் விவேக மூலமா? அவிவேக மூலமா? என்பது எதனுலறியப்படுகிறது என்ரு சங்கித்து காமத்தை நிவர்த்திக்குந் தன்மையால் விவேக மூலமெனக் கூறுகின்ருர்.

துன்று நல்லறிவி னுல்வ ருந்திநனி
சொற்ப போகமதின் மகிழுவா
னன்றி மிக்கபல போகம் வந்துறினு
மகம கிழ்ச்சியெவ ளவுமிரான்
பொன்று மிச்சைமிகும் விழைவி னர்க்குமிகு
போகமுண் குதலின் மாய்வுரு
வொன்று நல்லவியி ஞனெ ருப்பென
வொளிர்ந்து மேலுமுற வளருமே. 86

(ப—ரை) துன்றுநல் அறிவினுல்=பொருந்தா நின்ற நல்ல விவேகத்தால், வருந்தி = வித்துவான் கிலேசத்தையடைந்தவனுகி, நனிசொற்ப போகமதின் மகிழுவான் = மிகவுமற்ப போகத்தால் சந்தோஷிப்பன், அன்றி=விவேக விஞ்ஞானமில்லாவிடின், மிக்க பல போகம் வந்துறினும்=மிகவுமனந்தபோகங்கள் வந்து பொருந்தினும், அகமகிழ்ச்சி எவளவும் இரான்=மனதிற்குச் சந்தோஷம் கொஞ்சமும் ஓர்போதுமின்றியவனுவன், [விவேகிக்குப்போன்று அவிவேகிக்கும் போகத்தாலேயே திருப்தியுண்டாம்.ஆகையால் விவேகம் திருப்திக்குக் காரணமன்ருமென்ரு சங்கித்து போகத்திற்கு திருப்தி காரணத் துவத்தின் அபாவத்தைப்போதிக்கும் சுருதியைப் படிக்கின்ருர்] விழை வினர்க்கு=ஆசையால் போகங்களையநுபவிப்பவர்க்கு, பொன்றும் இச்சைமிகும்=குறைவாகிய ஆசை அதிகரிக்கும், [இதனையே விரித் துரைக்கின்ருர்] மிகுபோகம் உண்குதலின்=மிகுதியாக விஷயங்களை அநுபவிப்பதனுல், மாய்வுரு=ஆசை அடங்காது,ஒன்றுநல் அவியினுல் நெருப்பு என=பொருந்தா நின்ற நல்ல நெய் முதலிய ஹவிஷ்திர வியத்தினுல் அக்கினி அதிகரிப்பது போன்று, ஒளிர்ந்து மேலும் உறவளரும்=பிரகடமாகி மேன்மேலும் விருத்தியாகும் எ—று.

ஏ—அசை. 86

(அ—கை)

விவேகத்தை மூலமாகவுடைய போகத்திற்கு திருப்தி காரணத் தன்மையநுபவ சித்தமாமெனக் கூறுகின்ருர்.

தேர்ந்த ருந்தலுறு போக மேநனி
திருத்தி தந்திடு மறிந்துபின்
சேர்ந்த வர்க்குமிகு தோழனு மலது
திருட னுவதிலை திருடனே
ஆர்ந்த தன்மனதை வென்று ளான்சிறிது
மாட றன்னிலுறு போகமே
யூர்ந்து நிற்றலின் மிகுந்த தீங்கதனை
யுன்னு வான்பெரிய தென்னவே. 87

(ப—ரை) தேர்ந்து அருந்தல் உறுபோகமே=(இந்தப்போகம் இவ்வளவினையுடையது இப்படிப் பிரயாசையால் சம்பாதிக்கத்தகுந்தது

என்று) அறிந்து அனுபவிக்கப்படுகின்ற போகமானது, நனிதிருத்தி தந்திடும்=மிகவும் திருப்தியைக் கொடுக்கும், [அற்றேல் திருஷ்ணையினேதுவான போகம் விவேகத்தின் சகாயமாத்திரத்தால் எப்படித் திருப்தியைச் செய்யுமென்று சங்கித்து சஹகாரி விசேஷவசத்தால் விபரீத காரியத்தைச் செய்தல் உலகிற் காணப்பட்டதெனக் கூறுகின்றார்] அறிந்துபின்சேர்ந்தவர்க்கு = இவன்திருடனென்றறிந்து அதன்பின் அவனோடு கூடியிருப்பவர்க்கு, திருடன் = சோரன், மிகுதோழனுமலது திருடன் ஆவது இலை = அத்தியந்த மித்திரனுவனேயன்றிச் சோரனுவதின்றாம், [மனதிற்கு இச்சித்தல் இயற்கையாவதால் சொற்ப போகத்தால் எப்படித் திருப்தியுண்டாகும் என்று சங்கித்து நிதித்தியாசனத்தால் நிக்கிரகிக்கப்பட்ட மனதிற்கு அப்படிப் பட்ட இயற்கை இல்லாதபடியால் திருப்தி அவசியமுண்டாமெனக் கூறுகின்றார்] .ஆர்ந்த தன் மனதை= (விஷயங்களிற்) பொருந்திய தனது மனதை, வென்றுளான் = யோகாப்பியாசத்தால் வசஞ் செய்தவன், ஆடல்தன்னில் உறு போகம் சிறிதும்=லீலையினுல் உண்டாகின்ற போகம் சொற்பமாயினும், அதனை=அந்த போகத்தை, மிகுந்த தீங்குஊர்ந்து நிற்றலின்=அதிகதோஷங்களேறியிருத்தலின், பெரியது என்னவே உன்னுவான்=அதிகமாகவே கருதுவான் எ-று.

திருப்தி=போதுமென்கின்ற புத்தி.

ஏகாரங்கள்—அசை நிலைகள். 87

(அ—கை)

நிக்கிரகிக்கப்பட்ட மனதிற்கு சொற்ப போகத்தாலும் திருப்தி உண்டாகுமென்பதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

நலிவுசெய் சிறைத விர்ந்த மன்னனொரு
நகர மட்டின்மகிழ் வெய்துறும்
வலிமையிற் பிறர்சி றைப்படாது விறன்
மன்னிஞே னவனி யென்னெனு
மலினநோக் குருவ மாம்வி வேகமுறு
மன்னு சாக்கிரதை துன்னுறின்
மெலிசெய் முன்னைவினை போக விச்சையை
விளைக்கு மெப்படி விளம்புவீர். 88

(ப—ரை) நலிவு செய் சிறை தவிர்ந்த மன்னன் = துன்பத்தைச் செய்யாநின்ற சிறைச்சாலையினின்றும் விடுபட்ட அரசனானவன், ஒரு நகரமட்டின் மகிழ்வு எய்துறும் = ஒரு கிராம மாத்திரத்தால் சந்தோஷத்தையடைவன், வலிமையின் பிறர் சிறைப்படாது = பராக்கிரமத்தால் அன்னியர்களால் பந்தனஞ் செய்யப்படாமல், விறல் மன்னினோன் = சாமர்த்தியத்தையடைந்திருக்கும் அரசனானவன், அவனிஎன் எனும் = சகல பிருதிவியையும் எவ்வளவு என்று சொல்லுவான், அதாவது அதிகமாக நினையான் மற்றோ, அற்பமாகக் கருதுவன், [அற்றேல் முன்னைவினை வலியினால் புலனில் உறும் அவாவெனின் என்னுமிடத்து கருமவசத்தால் இச்சை உண்டாகலாமென்று சொல்லப் பட்டது. அது பொருந்தாது. இச்சையைக் கெடுக்கின்ற விவேகஞானம் இருக்கும்போது அதனுற்பத்தி அசம்பவமாதலாலென வினவுகின்றான்] மலினநோக்கு உருவமாம் = தோஷத்தைக்காண்டல் வடிவமாகிய, மன்னு உறு விவேகம் = திடம் பொருந்திய விவேக ஞானம், சாக்கிரதை துன்னுறின் = விழித்துக்கொண்டிருக்கும்போது, மெலிசெய் முன்னைவினை = துன்பத்தைச் செய்யும் பிராரத்த கருமம், போக இச்சையை = விஷயங்களில் ஆசையை, எப்படி விளைக்கும் = எவ்வாறு உண்டுபண்ணும், விளம்புவீர் = உத்தரமருள்வீராக எ—று. 88

(அ—கை)

தோஷ திருஷ்டியிருப்பினும் இச்சையினுற்பத்தி சம்பவிக்கும் பிராரத்த கருமம் நாநாப் பிரகாரமாதலாலெனப் பரிகரிக்கின்றார்.

பழுதிது படாது பழவினை யநேக
  படிநிகழு மான படியினாற்
றழுவி வருமிச்சை யதனுட னனிச்சை
  தங்குறு பரேச்சை யென்பரால்
வழுவி னவர்பத்தி யமதைமிகு சோரர்
  மன்னன் மனையாளை நண்ணினோர்
நழுவுறு மனத்தம் வருமென வுணர்ந்து
  நச்சியிடு வார்முன் வினையினால். 89

(ப—ரை) இது பழுதுபடாது=இது தோஷமன்றும், பழவினை அநேகபடி நிகழும் ஆனபடியினால்=பிராரத்த கருமம் அநேகவிதம் காணப்படுகின்றது அக்காரணத்தால், [அநேக விதத்தையே தெரிவிக்கின்றார்] தழுவிவரும் இச்சை அதனுடன் = விஷயங்களைப் பற்றி எழுமிச்சையால் பலனைக்கொடுக்கும் இச்சாப்பிராரத்தமும்' அனிச்சை = அனிச்சையால் போகத்தைக் கொடுக்கும் அனிச்சாப் பிராரத்தமும், தங்குறு பரேச்சை=பொருந்தாநின்ற பரேச்சையால் போகத்தைக்கொடுக்கும் பரேச்சாப் பிராரத்தமும், என்பர் = என்று மூன்று விதமாகச் சொல்லுவார்கள் பெரியோர்கள், [இச்சாப் பிராரத்தத்தைத் தெரிவிக்கின்றார்] பத்தியமதை வழுவினர் = பத்தியத்தை விட்டவர்கள் அதாவது அபத்தியத்தைச் செய்கின்றவர்கள், மிகுசோரர் = மிகவும் திருடுபவர்கள், மன்னன் மனையாளை நண்ணினோர்=அரசன் மனைவியைப் புணருகின்றவர்கள், நழுவுறும் அனர்த்தம்வரும் எனவுணர்ந்தும் = பிராணன் நீங்கும்படியான ஆபத்து உண்டாகுமென்றறிந்தும், முன்வினையினால் நச்சியிடுவார் = பிராரத்த கருமத்தால் அபத்தியம் முதலியவற்றை இச்சிக்கின்றார்கள் எ—று. ஆல்—அசை. 89

(அ—கை)

அபத்திய சேவை முதலியவற்றினிச்சைக்குப் பிராரத்த கருமத்தின் பலத்தன்மையெதனாலறியப்படுகிறது என்று சங்கித்து நிவர்த்திக்க முடியாமையாலென்றபிப்பிராயப்பட்டுக் கூறுகின்றார்.

இதனை யிவணீக்க விறைவ னவனாலு
மெளியதல வாகு மிறைவனே
திதமருவு கீதை தனிலுரிய பார்த்தன்
றெரிவுற நிகழ்த்த லாலுமே
நிதவறிவு ளோருந் தமபகுதி தன்னி
னிகரொழுகு வார்க ளுளமே
யதனிலுயி ரேகு மொருவுத லெவர்க்கு
மரிதரிது தேர்ந்து தேறுவாய். 90

(ப—ரை) இவண்=இந்த உலகில், இதனை நீக்க=அபத்தியம் முதலியவற்றை விலக்க, இறைவனவனாலும் = பரமேசுரனாலும்,

எளியது அலவாகும்=சுலபமன்றும், அசக்கியமாமென்பது பொருள், [அபத்தியம் முதலியவற்றை இச்சிக்கின்றார்களென்பது எதனால் அறியப்படுகின்றது எனிற் கூறுகின்றார்] இறைவனே = ஈசுரனே, திதமருவு கீதைதனில்=ஒன்றாலும் பாதிக்கப்படாத பகவற்கீதையில், உரிய பார்த்தன் தெரிவுற = யோக்கியனான அருச்சுனனறியும் பொருட்டு, நிகழ்த்தலாலும்=போதித்தலாலும் [கீதா வாக்கியத்தைப் படிக்கின்றார்] நித அறிவுளோரும் = ஸ்திரமான விவேகஞான முடைய புருஷரும், தமபகுதி தன்னின் நிகர்=தமது பிரகிருதியின் அனுசாரமாக, நாளும் ஒழுகுவார்கள்=எப்போதும் சேஷ்டிப்பார்கள், (அறிவுளோருமென்றமையால் மூர்க்கரைப்பற்றிச் சொல்லவேண்டிய தென்னை ஆகையால்) அதனில் = பிரகிருதியினால், உயிர்ஏகும் = சீவர்கள் செல்லுவார்கள், பிரகிருதியையடைந்திருக்கின்றார் களென்பது பொருள், ஒருவுதல்= (என்னாலாவது அன்னியராலாவது செய்யப்பட்ட பிரவிருத்தி நிவிருத்திகளின்) நிரோதம், எவர்க்கும் அரிது அரிது=யாருக்கும் அருமை அருமை, யாரை என்ன செய்யும், ஒன்றுஞ்செய்யாதென்பது பொருள், அதாவது எனது நிரோத வடிவ ஆஞ்ஞையைப் பரிபாலனம் பண்ணுதல் எவர்க்கும் துர்லபமாம், தேர்ந்து தேறுவாய் = இவ்விஷயத்தை நன்கு விசாரித்துத் தெளிவாயாக எ—று.

பிரகிருதி=பூர்வஞ்செய்யப்பட்ட தருமா தருமம் முதலியவற்றின் சம்ஸ்காரம் வர்த்தமான சன்மத்தின் ஆதியில் அபிவியத்தமாகி யிருப்பது. ஏகாரங்கள்—அசைநிலைகள். 90

(அ—கை)

தீவிர பிராரத்தத்தைப் பரிகரிக்க முடியாதென்பதில் வேறு வசனத்தின் சம்மதியைக் கூறுகின்றார்.

விரை வாகிமீது வருமீது தன்னை
விடவேலு மென்னி னன்று
துரி சேகிராம நளதர்மர் மிக்க
துயரால் வருந்த லொணுமா
வுரை யாடமட்டி னிறைநீர்மை யானி
யுறுமோ விறைக்கி றைவனே
புரை சேரிவற்றை வரவே விரைந்து
புரிவான் பொருந்த வதனால். 91

(ப—ரை) விரைவாகி = வேகமாய், அதாவது அவசியமாய், மீதுவரும் ஈதுதன்னை = தன்மேல் வருகின்ற இத்துக்கங்களை, விட ஏலும் என்னின் = நிவர்த்திக்க முடியுமென்று சொல்லின், அன்று = அப்போது, துரிசுஏகு = குற்றமற்ற, இராம நளதர்மர் = ஸ்ரீராமரும் நளச்சக்கரவர்த்தியும் யுதிஷ்டிரரும், மிக்க துயரால் = மிகுந்த துக்கங்களால், வருந்தல் ஒணுமா = வருத்தமடைதல் பொருந்துமா பொருந்தாது ஆதலால் அது நிவர்த்திக்கத்தக்கதன்று [பிராரத்த கருமம் பரிகரிக்கப்படாததாமேல் அதன் பரிகாரத்தில் அசமர்த்தனை ஈசுரனுக்கு அநீசுரத்தன்மைநேரும் என்று சங்கித்துக் கூறுகின்றார்] உரையாடு அம்மட்டின் = சொல்லா நின்ற பிராரத்தத்தை நிவர்த்திக்க முடியாத அவ்வளவு மாத்திரத்தால், இறைக்கு இறைநீர்மை = ஈசுரனுக்கு ஈசுரத்தன்மை, ஆனி உறுமோ = குறைவையடையுமா அடையாது [எதனாலெனிற் கூறுகின்றார்] இறைவனே = பரமேசுவரனே, புரைசேர் இவற்றை = குற்றத்தோடு கூடிய இத்துக்கங்களை, விரைந்துவரவே = அவசியமுண்டாகவே, பொருந்த புரிவான் = பொருத்தமாகச் செய்வான், அதனால் = அக்காரணத்தினால், அனீசுரத்துவப் பிராப்தியின்றுமென்பது பொருள் எ—று. 91

(அ—கை)

இப்படி விஸ்தாரமாக இச்சாப் பிராரத்தத்தைக் கூறி அனிச்சாப் பிராரத்தத்தைச் சொல்ல ஆரம்பிக்கின்றார்.

இச்சை யறமேவு முன்னை வினையுள்ள
தென்றிடல் கிரீடி வினவப்
பச்சை நிறனேது முத்தரவு கொண்டு
பார்வை யிடலாகு மதுகே
ளச்சுத விமாந்த ராசையற நின்று
மியாதுகொ டியங்கி யரைய
னுச்ச வலியான்மிக் கேவவியை வான்போ
லோடியுல கத்தி னுழல்வார். 29

(ப—ரை) இச்சை அறமேவு முன்னைவினை = அனிச்சாப் பூருவக பிராரத்த கருமம், உள்ளது என்றிடல் = இருக்கிறதென்பதை,

கிரீடிவினவ = அருச்சுனன் சங்கிக்க, பச்சைநிறன் ஓதும் உத்தரவு கொண்டு = அதற்குக் கார்வண்ணனை ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லுகின்ற சமாதானத்தால், பார்வையிடலாகும் = அறியலாம், [அச்சங்கை சமாதானங்களைக் கூறுதற்பொருட்டு சிஷ்யனையபிமுகஞ் செய்கின்றார்] அது கேள் = அவற்றைக் கேட்பாய், [அவற்றுள் அருச்சுனனது வினாவை முதலிற்றெரிவிக்கின்றார்] அச்சுத = கிருஷ்ண, இம்மாந்தர் = இந்தப் புருஷர்கள், ஆசை அறநின்றும் = இச்சை இல்லாதவராயிருந்தும், யாது கொடு இயங்கி = எதனால் பிரேரிக்கப் பட்டு, அரையன் உச்சவலியால் மிக்கு ஏவ = அரசனுனவன் உயர்ந்த ஆஞ்ஞை வடிவ பலத்தால் மிகவும் பிரேரணை செய்ய, இயைவான் போல் = (இச்சையின்றியே பயத்தால்) தொழிலிற் பிரவிருத்திக்கும் வேலைக்காரனைப்போல, ஓடி உலகத்தின் உழல்வார் = ஓடி உலக விஷயங்களில் மூழ்குகின்றார்கள், பாபத்தைச் செய்கின்றார்களென்பது பொருள் எ—று.

(அ—கை)

ஸ்ரீ கிருஷ்ணபகவானது உத்தரத்தைக் கூறுகின்றார்.

காம மிதுகோப மிராசத குணத்தின்
காரிய மிகுத் தருந்துறுந்
தீமை வினைரூப மிங்கி தனை நன்கு
தேர்தி பகையாகு மென்றே
தாம தனதான தான்செய் வினைதன்னிற்
றள்ளரு பிணிப்புண் டாற்றிட
நீமயல் கொளாமை மோகமது கூடி
நேர்ந்திடுவை தானவ சனாய். 93

(ப—ரை) இது = புருஷரைப் பிரவிருத்திப்பது, இராசத குணத்தின் காரிய காமம் = இரஜோகுணத்தினின்றுண்டாவதான காமமாம், கோபம் = (பிரசித்தமாகிய காமமே ஓர்போது குரோத ரூபத்தாலும் பரிணமிக்கிறது ஆகையால்) குரோதமாம், [அக்காமம் மீண்டும் எப்படிப்பட்டதெனிற் கூறுகின்றார்] மிகுத்து அருந்துறும் = மிகுதியாக விஷய சமுகத்தைப் புசிக்கும், தீமை வினைரூபம் = பாபவடிவ முள்ளது, மகத்தாகிய பாபத்திற்குக் காரணமாவதால் உபசாரத்தால்

இதற்குப் பாபவடிவமாம், ஆகையால், இங்கு = இந்த சமுசாரத்தில், இதனை = இந்தக் காமக் குரோதத்தை, பகையாகுமென்று நன்கு தேர்தி = சத்துருவாமென்று நன்ருய் அறிவாய், அபிப்பிராயமிதுவாம், பிராரத்த கரும வசத்தால் வெளிப்பட்ட இரஜோ குணத்தின் காரியங்களான காமக் குரோதங்களுள் யாதானும் ஒன்றற்கு புருஷனைப் பிரவிருத்திப்பிக்கும் தன்மையுண்மையால், அனிச்சையால் பிரவிருத்தி என்பது பொருள், [அற்றேல் ஈண்டு காமக் குரோதங்களுக்கே புருஷனைப் பிரவிருத்திப்பிக்குந்தன்மை தோற்றுகிறது; அனிச்சாப் பிராரத்தத்திற்கு அன்று என்ரு சங்கித்து அவ்வனிச்சாப் பிராரத்தத்திற்கே பிரவர்த்தகத் தன்மையைப் பிரதிபாதிக்கும் கீதா வாக்கியத்தைப் படிக்கின்ருர்] தாம = அஞ்சத்தக்கதும், தான்செய் = தன்ருற்செய்யப் பட்டதும், அதனுலேயே, தனதான = தன்னுடையதும் ஆகிய, வினை தன்னில் = கருமத்தால், தள்அருபிணிப்புண்டு = நீக்குதற்கரிய பந்தனத்தையடைந்து, நீ ஆற்றிட மயல் கொள்ளாமை = நீ எக்கருமத்தைச் செய்ய இச்சை செய்வதின்ருே அக்கருமத்தை, மோகமது கூடி = அவிவேகமுற்று, அவசனுய் = பரவசனுகி, நேர்ந்திடுவை = செய்வாய் எ—று.

ஆகையால் அனிச்சாப் பிராரத்தமுளது என்று அங்கீகரிக்கத் தக்கதென்பது கருத்து.

பிரவர்த்தகம் = பிரவிருத்தியைச் செய்தல்.

ஏ, தான்—அசை. 93

(அ—கை)

இப்போது பரேச்சாப் பிராரத்தமுளதெனக் கூறுகின்ருர்.

விழை யாருமல்ல விழை வாருமல்ல
வேற்ருே ரிரக்க முளராய்ப்
பிழை யார்சுகத்தோ டிடரார் வரீது
பிறரிச்சை பூர்வ வினையே
யிழை யாதுதேர்தி யெதைநச்சி யென்ப
திலதிச்சை யென்ற லெஙனுந்
திழை யாவவாவி னிகழ்வன்ற வாவின்
றிறலின்மை சுட்ட விதைபோல். 94

(ப—ரை) விழையாரும் அல்ல=அனிச்சையுடையவரும் அன்று, விழைவாரும் அல்ல=இச்சையுடையவரும் அன்று, மற்ருே, வேற்ருேர் இரக்கம் உளராய்=அன்னியரிடத்தில் தாக்ஷண்ணியம் உடையராய், அவர்களின் பிரீதியின்பொருட்டு, பிழைஆர் சுகத்தோடு இடர்ஆர்வர் = தோஷத்தோடு கூடிய சுகத்தையும் துக்கத்தையும் அனுபவிப்பார், ஆகையால், ஈது=இந்தச் சுகதுக்கங்களுக்குக் காரணமாயிருப்பது, பிறர் இச்சை பூர்வ விஜனயே = பரேச்சாப் பிராரத்த கருமமாம், என்று, இழையாது=உட்கலங்காது, தேர்தி=அறிவாய், இதனுலேயே தோஷதிருஷ்டியிருப்பினும் பிராரத்தத்தை நீக்க முடியாமையால் அதற்கு இச்சையையுண்டுபண்ணுந் தன்மையை நிவர்த்திக்க முடியாதென்பது கருத்து, [அற்றேல், தத்துவஞானிக்கும் இச்சையை அங்கீகரிக்கின் "எந்தப் பொருளிச்சித்து" என்னும் சுருதிக்கு விரோதமாமென்று வாதி வினவுகின்ருன்] எதை நச்சி என்பது=எப்பொருளை விரும்பி என்னுமிந்தச் சுருதியானது, இச்சை இலது என்றல் எங்ஙனம்=தத்துவ ஞானிக்கு ஒன்றிலும் இச்சை உண்டாவதில்லையென்று பிரதிபாதிப்பது எப்படிப் பொருந்தும்.[இந்தச் சுருதியினுல் இச்சையினின்மை சொல்லப்படுகிறதில்லை, மற்ருே உண்டாவதாகிய இச்சைக்கு சமர்த்தப் பிரவிருத்தி சனகத்துவமின்றெனப் போதிக்கப்படுகிறதெனப் பரிகரிக்கின்ருர்] திழையா அவாவின் இகழ்வு அன்று=நெருங்கிய ஆசையின் நிஷேதமன்று, மற்ருே, அவாவின் திறல் இன்மை=ஆசையின் பாதமாம்,[சொரூபமாக இச்சை இருப்பினும் சாமர்த்தியம் இன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்].சுட்ட விதைபோல்=வறுத்த விதைபோன்று எ—று. 94

(அ—கை)

சுருக்கமாகக் கூறிய பொருளை விஸ்தரிக்கின்ருர்.

எரியால் வெதும்பு விதை யுண்டுமேனு
மியைகாரி யங்க டருமோ
பெரியோர்த மிச்சை தொழி றந்திடாது
பினமித்தை யென்னு மறிவால்
எரியால் வெதும்பு விதை யங்குரித்த
லிலதேனு முண்ண வுரிய
பெரியோர்த மிச்சை யதுமற்ப போகம்
பெரிதாற்றி டாவி சனமே. 95

(ப—ரை) எரியால் வெதும்பு விதை=நெருப்பால் வறுக்கப்பட்ட பீஜம், உண்டுமேனும் = சுயம் சொரூபமாக இருப்பினும், இயை காரியங்கள் தருமோ = பொருந்தாநின்ற அங்குராதி காரியங்களைச் செய்யுமோ, செய்யாது. அதுபோன்று, பெரியோர்தம் இச்சை = அறிஞரது ஆசை (சுயம் சொரூபமாக இருப்பினும்) பினம் மித்தை என்னும் அறிவால்=ஆன்மாவினும் வேருன அனைத்தும் பொய் என்னும் ஞானத்தால், பாதிக்கப்பட்டபடியால், தொழில் தந்திடாது = விசனாதி காரியத்தைச் செய்யாது, [அப்படியானல் வித்துவானுக்கு இச்சையே அங்கீகரிக்கத்தக்கதன்ரும் பயனின்மை யால் என்ரு சங்கித்து பயனின்மை அசித்தமாம் போகவடிவ பயனிருத் தலாலென்ன திருஷ்டாந்த சகிதம் கூறுகின்ருர்] எரியால் வெதும்பு விதை=நெருப்பால் வறுக்கப்பட்ட (நெல் யவை முதலிய) பீஜமானது, அங்குரித்தல் இலதேனும் = முளைக்கேதுவாகாவிடினும், உண்ண உரிய = புசிக்க யோக்கியமாம், அதுபோல், பெரியோர்தம் இச்சை யதும் = அறிஞரது ஆசையும், அற்ப போகம்=சொற்ப போகத்தைச் செய்யும், பெரிது விசனம் ஆற்றிடா=மகத்தான விபத்து முதலிய விசனத்தைச் செய்யாது எ—று. 95

(அ—கை)

அற்றேல் கருமமே போகவாயிலாக விசனத்தையும் உண்டுபண்ணுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

போகமொடு போத லேபொருள தாலே
பூர்வவினை தானும் மாய்வுறும்
போகமது மெய்ம்மை யென்னு மயலாலே
போதரு மதன்கண் விசனம்
போகமிது மாய்தன் மாய்கவிது மேன்மேற்
போகநனி மிக்கு வளர்க
போகமிடை யூறு தீர்கதனி யன்யான்
போக மிதினென்றல் மயலே. 96

(ப—ரை) போகமொடு = போகத்தால், போதலே பொருளதாலே=விநாசமாதலே பயனுவதால், (சரிதார்த்தமாவதால்) பூருவவினைதானும் மாய்வுறும் = பிராரத்த கருமமானது நசித்துப்

போகும், பிராரத்த கருமம் போகமாத்திர ஹேதுவாதலால் விசனத்தை உண்டுபண்ணுவதன்றுமென்பது பொருள், [அப்படியானால் எதனால் விசனத்தினுற்பத்தியெனிற் கூறுகின்றார்] போகமது மெய்ம்மை என்னும் மயலாலே = போக்கிய விஷயங்கள் சத்தியம் என்னும் பிராந்தியினால், அதன்கண் = அப்போக்கிய விஷயங்களில், விசனம் போதரும் = விபத்து முதலிய விசனமுண்டாகும், [விசனத்திற்கேது வாகிய பிராந்தியைக் காட்டுகின்றார்] போகமிது மாய்தல் மாய்க = இந்தப்போகம் விநாசமாகாதிருக்குக, இது போகம் மேன்மேல் நனிமிக்கு வளர்க = இந்தப்போகம் உத்தரோத்தரம் மிகுதியாக விருத்தியாகுக, போகம் இடையூறு தீர்க = இந்தப்போகம் விக்கின மின்றியிருக்குக, போகமிதின் தனியன் யான் = இந்தப்போகத்தால் நான் கிருதார்த்தனாகின்றேன், என்றல் மயலே = என்றிவ்விதம் உண்டாதல் பிராந்தியாம், அந்தப் பிராந்தியினால் விசனமுண்டாகின்ற தென்பது பொருள் எ—று.

போகமொடு என்பதில் ஒடு கருவிப் பொருளில் வந்தது. ஊசியொடு குயின்ற,கொடியொடு துவக்குண்டான் என் புழிப்போல.96

(அ—கை)

பிரசங்கத்தால் பிராந்தியின் பரிகாரோபாயத்தைக் கூறுகின்றார்.

இயலாதெ நாளு மியலாத தாகு
மியல்வ தெனின் மாறுறுதென்
றுயர்போத மெண்ண விடமாய்வு செய்வ
தொழிவிக்கு மந்த மயலை
வியனேது போக நிகரேனு மூடன்
விசனிப்ப னல்ல னறிஞன்
வயமேவு றுத பொருளெண் ணின்மத்த
வருமே மிகுத்த விசனம். 97

(ப—ரை) இயலாது = உண்டாகத்தகாதது, எநாளும் இயலாத தாகும் = எப்போதும் உண்டாவதின்றாம், இயல்வது எனின் = உண்டாக யோக்கியமாயின், மாறுஉறுது = மாறுபடாது மற்றோ அவசியம் உண்டாகும், என்று உயர்போதம் = என்றிவ்விதமுண்டாகின்ற

மேலான ஞானம், வியன்ஏது=பெருமைக்குக் காரணமாய், எண்ண விடம் மாய்வு செய்வது=சிந்தையாகிய விஷத்தை நாசஞ்செய்வதாய், அந்தமயலை ஒழிவிக்கும்=முன்சொல்லிய பிராந்தியை நிவர்த்திக்கும். ஈண்டு சிந்தையாவது, இந்த சிரேயஸ் எனக்கு எப்போது உண்டாகும் இந்த அனிஷ்டம் எப்போது நிவர்த்தியாகும் என்பது முதலியது. அது விஷம்போன்று தன் சம்பந்தியாகிய புருஷனை நாசஞ்செய்வதால் விஷமெனப்பட்டது, [அற்றேல் ஞானி அஞ்ஞானியிருவருக்கும்போகம் சமானமாயின் ஒருவனுக்கு விசனமும் மற்றொருவனுக்கு அதனின்மை யும் சித்திப்பதெதனால் என்று சங்கித்து விபரீத ஞானத்தின் உண்மை யின்மைகளால் விசனமுண்டாதல் உண்டாகாமை வடிவ பேதத்தின் சித்தியாமெனக் கூறுகின்றார்] போகம் நிகரேனும் = (தத்துவத்தை அறிந்தவனுக்கும் அறியாதவனுக்கும்) போகம் சமானமாயினும், மூடன் விசனிப்பன் = பிராந்தியினையுடைய புருஷன் விபத்தையடைவன், அறிஞன் அல்லன் =ஞானி விசனமுறான், [பிராந்திக்கு விசன காரணத் துவமெப்படியெனிற் கூறுகின்றார்] வயம் மேவுறாத பொருள்=தனது வசமாகாத பதார்த்தங்களின், மத்த எண்ணின்=திடசங்கற்பத்தால், மிகுந்த விசனம் வரும்=அதிக விபத்து உண்டாகும் எ—று.

ஏ—அசை. 97

(அ—கை)

விவேகிக்கு விசனத்திற்கேதுவான பிராந்தியினின்மையைத் தெரிவிக்கின்றார்.

வருபோக மாயை மயமென்று கண்டு
வளர்காத னீத்த பெரியோர்
பருகா விருந்து நினையா ரெவாறு
பகரந்த விசனம் வருமே
கருதாய் கனாவிந் திரசால மொத்துக்
கருதரு விசித்திர வடிவா
யுருநோக்கின் மாயுஞ் சகமென்று கண்டோ
ருணவாவ லுற்றிடு வரோ. 98

(ப—ரை) வருபோகம்=கருமவசத்தால் வருகின்ற போகங்களை, மாயை மயம் என்று கண்டு=மாயையின் காரியமாம் அதாவது மித்தை

யாம் என்றறிந்து, வளர்காதல் நீத்த பெரியோர்=அதில் எழுகின்ற ஆசையையகற்றிய அறிஞர்கள், பருகா இருந்தும் = போகங்களைப் புசிப்பினும், நினையார்=சங்கற்பஞ் செய்யார், பகர் அந்த விசனம் எவாறு வரும்=சொல்லாநின்ற அந்த விபத்து முதலிய அநேகவித துன்பம் எப்படியுண்டாகும், [அற்றேல் போகங்களை மித்தையாம் என்றுணரினும் அப்போதுள்ள சுகத்திற்குக் காரணமாவதால் அவை களில் ஆசையின்னிவர்த்தியெப்படியாகுமென்று சங்கித்து அநேகப் பிரகாரமான தோஷத்தைக்காண்டலால் ஆசையின் நிவர்த்தியுண்டாம் எனக் கூறுகின்றார்] கனா இந்திரசாலம் ஒத்து=சொப்பனத்திற்கும் இந்திர சாலத்திற்கும் சமானமாய், கருதுஅரு விசித்திரவடிவாய்= அசிந்தியரசனான்மகமாய், உருநோக்கின் மாயும்=திருஷ்ட நஷ்ட சுபாவமாய், சகம் என்று கண்டோர் = உலகம் இருக்கின்றதென்று பார்க்கிறவர்கள், உணவு ஆவல் உற்றிடுவரோ = போகங்களில் ஆசையை அடைவரோ, அடையார்கள், கருதாய் = நீ இதனை விசாரிப்பாய் எ—று.

எவ்வாறு என்பது எவாறு என இடைக்குறையாயிற்று.

ஏ—அசை. 98

(அ—கை)

அற்றேல் கூறிய சொப்பன இந்திரசால சாதி ருசியாதி ஞான மிருப்பின் ஆசக்தியுண்டாகாது என்பது சரிதான். அந்த ஞானம் எதனாலுண்டாகுமென்று சங்கித்து அந்த ஞானத்தினுற்பத்தியுபாயங் கூறுகின்றார்.

தனதாங் கனவை யெதிர்கண்டு கண்டோன்
றனனவை யிருமை தனையுந்
தினநாளு மீள மதிமைய நீர்ந்து
தெளிவாக நாடல் வேண்டுஞ்
சொனநீர்மை யாவு மவைகட்கு நேர்த
றுணிவுற்று நீடு பழகி
நனவான தன்க ணிசபுத்தி தீரி
னசைசேர்கி லாய்மு னிகரே. 99

(ப—ரை) தனது கனவை எதிர்கண்டு= தனது சொப்பனத் தையபரோக்ஷமாகப் பார்த்து, தன்நனவை கண்டோன் = தனது சாக்கிரத்தையும் அனுபவிப்பவன், இருமைதனையும்=கனவு நனவு களிரண்டினையும், மதிமையல் தீர்ந்து = பிரமாதமின்றியவனாய், தினநாளும் = ஒவ்வொருநாளும், மீள = அடிக்கடி, தெளிவாக = நன்றாக, நாடல்வேண்டும்= (சொப்பன சமானம் சாக்கிரமாமென்று) சிந்திக்கவேண்டும், சொன நீர்மை யாவும்=சொல்லிய தருமங்களனைத் தையும் அதாவது தாத்காலிக போககாரணத்துவம் பரிணதிவிரசத் துவம் விநாசித்துவம் முதலிய தருமங்களனைத்தையும், அவைகட்கு= நனவு கனவுகளிரண்டற்கும், நேர்தல் துணிவுற்று = சமானமாக நிச்சயித்து, நீடுபழகி=நீண்டகாலம் அனுசந்தானம் செய்து, நன வானதன்கண் = சாக்கிரத்தில், நிசபுத்திதீரின் = சத்தியத்துவபுத்தி நீங்கிடின்,முன்நிகர்=முன்போல அதாவது சகத்து சத்தியத்துவ புத்தி காலத்திற்போல, நசை சேர்கிலாய் = (சாக்கிரவஸ்துக்களில்) ஆசையையடையாய் அநுரக்தன் ஆகாயென்பது பொருள் எ—று.

ஏ—அசை.

பரிணதி விரசத்துவம்=போகத்தின் முடிவில் சுகமில்லாமை. 99

(அ—கை)

அற்றேல் பிரபஞ்சகோசரமான மித்தியாத்துவ ஞானத்திற்கும் விஷயத்தின் சத்தியத்துவத்தையாசிரயித்துண்டாகின்ற போகத் திற்கும் பரஸ்பரம் விரோதமாவதால் மித்தியாத்துவ ஞானமிருக்கும் போது எவ்வாறு போகம் சித்திக்கும் என்று சங்கித்து போகத்திற்கு விஷய சத்தியத்துவத்தினபேக்ஷையின்மையினால் மித்தியாத் தன்மையின் ஞானத்திற்கும் போகத்திற்கும் விரோதமின்றெனப் பரிகரிக்கின்றார்.

இந்திர சால மிந்தத் துவித மெண்ணரு
சித்திர மாதலி னென்னுஞ்
சிந்தனை நீங்கார்க் கூழ்வினை யாலே
சேர்தரு பயனுற் றானே தானி
சந்தத மாமெய் யறிவுக் கிந்திர
சாலமெ னுந்திண் ணெண்ணினிற் பந்த
மந்தமி லூழுக் குயிர்சுக துக்க
மருளுதன் மிசையே யாக்கிர கந்தான். 100

(ப—ரை) இந்தத்துவிதம் = இந்தபோக்கிய சமூகம், எண்ணரு சித்திரமாதலின் = அசிந்தியரசனையாமாதலால், இந்திர சாலம் = இந்திரசாலம் போன்று பொய்யாம், என்று யுத்தியால் அநுசந்தானஞ்செய்து, என்னும் சிந்தனை சந்ததம் நீங்கார்க்கு = இவ்வித ஸ்மிருதியோடு கூடி எப்போதும் இருக்கும் வித்துவானுக்கு, ஊழ்வினையால் சேர்தரு பயனுல் = பிராரத்த கருமத்தாற் பொருந்தா நின்ற சுகதுக்கங்களின் அநுபவத்தால், ஏது ஆனி = (மித்தியாத் துவாநு சந்தானத்திற்கு, என்ன குறைவு, யாதொரு குறைவுமின்றும், அல்லது மித்தியாத்துவாநு சந்தானத்தால் போகத்திற்குத்தான் என்ன குறைவு, மித்தியாத்துவ ஞானமும் பிராரத்தமும் வெவ்வேறு விஷயத்தையுடையனவாயிருத்தலின் ஒன்றற்கொன்று விரோதமின்று மென்பது கருத்து, [வெவ்வேறு விஷயகத்துவத்தையே தெரிவிக் கின்றூர்] மாமெய்யறிவுக்கு = பிரமத்தை விஷயஞ் செய்யுஞ் சிறந்த தத்துவ ஞானத்திற்கு, இந்திரசாலமெனும் திண்ணணில் = இந்திர சாலம்போன்று சகத்துமித்தையென்னும் திடமாகிய அனுசந்தானத் தில், நிர்ப்பந்தம் = ஆக்கிரகமாம், போகத்தின்னிவர்த்தியிலன்று, அந்தம் இல் ஊழுக்கு = போகத்தாலன்றி நாசமாகாத பிராரத்த கருமத்திற்கு, உயிர் சுகதுக்கம் அருளுதல் மிசை = சீவனுக்கு சுகதுக்கங் களைக் கொடுப்பதில், ஆக்கிரகம் = நிர்ப்பந்தமாம் போகத்திற்கு சத்தியத்துவத்தைச் சம்பாதிப்பதிலன்று எ—று.

அந்தம் இல் = அளவில்லாத, எனவும் பொருள் பொருந்தும். தான், தான், ஏ—அசை நிலைகள். 100

(அ—கை)

இங்ஙனம் தத்துவ ஞானத்திற்கும் பிராரத்த கருமத்திற்கும் விபின்ன விஷயகத்துவத்தைக் காண்பித்து அனுமானப் பிரயோகத் தைக் கூறுகின்றூர்.

வித்தையும் முன்வினை யும்பகை யாவாம்
வேற்றுமை விடய மாதலி னுலே
தத்துறு மிந்திர சால விநோதந்
தனையறி வோரா லுந்தெரி படுமே
யொத்திடு முன்வினை சகமெய் யாக்கி
யூட்டுறு மென்று லேயப் போது
புத்தநல் வித்தைக் காகும் விரோதி
போகத் தளவான் மெய்ம்மை யுருதே. 101

(ப—ரை) வித்தையும் முன்வினையும்=தத்துவ ஞானமும் பிராரத்த கருமமும், பகையாவாம் = பரஸ்பரம் விரோதிப்பதின்றும், வேற்றுமை விடயமாதலினுல்=பின்ன விஷயமுடையதாதலால், ரூபரச ஞானம்போன்று, சர்க்கரையில் வெண்மை வடிவமும் மதுர ரசமுமிருக்கின்றன. இவ்விரண்டன் ஞானம் பின்ன வஸ்துக்களாகிய குணவடிவங்களை விஷயஞ் செய்வனவாயிருத்தலின் ஒன்றற்கொன்று விரோதத்தையடைகிறதில்லை, அது போல பிரபஞ்சத்தின்கண் மித்தியாத் தன்மையும் சுகதுக்கங்களின் சாதனத் தன்மையுமாகிய இரண்டு தருமங்களிருக்கின்றன. இங்ஙனம் பின்னமாயுள்ள மித்தியாத் தன்மையினையும் சுகதுக்கங்களின் சாதனத் தன்மையினையும் முறையே தத்துவ ஞானமும் பிராரத்த கருமமும் விஷயஞ் செய்வனவாயிருத்தலின் ஒன்றற்கொன்று விரோதத்தையடைவதில்லை என்பது பொருள், [போக்கியத்தின் மித்தியாத்துவ ஞானம் போகத்தைப் பாதிப்பதன்றென்பது எங்கே காணப்பட்டது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] தத்து உறும்=மித்தையாகப் பொருந்திய, இந்திரசால விநோதந்தனை = இந்திரசால சம்பந்தி சமத்கார விசேஷத்தை, அறிவோராலும் = இது இந்திரசாலமென்று அறிகின்ற புருஷர்களாலும், தெரிபடுமே = அவ்விநோதம் பார்க்கப்படுகின்றதல்லவா, பிரசித்தமென்று பொருள், [மேலும், தத்துவ ஞானத்திற்கும் பிராரத்த கருமத்திற்கும் விரோதமிருக்கிறதென்று கூறும் வாதியை வினவ வேண்டியதாவது, பிராரத்த கருமம் வித்தைக்கு விரோதியா அல்லது வித்தை பிராரத்த கருமத்திற்கு விரோதியா. அவற்றுள் பிராரத்த கருமம் வித்தைக்கு விரோதியாமென்னும் முதற்பக்ஷம் பொருந்தாதெனக் கூறுகின்றார்] ஒத்திடும் முன்வினை=பொருந்தாநின்ற பிராரத்த கருமமானது, சகம் மெய்யாக்கி ஊட்டுறும் என்றால்=போக்கிய ஜாதத்தைச் சத்தியமாக்கி சீவனுக்கு சுகதுக்கங்களைக் கொடுக்குமெனின், அப்போது புத்த நல் வித்தைக்கு விரோதி ஆகும்= அப்பொழுது (வித்தையின் விஷயமான மித்தியாத்துவத்தையபகரித்தலால்) பிரமஞானத்திற்கு விரோதியாகும், அப்படிச் செய்கிறதில்லை மற்றே போகத்தையே கொடுக்கின்றது. ஆகையால் பிராரத்த கருமம் வித்தைக்கு விரோதியன்றன்பது கருத்து, [போகத்தின் பலத்தாலேயே போக்கியத்திற்கு சத்தியத்துவமுமாகுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்] போகத்து அளவால் = போகமாத்திரத்தால், மெய்மை உறுது=போக்கியம் சத்தியமாகாது எ—று.

சகத்து சத்தியம் போக்கியத் தன்மையால் என்னுமிடத்து திருஷ்டாந்தமின்றென்பது கருத்து.

ஜாதம்=கூட்டம். ஏகாரங்கள்—அசைநிலைகள்.

விரோதி=சத்துரு, அதாவது கெடுப்பது. 101

(அ—கை)

அற்றேல் பொய்ப்பொருள்களால் போகமுண்டாகிறதென்பதிலும் திருஷ்டாந்தமின்றுமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

கற்பித சொற்பன மெனநன வின்கண்
காண்பொரு ளாற்போ கங்குறை வறவாஞ்
சிற்பொரு ளுலகை யழிக்கின் வினைக்குத்
தெவ்வா மற்றது பொய்யறி வாலே
யற்பமு மழியா துலகோ ரதையழி
யாமே யிந்திர சாலமி தென்றே
பொற்புற வறிவர வாறழி யாமே
போகம் பொய்யெனு மறிவு பொருந்தும். 102

(ப—ரை) கற்பித சொற்பனம் என=மித்தையாகிய சொப்பன பதார்த்தங்களால் போகங்குறைவின்றியுண்டாவதுபோல், நனவின்கண் காண்பொருளால்=சாக்கிரத்திற் பார்க்கப்பட்ட பதார்த்தங்களாலும், போகம் குறைவுஅற ஆம்=போகம் பூரணமாக உண்டாகும், [வித்தை பிராரத்த கருமத்திற்கு விரோதியாம் என்னும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாதெனக் கூறுகின்றார்] சிற்பொருள் = வித்தையாகிய வஸ்து, உலகை அழிக்கின்= (இது ரஜதமன்று என்று நிஷேதிக்கும் ஞானம்போன்று பிரதீதியாகின்ற) போக்கிய சொரூபத்தைக் கெடுக்கின், வினைக்குதெவ்வாம்= (அப்போது பிராரத்த கருமபோகமாகிய சுகதுக்கானுபவத்தின் சாதனத்தையபகரித்தலால்) பிராரத்த கருமத்திற்கு விரோதியாம், போக்கிய சொரூபத்தைக் கெடுப்பதின்று மற்றோ மித்தியாத்துவத்தையே யுணர்த்துகின்றது ஆகையால் வித்தை பிராரத்த கருமத்திற்கு விரோதியன்றென்பது கருத்து, [மித்தியாத்துவ போதனத்தாலேயே சொரூபத்தையும் கெடுக்குமென்று சங்கித்துக் கூறுகின்றார்] பொய்அறிவால்=மித்தையாத்துவ ஞானத்

தால், அது அற்பமும் அழியாது=போக்கிய சொரூபம் கொஞ்சமும் கெடாது, இந்திரசாலம் முதலியவற்றில் சொரூப விநாசமின்றியும் மித்தியாத்துவ ஞானங்காண்டலால் என்பது கருத்து, [இதனையே விஸ்தரிக்கின்றார்] உலகோர்=சனங்கள், அதை அழியாமே=இந்திர சால சொரூபத்தைக் கெடுக்காமலே, இந்திரசாலம் இது என்றே பொற்புற அறிவர்=இது இந்திரசாலமென்று நன்றாயுணருவார்கள் அவாறு=அதுபோல, போகம் அழியாமே=போக்கிய சொரூபத்தை கெடுக்காமலே, பொய்எனும் அறிவு பொருந்தும்=மித்தையென்னும் ஞானம் உண்டாகும் எ—று.

மற்று, ஏ—அசைநிலைகள்.

போதனம்=அறிவித்தல்.

அவ்வாறு என்பது அவாறு என இடைக்குறையாயிற்று. 102

(அ—கை)

"எப்போது வித்துவானுக்கு சகலமுமான்மாவேயாகின்றதோ அப்போது எந்த வஸ்துவை எந்தக் கரணத்தால் பார்ப்பன்" என்பது முதலிய சுருதி பார்ப்பவன் பார்த்தல் பார்க்கப்படும் பொருள் ஆகிய இம்மூன்றினின்மையை உணர்த்துகின்றது. ஆகையால் உற்பத்தி யாகின்ற வித்தையானது சகத்தை விநாசமே செய்யும். இப்படியாகும் போது வித்துவானுக்கு போகமுமெப்படிக் கூடுமென்று சுருதியினை ஆசிரயித்துச் சங்கிக்கின்றான்.

எங்கிவ னுக்குல கான்மா வாமங்
கெவனெத னலெத னைக்கண் டிடுவான்
கொங்கெதை மோப்பன் புகலுவ னெனவுங்
குமுறுறு மறையத னற்சக நூறிப்
பொங்கு நலறிவெழு மலதிலை யதனற்
போகமெ வாறறி ஞர்க்குறு மென்னி
னிங்கிது கேடுயி லல்லது முத்தி
யியைதரு விடய மெழிற்சுரு திக்காம். 103

(ப—ரை) எங்கு=எந்த ஞான காலத்தில், இவனுக்கு=இவ்வித்துவானுக்கு, உலகு ஆன்மாவாம்=இவ்வனைத்துமிவ்வான் மாவே என்னும் ஞானத்தால் சகல சகத்தும் தனது வடிவமாயிற்றே,

அங்கு = அந்தக் காலத்தில், எவன் = எந்தத் திருஷ்டாவானவன், எதனுல் = எந்த நேத்திரமாகிய சாதனத்தால், எதனை = எந்த உருவத்தை, கண்டிடுவான் = பார்ப்பான், கொங்கு எதை மோப்பன் = (இந்தப் பிரகாரம் எந்தக் கிராணத்தால்) எந்த வாசனையைமுகருவன், (எதை எதனுல்) புகலுவன் = எந்த வாக்கியத்தை எந்த வாக்கிந்திரியத்தால் வசனிப்பன், இவ்விதம் இதர இந்திரிய வியாபாரங்களினின்மை தோன்றுதற் பொருட்டு எனவும் என்பதிலுள்ள உம்மையாம், எனவும் மறை குமுறும் = என்றிவ்விதம் வேதங்கள் அநேகந்தடவை திரிபுடியின் அபாவத்தைக் கோஷிக்கின்றன, [இவ்வாறு திரிபுடியின் அபாவத்தைக் கூறுவதனுலென்னையெனிற் கூறுகின்ருர்] அதனுல் = அக்காரணத்தால், சகம்நூறி = போக்கியத்தைக்கெடுத்து, பொங்கு நல் அறிவு எழும் = மேலாகிய நல்ல ஞானமுண்டாகும், அலது இலை = வேறு பிரகாரத்தாலின்ரும், அதனுல் = இக்காரணத்தால், அறிஞர்க்கு = வித்துவான்களுக்கு, போகம் எவ்வாறு உறும் = போகம் எப்படிப் பொருந்தும், என்னின் = என்று வினவின், [சுவாப்பியய சம்பத்தி என்னுஞ் சூத்திரத்தில் எங்கெவனுக்கு என்று கூறிய சுருதிக்கு சுழுத்தி மோக்ஷங்களுள் ஒன்றனை விஷயமாகவுடையதாக வியாக்கியானம் பண்ணப்பட்டிருத்தலால் வித்தையால் சகத்தின்னிவர்த்தியன்றெனப் பரிகரிக்கின்ருர்] இங்கு இதுகேள் = ஈண்டு இவ்வுத்தரத்தைக் கேட்பாயாக, துயில் அல்லது முத்தி = சுழுத்தி அல்லது மோக்ஷம், எழில் சுருதிக்கு = சிறந்த மேற்கூறிய சுருதிக்கு, இயைதரு விடயமாம் = பொருந்தாநின்ற விடயமாம் எ—று.

அதாவது சுழுத்தி காலத்திலும் மோக்ஷ காலத்திலும் சகத்தின் இன்மையைச் சுருதி கூறிற்று. ஞான காலத்திலன்ரும். 103

(இதுவுமது)

என்று சுவாப்பி யயசம் பத்தி
யென்னுஞ் சூத்திர நன்று விளம்பு
மன்றெனின் யாக்கிய வற்கியர் முதலோர்க்
காசா ரியராந் தன்மை யடாதாற்
றுன்றுபொய் நோக்கினி லறிவிலை துவிதச்
சுட்டில தேல்வாக் குரை செய்யாதா
மொன்றறு நிலையிற் றுவித மிலாமையி
ஞேதது வேநற் காட்சிய தென்னின். 104

(ப—ரை) என்று சுவாப்பியய சம்பத்தி என்னும் சூத்திரம் = இந்தப் பிரகாரம் சுழுத்தி மோக்ஷம் என்னுமிந்தப் பிரம்ம சூத்திரம், நன்று விளம்பும் = ஸ்பஷ்டமாகக் கூறுகின்றது, [இந்த சுருதிக்கு சுழுத்தியாதி விஷயத்தையங்கீகரியாவிடின் பாதகத்தைக் கூறுகின்றார்] அன்று எனின் = கூறிய சுருதிக்கு சுழுத்தியும் மோக்ஷமும்விஷயமன்று, மற்றே சகத்தின் நிவர்த்தி தான் விஷயம் என்று சொல்லின், யாக்கிய வற்கியர் முதலோர்க்கு = யாஞ்ஞவற்கர் முதலிய மகரிஷிகளுக்கு, ஆசாரியராந்தன்மை அடாது = உபதேசத்தின் ஏதுவான ஆசாரி யத்துவம் சம்பவியாது, [அதில் யுத்தியைக் கூறுகின்றார்] துன்று பொய் நோக்கினில் = (யாஞ்ஞியவற்கர் முதலானவர்களுக்கு) நெருங்கிய துவித திருஷ்டியிருக்குங்கால், அறிவு இலை = அப்போது அத்துவித ஞானமின்றாம் (இன்றாகவே ஆசாரியராகார்) துவிதச்சுட்டு இலதேல் = துவித திருஷ்டி இல்லையென்று சொல்லின், வாக்கு உரை செய்யா தாம் = (அப்போது போதிக்கத்தகுந்த சிஷ்யன் முதலானோர் தோற்றா மையால் ஆசாரியருடைய) வாக்கு சிஷ்யனைக் குறித்து போதிக்கும் பொருட்டு பிரவிருத்திக்காது, அதனால் வித்தையின் சம்பிரதாயத்திற்கு உச்சேதம் (நாசம்) நேரும்,. [அற்றேல் யாஞ்ஞியவற்கர் முதலா னோர்க்கு ஆசாரியத்துவ தசையில் இருக்கின்ற ஞானத்திற்கு வித்தி யாத்துவமுள்ளதே ஆயினும் அதற்கு அபரோக்ஷ வித்தியாத்துவ மின்று, துவைதப்பிரதீதியிருத்தலால் நிருவிகற்பக சமாதியிலோ துவைதப்பிரதீதியின்மையினால் அதுவே அபரோக்ஷ வித்தை யாம் என்று வினவுகின்றான்] ஒன்று அறுநிலையில் = யாதொன்றும் பிரதீதியாகாத நிருவிகற்பக சமாதியில், துவிதம் இலாமையின் = துவை தப்பிரதீதியின்மையினால், ஓது அதுவே = சொல்லாநின்ற அக்காலத்தி லுள்ள ஞானமே, நற்காட்சியது என்னின் = அபரோக்ஷ வித்தையாம் என்று சொல்லின் எ—று.

ஆல்—அசை.

நோக்கினில் என்னும் ஏழாம் வேற்றுமை காலத்தின்கண் வந்தது.

104

(அ—கை)

துவிதப் பிரதீதியினின்மையும் அதிவியாப்தியைச் செய்வதால் அதுவே அபரோக்ஷ வித்தையாமென்று கூறுதல் பொருந்தாதெனப் பரிகரிக்கின்றார்.

துயிலது வாமே மெய்யறி விலதேற்
சொன்னீ யாத்தும வுணர்வறி வென்றே
யயனினை வறலல வுபயமு மொத்தே
லாயிற் குடமரை யறிவொடு நிகழுஞ்
சொயநினை வொழிதலின் மசகத் தொனிமுத
ரோற்றம் பெருகலி னறிவிலை குடநேர்
துயவுணர் வறிவெனி லோசுகி யாவாய்
துட்ட மனத்தை நிறுத்துதல் வேண்டும். 105

(ப—ரை) துயில் அதுவாம்=சுழுத்தி அபரோக்ஷ வித்தையை உடையதாகும், துவிதப் பிரதீதியின்மையினுலென்பது கருத்து, [அதி வியாப்தியின் பரிகாரத்தை சங்கிக்கின்ருன்] மெய்அறிவு இலதேல்= (சுழுத்தியில் துவைதப் பிரதீதியில்லையாயினும்) ஆன்மகோசர ஞான மின்மையினுல் அதற்கு வித்தியாத்துவமின்றெனின், [அப்படியானுல் விவேக ஞானத்திற்கே வித்தியாத்துவம் பிராப்தமாம் துவைதப் பிரதீதி யினின்மைக்கின்ருமெனக் கூறுகின்ருர்] ஆத்தும உணர்வே=ஆன்ம விஷயக ஞானமே, அறிவு என்று நீ சொல்=வித்தையாமென்று நீ சொல்வாய், அயல் நினைவு அறல் அல=துவைத விஸ்மிருதியானது ஞானமன்று, [அற்றேல் கூடியிருக்கின்ற துவித அதரிசனமும் ஆன்ம ஞானமுமாகிய இரண்டற்குமே வித்தியாத்துவமாம். ஒவ்வொன்றற்கு அன்ருமென வினவுகின்ருன்] உபயமும் ஒத்தேல்=இரண்டும் சேர்ந்து வித்தையென்று சொல்லில், [துவித விஸ்மிருதிக்கும் வித்தையினம்ஸந் துவத்தையங்கீகரிக்கின் சடத்திற்கும் பாதி வித்தியாத்துவம் நேரும் எனப் பரிகரிக்கின்ருர்] ஆயின்=அப்படியானுல், குடம் அரை அறிவொடு நிகழும்=கடாதிகள் பாதி ஞானமுடையனவாய் விளங்கும், [இதில் யுத்தியைக் கூறுகின்ருர்] சொய நினைவு ஒழிதலின்=இயல் பாகவே சகல துவைத ஸ்மிருதியின்றியிருத்தலால், [இதே பக்ஷத்தில் சமாதியையுடைய புருஷருக்கு அரைஞானமுமின்ருமெனப் பரிகாசத்தோடு கூறுகின்ருர்] குடநேர்=கடத்திற்குச் சமானமாக, அதாவது கடாதிகளுக்கு துவைதவிஸ்மரணம் திடமாயிருப்பது போன்று, அறிவுஇலை=உனக்குச் சமாதியில் துவைத விஸ்மரண மின்று, மசகத்தொனி முதல் தோற்றம் பெருகலின்=கொசுவின் சத்தம் முதலிய விக்ஷேபங்கள் அதிகமாயிருத்தலின், [அற்றேல் ஆன்ம ஞானத்திற்கே வித்தியாத்துவமாம். துவைதவிஸ்மிருதிக்கு இன்று

என்று வினவுகின்ருன்] துயஉணர்வு அறிவு எனில்=ஆன்ம ஞானமே வித்தையாமென்று சொல்லில், [அது நமக்கு இஷ்டந்தான் என்னு மபிப்பிராயத்தால் ஆசீர்வாதஞ் செய்கின்ருர்] சுகி ஆவாய்=நீ சுக முள்ளவனுக வாழக்கடவாய், [அற்றேல் ஆன்ம ஞானந்தான் வித்தை, அது தோஷமுடைய சித்தத்தில் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் சித்ததோஷ நிவர்த்தியின் பொருட்டு சித்தவிருத்தி நிரோதம் செய்யத் தக்கதென்னுஞ் சங்கையையநுவதிக்கின்ருர்] துட்ட மனத்தை நிறுத்துதல்வேண்டும் (என்னின்) = தோஷ விசிஷ்டமனதை யோகாப்பியாசத்தால் அடக்க வேண்டுமென்று சொல்லில் எ—று.

பிற்கவியிலுள்ள என்னின் என்பது ஈண்டு கூட்டப்பட்டது. 105

(அ—கை)

அதனையங்கீகரிக்கின்ருர்.

என்னி னிறுத்தினி துறவது சம்மத
மிதுபொய் மயமென் றெளிதிற் றெரியி
னின்ன நயப்பினு மூடரி னயவா
னெதையிச் சித்தென வோதின தன்றே
பன்னுறு மறியார்க் குக்குறி பற்ரும்
பற்றெழு வாயுண் டறிஞர்க் கென்னும்
முன்னைய நூலுப யமுமிம் முறையான்
முரணு வாகலி னுரையொடு நிகழும். 106

(ப—ரை) இனிதுற நிறுத்து=சுகமாக அடக்குவாய், அது சம்மதம் = மனதை நிறுத்துதல் எங்களுக்குமிஷ்டந்தான், [சித்த நிரோதம் உமக்கு எதனுலிஷ்டமெனிற் கூறுகின்ருர்] இது பொய்மயம் என்று எளிதில் தெரியின் = (சித்ததோஷம் நீங்கிடின் அத்துவீதிய ஆன்ம ஞானத்தின் பொருட்டு இச்சிக்கப்படுகிற) சகத்தின் மித்தி யாத்துவமானது சுலபமாக பார்க்கப்படுகிறபடியினுல் சம்மதமா மென்பது பொருள், [இவ்வாறு எதை இச்சிப்பன் என்னும் மந்திராம் ஸத்தால் கருதப்பட்ட பொருளையுபபாதனஞ்செய்து அதை முடிக் கின்ருர்] இன்ன நயப்பினும் = இவ்வாறு அறிஞன் இச்சிக்கினும், மூடரின் நயவான் = அஞ்ஞரைப்போன்று இச்சியான், ஆகையால், எதை இச்சித்து என ஓதினது=எதையிச்சித்து என்று சொல்லப் பட்டது, [இவ்வாறு சுருதியின் அபிப்பிராயத்தை வருணித்தலில்

காரணங் கூறுகின்றார்] பன்னுறும் அறியார்க்கு குறிபற்றும் = சொல்லாநின்ற அஞ்ஞபுருஷருக்கு அடையாளம் ஆசையாம், அறிஞர்க்கு பற்று எழுவாய் உண்டு = ஞானிகளுக்கு ஆசை முதலியவை இருக்குக, என்னும் முன்னேய நூல் உயயமும் = என்கின்ற பழமை யாகிய சாஸ்திரமிரண்டும், இம்முறையால் = இந்தக் கிரமத்தால் அதாவது ஞானிக்குத் திடராகத்தினின்மையைக் கொள்ளுவதனுல் முரணு ஆகலின் = விரோதமின்மையின், உரையோடு நிகழும் = சார்த்தகமாம், அதாவது பொருளோடு கூடியதாகும் எ—று.

“அஞ்ஞனுக்கு சித்த சஞ்சாரத்திற்குரிய விஷயங்களிலுள்ள இராகம் சின்னம்மாம். எந்த விருக்ஷத்திற்கு பொந்துவில் அக்கினி யிருக்கிறதோ அதற்கு பசுமையேது” என்பது தத்துவ ஞானிக்கு இராகத்தை நிஷேதிக்கும் சாஸ்திரமாம். “பிரமஞான மாத்திரத்தால் உனக்கு முத்தியுண்டாகும். அதில் சாஸ்திரார்த்தம் சமாப்தியானதால் இராகாதிகள் இருக்குக பிரமஞானம் கெடுகிறதில்லை” என்பது அந்த ஞானிக்கே இராகத்தையங்கீகரிக்கும் சாஸ்திரமாம். தத்துவஞானிக்கு திடராகத்தினின்மையைக் கொள்ளும்போது இரண்டு சாஸ்திரமும் சார்த்தகமாகின்றது. ஏனெனின் இரண்டற்கும் விரோதமின்மையால் அதாவது இராகத்தை நிஷேதிக்கும் சாஸ்திரம் திட ராக விஷயக மாதலாலும் அதனையங்கீகரிக்கும் சாஸ்திரம் இராகாபாச விஷயகமாத லாலும் என்பது கருத்து.

அன்று, ஏ—அசைநிலைகள். 106

(அ—கை)

இவ்வாறு எதையிச்சிப்பன் என்னுமம்ஸத்தினபிப்பிராயத்தை வர்ணனை செய்து எவனது போகத்தின் பொருட்டு என்னுமம்ஸத்தின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

சகமித்தை யெனல்போல வொருதற் சொரூபஞ்
 சார்பொன்று மில்லாத தெனநன்கு காணின்
நுகர்கின்ற வுயிரில்லை யெனுமெண்ண மேவி
 நுவலிற்றெ வன்றுய்ப்ப வென்றேப்பின் மறை
சுகமெச்சு பதிசாயை முதலான வெல்லாந் [தான்
 தொடர்தன்ற னுகர்வின்பொ ருட்டிச்சி யாதாற்
றுகளற்ற தானுண்பொ ருட்டாகு மென்றே
 சுருதிக்கண் வெகுவாய்த் தொனிப்புற்ற தன்றே.
107

(ப—ரை) சகம்மித்தைஎனல்போல = சகத்தின் மித்தியாத்துவ ஞானத்தால் வாஸ்தவகாம்மியாபாவத்தின் விவக்ஷையால் எதை இச்சிப்பன் என்று சொல்லப்பட்டதுபோல், ஒரு தன் சொரூபம் சார்பு ஒன்றும் இல்லாதது என = ஒப்பற்ற ஆன்மசொரூபம் அசங்கமா மென்று, நன்கு காணின் = செவ்வையாய்ப் பார்த்தலினுல், நுகர்கின்ற உயிர் இல்லை எனும் எண்ணம் மேவி = வாஸ்தவபோக்தாவின பாவத்தை விவக்ஷித்து, ஒப்பு இல்மறைதான் = சமானமற்ற சுருதி யானது, எவன் துய்ப்ப என்று நுவலிற்று = "எவன் புசிக்க" என்று சொல்லிற்று, [அற்றேல் ஆன்மாவிற்கு போத்திருத்துவத்தின் நிஷேதம் அதன் பிராப்தி பூருவமாக சொல்லவேண்டும். பிராப்தியோ இன்றும். ஆன்மா அசங்கனுதலால் என்று சங்கித்து ஆன்மாவின்கண் ஆரோபிதபோத்திருத்தன்மை தனது அநுபவசித்தமாயிருத்தலினுல் போத்திருத்தன்மையின் பிராப்தி இன்றென்பது பொருந்தாது என்று அபிப்பிராயஞ்செய்து அதனையநுவதிக்கின்ற சுருதியைப் பொருளால் அநுசரிக்கின்றுர்] சுகம்மெச்சுபதிசாயை முதலான எல்லாம் = சுகத்தை விரும்புகின்ற கணவன் மனைவி முதலிய அனைவரும், தொடர்தன் தன் நுகர்வின் பொருட்டு இச்சியார்து = தம்மை சம்பந்தித்துள்ள அவ்வப்பிராணிகளின் போகத்தின் பொருட்டு விரும்பார்கள். மற்றே, துகள்அற்றதான் உண் பொருட்டாகும் என்று = குற்றமற்ற தனது போகத்தின் பொருட்டே விரும்புவார்களென்று, சுருதிக்கண் வெகுவாய் . தொனிப்புற்றது = உபநிடதங்களில் அதிகமாய் கோஷிக்கப்பட்டுள்ளது எ—று.

"அரேமைத்திரேயிபதியின் காமத்தின் பொருட்டுப் பதி பிரியனுகிறதில்லை" என்றாரம்பித்து "தனது காமத்தின் பொருட்டே சகலமும் பிரியமாகிறது" என்பது பரியந்தமான வாக்கிய சந்தர்ப்பத் தால் புருஷன் பெண்சாதி முதலிய பிரபஞ்சத்திற்கு ஆன்மாவின் போகசாதனத்துவம் பிரதிபாதிக்கப்படுகிறது. அதனுல் ஆன்மாவுக்கு போத்திருத்துவப் பிராப்தியாமென்பது பொருள்.

ஆல், அன்று, ஏ—அசைநிலைகள். 107

(அ—கை)

இவ்வாறு ஆன்மாவிற்கு போத்திருத்துவத்தைக் காண்பித்து அதனை அபவாதஞ்செய்தற்பொருட்டு போக்தாவை விகர்ப்பிக்கின்றுர்.

காரணங் கூறுகின்ருர்] பன்னுறும் அறியார்க்கு குறிபற்ரும் = சொல்லாநின்ற அஞ்ஞபுருஷருக்கு அடையாளம் ஆசையாம், அறிஞர்க்கு பற்று எழுவாய் உண்டு = ஞானிகளுக்கு ஆசை முதலியவை இருக்குக, என்னும் முன்னேய நூல் உயயமும் = என்கின்ற பழமை யாகிய சாஸ்திரமிரண்டும், இம்முறையால் = இந்தக் கிரமத்தால் அதாவது ஞானிக்குத் திடராகத்தினின்மையைக் கொள்ளுவதனல் முரண் ஆகலின் = விரோதமின்மையின், உரையோடு நிகழும் = சார்த்தகமாம், அதாவது பொருளோடு கூடியதாகும் எ—று.

"அஞ்ஞனுக்கு சித்த சஞ்சாரத்திற்குரிய விஷயங்களிலுள்ள இராகம் சின்னமாம். எந்த விருக்ஷத்திற்கு பொந்துவில் அக்கினி யிருக்கிறதோ அதற்கு பசுமையேது" என்பது தத்துவ ஞானிக்கு இராகத்தை நிஷேதிக்கும் சாஸ்திரமாம். "பிரமஞான மாத்திரத்தால் உனக்கு முத்தியுண்டாகும். அதில் சாஸ்திரார்த்தம் சமாப்தியானதால் இராகாதிகள் இருக்குக பிரமஞானம் கெடுகிறதில்லே" என்பது அந்த ஞானிக்கே இராகத்தையங்கீகரிக்கும் சாஸ்திரமாம். தத்துவஞானிக்கு திடராகத்தினின்மையைக் கொள்ளும்போது இரண்டு சாஸ்திரமும் சார்த்தகமாகின்றது. ஏனெனின் இரண்டற்கும் விரோதமின்மையால் அதாவது இராகத்தை நிஷேதிக்கும் சாஸ்திரம் திட ராக விஷயக மாதலாலும் அதனேயங்கீகரிக்கும் சாஸ்திரம் இராகாபாச விஷயகமாத லாலும் என்பது கருத்து.

அன்று, ஏ—அசை நிலேகள். 106

(அ—கை)

இவ்வாறு எதையிச்சிப்பன் என்னுமம்ஸத்தினபிப்பிராயத்தை வர்ணனே செய்து எவனது போகத்தின் பொருட்டு என்னுமம்ஸத்தின் அபிப்பிராயத்தைக் கூறுகின்ருர்.

சகமித்தை யெனல்போல வொருதற் சொரூபஞ்
சார்பொன்று மில்லாத தென நன்கு காணின்
நுகர்கின்ற வுயிரில்லே யெனுமெண்ண மேவி
நுவலிற்றெ வன்றுய்ப்ப வென்ருெப்பின் மறை
சுகமெச்சு பதிசாயை முதலான வெல்லாந் [தான்
தொடர்தன்ற னுகர்வின்பொ ருட்டிச்சி யாதாற்
றுகளற்ற தானுண்பொ ருட்டாகு மென்றே
சுருதிக்கண் வெகுவாய்த் தொனிப்புற்ற தன்றே. 107

(ப—ரை) சகம்மித்தைஎனல்போல = சகத்தின் மித்தியாத்துவ ஞானத்தால் வாஸ்தவகாம்மியாபாவத்தின் விவக்ஷையால் எதை இச்சிப்பன் என்று சொல்லப்பட்டதுபோல், ஒரு தன்சொரூபம் சார்பு ஒன்றும் இல்லாதது என = ஒப்பற்ற ஆன்மசொரூபம் அசங்கமா மென்று, நன்கு காணின் = செவ்வையாய்ப் பார்த்தலினால், நுகர்கின்ற உயிர் இல்லை எனும் எண்ணம் மேவி = வாஸ்தவபோக்தாவின பாவத்தை விவக்ஷித்து, ஒப்பு இல்மறைதான் = சமானமற்ற சுருதி யானது, எவன் துய்ப்ப என்று நுவலிற்று = "எவன் புசிக்க" என்று சொல்லிற்று, [அற்றேல் ஆன்மாவிற்கு போத்திருத்துவத்தின் நிஷேதம் அதன் பிராப்தி பூருவமாக சொல்லவேண்டும். பிராப்தியோ இன்ரும். ஆன்மா அசங்கனுதலால் என்று சங்கித்து ஆன்மாவின்கண் ஆரோபிதபோத்திருத்தன்மை தனது அநுபவசித்தமாயிருத்தலினால் போத்திருத்தன்மையின் பிராப்தி இன்றென்பது பொருந்தாது என்று அபிப்பிராயஞ்செய்து அதனையநுவதிக்கின்ற சுருதியைப் பொருளால் அநுசரிக்கின்ருர்] சுகம்மெச்சுபதிசாயை முதலான எல்லாம் = சுகத்தை விரும்புகின்ற கணவன் மனைவி முதலிய அனைவரும், தொடர்தன் தன் நுகர்வின் பொருட்டு இச்சியர்து = தம்மை சம்பந்தித்துள்ள அவ்வப்பிராணிகளின் போகத்தின் பொருட்டு விரும்பார்கள். மற்றே, துகள்அற்றதான் உண் பொருட்டாகும் என்று = குற்றமற்ற தனது போகத்தின் பொருட்டே விரும்புவார்களென்று, சுருதிக்கண் வெகுவாய் தொனிப்புற்றது = உபநிடதங்களில் அதிகமாய் கோஷிக்கப்பட்டுள்ளது எ—று.

"அரேமைத்திரேயிபதியின் காமத்தின் பொருட்டுப் பதி பிரியனாகிறதில்லை" என்றாரம்பித்து "தனது காமத்தின் பொருட்டே சகலமும் பிரியமாகிறது" என்பது பரியந்தமான வாக்கிய சந்தர்ப்பத் தால் புருஷன் பெண்சாதி முதலிய பிரபஞ்சத்திற்கு ஆன்மாவின் போகசாதனத்துவம் பிரதிபாதிக்கப்படுகிறது. அதனால் ஆன்மாவுக்கு போத்திருத்துவப் பிராப்தியாமென்பது பொருள்.

ஆல், அன்று, ஏ—அசைநிலைகள். 107

(அ—கை)

இவ்வாறு ஆன்மாவிற்கு போத்திருத்துவத்தைக் காண்பித்து அதனை அபவாதஞ்செய்தற்பொருட்டு போக்தாவை விகர்ப்பிக்கின்ருர்.

திகழ்கின்ற கூடத்த னுமென்கொ லுண்பான்
சிற்சாயை யாமென்கொ லலதாகு முபயான்
மகனென்கொல் கூடத்த னோர்பற்று மில்லா
மையினுண்ணு வானீர்மை மருவானெ ஞான்றும்
சுகதுக்க வபிமான வியல்கொள் விகாரந்
துய்ப்பென்பர் கூடத்த னுமேல் விகாரி
புகல்கின்ற விதுமாறு பாடாம் விகாரப்
புத்திக்க ணுறுபோலி வேறுகு மேனும். 108

(ப—ரை) உண்பான் = போகங்களைப் புசிப்பவன், திகழ்கின்ற, கூடத்தன் ஆம் என்கொல் = சுயஞ்சோதியாய் விளங்காநின்ற நிருவிகார ஆன்மாவா, அல்லது, சிற்சாயை ஆம் என்கொல் = சிதாபாசனா, அலது = அல்லது, உபயான்மகன் ஆகும் என்கொல் = கூடஸ்தனும் சிதாபாசனுமாகிய இருவருமா, [அவற்றுள் கூடஸ்தன் போக்தா என்னும் முதலாவது பக்ஷத்தை மறுக்கின்றார்] கூடத்தன் ஓர் பற்றும் இல்லாமையின் = கூடஸ்த ஆன்மா அசங்கனாதலால், உண்ணுவான் நீர்மை = போக்திருத்துவத்தை, எஞ்ஞான்றும் மருவான் = எப்போதுமடையான், [அசங்கத்துவமிருக்குக போக்திருத்துவமுமிருக்குக, என்ன தோஷமென்று சங்கித்துக் கூறுகின்றார்] சுகதுக்க அபிமான இயல் கொள்விகாரம் = சுகதுக்கங்களின் அபிமான வடிவ விகாரத்தை, துய்ப்பு என்பர் = போகமென்று சொல்லுவார்கள், கூடஸ்தன்விகாரி ஆமேல் = நிருவிகார வடிவ கூடஸ்தன் விகாரி வடிவ போக்தா ஆவனேல், புகல்கின்ற இது = இவ்வாறு சொல்வது, மாறுபாடாம் = வியாகாத தோஷமாம், அசங்க கூடஸ்தனுக்கு விகார வடிவ போகம் பொருந்தாது. கூடஸ்தத்தன்மை விகாரித்தன்மைகளுக்கு ஓரிடத்தில் சேர்ந்திருத்தல் பொருந்தாமையின் என்பது பொருள், [அப்படியானால் விகாரியாகிய சிதாபாசனுக்கு போக்திருத்துவம் கூடுமென்று சங்கித்து விகாரியாயினும் அதிஷ்டானமின்றி சிதாபாசனே சித்தியாது. அதனால் சிதாபாசனுக்கு போக்திருத்துவம் பொருந்தாதெனப் பரிகரிக்கின்றார்] விகார புத்திக்கண் உறு போலி = விகாரியாகிய புத்தியினதீனமாயுள்ள சிதாபாசன், வேறுகுமேனும் = விகாரியாயினும் எ—று.

வரும் பாட்டோடு முடியும்.

எஞ்ஞான்றும் என்பது எஞான்றுமென இடைக்குறையாயிற்று. 108

நிலைதப்பி மிகுமைய றனிநின்றி டாதே
நிலத்தாத லான்மற்றை யவனே புசிப்பான்
குலவேத மவ்வாத்து மாவைத் தொடங்கிக்
கூடத்தனே சேட மாமென்று கூறும்
இலகாத்து மாயாவ னெனயாஞ்ஞ வற்க
ரிதுதேற்றி விஞ்ஞான மயனைத் தொடங்கி
யலைவற்ற நிர்ச்சங்க மதைவிஞ்ச வைத்தா
ரான்மாவென் னெனலாதி யறிவாய் விளுலே. 109

(ப—ரை) மிகுநிலைதப்பி மையல்=சிறந்த அதிஷ்டானத்தை விட்டு பிராந்தி, தனி நின்றிடாதே = தனிமையாய் நிற்காதல்லவா, சிதாபாசன் விகாரியாகிய புத்தியினதீனனுதலால் தன்னிடத்தில் விகாரம் சம்பவிப்பினும் ஆரோபித சிதாபாசனுக்கு ஆரோபித வடிவத் தன்மையுண்மையால் அதிஷ்டானமாகிய கூடஸ்தனைவிட்டு சுதந்திர மாக இருப்பு சம்பவியாதபடியினுல் கேவல சிதாபாசனுக்கும் போக் திருத்துவம் சம்பவியாதென்பது கருத்து, [ஆகையால் கூடஸ்தனும் சிதாபாசனுமாகிய இருவரும் போக்தாவாம் என்னும் மூன்ருவது பக்ஷம் பரிசேஷித்தது எனக் கூறுகின்ருர்] ஆதலால் = தனித்தனி ஒவ்வொன்றற்கும் போக்திருத்துவம் சம்பவியாதபடியால், நிலத்து = உலகில் வியவகார தசையில், மற்றையவனே புசிப்பான்=அதிஷ்டான சகித சிதாபாசனே போக்தாவென்று சொல்லப்படுகிறது, பரமார்த்த மாகவோ விசிஷ்டத்துவமே பொருந்தாதென்பது கருத்து, [அற்றேல் "அசங்கனிப் புருஷன்" என்பதாதியிடங்களில் அசங்கத்துவம்போன்று "பிராணன்களில் யாதொரு இந்த விஞ்ஞானமயன்" என்பதாதியிடங் களில் புத்திசாக்ஷித்துவமும் கேட்கப்படுகிறபடியால் உபயான்மகம் என்னும் விசிஷ்ட வடிவ போக்திரு சொருபமும் பாரமார்த்திகந்தான். உலக வியவகாரமாத்திரத்தால் சித்தித்ததன்று என்ரு சங்கித்து சுருதிக்குப் பாரமார்த்திக போக்திருத்தன்மையில் தாற்பரியமின்மை யினுல் போக்தாவின் சொருபம் பாரமார்த்திகந்தான் என்று கூறுதல் பொருந்தாதெனப் பரிகரிக்கின்ருர்] குலவேதம் = பிரகதாரண்யகம் முதலிய சுருதி, அவ்வாத்துமாவைத் தொடங்கி=புத்தியையுபாதியாக வுடைய போக்திரு வடிவ ஆன்மாவை ஆரம்பித்து அதாவது அநுவாதஞ்செய்து, கூடத்தனே சேடமாம் என்று கூறும்=(புத்தியாதி கற்பனைக்கதிஷ்டானமான) சிதான்மாவே புத்தியாதி அனுன்மாக்களை

நிராகரித்தலால் பரிசேஷித்தது என்று சொல்லும், [அச்சுருதிகளுள் பிரகதாரண்ணியக வாக்கியத்தின் பொருளை முதலில் சுருக்கிக் கூறுகின்றார்] இலகு ஆத்துமா யாவன் என=விளங்கா நின்ற ஆன்மா தேகாதிகளுள்ளே எது என்று (சனக மகாராஜன்) வினவ, யாஞ்ஞு வற்கர் இது தேற்றி=யாஞ்ஞுவற்க மகரிஷியானவர் இவ்வான்மாவை போதிக்கின்றவராய், விஞ்ஞானமயனைத் தொடங்கி="பிராணன்களில் யாதொரு இந்த விஞ்ஞானமயன்" என்பது முதலிய வாக்கியங்களால் விஞ்ஞானமயனையாரம்பித்து, அலைவு அற்ற நிர்ச்சங்கமதை = "அசங்கனிப் புருஷன்" என்று அசல அசங்க கூடஸ்தனை, விஞ்ச வைத்தார்=பரிசேஷமாக்கினர், [இவ்வாறு பிரகதாரண்ணியக சுருதி யில் அசங்க ஆன்மாவின் பரிசேஷப்பிரகாரத்தைக் காண்பித்து ஐதரேயம் முதலிய இதர சுருதிகளிலும் அதனைக் காண்பிக்கின்றார்] ஆன்மா என் எனலாதி = "எதை நாங்கள் உபாசிக்கின்றேமோ அவ்வான்மா என்பது யாது" என்பது முதலிய எல்லா இடங்களிலும், அறிவு ஆய்வினாலே=ஆன்ம விசாரத்தினால்,

வரும் பாட்டோடு முடியும். 109

சீவன்றனைத்தொட்டு மேலான வறிவே
சேடிக்கு மென்றேது மான்மா விவேக
மோவுற்ற லாலந்த வுணர்வுண்மை தன்மே
லுறக்கொண்டு நுகர்தன்மை தனைமெய்ம்மை
யாவற்றி டானென்று முண்பான் றனக்கே [கருதி
யருந்தற்கு மகன்மாதர் முதல்காத லிப்பான்
றேய்வுற்ற வீதுலக வியல்பாகு மேலாஞ்
சுருதியினி தாவனுவ தித்ததல தன்றே. 110

(ப—ரை) சீவன்றனைத்தொட்டு = அந்தக்கரண விசிஷ்ட ஆன்மாவை ஆரம்பித்து, மேலான அறிவே=உயர்வாகிய பிரக்ஞா மாத்திர வடிவ கூடஸ்தனே, சேடிக்கும் என்று ஓதும்=பரிசேஷித்த தென்று சொல்லும், (இவ்வாறு வேறிடங்களிலும் காண்க) இப்படிச் சொல்லிய சுருதியைப் பரியாலோசனை செய்யும்பொழுது உபய ஆன்மகமான போக்தாவிற்கு மித்தியாத்துவமும் பாரமார்த்திக அசங்க கூடஸ்தனுக்கு அபோத்துருத்துவமும் சித்தித்தது, [அற்றேல் கூறிய ரீதியால் போக்தா மித்தையாமேல் பிராணிகளுக்கு அவனிடத்தில் சத்தியத்வ புத்தி எதனால் உண்டாகிறது என்று ஆசங்கித்துக்

கூறுகின்றார்] ஆன்மா=உலகப் பிரசித்தமான போக்தா, அவிவேகம் ஒவுற்றலால்=தனக்கு கூடஸ்தனில் நின்றும் விவேக ஞானம் இன்மையால், அந்த உணர்வு உண்மை=அந்த கூடஸ்தனிடத்தி லுள்ள சத்தியத் தன்மையை, தன்மேல் உறக்கொண்டு=தன்னிடத்தில் அத்தியாசஞ்செய்து, அதன் வாயிலாக, நுகர் தன்மைதனை மெய்ம்மை கருதி=தன்னிடத்திலுள்ள போக்துருத் துவத்தையும் சத்தியமாக நினைத்து, ஆ—என்றும் அற்றிடான் = அந்தோ ஓர் போதும் போகத்தைவிட இச்சியான், [அப்படியானால் அதாவது "ஆன்மா அபோக்தாவாயின் ஆன்மாவின் போகத்தின் பொருட்டு சகலமும் பிரியமாகிறது" என்று ஆன்மாவிற்குப் போக சாதனமாக மனைவி மைந்தன் முதலிய போக்கிய வஸ்துக்கள் சுருதியினால் எப்படிப்பிரதி பாதிக்கப்படுகிறது என்று சங்கித்து கூடஸ்த வடிவ ஆன்மாவிற்குப் போக சாதனம் பிரதிபாதிக்கப்படுகிறதில்லை, மற்றோ உலகப் பிரசித்த மான உபயான்மக போக்தாவிற்குச் சாதனமாதலையே சுருதியால் அநுவதிக்கப்படுகின்றதெனக் கூறுகின்றார்] உண்பான் = உலகில் யாதொரு போக்தாவுண்டோ அவன், தனக்கே அருந்தற்கு=தனது போகத்தின் பொருட்டே, மகன் மாதர் முதல் காதலிப்பான்=பிள்ளை பெண்சாதி முதலிய போக சாதனத்தையிச்சிப்பன், தோய்வுற்ற ஈது உலக இயல்பாகும்=பரஸ்பரம் கலத்தலுற்றிருக்கின்ற இது இலௌகீக விருத்தாந்தமாம், இதனை, மேலாம் சுருதி=உயர்வாகிய உபநிடதம், இனிதா அநுவதித்தது = நன்றாய்அநுவாதஞ்செய்தது, அலது அன்று = வேறு பொருள் பிரதிபாதிக்கப்படுவதின்று எ—று. ஏ—அசை. 110

(அ—கை)

அநுவாதமெதன்பொருட்டு என்று சங்கித்து போக்தா வினிடத்தே பிரியத்தை விதிக்கும் பொருட்டு எனக் கூறுகின்றார்.

உணவொக்க வும்போத்து ருச்சேட மதனு
லுணவின்க ணநுராக முறறக்க தலவா
லிணையற்ற வுயர்போத்து ருத்தன்னி டத்தே
யெஞ்ஞான்று மநுராக மியைகென்று கூறுந்
துணிவொன்று மிலருக்கு விடயங்க ளிடையே
தொடர்திண்ண மாநேய மேதுண்டு மதுதா
னணுவுக்க ணுவுமான நினையென்று நாடு
மடியேன்ற னெஞ்சின்மா தவதீர்க வன்றே. 111

(ப—ரை) உணவு ஒக்கவும் = (கணவன் மனைவி முதலிய) சகல போக்கியங்களும், போத்துருச்சேடம் அதனால் = போக்தாவாகிய தனது போக சாதனமாயிருத்தலால், உணவின்கண் அநுராகம் உறல் தக்கது அல = போக்கிய விஷயங்களில் ஆசை செய்யத்தக்க தன்று, மற்றோ, இணை அற்ற உயர்போத்துருதனிடத்தே = சமான மின்றிய பிரதானமாயுள்ள போத்தாவினிடத்திலேயே, எஞ்ஞான்றும் அநுராகம் இயைக = எப்போதும் விருப்பத்தைச் செய்க, என்று கூறும் = என்று சொல்லும், அநுவாதஞ் செய்யுஞ் சுருதி என்பது எஞ்சி நின்றது, [போக்கியங்களில் பிரியத்தை விடுதல் வாயிலாக ஆன்மாவில் பிரியத்தைச் செய்யவேண்டுமென்பதில் திருஷ்டாந்தமாக ஈசுரனிடத்தில் பிரியத்தைப் பிரார்த்தித்தல் பூருவகமான புராண வசனத்தையுதாகரிக்கின்றார்] துணிவு ஒன்றும் இலருக்கு = ஆன்ம நிச்சயம் கொஞ்சமுமில்லாத அவிவேகிகளுக்கு, விடயங்களிடையே = சத்தாதி விஷயங்களிலே, தொடர் திண்ணமாநேயம் ஏது உண்டு அது தான் = பொருந்தா நின்ற திடமாகிய யாதொரு பிரீதியிருக்கின்றதோ அந்தப்பிரீதி, மாதவ = லக்ஷ்மீபதியே, அணுவுக்கு அணுவுமான நினை = பரமாணுவைப் பார்க்கிலும் அத்தியந்தம் சூக்ஷ்மமான தேவரீரை, என்றும் நாடும் அடியேன்றன் நெஞ்சின் = எப்போதும் சிந்திக்கின்ற அடியேனுடைய மனதினின்றும், தீர்க = நீங்குக எ—று ஆல், உம், அன்று, ஏ—அசை.

அல்லது தீர்க அன்று = நீங்காமலிருக்குக, அவிவேகிகளுக்கு விஷயத்தில் யாதொரு திடப் பிரீதியுண்டோ அது தேவரீரிடத்தில் இருக்கட்டுமென்பது கருத்து. 111

(அ—கை)

புராணத்தில் இவ்வாறிருக்குக சுருதியில் என்ன சித்தித்தது எனிற் கூறுகின்றார்.

இப்பரிசு பொருண்முற்றின் விரதிபுணர் நெஞ்ச
னியையந்த நேயத்தை நுகர்வானில் வைத்தே
மெய்ப்புறு தனைத்தெரிய வேண்டிடுவன் மற்றோன்
மின்றெடைய லாதியின் விருப்பநழு வான்போற்
றுய்ப்பவனின் மேவனழு வான்வெற்றி விழைவோன்
றெருகுகாவி யாதியை நிதம்பரிச யிப்பா
னப்பரிசு முத்திவிழை வான்றன்னை நினைக
வானுலகு முதல்வாஞ்சை யாலன்பு பூண்டே. 112

(ப—ரை) இப்பரிசு=இந்தப் பிரகாரம் புராணத்திற் கூறிய நியாயத்தால், பொருள் முற்றின் விரதிபுணர் நெஞ்சன்=(மனைவி மைந்தன் முதலிய) சகல போக்கிய வஸ்துக்களினின்றும் வைராக்கியத்தையடைந்த மனதுள்ள புருஷன், இயை அந்த நேயத்தை= போக்கியங்களில் பொருந்துகின்ற அந்தப் பிரியத்தை, நுகர்வானில் வைத்து=போக்தாவில் உபசம்மாரஞ் செய்து,மெய்ப்புறுதனைத் தெரிய வேண்டிடுவன் = உண்மையாகிய ஆன்மாவையறிய இச்சிப்பன், [இவ்வாறு ஆன்மாவிலேயே பிரேமையை வைத்தலில் பலிதத்தைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்] மற்றேன்=பாமரன், மின்தொடையல் ஆதியில்=வனிதைமாலை (சந்தனம் வஸ்திரம் சுவர்ணம்) முதலியவற்றில், விருப்பம் நழுவான்போல் = ஆசையைவிடாது சாவதானமாயிருப்பதுபோல, துய்ப்பவனில் மேவல் நழுவான்= (முமுக்ஷுவும்) போக்தாவினிடத்தில் பிரமாதத்தைச் செய்யான், மற்றோ அதன் சிந்தனையோடேயேயிருப்பன், [பிரமாதத்தினின்மையையே அநேக திருஷ்டாந்தங்களால் வெளிப்படுத்துகின்றார்] வெற்றி விழைவோன் = பிரதிவாதியினிடத்து ஜயத்தை விரும்புபவனான பிரதான புருஷன், தொகுகாவிய ஆதியை=மிகுந்த காவிய (நாடக தருக்கம்) முதலியவற்றை, நிதம் பரிசயிப்பான் = நிரந்தரம் அப்பியாசஞ் செய்வான், அப்பரிசு=அதுபோன்று, முத்தி விழைவான்=முமூக்ஷுவும், தன்னை நினைக=ஆன்மாவை எப்போதும் விசாரிக்கவேண்டும், வான்உலகு முதல் வாஞ்சையால் = சொர்க்காதிகளினிச்சையால், அன்பு பூண்டே=சிரத்தையோடு கூடியே. 112

வரும் பாட்டோடு முடியும்.

செபமாதி செய்வானை நிகர்முத்தி விழைவாற்
றிகழ்தன்னி லன்பார்க வணிமாதி நசையாற்
சுபயோகி பெரிதொல்கி மனநேர்மை தன்னைத்
தொடர்கிற்ப னதுபோற் பகுத்தோர்தல் வேண்
தபநீட வர்க்காசி மிகுமாறி வற்குந் [டுந்
ததும்பும் விவேகம் பழக்கத் திடத்தால்
நிபமா முடன்பாட்டி னெதிர்மறை யினுனு
நிகழ்போத் துருத்தன்மை நிலவுற வுணர்ந்
[தோன். 113

(ப—ரை) செபம் ஆதி செய்வானை நிகர்=ஜபம் (யாகம் உபாஸனை) முதலியவற்றைச் செய்பவனைப்போன்று, முத்தி விழைவால்= (முமுக்ஷுவும்) மோக்ஷ இச்சையால், திகழ் தன்னில் அன்பு ஆர்க=சுயம் பிரகாசமாக விளங்காநின்ற ஆன்மாவில் விசுவாசத்தைச் செய்க, எப்படி சுவர்க்காதியை விரும்பின வைதீக புருஷன் அதனதன் சாதனமான ஜபாதிகளை சிரத்தை பூர்வகமாக அனுஷ்டிக்கின்றானோ அதுபோலென்பது பொருள், சுபயோகி=நல்ல யோகாப்பியாசத்தைச் செய்பவன், அணிமாதி நசையால்=அணிமா முதலிய ஐஸ்வரியப் பிராப்தியின் இச்சையால், பெரிது ஒல்கி=மிகவும் வருந்தி, மனநேர்மை தன்னை தொடர்கிற்பன் = சித்த ஏகாக்கிரத்தைச் சம்பாதிப்பன், அதுபோல் பகுத்து ஓர்தல் வேண்டும் = அவ்வாறு இப்புருஷன் ஆன்மாவையெப்போதும் தேகாதிகளினின்றும் பிரித்தறியவேண்டும், [அற்றேல் இவ்வாறு இவைகளையெப்போதும் அப்பியாசஞ் செய்வதால் யாது பயனெனிற் கூறுகின்றார்] தபம் நீடவர்க்கு= (காவ்வியாதிகளின்) அப்பியாசத்தை மிகுதியாகவுடையவர்க்கு, ஆசிமிகும் ஆறு= (அவ்விஷயத்தில், வலிமை வளருவது போன்று) இவற்கும்=முமுக்ஷுவுக்கும், பழக்கத்திடத்தான்=அப்பியாசபடுத்துவத்தால், விவேகம் ததும்பும் = தேகாதிகளினின்றும் ஆன்மாவின் பேதஞானம் ஸ்பஷ்டமாகின்றது, [பேதஞானத்தின் ஸ்பஷ்டத் தன்மைக்குப் பயனைக் கூறுகின்றார்] நிபமாம் உடன் பாட்டின் எதிர்மறையினான்=காரணமாகிய அன்வயவெதிரேகங்களால், திகழ் போத்துருத் தன்மை=விளங்காநின்ற போக்தாவின் பாரமார்த்திக சொரூபத்தை, நிலவுற உணர்ந்தோன்=போக்கிய சட சமுதாயத்தினின்றும் பேதமாக விளங்கும்படி அறிகின்றவன். உம்—அசை.

பின்பாட்டோடு முடியும். 113

நனவாதி யிற்சாட்சி பற்றின்மை துணிவா
னவிலெங்ங னெதுகாண லாநாடு வானு
லனதேயு மங்கன்னி யத்தில்லை யென்னு
மநுபூதி யேசம்ம தங்காண வான்மா
சொன்தா மதிற்காணு மியாதொன்றி னேடுந்
தோயா தறம்பாப முங்கண்டு பற்று
தெனவேத முரைசெய்யு நனவாதி யுலகை
யிலக்கும் பரந்தா னெனத்தேரி நீங்கும். 114

(ப—ரை) நனவு ஆதியில் = சாக்கிரம் முதலிய அவஸ்தைகளில், சாட்சி பற்று இன்மை துணிவான் = சாக்ஷியினிடத்து அசங்கத் தன்மையை நிச்சயிப்பான், [அன்வயவெதிரேகங்களைத் தெரிவிக்கின்றார்] நவில் எங்ஙன் = சொல்லா நின்ற எந்த (சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியாகிய) அவஸ்தைகளில், எது = (முறையே தூலம் சூக்ஷுமம் ஆனந்தம் என்னும் மூவித) யாதொரு போக்கியம், நாடுவானுல் காணலாம் = சாக்ஷி வடிவ திருஷ்டாவினுல் அநுபவிக்கப்படுகின்றதோ, அனது = அந்த போக்கிய வடிவ திருசியம், அங்கு ஏயும் = அதே அவஸ்தையில் நிற்கின்றது, அன்னியத்து இல்லை = இதர அவஸ்தையிலின்று, (திருஷ்டாவோ எல்லாவிடங்களிலும் அநுகதமாகவிருக்கின்றது) என்னும் அநுபூதி சம்மதம் = என்னுமிவ்வநுபவம் சருவ சம்மதமாம், காண் = பார், பிரசித்தமென்று பொருள், [ஆன்மாவை விவேசனஞ் செய்வதில் அநுபவமாத்திரம் பிரமாணம் அன்று. ஆகமமும் பிரமாணமாகவுளதென்னுமபிப்பிராயத்தால் "அவ்வான்மா ஆண்டு யாதொன்றைப் பார்க்கின்றதோ அதனோடு சம்பந்தமற்றதாகின்றது, அதனுல் இப்புருஷன் அசங்கன்", "அந்த இப்புருஷன் இந்த சம்பிரசாதமாகிய சுழுத்தியில் இரமித்து சஞ்சரித்து புண்ணிய பாபங்களைப் பார்த்துக்கொண்டே மீண்டும் வந்த வழியே சென்று தனது ஸ்தானத்தையடைகின்ருன்" என்பது முதலிய இரண்டு வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்ருர்] அவ்ஆன்மா = சாக்ஷி வடிவ திருஷ்டா, சொனதாம் அதில் = கூறிய அவ்வவஸ்தைகளில், காணும் யாதொன்றினேடும் = தன்னுல் பார்க்கப்படுகின்ற யாதொரு திருசிய வஸ்துவினேடும், தோயாது = கலவாது, அநுசரித்துச் செல்லாது, மற்றே தான் மாத்திரம் வேறு அவஸ்தையையடைகின்றதென்பது பொருள், அறம் பாபமும் கண்டு = புண்ணியத்தின் பலனுகிய சுகத்தையும் பாவத்தின் பலனுகிய துக்கத்தையும் பார்த்து, அதாவது கிரகிக்காமல், பற்ருது என = அசங்கமாயிருக்குமென்று, வேதம் முரைசெய்யும் = சுருதி கோஷிக்கின்றது, [போக்தாவின் சொரூப விவேசன பரமான வேறு சுருதிகளையுமறிவிக்கின்ருர்] நனவாதி உலகை இலக்கும் பரம் = (சாதன சம்பன்ன அதிகாரி) சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி முதலிய பிரபஞ்சத்தைப் பிரகாசிப்பிக்கின்ற சச்சிதானந்த வடிவப் பிரம்மம், தான் எனத்தேரி = சிதான்மாவாகிய யானென (வும்புத்தி சிதாபாசாதிகள் யானல்லவெனவும் சுருதியினுலும் அநுபவத்தினுலும்) நிச்சயித்து, நீங்கும் = (பிரமாத்திருத்துவ கருத்திருத்துவம் முதலிய சகல பந்தங்களினின்றும்) விடுபடுவன் எ—று.

அன்னது, சொன்னது என்பவை எதுகை நோக்கி இடைக் குறையாயிற்று. 114

(இதுவுமது)

நனவாதி களிலேக னேயாகி யான்மா
நணிநிற்ப னென்றுசிந் தனைசெய்ய வேண்டு
நனவாதி தானத்தி ரயநீங்கி நிற்போ
னலிவேசெய் மறுசென்ம நணுகிற்ப துண்டோ
நனவாதி யிற்போக்கி யம்போத்து ருத்தா
ஞட்டம் பெறும்போக மதுநின்று நிலவும்
நனவாதி தனின்வேற தாய்ச்சித்து மயமாய்
நயசாட்சி யாய்ச்சதா சிவனாகு நானே. 115

(ப—ரை) நனவாதிகளில் = சாக்கிரம் முதலிய அவஸ்தைகளில், ஏகனே ஆகி ஆன்மா நணி நிற்பன் = ஒரே ஆன்மாவுளது, என்று சிந்தனை செய்யவேண்டும் = என்று விசாரிக்கவேண்டும், நனவாதி தானத்திரய நீங்கி நிற்போன் = (இவ்வாறு விவேக ஞானத்தால்) சாக்கிராதியவஸ்தாத்திரயத்தினின்றும் வேறுபட்ட ஆன்மா, நலிவுசெய் மறு சென்மம் நணுகிற்பது உண்டோ = துன்பத் தைச் செய்யாநின்ற வேறு பிறப்பையடைவதுண்டா, இச்சரீர வீழ்ச்சியின் பின்னர் வேறு சரீரப் பிராப்தியின்றென்பது பொருள், நனவாதியில் = சாக்கிர முதலிய மூன்றவஸ்தைகளில், போக்கியம் = (முறையே யாதொரு தூலம் சூக்ஷுமம் ஆனந்தம் ஆகிய) விஷயங்க ளும், போத்துரு = (யாதொரு விசுவன் தைசதன் பிராஞ்ஞன் ஆகிய) அநுபவிப்பவரும், நாட்டம் பெறும் போகம் அது = யாதொரு விரும்பத் தக்கதாகிய அநுபவமும், நின்று நிலவும் = இருந்து விளங்குகின்ற னவோ, நனவாதிதனின் வேறதாய் = அந்த சாக்கிராதிகளினின்றும் விலக்ஷணமாய், சித்துமயமாய் = சின்மாத்திர ரூபமாய், நயசாட்சியாய் = சிறந்த சாக்ஷிரூபமாய், சதாசிவன் = நிரதிசயானந்த ரூபத்தால் எப்போதும் விளங்குபவனாயுள்ள பரமான்மாவே, நான் ஆகும் = யானாகின்றேன் எ—று.

நாட்டம் = விருப்பம். 115

(அ—கை)

இவ்வாறு விவேகத்தால் ஆன்ம தத்துவம் அசங்கமாய் நிச்சயிக்கப்பட்டபோது போத்திருத்துவம் யாருக்கெனிற் கூறுகின்றார்.

இந்தவா றுண்மைதனை நன்குதேர்ந் தான்மதி
யிலங்குவா னென்ப தான
வுந்துமோர் சித்தினிழன் மங்குவே ருமுருவி
யைந்ததா லுண்ணு வாகும்
நந்துரு விந்தநிழன் மித்தையா மேயநுப
வத்தினு னல்ல மறையா
லிந்த்ரசா லஞ்சகமெ னச்சொல்வா மீதினுளி
ருத்தலான் மற்றை யவனே. 116

(ப—ரை) இந்தவாறு=கூறிய இந்கப் பிரகாரம் தேகாதிகளி னின்றும் வேறாக. உண்மைதனை நன்கு தேர்ந்தால்=ஆன்மாவை நன்றாய் நிச்சயஞ்செய்தால், மதியிலங்குவான் என்பதான= விஞ்ஞானமய சத்தத்தால் சொல்லப்பட்ட. உந்தும் ஓர் சித்தின் நிழல்=உயர்வாகிய ஒப்பற்ற கூடஸ்தனது பிரதிபிம்பமானது. சிதா பாசனென்பது பொருள். மங்குவேரும்உரு இயைந்ததால் = விநாச வடிவ விகார சொரூபத்தையடைந்ததால், விகாரியாவதாலென்பது பொருள், உண்ணுவான் ஆம் = போக்தாவாம். [அற்றேல் சிதா பாசனுக்கு போத்திருத்துவத்தையங்கீகரிக்கின் "எவனது போகத்தின் பொருட்டு" என்னும் வசனம் போத்தாவினபாவ விவக்ஷையாலென்று முன் சொல்லப்பட்டது. அது வியாகாத தோஷமுடையதாமென்று சங்கித்து அந்த வசனத்திற்கு பாரமார்த்திக போத்தாவின் அபாவத் தில் தாற்பரியத்தையபிப்பிராயஞ்செய்து போத்திரு வடிவ சிதாபாசனுக்கு மித்தியாத்துவத்தைச் சாதிக்கின்றார்] நந்து உரு இந்த நிழல்=கெடுகின்ற இச்சிதாபாசன், மித்தையாம்=பொய்யாம், நல்ல மறையால் = ("சீவேசர்களையாபாசமாகச் செய்கின்றது" என்னும்) நன்மையான சுருதியாலும். அநுபவத்தினால்=திருஷ்டா முதலிய மூன்றன் மத்தியிலிருப்பதாக அநுபவிக்கப்படுகிறபடியாலும் என்க, [அதையேயுபபாதனஞ் செய்கின்றார்] இந்த்ரசாலம் என சகம்

சொல்வாம் = இந்திரசாலம் போன்று சகத்து மித்தையாகச் சொல்லப் பட்டது. ஈதினுள் = மித்தையாகிய இச்சகத்தினுள், அவன் இருத்த லால் = அச்சிதாபாசன் அந்தர்ப் பூதமானதால் எ—று.

இவனுக்கும் மித்தியாத்துவம் வித்துவான்களாலநுபவிக்கப் படுகின்றதென்பது எஞ்சி நின்றது.

ஏ, ஏ, மற்று—அசைகள். ஐ—சாரியை. 116

(அ—கை)

சகத்தின் விநாசம் அநுபவிக்கப்படுதல்போல் சிதாபாசனது விநாசமும் அநுபவிக்கப்படுதலால் சிதாபாசன் மித்தையாமெனக் கூறுகின்றார்.

இவனுடைக் கேடுதுயின் முதலியவற் றேகரியி
னினிதனுப விக்க லாமே
யவமுறும் போதுதன தியல்பிதென் றேயுட
னுடன்பகுத் தறிகு வானே
லெவமறக் கூறதுசெய் தழிவினைத் தேறியபி
னெவளவும் போகநய வான்
புவனியின் மூர்ச்சையது புகிகிடப் பானொருநற்
புதுமண நயப்ப னெவனே. 117

(ப—ரை) இவனுடைக்கேடு = விஞ்ஞானமய சத்தவாச்சிய இச்சிதாபாசனுடைய விலயம், துயில் முதலியவற்றே = சுழுத்தியாதி களில், கரியின் = சாக்ஷியினுல், இனிது அநுபவிக்கலாம் = நன்றாயநு பவிக்கப்படுகின்றது. [மித்தியாத்துவமிருக்குக. அதனலென்னையெனிற் கூறுகின்றார்] அவம் உறும்போது = (கூடஸ்தனினின்றும் வேறு பிரிக்கப்பட்ட சிதாபாசன்) மித்தையாக அறியப்பட்டபோது, தனது இயல்பு இது என்று = தனது சொரூபம் மித்தையாமென்று, உடன் உடன் பகுத்து அறிகுவான் = அடிக்கடி கூடஸ்தனினின்றும் பிரித்து உணருவான். [பிரித்து அறிவதனுற்றனென்னையெனிற் கூறுகின்றார்] எவம் அறக்கூறது செய்து = குற்றமின்றி கூடஸ்தனினின்றும் வேறு பிரித்து, அழிவினைத் தேறியபின் = தனது விநாசத்தை நிச்சயித்த பின்னர், எவளவும் போகம் நயவான் = கொஞ்சமும் போகத்தை

விரும்பான், [தனது விநாச நிச்சய காலத்தில் போகேச்சையினின்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] மூர்ச்சையதுபுகி = மூர்ச்சை அடைந்து, புவனியில் கிடப்பான் எவன் = பூமியில் சயனித்திருக்கும் எப்புருஷன் தான், ஒருநல் புதுமணம் நயப்பன் = ஒப்பற்ற நல்ல புதிய விவாகத்தையிச்சிப்பான் எ—று.

ஒருவனும் இச்சியான் என்பது பொருள்.

துயில் முதலென்றதால் மூர்ச்சையைக் கொள்க.

ஏகாரம் மூன்றும், ஆலும் அசைநிலைகள். 117

(அ—கை)

மேலும் முன்போன்று அதாவது அஞ்ஞான காலத்திற்போன்று நான் போக்தா என்று வியவகரிப்பதற்கும் ஞானி வெட்கப்படுகின்றானெனக் கூறுகின்றார்.

முன்ன நேரக முண்ணு வானென
மொழிகு தற்கற நாணுவான்
சின்ன நாசனி ணணி வாதை
செறிந்து முன்வினை துய்ப்பனு
லின்ன மற்றிவ னுண்ணு வானக
மென்ன வுன்னவு நாணுவா
னென்னி னேதிது சாட்சி மேலுற
வேற்று வானெனல் வீண்சொலே. 118

(ப—ரை) முன்னநேர் = பூருவம்போன்று, அகம் உண்ணுவான் என மொழிகுதற்கு = நான் போக்தா என்று சொல்லுவதற்கும், அறநாணுவான் = மிகவும் வெட்கமடைவன், [அப்படியானால் ஞானோத்பத்தியின் பிறகு பிராரத்தம் முடியும். பரியந்தமும் எவ்வாறு வியவகரிப்பனெனிற் கூறுகின்றார்] சின்ன நாசனின் = அறுபட்ட மூக்கினையுடைய புருஷன்போன்று, நாணி = வெட்கி, வாதை செறிந்து = (இன்னமும் கருமம் நாசமாகவில்லையேயென) கிலேசத்தையடைந்து, முன்வினை துய்ப்பன் = பிராரத்த கரும பலனைப் புசிப்பான், [இப்போது ஞானத்தின் பிறகு சாக்ஷிக்கு போத்திருத்துவத்தினின்மை கைமுதிக நியாயத்தால் சித்தித்தது எனக் கூறுகின்றார்] இன்னம் = மேலும்,

இவன்=சிதாபாசன், அகம் உண்ணுவான் என்ன உன்னவும்=நான் போக்தா என்று நினைக்கவும், நாணுவான் என்னின்=வெட்கத்தை யடைவான் என்றால், ஓது இது=சொல்லாநின்ற தன்னிடத்திலுள்ள இப்போத்திருத்துவத்தை, சாட்சி மேல்உற ஏற்றுவான் என ல் = அசங்க ஆன்மாவில் பொருந்த ஆரோபிப்பனென்று சொல்லுதல், வீண் சொலே=பொருளின்றிய சத்தமேயாம் எ—று.

ஆல், மற்று—அசை நிலைகள். 118

(அ—கை)

கூறிய பொருளை சுருதியால் திடஞ் செய்கின்றார்.

யாவனின்புற வென்பதிவ்வகை யெண்ணியேசமு சயமற
வாவலித்துணு வானை நீக்கிய தாதலாலுடல் வெம்மைபோ
மேவுதூலமி லிங்கமூலமு மென்றுமெய்திரி விதமதா
மோவுருதவ ணவணியைந்துறு முசிதமாகிய சுரமுமே.119

(ப—ரை) யாவன் இன்புற என்பது="எவனது போகத்தின் பொருட்டு" என்னும் சுருதியானது, இவ்வகை எண்ணியே=இந்தப் பிரகாரம் (கூடஸ்தனுக்காவது சிதாபாசனுக்காவது பாரமார்த்திக போக்திருத்துவா பாவத்தைக்) கருதியே, சமுசயம் அற=சங்கை யின்றி, ஆவலித்து உண்ணுவானை நீக்கியது=ஆசையோடு புசிக்கும் போக்தாவை நிஷேதித்தது,[இவ்வாறு போக்தாவின் நிஷேதமிருக்குக அதனாலென்னையெனிற் கூறுகின்றார்] ஆதலால்=அசங்க ஆன்மா போக்தா அன்றென்று நிஷேதித்தலால், உடல் வெம்மை போம்= சரீரங்களைப்பற்றிய சந்தாபம் உண்டாவதின்றாம், [தத்துவத்தை அறிந்தவனுக்குச் சரீரத்தைப் பின்பற்றிய சந்தாபத்தினின்மையைத் தெரிவிக்கும் பொருட்டு சரீரத்தின் பேதத்தையும் அதிலதில் சந்தாபத் தினிருப்பையும் தெரிவிக்கின்றார்] மேவு தூலம் இலிங்கம் மூலமும் என்று=பொருந்தாநின்ற தூலம் சூக்ஷ்மம் காரணம் என, மெய்திரி விதமதாம்=சரீரம் மூன்றுவிதமாம், அவண் அவண் உசிதமாகிய சுரமும்=அந்தந்த சரீரத்தில் யோக்கியமான சந்தாபமும், ஓவுருது இயைந்துறும் = ஒழியாது (அவசியம் மூன்றுவிதமாய்ப்) பொருந்தி யிருக்கின்றது எ—று.

ஏ—அசை. 119

(அ—கை)

அவற்றுள் தூல சரீரத்திலுள்ள சுரங்களை முதலிற் கூறுகின்றார்.

வாதபித்த சிலேட்டுமத்துடல் வருவியாதிகள் கோடியாந்
தீதுநாற்ற மிலக்கணக்குறை சேருமவ்வகை யென்பவே
காதலேசெயிர் சாந்திதாந்திகள் காணிலிங்க வுடற்புகும்
மாதிரண்டு மொழுங்குபேறிழ வால்வருத்து மதாற்சுரம். 120

(ப—ரை) உடல் = தூல சரீரத்தில், வாதபித்த சிலேட்டு மத்து = வாதபித்த சிலேஷ்மங்களினால், வருவியாதிகள் கோடியாம் = உண்டாகின்ற ரோகங்கள் அளவில்லனவாம், அவ்வகை = அப்படியே, தீது நாற்றம் = துர்க்கந்தம், இலக்கணக்குறை = அழகின்மை, (தாஹம் பங்கம் முதலியவைகளும்) சேரும் என்ப = பொருந்துமென்று சொல்லு வார்கள், [சூக்ஷ்ம சரீரத்தில் சுரங்களைத் தெரிவிக்கின்றார்] காதல் செயிர் = காமக் குரோதாதிகளும், சாந்தி தாந்திகள் = சமம் தமம் முதலியவைகளும். இலிங்க உடல் புகும் = சூக்ஷ்ம சரீரத்திற் பிரவே சித்துள்ள வியாதிகளாம். [காம சாந்தியாதிகளுக்கு சுரத்துவத்தை யுபபாதனஞ் செய்கின்றார்] இரண்டும் = காமாதியும் சாந்தியாதியும், ஒழுங்கு = முறையே, பேறு இழவால் = பிராப்தி அப்பிராப்திகளால், வருத்தும் = புருஷனைத் துன்பஞ் செய்யும், அதால் சுரம் = அக்காரணத் தால் சுரங்களாம் எ—று.

சுரத்தின் சமானத்தன்மையால் சுரமெனப்படுகின்றது என்பது பொருள்.

ஏகாரம் இரண்டும் மாது என்பதும் காண் என்பதும் அசைச் சொற்களாம். கோடி என்பது அளவில்லாமையைக் குறித்து நின்றது.

அஞ்ஞானியாகிய புருஷனுக்கு 'என்னுடைய காமம் ஒழிய வில்லையே, என்னுடைய குரோதம் ஒழியவில்லையே' என்று துர்ச்சன புருஷனைப்போல காமாதிகள் தம் அடைவினால் தபிக்கச் செய்கின்றன. அதுபோல 'எனக்கு மனதின் நிக்கிரகமாகிய சாந்தியுண்டாகவில்லையே. இந்திரிய நிக்கிரகமாகிய தாந்தியுண்டாகவில்லையே' என்று சஜ்ஜன புருஷனைப்போலச் சாந்தி முதலியனவும் தம் அடைவின்மையால்

அஞ்ஞானியைத் தபிக்கச் செய்கின்றன. ஆதலால் இவ்விரண்டும் சுரத்திற்குச் சமானமாயிருத்தலின் சுரமெனப்படுகின்றன. ஞானியோ "பிரகாசம் (சத்துவ குணத்தின் காரியம்), பிரவிருத்தி (இரஜோ குணத்தின் காரியம்), மோகம் (தமோகுணத்தின் காரியம்) என்னும் மூன்றும் பிரவிருத்திக்கின், அவற்றைத் துவேஷிக்கிறதில்லை; நிவர்த்தியாயின் அவற்றை இச்சிக்கிறதில்லை" என்னும் கீதையின் 14-வது அத்தியாயத்திலுள்ள 22-வது சுலோகவடிவ வாக்கியத்திலுள்ள ஸ்வம்ஸம்வேத்ய (தன்னாலறியப்படுதற்றன்மையாகிய) லக்ஷணத்தினால் குணாதீதனாயிருத்தலினான், அச்சாத்வீக முதலிய விருத்திகளின் அநான்மத்தன்மையினைச் செவ்வையாய் காண்பவனாய் ஆத்மாவின் அநுகூலத்தன்மை பிரதிகூலத் தன்மைகளை ஆரோபித்து அவற்றால் பயத்தை அடைகிறதில்லை; அவற்றை இச்சிக்கிறதுமில்லை. ஆதலால் ஞானி தேகத்தின் சுரங்களால் சுரத்தையடைகிறதில்லை. 120

(அ—கை)

காரண சரீரத்தின்கண்ணுள்ள சுரம் சாந்தோக்கிய சுருதியிற் சொல்லப்பட்டதெனக் கூறுகின்றார்.

அறிவு தன்னையு மன்னி யத்தையு
மறிகி லாமை யவித்தைமீ
திறுத லொத்திடல் வருவ தாமிடர்
விதையு மிந்திர னோதினன்
செறியு மூவுட றனிலு மிவ்வழல்
சேர்க்கை யல்ல வென்க்கொள்வாய்
பிறியி னவ்வழ லவ்வு டம்புகள்
பின்பு நிற்பன வாகுமோ. 121

(ப—ரை) அறிவு = சுழுத்தியில் அவித்தையோடு கூடிய ஆன்மா, தன்னையும் = தான் இன்னான் என்பதனையும், அன்னியத்தையும் = பிற பூதங்களையும், அறிகிலாமை = உணராமையும், அவித்தை மீதுஇறுதல் ஒத்திடல் = காரணத்தில் நாசமானது போன்றதும், வருவதாம் இடர்விதையும் = இனியுண்டாவதாகிய துக்கத்தின் பீஜமாகிய வாசனையும், இந்திரன் ஓதினன் = தேவராஜா பிரகஸ்பதிக்கு முன்பு

சொன்னுன், "இவ்வான்மா இப்போது (அதாவது சுழுத்திகாலத்தில்) நான் இன்னுன் என்று தன்னையறிகிறதில்லை. இந்தப் பூதங்களையும் அறிகிறதில்லை. விநாசத்தையேயடைந்தவனுகின்ருன். ஈண்டு போக்கியத்தைக் காண்கின்றிலேன்" என்னும் வாக்கியத்தால் சுவபர ஞான சூனியத்துவமும் அஞ்ஞானத்தில் நஷ்ட பிராயத்துவமும் மறு தினம் வரும் இடரின் காரணமும் இந்திரனுகிய சிஷ்யனுல் பிரஜாபதி யாகிய குருவின் முன்பு தெரிவிக்கப்பட்டது என்பது பொருள். [இவ்வாறு மூன்று தேகங்களிலும் சுரங்களைக் கூறி அவைகளை நீக்க முடியாதெனக் கூறுகின்ருர்] மூவுடல் தனிலும் செறியும் இவ்வழல்= தூலம் சூக்ஷுமம் காரணமென்னும் மூன்று தேகங்களிலும் பொருந்தி யுள்ள இந்தச் சந்தாபம், சேர்க்கை அல்ல எனக் கொள்வாய்=சரீரத் தோடு கூடவேயுண்டானதால் சுவாபாவிகமாமென்று அங்கீகரிப்பாய். [சுரங்களின் சுவாபாவிகத்துவத்தையே சுரமின்றேல் சரீரமில்லை என்னும் வியதிரேக முகத்தால் திடஞ் செய்கின்ருர்] அவ்வழல் பிறியின்=அந்த சுரமானது சரீரத்தினின்றும் நீங்கின், அவ் உடம்பு கள் பின்பு நிற்பனவாகுமோ = அந்தச் சரீரங்களானவை பின்னர் இருப்பனவாமோ, இராவாம், ஆகையால் சரீரத்திற்கு சுரங்கள் சுவா பாவிகமாமென்பது பொருள் எ—று.

நஷ்டப் பிராயத்துவம்=நாசமாகியதைப் போன்றிருத்தல். 121

(அ—கை)

அச்சுரங்கள் சுவாபாவிகமாம் என்பதில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்.

தந்து ரோம மண்ணன்றி யாடை
தடித்த கம்பள் மொடுகுடம்
வந்து றுங்கொலி வாறுவிட் டழன்
மன்னு ருதுட லென்றுதேர்
புந்தி சேரறி விற்ற னித்தொரு
சுரமும் வந்து பொருந்துரு
துந்து சித்தொளி யொன்று தானியல்
பல்ல தில்லென வுணர்வரால். 122

(ப—ரை) தந்து உரோமம் மண் அன்றி = நூலும் மயிரும் மண்ணுமில்லாமல், ஆடை தடித்த கம்பளம் ஒடுகுடம் வந்துறுங் கொல் = வேஷ்டியும் கெட்டியான கம்பளியும் குடமும் உண்டாகியிருக் குமோ, இவ்வாறு = இப்படி அதாவது தந்து முதலியவற்றை விட்டு ஆடை முதலியவை வியராதன போன்று, அழல்விட்டு உடல் மன்னுறாது = ஜ்வரத்தைவிட்டு தேகம் நிற்காது, என்று தேர் = என்று அறிவாய், [இப்போது கூடஸ்தனிடத்தில் சுரத்தினபாவத்தைக் கைமுதிக நியாயத்தால் காண்பிக்க இச்சையுடையவராய் சிதாபாசனி டத்தில் முதலில் சுரத்தினபாவத்தைக் காட்டுகின்றார்] புந்திசேர் அறிவில் = அந்தக்கரணத்திற் பொருந்தியுள்ள சிதாபாசனிடத்தில், தனித்து = சரீரத்திரயத்திலுள்ள சுரசம்பந்தமின்றி, ஒரு சுரமும் வந்து பொருந்துறாது = யாதொரு சுரமும் இன்றாம், [சிதாபாச னிடத்துச் சுபாவமாக ஏன் சுரமில்லை எனிற் கூறுகின்றார்] உந்து சித்து = உயர்வாகிய சேதனத்திற்கு, ஒளி ஒன்று தான் இயல்பு = பிரகாசமொன்றே சுபாவமாம், அல்லது இல் = அன்னியமின்றாம், என உணர்வர் = என்று அறிவார்கள் பெரியோர்கள் எ—று.

சித்திற்கு பிரகாசைக சுபாவம் வித்துவான்களது அநுபவ சித்தமாம். ஆதலால் பிரதிபிம்பமாகிய சிதாபாசனுக்கும் அப்படிப் பட்ட தன்மையாகிய பிரகாச சுபாவமொன்றே அங்கீகரிக்கத் தக்கது என்பது கருத்து. ஆல்—அசை.

காய்ந்த எண்ணெயிலுள்ள ஆகாயத்தின் பிரதிபிம்பத்திற்கும் தாபத்தின் சம்பந்தமில்லையெனின், அப்போது ஆகாயத்தில் தாபத்தின் சம்பந்தம் எங்கிருந்து உண்டாகும்? என்னும் வடிவின தாகிய நியாயத்தினைக் கைமுதிக நியாயமென்பர். அதுபோல இங்குச் சிதாபாசனிடத்து எப்போது வாஸ்தவ சுரமில்லையோ அப்போது கூடஸ்தனிடத்துச் சுரம் எங்கிருந்து உண்டாகுமென்னும் ஆகார முடையது கைமுதிக நியாயமாம். 122

(அ—கை)

எதன் பொருட்டு சிதாபாசனிடத்தில் சுரத்தினபாவம் உபபாதனஞ் செய்யப்பட்டதோ அதன் பயனை இப்போது காண்பிக் கின்றார்.

சித்தொ ளிக்கணும் வெப்ப நேர்வதில்
சித்தி லென்னைகொல் சொல்வதே
யித்தி றத்தொரு தன்மை யவ்வொளி
யேய வித்தையி ஞலுறு
மொத்த தாந்தனி னுடல மூன்றினு
முணர்வி னுண்மையை யேற்றியே
யத்தி றத்தகி லந்தன் வாத்தவ
வாக மென்று மதிக்குமே. 123

(ப—ரை) சித்து ஒளிக்கண்ணும் வெப்பம் நேர்வது இல்= எப்போது சிதாபாசனிடத்தும் சுரம் சம்பவிக்கிறதில்லையோ அப்போது, சித்தில் என்னைகொல் சொல்வதே=சாக்ஷியினிடத்து சம்பவிக்கிற தில்லையென்று என்ன சொல்லத்தக்கது. [அப்படியாஞல் நான் தபிக் கின்றேன் என்னுமநுபவத்திற்கு யாது கதியெனிற் கூறுகின்ருர்] இத்திறத்து = இவ்விதமாயினும், அவ்ஒளி = அந்தச் சிதாபாசன், அவித்தையிஞல் ஒரு தன்மைஉறும்=அஞ்ஞானத்திஞல் சரீரத்தோடு ஐக்கியத்தையடைவன், அதஞல் சுரத்தையடைகின்ருன். [ஐக்கியத் தையடைவனெனச் சுருக்கமாக கூறிய பொருளை விஸ்தரிக்கின்ருர்] தனின் ஒத்ததாம் உடலம் மூன்றினும்=சிதாபாசன் தன்ஞேடு கூடிய சரீரத்திரயத்திலும், உணர்வின் உண்மையை ஏற்றி = சாக்ஷியின் சத்தியத்துவத்தையாரோபித்து, அத்திறத்து அகிலம்=அத்தகைய சுரத்தோடு கூடிய உடலம் மூன்றினையும், தன்வாத்தவ ஆகம் என்று மதிக்கும்=தனது வாஸ்தவ வடிவமென்று கருதுவன் எ—று. 123

ஏகாரம் மூன்றும் அசை.

(அ—கை)

இவ்வாறு பிராந்தி ஞானமுண்டாகும்போது என்ன உண்டா கின்றதெனிற் கூறுகின்ருர்.

இந்த மாமயன் மேவு காலை
யிவன் சரீரம் வெதும்புறச்
சிந்தை செய்குவன் வெம்பு கேனெனச்
சேர்கு டும்பி நிகர்ப்பவே
மைந்தர் தாரமு ஞேர்வ ருந்திட
வருந்து கேனென வீண்புமான்
புந்தி செய்வ னெவாற வாறுசிற்
போலி தாஞு நினைக்குமே. 124

(ப—ரை) இவன் = இச்சிதாபாசன், இந்த மாமயல் மேவு காலை = இந்தப் பெரிய பிராந்தி பொருந்தும்போது, சரீரம் வெதும்புற = தேகங்கள் தாபத்தையடைய, வெம்புகேன் என சிந்தை செய்குவன் = நான் தபிக்கின்றேனென்று கருதுவன், சரீரத்திலுள்ள சுரத்தை ஆன்மாவில் ஆரோபிப்பனென்பது பொருள், [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] குடும்பி நிகர்ப்ப = கிரகஸ்தனைப்போன்று, [திருஷ்டாந்தத்தை வெளிப்படுத்துகின்றார்] சேர்மைந்தர் தாரம் முனோர் வருந்திட = கரும வசத்தால் பொருந்தாநின்ற பிள்ளை பெண்சாதி முதலியவர்கள் சந்தாபத்தையடைய, வருந்துகேன் என = நான் தபிக்கின்றேனென்று, எவாறு புமான் வீண்புத்தி செய்வன் = எப்படிப் புருஷன் வியர்த்தமாக நினைப்பனோ, அவாறு = அப்படி, சிற்போலியும் நினைக்கும் = சிதாபாசனும் யான் தபிக்கின்றேனென்று வியர்த்தமாகக் கருதுவன் எ—று.

எவ்வாறு அவ்வாறு என்பது எவாறவாறெனை இடைக்குறை ஆயிற்று. ஏகாரம் இரண்டும், தானும் அசைநிலைகள். 124

(அ—கை)

இவ்வாறு அவிவேக காலத்தில் சிதாபாசனுக்கு பிராந்தியினால் சுரத்தைக் காண்பித்து விவேக காலத்தில் சுரத்தினபாவத்தைக் காண்பிக்கின்றார்.

வேறு கண்டு பிராந்தி விட்டு
விருப்பி லாதுதன் மேலுநாள்
தோறு நற்கரி நாடு வானுட
ஞெட்டு வெம்புவ துண்டுமோ
ஊறு பொய்ப் பொருள் சர்ப்பமாதி
யுரம்ப லாயன வேதுவாம்
ஏறு தாம்பறி வகியு ரங்கெடி
னேன்ற துன்னி யழுங்குவான். 125

(ப—ரை) வேறுகண்டு = (சிதாபாசன் கூடஸ்தான்மாவையும் சரீரங்களையும்) பேதமாக அறிந்து, பிராந்திவிட்டு = (அத்திறத்து அகிலந்தன்வாத்தவவாகமென்று மதிக்குமேயென்று கூறிய) மயலைப்

பரித்தியாகஞ்செய்து, தன்மேலும் விருப்பு இலாது=(தனது ஆபாச ரூபத்துவ ஞானத்தால்) தன்னிடத்திலும் ஆதரத்தைச் செய்யாது, நற்கரி நாள்தோறும் நாடுவான்=தனது நிசவடிவ (சுராதிரகித) சாக்ஷியையெப்போதும் சிந்திக்கின்றவனாய், உடல்தொட்டு வெம்புவது உண்டோ = சுரத்தினையுடைய சரீரத்தையநுசரித்து தபிப்பது உளதா, [பிராந்திஞானம் சுரத்திற்குக் காரணமாவதையும் தத்துவ ஞானம் அதனபாவத்திற்குக் காரணமாவதையும் திருஷ்டாந்தத்தைக் காட்டலால் ஸ்பஷ்டஞ் செய்கின்றார்] ஊறுபொய்ப்பொருள் சர்ப்பம் ஆதிஉரம் = தீமையாகிய (இரச்சுவாதியிற்) கற்பிக்கப்பட்ட பாம்பு முதலியவைகளின் ஞானம்,பலாயன ஏதுவாம்=ஓடுவதிற் காரணமாம், ஆதி சத்தத்தால் தாணுவில் கற்பிக்கப்பட்ட திருடன் கிரகிக்கப் படுகின்றான், ஏறுதாம்பு அறிவு=உயர்வாகிய இரச்சுவாதி ஞானத் தால், அகிஉரம் கெடின்=சர்ப்பாதி ஞானம் நாசமாயின், ஏன்றது உன்னி அழுங்குவான்=முன்செய்த பலாயனாதியைக் குறித்து வருந்து வான் எ—று. உம்—அசை. பலாயனம்=ஓடுதல். 125

(அ—கை)

நாடோறு நற்கரிநாடுவான் என்று கூறிய பொருளை திருஷ்டாந்தத்தால் ஸ்பஷ்டஞ் செய்கின்றார்.

பொய்ம்மை யோக களங்க மானது
போயொ ழிந்திட வேண்டியே
யய்ய நீர்பொறு மென்றல் போற்கரி
யாந்த னைச்சர ணண்மினான்
வெய்ய நேர்தரு பாவ நீங்குற
மீட்டு மூழ்கன் முனாற்றல்போற்
செய்வன் மீட்டு தியான மேயனு
தினமு நற்கரி பற்றினேன். 126

(ப—ரை) பொய்ம்மையோக களங்கமானது=(உலகில் மித்தியா பியோககருத்தா) மித்தையாபியோகத்தால் வந்த தோஷமானது, போய் ஒழிந்திடவேண்டி=நிவர்த்தியாகும் பொருட்டு, பிராயச்சித்தம் சித்திக்கும் பொருட்டென்பது பொருள், அய்யநீர்பொறும் என்றல் போல்=சுவாமீ தேவரீர் க்ஷமை செய்க என்று அடிக்கடி மன்னிப்புக்

கேட்டுக்கொள்ளுதல்போல், கரியாம்தனை சரண் அண்மினுன் = (சிதா பாசனும் சாக்ஷியாகிய அசங்க ஆன்மாவில் போத்திருத்துவாதியா ரோப வடிவ மித்தியாபியோக வடிவ தோஷத்தின் பிராயச்சித்தத்தின் பொருட்டு) சாக்ஷியான்மாவை (மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறவன் போல) சரண் அடைந்தான், மித்தியாபியோகமாவது திருடனல்லாத வனை திருடனென்று சொல்லுதல், பொய்யனல்லாதவனைப் பொய்ய னென்று சொல்லுதல் முதலியவை அதனைச் செய்பவன் மித்தியா பியோக கருத்தாவாம், அவன் எவனிடத்தில் திருட்டுத் தன்மை யாரோபிக்கப்பட்டதோ அவனை உன்னிடத்தில் தெரியாமல் திருட்டுத் தன்மையையாரோபித்தேன், மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்வதுபோல சிதாபாசன் சரண் அடைந்தான், [அதிலேயே வேறு திருஷ்டாந்தங் கூறுகின்றார்] நேர்தரு வெய்யபாவம் நீங்குற = பாபி யாகிய புருஷனால் கிட்டிய கொடிய தீவினை நிவர்த்தியாகும் பொருட்டு, மூழ்கல்முன் மீட்டும் ஆற்றல்போல் = விதிக்கப்பட்ட ஸ்நானம் முதலிய பிராயச்சித்தம் அடிக்கடியநுஷ்டிக்கப்படுகிறதுபோல, நற்கரி பற்றினேன் = சிதாபாசனும் நீண்டகாலமாக சாக்ஷியினிடத்தில் சமுசாரித்துவாதியாரோபண தோஷம் நீங்கும் பொருட்டு சாக்ஷியைச் சரணடைந்தவனாய், அநுதினமும் தியானமே மீட்டு செய்வன் = எப்போதும் தியானத்தையே ஆவிருத்தி செய்வான் எ—று.

ஏ—அசை. 126

(அ—கை)

இங்ஙனம் சாக்ஷி பரத்துவத்தை திருஷ்டாந்தங்களால் வருணித்து தனது குணத்தைச் சொல்வதில் வெட்கமுடைமையைத் திருஷ்டாந்த சகிதங் கூறுகின்றார்.

குய்ய வாய்படு குட்ட வேசி
குறித்து ளார்முன் விலாசமே
செய்ய நாணுவள் சீவ னுந்தன
சீர்த்தி செப்பிட நாணுவான்
கைய ராற்கவர் படுந லந்தணர்
கழிசெய் சாந்தி புரிந்துமேற்
றிய்ய ரோடுறு கிலர வாறிவ
னுடல்க ளோடு செறிந்திடான். 127

(ப—ரை) குய்யவாய்படு குட்டவேசி = உபஸ்தத்தில் பொருந்தா நின்ற குஷ்ட வியாதியினையுடைய வேசியானவள், குறித்துளார்முன் = அவ்வியாதியையறிந்த புருஷரது எதிரே, விலாசம் செய்யநாணுவள் = விளையாட்டைச்செய்ய வெட்கப்படுவள், அதுபோல, சீவனும் தனசீர்த்தி செப்பிட = சிதாபாசனும் தன்னுடைய புகழைச் சொல்லுதற்கு, நாணுவான் = வெட்கமடைவான், [இப்போது மூன்று சரீரங்களினின்றும் வேறு பிரிக்கப்பட்ட சிதாபாசனுக்கு மீண்டுமவை களோடு தாதான்மியப் பிராந்தியின்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] கையரால் கவர்படு நல் அந்தணர் = சண்டாளர்களால் கிரகிக்கப்பட்ட நல்ல பிராமணர்கள், கழிசெய் சாந்திபுரிந்து = அத்தோஷத்தை நிவர்த்தி செய்யும் பிராயச் சித்தத்தைச்செய்து, மேல்திய்யர் ஓடு உறுகிலர் = அதன்பின் மிலேச்சரோடு கூடார்கள், அவாறு = அப்படி, இவன் உடல்களோடு செறிந்திடான் = இச்சிதா பாசன் சரீரங்களோடு சம்பந்தியான் எ—று.

தாதான்மியப் பிராந்தியையடையானென்பது பொருள். அவ்வாறு என்பது அவாறென இடைக்குறையாயிற்று. 127

(அ—கை)

சிதாபாசனுக்கு கேவலம் தனது அபராத நிவர்த்தியின் பொருட்டு சாக்ஷியின் அனுசரணமன்று மற்றோ மகத்தாகிய பிரயோசன சித்தியின் பொருட்டுமாமெனச் சிம்மாவலோகன நியாயத்தால் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்.

தருண வுலகேயு நரபதி குமாரன்
றரைமுழுது மாளும் விழைவினு
னரபதியி னீர்மை பெறுவ னதுபோல
நனிகரியி னீர்மை யிவனுமே
பிரமமெவ னோர்வ னதுமெ யவனுவ
னெனவுமறை பேசல் வினவியே
யுரைசெ யதிநேக மனதுடை யனுகி
யுணர்வனதை வேறு தெரிகிலான். 128

(ப—ரை) தருண உலகு ஏயு நரபதி குமாரன் = இளவரசி லிருக்கும் இராஜபுத்திரன், தரை முழுதும் ஆளும் விழைவினுல் =

சாம்பிராச்சிய வாஞ்சையினுல், நரபதியின் நீர்மை பெறுவன்= அரசனது குணங்களையடைவன், இராஜாவைப்போன்று பிரஜைகளை ரமிப்பித்தல் முதலிய குணமுடையவனுகின்றுனென்பது பொருள். அதுபோல இவனும் = அவ்வாறு இச்சிதாபாசனும், நனிகரியின் நீர்மை பெறுவன்=பெருமை பொருந்திய சாக்ஷியினது அசராமரணுதி குணங்களையடைவன், [யுவராஜாவிற்கு இராஜாவையநுசரித்தலில் சாம்ராச்சிய பயன் காணப்படுகிறது. இவ்வாறு சாக்ஷியையநுசரித்தலில் பயன் காணப்படவில்லை ஆகையால் அதையநுசரித்தலில் எவ்வாறு பிரவிருத்திப்பன் என்று சங்கித்துக் கூறுகின்றுர்] பிரமம் எவன் ஓர்வன் = பிரமத்தையெவனறிவனே, அவன் அதுமெய் ஆவன்= அவன் அந்தப் பிரம்மமேயாவன், எனவும் மறைபேசல்வினவி=என்று சுருதி சொல்வதைக்கேட்டு,உரைசெய்அதின்ஏகமனது உடையனுகி= சொல்லிய அப்பிரமத்தில் ஐக்கிய மனதுள்ளவனுய், அதை உணர்வன் = பிரமத்தையறிவான், வேறு தெரிகிலான் = அன்னியத்தையறியான் எ—று.

பெறுவன் என்பதுபின்னுங் கூட்டப்பட்டது.

“எவன் பரப்பிரமத்தையறிகின்றுனே அவன்பிரம்மமேயாகின்றுன். இவனது குலத்தில் பிரமத்தையறியாதவனுய் ஒருவனும் ஆகிறதில்லை. சோகத்தைக் கடக்கின்றுன் பாபத்தைக் கடக்கின்றுன் குகைக்கிரந்திகளினின்றும் விடுபடுகின்றுன் அமிருதனுகின்றுன்” என்னும் சுருதியில் பிரமபாவம் முதலிய பலன் கேட்கப்படுகிறபடியால் அப்பலத்தின் வாஞ்சையால் சாக்ஷியையநுசரித்தலில் பிரவிருத்தி பொருத்தந்தானென்பது பொருள். ஏ, ஏ—அசைநிலைகள்.

சிம்மம் எப்படித் தனது ஸ்தானத்தினின்றும் தாவி இடையிலுள்ள பூமியினைக் கடந்து பின் தனது ஸ்தானத்தைப் பார்க்கின்றதோ, அதுபோல எங்குப் பிரகிருத அர்த்தத்தைவிட்டு இடையில் வேறு அர்த்தத்தைக்கூறிப் பின் பிரகிருத அர்த்தத்தின் அநுசந்தானமுண்டாமோ, அங்குச் சிம்மாவலோக நியாயம் சொல்லப்படுகின்றது. இங்குச் சிதாபாசனுக்குச் சாக்ஷியை அனுசரித்தலாகியதற் பரத்தன்மை பிரகிருதமாம். அதனைவிட்டு இடையில் இரண்டு சுலோகங்களால் வேறு அர்த்தத்தைக் கூறிப்பின் சாக்ஷியையநுசரித்தல் வடிவப் பிரகிருத அர்த்தத்தைக் கூறுதலால் சிம்மாவலோக நியாயமாம். 128

(அ—கை)

அற்றேல் பிரமஞானத்தால் பிரமபாவப் பிராப்தியாகும்போது சிதாபாசத்துவமே விநாசமாகும். ஆகையால் தனது விநாசத்தின் பொருட்டு எப்படிப் பிரவிருத்திப்பான் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

தேவவுரு வேண்டி னோர்க டழலாதி
சேர்குவ ரவாறு சாக்கிதான்
மேவுருவ மேவி மீதியுற வேதன்
மேனியிறல் வேண்டு வானவன்
றாவுதன தாகம் வேமளவு மோது
தானரனி னீர்மை மாறிடா
தாவதிது போல வூழி னுடல்காறு
மாருயி னீர்மை மாய்வுறா. 129

(ப—ரை) தேவஉரு வேண்டினோர்கள் = எப்படி உலகில் தேவத்துவப் பிராப்தியை விரும்பின மனிதர்கள், தழல் ஆதி சேர்குவர் = அக்கினி (மலையினுச்சி பிரயாகை கங்கை) முதலியவைகளில் பிரவேசித்தலில் பிரவிருத்திப்பார்களோ, அவாறு = அப்படி, மேவு சாக்கி உருவம் மேவிமீதி உறவே = விரும்பாநின்ற சாக்ஷி சொரூபத்தையடைந்து அவசேஷிக்கவே, அவன்மேனி இறல் வேண்டுவான் = சிதாபாசன் தனது சொரூப விநாசத்தை விரும்புவான், சாக்ஷி ரூபமாக அவஸ்திதி வடிவ அதிக பயனிருத்தலினால் சிதாபாசத்துவ விநாசத்தின் காரணமாகிய பிரம்மஞானத்திலும் பிரவிருத்தி பொருந்துமென்பது பொருள். [அற்றேல் தத்துவ ஞானத்தால் சிதாபாசத்துவம் நிவர்த்தியாகுமாயின் தத்துவத்தையறிந்தவர்களுக்கு சீவத்துவ வியவகாரம் எப்படியென்று சங்கித்து பிராரத்த கரும க்ஷயபரியந்தமும் சீவத்துவ வியவகாரம் பொருந்துதலை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்] தாவுதனது ஆகம்வேமளவும் = அக்கினியில் பிரவேசித்த தன்னுடைய தேகமானது நெருப்பினால் வெந்து சாம்பலாகும் பரியந்தமும், ஓதுநரனின் நீர்மை மாறிடாது ஆவது = சொல்லாநின்ற மனிதன் என்னும் வியவகார யோக்கியத்துவம் நீங்காது இருக்கும், இதுபோல = இத்திருஷ்டாந்தம்போல, உடல் ஊழின் காறும் = பிராரத்த கருமம் இருக்கும் பரியந்தமும், ஆர் உயிரின் நீர்மை மாய்வுறா = பொருந்தாநின்ற சிதாபாசத்துவ வியவகாரம் நிவர்த்தியாகாது என்பது பொருள் எ—று. தான் இரண்டும் அசைநிலைகள். 129

(அ—கை)

அற்றேல் போக்திருத்தன்மை முதலிய பிராந்திக்கு உபாதான மாயுள்ள அஞ்ஞானம் நீங்கிவிட்டபடியால் மறுபடி போகத்தினநு விருத்தியெப்படி, நான் மனிதனென்னும் விபரீதப் பிரதீதிதான் எப்படியென்ரு சங்கித்து திருஷ்டாந்தத்தைக் காண்பித்தலால் இதனை சம்பவமாக்குகின்ருர்.

பழுதை யெனுஞானம் வரினு முலைவாதி
பயபய நிலாது தவிருமே
யெழி னுணர்வுமேலு மிருதிருளி னுர
மெறிபணி யதாகி யிலகுமால்
வழியி தெனவூழின் வருநுகர்வு தானு
மடியுமெல வாண்மை யதினரு
விழைவி னுகர்காலை யொருபொழுது மானு
டனகமென மேதை மிளிருமே. 130

(ப—ரை) பழுதையெனும் ஞானம் வரினும் = இரச்சுஞானம் உண்டானபோதினும், உலைவுஆதி = நடுக்கம் முதலியவை, நிலாது பயபய தவிரும் = நிலைத்திராமல் மெள்ள மெள்ள சாந்தியாகும், எழின் உணர்வு மேலும் = திடமாக இரச்சுஞானமுண்டான பின்னரும், மிருது இருளின் = மந்தாந்தகாரத்தில், எறி = போடப்பட்ட, ஆரம் = இரச்சு, பணியது ஆகி இலகும் = சர்ப்பமாகித் தோற்றும், [தாஷ்டாந் தத்தில் பொருத்துகின்ருர்] இதுவழி என = இந்தப் பிரகாரம், ஊழின் வருநுகர்வும் = பிராரத்தவினையால் வரப்பட்ட போகமும், மெல மடியும் = மெள்ள சாந்தியாகும், ஆண்மையதின் அரு = அடத்தால் நீங்காது, விழைவு இல் நுகர்காலை = ஆசையின்றி விஷயங்களையநு பவிக்குங்காலத்தில், ஒருபொழுது = ஓர்போது, அகம்மானுடன் என = நான் மனிதன் என்று, மேதை மிளிரும் = புத்தியில் தோற்றும் எ—று.

பையப்பைய என்பது பயபய என ஆயிற்று.

ஏகாரம் இரண்டும், தானும், ஆலும் அசைச்சொற்களாம். 130

(அ—கை)

அற்றேல் மீண்டும் மனுஷியத்துவ புத்தியுதயமாயின் அதனல் தத்துவஞானம் பாதிக்கப்படுமென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

இத்துணைய தான குற்றமது தன்னு
லின்பநித ஞான மிற்றிடா
வொத்ததல சீவன் முத்தி விரதம்மீ
துண்மை நிலை யாகுமற்றதே
மத்தக நன்மோதி விம்முதச மன்றான்
மன்னினுணர் வேகும் விம்மலே
யத்தலையி னுர்பு ணன்றழிவ தின்று
மண்மதியின் மாயு மெல்லவே. 131

(ப—ரை) இத்துணையதான குற்றமது தன்னுல்=(ஓர்போது நான் மனுஷியன் என்னுமிப்படிப்பட்ட ஞானோதய மாத்திரமாகிய) இவ்வளவு தோஷத்தினுல், இன்பநித ஞானம்=(ஆகமப் பிரமாணத்தாற் சனித்த) சதானந்த தத்துவத்தின் ஞானம், இற்றிடா = பாதிக்கப் படாது, [எதனுலெனிற் கூறுகின்றார்] ஈது=மனுஷியத்துவ புத்தியைக் கெடுத்தல், சீவன் முத்திவிரதம் ஒத்தது அல=சீவன் முத்தியின் விரதமன்றும், அதாவது நியமமாக அநுஷ்டிக்கத் தக்கதாகப் பொருந்தியதன்று, மற்று = பின்னையோ, அது உண்மை நிலையாகும்= (யதார்த்த ஞானத்தால் பிராந்தி ஞானம் நிவர்த்தியாகுமென்னும்) இது வஸ்து சுபாவமாம், ஆகையால் ஓர்போது மனுஷியத்துவ புத்தி யுதயமாயினும் மீண்டும் வேறு தத்துவ ஞானத்தால் அதற்கே பாத்தியத்துவமாம் என்பது கருத்து, [இரச்சுசர்ப்பாதி ஸ்தலத்தில் விபரீத ஞானம் நீங்கியபின்னும் அதன் காரியமாகிய கம்பாதியினநு விருத்தியிருக்குக. பிரகிருத திருஷ்டாந்த தசமனிடத்தில் நீ தசமனு கின்றாய் என்னும் வாக்கியத்தின் விசார ஜன்னிய ஞானத்தால் பிராந்தி நிவிருத்தியாகும்போது அப்பிராந்தியின் காரியத்தினநுவிருத்தி தோற்றவில்லையேயென்று சங்கித்துக் கூறுகின்றார்] மத்தகம்நல் மோதி=தலையில் நன்கடித்துக்கொண்டு, விம்மு தசமன் = அழுகின்ற தசம புருஷன், உணர்வு மன்னின் = நான் தசமன் என்னும் ஞானத்தை யடையின், விம்மலே ஏகும்=(தலையில் தாடன பூருவகமான) அழுகை மாத்திரம் நீங்கும், அத்தலையின் ஆர்புண் = சிரசிற் பொருந்திய விரணமானது, அன்று அழிவது இன்றும் = அப்போது நாசமாவதின்றும், அண்மதியின் மெல்லவே மாயும்=நெருங்கிய ஒரு மாசத்தால் பையசாந்தியாகும் எ—று.

தாடன சன்னியவிரணம் அநுவர்த்திக்கின்றதென்பது பொருள். 131

தாடனம்=அடித்தல்.

(அ—கை)

அற்றேல் ஞானத்தினுத்தர காலத்திலும் சமுசாரம் தொடர்ந் திருக்குமாயின் சீவன் முத்திக்கு புருஷார்த்தத்துவம் எதனுல் என்ரு சங்கித்து சீவன் முத்தியினடைவாலுண்டான சந்தோஷமானது சமுசார துக்கத்தை மறைப்பதாயிருத்தலினுல் புருஷார்த்தத்துவமாம் என்று திருஷ்டாந்த பூருவகம் கூறுகின்ருர்.

தசம னழியாத சபலமதி னுன
தகும்மகிழ்வு சேரும் விரணமார்
விசன மதைமூட னிகர்கதி யிலாபம்
வினையிடரை மூடும் விரதமாய்
விசைதலி னெவேலை திரிபுறு மவேலை
யிடையற விசார மியைவதாம்
மிசை யிரதசேவி தினமத னின்மீள
மிசைவ னதுபோல நினைகுவாய். 132

(ப—ரை) தசமன் அழியாத சபலமதின் ஆன = தசம புருஷனது மரணு பாவத்தின் இலாபத்தால் உண்டான, தகும் மகிழ்வு = மேலாகிய சந்தோஷம், சேரும்விரணம் ஆர்விசனமதை = (மரணப்பிராந்தியினுல்) முன்பு பொருந்திய புண்ணின் துன்பத்தை, மூடல்நிகர் = மறைத் தலுக்குச் சமானமாக, கதிஇலாபம் = சீவன் முத்தியினடைவு, வினை இடரை மூடும் = பிராரத்த துக்கத்தை மறைக்கும், [ஒத்த தல சீவன் முத்திவிரதம் ஈது என்று சொல்லப்பட்டது விரதத்துவத்தின பாவத் தினுல் என்ன சித்தித்தது எனிற் கூறுகின்ருர்] விரதம் மாய்வு இசைதலின் = நியமா பாவத்தினுல், எவேலை திரிபுஉறும் = எப்போது அத்தியாசமுண்டாகின்றதோ, அவேலை இடைஅற விசாரம் இயை வதாம் = அப்போது நிரந்தரம் விசாரம் செய்யத்தக்கது [மீண்டும் மீண்டும் விசாரஞ் செய்வதில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்] மிசை இரதசேவி = உயர்ந்த இரசமென்னும் ஔஷதத்தையநுஷ்டிக்கின்ற புருஷன், தினமதனில் மீள மிசைவன் = ஒரு தினத்திலேயே (பசிபீடை நிவர்த்தித்தற்பொருட்டு) அடிக்கடி புசிப்பன், அதுபோல நினைகுவாய் = அதுபோல் (அத்தியாச நிவர்த்தியின் பொருட்டு அடிக்கடி) விசாரிப்பாய் எ—று. 132

(அ—கை)

அப்படியானல் ஞானத்தால் நிவர்த்திக்கத் தகாத பிராரத்த கருமபலன் எதனுல் நிவர்த்தியாகும் என்னுஞ் சங்கைக்கு தாடன ஜன்னியவிரணம் ஔஷதத்தால் நிவர்த்தியாவதுபோல போகத் தாலேயே நிவர்த்தியாமென்று கூறுகின்ருர்.

தனது விரணத்தைத் தசமனவன் மிக்க
தனியவு டதத்தி னீக்கனேர்
முனைவினை யதித்தை நுகர்வதனை யுற்று
முடிவுசெய் துய்வு கொளலாம்
இனி யெதனை நச்சி யெனுமொழி சொறுக்க
விழிவதிது மட்டு மாற்றினேம்
மனுமுயி ரவத்தை யிதுசடு திருத்தி
மகிமைபெறு சத்த மார்த்ததே. 133

(ப—ரை) தசமனவன் = தசம புருஷன், தனது விரணத்தை = தாடனத்தினுலுண்டான தன்னுடைய புண்ணை, மிக்கதனி அவுடதத்தின் = உயர்வாகிய ஒப்பற்ற மருந்தினுல், நீக்கல்நேர் = சாந்தி செய்வதுபோன்று, முனைவினையது இத்தை = இந்த பிராரத்த கருமத்தை, நுகர்வதனை உற்று முடிவுசெய்து = போகங்களையநுபவித்து சமாப்தி செய்து, போகத்தால் நாசமாக்கியென்பது பொருள், உய்வு கொளலாம் = முக்தனுகலாம், [சுவவடிவையோரினெனுஞ் சுருதி யபரோட்சமிடர் தவிர்தலெனவோது மிருதகையுமுயிர் மேவுமெனும், என்னுஞ் 34-வது செய்யுளால் இந்தப் புருடன்ருனெனவே தன்னை யுணர்ந்தால் எந்தப் பொருளிச்சித்தெவனின் புக்குடல்வேவாம் என்னும் மந்திரத்தில் அபரோக்ஷ ஞானமும் சோக நிவர்த்தியுமாகிய சீவனது இரண்டு அவஸ்தைகள் கூறப்பட்டன என்று சொல்லப் பட்டது, இப்போது அதனைச் சொன்னதால் சூசிப்பிக்கப்பட்ட சீவனது ஏழாவது நிரங்குச திருப்தி வடிவ அவஸ்தையை சொல்லியதை யநுவாதஞ் செய்தல் பூருவகம் சொல்ல ஆரம்பிக்கின்ருர்] இனி எதனை நச்சிஎனும்மொழிசொல்துக்க இழிவது = இனிமையான எப்போகத்தை விரும்பி என்னும் வாக்கியத்தாற் சொல்லப்பட்ட சோக நிவர்த்தி, இது மட்டும் ஆற்றினேம் = இவ்வளவு கிரந்த சந்தர்ப்பத்தால் கூறினேம்,

[அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் பரோக்ஷ ஞானம் அபரோக்ஷ ஞானம் சோகநிவர்த்தி நிரங்குச திருப்தியென்னும் சீவனது ஏழவஸ்தைகளுள் இது ஆருவது அவஸ்தையெனக் கூறுகின்ருர்] மனும் இது=பொருந்தாநின்ற இச்சோக நிவர்த்தி, உயிர்சடு அவத்தை= சீவனுக்கு ஆருவது அவஸ்தையாம், மகிமைபெறு திருத்தி=பெருமை பொருந்திய நிரங்குச திருத்தி, சத்தம் ஆர்த்தது = ஏழாவதவஸ்தை யாகச் சொல்லப்பட்டது, இஃது இனி வியாக்கியானஞ் செய்யப்படும் எ—று. ஏ—அசை. 133

(அ—கை)

அபரோக்ஷ ஞானத்தாலுண்டாவதான திருப்திக்கு நிரங்குசத் துவத்தை கர்த்தவ்ய பிராப்தவ்யவடிவ பிரதியோகி (விரோதி)யைக் காண்பித்தல் வாயிலாக பிரதிஞ்ஞை செய்கின்ருர்.

விடயமதின் மேவு மகிழ்வு சிறிதாகும்
வியன்மகிழ்வு தானி ரங்குச
மடைவ வடைவான வயர்வ வயர்வான
வென மகிழ்வதே யமைந்திடும்
படியிதுற நாக மருவ நிருவாண
பலிதமுறவே யிவன் றனக்
கடியின்வெகு வேலை யுளவது வெலாமு
மமைதி பெறலான தின்றரோ. 134

(ப—ரை) விடயமதின் மேவு மகிழ்வு=சத்தாதி விஷயங்களால் உண்டாகிய திருப்தி, சிறிது ஆகும்=(வேறு விஷயங்களினிச்சையால் மழுங்கப்பட்டிருத்தலால்) அற்பமாம், அதாவது சாங்குசமாம், வியன் மகிழ்வு= (தத்துவ ஞானத்தாலுண்டாகிய) பெருமை பொருந்திய இந்தத் திருப்தி, நிரங்குசம்= (விஷயாந்தா இச்சையால் மழுங்கப் படாமையினுல்) தடையின்றியதாம், [அதனையே தெரிவிக்கின்ருர்] அடைவ அடைவு ஆன=என்னல் அடையத்தக்கது அடையப்பட்டது, அயர்வ அயர்வு ஆன = செய்யத்தக்கது செய்யப்பட்டது, எனவே மகிழ்வது அமைந்திடும்=என்றே சந்தோஷத்தையடைவன், [கிருத கிருத்தியத்துவத்தையேயுபபாதனஞ் செய்கின்ருர்] இவன்றனக்கு=

இந்தத் தத்துவ ஞானிக்கு, அடியின் = (தத்துவஞானோற்பத்திக்கு) முதலில், படி இதுஉற = இவ்வுலகத்தையடைதற் பொருட்டு, அதாவது இவ்வுலகில் இஷ்டப் பிராப்தியின் பொருட்டும் அநிஷ்ட நிவர்த்தியின் பொருட்டும், நாகம் மருவ = சுவர்க்காதி சித்தியின் பொருட்டும், நிருவாணம்பலிதம் உற = மோக்ஷம் சித்திக்கும்பொருட்டும், வெகுவேலை உள = (முறையே கிருஷி வாணிச்சியாதியும், யாக உபாசனாதியும், சிரவணாதியும் ஆக) அநேகப் பிரகாரம் கர்த்தவ்வியமிருந்தது, இன்று அது எலாமும் அமைதி பெறலானது = இப்போது (சாம்சாரிக பலத்தி விச்சையின்மையானும் பிரமானந்த சாக்ஷாத்காரம் சித்தித்தபடியானும் கிருஷியாக சிரவணாதி) அவ்வனைத்தும் செய்யப்பட்டதாக ஆகிறது, இனிமேல் அநுஷ்டிக்கத்தக்கதின்மையினாலென்பது பொருள் எ—று.

தான், அரோ—அசை.

படி = பூமி, நாகம் = சொர்க்கம், நிருவாணம் = மோக்ஷம்,
வாணிச்சியம் = வியாபாரம். 134

(அ—கை)

இவ்வாறு கிருத கிருத்தியத்துவத்தையுபபாதனஞ்செய்து அதன் பலனாயுள்ள திருப்தியைத் தெரிவிக்கின்றார்.

கிருதகி ருத்திய மிதுதா னெதிர்மறை
கிளர்தரு தேர்தன் முனஞ்செய்தே
தெரிதரு மற்றிவ னிவ்வகை யாகிய
செறிதரு மகிழ்வனு தினமார்வன்
றுரிசுறு மறிவிலர் காண்முனை முதனச்
சுதல்கொடு வேண்டிய வாபவநேர்க
பரசுக மிகுபரி பூரண னுநான்
பவமுற லேதிச் சையினாலே. 135

(ப—ரை) கிருத கிருத்தியம் இது = இந்தக் கிருத கிருத்தியத்தை அதாவது கர்த்தவ்வியத்தின் அபாவத்தை, எதிர்மறை கிளர்தரு தேர்தல் முனஞ்செய்து = கர்த்தவ்யமாகிய பிரதியோகியினது பூரண அநுசந்தானத்தைப் பூருவஞ்செய்து, தெரிதரும் இவன் = அநுசந்தானஞ் செய்கின்ற இவ்வித்துவான், இவ்வகை ஆகிய = இனி

சொல்லப்போகிற பிரகாரத்தால் உண்டாவதாகிய, செறிதரும் மகிழ்வு = மிகுதியான சந்தோஷத்தை, அநுதினம் ஆர்வன் = எப்போதும் அடைவன், [அவ்வனுசந்தானத்தையே விஸ்தரிக்கின்றார். இச்செய்யுள் முதல் 153-வது செய்யுள் பரியந்தமும், அவற்றுள் முதலில் இகலோக சுகத்தை விரும்புவர்களினின்றும் தனக்கு விலக்ஷணத் தன்மையைத் தெரிவிக்கின்றார்] துரிசு உறும் அறிவிலர் = துன்பத்தையடைந்துள்ள அஞ்ஞர்கள், முளைமுதல் நச்சுதல்கொடு = புத்திராதியபேக்ஷையினால், வேண்டியவாபவம் நேர்க = யதேஷ்டமாக சமுசாரத்தையடைக, பரசுக மிகுபரிபூரணனும் நான் = பரமானந்த பரிபூரணனாகிய யான், ஏது இச்சையினால் பவம் உறல் = எவ்வஸ்துவின் வாஞ்சையால் சமுசாரத்தையடைவது எ—று.

காண்—முன்னிலையசை.

தான், மற்று, ஏ—அசை நிலைகள். 135

(அ—கை)

சுவர்க்காதியின் பொருட்டு கருமத்தையநுஷ்டானஞ் செய்யும் புருஷர்களினின்றும் வைலக்ஷண்ணியத்தைக் கூறுகின்றார்.

பரலோ கேச்சை புணர்ந்தவர் கருமம்
பண்ணு நிற்குக வெந்நாளு
மிருமா நிலமுழு துருவா கியயா
னெவ்வா றேதெத னற்செய்கே
னுரியோ ரிங்கெவ ரவர்நூல் கற்குக
வோதா நிற்குக முதுவேதங்
கரைதீர் கிரியை யகன்றமை யாலதி
காரம தென்ப தெனக்கெங்கே. 136

(ப—ரை) பரலோக இச்சைபுணர்ந்தவர் = சுவர்க்காதிலோகத்தையடைய விரும்பினவர்கள், எந்நாளும் கருமம் பண்ணுநிற்குக = எப்போதும் யாகாதி கருமங்களை யநுஷ்டானஞ்செய்க, இருமாநிலம் முழுது உருவாகிய யான் = சருவலோகான்மகமான யான், எவ்வாறு ஏது எதனால் செய்கேன் = எந்தப் பிரகாரம் எந்தக் கருமத்தை எந்தச் சாதனத்தால் அநுஷ்டிப்பேன், [அற்றேல் ஞானிக்குத் தன்பொருட்டு பிரவிருத்தியில்லாவிடினும் பிறர்பொருட்டுப் பிரவிருத்தி ஏன் கூடாது

என்று சங்கித்து எனக்கு வியாசர் முதலியோர்போன்று அதிகார மின்மையினுல் உலக சங்கிரகார்த்தமான பிரவிருத்தியுமின்றெனக் கூறுகின்றுர்] இங்கு எவர் உரியோர்அவர் = இவ்வுலகில் எவர்கள் அதிகாரிபுருஷர்களோ அவர்கள், நூல் கற்குக=சாஸ்திரங்களைப் படிக்குக, முதுவேதம் ஓதா நிற்குக=அனுதி வேதங்களையத்தியயனஞ் செய்க, அல்லது கற்குக = வியாக்கியானம்செய்க, ஓதா நிற்குக = அத்தியாபனஞ்செய்க,கரைதீர்கிரியை அகன்றமையால்=அளவில்லாத தொழில்கள் நீங்கினபடியால், நிஷ்கிரியனுதலாலென்பது பொருள், எனக்கு அதிகாரமது என்பது எங்கே = எனக்கு அதிகாரமின்றும் என்பது பொருள். 136

(அ—கை)

அற்றேல் தனது தேகத்தைப் போஷிக்கும்பொருட்டு பிக்ஷை வாங்கல் முதலியதும் பரலோகத்தின்பொருட்டு ஸ்நாஞதியும் உம்மால் செய்யப்படுகிறதாகக் காணப்படுகிறதே. ஆகையால் நிஷ்கிரியத்துவம் அசித்தமாமென்னுஞ் சங்கைக்கு அதுவும் தனது திருஷ்டியாலின்று மற்றேு அன்னியர்களாலேயே கற்பிக்கப்பட்டதெனக் கூறுகின்றுர்.

நித்திரை பிச்சை முழுக்கொடு சௌச
நிகழ்தர வேநய வேனுற்றே
னத்தகை காண்பவர் கற்பித் திடினெற்
கயலோர் கற்பனை யாலென்னுங்
கொத்துறு குன்றிமு னயலா ரோபித
கொழுமன லால்வெந் திடுமோதா
னித்திற நான்பிற ராரோ பித்திடு
மிழிபவ தருமங் களைமேவேன். 137

(ப—ரை) நித்திரை = தூக்கம், பிச்சை = ஐயம், முழுக்குஒடு = ஸ்நானம், சௌசம் = சுத்தம், ஆகிய இவைகளை, நிகழ்தர நயவேன் = நிறைவேற இச்சியேன், ஆற்றேன் = செய்பவனுமல்லன், அத்தகை காண்பவர் கற்பித்திடின் = என்னிடத்து அத்தருமங்களைப் பார்ப்பவர் கள் ஆரோபித்திடின், எற்கு அயலோர் கற்பனையால் என்ஆம் = எனக்கு அன்னியர்கள் செய்யும் ஆரோபத்தால் யாதுகெடுதி உண்டாம், [அயலோர் கற்பனையாலும் கெடுதி இருக்கின்றது என்று சங்கித்துக்

கெடுதியின்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] உறுகுன்றி கொத்து முன் = பொருந்தாநின்ற குண்டுமணிக்கொத்து முதலியது, அயல் ஆரோபிதகொழும் அனலால் = தன்னிடத்தில் குரங்கு முதலிய பிராணிகளாற் கற்பிக்கப்பட்ட சுவாலையோடுகூடிய அக்கினியால், வெந்திடுமோ = தகிக்கப்படுமா தகிக்கப்படாது, இத்திறம் = இந்தப் பிரகாரம், நான் பிறர் ஆரோபித்திடும் இழிபவ தருமங்களேமேவேன் = நான் அன்னியராற் கற்பிக்கப்பட்ட தாழ்வான சமுசார தருமங்களைப் பொருந்தேன் எ—று. 137

(அ—கை)

அற்றேல் உனக்கு அநித்திய சாமுசாரிகபயனின்கண் இச்சையின்மையினால் கருமாநுஷ்டானம் வேண்டாம், தத்துவ சாக்ஷாத்காரத்தின் பொருட்டுச் சிரவணாதி செய்யத்தக்கதேயாமென்னுஞ் சங்கைக்கு அஞ்ஞானாதிகளின்மையினால் சிரவணாதி கருத்திருத்துவமுமின்றாமெனக் கூறுகின்றார்.

தத்துவ மறியார் கேட்டிடல் கடனாந்
தனையறி தருயா னேன்கேட்கே
னொத்த வயிர்ப்புளர் சிந்தித் திடல்கட
னுறுதிய துளனேன் சிந்திக்கேன்
சித்தத் திரிபுளர் தெளிதரல் கடனாந்
திரிபில தேலே னேதியானஞ்
செத்திடு முடனா னென்றிடு திரிபைச்
சிறிதொரு காலுஞ் சேரேனான். 138

(ப—ரை) தத்துவம் அறியார் = சீவப்பிரமங்களினைக்கிய வடிவ தத்துவத்தையறியாதவர்கள், கேட்டிடல் கடனாம் = சிரவணஞ்செய்தற்குரியராவர், தனைஅறிதரு யான் = பிரத்தியக்வடிவ பிரமத்தையுணருகின்ற நான், ஏன் கேட்கேன் = எதற்காக சிரவணஞ்செய்வேன், ஒத்த அயிர்ப்புஉளர் = (தத்துவம் இந்தப்பிரகாரமோ அல்லது வேறு பிரகாரமா என்று) பொருந்திய சந்தேகத்தினையுடையவர்கள், சிந்தித்திடல் கடன் = மனனஞ்செய்தற்கு உரியவராவார், உறுதியதுஉளன் ஏன் சிந்திக்கேன் = தத்துவ நிச்சயமுடைய யான் எதற்காக மனனஞ் செய்வேன், எனக்கு அஞ்ஞான சந்தேகங்களின்மையினால் சிரவண

மனனங்களில் பிரவிருத்தியின்ருமென்பது பொருள், [சிரவண மனனங்கள் இல்லாதனவாயொழிக. விபர்யய நிவர்த்தியின்பொருட்டு நிதித்தியாசனம் செய்யத்தக்கதென்னுஞ் சங்கைக்கு தேகாதியிலான் மத்துவபுத்தி வடிவ விபர்யயமின்மையிஞல் அதுவும் அநுஷ்டிக்கத் தக்கதன்றெனக் கூறுகின்ருர்] சித்தத்திரிபுஉளர் = விபர்யாசத்தினை யுடையவர், தெளிதரல்கடனும்= நிதித்தியாசனம் செய்தற்குரியராவர், திரிபு இலதேல் ஏனேதியானம்=விபர்யயமில்லாவிட்டால் எதற்காக நிதித்தியாசனம், செத்திடும் உடல் நான் என்றிடு திரிபை=விநாச மாகின்ற தேகத்தை நான் என்கின்ற விபர்யாசத்தை, சிறிது ஒருகாலும் நான் சேரேன்=அற்பமும் ஓர்போதும் யான் பொருந்தேன் எ—று.

அயிர்ப்பு=சந்தேகம். 138

(அ—கை)

அற்றேல் விபர்யயமில்லாவிடின் நான் மனுஷியன் என்னும் வியவகாரம் எப்படிப் பொருந்தும் என்ரு சங்கித்து வாசனுவசத்தாற் பொருந்துமெனக் கூறுகின்ருர்.

மானுட ஞனென லாதி வழக்கிவ்
வகைவரு திரிபை யகன்றேயுந்
தானெடு நாட்பழ குதலால் வருவா
தனையாற் கற்பித மாமன்றே
மோனைய தாம்வினை நாசம தாகிடின்
மொய்விவ காரங் கிலமாகு
மானியுரு தெனின் வினையிது தியான
மாயிர மாற்றினு மழியாதே. 139

(ப—ரை) இவ்வகை வருதிரிபை அகன்றேயும் = இந்தப் பிரகாரம் தேகத்தில் நான் என்றுண்டாகின்ற விபர்யாசம் நீங்கியும், நெடுநாள் பழகுதலால் வருவாதனையால் = நீண்டகாலாப்பியாசத்தா லுண்டாகாநின்ற வாசனையால், நான்மானுடன் எனலாதி வழக்கு= நான் மனுஷியன் என்பது முதலிய வியவகாரம், கற்பிதமாம்=செய்யப் படும், [அப்படியானல் இவ்வியவகாரத்தின் நிவர்த்தி சித்திக்கும் பொருட்டு தியானம் சம்பாதிக்கத்தக்கதென்னுஞ் சங்கைக்கு பிராரத்த கருமத்தின் விநாசமின்றி நிவர்த்தியாவதின்ருமெனக் கூறுகின்ருர்]

மோனேயதாம் வினைநாசமது ஆகிடின் = மூலமாகிய பிராரத்த கருமம் அழியுமாயின், மொய்விவகாரம் கிலமாகும் = நெருங்கிய நான் மனுஷியன் என்பது முதலிய வியவகாரமும் நாசமாகும், வினையிது ஆனி உறுதுளனின் = பிராரத்த கருமம் நாசமாகாதாயின், தியானம் ஆயிரம் ஆற்றினும் அழியாது = தியானத்தையாயிரக்கணக்காகச் செய்யினும் நாசமாகாது எ—று.

தான், அன்று, ஏ, ஏ—அசைநிலைகள். 139

(அ—கை)

அற்றேல் பிராரத்த கருமத்தை நிமித்தமாகவுடைய வியவகாரம் மெலியும் பொருட்டு தியானம் செய்யத்தக்கதேயாமென்று சங்கித்து வியவகாரத்திற்கு தத்துவ ஞானத்தைப் பாதிக்குந்தன்மை காணுமை யால் அதன் நிவர்த்தியின் பொருட்டு தியானம் அநுஷ்டிக்கத்தக்கதல்ல வெனக் கூறுகின்றார்.

விவகா ரத்தி னடக்கம் விரும்பிடின்
மேவு தியான நினக்காக
விவர் விவகாரம் வாதிப் பதல
வெனக்கா ணகமேன் றியானிக்கேன்
அவமுறு விட்சே பங்களெ னக்கிலை
யாதலி னுற்று சமாதியுமின்
றெவமுறு விட்சே பங்கள் சமாதியு
மேலும் விகார மனக்காமே. 140

(ப—ரை) விவகாரத்தின் அடக்கம் விரும்பிடின் = வியவகாரத் தின் ஒடுக்கத்தை விரும்பின், மேவுதியானம் நினக்கு ஆக = விரும்பா நின்ற தியானம் உனக்கு இருக்குக, இவர் விவகாரம் = ஞானிகளின் வியவகாரம், வாதிப்பது அல எனக்காண் அகம் = தத்துவ ஞானத்தைக் கெடுக்காது என்று பார்க்கின்ற யான், ஏன் தியானிக்கேன் = எதற்காக தியானஞ்செய்வேன், [தியானம் செய்யத்தகாததாயினும் விக்ஷேப நிவர்த்தியின் பொருட்டு சமாதி செய்யத்தக்கதென்னுஞ் சங்கைக்கு விக்ஷேபமும் சமாதியும் மனதின் தருமமாதலால் விக்ஷேபத்தை நிவர்த்தி செய்வதான சமாதியின்கண்ணும் எனக்கு அதிகாரமின்றும் எனக் கூறுகின்றார்] அவம்உறு விட்சேபங்கள் எனக்கு இலை =

இழிவு பொருந்திய காமக் குரோதாதி சஞ்சலங்கள் நிருவிகாரமாகிய எனக்கின்றாம், ஆதலின் ஆற்று சமாதியும் இன்று = ஆகையினுல் செய்யாநின்ற சமாதியும் வேண்டுவதின்றாம், எவம்உறு விட்சேபங் கள் = குற்றம் பொருந்திய காமாதிகளாவது, சமாதியும் = விருத்தி நிரோத ரூபமானயோகமாவது, விகாரமனக்கு ஏலும் ஆம் = பரிணாமி யாகிய அந்தக்கரணத்திற்கே பொருத்தமாம் எ—று.

ஏ—அசை. 140

(அ—கை)

அப்படியாயினும் சமாதியின் பயனாகிய அநுபவம் சம்பாதிக்கத் தகுந்தது என்று சங்கித்து அது எனது சொரூபமாதலால் சம்பாதிக்கத் தகுந்ததன்றெனக் கூறுகின்றார்.

நித்திய வநுபவ ரூப வெனக்கிங்
　　னிகழநுபவம் வேறே யேதோ
வத்திர மறசெய் வனசெய் தனவா
　　மடைவ வடைந்தன துணிவீதே
யித்திர ளுலகிய லூலிய லாகுத
　　லேனைய விவகா ரமதேனும்
மொய்த்திடு செயனுகர் வற்ற வெனக்கு
　　முன்வினை யின்படி முடிவாமாமே. 141

(ப—ரை) இங்ஙன் நித்திய அநுபவரூப எனக்கு = இவ்வாறு நித்திய அநுபவ ரூபமாகிய எனக்கு, நிகழ் அநுபவம் வேறே ஏது = விளங்காநின்ற அநுபவமானது அன்னியமாக ஏது? இல்லை என்றபடி [உபபாதனஞ்செய்த கிருத கிருத்தியத்துவத்தை முடிக்கின்றார்] அத் திரம் அற = துன்பம் நீங்கும் பொருட்டு, செய்வன செய்தனவாம் = செய்யத்தக்கன அனைத்தும் செய்து முடிந்தனவாம், அடைவ அடைந் தன = அடையத்தக்கன அனைத்தும் அடைந்து முடிந்தனவாம், ஈதே துணிவு = என்னுமிதுவே ஞானியின் நிச்சயமாம் [இவ்வாறு எல்லா விடங்களிலும் கருத்திருத்துவத்தையங்கீகரியாவிடின் நியமமின்றி யிருக்குந்தன்மை நேரும் என்னுஞ் சங்கைக்கு பிராரத்த வசத்தால் பிராப்தமான நியமமின்றி யிருத்தலையங்கீகரிக்கின்றார்] இத்திரள் உலகு இயல் = இந்தக் கூட்டமாகிய இலௌகீக வியவகாரமாகிய

பிக்ஷையைக் கவருதல் முதலியதும், நூல்இயல் ஆகுதல் = சாஸ்திர வியவகாரமாகிய ஜபம் சமாதி முதலியதும், ஏனைய விவகாரமதேனும் = வேருன நிஷித்தஹிம்ஸாதியாயினும், மொய்த்திடு செயல் நுகர்வு அற்ற எனக்கு = ஆன்மாவை மறைக்கின்ற கருத்திருத்துவபோத்திருத்துவமின்றிய எனக்கு, முன் வினையின்படி = பிராரத்த கருமத்தினநுசாரமாக, முடிவு ஆம் = சமாப்தியாகும், பிரவிருத்திக்கும் என்பது பொருள் எ—று.

இங்ஙன் என்பது இஙன் என இடைக்குறையாயிற்று. 141

(அ—கை)

இவ்வாறு சாஸ்திரத்தின் வாஸ்தவத்தன்மையினை அதாவது ஞானிக்கு நியமமின்றியிருத்தலைக்கூறி பிரௌடிவாதத்தால் இப்போது நியமமாக இருத்தலைக் கூறுகின்ருர்.

இனிநான் கிருத கிருத்திய னேனு
மிவ்வுல கருள்புரி காதலினுற்
றனிநூ லியல்வழி யேசென் றிடுகேன்
ருனத னுலெற் கானியெனே
நனிதே வார்ச்சனை முழுகுதல் சவுச
நல்லிர வாதியி னணுகவுடல்
தொனி தாரமது செபிக்குக வல்லது
சொல்லுக வுபநிடமே வாக்கே. 142

(பு—ரை) இனி = இப்பவும், நான் கிருத கிருத்தியனேனும் = நான் செய்யத்தக்கனவனைத்தும் செய்து முடிந்தவனுயினும், இவ்உலகு அருள்புரிகாதலினுல் = இப்பிராணிகளினநுக்கிரக இச்சையினுல், தனிநூல் இயல்வழியே சென்றிடுகேன் = ஒப்பற்ற சாஸ்திரத்திற் சொல்லிய மார்க்கத்தாலேயே நடப்பேன், அதனுல் = அவ்வாறு நடப்பதனுல், எற்குஆனி எனே = எனக்குக் குறைவு யாது, யாதொரு குறைவுமின்ருமென்பது பொருள், [சாஸ்திரத்திற் சொல்லிய மார்க்கத்திலேயே பிரவிருத்தியையங்கீகரிக்கின் அப்போது அதனபிமானத்தை முன்னிட்ட விகாரம் உண்டாகுமேயென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்] நனிதேவார்ச்சனை = மேலான தேவதைகளின் பூஜையிலும், முழுகுதல் = கங்கை முதலிய நதிகளில் ஸ்நாநஞ்செய்வதிலும்,

சவுசம் = சுத்தி செய்தலிலும், நல்இரவு ஆதியில் = நல்லபிக்ஷை முதலியவைகளிலும், உடல் நணுக=தேகமிருக்குக, வாக்குதொனி தாரமது ஜபிக்குக=வாக்கானது நீண்ட ஒலியினையுடைய பிரணவத்தை செபஞ்செய்க, அல்லது உபநிடமே சொல்லுக=அல்லது வேதாந்த சாஸ்திரத்தையே படிக்குக எ—று.

தான், ஏ—அசை.

மந்திரத்தையுணர்ந்த எவனுக்கு முட்படுக்கையும் வருத்தத்தைத் தாராதோ அவனுக்குப் புஷ்பப் படுக்கையால் எங்கிருந்து கஷ்டமுண்டாகும்? இவ்வாறு எந்த எனக்குத் தீவிரப் பிராரத்தத்தாற் கிடைத்த அநாசாரத்தாலும் ஞானத்தின் வலியால் கெடுதியுண்டாகிற தில்லையோ, அப்படிப்பட்ட எனக்குச் சதாசாரத்தால் எங்கிருந்து கெடுதியுண்டாகும்? என்பது தாற்பரியம். 142

(இதுவுமது)

விண்டு தியானிக் குகமன மல்லது
மேதகு பேரின் பதின்மூழ்க
திண்டு கடீர்கரி நானிதி லொன்றுஞ்
செய்யேன் செய்விப் பவனுகேன்
மண்டு மிவகையேற் கருமி யெனக்கும்
வருகல கமதெங் கேயுண்டாம்
மிண்டுறு கீழ்கடன் மேல்கட லும்போல்
விடயந் திரிபுள வதனுலே. 143

(ப—ரை) மனம்விண்டுதியானிக்குக=புத்தியானது விஷ்ணுவை தியானம் செய்க, அல்லது மேதகுபேர் இன்பதில் மூழ்க=அல்லது மேன்மையான பிரம்மானந்தத்தில்லீனமாகுக, துகள்தீர்திண் கரிநான் = குற்றமற்ற திடசாக்ஷியாகிய யான், இதில் ஒன்றும் செய்யேன் செய்விப்பவன் ஆகேன்=இவ்வுலகில் கொஞ்சமும் செய்பவனும் செய்விப்பவனுமன்று, [பலிதத்தைக் கூறுகின்றுர்] இ(வ்)வகையேல்=இவ்வாருகும்போது, மண்டும் கருமி எனக்கும்=நெருங்கிய கரும காண்டிக்கும் ஞான காண்டியாகிய எனக்கும். மிண்டுறு கீழ்கடல் மேல் கடலும்போல்=சலத்தால் நிறைந்துள்ள கிழக்குச் சமுத்திரமும் மேற்குச் சமுத்திரமும்போல, விடயந்திரிபுஉள அதனுலே=வெவ்வேறு விஷயமாவதால், வருகலகமது எங்கேயுண்டாம்=வாராநின்ற சண்டையானது எவ்விஷயத்தில் சம்பவிக்கும் எ—று. 143

(அ—கை)

ஞானிக்கும் கருமிக்கும் வெவ்வேறு விஷயகத்துவத்தையே வெளிப்படுத்துகின்றார்.

கருமிக் குடல்வாக் குளமதி லன்றிக்
கரியிடை யொற்றுமை யிலேஞானிக்
கொருகரி யாநிரு லேபத் தேயல
தொற்றுமை யிதரத் திலதாமிப்
பரிசு தமிற்றும் வருமியல் பறியார்
பதிரரெனக் கலகஞ் செய்வா
ரிருவரை யுங்கண் டறிவுடை யோர்க
ளிம்பர் நகைத்திடு வாரன்றே. 144

(ப—ரை) கருமிக்கு = கருமத்தை செய்பவனுக்கு, உடல்வாக்கு உளமதில் அன்றி = தேகம் வாக்கு புத்தியாகிய இவைகளில் நிர்ப்பந்தமேயன்றி, கரியிடை ஒற்றுமைஇலே = சாக்ஷியினிடத்து நிர்ப்பந்தமின்றும், ஞானிக்கு = ஆன்மாவையறிந்தவனுக்கு, ஒருகரி நிருலேபத்தே = ஒப்பற்ற சாக்ஷியினது அசங்கத்துவத்தில், ஒற்றுமை அலது = நிர்ப்பந்தமேயன்றி, இதரத்து இலதாம் = தேகேந்திரியாதிகளில் நிர்ப்பந்தமின்றும் [அன்றியும் எவ்ஞானியும் கருமியும் கலகத்தைச் செய்கின்றனரோ அவர் வித்துவான்களால் பரிகசிக்கத்தக்கவராவரெனக் கூறுகின்றார்] இப்பரிசு = கூறியவண்ணம், தமில் தாம்வரு இயல்பு அறியார் = பரஸ்பர விருத்தாந்தங்களையுணராதவர்கள், பதிரர் என கலகஞ்செய்வார் = செவிடரைப்போலச் சண்டை செய்வார்கள், அறிவுடையோர்கள் = புத்திமான்கள், இம்பர் = இவ்வுலகில், இருவரையும்கண்டு நகைத்திடுவார் = சண்டையிட்டுக்கொள்ளா நின்ற போலிஞானியையும் கருமியையும் பார்த்துச் சிரிப்பார்கள் எ—று.

ஆம், அன்று, ஏ—அசைநிலைகள். 144

(அ—கை)

எதனால் ஞானியும் கருமியும் பரிகசிக்கப்படுகின்றனரென்று சங்கித்து விஷயமின்றிக் கலகத்தைச்செய்வதனால் எனக் கூறுகின்றார்.

தரமகலி யாதினை யறியான் கருமி
தத்துவ வித்தச் சாக்கியையே
பிரம மெனக்காண் குகவங் னறியிற்
பேசுறு கருமிக் கழிவென்னே
யுரமுடை யானிது பொய்யெனு முணர்வா
லுடல்வாக் குளமு முறப்பற்றான்
கருமி யவற்றான் முயலுக முயலிற்
கற்றவ னுக்குறு மழிவென்னே. 145

(ப—ரை) தரம் அகல்யாதினை = (கருமாநுஷ்டானத்தில் உபயோகியாயுள்ள தேகம் வாக்குபுத்திகளினும் வேறான) சமானமற்ற எந்த சாக்ஷியை, கருமிஅறியான் = கருமகாண்டியுணரானே, அச் சாக்கியையே தத்துவவித்து பிரமம் எனக்காண்குக = அந்தப் பிரத்திய கான்மாவையே ஆன்மஞானி பிரமம் என்று அறிக, அங்ஙன் அறியில் = அவ்வாறு உணருவதனால், பேசுறு கருமிக்கு = சொல்லாநின்ற கரும காண்டிக்கு (கருமாநுஷ்டானத்தில்), என்னே அழிவு = யாதுகுறைவு, யாதொருகுறைவுமின்றாமென்பது பொருள், உரம் உடையான் = ஞானி, இதுபொய்எனும் உணர்வால் = இவ்வனைத்தும் மித்தை என்கிற ஞானத்தால், உடல்வாக்கு உளமும் உறப்பற்றான் = தேகம் வாக்கு புத்தியாகிய இவைகளைச் சம்பந்தியான், பரித்தியாகஞ் செய்துளான் என்பது பொருள், அவற்றால் = (ஞானியால் மித்தையென்னும் ஞானத் தால் பரித்தியாகஞ் செய்யப்பட்ட) தேகாதிகளால், கருமி முயலுக = கருமகாண்டி கருமாநுஷ்டானத்திற் பிரவிர்த்திக்குக, முயலில் = அவ் வாறு பிரவிருத்திப்பதனால், கற்றவனுக்கு என்னே அழிவு உறும் = ஞானிக்கு யாது குறைவு உண்டாம், யாதொரு குறைவுமின்றாம், ஆகை யால் விஷயமின்றிக் கலகத்தைச் செய்யும் ஞானி கருமியிருவரும் பரிகசிக்கத்தக்கவராவரென்பது கருத்து எ—று. 145

(அ—கை)

பிரயோசனமின்மையால் கருமானுஷ்டானம் ஞானியால் அங்கீ கரிக்கப்படுகிறதில்லையென்று வினவுகின்றான்.

எத்தன மின்றுத வியெனி னிவிர்த்தி
யெங்கே யுபயோ கமதாகும்
வித்தை யினேது நிவிர்த்தி யெனிற்ருன்
வித்தை நசைக்கவ் வகைமற்ரும்
புத்தி யுளானறி விச்சை யுருனேற்
போதமுருன் மற்றிவன் மீட்டுஞ்
சித்தழி யாமையின் வளர்வுறும் வேறே
செறிகரு வியிஞ லலவாமே. 146

(ப—ரை) எத்தனம்உதவிஇன்று எனின் = ஞானிக்குக் கருமத்தில் பிரவிருத்தியானது பிரயோசனமின்றியதாமென்றுசொல்லின், [பிரயோசனமின்மை நிவர்த்தியிலும் சமானமாமெனப் பரிகரிக்கின்ருர்] நிவர்த்தி எங்கே உபயோகமது ஆகும் = பிரவிருத்தியினின்மை எவ் விடயத்து சாதனமாகும், [நிவிருத்திபோதவேதுவாதலால் பிரயோசன மின்மையன்றென வினவுகின்ருன்] நிவிர்த்தி வித்தையின் ஏது எனில் = நிவிருத்தி ஞானத்திற்குக் காரணமென்று சொல்லில், [அப்படியாஞல் பிரவிருத்தியும் ஜிஞ்ஞாசையிலேதுவாவதால் உபயோகமுள தெனக் கூறுகின்ருர்] அவ்வகை = எப்படி நிவிருத்தியுபயோகமாகிறதோ அப்படி, மற்று = பிரவிருத்தியும், வித்தைநசைக்குஆம் = சித்த சுத்தி வைராக்கிய வாயிலாக ஞானத்தினிச்சைக்கு ஏதுவாம், [அற்றேல் அறிந்தவனுக்கு அறியும்வேட்கையின்மையிஞல்பிரவிருத்தி உபயோகமற்றதாமென மீண்டும் வினவுகின்ருன்] புத்திஉளான் அறிவு இச்சை உருனேல் = ஞானி ஜிஞ்ஞாசையை யடையானென்று சொல்லில், [அப்படியாஞல் அறிஞனுக்கு மீண்டும் ஞானமாவசியகமின்மையிஞல் அதனேதுவான நிவிருத்தியும் அறிஞனைக் குறித்து உபயோகமற்றதாமெனக் கூறுகின்ருர்] இவன் மீட்டும்போதம் உருன் = ஞானி மறுபடியும் ஞானத்தையடையான், [ஒருதடவையுண்டான ஞானத்திற்கு ஸ்திரத்தன்மையின் பொருட்டு நிவிருத்தியபேக்ஷிக்கப்படுகிறது என்ரு சங்கித்து ஸ்திரத்துவம் பாதகா பாவத்தை யபேக்ஷிக்கின்றது. வேறு சாதனத்தையபேக்ஷிக்கின்றதில்லையெனக் கூறுகின்ருர்] அழியாமையின் = (மகாவாக்கியப்பிரமாணத்தாலுண்டான ஞானத்திற்கு வலியுள்ள பிரமாணத்தால்) பாதமின்மையிஞல், சித்து வளர்வுஉறும் = ஞனனமநுவிருத்திக்கும்,செறிவேறுகருவியிஞல்

அலவாம்=நெருங்கிய சாதனந்தரத்தாலன்றும். ஆகையால் அதன் பொருட்டு சாதனந்தரம் அநுஷ்டிக்கத் தக்கதல்ல என்பது பொருள் எ—று. தான்—அசைநிலை. 146

(அ—கை)

அற்றேல் வேறு பிரமாணத்தால் பாதமில்லையாயினும் அவித்தையால் அல்லது அதனது கருத்திருத்துவாதியத்தியாசத்தால் பாதமுண்டாமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

துன்பார் மடமு மதன் காரியமுந்
தூயறி வைத்தெற வலதன்றன்
முன்பே தத்துவ வறிவா லந்த
விரண்டு முடிந்தன வதனலே
யன்பா ரிந்திய மழிபடல் கண்ணுறு
மதன லழிவுறு மென்னதே
வன்பூ ணையைவாழ் வுறுமெலி வதையா
மாய்ந்தது வதைசெயு மெவ்வாறே. 147

(ப—ரை) துன்புஆர்மடமும் அதன்காரியமும்=துக்கஏதுவாகப் பொருந்தியுள்ள அஞ்ஞானமும் அஞ்ஞானகாரிய கருத்திருத்துவாதியத்தியாசமும், தூய்அறிவைத்தெற=பிரமஞானத்தைப்பாதிக்க, வலது அன்று=பலமுடையதன்று. [அதிலேதுவைக் கூறுகின்றார்] முன்பே தத்துவ அறிவால்=பூருவமே ஆன்ம ஞானத்தால், அந்த இரண்டும் முடிந்தன=அஞ்ஞானமும் அதன் காரியமுமாகிய இரண்டும் பாதிக்கப் பட்டன, அதனல்=அக்காரணத்தினல்,[அற்றேல் அவித்தை பாதிக்கப் பட்டதாயினும் பிரதீதியாகின்ற அதன் காரியத்திற்கு பாதிதத்துவம் அசம்பவமானதால் அதனல் ஞானத்திற்குப் பாதமுண்டாகுமென்று சங்கித்து உபாதான நிவர்த்தியினலேயே அதுவும் பாதிதமானதால் அதனலும் பாதம் சங்கிக்க முடியாதெனக் கூறுகின்றார்] அன்புஆர் இந்தியம் = ஆசையோடு கூடிய இந்திரியமானது, அழிபடல் கண்ணுறும்=பாதிதவஸ்துவைப் பார்க்கும், அதனல்=அந்த பாதிதவஸ்துவினல், அழிவுஉறும் என்னதே = ஞானம் பாதிக்கப்படுமென்று

சொல்லற்க, [அதில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] வாழ்வுஉறும் வன் எலி = சீவிக்கின்ற பலமுள்ள எலியானது, பூனையை வதையா = மார்ச்சாலத்தைக் கொல்லாது, மாய்ந்தது = செத்த எலியானது, எவ்வாறு வதை செயும் = எப்படிக் கொல்லும், கொல்லாதென்பது பொருள் எ—று.

ஆல், ஏ, ஏ—அசைநிலைகள். 147

(அ—கை)

துவைத தரிசனத்தால் தத்துவ ஞானத்திற்குப் பாதமின்மையை கைமுதிக நியாயத்தைத் தெரிவித்தலால் திடஞ்செய்யும் பொருட்டு அதன் அநுகூலமான திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

பாசுப தாத்திர மதனு லெய்யப்
பட்டுஞ் சிதையா னெனினன்னோன்
ஆசுக நிட்பல மதனாற் றுளைபட்
டங்கந் தொலைதற் களவேதோ
பேசின்முன் மிகுதற் காரிய மதனாற்
பெருகு மவித்தையி னொடுபோதம்
மாசறு சமர்செய்து வென்றதி நாளது
மாதிட மழிவுற லெவ்வாறே. 148

(ப—ரை) பாசுபத அத்திரமதனால் = பாசுபதாஸ்திரத்தினால், எய்யப்பட்டும் = (சமர்த்தன்) துளைக்கப்பட்டும், சிதையான் எனின் = மரணமாகானாயின், அன்னோன் = அப்படிப்பட்ட சமர்த்த புருஷன், நிட்பல ஆசுகமதனால் = முனையில்லாத பாணத்தினால், துளைபட்டு = அடிக்கப்பட்டு, அங்கம் தொலைதற்கு = சரீரம் நாசமாமென்பதில், அளவு ஏது = பிரமாணம் ஏது, இல்லை என்றபடி, [திருஷ்டாந்தத்தால் சித்தித்த பொருளைத் தாஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்] பேசில் = சொல்லுமிடத்து, முன் = வித்தியாப்பியாச காலத்தில், மிகு தன் காரிய மதனால் = நானாவிதமான தனது காரியமாகிய பிரமாத்திருத்துவாதிகளால், பெருகும் அவித்தையினோடு = விருத்தியாகின்ற அஞ்ஞானத்தோடு, போதம் மாசு அறு சமர்செய்து = ஞானம் நல்ல யுத்தத்தைச்செய்து, வென்றது = அதனைச் செயித்தது, அது = அந்த ஞானம், மாதிடம் = அப்பியாச மிகுதியினால் மிகத்திடமாகி, இநாள் =

இப்போது அதாவது அவித்தையின் நிவர்த்தி காலத்தில், எவ்வாறு அழிவுறல் = (நிர்மூலமாகிய அதன் காரியவடிவ அத்தியாசத்தால்) எப்படி நாசமாம், எவ்விதத்தாலும் பாதிக்கப்படாது என்பது பொருள் ஏ—று. நிட்பலம் = கூர்மையின்றியது.

ஓ, ஏ—அசைநிலைகள். 148

(அ—கை)

உபபாதனஞ்செய்த பொருளை கேட்பவனது புத்தியிலேறும் பொருட்டு உருவகத்தால் கூறுகின்ருர்.

அறிவான் மடமு மதன் காரியமு
மழிந்தனவா யிங்கே நிற்க
வறிவெனு மரைய னவற்ரு லழிகில
னன்றியு மவனுக் கதிபுகழாம்
அறிவெனு மதிசூ ரனையெவ னிவ்வகை
யநுதின மும்பிரி யானந்த
வறிவுடை யோனுக் குடன்முத லால்வரு
வருவினை யறல்வினை யாலென்னே. 149

(ப—ரை) அறிவால் அழிந்தனவாய் = ஞானத்தால் பாதிக்கப் பட்டனவாய், மடமும் அதன் காரியமும் = அஞ்ஞானமும் அதன் காரிய பிரபஞ்சமாகிய பிணமும், இங்கே நிற்க = ஆன்மாவில் நிற்குக, அறிவு எனும் அரையன் = ஞானமாகிய அரசன், அவற்ருல் அழிகிலன் = அஞ்ஞான அதன் காரியங்களால் நாசமாகான், பீதியடையானென்பது பொருள். அன்றியும் = அஃதல்லாமலும், அவனுக்கு அதிபுகழாம் = அவற்ருல் ஞான அரசனுக்கு மிக்க கீர்த்தியாம், [இங்ஙனமிருக்குக பிரகிருதத்தில் என்னை வந்தது எனிற் கூறுகின்ருர்] எவன் = யாதொரு புருஷன், அறிவு எனும் அதிசூரனை = (அவித்தை அதன் காரியங்களை நாசஞ்செய்வதும் ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை விஷயஞ்செய்வதுமாகிய) ஞானமாகிய மிக்க வீரபுருஷனை, இவ்வகை = கூறிய பிரகாரம், அநுதினமும் பிரியான் = எப்போதும் நீங்குறதில்லையோ, அந்த அறிவுடையோனுக்கு = அப்படிப்பட்ட வித்துவானுக்கு, உடல்முதல்

வரு அரு வினை ஆல் = தேகாதியினுலுண்டாகின்ற பிரவிருத்தியினுலாவது, வினை அறல் ஆல் = நிவிருத்தியினுலாவது, என்னை = யாதுபயன், இஷ்டமாவது அநிஷ்டமாவது இல்லையென்பது பொருள் எ—று. ஆல், அறல் என்பன பிரித்துக் கூட்டப்பட்டன. 149

(அ—கை)

அப்படியானுல் ஞானியைப்போன்று அஞ்ஞானிக்கும் பிரவிருத்தியில் ஆக்கிரகம் யுத்தமன்று என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

வினையினி லறியாற் கெவ்வாற் ருனு
மிகுந்தாக் கிரக முறற்பாற்ரும்
மனுடர்கள் வியனுல கலதுகை வல்லிய
மருவுற முயலுக வேண்டுமதாற்
றனையறி வுற்றவ னவர்நடு வமருழி
சாற்று மவர்க்கேற் பனவாக
மனமுடல் வாக்குக ளாற்ருெழி லெல்லாம்
வழுவற வேசெய் குவனன்றே. 150

(ப—ரை) அறியாற்கு = ஞானமின்றியவனுக்கு, வினையினில் = பிரவிருத்தியில், எவ்வாற்ருனும் = சருவப் பிரகாரத்தாலும், மிகுந்த ஆக்கிரகம் உறற்பாற்ரும் = அதிக அடம் யுக்தமாம், [அதில் யுத்தியைக் கூறுகின்ருர்] மனுடர்கள் = புருஷர்கள், வியன்உலகு அலது கை வல்லியம் மருவுற = சொர்க்கத்தின் பொருட்டாவது மோக்ஷத்தின் பொருட்டாவது, முயலுகவேண்டும் அதால் = பிரயத்தினஞ் செய்ய வேண்டுமாகையால், "எதனுல் ராத்திரியில் சுகமாக வசிக்கலாமோ அதனைப் பகற்காலத்தாற் செய்யவேண்டும். எதனுல் மாரி காலத்திற் சுகமாக வசிக்கலாமோ அதனை எட்டு மாதங்களால் செய்துகொள்ள வேண்டும். எதனுல் விருத்தாவஸ்தையில் சுகமாக வசிக்கலாமோ அதனைப் பூர்வாவஸ்தையில் செய்துகொள்ளவேண்டும். எதனுல் மரணத்தின் பின் சுகமாய் வசிக்கலாமோ அதனை ஜீவித்திருக்கும் வரையில் செய்துகொள்ளவேண்டும்" என்றும் மகாபாரதத்துள்ள விதுரவசனத்தினுல் அஞ்ஞானி மனிதனுக்கு எதனுல் இஷ்ட வஸ்துவின் சாதனம் செய்தல் தகுதியோ அதனுல் ஞானமின்றியவனுக்குப் பிரவிருத்தியில் ஆக்கிரகம் உசிதமாம். [அறிஞனுக்கு ஆக்கிரகம்

யுக்தமன்று என்றுகூறப்பட்டது. அப்படியானல் கருமிகளின் மத்தியிலிருக்கும் அவனல் என்ன செய்யத்தக்கதெனிற் கூறுகின்ருர்]தனே அறிவுற்றவன்=ஆன்மாவையறிந்தவன், அவர்நடு அமருழி = அக்கருமிகளின் மத்தியிலிருக்கும்போது,சாற்றும் அவர்க்கு ஏற்பனவாக= சொல்லிய அக்கருமிகளுக்கு அநுகூலமாக, உடல் மனம் வாக்குகளால்=தேகாதிகளால், தொழில் எல்லாம்=சருவக்கிரியைகளேயும், வழுவறவே செய்குவன் = தோஷமின்றிச் செய்வான், கருமிகளே சற்கருமத்தினின்றும் நிவர்த்திக்கமாட்டான் என்பது பொருள் எ—று

மிகுந்த ஆக்கிரகமென்பது மிகுந்தாக்கிரகமென அ க ர ம். கெட்டது. அன்று, ஏ—அசைகள். 150

(அ—கை)

ஜிஞ்ஞாசுக்களின் மத்தியிலிருக்கும்போது இந்த ஞானியினது கிருத்தியத்தைக் கூறுகின்ருர்.

இவன்மற் றறிவுறு வேட்கையர் மத்தியி
லெப்போ துறைகுவ னப்போதே
யவர்க டமக்கறி வுறவே தொழின்முழு
தறவு மிகழ்ந்தகல் வான்ருனுந்
தவவறி விலருக் கேற்ப நடக்குத
றகையறி வுளனுக் குசிதமதாம்
நவமுறு மிளவ றமக் கேற்பமிக
நடப்பா னனையர்பிதா வன்றே. 151

(ப—ரை) இவன் = வித்துவான், அறிவு உறு வேட்கையர் மத்தியில்=ஞானத்தையடையஇச்சிக்கின்ற ஜிஞ்ஞாசுக்களினிடையில், எப்போது உறைகுவன் அப்போது = எப்பொழுது இருப்பானே அப்பொழுது,அவர்கள் தமக்கு அறிவு உற=அந்த ஜிஞ்ஞாசுக்களுக்கு தத்துவஞானமுண்டாதற் பொருட்டு, தொழில் முழுதும் அறவும் இகழ்ந்து=கிரியைகளனைத்தையும் அத்தியந்தம் நிந்தித்து, தானும அகல்வான்=தானும் கிரியைகளே விட்டுவிடுவான், [ஏதனல் இவ்வாறு செய்யத்தக்கதெனிற் கூறுகின்ருர்] தவ அறிவிலர்க்கு ஏற்ப நடக்குதல் = கொஞ்சமும் ஞானமில்லாதவர்களுக்கு அநுகூலமாக

ஆசரித்தல், தகை அறிவுளனுக்கு உசிதமதாம் = மேலாகிய ஞானிக்கு யுக்தமாம், கிருபையுடையவனுதலாலும் அவர்களநுக்கிரகிக்கத் தக்கவ ராதலாலும் என்பது கருத்து. [இவ்வாறு எங்கே காணப்பட்டதெனிற் கூறுகின்ருர்] நவம் உறும் இளவல் தமக்கு ஏற்ப = சினேகமுள்ள சிறு குழந்தைகளுக்குத் தகுந்தபடி, அனையர் பிதா = அக்குழந்தை களின் தந்தையானவன், மிக நடப்பான் = மிகவும் செல்லுவான் எ—று. மற்று, அன்று, ஏ—அசை. 151

(அ—கை)

பிதா சிறு குழந்தைகளையநுசரித்து நடத்தலைத் தெரிவிக்கின்ருர்.

பால னிகழ்ச்சிசெய் தறைதல் செய்தாலும்
பண்புறு தனது பிதாவந்தக்
காலை கிலேசமு ருன்முனி யானக்
காதல ளெடுவிளை யாடிடுவான்
சீலமி லார்களி கழ்ந்தா லுந்துதி
செய்தாலுஞ் சீரிய ரிகழார்
மேலுந் துதிசெய் யாரவ ரறிவே
மேவுறு மாறொழுகு வர்ன்றே. 152

(ப—ரை) பாலன் = சிறு குழந்தை, இகழ்ச்சி செய்து அறைதல் செய்தாலும் = நிந்தித்துத்தாடனஞ் செய்யினும், பண்புறு தனது பிதா = மேன்மையான தனது தந்தை, அந்தக்காலை = அப்போது, கிலேசம் உருன் = துன்பத்தையடையான், முனியான் = கோபியான், மாருய், அக்காதலனெடு விளையாடிடுவான் = அக்குழந்தையோடு கிரீடை செய்வன், [தாஷ்டாந்தத்தில் பொருத்துகின்ருர்] சீலம் இலார்கள் = ஒழுக்கம் இல்லாத அஞ்ஞர்கள், இகழ்ந்தாலும் = நிந்தித்தாலும், துதி செய்தாலும் = புகழ்ந்தாலும், சீரியர் = ஆன்மாவை அறிந்த பெரியோர், இகழார் = நிந்தியார், மேலும் துதி செய்யார் = மற்றும் புகழார், அவர் அறிவே மேவுறுமாறு = அவ்அஞ்ஞர்கள் ஞானத்தையேயடையும் விதம், ஒழுகுவர் = ஆசரிப்பார்கள் எ—று.

அன்று, ஏ—அசை. 152

(அ—கை)

இவ்வாறு அஞ்ஞானியையநுசரித்து ஞானி ஆசரித்தலில் நிமித்தங் கூறுகின்றார்.

எந்த நடத்தா லிவனிங் குண்மையை
யெய்துவ னதுகா ரியமேயாம்
நந்தறி ஞர்க்கிங் கறியா ரறிவுற
நாட்டல லாற்றொழில் வேறின்றாம்
இந்த மகான்செய் வனசெய் தேலுவ
வேய்ந்து மகிழ்ச்சி யியைந்தவனாய்ச்
சந்தத முந்தன் றூய்மன தாலித்
தகையநு சந்தானஞ் செய்வான். 153

(ப—ரை) இவன் = இந்த அஞ்ஞானி, இங்கு = இவ்வுலகில் எந்தநடத்தால் = (ஞானியினது) எப்படிப்பட்ட ஆசரணத்தால், உண்மையை எய்துவன் = தத்துவத்தையறிவனோ, அதுகாரியமே யாம் = அவ்வாசரணம் (ஞானியால்) அநுஷ்டிக்கத் தக்கதாம், [அப்படியானால் அதுபோலவேறு காரியமும் பிராப்தமாகுமேயெனிற் கூறுகின்றார்] நந்து அறிஞர்க்கு = மேன்மையான ஞானிகளுக்கு, இங்கு = இவ்வுலகில், அறியார் அறிவுற நாட்டல் அலால் = அஞ்ஞர்களை ஞானத்தையடையச் செய்வதேயன்றி, வேறு தொழில் இன்றாம் = வேறு வியாபாரம்செய்யத்தக்கதன்றாம்,ஆகையால்அவர்களையநுசரித்தலால் தத்துவஞானம் செய்யத்தக்கதென்பது பொருள் [சென்ற கிரந்தத்திற்கும் அதாவது 134-வது பாட்டு முதல் 153 வரையிலுள்ள கிரந்தத்திற்கும் இனி வருகிற கிரந்தத்திற்கும் அதாவது 154-வது பாட்டு முதல் 157-வது வரையிலுள்ள கிரந்தத்திற்கும் தாற்பரியத்தைக் கூறுகின்றார்] இந்த மகான் = இந்தப் பூச்சியவித்துவான், செய்வன செய்து = சொல்லிய பிரகாரத்தால் செய்யத்தக்கன அனைத்தும் செய்தவனாய், ஏலுவ ஏய்ந்து = சொல்லும் பிரகாரத்தால் அடையத்தக்கன அனைத்தும் அடைந்தவனாய், மகிழ்ச்சி இயைந்தவனாய் = சந்தோஷத்தையடைந்தவனாய், சந்ததமும் = எப்போதும், தன்தூய் மனதால் = தனது பரிசுத்தமாகிய மனதினால், இத்தகை = சொல்லப் போகிறபடி, அநுசந்தானம் செய்வான் = சிந்தனை செய்வான் எ—று. 153

(அ—கை)

எதைச் சிந்தை செய்வானெனிற் கூறுகின்றார்.

தன்னிய ஞன்றன் னியஞ னித்தந்
தன்வடி வினைநே ரினிலோர்கேன்
றன்னிய ஞன்றன் னியஞ னேரே
தகுபிர மானந் தங்காண்கேன்
றன்னிய ஞன்றன் னியஞ னின்றே
சமுசா ரத்துய ரேகாணேன்
றன்னிய ஞன்றன் னியஞ னெங்கோ
தனதறி யாமை யிறந்ததுவே 154

(ப—ரை) நான் தன்னியன் நான் தன்னியன் = நான் கிருதார்த்தன் நான் கிருதார்த்தன், நித்தம் = எப்போதும், தன் வடிவினை = தனது வாஸ்தவ வடிவமாகிய தேசாதியனவச்சின்ன பிரத்தியக்கான்மாவை, நேரினில் ஓர்கேன் = எதனால் சாக்ஷாத்தா யறிகின்றேனோ அதனால் கிருதார்த்தன், [இங்ஙனமான்மஞான அடைவினாலுண்டாகிய சந்தோஷத்தைக் கூறி அதன் பயனாகிய பிரமானந்தத்தின் அடைவினாலுண்டாகிய சந்தோஷத்தினைத் தெரிவிக்கின்றார்] நான் தன்னியன் நான் தன்னியன், தகுபிரமானந்தம்= மேலாகிய பிரமவடிவ ஆனந்தம், நேரே காண்கேன் = ஸ்பஷ்டம் அநுபவிக்கின்றேன், [இவ்வாறு இஷ்டப் பிராப்தியினால் சந்தோஷத்தைக்கூறி அநிஷ்ட நிவர்த்தியினாலும் சந்தோஷிக்கின்றானெனக் கூறுகின்றார்] நான் தன்னியன் நான் தன்னியன், இன்று சமுசாரத் துயர் காணேன் = இப்போது சமுசார துக்கத்தைப் பார்க்கின்றிலேன், அதனால் கிருதார்த்தனென்பது பொருள், [துக்கத்தின் அப்பிரதீதியில் காரணங் கூறுகின்றார்] நான் தன்னியன் நான் தன்னியன், தனது அறியாமை = தன்னுடைய (அநேக கரும வாசனாஜால விசிஷ்ட) அஞ்ஞானம், எங்கோ இறந்தது = எவ்விடத்தோ நஷ்டமாயிற்று எ—று.

தன்னியன் தன்னியன் என இரண்டு இரண்டு தடவை சொன்னது ஆதரத்தின் பொருட்டாம்

ஏ—அசை 154

(அ—கை)

அஞ்ஞான நிவிருத்தியின் பயனுன கிருதகிருத்தியத்துவத்தையும் பிராப்தப் பிராப்பியத்துவத்தையும் தெரிசிப்பிக்கின்ருர்.

தன்னிய ஞன்றன் னியனு னெற்குத்
தான்செய வேண்டுவ தொன்றின்ருந்
தன்னிய ஞன்றன் னியனு னின்றே
சார்வன முழுதுஞ் சார்ந்ததுவாந்
தன்னிய ஞன்றன் னியனு னுலகிற்
சமமே தெனது திருத்திக்கே
தன்னிய ஞன்றன் னியனுன் றன்னியன்
றன்னியன் மீளவு மீளவுமே. 155

(ப—ரை) நான் தன்னியன் நான் தன்னியன், எற்கு செய வேண்டுவது ஒன்று இன்ரும்=எனக்கு செய்யத்தக்கது கொஞ்சமும் இல்லையாம், நான் தன்னியன் நான் தன்னியன், இன்று சார்வன முழுதும் சார்ந்ததுவாம்=இப்போது அடையத்தக்கன அனைத்தும் அடையப்பட்டதுவாம் [இப்போது கிருத கிருத்தியத்தன்மை முதலியவற்ருலுண்டான திருத்திக்கு நிரதிசயத்துவத்தை அதாவது எல்லாத் திருப்திகளினும் அதிகத்துவத்தைக் கூறுகின்ருர்] நான் தன்னியன் நான் தன்னியன், எனது திருத்திக்கு = என்னுடைய சந்தோஷத்திற்கு, உலகில் சமம் ஏது = உலகத்தில் உபமானம் இன்ரும் [இனிமேல் சொல்லத்தக்கதைக் காணுமையால் சந்துஷ்டியே எங்கும் விளங்குகிறதெனத் தெரிவிக்கின்ருர்] நான் தன்னியன் நான் தன்னியன், மீளவும் மீளவும் தன்னியன் தன்னியன் = மீண்டும் மீண்டும் கிருதார்த்தன் கிருதார்த்தன் எ—று. 155

(அ—கை)

இந்த ஞானம் முதலிய எல்லாவற்றிற்கும் காரணமாயுள்ள புண்ணிய புஞ்ச பரிபாகத்தை நினைத்து சந்தோஷிக்கின்ருன் எனக் கூறுகின்ருர்.

ஓகோ புண்ணிய மோகோ புண்ணிய
முறுதியின் வாய்த்தது வாய்த்ததுவே
யோகோ விந்தப் புண்ணிய முடைநா
மோகோ புண்ணிய முடைநாமே
யோகோ சாத்திர மோகோ சாத்திர
மோகோ குருகுரு வோகோகோ
வோகோ ஞானம் மோகோ ஞானம்
மோகோ சுகமோ கோசுகமே. 156

(ப—ரை) ஓகோ புண்ணியம் ஓகோ புண்ணியம்=ஆச்சரியம் தருமம் ஆச்சரியம் தருமம், உறுதியின் வாய்த்தது வாய்த்தது= திடமாக பரிபக்குவமாயிற்று பரிபக்குவமாயிற்று, பயனைத் தந்தது என்பது பொருள், [இப்படிப்பட்ட புண்ணியத்தைச் சம்பாதித்த தன்னை நினைத்து சந்தோஷிக்கின்றான்] ஓகோ இந்தப் புண்ணியம் உடை நாம்=ஆச்சரியம் இந்தக் கருமத்தினையுடைய யாம், ஓகோ புண்ணியம் உடை நாம்=ஆச்சரியம் தருமமுடையயாம். [இப்போது யதார்த்த ஞானத்திற்குச் சாதனமாகிய சாஸ்திரத்தையும் அதனையுபதேசிக்கும் ஆசாரியரையும் நினைத்துச் சந்தோஷிக்கின்றான்] ஓகோ சாத்திரம், ஓகோ சாத்திரம்=ஆச்சரியம் சாஸ்திரம் ஆச்சரியம் சாஸ்திரம், ஓகோ குரு ஓகோ குரு = ஆச்சரியம் ஆசாரியர் ஆச்சரியம் ஆசாரியர், [மீண்டும் சாஸ்திரஜன்னிய ஞானத்தையும் ஞானஜன்னிய சுகத்தையும் நினைத்து சந்தோஷிக்கின்றான்] ஓகோ ஞானம் ஓகோ ஞானம்= ஆச்சரியம் ஞானம் ஆச்சரியம் ஞானம், ஓகோ சுகம் ஓகோ சுகம் = ஆச்சரியம் ஆனந்தம் ஆச்சரியம் ஆனந்தம் எ—று.

ஓகோ என்பது ஓர் குறிப்புச்சொல். ஆச்சரியம் இரக்கம் சந்தோஷம் முதலிய அருத்தங்களில் வரும். 156

(அ—கை)

திருப்தி தீபமென்னுமிந்த நூலினது அப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார்.

திருப்தி தீப மிதனைத் தினந்தினம்
அருத்தி யோடனு சந்திக்கு மான்றவர்
பெருத்த வானந்தப் பேற்றினின் மூழ்கியே
திருத்தி சேர்வர் நிரந்தரந் திண்ணமே. 157

(ப—ரை) திருப்தி தீபம் இதனை = திருப்தி தீபமென்னுமிந்தப் பிரகரணத்தை, தினம் தினம் = நாடோறும், அருத்தியோடு அநுசந்திக்கும் ஆன்றவர் = அன்போடு சிந்தனை செய்கின்ற பெரியோர்கள், பெருத்த ஆனந்தப்பேற்றினில் மூழ்கி = பிரமானந்த வடிவ செல்வத்தில் அழுந்தி, நிரந்தரம் திருத்தி சேர்வர் = எப்போதும் சந்தோஷத்தையடைவார்கள், திண்ணம் = இது நிச்சயமாம் எ—று.

ஏகாரம் இரண்டும் அசை. 157

ஏழாவது திருப்தி தீபம் முற்றிற்று.

ஆகக்கவி 477



உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## எட்டாவது பிரகரணம்.

## *கூடஸ்த தீபம்.

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ்கரித்து கூடஸ்த தீபத்திற்கு தாற்பரிய தீபிகை என்னும் வியாக்கியானத்தைச் செய்கின்றேன்.

(அ—கை)

ஈண்டு முமுக்ஷுவிற்கு மோக்ஷ சாதனமான பிரமான்மைகத்துவ ஞானம் துவம்பதார்த்தத்தின் சோதன பூருவகமாதலால் துவம்பதார்த்தத்தின் சோதனபரமாயுள்ள கூடஸ்த தீபமென்னும் கிரந்தத்தை ஆரம்பிக்கின்றவராய் ஆசாரியர் இந்தக் கிரந்தம் வேதாந்தத்தின் பிரகரணமாதலால் அவ்வேதாந்த சாஸ்திரத்தின் விஷயம் முதலிய நான்கு அநுபந்தங்களாலேயே இதற்கு அநுபந்தமுடைமை சித்திக்கிறதென அபிப்பிராயஞ் செய்து துவம்பத லக்ஷியவாச்சியங்களான கூடஸ்த சீவர்களை திருஷ்டாந்த சகிதம் பேதமாகக் கூறுகின்றார்.

வானிரவி திகழ்த்துசுவர் முகுரவின ளொளியால்
வயங்குதல்போற் கூடத்தன் றிகழ்த்துடனெஞ் சுறைபூ
மானினில குறும்பலவா முகுரவின ளொளிதம்
மத்தியின்மற் றதுபொலிந்தன் னவைகளிலாப் பொழு
தானிலகு மிந்தமுறை சீவனியை மதிதஞ் [துஞ்
சந்தியையின் மையையும்விளக் கிவன்வேறென் றுணர்
மேனிகழோர் குடவடிவ மதியறிவு குடத்தை [வாய்
விளக்கியிடுங் குடத்தின்ஞா தநைபரத்தலால் விளங்கும். 1

* கூடஸ்தனை விளக்குவதால் இப்பிரகரணம் கூடஸ்த தீபமெனப்படும்.

(ப—ரை) வான் இரவி திகழ்த்து சுவர் = ஆகாசத்திலுள்ள சூரியப் பிரகாசத்தால் விளக்கப்பட்ட சுவர், முகுர இனன் ஒளியால் வயங்குதல் போல்=கண்ணுடியில் பிரதிபிம்பித்த அதாவது கண்ணுடியில் விழுந்து திரும்பி சுவற்றில் சம்பந்தித்த சூரியப் பிரகாசத்தால் விளங்குவதுபோன்று, கூடஸ்தன் திகழ்த்து உடல் = நிருவிகார சேதனத்தால் விளக்கப்பட்ட தேகம், நெஞ்சு உறை பூ மா னி ன் இலகுறும்=புத்தியிலுள்ள சிதாபாசனுல் விளங்கும், இதனுல் சாமான்னியமாகவும் விசேஷமாகவும் சுவரை விளக்குகின்ற சூரியனது இரண்டு பிரகாசம்போல தேகத்தை விளக்குவதாக இரண்டு சைதன்னியமுளதெனப் பிரதிஞ்ஞை செய்யப்பட்டதாக ஆகிறது. [அற்றேல் அச்சுவற்றில் கண்ணுடியிலுள்ள சூரியப்பிரகாசத்தினும் வேருக வானிரவி ஒளி தோன்றவில்லையேயென்னுஞ் சங்கைக்கு அக்கண்ணுடியில் உள்ள சூரியப் பிரகாசத்தினின்றும் ஆகாயத்திலுள்ள சூரியப் பிரகாசத்தினைப் பிரித்துக் காட்டுகின்ருர்] பலவாம் முகுர இனன் ஒளி தம் மத்தியில்=அநேக தர்ப்பணங்களினுலுண்டான (சுவரில் வட்ட வட்டமாக விசேஷமாய்க் காணப்படுகின்ற அநேக) சூரியப் பிரபைகளின் மத்தியில், மற்றது பொலிந்து=சாமான்னியப் பிரகாச வடிவ ஆகாயத்திலுள்ள சூரியப்பிரபை விளங்கி, அன்னவைகள் இலாப்பொழுதும் தான் இலகும் = தர்ப்பண ஜன்னிய பிரபைகள் (தர்ப்பணங்களின் நீக்க முதலியவற்ருல்) இல்லாதபோதும் சுயம் யாண்டும் விளங்கும், [திருஷ்டாந்தத்தில் சித்தித்த பொருளை தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்ருர்] இந்தமுறை=இந்தப் பிரகாரம், சீவன் இ மை ய ம தி த ம் சந்தியை = (சாக்கிர முதலியவற்றில் கடஞானதி சத்தவாச்சிய) சிதாபாச விசிஷ்ட புத்தி விருத்திகளின் அந்தராளத்தையும், இன்மையையும்=சுழுத்தி முதலியவற்றில் அவ்விருத்திகளின் அபாவத்தையும், விளக்கு இவன் = பிரகாசிப்பிக்கின்ற கூடஸ்தன், வேறு என்று உணர்வாய், அவைகளினும் பின்னமாமென அறிவாய். [இப்போது தேகத்தினுள் கூடஸ்த சிதாபாசர்களுக்கு பேதத்தைத் தெரிவிக்கும் பொருட்டு தேகத்தின் வெளியிலும் சிதாபாசனையும் பிரம்மத்தையும் பிரித்துத் தெரிவிக்கின்ருர்] மேல் நிகழ் ஓர் குடவடிவ மதி அறிவு= வெளியில் விளங்காநின்ற ஒரு கடாகார புத்தியிலுள்ள சிதாபாசன், குடத்தை விளக்கியிடும் = கடத்தை மாத்திரம் பிரகாசிப்பிக்கும், குடத்தின் ஞாததை=(கடம் அறியப்பட்டது என்னும் வியவகாரத்திற்குக் காரணமான) கடத்திலுள்ள ஞாததையாகிய தருமம். பரத்தால் விளங்கும்=கடகற்பனையின் அதிஷ்டானமான பிரம்ம சைதன்னியத்தால் பிரகாசிக்கும் எ—று.

ஞாததை = ஞான ஜன்னிய பிரகடத் தன்மை, அதாவது அறியப்பட்டதென்னுந் தன்மை.

வெளியில் கடாகார விருத்தி நஷ்டமாய்ப் படாகாரவிருத்தி உண்டாகாதிருக்க அதன் மத்தியிலிருக்கும் அவகாசம் சந்தியாம், இதனையே அந்தராளமென்றுங் கூறுவர். உள்ளே இச்சைவடிவ விருத்தி நஷ்டமாய் குரோதவடிவ விருத்தியுண்டாகாதிருக்க அதன் இடையிலிருக்கும் அவகாசம் சந்தியாம், இச்சந்திகளில் விருத்தியின் ஸ்புரணம் இன்மையால் சிதாபாசனது இன்மை இருக்கின்றதாகலின் கேவலம் சாமான்னிய சைதன்ய வடிவ கூடஸ்தனே பிரகாசிக்கின்றது. 1

(அ—கை)

அற்றேல் ஞாததையை விளக்குகின்ற சைதன்னியத் தினலேயே கடப்பிரதீதி சம்பவிக்குமாதலால் புத்தி எதற்காக என்று சங்கித்துக் கடத்தின் ஞாததை அஞ்ஞாததைகளின் பேதசித்தியின் பொருட்டாமெனக் கூறுகின்றார்.

புத்தியுதித் திடுமுன்பிக் குடம்பிரமத் தாலே
புலப்படா தாய்ப்பின்னர்ப் புலப்பட்டு நிகழும்
இத்தனை தான் பேதமுலோ காந்தகுந்தம் போல
விலங்குசிதா பாசாந்த மதிவிருத்தி ஞானம்
மெத்தவுஞ்சாட் டியமடமை யாகுமிவற் றேடே
மேவுகுட மிருவகைத்தா மறியவொணுக் குடம்போ
லொத்தவறி படுகுடமும் பிரமத்தா னிகழு
முணர்வுதித்த போதுசிதா பாசனெழி தலினே. 2

(ப—ரை) புத்தி உதித்திடு முன்பு=கடாகார அந்தக்கரண விருத்தியுண்டாவதற்குப் பூருவம், இக்குடம் பிரம்மத்தாலே புலப்படா தாய் நிகழும்=இந்தக் கடம் பிரம்ம சேதனத்தால் அஞ்ஞாதமாய் விளங்கும், பின்னர் = கடாகார விருத்தியுண்டானதன் பின்பு, புலப்பட்டு நிகழும்=ஞாதமாய் பிரம்ம சேதனத்தாலேயே விளங்கும், இத்தனை தான் பேதம்=இவ்வளவே பேதமாம், அதாவது எப்படி அஞ்ஞான வடிவ விசேஷண விசிஷ்ட அஞ்ஞாத கடத்தை யான் கடத்தை அறியேனென்று பிரம்ம சைதன்யம் பிரகாசிப்பிக்கின்றதோ

அதுபோல ஞானவடிவ விசேஷண விசிஷ்ட ஞாத கடத்தை யான் கடத்தை அறிகின்றேன் என்று பிரம்ம சைதன்யமே பிரகாசிப்பிக்கின்றது. ஆதலால் புத்தியுதயமாகாமையால் கடத்தில் அஞ்ஞாதத் தன்மை இருக்கின்றது. புத்தியின் உதயத்தால் கடத்தில் அஞ்ஞாதத் தன்மை நஷ்டமாய் ஞாதத் தன்மை தோற்றுகின்றது. இது புத்தியின் ஆதல் ஆகாமையினுலாகிய பேதமாம், பிறிதன்று. [அற்றேல் ஒரே கடத்திற்கு ஞாதத் தன்மை அஞ்ஞாதத் தன்மை வடிவ இரண்டு சொரூபம் எப்படிச் சம்பவிக்கும் என்ரு சங்கித்து அதனைத் தெரிவிக்கும் பொருட்டு ஞாததை அஞ்ஞாததைகளுக்கு நிமித்தங்களான ஞான அஞ்ஞானங்களின் சொரூபத்தை முதலில் தெரிவிக்கின்ருர்] உலோகாந்த குந்தம்போல=உலோக விசேஷத்தை நுனியிலுடைய ஈட்டி போன்று, இலங்கு=விளங்காநின்ற, சிதாபாச அந்த மதிவிருத்தி= சிதாபாசனை நுனியிலுடைய புத்தி விருத்தி, ஞானம்=ஞானமென்று சொல்லப்படுகிறது. மெத்தவும் சாட்டியம் மடமையாகும்=அத்தியந்தம் சொயம் விளக்கமின்மை அஞ்ஞானமென்று சொல்லப்படும், இவற்ருேடே மேவுகுடம் = கிரமமாக இந்த ஞானம் அஞ்ஞானம் என்னும் இரண்டினுலும் வியாபிக்கப்பட்ட கடம், இருவகைத்தாம்= ஞாதமென்றும் அஞ்ஞாதமென்றும் இரண்டு விதமாகச் சொல்லப்படும் [அற்றேல் அஞ்ஞாத கும்பம் அஞ்ஞானத்தால் வியாபிக்கப்பட்டதால் பிரம்மத்தால் விளக்கப்படுவதாயிருக்குக. ஞானத்தால் வியாபிக்கப்பட்ட ஞாத கடத்திற்கு பிரம்ம சேதனத்தால் விளக்கப்படுந்தன்மை எதனுலென்ரு சங்கித்து அஞ்ஞானம் அஞ்ஞாததையையுண்டுபண்ணுவது மாத்திரத்தால் சரிதார்த்தமாவதுபோல் ஞானமும் ஞாததையின் உற்பத்தி மாத்திரத்தால் உபக்ஷீணமாவதால் அஞ்ஞாத கும்பம் போன்று ஞாத கும்பமும் பிரம்மத்தால் விளங்கப்படுகிறதெனக் கூறுகின்ருர்] அறிய ஒணுக்குடம்போல் = அஞ்ஞாத கும்பம் பிரம்ம சேதனத்தால் விளங்குவதுபோல, ஒத்த அறிபடு குடமும் பிரம்மத்தால் நிகழும்=சரியாயுள்ள ஞாத கும்பமும் பிரம்ம சேதனத்தால் விளங்கும், [ஞாதகடம் எக்காரணத்தால் பிரம்ம சேதனத்தால் விளங்கத்தக்கதாமெனிற் கூறுகின்ருர்] உணர்வு உதித்தபோது=ஞாததையுண்டான போது, சிதாபாதன் ஒழிதலின்=கடாகார விருத்தியிலிருந்து கடத்தை விளக்கின சிதாபாசன் அழிந்துபோனதால்(பிரம்ம சேதனத்தாலேயே ஞாதகடம் விளங்குகின்றது) எ—று.

ஏ—அசை.

(அ—கை)

அற்றேல் அஞ்ஞாததையையுண்டுபண்ணும் பொருட்டு அஞ்ஞானம் போன்று ஞாததையை யுண்டுபண்ணும் பொருட்டும் புத்தியே போதுமானது சிதாபாசன் எற்றிற்கு என்று சங்கித்துச் சிதாபாச ரகித புத்தி கடாதிபோன்று அப்பிரகாச ரூபமாவதால் ஞாததையை உண்டு பண்ணுதல் சம்பவியாதெனக் கூறுகின்றூர்

அறிவொளியில் லாமதியா லுணர்ச்சிசெனி யாதா
லனையமதி தனக்கும்வே றுறுமண்ணெழு வாய்க்கும்
பிறிவெதுவா முலகிலெங்கு மண்டடவு கும்பம்
பேசிடவொண் ணுதறியப் பட்டதென விந்த
நெறிமதிமாத் திரங்கலந்த கும்பமுண ரொண்ணு
நிகழ்த்திதனற் கும்பத்தை யறிவொளியாம் பலத்தின்
செறிபிறப்பே யுணர்த்துவதாம் பேரறிவு பலமோ
திகழ்பிரமா ணத்தின்முனு நிலைபெறுத லானே 3

(ப—ரை) அறிவு ஒளி இல்லாமதியால் = சிதாபாசனில்லாத புத்தியால், உணர்ச்சி செனியாது = ஞாததையுற்பத்தியாகாது. அனைய மதி தனக்கும் = சிதாபாசனின்றிய புத்திக்கும்; வேறுறு மண் எழுவாய்க்கும் = விகாரியாகிய மிருத்திகை முதலியவைகட்கும், பிறிவு எதுவாம் = விசேஷம் யாது. [சிதாபாசனின்றிய புத்தியினல் வியாப்தமான கடத்திற்கு ஞாதத்துவா பாவத்தைத் திருஷ்டாந்தத்தைத் தெரிவித்தலால் வெளிப்படுத்துகின்றார்] உலகில் எங்கும் = உலகத்தில் ஓரிடத்தும், மண் தடவு கும்பம் = வெண்மை கருமை முதலிய மண்ணினல் பூசப்பட்ட கடமானது, அறியப்பட்டது எனப் பேசிட ஒண்ணுது = ஞாதம் என்று சொல்லப்படுகிறதில்லை, இந்த நெறி = இந்தப் பிரகாரம், மதி மாத்திரம் கலந்த கும்பம் = சிதாபாச ரகித புத்தியினல் வியாப்தமான கடம், உணர் ஒண்ணு = ஞாதமாகாது, [பலிதத்தைக் கூறுகின்றார்] நிகழ்த்து இதனல் = (எதனல் கேவல புத்திக்கு ஞாதத்துவத்தையுண்டுபண்ணுதலில் சாமர்த்தியமின்றோ) சொல்லா நின்ற அக்காரணத்தினல், கும்பத்தை = கடத்தில், அறிவு ஒளியாம் பலத்தின் செறிபிறப்பே = சிதாபாச வடிவ பலத்தின் உற்பத்தியே, உணர்த்துவதாம் = ஞாதத்துவமாம் [அப்படியாயினும்

சிதாபாசனைக் கற்பிக்க வேண்டியதில்லை பிரம்ம சைதன்ய வடிவ பலமிருத்தலினுலென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] பேர் அறிவு பலமோ = பிரம்ம சைதன்னியம் கடாதி ஸ்புரணமாமோ, ஆகாது [எதனுல் பிரம்ம சைதன்னியம் பலம் அன்றெனிற் கூறுகின்ருர்] திகழ் பிரமாணத்தின் முனும்=விளங்கா நின்ற பிரமாணப் பிரவிருத்திக்குப் பூருவமும், நிலைபெறுதலான்=பிரம்ம சைதன்னியம் இருத்தலினுல், பலத்திற்கோ அதன் உத்தர காலத்திலிருக்குந் தன்மை நியமமாதலால் என்பது கருத்து எ—று. 3

ஆல், ஏ—அசை.

(அ—கை)

அற்றேல் பிரம்ம சைதன்யத்திற்கு வேருகச் சிதாபாச வடிவ பலத்தைக் கூறுதல் புறப்பொருளாம் என்பது முதலிய சுரே சுராசாரியரது வார்த்திகத்திற்கு விரோதமாமென்ரு சங்கித்து அதன் அபிப்பிராயத்தை அறியாதவனது சங்கையிதுவாமென்று பரிகரிக்கின்ருர்.

புறப்பொருளாம் பிரமேயங் களிற்பலமாக்கொண்ட
போதமதே யிங்குயர்ந்த வேதாந்த வாக்காஞ்
சிறப்பளவை யாலறியத் தக்கதென வேவார்த்
திககாரர் சித்தினிகர் செப்பினர் மற்றன்றே
யிறப்பினிச வறிவினுக்கும் பலத்தினுக்கும் பேத
மியம்புமுப தேசசகத் திரமதனுற் குடத்திற்
பிறப்புடைய சிற்சாயை யுணர்ச்சிதரு மிதனைப்
பின்பறிப டாமையைப்போற் பிரமம்விளக் குறுமே. 4

(ப—ரை) புறப்பொருளாம் பிரமேயங்களில்=பாகிய கடாதி பதார்த்தங்களாகிய பிரமாண விஷயங்களில், பலமாக்கொண்ட போதமதே=பிரமாணத்தின் பயனுக அங்கீகரித்த சம்வித்தே, இங்கு= வேதாந்த சாஸ்திரத்தில், உயர்ந்த வேதாந்த வாக்காம் சிறப்பு அளவையால்=எல்லா வாக்கியத்தினும் மேலாயுள்ள வேதாந்த வாக்கியமாகிய சிறந்த பிரமாணத்தால், அறியத்தக்கது எனவே= உணரத்தக்க வஸ்துவாமென்று (இந்த வார்த்திகத்தால்) வார்த்திக காரர் = சுரேசுராசாரியர், சித்தின் நிகர் செப்பினர் = பிரம்ம

சைதன்னியத்தின் சமானமான சிதாபாசனே பிரமாணத்தின் பயனுகச் சொன்னூர், விவக்ஷித்தாரென்பது கருத்து, மற்று அன்று=பிரம்ம சைதன்னியமன்று, [வார்த்திககாரரது விவக்ஷையிப்படிப்பட்டதென்று எதனுலறியப்படுகின்றது என்று சங்கித்து அவரது குருவாகிய ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளால் உபதேச ஸஹஸ்ரியில் பிரம்ம சைதன்னியத் திற்கும் சிதாபாசனுக்கும் பேதம் பிரதிபாதிக்கப்பட்டிருத்தலால் எனக் கூறுகின்றூர்] இறப்புஇல் நிசஅறிவினுக்கும் = நித்தியமாய் நிச வடிவாயுள்ள பிரம்மத்திற்கும், பலத்தினுக்கும் = சிதாபாசனுக்கும், உபதேச சகத்திரம் பேதம் இயம்பும்=உபதேச ஸஹஸ்ரி என்னும் நூல் பேதத்தைக் கூறுகின்றதாதலின், [இவ்வாருயின் பிரகிருதத்தில் என்னே வந்தது எனிற் கூறுகின்றூர்] அதனுல் = சிதாபாசனுக்கும் பிரம்மசைதன்னியத்திற்கும் பேதம் பிரசித்தமாவதால், குடத்தில் பிறப்புடைய சிற்சாயை = கடத்தில் உற்பன்னமான சிதாபாசன், உணர்ச்சிதரும்=கடத்தில் ஞாததையை உண்டுபண்ணும், இதனே= இந்த ஞாததையை, பின்பு = உண்டானதன் பின்னர், அறிபடா மையைப்போல் = அஞ்ஞாததையை விளக்குவதுபோல, பிரமம் விளக்குறும்=பிரம சைதன்னியம் பிரகாசிப்பிக்கும் எ—று.

ஏ—அஎச. 4

(அ—கை)

இங்ஙனம் பிரம்மத்திற்கும் சிதாபாசனுக்கும் உபபாதனஞ் செய்த பேதத்தை விஷய பேதத்தைக் காட்டலால் வெளிப்படுத்து கின்றூர்.

மெய்யறிவான் மதிவிருத்தி சிற்சாயை குடமும்
விளங்கியிடுந் தனிக்குடத்தேய் பலவுருவா தலினுற்
றுய்யறிவின் சாயையினுற் குடமொன்றே துலங்குஞ்
சொற்றதனுற் குடத்திலறி பட்டிருசை தனியம்
ஐயமறப் பொலியுமிவ்வா றுரையிதனேப் பிறர்க
ளனுவிவசா யமதென்றே துவரறிவி னிழலின்
செய்யருளா லிதுகுடமென் றிடுவழக்காம் பிரமத்
திருவருளாற் குடமறியப் பட்டதென லாமே. 5

(ப—ரை) மெய்யறிவால் = பிரம்ம சைதன்னியத்தால், மதி விருத்தி = புத்தி விருத்தியும், சிற்சாயை = சிதாபாசனும், குடமும் = கும்பமும், விளங்கியிடும் = பிரகாசிப்பிக்கப்படும், தனிகுடத்து ஏய்பல உருவாதலினுல் = சிதாபாசன் கடமாத்திரத்திலிருக்கும் பல வடிவ ளுதலால், துய்அறிவின் சாயையினுல் = பரிசுத்த பிரமத்தின் பிரதி பிம்பமாகிய சிதாபாசனுல், குடம் ஒன்றே துலங்கும் = கடமாத்திரம் விளங்கும், [கும்பத்திற்கு சிதாபாசன் பிரம்மம் இரண்டினுல் விளங்கப் படுந் தன்மையில் இலிங்கத்தைக் கூறுகின்றார்] சொற்ற அதனுல் = சொல்லிய இரண்டினுலும் விளங்கப்படுந் தன்மையால், குடத்தில் = கும்பத்தில், அறிபட்டு இரு சைதன்னியம் ஐயம் அற பொலியும் = ஞாதமாய் இரு மடங்கு சைதன்னியம் சமுசயமின்றி விளங்கும், [கடத்தின் ஞாததையை விளக்குகின்ற இந்தச் சைதன்னியமே தார்க்கீகரால் வேறு நாமத்தால் வியவகரிக்கப்படுகிறதெனக் கூறுகின்றார்] இவ்வாறு உரை இதனை = இந்தப் பிரகாரம் கூறிய பிரம்ம சைதன்னியத்தை, பிறர்கள் = நையாயிகர், அநுவிவசாயமது என்று ஓதுவர் = அநுவியவசாய ஞானமென்று சொல்லுவார்கள், [இதுகுடம், அறியப்பட்டது குடம் என்னும் வியவகார பேதத்தினுலும் சிதாபாசப் பிரமங்களுக்குப் பேதமறியத் தக்கதெனக் கூறுகின்றார்] அறிவின் நிழலின் செய்அருளால் = சிதாபாசனது சிறந்த கிருபையால், இது குடம் என்றிடு வழக்கு ஆம் = இது கடமென்னும் வியவகாரமுண்டாம், பிரமத்திருவருளால் = பிரமத்தினனுக்கிரகத்தால், குடம் அறியப் பட்டது எனலாம் = கடம் ஞாதமாமென்னும் வியவகாரமுண்டாம் எ—று. ஏ—அசை. 5

(அ—கை)

தேகத்தின் வெளியில் சிதாபாசப் பிரமங்கள் எப்படி வேறு பிரிக்கப்பட்டனவோ அப்படி தேகத்தினுள் சிதாபாச கூடஸ்தர்கள் வேறு பிரிக்கத்தக்கவராவரெனக் கூறுகின்றார்.

வாய்ந்தவுடற் புறத்தறிவின் சாயையொடு பரத்தை
வகுத்தறிந்தாற் போலவுட லகத்தச் சாயையையுஞ்
சார்ந்திடு கூடத்தனையும் பகுத்துணர்வாஞ் சித்தின்
சாயையகம் விருத்தியிலும் காமமுத லவற்றுங்
காய்ந்தவிரும் பிடைவன்னி போறகலந்து நிற்குங்
காய்ந்தவிரும் பிலகுறுந்தான் மாத்திரமே யன்றிப்
போந்திடுமற் றொன்றினையும் விளக்காதிவ் வாறு
பொலிவனவாஞ் சிற்சாயை புணர்ந்த விருத்திகளே. 6

(ப—ரை) வாய்ந்த உடற்புறத்து=புண்ணியத்தாற் கிடைத்த தேகத்தின் வெளியில், அறிவின் சாயை யொடுபரத்தை=சிதாபாசனை யும் பிரமத்தையும், வகுத்து அறிந்தாற்போல = பிரித்துணர்ந்தாற் போல, உடலகத்து சார்ந்திடு=தேகத்தினுள்ளிருக்கும், அச்சாயை யையும் கூடத்தனையும் = அந்தச் சிதாபாசனையும் பிரமத்தையும், பகுத்து உணர்வாம்=பிரித்தறிவாம், [அற்றேல் தேகத்தின் வெளியில் சிதாபாச வியாப்பிய கடாகார விருத்திபோன்று உள் விஷயங்களைக் கோசரிக்கும் விருத்தியின்மையினுல் எப்படி அவ்விருத்தியின் வியாபக மாக சிதாபாசன் அங்கீகரிக்கப்படுகிறது என்று சங்கித்து விஷயகோசர விருத்தியின்றேனும் அகமாதி விருத்தியிருத்தலினுல் அதன் வியாபக மான சிதாபாசனை அங்கீகரிக்க முடியுமெனத் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்] அகம் விருத்தியிலும்=நானென்னும் விருத்தியிலும், காமம் முதலவற்றும்=காமக் குரோதாதி விருத்திகளிலும், சித்தின் சாயை=சிதாபாசன், காய்ந்த இரும்பிடைவன்னிபோல்=தப்தாயப் பிண்டத்தில் நெருப்பு வியாபித்திருப்பது போன்று, கலந்து நிற்கும்= வியாபித்திருப்பன், [அகமாதி விருத்திகளுக்கே சிதாபாசனுல் விளங்கப் படுந் தன்மையை திருஷ்டாந்தத்தை விஸ்தரித்தலால் வெளிப்படுத்து கின்றார்] காய்ந்த இரும்பு = தப்தலோஹம், தான் மாத்திரமே இலகுறும் = தன்னைமாத்திரம் பிரகாசிப்பிக்கும், அன்றி = அங்ஙன மன்றி, போந்திடும் மற்றொன்றினையும்=தகுதியான மற்ற யாதொரு பதார்த்தத்தையும், ஓர் போதும், விளக்காது=பிரகாசிப்பிக்காது, இவ்வாறு=இப்படி, சிற்சாயை புணர்ந்த விருத்திகள்=சிதாபாச விசிஷ்ட விருத்திகள், பொலிவனவாம்=தன்னைத்தன்னை விளக்கிக் கொள்வனவாம் எ—று.

ஏ—அசை. 6

(அ—கை)

இவ்வாறு தேகத்தினுள் சிதாபாசனையறிவித்து கூடஸ்த சொருபத்தையறிவித்தற்காக அதனுபயோகியான விருத்தியின பாவ காலத்தைத் தெரிவிக்கின்றார்.

முறைமுறையே யழிந்தழிந்தாம் விருத்திகளெல் லாமு
　　முடிவனவாந் துயின்மூர்ச்சை சமாதிகளி லன்றே
செறிதருசந் திகள்விருத்தி களினொழிவு முழுதுந்
　　திகழ்வனவாம் விகாரமிலா வெவ்வறிவா லந்த
நிறையறிவே கூடத்த னெனலாகும் புறத்தே
　　நிகழ்குடத்தி லிருவிதசை தன்னியமுண் டிந்த
நெறியுளுறை விருத்திகடம் மிலுமுண்டா மதனு
　　னேர்படுசந் திகளினவற் றுண்மைமிக நிகழ்வாம். 7

(ப—ரை) முறை முறையே=கிரமமாக, அழிந்து அழிந்து = சாக்கிர சொப்பனங்களில் விச்சின்னமாகி விச்சின்னமாகி, விருத்திகள் எலாமும் = அந்தக்கரண விருத்திகளனைத்தும், ஆம் = உண்டாகின்றன, துயில் மூர்ச்சை சமாதிகளில்=சுழுத்தி மூர்ச்சை சமாதியவஸ்தைகளில், முடிவனவாம் = விலீனமாகின்றன, [இங்ஙனம் சமாதி முதலியவற்றில் விருத்திகளின் விலயமிருக்குக இதனால் கூடஸ்தன் எப்படியறியப்படுகிறான் என்று சங்கித்து விருத்திகளின் அபாவத்திற்குச் சாக்ஷியாயிருத்தலால் கூடஸ்தன் அறியப்படுகின்றானெனக் கூறுகின்றார்] முழுது விருத்திகளின் செறிதரு சந்திகள்= எல்லா விருத்திகளின் நெருங்கிய இடைவெளிகளும், ஒளிவும்=சகல விருத்திகளின் அபாவமும், விகாரம்இலா எவ் அறிவால் திகழ்வனவாம்= நிருவிகார எச்சைதன்னியத்தால் விளங்குகின்றனவோ, அந்த நிறை அறிவே கூடத்தன் எனலாகும்=அந்தப் பூரண சேதனமே கூடஸ்தனென்று சொல்லப்படும், [இவ்வாறுகும்போது என்ன சித்தித்ததெனிற் கூறுகின்றார்] புறத்தே நிகழ் குடத்தில்=பாகியத்தில் விளங்காநின்ற கடத்தின் கண், இருவித சைதன்னியம் உண்டு= கடமாத்திரத்தை விளக்குகிற சிதாபாசனும் கடத்தின் ஞாததையை விளக்குகின்ற பிரம்ம சைதன்னியமும் ஆகிய இரு மடங்கு சைதன்னியம் எப்படி இருக்கின்றதோ, இந்தநெறி=இப்படி, உள் உறை விருத்திகள் தம்மிலும் = ஆந்தரத்தில் இருக்கின்ற அகங்காராதி விருத்திகளிலும், உண்டாம்=கூடஸ்த சைதன்னியமும் விருத்தியை விளக்குகின்ற சிதாபாசனும் ஆகிய இரு மடங்கு சைதன்னியமிருக்கின்றது, [அதில் யுக்தியைக் கூறுகின்றார்]

அதனுல் = இருமடங்கு சைதன்னியமிருத்தலினுல், நேர்படு சந்தி களின் = நெருங்கிய சந்திகளைப் பார்க்கிலும், அவற்று = அவ்விருத்தி களில், உண்மைமிக நிகழ்வாம் = இருப்பு அதிகமாக விளங்குகின்றது, விருத்திகளில் சொச்சத்துவம் அதிகமென்பது கருத்து எ—று.

அன்று, ஏ—அசைநிலைகள். 7

(அ—கை)

அற்றேல் இவ்விருத்திகளிலும் கடாதிகளிற்போல ஞாததை அஞ்ஞாததைகளை விளக்குவதாக கூடஸ்தன் ஏன் அங்கீகரிக்கப் படுகிறதில்லை என்று சங்கித்து அதில் ஞாததை முதலிய தின்மை யினுலேயே அங்கீகரிக்கப்படுகிறதில்லையென்க் கூறுகின்றுர்.

குடமுறழ விருத்திகளி லறிபடன் மற்றன்மை
கூடாது தனைத்தன்னு லறியவொணு மையினு
மடமவற்று லொழிதலினு மிருவகைத்தா மறிவில்
வருசெனன மரணமறு பவப்படலா லொன்று
திடமுறுகூ டத்தனல வேனையது விகாரந்
தீர்தலினு லாகுமந்தக் கரணமதன் விருத்தி
புடகரியென் றற்றெருடக்கத் தெங்கும்வெகு விதமாப்
புராதனராற் கூடத்தன் புலப்படுத்தப் பட்டான். 8

(ப—ரை) குடம் உறழ = கடத்தில் ஞாததையஞ்ஞாததை களிருப்பனபோல், விருத்திகளில் = அந்தக் கரணத்தின் பரிணும வடிவ விருத்திகளில், அறிபடல் = ஞாததையும், மற்றன்மை = அஞ்ஞாததை யும், கூடாது = பொருந்தாது, [அதிலேதுவைக் கூறுகின்றுர்] தனை தன்னுல் அறிய ஒணுமையினும் = விருத்தியை விருத்தியால் உணரக் கூடாமையானும், அவற்றுல் மடம் ஒழிதலினும் = விருத்திகளால் அஞ்ஞானம் நிவர்த்தியாதலினுலும் என்க, அதாவது ஞான வியாப்தி யால் ஞாததையும் அஞ்ஞான வியாப்தியால் அஞ்ஞாததையும் உண்டாகின்றன, விருத்திகளுக்கு சொப்பிரகாசத்துவமிருத்தலால் ஞான வியாப்தியின்றும், விருத்திகளால் தமது உற்பத்திமாத்திரத்தால் தமது விஷயக அஞ்ஞானம் நிவர்த்திக்கப்பட்டபடியால் அஞ்ஞானத் தின் வியாப்தியும் இன்றென்பது கருத்து, [அற்றேல் கூடஸ்த சிதாபாசரிருவருக்கும் சேதனத் தன்மை சமானமாயின் ஒருவனுக்கு

நிருவிகாரத்துவமும் மற்றவனுக்கு விகாரித்துவமுமெதனுலென்று சங்கித்து சிதாபாசனிடத்திலுள்ள ஜென்ம நாசங்கள் அநுபவிக்கப் படுகின்றனவாதலால் இவனுக்கு விகாரித்துவமாம் மற்றவனுக்கு விகாரித் துவத்தில் பிரமாணமின்மையால் நிருவிகாரித்துவமாமெனக் கூறுகின்றார்] இருவகைத்தாம் அறிவில் = இருமடங்காகியுள்ள சைதன்னியமாகிய சிதாபாசனிடத்தில், வருசெனன மரணம் அநுபவப் படலால் = வாராநின்ற உற்பத்தி விநாசங்கள் அநுபவிக்கப்படுகின்ற படியால், ஒன்று = சிதாபாசன், திடம்உறு கூடத்தன் அல = நிலைத் துள்ள நிருவிகார சேதனனன்று, ஏனையது = மற்றொன்று, விகாரம் தீர்தலினுல் ஆகும் = சன்மாதி விகாரமின்மையினுல் கூடஸ்தனுகும். [சிதாபாசனினும் வேருக கூடஸ்தனையங்கீகரித்தல் தனது கபோல கற்பிதமாம் என்று சங்கித்து சங்கராசாரிய சுவாமிகளால் உபதேச ஸஹஸ்ரி என்னும் நூலில் கூடஸ்தன் உபபாதனஞ் செய்யப் பட்டிருத்தலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] அந்தக்கரணம் அதன் விருத்திபுடகரி என்றல் தொடக்கத்து = "அந்தக் கரணத்திற்கும் அதன் விருத்திகளுக்கும் பரிசுத்தமாகிய சாக்ஷி" யென்பது முதலிய கிரந்தங்களில், அதாவது "அந்தக்கரணத்திற்கும் அதன் விருத்தி களுக்கும் சாக்ஷியாயும் சைதன்னிய விக்கிரகமாயும் ஆனந்த ரூபமாயும் சத்தியமாயும் இருக்கின்ற நீ ஆன்மாவை ஏன் அடைகின்றிலை." என்பது முதலிய இடங்களில், எங்கும் = யாண்டும், புராதனரால் = முன்னோர் களால், வெகுவிதமா = அநேகப் பிரகாரமாக, கூடத்தன் புலப்படுத்தப் பட்டான் = நிருவிகார ஆன்மா விளக்கப்பட்டான் எ—று. 8

(அ—கை)

கூடஸ்தனினும் வேருக சிதாபாசனும் ஆசாரிய சுவாமிகளால் வருணிக்கப்பட்டுளானெனக் கூறுகின்றார்.

முகநிழலு மிடம்போலான் மாவுமுயி ரிடமு
முதிர்தருநூ லுத்திகளால் விளங்குமென வுயிரும்
பகர்தரப்பட் டதுமதியால் வளைபடுகூ டத்தன்
பனுங்குடவா னெனவுலகாந் தரம்போதல் வருத
றகவுறச்செய் திடவலிய னுயிராலென் னெனிற்கே
டனியசங்கன் வளைபடன்மாத் திரத்தான்மற் றுயிர்
சகமதிலா காவை னெனிற்குடங்குட் டியங்க [தான்
டமால்வளையட் டவனுயிரே யாகியிடல் வேண்டும். 9

(ப—ரை) முகம்=பிரசித்த வதனமும், நிழலும்=முகத்தின் பிரதிபிம்பமும், இடம்போல்=தர்ப்பணாதியும் ஆகிய மூன்றும் பிரத்திய க்ஷத்தாலறியப்படுவதுபோல, ஆன்மாவும்=கூடஸ்தனும், உயிரும்= சிதாபாசனும், இடமும் = ஆசிரயமாகிய அந்தக்கரணாதியும் ஆகிய மூன்றும், முதிர்தரு நூல் உத்திகளால் விளங்கும் என=பழைமையான சாஸ்திர யுத்திகளாலறியப்படுகின்றதென்று, உயிரும் பகர்தரப் பட்டது = (கூடஸ்தனினும் வேறாக) சிதாபாசனும் வருணிக்கப் பட்டுளது, "மனதிற்கு சாக்ஷி புத்திக்கு சாக்ஷி" என்பது புத்தியின் சாக்ஷியாகிய கூடஸ்தனைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரமாம், "வடிவந் தோறும் பிரதி வடிவமாயிற்று" என்பது சிதாபாசனைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரமாம். விகாரித்துவ அவிகாரித்துவாதி வடிவ யுத்திமுன்பே சொல்லப்பட்டது என்பது கருத்து, [அதில் சிதாபாசனை அவச்சேத வாதி ஆக்ஷேபிக்கின்றார்] மதியால் வளைபடு கூடத்தன்=புத்தியால் அவச்சின்னமான நிருவிகார ஆன்மாவே, பனும் குடவான் என= சொல்லாநின்ற கடாகாசம் (கடவாயிலாக போதல் வருதல்) போல, உலகாந்தரம் போதல் வருதல் தகவுறச் செய்திட வலியன்=புத்தி வாயிலாக வேறு உலகங்களுக்கு கமனாகமனங்களை நன்றாய்ச்செய்ய சமர்த்தனவன், உயிரால் என் எனில்=சிதாபாசனால் என்ன பிரயோ சனம் என்று சங்கிக்கின், சிதாபாசனைக் கற்பிப்பதில் கௌரவ தோஷமாமென்பது கருத்து. [அசங்க கூடஸ்தனுக்கு புத்தியவச்சேத மாத்திரத்தால் சீவத்துவம் பொருந்தாது, அன்றெனில் அதிவியாப்தி யாம் என்று பரிகரிக்கின்றார்] கேள்=உத்தரத்தை சாவதானமாகக் கேட்பாய், தனி அசங்கன்=கேவல கூடஸ்தன், வளைபடல் மாத்திரத் தால்=புத்தியவச்சேத மாத்திரத்தால், சகமதில்=உலகின்கண், உயிர் ஆகான் = சீவன் ஆகான், ஆவன் எனில் = சீவனாவனென்று சொல்லில், குடம் குட்டியங்கள் தம்மால்=குடம் சுவர் முதலியவை களால், வளைபட்டவன்=அவச்சின்னமான ஆன்மா, உயிர் ஆகியிடல் வேண்டும்=சீவனாகவேண்டும் எ—று.

மற்று, தான், ஏ—அசை. 9

அவச்சேத வாதியின் சங்கை இதுவாம்:— அவச்சேத வாதத் தில் அந்தக்கரண விசிஷ்ட சேதனமே சீவன், அந்தக்கரணத்தில் சிதாபாசனது அங்கீகாரமில்லை, அவ்வந்தக்கரணம் கருமத்தின் வசத்தால் எங்கெங்குப் போகுதல் வருதலைச் செய்கின்றதோ அங்கங்கு முன்னமே இருக்கின்ற சேதனம் எதுவோ அது அவ்வந்தக்கரண

விசிஷ்டமாய்ச் சமுசாரி ஜீவனென்னும் வியவகாரத்திற்கு விஷய மாகின்றது, அங்கு அந்தக்கரண வடிவ விசேஷண பாகத்தில் சமுசார மிருக்கின்றது, கூடஸ்த வடிவ விசேஷிய பாகத்தில் வாஸ்தவ சம்சார மில்லை. ஆனால் பிராந்தியினால் தோற்றுகின்றது, விசேஷணத்தினது தருமத்தின் வியவகாரமும் விசிஷ்டத்திலுண்டாகின்றது, என்னும் சாஸ்திரத்தின்சங்கேதத்தால் அந்தக்கரணத்தின்தருமமாகிய சம்சாரத் தின் வியவகாரம் அந்தக்கரண விசிஷ்ட சேதனத்தில் சம்பவித்தலால் அந்தக்கரண விசிஷ்ட சேதனம் சம்சாரி ஜீவனெனப்படுகின்றது, ஆதலால் சிதாபாசனின்றியே சருவ வியவகாரமும் சம்பவிப்பதாயிருக்க ஆபாசவாதத்தில் சிதாபாசனைக் கற்பித்தலால் கௌரவ தோஷமாம்.

மேற்கூறிய அவச்சேத வாதியின் சங்கைக்கு ஆபாசவாதியின் சமாதானமிதுவாம், எப்படி ஜலகாஷ்டாதி வடிவ முழு சாமக்கிரிகளுள் ஒரு வஸ்து குறைந்தாலும் ஆகாத பாகத்தின் சித்தியை முழு சாமகிரி யினாலும் செய்தலிலுள்ள கௌரவம் தோஷ வடிவினதன்றோ, அது போல் சிதாபாசனின்றிப் புத்தியின் பரிச்சேதமாத்திரத்தால் உண்டா காததாகிய சீவபாவத்தினைச் சிதாபாசனை யங்கீகரித்தலால் சித்தி செய்தலில் எக்கௌரவமுண்டோ அது தோஷ வடிவினதன்று, அவச் சேத வாதத்தில் எப்படி அந்தக்கரண விசிஷ்ட சேதனத்தை சீவன் என்று கொள்ளுதலால் குடம் சுவர்முதலிய விசிஷ்ட சேதனத்தில் சீவத் தன்மையின் அதிவியாப்தி வடிவ தோஷமுண்டோ, அதுபோல இவ்வுலகத்திலிருக்கும் அந்தக்கரண விசிஷ்ட சேதனம் அன்னிய லோகத்துள்ள அந்தக்கரண விசிஷ்ட சேதனத்தினும் வேறானதால் ஒருவனால் செய்யப்பட்ட கருமத்தின் பயன் மற்றொருவனுக்குப் போக மாதல் வடிவ அசம்பவ தோஷமிருக்கின்றது. 9

(அ—கை)

புத்திக்கும் சுவர்க்கும் சொச்சத்துவ அசொச்சத்துவங்களால் விஷமத்துவத்தை வினவுகின்றான்.

மாசொழித லாற்புத்தி குட்டியத்தொப் பன்றேன்
மற்றதனுல் வளைபடலி னினக்காவ தென்னே
பேசுமரத் திற்சனித்த காலால்வெண் கலத்திற்
பிறந்திடுகா லாலுமே விற்போனுக் கென்றும்
பாசியதண் டுலங்களது பரிமாணம் விஞ்சப்
படுவதிலே பரிமாணம் விஞ்சுவதின் றேனு
மேசிகழ்வெண் கலக்காலிற் பதிவிம்பம் விஞ்சு
மெனின்வலியிற் புத்தியிற் சிதாபாச னுண்டே. 10

(ப—ரை) மாசு ஒழிதலால் = ஸொச்சமாவதால், புத்தி குட்டியத்து ஒப்பன்றேல் = புத்தியானது சுவரோடு சமானமன்றெனில், [சொல்லிய ஸொச்சத்துவம் வியாவிருத்தியில் காரணமன்றெனக் கூறுகின்ருர்] அங்ஙனமிருக்குக, அதனுல் வளைபடலில் நினக்கு ஆவது என்னே = ஸொச்சத் தன்மையால் பரிச்சேத்தில் உனக்கு உண்டாவதென்னே, [கூறிய பொருளை திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துகின்ருர்] பேசுமரத்தில் செனித்த காலாலும் = சொல்லாநின்ற காஷ்டத்தினுலுண்டானபடியினுலும். வெண்கலத்தில் பிறந்திடுகாலாலும் = வெண்கலத்தாலுண்டானபடியினுலும், விற்போனுக்கு = தானியங்களை விற்பவனுக்கு, என்றும் = எப்போதும், பாசியதண்டுலங்களது பரிமாணம் = சமைக்க யோக்கியமான அரிசியினது அளவு, விஞ்சப்படுவது இலே = வித்தியாசப்படுவதின்ருும், மரத்தாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்ட படிகளிலுள்ள ஸொச்சத்துவ அஸொச்சத்துவங்கள் தண்டுல பரிமாணத்தில் குறைவு மிகுதிகளில் காரணங்களாகாவென்பது பொருள், [வெண்கலப் படியில் தண்டுல பரிமாணத்தின் மிகுதியின்றேனும் பிரதிபிம்ப வடிவ மிகுதியுளது என்று ஆசங்கித்து அப்படியாகுல் புத்தியிலும் சிதாபாசன் உம்மாலேயே அங்கீகரிக்கப்பட்டதாகும் எனக் கூறுகின்ருர்] பரிமாணம் விஞ்சுவது இன்றேனும் = அளவு வித்தியாசப்படுவது இல்லையாயினும், ஏசு இகழ் வெண்கலக்காலில் = கலங்கமில்லாத வெண்கலப் படியில், பதிவிம்பம் விஞ்சுமெனின் = பிரதி விம்பமானது அதிகப்படுமென்று சொல்லில், வலியில் = பலாத்காரத்தால், புத்தியில் = அந்தக்கரணத்தின் கண்ணும், சிதாபாசன் உண்டு = பிரதிவிம்ப வடிவ சிதாபாசனிருப்பன் எ—று.

ஏ—அசை.

உம், முன்பும் கூட்டப்பட்டது. 10

(அ—கை)

பிரதி விம்பத்தை அங்கீகரிக்கின் சிதாபாசனெப்படி அங்கீகரிக்கப் பட்டவனுவனென்று சங்கித்து பிரதி விம்ப சப்தத்தாலும் ஆபாச சப்தத் தாலும் சொல்லப்படும் பொருள் ஒன்றுதலாலெனக் கூறுகின்றார்.

அற்பநிகழ் தருமறிவின் சாயைபதி விம்ப
மவ்விதமாம் விம்பவியல் பின்றிவிம்பம் போலப்
பொற்புறுத லாலதுவாஞ் சங்கவிகா ரங்கள்
புக்குதலா லிவன்விம்ப விலக்கணம தின்றி
நிற்பவனு யொளியுருவ விம்பமது போல
நிகழ்வானென் றுணர்வர்மதி யுண்டெனினுண் டத
சொற்பமுமா பாசன்மதி தனக்கயலன் றென்னிற் [றுற்
சொற்றிடுதி மதியுந்தன் னுடற்கயலன் றென்றே. 11

(ப—ரை) அறிவின் சாயை=சிதாபாசன், அற்பம் நிகழ்தரும்= சொற்பமாக விளங்குவன், பதிவிம்பம் அவ்விதமாம்=பிரதி விம்பமும் அப்படியே சொற்ப விளக்கமுடையதாம், [பிரதி விம்பத்திற்கு ஆபாசத்வ மெப்படியென்று சங்கித்து ஆபாசலக்ஷணம் பொருந்துவதனுலெனக் கூறுகின்றார்] அது=பிரதி விம்பம், விம்பவியல்புஇன்றி=விம்பத்தின் இலக்கணமில்லாமல், விம்பம்போல பொற்புறுதலால் = விம்பம் போன்று விளங்குதலால், ஆம்=விம்பாபாசனும், [ஆபாச விலக்கணத் தின் பொருத்ததைதயே வெளிப்படுத்துகின்றார்] இவன் = இச்சிதா பாசன், சங்க விகாரங்கள் புக்குதலால்=சம்பந்தத்தையும் விகாரத்தை யுமடைதலால், விம்பவிலக்கண மதின்றி நிற்பவனுய் = விம்பத்தின் இலக்கணமில்லாமலிருப்பவனுய், ஒளிஉருவம்=விளக்க வடிவத்தால், விம்பமதுபோல நிகழ்வான்=விம்பம்போன்று விளங்குவான், என்று உணர்வர் = என்று அறிவார்கள். ஏது வினிலக்கணமின்றி ஏதுவைப் போல விளங்குவது ஏத்வாபாசமாம் என்பதுபோல என்பது பொருள், [இவ்வாறு சிதாபாசன் அவசியமாய்த் தேவையில்லையென்னும் அப்பிரயோ ஜகத்துவத்தை நிராகரித்து இப்போது அவனுக்குப் புத்தி யினும் வேருக இருப்பை சாதிப்பதற்கு பூர்வபக்ஷம் கூறுகின்றார்] மதி யுண்டெனினுண்டு=புத்தியுளதேல் ஆபாசனுளது, அதனுல்=புத்தி யையநுசரித்திருக்கும் அக்காரணத்தால், சொற்பமும் ஆபாசன் மதி

தனக்கு அயல் அன்று என்னில் = கொஞ்சமும் சிதாபாசன் புத்தியினும் வேறன்றுமென்று சொல்லில், மண்ணிருக்கும்போதே யுள்ளதாகிய கடம் மண்ணினும் வேருகாதது போலென்பது கருத்து, [இவ்வாருமேல் தேகத்தினும் வேருக புத்தியும் சித்தியாது என்று பிரதி வந்தியால் பரிகரிக்கின்ருர்] மதியும் = அந்தக்கரணமும், தன் உடற்கு அயல் அன்று என்று = தனது தேகத்தினும் வேருகச் சித்திக்காது என்று சொற்றிடுதி = சொல்வாயாக எ—று.

தேகத்தை யநுசரித்திருத்தலாலும் தேகத்தைவிட்டுத் தனியே தோற்ருமையானும் என்பது கருத்து. 11

(அ—கை)

பிரதி வந்தியின் விமோசனம் சங்கிக்கப்படுகிறது.

சாத்திரத்தாற் றேகமரிப் பினுமதியுண் டென்னிற்
சாற்றுமதிக் கன்னியமாச் சிற்சாயை யுளதென்
றேத்திதரப் பிரவேச சுருதிசொலு மதியோ
டேய்ந்தவற்காம் பிரவேச மெனற்க மதிக்கயலா
நேத்திரவான் மாப்பிரவே சஞ்செய்வா னினைந்து
நேர்ந்தனனென் றியம்புமைத ரேயமிவ னக்கங்
காத்திரஞ்சே ரிதுதரியா தென்னையொழிந் தென்று
கருதிமுடி நடுப்போழ்ந்துட் புகுந்தொழுகின் றனனே 12

(ப—ரை) சாத்திரத்தால் = "விஞ்ஞானத்தோடு கூடியவனு கின்ருன்" என்பது முதலிய சுருதியால், தேகம்மரிப்பினும் = உடம்பு நாசமாயினும், மதிஉண்டு என்னில் = தேகத்தினும் வேருக புத்தியுள்து என்று சொல்லில், [அற்றேல் சுருதியின் பலத்தால் தேகத்தினும் வேருக புத்தி அங்கீகரிக்கப்படுமேல் பிரவேச சுருதியின் பலத்தால் புத்தியினும் வேருக சிதாபாசனுமங்கீகரிக்கத்தக்கதாமெனக் கூறு கின்ருர்] சாற்றுமதிக்கு அன்னியமா = சொல்லாநின்ற புத்திக்கு வேருக, சிற்சாயையுளது என்று = சிதாபாசன் உண்டு என்று, ஏத்து இதர பிரவேச சுருதி சொலும் = சிரேஷ்டமாகிய முன் சொன்ன சாத்திரத்திற்கு வேருன பிரவேசத்தைப் போதிக்கும் சுருதி கூறும், [அற்றேல் புத்தியை உபாதியாகவுடைய ஆன்மாவிற்கே பிரவேசம்

பொருத்தமாம் அன்னியத்திற்கின்ரும் என்று வினவுகின்ருன்] மதியோடு ஏய்ந்தவற்கு = புத்தியோடு கூடிய ஆன்மாவிற்கு,பிரவேசமா மெனற்க = புகுதல் பொருந்துமென்று சொல்லற்க, [ஐதரேய சுருதியில் புத்தியினும் வேருனவற்றிற்கே புகுதலைக் கேட்டலால் அங்ஙனம் அன்றெனப் பரிகரிக்கின்ருர்] மதிக்கயலாம் நேத்திர ஆன்மா = புத்தியினும் வேருகிய சிறந்த ஆன்மா, பிரவேசஞ் செய்வான் நினைந்து = புகுதற்பொருட்டு கருதி, நேர்ந்தனனென்று = பிரவேசித்தானென்று, ஐதரேயம் இயம்பும் = ஐதரேய சுருதி சொல்லும், [அச்சுருதியைப் பொருளாற் படிக்கின்ருர்] இவன் = இப்பரமான்மா, அக்கங்காத்திரம் சேர்இது = இந்திரியங்களோடும் தேகங்களோடும் கூடிய இந்தச்சட சமுதாயமானது, என்னையொழிந்து தரியாது = சேதனனுகிய என்னை விட்டு எப்படியும் நிற்காது, என்று கருதி = என்று சிந்தித்து, முடிநடு போழ்ந்து = சிரசின் மத்தியத்தை தனது சன்னிதி மாத்திரத்தால் பிளந்து, உள்புகுந்து ஒழுகின்றனன் = உள்ளே பிரவேசித்துச் சம்சாரத்தில் சுழலுகின்ருன், சாக்கிர முதலியவற்றை அனுபவிக் கின்ருனென்பது பொருள் எ—று.

ஏ—அசைநிலை. 12

(அ—கை)

அற்றேல் அசங்க ஆன்மாவிற்குப் பிரவேசமும் பொருந்தா தென்று வினவுகின்ருன்.

எவ்வாரும் பிரவேச மசங்கனுக்கேற் சிருட்டி
யிவனுக்கெவ் வாருஞ்சொல் லவர்க்குமட முடைமை
யொவ்வாதோ வவர்க்கழிவுஞ் சமமாகு மிவன்ரு
னேதிவற்றி னெழுந்தவைதா மொழிந்தொழிவ னென்று
செவ்வாக மைத்ரேயிக் கியாக்கியவற் கியர்தாஞ்
செப்பினர்மற் றவிநாசி யிவ்வான்மா வென்றே
தவ்வாத கூடத்தன் பகுத்துணர்த்தப் பட்டான்
சடத்தோடு கூடானசங்க னென்றுரைத்த லாலே. 13

(ப—ரை) அசங்கனுக்கு = அசங்க ஆன்மாவிற்கு, பிரவேசம் எவ்வாறு ஆமேல் = தேகத்திற் புகுதல் எப்படிப் பொருந்துமென்று வினவில், [இந்தச் சங்கை சிருஷ்டியிலும் சமானமெனக் கூறுகின்ருர்]

இவனுக்கு சிருஷ்டி எவ்வாறு ஆம்சொல் = அசங்க இவ் ஆன்மாவிற்கு உற்பத்தியைச் செய்தல் எப்படிப் பொருந்தும் கூறுவாய், [சிருஷ்டியைச் செய்பவன் மாயிகனுதலால் தோஷமன்றென்று சங்கித்து இந்தச் சமாதானம் பிரவேச கருத்தாவிலும் சமானமெனக் கூறுகின்றூர்] அவர்க்கு மடம் உடைமை ஒவ்வாதோ = சிருஷ்டி கருத்தாவிற்கும் பிரவேசகருத்தாவிற்கும்மாயையோடு கூடிய தன்மை சமானமாகாதோ, ஆகும் என்பது பொருள். [இவ்விருவர்க்கும் மாயையோடு கூடிய தன்மையில் மாயையின் நிவர்த்தியால் நிவர்த்தியாதல் வடிவ ஏதுவும் சமானமாம் எனக் கூறுகின்றூர்] அவர்க்கு அழிவும் சமம்ஆகும் = சிருஷ்டிப் பிரவேச கருத்தாக்களுக்கு விநாசமும் ஒப்பாகும் [பிரஞ்ஞான கன ஆன்மாவே இத்தேகேந்திரியாதி யுபாதியாற்றேன்றி அதனையே பின்பற்றி விநாசமாகின்றது மரித்துப்பெயரில்லை என்று ஔபாதிக ஆன்மாவிற்கு அழிவைப் பிரதிபாதிக்கும் சுருதியைத் தெரிவிக்கின்றூர்] இவன் = பிரஞ்ஞானகன இவ் ஆன்மா, ஓது இவற்று = பஞ்சபூத காரிய மாக சொல்லப்பட்ட இத்தேகாதி நிமித்தங்களால், எழுந்து = உத்பத்தி யாகி அதாவது சீவத்துவ அபிமானத்தையடைந்து, அவைதாம் ஒழிந்து = அத்தேகாதிகள் விநாசமாக, ஒழிவன் = நாசமாவன் அதாவது அவற்றுல் செய்யப்பட்ட சீவத்துவாபிமானத்தை விடுவன், என்று செவ்வாக = என்றிந்தப் பிரகாரம் வெளிப்படையாக, யாக்கியவற்கியர் மைத்திரேயிக்கு செப்பினர் = யாஞ்ஞியவற்கமகரிஷிமைத்திரேயி யெனப் பெயரிய மனைவிக்கு சோபாதிக ஆன்மாவிற்கு விநாசித் துவத்தைக் கூறினர், [மைத்திரேயி இவ்வான்மா அவிநாசி உச்சேத தருமமற்றது என்னும் சுருதியால் அதினும் வேறுன கூடஸ்தன் தெரிவிக்கப்பட்டானெனக் கூறுகின்றூர்] இவ்வான்மா அவிநாசி என்று = நிருபாதிக அசங்க இவ் ஆன்மா அழிவற்றதாமென்று, தவ்வாத கூடத்தன் பகுத்து உணர்த்தப்பட்டான் = கெடாத நிருவிகார புருஷன் பிரித்து அறிவிக்கப்பட்டான் [இவ்வான்மாவிற்கு தேகாதி களோடு சம்பந்தமின்றுமென்னுஞ் சுருதியால் அவிநாசித்துவத்திலே துவாகிய அசங்கத்துவத்தையும் சொன்னுரெனக் கூறுகின்றூர்] சடத் தோடு கூடான் என்று = சடமாகிய தேகாதிகளோடு சேரானென்று, அசங்கன் உரைத்தலால் = அசங்க ஆன்மாவைக் கூறுதலால், (இவ்வான்மா அவிநாசியாம்) எ—று. 13

ஒழிய என்பது ஒழிந்து எனத் திரிந்து நின்றது.
தான், தாம், ஏ — அசைநிலைகள்.

(அ—கை)

சீவனுல் விடப்பட்ட தேகாதி விநாசமாகின்றது சீவன் விநாச மாகிறதில்லையென்னுஞ் சுருதியால் ஔபாதிக ஆன்மாவிற்கும் அவிநாசித்துவம் பிரதிபாதிக்கப்படுகின்றது என்று சங்கித்து அந்தச் சுருதி தேகாந்தரப் பிராப்தியை விஷயமாகவுடையதாயிருத்தலால் ஆத்தியந்திக நாசாபாவத்தைப் போதிப்பதின்றுமெனக் கூறுகின்றார்.

சீவனொழி தேகமதே சிதைந்திடுமச் சீவன்
சிதைதலுரு னென்பதற்கு முத்திபொரு ளல்ல
மேவுறுவேற் றுலககதி யாங்கெடுமேற் சீவன்
மெய்ப்பரநா னென்றுணர வொண்ணுதென் னற்க
வோவுதலா னுஞ்சாமா னுதிகர ணியந்தா
னொண்டுமிது தறிபூமா னிவனெனும்வாக் யத்திற்
றுவருபூ மான்மதியாற் றறிமதிபோ மாறு
தான்பிரம மெனும்மதியா லகமதிபோ முழுதும். 14

(ப—ரை) சீவன் ஒழி தேகமதே சிதைந்திடும் = சீவனின்றிய சரீரமே விநாசமாகும், அச்சீவன் சிதைதல் உருன் = சரீரத்தைவிட்ட சீவன் விநாசமாகான், என்பதற்கு = என்னும் சுருதிக்கு, முத்தி பொருள் அல்ல = அவிநாசித்துவமருத்தமன்று மற்றோ, மேவுறு வேற்று உலக கதியாம் = அடையத் தகுந்த அன்னிய லோகத்தின் கமனமாம், அற்றேல் சீவன் விநாசியாவனுயின் நான் பிரம்மமா கின்றேனென்று அவிநாசி பிரம்மத்தோடு அபேத ஞானம் பொருந்தாது என்று வினவுகின்றான்] சீவன் கெடுமேல் = சிதாபாசன் விநாசியாயின், மெய்ப்பரம் நான் என்று உணர ஒண்ணுது = சத்துருபப் பிரம்மம் நானுகின்றேனென்று பிரம்ம ரூபமாகத் தன்னையறியக்கூடாது அழியும் பொருட்கும் அழியாப் பொருட்கும் ஐக்கியம் விரோதமாவதால், என்னற்க = என்று சங்கை செய்யற்க, [முக்கிய சாமானுதி கரண்ணிய மின்றேனும் பாதசாமானுதி கரண்ணியம் சம்பவித்தலால் சீவத் துவத்தைப் பாதித்து பிரமத்துவத்தையறியக் கூடுமெனக் கூறுகின்றார்] ஓவுதலானும் = சீவத்துவத்தைப் பாதித்தலானும், சாமானுதி கரணியம் ஒண்டும் = நான் பிரம்மமாகின்றேன் என்னும் அபேதஞான வடிவ சாமானுதி கரண்ணியம் சம்பவித்தலின், [பாத சாமானுதி கரண்ணியத்

தால் வாக்கியார்த்தத்தையறியும் பிரகாரம் வார்த்திககாரரால் திருஷ்டாந்த சகிதம் கூறப்பட்டுளது என்னுமிப்பொருளை அவரது வாக்கியத்தையுதாகரித்தல் வாயிலாகத் தெரிவிக்கின்றார்] இதுதறிபூமான் இவன் எனும் வாக்கியத்தில்=இந்தத்தாணு இப்புருஷன் என்னும் வாக்கியத்தில், தாவருபுமான் மதியால் = அபாதித புருஷத்துவ போதத்தால், தறிமதி போமாறு=கட்டைபுத்தி கெடுவது போல, பிரம்மம் எனும் மதியால்= நான் பிரம்மம் என்னும் ஞானத்தால், அகம் மதி முழுதும்போம்=நான் கருத்தா என்பது முதலிய சகல புத்தியும் நிவர்த்தியாகும் எ—று.

ஈண்டு புருஷனிடத்தில் தாணுத்துவ புத்தி பிராந்தியாம்.
தான், தான்—அசைநிலைகள். 14

பரியாயமல்லாத பதங்களுக்கு ஒரு விபக்தி (சமான விகுதியினை) யுடைமையுளதாக ஒரு பொருளிலுண்டாம் பிரவிருத்தி (தாற்பரிய வடிவ சம்பந்தம்) சாமாநாதி கரணியமெனப்படும். அது முக்கிய சாமாநாதி கரணியம், பாத சாமாநாதி கரணியம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

க. எந்த வஸ்துவிற்கு எதனோடு எப்போதும் அபேதமிருக்கின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனோடு முக்கிய சாமாநாதி கரணியம் சொல்லப்படும். அதனையே அபேத சாமாநாதி கரணியமென்றும் கூறுவர். எங்ஙனம் கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு முக்கிய சாமாநாதி கரணியமிருக்கின்றதோ, அங்ஙனமே கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேதமிருக்கின்றது. அதனால் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய சாமாநாதி கரணியமிருக்கின்றது.

உ. எந்த வஸ்துவிற்குப் பாதமுண்டாய் எதனோடு அபேதமுண்டாகின்றதோ, அந்த வஸ்துவிற்கு அதனோடு பாத சாமாநாதி கரணியம் சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: தாணு அல்லது பிரதிபிம்பத்திற்குப் பாதமுண்டாய்ப் புருஷனோடாவது அல்லது பிம்பத்தோடாவது அபேதமுண்டாகிறது. ஆதலால் தாணு அல்லது பிரதி பிம்பத்திற்குப் புருஷனோடு அல்லது பிம்பத்தோடு பாத சாமாநாதி கரணியமிருக்கின்றது. இவ்வாறு சிதாபாசனுக்கும் பாதமுண்டாய்க் கூடஸ்தனோடாவது பிரமத்தோடாவது அபேதமுண்டாகின்றது. ஆதலால் சிதாபாசனுக்குக் கூடஸ்தனோடாவது அல்லது பிரஹ்மத்தோடாவது பாத சாமாநாதி கரணியமுண்டு. 14

(இதுவுமது)

இப்படிநைட் கன்மியசித் தியிலுமா சிரிய
ரிலங்குறவோ ரிடத்திருத்தற் கொழிவுபொரு ளென்று
செப்பினரா தலினுலே யதுவாக முழுதுந்
திகழ்பிரம மெனச்சகத்தோ டோரிடத்தா ருதல்போல்
எய்ப்பிலகம் பிரமமெனச் சீவனுடனேயோ ரிடத்திருத்த
லாகுமோ ரிடத்தி ருத்தற் கொழிவு
மெய்ப்பொருளா காதென்ருர் மிகவுமுயற் சித்து
விவரணத்திற் கூடத்தன் பொருளென வுட்கொண்டே. 15

(ப—ரை) இப்படி = கூறிய பிரகாரத்தால், நைட்கன்மிய சித்தியிலும் = நைஷ்கர்ம சித்தியென்னும் கிரந்தத்திலும், ஆசிரியர் = வார்த்திகக்காரராகிய சுரேசுவராசாரியர், இலங்குற = ஸ்பஷ்டமாக, ஓர் இடத்து இருத்தற்கு = சாமானுதிகரண்ணியத்திற்கு, ஒழிவு பொருள் என்று = பாதார்த்தமாமென்று, செப்பினர் = கூறினுர், [பலிதத்தைக் கூறுகின்ருர்] ஆதலினுல் = இக்காரணத்தினுல், அதுஆக = நான் பிரம்மமாகின்றேனென்னும் வாக்கியத்தில்சாமானுதிகரண்ணியத்திற்கு பாதார்த்தத்துவம் இருக்குக, பாதசாமானுதிகரண்ணியமென்பது பொருள், [இங்ஙனமாயினும் சுருதிகளில் பாதசாமானுதிகரணியம் ஓரிடத்தும் காணப்படவில்லையேயென்ரு சங்கித்கு "இவ்வனைத்தும் பிரம்ம"மென்னுமிடத்தில் பாதசாமானுதிகரண்ணியம் காணப்பட்டதாகையால் ஈண்டும் அது ஆகுமெனக் கூறுகின்ருர்] திகழ்முழுதும் பிரமம் என = தோற்றுகின்ற சகத்தனைத்தும் பிரம்மமென்று,சகத்தோடு ஓரிடத்து ஆருதல்போல = பிரம்மத்திற்கு பிரபஞ்சத்தோடு சாமானுதிகரண்ணியம் உண்டாவதுபோல, எய்ப்புஇல்அகம் பிரமம் என = திடமாக யான் பிரம்மமாகின்றேனென்று, சீவனுடனே ஓர் இடத்து இருத்தலாகும் = பிரமத்திற்கு சீவனோடு சாமானுதிகரண்ணியம் பொருந்தும், [அப்படியானுல் விவரணுசாரியரால் பாதசாமானுதிகரண்ணியம் எதனுல் நிராகரிக்கப்பட்டது என்ரு சங்கித்து அவர்களால் அகம் சத்தத்தால் கூடஸ்தனை விவக்ஷித்தலாலெனக் கூறுகின்ருர்] விவரணத்தில் = விவரணக் கிரந்தத்தில், கூடத்தன் பொருள் என

உட்கொண்டு = அகம் சத்தத்திற்கு கூடத்தனை யருத்தமாக அங்கீகரித்து, மிகவும் முயற்சித்து = மிகவும் யத்தினஞ்செய்து, ஓர் இடத்து இருத்தற்கு = சாமாநாதிகரண்ணியத்திற்கு, ஒழிவு = பாதம், மெய்ப் பொருள் ஆகாது என்றார் = உண்மைப் பொருளல்லவென்று கூறினர் எ—று.

சாமாநாதிகரண்ணியத்திற்கு பாதமாவது இரண்டனுள் ஒன்றைப்பாதித்து மற்றொன்றனோடு ஐக்கியஞ் செய்தல். அஃது பிரசங்கத்தில் சீவப்பிரம்மங்களிரண்டனுள் சீவனைப்பாதித்து பிரமத்தில் ஐக்கியஞ்செய்தல். பாத சாமாநாதிகரண்ணியத்திற்கு இதுவே பொருளாம். 15

(அ—கை)

கூடத்தன் பொருளென உட்கொண்டு என்று கூறிய பொருளையே விஸ்தரிக்கின்றார்.

சோதிததொம் பதார்த்தமெனுங் கூடத்த னேயாந்
துகளில்பர மெனவிவர ணைதிகளி லவ்வா
றோதிடப்பட் டதுதேக விந்திரியா திகளோ
டுற்றிடுசீ வாபாசப் பிரமையது தனக்குக்
கோதிலதிட் டானசித்தே கூடத்த னென்று
கூறிடலா மிங்குசகப் பிரமையடங் கலுக்குந்
தீதிலதிட் டானவறி வெதுவதுவே தாந்தந்
திகழ்த்துபரப் பிரமமெனச் செப்பிடலா மன்றே.16

(ப—ரை) சோதித = (புத்தியாதிகளினின்றும்) விவேசனஞ் செய்யப்பட்ட, தொம்பதார்த்தம் எனும் கூடத்தனே = துவம்பத லக்ஷிய மாகிய கூடஸ்தனே, துகள்இல் பரம் ஆம் என = நிர்த்தோஷ சச்சிதானந்த வடிவ பிரம்மமாமென்று, விவரணைதிகளில் அவ்வாறு ஓதிடப் பட்டது = விவரணம் முதலிய கிரந்தங்களில் (அப்படி பாத சாமாநாதி கரண்ணிய நிராகரண பூருவகம் முக்கிய சாமாநாதிகரண்ணியம்) சொல்லப்பட்டது.[இப்போது கூடஸ்தனுக்கு பிரமத்தோடுஐக்கியத்தை சம்பாவனை செய்வதற்காக கூடஸ்த சத்தத்தால் விவக்ஷிக்கப்பட்ட பொருளைக் கூறுகின்றார்] தேக இந்திரியாதிகளோடு உற்றிடு = தேகம்

இந்திரிய முதலிய இரண்டுசரீரங்களோடுகூடிய, சீவாபாசப் பிரமையது தனக்கு = சிதாபாச வடிவப் பிராந்திக்கு, கோதுஇல் அதிட்டான சித்தே=குற்றமற்ற யாதொரு அதிஷ்டான சைதன்யமுண்டோ அதுவே, இங்கு=வேதாந்த சாஸ்திரங்களில், கூடஸ்தன் என்று கூறிடலாம்=கூடஸ்த சத்தத்தால் சொல்லப்படும், [பிரம்ம சத்தத்தின் பொருளைக்கூறுகின்றார்] சகப்பிரமை அடங்கலுக்கும்=பிரபஞ்சகற்பனை அனைத்திற்கும், தீதுஇல் அதிட்டான அறிவு எது = நிர்த்தோஷமான அதிஷ்டான சைதன்யம் யாது, வேதாந்தம் திகழ்த்தும் = வேதாந்த சாஸ்திரங்களில் நிரூபிக்கப்பட்டதோ, அது பரப்பிரமமெனச் செப்பிடலாம்=அந்த சைதன்னியம் பிரம்ம சத்தத்தால் சொல்லப்படும் எ—று. அன்று, ஏ—அசைநிலைகள்.

திகழ்த்துமென்பதில் மகரம் கடைக்குறை. 16

(அ—கை)

சீவப்பிராந்திக்கு அதிஷ்டான சைதன்னியம் கூடஸ்தன் என்று சொல்லப்பட்டது பொருந்தாது. சீவனுக்கு ஆரோபிதத்துவம் அசித்தமாவதால் என்று ஆசங்கித்து அவனுக்கு ஆரோபிதத்துவத்தை கைமுதிக நியாயத்தால் சாதிக்கின்றார்.

இந்தவறி வதனிடையே யுலகதுகற் பிதமா
மென்றக்கா லதிலொருபா லாஞ்சீவா பாசம்
வந்ததெனல் வேண்டுமோ வுலகதிலோர் பாலாய்
வந்திடுமா ரோபங்க டமின்வேறு பாட்டாற்
றந்தொமெனும் பதப்பொருள்கள் வேறுபா டாகுந்
தத்துவமாச் சித்தொன்றும் புத்திதரு மமதா
யுந்துசெயல் முதலனவு மொளியென்பர மான்ம
வுருவமும்பெற் றெதிரொளிர்த லாலுயிரா மயலே. 17

(ப—ரை) இந்த அறிவதனிடையே=இந்தப் பிரத்தியகபின்ன பிரமத்தினிடத்திலேயே, உலகது கற்பிதமாம்=சகல சகத்தும் ஆரோபிதமாம், என்றக்கால் = என்றபோது, அதில் ஒருபாலாம் சீவ ஆபாசம்=அச்சகத்திலே கதேசமாகிய சிதாபாசன், வந்தது எனல் வேண்டுமோ = தற்பிதமென்று சொல்லவேண்டுமா, சகத்தின் ஏக

தேசத்துவமும் "இச்சீவ ரூபத்தால் பிரவேசித்து," என்பது முதலிய சுருதியால் சித்தமாம் [அற்றேல் சகத்தின் அதிஷ்டான சேதனம் ஒன்றுதலால் தத்துவம் பதார்த்தங்களுக்கு பேதமில்லாதபோது தத்துவம் பதங்களுக்கு கூறியது கூறலென்னும் குற்றமாமென்று சங்கித்து தத்துவம் பதார்த்தங்கட்கு ஔபாதிக பேதமும் வாஸ்தவ அபேதமுமிருத்தலால் புனருத்தி இன்றுமெனக் கூறுகின்றார்] உலகு அதில் ஓர்பாலாய் வந்திடும் = சகத்தும் அச்சகத்திலே கதேசமாய் உண்டாகும் தேகாதியும் ஆகிய, ஆரோபங்கள் தமின் வேறுபாட்டால் = கற்பித வஸ்துக்களின் பேதத்தால், தத்தொம் எனும் பதப் பொருள்கள் = தற்பதார்த்த துவம்பதார்த்தங்கள், வேறுபாடு ஆகும் = பின்னமாம், தத்துவமாசித்து ஒன்றும் = வாஸ்தவமாக சேதனம் ஏகமேயாம், [அற்றேல் சிதாபாசனுக்கு இப்பிவெள்ளி முதலியதிற்போன்று அதாவது சுத்தியில் ஆரோபிக்கப்பட்ட இரஜதத்தில் அதிஷ்டான சுத்தியின் இதந்தையும் ஆரோப்பிய இரஜதத்தின் இரஜதத் தன்மையுமாகிய இரண்டு தர்மங்களும் தோற்றுகின்றன. ஆதலால் இரஜதம் ஆரோபிதமாம். அவ்வாறே கூடஸ்தனிடத்து ஆரோபித சிதாபாசனிடத்திலும் ஆரோபிதத் தன்மை சித்தித்தற்பொருட்டு அதிஷ்டான ஆரோப்பியங்களினது தர்மத்தின் பிரதீதி சொல்லவேண்டும். சிதாபாசனிடத்தில் அத்தர்மங்கள் தோற்றாமையால் ஆரோபிதத்தன்மை எங்ஙனமாம் என்று சங்கித்துக் கூறுகின்றார்] புத்தி தருமமதாய் உந்து செயல் முதலனவும் = புத்தியின் தருமங்களான தள்ளத்தக்க கர்த்துருத்துவாதிகளையும், ஒளி என் பரமான்ம உருவமும் = ஸ்புரணவடிவ ஆன்ம சொரூபத்தையும், பெற்று = அடைந்து, எதிர் ஒளிர்தலால் = முன்பு வெளிப்படையாக விளங்குதலால், உயிர்மயலாம் = சிதாபாசன் கற்பிதனும் எ—று.

புத்தி உபாதி வாயிலாக ஆரோபிக்கப்படுகின்ற கர்த்திருத்துவாதி தருமங்களையும் ஸ்புரணவடிவ ஆன்ம சொரூபத்தையும் பெற்று வெளிப்படையாக விளங்குதலால் சிதாபாசன் கற்பிதனுமென்பது பொருள்.

தத்தொம் என்பது எதுகை நோக்கி தந்தொம் எனத் திரிந்தது.

ஏ—அசை.

(அ—கை)

இந்தப் பிராந்திக்குக் காரணம் யாது என்று இச்சை உண்டாக புத்தியாதிகளின் சொரூப ஞானமின்மையே காரணமாமெனக் கூறுகின்றார்.

எதுபுத்தி யாபாச னியாவனெவ ளுன்மா
வெவ்வாறு வந்ததுல கெனத்தேரு மையினுன்
முதுமோக மாமிதுவே பவமாகும் புத்தி
முதலவற்றி னியல்புணர்வான் றத்துவவித் தவனே
பொதுவான முத்தனென்றிவ் வகைவேதாந் தங்கள்
புலப்படுத்து மிவ்வகைத்தேற் பந்தமெவ னுக்கென்
பதுமுதலாங் குதர்க்கசென் னியபரிகா சங்கள்
படமிகக்கண் டனவுத்தி யாற்படுத்தல் வேண்டும். 18

(ப—ரை) எது புத்தி = அந்தக்கரணமென்பது யாது, ஆபாசன் யாவன் = சிதாபாசனெனன்பவன் எவன், ஆன்மா எவன் = ஆன்மா என்பது யாது, உலகு எவ்வாறு வந்தது = சகத்து எப்படி உண்டானது, எனத் தேருமையினுல் = என்று நிர்ணயஞ் செய்யாமையினுல், முது மோகமாம் = பெரிய பிராந்தியுண்டாம், [மோகத்தின் நிவர்த்தியின் பொருட்டு அம்மோகத்திற்கு அனர்த்த காரணத்துவத்தைக் கூறுகின்றார்] இதுவே பவமாகும் = இந்த மோகமே சம்சாரமாகும், [இதனை நிவர்த்தி செய்வது யாது என்று இச்சையுண்டாக புத்தியாதிகளின் சொரூப விவேகமே நிவர்த்திசெய்வது என்று அபிப்பிராயப்பட்டு அந்த விவேகத்தை உடையவனே ஞானி. அந்த விவேகத்தினுலேயே அனர்த்த நிவர்த்தியாம் எனக் கூறுகின்றார்] புத்தி முதலவற்றின் இயல்பு உணர்வான் = அந்தக் கரணுதிகளின் சொரூபத்தைப் பிரித்து அறிகின்றவன் எவன் அவனே, தத்துவவித்து = பிரம்ம ஞானியாம், அவனே பொதுவான முத்தன் என்று = அந்த ஞானியே சகலர்க்கும் நடுவான சீவன் முத்தன் என்று, இவ்வகை வேதாந்தங்கள் புலப்படுத்தும் = இந்தப்பிரகாரம் உபநிடதங்கள் உணர்த்துகின்றன, [இவ்வாறு பந்த மோக்ஷங்களுக்கு அவிவேகமும் விவேகமும் மூலமாமேல் அத்வைதவாதத்தில் யாருக்கு பந்தம் யாருக்குத்தான் மோட்சம் என்பது முதலிய வடிவங்களான தார்க்கிகரால் செய்யப்படுகின்ற

குதர்க்க மூலங்களான பரிகாச விசேஷங்கள் கண்டனத்திற் கூறிய யுத்திகளால் அவர்களுக்கு நிருத்தரத்துவத்தைச் சம்பாதித்தலால் பரிகரிக்கத்தக்கவையாம் எனக் கூறுகின்றார்] இவ்வகைத்தேல்=பந்த மோக்ஷங்கள் அவிவேக விவேகமூலகமாமேல், பந்தம் எவனுக்கு= கர்த்துருத்துவாதி சம்சாரம் எவனுக்கு, என்பது முதலாம் குதர்க்க சென்னிய பரிகாசங்கள்=என்பது முதலிய கெட்ட தர்க்கத்தாலுண் டான ஏளனங்களை, பட = விறைசமாக, மிகக்கண்டனவுத்தியால் = திடமான கண்டனகாத்தியத்திற் சொல்லப்பட்ட யுத்திகளால், படுத்தல்வேண்டும் = நாசமாக்கவேண்டும் எ—று. 18

(அ—கை)

இவ்வாறு சுருதி யுத்திகளால் கூடஸ்தனை புத்தியாதிகளினின் றும் பிரித்துக் காண்பித்து புராணங்களிலும் அதன் விவேகம் செய்யப் பட்டதெனக் கூறுகின்றார்.

விருத்திக்கும் விருத்தியின்முன் னின்மைக்கு முணர்தல்
வேட்கைக்கு மறியேனென் றறியறியா மைக்குங்
கரித்தன்மை யாயிருக்குஞ் சிவனேபொய்க் கெல்லாங்
களமாகி யிருந்தாஞ்சத் தியன்சடங்க ளெவையும்
விரித்திலக்கிச் சின்மயனு மென்றுமுவப் பினுக்கு
விடயமாந் திறத்தாலா மானந்த சொரூப
னருத்தமெலாந் திகழ்த்துதலா லனைத்தினுஞ் சம்பந்த
மாயிருத்தல் கொண்டுபரி பூரணனு மன்றே. 19

(ப—ரை) விருத்திக்கும்=காமாதி விருத்திகளுக்கும், விருத்தி யின்முன் இன்மைக்கும் = காமாதி விருத்தி(களுண்டாவதற்குமுன்பு அவை)களின் பிராக பாவத்திற்கும், உணர்தல் வேட்கைக்கும் = (ஜிஞ்ஞாசையுண்டாகும்போது அந்த) ஜிஞ்ஞாசை வடிவவிருத்திக்கும், அறியேன் என்று அறிஅறியாமைக்கும்=அதன்முன்பு நான் அஞ்ஞன் என்றநுபவிக்கப்படுகின்ற அஞ்ஞானத்திற்கும், கரித்தன்மையாய் சிவனே இருக்கும்=சாக்ஷித்தன்மையாகி பரமசிவனே நிற்கின்றது, பொய்க்கு எல்லாம்=அவனே மித்தையான சகல சகத்திற்கும், களம்

ஆகி இருந்து = ஆதாரமாகியிருத்தலால், சத்தியன் ஆம் = சத்து ரூபனும், சடங்கள் எவையும்=அசேதனங்களனைத்தினையும், விரித்து இலக்கி=பரப்பிப் பிரகாசித்தலால், சின்மயன் ஆம்=சித்துரூபனும், என்றும் உவப்பினுக்கு விடயமாம் திறத்தால் = எப்போதும் பரமப் பிரேமைக்கு விஷயமாந்தன்மையால், ஆனந்த சொரூபன் = ஆனந்த வடிவன், அருத்தம் எலாம் திகழ்த்துதலால்=பொருள்களனைத்தையும் விளக்குவதால், அனைத்தினும் சம்பந்தமாய் இருத்தல்கொண்டு = சகலத்திலும் சம்பந்தித்திருத்தலால், பரிபூரணன் ஆம்=பரிபூரணன் என்று சொல்லப்படுகின்றது எ—று.

ஈண்டு இஃது அபிப்பிராயமாம்:— விவாத விஷயமான சிவம், விருத்தியாதிகளினும் வேறு. விருத்தியாதிகளுக்கு சாக்ஷியாவதால், எது எது விருத்தியாதிகளினும் வேறன்றே அது அது விருத்தியாதி களுக்கு சாக்ஷியுமன்று. விருத்தியாதி போல, விமதம், சத்தியமாக யோக்கியமாம்,மித்தைக்கதிஷ்டானமாவதால்,கற்பித இரஜாதிஷ்டான சுத்திபோன்று, விமதம், சித்து வடிவம், சடமாத்திரத்தை விளக்குவ தால், எது சித்துரூபமன்றே அவ்வெல்லாம் சடத்தை விளக்குவது மன்று. கடாதி போன்று, விமதம், பரமானந்த ரூபம், பரமப் பிரேமைக்கு விஷயமாவதால், எது பரமானந்த ரூபமன்றே அது பரமப் பிரேமைக்கு விஷயமுமன்று. கடாதி போன்று, விமதம், பரிபூரணம். சருவ சம்பந்தியாவதால், ஆகாசம்போன்று, சருவ சம்பந்தித்துவமும் சகல பொருள்களையும் சாதிக்குந்தன்மையால் சித்திக்கின்றது. அதாவது விமதம், சருவ சம்பந்தமுடையது, சகலத்தையும் விளக்குவ தால், எது சருவ சம்பந்தமுடையதன்றே அது சகலத்தையும் விளக்குவதுமன்று. தீபாதி போன்று.

விமதம்=விவாத விஷயமான சிவம்.

சாதிப்பது=விளக்குவது.

அன்று, ஏ—அசைநிலைகள். 19

(அ—கை)

உதாகரிக்கப்பட்ட புராண வாக்கியங்களின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்.

என்றுசைவ புராணங்க ளுயிரொடிறை யாதி
யிறந்தொன்றாய்த் தன்னொளியாங் கூடத்தன் சிவனெ
ன்றென்றவுணர்த் திடுமுயிரோ டிறையை நிழலாக [ன்
வுண்டாக்கு மாயையெனுஞ் சுருதியினா லவர்கள்
கன்றிடுமா யாமயராங் காசகும்பம் போலக்
களங்கமில ராமன்ன சென்னியமா மனந்தான்
பொன்றுடலி னிருமலமா மிவ்வாறே யன்னோர்
புரைமாயா மயரேனு மனைத்தினுநின் மலரே. 20

(ப—ரை) என்று சைவ புராணங்கள் = இந்தப்பிரகாரம் சூதசம் ஹிதை முதலிய புராணங்கள், உயிரொடு இறையாதி இறந்து = சீவேசாதி கற்பனையின்றி, ஒன்றாய் = அத்துவிதீயமாயும், தன் ஒளியாம் = சொப்பிரகாசமாயுமுள்ள, கூடத்தன் = நிருவிகார சேதனம், சிவன் என்று ஒன்ற உணர்த்திடும் = பரப்பிரம்மமென்று பொருந்தப் போதிப்பிக்கும், [சீவேசத்துவாதிகளுக்கின்மையெதனாலென்று சங்கித்து சுருதியால் அவர்களுக்கு மாயிகத்துவத்தைத் தெரிவித்தலாலெனக் கூறுகின்றார்] மாயை உயிரோடு இறையை = மாயையானது சீவேசுரர்களை, நிழலாக உண்டாக்கும் = சாயையாக அதாவது ஆபாசமாகச் செய்கின்றது, எனும் சுருதியினால் = என்னுமிந்த உபநிடதத்தால், கன்றிடு அவர்கள் மாயாமயராம் = விநாசமாகின்ற அச் சீவேசுரர்கள் மாயையாற் கற்பிதராம். சீவேசுரர்களை ஆபாசமாகச் செய்கின்றது, மாயையும் அவித்தையும் தானே ஆகின்றது என்னும் சுருதி மாயையவித்தைகளின் அதீனமான சிதாபாசர்களுக்கு மாயிகத்துவத்தைப் பிரதிபாதிக்கின்றது என்பது கருத்து. [மாயிகராயின் அவர்களுக்கு தேகாதிகளினின்றும் விலக்ஷணத்தன்மை கூடாதென்று சங்கித்து பிருதிவியின் காரியத்தன்மை சமானமாயினும் காசகும்பத்திற்கு கடாதிகளினும் விலக்ஷணத்தன்மையிருப்பதுபோன்று இவர்களுக்கும் ஆகுமெனக் கூறுகின்றார்] காசகும்பம் போல = பளிங்குக் கடம்போல, களங்கம் இலராம் = சீவேசுரர்கள் ஸொச்சராவர், [அற்றேல் கடத்தையும் காசகும்பத்தையும் ஆரம்பிக்கின்ற மண் விசேஷங்களுக்குப் பேதமிருத்தலால் அவைகளுக்கு வைலக்ஷண்ணியமுசிதமாம் சகத்திற்கும் சீவேசுரர்களுக்கும் காரணமான மாயையொன்றாதலால் அவர்களுக்குச் சகத்தினும் வைலக்ஷண்ணியம் அநுசிதமாம்

என்று சங்கித்து அன்னத்திலுண்டான தேக மனதுகளுக்கு எப்படி வைலக்ஷண்ணியமோ அதுபோலெனக் கூறுகின்றார்] அன்னசென்னி யமாம் மனம் = உண்ட அன்னத்திலுண்டாகிய மனமானது, பொன்று உடலின் நிருமலமாம் = விநாசமாகின்ற தேகத்தைப் பார்க்கிலும் ஸொச்சமாம், இவ்வாறே = இப்படியே, அன்னோர் = சீவேசுரர்கள், புரைமாயாமயரேனும் = குற்றமுள்ள மாயையாற் கற்பிதரேனும், அனைத்தினும் நின்மலரே = சகல சகத்தினும் ஸொச்சராவர் எ—று.

மனதும் தேகமும் அன்னத்தின் காரியமாயினும் மனது தேகத்தைப் பார்க்கிலும் ஸொச்சமாம். அதுபோல் ஜகத்தும் சீவேசுரர்களும் மாயையின் காரியங்களாயினும் சீவேசுரர் ஸொச்சராவர் என்பது பொருள். 20

(அ—கை)

காசாதி போன்று நிருமலத்தன்மையிருக்குக சேதனத்தன்மை எதனாலென்று சங்கித்து அநுபவத்தாலெனக் கூறுகின்றார்.

உணர்வுருவத் தன்மையுமுண் டுணர்வுமய மேயா
யொளிர்தலிற்கற் பனையடங்க வுஞற்றவல மாயைக்
கிணைதருதுட் கரமேயின் றெம்முடைநித் திரையு
மியைகனவிற் சீவேச ருணர்வாக வியற்று
மெணவரிய மாமாயை யிவர்களையுண் டாக்கு
மென்பதிலாச் சரியமென்கொன் முற்றுணர்வா தியையு
மணலிடைக்கற் பித்துணர்த்துந் தருமியைக் கற்பிக்கு
மதுதனக்குத் தருமகற் பனைபார மாமோ. 21

(ப—ரை) உணர்வுமயமேயாய் ஒளிர்தலின் = சித்ரூபத்தன்மையால் விளங்குதலால், உணர்வு உருவத் தன்மையும் உண்டு = சீவேசுரருக்கு சித்ரூபத்துவமும் உளது, [சித்ரூபத்தன்மையால் விளங்குதலும் மாயையோடு கூடிய அவருக்கு பொருந்தாதென்று ஆசங்கித்து மாயை கூடாததைக் கூட்டுவித்தலால் பொருந்துமெனக் கூறுகின்றார்] கற்பனை அடங்க உஞற்றவல மாயைக்கு = சகல கற்பனையையும் செய்யச் சாமார்த்தியமுடைய மாயைக்கு, இணைதருதுட்கரமேயின்று = பொருந்தாநின்ற அசாத்தியமான காரியமே இல்லையாம், [கூறிய

பொருளை கைமுதிக நியாயத்தால் திடஞ்செய்கின்றார்] எம்முடை நித்திரையும் = நமது தூக்கமும், கனவில் இயைசீவேசருணர்வாக வியற்றும் = சொற்பனாவஸ்தையில் கற்பிக்கப்பட்ட சீவேசுரரை சேதனர்களாகச் செய்யும், எணவரிய மாமாயை = கருதற்கரிய மகாமாயையானது, இவர்களை உண்டாக்கும் என்பதில் = இச்சீவேசுரர்களை சேதனர்களாகக் கற்பிக்கும் என்று சொல்வதில், ஆச்சரியம் என்கொல் = உனக்கு யாது ஆச்சரியம், [ஈசுரன் மாயா கற்பிதனாயின் அவனுக்கு சீவன்போல அசர்வக்ஞத்தன்மை முதலியது நேரும் என்று ஆசங்கித்து சர்வக்ஞத்துவாதியையும்மாயையே கற்பிக்கிறதெனக்கூறுகின்றார்] அண்ணலிடை = பரமேசுரனிடத்தில், முற்றுணர்வாதியையும் = சர்வக்ஞத்தன்மை முதலியவற்றையும், கற்பித்து உணர்த்தும் = ஆரோபித்துத் தோற்றுவிக்கும், [அதில் யுத்தியைக் கூறுகின்றார்] தருமியை கற்பிக்கும் அநுதனக்கு = தர்மத்தின் ஆசிரயத்தை ஆரோபிக்கும் மாயைக்கு, தரும கற்பனை பாரமாமோ = தருமங்களை ஆரோபிப்பதில் வருத்தம் யாது எ—று.

அண்ணல் என்பது எதுகை நோக்கி அணல்என இடைக்குறையாயிற்று. ஈண்டு தருமி ஈசுரன். தருமம் சருவஞ்ஞத்துவாதி குணங்கள். 21

(அ—கை)

அற்றேல் சீவேசுரருக்குப்போல கூடஸ்தனுக்கும் மாயிகத்தன்மை நேருமென்று வினவுகின்றான்.

கூடத்தன் றானுமந்த வகையாகு மென்று
கூறாதே யவன்மாயா மயனாகு மென்னற்
கீடுற்ற பிரமாண மில்லையவ னுண்மை
யெனமறையின் முடிவனைத்து மிகமுழங்கு மிங்கு
சாடுற்ற வெதிரியதா மன்னியவத் தொன்றுஞ்
சகியாவா மறைப்பொருளை விரித்துரைப்பே மன்றி
யாடற்ற தருக்கங்க ளனைவையு மறையேமா
லதனாற்றார்க் கிகசங்கைக் கிங்கிடையே தோதே. 22

(ப—ரை) கூடத்தனும் = நிர்விகார சேதனமும், அந்தவகையாகும் என்று = சீவேசுரரைப்போன்று மாயிகமாம் என்று, கூறாதே = சங்கை செய்யற்க, [பிரமாணமின்மையினால் அங்ஙனம் அன்றெனப் பரிகரிக்கின்றார்] அவன் மாயாமயனாகும் = அக்கூடஸ்தன் மாயாகற்பித

ஞவன், என்னற்கு=என்று சொல்லுவதற்கு, ஈடுற்ற பிரமாணம் இல்லை=பெருமைபொருந்திய பிரமாணமின்ரும், [கூடஸ்தனது வாஸ் தவத்துவத்திலும் பிரமாணம் காணப்படவில்லையேயென்று சங்கித்து சுருதிகளனைத்தும் பிரமாணமாமெனக் கூறுகின்ருர்] அவன் உண்மை என=அக்கூடஸ்தன் வாஸ்தவமாமென்று, மறையின்முடிவு அனைத் தும் மிகமுழங்கும் = வேதாந்தங்களெல்லாம் அதிகமாக பறையறை கின்றன, இங்கு=கூடஸ்தனது பாரமார்த்திகத்தன்மையில், சாடுஉற்ற எதிரியதாம் அன்னியவத்து=பாதிப்பதாய் விரோதியாய் வேறு பொருளை, ஒன்றும் சகியாவாம்=சுருதிகள் கிஞ்சித்தும்பொறுக்காவாம், [அற்றேல் கூடஸ்தனுக்கும் சீவேசுரர்களுக்கும் வாஸ்தவத்துவ அவாஸ்தவத்துவங்களைச் சாதிப்பதில் சுருதிகளேபடிக்கப்படுகின்றன, தருக்கங்களால் கிஞ்சித்தும் சாதிக்கப்படுகிறதில்லை என்று சங்கித்து முமுக்ஷுக்களுக்கு சுருதியின் பொருளை வெளிப்படுத்தும்பொருட்டு பிரவிருத்தித்தபடியால் தருக்கம் கூறவில்லையெனக் கூறுகின்ருர்] மறைப்பொருளை விரித்து உரைப்பேம்=சுருதியின் அருத்தத்தை விஸ்தாரமாகக் கூறுகின்றேம், அன்றி=அவ்வாறன்றி, ஆடு அற்ற தருக்கங்கள் எவையும் அறையேம்=வெற்றியின்றிய யுத்திகள் எப்படிப் பட்டவற்றையும் கூறேம், அதனுல் = அக்காரணத்தால், தார்க்கிக சங்கைக்கு = நையாயிகரது வினுவிற்கு, இங்குஇடைஏது = கூடஸ்த னிடத்தில் அவகாசம் ஏது, ஓது=சொல்வாய் எ—று.

ஆடு=வெற்றி. தான், ஆல், ஏ—அசைநிலைகள். 22

(அ—கை)

அச்சுருதியின் பொருளை விளக்குதலாலென்னையெனிற் கூறுகின்ருர்.

ஆதலினுல் முமுட்சுக்கள் குதர்க்கமகன் ரேத்தை
யாசரித்தல் வேண்டுமிதே யுயிரிறையை மாயை
சாதமுறச் செய்ததுநோக் காதிபிர வேசாந்
தமுமா சிருட்டியிறை தந்ததுவா நனவே
யாதியப வருக்காந்தச் சமுசாரஞ் சீவ
ஞக்கியதாங் கூடத்த னசங்கனே யிவனுக்
கோதுவியப் பொன்றுமிலை யென்றுணர்த்து மதனு
னுளத்தினிலிவ் வொழுங்கநிசஞ் சிந்தித்தல் வேண்டும். 23

(ப—ரை) ஆதலினால் = தருக்கங்களுக்கு அவகாசமின்மை யினால், முமுட்சுக்கள் குதர்க்கம் அகன்று = முத்தியை விரும்பினவர்கள் கெட்ட தருக்கங்களைப் பரித்தியாகஞ்செய்து, ஓத்தை ஆசரித்தல் வேண்டும் = சுருதியைப் பற்றவேண்டும், [முமுக்ஷுவால் எப்படிப்பட்ட சுருதியின் பொருள் அநுசந்திக்கத்தக்கது எனிற் கூறுகின்றார்] இதே மாயை = இந்த மாயையானது, உயிர் இறையைசாதம்உற செய்தது = சீவேசுரர்களைப் பிறக்கும்படி செய்தது, சுருதிகளில் சீவேசுரர்களுக்கு மாயிகத்துவம் கூறப்பட்டதென்பது பொருள், நோக்கு ஆதிபிரவேச அந்தமும்ஆன சிருஷ்டி = ஈக்ஷணம் முதலாக தேகத்திற்புகுதல் பரி யந்தமான காரியம்,இறை தந்தது ஆம் = பரமேசுரனால் உண்டுபண்ணப் பட்டதாம், நனவு ஆதி அபவருக்க அந்த சமுசாரம் = சாக்கிரம் முதல் மோக்ஷபரியந்தமான சமுசாரம், சீவன் ஆக்கியது ஆம் = சீவனாற் சிருஷ்டிக்கப்பட்டதாம், கூடத்தன் அசங்கனே = பிரத்தியகான்மா எப் போதும் அசங்கமாம், இவனுக்கு = பிரத்தியகான்மாவிற்கு, ஓதுவியப்பு ஒன்றும்இலை = சொல்லாநின்ற உற்பத்தி முதலிய அதிசயம் அற்பமு மின்றாம், என்று உணர்த்தும் = என்று சுருதி போதிக்கும், அதனான் = அக்காரணத்தினால், உளத்தினில் = மனதில், இவ்ஒழுங்கு = கூறிய இந்த முறைமையை, அனிசம் சிந்தித்தல் வேண்டும் = எப்போதும் விசாரிக்கவேண்டும் எ—று.

கூடஸ்தனுக்கு அசங்கத்துவம் முதலியனவும் பிறப்பிறப்பு முதலியவடிவ வியவகாரக் கூட்டத்திற்கு அசத்துவமும் பிரதிபாதிக்கப் பட்டது. ஆகையால் முமுக்ஷுவானவன் இப்பொருளையெப்போதும் விசாரிக்கவேண்டும் என்பது கருத்து. 23

(அ—கை)

கூடஸ்தனுக்கு உற்பத்தி முதலிய வியப்பின்மையெதனாலறியப் படுகின்றது என்று சங்கித்து சுருதிவாக்கியத்தாலென்றபிப்பிராயப் பட்டு அவ்வாக்கியத்தைப் படிக்கின்றார்.

தோற்றமொடுக் கமுமில்லை பெத்தனுஞ்சா தகனுந்
துகளின்முமுட் சுவுமில்லை முத்தனுமின் றென்னு
மேற்றமுள விதுமெய்ம்மை யாமனவாக் குகளுக்
கெட்டரிய விதைச் சுருதி தெரித்திடுவா னென்று
மூற்றமுறச் சீவேச வுலகையுமா சரித்தே
யுணர்த்துமெது வெதுவாமன் னுயிர்க்குறுவிற் பத்தி
யாற்றலுறு பிரத்தியகான் மாவிலது வதுவே
யாமிங்கம் பிரக்கிரியை யென்றனர் தேசிகரே. 24

(ப—ரை) தோற்றம் ஒடுக்கமும்இல்லை = உத்பத்தியும் விநாசமு மின்ரும், பெத்தனும் சாதகனும் இல்லை = கருத்திருத்துவாதி பந்த முடையவனும் சிரவணுதியைச் செய்பவனும் இன்ரும், துகளில் முமுட் சுவும் இல்லை = குற்றமற்ற வீட்டை விரும்பினவனுமின்ரும், முத்தனும் இன்று = முத்தியையடைந்தவனுமில்லை, என்னும் ஏற்றம்உளஇது மெய்ம்மையாம் = என்னுமுயர்ந்த இந்த நிலையே பரமார்த்தமாம் [அப்படியானுல் சுருதிகளில் அவ்வவ்விடங்களில் சீவேசுராதி சொரு பத்தைப் பிரதிபாதித்தல் எதன்பொருட்டு என்ரு சங்கித்து வாக்கிற்கும் மனத்திற்கும் விஷயமில்லாத ஆன்மாவையறியும்பொருட்டெனக் கூறுகின்ருர்] மனவாக்குகளுக்கு எட்டரிய இதை = மனதிற்கும் வாக் கிற்கும் விஷயமாகாத இந்த ஆன்மாவை, சுருதி தெரித்திடுவான் = உபநிடதமானது உணர்த்தும்பொருட்டு, சீவஈச உலகையும் = பசுபதி பாசங்களையும், என்றும் = எப்போதும், ஊற்றம்உற ஆசரித்து = திடமாகப்பற்றி, உணர்த்தும் = ஆன்மாவைப்போதிப்பிக்கும், [ஏகவடிவ ஆன்ம தத்துவம் சுருதிகளால் போதிக்கப்படுமேல் சுருதிகளில் விரோதம் எதனுல் காணப்படுகின்றது என்ரு சங்கித்து தத்துவத்தில் விரோதமின்று மற்ருே அதனைப் போதிப்பிக்கும் பிரகாரத்திலாம் அதுவும் போதிக்கத் தகுந்த புருஷனது சித்த வைஷம்மியத்தையனு சரித்து சுரேசுராசாரியரால் சொல்லப்பட்டதெனக் கூறுகின்ருர்] எது எது = எந்த எந்தப் பிரக்கிரியை, உயிர்க்கு = புருடர்களுக்கு, பிரத்திய கான்மர்வில் = கூடஸ்த ஆன்மாவில், உறுவிற்பத்தி ஆற்றல் உறும் = திடஞானத்தையுண்டுபண்ணுமோ, அது அதுவே = அந்த அந்தப் பிரக்கிரியையே, இங்கு = வேதாந்த சாஸ்திரத்தில், அம்பிரக்கிரியை என்றனர் தேசிகர் = நல்ல பிரக்கிரியையாம் என்று கூறினர் சுரேசுரா சாரியார் எ—று.

ஆன்மாவில் என்பது விஷய சப்தமியாம், பிரக்கிரியையென்பது ஏக ஜீவவாதம் நாஞஜீவவாதம் ஆபாசவாதம் அவச்சேதவாதம் திருஷ்டி சிருஷ்டிவாதம் சிருஷ்டி திருஷ்டிவாதம் முதலியவற்றைப் பிரதிபாதிக்கும் பிரகரண கிரந்தங்களையாம், எந்தப்பிரகரணக் கிரந் தத்தால் எவ்வதிகாரிக்கு நன்குபோதமுண்டாகுமோ அந்தப்பிரகரண கிரந்தம் அவ்வதிகாரியைக் குறித்து நலமுடையதாமென்பது பொருள்.



மன்—அசைச்சொல்.

(அ—கை)

சுருதியின் பொருளொரேவிதமாயின் அதனைப் பிரதிபாதிப்பவருக்குத்தான் எதனால் விவாதமுண்டாகின்றது என்று சங்கித்துச் சுருதியின் தாற்பரிய ஞானமில்லாதவருக்கே விப்பிரதிபத்தியாம். அதன் தாற்பரிய ஞானமுடையவருக்கின்றுமெனக் கூறுகின்றார்.

சுருதிகளின் கருத்தொன்றுந் தெரியாது மூடர்
சுழலுவரெல் லாந்தெரிந்து சீரியரா னந்த
வருணவந்தோய்ந் துறச்சுகிப்பர் மாயைக்கார் ஞால
வப்பினைவேண் டியவாறு சொரிந்திடினு ஞான
விருவிசும்பிற் கிழிவுண்டோ பேறுதா னுண்டோ
வென்பதுநன் னிலைபேரு மியாவனிரந் தரமித்
திருவளர்கூ டத்ததீ பத்தைநா டுறுமச்
சீரியன்றான் கூடத்த வடிவாகித் திகழ்வான். 25

(ப—ரை) சுருதிகளின் கருத்து ஒன்றும் தெரியாது=உபநிடதங்களின் தாற்பரியத்தையற்பமுமறியாமல், மூடர் சுழலுவர்= அவிவேகிகள் அலைவார்கள், சீரியர் = விவேகிகளோ, எல்லாம் தெரிந்து=சுருதிகளின் தாற்பரியமனைத்தையுமறிந்து, ஆனந்த அருணவம் தோய்ந்து=இன்பக்கடலில் மூழ்கி, உறசுகிப்பர்=மிக ஆனந்தமாயிருப்பர், [அப்படியானால் விவேகிகளின் நிச்சயம் எப்படிப்பட்டதென்னுமிச்சையுண்டாகக் கூறுகின்றார்] மாயைக்கார்=மாயையாகிய மேகமானது, ஞால அப்பினை=பிரபஞ்சமாகிய ஜலத்தை, வேண்டியவாறு சொரிந்திடினும் = தன்னிச்சைப்படி பொழியினும், இருஞானவிசும்பிற்கு=பெரியசிதாகாசத்திற்கு, இழிவுஉண்டோ=குறைவு ஏது, பேறுதான்உண்டோ = இலாபமேது, என்பது நல்நிலை பேரும் = என்கின்றது நல்ல ஸ்திதியினடைவாம் அதாவது ஞானிகளது நிச்சயமாம், [கிரந்தாப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார்] யாவன் = எவ்வதிகாரி, நிரந்தரம் = இடைவிடாமல், இத்திருவளர் கூடத்த தீபத்தை = ஞானச்செல்வம் நிறைந்துள்ள இந்தக் கூடஸ்த தீபமென்னும் பிரகரணத்தை, நாடுறும் = அநுசந்தானம் செய்வனோ, அச்சீரியன் = அந்த அறிஞன், கூடத்த வடிவாகித் திகழ்வான்= எப்போதும் கூடஸ்த சொரூபமாகவே விளங்குவான். 25

எட்டாவது கூடஸ்த தீபம் முற்றிற்று.

ஆகக்கவி 502

உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## ஒன்பதாவது பிரகரணம்.

## *தியான தீபம்.

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ்கரித்து தியான தீபத்தின் வியாக்கியானம் சுருக்கமாக என்னால் செய்யப்படுகிறது.

(அ—கை)

ஈண்டு வேதாந்த சாஸ்திரத்தில் நித்தியாநித்திய வஸ்து விவேகம் முதலிய சாதன சதுஷ்டய சம்பன்னனும் நன்ருய் சிரவண மனன நிதித்தியாசனங்களை அநுஷ்டிப்பவனுமாகிய புருஷனுக்கு தற்பதார்த்த தொம்பதார்த்தங்களின் விவேசன பூருவகம் மகாவாக்கியார்த்தத்தின் அபரோக்ஷ ஞானத்தால் பிரம்ம பாவ வடிவ மோக்ஷம் உண்டாகிறதென்று தத்துவ விவேகத்திலும் திருப்தி தீபத்திலும் பிரதிபாதிக்கப்பட்டது. அதில் உபநிடத சிரவணஞ் செய்தவனுக்கும் புத்தியின் மந்தத்தன்மை முதலிய யாதானுமோர் பிரதிபந்தத்தால் வாக்கியார்த்த விஷயக அபரோக்ஷ ஞானமுண்டாகாதபோது அபரோக்ஷ ஞானத்தினுற்பத்தி வாயிலாக மோக்ஷபலனையுடைய உபாசனைகளைத் தெரிவிக்க இச்சையுடையவராய் முதலில் திருஷ்டாந்த சகிதம் பிரம்ம தந்துவத்தின் உபாசனையாலும் மோக்ஷமுண்டாகிறது எனப் பிரதிஞ்ஞை செய்கின்ருர்.

---

* தியானத்தினைப் பிரகாசிப்பித்தலால் இப்பிரகரணம் தியான தீபம் எனப்படும்.

பேறுதவும் சம்வாதிப் பிரமை போலப்
பிரமதத் துவத்தினுபா சனையால் வீடா
மூறுபடா வதனலுத் தரதாப னீய முபாச
னையைப் பலவிதமா வோதா நிற்கும்
வீறுசெறி மணிதீபப் பிரபை யூடு மின்னும
ணிப் புத்திதனற் ருவு வோர்க்கு
வேறுபா டிலைமித்தை ஞானத் தேனும்
வேற்றுமைதா னுளதுபொருட் கிரியை மீதே. 1

(ப—ரை) பேறு உதவும் சம்வாதிப் பிரமைபோல=பலனைக் கொடுக்கும் சம்வாதிப் பிராந்தி போன்று, பிரமதத்துவத்தின் உபாசனையால் வீடு ஆம்=பரப்பிரமத்தினுபாசனையால் மோக்ஷம் உண்டாம், எப்படி சம்வாதிப் பிராந்தியால் பிரவிருத்தித்த புருஷனுக்கு கருதப் பட்ட பொருளினடைவு உண்டாகிறதோ அப்படி பிரம்மத்தினுபாசனை யாலும் வாஞ்சித்த பிரம்மபாவ வடிவ மோக்ஷமுண்டாகிறதென்பது பொருள் [பிரமத்தினுபாசனையாலும் மோக்ஷமுண்டாமென்பதில் பிரமாணமென்னையெனிற் கூறுகின்ருர்] அதனல்=அக்காரணத்தினுல் அதாவது உபாசனையால் மோக்ஷமுண்டாவதால், ஊறுபடா உத்தர தாபனீயம்=தீமையில்லாத உத்தரதாபனீயமென்னுமுபநிடதமானது, உபாசனையை = பிரமத்தினுபாசனைகளை, பலவிதமா ஓதா நிற்கும் = அநேகப் பிரகாரமாகக் கூறுகின்றது, அதாவது விஜாதீய விருத்தியின் வியவதானமின்றிய சஜாதீய விருத்தியின் பிரவாகம் உபாசனை எனப் படும். அது சகுணம் நிர்க்குணம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம். அவை ஒவ்வொன்றும் பிரதீக வடிவம் தியேயானுசாரம் என்னும் பேதத்தால் இருவகையாம். ஓர்வஸ்துவில் பிறிதொன்றன் புத்தி பிரதீக வடிவ உபாசனையாம். அஃது சாலிக்கிராமத்தில் விஷ்ணு புத்தியும் நர்ம தேசுவர பாணத்தில் சங்கர புத்தியும் சுரநோயால் என்னும் நான்கா வது செய்யுளில் சொல்லப்படுகிற ஸ்திரீ முதலியவற்றில் அக்கினி புத்தியும் ஆம். உபாசிய வஸ்துவின் எதார்த்த சொருபத்தைச் சிந்தித்தல் தியேயானுசாரமான உபாசனையாம். அஃது நிர்க்குணப் பிரமத்தின் அகங்கிரக வடிவ உபாசனையும் சாஸ்திரத்தில் நிச்சயிக்கப் பட்ட ஈஸ்வரனது சொரூபத்தின் தியானமும் தியேயானுசாரமான உபாசனைகளாம். இந்த தியான தீபத்தில் முமுக்ஷுக்களுக்கு உபயோக மாயுள்ள நிர்க்குணப் பிரம்மத்தின் உபாசனை வெளிப்படையாய்

இருக்கின்றது, [சம்வாதிப்பிரமை போல என்று சொல்லப்பட்டதை விஸ்தரிப்பதற்காக சம்வாதிப் பிராந்தியைப் பிரதிபாதிக்கும் வார்த்திகத்தைப் படிக்கின்றார்] விறு செறி=பெருமைபொருந்திய, மணிதீபப் பிரபையூடு = இரத்தினத்தின் பிரகாசத்திலும் விளக்கின் பிரகாசத்திலும், மின்னும் மணி புத்தி தன்னால் = பிரகாசிக்கின்ற இரத்தினம் என்னும் ஞானத்தால், தாவுவோர்க்கு = இரத்தினத்தை எடுக்க ஓடுகின்றவர்களுக்கு, மித்தை ஞானத்து வேறுபாடு இலேயேனும்= (சுத்தியிலிரஜத ஞானம் போன்று ஒன்றில் மற்றொன்றைக் கிரகிக்கும்) பொய்ப்புத்தி சமானமாயினும், பொருட்கிரியை மீது=அருத்தக் கிரியையில், வேற்றுமை உளது=விசேஷமுண்டு எ—று.

மணியின் ஒளியில் மணி ஞானம் பொருட்கிரியையைச் செய்வதாய் மணிஞானத்தாலோடுகின்ற புருஷனுக்கு மணியினடைவிற்கேதுவாகிறது. தீபத்தினொளியில் மணிஞானத்தால் ஓடுகின்றவனுக்கின்றாம். ஆதலின் அருத்தக்கிரியையில் வைஷம்மியம் உளது என்பது பொருள். 1

தான், ஏ—அசை.

(அ—கை)

வார்த்திகத்தை வியாக்கியானம் செய்கின்றார்.

கிரகமத னுள்ளுறையுந் தீபந் தன்பாற்
கிளரொளிசா ளரவெளியிற் றோன்று மாபோற்
றிரமணியி னொளிதோன்றும் புறத்தி ரண்டுஞ்
சேய்மையிற்கண் டிதுமணியென் றோடா நிற்கு
மிருவருக்கு மொளியின்மணிப் புத்தி மித்தை
யெனுஞான மாந்தீப வொளிகண் டோடும்
புருடன்மணி தனைச்சேரான் மணியே சேர்வன்
பொருக்கெனவே மணியொளிகண் டோடு வோனே. 2

(ப—ரை) தீபம் கிரகமதன் உள் உறையும் = விளக்கு ஒரு வீட்டினுள் இருக்கின்றது, தன்பால் கிளர் ஒளி = அத்தீபத்தில் விளங்காநின்ற பிரகாசமானது, சாளரவெளியில் தோன்றுமாபோல்= சன்னல் வாயிலாகப் புறத்துக் காணப்படுவது போன்று, புறத்து= வேறோரிடத்தில், திரமணியின் ஒளி தோன்றும் = வலிமையான இரத்

தினத்தின் பிரகாசம் பிரதீதியாகும், ஒருவீட்டிலறைக்குள் இருக்கின்ற விளக்கினொளி வெளியில் துவாரப் பிரதேசத்தில் இரத்தினம்போன்று வட்டமாகத் தோற்றுகின்றது. அப்படியே வேறு வீட்டிலறைக்குள் இருக்கின்ற இரத்தினத்தினொளி துவாரப் பிரதேசத்தில் தீபப் பிரபை போன்று இரத்தின சமானமாகத் தோற்றுகிறது, இரண்டும் = அப்படிப்பட்ட ஒளிகளிரண்டையும், சேய்மையில் கண்டு = தூரத்திலிருந்து பார்த்து, இது மணி என்று ஓடாநிற்கும் இருவருக்கும் = இது இரத்தினம் இது இரத்தினம் என்னும் புத்தியால் ஓடுகின்ற இரண்டு புருஷர்களுக்கும், ஒளியில் மணிப்புத்தி = பிரபையில் இரத்தினமென்னும் ஞானம், மித்தை எனும் ஞானமாம் = பொய்யாகிய போதமாம், அப்படியாயினும், தீபஒளி கண்டு ஓடும் புருடன் = விளக்கின் வெளிச்சத்தை மணியாகப் பார்த்து அதைக்குறித்து ஓடுகின்ற மனிதன், மணிதனைச் சேரான் = இரத்தினத்தையடையான், மணி ஒளிகண்டு பொருக்கென ஓடுவோன் = இரத்தினப்பிரபையை இரத்தினமாகப் பார்த்து வேகமாக ஓடுகின்ற புருஷன், மணி சேர்வன் = இரத்தினத்தை அடைவான் எ—று.

ஏ—அசை. 2

(அ—கை)

வார்த்திகத்தின் பொருள் இவ்வாறிருக்குக பிரகிருதத்தில் வந்ததென்னையெனிற் கூறுகின்றார்.

விளக்கொளிக்கண் தோன்றுமணி மயலை மேலோர்
விசம்வாதிப் பிரமையென்பர் மணித்தே சூடு
துளக்கமுறு மணிமயல்சம் வாதி மாலாந்
தூமமெனப் பனியினைக்கண் டங்கு வன்னி
யளத்தலினு லங்கிதெய்வ கதியாற் பேரு
மதுவதுகோ தாவரிநீர் கங்கை நீரென்
றுளத்துளெணிச் சுத்திபெறத் தெளித்துச் சுத்தி
யுற்றிடுதல் சம்வாதிப் பிரமை யாமே. 3

(ப—ரை) விளக்கு ஒளிக்கண் தோன்றும் மணிமயலை = தீபப் பிரபையிலுண்டாகும் 'மணியென்னும் பிராந்தியை, மேலோர் = பெரியோர்கள், விசம்வாதிப் பிரமை என்பர் = விசம்வாதிப் பிராந்தியென்று

சொல்லுவார்கள், (மணியின் பிராப்திவடிவ அருத்தக்கிரியையின்மை யால்) மணித்தேசு ஊடு = இரத்தினத்தின் பிரபையில், துளக்கம் உறு மணி மயல் = தூய்மையினையுடைய இரத்தினமென்னும் பிராந்தி, சம்வாதிமால் ஆம் = (மணியின் பிராப்திவடிவ அருத்தக்கிரியையுடை மையால்) சம்வாதிப் பிராந்தியாம், [இவ்வாறு பிரத்தியக்ஷ விஷயத்தில் சம்வாதிப் பிராந்தியைத் தெரிவித்து அநுமான விஷயத்திலும் அச் சம்வாதிப் பிராந்தியினைத் தெரிவிக்கின்றார்] பனியினைத் தூமம் எனக் கண்டு = ஓரிடத்தில் இருக்கும் பாஷ்பத்தை புகையாக நிச்சயித்து, அங்கு = அதன் மூலப்பிரதேசத்தில், வன்னிஅளத்தலினால் = (இந்தப் பிரதேசம் வன்னியுடையது, புகையுடைமையால் அடுக்களை போன்று என்று) அக்கினியை அநுமானஞ் செய்தலால் (பிரவிருத்தித்த புருஷ னுக்கு) தெய்வ கதியால் அங்கி பேறு ஆம் = அதிருஷ்டவசத்தால் அக்கினியினடைவு உண்டாகுமேல், அது = பாஷ்பத்தில் தூமமென் னும் அந்த அநுமான ஞானம், அது = சம்வாதிப் பிராந்தியாம், [ஆகம விஷயத்திலும் அச்சம்வாதிப் பிராந்தியினைக் காட்டுகின்றார்] கோதாவரி நீர் கங்கை நீர் என்று உளத்துள் எணி = கோதாவரி நதியின் ஜலத்தை கங்கையின் ஜலமாக மனதில் நினைத்து, சுத்திபெற தெளித்து = தூய்மையடையும்பொருட்டு தேகத்தில் புரோக்ஷித்து, சுத்தி உற்றிடுதல் = தூய்மையடைதலினால், சம்வாதிப் பிரமையாம் = கோதாவரி நீரில் கங்கை நீரென்னும் ஞானம், சம்வாதிப் பிராந்தியாம் எ—று.

கோதாவரி ஜலத்திற்கும் விசுத்தி காரணத்துவம் ஆகமத்தால் சித்தமானதால் அதன் புரோக்ஷணத்தாலும் தூய்மையுண்டாகின்றதே யாம். அப்படியானாலும் கோதாவரி நீரில் கங்கை நீரென்னும் ஞானம் பிராந்தியேயாம். 3

(அ—கை)

வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

சுரநோயாற் சன்னிபா தங்கொண் டுள்ளான்
றுனுமயக்கத் தானரா யணனை யுன்னி
மரியாநின் றுடன்றுறக்க முறல்சம் வாதி
மயலாகுங் காட்சியனு மான நூலாற்
றெரிவாகப் புகன்முறை சம்வாதி மையற்
செறிவனமட் டின்றன்றேன் மண்டா ருக்கற்
பரமேச ராந்தரமோ மகளிர் முன்னோர்
பாவகனு தியமதியாற் பணித லெங்கே. 4

(ப—ரை) சுரநோயால் சன்னி பாதம் கொண்டுள்ளான்= காய்ச்சல் வியாதியினுல் ஜன்னியையடைந்த புருஷன், துனுமயக்கத் தால்=(இந்த நாராயண ஸ்மரணம் எனக்கு சொர்க்கசாதனம் என்னும் ஞானமின்றியும் சன்னிபாதத்தால்) பொருந்தாநின்ற பிராந்தி வசத் தால், நாராயணனை உன்னி=(சாதாரண புருஷனுக சிசுபாலன் முதலியோரைப் போன்று) நாராயணனை நினைத்து, மரியாநின்று= இறந்து,உடன் துறக்கம் உறல்=சீக்கிரம் சொர்க்கத்தை அடைதலின். சம்வாதி மயலாகும்=சம்வாதிப் பிராந்தியாம், தீயோராலும் நினைக்கப் பட்ட அரியானவர் பாவங்களை நாசம் பண்ணுகிருர், பாவியாகிய அஜாமளனும் புத்திரனை நாராயணு என்று கூப்பிட்டு இறந்து முத்தியை அடைந்தான் என்பது முதலிய புராண வசனங்களால் பிராந்தி ஞானம் உத்தம லோகத்தின் அடைவிற்குச் சாதனமாதல் அறியப்படுகின்றது. ஈண்டும் நாராயண நாமத்தில் புத்திர நாமத்துவ ஞானம் பிராந்தியேயாம். [இவ்வாறு மூன்றுவித சம்வாதிப் பிராந்தி களைச் சொன்னதால் சித்தித்த பொருளைக் கூறுகின்றுர்] காக்ஷி அனுமான நூலால்=பிரத்தியட்ச அனுமான ஆகமங்களால், தெரிவு ஆக=தெரிவிக்கப்பட்ட விஷயங்களில்; புகல்முறை=கூறிய நியாயத் தால், செறிவன சம்வாதி மையல்=பொருந்துவனவாகிய சம்வாதிப் பிராந்திகளுக்கு, மட்டு இன்று=அளவு இல்லையாம், [சம்வாதிப் பிராந்தியினையங்கீகரியாமை வடிவ விபட்சத்தில் பாதகத்தைக் காட்ட லால் கூறிய பொருளைத் திடம் செய்கின்ருர்] அன்றேல்=சம்வாதிப் பிராந்தி இல்லையாயின், மண் தாருகல்=மிருத்திகை மரம் சிலை இவை கள், பரமேஸராம் தரமோ=எப்படி தேவதைகள் ஆவார்கள், பலசித்தி யின்பொருட்டு தேவதையாக பூஜிக்கத்தக்கவராகார், சுயமாகத் தேவத் தன்மையின்மையினுல் சம்வாதிப் பிராந்தியினுலேயே தேவத்தன்மை

உண்மையின் என்பது பொருள். [வேறு பாதகத்தைக் கூறுகின்ருர்] மகளிர் முன்னோர் = ஸ்திரீ முதலானவர்களை, பாவகன் ஆதியமதி யால் = அக்கினி முதலிய புத்தியால், பணிதல் எங்கே = உபாசிப்பது எப்படி எ—று.

சம்வாதிப்பிராந்தியினையங்கீகரியாவிடின் பஞ்சாக்கினி வித்தை யில் கௌதம ஸ்திரீ அக்கினி, கௌதம புருஷன் அக்கினி, பிருதிவி கௌதம அக்கினி, மேகம் கௌதம அக்கினி, சுவர்க்கலோகம் கௌதம அக்கினி என்பது முதலிய வாக்கியங்களால் ஸ்திரீ புருஷன் பிருதிவி மேகம் சொர்க்கலோகம் ஆகிய இவைகளை அக்கினியாகவும் வீரியம் அன்னம் மழை சந்திரன் சிரத்தையாகிய இவைகளை ஆகுதி யாகவும் உபாசித்தல் பிரமலோகப் பிராப்தியின் காரணமாதல் பொருந்தாமற்போம், ஆதிபதத்தால் "மனம் பிரம்மமாமென்று உபாசிக் குக; ஆதித்தியன் பிரம்மமென்று உபாசிக்குக" என்பது முதலியவை கொள்ளத்தக்கனவாம். 4

(அ—கை)

இப்போது அநேக கிரந்தங்களால் பிரதிபாதிக்கப்பட்ட சம்வாதிப் பிராந்தியை ஞான சௌகரியத்தின் பொருட்டு சுருக்கித் தெரிவிக்கின்ருர்.

கற்பிதவத் துவினுணர்வா லிட்டமாம் பலந்தான்
காகதா லீயமுறை யுறுமது சம்வாதி
நற்பிரமை யாமிதுதான் மயலா மேனு
நற்பயனல் குதல்போலப் பிரம ரூப
வற்புதமா முபாசனையு முத்தி பேற்றை
யருளுவதா மகண்டவொரு சுவையே யாகிப்
பொற்புறுமெய்ப் பொருளைமறை முடிவாற் றேர்ந்திப்
பொருளுனு மென்னவுபா சிக்க லாமே. 5

(ப—ரை) கற்பிதவத்துவின் உணர்வால் = (விதிக்கப்பட்டதா யினும் விதிக்கப்படாததாயினும்) எந்த பொய்ப் பொருளின் விஞ்ஞானத் தால், இட்டம்ஆம்பலம் = விருப்பத்திற்கு விஷயமாகியபயன், காகதாலீய முறை = காகதாலீய நியாயத்தால் அதாவது தெய்வ கதியால், உறும் = அடையப்படுமோ, அது = அந்த உணர்வு, சம்வாதி = சம்வாதிப் பிராந்தியென்று சொல்லப்படுகின்றது, [அற்றேல் பொய்ப்பொருளை

விஷயமாகவுடைய பிரம்மத்தினுபாசனைக்கு நன்ஞானத்தால் சாதிக்கத் தகுந்த மோக்ஷ வடிவ பயனைக் கொடுக்குந்தன்மையெப்படியென்று சங்கித்து சம்வாதிப் பிராந்தி போன்றே பிரமத்தினுபாசனையும் பயனைத் தருமெனச் கூறுகின்றார்] நல்பிரமையாம் இது=சம்வாதியாகிய இது, தான் மயலாமேனும்=சுயம்பிராந்தியாயினும், நல் பயன் நல்குதல் போல=நல்ல பலனைக் கொடுப்பதுபோல, பிரமரூப அற்புதமாம் உபாசனையும்=பிரம தத்துவத்தின் சிறந்த உபாசனையும், முத்தி பேற்றை அருளுவதாம்=மோக்ஷமாகிய பயனைக் கொடுப்பதாம், [அற்றேல் பிரமதத்துவமறிந்து உபாசனை செய்யப்படுகிறதா அறியாமல் செய்யப்படுகிறதா? முதற்பக்ஷத்தில் உபாசனை வியர்த்தமாம். மோக்ஷசாதனமான ஞானமிருத்தலால் இரண்டாவது பக்ஷத்தில் விஷயத்தையறியாமையால் உபாசனையே பொருந்தாதென்று சங்கித்துக் கூறுகின்றார்] அகண்ட ஒரு சுவையே ஆகி=அகண்டை கரசமாய், பொற்பு உறும் மெய்ப்பொருளை=பெருமை பொருந்திய பிரமதத்துவத்தை, மறைமுடிவால் தேர்ந்து=வேதாந்தங்களால் பரோக்ஷமாய் அறிந்து, இப்பொருள் நான் என்ன உபாசிக்கலாம் = இப்பிரமம் யானுகின்றேனென்று உபாசனை செய்யலாம் எ—று.

தான், ஏ—அசை நிலைகள்.

அபிப்பிராயமிதுவாம்:— பிரம்ம ஆன்மாக்களின் அபேத விஷயக மோக்ஷசாதன அபரோக்ஷ ஞானம் உற்பன்னமாகாமையால் உபாசனை வியர்த்தமன்று. சாஸ்திரத்தால் பரோக்ஷமாக அறிந்தபடியால் பிரம்மம் உபாசனைக்கு விஷயமாம். 5

(அ—கை)

உபாசிக்கத்தக்க பிரம்மதத்துவ விஷயக பரோக்ஷ ஞானத்திற்கு யாது சொரூபம் என்றிச்சையுண்டாகக் கூறுகின்றார்.

பிரத்தியக்கா முருவையுண ராது நூலாற்
  பிரமமுள தெனப்பொதுவாம் போத மிங்கு
வரத்திருமான் முதலுருப்போற் பரோக்க ஞான
  மருவுசதுர்ப் புயமாதி வயங்கு மேனுந்
திருக்குகளா லுருவுணரான் பரோக்க ஞானி
  திருமாலக் காற்றெரியான் பரோக்கத் தீங்காற்
கிருத்திம வேதனமாகா வளவை நூலாற்
  கிளர்தருமெய் யுருவமிலங் குதலி னன்றே. 6

(ப—ரை) பிரத்தியக்கு ஆம் உருவை உணராது=புத்தியாதி யின் சாக்ஷியாகிய ஆனந்த வடிவ ஆன்மாவை விஷயஞ்செய்யாது, நூலால்=சத்தியம் ஞானம் முதலிய வாக்கியக்கூட்டத்தால், பிரமம் உளது என பொதுவாம் போதம் = பிரமமிருக்கின்றதென்று சாமான்னியமாகவுண்டாகும் ஞானம், இங்கு=இந்த உபாசனையில், வரதிருமால் முதல் உருப்போல்=சிறந்த விஷ்ணுவாதி மூர்த்திகளைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரஜன்னிய ஞானம் போன்று, மருவுபரோக்க ஞானம்=பொருந்தாநின்ற பரோக்ஷ போதமாம், [அற்றேல் சாஸ்திரத்தால் விஷ்ணுவாதி மூர்த்தியில் சதுர்ப்புஜத்துவம் முதலிய விசேஷம் பிரதீதியாவதால் அதன் ஞானத்திற்கும் எதனால் பரோக்ஷத்துவம் என்று சங்கித்துக் கூறுகின்றார்] சதுர்ப்புயம் ஆதிவயங்குமேனும்= நூலால் நான்கு கை முதலிய விசேஷம் விளங்குமாயினும், அறியப் படினுமென்பது பொருள், திருக்குகளால் = கண்களால், உருவு உணரான்=விஷ்ணுவாதி மூர்த்தியை விஷயஞ் செய்யாத புருஷன், பரோக்கஞானி=பரோக்ஷ ஞானியேயாவன், [அதில் யுத்தியைக் கூறுகின்றார்] அக்கால்=உபாசனை காலத்தில், திருமால்=உபாசிக்கப் படுகின்ற விஷ்ணுமூர்த்தியை, தெரியான் = கண்களால் பாரான், இந்திரியங்களால் விஷயஞ் செய்யானென்பது பொருள், [அற்றேல் விஷ்ணுவாதியை விஷயஞ் செய்யும் ஞானத்திற்கு வியக்தியை விஷயஞ் செய்யுந்தன்மையின்மையால் பிராந்தித்துவமாமென்று சங்கித்து பிரமாணத்தாற் செனித்தபடியால் பிராந்தித்துவமன்றெனக் கூறுகின்றார்] பரோக்க தீங்கால் = பரோக்ஷத்தன்மையாகிய அபராதத்தால், கிருத்திமவேதனம் ஆகா=பொய்ஞானம் ஆகா, அளவை கிளர்தரு நூலால்=பரமப் பிரமாணமாக விளங்காநின்ற சாஸ்திரத்தால், மெய் உருவம் இலங்குதலின்=விஷ்ணுவாதிசத்துவ மூர்த்தி விளங்குதலின், பரோக்ஷ ஞானத்துவம் பிராந்தி ஞானத்துவத்திற் காரணமன்று, மற்றோ விஷயத்தின் அசத்தியத்துவம் பிராந்தி ஞானத்துவத்திற் காரணமாம். ஈண்டோ பிரமாணமாயுள்ள சாஸ்திரத்தாலேயே உண்மையான விஷ்ணுவாதி மூர்த்தி விளங்குதலின் பரோக்ஷ ஞானம் பிராந்தி அன்றென்பது பொருள் எ—று.

அன்று, ஏ—அசைகள். 6

(அ—கை)

அற்றேல் சாஸ்திரத்தாற் செனித்ததும் சச்சிதானந்த வடிவத்தை விஷயுஞ் செய்வதுமாகிய பிரமதத்துவ ஞானத்திற்கு

எதனுற் பரோக்ஷத்தன்மையென்று சங்கித்து அபரோக்ஷத்தன்மையின் காரணமான பிரத்தியக்கு வடிவத்தை விஷயஞ் செய்யாமையாலெனக் கூறுகின்றார்.

உண்மையறி வானந்த வுருவ நூலா
லொளிர்தரினும் பிரத்தியக்காங் கரியைத் தேரான்
றிண்மைபெற வப்பரத்தைத் தேரா னந்தச்
சேதனந்தான் பரோக்கமா மெனினு நூலான்
வண்மைதிக ழின்பவுருத் தெரித்த லாலே
வாய்மை யறிவலது மயலன்று மெய்ந்நூ
னுண்மைமகா வாக்கியத்தாற் பரந் தானென்றே
நுவலினுமீ தேழையர்க்கோர் வுறவொண் ணுதே. 7

(ப—ரை) நூலால்="சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம்" "நித்தியம் சுத்தம் புத்தம் சத்தியம் முத்தம் நிரஞ்சனம்" என்பது முதலிய சாஸ்திரத்தால், உண்மை அறிவு ஆனந்த உருவம் ஒளிர்தரினும்=சச்சிதானந்த வடிவப் பிரம்மம் விளங்கினும், பிரத்தியக்கு ஆம் கரியைத் தேரான்=அந்தப் பிரம்மத்தின் பிரத்தியக்கான்ம ரூபத்தை அறியாதவன், திண்மைபெற = திடமாக, அதாவது சாக்ஷாத்தாக, அப்பரத்தைத் தேரான்=அந்தப் பிரமத்தைப் பாரான், [அப்படியானுல் அப்படிப்பட்ட பிரம்ம விஷயக ஞானத்திற்குத் தத்துவ ஞானத்தன்மை எப்படியென்று சங்கித்து ஆகமப் பிரமாண ஜன்னியமாவதாலெனக் கூறுகின்றார்] அந்தச் சேதனம்=அந்த ஞானம், பரோக்கமாம் எனினும் = பரோக்ஷமாயினும், நூலால் = சாஸ்திரத்திற் கூறிய பிரகாரத்தாலேயே, வண்மை திகழ் இன்ப உரு தெரித்தலால்= சச்சிதானந்த வடிவத்தை நிச்சயஞ் செய்வதால், வாய்மை அறிவு அலது மயல் அன்றும்=எதார்த்த ஞானமேயன்றி பிராந்தி ஞானம் அன்றும், [அற்றேல் சத்திய ஞானுதி வாக்கியங்களால் பிரமத்தின் சச்சிதானந்த ரூபத்துவம் போன்று தத்துவமசியாதி வாக்கியங்களால் அதன் பிரத்தியக்கு ரூபத்துவமும் அறியப்படுகின்றதேயாகையால் சாஸ்திரஜன்னிய ஞானத்திற்கும் பிரத்தியக்கு வியக்தியை விஷயஞ் செய்யுந்தன்மையுண்மையால் அபரோக்ஷமேயாமென்று சங்கித்துக் கூறுகின்றார்] மெய்ந்நூல் நுண்மை மகாவாக்கியத்தால்=வேதாந்த சாஸ்திரங்களில் சூக்ஷுமமான தத்துவமசி முதலிய மகாவாக்கியங்க

ளால், பரம்தான் என்றே நுவலினும்=பிரம்மம் பிரத்தியக்கான்மாவாக உபதேசிக்கப்படினும், ஈது=பிரத்தியக்கு வடிவம், ஏழையர்க்கு = அறிவிலிகட்கு, அதாவது உடன்பாடெதிர்மறைகளால் தத்துவம் பதார்த்தங்களின் விசாரமின்றியவருக்கு, ஓர்வு உற ஒண்ணுது= அறிய முடியாது. ஆகையால் கேவல வாக்கியத்தால் அபரோக்ஷ ஞானமுற்பத்தியாகிறதில்லையென்பது பொருள் எ—று.

தான், ஏ—அசைநிலைகள்.

அறிதற்கரிய நுட்பமான பிரமத்தைப் போதிப்பித்தலால் நுண்மை என்று மகாவாக்கியத்திற்கு விசேஷணங் கொடுத்தார். 7

(அ—கை)

உண்மை ஞானம் பிரமாண பிரமேயங்களின் அதீனமாவதானும் தத்துவமசி முதலிய வாக்கிய வடிவ பிரமாணமுமிருத்தலானும் சீவப் பிரமங்களினைக்கிய வடிவ பிரமேயமுமிருத்தலானும் விசாரமின்றி ஏனறியமுடியாது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

உடன்முதனு னெனும்பிரமை விழித்து நிற்ப
வோங்கறிவற் றுப்புருடன் பரநா னென்றே
யடமதினோர் வுறவலனே நேராந் தொய்த
வறிவதுநே ராவொருமை மதிநா றுதாற்
றிடமுறநா லோர்ந்தன்புற் றவர்க்குச் சத்தே
தெரிபடுநே ராஞ்சிலைப்போ தம்ப'ரோக்கக்
கடவுண்மதி தனைநூருப் பிரதி மாதி
களிற்றிருமா லென்பதிலா ரையுற் றுரே. 8

(ப—ரை) உடல் முதல் நான் எனும் பிரமை=தேகாதிகளில் ஆன்மத்தன்மைப் பிராந்தி, விழித்து நிற்ப = ஜாக்கிரதையாயிருக்க, ஓங்கு அறிவு அற்று=உயர்ந்த புத்தியில்லாமல், மந்த புத்தியையுடைய தாந்தன்மையால், புருடன்=ஆடவன், அடமதின்=பலாற்காரத்தால், பரம் நான் என்றே = பிரம்மமே பிரத்தியகான்மாவென்று, ஓர்வு உறவலனே=அறிய சமர்த்தனுவனே, ஆகான், சீவப்பிரமங்களின் அபேத விஷயக அபரோக்ஷ ஞானத்தின் விரோதியும் விசாரத்தால் நிவர்த்திக்கத்தக்கதுமாகிய தேகாதிகளில் நான் என்னும் பிராந்தி

எதனாற் பரோக்ஷத்தன்மையென்று சங்கித்து அபரோக்ஷத்தன்மையின் காரணமான பிரத்தியக்கு வடிவத்தைத விஷயஞ் செய்யாமையாலெனக் கூறுகின்றார்.

உண்மையறி வானந்த வுருவ நூலா
லொளிர்தரினும் பிரத்தியக்காங் கரியைத் தேரான்
றிண்மைபெற வப்பரத்தைத் தேரா னந்தச்
சேதனந்தான் பரோக்கமா மெனினு நூலான்
வண்மைதிக ழின்பவுருத் தெரித்த லாலே
வாய்மை யறிவலது மயலன்று மெய்ந்நூ
னுண்மைமகா வாக்கியத்தாற் பரந் தானென்றே
நுவலினுமீ தேழையர்க்கோர் வுறவொண் ணாதே. 7

(ப—ரை) நூலால்="சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம்" "நித்தியம் சுத்தம் புத்தம் சத்தியம் முத்தம் நிரஞ்சனம்" என்பது முதலிய சாஸ்திரத்தால், உண்மை அறிவு ஆனந்த உருவம் ஒளிர்தரினும்=சச்சிதானந்த வடிவப் பிரம்மம் விளங்கினும், பிரத்தியக்கு ஆம் கரியைத் தேரான்=அந்தப் பிரம்மத்தின் பிரத்தியக்கான்ம ரூபத்தை அறியாதவன், திண்மைபெற = திடமாக, அதாவது சாக்ஷாத்தாக, அப்பரத்தைத் தேரான்=அந்தப் பிரமத்தைப் பாரான், [அப்படியானால் அப்படிப்பட்ட பிரம்ம விஷயக ஞானத்திற்குத் தத்துவ ஞானத்தன்மை எப்படியென்று சங்கித்து ஆகமப் பிரமாண ஜன்னியமாவதாலெனக் கூறுகின்றார்] அந்தச் சேதனம்=அந்த ஞானம், பரோக்கமாம் எனினும் = பரோக்ஷமாயினும், நூலால் = சாஸ்திரத்திற் கூறிய பிரகாரத்தாலேயே, வண்மை திகழ் இன்ப உரு தெரித்தலால்= சச்சிதானந்த வடிவத்தை நிச்சயஞ் செய்வதால், வாய்மை அறிவு அலது மயல் அன்றும்=எதார்த்த ஞானமேயன்றி பிராந்தி ஞானம் அன்றும், [அற்றேல் சத்திய ஞானாதி வாக்கியங்களால் பிரமத்தின் சச்சிதானந்த ரூபத்துவம் போன்று தத்துவமசியாதி வாக்கியங்களால் அதன் பிரத்தியக்கு ரூபத்துவமும் அறியப்படுகின்றதேயாகையால் சாஸ்திரஜன்னிய ஞானத்திற்கும் பிரத்தியக்கு வியக்தியை விஷயஞ் செய்யுந்தன்மையுண்மையால் அபரோக்ஷமேயாமென்று சங்கித்துக் கூறுகின்றார்] மெய்ந்நூல் நுண்மை மகாவாக்கியத்தால்=வேதாந்த சாஸ்திரங்களில் சூக்ஷ்மமான தத்துவமசி முதலிய மகாவாக்கியங்க

ளால், பரம்தான் என்றே நுவலினும்=பிரம்மம் பிரத்தியக்கான்மாவாக உபதேசிக்கப்படினும், ஈது=பிரத்தியக்கு வடிவம், ஏழையர்க்கு = அறிவிலிகட்கு, அதாவது உடன்பாடெதிர்மறைகளால் தத்துவம் பதார்த்தங்களின் விசாரமின்றியவருக்கு, ஓர்வு உற ஒண்ணுது= அறிய முடியாது. ஆகையால் கேவல வாக்கியத்தால் அபரோக்ஷ ஞானமுற்பத்தியாகிறதில்லையென்பது பொருள் எ—று.

தான், ஏ—அசைநிலைகள்.

அறிதற்கரிய நுட்பமான பிரமத்தைப் போதிப்பித்தலால் நுண்மை என்று மகாவாக்கியத்திற்கு விசேஷணங் கொடுத்தார். 7

(அ—கை)

உண்மை ஞானம் பிரமாண பிரமேயங்களின் அதீனமாவதானும் தத்துவமசி முதலிய வாக்கிய வடிவ பிரமாணமுமிருத்தலானும் சீவப் பிரமங்களினைக்கிய வடிவ பிரமேயமுமிருத்தலானும் விசாரமின்றி ஏனறியமுடியாது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

உடன்முதனு னெனும்பிரமை விழித்து நிற்ப
வோங்கறிவற் றுப்புருடன் பரநா னென்றே
யடமதினோ் வுறவலனே நேராந் தொய்த
வறிவதுநே ராவொருமை மதிநூ ருதாற்
றிடமுறநூ லோர்ந்தன்புற் றவர்க்குச் சத்தே
தெரிபடுநே ராஞ்சிலைப்போ தம்ப ரோக்கக்
கடவுண்மதி தனைநூருப் பிரதி மாதி
களிற்றிருமா லென்பதிலா ரையுற் ருரே. 8

(ப—ரை) உடல் முதல் நான் எனும் பிரமை=தேகாதிகளில் ஆன்மத்தன்மைப் பிராந்தி, விழித்துநிற்ப = ஜாக்கிரதையாயிருக்க, ஓங்கு அறிவு அற்று=உயர்ந்த புத்தியில்லாமல், மந்த புத்தியையுடைய தாந்தன்மையால், புருடன்=ஆடவன், அடமதின்=பலாற்காரத்தால், பரம் நான் என்றே = பிரம்மமே பிரத்தியகான்மாவென்று, ஓர்வு உறவலனே=அறிய சமர்த்தனுவனே, ஆகான், சீவப்பிரமங்களின் அபேத விஷயக அபரோக்ஷ ஞானத்தின் விரோதியும் விசாரத்தால் நிவர்த்திக்கத்தக்கதுமாகிய தேகாதிகளில் நான் என்னும் பிராந்தி

யிருத்தலால், அதன் நிவர்த்தியின் பொருட்டு விசாரம் அபேக்ஷிக்கப் படுகிறதென்பது பொருள். [அப்படியானல் தேகேந்திரியாதி விஷயக துவைதப் பிராந்தியிருத்தலால் அத்துவீதீயப் பிரம்ம விஷயக பரோக்ஷ ஞானமுமுதியாது என்ற சங்கித்து அபரோக்ஷ துவைதப் பிராந்தி பரோக்ஷ அத்துவித ஞானத்திற்கு அவிரோதியாவதால் சிரத்தை யுடைய புருஷனுக்கு சாஸ்திரத்தால் பரோக்ஷ ஞானமுண்டாகின்றதே யாம் எனக் கூறுகின்றார்] நேராம் தொய்த அறிவது = அபரோக்ஷ மாகிய துவைதப் பிராந்தி, நேரா ஒருமை மதி நூறாது = பரோக்ஷமாகிய அத்துவித புத்தியைக் கெடுக்காது, ஆகையால், திடம் உறநூல் ஓர்ந்து = நன்றாக சாஸ்திரத்தையறிந்து, அன்புற்றவர்க்கு = சிரத்தை யுடையவர்க்கு, சத்தே தெரிபடும் = பிரம்மமாத்திரம் அறியப்படும். [அபரோக்ஷப் பிராந்தி பரோக்ஷ பிரமை ஞானத்திற்கு விரோதியாகாது என்பதில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] நேராம் சிலைப்போதம் = பிரத்தியக்ஷமாகிய கல் என்னும் ஞானம், பரோக்க கடவுள் மதிதனை நூறு = பரோக்ஷமாகிய ஈசுர புத்தியைக் கெடுக்காது. [விரோத மின்மையையே எடுத்துக் காட்டுகின்றார்] பிரதிமாதிகளில் = தாருதாம் பிரம்பாஷாணம் முதலிய பிரதிமைகளில், திருமால் என்பதில் = விஷ்ணுவென்று சொல்வதில், ஆர் ஐயுற்றார் = யார் சந்தேகத்தை யடைந்தார் எ—று.

சத்தே என்பதிலுள்ள ஏகாரம் பிரத்தியக் சேதனத்தைப் பிரிக்கின்றது. ஓர்ந்து என்பதை ஓர்ந்த என பெயரெச்சமாகக் கொள்வது நலம். ஆல், ஏ—அசைகள். 8

(அ—கை)

விவாதமுடையராய் சிலர் காணப்படுகின்றனரென்று சங்கித்துக் கூறுகின்றார்.

சிரத்தையிலா ரன்பின்மை மேற்கோ ளாக்கேற்
சிரத்தையுளர் தாமேவை திகத்தெங் கண்ணு
முரித்துளரா லொருக்கானல் லாத்த னேது
முபதேசத் தால்விளைவாம் பரோட்ச ஞானம்
விரைத்துளபக் கார்மேனி யுபதே சந்தான்
மீமாஞ்சை யினைவேண்டா கருமம் பத்தி
திரத்துவமா காமையிற்சிந் தித்தற் பாற்றுந்
திரட்சாகைச் சொற்றுணிதற் கெவன்வல் லோனே. 9

(ப—ரை) சிரத்தையிலார் அன்பு இன்மை = நம்பிக்கையின்றிய நாஸ்திகரது விசுவாசத்தின பாவத்தை, மேற்கோள் ஆக்கேல் = உதாஹரணமாகச் செய்யாதே, [எதனுலெனிற் கூறுகின்ருர்] சிரத்தையுளரே = நம்பிக்கையுடையவரே, வைதிகத்து எங்கண்ணும் = வேதத்திற் சொல்லிய அநுஷ்டானங்களில் எவ்விடங்களிலும், உரித்துளர் = யோக்கியராவார், அதிகாரியாவர் என்பது பொருள், [இவ்வளவினுல் பரோக்ஷ ஞானத்திலென்னை வந்ததெனிற் கூறுகின்ருர்] ஒருக்கால் = ஒரு தடவை, நல்ஆத்தன் ஓதும் உபதேசத்தால் = நல்ல உண்மையைக் கூறுபவன் சொல்லும் உபதேச வாக்கியத்தால், பரோக்ஷ ஞானம் விளைவாம் = பரோக்ஷவுணர்வு உண்டாம், [கூறிய பொருளையே உலகினநுபவத்தால் திடஞ்செய்கின்ருர்] விரைத் துளப கார்மேனி உபதேசம் = வாசனையுடைய துளப மாலையணிந்துள்ள மேகவண்ணரான விஷ்ணு மூர்த்தியின் உபதேசம், மீமாஞ்சையினை வேண்டா = விசாரத்தையபேட்சியாது, [அப்படியானுல் சாஸ்திரங்களில் ஏன் விசாரங்கள் செய்யப்படுகின்றன என்ரு சங்கித்து அநுஷ்டிக்கத்தக்க கரும உபாசனைகளில் சந்தேகம் சம்பவித்தலால் அதன் நிர்ணயத்தின் பொருட்டு விசாரங்கள் செய்யப்படுகின்றன எனக் கூறுகின்ருர்] கருமம் பத்தி = கருமங்களும் உபாசனைகளும், திரத்துவம் ஆகாமையின் = (அநுஷ்டிக்கத்தக்க பிரகாரத்தில்) நிச்சயமாகாமையினுல், சிந்தித்தற்பாற்று = விசாரிக்கத் தக்கனவாம், [சந்தேகம் சம்பவித்தலையே உபபாதனஞ்செய்கின்ருர்] திரள் சாகைச்சொல் = அநேக சாகைகளின் வாக்கியங்களை அதாவது அநேக சாகைகளில் ஆண்டாண்டு விதிக்கப்பட்ட கரும உபாசனைகளை, துணிதற்கு = ஓரிடத்திற் சேர்த்து நிச்சயஞ்செய்வதற்கு, எவன் வல்லோன் = (நம் முதலான மனுஷியருள்) எவன் சமர்த்தனுவன், ஒருவனுமாகானென்பது பொருள் எ—று.

தாம், ஆல், ஏ— அசைநிலைகள். 9

(அ—கை)

அப்படியானுல் அதாவது கருமோபாசனைகளை நிச்சயித்தற்கு முடியாதாயின் கரும உபாசனைகளுக்கு அநுஷ்டிக்கத்தகாத தன்மையே பிராப்தமாமென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

துணிபொருண் முன்னோர் கருப்ப சூத்திரத்திற்
றொகுத்தனரா தலினன்பர் விசார மற்றும்
பணிபுரிய மிகவெளிதா முயர்நன் னூல்கள்
பகருமுபா சனைப்பழக்க மதனா னடைத்
திணியிலரு மதைக்குருவால் வினவிச் சிந்தை
செய்திடலாம் வேதவாக் கியங்க டேற
வணிதருமீ மாஞ்சையினை யுயிரிச் சிக்கு
மாத்தனுரை யனுட்டான மளிக்கு மன்றே. 10

(ப—ரை) முன்னோர் = சைமினி முதலிய பூருவாசாரியர்களால், துணிபொருள் = நிச்சயிக்கப்பட்ட (அநுஷ்டானத்தின் பிரகார வடிவ) அருத்தத்தை, கருப்ப சூத்திரத்தில் தொகுத்தனர் = கற்ப சூத்திரங்களால் சங்கிரகித்தனர். ஆதலின் = அவர்களால் தொகுக்கப்பட்டபடியால், அன்பர் = அவர்களிடத்தில் விசுவாசமுள்ள புருஷருக்கு, விசாரம் அற்றும் = வேத சாகைகளின் விசாரமின்றியும், பணிபுரிய மிக எளிதாம் = கருமத்தைச் செய்ய மிகவும் சுலபமாம். [அற்றேல் அதில் உபாசனையின் விசாரமின்மையினால் அதனநுஷ்டானம் சம்பவியாது என்று சங்கித்துக் கூறுகின்றார்] உயர் நன்னூல்கள் = மேலான பிராம்மம் வாசிஷ்டம் முதலிய மந்திரகற்பங்கள், உபாசனைப் பழக்கம் பகரும் = உபாசனையினநுஷ்டானப் பிரகாரத்தைக் கூறுகின்றன, அதனால் = அக்காரணத்தினால், நாடதிணி இலரும் = விசாரிக்கச் சாமர்த்தியமில்லாத மனிதரும், அதை = (கற்ப சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட) அவ்வுபாசனையை, குருவால் வினவி = குருமுகத்தாற் கேட்டு, சிந்தை செய்திடலாம் = உபாசனை செய்யலாம். [அப்படியானால் இப்போதுள்ளவரான கிரந்த கருத்தாக்களாலும் வேதவாக்கிய விசாரம் எதனால் செய்யப்படுகிறது என்று சங்கித்து தன் தன் புத்தியின் சந்தோஷத்தின் பொருட்டே செய்யப்படுகிறது. அநுஷ்டான சித்தியின் பொருட்டன்று எனக் கூறுகின்றார்] வேத வாக்கியங்கள் தேற = மறை மொழிகளைத் தெளிதற்கு, அணிதரும் மீமாஞ்சையினை = ஒழுங்காகிய விசாரத்தை, உயிர் இச்சிக்கும் = ஆடவர் விரும்புவார், ஆத்தன் உரை = உண்மை உரைப்போனது உபதேச வாக்கியமாத்திரம், அநுட்டானம் அளிக்கும் = கருமோபாசனைகளினநுஷ்டானத்தைக் கொடுக்கும், உபதேசமாத்திரத்தால் அநுஷ்டானம் சம்பவிக்கு மென்பது பொருள், அல்லது வேத வாக்கியங்கள் தேற, இச்சிக்கும்

உயிர் = விரும்புகின்ற ஆடவர்கள், மீமாஞ்சையினை அணிதரும் = விசாரத்தை செய்க, என்றிவ்வாறு பொருள் கொள்ளுதல் மூலத்தை யநுசரித்தது ஏ—று. அன்று, ஏ—அசைகள்.

பிராம்மம் = பிர்ம்ம தேவனுற் செய்யப்பட்ட கற்ப சாஸ்திரம். வாசிஷ்டம் = வசிஷ்ட மகரிஷியினுற் செய்யப்பட்ட கற்ப சாஸ்திரம். 10

(அ—கை)

அற்றேல் பிரம்மத்தின் உபாசனை உபதேசமாத்திரத்தாற் சித்திப்பது போன்று பிரம்ம சாக்ஷாத்காரமும் உபதேச மாத்திரத் தாலேயே என் சித்திக்கிறதில்லையென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

பிரமமதை நேர்காண்டல் விசாரந் தீர்ந்திப்
பெற்றிநரர்க் காத்தனுரை யாலே நாளும்
வருவதிலை யபரவறி வினுக்கன் பின்மை
மாதடையா மிதரமல வவிசா ரந்தான்
பரவறிவுக் குறுதடையாம் விசாரஞ் செய்தும்
பரமான்ம வொருமையப ரோட்ச மாகத்
தெரிகிலனே லபரோட்சஞ் செறியு மட்டுந்
திரும்பமறு படியும்விசா ரித்தல் வேண்டும். 11

(ப—ரை) நரர்க்கு = மனிதர்களுக்கு, பிரமமதை நேர் காண்டல் = பிரமத்தை சாக்ஷாத்கரித்தல், விசாரம் தீர்ந்து = விசார மின்றி, இப்பெற்றி = இந்தப்படி அதாவது உபாசனைபோன்று, ஆத்தன் உரையாலே நாளும் வருவது இலை = உண்மை உரைப் போனது உபதேசமாத்திரத்தால் ஓர்போதும் உண்டாவதில்லை, [ஆத்தனுரைமாத்திரத்தால் உபாஸனையையநுஷ்டித்தலில் உபயோகி யான பரோக்ஷ ஞானமுண்டாகிறது அபரோக்ஷ ஞானமோ விசார மின்றியுண்டாகிறதில்லையென்று சொல்லப்பட்டது. அதில் காரணம் கூறுகின்ருர்] அபர அறிவினுக்கு = பரோக்ஷ ஞானத்திற்கு, அன்பு இன்மை மாதடையாம் = சிரத்தையின்மை பெரிய பிரதிபந்தமாம், இதரம் அல = அவிசாரம் பிரதிபந்தம் அன்று, பரஅறிவுக்கு = அபரோக்ஷ ஞானத்திற்கு, அவிசாரம் உறுதடையாம் = விசாரமின்மை பொருந்தா நின்ற பிரதிபந்தமாம், எதனுல் அவிஸ்வாசமே பரோக்ஷ

ஞானத்தைத் தடுக்கின்றதோ அவிசாரமன்றே அதனால் அவிஸ்வாச மாகிய தடை நிவர்த்தியாகும்போது ஒருதரம் உபதேசித்தலாலேயே பரோக்ஷ ஞானத்தினுற்பத்தி பொருந்துகின்றது. அவிசாரத்தைப் பிரதி பந்தமாகவுடைய அபரோக்ஷ ஞானத்திற்கோ விசார வாயிலாக அதன் நிவர்த்தியின்றி உற்பத்தி சம்பவியாது. ஆகையால் விசாரஞ்செய்யத் தக்கதென்பது கருத்து. [அற்றேல் விசாரஞ்செய்யப்படினும் அபரோக்ஷ ஞானம் உண்டாகாதபோது யாது செய்யத்தக்கதெனிற் கூறுகின்றார்] விசாரம் செய்தும் = தத்துவம்பதார்த்தங்களை நன்றாய் விசாரித்தும், பரம்ஆன்ம ஒருமை = பிரம்ம ஆன்மாக்களினேகத்துவத்தை, அபரோக்ஷமாக தெரிகிலனேல் = பிரத்தியக்ஷமாக அறியானாயின், அபரோட்சம் செறியும் மட்டும் = அபரோக்ஷ ஞானம் உண்டாகும் பரியந்தமும், திரும்ப மறுபடியும் விசாரித்தல் வேண்டும் = மீண்டும் மீண்டும் விசாரம் செய்யவேண்டும் எ—று.

அபரோக்ஷ ஞானத்திற்கு காரணம் விசாரத்தினும் அன்னிய மின்மையாலென்பது கருத்து.

தான்—அசை. 11

(அ—கை)

அற்றேல் திரும்பத்திரும்ப விசாரித்தலாலும் ஈண்டு சாக்ஷாத்கார முண்டாகாதபோது விசாரம் வியர்த்தமாமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

இறப்புமட்டும் விசாரித்து மான்மப் பேற்றை
யியையானேல் மறுபிறப்பிற் றடைதீர்ந் தக்கால்
உறப்பெறுவ னிகத்தாதல் பரத்தி லாத
லுணர்வுண்டா மென்றிவணம் வியாசர் சொற்றார்
திறப்படக்கேட் பினுமிங்கே யனேக ரேதுந்
தெரியாரென் றிடுஞ்சுருதி கருப்பத் தூடே
பிறப்படைந்து கிடந்துமுன்செய் விசாரத் தோர்ந்தார்
பெயர்வாம தேவரோ துதன்முன் னேரே. 12

(ப—ரை) இறப்பு மட்டும் விசாரித்தும் = மரண பரியந்தம் விசாரஞ்செய்தும், ஆன்மப்பேற்றை இயையானேல் = ஆன்ம

லாபத்தை(சாக்ஷாத்காரத்தை)யடையாளுயின், மறு பிறப்பில்=வேறு சென்மத்தில், தடை தீர்ந்தக்கால்=பிரதிபந்தம் நீங்கும்போது, உறப் பெறுவன்=பொருந்தச் சேர்வன், [அற்றேல் பிரதி பந்தம் நீங்கும் போது ஞானமுண்டாமென்பது எதனுலறியப்பட்டது என்ரு சங்கித்து பிரமசூத்திர கருத்தாவாகிய வியாசபகவாளுல் "ஐஹிகமபி யப்பிரஸ்துதப் பிரதிபந்தே தத்தருசனுத்" என்னும் சூத்திரத்தில் சொன்னபடியாலெனக் கூறுகின்ருர்] இதத்து ஆதல்=இந்தச் சென் மத்திலாவது, பரத்தில் ஆதல்=மறு சென்மத்திலாவது, உணர்வு உண்டாம் என்று = ஞானமுண்டாகுமென்று, இவ்வணம் வியாசர் சொற்ருர்=இந்தப் பிரகாரம் வியாசபகவான் சொன்னுர், [பிரதிபந்த மிருக்கும்போது இந்த ஜன்மத்தில் ஞானமுண்டாகாது என்பதில் சுருதியைத் தெரிவிக்கின்ருர்] அநேகர் = வெகுபேர்கள், இங்கே திறப்பட கேட்பினும்=இவ்வுலகில் நன்ருக சிரவணஞ் செய்யினும், ஏதும் தெரியார் = அற்பமுமறியார், என்றிடும் சுருதி = என்று கூறுகின்றது உபநிடதம், [இப்பிறப்பிற் சிரவணுதியைச் செய்பவனுக்கு மறு பிறப்பில் அபரோக்ஷ ஞானமுண்டாகின்றதென்பதில் "கருப்பத்தி லிருந்துகொண்டே இந்தத்தேவதைகளுடைய எல்லாச் சன்மங்களேயும் அறிகின்றேன்" என்பது முதலிய சுருதியைப் பொருளாற் படிக்கின்ருர்] பெயர் வாமதேவர்=கீர்த்தியினேயுடைய வாமதேவமகரிஷியானவர், கருப்பத்துாடே = தாயாரின் வயிற்றிலேயே, பிறப்பு அடைந்து கிடந்து=உற்பத்தியாகி படுத்துக்கொண்டு, முன்செய் விசாரத்து= பூருவம் அப்பியாசித்த விசாரத்திளுலே, ஓர்ந்தார்=ஆன்மாவையறிந் தார், [இப்பிறப்பில் உண்டாகாத ஞானம் வேறு காலத்தில் உண்டா வதில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்] ஓதுதல்முன் = அத்தியயனம் முதலியவற்றில், ஓர் = அறிவாய் எ—று. 12

(அ—கை)

திருஷ்டாந்தத்தை விரிக்கின்ருர்.

வெகுதின மோதியு மக்கால் வாராதாகின்
மீளவொரு தினத்திலோ தாமே முன்னர்ப்
பகுபடநன் கோதினதை நினேப்பன் பூமான்
பயிர்கருப்பா திகளுளிற் பலிப்ப போலத்
தகுமறிவின் விசாரணேயு மெல்ல நாளாற்
ருன்பலிக்கு மேன்மேலும் விசாரித் தாலும்
உகுமொரு மூவிதத்தடையாற் றத்து வந்தா
னுணர்வரிதென் றின்னணம்வார்த் திகநன் கோதும்13

(ப—ரை) வெகுதினம் ஓதியும் = அநேக நாள் படித்தும், அக்கால் வாராதாகின் = அப்போது மனனம் வாராதாயின், மீளஒரு தினத்தின் = மறுபடியும் மறு தினத்தில், ஓதாமே = படிக்காமலே. முன்னர் பகுபட நன்கு ஓதினதை = பூருவம் வெகுவாக நன்றாகப் படித்ததை. பூமான் நினைப்பன் = புருடன் ஸ்மரிப்பன். ஒரு செய்யுளை ஒருநாள் முழுவதும் மனனம் செய்து அன்று வராவிடின் மறுநாள் அதிகாலையில் அச்செய்யுளைப் பாராமலே மனதில் நினைக்கின்றான் என்பது கருத்து. [முதலிய சத்தத்தால் கிரகிக்கப்பட்ட வேறு திருஷ்டாந்தங்களைக் கூறுகின்றார்] பயிர் கருப்பாதிகள் = ஸஸ்யம் கர்ப்பம் முதலியவைகள், நாளில் பலிப்பபோல = சில காலத்தாற் பரிபாகமாவனபோல, [தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்] தகும் அறிவின் விசாரணையும் = சிறந்த ஆன்ம விசாரமும், மெல்ல நாளால் பலிக்கும் = மெதுவாக கொஞ்ச காலத்தின் பிறகு பரிபாகமாகும், ஞானரூப பயனைக்கொடுக்கும் என்பது பொருள். ]அநேகந்தடவை ஆன்மதத்துவம் விசாரிக்கப்படினும் தடையின் வலிமையால் சாக்ஷாத் காரம் உண்டாகிறதில்லையென்னுமிப்பொருள் 'வார்த்திகக்காரராலும் நிரூபிக்கப்பட்டதெனக் கூறுகின்றார்] மேன்மேலும் விசாரித்தாலும் = அடிக்கடி ஆன்மாவை விசாரிப்பினும், உகும் ஒரு மூவிததடையால் = தள்ளத்தக்க மூன்றுவித பிரதிபந்தத்தால், தத்துவம் உணர்வு அரிது = ஆன்மாவை அறியமுடியாது, என்று இன்னணம் = என்றிந்தப் பிரகாரம், வார்த்திகம் நன்றாகக் கூறுகின்றது எ—று.

மீளவொரு தினத்தோதாததுமே முன்னர்ப் பகுபடவோ தினதாக, எனப்பாட பேதமுளது. 13

(அ—கை)

அவ்வார்த்திகத்தையே எடுத்துக் காட்டுகின்றார். பரதனுக்கு முப்பவத்தாலென்பது பரியந்தமாக ஆண்டு முன்பு உற்பத்தியாகாத ஞானத்திற்கு பின்பு உற்பத்தியாவதில் காரணம் வினவுகின்றார்.

அந்தவறி வெதனாலுண் டாமெனினவ்
வறிவுதடை யழிந்தா லுண்டா
மிந்தவலு வுறுதடையு மிறந்ததுமேல்
வருவதுமின் றுளது மென்று
வந்துறுமூ வகைத்தாயித் தடையுறுமேன்
மறைமறையின் பொருள்க ளெல்லா
முந்துறக்கற் றையமற மொழியவல
ரேனுமுறார் முத்தி யன்றே. 14

(ப—ரை) அந்த அறிவு எதனுல் உண்டாம் எனின் = தடையால் தடுக்கப்பட்ட ஆன்ம ஞானம், எச்சாதனத்தால் பிறக்கும் என்று வினவின், [உத்தரம் கூறுகின்ருர்] அவ்வறிவு தடை அழிந்தால் உண்டாம் = அந்த ஞானம் பிரதிபந்தக்ஷயத்தால் பிறக்கும், [அந்தத் தடையும் இறந்தது வருவது நிகழ்வது என மூவிதமாமெனக் கூறுகின்ருர்] இந்த வலுவு உறுதடையும் = இந்தப் பலமுடைய பிரதி பந்தமும், இறந்ததும் மேல் வருவதும் இன்று உளதும் என்ற = பூதமும் பாவியும் வர்த்தமானமும் என்று, மூவகைத்தாய் வந்துறும் = மூவிதமாக வந்து பொருந்தும், [மூவிதப் பிரதிபந்தமிருக்குக அதனுல் என்னையெனிற் கூறுகின்ருர்] இத்தடை உறுமேல் = இப்பிரதிபந்த மிருக்குமேல், மறை மறையின் பொருள்கள் எல்லாம் = வேத வேதார்த்தங்களனைத்தும், முந்துறக்கற்று = வந்து பொருந்தும்படி அப்பியாசித்து, ஐயம் அறமொழியவலரேனும் = சந்தேகமின்றிக் கூறச் சமர்த்தராயினும், முத்தி உருர் = மோக்ஷத்தையடையார் எ—று.

அன்று, ஏ—அசைகள். 14

(அ—கை)

தடையுளதேல் ஞானமுதியாதென்னுமிப் பொருள் (சாந்தோ 8 அ. 3 க.) "எப்படி பூமியில் புதைத்துவைக்கப்பட்ட பொன் புதையலை புதையற் பூமியினையறியாத்வர் மேலே மேலே சஞ்சரிப்பவராயினும் அடையாரோ அப்படி இவ்வெல்லாப் பிரஜைகளும் தினந்தோறும் சுழுத்தி காலத்தில் பிரம்ம வடிவ உலகத்திற் செல்பவராய் இந்தப் பிரம்ம லோகத்தைப் பெறுகின்றிலர். பொய் ஞானத்தாலுண்டாகிய ஆசைகளால் தனது சொருபத்தினின்றும் புறம்பாக்கப்பட்டனர்" என்னுமிச் சுருதியினுல் காண்பிக்கப்பட்டதெனக் கூறுகின்ருர்.

இப்பொருள் சுருதியால் காண்பிக்கப்பட்டதெனக் கூட்டுக.

தடையுளதேல் ஞானம்வரா தெனுமிதனைத்
தானேபொற் பொருட்டிட் டாந்தத்
திடமுறக்காட் டியதுமறை யதியொருவன்
கற்றறிந்து மெருமை தன்பா
லடைவுறுகேண் மையினுல்வந் தடுத்தபதி
பந்தத்தா லறிவாந் தன்னை
மடமைகெட வறிந்திலனென் றிடுகதைதா
னுலகின்கண் வழங்கா நிற்கும். 15

(ப—ரை) தடையுளதேல் ஞானம் வராது எனும் இதனை = பிரதிபந்தமிருக்கின் உணர்வு உண்டாகாது என்னுமிப் பொருளை, பொன் பொருள் திட்டாந்தத்து = இரண்ணிய நிதி திருஷ்டாந்தத்தால், மறைஇடம் உறக்காட்டியது = வேதம் விரிவாகத் தெரிவித்தது, [அற்றேல் சென்றவஸ்து பிரதிபந்தஞ் செய்வதாகக் காணப்படவில்லையேயென்று சங்கித்துக் கூறுகின்றார்] யதி ஒருவன் = ஒரு சன்னியாசி, கற்று அறிந்தும் = குருவினிடத்தில் நூலைப்படித்து உணர்ந்தும், எருமை தன்பால் அடைவுறு கேண்மையினால் = எருமையினிடத்தில் பொருந்தா நின்ற சிநேகத்தால், வந்து அடுத்த பதிபந்தத்தால் = வந்து பொருந்திய தடையால், அறிவாம் தன்னை = சிதான்மாவாகிய தன்னை, மடமைகெட அறிந்திலன் = அறியாமையழிய உணர்ந்திலன், என்றிடு கதை = என்கின்ற சரித்திரம், உலகின்கண் வழங்கா நிற்கும் = உலகத்தில் பரவுகின்றது எ—று.

தான் — அசை.

அக்கதை இதுவாம்:- ஓர் சன்னியாசி முன் கிரகஸ்தாசிரமத்தில் ஓர் எருமையினிடத்தில் பிரியம் வைத்துப் பின் சன்னியாசஞ் செய்து கொண்டு சிரவணத்திற் பிரவர்த்தித்தும் அதே சிநேகத்தினாலாகிய பிரதிபந்தத்தால் குருவினால் உபதேசிக்கப்பட்ட தத்துவத்தினையறிய வில்லை என்பது. 15

(அ—கை)

அப்படியானால் அப்படிப்பட்ட அவருக்கு ஞானத்தினுற்பத்தி எப்படியெனிற் கூறுகின்றார்.

குரவனெரு மையின்கேண்மை யனுசரித்தே
தத்துவத்தைக் குயின்றான் பின்ன
ருரைசெயவன் றான்பதிபந் தந்தீர்ந்தே
யுள்ளபடி யுணர்வுற் றானற்
பெருகுநிகழ் காலபதி பந்தம்விட
யாசத்தி பிரஞ்ஞை மாந்தம்
மருவலொடு குதர்க்கம்விப ரியயதுராக்
கிரகமுறில் வாரா ஞானம். 16

(ப—ரை) குரவன் = அவனுக்கு தத்துவத்தையுபதேசிக்கும் ஆசாரியன், எருமையின் கேண்மை அநுசரித்தே = அவனுக்கு எருமை யினிடத்துள்ள சினேகத்தைப் பின்பற்றியே, த த் து வ த் தை தக் குயின்ருன் = அவ்வெருமையையுபாதியாகவுடைய பிரம்மத்தை உபதேசித்தான், பின்னர் = உபதேசத்தின் பிறகு, உரைசெய் அவன் = சொல்லிய அச்சன்னியாசியானவன், பதிபந்தம் தீர்ந்து = எருமையின் சினேக வடிவ தடைநீங்கி, உள்ளபடி உணர்வுற்ருன் = (குருவினுல் உபதேசிக்கப்பட்ட தத்துவத்தை) ய தா ர் த் த மா.க அறிந்தான், [இவ்வாறு பூதப் பிரதிபந்தத்தைத் தெரிவித்து வர்த்தமானப் பிரதி பந்தத்தைத் தெரிவிக்கின்ருர்] பெருகு நிகழ்கால பதிபந்தம் = மிகுதி யான வர்த்தமானப் பிரதிபந்தங்களாவன, விடயாசத்தி = வனிதை முதலிய விஷயங்களில் விருப்பமும், பிரஞ்ஞை மாந்தம் மருவல் ஒடு = புத்தி மந்தத்துவத்தையடைதலும், அதாவது புத்தியின் கூர்மை யின்மையும், குதர்க்கம் = உலர்ந்த தருக்கத்தால் சுருதியின் பொருளை வேறு பிரகாரமாக ஊகித்தலும், விபரியயதுராக்கிரகம் = ஆன்மா கருத்திருத்துவாதி தருமமுடையது என்னும் ஞானவடிவ விபரிய யத்தில் யுத்தியின்றிய அபினிவேசமும் ஆம், உறில் ஞானம் வாரா = இவைகளிலேதேனுமொன்று இருக்கின் ஆன்ம உணர்வு உதியாது எ—று. 16

(அ—கை)

இந்த வர்த்தமானப் பிரதிபந்தம் எதனுல் நிவர்த்தியாமெனிற் கூறுகின்ருர்

சமமுதலாற் சவஞாதி தம்மாலு
மங்கங்கே தகுந்த வற்ரு
லமையுமிந்தப் பதிபந்த நட்டமுறி
னதனுற்றற் கதுவந் தெய்துஞ்
சுமடுறுமேற் பதிபந்த மதுவாம
தேவரின்கட் டுலக்கப் பட்ட
திமையளவி லோர்பவத்தாற் பரதனுக்கு
முப்பவத்தா லிறந்த தன்ரே. 17

(ப—ரை) அங்கு அங்கு தகுந்தவற்ருல் = அந்தத் தடைகளை நிவர்த்தி செய்வதில் யோக்கியங்களான, சமமுதலாலும் = (சம

முடையன் தமமுடையன் உபரதியுடையன் என்பது முதலிய சுருதியாற் சொல்லப்பட்ட) சமாதிஷட்கத்தாலும், சவணுதி தம்மாலும் = (ஆன்மா சிரவணிக்கத் தக்கது மனனிக்கத் தக்கது நிதித்தியாசிக்கத் தக்கது என்னும் சுருதியாற் சொல்லப்பட்ட) சிரவண மனன நிதித்தியாசனங் களாலும், அமையும் இந்தப் பதிபந்தம் நட்டம் உறின் = தீவினை தீயோர் சேர்க்கை முதலியவற்ருல் பொருந்தா நின்ற இந்தத் தடைகள் கெட்டொழியின், அதனுல் = பிரதிபந்த நீக்கத்தாலேயே, தற்கு அது வந்து எய்தும் = பிரத்தியக்கான்மாவிற்குப் பிரமத்துவம் வந்து பொருந்தும், ஆன்மாவைப் பிரம்ம ரூபமாக சாக்ஷாத்கரிக்கின்ருனென்பது பொருள். [இப்போது பாவிப் பிரதிபந்தத்தைத் தெரிவிக்கின்ருர்] சுமடுறுமேல் பதிபந்தம் அது = அறியாமையால் வருகின்ற ஆகாமிப் பிரதிபந்தமாவது, வாமதேவரின்கண் = வாமதேவ ரிஷியினிடத்து, இமையளவில் துலக்கப்பட்டது = க்ஷணத்தில் பிரகாசிக்கப்பட்டது, வருபிறப்பிற்கேதுவான பிராரப்த சேஷமென்பது பொருள். [அதற்குப் போகமின்றி நிவர்த்தியின்மையிஞல் அதன் நிவர்த்தியில் கால நியமமின்றெனக் கூறுகின்ருர்] ஓர்பவத்தால் இறந்தது = (வாமதேவ ரிஷிக்கு அந்தத் தடையும்) ஒரு பிறப்பால் நாசமாயிற்று, பரதனுக்கு முப்பிறப்பால் இறந்தது = பரத மகரிஷிக்கு மூன்று சன்மத்தால் நாசமாயிற்று எ—று. அன்று, ஓ—அசைநிலைகள்.

உம்மை முன்பும் கூட்டப்பட்டது. 17

(அ—கை)

அற்றேல் ஓர் பவத்தால் முப்பவத்தாலென நியதகாலம் உம்மாலேயே சொல்லப்படுகின்றது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

யோக வண்டனுக் குற்பவம்
பலவிறந் துழிப்பதி பந்தந்தா
னேகு மென்றிடுங் கீதைநல்
விசாரமு மிடர்செயா தறத்தார்தம்
லோக மாற்றும தத்துவத்
தேர்ச்சியா லொன்றிபற் றவன்சுத்த
ராகி யாக்கமுள் ளார்கிர
கத்தில்வந் தவதரித் திடுவானே. 18

(ப—ரை) யோகவண்டனுக்கு = யோகத்தினின்றும் தவறின வனுக்கு, பல உற்பவம் இறந்துழி = அனேக ஜன்மங்கள் கழிந்தபோது, பதிபந்தம் ஏகும் என்றிடும் கீதை = தடை நாசமாமென்று கூறுகின்றது பகவற்கீதை. [அப்படியானல் தத்துவவிசாரம் பயனற்றதாமென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] நல்விசாரமும் = செய்த ஆன்மாவின் நல்ல ஆராய்ச்சியும், இடர் செயாது = வியர்த்தமாகாது, தடை நீங்கின உடனே அபரோக்ஷ ஞானவடிவ பலமிருத்தலால் என்பது கருத்து. இங்கு இஃது இரகசியம்:— ஒரு கர்மம் அனேக ஜன்மத்திற்கு ஏதுவாம். எப்படி ஒரே பிரஹ்மஹத்தி வடிவ கர்மம் நரக துன்பம் அநுபவித்த பின்னர் நாய், பாம்பு, புலி முதலிய பத்து ஜன்மத்திற்கு ஏதுவாகும், ஒரே கார்த்திகைப் பௌர்ணமியின் தினத்துச்செய்த கார்த்திகேய ஸ்வாமியின் தரிசன வடிவ கர்மம் தனுதிவிபூதியோடு கூடிய ஏழு பிராஹ்மண ஜன்மத்திற்கு ஏதுவாகும் என்று சாஸ்திரத்திற் சொல்லப் பட்டிருக்கிறதோ, அதுபோல அனேக ஜன்மத்திற்கு ஏதுவான ஒரு கர்மம் பிராரப்த வடிவமாகப் பலத்தினை ஆரம்பிப்பதாயின் அது ஆகாமிப் பிரதிபந்தமாம். சிரவணுதி விசார வடிவ ஞான சாதனங்களிற் பிரவர்த்தித்த புருஷனுக்கும் இந்தப் பிரதிபந்தம் இருக்குமாயின் ஞானத்தின் உற்பத்தியுண்டாகாது. ஆதலால் இக்கர்மத்தின் பயன் வடிவ முடிவான பிறப்பிலேயே ஞானமுண்டாகும் என்று கொள்ள வேண்டியது. [கீதையில் பிரதிபாதித்த பொருளைத் தெரிவிக்கின்ருர் அறத்தார் என்பது முதல் பரகதிசாருவன் என்பது பரியந்தமாக] ஆற்று மதத்துவத் தேர்ச்சியால் = யோகப் பிரஷ்டன் ஆன்ம தத்துவ விசார வலிமையினுலேயே, அறத்தார் தம் லோகம் ஒன்றி = புண்ணிய வான்களுடைய சுவர்க்க லோகங்களை அடைந்து, அங்கே அனேக காலஞ் சுகத்தை அநுபவித்து அப்போகங்கள் முடிந்தபோது, பற்றவன் = ஆசையுடையவனுயின், சுத்தராகி = மாதா பிதாக்களால் தூய்மையுடையராய், ஆக்கம் உள்ளார் = ஐஸ்வரியமுடையராயிருப்ப வரது, கிரகத்தில் = வீட்டில், வந்து அவதரித்திடுவான் = வந்து பிறப்பான் எ—று.

யோகத்தினின்றுந் தவறுதலாவது ஆன்ம சாக்ஷாத்கார பரியந்தம் விசாரமின்மை. ஏ—அசை. 18

(அ—கை)

இரண்டாவது இச்சையின்றிய யோகப்பிரஷ்டனது பக்ஷத்தைக் கூறுகின்ருர்.

அன்றிப் பற்றிலான் பிரமதத்
துவவிசா ரத்தினு லறிவார்ந்த
துன்றி யோகியர் குலத்திலே
தோன்றுவன் சொலுமிஃ தரிதன்றே
வொன்றிங் கவ்வுட லதிற்செறி
யவ்வறி வொற்றுமை கணத்தேயு
முன்றி றத்தின்மேன் முயற்சியுற்
றிடுதலின் மொழியிஃ தரிதாமே. 19

(ப—ரை) அன்றிப் பற்றிலான்=அல்லது மிக விரத்தனுயின், பிரம தத்துவ விசாரத்தினுல்=ஆன்ம தத்துவத் தேர்ச்சியினுலேயே, அறிவு ஆர்ந்த=ஆன்ம தத்துவ நிச்சயத்தினையுடைய, யோகியர் குலத்திலே=சித்த ஏகாக்கிரமுடையவரது வம்ஸத்திலே, துன்றி தோன்றுவன் = நெருங்கிப் பிறப்பான், [முதற் பக்ஷத்தினும் யாது விசேஷமெனிற் கூறுகின்றுர்] சொலும் இஃது அரிது அன்றே = சொல்லிய இந்த யோகி குலத்திற்றேன்றுதல் கிடைத்தற்கு அருமை அல்லவா, அற்ப புண்ணியத்தால் அடையத்தகாததென்பது பொருள், [அதன் அருமையையுபபாதனஞ் செய்கின்றுர்] ஒன்று இங்கு = இணங்கிய இந்த யோகிகுல ஜன்மத்தில், அவ்உடலதில் செறிஅவ் அறிவு ஒற்றுமை = பூருவதேகத்தில் உண்டான தத்துவ விசார விஷயக புத்தியின் சம்பந்தத்தை, கணத்து ஏயும்=சீக்கிரம் அடைகின்றுன், [கேவலம் புத்தி சம்பந்த மாத்திரத்தின் அடைவு இன்று மற்றே அதிக முயற்சியுமாமெனக் கூறுகின்றுர்] முன் திறத்தின்=முற் பிறப்பில் உள்ள முயற்சியாகிய குணத்தினும், மேல் முயற்சி உற்றிடு தலின்=அதிகப் பிரயத்தினத்தை அடைதலின், மொழி இஃது அரிது ஆம்=சொல்லிய இந்த யோகியின் குலத்திற் பிறத்தல் துர்லபமாம் எ—று. 19

(அ—கை)

● அதிக அப்பியாசத்தில் காரணங் கூறுகின்றுர்.

அன்ன வன்முனைப் பயிற்சியா
லவசனென் றுலுமாற் றுவன்சென்மப்
பன்மைப் பேற்றிஞற் பரகதி
சாருவன் பங்கயனு லகாசை
துன்னி னீத்ததைத் தன்னை நா
டினுமிவன் றுகளறத் தெரிகில்லான்
முன்னை நூன்முடிப் பொருடுணிந்
தயன்பதி முடிவின்முத் தியைச்சேர்வான். 20

(ப—ரை) அன்னவன் = அந்த யோகப்பிரஷ்டன், அவசன் என்றுலும் = (விஷய போகங்களால்) பராதீனஞயினும், முனைப்பயிற்சியால் = பூர்வஜன்மப் பழக்கத்தாலேயே, ஆற்றுவன் = ஆன்ம விசாரத்தைச் செய்வன், விசாரத்தில் இழுக்கப்படுவன் என்பது பொருள், சென்ம பன்மைப்பேற்றிஞல் = இந்தப் பிரகாரம் அநேகப் பிறப்புகளில் செய்யப்பட்ட பிரயத்தினத்தால் பெற்ற ஆன்ம ஞானத்திஞல், பரகதி சாருவன் = பரம முத்தியை அடைவன் [மற்ருெருஆகாமிப் பிரதிபந்தத்தை அறிவிக்கின்ருர்] பங்கயன் உலகுஆசை துன்னின் = பிரம்ம லோகப் பிராப்தியின் இச்சைதிடமாக இருப்பின், அதை நீத்து = அந்த ஆசையை அடக்கி, தன்னை நாடினும் = ஆன்மாவை விசாரிக்கினும், துகள்அற தெரிகில்லான் = குற்றமின்றியபரோக்ஷமாக அறியான் [அப்படியாஞல் அவனுக்கு ஓர் போதும் முத்தியுண்டாகாதென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] முன்னை நூல் முடிபொருள் துணிந்து = பழைமையான வேதாந்தார்த்தத்தை நிச்சயித்து,அயன்பதிமுடிவில் = பிரம்மலோகத்தினந்தத்தில், முத்தியைச்சேர்வான் = பிரம்மாவோடு கூட மோக்ஷத்தை அடைவான் எ—று.

"சன்னியாசிகள் சன்னியாசயோகத்தால் தூயமனமுடையராய் வேதாந்த விஞ்ஞானத்தால் ஆன்ம வஸ்துவை நிச்சயித்தவராய் பரம அமிருதராய் பிரம்மலோகத்தில் பிரம்மாவின் அந்தகாலத்தில் எல்லோரும் முத்தராகின்ருர்கள்," "பிரளயம் பிராப்தமாகும்போது பிரம்மாவின்அந்தத்தில் பிரம்மாவோடுகூட எல்லோரும் பிரம்மாவின் உபதேசத்தால் அல்லது தானேயுண்டாகிய ஆன்ம சாக்ஷாத்காரமுடையராய் முத்தியையடைகின்ருர்கள்" என்பது முதலிய சாஸ்திர வசனத்தால் பிரம்மலோகப் பிராப்தியின் பிறகு தத்துவத்தை சாக்ஷாத்கரித்து பிரம்மாவோடுகூட முத்தியுண்டாகுமென்பது பொருள். 20

(அ—கை)

இவ்வாறு தத்துவ விசாரம் செய்யப்படினும் தடையின் வலிமையினால் இந்த ஜன்மத்தில் தத்துவ சாக்ஷாத்காரமுண்டாகிறதில்லையென்றுகூறி மிகுந்த பாபிகளுக்கோ அந்த விசாரமும் அரிதெனக் கூறுகின்றார்.

சிலர்க்கத் தேர்ச்சியும் வினையினாற்
றடைபடுஞ் செம்பொருள் வினாதற்கும்
பலர்க்கு மிக்கரி தெனுமறை
மட்டறப் படர்மதி மாந்தத்தா
லலக்கண் டீர்குரு பாடமே
வாமையினா தலாய்ந் திடறன்னை
நிலக்கண் மேவுறா தவன்பிர
மத்தையே நிதமும்நா டுதல்வேண்டும். 21

(ப—ரை) சிலர்க்கு = சிலபாபிகளுக்கு, அத்தேர்ச்சியும் = அந்த விசாரமும், வினையினால் தடைபடும் = பாபகர்மத்தால் பிரதிபந்திக்கப்படும், [அதில் பிரமாணங் கூறுகின்றார்] செம்பொருள் = பரமான்மா, பலர்க்கு = அநேகம்பேர்களுக்கு, வினாதற்கும் = சிரவணித்தற்கும், மிக்க அரிது = அத்தியந்தந் துர்லபமாம், எனும் மறை = என்று கூறுகின்றது சுருதி,[இவ்வளவு கிரந்தத்தால் தடையிருக்கும்போது தத்துவசாக்ஷாத்காரமும் அதன் சாதனமான விசாரமும் சம்பவிக்கிறதில்லைஎன்றுகூறி இப்போது விசாரத்தில் வல்லமையின்றியவனும் மோக்ஷத்தை விரும்புபவனுமாகிய புருஷனால் யாது செய்யத்தக்கதென்று இச்சையுண்டாக "நாடத்தினியிலருமதைக் குருவால் வினவிச் சிந்தை செய்திடலாம்" என்று பத்தாவது செய்யுளில் யாது பிரதிஞ்ஞை செய்யப்பட்டதோ அதனையுபபாதனஞ் செய்கின்றார்] மட்டுஅற படர்மதி மாந்தத்தால் ஆதல் = அளவில்லாது மிகுந்த அதாவது அத்தியந்தம் புத்தியின் மூடத்தன்மையாலாவது, அலக்கண் தீர் குருபாடம் மேவாமையின் ஆதல் = துன்பத்தை ஒழிக்கும் ஆசாரியர் அத்தியான்ம சாஸ்திரம் முதலியவை கிடைக்காமையினாலாவது, தன்னை ஆய்ந்திடல் நிலக்கண் மேவுறாதவன் = ஆன்மாவை விசாரித்தலையுலகில் அடையாதவன், பிரமத்தையே நிதமும் நாடுதல் வேண்டும் = நிருவிசேஷ பரமான்மாவினையே (குருமுகமாகக்கேட்டு) எப்போதுமுபாசிக்கவேண்டும் எ—று. ஆதல் என்பது முன்னுங் கூட்டப்பட்டது. 21

(அ—கை)

அற்றேல் நிருவிசேஷப் பிரமத்திற்குக் குணமின்மையினால் அதனுபாசனை பொருந்தாதென்று சங்கித்து உபாசனையானது மனோ விருத்தியின் ஆவிருத்திவடிவமாதலால் சகுணப் பிரமத்திற்போன்று நிர்க்குணப் பிரமத்திலும் அது சம்பவிக்குமெனக் கூறுகின்றார்.

நிற்கு ணப்பர தத்துவ
வுபாசனை நேர்வுறு தெனறீதாஞ்
சற்கு ணப்பிர மத்தினே
ரிங்கெணஞ் சம்பவித் தலின்மேன்மேற்
சொற்கு ணக்குமெட் டாததை
நாடுத ரோமெனி னதுதன்னை
நற்கு ணம்பெற வறிந்திட
லுனுமே நவையெனச் சொலலாமே. 22

(ப—ரை) நிற்குணப் பரதத்துவ உபாசனை = சருவஞ்ஞத் தன்மை முதலிய குணங்களின்றிய நிருவிசேஷப் பிரமத்தினுபாசனை, நேர்வுறுதுஎனல் தீதாம் = சம்பவியாதுஎன்று சொல்லுதல் குற்றமாம், சற்குணப் பிரமத்தின்நேர் = சருவஞ்ஞத்தன்மை முதலிய நற்குண முடைய பிரமத்தின் உபாஸனை சம்பவிப்பதுபோல, இங்குஎணம்மேன் மேல் சம்பவித்தலின் = நிர்க்குணப் பிரம்மத்தில் மனோவிருத்தியின் ஆவிருத்தி வடிவஉபாசனை பொருந்துதலால் [அற்றேல் நிர்க்குணப் பிரம்மம் வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாமையால் உபாசிக்கத் தக்கதன்று என்று சங்கித்து உணர்வுபக்ஷத்திலும் இக்குற்றம் சமா னமாமெனக் கூறுகின்றார்] சொற்கும் உளக்கும் = வாக்கிற்கும் மனதிற்கும், எட்டாததை = விஷயமாகாததை, நாடுதல்தோம்எனின் = உபாசித்தல் குற்றமென்றுகூறின், அதுதன்னை = வாக்கிற்கும் மன திற்கும் விஷயமாகாத பிரம்மத்தை, நற்குணம்பெற = மேன்மை யடைதற்பொருட்டு, அறிந்திடலும் = உணர்தலும், நவையெனச் சொல்லலாம் = குற்றமெனக் கூறலாம் எ—று.

தோம் = குற்றம், உளக்கும்என்ற உம்மை முன்பும் கூட்டப் பட்டது, உளக்கு என்பது எதுகைநோக்கி உணக்கு எனத் திரிந்தது, சொல்லலாமென்பது இடைக்குறை. ஏ—அசை. 22

(அ—கை)

அற்றேல் பிரம்மம் வாக்கிற்கும் மனதிற்கும் அவிஷயமாம் என்று இவ்விதம் அறிதற்கு முடியும் என்று ஆசங்கித்து இப்படியே உபாசிப்பதற்கும் முடியுமெனக் கூறுகின்ருர்.

ஈது வாக்கெழு வாய்க்ககோ
சரவுரு வெனத்தெரி தரலாமே
லோது மிவ்வகை யுருவென
வுபாசனை யுஞற்றுத றகாவென்னே
தீது தீருபா சனையிஞுஞ்
சகுணமேற் றெறியினு மதுவாமாற்
கோது தீரிலக் கணையுரை
யாலது குறிப்பதே லுபாசிப்பாய். 23

(ப—ரை) ஈது = இந்நிர்க்குணப் பிரம்மம், வாக்கு எழுவாய்க்கு = வாக்கு முதலியவற்றிற்கு, அகோசரவுருவென = விஷயமாகாதவடிவமாமென்று, தெரிதரலாமேல் = அறியலாம் என்றுசொல்லின், இவ்வகை ஓதுவுருவென = இப்படியேசொல்லிய வாக்காதிகளுக்கு விஷயமாகாத வடிவமாம் என்று, உபாசனை உஞற்றுதல் = உபாசனையைச்செய்தல், என்னே தகா = ஏன் தகாது, [பிரம்மம் உபாசிக்கப்படுமேல் சகுணமாம் என்று ஆசங்கித்து உணர்வுபக்ஷத்திலும் சகுணமாமெனக்கூறுகின்ருர்] தீதுதீர் உபாசனையின் சகுணம்ஆமேல் = குற்றமற்ற உபாசனையால் பிரம்மம் குணமுடையதாமென்றுசொல்லின், தெரியினும் அதுவாம் = உணர்தலினுலும் பிரம்மம் சகுணமாகும், [அற்றேல் லக்ஷணுவிருத்தியை ஆசிரயித்தலால் உணர்வுபக்ஷத்தில் பிரமத்திற்குச் சகுணத்தன்மைப் பிராப்தியின்ருமென்று ஆசங்கித்து உபாசனையும் அவ்வாறே செய்யத்தக்கதெனக் கூறுகின்ருர்] கோதுதீர் இலக்கணை உரையால் = குற்றமற்ற இலக்ஷணுவிருத்தியால், அதுகுறிப்பதேல் = நிர்க்குணப் பிரம்மம் அறியப்படுமாயின், உபாசிப்பாய் = அவ்வாறே லக்ஷணுவிருத்தியால் அறியப்பட்ட பிரம்மத்தை உபாசனையுஞ்செய்வாய் எ—று ஆல்—அசை. 23

(அ—கை)

பிரம்மத்திற்கு உபாசிக்கத்தக்கதன்மை சுருதியால் நிஷேதிக்கப்படுகின்றது என வினவுகின்ருன்.

அன்னதே பரநீ யறிநினைப்
பதேத தையறி தரநீர்தி
என்னமா மறைபரத் துபாசனை
யினையிகழ் தருமென் பாயேற்
பின்னமா மறியினு மெனமறை
யதன்பிறங் கறிதலை நீக்கு
மின்னவா றதைச் சுருதியா
லறியலா மெனினத னுடே, 24

(ப—ரை) நீ அன்னதே பரம் அறி=நீ எதுவாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாதோ அதனையே பிரம்மம் என்று அறிவாய், நினைப்பதுஏது அதை=உபாசிக்கப்படுவதுஎதுவோ அந்தவஸ்துவை, அறிதரல்தீர்தி=பிரம்மம் என்று உணராதே, என்னமாமறை=என்று பெருமைபொருந்திய உபநிடதமானது, பரத்து உபாசனையினை யிகழ் தரும்=பிரம்மத்தின் உபாசனையை நிஷேதிக்கின்றது, என்பாயேல்= என்று கூறுவையாயின், "எது மனதினுல் நினைக்கப்படுவதின்றே எதனுல் மனது நினைக்கப்பட்டதாகின்றதோ அதனையே நீ பிரம்மம் என்று அறிவாய். எதனை உபாசிக்கின்றுர்களோஅது பிரம்மமல்ல" என்னும் இச்சுருதி உபாசிக்கப்படும் வஸ்துவிற்குப் பிரம்மத்துவத்தை நிஷேதிக்கின்றதென்பது பொருள்.[பிரம்மத்தின்கண் உபாசிக்கப்படுந் தன்மை நிஷேதிக்கப்படுவதுபோன்று அறியப்படுந்தன்மைக்கும் சுருதியால் நிஷேதம் சமானமாமெனக் கூறுகின்றுர்] அறியினும் பின்னமாம்=பிரம்மம் அறிபடுபொருளினும்வேறும், எனமறை=என்னுஞ் சுருதி, பிறங்கு அதன் அறிதலை நீக்கும்=விளங்காநின்ற பிரம்மத்தின் உணர்வை நிஷேதிக்கின்றது, பிரம்மம் அறிபடுபொருளினும் வேறு அறிபடாப்பொருளினும்வேறு என்று பிரம்மத்திற்கு வேத்தியத்தன்மையையும் நிவர்த்திக்கின்றதென்பது பொருள்[ அறிபடுபொருளினும் அறிபடாப்பொருளினும்பிரம்மம் வேறு என்று சுருதி பிரதிபாதிக்கிறது என்று சொல்லின் அவ்வாறே அறியலாமென்று சங்கித்து உபாசனையிலும் இது சமானமாமெனக் கூறுகின்றுர்]இன்னவாறு=இந்தப்பிரகாரம் அறிபடுபொருளினும் அறிபடாப்பொருளினும் அன்னியமாக,அதை சுருதியால் அறியலாமெனின்=பிரம்மத்தை உபநிடதத்தால் உணரலாமென்று சொல்லின், அதனுல்நாடு=அச்சுருதியினுல் அவ்வாறே உபாசிப்பாய் எ—று. ஏ—அசை. 24

(அ—கை)

அற்றேல் வேத்தியத்வம் பிரம்மத்திற்கு வாஸ்தவமன்று என்று சங்கித்து உபாஸ்யத்துவமும் அப்படியே என்று கூறுகின்றார்.

அறிப டுந்திற முண்மையன்
றெனினுபா சனையவா றுகாதா
வுறவி ருத்தியின் கலப்பறி
படலெனி னுபாசனைக் குமதொவ்வு
நிறையு பாசனை நேயமே
னுமக்கெனி னினக்கதின் வெறுப்பேன்சொல்
பெறுவ தின்றெென லளவை
யன்னதை மிகப்பேசலாற் பலவேதம். 25

(ப—ரை) அறிபடுந்திறம் உண்மை அன்று எனின் = வேத்தியத்துவம் வாஸ்தவம் அல்ல என்றுசொல்லின், உபாசனை அவாறு ஆகாதா = உபாஸ்யத்துவமும் கற்பிதம் ஏன் ஆகாது [அற்றேல் உணர்வு பக்ஷத்தில் விருத்தி பிரம்மாகாரமாயிருக்கின்றது,உபாசனையில் இன்று என்று சங்கித்து சத்தவலியினால் அதன் ஆகாரம் இரண்டிடத்தும் சமானமாமெனக் கூறுகின்றார்] உறவிருத்தியின் கலப்பு அறிபடல் எனின் = பிரம்மத்தில் மிகவிருத்தியின் வியாப்தியே வேத்தியத்துவமாமென்றுசொல்லின், உபாசனைக்கும் அதுஒவ்வும் = உபாஸ்யத்துவத்திலும் விருத்தியின் வியாப்தி சமானமாம் [யுத்தியற்ற நிந்தையோ உனது பக்ஷத்திலும் சமானமாமெனக் கூறுகின்றார்] உபாசனை நிறை நேயம் உமக்கு ஏன் எனின் = உபாசனையில் பூரணவிசுவாசம் தேவரீருக்கு எற்றிற்குஎன்று வினவின், நினக்கு அதின்வெறுப்புஏன்சொல் = உனக்கு உபாஸனையில் துவேஷம் எற்றிற்குக் கூறுவாய் [அற்றேல் நிர்க்குணப் பிரம்ம உபாஸனையில் பிரமாணமில்லையென்று சங்கித்து அனேக சுருதிகளில் அறியப்படுகிறபடியால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] அளவை பெறுவது இன்று எனல் = உபாஸசனையில் பிரமாணங் கிடைக்கவில்லையென்று சொல்லற்க, பலவேதம் அன்னதை மிகபேசலால் = அநேக சுருதிகள் அவ்வுபாஸனையை அதிகமாகக் கூறுதலால் எ—று. 25

(அ—கை)

மிகப்பேசலாற் பலவேதமென்று கூறிய பொருளேயே விரிக்கின்ருர்.

செய்ய வுத்தர தாபநீ
யம்பிர சினமொடு கடவல்லி
குய்ய மானமாண் டூகமா
தியவுநிர்க் குணவுபா ஸனேகூறுந்
துய்ய தானபஞ் சீகர
ணத்ததைத் தொடர்நெறி சொலப்பட்ட
தய்யந் தீரிது ஞானசா
தனமெனினி யாவனிங் கலவென்பான். 26

(ப—ரை) செய்ய உத்தரதாபநீயம்=சிறந்த உத்தரதாபநீய உபநிடதமும், பிரசினம்ஒடு=பிரசின உபநிடதமும், கடவல்லி = கட வல்லி உபநிடதமும், குய்யமான மாண்டூகம் ஆதியவும்=இரகசியமான மாண்டூக்கிய உபநிடதம் முதலியனவும், நிர்க்குண உபாஸனேகூறும்= சுத்தப் பிரம்மத்தினுபாசனேயைப் பிரதிபாதிக்கின்றன, தாபநீய உப நிடதத்தில் "அணுவுக்குமணுவான இவ்வான்ம வடிவ ஓங்காரத்தை எங்களுக்குக் கூறுவீராக என்று தேவர்கள் பிரஜாபதியினிடத்துச் சொன்ஞர்கள்" என்பது முதலியவற்ருல் அனேகப்பிரகாரம் நிர்க்குண உபாஸனே கூறப்படுகின்றது. பிரசினேபநிடதத்தில் ஐந்தாவது வினவில் "எவன் மூன்று மாத்திரையையுடைய ஓம் என்னும் இவ் அக்ஷரத்தாலேயே பரமான்மாவை தியானஞ்செய்வனே" என்று கூறப்படுகின்றது, கடவல்லியில் "எல்லா வேதங்களும் எந்தப் பிரம் மத்தைக் கூறுகின்றனவோ" என்ருரம்பித்து "ஓம் என்னும் இந்த அக்ஷரமே பிரம்மம் ஓம் என்னும் இந்த அக்ஷரமே சிரேஷ்டமாகிய ஆலம்பனமாம் என்பது முதலியவற்ருல் பிரணவத்தின் உபாஸனே சொல்லப்படுகின்றது. மாண்டூக்கிய உபநிடதத்தில் "ஓம் என்னும் இவ்அக்ஷரமே ஈதனேத்துமென்பது முதலியவற்ருல் அவஸ்தாத்திரயா தீத துரிய சாக்ஷிவடிவ பிரம்மத்தின் உபாசனேயே கூறப்படுகின்றது. ஆதி சத்தத்தால் தைத்திரீயம் முண்டகம் முதலியனவும் கொள்ளப் படுகின்றன. [அற்றேல் நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனே எப்படி

அநுஷ்டிக்கத்தக்கதெனிற் கூறுகின்றார்] துய்யதான பஞ்சீகரணத்து = பரிசுத்தமான பஞ்சீகரணமென்னும் நூலில், அதை தொடர்நெறி சொலப்பட்டது = அவ்வுபாசனையை அநுஷ்டிக்கும்வழி கூறப்பட்டுளது ஆண்டு உணர்க. [அற்றேல் இவ்வுபாஸனை ஞானத்திற்கே சாதனம் முத்திசாதனமன்றென்று சங்கித்து பிரம்மத்தின் உபாஸனையாலும் முத்தனாகின்றான் என்று கூறும் எமக்கு அஃது இஷ்டமாமெனக் கூறுகின்றார்] ஐயம்தீர்இது = சமுசயமற்ற இவ்வுபாசனையானது, ஞான சாதனம் எனின் = ஞானத்திற்கே சாதனமென்று சொல்லின், யாவன் இங்கு அல என்பான் = எவன் இவ்விஷயத்தில் அல்லவென்று சொல்பவன் எ—று. 26

(அ—கை)

அற்றேல் சகுணப் பிரம்மத்தின் உபாஸனையே எல்லோராலும் அநுஷ்டிக்கப்படுகிறது நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனை அநுஷ்டிக்கப்படவில்லையேயென்று சங்கித்து பிரமாணத்தாற் சித்தித்த அவ்வுபாஸனையை மறுத்தல் தகுதியன்றெனக் கூறுகின்றார்.

ஒருவ னுந்தொடர் கிலனிதை யெனிற்றொடர்
 பொழிந்துபோ குகவிங்குப்
புருட னின்னிழி வாலுய ருபாஸனை
 பொருந்துமோ விகழ்வன்றே
மருவி வற்றினும் வசியமா தியபுரி
 மந்திரங் களைமீக்கொண்
டுருவி யற்றுக பாமர ரிவற்றினு
 முழவுசெய் குகமாதோ. 27

(ப—ரை) ஒருவனும் இதை தொடர்கிலன் எனின் = உலகில் எவனும் இவ்வுபாஸனையை அநுஷ்டிக்கின்றிலன் என்று சொல்லின், இங்கு தொடர்பு ஒழிந்துபோகுக = ஈண்டு அநுஷ்டானமில்லாமற் போகுக, புருடனின் இழிவால் = ஆடவருடைய அநுஷ்டிக்கப்படாததாகிய அபராதத்தால், உபாஸனையிகழ்வு பொருந்துமோ = உபாஸனை தோஷத்தை அடையுமா, [பிரமாணத்தாற் சித்தித்ததற்கு அநுஷ்டானத்தினின்மையினால் தள்ளத்தக்கதாந்தன்மையின்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] வசியம் ஆதிபுரிமந்திரங்களை = வசியம் முதலான

சித்திகளைச் செய்யும் மந்திரங்களை, மருவு இவற்றினும் மீக்கொண்டு= பொருந்தாநின்ற இச்சகுணப்பிரம்மஉபாஸனையினும் மேலாகக்கருதிக் கொண்டு, உருஇயற்றுக=மூடர்கள் ஜெபிக்குக, பாமரர்=அத்தியந்தம் மூடர்கள், இவற்றினும் மீக்கொண்டு=மந்திரங்களினும் உழவாதியை மேலாகக் கருதிக்கொண்டு, உழவு செய்குக =பயிர்த்தொழிலைச் செய்குக எ—று.

இவற்றினும் பாமரர்=மூடரினும் அத்தியந்த மூடர் எனவும் பொருள்படும். அன்று, ஏ—அசை.

மாதோ முன்னிலை அசை.

ஈண்டு இஃது அபிப்பிராயம்:- காலாந்தரத்தில் உண்டாகும் பலனையுடைய சகுணப் பிரம்மத்தின் உபாஸனைகளைக்காட்டிலும் வஸியம் முதலியவற்றைச்செய்யும் மந்திரங்களின் இகலோகபலத்தைக் கொடுக்குந் தன்மைவடிவ மேன்மையை அறிந்து மூடர்களுக்கு அந்த மந்திர ஜபாதியில் பிரவிருத்தியுண்டாயினும் விவேகிகளால் சகுணப் பிரம்மஉபாசனை தள்ளப்படாததுபோலும் நியமமாக அநுஷ்டானத்தை அபேக்ஷிக்கின்ற அம்மந்திரங்களைக்காட்டிலும் உழவு முதலியவற்றில் நியமத்தை அபேக்ஷியாததாகிய மேன்மையை நினைத்து அத்தியந்தம் மூடர்களுக்கு அதில் பிரவிருத்தி உண்டாயினும் அந்த மந்திரானுஷ்டானம் தள்ளப்படாததுபோலும் சம்சாரத்தில் உள்ள பயனை இச்சிப்பவருக்கு நிர்க்குணப் பிரம்ம உபாஸனையின் அநுஷ்டானம் இல்லாவிடினும் முமுக்ஷுக்களால் நிர்க்குணப் பிரம்ம உபாஸனை தள்ளப்படுகிறதில்லையென்பது. 27

(அ—கை)

இந்தப் பிரகாரம் பிரசங்கத்தால் வந்ததைச் சமாப்திசெய்து எடுத்துக்கொண்ட நிர்க்குண உபாஸனையை அனுசரிக்கின்றார்.

பாமரர்நிற் குகபகுத நிர்க்குணமா
முபாஸனையைப் பகரு வேமாற்
கோமருவு வித்தையொன்று கலிற்சாகை
யனைத்தினுஞ்சொற் குணமிங் கோவத்
தூமருவா னந்தாதி விதேயகுண
சாலத்தின் சுவீகா ரத்தை
யேமருவா னந்தாதி யெனுமிச்சூத்
திரத்திசைத்தா னெழில்வி யாதன். 28

(ப—ரை) பாமரர் நிற்குக=மூடர்கள் இருக்குக, பகுத நிர்க் குணமா உபாஸனையை=ஆரம்பித்த சுத்தப் பிரமத்தின் உபாஸனையை, பகருவேம்=இப்பொழுது கூறுகின்றேம், ["சர்வ வேதாந்தப் பிரத்தி யயம் சோதனுதி அவிசேஷாத்" என்று சொல்லப்பட்ட நியாயத்தால் நிர்க்குண உபாஸனை ஒன்ருதலால் அந்தந்த சாகைகளில் கேட்கப் பட்டனவாகிய உபாசிக்கத் தகுந்த குணங்களை ஈண்டு உபசம்மாரஞ் செய்து உபாசனை செய்யத்தக்கதெனக் கூறுகின்ருர்] கோமருவும் வித்தை ஒன்ருகலின்=மேன்மை பொருந்திய நிர்க்குண உபாசனை யானது ஏகமாவதால், சாகை அனைத்தினும் சொல்குணம்=சுருதிகள் எல்லாவற்றிலும் சொல்லப்பட்ட குணங்களை. இங்கு ஓவ=இவ்வுபா ஸனையில் சேர்க்குக, அல்லது குணங்கள் சேர்க [அக்குணங்களும் விதிக்கத் தக்கனவும் நிஷேதிக்கத் தக்கனவும் என இருவிதங்களாம், அவற்றுள் "ஆனந்தம் பிரம்மம்" "விக்ஞானமும் ஆனந்தமுமாகப் பிரம்மம் உளது'' ''நித்திய சுத்தன் புத்தன் சத்தியன் முத்தன் நிரஞ் சனன் விபு அத்வயன் ஆனந்தன் பரன் பிரத்தியக்கு ஏகரசன்" என்பது முதலிய யாதொரு விதிக்கத்தக்க குணங்கள் உள்ளனவோ அவைகளின் உபசம்மாரம் "ஆனந்தாதிகள் பிரதானத்திற்கு" என்னும் அதிகரணத்தில் சொல்லப்பட்டதெனக் கூறுகின்ருர்] தூமருவு = தூய்மை பொருந்திய, ஆனந்தாதி விதேயகுண சாலத்தின் = ஆனந்தம் முதலிய விதிக்கத் தக்க குண சமுகத்தின், சுவீகாரத்தை= கிரகித்தலை, ஏமம் மருவு ஆனந்தாதி எனும இச்சூத்திரத்து=இன்பம் பொருந்திய ஆனந்தம் முதலிய என்னும் இந்தப் பிரம்ம சூத்திரத்தில், எழில்வியாதன் இசைத்தான்=சிறந்த வியாசபகவான் கூறினுன் எ-று.

ஆல்—அசை.

ஏமமருவு என்பது எதுகைநோக்கி ஏமருவு என இடைக்குறை யாயிற்று.

28

(அ—கை)

"அஸ்தூலம் அநணு அஹ்ரஸ்வம் அதிருசியம் அக்கிராஹ்யம் அசப்தம் அஸ்பரிசம் அரூபம் அவ்வியயம்" என்பது முதலிய யாதொரு நிஷேதிக்கத்தக்க குணங்கள் அவ்வவ்விடங்களில் வினவப்பட்டனவோ அவைகளின் கிரகணம் ''அக்ஷரதியாம்'' என்னும் அதிகரணத்தில் வியாசபகவாஞல் கூறப்பட்டுளதெனக் கூறுகின்ருர்.

அவ்வகை யத்தூலாதி நிடேதகுண
சாலமதை யணவ றன்னைத்
தவ்வறுமக் கரந்தெருண்டோர்க் கென்னு
மிச்சூத் திரத்தன்னேன் சாற்றினனற்
செவ்வுறுநிர்க் குணப்பிரம தத்துவவித்
தையிற்குணங்கள் செறியு மென்ற
லொவ்வுமதோ வென்னவியா தனைநோக்கிக்
கேளெனைப்பார்த் துரைசெய் யாதே. 29

(ப—ரை) அவ்வகை = அவ்வாறு அதாவது விதேயகுணத்தின் கிரகணம்போன்று, அத்தூலாதி நிடேதகுண சாலமதை = அஸ்தூலம் முதலிய நிஷேதிக்கத்தக்க குணசமுதாயத்தை, அணவல்தன்னை = கிரகித்தலே, தவ்அறும் அக்கரம் தெருண்டோர்க்கு என்னும் இச் சூத்திரத்து = கெடுதலின்றிய அக்ஷரப் பிரம்மத்தை அறிந்தவர்க்கு என்னும் இந்தப் பிரம்ம சூத்திரத்தில், அன்னேன் சாற்றினன் = அக் கரந்தெருண்ட வியாசபகவான் கூறினன். [அற்றேல் நிர்க்குணப் பிரம்ம வித்தையில் குணங்களைக் கிரகித்தலே பொருந்தாது நிர்க்குண வித்தைக்கு விரோதமாவதால் என்று சங்கித்து சூத்திரக்காரரால் இங் ஙனஞ் சொல்லப்பட்ட உபசம்மாரம் நம்மால் சொல்லப்படுகிறபடியால் எம்மைக் குறித்து இந்தச் சங்கையுசிதமன்றெனக் கூறுகின்றார்] செவ்உறும் = சிறப்புப்பொருந்திய, நிர்க்குணப் பிரம்ம தத்துவ வித்தையில் = நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனையில், குணங்கள் செறியும் என்றல் = ஆனந்தாதி அஸ்தூலாதி குணங்கள் பொருந்து மென்று சொல்லுதல், ஒவ்வுமதோ = பொருத்தமுடையதாகுமா ஆகாது, என்னவியாதனை நோக்கிக்கேள் = என்று வியாசபகவானைப் பார்த்துக்கேட்பாய், எனைப்பார்த்து உரை செய்யாதே = என்னை நோக்கி வினவாதே எ—று.

ஆல்—அசை. 29

(அ—கை)

சுவர்ணதாடி முதலிய குணவிசிஷ்டமூர்த்திகளைக் கூறுமையால் இது நிர்க்குண உபாஸனையே எனின் அப்பொழுது விரோதமில்லை எனக் கூறுகின்றார்.

பொன்மயநற் ருடியனென் றூழ்முதலா
மூர்த்திகளைப் புகலா வாற்ருற்
றன்மயநிர்க் குணத்தன்மை முரணுவா
லெனினின்பஞ் சார்வாய் நீயே
பன்மயவக் குணங்கள்குறிப் பனவாகித்
தத்துவத்துட் படுத லின்றேற்
சின்மயவிவ் வகைதானே பிரமதத்து
வத்தையுபா சித்தல் வேண்டும். 30

(ப—ரை) பொன்மய நல் தாடியன் = சுவர்ணமயமான நல்ல தாடியினையுடையவனுகிய, என்றூழ் முதலாம் மூர்த்திகளை = சூரியன் முதலானவரது வடிவங்களை, புகலாவாற்ருல் = கூறுதபடியால், தன்மய நிர்குணத்தன்மை முரணு எனின் = பிரம்மமய நிர்க்குணத்தன்மைக்கு குணேபசம்மார நிமித்தகமான விரோதம் வராது என்றுசொல்லின், நீ இன்பம் சார்வாய் = நீ சுகத்தை அடையக்கடவாய், [அற்றேல் ஆனந்தாதி அஸ்தூலாதி குணங்களுக்கு உபாசிக்கத்தக்க வஸ்துவின் சொரூபத்தில் புகுதலின்மையினுல் அக்குண விசிஷ்டமாக எப்படியுபாஸிக்கத்தக்கது என்ரு சங்கித்து அவைகளுக்குச் சொரூபத்தினுள் புகுதலின்றேனும் அவைகளுக்கு லக்ஷகத்தன்மை சம்பவித்தலால் அவைகளால் லக்ஷிக்கப்பட்ட பிரம்மம் உபாசிக்கத்தக்கதெனக் கூறுகின்ருர்] பன்மய அக்குணங்கள் குறிப்பனவாகி = அநேகங்களான ஆனந்தாதி அஸ்தூலாதி குணங்கள் இலக்ஷகங்களாகியிருத்தலின், தத்துவத்து உள்படுதல் இன்றேல் = பிரமத்தில் பிரவேசியா என்று சொல்லின், இவ்வகையே = இந்தப்பிரகாரமே, சின்மய பிரம்ம தத்துவத்தை உபாசித்தல் வேண்டும் = சித்ரூபப் பிரமத்தைத் தியானிக்க வேண்டும் எ—று.

ஆல், ஏ—அசை நிலைகள். 30

(அ—கை)

அவ்வாறு உபாசிக்கும் பிரகாரத்தையே தெரிவிக்கின்ருர்.

இங்கான ந் தாதிகளா லத்தூலா
திகளாலு மிலக்கம் பெற்றே
யெங்காரு மகண்டவொரு சுவையான்மா
நாஞமென் றெண்ண லாமாற்
றங்கா நின் றிடுஞான வுபாசனைக்கும்
வேற்றுமைதான் சாற்றக் கேளாய்
சிங்கார ஞானம்வத்து தந்திரமாங்
கருத்துருதந் திரமற் ருமே. 31

(ப—ரை) இங்கு = இந்த சுருதிகளில், ஆனந்தாதிகளாலும் அத்தூலாதிகளாலும் = ஆனந்தம் முதலிய விதேயகுணங்களாலும் அஸ்தூலம் முதலிய நிஷேத்திய குணங்களாலும், இலக்கம்பெற்ற = இலக்ஷிக்கப்பட்ட, எங்கு ஆரும் அகண்ட ஒருசுவை ஆன்மா = எவ்விடங்களிலும் நிறைந்துள்ள அகண்ட ஏகரசப் பிரம்மம்,நானும் என்று எண்ணலாம = யானுகின்றேன் என்று முமுக்ஷுக்கள் உபாசிக்கலாம். [இவ்வாருயினும் ஞானத்திற்கும் உபாசனைக்கும் எதனுல் பேதம் என்று சங்கித்து வஸ்துவினதீனத்தாலும் கர்த்தாவினதீனத்தாலும் பேதமாம் எனக் கூறுகின்ருர்] தங்கா நின்றிடு ஞான உபாசனைக்கும் = மனதின் விருத்தி ருபத்தால் தங்கியிருக்கும் வித்தைக்கும் உபாசனைக்கும், வேற்றுமை சாற்றக் கேளாய் = பேதத்தைக் கூறக் கேட்பாய். சிங்கார ஞானம் வத்துதந்திரமாம் = சிறந்த ஞானமானது பிரமாண பிரமேயங்களின் அதீனமாம்,மற்று கருத்துரு தந்திரமாம் = உபாசனை புருஷனது அதீனமாம் எ—று.

ஆல், ஏ—அசை. 31

(அ—கை)

உபாசனையினின்றும் ஞானத்திற்கு மற்றேர் விலக்ஷணத் தன்மை சித்திக்கும்பொருட்டு ஞானத்திற்குக்காரணம் முதலியவற்றைத் தெரிவிக்கின்ருர்.

சிந்தனையால் ஞானமுதித் திடுமிச்சை
  தீரினுந்தீ ராது நிற்கும்
வந்துறன்மாத் திரத்தாற்றன் பவத்தகிலம்
  வாய்மையெனன் மடியப் பண்ணு
முந்துதலாற் கிருதகிருத் தியம்புணர்ந்து
  நிததிருத்தி முதிரப் பெற்றுப்
பந்தமறு சீவன்முத்தி யடைந்துபிரா
  ரத்தமறல் பார்க் கலாமே. 32

(ப—ரை) சிந்தனையால் ஞானம் உதித்திடும்=ஆன்ம சொரூபத்தை விசாரித்தலால் உணர்வு உத்பத்தியாகும், (மேலும்) இச்சை தீரினும்=தத்துவஞானம் இருக்கவேண்டும் என்கின்ற இச்சை இல்லாவிடினும், தீராது நிற்கும்=ஞானம் நீங்காது இருக்கும், விசாரத்தால் உண்டாகும் ஞானத்தை ஞானம் வேண்டாம் என்னும் அநிச்சை நிவர்த்திக்காதென்பது பொருள், தான் வந்துறன் மாத்திரத்தால் = தனது உற்பத்திமாத்திரத்தால், பவத்து அகிலம் வாய்மையெனல் = சம்சாரத்தில் சகலப் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையையும், மடியப் பண்ணும்=நாசமாக்கும், முந்துதலால்=தத்துவ ஞானம் தலைப்படுதல் மாத்திரத்தால், கிருதகிருத்தியம் புணர்ந்து=செய்யத்தக்கன அனைத்தையும் செய்தவனாகி, நிததிருத்தி முதிரப்பெற்று = எப்போதும் சந்தோஷத்தை அதிகமாக அடைந்து, பந்தமறு சீவன் முத்தி யடைந்து = கருத்துருத்துவாதி பந்தமின்றிய சீவன் முத்தியைப் பெற்று, பிராரத்தம் அறல் = பிராரத்த கருமத்தின் க்ஷயத்தை, பார்க்கலாம்=எதிர்பார்த்துக்கொண்டிருக்கலாம், தத்துவஞானத்தின் உற்பத்தி மாத்திரத்தால் நிரதிசய சுகத்தை அடையலாமென்பது பொருள் எ—று. 32

(அ—கை)

உபாசனைக்கும் ஞானத்தில் நின்றும் வேறு வைலக்ஷண்யம் சித்திக்கும்பொருட்டு உபாசனையின் காரண முதலியவற்றைத் தெரிவிக்கின்றார்.

சிரத்தையுடை யோனுத்த னுபதேசந்
　　தனை நம்பிச் சிந்தி யாமே
கருத்திதரத் தான்மாறு பாடாகா
　　விருத்திகளாற் கருதல் வேண்டுந்
திருத்தமுறக் கருதுருவ வபிமானந்
　　தனக்குண்டாய்த் திகழு மட்டுஞ்
சரித்தலறச் சிந்தித்த படிமேலுஞ்
　　சாங்காறுந் தரித்தல் வேண்டும். 33

(ப—ரை) சிரத்தையுடையோன் = குரு முதலியோரிடத்து விஸ்வாசமுடைய புருஷன், ஆத்தன் உபதேசந்தனை = குருவினது (உபாசிக்கத்தக்கசொரூபத்தைப்பிரதிபாதிக்கும்)வாக்கியக்கூட்டத்தை, நம்பி = விசுவசித்து, சிந்தியாமே = (உபாசிக்கத்தக்க சொரூபத்தை) விசாரியாமல், கருத்து இதரத்தால் = கடாதி விஷயக விஜாதீயவிருத்திகளால், மாறுபாடு ஆகாவிருத்திகளால் = மறைக்கப்படாத சஜாதீய விருத்திகளால், கருதல் வேண்டும் = சிந்திக்கவேண்டும், [எவ்வளவு காலம் சிந்திக்கவேண்டும் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்] தனக்கு = உபாசகனாகிய தனக்கு, திருத்தமுற கருதுஉருவ அபிமானம் உண்டாய் திகழுமட்டும் = நன்றாக தியேய சொரூபத்தின் அபிமானம் உண்டாய்விளங்கும் பரியந்தமும், சரித்தல்அறசிந்தித்து = சலனமின்றி உபாசித்து, அப்படி மேலும் = அவ்விதமே பின்னரும், சாங்காறும் தரித்தல்வேண்டும் = இறக்கும்பரியந்தமும் இருத்தல்வேண்டும் எ—று.

அப்படியென்பதில் பகரமெய் இடைக்குறை. 33

(அ—கை)

உபாசகனுக்கு உபாஸ்ய வடிவத்தின் அபிமானத்தைத் திருஷ்டாந்தத்தைக் காட்டலால் ஸ்பஷ்டஞ் செய்கின்றார்.

வன்னியொரு வன்பசியா லிரக்கவந்து
சம்பர்க்க மாஞா னத்தாற்
றுன்னியசம் பர்க்கவுரு விளைச்சித்தத்
துண்ணிறுவித் துலக்கி ஞனே
மன்னுமுபா சனைபுருட வாஞ்சையினுற்
செயத்தவிர மற்ருென் ருக்கப்
பின்னுமெளி ததனுனித் தலுந்தெளிவின்
சந்ததியைப் பெலக்கச் செய்க. 34

(ப—ரை) சம்பர்க்க மா ஞா ன த் தா ல் துன்னியவன்னி ஒருவன் = ஸம்வர்க்கமென்னும் வாயுவினது பெரிய வித்தையோடு கூடிய ஒரு பிரம்மசாரி, பசியால் இரக்கவந்து = பசியின்கொடுமையால் பிக்ஷையேற்க (அபிப்பிரதாரியென்னும் க்ஷத்திரியனது கிரகத்திற்கு) வந்து, சம்பர்க்க உருவினை சித்தத்துள் நிறுவி = வாயு வடிவத்தை மனதில் தரித்து, துலக்கினுன் = அவனது முன்பு பிரகாசிப்பித்தான். சம்வர்க்கத்துவகுண விசிஷ்ட பிராணனையுபாசிக்குமொரு பிரம்மசாரி பலியேற்றற்பொருட்டு அபிப்பிரதாரியெனப் பெயரிய அரசன்முன்பு= நான்கு மகான்மாக்களை உலகைக் காக்கும் ஒருதேவன் விழுங்கினுன் காபேய. அபிப்பிரதாரி, அநேகப் பிரகாரமாக வசிக்குமவனை மனிதர்கள் அறிகின்ருர்களில்லை" என்னும் மந்திரத்தால் சித்தத்தில் தரிக்கப்பட்ட தனது ஸம்வர்க்க வடிவத்தைப் பிரகடஞ் செய்தானென்று சாந்தோக் கியத்தில் கேட்கப்படுகின்றதென்பது பொருள். [மரணபரியந்தம் தரித்தலில் நிமித்தத்தைக் காண்பிக்கின்றவராய் இச்சைதீரினும் தீராது நிற்கும் என்று சொல்லப்பட்ட ஞான தருமத்தினும் வேற்றுமையைக் கூறுகின்ருர்] மன்னும்'உபாசனை = பொருந்தாநின்ற தியானத்தை, புருடவாஞ்சையினுல் = உபாசக புருஷனதிச்சையினுல், செயதவிர பின்னும் மற்ருென்ருக்க எளிது=செய்யவும் விடவும் மற்றும் வேறு விதமாகச் செய்யவும் கூடும், அதனுல் = புருஷனதிச்சையினதீனமா யிருத்தலால், தெளிவின் சந்ததியை = விருத்தியின் பிரவாக வடிவ உபாசனையை, நித்தலும் பெலக்கச் செய்க = எப்போதும் திடமாகச் செய்யவேண்டும் எ—று. 34

அக்கினி, சூரியன், சந்திரன், ஜலம் என்னும் இந்த மகாபல முடைய நான்கையும் வாயு அதிதெய்வ (சமஷ்டி) வடிவத்தால் தன்னிடத்தில் சம்வர்ஜனம் (பிரளய காலத்தில் விலயம்) செய்கின்ருன், அதனுல் வாயு சம்வர்க்கம்(சம்வர்க்கத்தன்மை வடிவகுணமுடையவன்) எனப்படுகின்ருன். வாக்கு, சக்ஷு, சுரோத்திரம், மனமென்னும் இந் நான்கையும் எதனுல் வாயுஅத்தியாத்ம (வியஷ்டிப்பிராண) வடிவத்தால் விழுங்குகின்றதோ அதாவது சுழுத்திகாலத்தில் தன்னிடத்து ஒடுக்குகின்றதோ, அதனுலும் வாயு சம்வர்க்கமெனப்படுகிறது.

சாந்தோக்கியத்தின் நான்காவது அத்தியாயத்தில் மூன்ருவது கண்டத்தில் இக்கதை இருக்கின்றது:— ஒரு சுனகனென்னும் ராஜாவின் புத்திரன் சௌனகனென்னும் பெயருடைய காபேயன் அதாவது கபிகோத்திரத்தில் பிறந்த அரசன் இருந்தான். அன்றியும் கக்ஷசேனனென்னும் இராஜாவினது புத்திரன் காக்ஷசேனி அபிப்பிரதாரியென்னும் பெயருடைய மற்ருேர் அரசனிருந்தான். அவ்விருவரும் போஜனஞ் செய்தற்பொருட்டு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்கு அன்னம் பரிமாறிக்கொண்டிருந்தார்கள். அப்போது பிரஹ்மவித்துத் தன்மையின் அபிமானமுள்ள ஒரு பிரஹ்மசாரி பிச்சை கேட்டான். அந்தப்பிரஹ்மசாரியின் பிரஹ்மவித்துத்தன்மையபிமானமுடைமையை அறிந்து, அதனையறிய விருப்புள்ளவர்களாய் அவ்விரண்டரசர்களும் இப்பிரஹ்மசாரி என்ன சொல்லுவான்? கேட்போமென்னும் அபிப்பிராயத்தினுல் அவனுக்குப் பிச்சைகொடுக்கவில்லை. அப்போது அந்தப் பிரஹ்மசாரி "ஒரு (வாயுவும் பிராணனுமாகிய) தேவன் பிரஜையின் பதியாவன். அவன் மகாபலமுடைய அக்கினி முதலிய மகாத்மாக்களையும் வாக்கு முதலிய நான்கினையும் விழுங்குகிருன் அதாவது தன்கண் ஒடுக்கிக்கொள்ளுகிருன். புவனங்களையும் அதாவது பிருதிவியாதி சகல லோகங்களையும் இரக்ஷிப்பவனுயிருக்கின்ருன். காபேயரே! காபிகோத்திரத்திலுண்டானவரே! அபிப்பிரதாரியே! அத்தியாத்ம அதிதெய்வ அதிபூதத்தன்மைகளால் வாசஞ் செய்யும் அந்தப் பிரஜாபதியினை அவிவேகிகளாகிய மனிதர் காணுர்கள். எதன் பொருட்டு நாடோறும் பக்ஷணம்செய்ய இவ்வன்னம் ஆக்கப்படுகின்றதோ,அந்தப் பிராணவடிவப்பிரஜாபதிக்கு இவ்வன்னத்தினை நீங்கள்கொடுக்கவில்லை" என்று சொல்லத் தொடங்கினுன். இவ்வாறு அந்தப் பிரஹ்மசாரி தனது உபாசியமான பிராணனது சொருபத்தை தன்னேடு அபேதமாக அபிமானித்துப் பிச்சை கேட்டான். ஆதலால் உபாசிய வஸ்து

வினைத் தனது சொருபமாக அபிமானித்தல் உபாசனைக்கு அவதியாம். இவ்வர்த்தம் பிரசங்கத்தால் அறிவிக்கப்பட்டது.

(அ—கை)

இவ்வாறு எப்போதும் சிந்திப்பதனால் என்ன உண்டாகிற தெனிற் கூறுகின்றார்.

தெளிவுறமா மறையோது வோன்செபிப்போன்
வாதனையின் றிடத்தி னாலே
யொளிர்கனவி லோதல்செபித் திடல்போலுந்
தியானியுமே யுபாசிப் பான
லெளிதுபடர் தருநினைவெல் லாம்விடுத்து
நிரந்தரமு மெண்ணு நின்றாற்
களிதருவா தனைத்திட்பத் தாற்கனவா
தியின்கண்ணுங் கருத்துத் தோன்றும். 35

(ப—ரை) தெளிவுற = பிரமாதமின்றி, மாமறை ஓதுவோன் = பெருமைபொருந்திய வேதங்களையெப்போதும் அத்தியயனஞ் செய்யுந் தன்மையனும், செபிப்போன் = எப்போதும் ஜெபஞ் செய்யுந்தன்மை யனும், வாதனையின் திடத்தினால் = மிகுதியான அத்தியயன ஜபங் களாற் சனித்த மிகுதியான வாசனைகளால், ஒளிர்கனவில் ஓதல் சபித் திடல்போலும் = விளங்கா நின்ற சொப்பனத்தில் அத்தியயனஞ் செய் தலும்செபம்செய்தலும்போலவும், தியானியும் உபாசிப்பான் = உபாசக னாகிய புருஷனும் வாசனையின் திடத்தால் சொப்பனம் முதலியவற் றிலும் தியானஞ் செய்வான், [கனவு முதலியவற்றிலும் தியானம் தொடர்ந்திருப்பதில் காரணங் கூறுகின்றார்] எளிது படர்தருநினைவு எல்லாம் விடுத்து = அனாயாசமாக எழுகின்ற விஷய சங்கற்பங்களனைத் தையும் பரித்தியாகஞ்செய்து, நிரந்தரமும் எண்ணு நின்றால் = இடை விடாத தியானத்தால் உண்டாகின்ற, களிதருவாதனை திட்பத்தால் = சந்தோஷத்தைக்கொடுக்கும் திடவாசனையால், கனவாதியின்கண்ணும் கருத்துதோன்றும் = சொப்பனம் முதலியவற்றிலும் தியானம் பிறக்கும் எ—று. ஆல்—அசை. 35

(அ—கை)

ஆனால் பிராரத்த கருமவசத்தால் விஷயங்களையனுபவிக்கும்

புருடனுக்கு இடைவிடாமல் தியானம் எப்படி சித்திக்குமென்று சங்கித்து விருப்பம் மிகுதியாயிருக்கின் விஷயங்களில் ஆசத்தியுடைய புருடன் போல தியானம் சித்திக்குமெனக் கூறுகின்றார்.

தனதுபிரா ரத்தநுகர்ந் திடினுமவா
வதிகரிக்கிற் றெனெஞ் ஞான்று
மனதுதியா னிப்பவெளி தையமிலைப்
பரபுருட மயல்கொ ணாரி
தனதுமனைத் தொழில்தவறா மற்செயினும்
பரபுருடன் றன்னைக் கூடி
மனதுளுறு சுகவிரத மதுதனையே
யனுபவித்தன் மானு மன்றே. 36

(ப—ரை) தனது பிராரத்தம் நுகர்ந்திடினும் = தன்னுடைய பிராரத்தவினையின் பயனைப் புசிப்பவனாயினும், அவா அதிகரிக்கின் = தியானத்தில் ஆசை மிகுதியாயின், எஞ்ஞான்றும் = எப்போதும், மனது தியானிப்ப எளிது = சித்தம் தியானஞ்செய்ய வல்லமையுடையதாம், ஐயம் இலை = இதில் சந்தேகமில்லை, [திருஷ்டாந்தங் கூறுகின்றார்] பர புருடமயல்கொள்நாரி = அன்னிய புருஷன்மீது ஆசையினையுடைய ஸ்திரீயானவள், தனது மனைத்தொழில் தவறாமல் செயினும் = தனது வீட்டின் வியாபாரத்தைக் கெடுதலின்றிச் செய்தாலும், பரபுருடன் றன்னைக்கூடி = அன்னிய புருஷனைச் சேர்ந்து, அதனால் மனதுள் உறுசுக இரதமது தனையே = மனதில் பொருந்தாநின்ற ஆனந்தவடிவ இரசத்தையே, அநுபவித்தல் மானும் = ஆஸ்வாதனஞ்செய்வது போலும் ஆம் எ—று.

தான், அன்று, ஏ—அசைநிலைகள். 36

(அ—கை)

பரமபுருஷனது சேர்க்கையாற் செனித்த சுகத்தை யாஸ்வா தனஞ் செய்யின் மனைத்தொழில் தவறுதலையடையும் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

மற்றொருவன் கூட்டுறவை நுகர்தருநா
  ரியர்க்குந்தன் மனையின் செய்கை
பற்றறவிட் டுப்போகா மற்றிதுதான்
  பிறழ்வுபட்டே பற்றி நிற்கும்
பெற்றமனைத் தொழில்வேட்கை யுறுநாரி
  யதைநன்கு பேணிச் செய்யு
மற்றெனமற் றொருவன்பெட் பணுநாரி
  யெவ்வாற்று மாற்றுங் கொல்லோ. 37

(ப—ரை) மற்றொருவன் கூட்டுறவை நுகர்தரு நாரியர்க்கும் = பரபுருஷனது சேர்க்கையை ஆஸ்வாதனஞ் செய்கின்ற பெண்களுக்கும், தன் மனையின் செய்கை = தன் வீட்டின் காரியம், பற்று அறவிட்டுப் போகா = தொடர்ச்சியின்றி நீங்கிப்போகாது, தடைபடாதென்பது பொருள், மற்று = பின்னையோ, இது பிறழ்வுபட்டே பற்றி நிற்கும் = மனைத்தொழில் ஆபாத ரூபத்தால் (போலியாக) விளங்குவதாகியே தொடர்ந்திருக்கும், [பிறழ்வுபட்டு பற்றிநிற்குமென்று கூறிய பொருளையே விரிக்கின்றார்] பெற்றமனைத் தொழில் வேட்கை உறும் நாரி = தானடைந்த வீட்டின் வியாபாரத்தில் விருப்பமுடைய ஸ்திரீயானவள், அதை நன்கு பேணிச் செய்யும் என = அம்மனைத் தொழிலை நன்றாக விசுவசித்துச் செய்வதுபோல, மற்றொருவன் பெட்பு அணு நாரி = பரபுருஷனிடத்தில் ஆசையணுகிய பெண், அன்று = மனைத் தொழிலை செவ்வையாய்ச் செய்யாள், மற்றே எவ்வாற்றும் ஆற்றும் = எந்தப் பிரகாரத்தாலும் செய்தே முடிப்பள் எ—று.

அன்று என்பது அற்றுஎன எதுகைநோக்கித் திரிந்தது.
கொல், ஓ—அசைநிலைகள். 37

(அ—கை)

தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

இப்பரிசோர் தியானதிட்ட னுஞ்சிறிதே
  யுலகவிய லியற் றுநிற்கு
மொப்பறுதத் துவவித்தோ விரோதியலா
  மையினதனை யொழுங்கே செய்யுந்
துபபகன்மா யாமயமிவ் வுலகான்மா
  சைதனிய சொரூப மென்று
மெய்ப்படுபோ தத்திலுறு விரோதமெவ
  னுலகவியன் மேவு வோர்க்கே. 38

(ப—ரை) இப்பரிசு = இந்தப் பிரகாரம், அதாவது பரபுருஷ னிடத்தில் விருப்பமுள்ள பெண்போல, ஓர் தியான நிட்டனும் = ஒப்பற்ற பிரம்மத் தியானத்திலேயேயிருப்பவனும், சிறிதே உலகஇயல் இயற்ரு நிற்கும் = சொற்பமாகவே உலக வியாபாரத்தைச் செய்வான், [ஆனுல் தத்துவஞானியும் உலக வியவகாரத்தையற்பமாகச் செய்வானு அல்லது நன்ருகச் செய்வானு என்ரு சங்கையுண்டாக, உலக வியவகாரம் தத்துவஞானத்திற்கு விரோதமில்லாமையால் நன்ருகவே அனுஷ்டிப் பான் எனக் கூறுகின்ருர்] ஒப்பு அறு தத்துவவித்தோ = சமானமற்ற பிரம்மஞானியோ, விரோதி அலாமையின் = பிரமஞானத்திற்கு உலக வியாபாரம் பகையில்லாமையால், அதனை ஒழுங்கே செய்யும் = உலக வியவகாரத்தை நன்ருகவே செய்வான், [அவிரோதத்தையேயுணர்த்து கின்ருர்] துப்பு அகல் இவ்வுலகு மாயாமயம் = தூய்மையற்ற இந்தப் பிரபஞ்சம் பொய்யாம், ஆன்மா சைதனிய சொரூபம் = பிரத்தியகான்மா பிரம்ம சொரூபமாம், என்னும் மெய்ப்படுபோதத்தில் = என்னும் தத்துவ ஞானத்தில், உலக இயல் மேவுவோர்க்கு = பிரபஞ்ச வியவகாரமுடைய வருக்கு, உறு விரோதம் எவன் = பொருந்தாநின்ற பகையேது எ—று. 38

(அ—கை)

விரோதத்தின் அபாவத்தையே விஸ்தரிக்கின்ருர்.

விவகார முலகுண்மை யென்பதையான்
மாச்செடமென் பதையும் வேண்டா
வுவகாரக் கருவிகளே வேண்டுமவை
மனம்வாய்மெய் யுறுப தார்த்த
மவகார மறுமவற்றைத் தணக்கான்
றத்துவவித்துக் கதுதான் கூடுஞ்
சுவகார மனந்தணக்கிற் றியானியிவ
ஞுகுந்தத் துவவித் தன்றே 39

(ப—ரை) விவகாரம் = பிரபஞ்சத்தின் தொழில், உலகு உண்மை என்பதையும் = பிரபஞ்சம் சத்தியமென்பதனையும், ஆன்மா செடமென்பதையும் = பிரத்தியகான்மா அசேதனமென்பதையும் வேண்டா = அபேக்ஷியாது, மற்ருே உவகார கருவிகளே வேண்டும் =

உபகாரமாயிருக்கின்ற சாதனங்களையேயபேக்ஷிக்கும், [வியவகார சாதனங்கள் யாவையெனிற் கூறுகின்றார்] அவை= வியவகார சாதனங்கள், மனம் வாய்மெய் உறுபதார்த்தம் = மனது வாக்கு தேகம் பொருந்தாநின்ற வெளிவிஷயங்களான வீடு காடு முதலியவைகளாம், அவகாரம்அறும் அவற்றை = பிரதிகூலமின்றிய அச்சாதனங்களை, தணக்கான் =ஞானி நிவர்த்தி செய்யான், ஆதலால், தத்துவ வித்துக்கு அது கூடும்=பிரம்மஞானிக்கு வியவகாரம் பொருந்தும், [அற்றேல் விஷயங்களை நிவிர்த்திக்காவிடினும் தத்துவஞானியால் சித்தநிரோதம் செய்யத்தக்கதென்று ஆசங்கித்து அப்படிச் செய்யின் தத்துவஞானியே ஆகான் எனக் கூறுகின்றார்] சுவகார மனம் தணக்கின் = தானென்னும் மனதை நிரோதஞ்செய்யின், இவன் தியானி ஆகும்=மனோநிரோதஞ் செய்யுமிவன் உபாசகனுவன், தத்துவவித்து அன்று = பிரமஞான முடையவனுகான் எ—று.

உபகாரமென்பது எதுகைநோக்கி உவகாரமெனத் திரிந்தது.

ஏ—அசை.

உம்மை முன்புங் கூட்டப்பட்டது. 39

(அ—கை)

அற்றேல் தத்துவஞானியால் சித்தம் நிரோதம் செய்யப்படுகிற தில்லையென்பது எங்கே காணப்பட்டது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

குடமெய்மை காண்பான்புத் தியைக்கடிவான்
 றுகைக் குறிக்கொ ணுற்
குடமொருக்கா லுணர்தன்மாத் திரத்தாலே
 தோன்றுமென்றுற் குலவிவ் வான்மா
குடமெனத்தோன் றுதோமற் றிதைத்தனெளி
 யாக்கொண் டோகோதில் ஞானங்
குடமுதலி யவற்றுநிகர் கணத்திறு
 மம்மதியு மெனக்கொள்வி னுவே. 40

(ப—ரை) குடமெய்மைகாண்பான் = கடத்தின் சொரூபத்தைப் பார்ப்பவன், புத்தியை கடிவானுக குறிக்கொணுன் = மனதை நிரோதஞ் செய்பவனுக காணப்படவில்லை, [கடத்திற்குத் தூலத்தன்மையுண்மை

யால் ஸ்பஷ்டமாமாதலின் அதன் ஞானத்தில் சித்தநிரோதம் அபேக்ஷிக்கப்படுகிறதில்லை. பிரமத்திற்கு அப்படி தூலத்தன்மை யின்மையால் அதன் ஞானத்தில் அது அபேக்ஷிக்கப்படுகிறது என்று சங்கித்து அது சொப்பிரகாசமாயிருத்தலால் கடத்தினும் மிக ஸ்பஷ்டமா மாதலின் சித்தநிரோதம் அபேக்ஷிக்கப்படுகிறதில்லையெனக் கூறு கின்றார்] குடம் ஒருகால் உணர்தல் மாத்திரத்தாலே = சடமாகிய கடம் ஓர்போது அறிதல் மாத்திரத்தாலேயே, தோன்றும் என்றால் = சித்த ஏகாக்கிரத்தினபேக்ஷையின்றி விளங்குமாயின், குலவு இவ்ஆன்மா = எப்போதும் சொப்பிரகாசமாகிய இந்த ஆன்மா, குடம்என தோன்றாதோ = கடம்போல விளங்காதா, [ஆனால் பிரம்மம் சொப்பிர காசமாயினும் அதனை கோசரிக்கும் புத்தி விருத்தியே தத்துவஞான மாவதாலும் அது க்ஷணிகமாவதாலும் பிரமத்தில் மீண்டும் மீண்டும் ஸ்திதியபேக்ஷிக்கப்படுகிறது, என்று சங்கித்து இந்த சங்கை கடாதி களிலும் சமானமாமெனக் கூறுகின்றார்] இதை தன்ஒளியாக்கொண் டோ = பிரம்மஞானத்தை சொப்பிரகாசமாகக்கொண்டோ, கோதுஇல் ஞானம் = தத்துவஞானமெனப்படும், அன்று மற்றோவிருத்திரூபத்தால், அம்மதியும் கணத்துஇறும் = அந்த விருத்தி ரூப ஞானமும் க்ஷணத்தில் நாசமாம், ஆகையால் பிரம்மத்தில் விருத்தியின் ஆவிருத்தி செய்யத் தக்கது, எனக்கொள்வினை = என்று மனத்திற்கொள்ளும் சங்கை, குடம் முதலியவற்றும் நிகர் = கடாதிகளிடத்தும் சமானமாம் எ—று.

தான், ஆல், மற்று, ஏ—அசைநிலைகள். 40

(அ—கை)

கடாதிஞானம் க்ஷணிகமாயினும் ஒருதடவை நிச்சயிக்கப்பட்ட கடத்தையெப்போதும் வியவகரிக்கமுடியுமாதலால் ஆண்டு சித்தத் தின் ஸ்திரத்தன்மையைச் சம்பாதித்தல் பிரயோஜனமின்றாம் என்று சங்கித்து இது ஆன்மாவிலும் சமானமாமெனக் கூறுகின்றார்.

தெரிபடுமேற் குடமாதி மதிநசிக்குந்
தெரிகுடந்தான் றினைவ ழக்குப்
புரியவெளி தெனினுன்மாத் தனையொருகாற்
கண்டான்மெய்ப் போத முள்ளான்
பரிவுறுகாற் பகரவுன தியானிக்க
வலனுமு பாச கன்போற்
கருதியுல கியன்மறப்ப னெனின்மறப்ப
னஃதுணர்வாற் கலந்த தன்றே. 41

(ப—ரை) குடம்ஆதி தெரிபடுமேல் = கடம் முதலியது அறியப் படுமாயின், மதிநசிக்கும் = ஞானம் நாசமாகும், தெரிகுடம் தினம் வழக்குப் புரிய எளிதுஎனின் = அறியப்பட்ட கடம் எப்போதும் வியவ கரிக்கமுடியுமென்று சொல்லின், [தார்ஷ்டாந்தத்தை விரிவாகக் கூறு கின்றார்] ஆன்மாத்தனை ஒருகால் கண்டால் = ஆன்மாவை ஓர்போது அறிந்தால், மெய்ப்போதம் உள்ளான் = தத்துவஞானமுடையவன், பரிவுஉறுகால் = பிரமத்தில் விருப்பமுண்டாகும்போது, பகர = அதை வாக்கால் வசனிக்கவும், உன = மனதால் மனனஞ்செய்யவும், தியானிக்க = தியானஞ்செய்யவும், வலன் ஆம் = சமர்த்தனுவன், [தத்துவஞானியும் உபாசகன்போன்று ஆன்மானுசந்தான வசத்தால் உலகினநுசந்தான மின்மையனுய்க் காணப்படுகின்றானேயென்று சங்கித்து அவ்வுலகாநுசந்தானத்தினின்மை தியானத்தாலுண்டானது ஞானத்தாலன்று என்று கூறுகின்றார்] உபாசகன்போல் = தியானஞ் செய்பவன்போல, கருதி = ஆன்மாவையநுசந்தானஞ்செய்து, உலகு இயல் மறப்பன் எனின் = சகத்தினியற்கையை மறந்துவிடுவான்என்று சொல்லின், மறப்பன் = மறதியுடையவனுகுக, அஃது = அம்மறதி, உணர்வால் கலந்தது அன்று = ஞானத்தாலுண்டானதல்ல, மற்றே தியானத்தாலென்பது பொருள் எ—று. 41

தான், ஏ—அசைநிலைகள்.

(அ—கை)

ஆனுல் தத்துவஞானியாலும் முத்தி சித்திக்கும்பொருட்டு பிரமத் தியானஞ் செய்யத்தக்கதென்று சங்கித்து "ஞானத்தாலேயே முத்தி யடையப்படுகிறது" "எதனுல் விடுபடுகின்றான்" "அதனையேயறிந்து மிருத்தியுவைக் கடக்கின்றான்" "மோக்ஷத்தின் பொருட்டு ஞானத்தினும் வேறுவழி இல்லை" "தேவனையறிந்து சகல பாபங்களாலும் விடுபடு கின்றான்" என்பது முதலிய சாஸ்திரம் ஞானத்தாலேயே மோக்ஷப் பிராப்தியைக் கூறுதலால் முத்தியின்பொருட்டு தியானஞ் செய்யத்தக்க தல்லவெனக் கூறுகின்றார்.

சிந்தை செயவேண் டாவிவன்ருன்
றெளிவான் முத்தி சேர்ந்தமையின்
வந்த தெளிவா லேமுத்தி
மருவு மெனநூன் மிகமுழங்கு
மந்த வறிஞன் சிந்தைசெயா
ஞகிற் புறச்செய் கையின்மூழ்கு
முந்து மிவன்செய் கையினினிது
மூழ்க வதனு லெதுபழுதே. 42

(ப—ரை) இவன் சிந்தை செயவேண்டா = ஞானியானவன் தியானஞ் செய்யவேண்டியதில்லை, தெளிவால் முத்தி சேர்ந்தமையின் = ஞானத்தால் மோக்ஷம் சித்தித்தலால், வந்ததெளிவாலே = குரு சாஸ்திரங்களாலுண்டான ஞானத்தாலேயே, முத்தி மருவும் என = மோக்ஷமுண்டாகுமென்று, நூல்மிக முழங்கும் = சாஸ்திரம் மிகவும் கோஷிக்கின்றது, [தத்துவஞானிக்கு தியானத்தையங்கீகரியாவிடின் அவனுக்கு எப்போதும் புறம்பில் பிரவிருத்தியுண்டாகுமென்ரு சங்கித்து பிரவிருத்திக்கு ஞானத்தினைப் பாதிக்குந் தன்மையின்மையால் அது அங்கீகரிக்கப்படுகிறதெனக் கூறுகின்ருர்] அந்த அறிஞன் = பிரசித்த மான தத்துவஞானி, சிந்தைசெயான்ஆகில் = தியானத்தை மரண பரியந்தம் செய்யானுயின், புறச்செய்கையில் மூழ்கும் = வெளி வியா பாரத்தில் அழுந்துவன் எனின், முந்தும்இவன் = மேலான இந்த ஞானியானவன், செய்கையின் இனிது மூழ்க = புறத்தொழிலில் நன்ரு யழுந்துக, அதனுல் எது பழுது = அந்தப் பிரவிருத்தியால் யாது கெடுதி ஒன்றுமின்ருமென்பது பொருள் எ—று. 42

(அ—கை)

புறச்செய்கையை அங்கீகரிக்கின் மரியாதையைக் கடத்தலாகிய அதிப்பிரசங்கமுண்டாமென்ரு சங்கித்து பிரசங்கத்தை நிரூபிக்கமுடியா வாகையால் அதிப்பிரசங்கம் பொருந்தாதெனப் பரிகரிக்கின்ருர்.

அதிகப் பிரசங் கமதிதுவே
லதின்முற் பிரசங் கத்தையுரை
தகையும் விதிநூ லதுவென்னிற்
றுன்மெய்ஞ் ஞானி தனைகுறித்தன்
றிதமில் வன்ஞச் சிரமம்வயத்
தவத்தை மான மேலுனர்க்கே
விதிகள் விலக்கு களுமெல்லா
மேவா நிற்கு மெனத்துணிக. 43

(ப—ரை) அதிகப் பிரசங்கமது இதுவேல்=புறச்செய்கையை யுடன்படுவதால் அதிப்பிரசங்கமாகுமெனின், அதில் பிரசங்கத்தை முன்உரை=அதிப்பிரசங்கத்திலுள்ள பிரசங்க சத்தத்தின் பொருளை முதலிற் கூறுவாய், [பிரசங்கம் நிரூபிக்கப்படாததன்று விதிசாஸ்திரம் பிரசங்க சத்தத்தால் விவக்ஷிக்கப்பட்டபடியால் எனின் அற்றன்று அதற்கு அஞ்ஞானி விஷயமாவதால் தத்துவஞானி விஷயமாகமையினு லெனக் கூறுகின்றுர்] தகையும் விதிநூல் அது என்னில்=நியமனஞ் செய்யும் விதிசாஸ்திரம் பிரசங்கமாமென்று சொல்லின், மெய்ஞானி தனைக்குறித்து அன்று=உண்மை அறிஞனை உத்தேசித்துச் செல்வ தன்று [விதிசாஸ்திரத்திற்கு அஞ்ஞானி விஷயகத் துவத்தையே யுணர்த்துகின்றுர்] வன்ன=பிராமணுதி வருணங்களிலும், ஆச்சிரமம்= பிரம்மசரியாதி ஆசிரமங்களிலும், வயது = பால்யாதி வயதுகளிலும், அவத்தை = துக்கித்துவாதியவஸ்தைகளிலும், இதம்இல்மானம் ஏலுனர்க்கே=துக்க சாதனமான அபிமானத்தைப் பொருந்தின வருக்கே, விதிகள் விலக்குகள் எல்லாம் மேவா நிற்கும்=விதி சாஸ் திரங்களும் நிஷேத சாஸ்திரங்களும்ஆகிய அனைத்தும் பொருந்துவன வாகும், எனத்துணிக=என்று நிச்சயஞ்செய்க எ—று.

தகை என்பது எதுகைநோக்கி தகைஎனத் திரிந்தது. அபிமான மாவது நான் பிராமணன் நான் பிரமச்சாரி, நான் பாலன் நான் ரோகி என்பன முதலியனவாகும். விதிநூல் என்பது நிஷேத நூலுக்கும் உபலக்ஷணம். தான்—அசை. 43

(அ—கை)

ஆனால் தத்துவ ஞானிக்கும் தேகத்தைத் தரிக்குந்தன்மையால் வருணாசிரமாதி அபிமானமிருக்கின்றது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

வன்னாச் சிரமா திகளுடற்பான்
மாயை யாற்கற் பிதமாகுஞ்
சின்மாத் திரமாந் தனையவைகள்
சிவணா வென்றல வன்றுணிவாந்
துன்னா சைகள்புந் தியிற்றீர்ந்தே
துகடீர் தெருளுற் றிடுமுத்தன்
றென்னார் சமாதி கருமங்கள்
செய்க வலது தீருகவே. 44

(ப—ரை) வன்ன ஆச்சிரம ஆதிகள் = பிராமணத்துவாதி வருணம் பிரம்ம சரியாதியாசிரமம் முதலியவைகள், உடற்பால் = தேகத்தின்கண், மாயையால் கற்பிதம் ஆகும் = அஞ்ஞானத்தால் ஆரோபிதமாம், சின்மாத்திரமாம் தனை = அறிவேவடிவாகிய ஆன்மாவை, அவைகள் சிவணா = வருண ஆசிரமாதிகள் பொருந்தா, என்றல் அவன் துணிவு = என்பது அவனது நிச்சயம். [அற்றேல் தத்துவ நிச்சயமிருக்குக சாஸ்திரமோ அவனுக்குக் கருத்தவ்வியத்தைப் பிரகிபாகிக்கிறது என்று சங்கித்து அதுவும் அவனுக்குக் கருத்தவ்வியத்தின் இன்மையையேயுணர்த்துகின்றதெனக் கூறுகின்றார்] துன் ஆசைகள் = பொருந்தாநின்ற இச்சைகள் அனைத்தையும், புந்தியில் தீர்ந்து = மனதினால் பரித்தியாகஞ்செய்து, அதனாலேயே, துகள்தீர் தெருள் உற்றிடும் = குற்றமற்ற நின்மல ஞானமடைந்திருப்பவன், முத்தனே = சகல சமுசாரங்களினின்றும் விடுபட்டவனே, ஆகையால், தென்ஆர் சமாதி கருமங்கள் = அழகு பொருந்திய சமாதியையும் யாகாதி கருமங்களையும், செய்க அலதுதீர்க = இயற்றுக அல்லது விடுக எ—று. 44

(அ—கை)

வித்துவானுக்கு செய்யத்தக்கதின்றென்பதில் வேறு வசனத்தையும் எடுத்துக் காட்டுகின்றார்.

நிருவா தனைசேர் நெஞ்சனுக்கு
நிட்கரு மத்தா ற்கருமத்தா
லொருவாச் சமாதி யாற்செபத்தா
லொன்றும் பயனின் ருமான்மா
மருவா னெவற்றும் பிறவெல்லா
மாயா மயமிந் திரசால
வுருவா மெனவே சலனமற
வுணர்ந்தா லுளில்வா தனையுண்டோ. 45

(ப—ரை) நிருவாதனைசேர் நெஞ்சனுக்கு = வாசனையற்ற மனதுடைய வறிஞனுக்கு, நிட்கருமத்தால் = கருமங்களின் தியாகத்தாலும், கருமத்தால் = கருமானுஷ்டானத்தாலும், ஒருவாசமாதியால்=நீங்காத நிஷ்டையினுலும், செபத்தால்=பிரணவாதி மந்திர ஜபத்தாலும், ஒன்றும் பயன் இன்ரும்=அற்பமும் பிரயோசனமில்லை, [ஆனுல் வித்துவானுலும் வாசனை நிவர்த்தியின் பொருட்டு தியானம் செய்யத்தக்கதென்ரு சங்கித்து நன்ருயறிந்தவனுக்கு வாசனையே யில்லையெனக் கூறுகின்ருர்] ஆன்மா எவற்றும் மருவான் = கூடஸ்தன் எப்பதார்த்தங்களோடுஞ் சேரான், அசங்கனென்பது பொருள், பிற எல்லாம் = ஆன்மாவினுமன்னியமான அனைத்தும், மாயாமய இந்திர சால உருவாம் எனவே = மாயையாற் கற்பிக்கப்பட்ட இந்திரசால சொருபமாமென்று, சலனம்அற உணர்ந்தால் = திடமாக அறிந்தால், உளில்வாதனை உண்டோ = மனதில் வாசனையிருக்குமா, இராது, எ—று. உள்ளில் என்பது உளில் என இடைக்குறையாயிற்று.

வாசனையாவது திடபாவனையால் முன்பின் ஒன்றையும் ஆலோசியாமல் உண்டாகும் குரோதாதி விருத்திக்கு ஏதுவான சித்தத்தின் சூக்ஷ்ம அவஸ்தையாகிய சம்ஸ்காரம். அஃது சுத்த அசுத்த பேதத்தால் இருவகைத்தாம். சுத்த வாசனையாவது பிரத்தியக பின்ன பிரமத்தை திடஅபரோக்ஷமாக அறிந்தவனிடத்திலிருப்பதாயும் வறுத்த விதைபோல தேகம் ஜீவித்தற்பொருட்டு உபயோகிக்கிறதாயும் டம்பம் கருவம் முதலிய அசுர சம்பத்தை உண்டுபண்ணுததாயும் ஜென்மாந்திரத்துக்கு ஏதுவாகாததாயும் உள்ள வாசனையாம் என அறிக. அசுத்த வாசனை அனந்தவிதமாம். இதனை அறிய விரும்புவோர் கைவல்லிய நவநீத சந்தேகந்தெளிதற் படலத்தின் பதினுருவது செய்யுளின் விசேஷ உரையில் அறிக. 45

(அ—கை)

இவ்வாறு பிரசங்கமின்ருகுக பிரகிருதத்தில் அதாவது அதிப் பிரசங்கமின்மையில் என்னே வந்தது எனிற் கூறுகின்ருர்.

இவ்வா றில்லே பிரசங்க
மிவனுக் கதிகப் பிரசங்க
மெவ்வா ருகும் பிரசங்க
மியைந்தோ னுக்கே யதுகூடுந்
தவ்வா விதியின் மையிற்பாலன்
றனக்கப் பிரசங் கங்காணேஞ்
செவ்வாம் விதியின் மையிற்சரியே
லிவனுக் கதுதான் செறிவதெவன். 46

(ப—ரை) இவ்வாறு = கூறிய பிரகாரமாக, இவனுக்கு பிரசங்கம் இல்லே = இவ்வறிஞனுக்கு விதிநிஷேத நூலாகிய பிரசங்கமின்ரும், அதிகப் பிரசங்கம் எவ்வாறு ஆகும் = (அறிஞனுக்கு பிரசங்கமில்லே யாகவே அதை முன்னிட்டதான விதிக்கப்பட்டதும் விலக்கப்பட்டது மாகிய 'கருமங்களில் பிரவிருத்தி நிவிருத்தி வடிவ மரியாதையைக் கடத்தலாகிய) அதிகப் பிரசங்கம் எப்படியுண்டாகும், [அப்படியாஞல் யாருக்கு அதிகப் பிரசங்கமெனிற் கூறுகின்ருர்] பிரசங்கம் இயைந் தோனுக்கே = பிரசங்கத்தையுடையவஞ்ஞனுக்குகே, அது கூடும் = அதிப்பிரசங்கமுண்டாகும், [இவ்வாறு எங்கே காணப்பட்டதெனிற் கூறுகின்ருர்] தவ்வாவிதி இன்மையின் = கெடாத விதி சாஸ்திர வடிவப் பிரசங்கமில்லாமையால், பாலன்றனக்கு அப்பிரசங்கம் காணேம் = பிள்ளேக்கு அந்த அதிப்பிரசங்கத்தைக் கண்டிலேம், [தார்ஷ்டாந்தத் தில் பொருத்துகின்ருர்] செவ்வாம்விதி இன்மையில் = சிறந்த விதியின பாவத்தில், சரியேல் = (பாலகனுக்கும் அறிஞனுக்கும்) சமத்துவமிருக்கு மாஞல், இவனுக்கு அது செறிவது எவன் = அறிஞனுக்கு அதிப் பிரசங்கம் பொருந்துவது எதஞல், ஒன்றிஞலும் இன்றென்பது கருத்து எ—று. தான்—அசை. 46

(அ—கை)

பாலனுக்கு விதியின்மையிலேது அறியாமை இருக்கின்றது.

அஃது அறிஞனுக்கு இன்று என்று சங்கித்து அவனுக்கு அறியாமை யின்றேனும் விதியின பாவத்திலேதுவாக முற்றுணர்வு இருக்கின்ற தெனக் கூறுகின்றார்.

பால ெனொன்று மறியானேற்
பலவு மறிவான் றத்துவவித்
தேலும் விதியெல் லாநொயறிவி
னர்க்கா மில்மற் றிருவருக்குஞ்
சாலச் சாபா னுக்கிரக
சமர்த்து ளான்மெய்ஞ் ஞானியென
லால நிகர்சா பாதிசமர்த்
தான்ற தவப்பே றுதலினே. 47

(ப—ரை) பாலன் ஒன்றும் அறியானேல் = குழந்தையானவன் யாதொன்றையும் உணரான் என்று சொல்லின், தத்துவவித்து பலவும் அறிவான் = ஆத்ம ஞானியனைத்தையும் உணருவன், ஒன்றுமறியாமை விதியினபாவத்தில் ஏதுவாவதுபோல் முழுதுணர்தலும் ஏதுவா மென்பது கருத்து. [அப்படியானால் விதியில் அதிகாரம் எவனுக்கு என்று சங்கித்துக் கூறுகின்றார்] ஏலும் விதி எல்லாம் = பொருந்தா நின்ற விதி நிஷேதங்களனைத்தும், நொய் அறிவினர்க்கு ஆம் = அற்ப உணர்வினையுடையவருக்கே ஆகும், மற்ற இருவருக்கும் இல் = ஏனைய குழவிக்கும் அறிஞனுக்கும் இன்றாம். [ஆனால் வியாசர் முதலானோரைப் போன்று சாபாநுக்கிரக சாமர்த்தியமுடையவரே தத்துவ ஞானியாவர் அன்னியர் ஆகார் என்று வினவுகின்றான்] சால சாபாநுக்கிரக சமர்த்துளான் = (தன்னை அடித்தல் முதலியவற்றால் துன்புறுத்துகின்ற வருக்கும் சேவை முதலியவற்றால் இன்புறுத்துகின்றவருக்கும்) மிகவும் நிக்கிரகத்தையும் அநுக்கிரகத்தையும் செய்தலில் வல்லமையுடைய வனே, மெய்ஞ்ஞானி எனல் = தத்துவ ஞானி என்று சொல்லற்க, [உத்தரம் கூறுகின்றார்] ஆலம் நிகர் சாபாதி சமர்த்து = விஷம்போன்ற சாபம் முதலியவற்றில் வல்லமை, ஆன்ற தவப்பேறு ஆதலின் = பெருமை பொருந்திய புண்ணியத்தின் பயனாதலால் எ—று.

ஏ—அசை. 47

(அ—கை)

அற்றேல் தத்துவ ஞானிகளாகிய வியாசாதிகளுக்கும் சாபம்

முதலியவற்றில் சாமர்த்தியம் காணப்படுகிறதே என்று சங்கித்து அவர் களுக்கு அது தத்துவ ஞானத்தின் பயனன்று மற்றோ தபசின் பயனும் எனக் கூறுகின்றார்.

சான்ற வியாசன் முதலோர்க்குந்
தவமொய்ம் பதனுற் சமர்த்திலகு
மேன்ற சாபா தியினிபத்துக்
கிதரத் தவமே ஞானநிப
மான்ற விரண்டு முளர்க்கேயுண்
டாகுஞ் சமர்த்து ஞானமதூஉ
மூன்ற வோரோர் தவம்புரியி
னேரோர் பயனுண் டாமன்றே. 48

(ப—ரை) சான்ற வியாசன் முதலோர்க்கும் = மாட்சிமை தங்கிய வேத வியாசர் முதலான மகரிஷிகளுக்கும், தவமொய்ம்பதனுல் = தபசின் வலிமையால், சமர்த்து இலகும் = சாபாநுக்கிரக சாமர்த்தியம் விளங்குகின்றது, [அப்படியானுல் தபசினுல் "பிரம்மத்தை அறிய இச்சிக்குக" என்னுஞ் சுருதியினுல் தபசின்றியவருக்குத் தத்துவ ஞானமும் பொருந்தாதென்று சங்கித்துச் சாபாதிக்குக் காரண மான தபசினின்றும் அன்னியமான தபசிருத்தலால் அங்ஙனமன்று எனப் பரிகரிக்கின்றார்] ஏன்ற சாபாதியின் நிபத்துக்கு இதர தவமே= உயர்வான சாபம் முதலியவற்றின் காரணமான தபசுக்கு அன்னிய மான தபசே, ஞானநிபம்= தத்துவ ஞானத்திற்குக் காரணமாம், [அப்படியானுல் அந்த வியாசர் முதலானோர்க்குத் தத்துவ ஞானமும் சாபாதிகளின் காரணமான சாமர்த்தியமும் எப்படிக் காணப்படுகின்ற தென்று சங்கித்து இரண்டுவித தபசும் இருத்தலால் எனக் கூறுகின் றார்] ஆன்ற இரண்டும் உளர்க்கே=மாட்சிமை தங்கிய சகாம தபசு நிட்காம தபசு என்னுமிரண்டினையுமுடையவருக்கே, சமர்த்தும் ஞானமதும் உண்டாகும் = நிக்கிரகாநுக்கிரக வல்லமையும் ஆன்ம உணர்வும் பிறக்கும், ஊன்ற ஓரோர் தவம் புரியின் = பலமாக ஒவ்வொரு தபசைச் செய்யின், ஓர் ஓர் பயன் உண்டாம்=ஒவ்வொரு பிரயோசனமே சித்திக்கும் எ—று.

அன்று, ஏ—அசைகள்.

ஏற்ற என்பது ஏதுகை நோக்கி ஏன்ற எனத் திரிந்தது. 48

(அ—கை)

அற்றேல் சாபாதி சாமர்த்தியமின்றிய அறிஞனுக்கு விதியின் றேனும் விதிக்கப்பட்ட கருமத்தை யநுஷ்டிக்கும் புருஷரால் நிந்தை யுண்டாகுமென்று சங்கித்து அக்கருமிகளுக்கும் விஷயப் பற்றுள்ள பாமரரால் நிந்தையுண்டாகுமெனக் கூறுகின்றார்.

விதியொன் றின்றிச் சமர்த்தில்லான்
மெய்ய ரான்மே வுவனிழிவேல்
யதிக டாமு மேனையபா
மரரா லநிச மிகழ்வுறுவர்
புதிய கூறை யுணவாதி
போக மகிழ்ச்சிக் கேலுவரேல்
வதியும் விராகச் சுமையாலே
மலங்கு மவர்தம் துறவென்னே. 49

(ப—ரை) விதி ஒன்று இன்றி = விதிக்கப்பட்ட கருமத்தை யொன்றையுமநுஷ்டியாதவனாய், சமர்த்து இல்லான் = சாபாதி வல்லமையின்றியவனாயுள்ள சன்னியாசியானவன், மெய்யரால் இழிவு மேவுவனேல் = கருமத்தை யநுஷ்டிக்கும் பிரபஞ்ச சத்தியவாதிகளால் நிந்தையையடைவன் என்று சொல்லில், யதிகளும் = முயற்சியினை யுடைய கருமிகளும், ஏனைய பாமரரால் = அன்னியமான விஷயி புருஷர் களால், அநிசம் இகழ்வு உறுவர் = எப்போதும் நிந்தையையடை வார்கள், [இச்சன்னியாசிகளும் போகத்தாற் சந்தோஷித்தற் பொருட்டு விஷயங்களைச் சம்பாதிப்பார்கள் என்று சங்கித்து அப்போது அவர் களுக்கு சன்னியாசித்துவமே நாசத்தையடையுமென்னுமபிப்பிராயத் தால் பரிஹாஸஞ் செய்கின்றார்] போக மகிழ்ச்சிக்கு = விஷயாநுபவத் தாற் சந்தோஷிக்கும் பொருட்டு, புதிய கூறை உணவு ஆதி ஏலுவ ரேல் = நூதன வஸ்திரம் அன்னம் முதலியவற்றைப் பொருந்துவார் களானால், (அதாவது பாதுகாத்து வைத்திருப்பார்களாயின்) வதியும் விராகச்சுமையால் = நிலைபெற்ற வைராக்கியமாகிய பாரத்தினால், மலங்கும் அவர் தம் துறவு = கலங்கியுள்ள அச்சன்னியாசிகளுடைய சன்னியாசித்துவம், என்னே = எத்தன்மைத்தோ எ—று.

இஃதோர் இரக்கச்சொல். ஆம்-சாரியை வதியுமவர் தம் யதித் திறமாம் வயிராக்கிய நன்னிலையெற்றே என்றுபாட பேதமுளது. 49

(அ—கை)

விஷயப்பற்றுள்ள பாமரரால் செய்யப்படுகிற நிந்தையால் கருமாநுஷ்டானத்தில் பற்றுதலையுடைய பெரியோருக்குக் குறைவு இல்லையென்று சொல்லப்படுமானல் அப்போது தேகாபிமானிகளாகிய கரும காண்டிகளால் செய்யப்படுகிற நிந்தையால் தத்துவ ஞானிக்கும் குறைவு இல்லையெனக் கூறுகின்றார்.

மொழிசெய் வன்னாச் சிரமியரை
மூர்க்க ரிகழ்க வென்பாயேற்
பழியி லறிஞன் றனைத்தேகப்
பற்றாச் சிரமி யர்களிகழ்க
விழிவி லிவகை மெய்யறிவுற்
றிடிற்சா தனங்க ளேய்தலினா
லொழிவற் றுலக காரியநன்
குஞற்றற் கெளிதா மறிஞனுக்கே. 50

(ப—ரை) மொழிசெய் வன்னாச்சிரமியரை = சொல்லப்பட்ட வருணத்திலும் ஆசிரமத்திலும் அபிமானமுடையவரை, மூர்க்கர் இகழ்க என்பாயேல் = அறிவிலிகள் நிந்திக்குக, அதனால் அவருக்குக் குறை வில்லை என்று சொல்லுவையாயின், பழி இல் அறிஞன்றனை = நிந்திக்கத்தகாத ஞானியை, தேகப்பற்று ஆச்சிரமியர்கள் இகழ்க = உடம்பில்நானென்னும் புத்தியையுடையவராய் ஆசிரமத்தில் அபிமான முடையவர்கள் நிந்திக்குக, அதனால் அவருக்கு குறைவின்றாம், [பிரசங்கத்தால் வந்ததை சமாப்தி செய்து பிரகிருதத்தை அநுசரிக் கின்றார்] இவ்வகை = கூறிய பிரகாரமாக, இழிவு இல் மெய் அறிவு உற்றிடில் = நிந்தையற்றதத்துவ ஞானத்தையடையுங்கால், சாதனங்கள் எய்தலினால் = உலக வியவகாரத்திற்குக் கருவிகளான மனம் முதலியவை கெடாமற் பொருந்தியிருத்தலினால், அறிஞனுக்கு = ஞானிக்கு, ஒழிவு அற்று = எப்போதும், உலக காரியம் நன்கு உஞற் றற்கு = செகத்தொழிலைச் செவ்வையாய்ச் செய்தற்கு, எளிதாம் = சுலப மாம் எ—று. 50

(அ—கை)

அற்றேல் தத்துவ ஞானிக்கு சகத்தின் மித்தியாத்துவ ஞானத்தால் அதில் இச்சையேயுதியாதெனின் அப்போது தனது கருமத்தின் அநுசாரமாக இருக்கட்டுமெனக் கூறுகின்றூர்.

மெய்ம்மை யறிவா லதிலிச்சை
மேவா தென்னி னதுபோக
மெய்ம்மை கருத விவனலதூழ்
நெறியே விவகா ரம்பயில்க
மெய்ம்மை கருது வோன்சததந்
தியானித் துறைதல் வேண்டுமிவன்
மெய்ம்மை யாதறி யானத்தா
லன்றே விண்டா தியவாம்போல். 51

(ப—ரை) மெய்ம்மையறிவால்= தத்துவ ஞானத்தால், அதில் இச்சை மேவாது என்னின்=பிரபஞ்சத்தில் ஆசை பொருந்தாது என்று சொல்லில், அதுபோக=அப்போது ஆசை இல்லாது ஒழிக, இவன் ஊழ் நெறியே = இந்த ஞானி ஆரம்பித்த வினைவழியே, மெய்ம்மைகருத = பிரமத்தைத் தியானிக்குக, அல்லது விவகாரம் பயில்க=அல்லது செகத் தொழிலைச் செய்க, [இப்போது உபாசகனுக்கு அவனினும் வேற்றுமையைத் தெரிவிக்கின்றூர்] கருதுவோன் = உபாசகன், சததம் மெய்ம்மை தியானித்து உறைதல்வேண்டும் = எப்போதும் பிரமத்தைத் தியானித்துக்கொண்டே இருக்கவேண்டும், அதில் யுத்தியைக் கூறுகின்றூர்] இவன் மெய்ம்மையாதல்=உபாஸகன் பிரமமாயிருத்தல், தியானத்தாலன்றே=தியானத்தாலல்லவா [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றூர்] விண்டு ஆதியபோல=விஷ்ணுத்தன்மை முதலியவை போல எ—று.

யாதொரு சாரணத்தால் உபாஸகனுக்கு பிரம்மத்துவம் தியானத்தாலேயே செய்யப்பட்டதோ பிரமாணத்தாலறியப்பட்டதன்றே அக்காரணத்தால் உபாஸகனுல் எப்போதும் உபாஸனை செய்யத்தக்கதென்பது பொருள். எப்படி சகுணேபாஸகனுல் தன்னிடத்தில் தியானத்தால் சம்பாதிக்கப்பட்ட விஷ்ணுத்தன்மை முதலியவற்றிற்கு பாரமார்த்திகத் தன்மையின்றே அதுபோல் நிர்க்குணேபாஸகனது பிரம்மத்தன்மையும் பாரமார்த்திகமன்றென்பது பொருள். 51

(அ—கை)

தியானத்தாற் சம்பாதிக்கப்பட்டதற்கும் பாரமார்த்திகத்துவம் ஏனுகாதென்று சங்கித்து தியானத்தாற் சம்பாதிக்கப்பட்ட வாக்கில் தேனுத்தன்மை முதலியவற்றிற்கு தியானம் நீங்கும்போது நீக்கம் காண்டலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்.

நினைவா னேடும் பொருளெல்லா
நினைவு நீங்கி னிலையாதாற்
றனியாம் பிரம நிசமதனாற்
றவிரா தறிவு தவிர்ந்திடினு
மனதா னிதமா மிதனையுணர்த்
துவதா மறிவு பயப்பதல
மனுமவ் வறிவின் மையினாலே
வாய்மை யழிவ திலையன்றே. 52

(ப—ரை) நினைவால் நேடும் பொருள் எல்லாம் = தியானத்தால் சம்பாதிக்கப்படும் வஸ்து அனைத்தும், நினைவு நீங்கில் நிலையாது = தியானம் நிவர்த்தியாகும்போது நிவர்த்தியாகும் [ஞானத்தாற் பிரகாசிக்கப்பட்ட பிரமத்துவத்திற்கு அதனினும் வேற்றுமையைக் கூறுகின்றார்] தனியாம் பிரமம் = ஒப்பற்றதாகிய பிரம்மம், நிசமதனால் = வாஸ்தவமாவதால், அறிவு தவிர்ந்திடினும் தவிராது = ஞாபகமாகிய ஞானம் நிவர்த்தியாயினும் நிவர்த்தியாகாது [வாஸ்தவமாதலாலேயே ஞானத்தால் பிறக்கிறதேயில்லையெனக் கூறுகின்றார்] நிதம் ஆனதால் = அறிஞனுக்கு பிரமத்துவம் நித்தியமானதால், இதனை அறிவு உணர்த்துவது = பிரமத்துவத்தை ஞானம் அறிவிப்பதாம், பயப்பது அல = உற்பத்தி செய்வதன்றாம், [அதில் யுத்தியை வெதிரேக முகத்தாற் கூறுகின்றார்] மனும் அவ்அறிவு இன்மையினாலே = பொருந்தாநின்ற அந்த ஞானத்தின் அபாவமாத்திரத்தினால், வாய்மை அழிவது இலை = சத்தியவஸ்து நாசமாவதின்று எ—று.

அபிப்பிராயம் இதுவாம்:— பிரமத்துவம் ஞான ஜன்னியமாயின் ஞானம் நாசமாகும்போது தானே நாசமாகும். நாசமோ ஆகிறதில்லை. ஆதலால் உற்பத்தியாகிறதில்லையென்பது பொருள். ஆனதா லென்பது அனதாலென செய்யுள் விகாரமாயிற்று.

ஆல், அன்று, ஏ—அசைநிலைகள். 52

(அ—கை)

ஆனுல் ஞானிக்குப்போன்று உபாஸகனுக்கும் வாஸ்தவமாகிய பிரமத்துவமிருக்கின்றதேயாமென்று வினவுகின்ருன்.

உள்ள தேயாம் பிரமவியல்
புபாச கனுக்கு மென்பாயேற்
றெள்ளில் சிதடர்க் குறும்பிரமத்
திறமே னுள்ள தாகாது
கள்ள மடத்தாற் புருடார்த்தங்
கழித லிருவர்க் குஞ்சமனு
மெள்ளு முபவா சத்தினிரப்
பேற்றம் போன்மற் றதினுனலே. 53

(ப—ரை) உபாஸகனுக்கும்=தியானஞ் செய்பவனுக்கும், பிரம இயல்பு=பிரம்மத்தன்மை, உள்ளதே ஆம்=வாஸ்தவமாய் இருக்கின்றதேயாம், என்பாயேல்=என்று சொல்லுவையாயின், [நின்னுல் மிகவும் அற்பமாக பிரமத்துவம் சொல்லப்படுகிறதென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்] தெள் இல் சிதடர்க்கு=ஞானமற்ற பாமரர்களுக்கும் பசு முதலிய திரியக்கு ஜந்துகளுக்கும், உறும் பிரமத்திறம்=பொருந்தா நின்ற பிரமத்துவம், ஏன் உள்ளது ஆகாது=ஏன் வாஸ்தவமாய் இருக்கின்றதில்லை இருக்கின்றதென்பது பொருள். [பாமராதிகளுக்கு அந்தப்பிரமத்துவமிருப்பினும் அறியப்படாமையால் புருஷார்த்தமாகிய மோக்ஷத்தில் உபயோகமின்ருமென்ரு சங்கித்து உபாஸகனது பிரமத்தன்மையும் அறியப்படாததாயிருத்தலால் புருஷார்த்தத்தில் உபயோகமில்லாத் தன்மை சமானமாமெனக் கூறுகின்ருர்] கள்ளமடத்தால்=அறியாமையாகிய குற்றத்தால், புருடார்த்தம் கழிதல்=முத்தியின்மை, இருவர்க்கும் சமனும்=உபாஸகனுக்கும் பாமராதியர்க்கும் சரியாம், [அப்படியானுல் உபாசனையெதன் பொருட்டு சொல்லப்படுகிறது என்ரு சங்கித்து இதரானுஷ்டானங்களைப் பார்க்கிலும் உயர்வு என்னுமபிப்பிராயத்தால் சொல்லப்பட்டதென திருஷ்டாந்த பூருவகம் கூறுகின்ருர்] உபவாசத்தின் = பட்டினி கிடப்பதைப் பார்க்கிலும், எள்ளும் இரப்பு ஏற்றம்போல்=இகழத்தக்க பிக்ஷைஎடுத்துண்ணல் மேன்மையாவதுபோல, மற்றதின் உனல் ஏற்றம்=உழவாதியாகாதிகளைப் பார்க்கிலும், தியானம் உயர்வாம் எ—று.

உன்னல் என்பது இசையை நோக்கி உனல்என ஆயிற்று. உன்னல்=நினைத்தல், ஏற்றம் என்பது பின்பும் கூட்டப்பட்டது. 53

(அ—கை)

இதரா நுஷ்டானங்களைப் பார்க்கிலும் உபாசனை உயர்வு என்பதனையே தெரிவிக்கின்றார்.

சிதடர் விவகா ரத்தேற்றஞ்
செய்கன் மாதி யநுஷ்டான
மதனிற் சகுண வுபாசனைமற்
றதினிர்க் குணத்தி னுபாசனையா
மிதவிஞ் ஞான மணித்தாகு
மெம்மட் டம்மட் டேற்றமிகு
நிதநிர்க் குணபா வனைமெல்ல
நேரே பிரம ஞானமாம். 54

(ப—ரை) சிதடர் விவகாரத்து=பாமரரது தொழிலைப்பார்க்கிலும், செய்கன்மாதி அநுஷ்டானம் ஏற்றம்=நியமமாகச் செய்கின்ற யாகம் முதலியவற்றின் அநுஷ்டானம் உயர்வாம், அதனில் சகுண உபாசனை=அக்கருமாதி யநுஷ்டானத்தினும் சகுணப் பிரம்மத்தின் உபாஸனை உயர்வாம், அதின் நிர்க்குணத்தின் உபாஸனையாம் = அச்சகுணப் பிரம்மத்தின் உபாஸனையினும் நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனை உயர்வாம், [பின் பின் உள்ளவைகளின் உயர்வில் காரணம் கூறுகின்றார்] எம்மட்டு இத விஞ்ஞானம் அணித்தாகும்=எவ்வளவு எவ்வளவு நன்மையான பிரம்ம சாக்ஷாத்காரத்திற்கு சமீபமாகுமோ, அம்மட்டு ஏற்றம் மிகும்=அவ்வளவு அவ்வளவு உயர்வு அதிகரிக்கும், [எல்லாவற்றினும் நிர்க்குண உபாசனை உயர்வாம் என்பதில் காரணங் கூறுகின்றார்] நித நிர்க்குண பாவனை=இடைவிடாமற் செய்கின்ற நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனையானது, மெல்ல நேரே பிரம ஞானம் ஆம் = மெள்ள மெள்ள சாக்ஷாத் பிரம்ம ஞானமாய் விடுகின்றது எ—று.

மற்று—அசைநிலை. 54

(அ—கை)

கூறிய பொருளைத் திருஷ்டாந்தத்தைக் காண்பித்தல் வாயிலாகத் திடஞ்செய்கின்றார்.

பணித்த சம்வா திப்பிரமை
பலிக்குங் காலத் துணர்வாம்போல்
கணித்தன் முத்திப் பொழுதின்மிகக்
கனிந்தே நற்கா க்ஷியதாமாற்
பணித்த சம்வா திக்களியாற்
பணிப்பட் டார்க்கோ ரளவையினாற்
கணித்த லுணர்வா மெனினங்
னற்காட்சிக் கதுகா ரணமாமே. 55

(ப—ரை) பணித்த சம்வாதிப் பிரமை = கூறிய சம்வாதிப் பிராந்தியானது, பலிக்கும் காலத்து உணர்வு ஆம் போல் = மணி முதலிய பொருள் கிடைக்கும்போது பிரமையாவதுபோல், கணித்தல் = எண்ணுதலாகிய உபாஸனையும், முத்திப்பொழுதில் = மோக்ஷமடையும் போது, மிகக்கனிந்து = அதிக பரிபாகமாகி, நல் காட்சியதாம் = நல்ல சாக்ஷாத்காரமாகின்றது, [ஆனால் சம்வாதிப் பிராந்தியானது தானே பிரமையாகிறதில்லை. மற்றோ அதனால் பிரவிருத்தித்த புருஷனுக்கு இந்திரியத்திற்கும் விஷயத்திற்கும் உள்ள சம்பந்தத்தால் பிரமை யுண்டாகிறது என்று வினவுகின்றான்] பணித்த சம்வாதிக் களியால் = கூறிய சம்வாதிப் பிராந்தியால், பணிப்பட்டார்க்கு = ஏவப்பட்ட புருடர்களுக்கு, ஓர் அளவையினால் = வேறொரு பிரமாணத்தினால், உணர்வு ஆம் எனின் = பிரமாஞானமுண்டாகின்றதென்று சொல்லின், [அப்படியானால் நிதித்தியாசன வடிவ நிர்க்குணப் பிரம்ம உபாஸனையும் வாக்கிய ஜன்னிய அபரோக்ஷ ஞானத்தில் காரணமாகுமெனக் கூறுகின்றார்] நற்காட்சிக்கு = பிரம்ம சாக்ஷாத்காரத்திற்கு, அஙன் = அவ்விதமே, அது கணித்தல் காரணம் ஆம் = அந்த நிர்க்குணப் பிரம்ம உபாசனையும் ஏதுவாகும் எ—று.

அங்ஙன் என்பது அஙன் என இடைக்குறையாயிற்று.

ஆல், ஏ—அசைநிலைகள்.

களி = பிராந்தி. 55

(அ—கை)

இவ்வாருயின் மூர்த்தித்தியானம் முதலியவற்றிற்கும் சித்தத்தின் ஏகாக்கிரத்தைச் சம்பாதித்தல் வாயிலாக அபரோக்ஷ ஞான சாதனத் தன்மை நேருமெனின் அதுவும் அங்கீகரிக்கப்படுகிறதெனக் கூறுகின்ருர். 56

மூர்த்தித் தியான மந்திரமா
தியவு மூல மெனிஞக
வார்த்த வவற்றி னிதிலணித்தா
மறிவா தலினுண் டதிவியப்புச்
சீர்த்த பரபாவனே முதிர்ச்சி
செறியுஞ் சமாதி யாமிதஞற்
கூர்த்த நிரோத சமாதிமெலக்
கூடும் வருத்த மறத்தானே. 56

(ப—ரை) மூர்த்தித் தியானம் மந்திரம் ஆதியவும்=விஷ்ணுவாதிகளின் சதுர்ப்புஜாதி உருவங்களைத் தியானித்தலும் பஞ்சாக்ஷரம் முதலிய மந்திரங்களைச் செபித்தலும், மூலம் எனின்=பரம்பரையாகப் பிரம்ம சாக்ஷாத்காரத்திற்குக் காரணமென்று சொல்லின், ஆக = காரணம் ஆகுக, [அப்படியாஞல் நிர்க்குணப் பிரம்மத்தின் உபாஸனையில் யாது விசேஷமெனிற் கூறுகின்ருர்] ஆர்த்த அவற்றின் = நிறைந்த அச்சாதனங்களைப் பார்க்கினும், இதில் = இந்நிர்க்குணப் பிரம்ம உபாஸனையில், அறிவு அணித்தாம் ஆதலின்=அபரோக்ஷ ஞானத்தின் சமீபத் தன்மையிருத்தலின், அதிவியப்பு உண்டு=மிகவும் மேன்மை இருக்கின்றது, [சமீபத் தன்மையின் பிரகாரத்தையே தெரிவிக்கின்ருர்] சீர்த்த பரபாவனே முதிர்ச்சி = சிறப்புப் பொருந்திய நிர்க்குணப் பிரம்ம உபாஸனையெப்போது பரிபக்குவமாகின்றதோ அப்போது, செறியும் சமாதியாம்=நெருங்கிய சவிகல்ப சமாதியாம், இதஞல் = இச்சவிகற்ப சமாதியிஞல், கூர்த்த நிரோத சமாதி= மேன்மையான நிருவிகற்ப சமாதி, மெல=நாளளவில், வருத்தம் அறகூடும் = அஞயாசமாக அடையப்படும் எ—று. 56

(அ—கை)

இவ்வாறு நிருவிகற்ப சமாதியின் அடைவு ஆகுக. அதஞல் என்னேயெனிற் கூறுகின்ருர்.

உரைசெய் நிரோதம் பெறிற்புருடர்க்
குள்ளே யசங்கப் பொருள்மீரும்
வரையி லதைமேன் மேற்கருதின்
வாய்மை யுரம்வாக் கியத்துண்டாம்
புரையி னிருவி கார நித
வசங்க புரண வொருதனொளி
நிரைநூ லோது மவைமதியி
னிமிட மேறும்வி வாதமற. 57

(ப—ரை) உரைசெய் நிரோதம் பெறின்=சொல்லிய நிருவி கற்ப சமாதியையடையின், புருடர்க்கு=ஆடவருக்கு, உள்ளே அசங்கப் பொருள் மீரும்=அந்தக்கரணத்தில் அசங்கவஸ்து மிஞ்சும், [அதனு லும் என்னையெனிற் கூறுகின்ருர்] இதை = அசங்க இவ்ஆன்ம வஸ்துவை, வரையில் மேல் மேல் கருதின்=அளவின்றி மீண்டும் மீண்டும் பாவனை செய்யின், வாக்கியத்து=தத்துவமசி முதலிய மகா வாக்கியத்தால், வாய்மை உரம் உண்டாம் = (நான் பிரம்மமாயிருக் கின்றேன் என்னும் வடிவினதாகிய) தத்துவ ஞானம் உற்பத்தியாகும். [தத்துவ ஞானத்தின் சொருபத்தையே வெளியாக்குகின்ருர்] நிரை நூல் ஓதுமவை = ஒழுங்கான வேதாந்த சாஸ்திரத்திற் சொல்லப் பட்டவைகளான, புரையில் நிருவிகாரம் = குற்றமற்ற நிருவிகாரத் தன்மையும், நிதம்=நித்தியத் தன்மையும், அசங்க=பற்றின்மையும், புரண=பரிபூரணத்தன்மையும், ஒரு தன்ஒளி=ஒப்பற்ற சொப்பிரகாசத் தன்மையும், ஆகிய இவைகள், மதியில் = புத்தியில், விவாதம் அற நிமிடம் ஏறும்=விவாதமின்றி சீக்கிரம் பதியும், விளங்குவனவா மென்பது பொருள் எ—று. 57

(அ—கை)

அற்றேல் நிருவிகற்ப சமாதி வசத்தால் அபரோக்ஷ ஞான முண்டாகிறதென்பதில் யாது பிரமாணம் என்ரு சங்கித்து அமிருத பிந்து முதலிய சுருதிகளைத்தும் பிரமாணமாமெனக் கூறுகின்ருர்.

யோகப் பயிற்சி யிதன்பொருட்டென்
ருேது மமுத விந்தாதி
யாகத் திருட்ட வழியாலு
மடியா தலினன் னியத்தேற்றம்

பாகத் தகைவிட் டுத்தீர்த்த
பயணஞ் செபமா தியசெய்வோர்
போகப் பிண்டத் தினையெறிந்தே
புறங்கை நக்கு பவராவார். 58

(ப—ரை) யோகப் பயிற்சி=யோகாப்பியாசம், இதன் பொருட்டு என்று=ஆன்ம ஞானத்திற்குக் காரணமென்று, அமுதவிந்து ஆதி ஓதும்=அமிருதபிந்து முதலிய சுருதிகள் கூறுகின்றன, [பலிதத்தைக் கூறுகின்றார்] ஆக=இவ்வாறு ஆகும்போது அதாவது நிர்க்குண உபாசனைக்கு அபரோக்ஷ ஞானத்தின் சமீபத்தன்மை சம்பவிக்கும் போது, திருட்ட வழியாலும் = திருஷ்ட வாயிலாகவும், அதாவது நிருவிகற்ப சமாதியின் பிராப்தி வாயிலாகவும் அதிருஷ்ட வாயிலாகவும், அடி ஆதலின் = ஞான சாதனமாவதால், அன்னியத்து ஏற்றம்= சகுண உபாஸனை முதலியவற்றினும் சிரேஷ்டமாம். [இவ்வாறு நிர்க்குண உபாஸனைக்கு அபரோக்ஷ ஞான சாதனத்தன்மை சித்தித்த போது அதனைப் பரித்தியாகஞ் செய்து வேறு சாதனத்திற் பிரவிருத்திப் பவருக்கு பரிசிரமம் வியர்த்தமாகுமென்று இலௌகீக நியாயத்தைக் காண்பித்தலால் கூறுகின்றார்] பகத்து அதைவிட்டு=மகத்துவமுடைய அந்நிர்க்குண உபாஸனையை யுபேக்ஷித்து, தீர்த்த பயணம் செபம் ஆதிய செய்வோர்=தீர்த்த யாத்திரை ஜபம் முதலானவைகளைச் செய்பவர்கள், போகபிண்டத்தினை எறிந்து=கரத்திலுள்ள இனிமை யான உணவு உருண்டையைப் பரித்தியாகித்து, புறங்கை நக்குபவர் ஆவார்=முழங்கையை நாவினால் நக்குபவராவார்கள் எ—று.

பகம் என்பது பாகம் எனத் திரிந்தது. பகம் = மகத்துவம். வழியாலும் என்ற உம்மையால் அதிருஷ்ட வாயிலாகவுமென்பது வருவிக்கப்பட்டது.

அடி = காரணம். 58

(அ—கை)

அற்றேல் ஆன்ம விசாரத்தைவிட்டு நிர்க்குண உபாசனையைச் செய்பவருக்கும் இந்த நியாயம் சமானமாமென்று சங்கித்து அதனை அங்கீகரிக்கின்றார்.

செய்யவி சார மொருவியுபா
 சிப்போர் தமக்கு மிவ்வகைத்தேன்
மெய்யத் திறத்தால் விசாரமறின்
 மேவ யோகம் விதித்தனமால்
வெய்ய வெறிதுன் றுளத்தினர்க்கு
 விசாரத் துண்மை யறிவுறுமோ
நய்யும வர்க்கியோ கந்தலைமை
 யதனு னசிக்கு மதித்தர்ப்பம். 59

(ப—ரை) செய்ய விசாரம் ஒருவி = சிறந்த ஆன்மாவின் ஆராய்ச்சியை விட்டு, உபாசிப்போர் தமக்கும் = நிர்க்குணத்தியானஞ் செய்பவருக்கும், இவ்வகைத்தேல் = இவ்வாறுமெனின் அதாவது பிண்டத்திலையெறிந்து புறங்கை நக்குதலுக்கு சமானமாமெனின், மெய் = நீ சொல்வது உண்மையே. [அப்படியானுல் நிர்க்குண உபாசனை ஏன் பிரதிபாதிக்கப்படுகிறது எனிற் கூறுகின்றார்] அத்திறத்தால் = கூறிய நியாயம் நேருதலால், விசாரம் அறின் = ஆராய்ச்சி சம்பவியாத போது, யோகம் மேவ விதித்தனம் = உபாஸனையைப் பொருந்தக் கூறினேம், [விசாரத்தின் அசம்பவத்தில் காரணங் கூறுகின்றார்] வெய்ய வெறிதுன்று உளத்தினர்க்கு = கொடிய கலக்கம் பொருந்திய மனதுடையவருக்கு, விசாரத்து = ஆன்மாவினாராய்ச்சியால், உண்மை அறிவு உறுமோ = தத்துவஞானம் உண்டாகுமா, உண்டாகாது, [விசாரம் சம்பவியாதபடியால் யோகம்செய்யத்தக்கதெனக்கூறுகின்றார்] நய்யுமவர்க்கு = வியாகுலமுடைய அவர்களுக்கு, யோகம் தலைமை = (விசாரம் சம்பவியாதபடியால்) உபாஸனை முக்கியமாம், [முக்கியத் தன்மையில் காரணங் கூறுகின்றார்] அதனுல் = யோகத்தால், மதித் தர்ப்பம் நசிக்கும் = புத்தியின் கருவம் தொலையும், அதனுல் முக்கிய மென்பது பொருள் எ—று. ஆல்—அசை. 59

(அ—கை)

இவ்வாறு வியாகுல சித்தமுடையவருக்கு யோகம் முக்கியமெனக் கூறி அஃதின்றியவருக்கு விசாரமே முக்கியமாமெனக் கூறுகின்றார்.

அலேசெய் துன்மன மகன்றுபோய் மோகமாத் திரத்தா
லுலேவு றும்படி மூடுபட் டுளவுணர் வினர்க்கு
நிலேமை துன்றுசாங் கியமென நிகழ்விசா ரந்தான்
றலேமை யாமிது சடிதியிற் பேறுத வலினே. 60

(ப—ரை) அலே செய்துன்மனம் அகன்றுபோய்=துன்பத்தைச் செய்யாநின்ற தீய மனம் நீங்கி, உலேவு உறும்படி=சமுசாரத்தில் அச்சம் பொருந்தும் வண்ணம், மோகமாத்திரத்தால் மூடுபட்டுள உணர்வினர்க்கு=ஆவரண மாத்திரத்தால் மறைக்கப்பட்ட அறிவினே யுடையவருக்கு, நிலேமை துன்று சாங்கியம் என நிகழ் விசாரம் = நிலேயாகப் பொருந்துவதும் சாங்கிய சத்தவாச்சியமாக விளங்குவது மாகிய தத்துவ விசாரம், தலேமையாம்=முக்கியமாம், [எதனுலெனிற் கூறுகின்ருர்] இது சடிதியில் பேறு உதவலின்=இந்தத் தத்துவ விசாரம் சீக்கிரம் சித்தியைக் கொடுத்தலால் எ—று.

தான், ஏ—அசைநிலே. 60

(அ—கை)

யோகம் சாங்கியம் என்னுமிரண்டற்கும் தத்துவ ஞான வாயிலாக முத்தி சாதனத் தன்மையில் கீதை வாக்கியத்தைப் பிரமாண மாக்குகின்ருர்.

எந்தத் தானந்தான் சாங்கியத் தியன்றிடப் படுமோ
வந்தத் தானந்தா னியோகத்தா லமைந்திடப் படுமா
லந்தச் சாங்கிய மியோகமு மேகமென் றறிவா
னெந்த மானுட னுமவ னினிதறி வானே. 61

(ப—ரை) எந்தத் தானம்=எந்த முத்தியாகிய இடம், சாங்கியத்து இயன்றிடப்படுமோ = விசாரத்தாலடையப்படுமோ, அந்தத் தானம்=அந்த இடம், யோகத்தால் அமைந்திடப்படும்=உபாஸனே யால் அடையப்படும், அந்த சாங்கியமும் யோகமும்=அந்த விசாரத் தையும் உபாஸனேயையும், எந்த மானுடன் ஏகம் என்று அறிவான்= யாதொரு புருஷன் பலத்தால் ஒன்றென்று உணருவானே, அவன்

இனிது அறிவான் = அந்தப் புருஷன் நூற்பொருளை நன்கு உணர்ந்த வனுகின்றுன் எ—று.

தான், தான், ஆல், ஏ—அசைநிலைகள். 61

பலம் = காரியம்.

(அ—கை)

கேவலம் கீதை வாக்கியம் பிரமாணமன்று. மற்றே அதன் மூல வடிவ சுருதியும் பிரமாணமாமெனக் கூறுகின்றுர்.

சாங்கி யத்துட னியோகமுந் தத்துவ ஞானக்
கோங்கு காரண மாமென வேமறை யோதுஞ்
சாங்கி யத்தொடி யோகத்துந் தவவிருத் தமதா
யோங்கு மேதது சுருதியின் போலியென் றுணர்க. 62

(ப—ரை) சாங்கியத்து உடன் யோகமும் = விசாரமும் உபாஸனையும், தத்துவஞானக்கு = பிரம்ம சாக்ஷாத்காரத்திற்கு, ஓங்கு காரணம் என = உயர்ந்த சாதனமாமென்று, மறை ஓதும் = சுருதி சொல்லும், [அற்றேல் சாங்கியம் யோகமிரண்டற்கும் தத்துவஞான வாயிலாக முத்தி சாதனத்தன்மையையங்கீகரிக்கின் அந்தச் சாஸ்திரத் திற் சொல்லப்பட்ட தத்துவங்களும் உடன்படத் தக்கனவாக நேரும் என்று சங்கித்துக் கூறுகின்றுர்] சாங்கியத்து ஒடு யோகத்தும் = சாங்கிய சாஸ்திரத்திலும் யோக சாஸ்திரத்திலும், சுருதியின் தவவிருத்தமதாய் ஓங்கும் ஏது அது = வேதாந்த சாஸ்திரத்தின் மிகவும் முரணுக விளங்குந் தத்துவமெதுவோ அது, போலி என்று உணர்க = மித்தையா மென்றறிவாய் எ—று.

சாங்கிய சத்தம் விசாரத்திற்கும் அதனைப் பிரதிபாதிக்கும் நூலுக்கும் பெயராம், அப்படியே யோக சத்தமும் உபாஸனைக்கும் அதனைப் பிரதிபாதிக்கும் நூலுக்கும் பெயராம், அந்த நூல் வேதாந்தமு மாகலாம். அப்படியாயினும் கபிலஸ்மிருதியையும் பதஞ்சலிஸ்மிருதியை யும் பிரதானமாகக்கொண்டு சங்கையும் சமாதானமுமாமெனவறிக.

தவ = மிகுதி. 62

(அ—கை)

அற்றேல் உபாசனை செய்கின்றவனுக்கு தத்துவஞானத்திற்கு முன்பு மரணமுண்டாயின் மோக்ஷம் சித்திக்காதென்று சங்கித்துக் கூறுகின்றார்.

இங்குபா சனைமு திர்ச்சி
யிலாதவன் மரிக்குங் கான்மற்
றங்கய னுலகி னாத
லறிந்துமெய் முத்தி சார்வான்
பொங்குபா வனையா தொன்றைப்
புரிந்துடல் விடுமந் தத்திற்
றங்கதை மருவுஞ் சித்தத்
தாலுறு மெனநூல் சாற்றும். 63

(ப-ரை) இங்கு = இவ்வுலகில், உபாசனை முதிர்ச்சி இலாதவன் = தியானம் பரிபக்குவம் ஆகாதவன், மரிக்குங்கால் ஆதல் = இறக்கும் போதாவது, அங்கு அயன் உலகின் ஆதல் = மறுமையில் பிரம்ம லோகத்திலாவது, மெய் அறிந்து = தத்துவத்தை சாக்ஷாத்கரித்து, முத்தி சார்வான் = மோக்ஷத்தையடைவான், மரண காலத்தில் ஞானத்தால் முத்தியடைவதில் கீதா வாக்கியம் பிரமாணமாமெனக் கூறுகின்றார்] அந்தத்தில் = மரண காலத்தில், பொங்கு யாதொன்றை பாவனை புரிந்து = மிகுதியாக யாதொரு வஸ்துவை நினைத்து, உடல் விடும் = தேகத்தைத் தியாகம் செய்வனோ, தங்கு அதை மருவும் = மனதால் தரித்த அவ்வஸ்துவையடைவன், [சுருதிப் பிரமாணத்தைக் கூறுகின்றார்] சித்தத்தால் உறும் என = சித்தத்தால் அடைவன் என்று, நூல் சாற்றும் = பிரசினோப நிஷத்தாகிய சாஸ்திரம் கூறுகின்றது எ—று.

பிரசினோப நிஷத்தின் பொருளிதுவாம்:— "இந்த ஜீவன் மரண காலத்தில் தேவதிரியக்காதி வடிவ எந்தத் தேகங்களை திடமாக சங்கற்பிக்கின்றானோ இந்திரியங்களோடு கூட அந்தச் சங்கற்ப வடிவ சித்தத்தால் முக்கியப் பிராணனையடைகின்றான். அதாவது மரண காலத்தில் இந்திரிய வியாபாரங்களின்றியவனாய் முக்கியப் பிராண விருத்தியோடு மாத்திரம் நிலைத்திருக்கின்றான். அந்தப் பிராணனும்

தேஜசாகிய உதான விருத்தியோடும் தனது சுவாமியாகிய போக்தா வோடும் கூடினதாய் அந்தப்போக்தாவினை அவன் முன்பு சங்கற்பித்த உலகத்தையடை விக்கின்றது. அதாவது கருமம் உபாஸனை முதலிய சாதனங்களையநுஷ்டிக்கும் காலத்தில் சங்கற்பிக்கப்பட்டதும் மரண காலத்தில் வாசனை வடிவத்தால் அபிவியக்தமானதுமாகிய தேவாதி சரீரத்தையடைவிக்கின்றது".

63

லோகம்=சரீரம்.

(அ—கை)

அற்றேல் பிரமாணமாகக் கூறப்பட்ட சுருதி ஸ்மிருதி வாக்கியங்களால் மரணகால பாவனையால் வரும் பிறப்பு சொல்லப்படுகிறது. ஞானத்தால் முத்தி சொல்லப்படவில்லையென்று சங்கித்து முகத்தால் அவ்வாறு சொல்லுதலை அங்கீகரிக்கின்றார்.

முடிவுணர்ச் சியினு னூன
மேற்பவ முளைத்த லென்னிற்
சடிதிநிர்க் குணக்க ருத்துஞ்
சகுணபா வனைபோ லாமா
லொடிவின்மெய் நித்த நிர்க்கு
ணமதெனப் பெயரா லோதப்
படுமிது பொருளால் வீடாம்
பன்னும்சம் வாதி மால்போல். 64

(ப—ரை) முடிவு உணர்ச்சியினுல்=மரணகால ஸ்மிருதியினுல், நூனம் மேல்பவம் முளைத்தல்=அவசியம் மறு பிறப்பு உண்டாம். [அப்படியானுல் மரண காலத்தில் ஞானத்தால் மோக்ஷ முண்டாகிற தென்பதில் இந்த சுருதி ஸ்மிருதிகளாகிய வாக்கியமிரண்டும் எப்படிப் பிரமாணமாக சொல்லப்பட்டதெனிற் கூறுகின்றார்] என்னில் = இவ்வாறு சொல்வதனுல், சகுண பாவனைபோல்=சகுண உபாஸகனுக்கு மரண காலத்தில் பூருவாப்பியாச வசத்தால் சகுணப் பிரம்ம வடிவமாக நினைவு உண்டாவது போல, சடிதி நிர்க்குணக் கருத்தும் ஆம்=நிர்க்குண உபாஸகனுக்கும் நிர்க்குணப் பிரம்ம கோசரமான நினைவும் சீக்கிரமுண்டாம், [அற்றேல் நிர்க்குணவுபாசனையின்

அப்பியாச வசத்தால் நிர்க்குணப் பிரம்மப் பிராப்தியேயுண்டாகும் முத்தியுண்டாகின்றதில்லை என்று சங்கித்து பிரம்மப் பிராப்திக்கும் முத்திக்கும் சத்தமாத்திரத்தால் பேதமாம் பொருளால் பேதமன்றெனக் கூறுகின்றார்] ஒடிவு இல்மெய் = விநாசமின்றிய பிரம்மம், நித்தம் நிர்க்குணமது என = நித்தியமென்றும் நிர்க்குணமென்றும், பெயரால் ஓதப்படும் = நாம மாத்திரத்தால் பேதமாக சொல்லப்படும், இது = இந்தப் பிரம்மம், பொருளால் வீடாம் = அருத்தத்தால் மோக்ஷமாம், சொருபாவஸ்திதி மோக்ஷமென்று கூறுதலால் என்பது கருத்து, [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] பன்னும் சம்வாதி மால்போல் = முன்சொல்லிய சம்வாதிப் பிராந்தி போன்று எ—று.

எப்படி சம்வாதிப் பிராந்தி நாமமாத்திரத்தால் பிராந்தியென்று சொல்லப்படுகிறதோ வாஸ்தவமாகத் தத்துவ ஞானமோ அதுபோல் என்பது பொருள். ஆல்—அசைநிலை. 64

(அ—கை)

அற்றேல் மானசக்கிரியா வடிவ நிர்க்குண உபாஸனைக்கு முத்தி சாதனத் தன்மையைக் கூறுதல் விரோதமாமென்று சங்கித்து அதனால் தோன்றிய ஞானத்திற்கு மோக்ஷ சாதனத் தன்மையைக் கூறுதலால் விரோதமன்றெனக் கூறுகின்றார்.

காசியின் கருத்தாற் றூர
கப்பர வுணர்வுண் டாமா
றாசிலச் சமர்த்தான் மூல
வவித்தைபோக் குணர்வுண் டாகு
மாசிக ழகாம நிட்கா
மன்றனூஉம் பொறியு மாண்டோன்
றூசிறு மபய முத்தி
சொலும்பயன் றூப நீயம். 65

(ப—ரை) காசியின் கருத்தால் = அவிமுக்தமென்னும் சகுணப் பிர்ம்மத்தின் உபாசனையால், தாரகப் பர உணர்வு உண்டாமாறு = தாரகப் பிரமத்தின் ஞானமுண்டாவது போல, ஆசுஇல் அச்சமர்த் தால் = குற்றமற்ற நிர்க்குணப் பிரம்ம உபாஸனையின் சாமர்த்தியத்

தால், மூல அவித்தை போக்கு உணர்வு உண்டாம் = மூலாஞ்ஞானத்தைக் கெடுக்கின்ற நிர்க்குணப் பிரம்மஞானமுண்டாம் [நிர்க்குண உபாஸனைக்கு மோக்ஷம் பயனென்பதில் யாது பிரமாணமென்று சங்கித்துக் கூறுகின்றார்] மாசு இகழ் அகாமன் = அவன் குற்றமற்ற அகாமன், நிட்காமன் = நிஷ்காமன், தனும் பொறியும் மாண்டோன் = அசரீரன் நிரிந்திரியன், தூசுஇறும் அபயம் = களங்கம் அற்ற அபயம் என்று, தாபநீயம் முத்திபயன் சொலும் = தாபநீய சுருதி மோக்ஷமாகிய பிரயோஜனத்தைப் பிரதிபாதிக்கின்றது எ—று.

"அவன் அகாமன் நிட்காமன் ஆப்தகாமன் ஆன்மகாமன் அவனது பிராணன்கள் வெளியிற் செல்லா. இவ்விடத்திலேயே விலீனமாகின்றன, பிரம்மமாக இருந்து பிரம்மத்தை அடைகின்றான். அசரீரன் நிரிந்திரியன் அப்பிராணன் அமனன் சச்சிதானந்த மாத்திரன் எவன் இவ்வாறு உபாஸிக்கின்றானோ அவன் ஸ்வராட்டு ஆகின்றான். இவ்வோங்காரம் சின்மயமே. ஈதனைத்தும் சின்மயமே. ஆகையால் பரமேஸ்வரன் ஒருவனே உளன் இந்த பிரம்மம் அமிருதம் அபயம் எவன் இவ்வாறு உபாஸிக்கின்றானோ அவன் அபயப்பிரம்மமாகின்றான் இது இரகசியம்" என்பது முதலிய வாக்கியங்களால் தாபநீய உபநிடதத்தில் நிர்க்குண உபாஸனைக்கு மோக்ஷம் பயனாகக் கேட்கப்பட்டிருக்கின்றதென்பது பொருள்.

அவிமுத்தமென்பது காசி, அதன் உபாஸனையாவது சிரத்தையோடு அதில் வாசஞ்செய்தல், அதனால் மரண காலத்தில் விஸ்வநாதர் தாரகப் பிரம்மத்தை உபதேசிக்கின்றார். அதனால் தாரகப் பிரம்ம ஞானமுண்டாகின்றது, அதுபோல நிர்க்குணப் பிரம்ம உபாஸனையால் நிர்க்குணப் பிரம்ம ஞானமுண்டாகிறது. அதனால் மோக்ஷமுண்டாகிறதென்பது பொருள். 65

(அ—கை)

அற்றேல் உபாஸனையால் முத்தியுண்டாகுமாயின் "மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை" என்னுஞ் சுருதிக்கு விரோதமாமென்று சங்கித்து வித்தையின் வாயிலாக மோக்ஷத்தைக் கொடுக்குந் தன்மையைக் கூறுதலால் விரோதமன்றெனக் கூறுகின்றார்.

நிதவுபா ஸனேத்தி றத்தால்
வித்தைதா னேரு மத்தா
லிதரமாம் வழியே யில்லே
யென்னுநூன் முரணு முத்தி
தவையவா வொழிபா வத்தா
மென்றது தாப நீயம்
விதிபதி சகாம னுக்கா
மெனப்பிரச் சினம்வி ளம்பும். 66

(ப—ரை) நித உபாஸனேத் திறத்தால்=நிரந்தர நிர்க்குணப் பிரம்மத் தியானத்தின் சாமர்த்தியத்தால், வித்தை நேரும்=பிரமஞான முற்பத்தியாகும், அத்தால்=அக்காரணத்தால், இதரம் ஆம் வழிஇல்லே என்னும் நூல் முரணு=மோக்ஷத்திற்கு பிரம்ம ஞானத்தினும் வேறு வழி இல்லேயென்று கூறும் சுருதி விரோதமாகாது, மரண காலத்திலாவது பிரம்ம லோகத்திலாவது பிரமத்தை சாக்ஷாத்கரித்து முத்தனு கின்ருன் என்று கூறிய பொருளில் சுருதியைப் பிரமாணமாக்குகின்ருர் அவா ஒழி பாவத்து=நிஷ்காமவுபாசனேயால், முத்தி தவைவு ஆம்= மோக்ஷம் கிட்டுகின்றது, என்றது தாபநீயம்=என்று கூறுகின்றது தாபநீய சுருதி, "அவன் அகாமன்" என்பதாதி தாபநீய வாக்கியம் முன்பு கூறப்பட்டது, சகாமனுக்கு = இச்சையோடு கூடினவனுக்கு, நிர்க்குண உபாசனேயால், விதிபதியாம்=பிரம்மலோகம் கிட்டும், என பிரசினம் விளம்பும்=என்று பிரசின சுருதி கூறுகின்றது எ—று. 66

(அ—கை)

இப்போது பிரசிஞேப நிடதத்தின் வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்ருர்.

எவன்மூமாத் திரையா லெண்ணு
மவனய னுலகை யெய்து
மவனிவாத் துமக னத்தி
னறவுயர் புருடற் காணு
முவமையி லப்பிரதீ கந்தா
னேதுமந் நினேவின் ஞாயங்
குவிசகா மனுக்கவ் வாற்ருற்
கூடுமந் தணனூர்ப் பேறே. 67

(ப—ரை) எவன் முமாத்திரையால் எண்ணும் = யாதொரு புருடன் மூன்று மாத்திரையோடு கூடிய ஓங்காரத்தால் பரமபுருஷனைத் தியானஞ் செய்வனே, அவன் அயன் உலகை எய்தும் = அவன் பிரம்ம லோகத்தையடைவான், [ஆனால் சைப்பியரிஷியின் வினவில் சகாமனுக்கு பிரம்மலோக கதியே பிரதீதியாகின்றது என்று சங்கித்து ஆண்டு தத்துவ சாக்ஷாத்காரமும் கேட்கப்படுகின்றதெனக் கூறுகின்றார்] அவன் = பிரம்ம லோகத்தையடைந்த உபாசகன், இவ் ஆத்தும கனத்தின் = இந்தச் சீவ சமஷ்டி வடிவ இரண்ணிய கருப்பனினும், அறஉயர் புருடன் காணும் = மிகவும் மேலான நிருபாதிக சைதன்னிய வடிவ பரமான்மாவை சாக்ஷாத்கரிப்பான், [மேலும் "பிரதீக உபாஸகரினும் வேறான உபாஸகரை அமானவ புருஷன் பிரம்மலோகத்தையடைவிக்கின்றான் என்று வாதராயணர் கூறுகின்றார். இரண்டு பிரகாரத்தானுந் தோஷமின்மையால் அதன் சங்கற்பமும்" என்னும் சூத்திரத்தில் இச்சையினநுசாரமாக பலத்தினடைவு உண்டாகிறதென்று பிரதிபாதிக்கப்பட்டது. அதனாலும் சகாமனுக்கு பிரம்மலோக கதி சொல்லப்பட்டதெனக் கூறுகின்றார்] உவமையிலப் பிரதீகந்தான் = சமானமற்ற அப்பிரதீக அதிகரணம், அந்நினைவின் ஞாயம் ஓதும் = அந்தக் கிருதுவின் நியாயத்தைக் கூறுகின்றது. அவ்வாற்றால் = அக்காரணத்தால், குவிசகாமனுக்கு = பொருந்தாநின்ற இச்சையோடு கூடிய புருஷனுக்கு, அந்தணன் ஊர்ப் பேறு கூடும் = பிரம்ம லோகமாகிய பயனுண்டாகும் எ—று.

ஈண்டு தற்கிருது நியாயமாவது எவன் எதனை தியானஞ் செய்கின்றானே அவன் அதனையடைகின்றான் என்பது. இதுவே சூத்திரத்தில் அதன் சங்கற்பமும் எனக் கூறப்பட்டது. கிருது = சங்கற்பம், மும்மாத்திரையாலென்பது, "எவன் மூன்று மாத்திரையோடு கூடிய ஓம் என்னுமிவ்வக்ஷரத்தால் பரம புருஷனைத் தியானிக்கின்றனனே, அவன் தேஜஸ் வடிவ சூரியனிடத்தில் கூடுகின்றான், எப்படி பாம்பு தோலால் விடுபடுகிறதோ, அப்படி அவன் பாபத்தால் விடுபடுகின்றான், அவன் சர்ம புருஷர்களால் பிரம்மலோகம் கொண்டு போகப்படுகின்றான், அவன் இரணிய கருப்பனினும் மேலாகிய தேக வடிவ புரியில் இருக்கின்ற புருஷனைப் பார்க்கின்றான்" என்று சகாமனுக்கு பிரம்மலோகப் பிராப்தி கேட்கப்படுகின்றதென்பது பொருள்.

(அ—கை)

அப்படியானுல் சகாமனுக்குத் தத்துவ ஞானம் எதனுல் உண்டாகுமென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

அரியநிர்க் குணத்தி யானத்
தடலினங் குறுமெய்ஞ் ஞானம்
புரியிவன் மீட்டுண் டாகான்
புகல்கற்பாந் தத்தில் வீடா
முரியதா ரகபா வங்க
ளொருங்குநிர்க் குணங்க ளேயாந்
தரிபிர ணவபா வத்திற்
சகுணமாஞ் சிறிது தானே. 68

(ப—ரை) அரிய நிர்க்குணத் தியானத்து அடலின் = மேன்மையான நிர்க்குண உபாசனையின் சாமர்த்தியத்தால், அங்கு மெய்ஞ் ஞானம் உறும் = அயன் உலகில் ஆன்ம சாக்ஷாத்காரத்தை அடைவன், ["சுழன்று வருகின்ற இந்த மனுகற்பத்தில் திரும்பி வருவதில்லை" "பிரம்மாவோடுகூட அவ்வெல்லோரும் பரமபதத்தை அடைகின்ருர்கள்" என்பது முதலிய சுருதி ஸ்மிருதிகளிருத்தலினுல் அவனுக்கு மீண்டும் சமுசாரத்தின் அடைவு இன்ரும். மற்ரே முத்தியேயாம் எனக் கூறுகின்ருர்] புரிஇவன் = நிர்க்குணத் தியானத்தைச் செய்த இவன், மீண்டு உண்டாகான் = மறுபடியும் பிறவான், புகல் கற்பாந்தத்தில் வீடாம் = சொல்லா நின்ற பிரம்மலோகத்தின் அழிவு காலத்தில் பிரம்மாவோடுகூட முத்தியாம், [இப்போது பிரணவ உபாஸனையின் பிரசங்கத்தால் புத்தியில் உள்ள அதன் இருவிதத்தைத் தெரிவிக்கின்ருர்] உரிய தாரக பாவங்கள் = வேதத்திற் பிரதிபாதிக்கப் பட்ட தகுதியான பிரணவவுபாசனைகள், ஒருங்கு நிர்க்குணங்களேயாம் = பெரும்பாலும் நிர்க்குணங்களே ஆகின்றன, தரிபிரணவ பாவத்தில் சிறிது சகுணமாம் = தரிக்கின்ற பிரணவ உபாஸனையில் சிறுபான்மை சகுணமாம் எ—று. 68

(அ—கை)

இருவிதப் பிரணவ உபாஸனையில் பிரமாணங் கூறுகின்ருர்.

வினவுசத் தியகா மற்கு
மேதகு பிப்ப லாத
முனிபரா பரமெய் யாமோ
மிருவகைத் தெனமொ ழிந்தா
னினையவா லம்ப னந்தேர்ந்
தெதுநயப் பதுவந் தெய்து
மெனநமன் ருனு நாசி
கேதுவுக் கியம்பி ஞனல். 69

(ப—ரை) வினவு சத்தியகாமற்கு = சங்கை செய்கின்ற சத்திய காமன் என்னும் ரிஷிக்கு, மேதகுபிப்பலாத முனி = மேன்மையான பிப்பலாத மகரிஷி, ஓம்பர அபரமெய் ஆம் என = ஓங்காரம் பரப்பிரம்ம மும் அபரப்பிரம்மமுமாமென்று, இருவகைத்து மொழிந்தான் = இரண்டு விதங் கூறினன் [கடவல்லியில் யமதருமனுலும் "இந்த ஆலம் பனத்தை அறிந்து" என்பது முதலியவற்ருல் இருவிதம் சொல்லப் பட்டதெனக் கூறுகின்ருர்] இனைய ஆலம்பனம் தேர்ந்து = இத்தகைய ஓங்கார வடிவ ஆசிரயத்தை அறிந்து, எது நயப்பு அதுவந்து எய்தும் = எவனுக்கு எதில் இச்சையோ அவனுக்கு அந்த வஸ்து அடையப்படும், என நமனும் நாசிகேதுவுக்கு இயம்பினன் = என்று யமதருமராஜாவும் நசிகேதாவுக்குக் கூறினன் எ—று.

"சத்தியகாம இந்த ஓங்காரம் பரப்பிரம்மமும் அபரப்பிரம்மமும் ஆம். ஆகையினுல் இந்த ஓங்காரமாகிய ஆயதனத்தால் இரண்டனுள் ஒன்றை அடைகின்ருன்" என்று உபய வடிவம் பிரதிபாதிக்கப்பட்ட தென்பது பொருள்.

ஆயதனம் = ஆசிரயம். 69

(அ—கை)

கூறிய பொருளை முடிக்கின்ருர்.

உரைசெய்நிர்க் குணத்தி யான
முஞற்றுவோர்க் கிங்கே யீற்றிற்
பிரமலோ கத்தி ஞதற்
பிரமநற் காட்சி யுண்டாந்

தெரியட லிலரான் மாவைத்
தினமு பாசிக்க வென்றிப்
பொருளினை யான்ம கீதை
புலப்படப் புகலு மன்றே. 70

(ப—ரை) உரைசெய் நிர்க்குணத் தியானம் உஞற்றுவோர்க்கு = கூறிய நிர்க்குணப் பிரம்ம உபாஸனையை நன்றாய்ச் செய்பவருக்கு, இங்கே ஆதல் = சீவித்திருக்கும் போதாவது, ஈற்றில் ஆதல் = மரண காலத்திலாவது, பிரமலோகத்தின் ஆதல் = அயனுலகிலாவது, பிரம நற்காட்சி உண்டாம் = சிறந்த ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாகும், [விசாரத்தால் தத்துவ ஞானத்தைச் சம்பாதிக்க ஆற்றலின்றியவனுக்கு நிர்க்குணப் பிரம்மத் தியானத்தில் அதிகாரமாம் என்னுமிப் பொருள் ஆன்ம கீதையிலும் நன்றாகக் கூறப்பட்டுளது எனக் கூறுகின்றார்] தெரிஅடல் இலர் = விசாரத்தில் வல்லமையின்றியவர், ஆன்மாவை தினம் உபாசிக்க என்று = நிர்க்குணப் பிரமத்தையெப்போதும் தியானிக்குக என்று, இப்பொருளினை = இந்த அருத்தத்தை, ஆன்ம கீதை புலப்பட புகலும் = ஆன்ம கீதை ஸ்பஷ்டமாகக் கூறுகின்றது எ—று. அன்று, ஏ—அசை.

ஆதல் முன்பும் கூட்டப்பட்டது. 70

(அ—கை)

ஆன்ம கீதையின் வாக்கியங்களையேயுதாரிக்கின்றார்.

அறிதர வலியற் றோனு
மையமற் றெனைச்சிந் திக்கிற்
செறியனு பவமாய்க் காலத்
தாற்பய னுவான் றிண்ண
முறவியுண் ணிதியஞ் சேர்தற்
குபாயமி னேண்ட நீர்ந்தித்
திறமெனை யுறற்கு மான்ம
சிந்தைதீர்ந் தயலொான் றின்றே. 71

(ப—ரை) அறிதரவலி அற்றோனும் = ஆன்மாவை சாக்ஷாத் கரிக்க ஆற்றலின்றியவனும், ஐயம் அற்று எனை சிந்திக்கில் = சந்தேக

மின்றியவனுய் பரமான்மாவான என்னைத் தியானஞ் செய்யில், காலத்தால் செறி அநுபவமாய்=கொஞ்ச காலத்தில் நெருங்கிய அநுபவமுள்ளவனுய், பயனுவான்=முத்தனுகுவன், திண்ணம்=இது நிச்சயமாம், [தியானத்திற்கு நல்லறிவின் உபாயத் தன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்] உறவியுள்=ஆழமான குழியில் வைக்கப்பட்ட, அம்நிதி சேர்தற்கு = அழகிய புதையலையடைவதற்கு, நோண்டல் தீர்ந்து உபாயல் இல்=மண்ணைப் பரித்தலொழித்து வேறு உபாயமில்லை, [தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்ருர்] இத்திறம் எனை உறற்கும் = இதுபோல் பரப்பிரம்ம சொரூபனுன என்னையடைவதற்கும், ஆன்ம சிந்தனை தீர்ந்து அயல் ஒன்று இன்று=பிரம்மத் தியானத்தைவிட்டு வேறுவழி இல்லை எ—று.

ஏ— அசை. 71

(அ—கை)

எதிர்மறையாற் கூறிய பொருளை யன்வயத்தாற் கூறுகின்ருர்.

புத்தியாங் கூந்தா லத்தாற்
 புரையுடற் சிலையைப் போக்கி
யத்தின்மேன் மனநி லத்தை
 யகழ்ந்துபிற் புருட னுனுஞ்
சொத்தினைக் கொள்ளல் வேண்டுந்
 தூயநு பவமின் றேனுஞ்
சித்திதற் பரநா னென்றே
 சிந்தனை செய்ய வேண்டும். 72

(ப—ரை) புத்தியாம் கூந்தாலத்தால்=ஆன்மத் தியானமாகிய ஈட்டியினுல், புரைஉடல் சிலையைப் போக்கி=தோஷத்தோடு கூடிய தேகமாகிய கல்லையப்புறப்படுத்தி, அத்தின்மேல் மனநிலத்தை அகழ்ந்து=அதன் பிறகு மனமாகிய பூமியைத் தோண்டி, பின் நான் ஆம் சொத்தினை=அதன் பின்பு ஆன்மாவாகிய புதையலை, புருடன் கொளல்வேண்டும் = ஆடவன் கிரகிக்கவேண்டும், [ஞானத்தில் வல்லமையின்றியவனுக்கு தியானத்தில் அதிகாரம் என்பதில் வேறு வாக்கியத்தைப் படிக்கின்ருர்] தூய் அநுபவம் இன்றேனும்=பரிசுத்த

மாகிய சாக்ஷாத்காரமில்லாவிடினும், சித்திதற்பரம் நான் என்றே= ஞான வடிவ அந்தப் பிரம்மம் யானாகின்றேனென்று, சிந்தனைசெய்ய வேண்டும் = உபாஸனை செய்யவேண்டும் எ—று. 72

(அ—கை)

தியானத்தால் பிரம்மப் பிராப்தியில் கைமுதிக நியாயத்தைக் கூறுகின்றார்.

இல்லதுந் தியானத் தால்வந்
தெய்துமே னித்தப் பேருய்ப்
புல்லுநற் பிரம மென்று
புகலுவ தென்னே யான்மா
வல்லவா மதிதி யானத்
தாற்றினந் தினந்தீர்ப் பேற்றை
நல்லநோக் கியுநா டாரே
னவிலிவர்க் கயலா னேதோ. 73

(ப—ரை) இல்லதும்=உபாஸகனுக்கு முன்பு இல்லாததான தேவத் தன்மை முதலியதும், தியானத்தால் வந்து எய்துமேல் = உபாஸனையால் வந்தடையப்படுமாயின், நித்தப்பேருய் நற்பிரமம்= தனது வடிவத் தன்மையால் நித்தியப் பிராப்தமாய்ச் சர்வான்மகமா யுள்ள நல்ல பிரம்மம், புல்லுமென்று=தியானத்தால் அடையப்படு மென்று, புகல்வது என்னே=சொல்லவாவேண்டும், [பிரமத்தியானத் தின் பயன் பிரத்தியக்ஷ சித்தமாதலாலும் தியானஞ் செய்யத்தக்க தெனக் கூறுகின்றார்] தியானத்தால்=நிர்க்குணப் பிரம்ம உபாஸனை யால், தினந்தினம் = நாள்தோறும், ஆன்மா அல்லவாம் மதிதீர் பேற்றை=அனுன்ம புத்தியின் குறைதல் வடிவ பிரயோசனத்தை, நல்ல நோக்கியும்=நன்ருகப் பார்த்தும், நாடாரேல்=பிரம்மத்தைத் தியானியாரேல், இவர்க்கு அயல் ஆன் ஏது=தியானஞ் செய்யாதிருக் கின்ற இப்புருஷரினும் வேருன பசு யாது, நவில்=சொல்வாய் எ—று. ஓ—அசை. 73

(அ—கை)

இப்போது உபபாதனஞ் செய்த பொருளை சுருக்கித் தெரிவிக் கின்ருர்.

தேகபா வனைசி தைத்துத்
தியானத்தொன் றுந்த னைக்கண்
டாகியே யமிர்த மாந்த
ரரும்பர மிங்குச் சார்வார்
சீகர விந்தத்தி யான
தீபத்தை நன்கா ராய்வோர்
தாகசந் தேகந் தீர்ந்தே
சந்ததம் பரஞ்சிந் திப்பார். 74

(ப—ரை) தியானத்து=பிரமத் தியானத்தால், தேகபாவனை சிதைத்து=மரண சுபாவமுள்ள தேகத்தில் நான் என்னும் அபிமானத்தைக் கெடுத்து, ஒன்றும் தனைக்கண்டு = அத்துவித ஆன்மாவைத் தெரிசித்து, அமிர்தம் ஆகியே=சொயம் அமிருதராகியே, மாந்தர்= புருஷர்கள், இங்கு அரும்பரம் சார்வார் = இந்தச் சரீரத்திலேயே தனது நிசவடிவ சச்சிதானந்த பிரம்மத்தை அடைவார்கள், [தியான தீப அநுசந்தானத்தின் பயனைக் கூறுகின்றார்] சீகர=குளிர்ந்த. இத் தியான தீபத்தை = இந்தத் தியான தீபமென்னும் பிரகரணத்தை, நன்கு ஆராய்வோர் = நன்றாக விசாரிப்பவர்கள், தாக சந்தேகம் தீர்ந்து=சந்தாப ஏதுவான சமுசயத்தையொழித்து, சந்ததம் பரம் சிந்திப்பார்=எப்போதும் பிரமத்தைத் தியானிப்பவர் ஆவார் எ—று. 74

ஒன்பதாவது தியான தீபம் முற்றிற்று.

ஆகக்கவி 577

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## பத்தாவது பிரகரணம்.

## நாடக தீபம்.*

ஸ்ரீ பாரதீ தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ்கரித்து நாடக தீபத்தின் பொருள் சுருக்கி என்னால் சொல்லப்படும்.

(அ—கை)

செய்ய விரும்பிய நூல் தடையின்றி முடிதற் பொருட்டு இஷ்டதேவதையின் சொரூப ஸ்மரண வடிவ மங்கலத்தையநுஷ்டிக்கின்றவராய் மந்தாதிகாரிகளுக்கு வருத்தமின்றி பிரபஞ்சமற்ற பிரம்மான்ம தத்துவ ஞானம் சித்திக்கும் பொருட்டு "அத்தியாரோப அபவாதங்களால் பிரபஞ்சமற்ற பிரம்மம் விஸ்தரிக்கப்படுகிறது. சிஷ்யர்களுக்கு ஞானமுண்டாகும் பொருட்டு தத்துவத்தையறிந்தவரால் கிரமம் கற்பிக்கப்பட்டுளது'' என்னும் நியாயத்தையநுசரித்து ஆன்மாவில் அத்தியாரோபத்தை முதலிற் கூறுகின்றார்.

பகர்வரிய வத்துவிதா நந்தபரி பூர்ணப்
பரமான்மா முன்றனது மாயையி னுற்றானே
செகமயமா யுயிருருவாய்ப் புக்குறு மேலான
தேவாதி யுடல்களிற்புக் கேதெய்வ மாகுந்

* சேதனத்தில் அத்தியஸ்தமான அகங்காராதிகளையும் அவற்றினை விளக்கும் சாக்ஷியினையும் நாடகமாக உருவகப்படுத்திக் கூறுதலால் இப்பிரகரணம் நாடக தீபமெனப்படும்.

தகவறு மாநுடராதி யுடல்களிடை நிலைத்துத்
தகத்தெய்வம் பணியும்பற் பலசென்மப் பணியாற்
சுகமுரு தற்சிந்தைசெய நயக்கும்விசா ரத்தாற்
றுகண்மிகு வன்மாயை கெடிற் ருன்சேடமாமே.1

(ப—ரை) முன்=சிருஷ்டிக்கு முன்பு, பகர்வு அரிய அத்துவித ஆனந்த பரிபூரண பரமான்மா = வாக்கினுல் வசனிக்கத்தகாததும் சுவகதாதி பேதமற்றதும் பரமானந்த ரூபமும் பரிபூரணமுமாகிய பிரம்மம், தனது மாயையினுல்=தன்னிடத்திலுள்ள மாயா சத்தியினுல், தானே செகமயமாய்=சொயமே சகத்தின் வடிவத்தையடைந்து, உயிர் உருவாய்ப் புக்குறும்=சீவரூபத்தால் பிரவேசிக்கும், [ஒரே பரமான் மாவே சருவ சரீரங்களிலும் பிரவேசித்திருக்கின் பூச்சிய பூசகத் தன்மையால் பிரதீதியாகின்ற உயர்வு தாழ்வுத் தன்மை விரோதமா மென்று சங்கித்துக் கூறுகின்ருர்] தேவாதி மேலான உடல்களில் புக்கு=விஷ்ணு முதலியோரின் உயர்வான தேகங்களில் பிரவேசித்து, தெய்வமாகும்=பூசிக்கத்தக்க தேவதையாகும், மாநுடர் ஆதிதகவு அறு உடல்களிடை நிலைத்து=மனுஷியர் முதலோரது தாழ்வான தேகங் களில் பிரவேசித்திருந்துகொண்டு, தெய்வம் தகபணியும்=விஷ்ணு வாதி தெய்வங்களை ஒழுங்காய் வணங்குபவன் ஆவன், உயர்வு தாழ்வுத் தன்மை இயற்கையன்று, மற்ருே சரீரமாகிய உபாதியை முன்னிட்ட தாம். ஆகையால் விரோதமின்றென்பது கருத்து, [இவ்வாறு ஆன்மா வில் அத்தியாரோபத்தை சுருக்கமாகத் தெரிவித்து சாதன சகிதம் அதன் அபவாதத்தை சுருக்கமாகத் தெரிவிக்கின்ருர்] பற்பல சென்மப் பணியால் = அநேக பிறப்புகளில் அநுஷ்டிக்கப்பட்ட கருமங்களை ஈசுரனிடத்தில் சமர்ப்பணஞ் செய்தலாகிய சேவையால், சுகம் உருதன் சிந்தை செய நயக்கும்=ஆனந்த வடிவ ஆன்மாவினது விசாரத்தைச் செய்ய இச்சிப்பன், விசாரத்தால்=விசார ஜன்னிய ஞானத்தால், துகள் மிகுவன் மாயை கெடில்=குற்றம் நிறைந்த கொடிய அஞ்ஞானம் நாசமாயின் தான்சேடமாம்=பரமான்மாவே மிஞ்சுகின்றது எ—று.

செய்ய என்பது செய என்று இடைக்குறையாயிற்று.

அத்துவிதாநந்த பரிபூர்ண பரமான்மா "சிருஷ்டிக்குமுன் ஈதனைத்தும் சத்தாகவே இருந்தது'' "ஒரே அத்துவிதீயம்'' "பிரமம் விஞ்ஞான வடிவமும் ஆனந்த வடிவமுமாம்" "அது பூர்ணம் இது பூர்ணம்" என்பது முதலிய சுருதியால் பிரசித்தமாம்.

"மாயையை பிரகிருதியெனவறிக. மாயாவியை மஹேஸ்வரன் என அறிக" என்னும் சுருதியால் மாயை பிரசித்தமாம். "தானே சகத்து வடிவாகி" "தானே அதன் வடிவைச் செய்தது" "பிரத்தியக்ஷ வடிவ சத்தும் பரோக்ஷ வடிவ தியத்தும் ஆயினது" என்னும் சுருதி யால் தானே சகமயமாய் என்பது பிரசித்தமாம். "அதுவே சிருஷ்டித்து அதுவே பிரவேசித்தது" "இந்த சீவரூபத்தால் பிரவேசித்து" என்னும் சுருதியால் உயிருருவாய் என்பது பிரசித்தமாம். சிந்தை = ஞான சாதன சிரவணுதி, வன்மாயை = தனது அத்துவித ஆனந்தத் தன்மை முதலியவற்றை மறைப்பதும் அஞ்ஞானுதி சத்தவாச்சியமுமாகிய அவித்தை, தான் சேடமாம் = அத்துவயானந்த பரிபூர்ண பரமான்மா மிஞ்சும். 1

(அ—கை)

அற்றேல் அந்தப் பிர்மமே யானுகின்றேன் என்றறிந்து சகல பந்தங்களினின்றும் விடுபடுகின்ருன் என்பது முதலிய சுருதிகளால் பந்த நிவிருத்தி வடிவ மோக்ஷம் ஞானத்தின் பயனுகக் கூறப்பட்ட படியால் பரமான்மா மிஞ்சுதலே அதன்பயனுகக் கூறுதல் பொருந்தாது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

அத்துவிதா நந்தவுரு துயர்மயமாந் துவிதத்
 தணுகுதலே பந்தமென லாஞ்சொருப மாக
வொத்தநிலே முத்தியென லாமவிசா ரத்தா
 லுறும்பந்தம் விசாரத்தா லொழிவுறுமா தலினு
லெத்தினமுஞ் சீவான்மா வொடுபரமான் மாவை
 யெண்ணிடுக வெவனுனென் றெண்ணுமவன் கருத்தா
வித்தகையன் றனக்குமனஞ் சாதனமா மிதனுக்
 கிசையொழுங்கி னுட்புறஞ்சேர் விருத்திதொழி லாமே. 2

(ப—ரை) அத்துவித ஆனந்த உரு = துவைதமற்ற சுகவடிவ ஆன்மா, துயர் மயமாம் துவிதத்து அணுகுதலே = துக்கவடிவ துவிதப் பிரபஞ்சத்தையடைதலே, பந்தம் எனலாம் = பந்தமென்று சொல்லப் படும், சொரூபமாக ஒத்தநிலே = ஆன்ம வடிவாகப் பொருந்திய ஸ்திதி, முத்திஎனலாம் = மோக்ஷமென்று சொல்லப்படும், அத்துவித பிரமத்தில் வாஸ்தவமாக பந்தத்தையாவது மோக்ஷத்தையாவது நிருபிக்க முடியாமையால் துக்கித்துவாதி பிராந்தியே பந்தமாம் சொரூபா வஸ்திதி வடிவ அதன் நிவர்த்தியே மோக்ஷமாம் ஆனதால் சுருதி

விரோதமின்றென்பது கருத்து. [அற்றேல் "ஜனகர் முதலோர் கருமத்தாலேயே ஸம் சித்தியையடைந்தனர்" என்னும் ஸ்மிருதியால் மோக்ஷத்திற்குக் கருமம் சாதனமாமென அறியப்படுவதால் இந்த விசார ஜன்னிய ஞானத்தாலென்னேயெனிற் கூறுகின்ருர்] அவிசாரத்தால் உறும் பந்தம்=விசாரத்தின் முன்னின்மையால் உபலக்ஷிக்கப் பட்ட அஞ்ஞானத்தால் வந்த சமுசாரம், விசாரத்தால் ஒழிவுறும்= விசார ஜன்னிய ஞானத்தால் நிவர்த்தியாகும், அஞ்ஞானத்தாற் செய்யப்பட்ட பந்தத்திற்கு விசாரஜன்னிய ஞானத்தினும் வேருன சாதனத்தால் நிவர்த்தி பொருந்தாது. எடுத்துக்காட்டிய கீதையிலும் ஸம் சித்தி சத்தத்தால் சித்த சுத்தியே சொல்லப்படுகிறது. மோக்ஷமன் றென்பது கருத்து, [விசாரத்தால் பந்த நிவர்த்தி சொல்லப்பட்டது எவ்விஷயகமான விசாரத்தால் எனிற் கூறுகின்ருர்] ஆதலினுல் = விசாரம் முக்கிய சாதனமாவதால், எத்தினமும் = தத்துவ சாக்ஷாத்கார பரியந்தம் எப்போதும், சீவான்மா ஒடு பரமான்மாவை எண்ணிடுக= துவம்பதார்த்த சீவனேயும் தற்பதார்த்த ஈசனேயும் விசாரஞ் செய்ய வேண்டும், [அவற்றுள் சீவனது சொரூபத்தை முதலில் நிரூபிக்கின்ருர்] எவன்=யாதொரு சிதாபாச விசிஷ்ட அகங்காரன், நான் என்று எண்ணும்=வியவகார காலத்தில் தேகாதிகளில் நானென்று அபிமானஞ் செய்வனே, அவன் கருத்தா=அவன் கருத்திருத்துவாதி தரும விசிஷ்ட சீவனும், [அவனுக்குக் கரணம் யாதென்று அபேக்ஷை யுண்டாகக் கூறுகின்ருர்] இத்தகையன்றனக்கு=இப்படிப்பட்ட கருத் தாவிற்கு, மனம்சாதனம்ஆம்=மனம் கரணமாம், [கரணம் கிரியையால் வியாப்தமானதால் கிரியையைத் தெரிவிக்கின்ருர்] இதனுக்கு=இந்த மனதிற்கு, ஒழுங்கின் இசை=கிரமமாகப் பொருந்துகின்ற, உட்புறஞ் சேர் விருத்தி = உள்ளிலும் புறம்பிலுமுள்ள விருத்திகளே, தொழிலாம்=கிரியையாம் எ—று.

மனம்=காமாதி விருத்தியினேயுடைய அந்தக்கரணத்தின் பிரிவு.

ஈண்டு இஃது இரகசியமாம்:- மகாவாக்கியத்தின் சிரவணத்தினுல் "யான் பிர்மம்" என்று அந்தக்கரணத்தின் விருத்தி வடிவ தத்துவ ஞானமுண்டாகிறது. அதனுல் பிரபஞ்சத்தோடு அஞ்ஞானத்தின் நிவிருத்தியுண்டாகிறது. அதுவே மோக்ஷமாம். கற்பிதத்தின் நிவிருத்தி அதிஷ்டான வடிவமாம். ஆதலால் பிர்ம வடிவம் மோக்ஷமா மென்பது சித்திக்கின்றது. இது பாஷியக்காரரது சித்தாந்தம்.

நியாய மகரந்தகாரராகிய அத்வைத வாதியானவர் கற்பிதத்தின் நிவிருத்தி அதிஷ்டான வடிவமாமென்று கொள்ளவில்லை. ஆனால் அதிஷ்டானத்திற்கு வேருகச் சத்துவடிவம், அசத்துவடிவம், சதசத்து வடிவம், சதசத் விலக்ஷண அநிர்வசநீயமென்னும் நான்கு வகையினும் வேறு வகையாக கற்பிதத்தின் நிவிருத்தியைக் கொண்டிருக்கின்றார். அதனையே ஐந்தாவது வகையாகக் கூறுகின்றனர். இது நலமுடைய தன்று. ஏனெனின், சத்துவடிவ முதலிய வஸ்துக்கள் உலகம் சாஸ்திர முதலியவற்றில் பிரசித்தம். இவற்றின் வேருன ஒரு வஸ்துவும் பிரசித்தமாக இல்லை. அப்பிரசித்தமான வஸ்துவில் புருஷனது அபிலாஷையுண்டாகிறதில்லை; ஆனால் பிரசித்தமானதில் உண்டாகின்றது ஆதலால் ஐந்தாவது வகையான நிவிருத்தியினையங்கீ கரிக்கும் புருஷனுக்கு அபிலாஷைக்கு விஷயமாந் தன்மை வடிவ புருஷார்த்தத் தன்மையின் அபாவமுண்டாகும். அதனுல் அதிஷ்டான வடிவமாகவே நிவிருத்தியையங்கீகரிக்கவேண்டும்

அவ்வதிஷ்டான வடிவ நிவிருத்தி அறியப்படாத அதிஷ்டான வடிவமென அங்கீகரிக்கின், பிரயத்தனமில்லாமலே எல்லோருக்கும் மோக்ஷப் பிராப்தியுண்டாகுதலால் சிரவணுதிகள் நிஷ்பலமாகும்.

அந்த நிவிருத்தி அறியப்பட்ட அதிஷ்டான வடிவம் என அங்கீ கரிக்கின், விதேக மோக்ஷதசையில் பிரஹ்மத்தின் கண் ஞானத்தன்மை அதாவது ஞானத்திற்கு விஷயமாந் தன்மை வடிவ தர்மமில்லையாகலின் மோக்ஷத்திற்குப் பரம புருஷார்த்தத் தன்மையில்லாததாகும்.

ஞாதத் தன்மை (அறியப்பட்ட தன்மை) வடிவ தர்மமில்லாமை யால் ஞாதத் தன்மை விசிஷ்ட அல்லது ஞாதத் தன்மையுபகித அதிஷ்டான வடிவமாகவும் நிவிருத்தி சம்பவியாது. ஏனெனின், விசேஷணமுடையது விசிஷ்டமெனப்படும். உபாதியுடையது உபகித மெனப்படும். விசேஷணமும் உபாதியும் எவ்வளவு காலம் வரையிலும் தாமிருக்கின்றனவோ, அவ்வளவு காலம் வரையிலும் தமது சம்பந்த முள்ள வஸ்துவினைப் பிற வஸ்துக்களினின்றும் வேறுபடுத்திக் காட்டு கின்றன. விதேக மோக்ஷ தசையில் ஞாதத் தன்மையின்மையால் இந்த ஞாதத் தன்மை வடிவ தர்மம் விசேஷண வடிவமாகவாவது உபாதி வடிவமாகவாவது சுத்தப் பிரஹ்மத்திலிருந்துகொண்டு அஞ்ஞாத (அறியப்படாத) பிரஹ்மத்தினின்றும் வேறுபடுத்தி

அறிவித்தல் சம்பவியாது. ஆதலால் ஞாதத் தன்மையுபலக்ஷித அதிஷ்டான வடிவம் காரியத்தோடுகூட அஞ்ஞானத்தின் நிவிருத்தியாம். ஏனெனின், உபலக்ஷணம் யாதோ அது தனது இருப்புக் (நிகழ்) காலம் இன்மைக் (வருங்) காலமென்னும் இரண்டு காலங்களிலும் தனது சம்பந்தியைப் பிறவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டுகின்றது. ஆதலால் தேவதத்தனது வீட்டின் உபலக்ஷணமான காகம்இருக்கினும் இல்லாவிடினும் "இது தேவதத்தன் வீடு" என்று வியவகாரமுண்டாவதுபோல, ஜீவன் முத்தி தசையில் ஞாதத்துவமிருக்கினும், விதேக முத்தி தசையில் அஃதில்லாதிருக்கினும் காரியத்தோடுகூட அஞ்ஞானத்தின் நிவிருத்தி வடிவ அதிஷ்டானம் யாதோ அது ஞாதத் தன்மையுபலக்ஷிதமாமென்று வியவகாரமுண்டாகின்றது.

கற்பிதத்தின் நிவிருத்தி அதிஷ்டானத்தினும் வேருமென்னும் பக்ஷத்தில் ஆக்கிரகமுண்டாயினும், அநிர்வசநீயத்தின் நிவிருத்தி அநிர்வச நீய வடிவமாம்; ஐந்தாவது வகை வடிவினதன்று. நிவிருத்தியென்பது துவம்சத்திற்காம் அந்தத் துவம்ஸமாகிய நாசம் நியாய மதத்திலோ அநந்த அபாவ.வடிவமாம்; ஆனுல் சித்தாந்தத்தில் க்ஷணிக பாவ (இருப்பு) விகாரவடிவமாம். ஏனெனின் யாஸ்க முனியானவர் ஜன்மாதி ஆறு பாவங்களும் (அநிர்வசநீய) விகாரமாமென்று சொல்லியிருக்கின்ருர். அவ்வாறில் துவம்ஸமென்னும் சொல்லின் பரியாயமானநாசம் க்ஷணிக வடிவமாகக் கணிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அந்தத் துவம்ஸம் க்ஷணிகபாவ வடிவமாம். அது ஞானத்திற்குப் பிந்திய காலத்தில் ஒரு க்ஷணமிருக்கின்றது; பின்பு அந்நிவிருத்தியின் அத்தியந்தா பாவம் (முற்றுமின்மை) உண்டாகின்றது. அவ்வத்தியந்தா பாவம் பிரஹ்ம வடிவமாம். ஆதலால் துவைதத்தின் சங்கை இல்லை. கற்பிதத்தின் நிவிருத்தி ஞானத்தாற்ருேன்றியதாயிருத்தலால் ஸாதி (உற்பத்தியுடையது) ஆம்; பிரஹ்ம வடிவமாயிருத்தலால் அநந்தம் (முடிவில்லாதது) ஆம். ஆதலால் சித்தாந்தத்தில் மோக்ஷம் ஸாதி அநந்தமெனப்படுகின்றது. இவ்வாறு சொரூபமாக நிலைத்தல் வடிவ பந்த நிவிருத்தியே மோக்ஷமாம். 2

(அ—கை)

உள்வெளி விருத்திகளின் சொரூபத்தையும் விஷயத்தையும் வேறு பிரித்துத் தெரிவிக்கின்ருர்.

அகமுகமாய் நானெனுமிவ் விருத்திகத்தன் றனேச்சுட்
டாநிற்கும் புறமுகமா யீதெனுமிவ் விருத்தி
பகிருறுமீ தெனும்பொருளேச் சுட்டுமண மிரதம்
படிவமுத லாம்விசே டங்களிவை தம்மைத்
தகவுறத்தோ யாமையின்மூக் கெழுவாயிந் தியபஞ்
சகம்வேறு செய்யுங்கத் தனேத்தொழிலேத் தம்மின்
விகடவிட யங்களேயு மொருமுயல்வால் விளக்கு
மெய்ஞ்ஞான மயனிவனே யிவண்சாட்சி யாமே. 3

(ப—ரை) அகமுகமாய் நான் எனும் இவ்விருத்தி = உள் முகமாய் நானென்று உண்டாகின்ற இந்த விருத்தி, கத்தன்தனே சுட்டா நிற்கும் = கருத்தாவை விஷயஞ் செய்யும், புறமுகமாய் ஈது எனும் இவ்விருத்தி = வெளி முகமாய் இது என்கின்ற இந்த விருத்தி யானது, பகிர் உறும் ஈது எனும் பொருளே சுட்டும் = தேகத்தின் வெளியி லுள்ள இது என்று நிர்த்தேசம் செய்யப்படும் பொருளே விஷயஞ் செய்யும், [மனதினலேயே சருவ வியவகாரங்களும் சித்திக்குமேல் நேத்திரம் முதலியவை வியர்த்தமாமென்ரு சங்கித்துக் கூறுகின்றார்] மணம் இரதம் படிவம் முதலாம் விசேடங்கள் இவை தம்மை = கந்தம் இரசம் உருவம் முதலிய விசேஷ குணங்களே, மூக்கு எழுவாய் இந்திய பஞ்சகம் = கிராணம் முதலிய ஐந்து இந்திரியம், தோயாமையின் = கலவாமல், தகவுற வேறு செய்யும் = தெளிவாக வேறுபடுத்தும், மனதால் இது என்று சாமான்னிய மாத்திரம் கிரகிக்கப்படுகிறது அதன் விசேஷ கந்தாதி அன்று. ஆகையால் அதன் கிரகணத்தில் கிராணம் முதலியது உபயோகப்படுகிறதென்பது பொருள், [இவ்வாறு உபகரண சகிதமாக சீவனது சொரூபத்தை நிருபித்து பரமான்மாவை நிருபிக்கின்ருர்] கத்தனே = முன் சொல்லிய அகங்காரவடிவ கருத் தாவையும், தொழிலே = அகம் இதம் வடிவ மனே விருத்தியாகிய கிரியையையும், தம்மின் விகட விடயங்களேயும் = பரஸ்பரம் வேறு பாடுற்ற கந்தாதி விடயங்களேயும், ஒரு முயல்வால் = ஒரே முயற்சியால் அதாவது ஒரே காலத்தில், விளக்கும் மெய்ஞ்ஞானமயன் இவனே = பிரகாசிப்பிக்கின்ற உண்மையறிவான இவ் ஆன்மாவே, இவண் = ஈண்டு வேதாந்த சாஸ்திரத்தில், சாட்சியாம் = சாட்சியென்று சொல்லப்படுகிறது எ—று. 3

உபகரணம் = சாதனம், அஃது மனது நேத்திரம் முதலியவை.

(அ—கை)

சாக்ஷிக்கு ஒரே காலத்தில் எல்லாவற்றையும் விளக்குந் தன்மையை சுட்டிக்காட்டியுணர்த்துகின்றார்.

கண்ணுறுகேன் கேட்கேன் மோக்கேன் றொடுகேன்
காணகமென் றொருங்குவிளக் குறுநிருத்த சாலை
நண்ணுறுதீ பம்போன்மற் றத்தீபந் தானே
நல்லபிர புவைச்சபையை யாடுங்கூத் தியையும்
வண்ணமறத் திகழ்த்துமவை யில்லாத வழியும்
வயங்குமிது போற்சாட்சி யகங்கரத்தை மதியை
யண்ணும்விட யங்களையுந் துலக்கு மகங்கார
மாதியவில் வழியுந்தா னவிர்தருமுன் போலே. 4

(ப—ரை) கண்ணுறுகேன் = நான் உருவத்தைப் பார்க்கின்றேன், கேட்கேன் = நான் சத்தத்தைக் கேட்கின்றேன், மோக்கேன் = நான் கந்தத்தைக் கவர்கின்றேன், அகம் தொடுகேன் = நான் பரிசிக்கின்றேன், நான் சுவாது பார்க்கின்றேன், என்று ஒருங்கு விளக்குறும் = என்று இந்தப் பிரகாரம் திருஷ்டா தரிசனம் திருசியம் முதலிய திரிபுடிகளனைத்தையும் சாக்ஷியானது பிரகாசிப்பிக்கும், [ஒரே காலத்தில் நிருவிகாரமாயிருந்துகொண்டு அநேக பதார்த்தத்தை விளக்குந் தன்மையில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] நிருத்தசாலை நண்ணுறு தீபம்போல் = கூத்தாடும் சபையிலுள்ள விளக்குப்போன்று, [திருஷ்டாந்தத்தை வெளிப்படுத்துகின்றார்] அத்தீபம் = நாடகசாலையிலுள்ள அவ்விளக்கானது, நல்ல பிரபுவை = நல்ல யஜமானனையும், சபையை = சபையிலுள்ள மற்றவர்களையும், ஆடும் கூத்தியையும் = நிருத்தனம் செய்கின்ற தாசியையும், வண்ணம் அற = செயலின்றி அதாவது விசேஷமின்றி, திகழ்த்தும் = பிரகாசிப்பிக்கும், அவை இல்லாத வழியும் வயங்கும் = பிரபு முதலானோரில்லாதபோதும் விளங்கும், [தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்] இதுபோல் = இந்த விளக்குபோன்று, சாட்சி = கூடஸ்த ஆன்மா, அகங்கரத்தை = அபிமான வடிவ அந்தக்கரணத்தின் விருத்தியையும், மதியை = நிச்சய வடிவ புத்தி விருத்தியையும், அண்ணும் விடயங்களையும் = பொருந்தாநின்ற சத்தாதி விஷயங்களையும், துலக்கும் = பிரகாசிப்பிக்கும், அகங்காரம் ஆதிய இல்வழியும் = சுழுத்தி முதலியவற்றில் அகங்காராதிகளில்லாதபோதும், முன்போலதான் அவிர்தரும் = பூருவம் போன்று செயமே அதன் சாக்ஷியாக விளங்கும் எ—று.

ஒருங்கு என்றதால் சுரோதா சிரவணம் சுரோதவ்வியம் முதலிய எல்லாத் திரிபுடிகளேயுங் கொள்க.

வண்ணமற என்பதற்கு பிரபு முதலிய விஷய விசேஷங்களே விளக்கும் பொருட்டு வளர்ச்சி முதலிய விகாரமின்றி என்பது கருத்து.

முன்போல = அகங்காராதிகளுள்ள காலத்திற்போல.

காண் — அசை. 4

(அ — கை)

அற்றேல் பிரகாச வடிவ புத்திக்கே அகங்காரம் முதலிய எல்லா வஸ்துக்களேயும் விளக்குந் தன்மை சம்பவித்தலால் அதனினும் வேருக சாக்ஷியையெதற்காக கற்பிக்கவேண்டுமென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

கூடத்த னறிவுருவா யிடையின்றிச் சுடரக்
கோதிலத னொளியாலிம் மதிநிகழ்த லாகி
பீடுற்றுப் பலவிதமா நடிக்குமகங் காரம்
பிரபுசபை யார்புலன்கள் மதியாடுங் கூத்தி
தேடுற்ற விந்தியங்க டாளாதி தரிப்போர்
தீபமொளி செய்சாட்சி யந்தனிலே நின்றே
யாடற்ற தீபமடங் கலுங்கதிர்க்கு மதுபோ
லான்றகரி தன்னிலேநின் றகம்புறமுங் கதிர்க்கும். 5

(ப—ரை) கூடத்தன் = நிருவிகார சாக்ஷி, அறிவு உருவாய் = சொப்பிரகாச சைதன்னிய வடிவத்தால், இடை இன்றி சுடர = எப்போதும் விளங்கிக்கொண்டிருக்க, இம்மதி = இந்த புத்தியானது' கோதில் அதன் ஒளியால் நிகழ்தல் ஆகி = குற்றமற்ற அச்சாக்ஷியினது சொரூப சைதன்னியத்தால் விளங்குவதாய், பீடு உற்று பலவிதமா நடிக்கும் = பலம்பெற்று அநேகப் பிரகாரமாக ஆடும், இது கடம் இது படம் என்பது முதலிய ஞானகாரத்தால் விகாரத்தை அடைகின்றது என்பது பொருள்.

கருத்திதுவாம்:— எதனுல் புத்திக்கு விகாரித் தன்மையால் சடத்தன்மையுண்மையின் தன்னுல் விளக்கமின்ரு அதனுல் அதனினும் வேருக சகலத்தையும் விளக்கும் சாக்ஷி அங்கீகரிக்கத்

தக்கது என்பது, [கூறிய பொருளை கேட்பவனுக்கு அநாயாசமாகப் போதமுண்டாகும் பொருட்டு நாடகமாக நிரூபிக்கின்றார்] அகங்காரம் பிரபு=அகங்காரமே தலைவன், புலன்கள் சபையார்=விஷயங்களே சபையிலுள்ளவர்கள், மதி ஆடுங் கூத்தி=புத்தியே கூத்தாடுகின்ற தாசி, தேடுஉற்ற இந்தியங்கள் தாளாதி தரிப்போர்=விசாரிக்கத்தக்க இந்திரியங்களே தாளம் முதலியவற்றைத் தாங்குபவர் அதாவது தாளம் போடுகின்றவர்கள், ஒளிசெய் சாட்சிதீபம்=அனைத்தையும் பிரகாசிப்பிக்கின்ற சாக்ஷியே விளக்கு, [அற்றேல் சாக்ஷிக்கும் அகங்காராதியை விளக்குந் தன்மையுளதேல் அவ்வகங்காராதிகளோடு சம்பந்தத்தின் அடைவும் நீக்கமுமாகிய விகாரமுடையதாந் தன்மை நேருமென்று சங்கித்துக் கூறுகின்றார்] தன் நிலை நின்றே ஆடு அற்ற அம் தீபம்=தனதிடத்திலிருந்துகொண்டே சலனமற்ற அழகிய விளக்கு, அடங்கலும் கதிர்க்கும்=சகலத்தையும் பிரகாசிப்பிக்கும், அதுபோல்=அத்தீபம்போன்று, ஆன்றகரி தன்நிலை நின்று அகம் புறமும் கதிர்க்கும்=மாட்சிமை பொருந்திய சாட்சி தனது இடத்திலிருந்தே உள்ளும் வெளியும் பிரகாசிப்பிக்கும் எ—று.

எப்படி தீபம்போதல் முதலிய விகாரமின்றி தனதிடத்திலிருந்து கொண்டே தனது சமீபத்திலுள்ள சகல பதார்த்தங்களையும் விளக்குகிறதோ அதுபோல் சாக்ஷியும் போதல் முதலிய விகாரமின்றி தனது சொரூபத்திலிருந்துகொண்டே சகலத்தையும் விளக்குகின்றதென்பது கருத்து.

விஷய போகங்களின் நிறைவு குறைவுகளில் அபிமானத்தை முன்னிட்டதான சந்தோஷ விஷாதமுடையதாந் தன்மையால் அகங்காரத்திற்கு கூத்தில் அபிமானியாகிய பிரபுவின் சாதிருசியமாம். சுற்றிலுமிருப்பினும் விஷயங்களுக்கு அஃதின்மையால் சபையிலுள்ள புருஷர்களோடு சாதி ருசியமாம். நாநாவித விகாரமுடையதாந் தன்மையால் புத்திக்கு கூத்தியோடு சாதி ருசியமாம். புத்தியின் விகாரங்களுக்கு அநுகூலமான வியாபாரமுடையதாந் தன்மையால் இந்திரியங்களுக்கு தாளம் முதலியவற்றைத் தரிக்கும் புருஷரோடு சமானத் தன்மையாம்.

இவ்வெல்லாவற்றையும் விளக்குந் தன்மையால் சாக்ஷிக்கு தீபத்தோடு சாதி ருசியமாம் என அறிக. 5

(அ—கை)

அற்றேல் சாக்ஷிக்கு வெளியும் உள்ளும் விளக்குந் தன்மையைச் சொல்லுதல் பொருந்தாது. ஏனெனின் "முன்னற்றது பின்னற்றது உள்ளற்றது வெளியற்றது" என்னுஞ் சுருதியால் உள்வெளிகளின் வேறு பாட்டின் அபாவத்தைச் சொல்லுதலால் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

வாய்ந்தபுறம் புள்ளெனுமிவ் விபாகமுடற் பற்றி
வந்ததுசாட் சியிலில்லை யுடற்புறம்பிற் புலன்கள்
சார்ந்தனவுள் ளகங்கிருதி யுறுமுட்சேர் மதிதான்
சட்சுமுத லியகூடி மேன்மேலும் புறத்தே
போந்தவிர்தன் சஞ்சலத்தைச் சாட்சியின்பால் வீணே
பொருத்தியிடுஞ் சாளரத்தான் மனையினகம் வந்து
தோய்ந்தகிஞ்சி லாதபஞ்சஞ் சலமிலதா மதன்பாற்
றேணடிக்க வதுநடித்தல் போற்காணு மாறே. 6

(ப—ரை) வாய்ந்த புறம்பு உள் எனும் இவ்விபாகம் = பொருந்திய பாகியம் ஆந்தரம் என்னுமிந்தப் பேதமானது, உடற்பற்றி வந்தது = தேகத்தை யபேக்ஷித்து உண்டானது, சாட்சியில் இல்லை = நிருவிகார சேதனத்திலின்று, [அப்படியானால் எதற்கு வெளித்தன்மை எதற்கு உள் தன்மையெனிற் கூறுகின்றார்] உடற் புறம்பில் புலன்கள் சார்ந்தன = தேகத்தின் வெளியில் விஷயங்கள் உள்ளன, உள் அகங் கிருதியுறும் = தேகத்தின் உள்ளே அகங்காரமிருக்கின்றது, [அற்றேல் "ஆன்றகரி தன்னிலை நின்றகம் புறமும் கதிர்க்கும்" என்னுஞ் செய்யுளால் சாட்சிக்கு சலனமின்றியே வெளியிலும் உள்ளிலும் விளக்குந் தன்மை கூறப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின் நான் கடத்தைக் காண்கின்றேன் என்னுமிடத்து நான் என்று உள்ளே அகங்கார சாக்ஷியாக முன்பு விளங்குகின்ற சாக்ஷிக்கு பின்பு கடத்தைக் காண்கின்றேனென்று கடாகார விருத்தியின் ஸ்புரண ரூபமாக வெளியிற் செல்லுதலை யநுபவித்தலால் என்று சங்கித்துக் கூறுகின்றார்] உள்சேர் மதி = தேகத்தினுள்ளிருக்கும் புத்தி, சட்சு முதலிய கூடி மேன் மேலும் புறத்தே போந்து = (உருவம் முதலியவற்றைக் கிரகிக்கும் பொருட்டு) நேத்திரம் முதலிய வாயிலாக மீண்டும் மீண்டும் வெளியிலே சென்று, தன் சஞ்சலத்தை = தன்னிடத்திலுள்ள சலனத்தை, அவிர் சாக்ஷியின்

பால் வீணே பொருத்தியிடும் = தன்னைப் பிரகாசிப்பிக்கிற சாக்ஷி யினிடத்து வீணாக ஆரோபிக்கும், ஆகையால் சாக்ஷிக்கு சஞ்சலம் வாஸ்தவமன்றென்பது கருத்து. [விளக்குகின்ற வஸ்துவில் விளக்கப் படும் வஸ்துவின் சலனத்தினாரோபம் எங்கே காணப்பட்டது என்று சங்கித்துக் கூறுகின்றார்] சாளரத்தால் மனையின் அகம் வந்து தோய்ந்த = சன்னல் வழியால் வீட்டினுள் வந்து பொருந்திய, கிஞ்சில் ஆதபம் = சொற்ப வெய்யில். சலம் இலது = சலனமற்றதாகவேயிருக் கின்றது, அதன் பால் = அந்த வெய்யிலிடத்து, தோள் நடிக்க = புருஷன் கையை இங்குமங்கும் அசைக்கும்போது. அது நடித்தல் போல் காணும் ஆறு = அந்த வெய்யில் ஆடுவதுபோற் காணப்படும், ஆனால் ஆடுவதில்லை, அதுபோன்று, என்பது பொருள் எ—று. 6

(அ—கை)

தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

கரியாய்நின் றிடும்போதந் தன்னிலயந் தனிலே
கருதுதொழி லொன்றுமின்றி யிருந்தபடி யிருக்கப்
புரியாநின் றிடும்புத்திச் சாஞ்சலியத் தாலே
புறம்புள்ளும் போய்வருதல் புரிவதுபோற் காணும்
தெரியாநின் றிடுஞ்சாட்சி புறம்புள்ளு மன்றாந்
திகழ்தருபுத் தியின்றேச மவ்விரண்டு மேயாம்
பரியாநின் றிடும்புத்தி முதலியவிஞ் சாது
பாறுமெவ ணவணதுதா னின்றுபொலி தருமே. 7

(ப—ரை) கரியாய் = சாக்ஷியாய், தன் நிலையந்தனிலே நின்றிடும் போதம் = தனது ஸ்தானத்திலிருக்கின்ற சேதன ஆன்மா, கருது தொழில் ஒன்றும் இன்றி இருந்தபடி இருக்க = கருதா நின்ற வியாபாரங்கள் யாதொன்றுமின்றி ஒரே வண்ணமிருக்க, புரியா நின்றிடும் புத்திச்சாஞ்ச லியத்தால் = தொழிலைச் செய்யா நிற்கும் மதியின் சலனத்தால், புறம்பும் உள்ளும் = வெளியிலும் உள்ளிலும், போய்வருதல் புரிவதுபோல் காணும் = கமனாகமனங்களைச் செய்வது போற் காணப்படும், [தன்னிலயந்தனில் நின்றிடும் என்பதனால் பாகியம் முதலிய தேசங்களில் இருக்குந் தன்மையே சொல்லப் படுகிறதா எனின் அன்றெனக் கூறுகின்றார்] தெரியா நின்றிடும் சாட்சி = அனைத்தையுங் காண்கின்ற கரியானது, புறம்பும் உள்ளும் அன்றாம் = வெளியிலும் உள்ளிலும் அன்றாம், [அதிலேதுவைக்

கூறுகின்ருர்] திகழ்தரும் அவ்விரண்டும்=விளங்கா நின்ற உள்ளும் வெளியுமாகிய இரண்டும், புத்தியின் தேசமாம்=மதியின் இடமாம், [அப்படியாளுல் சாக்ஷியினிடமாக யாது விவக்ஷிக்கப்பட்டதெனிற் கூறுகின்ருர்] பரியாநின்றிடும் புத்தி முதலிய = துன்பமயமாயிருக்கின்ற மதி முதலிய அனைத்தும், விஞ்சாது எவண்பாறும் = சேஷமின்றி எவ்விடத்து ஒடுங்குமோ, அவண் அது நின்று பொலிதரும் = அவ்விடத்து சாக்ஷி நின்று விளங்கும் எ—று.

முதலிய சத்தத்தால் இந்திரியம் முதலியவைகள் கிரகிக்கப் படுகின்றன. பாறும் என்றதால் அதன் பிரதீதியின் உபரதி விவக்ஷிக்கப் பட்டது.

விவக்ஷித்தல்=சொல்ல இச்சித்தல். 7

(அ—கை)

அற்றேல் சகல வியவகாரங்களும் சாந்தியாகும்போது தேசமே தோற்றுகிறதில்லை. அதன் கண் இருக்குந் தன்மை எதனுல் சொல்லப் படுகிறது என்ரு சங்கித்துதன தபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்ருர்.

தேசமொன்றுந் தோன்ருதேற் றேசமின்மை செறிகத்
தேசமனைத் தொற்றுமையா லெங்குநிற்ப தன்றி
யேசறுதன் ஞலன்ரு மகம்புறமெல் லாமா
மெத்தேசத் தினைக்கற்பித் திடும்புத்தி யங்஗ன்
தூசறநின் றிடுஞ்சாட்சி பொருள்களிலவ் வாறு
துலங்குறுமென் றுணர்கவே தேதுருவ மாதி
தீசனிப்பிக் குமதையதை யிலக்கியதற் கதற்காந்
திகழ்சாட்சி சொல்லறிவுக் கெட்டாது தானே. 8

(ப—ரை) தேசம் ஒன்றும் தோன்ருதேல் = சாக்ஷிக்கு யாதோரிடமும் விளங்கவில்லையெனின், தேசம் இன்மை செறிக = அதிஷ்டானத்தின் அபாவம் இருக்குக, (தேசாதி கற்பனையின் அதிஷ் டானமாயுள்ள சாக்ஷிக்கு தன்னினும் வேருன அதிஷ்டானத்தின் அபேக்ஷையின்றென்பது கருத்து, [தேசாதியின்றேல் சாஸ்திரத்தில் சருவக தத்துவம் சருவ சாக்ஷித்துவம் முதலியவற்றைச் சொல்லுதல் விருத்தமாமேயெனிற் கூறுகின்ருர்] தேசம் அனைத்து ஒற்றுமையால் எங்கும் நிற்பது=சருவ தேசங்களின் சம்பந்தத்தாலேயே சருவகத

மாம், [இயற்கையாக ஏனுகாது எனிற் கூறுகின்றார்] அன்றி = அங்ஙன மன்றி, ஏசுஅறு தன்னால் அன்று = குற்றமற்ற தன் சொரூபத்தாலன்று, அத்துவிதமாயும் அசங்கமாயும் இருத்தலால் என்பது கருத்து, [சருவக தத்துவம்போன்று சருவ சாக்ஷித்துவமும் வாஸ்தவமன்றெனக் கூறுகின்றார்] அகம் புறம் எல்லாம் ஆம் = உள்ளாவது வெளியாவது சருவமாவது, எத்தேசத்தினை புத்தி கற்பித்திடும் = எந்த இடத்தை மதி கற்பிக்கின்றதோ, அங்ஙன் சாட்சி தூசுஅற நின்றிடும் = அவ்விடத்தில் சாக்ஷி களங்கமின்றியிருக்கும்; பொருள்களில் அவ்வாறு துலங்குறும் என்று உணர்க = வஸ்துக்களில் அப்படியே விளங்கும் என்றறிக, [பொருள்களில் அவ்வாறு துலங்குறுமென்பதனையே விஸ்தரிக்கின்றார்] தீ ஏது ஏது உருவம் ஆதி சனிப்பிக்கும் = புத்தி எந்த எந்த உருவம் முதலியவற்றையுண்டுபண்ணுமோ, அதை அதை இலக்கி = அந்த அந்த உருவாதிகளைப் பிரகாசிப்பித்து, திகழ் அதற்கு அதற்கு சாட்சி ஆம் = விளங்கா நின்ற அந்த அந்த வஸ்துவிற்கு சாக்ஷியாகும், அதாவது புத்தியானது தேசம் முதலிய எவ்வெவ் விஷயாகாரத்தை யடைகின்றதோ அவ்வவ் விஷயாகார புத்தி விருத்தியில் ஆரூடமான சாக்ஷி அவ்வவ் விஷயத்தை விளக்கி அவ்வவ் விஷயத்திற்கு சாக்ஷி யாயிருக்கின்றது என்பது பொருள். [அதற்கு நிஜ வடிவம் யாதெனிற் கூறுகின்றார்] தான்சொல் அறிவுக்கு எட்டாது = சுயம் (ஆன்ம வடிவம்) வாக்கிற்கும் புத்திக்கும் அவிஷயமாம் எ—று. 8

(அ—கை)

சொல்லறிவுக் கெட்டாதாயின் முமுக்ஷுவால் கிரகிக்கப்பட மாட்டாதென்று வினவுகின்றான்.

அனையதெனுற் றெரிபடுவ தெங்ஙனெனிற் றெரித
லறவொழிகத் தெரிதலெலா மறவொடுங்கிற் றானே
வினையறவிஞ் சுறுமதற்கோர் பிரமாணம் வேண்டா
மேதகுசொப் பிரகாச சொரூபமதா தலினு
லினையநெறி தெரிதரவேண் டிடிற்குருமுற் சுருதி
யினிதோது தெரிதலெலா மேகவிட லரிதேற்
புனைதருபுத் தியைச்சரணம் புகுதியகம் புறமும்
பொலிந்தவற்றிற் புக்குநிற்பா னனுபவிப்பா யன்
[றே. 9

(ப—ரை) அனையது = வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத வஸ்து, ஏனுல் எங்ஙன் தெரிபடுவது எனில் = சாதகனுகிய என்னுல் எப்படி அறியப்படும் என்று வினவில், [அறியப்படாமை இஷ்டமேயெனக் கூறுகின்ருர்] தெரிதல் அற ஒழிக = அறியப்படுதல் அத்தியந்த மின்ருகுக, [அற்றேல் ஆன்மாவிற்கு அறியப்படுந் தன்மையின்றேல் விசாரத்தால் மாயை நாசமாகும்போது (சுயம்) தான் மிஞ்சுகிறது என்று சொல்லப்பட்ட பரமான்ம வடிவமாக மிஞ்சுதல் சித்திக்காதெனிற் கூறுகின்ருர்] தெரிதல் எலாம் அற ஒடுங்கின் = துவைதத்தின் மித்தியாத்துவ நிச்சயத்தால் சகல துவைதப் பிரதீதியும் அத்தியந்தம் சாந்தியாகும்போது, தானே வினை அற விஞ்சுறும் = தனதான்மாவே இரண்டின்றி சத்தியரூபமாய் மிஞ்சுகின்றது, [கூறிய நியாயத்தால் தனதான்மாவே மிஞ்சுகின்றதாயினும் அதன் அபரோக்ஷத்தின் பொருட்டு சொற்பப் பிரமாணம் அபேக்ஷிக்கப்படுகின்றதெனிற் கூறுகின்ருர்] அதற்கு ஓர் பிரமாணம் வேண்டாம் = ஆன்மாவின் சித்தியில் ஒரு பிரமாணமும் வேண்டியதில்லை, [அதில் ஏதுவைக் கூறுகின்ருர்] மேதகு சொப்பிரகாச சொரூபமாதலினுல் = மேலான சுயம்பிரகாச வடிவமாயிருத்தலினுல், [அற்றேல் ஆன்மா சொப்பிரகாச மாவதால் தன்னுல் விளங்குவதில் பிரமாணம் அபேக்ஷிக்கப்படுகிற தில்லை என்று ஞானமுண்டாகும் பொருட்டு பிரமாணம் அபேக்ஷிக்கப் படுகிறது என்ரு சங்கித்து சுருதியே இதில் பிரமாணமாமெனக் கூறுகின்ருர்] இனையநெறி தெரிதர வேண்டிடில் = ஆன்மா சொப்பிர காசம் அதில் பிரமாணத்தின் அபேக்ஷையில்லையென்னும் இப்படிப் பட்ட முறையையறியும் பொருட்டு பிரமாணத்தையபேக்ஷிக்கின், குரு முன் சுருதி இனிது ஓது = ஞான தேசிகரது சன்னிதியில் வேதாந் தத்தை நன்ருய்ப் படிப்பாயாக, [இவ்வாறு உத்தமாதிகாரிக்கு ஆன்மானுபவத்தின் உபாயத்தைக்கூறி இப்போது மந்தாதிகாரிக்கு ஆன்மாநுபவத்தின் உபாயத்தைத் தெரிவிக்கின்ருர்] தெரிதல் எலாம் ஏகவிடல்அரிதேல் = தோற்றமனைத்தையும் ஒருங்கே தியாகஞ்செய்தல் அசக்கியமெனின், புனைதரு புத்தியை சரணம் புகுதி = அழகிய மதியை யடைக்கலமாக அடைவாய், [புத்தியைச் சரணடையின் யாது பயன் எனிற் கூறுகின்ருர்] அகம் புறமும் பொலிந்தவற்றில் = புத்தியால் உள்ளிலும் வெளியிலும் கற்பிக்கப்பட்ட பதார்த்தங்களில், புக்கு நிற்பான் = சாக்ஷித்தன்மையால் பிரவேசித்திருக்கும் பரமான்மாவை, அநுபவிப்பாய் = அவ்வாறே நேராக அறிவாய் எ—று.

வினை = இரண்டு. அன்று, ஏ—அசை.

என்னுலென்பது எனுல் என இடைக்குறையாயிற்று சொரூபமது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

புத்தியைச் சரணமடைதலென்பதன் கருத்திதுவாம்:- எப்படிச் சாகையின்கண் சந்திரனிருக்கின்றதுஎன்னும் வார்த்தையினைக்கேட்டு தூல திருஷ்டியையுடைய புருடன் சாகையை லக்ஷியஞ்செய்து பின் தருமத்தோடு சாகையின் திருஷ்டியை விட்டுச் சாகையின் சமீபத்தில் இருத்தலால் சாகையின் அதீனமான சந்திரனைக் காண்கின்ருனே அப்படியே மந்த புத்தியையுடைய அதிகாரி குருவின் உபதேசத்தால் புத்தியை லக்ஷியஞ்செய்து வெளி உள் தருமத்தோடு புத்தியின் திருஷ்டியை விட்டு அதிஷ்டான சாக்ஷி வடிவமாகப் புத்திக்குச் சமீபமாக நிலைத்திருத்தலால் புத்தியினதீனமானதைப் போலுள்ள பரமாத்மாவைத் தனது சொரூபமாக அநுபவிக்கின்ருன். 9

பத்தாவது நாடக தீபம் முற்றிற்று.

ஆகக்கவி 585

உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## பதினொன்றாவது பிரகரணம்.

## பிரம்மானந்தத்தில் யோகானந்தம்.*

### மங்கலம்.

நலம்புரி பவர்க்கரு ளாத ளாகிய
வலம்புரிக் கரியின்மெய் வடிவ மாயொளிர்
வெலம்புரி புரைதரு வீர மாதவன்
பொலம்புரி தொழுகழற் போற்று வாமரோ.

(ப—ரை) நலம் புரிபவர்க்கு = நல்வினையைச் செய்யும் பக்தர்கட்கு, அருள்நாதன் ஆகிய = அநுக்கிரகஞ் செய்யும் இறையாகிய, வலம்புரி கரியின் = வெற்றியைச் செய்யும் விநாயகரது, மெய் வடிவமாய் ஒளிர் = திருமேனியாக விளங்கா நின்ற, வீரமாதவன் = மிக்க தவத்தினையுடைய வீரசேகர ஞான தேசிகரது, வெலம்புரி புரைதரு = இன்பத்தைச் செய்வதும் மேன்மையைக் கொடுப்பதும், பொலம்புரி தொழுகழல் = ஐஸ்வரியத்தை அளிப்பதும் அடியார்களால் தொழத்தக்கதும் ஆகிய திருவடிகளை, போற்றுவாம் = வணங்குவாம் எ—று.

பொலம்புரி என்பது பொன்போல வாஞ்சிக்கத்தக்கது எனவும் பொருள்படும். இவ்வானந்த பஞ்சகத்தின் மொழி பெயர்ப்பாசிரிய

---

* பிரம்மானந்தத்தைப் பிரதிபாதிக்கும் கிரந்தம் பிரஹ்மானந்தமெனப் படும். அஃது ஐந்து அத்தியாய வடிவமாம். அதனுள் சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மை வடிவ யோகத்தினால் வெளிப்படத்தக்க ஆனந்தத்தைப் பிரதிபாதிக்கும் பிரகரணம் யோகானந்தமெனப்படும்.

ராகிய வீரசுப்பைய சுவாமிகளுக்கு விநாயக மூர்த்தி உபாசனை தெய்வ மாதலின் விநாயகரோடு அபேதப்படுத்தி குருமூர்த்தியின் வணக்கங் கூறப்பட்டது. அரோ—முன்னிலையசை.

(அ—கை)

முன் பத்துப் பிரகரணம் செய்யுள் வடிவமாக இயற்றியவரது பெயரைக் கூறுதலோடு அவையடக்கங் கூறுகின்றார்.

சுத்தமாந் துறவிறை சுதனென் றோதிடு
நித்தியா னந்தமா நிமல னோதிய
பத்தையும் விடுத்திதிற் பஞ்ச வானந்த
மித்தினை யியம்பிடு மிறையென் னாவினே.

(ப—ரை) சுத்தமாம் துறவு இறை=பிரம்மசரியம் முதலிய தூய்மை நிறைந்த துறவாண்டவரது, சுதன் என்று ஓதிடும்=பிள்ளை யென்று சொல்லப்படுகின்ற, நித்தியானந்தமா நிமலன் ஓதிய பத்தை யும் விடுத்து = நித்தியானந்த சுவாமியெனப் பெயரிய தூயவன் சொல்லிய பத்துப் பிரகரணங்களையும் பரித்தியாகஞ்செய்து, இதில் பஞ்ச ஆனந்தம் இத்தினை=இந்நூலில் ஆனந்த பஞ்சகத்தை, என் நாவின் இறையியம்பிடும் = எனது நாக்கிலிருந்து பரமான்மாவே கூறுகின்றது எ—று.

ஏ—அசை.

ஸ்ரீ பாரதி தீர்த்த வித்தியாரண்ணிய முனீஸ்வரர்களை நமஸ் கரித்து பிரமானந்தமெனப் பெயரிய கிரந்தத்தை ஞானம் சித்திக்கும் பொருட்டு வியாக்கியானம் செய்வேன்.

(அ—கை)

செய்ய விரும்பிய நூல் விக்கினமின்றி முடிதற் பொருட்டும் விரோதியாகிய பாபம் நீங்கும் பொருட்டும் இஷ்ட தேவதையின் சொருபாநுசந்தான வடிவ மங்கலத்தை யநுஷ்டிக்கின்றவராய் நூலாசிரியராகிய பாரதி தீர்த்த சுவாமிகள் இந்நூலில் கேட்பவனுக்கு பிரவிருத்தி சித்திக்கும் பொருட்டு பிரயோஜன சகிதமாக விஷயத்தை வெளிப்படுத்துகின்றவராய் நூலின் ஆரம்பத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.

பிரமநற் சுகத்தைப் பேசுவ லதனைப்
பெற்றிடி லிகபர வனர்த்த
வொருகுவை யிறையு மின்றியே யொருவி
யுயர்சுகம் பெறலுர ஞகும்
பிரமவிற் பரம முறுவஞன் மாவைப்
பெறுபவன் சோகமே கடப்பன்
வருரசம் பிரம மதையுறச் சுகியாம்
வகைபிறி ததனிஞ லிலையால். 1

(ப—ரை) பிரமநல் சுகத்தை பேசுவல்=பிரமமாகிய நல்ல ஆனந்தத்தை சொல்லுகின்றேன், அதனை பெற்றிடில்=அந்த பிரம்ம சுகத்தையறியின், இகபர அனர்த்த ஒருகுவை=இம்மை மறுமைகளிலுண்டாகுந் துக்க சமூகத்தை, இறையும் இன்றி ஒருவி= அற்பமும் மிஞ்சாமல்விட்டு, உயர் சுகம்பெறல் உரன் ஆகும்=மேலான ஆனந்தத்தையடைதல் நிச்சயமாம், [பிரம ஞானம் அநிஷ்ட நிவிர்த்தியிலும் இஷ்டப் பிராப்தியிலும் காரணமாவதில் அநேக சுருதி ஸ்மிருதி வாக்கியங்கள் பிரமாணங்களாக இருக்கின்றன என்று தெரிவிக்க இச்சையுடையவராய் முதலில் "பிரமத்தையறிந்தவன் பரத்தையடைகின்ருன். ஆன்ம ஞானி சோகத்தைக் கடக்கின்ருன் என்று தங்களைப் போன்றவர்களிடத்தில் என்ஞல் கேட்கப்பட்டது. அந்த நான் சோகிக்கின்றேன் பகவ அந்த என்னை சோகத்தின் கரையையடைவிப்பீராக" என்னுமிரண்டு வாக்கியத்தையும் பொருளாற் படிக்கின்ருர்] பிரமவித் பரம் உறுவன்=பிரமத்தையுணர்பவன் மேலான ஆனந்த வடிவ பிரமத்தையடைவான். ஆன்மாவை பெறுபவன் சோகம் கடப்பன்=ஆன்மாவையறிபவன் தமோ மூலமான சமுசாரத்தைக் கடக்கின்ருன், [அற்றேல் எடுத்துக் காட்டிய தைத்திரீய சுருதி வாக்கியத்தில் பிரம ஞானத்திற்கு பரமான்மப் பிராப்தியின் காரணத்துவமேயறியப்படுகின்றது. ஆனந்தப் பிராப்தியின் ஏதுத்துவமின்று என்ரு சங்கித்து ஆனந்தப் பிராப்தியின் ஏதுத்துவத்தைப் பிரதிபாதிக்கும் "பரமான்மா ஆனந்த வடிவன் இப்புருஷன் ரசத்தையடைந்தே ஆனந்தியாகின்ருன்" என்னும் அத்தைத்திரீய சுருதி வாக்கியத்தையே பொருளாற் படிக்கின்ருர்] வருரசம் பிரமம்=வாரா நின்ற ஆனந்தம் பிரம்மமாம், அதை உற சுகியாம்=இரச வடிவ அந்தப்

பிரமத்தையடைந்தே புருஷன் ஆனந்தியாகின்றான், [கூறிய பொருளை வியதிரேகத்தைக் காட்டலால் திடஞ் செய்கின்றார்] அதனின் பிறிது வகையால் இலை = பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தினும் வேறான வழியால் ஆனந்தியாகிறதில்லை எ—று,

ஆல்—அசை.

நிருவிசேஷ பரப்பிரமத்தை சாக்ஷாத்கரிக்க வல்லமையின்றிய மந்த மதியுடையோர் சவிசேஷப் பிரமத்தை நிரூபித்தலால் அநுக்கிரகிக்கப்படுகின்றார்கள் என்று சவிசேஷப் பிரம்ம வடிவ விஷ்ணுவாதி தேவதைகளின் சொரூபத்தை நிருவிசேஷப் பிரம வடிவமாகச் சொல்லுதலாலும் பிரமத்திற்கும் ஆனந்தம் பிரமம் என்பது முதலிய சுருதிகளால் ஆனந்த வடிவத்தைச் சொல்லுதலாலும் பிரம நற்சுகத்தை என்று ஆனந்த வடிவ பிரமத்தின் வாசக வடிவ சத்தத்தைப் பிரயோகித்தலால் எதனை மனதால் நினைக்கின்றானோ அதனை வாக்கால் வசனிக்கின்றான் என்று சுருதியில் சொல்லப்பட்ட நியாயத்தால் பிரம்மாநுசந்தான வடிவ மங்கலா சரணம் சித்தித்தது. பிரமமும் எல்லா வேதாந்தங்களாலும் பிரதிபாதிக்கப்பட்டதால் அவ்வேதாந்தங்களின் பிரகரண வடிவ இந்தப் பிரமானந்தமென்னும் கிரந்தத்திற்கும் பிரம்மமே விஷயமாம். இவ்வாறு பிரம்ம சத்தத்தின் பிரயோகத்தால் விஷயமும் சூசிப்பிக்கப்பட்டது.

இகபரவனர்த்தம் என்பது முதலிய இரண்டாவது (வரியால்) பாதத்தால் அநிஷ்ட நிவிருத்தியும் இஷ்டப் பிராப்தியுமாகிய இரண்டு பிரயோஜனம் முகத்தாலேயே சொல்லப்பட்டது.

பிரம நற்சுகத்தையென்றது வாச்சிய வாசகங்களுக்கு அபேத உபசாரத்தால் அதனைப் பிரதிபாதிக்கும் கிரந்தத்தை, இக அனர்த்தம் = இவ்வுலகிலுண்டாவதான தேகபுத்திராதிகளில் நான் எனது என்னுமபிமானத்தை முன்னிட்ட ஆத்தியான்மிகம் முதலிய தாபங்கள், பர அனர்த்தம் = பரலோகத்திலுண்டாவதான மற்சரம் முதலான தாபங்கள், ஆன்மா = பூமசத்த வாச்சியமாயும் தேசகால வஸ்து பரிச்சேத சூனியமாயுமிருப்பது, சோகம் = தன் சம்பந்திபுருஷனை துன்பஞ்செய்வது, அது தமசை மூலமாகவுடைய சமுசாரம். ரசம் பிரமம் அதையுற சுகியாம் = சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம் அந்த இவ்வான்மாவினின்று மாகாசமுண்டாயிற்று என்று பிரகரணத்தின்

ஆதியில் பிரம்ம ஆன்ம சத்தங்களால் சொல்லப்பட்ட யாதொரு ஆன்மா வுண்டோ அது, ரசம்=சாரம், ஆனந்தமென்பது பொருள். ஆனந்த வடிவ பிரமத்தை நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் ஞானத்தால் அடைந்து அபரிச்சின்ன நிரதிசய சுகமுடையவனுகின்றுன். பிறிது வகை=வேறு சாதனத்தினநுஷ்டானம்.

ஈண்டு பெறுதல் என்றது அறிதல்மேல் நின்றது. 1

(அ—கை)

இவ்வாறு அன்வய முகத்தால் இஷ்டப்பிராப்தியும் அநிஷ்ட நிவர்த்தியும் பிரதிபாதிக்கும் வாக்கியங்களைக் காண்பித்து அன்வய வியதிரேகங்களால் அனர்த்த நிவர்த்தியைக் காண்பிக்கின்ற "எப்போது இப்புருஷன் அதிருசியமாயும் தேகத்திரயத்தினும் விலக்ஷண மாயும் உள்ள இவ்வான்மாவில் பயமற்ற ஸ்திதியையடைகின்ருனோ" அப்போது அபயத்தையடைந்தவனுகின்ருன்" "எப்போது இவன் இவ்வான்மாவில் அற்பமாவது பேதத்தைச் செய்வானோ அப்போது பயத்தையடைந்தவனுகின்ருன்" என்னுமிரண்டு வாக்கியத்தையும் பொருளால் அநுசரிக்கின்றுர்.

தன்வயிற் பிரதிட் டையையடை காலை
தணருவ னவன்பய மிதனின்
மன்பகு தியினைப் புரிதரி லவற்கு
மருவுறும் பயம்வனி மிருத்துப்
பொன்வலிக் குலிசன் வாயுவொ டிரவி
பூருவ பிறப்பிலந் தரத்தை
யின்வர வியற்றி யிறைவனிற் பயத்தா
லெழிலற மறித்தும்வா டுவரால். 2

(ப—ரை) தன்வயின்=கூடஸ்த ஆன்மாவில், பிரதிட்டையை அடைகாலை = நிலையையடையுங் காலத்தில், அவன் பயம் தணருவன் = அந்த முமுக்ஷுவானவன் அச்சமின்றியவனுவன், இதனின்பகுதியினை புரிதரில்= இவ்வான்மாவில் பேதத்தைச்செய்யின், அவற்கு பயம் மருவுறும்=அம்மனிதனுக்கு சமுசார துக்கம் வந்து சேரும், [பேதத்தைக் காண்பவனுக்கு பயமுண்டாகுமென்பதை திடஞ் செய்வதற்காக பிரமஞானமின்றிய வாயு முதலியவைகளுக்கு பயத்தைத்

தெரிவிக்கும் "பரமான்மாவின் பயத்தால் வாயு சுத்தஞ் செய்கிறது" என்பது முதலிய மந்திரத்தைப் பொருளாற் படிக்கின்றார்] வனி= அக்கினிபகவானும், மிருத்து = யமதருமராஜனும், பொன்வலி குலிசன்=அழகும் பலமுமுள்ள இந்திரனும், வாயுஒடு இரவி=வாயு பகவானும் சூரிய பகவானும், பூருவ பிறப்பில்=சென்ற ஜன்மத்தில், (இஷ்டம், பூர்த்தம் முதலிய தருமங்களை ஞான பூருவமாக அநுஷ்டித்த வராயினும்) அந்தரத்தை இன்வர இயற்றி= (பிரத்தியக்கு வடிவ பிரமத்திற்கு பேதத்தை நன்ருகச்செய்து, இறைவனின் பயத்தால்= பரமான்மாவின் அச்சத்தால், எழில் அற மறித்தும் வாடுவர் = சோபையின்றி மீண்டும் மீண்டும் சோகத்தையடைவார்கள், தமது தொழிலில் எப்போதும் பிரவிருத்திக்கின்றனர் என்பது பொருள் எ—று.

பயமற்ற பிரதிஷ்டையாவது, பயசத்தத்தால் பயஏதுவான பேதம் இலக்ஷிக்கப்படுகிறது. பிர என்னும் சத்தம் சமுசய விபரியயங் களினின்மையையுணர்த்துகின்றது. திஷ்டை = நான் பிரமமாயிருக் கின்றேனென்னுமிருப்பு. அதனை குருவின் அடைவு முதலியவற்ருல் சிரவணுதியைச்செய்து அடைகின்ருன், ஆன்மாவில் பேதமாவது, சீவன் உபாசகன் ஈஸ்வரன் உபாஸ்யன் என்பது முதலியது. 2

மன், ஆல்—அசைகள்.

(அ—கை)

அற்றேல் ஆன்மாவையறிந்தவன் சோகத்தைக் கடக்கின்ருன் என்பது முதலிய எடுத்துக்காட்டிய வாக்கியங்களில் பிரம்மானந் தத்தின் ஞானம் அனர்த்த நிவர்த்தியைச் செய்வது என்று வெளிப் படையாகத் தோற்றவில்லை என்ரு சங்கித்து அவ்வாறு பிரதிபாதிக்கும் வாக்கியத்தையுதாகரிக்கின்ருர்.

பிரமவின் பறிவ னெதனினும் பீதி
பெற்றிலன் கருமவெவ் வனலீ
தருமெண மிதுவிவ் வுணர்வுறு வனேயே
தபித்தில தின்னண மறிஞ
னிருகரு மமதை யிழித்தறி வெனுவ
னெந்தவே லையினுமிஞ் ஞானி
புரிதரு பாப புண்ணியந் தனது
புகழுரு வென்றுகாண் குவனல். 3

(ப—ரை) பிரம இன்பு அறிவன் = பிரமத்தின் சொரூப வடிவ ஆனந்தத்தையபரோக்ஷமாயறியும் புருஷன், எதனினும் பீதி பெற்றிலன் = ஒன்றினாலும் (அதாவது இகலோக பய காரணமான புலி முதலியவற்றினாலும் பரலோக பய காரணமான பாபம் முதலிய வற்றினாலும்) பயத்தையடையான். [ஆனால் தத்துவ ஞானிக்கு பாபம் முதலியவற்றால் பயமில்லை என்பது எதனால் அறியப்படுகிறது என்றா சங்கித்து அதனைப் பிரதிபாதிக்கின்ற "நான் ஏன் புண்ணியத்தைச் செய்யவில்லை, பாபத்தை ஏன் செய்தேன் என்று இவ்விதம் இவனையே தாபஞ் செய்கிறதில்லை" என்னும் வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்] கருமவெவ்வனல் = புண்ணியபாப வடிவ கருமமாகிய கொடிய நெருப்பினால், ஈதரும் எணம் இது = உண்டுபண்ணப்பட்ட இச்சிந்தையானது, இவ்உணர்வுறுவனையே = இந்த ஞானியையே, தபித்திலது = சந்தாபஞ் செய்வதில்லை. அஞ்ஞனையன்று, அவனே அச்சிந்தையால் எப்போதும் தபிக்கப்படுகின்றான் என்பது பொருள். [புண்ணிய பாபங்கள் தாபஞ் செய்யாமையில் எதுவைப் போதிக்கின்ற "யாதொரு புருஷன் கூறிய பிரகாரமறிகின்றானோ அவன் புண்ணிய பாபங்களைவிட்டு பிரமத்தின பின்னமான ஆன்மாவை இன்புறுத்து கின்றான்" எப்போதும் நினைக்கின்றான் என்பது பொருள், "இவ்விரண்டையும் ஆன்மாவாகப் பார்க்கின்றான்" என்னும் இரண்டு வாக்கியத்தையும் பொருளாற் படிக்கின்றார்] இன்னணம் அறிஞன் = (புருஷனிடத்தில் யாதொருவனுளன் ஆதித்தியனிடத்தில் யாதொருவன் உளன் அவன் ஒரு பரமான்மாவே என்று) இந்தப் பிரகாரம் அறியும் புருஷன், இரு கருமம் அதை இழித்து = புண்ணிய பாபமிரண்டையும்விட்டு, அறிவு எந்த வேலையினும் எணுவன் = ஆன்மாவை எப்போதும் சிந்திப்பான்) இஞ்ஞானி = மேலும் இவ்வறிஞன், புரிதரு புண்ணிய பாபம் = தேகேந்திரியாதிப் பிரவிருத் தியினால் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளை; தனது புகழ் உரு என்று காண்குவன் = "இவ்வெல்லாம் இவ்வான்மாவே" என்பது முதலிய சுருதியாற் சொல்லிய பிரகாரத்தால் தனது துதிக்கத்தக்க ஆன்மா வாகவே பார்ப்பான் எ—று.

ஆகையால் தனது ஆன்மாவினும் அபின்னமாவதாலும் தாபகத் தன்மையின்றென்பது கருத்து, பிரமத்தின் இன்பு என்று பேதமாகச் சொல்லுதல் இராகுவின் சிரசு என்பதுபோல உபசாரமாம். புண்ணிய பாபரூப கருமம் முறையே செய்யாததாலும் செய்ததாலும் அக்கினியைப்

போன்று சந்தாபகாரணமாவதால் அக்கினியாம். எண்ணம் = புண்ணியத்தை ஏன் செய்யவில்லை, பாபத்தை ஏன் செய்தேன் என்னும் சிந்தை.

எணுவன் என்பதன் கருத்திதுவாம்:–எதனால் புண்ணிய பாபங்களின் மித்தியாத்துவாநுசந்தானத்தினால் தியாகம் செய்யப்பட்டதோ அதனால் அதன் விஷயகமான சிந்தையேயின்று. அதன் நிமித்தகமான தாபம் எங்கிருந்து உண்டாம் என்பது.

ஆல் = அசை.

எண்ணம் என்பது எணமென இடைக்குறையாயிற்று. 3

(அ—கை)

அற்றேல் "அநுபவிக்கப்படாத கருமம் நூறு கோடி கற்பங்களாலும் நாசமாகாது" என்பது முதலிய சாஸ்திரமிருத்தலால் அநாதியான சமுசாரத்தில் அநேக ஜன்மங்களால் சம்பாதிக்கப்பட்ட புண்ணியபாப வடிவ கருமங்கள் கணக்கிடப்படாதனவாயும் அப்பிரசித்தமாவதால் ஆன்மாவாக அநுசந்தானஞ் செய்தற்கு அயோக்கியங்களாயும் இருக்கும்போது அதன் விஷயகமான சிந்தை ஏன் உண்டாகாது என்று சங்கித்து காரணத்தோடுகூட அக்கருமங்கள் தத்துவ ஞானத்தால் நாசமாவதால் சிந்தையையுண்டுபண்ணுவனவன்று என்னும் அபிப்பிராயத்தால் இருதயக்கிரந்தி முதலியவற்றின் நிவர்த்தியைப் போதிக்கும் முண்டகாதி சுருதியிலுள்ள வாக்கியத்தைப் படிக்கின்றார்.

பராபர வதனைக் கண்ணுறி லிவற்குப்
பாறும்வெவ் விருதயக் கிரந்தி
விராவுமை யெவையும் வீவுறுங் கருமம்
வீவுறு மவனையே யுணர்ந்தோன்
வராமிருத் துவினைக் கடந்திடு மிதரம்
வழியல தேவனை யறிந்தே
சராசர பாச மறுங்கிலே சமதுந்
தணர்வுறிற் சன்மபாக் கிலையே. 4

(ப—ரை) பராபர அதனை = பரமாகிய இரண்ணிய கருப்பாதிகளை நிகிருஷ்டமாகவுடைய அதாவது மேலுக்கெல்லாம் மேலாயுள்ள

பிரமத்தை, கண் உறில்=சாக்ஷாத்கரிக்கில், இவற்கு=சாக்ஷாத்கார முடைய இவனுக்கு, வெவ் இருதயக் கிரந்திபாறும் = புத்திக்கும் சிதான்மாவிற்கும் உள்ள கொடிய அன்னியோன்னியாத்தியாச வடிவ முடிச்சு நாசமாகும், விராவும் ஐ எவையும் வீவுறும்=பொருந்திய சமுசயங்களனைத்தும் நாசமாகும், உண்மையாக சாக்ஷாத்கரிக்கப்பட்ட வஸ்துவிற்கு சமுசய விபரியய விஷயத்தன்மையின்மையால் என்பது கருத்து. கருமம் வீவுறும்=புண்ணியபாப வடிவ சஞ்சித கருமங்கள் தமது காரணமாகிய அஞ்ஞானத்தின் நாசத்தால் நாசமாகின்றன. [அற்றேல் "இவ்வுலகில் கருமங்களைச் செய்துகொண்டே நூறு வருஷ பரியந்தம் சீவிக்குக, இவ்வாறு சீவித்திருக்கின்ற உன்னிடத்தில் அக்கினி ஹோத்திராதி கருமங்களைச் செய்துகொண்டிருப்பதினும் கருமத்தைப் பற்றுமற் செய்வதன்கண் வேறு பிரகாரம் இல்லை.' "வித்தையையும் கருமத்தையும் எவன் சமுச்சயமாக அறிகிறானோ அவன் கருமத்தால் நிஷித்தப் பிரவிருத்தி வடிவ மிருத்தியுவைக கடந்து வித்தையால் முத்தியையடைகின்றான்" என்பது முதலிய சுருதியானும் "சனகர் முதலானோர் கருமத்தாலேயே ஸம்சித்தியை யடைந்தனர்" "எப்படி தேனோடு கூடிய அன்னம் அல்லது அன்னத் தோடு கூடிய தேன் ஔஷதமாகின்றதோ அப்படி தவமும் வித்தையும் சேர்ந்து மகத்தான மருந்தாகின்றது" என்பது முதலிய ஸ்மிருதி யானும் கேவல கருமமாவது ஞானத்தோடு கூடிய கருமமாவது முத்திக்கு சாதனமாமென்று சங்கித்து எடுத்துக்காட்டிய வாக்கியத் திலும் தவமென்னும் சத்தம் பாப நிவிருத்தி பரமாவதாலும் ஸம்சித்தி சத்தம் ஞான சாதன சித்த சுத்தியைச் சொல்லுதலாலும் வித்தை என்னும் சத்தத்தால் உபாஸனையை விவக்ஷித்தலாலும் கருமம் முத்தி சாதனமன்றென்னும் அபிப்பிராயத்தால் வேறு சாதனத்தை நிஷேதிக் கின்ற "அதனையறிந்தேமிருத்தியுவைக் கடக்கின்றான். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை" என்னும் சுவேதாசுவதர சுருதி வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்] அவனை உணர்ந்தோனே=முன் சொல்லிய பரமான்மாவையறிந்தவனே, வராமிருத்துவினைகடந்திடும் = கருமத் தால் வராநின்ற சமுசாரத்தைக் கடப்பான். இதரம்=ஞான கரும சமுச் சயம்அல்லதுகேவலகருமம், வழிஅல=மோக்ஷசாதனமன்று.[அற்றேல் கூறிய சுருதிகளில் இகலோக அனர்த்த நிவிருத்தியே பிரதானமாகத் தோற்றுகிறது. பரலோக அனர்த்த நிவிருத்தி தோற்றவில்லை என்று சங்கித்து பரலோக அனர்த்தமானது எதிர்கால ஜன்மத்தை முன்னிட்ட தால் காரணசகித சன்மத்தின் அபாவத்தைப் பிரதிபாதிக்கும்

"தேவனையறிந்தே சருவ பாசங்களின் நிவிருத்தியாம். பாசசத்த வாச்சிய காமாதிகளின் நிவிருத்தியினுல் சன்ம மரண நிவிருத்தியாம்" என்னும் சு வே த ா சுவதர சுருதி வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்ருர்] தேவனை அறிந்தே சராசரபாசம் அறும்=சொப்பிரகாச பிரத்தியக பின்ன பிரமத்தையபரோக்ஷமாயநுபவித்தே தாவரஜங்க மங்களிலுள்ள காமக்குரோதாதி சகல பாசங்களும நீங்கும். கிலேசமது தணர்வுறில் = பாசசத்தவாச்சிய காமாதி கிலேசங்கள் நீங்கிடின், சன்ம பாக்கு இல்லை= (வரும் பிறப்பிற்கேதுவான கருமத்திஞரம்பம் பொருந்தாமையால்) பிறப்பையடைவதில்லை எ—று.

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

உம்=அசை.

கிரந்தியெனப் பெயரிய முடிச்சு போன்று திடசேர்க்கை வடிவா தலால் அன்னியோன்னியாத்தியாசம் கிரந்தியாம்.

நாநாகோடி (பக்ஷங்)களை விஷயஞ்செய்யும் ஞானத்தினைச் சம்சயமென்பர். அச்சம்சயம் (1) பிரமாணகத சம்சயம், (2) பிரமேயகத சம்சயம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

1. வேதாந்தமாகிய உபநிஷத்தின் வாக்கிய வடிவப் பிரமாணம் ஜீவப்பிரஹ்மத்தின் பே த த் தை ப் பிரதிபாதிப்பதா? அல்லது அபேதத்தைப் பிரதிபாதிப்பதா? என்னும் சம்சயம் பிரமாணகத சம்சயமாம். அது சிரவணத்தால் நீங்குகின்றது.

2. பிரமேயகத சம்சயம் (1) அநாத்மாவிலுள்ளது (2) ஆத்மா விலுள்ளது என்னும் பேதத்தால் இருவகைத்தாம். (1) அநாத்மா விலுள்ள சம்சயமோ அநேக விதமாயிருக்கிறது. அதனைச் சொல்லு தலால் உபயோகமில்லை.

(2) ஆத்மாவிலுள்ள சம்சயம் (1) "துவம்" பதார்த்த கோசரம் 2. "தத்" பதார்த்த கோசரம் (3) "தத்" ப தா ர் த் த த் தே ா டு அபின்ன "துவம்" பதார்த்த கோசரமென்னும் பேதத்தால் மூன்று வகைத்தாம். அவற்றில் துவம் பதார்த்த கோசர சம்சயங்களிவை யாம். ஆ ன் ம ா தேகாதிகளினும் வேரு அன்ரு. வேருயினும் கருத்திருத்துவாதி தருமமுடையதா அன்ரு. அகர்த்தாவாயினும் அவ்வாத்மாவிற்குப் பிரமத்தோடு பேதமிருக்கிறதா இல்லையா என்பன முதலியவை (ங) "தத்" பதார்த்த கோசர சம்சயங்களிவையாம்.

ஈசுவரன் வைகுண்டாதி லோகவாசியான பரிச்சின்ன கை கால் முதலிய அங்கத்தோடு கூடிய சரீரமுடையவரா, அல்லது சரீரமின்றிய விபுவா, சரீரமின்றிய விபுவெனினும் பரமாணுவாதிகளின் அபேக்ஷையோடு கூடிய ஜகத் கர்த்தாவா, அல்லது அபேக்ஷையின்றிய ஜகத்கர்த்தாவா, அபேக்ஷையின்றிய ஜகத்கர்த்தாவெனினும் கேவல கர்த்தாவா அல்லது அபின்ன நிமித்தோ பாதான வடிவ கர்த்தாவா, அபிந்ந நிமித்தோபா தானமெனினும் பிராணிகளது கருமத்தின் அபேக்ஷையின்றிய கர்த்தாவாய் விஷமமாகச் செய்தல் முதலிய தோஷமுடையவரா, அல்லது பிராணிகளது கர்மத்தின் அபேக்ஷையோடு கூடிய கர்த்தாவாய் விஷமமாகச் செய்தல் முதலிய தோஷமின்றியவரா என்பன முதலியவை.

தத் பதார்த்தத்தோடு அபின்னமான துவம்பதார்த்த கோசர சம்சயங்களிவையாம்.

4. ஆத்மா பிரஹ்மத்தினும் அபின்னமா, பின்னமா, அபின்ன மாயினும் எப்போதும் அபின்னமா, அல்லது மோக்ஷ காலத்தில் மாத்திரம் அபின்னமா, எப்பொழுதும் அபின்னமாயினும் ஆநந்த முதலிய ஐசுவரியமுடையதா, அல்லது ஆநந்தாதிகளின்றியதா ஆநந்தாதிகளுடையதாயினும் ஆநந்தாதிகள் குணமா, அல்லது பிரஹ்மாத்மாவின் சொரூபமா, என்பன முதலியவை. அதுபோல மோக்ஷத்தின் சொரூபம் சாதனம் என்பவற்றின் சம்சயமும், ஞானத்தின் சொரூபம் சாதனம் என்பவற்றின் சம்சயமும் பிரமேயகத சம்சயமாம். இது மனனத்தால் நீங்குகின்றது. சொரூப சாக்ஷாத் காரமானபோது இச்சர்வ சம்சயங்களும் காரணத்தோடு நிவர்த்தி யாகும் என்பது பொருள். 4

(அ—கை)

அற்றேல் சோகத்தைக் கடத்தல் முதலிய பயன் கேட்கப் படுகிறதேயன்றி அநுபவிக்கப்படுகிறதில்லை. ஞானிகளுக்கும் இஷ்டப் பிராப்தியின் பொருட்டும் அநிஷ்ட நிவர்த்தியின் பொருட்டும் பிரவிருத்தியைக் காண்டலால் என்று சங்கித்துத் திட அபரோக்ஷ ஞானமுடையவருக்குக் கூறிய பிரவிருத்தியின் அபாவத்தைப் பிரதி பாதிக்கின்ற "அத்தியான்ம யோகத்தினடைவால் தேவனை நேரே யறிந்து தீரன் சந்தோஷ விஷாதங்களை விடுகின்றான்" என்னுங் கடவல்லி சுருதியின் வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்.

தயிரிய னிவனே தேவனைத் தேர்ந்து
தணருவன் மகிழ்வொடு மிடரை
யுயரிவற் கிருத வகிருத புணிய
வொண்மற மென்றுமே தபியா
நயவென் முதலாம் பலமறை மிருதி
நற்புரா ணங்களோ டண்மி
யுயுசிவ ஞானத் திடர்கெடுஞ் சுகமு
மொன்றுறு மென்றுபே சிடுமே. 5

(ப—ரை) தயிரியன் = பிரம்மசரியாதி சாதன சம்பன்னன், தேவனைத்தேர்ந்து = சிதானந்தாதி வடிவ பிரமத்தை அறிந்து, இவனே = இந்தச் சன்மத்திலேயே, மகிழ்வு ஒடும் இடரைத் தணருவன் = சந்தோஷ விஷாதங்களை விட்டுவிடுவன், [இவனையே கருமமாகிய அக்கினியால் சம்பாதிக்கப்பட்ட இந்த சிந்தை தாபஞ் செய்யாது என்று கூறிய பொருளில் விசேஷத்தைக் காண்பிக்கின்ற, "செய்யப்பட்டதும் செய்யப்படாததுமான புண்ணிய பாபங்கள் தாபஞ் செய்யா" என்னும் பிரகதாரண்ணியத்திலுள்ள யாஞ்ஞுவற்கப்பிராமண வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்] உயர் இவன் = மேலான இந்த ஞானியை, கிருத அகிருத ஒண் புண்ணியம் மறம் = செய்யப் பட்டதும் செய்யப்படாததுமான ஒழுங்காகிய நல்வினையும் தீவினையும், என்றுமே தபியாது = ஓர்போதும் ஓரிடத்தும் தாபஞ்செய்யாது [முன்பு செய்யப்படாத புண்ணியமும் செய்யப்பட்ட பாபமும் தத்துவஞானிக்குத் தாபகாரணமன்றென்று கூறப்பட்டது. ஈண்டோ செய்யப்பட்டதும் செய்யப்படாததுமான புண்ணியமும் பாபமும் அப்படிப்பட்ட தாபக மாகிறதில்லையென்று சொல்லப்படுகிறது, இது விசேஷம். அஃதாமாறு:— தாபமென்பது சித்தத்தின் விகார விசேஷம். புண்ணியம் செய்யப்பட்டதாய் சந்தோஷ வடிவ விகாரத்தை உண்டுபண்ணுகிறது. செய்யப்படாததாய் விஷாதத்தை உண்டுபண்ணுகிறது. பாபமோ அதன் விபரீதமாகச் செய்யப்படாததாய்ச் சந்தோஷத்தை உண்டாக்கு கிறது. செய்யப்பட்டதாய் விஷாதத்தை உண்டாக்குகிறது. தத்துவ ஞானிக்கோ இரண்டும் இருவித விகாரத்திற்குக் காரணங்கள் ஓர்போதும் ஆகின்றனவல்ல. அவிக்கிரியப் பிரம வடிவ ஞானத்தால் என்பது கருத்து. [அற்றேல் தத்துவஞானம் அநிஷ்ட நிவிர்த்திக்கும் இஷ்டப் பிராப்திக்கும் ஏதுவாகுமென்பதில் இவ்வளவு தானே பிரமாண

வாக்கியங்கள் எனின் அன்றெனக் கூறுகின்றார்] என முதலாம் நயபல மறை = என்பது முதலிய சிறந்த அனேக சுருதிகள், மிருதி நற்புராணங்கள் ஓடு அண்மி=ஸ்மிருதிகளோடும் நல்ல புராணங் களோடுஞ்சேர்ந்து, பிரமாணங்களாம். [கூறிய சுருதி ஸ்மிருதி புராணங்களனைத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்] உயுசிவ ஞானத்து=ஈடேறுதற்கேதுவான பிரம்ம ஞானத்தால், இடர்கெடும் சுகமும் ஒன்றுறும்=அனர்த்தம் நிவர்த்தியாகும் ஆனந்தமும் பிராப்தி யாகும், என்று பேசிடும்=என்றிவ்வாறு கூறுகின்றன எ—று.

ஏ—அசை.

முதலாம் சத்தத்தால் "ஈண்டு பிரம்மத்தை அறியின் சத்திய மிருக்கின்றது. ஈண்டு அறியாவிடின் மகத்தான விநாசமாம்" "எவர்கள் இதனை அறிகின்றார்களோ அவர்கள் அமிர்தராகின்றார்கள். மற்ற வர்கள் துக்கத்தையே அடைகின்றார்கள்" "தேவர்களுக்குள் எவர் எவர் பிரம்மத்தையறிந்தாரோ அவர் அவர் அதுவானார்" "அதனை அறிந்து மிருத்தியு முகத்தினின்றும் விடுபடுகின்றான்" என்பது முதலிய சுருதிகள் கிரகிக்கப்படுகின்றன. சருவ பூதங்களிடத்தில் ஆன்மா வையும் ஆன்மாவினிடத்தில் சருவ பூதங்களையும் பார்க்கின்றவனாய் ஆன்மாவைப்பூஜிக்கும் புருஷன் முத்தியையடைகின்றான்"க்ஷேத்திரஞ் ஞனுக்கு ஆன்ம விஞ்ஞானத்தால் மேலான தூய்மை கருதப்பட்டுளது என்பது முதலிய புராண ஸ்மிருதி வசனங்களும் பிரமாணங்களாம் என்பது பொருள். 5

(அ—கை)

அற்றேல் பிரமானந்தமென ஆனந்த பதத்தை பிரம்ம பதத்தால் விசேஷித்தலால் பிரம்மானந்தத்தினும் வேருக ஆனந்தம் இருக்கிற தென அறியப்படுகின்றது. அவ்வானந்தம் எத்தனை விதம் எப்படிப் பட்டது என்றிச்சையுண்டாக அதன் பேதத்தைக் காண்பித்தல் வாயிலாகப் பிரமானந்தத்தினது விவேசனத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.

சுகவகை மூன்று சிவம்வித்தை விடயச்
சுகமென வாதியிற் பிரமச்
சுகம்வகுத் திடுவாம் பிருகுநற் புதல்வன்
சொல்வரு ணப்பிதா விடத்தே

சுகசிவ வடிவஞ் செவிபெரு வன்னஞ்
சுழலுயிர் மனமதி துலைந்தே
சுகமறிந் தனனஞ் சுகத்திலே பிறந்து
துதைந்திறந் திடுமுயி ரதனல். 6

(ப—ரை) சிவம் வித்தை விடயச்சுகமென = பிரம்மானந்தம் வித்தியானந்தம் விடயானந்தம் என்றிந்தப் பிரகாரம், சுகம் மூன்று வகை = ஆனந்தம் மூன்று விதமாம், (மூன்றனுள் பின்னிரண்டும் பிரம்மானந்தத்தை மூலமாகவுடைமையால்) ஆதியில் பிரமச்சுகம் வகுத்திடுவாம் = முதலில், மூன்று அத்தியாயத்தால், பிரம்மானந்தத்தைப் பிரித்துக் காண்பிப்பாம். [அதில் முதலில் தைத்திரிய சுருதியை விசாரிக்கும்போது பிரம்மம் ஆனந்த வடிவமென அறியப் படுகின்றது என்னும் அபிப்பிராயத்தால் பிருகுவல்லியின் பொருளைச் சுருக்கமாகத் தெரிவிக்கின்றார்] பிருகு நற்புதல்வன் = பிருகுவெனப் பெயரிய நல்ல புத்திரன், வருணசொல் பிதாவிடத்தே = வருணன் எனப் பெயரிய தகப்பனினின்றும், சுக சிவ வடிவம் செவிபெரு = ஆனந்தமாகிய பிரமத்தின் லக்ஷணத்தைக்கேட்டு, அன்னம் சுழல் உயிர்மனம் மதி துலைத்து = தேகம் எப்போதும் சலிக்கின்ற பிராணன் மனது புத்தியென்னும் நான்கு கோசங்களையும் (அவைகளில் பிரம்ம லக்ஷணம் பொருந்தாமையால்) பிரம்மம் அல்ல என்று நிஷேதித்து சுகம் அறிந்தனன் = (ஆனந்தமய கோசத்தில் ஐந்தாவது அவயவ மாகச் சொல்லப்பட்ட) பிம்பவடிவ ஆனந்தத்தை பிரம்ம லக்ஷணம் பொருந்துவதனல் பிரம்மமாக உணர்ந்தான், [பிரம்ம லக்ஷணத்தை ஆனந்தத்தில் எவ்வாறு பொருத்தினன் என்று சங்கித்து அதனைப் பொருத்தும்பிரகாரத்தைக் காண்பிக்கின்ற," ஆனந்தத்தில் இருந்தே இந்தப் பூதங்கள் உண்டாகின்றன. உண்டான பிராணிகள் ஆனந்தத்தினலேயே ஜீவிக்கின்றன ஆனந்தத்திலேயே லீனமா கின்றன" என்னும் வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்] நம் சுகத்திலே உயிர் பிறந்து = நமது ஆனந்தத்திலிருந்தே பிராணிகள் பிறப்பை அடைந்து, துதைந்து = ஆனந்தத்தினலேயே ஜீவித்து, இறந்திடும் = ஆனந்தத்திலேயே லயத்தையடைகின்றன, அதனல் சுகமதே பிரம்மம், ஆகையினல் ஆனந்தம் பிரம்மமே, ஐயம் இல் = (சர்வானுபவ சித்தமாவதால் இதில்) சமுசயம் செய்யத்தக்கதன்று எ—று.

பிரம்ம லக்ஷணம், எதினின்றும் இந்தப் பிராணிகள் உண்டா கின்றனவோ எதனுல் இந்தப் பிராணிகள் ஜீவிக்கின்றனவோ எதில் லயத்தை அடைகின்றனவோ அது பிரம்மம் அதனை அறிய இச்சிப்பாய் என்பது "பிரம்மம் புச்சம் பிரதிஷ்டை" என்னுஞ் சுருதியால் பிரம்மம் ஆனந்தமயனது ஐந்தாவது அவயவமாம். கிராமிய தரும நிமித்தக மான ஆனந்தத்திலிருந்து பிராணிகள் உற்பத்தியாகின்றுர்கள். விஷய போக நிமித்தகமான ஆனந்தத்திஞலேயே பிறந்த பிராணிகள் ஜீவிக்கின்றுர்கள். அப்பிராணிகளுக்கு லயமும் சுழுத்தி காலத்தில் சொரூப வடிவ ஆனந்தத்திலேயே உண்டாகிறது. சுழுத்தியில் ஆனந்தத்தினும் வேருக யாதொன்றுந் தோற்றுமையால், ஆனந்தம் பிரம்மமேயாம்.

7-வது பாட்டின் முன் அரைவரி 6-வது பாட்டின் உரையீட்டில் சேர்க்கப்பட்டது. 6

(அ—கை)

இவ்வாறு தைத்திரிய சுருதியின் விசார்த்தால் பிரம்மத்திற்கு ஆனந்த வடிவத்தைக் காண்பித்துச் சாந்தோக்ய சுருதியின் விசார்த் தாலும் பிரமத்திற்கு ஆனந்த வடிவத்தைக் காண்பிக்க இச்சையுடைய வராய்ச் சனத் குமாரருக்கும் நாரத சுருக்கம் ஸம்வாத வடிவ ஏழாவது அத்தியாயத்திலுள்ளதும் பூம வடிவ பிரம்மத்தைப் பிரதிப்பாதிப்பது மான "எதன்கண் அன்னியத்தைக் காண்கிலனே அன்னியத்தைக் கேட்கிலனே அன்னியத்தை அறிகிலனே அது பூமா என்பது முதலிய வாக்கியத்தின் பொருளை சுருக்கமாகக் கூறுகின்றுர்.

சுகமதே பிரம மையமில் பூதந்
துடர்வதின் முனந்திரி புடியா
முகுதுவி தமதி லாமையிற் பூமா
வுண்டுஞா துருவறி வோடு
திகழ்விட யவுருத் திரிபுடி முடிவிற்
றிகழ்வுரு மதிமயன் ஞாதா
பகுமன மயன்ஞா னந்தொனி ஞேயம்
பன்னிவை மூன்றுமுன் னிலையால். 7

(ப—ரை) பூதந்துடர்வதின் முனம் = ஆகாசாதி பூதங்களும் அதன் காரியங்களான சராயுஜ அண்ட ஜாதிகளும் உண்டாவதற்கு முன்பு, திரிபுடியாம் உகுது விதமது இலாமையின் = ஞாதா ஞானஞேய வடிவங்களின் சேர்க்கையாகிய விடத்தக்க துவைதப் பிரபஞ்சம் இல்லாதபடியால். பூமா உண்டு = தேசகால வஸ்து பரிச்சேத சூனிய பரமான்மாவே இருந்தது [அந்தத் துவிதத்தினின்மையையே யுபபாதனஞ் செய்கின்றார்] ஞாதுரு அறிவோடு திகழ்விடயவுருத் திரிபுடி = அறிபவனும் அறிவும் அறியப்படும் பொருளுமாகிய திரிபுடியும், முடிவில் திகழ்வுரு = பிரளய காலத்தில் விளங்கா, (இல்லையென்பது பொருள்) [இப்போது ஞாதுரு முதலானவற்றின் சொரூபத்தைத் தெரிவிக்கின்றார்] மதிமயன் = பரமான்மாவினின்றுமுண்டானவிஞ்ஞான மயன், ஞாதா = ஞாதுரு சத்தவாச்சியனுவான், பகுமனமயன் = பிரிவாகிய மனதில் பிரதிபிம்பித்த சைதன்யம், ஞானம் = ஞானமென்று சொல்லப்படும், தொனி = சத்தமுதலிய விஷயங்கள், ஞேயம் = ஞேயமென்று சொல்லப்படும், பன் இவை மூன்றும் = சொல்லிய இந்த மூன்றும், முன் இலை = (காரியமாதலால்) உற்பத்திக்கு முன்பு காரணத்தினும் வேறாக இல்லை எ—று.

ஆல்—அசை. 7

(அ—கை)

திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

மூன்றுமின் ஞான்றே விருமையில் பூன்ற
முதல்வனே அனுபவப் படுவன்
றேன்றுச மாதி துயிலுறு மூர்ச்சை
தோன்றுறு முன்னமு நிறைவே
மூன்றுறு வேறுங் கிஞ்சிலிற் சுகமின்
மொழிநிறை வெதுவது சுகமா
மீன்றுறு துயர்கூர் நாரதற் கிவண
மியம்பினன் சனற்குமா ரனரோ. 8

(ப—ரை) மூன்றும் இல் ஞான்று = ஞாதா முதலிய மூன்றுமில்லாதபோது, தோன்று சமாதி துயில்உறும் மூர்ச்சை = மிக நல்வினையால் உண்டாகும் நிருவிகற்ப சமாதியிலும் சுழுத்தியிலும் பாப

வசத்தால் பொருந்தா நின்ற மூர்ச்சாவஸ்தையிலும், இருமையில் பூன்ற முதல்வனே = துவைதமற்ற பரிபூரண ஆன்மாவே, அநுபவப் படுவன் = அநுபவிக்கப்படுகிறது [சுழுத்தி முதலியவற்றில் அத் துவிதத்தின் சித்தி இருக்குக. பிரகிருதத்தில் அதாவது பிரளயத்தில் வந்தது என்னையெனிற் கூறுகின்றார்] தோன்றுறு முனமும் நிறைவே = (எப்படிச் சுழுத்தி முதலியவற்றில் பரிச்சேதகமின்மை யினால் ஆன்மா பூரணமோ அப்படி) சிருஷ்டிக்கு முன்பும் அஃதின்மை யினால் பூரணமேயாம். [பிரம்மத்திற்குப் பூரணத்துவம் இருக்குக. ஆனந்த ரூபத்தில் வந்ததென்னையென்று சங்கித்து அன்வயவியதி ரேகங்களால் பூரணத்திற்குச் சுக ரூபத்துவத்தைக் காண்பிக்கின்ற "எது பூரணமோ அது சுகம் அற்பத்தில் சுகமில்லை" என்னும் வாக்கியத்தைப பொருளால் அநுசரிக்கின்றார்] மொழி நிறைவு எது அது சுகமாம் = சுருதியிற் கூறிய பூரணமெதுவோ அது ஆனந்தமாம், அத்துவிதீயத்தில் துக்க காரணமின்மையினால் என்க, மூன்றுஉறு வேரும் கிஞ்சிலில் = மூன்றாகப் பிரிந்துள்ள அற்பத்தில், சுகம்இல் = ஆனந்தம் இல்லை, [இவ்வாறு யாருக்கு யாரால் சொல்லப்பட்டதெனிற் கூறுகின்றார்] ஈன்றுறு துயர்கூர் நாரதற்கு = அஞ்ஞானத்தா லுண்டாக்கப்பட்ட துன்பம் மிகுந்த நாரதருக்கு, இவணம் சனற் குமாரன் இயம்பினான் = இந்தப் பிரகாரம் சனற்குமார முனிவர் கூறினார் எ—று.

அரோ—அசை.

வித்துவானுடைய அநுபவத்தைத் தெரிவிக்கும் பொருட்டு ச்மாதியின் கிரகணம், சருவாநுபவத்தைத் தோற்றுவிக்கும் பொருட்டுச் சுழுத்தி மூர்ச்சைகளின் உதாரணமாம், சுழுத்தியாதியினின்று மெழுந்தவனுக்குத் துவைதப் பிரதீதியினின்மையின் நினைப்புண்டா கின்றது. அஃது துவைதா பாவத்தினநுபவமின்றி வேறு விதமாகப் பொருந்தாமையால் துவைதா பாவத்தையநுபவிக்கின்றவனுக்கு அத்துவிதத்தின் சித்தியாமென்பது கருத்து.

அற்பம் = பரிச்சின்னம், அதனது வியாக்கியானம் மூன்றாகப் பிரிந்துள்ளதென்பது, இஃது ஏது கர்ப்ப விசேஷணம் அதாவது பரிச்சின்ன வஸ்து ஞாதா முதலிய மூவித பேதத்தோடு கூடியிருத்த லால் அதன்கண் சுகமின்றுமென்பது பொருள். துயர்கூர் என்பதால் நாரதரிடத்துள்ள சிஷ்யத் தன்மையில் காரணம் கூறப்பட்டது.

(அ—கை)

அந்த நாரதருக்கு மிகுந்த சோகத்தில் காரணங் கூறுகின்றார்.

வேதமைந் தரிய புராணம தோடு
விவிதநூற் றெளிந்துந்தற் றெளியாத்
தீதினு லதிக வாதைநா ரதனுஞ்
செறிந்தனன் வேதமோ திடுமுன்
னேதுமுத் தாப மாத்திரை யானே
யுறுமனுர் பின்னரப் யாச
மோதிய மறத்த லிகழ்வொடு கருவ
முறுதலான் மிகுதுய ராமே. 9

(ப—ரை) வேதம் ஐந்து=மகாபாரதம் நான்கு வேதம் ஆகிய ஐந்தினையும், அரிய புராணமது ஓடு=சிறந்த பதினெண் புராணங் களையும், விவித நூல் = நானுப் பிரகாரமான சாஸ்திரங்களையும், தெளிந்தும் = அறிந்தும், தன் தெளியாத் தீதினுல் = ஆன்மாவை அறியாத தோஷத்தினுல், நாரதனும் அதிக வாதை செறிந்தனன் = உயர்வாகிய நாரத மகரிஷியும் மிகுந்த துயரை அடைந்தனன், [அற்றேல் வேத சாஸ்திரங்களை விஷயஞ் செய்வதும் சோகத்தை நிவர்த்தி செய்வதாகப் பிரசித்தமானதுமான ஞானம் அதிக துயருக் கேதுவாவதெப்படியெனிற் கூறுகின்றார்] வேதம் ஓதிடுமுன் = மறையை அப்பியசித்தற்கு முன்பு, ஓதும் முத்தாப மாத்திரையானே = சொல்லா நின்ற ஆத்தியான்மிகம் முதலிய வடிவ தாபத்திரயங் களாலேயே, அனுர் உறும் = சோகம் உண்டாகும், பின்னர் = வேதாதிகளை அப்பியசித்ததின்பின்பு, அப்பியாசம் = மறவாமல் இருத்தற் காகப் பாடாதிகளை ஆவிருத்தி செய்தலாலும், ஓதியமறத்தல் = படித்ததின் மறதியினுலும், இகழ்வு ஒடு = தன்னினும் உயர்ந்தோரால் செய்யப்படுகின்ற திரஸ்காரத்தாலும், கருவம் உறுதலான் = தன்னினும் குறைந்தவரைக் காணலால் தன்னிடத்துப் பெருந்தன்மைப் புத்தியை அடைதலாலும், மிகுதுயர் ஆம் = அதிக சோகம் உண்டாகும். எ—று.

ஏ—அசை.

நாரதனும் என்ற உம்மை உயர்வுச் சிறப்பில் வந்தது. 9

(அ—கை)

அற்றேல் இவ்வாறு சர்வஞ்ஞான நாரதருக்கும் அதிக சோக முண்டானதென்று எதனுல் அறியப்படுகின்றதென்ரு சங்கித்து "பகவ அந்த நான் சோகிக்கின்றேன்" என்னும் அவரது வாக்கியத்தாலேயே அறியப்படுகின்றதென்று அபிப்பிராயப்பட்டு "பகவ அந்த என்னைச் சோகத்தின் கரையை அடைவிக்குக" என்று அதன் நிவிர்த்தியுபாயம் அவரால் வினவப்பட்டபோது சனற்குமாரர் பூமசத்த வாச்சிய சுகரூபப் பிரம்மமேயறியப்பட்டதாய்ச் சோக நிவிருத்தியுபாயமாமென "சுகத்தையேயறிய இச்சிக்கத்தக்கது" என்பது தொடங்கி பின்னுள்ள கிரந்த சந்தர்ப்பத்தால் சொன்னுரெனக் கூறுகின்ருர்.

அவ்வியா னறிஞ வலமரு கின்றே
னஞர்க்கரை யென்னையீண் டடைவி
செவ்விதி னெனக்கேட் டிடமுனி சுகமே
செறியிதன் கரையெனத் தெரித்தான்
கவ்வுவை ஷயிக சுகமிடர் கோடி
கலத்தலிற் றுன்பமே யென்ன
விவ்விறை மதித்துக் கிஞ்சிலிற் சுகமின்
றென்றுவாய் மலர்ந்தரு ளினனே. 10

(ப—ரை) அறிஞ=ஏவித்வன், அவ்யான் அலமருகின்றேன்= அந்த நான் சோகிக்கின்றேன், ஈண்டு என்னை அஞர்க்கரை அடைவி= இவ்வுலகில் என்னை சோகத்தின் தீரத்தை அடைவிப்பாய், என செவ்விதின் கேட்டிட=என்று செவ்வையாக நாரதர் வினவ, முனிசெறி சுகமே இதன் கரையெனத் தெரித்தான்=சனற்குமார மஹரிஷி, நிறைந்த ஆனந்தமே இச்சமுசார சாகரத்தின் தீரமெனச் சொன்னுன். [அற்றேல் புஷ்பமாலை முதலியவற்ருல் உண்டாவனவாகிய அனேக சுகங்களிருக்கும்போது அற்பத்தில் சுகமில்லையென்று சொல்லுதல் பொருந்தாது எனின் அற்றன்று அந்த மாலை முதலியவைகட்குத் துக்க சம்பந்தமிருத்தலால் விஷத்தோடு கூடிய அன்னம்போல வெகு துக்க வடிவத்துவத்தை முனியால் கருதப்பட்டமையால் எனக் கூறுகின்ருர்] கவ்வு வைஷயிக சுகம்=மனதைக் கவர்கின்ற மாலை முதலிய விஷய ஜன்னிய ஆனந்தம், இடர் கோடி கலத்தலின்= அளவிறந்த துன்பங்களோடு கூடியிருத்தலின், துன்பமே என்ன

மதித்து = துக்கமே என்று கருதி, இவ்இறை = இந்தச் சனற்குமார மஹரிஷி, கிஞ்சிலில் சுகம் இன்றென்று = அற்பத்தில் ஆனந்தம் இல்லையென்று, வாய் மலர்ந்து அருளினன் = திருவாயைத் திறந்து கூறினன் எ—று. ஏ—அசை 10

(அ—கை)

துவிதத்தில் சுகத்தினின்மையை அங்கீகரித்து அத்துவிதத்திலும் சுகத்தினின்மையை வாதி வினவுகின்றான்.

அற்றேற் சுகமிரு மையிலற வொருமை
யதனினுஞ் சுகமிலை யுளதேலோ
மற்றேன் புலனிலை யவணமெற் றிரிபுடி
மருவுறு மொருமையிற் சுகமேனோ
பிற்றோ வொருமையே சுகம்பிர மாணம்பிரபைசு
யந்தனின் மானேச் சை
யிற்றுஞ் சுயவொளி தனினின மொழியே
யெழிலள வையதா மெதனனே. 11

(ப—ரை) அற்றேல் = அப்படியானால், இருமையில் சுகம் அற = துவிதத்தில் ஆனந்தம் இல்லாதொழிக, ஒருமையதனினும் சுகம் இலை = அத்துவிதத்திலும் ஆனந்தம் இன்றாம், [அதில் அநுபலப்தியை பிரமாணமாக்குகின்றார்] உளதேல் = அத்துவிதத்தில் சுகம் இருக்குமானால், ஏன் புலன் இலை = விஷய சுகம் போன்று ஏன் தோற்றுவதில்லை, தோற்றாமையால் இல்லையென்பது பொருள். [அத்துவிதத்தில் சுகம் தோன்றுகின்றதென்று சங்கிக்கும் சித்தாந்தியைக் குறித்து வாதி கூறுகின்றான்] அவணமேல் = அப்படியாமேல் அதாவது விஷயானந்தம் போல அத்துவிதானந்தம் தோன்றுமேல், திரிபுடி மருவுறும் (போத்தா போகம் போக்கியமாகிய) திரிபுடி வந்து பொருந்தும், [அத்துவிதத்தில் சுக அதிகரணத் தன்மையின் நிஷேதத்தைச் சித்தாந்தி அங்கீகரிக்கின்றார்] ஒருமையில் சுகம் ஏன் = அத்துவிதத்தில் ஆனந்தம் ஏது, [அதில் ஏதுவைக் கூறுகின்றார்] பிற்றோ ஒருமையே சுகம் = பின்னையோ அத்துவிதமே சுகமாம், ஆகையால் சுகத்தின் அதிகரணமின்றென்பது பொருள், [அத்துவிதம் சுகமென்பதில் யாது பிரமாணமென்னுஞ் சங்கையை அநுவதித்தல்

வாயிலாக அது சொப்பிரகாசமாவதால் பிரமாண சங்கையே பொருந்தா தெனக் கூறுகின்றார்] பிரமாணம்=அளவை யாதென வினவின், சுயம் பிரபைதனில்மான இச்சையின்றாம்=சொயம்பிரகாச அத்துவிதத்தில் பிரமாணத்தின் அபேக்ஷையில்லை. [அற்றேல் சொப்பிரகாசத்தில் தான் யாது பிரமாணமென்று சங்கித்து உனது வசனமே பிரமாணமா மெனக் கூறுகின்றார்] சுய ஒளிதனில் = சொப்பிரகாசத்தில், நினமொழியே எழில் அளவையதாம் = உமது வாக்கியமே சிறந்த பிரமாணமாம் எ—று. ஓ, ஓ—அசை.

எதனால் என்பது பிற்கவியோடு முடியும்.

திரிபுடி மருவுறுமென்பதன் கருத்து, அநுபவமானது அநுபவிக்கும் புருஷன் அநுபவிக்கப்படும் பொருள். இவைகளை அபேக்ஷித்து நிற்றலால் அத்துவிதத்திற்குக் குறைவாமென்பது. இன்றாமென்பது இற்றாமென எதுகை நோக்கித்திரிந்தது. அவ்வண மேல் என்பது இசையைக் குறித்து அவணமெல் எனத்திரிந்தது. 11

(அ—கை)

சொப்பிரகாசத்தையுபபாதனஞ் செய்கின்றார்.

கற்றோ யொருமை யிதைக்கோ டிதுதனிற்
கழறுதி சுகமிலை யெனநீதான்
பற்றே னொருமையை நினதுரை மருவிப்
பழியாநின்றிடு வேன்யா னேன்
முற்றா னிருமையி னெஃதுள துரையாய்
முயலொரு மையிருமைய யன்முடிபோ
விற்றா மிரண்டல வுதிதமி லாமையி
னெஞ்சுறு முதலது மிதமாயே. 12

(ப—ரை) கற்றோய்=நூலுணர்ந்தோய், எதனால்=யாதொரு காரணத்தினால், ஒருமையிதைக்கோடு = (பிரமாணத்தினபேக்ஷை யின்றி) இவ்வத்துவிதத்தை அங்கீகரித்து, இது தனில் சுகமிலை யென=இவ்வத்துவிதத்தில் ஆனந்தம் இல்லையென்று, நீகழறுதி=நீ சொல்லுகின்றாய், ஆதலால் சொப்பிரகாசமாம், [என்னால் அத்துவிதம் அங்கீகரிக்கப்படுவதின்று மற்றோ நீ சொல்லிய அத்துவிதத்தை

யநுவதித்துத் தூஷிக்கப்படுகின்றது. ஆதலால் கூறிய அத்துவிதம் சித்திக்காது என்று வினவுகின்றான்] யான் ஒருமையைப் பற்றேன் = நான் அத்துவிதத்தை அங்கீகரியேன், நினது உரைமருவி பழியா நின்றிடுவேன்எல் = உனது வாக்கியத்தை அநுவதித்துத்தூஷிப்பேன் என்று சொல்லில், [விகற்பத்தைச் சகியாமையால் அத்துவிதத்தை அங்கீகரியாமை பொருத்தமுடையதன்றென்னும் கருத்துடையராய் வினவுகின்றார்] இருமையின் முன் = துவிதத்தின் உற்பத்திக்கு முன்பு, எஃது உளது உரையாய் = யாது இருந்தது சொல்லுவாய், [எஃது என்னுஞ் சத்தத்தால் சூசிப்பிக்கப்பட்ட விகற்பத்தைத் தெரிவிக்கின்றார்] ஒருமை இருமை அயல் = அத்துவிதம் இருந்ததா துவிதம் இருந்ததா அல்லது வேறே ஏதேனும் இருந்ததா, முயல் = விடையளிப்பதில் முயற்சிப்பாய், [மூன்றாவது பக்ஷத்தை நிராகரிக்கின்றார்] முடிபு இன்றாம் = அந்திம பக்ஷம் அப்பிரசித்தமாம், துவிதத்தினும் அத்துவிதத்தினும் விலக்ஷண வடிவம் உலகில் காணப்படாமையால் என்பது கருத்து, [இரண்டாவது பக்ஷத்தை நிராகரிக்கின்றார்] இரண்டு அல = துவிதம் உளது என்னும் இரண்டாவது பக்ஷமும் சரியன்று [அதில் ஏதுவைக் கூறுகின்றார்] உதிதமிலாமையின் = உற்பத்தியில்லாமையால், துவிதம் அப்போது உண்டாகாதபடியாலென்பது கருத்து, [ஆதலால் முதற்பக்ஷம் பரிசேஷிக்கிறதெனக் கூறுகின்றார்] இதமாய் முதலது எஞ்சுறும் = நன்றாய் அத்துவிதம் இருந்தது என்னும் முதற் பக்ஷம் பரிசேஷமாகின்றது எ—று.

இன்றாமென்பது எதுகை நோக்கி இற்றாமெனத் திரிந்தது.

தான், உம், அசை—நிலைகள். 12

(அ—கை)

அற்றேல் சொல்லிய பிரகாரத்தால் அத்துவிதம் யுத்தியினாலேயே சித்தித்தது. அநுபவத்தாலன்று என்று வினவுகின்றான்.

ஒருமையின் றுனிபூ கத்தா லேயிலை
யுயரனு பூதியி னெனினோதா
னொருவுவ மானம திலதோ வலதா
னுளதோ விவண்வே றிலைகோடி
யிருவனு பூதியு மிலையுவ மானமு
மிலையெனு மூகமொ சோபையதே
மருவுவ மானம திடையினி னேசம்
மதவுவ மானமெற் குரைநீயே. 13

(ப—ரை) ஊகத்தாலேயே ஒருமையின் துணிபு=யுத்தியினுலேயே அத்துவிதத்தின் நிச்சயமாம், உயர் அநுபூதியின் இலை= அபரோக்ஷ அநுபவத்தால் அன்று, எனின்=என்று சொல்லின், [அத்துவித நிச்சயம் யுத்தியாலேயே என்று சொல்லப்பட்டது விகற்பத்தைச் சகியாமையால் பொருந்தாது எனக் கருதுகின்றவராய் யுத்தியை விகற்பிக்கின்ருர்] ஒரு உவமானமது இலதோ அலது உளதோ ஒது=யுத்தியில் ஒரு திருஷ்டாந்தம் இல்லையா அல்லது இருக்கின்றதா சொல், [விகற்பத்தின் குறையை நிராகரிக்கின்ருர்] இவண்வேறு கோடி இலை=ஈண்டுவேறு மூன்ருவதுபக்ஷம் அப்பிரசித்தமாதலால் இன்ரும் [முதற்பக்ஷத்தைப் பரிகாசத்தோடு பரிகரிக்கின்ருர்] இரு அனுபூதியும் இலை=மேலான அநுபவமும் இன்று, உவமானமும் இலை = திருஷ்டாந்தமும் இன்று, எனும் ஊகம் சோபையதே = என்கின்ற யுத்தியானது விளக்கமுடையதாம் [இரண்டாவது விகற்பத்தில் உபயவாதி சம்மதமான திருஷ்டாந்தஞ் சொல்லத்தக்கதெனக் கூறுகின்ருர்] உவமானம் மருவுவது இடையினின் = திருஷ்டாந்தமுடையதென்னும் பக்ஷத்தில், சம்மத உவமானம் எற்கு நீ உரை= இருவருக்கும் சம்மதமான திருஷ்டாந்தம் எனக்கு நீ சொல்வாய் எ—று. ஆன், ஆன், ஏ—அசைநிலைகள்.

சோபையதே என்பது,அத்துவித சித்தி யுத்தியினுலேயேயென்று சொல்பவனுல் அநுபவம் அங்கீகரிக்கப்படுவதில்லை யுத்தியோ திருஷ்டாந்தத்தைக் காண்பியாமல் ஒன்றையும் சாதிக்காது ஆதலால் திருஷ்டாந்தமில்லையென்னும் சொல் பொருத்தமற்றதேயாம் என்பது கருத்து. 13

(அ—கை)

அப்படியானுல் திருஷ்டாந்தத்தாலேயே அத்துவிதத்தைச் சாதிக்கின்றேனென்று பூருவவாதி வினவுகின்ருன்.

பிரளய மொருமைய திருமையி லாமையிற்
  பிணதுயி லெனவெனி ஞெருமையினே
வரதுயி லவணுவ மையதுரை புரையயல்
  வருதுயி லெனினின கவுசலமோ
பெரிதகொ துயிறன தறிகில னவற்கோ
  பிறதுயி லிற்கதை யென்றுயில்வோன்
பரனசை விலியா தலினெனை நேரெனிற்
  பகர்நின துயில்சுய வொளிவலிதே. 14

(ப—ரை) பிரளயம் ஒருமையது = பிரளய காலம் துவித மின்றியது, இருமை இலாமையின் = துவிதந் தோற்றுமையால், எது எது துவிதத்தோற்றமின்றியதோ அது அது துவிதமின்றியது, பிணதுயில் என = சவத்திற்குச் சமானமான சுழுத்திபோன்று, எனின் = என்று சொல்லின், [அற்றேல் இவ்வாறு சாதிக்கின்ற உனக்கு நினது சுழுப்தி திருஷ்டாந்தமா பரனது சுழுப்தி திருஷ்டாந்தமா, முதற்பக்ஷத்தில் அது பரனைக் குறித்து அசித்தமாவதால் அந்தத் தனது சுழுத்தியின் சித்தியின் பொருட்டு வேறு திருஷ்டாந்தம் சொல்லத்தக்கதெனக் கூறுகின்றார்] வரதுயில் ஒருமை அவண் = நல்ல நித்திரை அத்துவிதமென்பதில், உவமையது உரை = திருஷ்டாந்தங் கூறுவாய், [அற்றேல் அதற்குப் பரனது சுழுத்தியே திருஷ்டாந்தமா மென இரண்டாவது விகற்பத்தைச் சங்கிக்கின்றான்] புரை அயல் வரு துயில் எனின் = திருஷ்டாந்தம் பிறரது சுழுத்தியெனின் [பிறரது சுழுத்தி உனக்குப் பிரசித்தமில்லாமையால் அதைத் திருஷ்டாந்தஞ் செய்தல் பொருத்தமற்றது எனப் பரிகாசமாக சித்தாந்தி கூறுகின்றார்] நினகவு சலம்பெரிது = உன்னுடைய திறமை மகத்தானது, அகோ = ஆச்சர்யம், தனது துயில் அறிகிலன் = (எந்த நீ சுழுத்தியை அநுபவத் திற்கு விஷயமாக அங்கீகரியாமையால்) தனது சுழுத்தியையும் உணராதவனாகின்றனையோ, அவற்கு பிற துயிலில் கதை என் = அந்த உனக்கு அயலாரது சுழுத்தியின் ஞானம் உண்டாகிறதில்லையென்று சொல்லவேண்டியதென்னை, [அநுமானத்தால் அயலாரது சுழுத்தி ஞானம் உண்டாமென வினவுகின்றான்] பரன் துயில்வோன் = அன்னியன் சுழுத்தியையுடையவன், அசைவிலி ஆதலின் = பிராணாதி களையுடைத்தானவனாய்ச் சலனமின்றியவனாயிருத்தலின், எனைநேர் = என்னைப்போல, எனின் = என்று சொல்லின், [இவ்வாறாயின் உனது சுழுத்திக்குச் சொப்பிரகாசத்வம் பரிசேஷிக்கிறது என சித்தாந்தி கூறுகின்றார்] பகர்நின துயில் (அப்படியானால் என்னைக் குறித்துச் சுழுத்தியைத் திருஷ்டாந்தமாகக்) கூறுகின்ற உன்னுடைய சுழுத்தி, வலிது = பலாத்காரத்தால் அதாவது உதாரணத்தின் சாமர்த்தியத் தால், சுயவொளி = சொப்பிரகாசமாம் எ—று.

ஏ, ஓ—அசைநிலைகள்.

அகோ என்பது அகொ என இசையைக் குறித்துக் குறுகிற்று. 14

(அ—கை)

எனது சுழுத்திக்குச் சொப்பிரகாசத் தன்மை பலாத்காரத்தால் எப்படியாகும் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

பொறிகளு மிலையுவ மனுமிலை யெனினும்
புகலது கோடுதி சாதனமே
யறவொளிர் வெதுவிது வேசுய வொளியா
மணுகுக துயிறனி லொருமையொடே
நிறைசுய வொளிசுக மறையெவ ணங்கே
ணிகழ்துய ரதுபொழு தின்றன்றே
வுறுமது தனிளுற் சேடம தாகு
முனக்கே வுயர்சுக மெனவோரே. 15

(ப—ரை) பொறிகளும் இலை= (சுழுத்தியைக் கிரகிப்பனவாக) இந்திரியங்களும் இல்லை. அவைகள் தமது காரணத்தில் விலீனமானமையால், வுவமனும் இலை=சம்மதமான திருஷ்டாந்தமும் இல்லை. பர சுழுத்திக்கு அப்பிரசித்தத் தன்மையைக் கூறினமையால், எனினும் புகல் அது கோடுதி = அப்படியாயினும் சொல்லிய சுழுத்தியை அங்கீகரிக்கின்றாய், இவ்வாறுகும்போது, சாதனம் அறஒளிர்வு எது= ஞான சாதனமின்றியும் விளக்கம் எதுவோ, இதுவே சுயஒளியாம்= இதுவே சுழுத்திக்குச் சொப்பிரகாசத்துவமாம், சுழுத்தி சொப்பிரகாச மென்பதில் அனுமானம் விவாத விஷயமான சுழுத்தி சொப்பிரகாச மாம், ஞான சாதனங்களின்றியும் விளங்குவதால் சாங்கியர்களுக்குச் சம்மதமான ஆன்மாவைப்போன்றும் பிரபாகரருக்குச் சம்மதமான விருத்தி ஞானமாகிய ஸம்வேதனம் போன்றும் சாக்கியருக்குச் சம்மத மான ஆன்மாவைப் போன்றும் ஆம் [இவ்வாறு பிரளயத்திற்குத் திருஷ்டாந்தமாகக்கூறப்பட்ட சுழுத்திக்கு அத்துவிதத் தன்மையையும் சொப்பிரகாசத் தன்மையையும் சாதித்து அச்சுழுத்தியில் சுகத்தைச் சாதிக்கும் பொருட்டு பூர்வபக்ஷியின் ஆகாங்க்ஷையை எழுப்புகின்றார்] துயில்தனில் ஒருமையொடு நிறை சுயஒளி அணுகுக=சுழுத்தியில் அத்துவிதத்துவமும் பூரண சொப்பிரகாசத் துவமும் பொருந்துக, சுகம் எவணம் அறை=ஆனந்தமெப்படியிருக்கின்றது சொல், [சுக விரோதியாகிய துக்கம் அப்போது இல்லாமையால் சுகமே அப்போது பரிசேஷிக்கிறது எனக் கூறுகின்றார்] கேள் = சாவதானமாகக்

கேட்பாய், நிகழ்துயர் அதுபொழுது இன்றன்றே=பாப வசத்தால் தோன்றுநின்ற துக்கம் சுழுத்தி காலத்தில் இல்லையல்லவா, உறும் அது தனினல்=பொருந்தாநின்ற அக்காரணத்தினல், உனக்கு உயர் சுகம் சேடமதாகும் = நினக்கு மேலான ஆனந்தம் மிஞ்சுகின்றது, என ஓர்=என்று சிந்திப்பாய் எ—று

ஓ, ஏ—அசை.

சுக துக்கங்கள் வெளிச்சமும் இருளும் போல பரஸ்பரம் விரோதமாவதால் துக்கமில்லாதபோது சுகமேயங்கீகரிக்கத்தக்கது என்பது கருத்து. சாக்கியர் புத்தரது முக்கிய சிஷ்யர். 15

(அ—கை)

சுழுத்தியில் துக்கமின்மையில் யாது பிரமாணமென்றிச்சையுண்டாக சுருதியும் அநுபவமுமாமெனக் கூறுகின்றார்.

அந்தனு மாயும னந்தனு மாவ
னவித்தனு மாவனல் வித்தனு மாயே
நொந்துறு ரோகிய ரோகியு மாவ
னுவன்றிடு மாமறை யாவரு மோர்வார்
வெந்துய ரின்மையி னுனே சுகமிலை
விடுகல் லோடினி லிருமைய பா
வந்திகழ் தலினெனி னேவிட மமதாம்
வசன நினுதென வறிவா யால். 16

(ப—ரை) அந்தனுமாயும் = நனவில் குருடனுயினும், அனந்தனும் ஆவன்=கனவில் குருடின்றியவனுவான், நல்வித்தனும் ஆய்=நனவில் நன்ருக பாண முதலியவற்ருல் அடிக்கப்பட்டவனுய், அவித்தனுமாவன் = கனவில் அடிக்கப்படாதவனுவன், நொந்துறுரோகியும் = நனவில் வருத்தாநின்ற வியாதியுள்ளவனுயினும், அரோகியாவன் = கனவில் வியாதியின்றியவனுவன், மாமறை நுவன்றிடும் = என்று பெருமை பொருந்திய சுருதி கூறுகின்றது, யாவரும் ஓர்வார்=இதனை அனைவரும் அறிவார்கள், மாமறை அந்தனுயினும் அனந்தவனுவன் என்பது முதலிய சுருதி தேகாபிமானத்தை முன்னிட்டதான அந்தத் தன்மை முதலிய தோஷங்களை சுழுத்தியில்

நிவர்த்திக்கின்றது. வியாதி முதலியவற்றால் பீடிக்கப்படுகின்ற வனுக்கும் சுழுத்தியில் அத்துக்காநுபவம் இன்றென்னுமிது சருவ ஜனப்பிரசித்தமாமென்பது பொருள். [அற்றேல் யாண்டு துக்காபாவம் ஆண்டு சுகம் என்னும் வியாப்திக்கு மண்ணாங்கட்டி முதலியவவைகளில் வியபிசாரமாமென்று வினவுகின்றான்] வெம்துயர் இன்மையினானே = கொடிய துக்காபாவமாத்திரத்தால், சுகமிலை = சுகத்தைக் கற்பிக்க முடியாது, விடுகல் ஒடினில் = நீக்கப்படுகின்ற சிலைலோஷ்ட முதலிய வற்றில், இருமை அபாவம் நிகழ்தலின் = சுக துக்கங்களின்மையைக் காண்டலின், எனின் = என்று வினவின், [திருஷ்டாந்தமாகிய மண்ணாங் கட்டி முதலியவற்றிற்கும், தாஷ்டாந்தமாகிய சுழுத்திக்கும் விஷமத் தன்மையிருத்தலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] நினது வசனம் விடமது என அறிவாய் = உன்னுடைய திருஷ்டாந்த வாக்கியம் விஷமமாகுமென்று உணர்தி எ—று.

ஆல்—அசை.

நினது என்பது நினது எனச் செய்யுள் விகாரம் பெற்றது. 16

(அ—கை)

திருஷ்டாந்தம் தார்ஷ்டாந்தத்திற்கு விஷமமாமென்பதனையே உபபாதனஞ் செய்கின்றார்.

வதனம் வாடலின் மலர்தலி னயலுயர்
மகிழூ கம்மோ டாதியினே
துதைதயி னியமுத லனவில வாதலிற்
றுயர்முத லியவூ கமதுமெழா
உதிதன தினிதிட ருகினு ளமையா
துறுமத னுனவை யுளபான்மை
யிதவனு பூதியி னானே வேத்திய
மின்மையு மின்றய லதனாலே. 17

(ப—ரை) வதனம் வாடலின் மலர்தலின் = முகத்தின் வாட்டத் தாலும்விகாசத்தாலும், அயல் துயர்மகிழ்ஊகம் = அன்னியரது துக்கமும் சுகமும் முறையே அநுமிக்கத்தக்கது. [உலகிலிவ்வாறு ஆகுக பிரகிருதத் தில் வந்ததென்னையெனிற் கூறுகின்றார்] துதை ஓடு ஆதியின்

தயினிய முதலன இலவாதலின் = நெருங்கிய லோஷ்டம் முதலிய வற்றில் முகவாட்டம் முதலிய லிங்கமில்லாமையால், துயர் முதலிய ஊகமதும் எழா = துக்கம் முதலியவற்றின் விசாரமே சம்பவியாது. ஆகையால் ஆண்டு துக்காபாவமும் நிச்சயிக்கமுடியாதென்பது பொருள். [இப்போது பரனது சுக துக்கங்களினின்றும் தனது சுக துக்கங்களுக்கு விஷமத் தன்மையைத் தெரிவிக்கின்றார்] உதிதனது இனிது இடர் ஊகினுள் அமையாது = வினையால் உண்டாகின்ற தன்னுடைய சுக துக்கங்கள் (அநுபவ சித்தமாவதால்) ஊகிக்கத் தக்கனவன்று அதாவது அநுமானத்தால் அறியப்படுவனவன்று. உறும் அதனுல் = பொருந்தாநின்ற அக்காரணத்தால், அவை உளபான்மை = அச்சுக துக்கங்களின் இருப்பு, இத அநுபூதியினுனே வேத்தியம் = நல்ல பிரத்தியக்ஷத்தினுலேயேயறியப்படுகின்றது. இன்மையும் = சுக துக்கங்களினபாவமும், பிரத்தியக்ஷத்தினுலேயே அறியப்படுகின்றது, அயலதனுன் இன்று = வேருன அநுமானுதியால் அறியப்படுவதன்று எ—று.

பரசுக துக்கங்களின் அநுமானங்களாவன, இவன் துக்கி, வாடிய முகமுடையவனுகையால், நம்மிருவருக்கும் சம்மதமான புருடன் போல, இவன் சுகி, மலர்ந்த முகமுடையவனுகையால், நம்மிருவருக்கும் சம்மதமான புருடன்போல. 17

(அ—கை)

திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

அன்னண மேற்கண் படையினு மிடரின்
  மையனு பூதியி னரிதுரிசின்
றென்னலி னிடையூ றிலதணி சுகமுண்
  டென்றிட லாமத் துயிறனினே
மன்னலில் சுகமெனின் மிகுமிகு முயல்வான்
  மலரணை மிருதுவ தாதியதா
நன்னய சாதன சம்பா தனமதை
  நாடிட லெதனு லுரையாயே. 18

(ப—ரை) அன்னணமேல் = அவ்வாருயின், அதாவது தனது சுகாதிகள் அநுபவத்திற்கு விஷயமாகின்றமையின், கண் படையினும்

இடர் இன்மையது = தனது சுழுத்தியிலும் துக்காபாவம், அநுபூதியின் = அநுபவத்தாலேயே சித்தமாம். [அதனாற்றுனென்னை யெனிற் கூறுகின்றார்] அரிதுரிசு இன்று என்னலின் = சுழுத்தியில் சுக விரோதியாகிய துக்கமில்லாமையால், இடையூறு இலது = நிருவிக்கினமாக, அணிசுகம் உண்டென்றிடலாம் = மேன்மையான ஆனந்தத்தை அங்கீகரிக்கலாம், [படுக்கை முதலிய சுக சாதனத்தின் சம்பாதனம் சுழுத்திச் சுகமின்றி வேறு விதமாகப் பொருந்தாமை யாலும் சுழுத்தியில் சுகமிருக்கிறதென்று அறியப்படுகின்றதெனக் கூறுகின்றார்] அத்துயில்தனின் சுகம் மன்னல் இல் எனின் = அச்சுழுத்தியில் ஆனந்தம் பொருந்துவதில்லையென்று சொல்லின், மிகு மிகு முயல்வால் = மகத்தரப் பிரயாசத்தால், மிருதுமலரணை ஆதியாம் = மிருதுவாகிய புஷ்பப்படுக்கை முதலிய, நன்னயு சாதன சம்பாதனமதை நாடிடல் = மேலான சாதனங்களின் சம்பாதனத்தைக் கருதுதல், எதனால் = எதற்காக, உரையாய் = சொல்லுவாய் எ—று.

அனேகப் பிரகாரமான பணச் செலவு தேக வருத்தம் முதலிய வற்றால் மெதுவான படுக்கை தலையணை கட்டில் முதலிய சுக சாதனம் எக்காரணத்தால் சம்பாதிக்கப்படுகிறது. ஒன்றினாலும் சம்பாதிக்கப் படலாகாது என்பது பொருள். ஈண்டு அருத்தாபத்திப் பிரமாணம் இதுவாம். சாக்கிர காலத்தில் படுக்கை முதலியவற்றின் சம்பாதனம் சுழுத்தியின்கண் சுகமின்றிப் பொருந்தாததாய் சுழுத்திச் சுகத்தைக் கற்பிக்கின்றது சுழுத்திச் சுகத்தின் கற்பனை அருத்தாபத்திப் பிரமை. சுழுத்திச் சுகமின்றி படுக்கை முதலியவற்றைச் சம்பாதித்தல் பொருந்தாது என்பது அருத்தாபத்திப் பிரமாணம். 18

(அ—கை)

கூறிய அருத்தாபத்திப் பிரமாணத்திற்கு வேறு பிரகாரத்தால் சம்பவித்தல் வடிவ தூஷணத்தை அதாவது படுக்கை முதலியவற்றின் சம்பாதனம் சுழுத்திச் சுகத்தின் பொருட்டன்று மற்றோ துக்க நிவிருத்தியின் பொருட்டாமெனச் சங்கிக்கின்றான்.

இதுதுய ரறவே யெனினு மயனுக்
கின்னண மாகவ, ரோகிக்கோ
விதுவினி துறவே யெனமதி யாயிடி
னின்சா தனசன் னியமதனால்

முதம்வயி ஷயிகம தாயுறு மிவண்டுயின்
முனஞ்சய ஞசன மாதிசமே
திதமுற நிறைதுயி றனிேேஞ சுகமெது
திகழதெ வேதுவி லுளதாமே. 19

(ப—ரை) இது = படுக்கை முதலியவற்றைச் சம்பாதித்தல், துயர் அறவே எனின் = துக்க நாசத்தின் பொருட்டேயென்று சொல்லின், [படுக்கை முதலியவற்றைச் சம்பாதித்தலுக்கு துக்க நிவிருத்தியாகிய பயன் நியதம் அன்றெனப் பரிகரிக்கின்றார்] ஆமயனுக்கு இன்னணமாக = நோயாளிக்கு இவ்வாறு இருக்குக, அதாவது வியாதி முதலிய துன்பமிருக்கும்போது அதன் நிவர்த்தியின் பொருட்டு அது ஆகுக, அரோகிக்கு இது இனிது உறவே என மதி = நோயில்லாதவனுக்குப் படுக்கை முதலியவற்றின் சம்பாதனம் (நிவர்த்திக்கத்தகுந்த துக்கமின்மையினால்) சுகத்தின் பொருட்டேயாம் என்று அறிவாய், [அற்றேல் சுழுத்தியிலுள்ள சுகத்திற்குப் படுக்கை முதலிய சாதன ஜன்னியத்துவமிருக்குமேல் ஆன்ம சொரூபத்துவம் பங்கமாகுமென்று வினவுகின்றான்] ஆயிடின் = அவ்வாறாயின், சாதன சன்னியமதனால் = படுக்கை முதலிய சாதனத்தாலுண்டானதால், முதம் வயிஷயிகமதாய் உறும் = சுழுத்தியிலுள்ள ஆனந்தம் நனவிலுள்ள விஷய ஜன்னிய ஆனந்தமாகும். நித்தியமான சொரூப சுகமாகாதெனின், [நித்திரை வருவதற்கு முற்காலத்திலுள்ள சுகத்திற்கு விஷய ஜன்னியத்துவம் சொல்லப்படுகின்றதா அல்லது நித்திரை காலத்தில் உள்ள சுகத்திற்கு சொல்லப்படுகின்றதா என்று விகற்பித்து முதலாவதை அங்கீகரிக்கின்றார்] இவண் துயில்முனம் = சுழுத்தியில் நித்திரைக்கு முன்பு, சயன ஆசனம் ஆதிசம் = படுக்கை ஆசன முதலியவற்றாலுண்டான சுகம், திதம்உற = நீ சொல்லியவாறு உறுதியாய் விஷய ஜன்னியம் ஆகுக, [இரண்டாவது விகற்பத்தை நிராகரிக்கின்றார்] துயில்தனினோ = சுழுத்தியிலோ, எது நிறைசுகம் திகழ் அது = யாதொரு பூரணமான ஆனந்தம் விளங்குகின்றதோ அது, எவ் ஏதுவில் உளதாம் = எக்காரணத்தாலுண்டாகும் எ—று.

சுழுத்தியில் படுக்கை முதலியதின் அநுசந்தானமின்மையால் அதனாலுண்டாகுந் தன்மை அதற்குச் சம்பவியாது என்பது கருத்து.

துயில் தனினோ என்பதில் உள்ள ஓகாரம் பிரிநிலை. 19

(அ—கை)

அற்றேல் நித்திரையில் நித்திய சுகமிருக்குமாளுல் அது விஷய சுகம்போல ஏன் அநுபவிக்கப்படுகிறதில்லை என்று சங்கித்து அநுபவிப்பவன் அப்போது சொரூப சுகத்தில் மூழ்கினபடியால் விஷய சுகம் போன்று அதன் அநுபவமின்று என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

ஆதியிற் சுகவபி முகதீ பினருய
ரணிசுக மதின்மூழ் குவனனவா
ரோதுறு தொழில்களி லலையா வேதனை
யோயா விகலற சுவஸ்தமன
ஞதிவி ஷயசுக மயில்வுறு மான்மா
வபிமுக தீவிருத் தியிற்றன்னின்
பீதினி ழற்பெறுமி வணுமிஃ தயிலா
விடருறுந் திரிபுடி யாலோகோ. 20

(ப—ரை) ஆதியில் = நித்திரைக்குப் பூர்வ காலத்தில், சுக அபிமுக தீ = (சீவன் படுக்கை முதலியவற்றுற்றேன்றிய) ஆனந்தத்தினபிமுகமான புத்தியுடையவனுகின்றான், பினர்உயர் அணி சுகமதில் மூழ்குவன் = அதன்பின் நித்திரை காலத்தில் மேலான சிறந்த சொரூப சுகத்தில் விலீனமாவன், [சுருக்கமாகக் கூறிய பொருளை விஸ்தரிக்கின்றார்] ஓதுறு நனவு ஆர் தொழில்களில் அலையா = சொல்லாநின்ற சாக்கிராவஸ்தையில் செய்யப்படுகின்ற வியாபாரங்களால் களைப்படைந்து, வேதனை ஓயா = படுக்கை முதலியவற்றிற் படுத்து சிரமம் நீங்கி அதன்பின், இகல்அற = வியாபாரத்தாற்றேன்றிய விரோதியாகிய துக்கம் நீங்கவே, சுவஸ்தமனன் ஆகி = வியாகூலமற்ற சித்தமுடையவனுய், விஷய சுகம் அயில்வுறும் = படுக்கை முதலிய விஷயங்களால் உண்டாகும் ஆனந்தத்தை அநுபவிப்பன், [விஷய சுகமும் எப்படிப்பட்டதென்று இச்சையுண்டாக அதன் சொருபத்தைக் காண்பிக்கின்றவராய் பரசுகத்தில் மூழ்குவதற்குக் காரணமாக அவ்விஷய சுகத்தின் அநுபவத்திலும் சிரமத்தைக் காட்டுகின்றார்] ஆன்மா அபிமுக தீ விருத்தியில் = (நனவில் அப்பிராப்த விஷய சம்பாதனம் முதலியவற்றுல் துக்கத்தை அநுபவித்து அதன் நிவிருத்தியின் பொருட்டு படுக்கை முதலியவற்றில் படுத்தவனுக்கு உண்டா

கின்ற) சிதான்மாவை எதிரிட்டதான புத்தி விருத்தியில், தன் இன்பு ஈதின் நிழல்பெறும் = தனது சொரூப வடிவ ஆனந்தத்தின் பிரதிபிம்பம் (கண்ணாடியில் முகம்போல) உண்டாகும், இதுதான் விஷயானந்தம், இவனும் = ஈண்டும் நித்திரைக்குப் பூருவ காலத்தில், இஃது அயிலா = இவ்விஷயானந்தத்தை அநுபவித்து, திரிபுடியால் இடர்உறும் = அநுபவிப்பவன் அநுபவம் அநுபவிக்கப்படும் பொருள் என்னும் மூன்று வடிவங்களின் சேர்க்கை வடிவ திரிபுடியால் களைப்பை அடைவன் எ—று.

ஆகி என்பது எதுகை நோக்கி ஆதி எனத் திரிந்தது.

ஓகோ என்பது அதிசயத்தைக் குறிக்கும் சொல். 20

(அ—கை)

களைப்பை அடைவதனால் என்னையெனிற் கூறுகின்றார்.

அச்சிரம நீக்கிடச் சீவன்சி வத்தினிட
மணுகிடா நிற்ப னதனன்
மெச்சயிக் கியமுரு சுயமவ்வி டத்ததா
மேலான பிரம சுகமா
மச்சுப்தி யின்பினிற் சகுனிசே னங்குமா
ரனுமகா ராச னிவனே
டச்சற்ற மாமறைய னென்னுமிவ ருவமரென
வாதிமறை யோது மன்றே. 21

(ப—ரை) அச்சிரமம் நீக்கிட = திரிபுடியின் தரிசனத்தாலுண்டான அவ் இளைப்பைப் போக்குவதற்கு, சீவன் சிவத்தினிடம் அணுகிடா நிற்பன் = அதே சீவன் பரமானந்த ரூபமான பிரம்மத்தில் சீக்கிரம் செல்லுவன், மெச்சு அதனால் அயிக்கம் உரு = சென்று புகழத் தகுந்த அப்பிரமத்தினோடு தாதான்மியத்தை அடைந்து, சுயம் அவ்விடத்தது ஆம் மேலான பிரம சுகமாம் = தானும் அச்சுழுத்தியிலிருப்பதாகிய உயர்வான பிரம்மானந்தமாவன், சௌமிய அப்போது சத்தோடே பேதத்தை அடைந்தவனாகின்றான் என்று சுருதி கூறுதலின், [கூறிய இந்தச் சுஷுப்தியிலுள்ள ஆனந்தத்தில் சகுனி முதலிய அனேக திருஷ்டாந்தங்கள் சுருதியிற் சொல்லப்பட்டுள்ளன எனக்

கூறுகின்ருர்] அச்சுப்தி இன்பினில்=தூங்கும்போதுள்ள சுகத்தில், சகுனி=இராசாளியும், சேனம்=பருந்தும், குமாரனும்=குழந்தையும், மகாராசன் இவன் ஓடு=சக்கிரவர்த்தியும், அச்சு அற்றமா மறையன்= பயமின்றிய மகா பிராம்மணனும், என்னும் இவர் உவமர் என=ஆகிய இவர்கள் திருஷ்டாந்தமாவர் என்று, ஆதிமறை ஓதும்=முதன்மை யாகிய வேதம் கூறுகின்றது எ—று.

சகுனி முதலிய ஐந்து திருஷ்டாந்தங்களால் சுழுத்தியில் ஆனந்தத்தைப் பிரதி பாதித்தலினுல் அதில் சுகமில்லையென்னும் மதம் நிராகரிக்கப்பட்டது.

அன்று, ஏ—அசை. 21

(அ—கை)

அவற்றுள் முதலில் "அந்தச் சகுனிப்பக்ஷி எப்படிக் கயிற்ருல் கட்டப்பட்டதாய் திசைகள் தோறும் சுழன்று வேறிடத்தில் ஆசிரய்த்தை அடையாமல் பந்தன ஸ்தானத்தையே ஆசிரயிக் கின்றதோ" அப்படியே சௌமிய அந்த மனமும் அதாவது மனதை உபாதியாகவுடைய சீவன் திசைகடோறுஞ் சுழன்று வேறிடத்தில் ஆசிரயத்தை அடையாமல் பிராணனையே அதாவது பிராணஉபலக்ஷித பிரம்மத்தையே ஆசிரயிக்கின்றது. "சௌமிய பிராணனைப் பந்தன மாகவுடையது மனம்" எனத் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தத்தைப் பிரதி பாதிக்கின்ற சாந்தோக்கியச் சுருதி வாக்கியத்தின் பொருளைச் சுருக்க மாகத் தெரிவிக்கின்ருர்.

சகுனிசூத் திரபத்த மாகியா சைகடமிற்
சல்லாப மேபு ரிந்தே
மிகுவிசிர மத்தினையு மேயாது கட்டுற்ற
மென்கரந் தம்பா தியே
புகுமெனச் சீவனது பாதிமன மறமறப்
புகலுபல மேய வேதா
னுகுகனு வொடுநன வுழல்வுரு வினைவீழ
வோயுமா லென்ற றிதியே. 22

(ப—ரை) சகுனி சூத்திர பத்தமாகி=சகுனிப் பக்ஷியானது கை முதலியவற்றில் ஆதாரக் கயிற்ருல் கட்டப்பட்டதாகி, ஆசைகள்

மீது மிகு சல்லாபமே புரிந்து= (ஆகாராதியைக் கிரகிக்கும் பொருட்டு) கிழக்கு முதலிய திக்குகளில் அதிக வியாபாரத்தைச்செய்து, விசிரமத் தினையும் ஏயாது = ஆண்டு இளைப்பாறுதற்கு ஆதாரத்தையும் அடையாமல்,கட்டுற்றமென்கரம்தம்பஆதியே= தன்னைப்பந்தித்துள்ள மெதுவானகைதூண் முதலியவற்றையே,புகுமென= அடைவதுபோல், சீவனது உபாதிமனம்= ஆன்மாவிற்கு உபாதியாயுள்ள அந்தக்கரண மும், புகலும் அறமறப் பலம்மேய= சொல்லாநின்ற தர்மாதர்மங்களின் பயனாகிய சுக துக்கங்களை அநுபவிக்கும் பொருட்டு, உருகனவொடு நனவு உழல் உரு= விடத்தக்க சொப்பன சாக்கிரங்களில் சுழன்று, வினைவீழ= போகத்தைக் கொடுக்கும் கருமம் நாசமாக, ஓயும் என்று அறிதி= (தனது உபாதான அஞ்ஞானத்தில்) விலீனமாகுமென்று உணர்தி எ—று.

மனம் லயமாகும்போது அதனால் வளைபட்ட சீவன் பரமான் மாவே ஆகின்றான் என்பது பொருள்.

தான், ஆல், ஏ—அசைநிலைகள். 22

(அ—கை)

இப்போது சேன திருஷ்டாந்தத்தை விஸ்தரிக்கின்ற "எப்படி இவ்வாகாசத்தில் பருந்தாவது கருடனாவது நாற்புறமும் சுழன்று இளைப்பையடைந்து இரக்கைகளைச் சுருக்கிக்கொண்டு தனது ஆலயத் தின் பொருட்டே அபிமுகமாகின்றதோ அப்படியே இப்புருஷன் இவ்வானந்தத்தின் பொருட்டு ஓடுகின்றான் எந்த இடத்தில் தூங்கிய புருஷன் ஒரு பொருளையும் விரும்புகிறதில்லையோ யாதொரு சொற் பனத்தையும் காண்கின்றதில்லையோ" என்னும் பிரகதாரண்யக வாக்கியத்தின் பொருளைச் சுருக்கிக் கூறுகின்றார்.

சேனமா னதுசயன மேவுறத் தன்கூடு
சேரவா விஞ்சி விரைவாற்
போனவா சீவனும் பிரமசுக மொன்றையே
பூணநித் திரையி லோடும்
மோனமா பாலனும் பாலயின் றதிமிருது
முதவணைய னய்ந கைசெயா
வானரா கத்துவே டமதுவுதி யாமையா
னனந்த வோரி யல்பனே. 23

(ப—ரை) சேனமானது=ஆகாசத்தில் சஞ்சரிக்கின்ற பருந்து எனப் பெயரிய பக்ஷியானது, சயனம் மேவுற=(ககனத்தில் சஞ்சாரத் தாலுண்டானபரிசிரமத்தைப்போக்கும் பொருட்டு) படுப்பதற்காக,தன் கூடுசேர அவாவிஞ்சி=தனது கூட்டிற் பொருந்த ஆசை அதிகரித்து, விரைவால் போனவா = சீக்கிரமாய்ச் செல்வதுபோல், சீவனும் = மனதை உபாதியாகவுடைய சிதாபாசனும், பிரம சுகம் ஒன்றையே பூண = பிரமானந்தம் ஒன்றையே அடைவதற்கு ஆசையுடையவனாய், நித்திரையிலோடும்=தூக்கத்தின் பொருட்டுச் சீக்கிரமாக இருதயா காசத்திற் செல்வன், ["எப்படி குமாரனும் மகாராஜாவும் மகாப் பிராமணனும் ஆனந்தத்தின் அவதியை அடைந்து இருக்கின்றனரோ, அவ்வாறு இவனும் இதனில் சயனிக்கின்றான்" என்று குமாரன் முதலான மூன்று திருஷ்டாந்தங்களைக் காட்டுகின்ற பாலாகிப் பிராமணத்திலுள்ள வாக்கியத்தை ஒன்றரைச் செய்யுளால் வியாக்கி யானஞ் செய்கின்றார்] மோனமாபாலனும்=பேசாத சிறு குழந்தையும், பால் அயின்று= (கழுத்து பரியந்தம்) பாலைக் குடித்து, அதிமிருது அணையனாய்=அத்தியந்தம் மிருதுவான படுக்கையில் கிடப்பவனாய், முதநகைசெயா=சந்தோஷத்தோடு சிரித்துக்கொண்டு, ஆனராகத்து வேடமது உதியாமையான்=(தனது என்பது முதலிய ஞானமின்மை யினால் அவிவேகிகளுக்கு) உண்டாவதான விருப்பு வெறுப்பு இல்லாமை யால், ஓர் ஆனந்த இயல்பனே = ஒப்பற்ற சுக மூர்த்தியாகவே இருக்கின்றான் எ—று.

சேர—அவா சேரவா என அகரம் தொகுத்தல் விகாரம். 23

(இதுவுமது)

சகலபூ பாலமா ராசன்முழு போகங்க
டம்மினாற் சந்த்ருப் தனாய்ப்
புகழுமா னுஷநலா னந்தசீ மாவினைப்
போந்தேக சுகமூர்த் தியாய்
திகழுமா விப்பிரப் பிரமவே தீகிருத
கிருத்தியத் தன்மை வடிவாய்
நிகழுமா வித்தியா னந்தமேற் காட்டையே
நிலவிநின் றுலவு மன்றே. 24

(ப—ரை) சகல பூபால மாராசன் = எல்லாப் பிருதிவியையுங் காக்கும் சக்கிரவர்த்தி, முழு போகங்கள் தம்மினுல் = சருவமானுஷ ஆனந்தங்களாலும், சந்த்ருப்தனுய் = மிக சந்தோஷமுடையவனுய், மானுஷ நல் ஆனந்த சீமாவினைப் போந்து = மனுஷியானந்தத்தின் அவதியை அடைந்து, ஏகசுக மூர்த்தியாய் திகழும் = அத்துவிதீய ஆனந்த வடிவாய் விளங்குவன், சாருவ பௌமன் அசுத்த புத்தியுடைய வனுயினும் சருவ மனுஷானந்தங்களோடு கூடிய தன்மையால் பிரார்த்திக்கத் தகுந்தது இல்லாமையால் இராக முதலியதின்றியவனுய் ஆனந்த மூர்த்தியாகவே இருக்கின்ருன் என்பது பொருள். புகழும் மாவிப்பிரபிரமவேதீ = துதிக்கத் தகுந்த மகாப் பிராம்மணனுன பிரத்தியக்க பின்ன பிரம்ம சாக்ஷாத்காரமுடையவன், கிருத கிருத்தியத் தன்மை வடிவாய் நிகழும் = நான் கிருத கிருத்தியன் என்று இவ்விதம் விளங்குகின்ற, வித்தியானந்தமேல் காட்டையே நிலவி = வித்தியானந் தத்தின் பரமசீமையாகிய சீவன் முத்தியையடைந்து, நின்று உலவும் = பரமானந்த சொருபமாகவே இருந்து சஞ்சரிப்பின், இவர்களைப்போல தூங்கிய புருஷனும் ஆனந்த ருபமாக இருக்கின்ருன் என்பது எஞ்சி நின்றது எ—று.

அன்று, ஏ—அசை. 24

(அ—கை)

அற்றேல் இந்தக் குமாரன் முதலிய மூவரே ஏன் திருஷ்டாந்த மாக்கப்பட்டார்கள். அன்னியர்கள் ஏன் ஆக்கப்படவில்லையென்ரு சங்கித்து மூன்று திருஷ்டாந்தங்களைச் சொன்னதின் தாற்பரியத்தைக் கூறுகின்ருர்.

கூறுமா பாலன்மா ராசன்மா ஞானியிவர்
கூடுமின் புருவ மென்ருத்
தேறலா முலகிலே பிறர்களோ துன்பினர்க
டெளியின்பி னுருவ மிலரா
மாறுமா பாலாதி போலவே யிவன்பரம
வானந்த வேக பரனும்
பேறுகா ரிகைதழுவி னெனு வுள்வெளியும்
பேசிலவ னறியா னரோ. 25

(ப—ரை) கூறுமாபாலன் = சொல்லிய சிறு குழந்தையும், மாராசன் = சக்கிரவர்த்தியும், மாஞானி = பிரம்மவேத்தாவும், இவர் = ஆகிய இம்மூவருக்கும், இன்பு உருவம் கூடும் என்று உலகில் தேறலாம் = ஆனந்த வடிவம் பொருந்துமென்று சகத்தில் நிச்சயிக்க லாம், இம்மூவருக்கும் ஆனந்தம் உலகப் பிரசித்தமாமென்பது பொருள், பிறர்களோ துன்பினர்கள் = மற்றவர்களோ துக்கிகள், தெளி இன்பின் உருவம் இலராம் = அறியத்தக்க ஆனந்த வடிவம் இன்றிய வராம். விவேக சூன்னியரது மத்தியில் பாலன் சுகியாகின்றான், அதிவிவேகிகளின் மத்தியில் சாருவபௌமன் சுகியாகின்றான், அதி விவேகிகளின் மத்தியில் ஆன்ம சாக்ஷாத்காரமுடையவனே சுகி ஆகின்றான். மற்றையரோ எப்போதும் இராகாதியுடைமையால் சுகமின்றியவரே ஆதலால் திருஷ்டாந்தமாக்கப்படவில்லை என்பது பொருள் [இவர்கள் சுகிகளாகுக. பிரகிருதத்தில் என்னை வந்ததுஎன்று சங்கித்து தார்ஷ்டாந்த சுருதி வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்] ஆறும் மாபால ஆதிபோலவே = சாந்தியாயுள்ள சிறு குழந்தை முதலியோர் ஆனந்தராய் இருப்பது போன்றே, இவன் பரமானந்த ஏகபரன் ஆம் = சுழுத்தி அடைந்த இப்புருஷனும் பிரம் மானந்தம் ஒன்றிலேயே தற்பரனும். [பிரம்மானந்தமொன்றன் தற்பரத் தன்மையில் யுத்தியைக் காட்டுகின்ற "எப்படிப் பிரியஸ்திரீயோடு ஆலிங்கனஞ் செய்துகொண்ட புருஷன் வெளிப் பொருளையும் உள் பொருளையும் யாதொன்றையும் அறியானோ அப்படி இப்புருஷனும் பரமான்மாவோடு ஆலிங்கனஞ் செய்துகொண்டவனாய் உள்வெளியா தொன்றையும் அறியான்" என்னும் சோதிப் பிராமணத்திலுள்ளவாக்கி யத்தைப் பொருளால் அநுசரிக்கின்றார்] பேறு காரிகை தழுவினன் எனு = உலகில் செல்வம் நிறைந்த பிரியமுள்ள பெண்ணை ஆலிங்கனஞ் செய்த காமி புருஷன் உள்வெளி விஷய ஞானமின்மையினால் சுக மூர்த்தியாய் இருப்பதுபோல, பேசு இல் அவன் உள்வெளி அறி யான் = வசனித்தலின்றிய தூங்கிய புருஷனும் பாஹ்ய ஆப்பியந்தர விஷயங்களை அறியாதவனாய் பரமான்மாவோடு ஐக்கியத்தையடைந்து ஆனந்த ரூபமாகவேயிருக்கின்றான் எ—று

அரோ—முன்னிலை அசை. 25

(அ—கை)

ஈண்டு திருஷ்டாந்த தார்ஷ்டாந்த வாக்கியத்திலுள்ள உள்வெளி சத்தங்களின் விவக்ஷித்த பொருளைக் கிரமமாகத் தெரிவிக்கின்றார்.

வழியாதி வெளிவிருத் தங்கிரக கிருத்தியம்
வாகா கவுள் போலவே
கழியா நனுவெளிய தாநாடி னின்றநிலே
கனவதாந் தரம தாமா
மழியாத துயிலினிற் றந்தையு மதந்தையென
லாதியிற் சீவமை யருப்
பழியான சமுசாரி நீர்மையில தாற்றுயிலிற்
பரமதே சீவ னிலேயே. 26

(ப—ரை) வழி ஆதி விருத்தம் வெளி = மார்க்கத்தில் செல்லுதல் முதலிய வியாபாரம் வெளி சத்தத்தின் பொருளாம், வாகு ஆக கிரக கிருத்தியம் உள் = ஒழுங்காக உள்ள வீட்டின் வியவகாரம் உள் சத்தத்தின் பொருளாம், போல = அதுபோல, கழியா நனுவெளிய தாம் = மோக்ஷம் வரையும் தீராத சாக்கிரம் வெளி சத்தப் பொருளாம். நாடில் நிலே நின்ற கனவது ஆந்தரம் = நாடியிலிருப்பதாகிய சொப்பனம் உள் சத்தப்பொருளாம், [சீவன் சுழுத்தியில் பிரமானந்த ரூபமாகவேயிருக்கின்றுன் என்பதில் யுத்தியைக் காட்டுகின்ற "ஈண்டு பிதாவும் அபிதாவாகின்றுன்" என்பது முதலிய சுருதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றுர்] அழியாத துயிலினில் = நாசமாகாத சுழுத்தியவஸ்தையில், தந்தையும் அதந்தை எனல் ஆதியில் = பிதாவும் அபிதாவாகின்றுன் என்பது முதலிய இடங்களில், சீவமை அற = சீவத்துவத்தை நீக்குதலால், பழியான சமுசாரி நீர்மை இலதால் = நிந்தைக்கேதுவான கருத்திருத்துவம் முதலிய சமுசாரம் தோற்றுமையால், துயிலில் பரமதே = சுழுத்தியில் பிரம்மமே சேஷிக்கின்றது, சீவன் இலே = சமுசாரியாகிய சீவன் இன்றும் எ—று.

சுழுத்தியவஸ்தையில் கற்பிதமான பிதிருத் தன்மை முதலிய சீவ தருமங்கள் சுருதியினுலேயே நிஷேதிக்கப்பட்டிருத்தலால் சீவத்துவம் தோன்றுதபோது பிரம்மத்துவமே மிஞ்சுகின்றதென்பது பொருள். அற என்பது ஓசையைக் குறித்து அரு என நீண்டது. நேத்திரம் முதலிய இந்திரியங்களால் வியவகரிக்கும் அவஸ்தை ஜாக்கிரமெனப்படும். ஜாக்கிர வாசனையால் நாடியின் மத்தியில் தோற்றுகின்ற பிரபஞ்சம் சொப்பனமெனப்படும். 26

(அ—கை)

அற்றேல் பிதுருத் தன்மை முதலிய அபிமானம் இன்றேனும் சுகித் தன்மை முதலிய சமுசாரம் ஏன் இராது என்று சங்கித்து சமுசாரத்திற்குத் தேகாபிமானமே மூலமாவதால் அது இல்லாதபோது சமுசாரம் இல்லையெனக் கருதுகின்றவராய் அதனைப் பிரதிபாதிக்கின்ற "இருதயத்திலுள்ள எல்லாத் துக்கங்களையும் அப்போது கடந்தவனு கின்றான்" என்னும் பின் வாக்கியத்தைத் தாத்பரியத்தால் கூறுகின்றார்.

ஈனபிது ருத்வவபி மானமுறு மெவனவனு
மேயின்ப துன்ப விடமா
மூனமது கழியினிவ னிகிலவிட ரைக்கடந்
தோனு முறங்கு காலை
யானசக லங்கழியி னிருளினுன் மறையிவனு
மானந்த ரூபம தையே
மோனமுட னடைவனென் றுதர்வ ணீசுருதி
முறைமையுட னோது மாதோ. 27

(ப—ரை) எவன் ஈன பிதுருத்துவ அபிமானம் உறும்=எவன் இழிவாகிய நான் பிதாவென்னும் அபிமானத்தை அடைவனோ, அவனே இன்ப துன்ப இடமாம்=அப்புருஷனே சுக துக்கங்களுக்கு ஆசிரய மாவன், ஊனம் அது கழியின்=இழிவாகிய அவ்வபிமானம் நீங்கின், இவன் நிகில இடரைக் கடந்தோனும்=இப்புருஷன் சகல துக்கங் களையும் தாண்டினவனாகின்றான் [அற்றேல் கூறிய சுருதிகளால் சுழுத்தியில் சுகத்தின் அடைவு முகத்தால் சொல்லப்படுவதாகத் தோற்றவில்லை என்று சங்கித்து அதனைக் கூறுகின்ற கைவல்ய சுருதியின் வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்] உறங்கு காலை= தூங்கும்போது, ஆனசகலங்கழியின் = உண்டான சாக்கிரம் முதலிய பிரபஞ்சம் தனது உபாதானமாயுள்ள பிரகிருதியில் விலீனமாயின், இருளினால் மறையிவனும்=அந்தகார தமோ வடிவ பிரகிருதியினால் மறைக்கப்பட்ட சீவனும், ஆனந்தரூபமதையே = சுகரூபப் பிரமத்தையே, மோனமுடன் அடைவன்=மௌனமாகச் சேருவன், என்று ஆதர்வணீ சுருதி முறைமையுடன் ஓதும்=என்றிந்தப்பிரகாரம் கைவல்ய உபநிடதம் ஒழுங்காகக் கூறுகின்றது எ—று.

மாதோ—முன்னிலை அசை. உம்—அசை. 27

(அ—கை)

கூறிய இந்தப் பொருள் கேவலம் சுருதிப் பிரசித்தமன்று. மற்றோ சர்வானுபவ சித்தமுமாம் எனக் கூறுகின்றார்.

எழுபவன் சுகமிவண் யானனுப வித்தனன்
ஏதுமறி கிற்றில னென
விழுதுயிலி லின்பவறி யாமைகளை யுந்நினைவன்
விளையதூஉ மனுப வத்தாஞ்
செழிகொடுண் டக்காலை யனுபவஞ் சித்வடிவ
சீர்த்தியா லின்பம துதா
னெழிவறத் தானயி லங்கலுறு மதனினு
லுணர்வின்மை யுணர்வ தாமே. 28

(ப—ரை) எழுபவன் = சுழுத்தியினின்றும் எழுந்த புருஷன், இவண் யான் சுகம் அனுபவித்தனன் = சுழுத்தியில் நான் இவ்வளவு காலம் ஆனந்தத்தை அனுபவித்தேன், ஏதும் அறிகிற்றிலன் = ஒன்றையும் அறிந்திலேன், என விழுதுயிலில் இன்ப அறியாமைகளை நினைவன் = என்று சகலமும் ஒடுங்கிய சுழுத்தியிலுள்ள சுக அஞ்ஞானங்களை ஸ்மரிக்கின்றனன், அதனாலும் சுழுத்தியில் சுகமிருக்கிறது என்று அறியப்படுகின்றது. [அற்றேல் நினைப்பு அப்பிரமாண மாவதால் அதன் வலியால் சுகம் எப்படி சித்திக்கும் என்று சங்கித்து அது அப்பிரமாணமாயினும் அதன் மூலமான அனுபவ வலியினாலேயே அதன் சித்தியாமென்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்] விளை அதூம் = உண்டாகின்ற அந்த நினைப்பும், அனுபவத்து ஆம் = அனுபவம் பற்றி வந்ததாம், அனுபவமின்றியுண்டாகாது, ஆதலால், செழிகொடு அனுபவம் = விளங்கா நின்ற சுக அனுபவமும், அக்காலை யுண்டு = சுழுத்தி காலத்தில் இருந்தது என்று அறியப்படுகிறது, [சுழுத்தியில் மனதோடுகூட ஞான கரணங்களனைத்தும் விலீனமான தால் எப்படி அனுபவத்தின் சித்தியுண்டாமென்று சங்கித்துச் சுகத்தின் அனுபவ சாதனம் இல்லையென்று சொல்லப்படுகிறதா அல்லது அஞ்ஞானத்தின் அனுபவ சாதனம் இல்லையென்று சொல்லப்படுகிறதா, முதற்பக்ஷம் பொருந்தாது. சுகம் சொப்பிரகாச சித்து ரூபமாவதால் சுகத்திற்குக் கரணத்தின் அபேக்ஷை இன்மையின், இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. சொப்பிரகாச சுக வலிமையினாலேயே அதனை

மறைக்கும் அஞ்ஞானத்தின் பிரதீதி சித்தித்தலால் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்] சித்வடிவ சீர்த்தியால் = சித்துருபச் சிறப்பினுல், இன்பமது ஒழிவறத் தானுயிலங்கலுறும் = சுகமானது எப்போதும் சுயமாய் விளங்கும், அதனினுல் = சொப்பிரகாச சுகத்தால், உணர்வு இன்மை உணர்வது ஆம் = அஞ்ஞானத்தின் பிரதீதி உண்டாம் எ—று. 28

(அ—கை)

அற்றேல் சுழுத்தி காலத்திலுள்ள சுகம் சொப்பிரகாசமாயினும் மேலான பிரம்ம சுகமாமென்று இருபத்தோருவது செய்யுளிற் கூறிய பிரம்ம ரூபத்துவம் சம்பவியாது பிரமாணமின்மையினுல் என்று சங்கித்து "விஞ்ஞானம் ஆனந்தம்" என்பது முதலிய பிரகதாரண்யக வாக்கியம் இருத்தலால் அங்ஙனம் அன்றெனக் கூறுகின்றார்.

வடிவவிஞ் ஞானவா னந்தமது பிரமமென
வாஜச நேயி கூறி
யிடுமதாற் சொப்பிர காசசுகம் பிரமமே
யிதரமன் றுமிரு ளேதோ
நெடுமதின் விஞ்ஞான மனமயர்க ளிருவரும்
நெகிழ்வரவர் கட்கி லயமாய்ப்
படுமிடந் துயிலதா மதனினு லாங்கதே
பகருமஞ் ஞான மாமே. 29

(ப—ரை) பிரம்மம் விஞ்ஞான ஆனந்த வடிவமது என = பிரம்மம் சித்துருபமும் சுக ரூபமும் ஆம் என்று, வாஜசநேயி கூறியிடும் = வாஜசநேயி ரிஷிகள் கூறுகின்றார்கள், அதால் = அக்காரணத்தினுல், சொப்பிரகாச சுகம் பிரம்மமே = சித்துருப ஆனந்தம் பிரம்மமேயாம், இதரம் அன்றும் = அன்னியமில்லை, [அற்றேல் அனுபவத்திற்கும் ஸ்மரணத்திற்கும் ஓரிடத்திலிருக்குந் தன்மை நியமமாவதால் நான் சுகமாகத் தூங்கினேன் ஒன்றுமறியேன் என்று சுழுத்தியிலுள்ள சுக அஞ்ஞானங்கள் விஞ்ஞானமய சப்த வாச்சிய சீவனுல் ஸ்மரிக்கப்படுகிறபடியால் அவ்விஞ்ஞானமய சீவனுக்கே சுகாதியின் அனுபவமும் சொல்லத்தக்கதாமென்று சங்கித்து அவ்விஞ்ஞானமய சீவனது உபாதி வடிவ அஞ்ஞான காரிய மாகிய அந்தக்கரணம் அஞ்ஞானத்தில் விலீனமானபடியால் அங்ஙனம்

அன்று என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்] நெடும் இருள் எது அதில் = அனாதியான அஞ்ஞானம் எதுவோ அதன்கண், விஞ்ஞான மனமயர்களிருவரும் = பிரமாதாவாகவும் பிரமாணமாகவும் பிரசித்த மான விஞ்ஞானமயனும் மனோமயனும் ஆகிய இருவரும், நெகிழ்வர் = விலீனமாவர், ஆதலால் அவ்வந்தக்கரணத்தை உபாதியாகவுடைய சீவனுக்கு அனுபவமின்றென்பது கருத்து. [அதில் யுத்தியைக் கூறுகின்றார்] அவர்கட்கு இலயமாய்ப்படும் இடம் துயிலது = அவ் விஞ்ஞானமய மனோமயருக்கு இலய ஸ்தானமாயிருப்பது நித்திரை என்று சொல்லப்படும், விஞ்ஞானத்தின் ஒழிவு சுழுத்தியென்று கூறுதலால் [அப்படியானால் நித்திரையின் கண்ணேயே விலயமாவர் என்று சொல்லத்தக்கது அஞ்ஞானத்தில் விலயம் சொல்லத்தக்கதன்று என்று சங்கித்துக் கூறுகின்றார்] அதனினால் = லயஸ்தானமாவதால், அதே அஞ்ஞானம் பகரும் = அந்நித்திரையே அஞ்ஞானம் என்று பெரியோரால் கூறப்படும் எ—று.

இருள் = நானொன்றுமறியேனென்று உண்டாகும் ஸ்மரணத் தின் அனுபபத்தியால் கற்பிக்கப்படுகிற அஞ்ஞானம், விலீனம் = விஞ்ஞானத்துவாதி ஆகாரத்தை விடுத்து காரண ரூபமாக இருத்தல், பிரமாணம் = கரணம். 29

(அ—கை)

அப்படியானால் சுழுத்தியிலுள்ள சுகத்தை அனுபவிக்கும் காலத்தில் இல்லாத விஞ்ஞானமயனுக்குச் சாக்கிரத்தில் அச்சுக அஞ்ஞானங்களின் ஸ்மிருதியெப்படிக் கூடும் என்று சங்கித்து விலயா வஸ்தையிலும் அவனுக்குச் சொரூப நாசமின்மையினால் விலயா வஸ்தையையுபாதியாகவுடைய ஆனந்தமய ரூபத்தால் அநுபவமும் விஞ்ஞான சத்தவார்ச்சிய கனீபாவ வடிவ உபாதியுடைமையால் ஸ்மிருதியும் ஒருவனுக்குப் பொருந்தும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

உருகுறும் நெய்யெனப் பின்னர்விஞ் ஞானமய
வொருகனப் பெற்றி யாமா
லுருகுறு மவத்தையா னந்தமய வொலியினா
லுரைதரா நிற்பர் துயின்முன்
வருகணத் தெம்மதிவி ருத்திசுக பிம்பிதம்
வந்தபின் னந்த பிம்பம்
மருவுமது வேலீன மாகியா னந்தமா
மயனென்று நிற்கு மன்றே. 30

(ப—ரை) உருகும் நெய்யென = அக்கினி சம்பந்தத்தால் இளகிய நெய் (பின்பு வாயு முதலியவற்றின் சம்பந்தத்தால் இறுகுவது) போல, பின்னர் விஞ்ஞானமய ஒருகனபெற்றியாம் = (நனவாதிகளில் போகத்தைக் கொடுக்கும் கருமங்களின் நாசவசத்தால் நித்திரை வடிவாக விலீனமான அந்தக்கரணம்) மீண்டும் போகத்தைக் கொடுக்கும் கரும வசத்தால் விஞ்ஞான வடிவாய் இறுகுகின்றது (ஆதலால் அவ்விஞ்ஞானத்தையுபாதியாகவுடைய ஆன்மாவும் கன வடிவ விஞ்ஞானமயனவன்) உருகுறும் அவத்தை = அவனேயே விலீன வஸ்தை வடிவ உபாதியால், ஆனந்தமய ஒலியினால் உரைதரா நிற்பர் = ஆனந்தமய சத்தத்தால் கூறுவார்கள். (விலீனவஸ்தை வடிவவுபாதியால் ஆனந்தமயனென்று சொல்லப்பட்ட பொருளையே வெளியாக்குகின்றார்] துயில்முன் கணத்து = சுழுத்திக்கு அவ்வியவகித பூருவக்ஷணத்தில், வருஎம்மதி விருத்தி சுக பிம்பிதம் = வாராநின்ற அந்தர் முகமான யாதொரு புத்தி விருத்தி சொரூப சுகத்தின் பிரதி பிம்பத்தோடு கூடியதாகிறதோ, வந்தபின் அந்தப் பிம்பம் மருஉறும் அதுவே = உண்டானதன் பிறகு அந்தப் பிரதிபிம்பத்தோடு கூடிய அந்த விருத்தியே, லீனமாகி ஆனந்தமயன் என்று நிற்கும் = நித்திரை வடிவாக லயத்தை அடைந்து ஆனந்தமயனாயிருக்கும் எ—று.

கனீபாவம் = இறுகிய தன்மை.

ஆல், அன்று, எ—அசை.

விஞ்ஞானம் = அந்தக்கரணம். 30

(அ—கை)

இவ்வாறு ஆனந்தமயனது சொரூபத்தைக் காண்பித்து அவனுக்கே சாக்கிர காலத்தில் விஞ்ஞானமய ரூபத்தால் ஸ்மரிக்குந் தன்மை சித்திக்கும் பொருட்டு சுழுப்தியில் சுகாநுபவத்தை உபபாதனஞ் செய்கின்றார்.

அந்தர் முகனா னந்தமய
னெவன்று னக்காற் பிரமசுக
மந்த வறிவின் பிம்பமுடை
யவித்தை விருத்தி தமாலயிலும்
புந்தி விருத்தி வெளிப்படையாம்
புகன்ற விருத்தி சூக்குமமா
மிந்த வகையே மறைச்சிகரக்
கரையை யியைந்தோ ரியம்புவரால். 31

(ப—ரை) அந்தர் முகன் ஆனந்தமயன் எவன் = உண்முகனான ஆனந்தமயன் எவன் அவன், அக்கால் = சுழுத்தியில், பிரமசுகம் = தனது சொரூப வடிவ சுகத்தை, அறிவின் பிம்பமுடை அவித்தை விருத்திதமால் அயிலும் = சிதாபாசனோடு கூடியவையும் அஞ்ஞானத்தினின்று முற்பன்னமானவையும் சத்துவ பரிணாம விசேஷங்களுமான விருத்திகளால் அநுபவிப்பான் [அப்படியானால் நனவிற்போல அப்போது சுகத்தை அநுபவிக்கின்றேனென்றபிமானம் ஏன் உண்டாவதில்லை என்று சங்கித்து அவித்தையின் விருத்திகள் புத்தி விருத்திகள்போல பஷ்டமாக இல்லாதபடியால் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்] புத்தி விருத்தி வெளிப்படையாம் = அந்தக்கரண விருத்திகள் விஸ்பஷ்டமாம், புகன்ற விருத்தி சூக்குமம் ஆம் = கூறிய அவித்தையின் விருத்திகள் சூக்ஷ்மமங்களாம், [இது எதனாலறியப் படுகின்றதெனிற் கூறுகின்றார்] இந்த வகை = இந்தப் பிரகாரம். மறைசிகரக் கரை இயைந்தோர் இயம்புவர் = வேதாந்த சித்தாந்தத்தின் தீரத்தை அடைந்த பெரியோர்கள் கூறுவார்கள் எ—று.

தான். ஆல்—அசைநிலைகள்.

அந்தர் முகன் = சுகப்பிரதிபிம்பத்தோடு கூடிய அந்தர்முகமான அந்தக்கரண விருத்தியினாலுண்டான வாசனையோடு கூடிய அஞ்ஞானத்தையுபாதியாகவுடையஆனந்தமயன். 31

(அ—கை)

அற்றேல் ஆனந்தமயன் சூக்ஷ்மமான அவித்தையின் விருத்திகளால் பிரம்மானந்தத்தை அநுபவிக்கின்றானென்பதில் யாது பிரமாணம் எனிற் கூறுகின்றார்

மாண்டூக் கியந்தா பநியாதி
மறையி லிஃதோவ திபுடமாம்
தூண்டு மின்ப மயன்போத்தா
துரிசி லின்பம் போக்கியமா
மீண்டு மொன்றாய் துயிற்றிதனு
யெழிற்ப்ரஞ் ஞான கனதையுரு
வேண்டு மின்பமயன் சின்மய
விருத்தி களினு லின்புணுமே. 32

(ப—ரை) தூண்டும்= (தன்னை அடைந்த அதிகாரிகளை நல் வழியில்) செலுத்துகின்ற, மாண்டுக்கியம் தாப நீய ஆதி மறையில்= மாண்டுக்கியம் தாப நீயம் முதலிய சுருதிகளில், ஆனந்தமயன் போக்தா = ஆனந்தமயன் போக்தாவாம், துரிசுஇல் ஆனந்தம் போக்கியம் ஆம்=குற்றமற்ற சுகம் அநுபவிக்கப்படும் பொருளாம், இஃது=என்னும் இவ் அருத்தம், அதிபுடமாம்=மிகவும் ஸ்பஷ்டமாம், [சுழுத்தியிலிருப்பவன் ஒன்ருயுள்ளோன் பிரஞ்ஞான கனன் ஆனந்த மயன் ஆனந்தபுக், சேதோ முகன், என மாண்டுக்கியம் முதலிய சுருதியிலுள்ள வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்ருர்] ஈண்டும் = சுழுத்தியிலும், ஒன்ருய்=ஆன்மாவோடு ஏகமாய், துயில்திதனுய்= சுழுத்தியில் இருப்பவனுய், சுழுத்தி அபிமானியாயென்பது பொருள், எழில்ப்ரஞ்ஞானகனதையுரு=சிறந்த பிரஞ்ஞானக்கட்டியையடைந்து, வேண்டும் இன்பமயன் = விரும்பத்தக்க அதிக ஆனந்தமுடையவனும், சின்மய விருத்திகளினுல் இன்பு உணும்=சிதாபாச சகித விருத்தி களினுல் சொரூப சுகத்தை அநுபவிப்பான் எ—று.

தாப நீயமென்பது இசையைக் குறித்து தாப நியமெனக் குறுகிற்று.

ஏ, ஓ—அசைநிலைகள். 32

(அ—கை)

அந்த வாக்கியத்திலுள்ள ஒன்ருயென்னும் பதத்தின் பொருளைக் கூறுகின்ருர்.

முன்னே யெவன்விஞ் ஞானமய
முதன்மை ரூப மவற்ருெடுறு
மின்னே லயத்தா லொருமையவ
னியைவன் பகுதண் டுலமாப்போன்
முன்னே பிரஞா னங்கண்மதி
மோதும் விருத்தி பின்கனமா
மின்னீர்த் தேயத் திற்கனத்வ
மிமத்தின் றுளிகட் கியைவதுபோல். 33

(ப—ரை) முன்னே=நனவில், எவன்=யாதொரு ஆன்மா, விஞ்ஞானமய முதன்மை ரூபம் அவற்ருெடு உறும்=விஞ்ஞானமயன்

முதலிய வடிவங்களோடு கூடி இருந்தனனே, அவன் = அவ்வான் மாவே, இன்னே லயத்தால்=இப்போது விஞ்ஞானம் மனம் முதலிய உபாதியின் ஒடுக்கத்தால்,பகுதண்டுலமாப்போல் ஒருமை இயைவன் = அனேக அரிசியினுலுண்டான மாவைப்போல, ஏகாகாரத்தை அடைவன், [இப்போது பிரஞ்ஞானகன சப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்] முன்னே=நனவு முதலியவற்றில், பிரஞ்ஞானங்கள் = பிரஞ்ஞான சப்தவாச்சியங்களான, மோதும் மதி விருத்தி=கடாதி களிற் பொருந்தாநின்ற புத்தி விருத்திகள், பின் கனமாம்=சுழுத்திய வஸ்தையில் கடாதி விஷயமில்லாமையால் சித்து ரூபத்தோடு ஒரு வடிவமாகும். [அதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] இன்னீர் தேயத்தில்=குளிர்ந்த ஜலப் பிரதேசத்தில், இமத்தின் துளிகட்கு= பனியின் துளிகளுக்கு, கனத்துவம் இயைவதுபோல்=ஏக வடிவம் உண்டாவதுபோல் எ—று.

விஞ்ஞானமயன் முதலிய என்றதால் "மனோமயன், பிராண மயன், சக்ஷுர்மயன், சுரோத்திரமயன், பிருதிவிமயன், காமமயன், குரோதமயன்" என்பது முதலிய வடிவங்களையுங்கொள்க.

எப்படி ஒரே புருஷன் சமையல் படிப்பித்தல் முதலிய தொழிலின் பேதத்தால் சமயற்காரன் பாடகன் முதலிய பெயர்களால் சொல்லப் படுகின்றானே அதுபோல ஒரே பிரஹ்மாத்மா விஞ்ஞானமய முதலிய வேறு வேறு உபாதிகளோடு தாதாத்மிய அத்தியாசத்தால் அந்தந்த வடிவமுடையதாகச் சொல்லப்படுகின்றது என்பது பொருள். 33

(அ—கை)

இப்போது பிரஞ்ஞானகன சப்தத்தின் பொருளை நிரூபிக்கும் பிரசங்கத்தால் பிராப்தமான ஓர் பொருளைக் கூறுகின்றார்.

அச்சாக் கிதையாங் கனதையினை
யறிவி லோருந் தார்க்கிகரும்
வைச்சார் துக்கா பாவமென
வருத்த விருத்தி யொடுங்கிடலா
னச்சா னந்த மயில்வதி
லஞ்ஞான நிழற்சித் தேமுகமாம்
விச்சா யயின்ற பிரமசுகம்
விடுத்து வினையால் வெளியாமே. 34

(ப—ரை) சாக்கிதையாம் அக்கனதையினை = வேதாந்தங்களில் சாக்ஷித் தன்மையாகக் கூறப்படுகின்ற பிரஞ்ஞானகனத்தை, அறிவிலோருந் தார்க்கிகரும் = (சாஸ்திர சம்ஸ்காரமின்றிய) லௌகிகரும் (சாஸ்திர சம்ஸ்காரத்தோடு கூடிய) வைசேஷிகர் முதலானோரும், துக்கா பாவமென வைச்சார் = துக்கத்தின் அபாவமென்று வைத்தார்கள், கூறினார்கள் என்பது பொருள் [எதனாலிவ்வாறு கூறுகின்றார் எனிற் கூறுகின்றார்] வருத்த விருத்தி ஒடுங்கிடலால் = துக்க விருத்திகளனைத்தும் விலயமாவதால் [முற்கூறிய சுருதி வாக்கியத்திலுள்ள சேதோமுக சப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்] நச்சு ஆனந்தம் அயில்வதில் = விரும்பத்தக்க சுகத்தைப் புசிப்பதில், அஞ்ஞான நிழல் சித்தேமுகமாம் = அஞ்ஞான விருத்தியில் பிரதி பிம்பித்த சைதன்யமே சாதனமாம், அதனையுடையவன் சேதோமுகன் என்பது பொருள். [அற்றேல் சுழுத்தியில் ஆனந்தமயனாகிய சீவனால் பிரம்ம சுகம் அநுபவிக்கப்படுமேல் அதனைவிட்டு வெளியில் துக்கத்திற் கிருப்பிடமான சாக்கிரத்திற்கு ஏன் வருகின்றான் எனிற் கூறுகின்றார்] வினையால் = (புண்ணியபாப கரும பாசத்தால் கட்டப்பட்டிருத்தலால் அக்) கருமத்தால் பிரேரிக்கப்பட்டவனாகி, விச்சாய் அயின்ற பிரமசுகம் விடுத்து = சாக்ஷாத்தாக அநுபவித்த பிரம்மானந்தத்தைப் பரித்தியாகஞ்செய்து, வெளியாம் = சாக்கிரம் முதலியவற்றிற்கு வருவன் எ—று 34

(அ—கை)

கருமத்தால் பிரேரிக்கப்பட்டவனாகிச் சாக்கிரத்தை அடைகின்றானென்பது எதனாலறியப்படுகிறதென்று சங்கித்து "மீண்டும் சன்மாந்தர கரும வசத்தால் அதே சீவன் விழிப்பை அடைகின்றான்" என்னும் கைவல்ய சுருதி வாக்கியத்தால் அறியப்படுகின்றது என்று சுருதி அவ்வாக்கியத்தைப் பொருளாறப் படிக்கின்றவராய் அதன் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

மறுமை தனிலெக் கருமமுள
மற்றிங் கதனன் விழிக்குமென
நறுகை வலிய சாகையினி
னனவு கரும ஜமென்றேதுந்
சிறிது பொர்ழுது விசுவனுக்குச்
சித்தின்பத் தின்வா தனைதொடரும்
வெறிதங் கிருப்பன் சுகியாகி
விடயங்க ழுன்று மெதனனே. 35

(ப—ரை) மறுமைதனில் எக்கருமம் உள = ஜன்மாந்திரத்தில் யாதொரு கருமம் இயற்றப்பெற்றுள்ளதோ, அதனால் இங்கு விழிக்கும் = அக்கருமத்தால் பிரேரிக்கப்பட்டுச் சுழுத்தியினின்றும் சாக்கிரத்தை அடைவான், என நறுகை வலிய சாகையினில் = என்று நல்ல கைவல்லிய உபநிடதத்தில், நனவு கருமஜம் என்று ஓதும் = சாக்கிரம் புண்ணியபாப வினையால் உண்டானது என்று சொல்லப்பட்டுள்ளது, [சுழுத்தியில் பிரம்மானந்தம் அநுபவிக்கப்பட்டது என்பதில் இலிங்கத்தையுங் கூறுகின்றார்] விசுவனுக்கு = சுழுத்தியினின்றும் விழிப்பையடைந்த சீவனுக்கு, சிறிது பொழுது சித்து இன்பத்தின் வாதனை தொடரும் = சொற்பகால பரியந்தம் சுழுத்தியிலனுபவித்த பிரம்மானந்தத்தின் வாசனை தொடர்ந்திருக்கும், [எதனால் வாசனை தொடர்ந்திருப்பது அறியப்படுகிறது எனிற் கூறுகின்றார்] எதனால் = யாதொரு காரணத்தினால், விடயம் கழன்றும் = சாக்கிரத்தின் ஆதியில் விஷயாநுபவமின்றியே, சுகியாகி = ஆனந்தியாகி, வெறிது இருப்பன் = சும்மா இருப்பான், அதனாலறிப்படுகிறதென்பது பொருள் எ—று. அங்கு, மற்று, ஏ—அசைநிலைகள். 35

(அ—கை)

அப்படியாயின் தூஷ்ணீம் அவஸ்தையில் ஏன் நிலைத்திருக்கிறதில்லையெனிற் கூறுகின்றார்.

கரும மேவ விவ்வகில
கலர்பின் னானவிடர்க ளின்ற
னருமை யெணராய்ப் பிரமசுக
மறவே மறந்தார் மெல்லெனவே
நரர்க டமக்குத் துயில்
முன்பினு நாளுநாளுஞ் சிவசுகத்தே
பிரிய மதனா லெம்மதிமான்
பேசும் வாத மிதன்கண்ணே. 36

(ப—ரை) கருமம் ஏவ = வினையானது பிரேரிக்க, இவ் அகில கலர் = இவ்வெல்லாப் பிராணியும், பின் நான இடர்களின்றன் அருமை எணராய் = பின்பு அனேகப் பிரகாரமான துக்கங்களின் மேன்மை (மிகுதி)யை அநுசந்தானஞ் செய்கின்றவராய், மெல்லென

பிரம சுகம் அறவே மறந்தார்=மெள்ள மெள்ள பிரம்மானந்தத்தை அத்தியந்தம் மறந்து விடுகின்றார்கள், [இதனாலும் பிரம்மானந்தத்தில் விவாதஞ் செய்யத்தக்கதன்றெனக் கூறுகின்றார்] நரர்கள் தமக்கு= மனிதர்களுக்கு, நாளும் நாளும்=தினந்தோறும், துயில் முன்பினும்= நித்திரையின் ஆரம்பத்திலும் நித்திரையின் அவசானத்திலும், சிவசுகத்தே பிரியம் = பிரம்மானந்தத்தில் பற்று இருக்கின்றது, அதனால் = அக்காரணத்தினால், இதன்கண் எம்மதிமான் வாதம் பேசும்=இந்தப் பிரம்மானந்தத்தில் எந்தப் புத்திமான் விவாதஞ் செய்வன், ஒருவனும் செய்யானென்பது பொருள் எ—று.

நித்திரைக்கு முன்னும் பின்னும் பிரம்மானந்தத்தில் பற்று இருக்கிறது என்பது எதனால் அறியப்படுகிறது எனின் உத்திரங் கூறுதும் நித்திரைக்கு முன்பு மிருதுவான படுக்கை முதலியவற்றைச் சம்பாதிக்கின்றார்கள். அதன் முடிவிலும் அதனை விடுதற்கு வல்லமை இன்றியவராய்சும்மா இருக்கின்றார்கள் அதனால் சினேகமிருக்கின்றது என உணரப்படுகின்றது. ஏ—அசை. 36

(அ—கை)

வாதி சங்கிக்கின்றான்

சும்மா நிலையிற் பிரமசுகந்
தோன்று மாயி லாலசரும்
இம்மா லவுகி கருமுடிந்தோ
ரீண்டு நூற்றே சிகராலென்
னம்மா பிரம மெனவறிந்தா
லதனன் மெய்யே யவர்முடிந்தோ
ரிம்மா கம்பீ ரப்பிரம
மிறைநூ லில்லாதெ வன்றெரிவோன். 37

(ப—ரை) சும்மா நிலையில் பிரமசுகம் தோன்றுமாயில் = தூஷ்ணீம் அவஸ்தையில் பிரம்மானந்தம் விளங்குமேல், ஆலசரும்= சோம்பலுள்ளவர்களும், இம்மாலவுகிகரும் = இந்தப் பெரிய உலகத்தாரும், முடிந்தோர்=கிருதார்த்தராவர், ஈண்டு நூல் தேசிகரால் என் = இவ்வுலகில் சாஸ்திரத்தாலும் குருவாலும் என்ன பயன், குருசேவை

முதலியவற்ருல் அடையத் தகுந்த பிரம்மானந்த அநுபவம் சும்மா விருத்தல் மாத்திரத்தால் அடையப்படுமேல் குருசேவை முதலிய வாயிலாகச் செய்யப்படும் சிரவண முதலியவை வியர்த்தமாமென்பது பொருள், [இது பிரம்மானந்தமென்று அறியின் கிருதார்த்தத் தன்மை ஆகும். அதுவோ குருசேவை முதலியவையின்றிச் சம்பவியாதெனக் கூறுகின்ருர்] பிரம்மம் என அறிந்தால் = தூஷ்ணீம் அவஸ்தையில் தோன்றும் ஆனந்தம் பிரம்மமென்று உணரில், அதனுல் = அப்படி உணர்வதால், மெய்யே அவர் முடிந்தோர் = உண்மையாகவே அவர்கள் கிருதார்த்தராவார்கள், இம்மாகம்பீர பிரமம் = இந்த அத்தியந்தம் துரவகாகமான பிரம்மத்தை, இறை நூல் இல்லாது எவன் தெரிவோன் = குருசாஸ்ரங்களை விட்டு எவன் எவ்வுபாயத்தால் அறிவான் எ—று

துரவகாகம் = வாக்கிற்கும் மனகிற்கும் அவிஷயம், சர்வஞ்ஞமும், சர்வாந்தரமும், சர்வான்ம ரூபமுமான பிரம்மத்தைக் குருசாஸ்திரங்களை விட்டு எவன் எவ்வுபாயத்தால் அறிவன். ஒருவனும் அறியான் என்பது பொருள்.

எப்படிச் சாமானியமாக அந்நியமான கல்லினைப் போல அநுபவிக்கப்பட்ட சிந்தாமணியினுலும், புதைக்கப்பட்ட பொன்னிதியினுலும் விரும்பிய பொருள் கிடைக்கமாட்டாதோ, ஆனுல் எப்போது "இது சிந்தாமணி" "இது பொன்னிதி" என்று விசேஷமாக அறிகின்ருனே அப்போது விரும்பிய பொருளின் அடைவு உண்டாகிறதோ, அதுபோல சுழுத்தியில் சாமானியமாக விஷய சுகத்தைப் போல அநுபவிக்கப்பட்ட பிரஹ்மானந்தத்தினுல் சகல கர்த்தவ்ய வடிவ அநர்த்தத்தின் நிவிருத்தி வடிவ புருஷார்த்தத்தின் அடைவு உண்டாகிறதில்லை. அனர்த்தத்திற்கு காரணமான அஞ்ஞானமிருத்தலால் ஆனுல் எப்போது "இச்சுழுத்தியிலுள்ள ஆனந்தம் நித்தியமும் நிரதிசயமுமாகிய எனது நிஜவடிவப் பிரஹ்மமாம்" என்று விசேஷமாக அறிகின்ருனே, அப்பொழுது அஞ்ஞானத்தின் நிவிருத்தி வாயிலாகக் கர்த்தவ்விய வடிவ அநர்த்த நிவிருத்தியாகிய புருஷார்த்தத்தின் அடைவு உண்டாகின்றது என்பது தாற்பரியம்.

அம்மா என்பது அசைச்சொல்.

(அ—கை)

உனது வாக்கியத்தினுலேயே பிரம்மானந்தத்தை அறிகிற எனக்கு கிருதார்த்தத் தன்மை ஏன் அடையப்படவில்லை என்னும் ஆசங்கையை அனுவதித்தல் வாயிலாக பரிகாசத்தோடு உத்தரங் கூறுகின்ருர்.

யானுன் னுரையா லின்றுணர்ந்தேன்
யாதாற் பேறின் றெற்கொருவன்
ருனு முனைநேர் மதிமானி
சரிதங் கேட்டி யிவ்வுழிநீ
தேனல் வேத நாலறியிற்
றேய மெனக்கேட் டுரைதருவான்
மான மறைநா லென்றறிவன்
மாழைத் தனமெற் கீகுதியே. 38

(ப—ரை) யான் உன் உரையால் இன்று உணர்ந்தேன்= நான் உன்னுடைய வாக்கியத்தால் இப்போது பிரம்மானந்தத்தை அறிந்தேன், யாதால் எற்குபேறு இன்று=எக்காரணத்தினுல் எனக்குக் கிருதார்த்தத் தன்மை உண்டாகவில்லையெனின், இவ்வுழி நீ= இவ்விஷயத்தில் நீ, உனைநேர் மதிமானி ஒருவன் சரிதம் கேட்டி= உன்னைப்போன்ற புத்திசாலியென்று கருதுகின்ற ஒருவனது விருத்தாந்தத்தைக் கேட்பாய், [அவ்விருத்தாந்தத்தை உணர்த்துகின்ருர்] தேன் நல் வேதம் நாலறியின்=தேன்போன்று இனிமையான மறை நான்கினையும் நன்கு உணரின், தேயம் எனக் கேட்டு=அவனுக்கு இப்பொருள் கொடுக்கத்தக்கது என்று இப்படிப்பட்ட வாக்கியத்தை ஒருவன் கேட்டு, மறை நாலென்று அறிவன்=வேதம் நான்கு என்று உனது வாக்கியத்தால் உணருவேன் ஆதலால், எற்கு மாழைத்தனம் ஈகுதி=எனக்கு பொன் முதலிய பொருளைக் கொடுப்பாய், என்று, உரை தருவான்மான=சொல்லுபவன் போல நீயுமாம் எ—று.

தான், உம், ஏ—அசைநிலைகள். மாழை=பொன். 38

(அ—கை)

அற்றேல் வேதங்கள் நான்கு என்று எவன் அறிவனே அவன்

வேதத்திலுள்ள எண்ணிக்கையையே அறிகின்றான். வேதங்களின் சொருபத்தை அறிகின்றிலன் என்று வினவுகின்றான்.

எண்ணே யிவனிங் கறிந்தவனு
மெல்லா வேத மன்றெனினே
திண்ணார் பிரம மாயின்முழுத்
தெரிந்தா யில்லை நீயகண்ட
தண்ணா ரேக ரசசுகமாந்
தமதற் கார்ய வர்ச்சிதத்தி
லெண்ணு சேடா சேடமையி
னெங்கே வார்த்தை யவசரமே. 39

(ப—ரை) இவன் இங்கு எண்ணே அறிந்தவனும்=திருஷ்டாந்தமாகக் கூறப்பட்ட புருஷன் வேதத்தில் சங்கியையே உணர்ந்தவனும், எல்லா வேதம் அன்று=மறை அனைத்தையும் அறிந்தவன் அன்று, எனின்=என்று சொல்லின், [சமத்தன்மையால் சமாதானம் செய்கின்றார்] ஆயின் = அவ்வாறாயின், நீதிண்ணார் பிரமம் முழுத் தெரிந்தாயில்லை=(நான்கு வேதத்தையும் அறிந்தேன் என்று நினைப்பவன் போன்று) நீயும் பலம் பொருந்திய பரமான்மாவை சம்பூரணமாக அறிந்தாயில்லை, [எண்ணிக்கையினும் வேறாக வேதத்தின் சொருப விசேஷம் இருப்பதுபோல சுவகதம் முதலிய பேதமின்றிய ஆனந்த ரூபப் பிரமத்தில் அறியப்படாத அம்ஸம் இல்லாதபடியால் முழுத்தெரிந்தாய் இல்லையென்று நிந்தித்தல் பொருந்தாது என்று வினவுகின்றான்] அகண்ட தண் ஆர் ஏகரச சுகமாம்=அகண்டமாயும் சீதளமாயும் ஏகரசமாயும் ஆனந்தமாயும் உள்ள, தமதற்காரிய வர்ச்சிதத்தில்=மாயையும் மாயாகாரியமும் அற்ற பிரமத்தில்,எண்ணு சேட அசேடமையின் வார்த்தை = உத்தேசித்த குறைவு நிறைவுகளின் சொல்லிற்கு, அவசரம் எங்கே = அவகாசம் ஏது, இன்றாமென்பது பொருள் எ—று. ஏ, ஓ—அசைநிலைகள். 39

(அ—கை)

பிரம்ம ஞானத்திலும் அசம்பூரணத்தன்மை முதலியவற்றைக் காண்பிப்பதற்காக பிரமத்தை அறிகிறேன் என்று கூறுபவனை சித்தாந்தி விகற்பித்து வினவுகின்றார்.

அரவங் களேயோ வறைகின்ரு
யலதப் பொருளுங் காணுதியோ
வரவ பாடத் தெஞ்சுநினக்
கருத்த போத வருச்சிதமே
மருவிற் பொருளே யிலக்கணத்தான்
மறித்து மிஞ்சும் புலப்படலே
வருநற் கிருதார்த் தத்வமதி
வரையிற் குருவை யுபாசிபோ. 40

(ப—ரை) அரவங்களேயோ அறைகின்ருய்=அகண்ட ஏகரசம் அத்துவிதீயம் சச்சிதானந்த ரூபம் என்பது முதலிய சத்தங்களேயே படிக்கின்ருயா, அலது அப்பொருளும் காணுதியோ = அல்லது அச்சத்தங்களின் சுவக்ஷதம் முதலிய பேத சூன்னியத்துவாதி அர்த்தத்தையும் அறிகின்றனையா. [முதற்பக்ஷத்தில் பிரமஞானத்தின் முற்றுப் பெருமையைக் காண்பிக்கின்ருர்] அரவ பாடத்து = சத்தங்களேப் படிந்தலில், நினக்கு அருத்தபோத அருச்சிதம் எஞ்சும்=உனக்குப் பொருளறிவு சம்பாதிக்கத் தக்கதாகச் சேஷிக்கின்றது. [இரண்டாவது பக்ஷத்திலும் அந்த முற்றுப்பெருமையைக் காண்பிக்கின்ருர்] இலக்கணத்தால் பொருளே மருவின்=வியாகரணம் முதலியவற்ருல் வஸ்துவைப் பரோக்ஷமாக அறியின், மறித்தும் புலப்படல் மிஞ்சும்= மீண்டும் (சமுசயாதிகளே நீக்கும் நிமித்தம்) அபரோக்ஷ ஞானம் எஞ்சுகின்றது, [அப்படியாயின் ஞானம் எப்போது சம்பூரணமாம் என்ரு சங்கித்து அதன் அவதியைக் கூறுகின்ருர்] நல்கிருதார்த்தத்வ மதிவரும் வரையில் குருவை உபாசி = செய்யத்தக்கன அனேத்தும் செய்துமுடிந்தது என்னும் நல்ல ஞானம் உண்டாகும் பரியந்தமும் ஆசாரியரைச் சேவிப்பாய் எ—று.

எப்போது கிருதார்த்தத்துவ புத்தி உதயமாகின்றதோ அப்போது ஞானம் பூரணமாயிற்று என அறியத்தக்கது என்பது பொருள். போ, ஏ, ஏ—அசைகள்.

வரு என்பது பிரித்துக் கூட்டப்பட்டது. 40

(அ—கை)

இவ்வாறு பிரசங்கத்தால் வந்ததை முடித்துப் பிரகிருதத்தையே அநுசரிக்கின்ருர்.

இதுநின்றுற வெவணெவண் விடயமிலா
    தின்பெய்துறு மவணெவ ணும்பிரம
மதுவின்பினின் வாதனே யேயுணர்க
    மருவில்விட யங்களி னும்விழைவா
மதுநின்றுறி லுண்முக மானமனத்
    தானந்தநி ழல்பதி யும்பிரம
முதுவின்பமும் வாதனே சாயையென
    மூன்றன்றியி லீண்டொரு வின்பிலேயே. 41

(ப—ரை) இது நின்றுற=கூறிய விஷயம் நிற்குக, எவண் எவண்=தூஷ்ணீம் ஸ்திதி முதலிய எவ்வெக்காலத்தில், விடயம் இலாது இன்பு எய்துறும்=விஷயாநுபவமின்றியே சுகம் உண்டாகிறதோ, அவண் எவணும்=அவ்வெல்லாக் காலத்திலும், பிரமமது இன்பினின் வாதனேயே உணர்க=பிரம்மானந்தத்தின் வாசனேயாம் என்றறிக. [இவ்வாறு பிரம்மானந்த வாசனநந்தங்களேக் காண்பித்து இப்போது ஆனந்தத்தின் மூவிதத்தை நியமனம் செய்தற்பொருட்டு ஆன்மாபிமுகதீவிருத்தியில் என்று இருபதாவது செய்யுளில் கூறிய விஷயானந்தத்தையே மீண்டும் அநுவதிக்கின்ருர்] விடயங்கள் மருவில்=புண்ணியத்தால் புஷ்பமாலே முதலிய விஷயங்கள் அடையப் பட்டபோது, விழைவது நின்றுறில் = ஆசை நிவர்த்தியாகுங்கால், உண்முகமான மனத்து = அந்தர்முக மனேவிருத்தியில், ஆனந்த நிழல் பதியும்=தனது சொருப சுகத்தின் பிரதிபிம்பம் உண்டாம் இதுவே விஷயானந்தமாம் என்பது பொருள். [திரண்ட பொருளேக் கூறுகின்ருர்] பிரம இன்பமும் முதுவாதனே சாயை என=சொப்பிர காசமாக சுழுத்தியில் விளங்குகிற பிரமானந்தமும் தூஷ்ணீம் ஸ்திதியில் விஷயாநுபவமின்றியே விளங்குகின்ற, பழமையான வாசனநந்தமும் இஷ்ட விஷயத்தின் அடைவால் அந்தர்முக மனதில் பிரதிபிம்பித்த விஷயானந்தமுமாகிய, மூன்று அன்றியில்=இம்மூன்றை அல்லாமல், ஈண்டு ஒரு இன்புஇலே=இவ்வுலகில் யாதொரு ஆனந்தமும் இன்ரும் எ—று. இல், நும்—சாரியைகள்.

தூஷ்ணீம் அவஸ்தையில் உள்ள சுகம் விஷயஜன்னியமின்மையாலும் சாமான்னிய அகங்காரத்தால் மறைக்கப்பட்டமையாலும் வாஸநந்தமாம்.

மாலை முதலிய விஷயங்களினடைவால் அவ்வவ்விஷயங்களின் இச்சை சாந்தியாகிறது. அப்போது மனது அந்தர் முகமாகின்றது. அதில் ஆன்மானந்தம் பிரதிபிம்பிக்கிறது. இதுவே விஷயானந்தமாம். அற்றேல் ஆறாவது செய்யுளில் சுகவகை மூன்று என்பதாதியால் பிரம்மானந்தம் வித்தியானந்தம் விஷயானந்தம் என மூவித ஆனந்தம் கூறப்பட்டது. இப்போதோ இச்செய்யுளில் பிரமமுது இன்பமும் என்பதாதியால் பிரம்மானந்தம் வாசனாநந்தம் பிரதிபிம்ப ஆனந்தமாகிய விஷயானந்தம் என அதின் விலக்ஷணமாக மூவித ஆனந்தங் கூறப்படுகிறது. ஆதலால் முன்பின் விரோதமாம். மற்றும் 45-வது செய்யுளில் அவனுது மற்போதினும் என்பதாதியால் முக்கியானந்தமும் முன்சொல்லிய இரண்டு பிரகாரத்தினும் வேறாகக் கூறப்படுகின்றது. அப்படியே ஆன்மானந்தமெனப் பெயரிய இரண்டாவது அத்தியாயத்தில் 2-வது செய்யுளில் மந்த அறிவுறு ஜிஞ்ஞாசுவையோ, என்பதாதியால் ஆன்மானந்தமும் அதனின் வேறாகச் சொல்லப்படுகிறது. அத்வைதானந்தமெனப் பெயரிய மூன்றாவது அத்தியாயத்தில் முதற்செய்யுளில் திகழுமுன் என்பதாதியால் யோகானந்தமும் ஒன்று தோற்றுகிறது. இவ்வத்தியாயத்தின் அந்தத்தில் திருதியோத்தியாயம் என்பதாதியால் அத்துவிதானந்தத்தையும் அறிகின்றோம். ஆகையால் மூன்றன்றியில் ஈண்டொரு இன்பிலையே என்று சொல்லுதல் விரோதமாமெனின், அப்படியன்று வித்தியானந்தம், விஷயானந்தம் போல அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷமாவதால் விஷயானந்தத்தில் அந்தர்ப்பாவத்தை "விஷயானந்தம் போன்று வித்தியானந்தமும் புத்தி விருத்தி வடிவமாம்" என்னுமிடத்து புத்தி விருத்தி வடிவத்தைச் சொல்லுதலால் விவக்ஷித்தபடியாலும், நிசானந்த முக்கியானந்த ஆன்மானந்த யோகானந்தங்களோ பிரம்மானந்தத்தினும் வேறு ஆகாமையாலும் என்க.

அஃதாமாறு:— நீள் யோகினில் என்பதாதியால் 45-வது செய்யுளில் யோக வடிவ உபாயத்தால் அடையத்தக்கதாயிருத்தலின் யோகானந்தமாக விவக்ஷிக்கப்பட்ட நிஜானந்தத்தையே துவிதமொளிராது என்பதாதியால் 46-வது செய்யுளில் பிரம்மானந்தமாகக் கூறினபடியால் நிசானந்தம் பிரம்மானந்தத்தினும் வேறன்று, அப்படியே முக்கியானந்தமும் பிரம்மானந்தமே.

அஃதாமாறு:- அவணம் பெற என்பதாதி 42-வது செய்யுளில் ஜன்னியத் தன்மையால் அமுக்கியமாயுள்ள விஷயானந்தவாசனானந்

தங்களுக்கு ஜனகமாகச்சொல்லப்பட்ட பிரம்மானந்தத்தையே அவனேதுமலென்று கூறிய 54-வது செய்யுளில் சுகவாதனேயவித்தே கவனதற்பரன் முக்கிய சுகமதே கருதுமென்று முக்கியானந்தமாகக் கூறினபடியால் முக்கியானந்தம் பிரம்மானந்தத்தைவிட வேறன்று. ஆன்மானந்த அத்துவிதானந்தங்களுக்கு பிரம்மானந்தத் தன்மையோ, திகழுமுன்யோகவானந்தமென்பதாதியால் 3-வது அத்தியாயத்தின் ஆதியில் முதலாவது அத்தியாயத்தில் யோகானந்தமாக விவக்ஷிக்கப் பட்ட பிரம்மானந்தத்தையே யோகானந்த சத்தத்தால் அநுவதித்தல் வாயிலாக ஆன்மானந்தமாகக்கூறி துவைதத்தோடு கூடிய இதற்கு பிரம்மத்தன்மை எப்படியென்னும் சங்கைவாயிலாக ஆகாசாதி சரீராந்தம் என்பதாதியால் அத்துவிதத்திற்கு பிரம்மத்தன்மை பிரதி பாதித்தலால் அறியத்தக்கது. ஆகையால் பிரம இன்பம் வாதனே சாயை எனச்சொல்லப்பட்ட மூவித ஆனந்தமே சித்தித்தது. அப்படி ஆனல் "வாசனனந்தத்தினும் பிரம்மானந்தத்தினும் வேருக நிசானந் தத்தை யோகி அறிகிருன்" என்னுமிடத்து நிசானந்தத்தைபிரமானந்த வாசனனந்தங்களினும் வேருகச்சொல்லுதல் பொருந்தாது என்னற்க ஒரே பிரம்மானந்தத்திற்கே சகத்காரணத் தன்மையாகிய உபாதியின் சேர்க்கை இன்மைகளின் பேதத்தால் பேதத்தைச் சொல்லுதல் பொருந்துமாதலின் அதாவது பிரம்மானந்தத்தை நிரூபிக்கும் அவஸரத்தில் ஆனந்தத்திலிருந்தே இப்பூதங்களுண்டாகின்றன என்பதாதியால் சகத்காரணத்தன்மையைக் கூறுதலால் பிரம்மானந் தத்திற்குமாயையோடு கூடிய தன்மைஅறியப்படுகின்றது மாயையற்ற தற்குச்சகத் காரணத்தன்மை பொருந்தாதாகலின், நிசானந்தத்தை நிரூபிக்குங்காலத்திலும் நீள்யோகினில் என்பதாதியால் காரணத் தோடுகூட அகங்காரத்தின் ஒடுக்கத்தைப் பிரதிபாதித்தலால் நிசானந்தம் நிர்மாயமாம் என்பது சித்தித்தது.

நிர்மாயம் = மாயையற்றது.

மாயையோடுகூடிய பிரமம் யோகானந்தமாம். மாயை அகங்காரம் முதலியவையற்ற பிரமம் நிசானந்தமாம் என்பது பொருள். 41

(அ—கை)

இவ்வத்தியாயத்தில் பிரம்மானந்தத்தின் விசாரமே ஆரம்பிக்கப் பட்டபடியால் அன்னியமான வாசனனந்த விஷயானந்தங்களென்னும்

இரண்டானந்தங்களைப் பிரதிபாதித்தல் பிரகிருதத்தில் அசங்கதமாம் என்றுசங்கித்து அவ்விரண்டானந்தங்களும் பிரம்மானந்தத்தினின்றும் ஜன்னியமாயிருத்தலின் பிரம்மானந்தத்தின் ஞானத்தில் உபயோகியா மாதலின் அவற்றினைப் பிரதிபாதித்தல் பிரகிருதத்தில் அசங்கதமன்று என்னும்மபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.

அவணம்பெற விடயமும் வாதனையென்
ஞனந்த மெழுப்புசு யம்பிரபை
சிவவின்பது மறைமதி புலனுறலாற்
சேர்கண்படை காலை சுவப்பிரகா
சவனந்தசி தான்மக பிரமசுகஞ்
சாதிப்புற வேறுள போதுறல்கே
ளெவனின்பம யன்றுயின் மதிமயனு
யிடம்வேறுற நனவுக ளுமனுமே. 42

(ப—ரை) அவணம் பெற = இந்தப்பிரகாரம் ஆனந்தம் மூன்றாகும் போது, விடயமும் வாதனை என் ஆனந்தமும் எழுப்பு= விஷயானந்தத்தையும் வாசனானந்தத்தையும் உண்டாக்குகின்ற, சுயம்பிரபை இன்புஅது= யாதொரு சொப்பிரகாச ஆனந்தம் உண்டோ அது, சிவஇன்பு = பிரம்மானந்தமாமென அறிக, [முன் நடந்ததை அநுவதித்தல் வாயிலாகப் பின்னுள்ள கிரந்தத்தை ஆரம்பிக்கின்றார்] மறைமதி புலன்உறலால்= சுருதி யுக்தி அனுபவங்களால், கண்படை சேர்காலை= சுழுத்திகாலத்தில், சுவப்பிரகாச அனந்த சிதான்மக பிரம சுகம்= தானே விளங்குவதாய் அபரிச்சின்னமாய் சித்ருபமாய் உள்ள பிரமானந்தம், சாதிப்புஉற= சாதிக்கப்பட்டபோது, வேறுள போது = சாக்கிராவஸ்தையிலும், உறல்கேள் = பொருந்துவதைக் கேட்பாய், [பிரதிக்ஞை செய்த பிரமானந்தத்தை அறியும் உபாயத்தையே தெரிவிப்பதற்காக அதன் உபோத்காதமாக சீவனுக்கு இரண்டவஸ்தையின் பிராப்தியை நிமித்தத்தோடு கூடத்தெரிவிக்கின்றார்] துயில் எவன் இன்பமயன்= சுழுத்தி காலத்தில் விலீன அவஸ்தையையுடைய யாதொருஆனந்த மயன் உண்டோ அவன், மதிமயனாய்= புத்தியாகிய உபாதியால் விஞ்ஞானமயத் தன்மையை அடைந்து, இடம் வேறுற = சொல்லப்போகிற ஸ்தான விசேஷ சம்பந்தத்தால், நனவுகனுமனும்= சாக்கிரத்தையாவது சொப்பனத்தையாவது கருமவசத்தால் அடைகின்றான் எ—று. ஏ—அசை.

சுருதியாவது "சுழுத்தி காலத்தில் சகலமும் விலீனமாகும் போது தமசினுல் மறைக்கப்பட்டவனுய்ச் சுகரூபத்தை அடைகின்ருன் என்பது முதலியது.

யுக்தியாவது முற்கூறிய சுகமாகத் தூங்கினேன் என்பது முதலிய ஸ்மிருதி வேறுவிதமாகப் பொருந்தாமையாகிய அர்த்தாபத்திப் பிரமாணம் முதலியது

அநுபவமாவது அர்த்தாபத்திப் பிரமாணத்தால் கற்பிக்கப் பட்ட சுழுத்தி காலத்திலுள்ள அனுபவமாம். பிரம்மானந்தத்தை அறியும் உபாயம் சொல்லப்படும். அதனைக்கேள் என்பார் உறல் கேள் என்ருர்.

உம் பின்னரும் கூட்டப்பட்டது. 42

(அ—கை)

இப்போது நனவு முதலிய அவஸ்தைகளுக்கு அனுகூலமாய் உள்ள இடங்களைத் தெரிவிக்கின்ருர்

விழிசாகர ணங்கள னிற்கனவாம்
விரையுண்மரை கண்படை மேனியெலா
மெழின்மேவுறு சேதன ஞநனவோ
னெரியாரய மென்னமெ யொற்றுமைசேர்ந்
தெழலாலக மானுட னென்றுதுணிந்
தேநின்றுறு நான்சுகி துக்கியெனு
விழுபேக்ஷகன் முன்னிலை யேயுமிவன்
வினையாலுறு மின்பிடர் வேறியல்பால். 43

(ப—ரை) விழி சாகரணம் = நேத்திரஸ்தானத்தில் நனவு உண்டாகிறது, களனில் கனவாம் = கண்டஸ்தானத்தில் சொப்பன முண்டாகின்றது, விரைஉள்மரை கண்படை = வாசனையோடு கூடிய இருதயகமலத்தில் சுழுத்தி உண்டாகிறது, [நேத்திரசப்தம் முழுத் தேகத்தின் உபலக்ஷணபரமாம் என்று கருதி விழிசாகரணம் என்னும் அம்சத்தின்பொருளைக்கூறுகின்ருர்] சேதனன் = சீவன், மேனியெலாம் எழில்மேவுறு = தேகம் அனைத்தையும் நன்ருக வியாபித்து, நனவோன் ஆம் = சாக்கிராவஸ்தையுடையவனுவான் [தேகத்தை வியாபித்து

என்பதனுல் விவக்ஷிக்கப்பட்ட பொருளைத் திருஷ்டாந்தத்தைக் காண்பித்தலால் வெளியாக்குகின்ருர்] எரியார் அயம்என்ன = தத்தாய பிண்டம் போன்று, மெய் ஒற்றுமை சேர்ந்து எழலால் = (மனுஷியத் தன்மை முதலிய சாதியோடு கூடிய) தேக தாதாத்மியத்தை அடைந்து இருத்தலால், அகம்மானுடன் என்று துணிந்து நின்றுறும் = நான் மனுஷியனென்று சமுசயம்முதலியவையின்றி நிச்சயித்து நிற்கின்ருன் [தேகதாதான்மியத்தைக் காரணமாகவுடைய வேறு அவஸ்தைகளைக் காண்பிக்கின்ருர்] இவன் = இந்தச் சீவனுனவன், நான் சுகிதுக்கிவிழு உபேக்ஷகன் எனு = நான்சுகமுடையவன் நான்துக்கமுடையவன் நான் இரண்டும் இல்லாத உதாசீனன் என்று, முன்னிலை ஏயும் = மூன்று அவஸ்தையை அடைவன், [அவற்றுள் சுகித்துவ துக்கித்துவங்கள் கருமசன்னியமாம் என்று அறியும் பொருட்டு விசேஷணமாயுள்ள சுக துக்கங்களுக்குக்கருமம் காரணமாம் என்று அறிவிக்கின்ருர்] வினையால் இன்பு இடர் உறும் = புண்ணியபாவ கருமவசத்தால் சுகதுக்கங்கள் உண்டாகும், வேறு = உதாசீன அவஸ்தை, இயல்பால் = சுபாவத்தால் உண்டாகும், கருமசன்னியமன்று எ—று.

நான்மனுஷியன் என்பது முதலியவை தேகதாதான்மியத்தில் பிரமாணமாம், ஆம் பிரித்துக்கூட்டப்பட்டது. முற்றுமற்ருேரோவழி என்னுஞ்சூத்திரத்தால் விழு உபேக்ஷகன் விழுபேக்ஷகன் என்று புணர்ந்தது. 43

(அ—கை)

அச்சுகதுக்கங்களை நிமித்தபேதத்தால் இரண்டுவிதமாகக் கூறுகின்ருர்.

பகிர்போக உளத்தொழி லாலிடரின்
பதிரண்டு வகைப்படு மானடுவே
யுகும்வீணிலை யாவரு மிப்பொழுதெற்
கொருசிந்தையு மின்றினி தாயுளனென்
பகராநொது மற்றனி நிசசுகமாம்
பானஞ்சொலும் யானுள னென்பொதுவா
மகமான்மறை தலினிது நிசசுகமா
மலமுக்கிய மிஃததன் வாதனையே. 44

(ப—ரை) பகிர்போக உணத்தொழிலால்=வெளிப்பொருளின் அநுபவத்தாலும் மனோராச்சியத்தாலும், இடர்இன்பு இரண்டு வகைப் படும்=சுகதுக்கங்கங்கள் இரண்டு பிரகாரமாம், [அப்படியானால் உதா சீனத்தன்மை எப்போதுண்டாமெனிற் கூறுகின்றார்] நடுவேவீண்நிலை உகும் = சுகதுக்கங்களினிடையில் தூஷ்ணீம் அவஸ்தையுண்டாகும் [எதன் பொருட்டு நனவு முதலியவை 'சொல்லப்பட்டனவோ அதனை இப்போது தெரிவிக்கின்றார்] யாவரும்=சகலஜனங்களும், இப்பொழுது எற்கு ஒரு சிந்தையுமின்று=இப்போது எனக்குவீடு முதலியவைகளைக் குறித்து யாதொரு கவலையுமில்லை, இனிதாய்உளன் என்பகர் = ஆதலின் சுகமாக இருக்கின்றேனென்று சொல்கின்றவராய், நொதுமல்தனி நிசசுகபானஞ்சொலும்=உதாசீனகாலத்தில் ஒப்பற்ற நிசானந்தத்தின் விளக்கத்தைச் சொல்லுகின்றார்கள், ஆதலால் சாக் கிராவஸ்தையிலும் நிசானந்தத்தின் பிரதீதியுளதென அறியத்தக்கது என்பது கருத்து, [அற்றேல் உதாசீனகாலத்தில் தோன்றுவது நிசானந்தமாமேல் அது பிரமானந்தமாவதால் முன்சொல்லிய வாச னானந்தமாகாது என்று சங்கித்துச் சாமான்னிய அகங்காரத்தால் மறைக்கப்பட்டிருத்தலின் அது பிரம்மானந்தமன்றெனப் பரிகரிக் கின்றார்] யான் உளன் என்பொதுவாம் அகமால் மறைதலின்=(தேவ தத்தன் நான் என்பது முதலிய விசேஷமின்றி) நான் இருக்கிறேன் என்னும் வடிவ சாமான்னிய அகங்காரத்தால் மறைக்கப்பட்டிருத் தலின், இது முக்கிய நிசசுகம் அல=உதாசீன காலத்தில் உண்டாகும் ஆனந்தம் முக்கிய நிசானந்தமன்று, [அப்படியாயின் அதற்கு யாது வடிவமெனிற் கூறுகின்றார்] இஃது அதன் வாதனையே = மற்றோ இது பிரம்மானந்தத்தின் வாசனையாம், வாசனானந்தமென்பது பொருள் எ—று. ஆல், ஆம்—அசைநிலை.

அது பகுதிப்பொருள் விகுதி. 44

(அ—கை)

முக்கியானந்தத்தினும் வேறாக வாசனானந்தமிருப்பதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

நீரந்நிறை கலவெளி யிற்குளிர்மை
நீரம்மல மற்றற லின்குணமா
நீரம்மத னுளுள தென்றெணலா
நீள்யோகினி லகமறை வளவளவே

ஆரும்மெண நிசசுக நுண்மதியற்
கதிநுண்ணிய தாமுழு தும்விடவே
யோரின்ஞெழி யாமையி னிதுதுயிலன்
றுடலும்மத ஞன்விழு மாறிலதே. 45

(ப—ரை) நீரம்நிறை கலவெளியில்=நீர் நிறைந்துள்ள குடத்தின் வெளிப்பக்கத்தில், குளிர்மை = துவக்கிந்திரியத்தால் தோற்றப்படுகிற சீதளம், நீரம் அல=(திரவத்தன்மைத் தோற்ருமை யால்) சலம் அன்று, [அப்படியாளுல் அது யாதெனிற் கூறுகின்ருர்] மற்று அறலின் குணமாம்=பின்னேயோ நீரின் குணமாம், [நீரின் குணமெதஞலறியப்படுகிறதெனிற் கூறுகின்ருர்] அதஞல் நீரம் உளது என்று எணலாம்=வெளியில் தோற்றுகின்ற சீதளத்திஞல் உள்ளே சலமிருக்கிறதென்று அநுமிக்கலாம், [இவ்வாறு நீரின் அநுமானத்தில் குளிர்மை ஏதுவாகுக பிரகிருத வாசஞனந்தத்தில் வந்ததென்னே என்ரு சங்கித்து அதுபோல வாசஞனந்தமும் முக்கியானந்தத்தின் அநுமானத்தில் எதுவாக ஆயிற்று எனக் கூறுகின்ருர்] நீள்யோகினில் = அப்பியாச யோகத்தால், அகம் மறைவு அளவு அளவே = எவ்வளவு எவ்வளவு அகங்காரம் ஒடுங்குகின்றதோ அவ்வளவு அவ்வளவு, நுண்மதியற்கு=சூக்ஷுமபுத்தியுடையவனுக்கு, நிசசுகம் எணம்ஆரும் = நிசானந்தம் அநுமிக்கப்படும், [புத்தியின் சூக்ஷுமத்திற்கு அவதியாது என்றிச்சையுண்டாக சாக்ஷாத்காரம் அவதியாமெனக்கூறுகின்ருர்] முழுதும்விட=அப்பியாச யோகத்தால் அகங்காரம் அனேத்தையும் பரித்தியாகஞ்செய்ய, அதி நுண்ணியது ஆம் = புத்தி அத்தியந்தம் சூக்ஷுமம் ஆம், [ அப்படியாளுல் அது நித்திரையாம் எனிற்கூறுகின்ருர்] ஓரின்=ஆராயுமிடத்து, ஒழியாமை யின் = சகல விருத்திகளொடுங்கியும் அந்தக்கரணத்தின் சொரூபம் ஒடுங்காமையால், இதுதுயில் அன்று = அந்தக்கரணத்தோடு கூடிய இவ்அவஸ்தை சுழுத்தியல்ல, அந்தக்கரணம் காரண வடிவமாக இருத்தல் சுழுத்தியென்று ஆசாரியர்கூறியிருத்தலால், [அந்தக்கரணத் தின் சொரூபம் ஒடுங்காமையில் ஏதுவைக்கூறுகின்ருர்] அதஞல் = அந்தக் கரணம் ஒடுங்காமையிஞல், உடலும் விழுமாறு இலது = தேகமும் கீழே விழாதுளது எ—று.

எந்தச்சுழுத்தி முதலியவற்றில் அகங்காரத்தின் ஒடுக்கமுளதோ அதில் தேகத்தின் வீழ்ச்சி காணப்படுகின்றது. ஈண்டோ தேகத்

தின் வீழ்ச்சியின்மையினுல் அந்தக்கரணம் ஒடுங்கவில்லையென அநுமிக்கப்படுகின்றது கடத்தில். நீரின் அநுமானம் கடத்தில் தோற்றுகின்ற குளிர்மை, நீரினுல் ஜன்னியமாக யோக்கியமாம், குளிர்மையாவதால் நீரில் தோற்றுகின்ற குளிர்மை போல, அப்பியாசயோகமாவது "புத்தியைமகதத்துவத்தில் ஒடுக்குக அதனைச்சாந்த ஆன்மாவில் ஒடுக்குக" என்று சுருதியிற்கூறிய நிரோத சமாதியின் அப்பியாசமாம்.

அப்பியாசயோகத்தால் எவ்வளவு எவ்வளவு அகங்காராதி விருத்தகளின் ஒடுக்கவசத்தால் சித்தத்திற்குச் சூக்ஷமத்தன்மை உண்டாகிறதோ அவ்வளவு அவ்வளவு நிசானந்தத்தின் அபிவியத்தி உண்டாகிறதெனை அநுமிக்கப்படுகிறது. அநுமானத்தின் வடிவமிது வாம் அகங்காரத்தின் சங்கோசவிசேஷ விசிஷ்டக்ஷணங்களுள் இரண்டாவது முதலிய க்ஷணங்கள் முன்க்ஷணத்தினும் அதிக நிசானந்தத்தின் ஆவிர்ப்பாவத்தையுடையன. அகங்காரத்தின் சங்கோச விசேஷத்தோடு கூடிய காலமுடைமையால். அகங்காரத்தின் சங்கோசத்தோடு கூடிய முதற்க்ஷணம்போன்று. சமாதியில் அந்தக்கரணம் உளது என்பதில் அநுமானம் விவாத விஷயமான இத்தேகமானது ஒடுங்காத புத்தியோடு கூடியது, நிமிர்ந்திருத்தலால், எது நிமிர்ந்திருப்பதன்றே அது ஒடுங்காத புத்தியுடையதுமன்று, சுழுத்தியிலுள்ள தேகம் போல, இதுவெதிரேக வியாப்தியாம். அன்வயவியாப்தியும் பொருந்தும், எது நிமிர்ந்திருப்பதாமோ அது ஒடுங்காத புத்தியுடையதும் ஆம், நடத்தல் முதலிய வியவகாரத்தோடு கூடிய தேகம் போல. 45

ஏ மூன்றும் அசை.

(அ—கை)

திரண்ட பொருளைக் கூறுகின்றுர்.

துவிதம்மொளி ராதுவு றக்கமுமில்
சுகமங்கெது வுண்டது பிரமசுகம்
இவிதஞ்சொலி னன்பகவான் விசயற்கிசை
தைரிய மதிதனின் மென்மெலவே
குவிதந்துற வாற்றி மனந்தனிலே
குறியற்கவெதூஉஞ்சல மத்திரமீ
தெவிதஞ்செலு மவிதமறித் தறிவிலே
யேவசஞ் செய்திட வீதினையே. 46

(ப—ரை) துவிதம் ஒளிராது = எந்தக்காலத்தில் பேதம் தோற்ருதோ, உறக்கமும் இல் = நித்திரையும் இன்ருே, அங்கு எது சுகம் உண்டு அது பிரமசுகம் = அந்தக்காலத்தில் தோற்றுகிற யாதொரு ஆனந்தமுண்டோ அது பிரம்மானந்தமாம், [இதுபிரம்மானந்தமென்று எதனுலறியப்பட்டதென்ரு சங்கித்து ஸ்ரீகிருஷ்ணபகவானது வாக்கியத்தால் அறியப்பட்டதெனக்கூறுகின்ருர்] இவிதம் பகவான் விசயற்கு சொலினன் = இந்தப்பிரகாரம் ஸ்ரீகிருஷ்ணபரமான்மா அருச்சுனனுக்கு கீதையில் ஆருவது அத்தியாயத்தில் அருளிச்செய்தார். [ஆண்டு எச்சுலோகங்களால் அருளிச் செய்தாரென்ரு சங்கித்து அந்தச்சுலோகங்களைப் பொருட்கிரமத்தை அநுசரித்துப் படிக்கின்ருர்] தையிரியம் இசை மதிதனின் = தைரியத்தோடு கூடிய புத்தியால், மென்மெலவே குவிதந்து உற = மெள்ள மெள்ள அவசரப்படாமல் மனதை ஒடுக்கி இருக்கவேண்டும், [எவ்வளவு காலபரியந்தம் மனதை ஒடுக்க வேண்டுமெனிற்கூறுகின்ருர்] மனம் தன் நிலை ஆற்றி = மனதை ஆன்மாவில் நிலைக்கச்செய்து, எதும் குறியற்க = யாதென்றையும் சிந்திக்கலாகாது யாதொன்றையுஞ்சிந்தியாதிருத்தல் யோகத்தின் பரமாவதியாம் என்பது கருத்து. [இதைச்சம்பாதித்தலில் பிரவிர்த்தித்த யோகி முதலில் எதைச்செய்ய வேண்டுமெனிற் கூறுகின்ருர்] சலம் = சுபாவ தோஷத்தால் சஞ்சலமுள்ளதும், அத்திரம் = அதனுலேயே ஒரு விஷயத்தில் நியதமின்றியதும் ஆகிய, ஈது = இந்தமனமானது, எவிதம் செலும் அவிதம் மறித்து = எந்நெறியிற் செல்லுகின்றதோ அந்நெறியினின்றும் தடுத்து, ஈதினை அறிவிலேயே வசம் செய்திட = இம்மனதை ஆன்மாவிலேயே வசஞ்செய்க எ—று. ஏ. அசை.

மென்மெலவே குவி = மெள்ள மெள்ள மனதை ஒடுக்குவாய். மனந்தன் நிலைதந்துறஆற்றி = மனதை ஆன்மாவில் நிற்கும்படி செய்து, எனவும் பொருள் பொருந்தும். ஆன்மாவில் நிலைத்தலாவது "இவ்வெல்லாம் ஆன்மாவே அதனினும் வேருக அற்பமும் இன்ரும் என்னும் நிச்சயம்" நிலைக்கச்செய்து ஒன்றையும் நினையாதிருத்தல் யோகத்தின் பரமஅவதியாம். மனம் எப்போது எப்போது எந்த எந்த சத்தாதி விஷயங்களை முன்னிட்டுச் செல்லுகின்றதோ அந்த அந்த விஷயங்களினின்றும் அவைகளில் பொய்மை முதலிய தோஷத்தைக் காண்டலால் ஆபாசமாக்கி வைராக்கிய பாவனை பூர்வகமாக நிரோதித்து ஆன்மாவினதீனமாக்கவேண்டுமென்பது பொருள். இவ்வாறு யோகத்தை அப்பியசிப்பவனுக்கு அப்பியாசபலத்தால் ஆன்மாவிலேயே மனம் சாந்தியாகிறது.

(அ—ரை)

மனம் சாந்தியாயின் யாது பயன் உண்டாகுமெனிற் கூறுகின்றார்.

அரசப்பிர சாந்தம னப்பிரம
வழிகன்மட யோகியை யுத்தமவின்
புரமுற்றிடும் யோகினி னுள்ளமெவ
ணோடற்றுப ரதியுறு மியாண்டுதனுற்
பிரமத்தனை கண்டதி லேமகிழும்
பெரியோனெவ ணிற்குமாத் தியந்திகமா
யுரனுற்றிடு பொறியறி யாச்சுகமே
யுளமுற்றிடு முண்மையின் நழுவிலனே. 47

(ப—ரை) அரச = இரஜோகுணமற்றவனும், பிரசாந்தமன = அத்தியந்தம் விக்ஷேபமற்ற சித்தமுடையவனும், பிரம = பிரம்மவடிவனும் அதாவது "எதனைத்தும் பிரம்மமே" என்னும் நிச்சயமுடைமையால் சீவன் முத்தனும், அழிகன்மட = பாபமுதலிய கல்மஷமற்றவனும் ஆகிய, யோகியை உத்தம இன்பு உரம் உற்றிடும் = யோகியை மேலான சுகம்சீக்கிரம்வந்துபொருந்தும், [சுருக்கிக்கூறியபொருளைவிஸ்தரித்துக் கூறுகின்ற அக்கீதையின் சுலோகங்களை யே படிக்கின்றார்.] யோகினின் = யோகாப்பியாசத்தால், ஓடு அற்று = சகல விஷயங் களினின்றும் நீங்கி, எவண் உள்ளம் உபரதி உறும் = எக்காலத்தில் சித்தம்சாந்தியடையுமோ, மேலும், யாண்டு = எக்காலத்தில், தனுல் = சமாதியால்பரிசுத்தமான அந்தக்கரணத்தால், பிரமதனைக்கண்டு = பரம சோதி வடிவ ஆன்மாவை அபரோக்ஷமாயறிந்து, அதிலே மகிழும் = ஆன்மாவிலேயே சந்துஷ்டியை அடைகின்றானோ விஷயங்களிலன்றோ, மேலும், எவண் = எக்காலத்தில், நிற்கும் பெரியோன் = ஆன்மாவில் திதிபெற்றிருக்கும் யோகியானவன், ஆத்தியந்திகமாய் = அனந்தமாய், உரன் உற்றிடு = இந்திரியாபேக்ஷை இல்லாமலே புத்தியால் கிரகிக் கத்தக்கதாய், பொறியறியா = இந்திரியகோசரமற்றதாயுள்ள, சுகமே உளம் உற்றிடும் = ஆனந்தத்தையே அகத்தில் அநுபவிப்பனோ, மேலும், உண்மையில் நழுவிலனே = ஆன்மாவில் திதி பெற்றிருக்கு மிவன் அவ்வான்மசொரூபத்தினின்றும் நீங்கானோ எ—று. தன்னுல் என்பது தனுல் என இசையைக்குறித்து விகாரமாயிற்று. ஏ—அசை.

மோக முதலிய கிலேசங்களற்றவனென்பார் அரச என்ருர். குறைதற்றன்மை சாதிசயத்தன்மை முதலிய தோஷமின்றியதென்பார் உத்தம என்ருர். 47

(இதுவுமது)

எதையுற்றய லூதிய மதிலுயர்வா
யெண்ணுனெதி னின்றிடர் கோடியினுல்
விதிர்வுற்றில னதையிட ரொற்றுமைதீர்
விதியோகநா மத்துண ரதுதிரமாய்
வதையற்றிடு மதிபுரி தக்கதுதீ
மருவாமுனி யிவ்வகை தன்னினிதந்
திதியுற்றினி தாச்சிவ மேபரிசித்
தேமுற்றினு மின்பம யின்றிடுமே. 48

(ப—ரை) மற்றும், எதையுற்று = எவ்வான்மாவை அடைந்து, அயல்ஊதியம் அதில் உயர்வாய் எண்ணுன் = வேறு லாபத்தை அதனிலும் மேலாகக் கருதாளோ, மற்றும், எதின் நின்று இடர் கோடியினுல் விதிர்வு உற்றிலன் = எவ்வான்ம தத்துவத்தில் திதிபெற்று வாளால் வெட்டுதல் முதலிய அளவிறந்த மகத்தான துன்பத்தாலும் பிரகலாதன் போன்று அசைவையடைவதில்லையோ [இப்போது உபபாதனஞ் செய்த யோகத்தை முடிக்கின்ருர்] இடர் ஒற்றுமைதீர் அதை = துக்கத்தோடு சம்பந்தமற்ற அந்த யோகத்தை, விதியோகநாமத்து உணர் = உண்மையான யோகமென்னும் பெயருடையதாக அறிவாய், [இப்படிப்பட்ட யோகத்தை அநுஷ்டிப்பதில் சொற்பம் கருத்தவ்விய விசேஷத்தைக் கூறுகின்ருர்] அது = அந்த யோகம், திரமாய் = சத்தியமாய், வதை அற்றிடுமதி = துன்பமின்றிய புத்தியால், புரிதக்கது = அநுஷ்டிக்கத்தக்கது, [இப்போது கூறியபொருளை முடிக்கின்ருர்] தீமருவாமுனி = கொடுமையைப் பொருந்தாத யோகியானவன், இவ்வகை = கூறிய பிரகாரம், தன்னில் நிதம் திதிஉற்று = ஆன்மாவிலேயே எப்போதும் நிஷ்டையைப்பொருந்தி, இனிதா = அனுயாசமாக, சிவமே பரிசித்து = பிரமத்தையே சம்பந்தித்து, பிரம்மவடிவாகிஎன்பதுபொருள். முற்றினும் இன்பம் அயின்றிடும் = பரிபூரணமான சுகத்தை அநுபவிக்கின்ருன் எ—று. ஏ—அசைநிலை.

அதை = மென்மெலவே என்பது முதலாக எவ்வளவு விசேஷணங்களோடு கூட யாதொரு ஆன்மாவின் அவஸ்தா விசேஷமான யோகம் சொல்லப்பட்டதோ அதனை. 48

(அ—கை)

துன்பமின்றிய புத்தியால் செய்யப்படுகிறயோகாப்பியாசமானது பயனை உண்டுபண்ணுமென்பதைத் திருஷ்டாந்தத்தோடு கூடக் கூறுகின்றார்.

கடல்வற்றிடல் புன்னுனி யோர்துளியாற்
கதழ்வுற்றிட வுள்ளழி வேதமிலாங்
கடமைத்திரி சாகையின் மாமுனிசா
காயன்னியர் பெருரத ராசரிஷிக்
கடியின்பினை நல்லச மாதிசொலு
மாருற்சுக மோதின ரிந்தனமில்
சுடர்தம்பதி பம்புறல் போன்மனமுஞ்
சுவயோனியில் விருத்தியி லாதிறுமே 49

(ப—ரை) புல்நுனி ஓர் துளியால் = தருப்பைப்புல்லின் நுனியால் எடுக்கப்பட்ட ஒருபிந்துவால், கடல்வற்றிடல் கதழ்வு = காலாந்தரத்தில் சமுத்திரம் வற்றுதலையடைவது போல், ஏதம் இல் உற்றிட = சிரமம் இன்றி முயற்சிக்க, உள் அழிவு ஆம் = காலாந்தரத்தில் மனதின் நிக்கிரகம் உண்டாகும், ஈண்டு சிட்டுக்குருவியின் கதை அறியத்தக்கது. [இப்பொருள் கேவலம் கீதையில் மாத்திரம் சொல்லப்பட்டதல்ல. மற்றேமைத்திராயணிசாகையிலும் கூறப்பட்டுளது எனக்கூறுகின்றார்] கடமைத் திரிசாகையில் = தகுதியான மைத்திராயணியென்னும் பேருள்ளயஜுர்வேதசாகையில், மாமுனிசாகாயன்யர் = சாகாயன்னியரெனப் பெயரிய பெரிய ரிஷியானவர், பெருரதராச ரிஷிக்கு = தன் சிஷ்யனாகவந்து சரணடைந்த பிரகத்ரதனென்னப் பெயரிய ராஜரிஷிக்கு, அடியின்பினை = பிரம்மசுகத்தை, நல்லசமாதி சொலும் ஆருல் = இனிமையான சமாதியை உபதேசித்தல் வாயிலாக, சுகம் ஓதினன் = நன்ருகக் கூறினர், [எவ்வாறு சொன்னர் என்ரு சங்கித்து அதனைப் பிரதிபாதிக்கின்ற அதன் மந்திரங்களைப் படிக்கின்றார்.] இந்தனம் இல் சுடர் = விறகை எரித்த நெருப்பானது, தம்பதிபம்புறல்போல் = தமது

காரணமாகிய தேஜோமாத்திரத்தில் சாந்தியாவது போல் அதாவது சுவாலையாகிய விசேஷவடிவத்தைவிட்டிருப்பது போல, மனமும் = சித்தமும், விருத்தியிலாது = நிரோத சமாதியின் அப்பியாசத்தால் இராஜஸாதி சகல விருத்தியுமின்றி, சுவயோனியில் இறும் = தனது காரணமான சத்துவமாத்திரத்தில் சாந்தியாகும், சத்துவகுணமாத்திரமாக மிஞ்சுகின்றதென்பது பொருள் எ—று.

பதி = காரணம், பம்புறல் = நெருங்குதல், அதாவது சாந்தியாதல். ஏ—அசை. 49

(அ—கை)

அந்த மனம் காரணத்தில் ஒடுங்குவதனால் என்னை பயன் எனிற் கூறுகின்றார்.

உளகாமிதன் யோனிபு கும்புலனற்
றுறுநன் மனதிற்கு வினைப்படுசீர்
தளலாமன தேசமு சாரமெதாற்
றதுசோதி முயற்சியி னாலெதிலே
யுளமாவன தன்மய நீடியதீ
துயர்குய்ய முளத்தரு ளாலொழிவ
னௌதீநல கன்மம்ப்ர சன்னவுள
னிருந்தனி னாசமி லின்புணுமே. 50

(ப—ரை) உளகாமி = சத்திய ஆன்மாவில் இச்சையுடையதும், தன்யோனிபுகும் = அதனாலேயே தனது காரணத்தில் உபசாந்தியுடையதும், புலன் அற்றுறும் = உபசாந்தியுடைமையினாலேயே இந்திரிய விஷயங்களான சத்தாதிகளினின்றும் நீங்கினதும் ஆகிய, நல்மனதிற்கு = சுத்தசித்தத்திற்கு, வினைப்படுசீர் = கருமத்தை அநுசரித்து உண்டாவனவான சாதனசகித சுகாதிகள், தளல் ஆம் = இல்லாதனவாம் அதாவது பொய்மைப்புத்தியால் பொய்வடிவங்களாம், [அற்றேல் சித்தம் உபசாந்தியாகும் போது சகத்துமித்தையாகிறது என்பது பொருந்தாது. சகத்திற்குச் சித்தம் உபாதான காரணமாகாமையால் என்று சங்கித்துக்கூறுகின்றார்] மனதே சமுசாரம் = சித்தமே சகத்து, எதால் = இக்காரணத்தினால், ததுமுயற்சியினால் = அச்சித்

தத்தையே அப்பியாச வைராக்கியாதி வடிவபிரயத்தினத்தால், சோதி = சுத்தஞ்செய்க, அதாவது இரஜோகுண தமோகுணமற்றதாய் ஏகாக்கிரத்தைச்செய்வாய், சித்தம் சகத்திற்கு உபாதான காரணமன்று அப்படியாயினும் சகத்திலுள்ள போக்கியத் தன்மைக்குக் காரணமாம் சுழுத்தி முதலியவற்றில் சித்தம் விலயமாகும் போது போகம் காணுமையின் என்பது கருத்து. இது சர்வாநுபவ சித்தமென்பார்: எதால் என்ருர் [ஆன்மாவின் முத்தியின் பொருட்டு ஆன்மாவே சோதிக்கத்தக்கது. சித்தமன்று என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] எதிலே உளமாவன் = மனிதன் புத்திராதி எவ்விஷயங்களில் சித்தமுடையவனுவனே, அதன் மயன் = அதன் வடிவமாவன், அவரது குறைவு நிறைவுகளை ஆன்மாவிலேயே ஆரோபித்தலால், ஈதுநீடியது = இது அனுதிசித்தமும், உயர்குய்யம் = அதிரகஸ்யமுமாம். சுபாவமாக சுத்தமாகிய ஆன்மாவிற்கு சித்த சம்பந்தத்தாலேயே சமுசாரித்நுவமாம் "சிந்திப்பவனைப்போல விளையாடுபவனைப்போல" என்னுஞ் சுருதியால் அதனுல் சித்தத்தைச் சோதித்தலால் ஆன்மாவிற்குச் சமுசாரம் நிவர்த்தியாகும என்பது, [அற்றேல் அனுதி சமுசார பரம்பரையில் சம்பாதிக்கப்பட்டனவும் சுக துக்கங்களை கொடுப்பனவுமாகிய புண்ணிய பாப கருமங்களிருக்கும்போது சித்தத்தின் சோதனத்தாலும் சமுசார நிவர்த்தி எப்படியாகும் என்ரு சங்கித்து சித்தப் பிரசாதத்தால் உபலக்ஷிக்கப்பட்ட பிரம்மாநு சந்தானத்தால் சகல கருமங்கட்கும் நாசம் பொருந்துவதால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்ருர்] உளத்து அருளால் = சித்தப் பிரசாதத்தால், எனுதீ நல கன்மம் ஒழிவன் = தள்ளத் தகுந்த பாப புண்ணிய கருமங்களை நாசமாக்குவன், [சித்தப் பிரசாதத்திலுல் என்னை பயனெனிற் கூறுகின்ருர்] பிரசன்ன உளன் = பிரசாதத்தோடு கூடிய சித்தமுடையவன், தனின் இருந்து = ஆன்மாவில் திதி பெற்று, நாசம் இலே இன்பு உணும் = அவிநாசியான சொரூப வடிவ சுகத்தை அநுபவிப்பன் எ—று.

அம்—அசை நிலே.

சித்தப் பிரசாதம் = பிரம்மாநு சந்தானம், சித்தப் பிரசாதத்தால் கருமம் நாசமாவதில கீழ்சொல்லும் சுருதியும் ஸ்மிருதியும் பிரமாணமாம். "எப்படி பஞ்சு அக்கினியில் போடப்பட்டு நாசமாகின்றதோ அப்படிப் பிரம்மத்தைச் சிந்திப்பவனுடைய எல்லாப் பாபங்களும் நாசமாகின்றன" "உபபாதகங்களும் மகா பாதகங்களும் அதிகமாக இருக்கின் அதிகாலையில் எழுந்து பிரம்மத் தியானத்தைச் செய்க"

ஆன்மாவில் திதி பெறுதல்=பிரம்மமே யானுகின்றேன் என்னும் நிச்சயத்தால் திருசியக் கூட்டத்தைத் தள்ளி சின்மாத்திர வடிவமாக இருத்தல். 50

(அ—கை)

பிரசன்ன மனமுடையவன் ஆன்மாவில் திதி பெற்று என்று கூறிய பொருளேயே திருஷ்டாந்தத்தைக் கூறுதல் வாயிலாகத் திடஞ் செய்கின்ருர்.

சீவன் றன்மனம் விடயகோ சரத்தினிற் செலல்போ
ருவி றற்சிவத் தின்னண மேலெவன் றணரான்
ருவு ளமல மமலமே யிருவகை சாற்றும்
பாவ காமமுள் ளதுமல மிலதுபா வனமே. 51

(ப—ரை) சீவன்றன் மனம் = பிராணியின் சித்தம், விடயகோசரத்தினில் செலல் போல்=விஷயங்களாகிய இந்திரியங்களின் சஞ்சார பூமியில் அதிக ஆசத்தியோடு பிரவிர்த்திப்பதுபோல், தாவு இல் தன் சிவத்து = சலனமற்ற பிரத்தியக்கு வடிவ பிரம்மத்தில், இன்னணமேல் = இவ்வாறு ஆசத்தியினுல் பிரவிருத்திக்குமாயின், எவன் தணரான் = எம்மனிதன் பந்தத்தினின்றும் விடுபடான், எல்லோரும் விடுபடுவார் என்பது பொருள். [கூறிய பொருளின் திடத்தன்மையின் பொருட்டு மனதின் அவாந்தர பேதத்தைக் கூறுகின்ருர்] தாவு உளம்=சலிக்கின்ற மனது, மலம் அமலம் இருவகை சாற்றும்= அசுத்தமென்றும் சுத்தமென்றும் இரண்டு பிரகாரமாகச் சொல்லப்படும், [அப்பேதத்தில் காரணங் கூறுகின்ருர்] பாவகாமமுள்ளது மலம்= பாபத்தின் பயனுன ஆசையுடைய மனது அசுத்தமாம், இலது பாவனம்=ஆசையற்ற மனது சுத்தமாம் எ—று.

காமம் குரோதாதிகளுக்கும் உபலக்ஷணம்.

ஏ—அசை. 51

(அ—கை)

இருவிதமான அம்மனதே முறையே சமுசாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமாமெனத் தெரிவிக்கின்ருர்.

மனுட ருக்குள மேமுத்தி பந்தகா ரணமா
மனிற் றிருசிய மிடருறு மாற்றில்வீ டறையுந்
தனிற் புகுநிட்டை யான்மலந் தணர்மனஞ் சேரின்
பென லுரைகொளா சுயமதுட் கரணத்தா லியையும். 52

(ப—ரை) மனுடருக்கு உளமே பந்த முத்தி காரணம் ஆம்= சீவர்களுக்கு மனமே சமுசாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமாம். திருசியம் மனிற்= விஷயங்களில் அழுந்தின், இடர் உறும்= துன்பத்தை அடையும், மாற்றில்= மனதை விஷயங்களினின்றும் நிவர்த்திக்கின், வீடு அறையும்= மோக்ஷப் பிராப்தி சொல்லப்படும், [பிரசன்னவுளன் தனினிருந்து நாசமில் இன்பு உணும் என்று கூறிய பொருளையே சுருதி சுயமே விஸ்தரிக்கின்றது] தனில் புகும்= பிரத்தியக்கான்மாவில் பிரவேசித்ததும், நிட்டையால் மலம் தணர்= சமாதியால் அழுக்கற்றது மாகிய, மனம் சேர் இன்பு எனல் = சித்தத்திற்கு அச்சமாதியில் உண்டாகும் சுகத்தை, உரைகொளா = (அலௌகிக சுகமாவதால்) வாக்கால் வருணிக்க முடியாது, மற்றோ, அது சுயம் உள் கரணத்தால் இயையும்= அந்த சொரூபவடிவ சுகம் தானே அந்தக்கரணத்தாலேயே கவரப்படும் எ—று.

சமாதி = பிரத்தியக் பிரம்மங்களின் ஐக்கியத்தை விஷயஞ் செய்யும் பிரத்தியயத்தின் ஆவிருத்தி.

அழுக்கு= இரஜோகுண தமோகுணங்கள். 52

(அ—கை)

அற்றேல் இச்சமாதியே கிடைத்தற்கு அருமையாதலின் எவ்வாறு இச்சமாதியினால் பிரம்மானந்தத்தின் நிச்சயம் சம்பவிக்கும் என்று சங்கித்துக் கூறுகின்றார்.

இச்ச மாதிநீள் காலமிங் கெய்தரி தெனினு
மிச்சி தானந்த நிச்சய மீயுமிக் கணிகஞ்
சச்சி ரத்தையோர் வினனிதிற் சருவதாத் துணியும்
நிச்ச யமொர்று முறைவரி னேயமா மீண்டும். 53

(ப—ரை) இச்சமாதி நீள் காலம் இங்கு எய்த அரிது எனினும்=மனிதர்களுக்குக் கூறிய சமாதி நீண்டகாலம் நிலைத்திருத்தல் ஈண்டு அடைதற்கு அருமையாயினும், இக்கணிகம்=ஒரு க்ஷணம் உளதாகும் இச்சமாதி, இச்சிதானந்த நிச்சயம் ஈயும்=பிரம்மானந்தத்தின் துணிவைச் செய்யும், நீள்கால சமாதி சம்பவியாதேனும் க்ஷணிக சமாதி சம்பவித்தலால் அதனால் ஆனந்த நிச்சயம் கூடும் என்பது பொருள். [ஆன்ம தெரிசனத்தின் பொருட்டுச் சிரவணாதியில் பிரவிர்த்தித்தவராயினும் சிலர் ஆனந்த நிச்சயமின்மையராய் வெளிமுகமுடையவராகவே இருக்கின்றனரென்று சங்கித்து சிரத்தை முதலியவை இன்றியவர் அவ்வாறு இருப்பினும் அவையுடையோருக்கு அந்நிச்சயம் உண்டாமெனக் கூறுகின்றார்] சச்சிரத்தை ஓர்வினன்= நல்ல விசுவாசத்தையும் விசனத்தையும் உடையவன், இதில்=இச்சமாதியில், சர்வதாத் துணியும்=அவசியம் பிரம்மானந்தத்தை நிச்சயிப்பன், [அதனாலென்னையெனிற் கூறுகின்றார்] ஒருமுறை நிச்சயம் வரின்=க்ஷணிக சமாதியில் ஒருதடவை பிரம்மானந்தத்தின் துணிபு உண்டாயின், மீண்டும் நேயம் ஆம்=மறுபடியும் ஆனந்தம் இருக்கிறது என்று விசுவாசம் உண்டாகும் எ—று.

சர்வதா = அவசியம், விசனம்=எவ்வகையானும் சம்பாதிப்பேன் என்னும் ஆக்கிரகம், மீண்டும் = வேறுகாலத்திலும். 53

(அ—கை)

வேறு காலத்தில் விசுவாசம் உடைமையினாற்றான் என்னை எனிற் கூறுகின்றார்.

அவனொ துமற்போ தினுஞ்சுக வாதனை யவித்தே
கவன தற்பரன் முக்கிய சுகமதே கருது
மவவி லத்தொழி லமைப்பினு மந்தரி லயற்சே
ரவள தேபர சங்கர சாயன மயில்வாள். 54

(ப—ரை) அவன்=விசுவாசம் முதலிய வாயிலாக ஒருதடவை நிச்சயமுடைய புருஷன், நொதுமல் போதினும்=உதாசீன காலத்திலும், சுக வாதனை அவித்து=தோற்றுகின்ற முன்சொல்லிய ஆனந்த வாசனையை உபேக்ஷித்து, கவன தற்பரன்=சீக்கிரம் முக்கியானந்தத்தில் தாற்பரியமுடையவனாய், முக்கிய சுகமதே கருதும்=முக்கியானந்

தத்தையே பாவனை செய்வன் [இவ்வாறு வியவகார காலத்திலும் நிசானந்தத்தைப் பாவிக்கின்றான் என்பதில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] அயன்சேர் அவள்=பரபுருஷனை ஆலிங்கனஞ் செய்யும் நாரியானவள், அவஇலத் தொழில் அமைப்பினும் = திருத்தமாக வீட்டுக்காரியங்களைச் செய்யினும், அந்தரில் = மனதில், அதே பரசங்கரசாயனம் = பரபுருஷனோடு கூடுங்கால் உண்டான அச் சுகத்தையே. அயில்வாள்=ஆசுவாதனஞ் செய்வாள் எ—று.

ஆசுவாதனம் = ருசிபார்த்தல். கவனம் = சீக்கிரம்,
அவ=திருத்தம் 54

(அ—கை)

தாஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

மலம றும்பர தத்துவத் திவ்வகை மகிழ்ந்தே
யுலவி னும்பகி ருள்ளதே யயிலுவன் றீரன்
புலன் வலுப்பினும் புசிசுக வாசையா லெல்லாப்
புலனி றுத்தியச் சிந்தையிற் புகுதறீ ரதையே. 55

(ப—ரை) தீரன்=தீரபுருஷன், மலமறும் பரதத்துவத்து=சுத்த மாயும் பரமாயும் உள்ள ஆன்மாவில், இவ்வகை மகிழ்ந்து = இவ்வாறு ஒருதடவை விசிராந்தி பெற்று, பகிர்உலவினும்=அதன்பின் வெளியில் விவகரிப்பவனாயினும், உள்=அந்தக்கரணத்தில், அதே அயிலுவன் = அச்சுகத்தையே ஆசுவாதனஞ் செய்வன், [தீரசப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்] புலன் வலுப்பினும்=இந்திரியங்களுக்கு விஷயங்களின் அபிமுகத்தன்மையால் புருஷனை இழுக்கும் சாமர்த்தியம் இருப்பினும், புசிசுக ஆசையால் = அநுபவிக்கத்தக்க ஆன்ம வடிவ ஆனந்தத்தின் அனுசந்தான இச்சையால், எல்லாப் புலன் இறுத்தி = சகல இந்திரியங்களையும் திரஸ்கரித்து, அச்சிந்தையில் புகுதல் = ஆனந்தத்தின் அனுசந்தானத்தில் பிரவிர்த்தித்தலே, தீரதை = தீரத்துவமாம், தீர சப்தத்தின் பொருளாம் என்பது கருத்து எ—று.

ஏ, ஏ—அசைநிலைகள். 55

(அ—கை)

விசிராந்தி சப்தத்தின் விவக்ஷித்த பொருளைத்திருஷ்டாந்தத் தோடு கூறுகின்றார்.

பார வாகிகம் பருஞ்சுமை பறித்திளைப் பறுஞ்சம்
சார மாதொழிற் சாடவத் தகைமதி யொழிவே
பேரொ ழிவின னெதுமலிற் பிறங்கல்போ லிடரின்
பாரும் வேலையு மச்சுக தற்பர னுமே. 56

(ப—ரை) பாரவாகி = (எப்படி உலகில் மூட்டை முதலிய) சுமையைச் சுமக்கும் புருஷன், கம்பருஞ்சுமை பறித்து = (சிரம ஏதுவாக) சிரசில் உள்ள பெரிய பாரத்தை விடுத்து, இளைப்பு அறும் = சிரமமின்றியவனுவனே அப்படி, சம்சாரமாதொழில்சாட = பெரியகுடும்ப வியாபாரங்களனைத்தும் அழிந்து போக, அத்தகையமதி = அப்படிப் பட்ட புத்தி, அதாவது சிரமமின்றியவனுக உளனென்றுண்டாகும் புத்தி, ஒழிவு = விசிராந்தியாம், [இப்போது திரண்ட பொருளைக் கூறுகின்றார்] பேர்ஒழிவினன் = கூறிய மேலானவிசிராந்தியையடைந்த புருஷன், நொதுமலில் பிறங்கல் போல் = உதாசீன அவஸ்தையில் பரமானந்தத்தின் ஆஸ்வாதனத்தில் தற்பரனுய் விளங்குவது போல், இடர் இன்பு ஆரும்வேலையும் = சுகதுக்கங்கள் பொருந்தும்காலத்திலும், அச்சுகதற்பரன் ஆம் = சுகதுக்கங்களின் அநுசந்தானத்தை விட்டு அந்நிசானந்தத்தின் ஆஸ்வாதனத்திலேயே கருத்துடையவனுவன் எ—று. இன்பு இடர் = சுகதுக்க ஏது.

ஏ, ஏ—அசைநிலைகள். 56

(அ—கை)

அற்றேல் துக்கம் பிரதிகூலமாயிருத்தலால் அதன் அநுசந்தானத்தின் இச்சையின்றேனும் விஷய ஜன்னிய சுகம் அநுகூலமாயிருத்தலால் புருஷர்களால் விரும்பப்படுதலின் அதன் அநுசந்தானத்தின் இச்சை ஏன் உண்டாகாது என்று சங்கித்து அது விஷயத்தைச் சம்பாதித்தல் வாயிலாக மிகவும் வெளிப்பிரவிருத்தியை உண்டுபண்ணுவ்தால் நிசானந்தத்தின் அநுசந்தானத்திற்கு விரோதியாமாதலின் அதனிச்சையும் விவேகிக்கு உண்டாகாதென்று திருஷ்டாந்தத்தைக் காட்டல் வாயிலாகக் கூறுகின்றார்.

அனல் விழவுறு மணியிலெவ் விதமதி யஃதே
மனன வெம்பகை விடயத்தின் மற்றெழு மிவற்கே
கன விகலறு மின்பிற்றன் னின்பிற்கா காக்ஷி
யெனமு றையிங்கங் கிம்மதி கமாகம மியற்றும். 57

(ப—ரை) அனல் விழ உறும் அணியில் = அக்கினியிற் பிரவேசித்தற்காக பொருந்தானின்ற அலங்காரத்தில், எவ்விதம் மதி = எப்படிப்பட்ட புத்தியோ, அஃதே இவற்கு மனன வெம்பகை விடயத்தில் எழும் = அப்படிப்பட்ட புத்தியே இத் தீரபுருஷனுக்கு அநுசந்தானத்தின் கொடிய விரோதியாகிய இஷ்ட விஷயங்களிலுண்டாகும், சீக்கிரம் தேகத்தை விடுதலில் இச்சை திடமாக இருக்கும்போது அதன் விலம்ப காரணமான அலங்காராதியில் அக்கினிப் பிரவேசஞ் செய்பவனுக்கு வைரஸ்ய புத்தியுண்டாவதுபோல் வைராக்கியாதி சாதன சம்பன்ன விவேகிக்கு பிரம்மாநுசந்தான விரோதியாகிய விஷய சுகத்திலும் வைரஸ்ய புத்தியுண்டாமென்பது பொருள். [விரோதியாகிய விஷயத்தில் சுக இச்சையின்ருகுக. பிரயத்தனமின்றி அடையத் தக்கதாய்வெளிப் பிரவிருத்திக்குக் காரணமாகாத விஷயத்தில் இச்சை ஏன் கூடாதெனிற் கூறுகின்ருர்] இகல் அறும் இன்பில் = விரோதமற்ற விஷய சுகத்திலும், கனதன் இன்பில = மேலான ஆன்மானந்தத்திலும், காக அக்ஷியென = காக்கையின் கண் போல, முறை இங்கு அங்கு = கிரமமாக நிசானந்தத்திலும் விஷயானந்தத்திலும், இம்மதி கம ஆகமம் இயற்றும் = இந்தப் புத்தி போதல் வருதலைச் செய்யும் எ—று.

வைரஸ்யபுத்தி = வெறுப்பு. 57

(அ—கை)

காக்கைத் திருஷ்டாந்தத்தை விரிக்கின்ருர்.

காக திட்டியொன் றேயிட வலவிழி கவிழு
மாகு முண்மையை யறிந்தவன் மதிசுகத் வயத்தே
யேக முற்றவன் லௌகிக வைதிக விரண்டாம்
பாகி யசிவ வின்புணும் பாடையீ ருரன்போல். 58

(ப—ரை) காக திட்டியொன்றே = காக்கையின் பார்வை ஒன்றே, இடவல விழி கவிழும் = வாம தெக்ஷிண நேத்திரங்களில் போகும் வரும், அதுபோல், உண்மையை அறிந்தவன் மதி = தத்துவத்தையுணர்ந்தவன் புத்தியும், சுகத்வயத்து ஆகும் = ஆனந்தம் இரண்டிலும் இருக்கும், [தார்ஷ்டாந்தத்தை விஸ்தரிக்கின்ருர்] ஏகம் உற்றவன் = அத்துவிதத்தை அறிந்தவன், பாடை ஈர் உரன்போல் = இரண்டு பாஷையையுணர்ந்தவன்போல, லௌகிக வைதிக = விஷய

ஜன்னியமும் உபநிஷத்து வாக்கியத்தால் அறியப்பட்டதுமாகிய, பாகிய இன்புசிவ இன்பு இரண்டு உணும் = விஷயானந்தம் பிரம்மானந்தமென்னுமிரண்டினையும் அநுபவிப்பன் எ—று.

இன்பு இரண்டிடத்தும் கூட்டப்பட்டது.

ஏ—அசை. 58

(அ—கை)

அற்றேல் துக்காநுபவ காலத்தில் விக்ஷேபமிருக்கும்போது நிசானந்தத்தின் அநுபவமெப்படியுண்டாமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

இருவி ழியினன் முன்னென விடருறில் வாடான்
வரந திபொதி யரைத்தனு வனுக்குத்தண் டீப்போற்
பிரம வின்பில குஞ்சதா நனவினிற் பெரியோற்
கருமவ் வாதனை கனவினி லஃதவ்வா றொளிரும். 59

(ப—ரை) இருவிழியினன் = எதனால் விவேகி இலௌகிக வைதிக விவகாரமிரண்டின் உணர்வையுடையவனோ அதனால், இடர் உறில் = துக்கம் பிராப்தமாயின், முன் என = அஞ்ஞான காலத்திற் போல, வாடான், (விவேகத்தால் அப்போதைக்கப்போது பாதிக்கப் படுவதால்) கலங்கான், ஆதலால் துக்காநுபவ காலத்திலும் நிசானந்தத்தின் அநுசந்தானம் ,விரோதிக்கப்படுவதின்று என்பது பொருள். [ஒரே காலத்தில் துக்கம் நிஜானந்தமென்னுமிரண்டின் அநுசந்தானத்தில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] வரநதி பொதி அரைத்தனுவனுக்கு = (வெய்யில் காலத்தில் மத்தியானத்தில்) கங்கையில் மூழ்கிய பாதி சரீரத்தினையுடைய புருடனுக்கு, தண் தீப்போல் = இடையின்கீழ் குளிர்ச்சியும் அதன் மேல் வெப்பமும் ஒரே காலத்தில் அநுபவிக்கப் படுவதுபோல், [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] பெரியோர்க்கு நனவினில் சதா பிரம இன்பு இலகும் = தத்துவத்தை அறிந்தவனுக்கு சாக்கிராவஸ்தையில் எப்போதும் பிரம்மானந்தம் விளங்கும், [கேவலம் சாக்கிரத்தில் மாத்திரம் பிரம்மானந்தத்தின் விளக்கமன்று, மற்றோ சொப்பனத்திலும் ஆம் எனக் கூறுகின்றார்] அரும் அவ்வாதனை கனவினில் = நீக்குதற்கரிய சாக்கிர சம்ஸ்காரத்தால் தோன்றிய சொப்பனத்தில், அவ்வாறு அஃது ஒளிரும் = அப்படியே பிரம்மானந்தம் விளங்கும் எ—று.

சாக்கிர சம்ஸ்காரத்தால் தோன்றிய என்பது ஏது கருப்ப விசேஷணம். சொப்பனம் சாக்கிர சம்ஸ்காரத்தால் தோன்றினபடியால் சாக்கிரம் போலவே பிரம்மானந்த பானமுடையது, மண் முதலிய காரணம் எத்தன்மையதோ கட முதலிய காரியமும் அத்தன்மையதே ஆகுமென உலகில் கண்டுளேமாதலின், தன்மை = கந்த முதலிய குணம், எப்போதும் = சுகாநுபவ காலத்திலும் துக்காநுபவ காலத்திலும் உதாசீன காலத்திலும் பிரம்மானந்தம் விளங்கும். 59

(அ—கை)

அற்றேல் சொப்பனம் ஆனந்தாநுபவ வாசனையால் ஜன்னியமாமேல் ஆனந்தம் மாத்திரம் விளங்கவேண்டும். துக்கம் தோற்றல் ஆகாதென்று சங்கித்துக் கூறுகின்றார்.

அவித்தை வாதனை யும்முளா தாலவ்வா தனைகா
லவக்க னவினின் மூடனே போற்சுக வனுர்கள்
இவற்கு றும்பிர மானந்த நாமநூ லிவ்வோத்
துவப்பொ ளிர்சிவ யோகியி னனுபவ முரைக்கும். 60

(ப—ரை) அவித்தை வாதனையும் உளதால் = (சொப்பனத்திற்கு ஏதுவாக) அஞ்ஞானத்தின் சம்ஸ்காரமுமிருப்பதால், அவ்வாதனை கால் அவக்கனவினில் = அவித்தையின் வாசனையால் தோன்றிய மனோமய சொப்பனத்தில், மூடன்போல் = பாமரன் போல, சுக அனுர்கள் இவன் உறும் = இன்ப துன்பங்களை அறிஞன் அடைவன், [இவ்வளவு கவிகளால் கூறிய பொருளை முடிக்கின்றார்] பிரமானந்த நாமநூல் = பிரம்மானந்தமெனப் பெயரிய ஐந்து அத்தியாய வடிவ இக்கிரந்தத்தில், இவ்ஓத்து = இந்த முதலாவது அத்தியாயம், உவப்பு ஒளிர் = எப்போதும் பிரம்மானந்தத்தைப் பிரகாசிப்பிக்கின்ற, சிவயோகியின் அநுபவம் உரைக்கும் = யோகிப் பிரத்தியக்ஷத்தைக் கூறுகின்றது எ—று.

வாதனையும் என்பதிலுள்ள உம்மை இறந்தது.

தழீஇ—எச்சம்.

இவற்கு என்பதில் கு தோன்றல் விகாரம்.

அல்லது மூடன்போல்=பாமரனுக்குப் போல, சுக அஞர்கள் இவற்கு உறும்=இன்ப துன்பங்கள் அறிஞனுக்கு வந்து பொருந்தும், எனப் பொருள் கொள்வது நலம். எப்போதும் = சுழுத்தியவஸ்தையிலும் உதாசீன காலத்திலும் சமாதியவஸ்தையிலும் சுக துக்க காலத்திலும், ஆகமம் முதலியவைக்கும் பிரத்தியக்ஷம் உபலக்ஷணம். அவைகளும் ஈண்டு காண்பிக்கப்பட்டபடியால். 60

பதினொன்றுவது யோகானந்தம் முற்றிற்று.

ஆகக் கூடுதல் செய்யுள் 646.



ஓம் தத் ஸத்.
கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## பனிரெண்டாவது பிரகரணம்.

## ஆன்மானந்தம். *

இப்போது பிரம்மானந்தத்தினுள்ளடங்கிய ஆன்மானந்தமென பெயரிய இரண்டாவது அத்தியாயத்தை ஆரம்பிக்கின்றார்.

(அ—கை)

இவ்வாறு முதலாவதத்தியாயத்தில் விவேகிக்கு யோகத்தால் நிசானந்தத்தின் அநுபவப்பிரகாரத்தைக் காண்பித்து இப்போது மூடனாகிய ஜிஞ்ஞாசுவிற்கு ஆன்மானந்த சத்தத்தின் வாச்சியமாகிய துவம் பதார்த்தத்தை விசாரித்தல் வாயிலாக பிரம்மானந்தத்தின் அநுபவப்பிரகாரத்தைக் காண்பிக்கும பொருட்டு சீடனது வினாவை ஆரம்பிக்கின்றார்.

ஆயினிவ ணம்முனிவன் வாதனையும் பிரம
வானந்தந் தன்னினின்று மயனிசவா னந்த
மேயறிக விவண்கயவற் கென்கதியா மோயா
திவன்றரும வதன்மவயத் திலக்கமுட லெடுக்க
மாயநந்தா க்ஷிணியத்தா லென்னைகொலா மறைதி
மாவருள்செ யிச்சையுடை மையினனே தங்க
ளாயதா க்ஷிணியத்தாற் பயனுளதிங் காயி
னம்மூடன் சிஞ்ஞாசோ பகிர்முகனே வறைவாய். 1

---

* பிரத்தியகான்மாவின் சொரூப வடிவ ஆனந்தம் யாதோ அது ஆன்மானந்தமாம், அதனைப் பிரதிபாதிக்கும் பிரகரணமும் ஆன்மானந்தமாமெனப்படும்.

(ப—ரை) ஆயின் = அற்றேல், இவணம் முனிவன் = இவ்வாறு யோகியானவன், வாதனையும் பிரமவானந்தந்தன்னில் நின்றும் அயல் = வாசனானந்தத்தினும் பிரம்மானந்தத்தினும் வேருக, நிசானந்தம் அறிக = நிஜானந்தத்தினை உணருக, இவண்கயவற்கு என்கதி ஆம் = ஈண்டுமூடனுக்கு யாது வழி [சீடனுல்இவ்வாறு வினவப் பட்ட குருவானவர் அத்தியந்தம் மூடனுக்கு வித்தையில் அதிகாரமே இல்லையெனக்கூறுகின்றார்] இவன் தரும அதன்மவயத்து = இந்த அதிமூடனானவன் புண்ணியபாப கரும வசத்தால், ஓயாது இலக்கம் உடல்எடுக்க = மீண்டும் மீண்டும் அனேக தேகங்களைத்தரிக்குக,மாய = அத்தேகங்களைவிடுக, நம் தாக்ஷிணியத்தால் என்னை கொல் = நம்முடைய தாக்ஷிணியத்தினுல் யாது பிரயோஜனம், அறைதி = சொல்லுவாய், அதிமூடன் அனுதியாகிய சமுசாரத்தில் சென்ற அனேக சென்மங்களில் அநுட்டிக்கப்பட்ட புண்ணியபாப கரும வசத்தால் நானுப்பிரகாரமான தேகங்களை சுவீகரித்தலால் மீண்டும் மீண்டும் பிறப்பையும் இறப்பையும் அடைவன் என்பது பொருள். [சகலருக்கும் அனுக்கிரகிக்குந்தன்மையுண்மையால் ஆசாரியரால் அவனுக்கும் ஒரு வழி சொல்லத்தக்கது என்று சிஷ்யன் கூறுகின்றுன்] அருள் செய்மா இச்சையுடைமையினுல் = அனுக்கிரகிப்பதில் மிகுந்த ஆசையுடைய தாந்தன்மையால், தங்கள் ஆயதாக்ஷிணியத்தால் = தங்களுக்கு உரித்தாகிய தாக்ஷிணியகுணத்தினுல், இங்கு பயன்உளது = ஈண்டு சிஷ்யனை உத்தாரணம் செய்தல் வடிவ பிரயோசனம் இருக்கின்றது [இவ்வாறு சீடனது வாக்கியத்தைக் கேட்டுக்குருவானவர் அவனை விகற்பித்து வினவுகின்றார்] ஆயின் = அப்படியானுல், அம்மூடன் = அந்த அஞ்ஞனனவன், சிஞ்ஞாசோபகிர் முகனே = ஆன்மாவை அறியும் வேட்கையுடையவனு அல்லது வெளிப்பிரவிருத்தியையுடையவனு, அறைவாய் = சொல்லுவாய் எ—று.

மூடனுக்கு ஒருவழி சொல்லத்தக்கதாமேல் அவன் இராகியா விரக்தனு என்பது பொருள். தாக்ஷிணியம் = பிறரது இச்சையை அனுசரித்துச் செல்லுதல். 1

(அ—கை)

இச்சையுடையவனுயின் அவனது இச்சையின் அனுசாரமாகக் கருமமாவது உபாசனையாவது உபதேசிக்கத்தக்கது என்று முதற் பக்ஷத்தில் பரிகாரங் கூறுகின்றார்.

விமுகனுக்கு வுரியவுபாத் தியதலது வினையே
விளம்பிடுக மந்தவறி வுறுசிஞ்ஞா சுவையோ
வமுதவான் மானந்த மதுகொடறி விக்கவரு
யாஞ்ஞ வற்கியர்மைத் திரேயிதன்ற யகியை
யமைபதியின் பொருட்டரே பதிபிரிய மிலனென்
றறைந்தறிவித் தனர்கேள்வன் மனைவிமகன்
றனமே
விமலபசு மறையவர்வா குசர்லோகந் தேவர்
விரியுமறை பூதமெலாந் தன்பொருட்டே பிரியம். 2

(ப—ரை) விமுகனுக்கு=பகிர்முகமுடைய புருஷனுக்கு, உரிய உபாத்தியது = உரித்தாகிய உபாசனையையாவது, அலதுவினை = அல்லது கருமத்தையாவது, விளம்பிடுக = கூறுக, பிரம்மலோகம் முதலியவற்றில் இச்சையுடையவனுயின் உபாசனையை உபதேசிப்பாய் சொர்க்கம் முதலியவற்றில் இச்சையுடையவனுயின் கருமத்தை உபதேசிப்பாயென்பது பொருள். [ஜிஞ்ஞாசுவென்னும் இரண்டாவது பக்ஷத்திலும் அந்த ஜிஞ்ஞாசு அதிவிவேகியா? அல்லது மந்தமதியனு என்று விகற்பித்து அதிவிவேகிக்கு முன் அத்தியாயத்தில் சொல்லிய பிரகாரத்தால் யோகத்தால் பிரம்ம சாக்ஷாத்காரமுண்டாகுமென்று அபிப்பிராயஞ்செய்து மந்தமதியனுக்கு பிரம்மதெரிசனத்தின் உபாயத்தைக் கூறுகின்றுர்] மந்த அறிவு உறு ஜிஞ்ஞாசுவையோ = மந்தபுத்தியினையுடையவனும்அறியும் வேட்கையினையுடையவனுமாகிய சீடனையோ, அமுத ஆன்மானந்தமது கொடு = அமிர்தவடிவ ஆன்மானந்தத்தின் விசாரத்தால், அறிவிக்க=உணர்த்துக,[இவ்வாறு ஆன்மானந்தத்தினுல் எவரால் எவர் போதிக்கப்பட்டனர் எனிற் கூறுகின்றுர்] அருயாஞ்ஞவற்கியர் = பெரிய யாஞ்ஞவற்கியர் எனப் பெயரிய ரிஷியானவர், மைத்திரேயிதன் நாயகியை=மைத்திரேயி என்னும் பெயருள்ள தனது பத்தினியை, அமைபதியின் பொருட்டு அரேபதிபிரியம் இலன் = தனக்கு அமைந்த கணவனது சுகத்தின் பொருட்டு மைத்திரேயிகணவன் விருப்பத்திற்கு விஷயமாகான் மற்றே தனது சுகத்தின் பொருட்டே, என்று அறைந்து அறிவித்தனர் = என்று இவ்விதம் கூறி ஆன்மானந்தத்தைப் போதிப்பித்தனர், பரமப் பிரேமைக்கு விஷயமாந்தன்மையால் பரமானந்த சொரூபமாக ஆன்மா

அங்கீகரிக்கத்தக்கது என்னும் பின்னுள்ள வாக்கியத்தால் பரமப் பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ ஏதுவால் ஆன்மாவிற்கு பரமானந்த வடிவத்தைச் சாதிக்க இச்சையுடையவராய் முதலில் பரமப் பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ ஏதுவை சமர்த்தித்தற்பொருட்டு மேல் எடுத்துக் காட்டிய வாக்கியத்தை உபலக்ஷணபரமாகக் கருதி அப்பிரகரணத்திலுள்ள எல்லாப்பரியாய வாக்கியங்களின் தாத்பரியத்தைக் கூறுகின்றார். கேள்வன் மனைவி மகன் தனம் = பதியும் பத்தினியும் புத்திரனும் பொருளும், விமலபசு மறையவர்வாகுசர் = நல்ல பசுவும் பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும், லோகம் தேவர் = சொர்க்காதிலோகங்களும் இந்திராதி தேவர்களும், விரியும் மறைபூதம் எலாம் = விரிந்த வேதங்களும் பிசாசுகளும் ஆகிய அனைத்தும், தன் பொருட்டே பிரியம் = தனது ஆனந்தத்தின் நிமித்தமாகவே விரும்பப் படுகின்றன எ—று.

போக்கியமனைத்தும் போக்தாவிற்கு அங்கமாவதால் போக்தாவின் சம்பந்தத்தாலேயே பிரியமாகின்றது சொரூபத்தால் அன்று என்பது தாற்பரியம்.

உபாதி = உபாசனை, உபாத்தி என்பதில் தகரம்தோன்றல் விகாரம். 2

(அ—கை)

இப்போது முன் எடுத்துக் காட்டிய "பதியின் பொருட்டு அரேபதிபிரியன் இலன் தனது சுகத்தின் பொருட்டே பதிபிரியனாவன்" என்னும் வாக்கியத்தின் தாத்பரியத்தை வேறு பிரித்து உணர்த்துகின்றார்.

பதியைமனை விழைபொழுதங் கவள்பிரியம் புரிவள்
பதியவன்வெம் பசியனுட்டா னம்நோயா னவனே
லதுசமயம் விழைவதிலை யப்பிரியம் பதிக்கன்
றன்பைத்தன் பாலேசெயும் பதியுந்தனின் பொருட்டே
முதல்விபொருட் டொருபொழுது மிலையொருவர்க் கொருவர்
முயல்வுறினு மிவணந்தம திச்சைகொடே முயல்வர்
சிதைமயிர்முட் படப்பால னழுமுத்தந் தாதை
செய்வனவ்வன் பவன்பொருட்டே குழவிபொருட்
டன்றால். 3

(ப—ரை) பதியை மனைவிழைபொழுது = கணவனை பத்தினி ஆனவள் இச்சிக்குங்காலத்தில், அங்கு அவள் பிரியம்புரிவள் = அப் பதியினிடத்து அம்மனைவி சினேகத்தைச் செய்வாள், அப்பதி அவன் = அக்கணவனாகிய புருடன், வெம்பசி அனுட்டானம் நோயானவனேல் = (இச்சையின்மைக்குக்காரணமான) கொடிய பசி தொழில் வியாதி இவைகளையுடையவனாயின், அதுசமயம் விழைவது இலை = அப்போது அப்பதி அவளை இச்சிப்பதின்று [இவ்வாறாயின் என்னை சித்தித்தது எனிற் கூறுகின்றார்] அப்பிரியம் பதிக்கு அன்று = (மனைவியால்செய்யப் படுகின்ற) அந்த சிநேகம் பதியின் பிரயோஜனத்தின் பொருட்டன்று, மற்றோ, அன்பை தன்பாற் செய்யும் = பதியினிடத்து சிநேகத்தை மனைவியானவள் தனது பிரயோசனத்தின் பொருட்டே செய்வாள், ["மைத்திரேயிமனைவியின் சுகத்தின் பொருட்டு மனைவி விரும்பப்படுகிற தில்லை மற்றோ தனது சுகத்தின் பொருட்டே விரும்பப்படுகிறாள்" என்பது முதல் "சகல பதார்த்தங்களின் சுகத்தின் பொருட்டு சகலமும் விரும்பப்படுவதின்று மற்றோ தனது சுகத்தின் பொருட்டே சகலமும் விரும்பப்படுகின்றது" என்பது பரியந்தமான வாக்கியங்களின் தாத்பரியத்தைக் கிரமமாக வேறு பிரித்துக் காண்பிக்கின்றார்] பதியும் தன்பொருட்டே = கணவனும் மனைவியினிடத்துப்பிரியத்தைச்செய்வது தனது சுகத்தின் பொருட்டேயாம், முதல்வி பொருட்டு ஒரு பொழுதும் இலை = மனைவியின் பொருட்டு ஓர் போதுமின்றாம், [பதி பத்தினிகளில் ஒவ்வொருவரது இச்சையால் பிரவிருத்திக்கும்போது பிரியம் தன் பொருட்டாகுக, ஒரே காலத்து இருவரது இச்சையால் பிரவிருத்திக்கும் போது பிரியம் இருவரின் பொருட்டாகுமே என்று சங்கித்துக் கூறுகின்றார்] ஒருவருக்கு ஒருவர் முயல்வுறினும் = பதியும் பத்தினியும் பரஸ்பரம் பிரவிருத்தி செய்யினும், இவணம் தமது இச்சை கொடே முயல்வர் = கூறியபிரகாரமாக தமது சுகவாஞ்சையினாலேயே இருவரும் பிரவிருத்திப்பர் [தமது இச்சை கொடே முயல்வர் என்பதனையே தெரிவிக்கின்றார்] சிதை மயிர் முள்படபாலன் அழுக = வருத்துகின்ற முகமயிராகிய முள்குத்த அதனால் குழந்தை அழுக, தாதை முத்தம் செய்வன் = பிதா குழந்தையின் முகத்தைச் சும்பனஞ் செய்வன், அவ் அன்பு அவன் பொருட்டே = அந்தப் பிரியம் பிதாவின் சுகத்தின் பொருட்டேயாம், குழவி பொருட்டு அன்று = பிள்ளையின் பொருட்டு அல்ல எ—று.

ஆல்—அசை நிலை.

பிதாவினுல் செய்யப்படுகிற புத்திரனது முகம் முதலியவற்றின் சும்பனம் புத்திரப்பிரீதியின் பொருட்டல்ல. புத்திரன் முள்போன்று மயிர் குத்துவதனுல் அழுவுவதால். ஆகையால் அம்முகசும்பனம் பிதாவின் சந்தோஷத்தின் பொருட்டேயாம் என உணரத்தக்கது என்பது பொருள்.

அழுக என்பது அழு என கடைக் குறையாயிற்று.

சும்பனம் = முத்தமிடுதல். 3

(அ—கை)

சேதனர்களான கணவன் மனைவி மகன் ஆகிய இவர்களிடத்தில் செய்யப்படுகிற பிரியத்தில் தன் பொருட்டா பிறர் பொருட்டா என்று சந்தேகம் சம்பவிக்கும். அசேதனத்தன்மையால் இச்சையே இன்றிய தனவிஷயகமான பிரியத்தில் அச்சங்கையே இல்லையென்று அபிப்பிராயப்பட்டு "மைத்திரேயி தனத்தின் சுகத்தின் பொருட்டு தனத்தில் பிரியமுண்டாகிறதில்லை. மற்ருே தனதுசுகத்தின்பொருட்டே தனத்தில் பிரியமுண்டாகிறது" என்னும் வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்ருர்.

ஆசையிலா தாயினுமே மணியாதி தனத்தை
யருமுயல்வாற் சேமித்தன் பினையாற்று மதுதான்
காசினுக்கென் றறையவொணுத் தன்பொருட்டாங் காலை
காதலியா தெனும்வலுவாற் சுமையதனை யெடுப்ப
வாசையுறு மப்பிரியம் வணிகனுக்கே யெருத்திற்
காதலெங்கே பிராமணிய மெனக்குளயான் பூச்யன்
மாசிலெனப் பூசையினுன் மகிழ்வனந்த மகிழ்வோ
மடச்சடப் பெற்றியினுக்கில்லை புருடனுக்கே யாமால். 4

(ப—ரை) ஆசையிலாது ஆயினும் = இச்சையின்றியதாயினும், மணியாதிதனத்தை = இரத்தினம் முதலிய பொருளை, அரும் முயல்வால் சேமித்து = பெரியபிரயத்தினத்தாற் காப்பாற்றி, அன்பினை ஆற்றும் = அத்தனத்திற் பிரியத்தைச் செய்வன், அது காசினுக்கு என்று அறைய ஒணு = அந்தப்பிரியம் தனத்திற்காக என்று கூற இயலாது, மற்ருே, தன் பொருட்டு ஆம் = தனது சுகத்தின் பொருட்டேயாம், [சேதனப்பிராணிகளிடத்திலும் மூட்டை தாங்குவதற்கு இச்சையின்றிய

எருது விஷயகமான "பசுக்களின் பொருட்டன்று" என்னும் வாக்கியத்தின் தாற்பரியத்தைக்கூறுகின்றார்] காளைகாதலியாதேனும் = இடபம் மூட்டை தூக்குவதற்கிச்சை செய்யாதாயினும், வலுவால் சுமையதனை எடுப்ப ஆசையுறும் = பலாற்காரத்தால் பாரத்தைச் சுமப்பிக்க இச்சை செய்வன், அப்பிரியம் வணிகனுக்கே = சுமத்தலை விஷயமாகவுடைய அந்தப் பிரீதியானது வியாபாரியின் சுகத்தின் பொருட்டேயாம், எருத்திற்கு ஆதல் எங்கே = இடபத்தின் பொருட்டுப் பிரியம் ஏது, [பிராமணசாதியின் பொருட்டன்று என்னும் வாக்கியத்தின் தாற்பரியங் கூறுகின்றார்] பிராமணியம் எனக்கு உள யான் பூச்யன் = பிராமணத்தன்மைச் சாதி எனக்கு இருக்கிறது; ஆதலால் நான் ஆராதிக்கத்தக்கவன், என மாசு இல் பூசையினால் மகிழ்வன் = என்று குற்றமற்ற ஆராதனையால் சந்தோஷிப்பன், அந்த மகிழ்வோ மட சடப் பெற்றியினுக்கு இலை = அந்த சந்தோஷமோ அறியாமை வடிவ சடத்தன்மைச்சாதிக்கு இன்றாம், மற்றோ, புருடனுக்கேஆம் = அந்த சாதியினையுடைய ஆடவன் பொருட்டேயாம் எ—று.

பிராமணத்தன்மைச் சாதியை நிமித்தமாகவுடைய பூசையால் யான் பிராம்மணன் என்னுமபிமானமுடைய புருடனே சந்தோஷத்தை அடைகின்றான், சடமாகிய பிராம்மணத் தன்மைச்சாதி சந்தோஷத்தை அடைகிறதில்லை என்பது பொருள்.

ஆல்—அசை.

காதலியாதேனுமென்பது இசையைக்குறித்து காதலியாதெனும் எனக் குறுகிற்று. 4

(அ—கை)

க்ஷத்திரியத் தன்மைச் சாதியின் பொருட்டு க்ஷத்திரியத்தன்மை பிரியம் அன்று என்பது முதலிய வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்.

ஆகுமகம் க்ஷத்திரிய னதனுனே யரசை
யாற்றிடுவ னெனுமிடத்த ராஜதை ஜாதிக்கின்
றாகுமிது வயிசியத்வ மாதியிற்கூட் டிடவே
யறைந்ததுவா மயன்றேவ ருலகமெனக் குறவென்

மோகமுல கவற்றுபகா ரக்கலகே வலந்தன்
முதுபோக மதுதனக்கே சிவனரியா தியரா
மாகமறுந் தேவரவ மறத்தொழவே படுவா
ரதுவகமின் றியதேவர்க் கன்றுதனக் காமே. 5

(ப—ரை) அகம் க்ஷத்திரியன் ஆகும் = நான் க்ஷத்திரியத் தன்மைச் சாதியுடையவனுவேன், அதனுன் அரசை ஆற்றிடுவேன் எனுமிடத்து = அக்காரணத்தால் இராச்சியத்தை ஆளுகின்றேனென்று சொல்லுமிடத்து, அராஜதை ஜாதிக்கு இன்ரும் = அரசு புரிதலால் உண்டாகும் சுகம் க்ஷத்திரியத் தன்மைச் சாதிக்கு இன்ரும். மற்ரே அதனையுடைய புருடனுக்கேயாம், [இது வைசியர் முதலானவர்க்கும் உபலக்ஷணத்தின் பொருட்டாமெனக் கூறுகின்ருர்] இது = க்ஷத்திரிய திருஷ்டாந்தம், வயிசியத்வம் ஆதியில் கூட்டிட அறைந்ததுவாம் = வைசியத்தன்மைச் சாதி முதலியவற்றில் பொருத்தும் பொருட்டுக் கூறினதாம், [“உலகங்களின் சுகத்தின் பொருட்டன்று” என்பது முதலிய வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்ருர்] அயன் உலகம் தேவர் உலகம் எனக்கு உற என் மோகம் = பிரம்மலோகமும் தேவ லோகமும் எனக்குக் கிடைக்குக என்று இச்சித்தல், உலகவற்று உபகாரக்கு அல = அவ்வுலகங்களின் உதவியின் பொருட்டல்ல, மற்ரே, கேவலம் தன்முதுபோகமது தனக்கே = கேவலம் தனது பெரிய போகத்தின் பொருட்டேயாம், மற்றும், ஆகம் அறும் சிவன் அரிஆதியாம் தேவர் = பௌதிக உடலின்றிய பரமேஸ்வரன் விஷ்ணு முதலான தேவர்கள், அவம் அறதொழப்படுவார் = பாபம் நீங்குதற் பொருட்டு பூசிக்கப்படுவார், அது அகம் இன்றிய தேவர்க்கு அன்று = அந்தப் பூசை இயல்பாகவே பாபமின்றிய தேவரது சுகத்தின் பொருட்டன்று, மற்ரே, தனக்கு ஆம் = பூசை செய்கின்ற தனது சுகத்தின் பொருட்டாம். எ—று.

அகம் அறும் என்பதற்கு தம்மை ஆராதிக்கின்றவரது சென்மத்தை நிவர்த்திக்கின்ற எனவும் பொருள் அமையும்.

ஏ—மூன்றும் அசைநிலைகள்.

உபகாரத்திற்கு என்பது உபகாரக்கு என அத்துச்சாரியை குறைந்து வந்தது. 5

(இதுவுமது)

வரலறத்துர்ப் பிராமணிய மிருக்காதி படிக்கும்
வளமறைக டமின்மருவா மனுடரிலே மருவு
மிருமிடந்தா கம்பாக முலர்ச்சியவ காச
வேதுவினுற் பூவாதி யைந்தும்விரும் புதலாந்
தாவிவற்றின் காரணமன் றிறையடிமை யாதி
சருவமுந்தன் னிதந்தனக்கே விழைவுதனை யுறுமா
லரியவது வதுகிருத வுபகார மதுவோ
வதுவதற்கின் றெனவறிக வீரகுரு வருளால். 6

(ப—ரை) துர்ப்பிராமணியம் வரல் அற = விராத்தியத் தன்மை வருவதை நீக்கும் பொருட்டு, இருக்கு ஆதிபடிக்கும் = இருக்கு முதலிய வேதங்களை அத்தியயனஞ் செய்கின்றூர்கள், வளமறைகள் தமில் மருவா = (மனுடத்தன்மையின் அவாந்தரஜாதிவடிவ துர்ப்பிராமணியம் மனுடத்தன்மை ஜாதியின்றிய) வளப்பம் பொருந்திய வேதங்களில் சம்பவியாது, மற்றே, மனுடரிலே மருவும் = மனிதர்களிடத்தில் பொருந்தும், மற்றும், இரும் இடம் தாகம் பாகம் உலர்ச்சி அவகாச ஏதுவினுல் = பெரிய இடத்தைக் கொடுத்தலும் நீர்விடாயை சாந்தி செய்தலும் பாகத்தைச் செய்தலும் உலர்தலைச் செய்தலும் அவகாசத்தைக் கொடுத்தலுமாகிய நிமித்தங்களால், பூஆதி ஐந்தும் = பிருதிவி முதலிய பஞ்சபூதங்களையும், விரும்புதலாம் = சகல பிராணிகளும் அபேக்ஷிக்கின்றூர்கள், தர இவற்றின் காரணம் அன்று = பெரிய இப்பஞ்சபூதங்களின் பிரயோஜனத்தின் பொருட்டன்று பிருதிவி முதலிய பூதங்களுக்கு இடத்தைக் கொடுத்தல் முதலிய ஏதுக்களில்லை, ஆகையால் சுயம் இச்சிக்கின்றதில்லை என்பது பொருள். [இப்போது "சகலத்தின் சுகத்தின் பொருட்டு" என்னும் வாக்கியத்தின் தாத்பரியத்தைக் கூறுகின்றூர்]

இறை அடிமையாதி சருவமும் = சுவாமி சேவகன் முதலிய எல்லா ஜனங்களும், தன் இதந்தனக்கே விழைவுதனை உறும் = ;தமது சுகத்தின் பொருட்டே இச்சையைச் செய்வார்கள், அரிய அது அது கிருத உபகாரமது = அருமையாகிய அந்தந்தப் பிராணியாற் செய்யப்பட்ட பிரயோசனமானது, அது அதற்கு இன்றுஎன = அந்தந்த பிராணிக்கு இல்லை என்று, வீர குரு அருளால் அறிக = சிறந்த தேசிகரது கிருபையால் உணருக எ—று.

சுவாமி முதலானோர் சேவகன் முதலானோரையும் சேவகன் முதலானோர் சுவாமி முதலானோரையும் தத்தம் உபகாரத்தின் பொருட்டு வாஞ்சிக்கின்றனர். அவரவர் செய்த உபகாரமோ அவரவரிடத்து இன்றாம் என்பது பொருள். ஆல்—அசை. 6

(அ—கை)

அற்றேல் சுருதியில் இவ்வாறு அனேக திருஷ்டாந்தங்களைக் கூறுதல் எப்பிரயோஜனத்தின் பொருட்டு என்று சங்கித்துக் கூறுகின்றார்.

சகலதொழில் களிலிவண மெண்ணுதற்கா யிவிதோ
  தாகரணம் பலதன்மதி மணப்பிக்க வதனு
லிகதனதான் மாவிலெவ்வன் பதுகேட்கு மிதுவென்
  னிராகம்வது வாதியின்கட் சிரத்தைமகா தியினே
தகுமன்பு குருதெய்வத் திச்சைகிட்டாப் பொருளிற்
  றரமாயிற் சுகமேயாய் சாத்துவிகீ விருத்தி
யகம்பெறலீ றினுமிருத்த லானசையி னயலாமன்
  னுதி பிரியம்சுக வேதுவுபா தியினே. 7

(ப—ரை) சகல தொழில்களில் = (இச்சையை முன்னிட்டதான போசனாதி, எல்லா வியாபாரங்களிலும், இவணம் எண்ணுதற்காய் = (தனது சுகத்தின் பொருட்டே சகலமும் பிரியமாகின்றது என்று) கூறிய பிரகாரமாய் அனுசந்தானஞ் செய்யும் பொருட்டு, இவித பல உதாகரணம் = இந்தப் பிரகாரம் (பதிபத்தினி முதலியவற்றில் பிரியத்தைக் காட்டல் வடிவ) அநேக திருஷ்டாந்தங் கூறப்பட்டது, அதனுல் தன் மதிமணப்பிக்க = அக்காரணத்தால் தனது புத்தியை வாசனையோடு கூடியதாய் ஆக்குக, மனைவி முதலிய அனைத்தையும் ஆன்மாவிற்கு அங்கமாக அறிதலால் ஆன்மாவில் பிரியதமத்துவ அநுசந்தானமுடையதாகச் செய்யவேண்டுமென்பது பொருள், [அற்றேல் ஆன்மாவிற்கு அங்கமாகுந் தன்மையால் சகலமும் பிரியமாம் என்று கூறி ஆன்மாவிற்கு பிரிய தமத்துவத்தைச் சொல்லுதல் பொருந்தாது பிரீதியை விகற்பிக்கும்போது பிரீதியை நிரூபிக்க முடியாமையின் என்னும் அபிப்பிராயத்தால் பிரீதியின் சொருபத்தை வினவுகின்றான்] இகதனது ஆன்மாவில் எவ்அன்பது கேட்கும் =

ஈண்டு தனது ஆன்மாவினிடத்து யாதொரு பிரீதி கேட்கப்படுகிறதோ, இது என் = இந்தப்பிரீதியானது யாது, இராகவடிவமா அல்லது சிரத்தைவடிவமா அல்லது பக்திவடிவமா அல்லது இச்சை வடிவமா [இந்த நான்கு பக்ஷங்களிலும் பிரீதிக்கு சர்வ விஷயகத்தன்மை சம்பவியாதெனக் கூறுகின்றார்] இராகம் வதுவாதியின்கண் = இராக மாமேல் ஸ்திரீ முதலானவர்களிடத்திலேயே உண்டாகும் யாகாதியில் உண்டாகாது, சிரத்தை மகாதியின் = சிரத்தை யாமேல் யாகாதியிலே உண்டாகும் ஸ்திரீ முதலானவர்களிடத்தில் உண்டாகாது, அன்பு தகு குருதெய்வத்து = பக்தியாயின் மேன்மையான ஆசாரியர் தேவதை முதலானவரிடத்து உண்டாகும். மற்றவரிடத்தில் அன்று, இச்சை கிட்டாப்பொருளில் = இச்சையாயின் அடையப்படாத வஸ்துவில் உண்டாகும் மற்றவற்றில் அன்று, ஆகையால் பிரீதி சகல விஷயம் உடையதன்று, [கூறிய நான்கு பிரகாரத்தினும் வேறானபக்ஷத்தைக் கிரகித்து உத்தரங்கூறுகின்றார்] தரமாயின் = இவ்வாறு ஆமேல், அஃதாவது பிரியம் இராகாதி வடிவமன்றாயின், சுகம் ஏய்சாத்துவிகீ விருத்தி = சுகமாத்திரத்தை அனுசரிக்கின்ற சத்துவ குணத்தின் பரிணாமவடிவ அந்தக் கரணத்தின் விருத்தி பிரீதியாகுக [அப்படியாயின் சுகமாத்திரத்தைக் கோசரிக்கும் அந்தப்பிரீதி இச்சையே யாம் என்று ஆசங்கித்துப் பரிகரிக்கின்றார்] அகம் பெறல் ஈறினும் இருத்தலால் = வஸ்து அடையப்படினும் நஷ்டமாயினும் பிரியமிருத்தலால், நசையின் அயலாம் = (அப்பிராப்த சுகாதிமாத்திரத்தை விஷயமாகவுடைய) ஆசையினும் வேறாம், [இப்போது சுகசாதனமாயுள்ள அன்னாதிகளிற் போல் ஆன்மாவிலும் பிரீதி காண்டலால் ஆன்மாவும் அன்னாதி போன்று சுகசாதனமாம் என்று வினவுகின்றான்] அன்னாதி சுக ஏது உபாதியினே பிரியம் = அன்னபானம் முதலியவைகள் சுகசாதனத் தன்மை உபாதியால் எவ்வாறு பிரியமோ அவ்வாறு,

பிற்கவியோடு முடியும். 7

இதமதினான்மா வன்னமுன்னை டொப்பே லீண்டென்
னிதனானே யிதத்வவிட யம்மேக மதன்பாற்
பொதிகரும கருத்ருதையில் வயிஷயிக சுகத்தே
புகும்பிரிய மாத்திரந்தா னேவதிகப் பிரிய

மிதுசுகத்திற் பிறழுமான் மாவிலே பிறழா
வேகவயி ஷயிகசுக மெறிந்தயலெப் போதுந்
துதையுமான் மாவிடவுங் கோடவுமோ கூடா
தூயவதி லெங்ஙனமாம் பிறழ்ச்சிசுக மகனே. 8

(ப—ரை) இதமதின்=பிரியமாவதால், ஆன்மா அன்னம் முன்னெடு ஒப்பேல்=ஆன்மாவும் அன்னபானுதிகளைப் போன்று சுகசாதனமாமென்னின், ஈண்டு இவ்வநுமானம் சூசிப்பிக்கப்பட்டது. விவாத விஷயமான ஆன்மா சுகசாதனமாதற்கு யோக்கியம் பிரியத்திற்கு விஷயமாவதால், அன்னம் முதலியவற்றினைப் போன்று எனின், [கூறிய இவ்வநுமானத்தில போக்கியத்தன்மை உபாதியாம் அதாவது அன்ன முதலிய திருஷ்டாந்தத்தில் போக்கியத்தன்மை உளது. இஃது சாத்திய வியாபகமாம் ஆன்மாவாகிய பக்ஷத்தில் போக்கியத்தன்மையின்ரும் இஃது சாதன அவ்வியாபகமாம் ஆதலால் உபாதியாம் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர்] ஈண்டு = இவ் உலகில், இதனுனே = சுகசாதனத் தன்மையால் அநுகூலமான ஆன்மாவால், இதத்வவிடயம்என்=உபகரிக்கத்தக்க வஸ்து யாது, யாதொன்றுமின்ரும் ஆன்மாவினும் வேருக போக்தா இல்லாமை யாலென்பது பொருள், [அற்றேல் தானே உபகரிக்கத்தக்கவஸ்துவா மெனிற் கூறுகின்ருர்] ஏகமதன்பால் கருமகருத்திருதை பொதியில் = ஒரே ஆன்மாவில் ஒரே காலத்தில் போக்கியத் தன்மையும் போக்திருத் தன்மையுமாகிய இருதருமம்பொருந்துவதின்ரும், விருத்தமாமென்பது பொருள். [ஆனுல் அன்னுதி போன்று சுகசாதனத்தன்மையில்லை யாயினும் சுகம் போன்று, போக்தாவிற்கு அங்கமாந்தன்மையாகுமே என்ரு சங்கித்து ஆன்மா நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாவதால் போக்தாவிற்கு அங்கமன்றெனப் பரிகரிக்கின்ருர்] வயிஷயிகசுகத்தே பிரியம் மாத்திரம்புகும் = விஷய ஜன்னிய ஆனந்தத்தில் பிரீதி மாத்திரமுண்டாகும், நிரதிசயப்பிரியமன்று, தானே அதிப்பிரியம் = ஆன்மாவோ நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாம், ஆதலால் விஷய ஜன்னிய சுகத்தோடு சமானமன்று, [பிரியம் நிரதிசயப்பிரியம் என்னும் இரண்டிலும் யுத்தியைக் கூறுகின்ருர்] சுகத்தில் = விஷய ஜன்னிய சுகத்தில், இது=உண்டாகிற பிரீதி, பிறழும்=வியபிசாரத்தை அடையும், ஆன்மாவிற் பிறழா=தன்னிடத்திலுள்ள பிரீதி வியபி

சாரத்தை அடையாது. ஆதலால் நிரதிசயமாம் [விஷய சுகத்தை கோசரிக்கும் பிரீதிக்கு வியபிசாரத்தைக் காட்டுகின்றார்] ஏகவயிஷயிக சுகம் எறிந்து = ஒரு விஷய ஜன்னிய ஆனந்தத்தைவிட்டு, எப்போதும் அயல் துதையும் = இடைவிடாமல் அன்னிய விஷயத்தைப் பற்றுவன் [ஆன்மாவில் வியபிசாரத்தின் அபாவத்தைக் காண்பிக்கின்றார்] ஆன்மா விடவும் கோடவும் கூடா = தனது சொரூபத்தைத் தள்ளவும் கொள்ளவும் முடியாது, யோக்கியதை இன்மையால் என்பது பொருள் [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] தூய அதில் எங்ஙனம் பிறழ்ச்சி ஆம் = பரிசுத்த ஆன்மாவில் எப்படி பிரியம் வியபிசாரத்தை அடையும், அடையாதென்பது பொருள், சுகமகனே = நன்மைந்தா எ—று.

ஓ—அசை.

உபாதியாவது சாத்தியத்தின் வியாபகமாயும் சாதனத்தின் அவ்வியாபகமாயும் இருப்பது எதுவோ அது. பிரகிருதத்தில் சாத்தியம், சுகசாதனத்தன்மை அது இருக்கிற இடமெல்லாம் போக்கியத்தன்மையாகிய உபாதி உளது. இது சாத்திய வியாபகமாம், சாதனம், பிரியம், அது ஆன்மாவில் உளது, போக்கியத் தன்மையாகிய உபாதி இன்று. ஆகையால் சாதனத்தின் அவ்வியாபகமாம். சாத்தியமிருக்குமிடம் எல்லாம் உபாதி இருப்பது சாத்திய வியாபகமாம். சாதனமிருக்குமிடமெல்லாம் உபாதி இல்லாமலிருப்பது சாதன அவ்வியாபகமாம்.

வியபிசாரம் = ஒன்றைவிட்டு மற்றொன்றில் செல்லுதல், அதிலேயே நியதமாயிராதது. 8

(அ—கை)

ஆன்மா தள்ளுதல் முதலியவற்றிற்கு விஷயமாகாவிடினும் துரும்பு முதலியவற்றைப்போன்று உபேக்ஷைக்கு விஷயம் ஏன் ஆகாது என வினவுகின்றான்.

உறலறவில் லிதிற்றிருணம் புரையவுபே க்ஷையதே
 லுபேக்ஷயற்கு நிசவடிவ சொரூபமா தலினு
லுறுவதின்று பேக்ஷியத்வ நோய்கோப மிகுவோர்க்
 கோர்காலே சாவாவல் காணலினுல் வெறுப்பா

லறிவான்மா வீடலா மெனினஃதின் றெறியவா
மாகமான் மாவன் றெறிபவற்கே யஃதாம்
பெறுமவ்வெறுப் பெறிபவன்பா லிலையாகும் விடலாம்
பெருந்தூலத் தவ்வெறுப்பே லானியென்னே மன்னே.
9

(ப—ரை) உறல் அறல் இல் இதில் = கொள்ளுதலும் தள்ளுதலும் இன்றிய இவ்வான்மாவில், திருணம் புரையஉபேக்ஷையதேல்= துரும்பிற்போல உதாசீனத்தன்மை உளதெனின், [ஆன்மா கொள்ளுதல் முதலியவற்றிற்கு விஷயமாகாமைபோல உபேக்ஷையின் விஷயமும் சம்பவியாது. அயோக்கியமாவதால் என்னும் அபிப்பிராயத்தால் பரிகரிக்கின்றார்] உபேக்ஷையற்கு நிசவடிவ சொரூபம் ஆதலினால் = உபேக்ஷை செய்பவனுடைய யதார்த்த வடிவம் தனது சொரூபம் ஆவதால், உபேக்ஷியத்வம் உறுவது இன்று=தன்னின் வேறான திருணதியிற்போன்று உபேக்ஷையின் விஷயத்தன்மை பொருந்துவதில்லை, [ஆனால் தியாக விஷயத்தன்மை ஆன்மாவிற்கு இல்லை என்று சொன்னது பொருந்தாது வெறுப்பால் ஆன்மாவை தியாகஞ் செய்தலைக் காண்டலால் என்று வினவுகின்றான்] நோய் கோபம் மிகுவோர்க்கு=வியாதியும் குரோதமும் அதிகரித்தவருக்கு, ஓர்காலை சாவ ஆவல் காணலினால்=ஓர்போது இறக்க இச்சை பார்க்கப்படுவதால், வெறுப்பால் அறிவு ஆன்மா வீடலாம் எனின் = துவேஷத்தால் சேதன ஆன்மாவையும் விருச்சிகம்போன்று தள்ளலாமென்று சொல்லின், [அந்தத் தியாகத்திற்கு ஆன்மாவினும் வேறான தேகம் விஷயமாவதால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்] அஃது இன்று = நீ சொல்லுவது சரியல்ல,எறியவாம்ஆகம் ஆன்மாவன்று = தள்ளுதற்கு யோக்கியமான தேகம் ஆன்மாவல்ல, மற்றே, எறிபவற்கு அஃதாம் = தேகத்தைத் தியாகஞ் செய்கின்ற தேகத்தினும் வேறான சீவனுக்கு ஆன்மத்தன்மையாம், சீவனே ஆன்மாவாமென்பது பொருள், [எறிபவனுக்கு ஆன்மத்தன்மை ஆகுக. பிரகிருதத்தில் வந்தது என்னையெனிற் கூறுகின்றார்] பெறும் அவ்வெறுப்பு = தான் அடைந்துள்ள அந்தத் துவேஷம், எறிபவன் பால் இலையாகும் = தியாகஞ்செய்யும் சீவனிடத்து இன்றாம்,ஆதலால் ஆன்மா தியாச்சியமன்றாம்,[ஆன்மாவில் துவேஷம் இல்லாதொழிக தேகத்திலே தோற்றுகிறதே என்று சங்கித்துக் கூறுகின்றார்]விடலாம் பெரும் பூதத்து அவ்வெறுப்பேல்= தள்ளத்தக்க

தாகிய தூல சரீரத்தில் அந்தத் துவேஷம் உளதெனின், ஆனிஎன் = (ஆன்மாவிற்குத் தியாகாபாவத்தைக் கூறும் எனக்குக்) குறைவுயாது எ—று.

சாவ ஆவல் காணலினல் என்பது ஆன்மாவில் வெறுப்பு உளது என்பதில் ஞாபக ஏதுவாம்.

மன்,* ஓ—அசைநிலை. 9

(அ—கை)

இவ்வாறு "பதியின் சுகத்தின் பொருட்டன்று" என்பது தொடங்கி "தனது சுகத்தின் பொருட்டே சகலமும் பிரியமாகின்றது" என்பது பரியந்தமான சுருதியின் தாற்பரிய விசாரத்தால் ஆன்மா விற்குப்பிரிய தமத்துவத்தைக் காண்பித்து யுத்தியினலும் ஆன்மா விற்குப்பிரிய தமத்துவத்தைக் காட்டுகின்ருர்.

தனதுபொருட் டெவற்றினன்பு மாதலினுற் றுணிபாந்
தானேயென் றதிப்பிரியந் தனயனே யனினுந்
தனயனதிப் பிரியனே ரகமின்மை யொழிக
தகுமற்ருே விருக்கவென்று மென்னுமிவ்வேண்
டுதலோ
மனுமெவர்க்குந் திருட்டந்தனிற் பிரியம்வெட்ட வெளியா
மலர்மூன்ரு லிவிதந்தனிற் பிரியமுள தாகப்
பினுஞ்சிலரோ தனக்குமைந்தர் காந்தை முதலோரின்
பேசிடுவர் சேஷதையைப் பெருமயக்க மியைந்தே. 10

(ப—ரை) எவற்றின் = சுகத்திலும் அதன் சாதனமாயுள்ள பதிபத்தினி முதலிய அனைத்திலும், தனது பொருட்டு அன்பு ஆதலினுலும் = தனது உபகாரத்தன்மையால் பிரியமுளதாவதாலும், தானே அதிப்பிரியன் என்று துணிபுஆம் = உபகரிக்கத்தக்க ஆன்மாவே அதிகப் பிரீதிக்கு விஷயமாமென நிச்சயமாம் [இதனையே திருஷ்டாந் தத்தைக் காட்டலால் வெளியாக்குகின்ருர்] தனயன் நேயனினும் தகு தனயன் அதிப்பிரியன் நேர் = புத்திரனுடைய மித்திரனைக் காட்டிலும் தனக்கு உரிய புத்திரன் அதிக அன்பிற்கு விஷயமாவது போன்று, உலகில் புத்திரனுடைய மித்திரனைப் புத்திர வாயிலாகப் பிரீதிக்கு

விஷயமாயுள்ள யஞ்ஞதத்தன் முதலானோரைப் பார்க்கிலும் புத்திரரான தேவதத்தன் முதலானோர் மறைப்பின்றி நேரே பிரீதிக்கு விஷயமாவதால் விஷ்ணுதத்தன் முதலான பிதாக்களுக்கு புத்திரமித்திரனைக் காட்டிலும் அதிகப் பிரியம் உண்டாகிறது. அதுபோல் தனது சம்பந்தியாகவே சகலமும் பிரீதிக்கு விஷயமாவதால் சகலத்தினும் தானே அதிப்பிரியன் என்பது கருத்து [இவ்வாறு ஆன்மாவில் சுருதியுத்திகளால் உபபாதனஞ் செய்த நிரதிசயப் பிரீதியை சுவாநுபவத்தைக் காட்டலால் திடஞ் செய்கின்றார்] அகம் இன்மை ஒழிக = நான் அபாவமாதலொழிக, மற்றே என்றும் இருக்க = பின்னையோ எப்போதும் இருப்பேனாக, என்னும் இவ்வேண்டுதலோ = என்றிப்படிப்பட்ட இச்சையோ, மனும் எவர்க்கும் திருட்டம் = இவ்வுலகிலுள்ள சகல பிராணிகளுக்கும் பிரத்தியக்ஷமாகக் காணப்பட்டது, எல்லோரும் இவ்விதமே இச்சிக்கின்றார்கள் என்பது பொருள் [பலிதத்தைக்கூறுகின்றார்] தனில் பிரியம் வெட்டவெளியாம் = (எல்லோரும் இவ்வாறு பிரார்த்திப்பதால்) ஆன்மாவில் நிரதிசயப் பிரீதி மிகவும் ஸ்பஷ்டமாம். [கூறியதை அநுவதித்தல் வாயிலாக அன்னிய மதத்தைத் தூஷிப்பதற்காக அநுவதிக்கின்றார்] இவிதம் மலர் மூன்றால் = இந்தப் பிரகாரம் விரிந்த சுருதி யுக்தி அநுபவங்களால், தனில் பிரியம் உளதாக = ஆன்மாவில் அன்பு சித்தித்ததாயினும், பினும் சிலர் = (சுருதியாதிகளின் தாற்பரியத்தை அறியாத) மற்றும் சிலர்கள், பெருமயக்கம் இயைந்து = பெரிய பிராந்தியைப் பொருந்தி, தனக்கு மைந்தர் காந்தை முதலோரின் சேஷதையைபேசிடுவர் = ஆன்மாவிற்கு புத்திரர் மனைவிமுதலியோரது அங்கத்தன்மையைக் கூறுவார்கள் எ—று.

10

ஏ—அசை.

(அ—கை)

ஆன்மாவிற்கு புத்திராதியரைக் குறித்து அங்கத் தன்மை எதனால் அறியப்பட்டதெனிற் கூறுகின்றார்.

இதைநுதலு மிச்சையினு னான்மாவே
சுத்னும னெனுமோத் தோது
முதன்மையான் மத்தகைமை காதலன்பா
லதுவுமறை முடிபூ டோங்கு

முதலிவற்கவ் விவ்வான்மா வறவினைக்காய்ப்
பிரதிநிதி யுஞற்று வான்பின்
முதலிவற்கிவ் விதரான்மா செயன்முடிந்தோ
ஞகியே முடிவா னம்மா. 11

(ப—ரை) இதைநுதலும் இச்சையினுன் = ஆன்மாவிற்கு அங்கத்தன்மையைச் சொல்லுமபிப்பிராயத்தால், ஆன்மாவே சுதன் நாமன் எனும் ஓத்து = தந்தையாகிய தானே மகன் என்னும் பெயரைப் பொருந்துகின்ருன் என்னும் சுருதி, காதலன்பால் முதன்மை ஆன்மத் தகைமை ஓதும் = புத்திரனிடத்து முக்கியான்மத் தன்மையைக் கூறுகின்றது, அதுவும் மறைமுடிபூடு ஓங்கும் = புத்திரனுக்கு முக்கியான்மத் தன்மையும் ஐதரேயம் முதலிய உபநிடதங்களில் வெளிப்படையாம் [எந்த வாக்கியத்தால் கூறப்பட்டுளது என்ருகாங்க்ஷை உண்டாக அந்த வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்ருர்] உதவு இவற்கு = புத்திரனைப் பெறும் பிதாவிற்கு, அவ்இவ் ஆன்மா = அந்த இந்த புத்திர வடிவ ஆன்மா, அறவினைக்கு ஆய் பிரதிநிதி உஞற்றுவான் = புண்ணிய கருமங்களை அநுஷ்டிக்கும் பொருட்டு பிதாவினுல் மரண காலத்தில் தனது பிரதிநிதியாகச் செய்யப்படுவான், பின் இவற்கு = அதன்பிறகு பிதாவினது, முதல் இவ் இதர ஆன்மா = கிழமாய் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றதாய் புத்திரனினும் வேருய் உள்ள பிதுருவடிவ ஆன்மா, செயல் முடிந்தோனுகி = கருமமனைத்தையும் செய்து முடித்தவனுய், முடிவான் = மரிப்பான் எ—று.

முன்பு புருஷ தேகத்தில் கருப்பமாகச் சொல்லப்பட்டவனும் அதன் பின்பு மாதாவின் வயிற்றில் நன்கு காப்பாற்றத்தக்கவனுகச் சொல்லப்பட்டவனுமாகிய புத்திர வடிவ ஆன்மா என்பார் அவ் இவ் ஆன்மா என்ருர். பிரதிநிதி = ஒன்றன் ஸ்தானத்தில் மற்ருென்று இருத்தல். அம்மா என்பது ஓர் அதிசயச் சொல். 11

(அ—கை)

கூறிய பொருளைத் திடஞ்செய்தற் பொருட்டு புத்திரனின்றியவனுக்குப் பரலோகத்தினின்மையைக் காட்டுகின்ற "அபுத்திரனுக்கு உலகமில்லை" என்னும் வாக்கியத்தின் பொருளைக் கூறுகின்ருர்.

அதனுனே தானிருந்துஞ் சுதனிலர்க்கு
லோகமில்லை யறிவுளோர்கள்
மதிமானு மகன்றனையே லோக்கியமென்
றறைதருவர் மனுடலோகஞ்
சுதனுனே பெறலாமின் றிதரத்தாற்
றுவம்பிரமாத் தொடக்கமான
திதமான மந்திரத்தாற் கான்முளையை
மரிப்பவன்சிட் சித்தல்வேண்டும். 12

(ப—ரை) அதனுனே = புத்திரனுக்கு முக்கியான்மத் தன்மை யுண்மையானே, தான் இருந்தும் = பிதாவாகிய தான் இருந்தபோதி னும், சுதன் இலர்க்கு லோகம் இலை = புத்திரனின்றிய பிதாவிற்குப் பரலோகம் கிடைப்பதில்லை, [வியதிரேகமாகக் கூறிய பொருளை அன்வயமுகமாகப் பிரதிபாதிக்கின்ற "சிக்ஷிக்கப்பட்ட புத்திரனை லோக்கியம் என்று கூறுகின்றார்கள்" என்னும் வாக்கியத்தின் பொருளைக் கூறுகின்றார்] அறிவுளோர்கள் = மதிமான்கள், மதிமான் ஆம் மகன் றனையே = புத்திமானாகிய புத்திரனையே, லோக்கியம் என்று அறை தருவர் = பரலோக சாதனமென்று கூறுவார்கள், நூற்பொருளுணர்ந் தோர் சொல்லப்போகிற "துவம் பிரமம்" என்பது முதலிய மந்திரங் களினால் சிக்ஷிக்கப்பட்ட புத்திரனையே பரலோக சாதனமென்று கூறுவார் என்பது பொருள். [இப்போது இகலோக சுகத்திற்கும் புத்திரனைக் காரணமாகக் கூறுகின்ற "அந்த இந்த மனுஷியலோகம் புத்திரனாலேயே அடையத்தக்கது வேறு கருமத்தாலன்று" என்னுஞ் சுருதி வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்றார்] மனுடலோகம் சுத னுனே பெறலாம் = மனுஷியலோகசுகம் புத்திரனாலேயே அடையலாம், இதரத்தால் இன்று = கருமாதி சாதனாந்தரத்தால் உண்டாவதில்லை, புத்திரனின்றியவனுக்கு சுக சாதன தனுதியும் துக்கத்தையுண்டுபண்ணு மென்பது கருத்து. [சிக்ஷிக்கப்பட்ட புத்திரன் லோக்கியனாவன் என்னு மிடத்து புத்திரனது அநுசாசனம் சொல்லப்பட்டது இப்போது அதன் அவசரத்தையும் அதன் மந்திரங்களையும் தெரிவிக்கின்றார்] துவம் பிரம்மா தொடக்கமான திதமான மந்திரத்தால் = நீ பிரம்மம் என்பது முதலிய திடமான மந்திரங்களால், மரிப்பவன் = இறக்கும் பிதா இறக் கும்போது, கான்முளையை சிட்சித்தல் வேண்டும் = புத்திரனை அநு சாசனம் செய்யவேண்டும் எ—று.

ஆதி என்னும் பொருளையுடைய தொடக்க சத்தத்தால் துவம்யஞ்ஞ ஃதுவம்லோக: என்னும் இரண்டு மந்திரங்களையும் கவருக. 12

(அ—கை)

கூறிய பொருளை முடிக்கின்றார்.

எனவாதி மறைகண்மகன் மனையாதி
சேஷதையை யியம்பா நிற்கும்
பினுமோலௌ கிகருமரு மகன்றனக்கு
முதன்மையினைப் பேணு நிற்பர்
தனதாவி யோவினுஞ்சு தாதிவித்தா
தியினுனே தரிப்பா ரவ்வா
றுனியேயத் தனம்புரிவ னதனுனே
முக்கியரா முயர் சிறுரே. 13

(ப—ரை) என ஆதிமறைகள் = என்பது முதலிய சுருதிகள், மகன் மனை ஆதிசேஷதையை இயம்பா நிற்கும் = புத்திரன் பாரியை முதலானோரது அங்கத் தன்மை ஆன்மாவிற்குக் கூறும். [கேவலம் இப்பொருள் சுருதி சித்தமன்று. மற்றோ உலகப் பிரசித்தமுமாம் எனக் கூறுகின்றார்] பினும் லௌகிகரும் அருமகன்றனக்கு = மற்றும் சாதாரண சனங்களும் அரிய பிள்ளைக்கு, முதன்மையினை பேணு நிற்பர் = முக்கியத் தன்மையினை கருதுகின்றார்கள். [அதனையே உபபாதனஞ் செய்கின்றார்] தனது ஆவி ஓவினும் = பிதாவாகிய தனது பிராணன் நீங்கினும், சுத ஆதிவித்த ஆதியினுன் எவ்வாறு தரிப்பார் = புத்திரன் முதலானோர் தனம் முதலியவற்றால் எப்படிச் சீவிப்பரோ அப்படி, உனியே யத்தனம் புரிவன் = கருதியே முயற்சிப்பான், அதனுன் உயர் சிறுர் முக்கியர் ஆம் = அக்காரணத்தால் சிறந்த பிள்ளை முதலானவர்கள் பிரதானமாவர் எ—று. ஏ—அசை.

சுதாதி சத்தத்தால் மனைவி முதலியோரைக்கொள்க, வித்தாதி சத்தத்தால் நிலம் முதலியவற்றைக்கொள்க, யாதொரு காரணத்தால் தனது கஷ்டத்தைச் சகித்தும் புத்திராதிகளின் சீவன உபாயத்தைச் சம்பாதிக்கின்றனரோ அதனுல் புத்திராதியர் முக்கியரென்பது பொருள். 13

(அ—கை)

இவ்வாறு லோக வேதப்பிரசித்திகளால் காண்பிக்கப்பட்ட புத்திராதியருக்கு முக்கியத் தன்மையை அங்கீகரிக்கின்றூர்.

கட்டுரையன் றிவ்வளவாற் றூனெதற்குஞ்
சேடமல கவுண மித்தை
சிட்டமுக்ய வேற்றுமையா லிவ்வான்மா
மும்மையதாந் தேவ தத்த
னிட்டமினன் சிங்கமா மெனுமயிக்கங்
கவுணமா மிருவ ருக்கு
மொட்டுபிரி வொளிர்தலினூற் சுதராதிக்
கான்மதையை யுரைப்ப ராங்கே. 14

(ப—ரை) கட்டு உரை அன்று=நீ சொல்வது பொய்யன்று மற்றூே உறுதிமொழியேயாம், [அப்படியாயின் ஆன்மாவிற்கு சேஷித் தன்மையைப் பிரதிபாதித்தல் விருத்தமாமே என்று சங்கித்துக் கூறு கின்றூர்] இவ்வளவால்=புத்திராதியருக்கு ஓரிடத்து முக்கியத்தன்மை உளது என்னுமிவ்வளவால், தான் எதற்கும் சேடம் அல = ஆன்மா ஒன்றற்கும் அங்கமாவதன்று, [பிரதிஞ்ஞை மாத்திரத்தால் பொருள் சித்தியாது என்று சங்கித்து எவ்வெவ்வியவகாரத்தில் எதற்கு எதற்கு ஆன்மத்தன்மை விவக்ஷிக்கப்படுகிறதோ அவ்வவ்வான்மாவிற்கு அவ்வவ்வியவகாரத்தில்பிரதானத்தன்மையைக்காண்பிக்கும்பொருட்டு உபோற்காதமாக ஆன்மாவின் மூவிதத் தன்மையைக் காட்டுகின்றூர்] கவுணம் மித்தைசிட்ட முக்கிய வேற்றுமையால்=கௌணன்மா மித்தை யான்மா நல்ல முக்கியான்மா என்னும் பேதத்தால், இவ்வான்மா மும்மையது ஆம்=இந்த ஆன்மா மூன்றுவிதமாம், [அவற்றுள் புத்தி ராதியருக்கு கௌணன்மத் தன்மையைக் காண்பிக்கும்பொருட்டு உலகிலுள்ள கௌணப் பிரயோகத்தை எடுத்துக் காட்டுகின்றூர்]இட்ட மினன் தேவதத்தன்=பிரியனூய்ச் சிறந்தோனூய் உள்ள இத்தேவ தத்தன், சிங்கம் ஆம் எனும் அயிக்கியம் = மிருகேந்திரன் என தேவதத்த சிம்மங்களுக்கு யாதொருதாதான்மியம்பிரதீதியாகின்றதோ அது, கவுணம்=ஒளபசாரிகமாம், [அதிலேதுவைக் கூறுகின்றூர்] இருவருக்கும் பிரிவு ஒளிர்தலினூல்=தேவதத்தனுக்கும் சிம்மத்திற்கும்

பேதம் பிரதீதியாவதால், [தாஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்] ஆங்கு ஒட்டுசுதர் ஆதிக்கு ஆன்மதையை உரைப்பார் = அப்படி அமைந்த புத்திராதியருக்கு கௌணான்மத் தன்மையைக் கூறுவர் எ—று

பேதமாக அறியப்பட்ட இரண்டு வஸ்துக்களுக்கு குணத்தின் சமானத்தன்மையால் அபேதத்தைச் சொல்லுதல் கௌணப் பிரயோகமாம். 14

எப்படி சப்தத்தின்கண் சக்தி விருத்தி இலக்ஷணவிருத்திகள் இருக்கின்றனவோ, அதுபோல மூன்றாவது குணவிருத்தியென்னும் கௌணீ விருத்தியுமிருக்கின்றது.

(க) எப்படிச் சத்திவிருத்தியினால் போதிக்கப்பட்ட அர்த்தத்தினை சக்கியார்த்தம்,முக்கியார்த்தம், வாச்சியார்த்தமென்கின்றனரோ,

(உ) இலக்ஷண விருத்தியினால் போதிக்கப்பட்ட அர்த்தத்தினை இலக்ஷியார்த்தமென்கின்றனரோ,

(ங) அதுபோல குணவிருத்தியினால் அறிவிக்கப்பட்ட அர்த்தத்தினைக் கௌணார்த்தமென்பர். பதத்தின் வாச்சியார்த்தத்தில் எந்தக்குணமிருக்கின்றதோ அந்தக்குணமுடைய அவாச்சியார்த்தத்தில் எந்தப் பதத்தின் விருத்தியாகிய சம்பந்தமிருக்கின்றதோ அது கௌணீ விருத்தியெனப்படும்.

எப்படி "சிங்கம் தேவதத்தன் அதாவது இந்தப் புருஷன் சிங்கம்" என்னும் வாக்கியத்தில சிங்கமெனும் சொல்லிற்கு வாச்சியமான சிங்கமென்னும் பசு எதுவோ அதில் சூரத்தன்மை குரூரத்தன்மை முதலிய எக்குணங்களிருக்கின்றனவோ, அவற்றையுடைய சிங்க பதத்தின் அவாச்சியப் பொருளில் சிங்கமென்னும் பதத்திற்குக் கௌணீ விருத்தி இருக்கின்றது.

இவ்வாறு ஆத்ம பதத்தின் வாஸ்தவமான வாச்சியார்த்தமோ சாக்ஷியாம் ஆதலால் சாக்ஷி முக்கியாத்மாவெனப்படும். ஆனால் சாக்ஷியினிடத்து ஆரோபிதமாயிருத்தலால் ஆத்ம பதத்தின் மித்தையான வாச்சியார்த்தம் சங்காதங்களுமாம். அச்சங்காதத்தில் எந்த இகலோக சம்பந்தியும் பரலோக சம்பந்தியுமான கர்மத்தில் பிரவர்த்தித்தல் வடிவ குணமுண்டோ, அக்குணமுடைய ஆத்மபதத்திற்கு

அவாச்சியமான புத்திரர்தியரிடத்து ஆத்ம பதத்தின் கௌணீவிருத்தி உள்ளது. அக்கௌணீ விருத்தியினால் அறிவிக்கப்பட்ட புத்திராதி வடிவ அர்த்தம் எதுவோ அது கௌணாத்மாவெனப்படும்.

(அ—கை)

இப்போது மித்தியான்மாவைத் தெரிவிக்கின்றார்.

கோசமைந்திற் சான்றினுக்குப் பேதமுள
திதுவிலங்காக் குறைவி னானே
யோசுமவைக் குறும்பொய்ம்மை தாணுவிற்குச்
சோரவடி வொன்று மாபோ
லேசுமெதிர் மறைமறையுஞ் சான்றினுக்குப்
பேதநகா வின்று மாகும்
பேசுசரு வாந்தரத்தா லதற்கேயான்
மதையுமுக்யம் பிறங்கு மாலோ. 15

(ப—ரை) கோசம் ஐந்தில்=(அன்னமயம் முதல் ஆனந்தமய பரியந்தமான) பஞ்ச கோசங்களில், சான்றினுக்கு பேதம் உளது = சாக்ஷியின் பேதமிருக்கின்றது, ஆயினும், இது இலங்காக் குறைவினானே = இப்பேதம் பிரதீதியாகாத குற்றத்தால், ஓசும் அவைக்கு பொய்மை உறும்= தள்ளத்தகுந்த அப்பஞ்சகோசங்களுக்கு மித்தியான்மத்தன்மை பொருந்தும், [மித்தியான்மத்தன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] தாணுவிற்கு சோர வடிவு ஒன்றுமாபோல் = வாஸ்தவமாக திருடனினின்றும் வேறான கட்டைக்குத் திருட வடிவம் மித்தையாகப் பொருந்துவதுபோல, [இவ்வாறு கௌணமித்தியான் மாக்களை உபபாதனஞ் செய்து இப்போது சாக்ஷிக்கு முக்கியான்மத் தன்மையையுபபாதனஞ் செய்கின்றார்] ஏசும் எதிர்மறை மறையும் சான்றினுக்கு= நிந்திக்கத்தக்க விரோதியின்றிய சாக்ஷியாகிய ஆன்மாவிற்கு, பேதம்நகா=கௌணான்மாவாகிய புத்திராதிக்குப்போல் எதனோடும் பேதம் விளங்காது, இன்றும் ஆகும்=மித்தையான்மாவாகிய தேகாதிக்குப்போல் பேதம் இன்மையுமாகும் [அற்றேல் பேதமின்மையினால் சாக்ஷிக்கு கௌணான்மத்தன்மையும் மித்தியான்மத்தன்மையும் இன்றாகுக. முக்கியான்மத்தன்மை எதனால் எனிற் கூறுகின்றார்] பேசு சருவாந்தரத்தால்=சொல்லா நின்ற தேகபுத்திராதி எல்லாவற்றிற்கும்

உள்ளாய் விளங்குந்தன்மையால், அதற்கே=சர்வசாக்ஷியாகிய பிரத்தியகான்மாவிற்கே, ஆன்மதை முக்கியம் பிறங்கும்=ஆன்மத்தன்மை முக்கியமாய் விளங்கும். அங்கீகரிக்கப்படுகின்றது என்பது பொருள் எ—று.

ஈண்டு இவ்வனுமானம் சூசிப்பிக்கப்பட்டது, விவாத விஷயமான சாக்ஷி, முக்கியான்மாவாக யோக்கியமாம், சர்வத்தினும் உள்ளிருக்குந் தன்மையால், எது முக்கியான்மாவன்றோ அது சருவத்தினும் உள் ளிருப்பதுமன்று, அகங்காராதிபோன்று,இது கேவல வியதிரேகியாம், எதிர்மறை மறையும் என்பது ஏதுகற்ப விசேஷணமாய் பேதப் பிரதீதியின்மையிலும் பேதம் இன்மையிலும் ஏதுவாகின்றது. விரோதி இன்மையினல் என விரித்துக்கொள்க, எப்படி புத்திராதிக்கும் தேகாதிக்கும் சாக்ஷியாகிய தான் எதிர்மறையாயுள்ளதோ அப்படி தனக்கு வாஸ்தவமாக யாதொரு எதிர்மறை வஸ்துவும் இன்ரும், தேகாதி அனைத்தும் கற்பிதமாதலால் என்பது கருத்து.

உம், ஆல், ஓ—அசை.

ஏதிர்மறை=விரோதி, அல்லது பேதம். 15

(அ—கை)

ஆன்மா மூவிதமாகுக. புத்திராதிக்கு சேஷித்தன்மையைச் சொல்வதில் என்னவந்தது எனிற் கூறுகின்ருர்.

இன்னணமா யுறவெந்தத் தொழில்களினுன்
மதையுசித மெதற்கிங் காகு
மன்னவற்றி லதற்கேசே ஷித்தகைமை
யயலெவைக்கு மங்கப் பான்மை
மன்னுமர ணப்பிரியற் கிற்பரிப்பா
தியிற்கவுஞன் மாவே யேலும்
பன்னுமுக்ய மித்தையல வதனுற்புத்
திரன்சேஷி பகர்வா ரன்றே. 16

(ப—ரை) இன்னணம் ஆய்உற = இவ்வாறு ஆன்மாவிற்கு மூவிதத்தன்மை இருக்குங்கால், எந்தத் தொழில்களின் = லௌகீக வைதீகவடிவ பாலன பேஃஷண பிரம்மான்மத்துவ அநுசந்தானுதி

எவ்வியவகாரங்களில், எதற்கு=புத்திராதி தேகாதி சாக்ஷியாகிய எவ் வஸ்துவிற்கு, ஆன்மதை இங்கு உசிதமாகும் = ஆன்மத்தன்மை இவ்வுலகில் யோக்கியமாகுமோ, அன்னவற்றில் = அவ்வியவகாரங் களில், அதற்கே = புத்திராதி தேகாதி சாக்ஷியாகிய அதற்கே, சேஷித்தகைமை = பிரதானத்தன்மையாம், அயல் எவைக்கும் = அதனினும் வேருன அனைத்திற்கும், அங்கப்பான்மை மன்னும் = சேஷத்தன்மை பொருந்தும்,அமுக்கியத்தன்மையாம் என்பது கருத்து. [இதனையே விஸ்தரிக்கின்ருர்] மரணப் பிரியற்கு =, இறப்பில் இச்சை யுடையவருக்கு அதாவது கிழவனுய் மரணமாகும்சமயத்தில்,இல்பரிப்பு ஆதியில்=கிரகத்தை ரக்ஷித்தல் முதலிய தொழிலில், கௌணன்மாவே யேலும்=பின்பு சீவித்திருத்தலால் புத்திரபாரியாதி வடிவ கௌணன் மாவே உபயோகமாகும், பன்னும் முக்கியம் அல=அவிகாரியாவதால் சொல்லாநின்ற முக்கியான்மாவாகிய சாக்ஷி உபயோகமன்று, மித்தை அல=இறத்தற்குத் தயாராயிருத்தலால் மித்தியான்மாவாகிய தேகாதியும் உபயோகம் இன்ரும், [திரண்ட பொருளைக் கூறுகின்ருர்] அதனுல் புத்திரன் சேஷிபகர்வார்=அக்காரணத்தினுல்தான் இறக்குங் காலத்தில் மைந்தனை முக்கியான்மாவெனக் கூறுவர் எ—று.

எதற்கு அதற்கு என்பவற்றை. புத்திராதி என்பதோடும் தேகாதி என்பதோடும் சாக்ஷியோடும் தனித்தனியே கூட்டுக.அதாவது எந்த புத்திராதிக்கு எந்த தேகாதிக்கு எந்த சாக்ஷிக்கு எனக் கூட்டுக.



அன்று, ஏ—அசை.

(அ—கை)

சொல்லிய வீட்டைக் காத்தல் முதலிய வியவகாரத்தில் பிதா வாகிய தான் இருக்கவும் புத்திராதிகளை சுவீகரித்தலில் திருஷ்டாந்தங் கூறுகின்ருர்.

வன்னியத்தி யேதாவென் பதிலிருந்துந்
தகுதியற்று வாங்க லோங்கா
வன்னியிவண் டகுதியினுற் கவருதலாம்
வடுவேயான் வணமெ லிந்தேன்

மன்னுறுவன் புட்டியினை யென்பதா
தியிலுசிதம் வபுவான் மத்வ
மென்னலிவண் புட்டிபுரி யுண்டியினிற்
காதலனை இசைத்த லின்றே. 17

(ப—ரை) அத்தியேதாவன்னியென்பதில் = அத்தியயனம் செய்பவன் அக்கினி என்னும் பிரயோகத்தில், இருந்தும் = சொரூபமாக அக்கினி இருப்பினும், தகுதி அற்று = அத்தியயனம் செய்வதில் யோக்கியமின்மையால், ஓங்காவன்னி வாங்கல் = ஜொலிக்கின்ற அக்கினி கிரகிக்கப்படுகின்றதில்லை, மற்றே, தகுதியினால் = அத்தியயனத்தில் யோக்கியமுடைமையால், வடுவே இவண் கவருதலாம் = மாணவனே இந்தப் பிரயோகத்தில் அக்கினி சப்தத்தின் பொருளாக கவரப்படுகிறான். [இவ்வாறு கௌணான்மாவிற்கு பிரதானத்தன்மை ஸ்தலத்தை எடுத்துக்காட்டி இப்போது மித்தியான்மாவிற்கு பிரதானமாகிய ஸ்தலத்தை எடுத்துக்காட்டுகின்றார்] வணம்யான்மெலிந்தேன் = அழகிய நான் இளைத்துளேன், ஆதலால், புட்டியினை மன்னுறுவன் = அன்னத்தை புசித்தல் முதலியவற்றால் பருமனை அடைவேன், என்பதாதியில் = என்பது முதலிய உலக வியவகாரத்தில், வபுஆன்மத்துவம் என்னல் உசிதம் = அன்னத்தை புசித்தலில் தகுதியாயுள்ள தேகத்திற்கே ஆன்மத்தன்மையைச் சொல்லுதல் யோக்கியமாம், [கூறிய பொருளை உலக வியவகாரத்தைக் காட்டலால் திடஞ் செய்கின்றார்] இவண் புட்டிபுரி உண்டியினில் = இவ்வுலகில் பருமனைச் செய்யும் அன்னபக்ஷணத்தில், காதலனை இசைத்தல் இன்று = மைந்தனைச் சேர்த்தல் இன்றாம் எ—று.

ஏ—அசை.

சம்பாதிப்பேன் என்பார் மன்னுறுவன் என்றார். 17

(இதுவுமது)

தவமதனுற் றுறக்கமடைந் திடுவனென்ப
தாதியிற்கர்த் தாவா நீர்மை
தவவுசித மாதலினால் வபுபோக
நாடாது தவமே நோற்ப

னவபுருடன் முத்தனு ஞவனெனிற்
குருநூலா லஃதே தேர்வா
னவசிறிதுஞ் செய்யவெணு னீண்டேசி
தான்மதையை நண்ண லாமே. 18

(ப—ரை) தவமதனுல் துறக்கம் அடைந்திடுவன் என்பது ஆதியில் = கிருச்சிர சாந்திராயணுதி தவத்தால் சுவர்க்கத்தை அடைவேன் என்பது முதலிய வியவகாரத்தில், கர்த்தாநீர்மைதவ உசிதம் = கருத்தாவிற்கு ஆன்மத்தன்மை மிகவும் தகுதியாம், எப்போது தபசைச் செய்து சுவர்க்கத்தைச் சம்பாதிப்பேன் என்பது முதலிய வியவகாரத்தைச் செய்வானே அப்போது கருத்திரு சத்தவாச்சிய விஞ்ஞான மயனுக்கே ஆன்மத்தன்மை உசிதமாம். தேகாதிக்கு அன்று என்பது பொருள். [அதனையேயுபபாதனம் செய்கின்ருர்] ஆதலினுல் = தேகத்திற்கு ஆன்மத்தன்மை உசிதமில்லாமையால், வபுபோகம் நாடாது = தேகபோகத்தைக் கருதாமல், தவமேநோற்பன் = கருத்தாவிற்கு உபகாரமான கிருச்சிர சாந்திராயணுதி கொடிய தவத்தையே செய்வன், அவபுருடன் நான் முத்தன் ஆவன் எனின் = அறிவுடைய ஆடவன் நான் முத்தியையடைவேன் என்று கருதுவானுயின், குருநூலால் அஃதே தேர்வான் = தேசிகராலும் சாஸ்திரத்தாலும் சிதான்மாவையே அறிவான், நவசிறிதும் செய்ய எணுன் = புதிய காரியமொன்றனையும் செய்யக் கருதான், ஈண்டு சிதான்மதையையே நண்ணலாம் = இவ்வியவகாரத்தில் சிதான்மத்தன்மையே உசிதமாம் எ—று.

எப்போது புருடன் சமம் முதலியவற்றைச் சம்பாதித்து முத்தியையடைவேன் என்று கருதுவானே அப்போது ஆசாரியரது உபதேச வாக்கியார்த்த விசாரஜன்னிய அபரோக்ஷ ஞானத்தால் நான் கருத்தா முதலிய வடிவன் அன்று, சச்சிதானந்த பிரம்மம் நான் ஆகின்றேன் என்று சிதான்மாவையறிகின்ருன், அவனுக்கு சிதான்மத்தன்மையே உசிதமாம் அவ்வியவகாரத்தில் கருத்திரு முதலிய வடிவம் உசிதமன்ரும், "சத்தியம் ஞானம் அனந்தம்" "பிரஞ்ஞான கனம்" "விஞ்ஞான மானந்தம் பிரம்மம்" என்பது முதலிய சுருதியால் என்பது பொருள்.

தவ = மிகுதி, ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. ஏ—அசை. 18

(அ—கை)

கூறிய மூவித ஆன்மாக்களுக்கு வியவகார விசேஷங்களில் வியவஸ்தையால் பிரதானத்தன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

விப்பிரக்ஷத் திரியர்முன்னோர் பிரகஸ்பதி
சவமுதற்கண் விவத்தை சேர்வர்
அப்படியிக் கவுணமித்தை முக்கியங்க
ளுசிதம்போ லாமாண் டாண்டு
வப்புசித வான்மனினே யதிப்பிரியம்
பிரியமத னங்க மாகச்
செப்புமனுன் மாவிடத்தோ மற்றிடத்தோ
வுபயமதுஞ் செறிவ தின்றே. 19

(ப—ரை) விப்பிரக்ஷத்திரியர் முன்னோர் = பிராம்மணர் க்ஷத்திரியர் முதலானவர்கள், பிரகஸ்பதி சவம் முதற்கண் = பிரகஸ்பதி சவம் முதலிய யாகங்களில், விவத்தை சேர்வர் = விவஸ்தையால் அதிகாரியாவர், அப்படி = அவ்வாறு, இக்கவுணமித்தை முக்கியங்கள் உசிதம்போல் ஆம் = இந்த கௌணன்மா மித்தியான்மா முக்கியான்மாக்களும் யோக்கியப்படி தன் தன் உசித வியவகாரங்களில் பிரதானமாவர், [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] அப்புஆண்டு ஆண்டு = (எவ்வெவ் வியவகாரத்தில் எவ்வெவ்வான்மா உசிதமாமோ) பொருந்தாநின்ற அவ்வவ் வியவகாரத்தில், உசித ஆன்மனினே அதிப்பிரியம் = உபயோகித்தன்மையால் பிரதானமாயுள்ள ஆன்மாவிலேயே அதிகப்பிரீதியாம், அதன் அங்கமாகச் செப்பும் அனுன்மாவிடத்தோ = ஆன்மாவின் சேஷமாக சொல்லப்பட்ட அனுன்மவஸ்துவிலோ, பிரியம் = பிரீதிமாத்திரமாம் நிரதிசயப் பிரீதியன்று, மற்றிடத்தோ உபயமதும் செறிவது இன்று = ஆன்மா அதன் சேஷம் ஆகிய இரண்டினும் வேறான வஸ்துவிலோ இரண்டுவிதப் பிரீதியும் இல்லை, அதாவது கேவலப் பிரியமும் நிரதிசயப் பிரியமுமின்றாம் எ-று

"பிராம்மணன் பிருகஸ்பதி ஸவத்தால் யஜிக்கக்கடவன்" என்ற இடத்தில் பிராம்மணனுக்கே அதிகாரமாம் க்ஷத்திரிய வைசியருக்கு இன்று, "அரசன் இராஜசூய யாகத்தால் யஜிக்கக்கடவன்" என்ற

இடத்தில் அரசனுக்கே அதிகாரம் பிராம்மண வைசியருக்கு அன்று. "வைசியன் வைசியஸ்தோமத்தால் யஜிக்கக்கடவன்'' என்றவிடத்தில் வைசியனுக்கே அதிகாரம் மற்றையருக்கு அன்று என்பது பொருள்.

ஏ—அசை.

உசிதம் = பிரதானம். 19

(அ—கை)

மற்றிடத்தோவுபயமதும் செறிவதின்று என்றவிடத்தில் கூறப்பட்ட மற்று என்னும் சொற்பொருளின் அவாந்தர பேதத்தைக் கூறுகின்றார்.

நொதுமலதும் வெறுப்பினது மற்றதிரு
வகையாகு நுவன்மார்க் கஞ்சார்
சிதைதிருண மாதியுபே க்ஷியந்த்வேஷ்யம்
வரியரவா தியவிவ் வாறே
சதுர்விதமான் மாச்சேடம் நொதுமலதும்
வெறுப்பினதுஞ் சதுரின் மாட்டு
மதுவியத்தி நியமமிலே மற்றவ்வக்
காரியத்தா லவ்வவ் வாறே. 20

(ப—ரை) மற்றது = மற்று என்னும் சத்தத்தால் சொல்லப்படுகின்ற வஸ்து, நொதுமலதும் வெறுப்பினதும் இருவகை ஆகும் = உபேக்ஷையின் விஷயமும் த்வேஷத்தின் விஷயமும்என இரண்டு பிரகாரமாம். [அவ்விரண்டையுங் கூறுகின்றார்] நுவல் மார்க்கம் சார் சிதைதிருணம் ஆதி உபேக்ஷியம் = சொல்லா நின்ற வழியிற் கிடக்கின்ற கீழ்மையான துரும்பு ஓடு முதலியது உபேக்ஷைக்கு விஷயமாம், வரி அரவு ஆதியத்வேஷ்யம் = தனக்கு உபத்திரவ காரணமான புலி பாம்பு முதலியன வெறுப்பிற்கு விஷயமாம், [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] இவ்வாறு ஆன்மா சேடம் நொதுமலதும் வெறுப்பினதும் சதுர்விதம் = இப்படி ஆன்மாவும் அதன் அங்கமும் உபேக்ஷியமும் த்வேஷியமும் என நான்கு பிரகாரம் வஸ்துவாம், [ஆனால் ஆன்மா முதலிய நான்கனுக்கும் பிரியதமத்துவம் முதலிய சொரூபம் நியதமாயுள்ளனவா எனின் அன்றெனக் கூறுகின்றார்] அது சதுரின்மாட்டும்

வியத்தி நியமம் இலே = அந்நான்களிடத்தும் இதுவே பிரியதமம் இதுவே பிரியம் இதுவே உபேக்ஷியம் இதுவே துவேஷியம் (அன்னிய மின்று) என நியதவடிவமின்ரும், [பின்னை யாதெனிற் கூறுகின்ருர்] மற்று அவ் அவ் காரியத்தால் அவ் அவ்வாறே = பின்னையோ உபகாராதி வடிவ அந்த அந்தக் காரிய விசேஷத்தால் அப்படியப்படி பிரியாதி வடிவமாம் எ—று.

வரி என்பது ஆகுபெயர். சிதை = கீழ்மை. 20

(அ—கை)

எல்லாவற்றிலும் நியமமின்மையைக் காண்பிக்கும் பொருட்டு பிரசித்தமான வெறுப்பிற்கு விஷயமாயுள்ள புலியின்கண் துவேஷ புத்தியின் நியமமின்மையைக் காட்டுகின்ருர்.

வரிநேர தாகி யுறுமேறு வேடம்
வகிர்காணு மாயி ஞெதுமல்
விரிலால னஞ்செ யனுகூல மாக
விவிநோ தமேவ வெனவே
வருசேட மாகு முருநேம மேக
வடிவா லருத நிலையாந்
தெரியானு கூல்ய மிலதான நீர்மை
திகழீ ரிலாமை வடிவே. 21

(ப—ரை) வரிநேரதாகி உறுமேல் = புலி தன்னை பக்ஷிக்கும் பொருட்டு சம்முகமாய் வருமாயின் அப்போது, துவேடம் = வெறுப்பாம், வகிர் காணுமாயின் ஞெதுமல் = அப்புலியே பரா முகமாகப் போமாயின் உபேக்ஷையாம், விரிலாலனஞ்செய் அநுகூலமாக விவி நோதம் மேவனவே = அதுவே விசாலமாக விளையாட்டைச் செய் வதனல் தனக்கு அநுகூலமாயின் அப்போது விநோத சாதனமா கின்றது ஆதலின், வருசேடமாகும் = வாரா நின்ற தனக்கு உபகார மாகும் அதாவது பிரியமாம், [ஆனல் ஒரே வஸ்துவிற்கு பிரியத்தன்மை முதலிய மூன்று தருமங்களையங்கீகரிக்கின் வியவகார வியவஸ்தை சித்தியாது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] உருநேமம் ஏக = வியத்தி களுக்கு நியமம் ஒழிக, வடிவால் அருத நிலையாம் = இலக்ஷணத்தாலோ மாருதவியவஸ்திதியாம், [லக்ஷணம் யாதென்று இச்சையுண்டாகஅதன்

லக்ஷணத்தைக் கூறுகின்றார்] தெரிஆனுகூல்யம் = தோன்றா நின்ற அநுகூலத்தன்மை பிரியவஸ்துவிற்கும், இலதானநீர்மை=பிரதிகூலத் தன்மை துவேஷிய வஸ்துவிற்கும், திகழ் ஈர் இலாமை = விளங்கா நின்ற அனுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மையாகிய இரண்டு மில்லாமை உபேக்ஷிய வஸ்துவிற்கும், வடிவு=இலக்ஷணமாம் எ—று.

பகிர் என்பது வகிர் என மோனை நோக்கித் திரிந்தது. தனக்கு உபகாரத்தைச் செய்யுந் தன்மையால் பிரியத்தன்மையையடைகின்றது என்பார் சேடமாகும் என்றார்.

லக்ஷணம்=பிறவற்றினின்றும் வேறுபிரிக்கும் தருமம்.

விவினோதம்=நானாவித விளையாட்டு. 21

(அ—கை)

இவ்வளவு கிரந்த சமுதாயத்தால் உபபாதனஞ் செய்தபொருளை சுலபமாக அறியும்பொருட்டு சுருக்கிக் கூறுகின்றார்.

அறிவேபி ரேயா னுறுசேட நேய
மதின்வேற தான வெறுவோ
டுறநாடி டாமை யெனலோக நேம
முறும்யாஞ்ஞ வல்க்யர் மதமீ
துறைபாலன் மாழை யயலியாவி னூடு
முளதாகு முண்மை யிஃதே
செறிவாபி ரேய மதுகாணும் வேறு
சிவவேத மோதி யிடுமே 22

(ப—ரை) அறிவே பிரேயான்=பிரத்தியக்கான்மாவே அதிக் பிரியமாம், உறுசேடம் நேயம் = புண்ணியவசத்தால் அடையாநின்ற தனது அங்கமாயுள்ள பதார்த்தம் பிரியமாம், அதின்வேறதான = ஆன்மா அதன் சேடம்ஆகிய இரண்டினும் அன்னியமான புலி துரும்பு முதலியவற்றில், வெறுவோடு உறநாடிடாமை = துவேஷமும் உபேக்ஷையும் முறையே உண்டாகின்றன, என லோகம் நேமம் உறும்=இவ்வாறு நான்குவிதமாகசகத்து வியவஸ்தையடைந்துள்ளது, நான்கு பிரகாரத்தினும் அன்னியம் அற்பமும் இல்லையென்பது

அபிப்பிராயம், [இப்பொருள் சுருதி சம்மதமுமாமெனக் கூறுகின்றூர்] ஈது = ஆன்மா முதலியவற்றிற்கு பிரியதமத்துவம் முதலியது, யாஞ்ஞு வல்க்யர்மதம் = யாஞ்ஞுவற்கர் எனப்பெயரிய மகரிஷிக்கும் சம்மதமாம், [கேவலம் மைத்திரேயிப் பிராமணத்தில் மாத்திரம் ஆன்மாவிற்குப் பிரியதமத்துவம் சொல்லப்படவில்லை மற்றூ புருஷவிதப் பிராம்மணத் திலும் சொல்லப்பட்டிருக்கின்றது என்னும் அபிப்பிராயத்தால் அதன் வாக்கியத்தின் பொருளை சங்கிரகிக்கின்றூர்] உறைபாலன் மாழை = நன்கு வசிக்கின்ற புத்திரனினும் பொன்னினும், அயல்யாவினூடும் = மற்றைய எல்லா பதார்த்தங்களினும், உளது ஆகும் உண்மை இஃதே = ஆந்தரமாக உள்ள இவ்வான்ம தத்துவமே, செறிவாபிரேயம் அது காணும் = மிகுந்த பிரீதிக்கு விஷயமாமென்று அறிக, என்று, வேறு சிவவேதம் ஓதியிடும் = அன்னியமான நல்ல புருஷவிதப் பிராம்மணமும் கூறுகின்றது எ—று.

ஏ—அசை.

"இவ்வான்ம தத்துவம் புத்திரனினும் பிரியம் தனத்தினும் பிரியம் மற்றெல்லாவற்றினும் பிரியம் சருவத்தினுமாந்தரம்" என்னும் வாக்கியத்தால் புத்திர வித்தாதி சகலத்தினும் ஆந்தரமாயுள்ள ஆன்ம தத்துவத்திற்கு பிரிய தமத்தும் சொல்லப்பட்டது என்பது பொருள். 22

(அ—கை)

இவ்வாறு சுருதிகூறட்டும். பிரகிருதமான சாக்ஷியின் முக்கியான்மதன்மையில் என்னை வந்தது எனிற் கூறுகின்றூர்.

மறையார் விசார விழியாலி தேசின்
மயனுன்ம னயல தலவே
பொறைகோசம் வேறு பிரிவாக வுளிலுள்
பொருளுடல் வேறு பிரிவே
யுறைசாக ராதி வரவோடு போத
லொளிர்வாத லியாது கொடுவோ
வறவீது தானே யொளியாத லோடு
மறிவான வான்ம னெனுமே. 23

(ப—ரை) மறைஆர் விசார விழியால் = சுருதியின் பொருளை ஆராய்தலாகிய விசார திருஷ்டியினுல், இதே சின்மயன் ஆன்மன் =

இந்த சாக்ஷியே முக்கிய ஆன்மாவாம், அயலதுஅல=புத்திர வித்தாதி அன்று, [விசார விழியின் சொரூபத்தைக் கூறுகின்றார்] பொறைகோசம் வேறு பிரிவு ஆக=பாரமாகிய அன்னமயம் முதலிய பஞ்சகோசங்களை ஆன்மாவின்றும் வேறாகும்படி செய்து, உளில் உள்பொருள் நாடல்= அகத்தே ஆந்தர ஆன்ம வஸ்துவைக் கருதுதல், வேறு பிரிவு = விசாரமாம், [உள்ளிருக்கும் வஸ்துவின் தெரிசனப் பிரகாரத்தையே கூறுகின்றார்] உறைசாகர ஆதிவரவோடு போதல் = சஞ்சாரத்திற் கிடமாகிய சாக்கிர சொப்பன சுஷுப்த்திகளின் வரவும் போக்கும், யாது கொடு அறி ஒளிர்வு ஆதல்=எந்த வஸ்துவால் நன்றாய் விளங்குமோ, ஈதுதானே ஒளி ஆதல் ஓடும் அறிவான ஆன்மன் எனும் = இவ் வஸ்துவே சொப்பிரகாச சித்துருப ஆன்மாவென்று சொல்லப்படும் எ—று.

ஏகாரங்கள் மூன்றும், ஓகாரமும் அசைநிலைகள்.

சாக்கிரம் முதலிய அவஸ்தைகளுக்குள் பின்பின்னுள்ள அவஸ்தைகளின் வருகையும் முன்முன்னுள்ள அவஸ்தைகளின் நிவர்த்தியும் எந்த நித்திய சாக்ஷி சைதன்னியத்தால் விளங்குமோ அது சொப்பிரகாச சிதான்மாவாமென்பது பொருள்.

பஞ்சகோசங்களை வேறு பிரித்தல் தைத்திரீய சுருதியில் சொல்லியவாறு உணருக. 23

(அ—கை)

சுருக்கமாகச் சொல்லிய சுருதியின் பொருளை விஸ்தரிக்கின்றார்.

உயிராதி சேட முறையீற தான
வுயர்வோடு தாழ லுறுமே
யயரீதி ஞலே யவையூடு நேய
மதுகாண லாகு மறிநீ
உயுமாழை பால ருடலிந்தி யங்க
ளுயிர்தம்மு ளொன்றி ஞென்று
பயினே யமேயு முயரான் மனேதான்
பரநே யமேயு முரமே. 24

(ப—ரை) உயிர் ஆதி உறை ஈறதான சேடம்=(சாக்ஷியினும் வேருன)பிராணன் முதலாக பொருள் பரியந்தமாகவுள்ள சாதனங்கள், உயர்வோடு தாழல் உறும்=தாரதம்மியமாக (ஆன்மாவின் சமீபத்தில்) உள்ளன. [அதில் யுத்தியைக் கூறுகின்றார்] அய ரீதியினால் = அதே பிரகாரமாக தாரதம்மியத்தால், அவையூடு நேயமது காணலாகும் = அப்பிராணுதிகளில் பிரியமும் பார்க்கப்படுகிறது. அறிநீ = இதனை நீ அநுபவத்தாலுணருதி, எப்படி தாரதம்மியத்தால் பிராணுதிகளுக்கு ஆந்தரத்துவமோ அப்படியே அவைகளில் தாரதம்மியமாகப் பிரீதியும் எல்லோராலும் காணப்படுகின்றது என்பது பொருள், [தாரதம்மியத் தால் பிரியத்தின் அனுபவத்தையே விஸ்தரிக்கின்றார்] உயும் மாழை பாலர்உடல் இந்தியங்கள் உயிர்தம்முள் = சீவன ஏதுவான பொன் புத்திரன் தேகம் இந்திரியங்கள் பிராணன் ஆகிய இவைகளுள், ஒன்றின் ஒன்று பயில்நேயம் ஏயும்=ஒன்றைப் பார்க்கிலும் மற்றொன் றில் அதிகப் பிரியம் உண்டாகும், உயர் ஆன்மனே பரநேயம் ஏயும் = மேலான ஆன்மாவோ நிரதிசயப் பிரீதிக்கு விஷயமாம், உரம் = இது நிச்சயமாம் எ—று.

உறை=பொருள்.

கருத்திதுவாம்:- எல்லாப் பிராணிகளும் புத்திராதிகளின் துன்பத்தை நீக்கும்பொருட்டு பொருளை செலவழிக்கின்றார்கள், தனது தேகத்தைக் காப்பாற்றும் பொருட்டு புத்திராதிகளையும் ஒர்போது கொடுத்துவிடுகின்றார்கள், இந்திரிய நாசத்தை நீக்கும்பொருட்டு அடித்தல் முதலியவற்றால் தேக பீடையையும் உடன்படுகின்றார்கள், மரணம் நேரும்போது அதை நீக்கும்பொருட்டு இந்திரியவை கல்லி யத்தையும் உடன்படுகின்றார்கள் ஆகையால் பின்பின்னுள்ளவற்றில் அதிகப் பிரியமாம் என்பது சருவானுபவ சித்தமாம்.

ஆன்மாவில் நிரதிசயப் பிரேமை அறிஞனது அநுபவ சித்தமாம். 24

(அ—கை)

இவ்வாறு ஆன்மாவிற்கு பிரிய தமத்துவம் சுருதி முதலிய பிரமாணத்தால் சித்தித்ததாயினும் ஞானி அஞ்ஞானிகளின் விவாதத்தை நீக்கும்பொருட்டு சுருதியால் அவரது விவாதம் காண்பிக்கப்பட்டுளது எனக் கூறுகின்றார்.

திரமாக வீதி னிவண்ஞானி மானி
திடவாத மோது மறையே
யிருமான்ம னேதா னவண்மே னநேய
மெனவே மகாநிர் ணயமே
கரியே விஞ்ஞேய வயனுடி நேய
கனமாமென் ஞானி பனுமா
விருளோர் சுதாதி யதிநே யமோது
மிதுபோ கமேவ வறிவே. 25

(ப—ரை) ஈதின்திரமாக=இவ்வாறு திடமாகும்போது, இவண் ஞானி மானி திடவாதம் மறைஓதும் = ஈண்டு ஞானி அஞ்ஞானிகளது உறுதியான விவாதத்தை சுருதி கூறுகின்றது, [அந்த விவாதத்தில் உண்டான நிச்சயத்தைக் கூறுகின்றார்] அவண் = ஆண்டு, இரும் ஆன்மனேமேல் நல்நேயம் என மகா நிர்ணயம்=பெருமைபொருந்திய ஆன்மாவே நிரதிசயப் பிரியமாமென்பது திடமான நிச்சயமாம், ஆன்மாவிற்கு பிரியதமத்துவம் பிரதிபாதிக்கப்பட்டமையாலென்பது பொருள், [ஞானி அஞ்ஞானிகளின் அந்த விவாதத்தையே கூறுகின்றார்] விஞ்ஞேய அயல்நாடி=திருசியமாகிய அன்னியத்தைக் குறித்து, கரியே கனநேயமாம்=சாக்ஷியே அதிகப் பிரியமாம், என் ஞானிபனும் = என்று அறிஞன் அறைவன், இருளோர்சுத ஆதி நேயம்=அஞ்ஞானிகள் புத்திராதியே அதிகப் பிரியமாம், இது போகம் மேவ அறிவு=இந்தப் புத்திராதியரை அநுபவிக்கும் பொருட்டு சாக்ஷி சாதனமாம், ஓதும்=என்று கூறுவர் எ—று. 25

ஆலும், ஏகாரம் மூன்றும்—அசைநிலைகள்.

(அ—கை)

ஆன்மாவினும் வேருனவைகளைப் பிரியமாகக்கூறும் வாதிகளைப் பிரித்து உத்தரங்கூறும் பொருட்டு அவ்வாதிகளையே பிரித்துக் கூறுகின்றார்.

தகுசீடன் வாதி யிருவோரு மான்
மன் றனின்வே றுநேய மறைவார்
புகுவோர் வினவின் முறைமாறு கூறு
புரிபோத சாப மதுவே

யிகல்ஞானி நேய முனேரோ தனிக்கு
மெனிவாறு தீரும் விடையே
மிகுசீட் னேதெ லுறுயேந வோர்வு
மினமாசு நீர்மை யறிவான். 26

(ப—ரை) தகுசீடன் வாதி இருவோரும் = நல்ல மாணுக்கனும் பிரதிவாதியுமாகிய இருவரும், ஆன்மன்தனின் வேறு நேயம் அறைவார் = ஆன்மாவினும் அன்னியத்தைப் பிரியமாகக் கூறுவார் [உத்தரம் கூறும் பிரகாரத்தைக் கூறுகின்ருர்] புகுவோர் = தொடங்கிய அவ்விரண்டுபேருக்கும், முறைவிஞவின்மாறு கூறு = கிரமமாக சங்கையின் சமாதானம், போதசாபம் அதுபுரி = ஞானேபதேசத்தையும் சாபத்தையும் செய்வாய், [உத்தரத்தைக் கொடுத்தல் வடிவ "ஆன்மாவினுமன்னியத்தைப் பிரியமாகக் கூறுபவனை தத்துவவித்து பிரியவஸ்து அழச்செய்யும் என்று உபதேசிப்பார்" என்னும் அடுத்த சுருதி வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்ருர்] இகல்ஞானி = வலிவுடைய அறிஞன், நேயம் உனேரோதனிக்கும் = சீடன் பிரதிவாதியாகிய இருவரைக் குறித்து சீட பிரதிவாதியே, உனக்கு இஷ்டமான புத்திராதி வடிவ வஸ்து தனது நாசத்தால் உன்னை அழும்படி செய்யும், என் இவ்வாறு விடைதீரும் = என்றிவ்விதம் உத்தரமளிப்பன், [இந்த ஒரேவசனம் சிஷ்யன் பிரதிவாதியாகிய இருவருக்கும் எவ்வாறு உத்தரமாயிற்று என்ரு சங்கித்து சீடனைக்குறித்து உத்தரத்தை முதலில் வெளியாக்குகின்ருர் மிகுசீடன் என்பதுமுதல் இரண்டு செய்யுள்களால்] மிகுசீடன் ஓதல் உறுநேய ஓர்வு = சிறந்த சிஷ்யன் தன்ஞல் சொல்லப்பட்ட புத்திராதி வடிவ பிரிய வஸ்துக்களின் விசாரத்தால், மாசுநீர்மை மின அறிவான் = அவற்றில் தோஷத்தை வெளிப்படையாக உணருவான் எ—று.

உத்தரத்தைக் கொடுத்தல் வடிவ சுருதிவாக்கியத்தை எனக்கூட்டுக. 26

(அ—கை)

தோஷங்களை விசாரிக்கும் பிரகாரத்தையே தெரிவிக்கின்ருர்.

சுதனேய் வுருது துயரீயு நீடு
சொலுமீப வர்க்க துறினும்
பதஞதி யானும் வெளிமேவ லானும்
பரிதாப மீயும் வரவே
சுதனே யதாதி மடநீர்மை பூணு
சுபநூல தாயு மருநூ
லதுவேய் வுருமை கவியாயு மாதை
யணுகாத வல்லன் மிகுமே. 27

(ப—ரை) சுதன் ஏய்வுருது=புத்திரன் அடையப்படாமையால், சொலும் ஈபவர்க்கு நீடுதுயர் ஈயும்=சொல்லாநின்ற மாதா பிதாக்களுக்கு நீண்டகாலமாக துன்பத்தைக் கொடுப்பன், அது உறினும் = புத்திரன் அடையப்படினும், பதஞதியானும் வெளிமேவலானும் பரிதாபம் ஈயும்=கருப்ப பாதம் முதலியவற்ருலும் பிரசவத்தாலும் துன்பத்தைக்கொடுப்பன்,சுதன்வர=புத்திரன் பிறக்க,நோயதுஆதி= அவனை வியாதிகிரகம்முதலியவையும்,மடநீர்மை=குமாராவஸ்தையில் மூர்க்கத் தன்மையும், சுப பூணுநூலது ஆயும்=நல்ல உபநயனஞ் செய்தபோதும், அருநூலது ஏய்வுருமை = அரிய வித்தையின்றிய தன்மையும், கவியாயும்=பண்டிதனுயினும், மாதையணுகாத அல்லல் மிகும் = விவாகமில்லாமையும் ஆகிய (காலங்களில் பெற்றவருக்கு) துன்பங்கள் அதிகரிக்கும் எ—று.

கருப்பபாதம்=கருப்பம் கெட்டு கீழே ஒழுகிப்போதல்.

ஏ, ஏ—அசைநிலைகள். 27

(இதுவுமது)

பரதார மாதி பினுமக் குடும்பி
படரல்கன் மேவ றனியேன்
மரணுயி னீவர் துயர்மேவ லீறின்
மகஞதி யூடிவ் வகையே
பிரியாந னேய மதுபாறி யேதன்
பெருவான்ம னூடு துணியாப்
பெருநேய மான வதையே சதாவும்
பெறநாடி நாடி யிடுமே. 28

(ப—ரை) பினும் பரதாரம் ஆதி = மேலும் யௌவனவஸ்தையில் பிறர் மனைவியைப் புணர்தல் முதலியவையும், அக்குடும்பி படர் அல்க கல்மேவல் = அப்புத்திரன் கிரகஸ்தனாகி மிகுந்த வறுமையையடைதலும், பெற்றவருக்கு துன்பத்தைக் கொடுக்கும், தனியேன் மாணுயின் = பணக்காரனாயிருந்து இறப்பானேல், ஈவர் துயர் மேவல் ஈறுஇல் = பெற்றோருக்கு துன்பம் வந்து பொருந்துதல் முடிவு இன்றாம், இவ்வகை மகன் ஆதியூடு பிரியா = இவ்வாறு கூறிய பிரகாரம் புத்திராதி விஷயங்களில் உள்ள தோஷங்களை வேறு பிரித்து அறிந்து, நல் நேயமது பாறி = அவைகளில் பிரியத்தைவிட்டு, பெருதன் ஆன்மனாடு = பெரிய பிரத்தியக்கான்மாவாகிய சாக்ஷியினிடத்து, பெருநேயம் ஆன அதைதுணியா = பரமப் பிரீதியை நிச்சயித்து, பெறநாடி = பிரத்தியகான்மாவையடைய விரும்பி, சதாவும் நாடியிடும் = இரவும் பகலும் எப்போதும் அநுசந்தானஞ் செய்வான் எ—று.

ஏகாரம் நான்கும் அசைநிலைகள்.

இவ்வாறு புத்திரனிடத்திலுள்ள தோஷங்களைக் கூறுதல் மனைவி முதலிய எல்லா விஷயங்களிலுள்ள தோஷங்களுக்கும் உபலக்ஷணத்தின் பொருட்டாம். 28

(அ—கை)

பிரிய வஸ்து உன்னை அழச்செய்யும் என்னுமிவ் வாக்கியமே பிரதிவாதியைக் குறித்து சாப வடிவமாமென்பதைப் பிரகடனஞ் செய்கின்றார்.

அடமோடு பிரம வெறுவோடு மதனை
யவிழாத வாதி நரகே
படும்யோனி கோடி வடுவாட லாகும்
பரஞானி பிரம வடிவா
னடனேச னுகு மதனு லெதேது
நவில்வாமஃ தஃதவ் வணமே
படர்சீட னுக்கு மதிவா தியர்க்கும்
பயனாகி யார்த றிணமே. 29

(ப—ரை) அடமோடு = (புத்திராதியிலுள்ள பிரியத்தை ஒருவாற்றுனும் பரித்தியாகம் செய்யேன் என்னுமிவ்வித) ஆக்கிரகத்தாலும், பிரமவெறுவோடு = பிரமத்திலுள்ள துவேஷத்தாலும், அதனை அவிழாதவாதி = புத்திராதிகளுக்கே பிரியத்துவத்தைக் கூறுதலை விடாத பிரதிவாதிக்கு, நரகேபடும் = நரகமே பிராப்தியாம், கோடியோனி = திரியக்கு முதலிய அனேக ஜன்மங்களில், வடு = தோஷத்தால், வாடல் ஆகும் = மெலிதலும் உண்டாகும், பிரம வெறுவு = ஞானியால் சொல்லப்பட்டதை மறுப்பேன் என்னும் வடிவினதாகிய துவேஷம், கூறிய ஆக்கிரகத்தினையும் துவேஷத்தினையுமுடைய வாதிக்கு நரகப் பிராப்தியும் அநேக ஜன்மங்களில் புத்திர பாரியாதி இஷ்ட வஸ்துவின் வியோகமும் அநிஷ்ட வஸ்துவின் பிராப்தியுமாகிய தோஷமும் பிரியவஸ்து உன்னை அழச்செய்யும் என்று கூறும் ஞானியால் சொல்லப்பட்டது என்பது பொருள்.

[அற்றேல் ஞானியால் சொல்லப்பட்ட ஒரே வாக்கியத்திற்கு சீடனைக்குறித்து உபதேசவடிவமும் வாதியைக்குறித்து சாபவடிவமும் ஆகவிரோதமான இருவடிவமெப்படிப் பொருந்தும் என்று சங்கித்து உத்தரங்கொடுப்பவன் ஈசுரவடிவாதலால் அவனது கருத்தின்படியே இரண்டும் ஆகும் என்று கருதி அதனைப்பிரதிபாதிக்கின்ற "ஈசுவரன் நான் எவ்வாறு சொல்வேனே அவ்வாறே ஆகும்" என்னுமடுத்த வாக்கியத்தின் தாற்பரியத்தினைக் கூறுகின்றார்] பரஞானி பிரம வடிவால் = பிரமத்தையுணர்ந்தவன் பிரமரூபமா்தலால், நடனஈசன் ஆகும் = நிர்த்தனஞ்செய்யும் பரமேஸ்வரன் ஆவன், அதனால் = அக்காரணத்தால், எது ஏது நவில்வாம் = ஞானியால் சிஷ்யனையும் பிரதிவாதியையும் குறித்து யாதொரு இஷ்டமாவது அநிஷ்டமாவது சொல்லப்படுகின்றதோ, அஃது அஃது அவ்வணமே = அந்த இஷ்டமும் அநிஷ்டமும் கூறியபடியே, படர் சீடனுக்கும் அதிவாதியர்க்கும் = ஞானியின் மேலான மாணுக்கனுக்கும் பிரதிவாதிக்கும், பயன் ஆகி ஆர்தல்திணம் = பலனாய்ப்பொருந்துதல் நிச்சயமாம் எ—று. 29

(அ—கை)

வியதிரேகமுகத்தால் கூறியபொருளை அன்வயமுகத்தால் பிரதிபாதிக்கின்ற "ஆன்மாவையே பிரியமாக உபாசனை செய்க. எவன் ஆன்மாவையே பிரியமாக உபாசிக்கின்றானே அவனுக்கு ஈண்டு பிரிய வஸ்து நாசமாவதில்லை" என்னும் அடுத்த வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்றார்.

எவனே தனது கரிமாந னேய
மெனநாளுஞ் சேவை செயுமோ
வவன்மேன னேய விஃதான் மரூப
மழியா தெநாளு முயர்வா
யவிர்நேய தேய மதனு னலான்ம
னதியின்ப னுகுஞ் சார்வ
பவுமாதி யூடு மிகுநேய மேய
படரின்பு கேட்ப வருமே 30

(ப—ரை) எவன் = (அனான்ம வஸ்துவிற்குப்பிரியம் கூறுபவனி னுமன்னியமான) யாதொரு சிஷ்யன், தனது கரிமாநல்நேயம் என = தனது சாக்ஷி ஆன்மாவையே நிரதிசயப்பிரிய விஷயமாமென்று, நாளும் சேவை செயுமோ = எப்போதும் உபாசிப்பனோ, அவன் மேல் நல்நேய இஃது ஆன்மரூபம் எநாளும் அழியாது = அவனுக்கு பிரிய தமமாகக் கருதப்பட்டுள்ள இவ்வான்மா ஓர் போதும் (பிரதிவாதிக்கு சம்மதமான பிரிய வஸ்து போல) நாசமாகாது, மற்றோ எப்போதும் ஆனந்தரூபமாகவே விளங்குகின்றது, [இவ்வாறு ஆன்மாவில் பரமப் பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ ஏதுவை சாதித்து இப்போது சித்தித்ததைக் கூறுகின்றார்] நல்ஆன்மன் உயர்வாய் அவிர்நேய தேயமதனுல் = ஆனந்த வடிவ பிரத்தியக்கான்மா மேலாக விளங்குகின்ற பிரியத்திற்கு ஆஸ்பதமாவதால், அதிஇன்பன் ஆகும் = பரமானந்த ரூபமாவன், சார்வபவுமாதியூடு மிகுநேயம் ஏய = சகல பிருதிவியையும் அரசாளுதல் முதல் இரண்ணிய கருப்ப பரியந்தமான பதவிசேஷங்களில் பிரீதி அதிகரிக்க, படர் இன்பு கேட்பவரும் = சுகத்தின் மிகுதி கேட்கப்படுகின்றது எ—று.

ஏ—அசை.

ஈண்டு அநுமானம் இதுவாம்:- ஆன்மா—பரமானந்த வடிவம், நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாவதால், எது பரமானந்தமன்றோ அது நிரதிசயப் பிரேமைக்கு விஷயமுமன்று, கடாதிபோல என்பது கேவல வியதிரேகி அநுமானம்.

நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாதல் வடிவ ஏதுவிற்கு ஆன்மாவின் பரமானந்த வடிவத்தை சாதிப்பதில் சாமர்த்தியத்தைப் புலப்படுத்தும் பொருட்டு பிரீதி அதிகமாகும்போது சுகம் அதிகமாம் என சாருவபவும என்பதாதியால் கூறப்பட்டது.

சாருவ பௌமாதிபத (ஸ்தானம்) விசேஷங்களில் எதில் எதில் பிரீதி அதிகரிக்கின்றதோ அதில் அதில் சுகத்தின் மிகுதி இருக்கிறதென்று தைத்திரீய பிரகதாரண்யக சுருதிகளில் கூறப்பட்டுளது ஆதலால் பிரீதி நிரதிசயமாயின் ஆனந்தமும் நிரதிசயமாமென அறியக்கூடும் என்பது கருத்து.

ஓகாரம் பிரிநிலையில் வந்தது. 30

(அ—கை)

அற்றேல் ஆன்மாவிற்கு பரமானந்த வடிவம் பொருந்தாது. ஆன்மா பரமானந்த வடிவமாமேல் சைதன்னியம் போன்று அதன் சொரூப வடிவ ஆனந்தமும் எல்லாப் புத்தி விருத்திகளிலும் தொடர்ந்திருத்தல் வேண்டும் என்று வினவுகின்றான்.

அறிவுநிப மாக சுகமுமறி வான்ம
  னதுவியல்ப தாயின் மதியெழா
வுறுகுண மெவூடு மொளிர்தல் சிதிபோல
  வொழிக விதமீது வெமையொளி
செறியுருவ தீப மதனொளியில் வியாபி
  சிகிசுடலி லாதை யுறழவே
யறிவுரு வதேபி னிலவு மணம்ரூப
  மருரச மொடூறு முதலவே. 31

(ப—ரை) அறிவுநிபமாக = சைதன்னியத்திற்கு சமானமாக, சுகமும் அறிவு ஆன்மனது இயல்பது ஆயின் = ஆனந்தமும் சிதான்மாவின் சொரூபமாமேல், மதிஎழா உறுகுணம் எவூடும் = புத்தியினின்றும் உதிக்கின்ற விருத்திகளெல்லாவற்றிலும், சிதிபோல ஒளிர்தல் = சைதன்னியம்போல தோன்றுதல் வேண்டும் எனின், [சித்தும் ஆனந்தமும் ஆகிய இரண்டும் ஆன்மாவின் சொரூபமாயினும் விருத்திகளில் சித்திற்கே அநுவிருத்தியாம், ஆனந்தத்திற்கு அன்று என

திருஷ்டாந்தத்தையாசிரயித்துப் பரிகரிக்கின்றூர்] ஈதுவிதம் ஒழிக = இவ்வித சங்கையை விட்டுவிடுவாய், வெமை ஒளி உருவதீபம் தன் ஒளி = உஷ்ணப் பிரகாச வடிவ தீபத்தினது பிரகாசமானது, இல் வியாபி = கிரகத்தில் பரவுகின்றது, சிகிசுடல் இல் = தீபத்தின் உஷ்ணம் பரவுவதின்று, அதனைஉறழ = அதைப்போல, அறிவு உருவதே பின்நிலவும் = சைதன்னிய சொரூபமே தொடர்ந்து விளங்கும் ஆனந்தம் விளங்காது, [சித்தும் ஆனந்தமும் அபேதமாயின் சித்தை அபிவியஞ்சம்செய்கிற புத்திவிருத்தியினுலேயே ஆனந்தத்தின் அபிவியத்தியும் உண்டாகவேண்டும் என்று சங்கித்து அவ்வாறு நியமம் இன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றூர்] மணம் ரூபம் அருரசம் ஒடு ஊறுமுதல = கந்தம் உருவம் நல்ல சுவை பரிசம் முதலான குணங்கள்.

அடுத்த கவியோடு முடியும். அபிவியஞ்சம் = தோற்றம்.

அதை என்பது ஆதை என ஓசைக்காக நீண்டது.

ஏ, ஏ—அசைநிலைகள். 31

உளவெனினு மேக பொறியதனின் வேறி
லொருபொருள தேகொ ளுதலுமா
முளவயலி லாதை யுறழவறி வின்ப
முறுதலய லேயின் மணமுனே
வுளவயல தாகு மெனினதன பேத
முளதறிவில் வேறு தனில்சொலா
யுளதுமுதல் பூவி னுளமணம தாதி
யுமிதுவித பேத மிலதரோ. 32

(ப—ரை) வேறு இல்உள எனினும் = ஒரு திரவியத்தில் பேதம் இன்றி ஒன்றாக இருப்பனவாயினும், ஏகபொறியதனின் ஒரு பொருளதே கொளுதலும் ஆம் = கிராணுதி ஒவ்வொரு இந்திரியத்தால் கந்தாதி ஒவ்வொரு குணமே கவரப்படுகின்றது, உள அயல் இல் = அதே திரவியத்திலுள்ள வேறு குணம் கவரப்படுவதின்று, அதை உறழ = அதுபோல, சேதனம் ஆனந்தம் இரண்டனுள் சேதனமே விளங்கும், [திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களுக்கு விஷமத்தன்மையை வினவுகின்றூன்] அறிவு இன்பம் அயல் உறுதலே இல் = சேதனமும் ஆனந்தமும் பரஸ்பரம் பேதமாக இன்றும் மற்றூ அபின்னமேயாம்,

உளமணம் முனே அயலது ஆகும் எனின் = ஒரு திரவியத்திலிருக்கின்ற கந்தம் முதலியவைகளோ பரஸ்பரம் விலக்ஷணங்களாம் என்று சொல்லின், [சொல்லிய விஷமத்தன்மையை நீக்குவதற்காக தார்ஷ்டாந்தத்தில் சிதானந்தங்களின் அபேதம் இயல்பாக உள்ளதா அதாவது சொரூபமாக உள்ளதா அல்லது விருத்திவடிவ நிமித்தத்தால் உள்ளதா என்று விகற்பிக்கின்றார்] அதன் அபேதம் அறிவில் உளது = சித்திற்கும் ஆனந்தத்திற்கும் உள்ள ஐக்கியம் ஆன்மாவில் இருக்கின்றதா, அல்லது, வேறுதனில் உளது = அதன் உபாதிகளான விருத்திகளில் இருக்கின்றதா, சொலாய் = கூறுவாய், [முதற்பக்ஷத்தில் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களுக்கு சமத்தன்மையைக் கூறுகின்றார்] முதல் = சிதானந்தங்களுக்கு சாக்ஷியில் பேதமின்றென்னும் முதற் பக்ஷத்தில், பூவின் உளமணமது ஆதியும் = புஷ்பத்திலுள்ள கந்தம் முதலியவைகளும், இது விதம் = இவ்வாறு சித்து ஆனந்தங்களைப் போன்றே, பேதம் இலது = பரஸ்பரம் வேறில்லை, ஒன்றைவிட்டு ஒன்றைக்கொண்டுவர முடியாமையால் என்பது கருத்து.

ஆரோ—அசை.

அதை என்பது ஆதை என நீட்டல் விகாரம்.

சொல்லாய் என்பது சொலாயென இடைக்குறையாயிற்று. 32

(அ—கை)

விருத்திகளில் அபேதம் இருக்கின்றதென்னும் இரண்டாவது பக்ஷத்திலும் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்கட்கு சமத்தன்மையைக் கூறுகின்றார்.

புலனயலி னொலொ ணதனயன் மையாகில்
புகல்க ரணபேத மதுகொடே
நலவவை யின்வேறு குணமுதல் விருத்தி
நடுவறி வின்பேக மலமிலா
திலகலினவ் விருத்தி ரசசினது மலின
மியையவ ணினிதிங் கிலகுமா
பொலிரச மதான புளிலவண மேயில்
புளிமை யறவீன புளியெனு. 33

(ப—ரை) புலன் அயலினுல் = கந்தாதியைக் கிரகிக்கின்ற கிராணம் முதலிய இந்திரியங்களின் பேதத்தால், ஒண் அதன் அயன்மை ஆகில் = விளங்கா நின்ற கந்தாதிகளுக்கு பேதத்தையுடன் படின், புகல் கரண பேதமது கொடு = சொல்லா நின்ற விருத்திகளின் பேதத்தால், நல அவையின் வேறு = நல்ல சிதானந்தங்களுக்கும் பேதமாம், [அப்படியாயின் சிதானந்தங்களுக்கு அபேதம் எங்கே தோற்றுகிறது என்று சங்கித்துக் கூறுகின்றார்] முதல் குணவிருத்தி நடு = சத்துவகுண விருத்தியில், அறிவு இன்பு ஏகம் = சித்திற்கும் ஆனந்தத்திற்கும் அபேதம் தோற்றுகிறது, [அதில் ஏதுவைக் கூறுகின்றார்] அவ்விருத்தி மலம் இலாது இலகலின் = அச்சத்துவகுண விருத்தி நிர்மலமாய் விளங்குதலின், [அப்படியாயின் பேதம் எதனுல் தோற்றுகிறது எனிற் கூறுகின்றார்] அவண் ரசசினது மலினம் இயைய = அச்சத்துவத்தில் இராஜஸ விருத்தியின் களங்கம் பொருந்த, இங்கு இனிது இலகுமா = ஈண்டு மலின சத்துவத்தில் சுகாம்ஸம் தோற்றுமா, திரஸ்கரிக்கப்பட்டது என்பது பொருள், [சுகாம்ஸம் இருக்கவே அதைத் திரஸ்கரித்தலில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] பொலிரசமதான புளி = அதிக புளிப்பு ரசமுள்ள புளியானது, லவணம் ஏயில் = உப்போடு கூடுமாயின், புளிமை அற = அதிக புளிப்பு நீங்கிப் போக, ஈன புளியென = கொஞ்சம் புளிப்பு இருப்பதுபோல் ஆம் எ—று.

ஏ—அசை.

சிதானந்தங்களின் அபிவியத்திக்குக் காரணங்களான இராஜஸ சாத்துவிக விருத்திகளை கரண பேதமென்றார்.

புண்ணிய கருமத்தால் செனித்ததும் சத்துவ குணத்தின் பரிணும வடிவமும் ஆகிய புத்திவிருத்தியை முதல்குணவிருத்திஎன்றார்.

புளியம்பழத்தில் உப்பு சம்பந்தத்தால் அதிகப் புளிப்பு திரஸ்கரிக்கப்படுவதுபோல இரஜோகுண விருத்தியில் ஆனந்தத்தின் திரஸ்காரமாம் என்பது பொருள்.

திரஸ்காரம் = மறைப்பு. ணகரம் இசைக்காக நீண்டது. 33

(அ—கை)

கூட அபிப்பிராயமுடையவனுய் வாதி வினவுகின்றான்.

இவண மிஃதாக பிரியதம நீர்மை
யிதுகொடறி வான்ம னதனினே
யுவணசுக நீர்மை பிரிவுசெய லாயு
மொளிர்பரம யோக மின்றெனு
நவமதெது யோக மதனினஃ தேயெ
னவிலுவ நன்ஞான மடையவே
நவிலுநல யோகம் வருதலிலை யோவென்
னலபிரிவி னுணர்வின் ஞானமே 34

(ப—ரை) இவணம் = இந்தப்பிரகாரம், பிரியதமநீர்மை இது கொடு = பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ ஏதுவினுல், அறிவு ஆன்மன தனின் = சிதான்மாவில், உவண சுகநீர்மை = பரமா னந்தத் தன்மையை, பிரிவுசெயல் இஃது ஆக = வேறு பிரித்தறிதல் ஆகிய இது யோக்கியமாகுக, ஆயும் = அவ்வாருயினும், ஒளிர் பரம யோகமின்றி என் ஆம் = விளங்காநின்ற மேலான யோகமில்லாமல் என்ன சித்திக்கும், [கூட அபிப்பிராயமுடையவராகியே சித்தாந்தி உத்தரங் கூறுகின்ருர்] யோகமதனின் நவமது எது = யோகத்தால் புதிது யாது உண்டாகுமோ, அஃதே என் நவிலுவம் = அதுவே விவே கத்தாலும் உண்டாகுமெனக்கூறுவாம், [இப்போது சங்கை சமாதானம் ஆகிய இரண்டின் அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்ருர்] நல் ஞானம் அடையவே நலயோகம் நவிலும் = நல்ல உணர்வைப்பெறுதற் பொருட்டே நல்ல யோகம் முன் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது, நல்பிரிவின் உணர்வின் ஞானம் வருதல் இலையோ என் = நல்ல பஞ்சகோச விசாரத்தால் ஆன்ம ஞானம் உண்டாகாதா என்னே, உண்டாகுமென்பது பொருள் எ—று.

கௌணன்மா, மித்தியான்மா, பிரியவஸ்து, உபேக்ஷியவஸ்து, துவேஷ்யவஸ்துவாகிய அனைத்தினின்றும் ஆன்மாவை வேறுபிரித்து உணர்தலை பிரிவுசெயல் என்ருர், அவ்வாருயினும் கூறிய பிரிவு முத்தி சாதனமன்று, அபரோக்ஷ ஞானவாயிலாக முத்திக்குச் சாதனமாக யோகத்தைக் கூறியிருத்தலால் என்பது சங்கையின் கூடஅபிப்பிராயம், எப்படி யோகம் அபரோக்ஷ ஞானத்திற்கு ஏதுவாமோ அப்படி விவேகமுமாம் என்பது சமாதானத்தின் கூட அபிப்பிராயம்.

முன் அத்தியாயத்தில் அபரோக்ஷ ஞானத்தின் சாதனமாக யோகம் கூறப்பட்டதுபோல் இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட கௌணுதி ஆன்மாக்களின் விவேக வாயிலாக பஞ்சகோச விவேகத்தாலும் ஞானமுண்டாகுமென்பது பொருள்.

உவணம் = உயர்ச்சி, விவேகம் = விசாரம்.

இன்றி என்பது இன்று எனத் திரிந்து நின்றது. 34

(அ—கை)

யோகம் விசாரம் என்னுமிரண்டற்கும் ஞானத்திற்கு ஏதுவாந் தன்மையுண்டென்பதில் பிரமாணம் யாது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

தானமெது சாங்க்ய ராலடை யலாகுந்
தானது றலாகு மியோகரால்
ஈனமில் விவேகி யோகியிரு வோர்த
மேர்பய னதேக மோதுமான்
ஞானதுணி வின்றி யோகுலகு வாகு
நாடுசிலர் கட்கு மாறியே
யேனபர மேச னீதையெணி யாற்றை
யீர்வகை யதாக வோதினன். 35

(ப—ரை) சாங்க்யரால் எது தானம் அடையலாகும் = ஆன்மா ஞன்ம விவேகிகளால் யாதொரு மோக்ஷ வடிவ தானம் அடையப் படுகிறதோ, அது யோகரால் உறலாகும் = அந்தப்பதம் யோகிகளாலும் அடையப்படும் என்று, ஈனம் இல் விவேகி யோகி இருவோர் தம் ஏர்பயனது ஏகம் = சிறந்த சாங்கியர் யோகியர் ஆகிய இருவருக்கும் ஞானவாயிலாக மேலான மோக்ஷ வடிவ பலத்தினைக்கியத்தை, மால் ஓதும் = ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறியருளினர், [விவேகம் யோகம் இரண்டற்கும் ஒரேபயனுயின் இரண்டில் ஒன்றனையே சாஸ்திரங்களில் பிரதிபாதித்தல் பொருத்தமாம். இரண்டனையும் பிரதிபாதித்தல் பொருத்தமன்று என்று ஆசங்கித்து அதிகாரிகளின் பேதத்தால் இரண்டையும் பிரதிபாதித்தல் பொருத்தமாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்] ஞான துணிவு இன்றி = ஞான நிச்சயமில்லாமல்

அதாவது விசாரத்தில் சாமார்த்தியமின்றி, நாடு சிலர்கட்கு யோகுலகு வாகும் = தியானம் செய்கின்ற சில பேர்களுக்கு போகம் எளிதாகும், சிலர்கட்கு, மாறி ஞான துணிவு லகுவாகும் = சிலபேர்களுக்கு அதினினும் விபரீதமாக ஞான நிச்சயம் எளிது ஆகும், ஏனபரமேசன் = வராகாவதாரமெடுத்த ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஈதைஎணி = கூறிய இவ்வதிகாரிகளின் பேதத்தை விசாரித்து, ஆற்றை ஈர்வகையதாக ஓதினன் = மார்க்கத்தை இரண்டு பிரகாரமாகக் கூறியருளினர்.

மாறி என்பதனுல் சிலருக்கு ஞான துணிவு லகுவாகும் என்பது சூசிப்பிக்கப்பட்டது அதை அத்தியாகாரம் செய்து உரைசெய்யப் பெற்றது. 35

(அ—கை)

ஆனுல் அத்தியந்தம் வருத்தத்தால் சாதிக்கத்தகுந்த யோகத்திற்கு வருத்தமின்றி சுலபமாக சாதிக்கத்தகுந்த விசாரத்தினும் மேன்மை சொல்லவேண்டும் என்ரு சங்கித்து அந்த மேன்மை அபரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுவதால் சொல்லப்படுகிறதா அல்லது இராகத் துவேஷம் முதலியவற்றை நிவர்த்தி செய்வதால் சொல்லப்படுகிறதா, அல்லது துவைதத்தின் அப்பிரதீதியைச் செய்வதாலா, என்று விகற்பித்து முதல் பக்ஷத்தில் யோகம் விவேகம் என்னுமிரண்டிற்கும் பயனின் சமத்தன்மையைக் கூறுகின்ருர்.

போத மிணையாக வீர்வகை யிலாண்டு
போதக மதாக யோகிலே
நூதனம தென்கொல் யோகியும் விவேகி
நூறனசை யேச னேரதே
போதன திநேய ஞகவ றிபோது
போகும் விஷயாசை ராகமே
யேதகி தமாக நாடுகில னுக்கிங்
கெவனுள துவேட மாயினே. 36

(ப—ரை) ஈர்வகையில் = விவேகம் யோகம் என்னும் இரண்டின் கண்ணும், போதம் இணையாக = ஞான வடிவ பயன் சமானமாக, ஆண்டு போதகமது ஆக = (முற்கூறிய "தானமெது" என்னும்) கீதை வாக்கியத்தில் உபதேசித்திருக்க, யோகிலே நூதனமது என்கொல் =

யோகத்தில் மேன்மையேது, இல்லை என்றபடி, [இரண்டாவது பக்ஷத்தை மறுக்கின்ருர்] யோகியும் விவேகியும் = யோகாப்பியாசஞ் செய்பவனுக்கும் விசாரஞ் செய்பவனுக்கும், நசை ஏசல் நூறல் = இராகத் துவேஷங்களைக் கெடுத்தல், நேரது = சமானமாம், [விவேகிக்கு இராகாதியின் இன்மையை உபபாதனஞ் செய்கின்ருர்] போதன் அதிநேயன் ஆக அறிபோது = ஆன்மா பிரியதமன் என்று அறியும்போது, விஷய ஆசைபோகும் = சத்தம் முதலிய விஷயங்களில் பிரீதி நீங்கிவிடும், ராகம் ஏது = (இராகத்திற்கு ஏதுவான அநுகூலத்தன்மை ஞானமின்மையால்) விருப்பம் உண்டாவதில்லை, அகிதமாக நாடுகிலனுக்கு = பிரதிகூலமாகக் கருதாதவனுக்கு, ஆயின் = ஆராயும் இடத்து, இங்கு துவேடம் ஏவண் உள = ஈண்டு வெறுப்பு எவ்விஷயத்தில் இருக்கின்றது, அதன் ஏதுவான பிரதிகூல ஞானமின்மையினுல் துவேஷமுண்டாகின்றதில்லை என்பது பொருள் எ—று.

ஏகாரம் நான்கும்—அசைநிலைகள். 36

(அ—கை)

ஆனுல் விவேகிக்கு வியவகார காலத்தில் தேகாதியில் உபத்திரவஞ் செய்கின்ற பிராணிகளிடத்தில் துவேஷம் காணப்படுகிறதே என்ரு சங்கித்து அப்போது யோகி விவேகியிருவருக்கும் அந்தத் துவேஷம் சமானமாம் எனப் பரிகரிக்கின்ருர்.

ஆகமுன வைக்கொ ணகிதம தனூடு
மாயிடு துவேட மிருவருக்
கேகமது செய்வோன் யோகியல னுயி
னேனைய னுமாவ னவணனேன்
மோகவிவ கார மீதிலிரு மைக்கண்
மோதலிரு வோர்க்கு நேரதே
யோகிலிலை யாகு மாயின திலேக
யோச னையினூடு மேதரோ. 37

(ப—ரை) ஆகம் முன்னவைக்கு = தேகாதிகளுக்கு, ஒண் அகிதமதனூடு = மிகவும் பிரதிகூலமாயுள்ள வஸ்துக்களில், இருவருக்கும் துவேடம் ஏகம் ஆயிடும் = யோகி விவேகி இருவருக்கும் வெறுப்பு

சமானமாம், [பிரதிகூலமான தேள் முதலியவற்றில் துவேஷஞ் செய்பவனை யோகியாக அங்கீகரிப்பதில்லையெனின் அப்படியாயின் அப்படிப் பட்ட புருஷனை விவேகியாகவும் அங்கீகரியேம் எனக் கூறுகின்றார்] அது செய்வோன் யோகி அலன் ஆயின் = துவேஷஞ் செய்யும் புருடன் யோகி ஆகானெனின், அவணனேல் = துவேஷமுடையவனாயின், ஏனையனும் ஆவன் = விவேகமுடையவனும் ஆகான், [ஆனால் விவேகிக்கு துவைதப்பிரதீதியுளது யோகிக்கோ அஃதின்றாம் என்னும் மூன்றாவது விகற்பத்தில் யோகிக்கு மேன்மை சித்திக்குமென்று சங்கித்து விவேகிக்கு அந்தத்துவைதப் பிரதீதி, வியவகார காலத்தில் சொல்லப்படுகிறதா, அல்லது வேறு காலத்திலா என்று விகற்பித்து முதற்பக்ஷத்தில் அதுயோகிக்கும் சமானமாமெனக் கூறுகின்றார்] மோகவிவகாரமீதில் = மயக்கத்தோடு கூடிய வியவகாரத்தில், இருமை கண்மோதல் = துவைதம் பிரதீதியாதல், இருவோர்க்கும் நேரது = விவேகியோகி இருவருக்கும் சமானமாம், [இரண்டாவதை சங்கிக்கின்றான்] யோகில் இலையாகும் ஆயின் = யோகிக்கு சமாதி காலத்தில் துவைதப் பிரதீதியில்லை என்று சொல்லின் [அப்படியாயின் விவேகிக்கும் விவேக காலத்தில் துவைதப் பிரதீதியினின்மை சமானமாமெனப் பரிகரிக்கின்றார்] அதில் = அது போன்று அதாவது யோகிக்கு சமாதிகாலத்திற் போன்று, ஏகயோசனையினாடும் = சுருதி யுக்திகளால் அத்துவிதமே உண்மையென்று விசாரஞ் செய்யுங் காலத்திலும்,ஏது = விவேகிக்கு துவைதப் பிரதீதி ஏது,இல்லையென்பது பொருள் எ—று.

ஏ, அரோ—அசை. 37

(அ—கை)

அந்தத் துவைதப் பிரதீதியினின்மையெப்படியுண்டாமென்று சங்கித்து அடுத்த அத்தியாயத்தில் அது பிரதிபாதிக்கப்படுமெனக் கூறுகின்றார்.

அதுவுமத்வை தானந்த நாமகமா மூன்று
மத்தியா யத்தினம்மா லறையலுறு மதனால்
எதுவுமதி மங்கலமா நிசவினிமை தனையே
யெஞ்ஞான்றுங் கண்டுலக மனைத்தையுங் காணாதே

பொதியருத்தத் தால்யோகி யெனினுயி னீதான்
பொங்குமகிழ் வுடையனுய் விருத்தியினே யடைவாய்
மதுபிரம வானந்த நூலிலிவ்வோத் திரண்டின்
மந்தனுக்கா யான்மவா னந்தமலர்ந் ததுவே. 38

(ப—ரை) அதுவும் = துவைதப் பிரதீதியின் இன்மையும், அத்வைதானந்த நாமகமூன்ருமத்தியாயத்தில் நம்மால் அறையலுறும் = அத்துவிதானந்தமெனப் பெயரிய மூன்ருவது அத்தியாயத்தில் நம்மால் சொல்லப்படும், [கூறிய பொருளே முடிக்கின்ருர்] அதனுல் எதுவும் அதிமங்கலம் = ஆகையால் அனைத்தும் மிகவும் சோபனமாம், [அற்றேல் துவைதத்தின் அப்பிரதீதியோடு கூடிய ஆன்மஞானமுடையவன் யோகியேஆவன்என்றுவினவுகின்ருன்] நிசஇனிமைதனையே எஞ்ஞான்றும் கண்டு = நிசானந்தத்தையே எப்போதும் பார்ப்பவனுய், உலகம் அனைத்தையும் காணுது பொதி = சகல சகத்தையும் பாராதிருப்பவன், அருத்தத்தால் யோகியெனின் = பொருளால் யோகியேயாவன் என்று சொல்லின், [உடன்படலால் விலக்குகின்ருர்] ஆயின் = அப்படியாயின், நீ பொங்கு மகிழ்வு உடையனுய் விருத்தியினை அடைவாய் = நீ மிக்க சந்தோஷமுடையவனுய் வளர்ச்சியைப் பெறுவாய், [அத்தியாயத்தின் தாற்பரியத்தை சுருக்கித் தெரிவிக்கின்ருர்] மதுபிரம ஆனந்த நூலில் = தேன்போன்ற பிரம்மானந்தமென்னும் கிரந்தத்தில், இவ்ஓத்து இரண்டில் = இவ்விரண்டாவது அத்தியாயத்தில், மந்தனுக்கு ஆய் = மந்தமதியினையுடைய புருடன் மீது அநுக்கிரகம் சித்திக்கும்பொருட்டு, ஆன்ம ஆனந்தம் மலர்ந்தது = ஆன்மானந்தம் விவேசனம் செய்யப்பட்டது எ—று.

ஏ, ஏ, தான்—அசைநிலைகள். 38

பனிரண்டாவது ஆன்மானந்தம் முற்றிற்று.

ஆகக்கூடுதல் செய்யுள் 684

உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## பதிமூன்ருவது பிரகரணம்.

## அத்வைதானந்தம்*

(அ—கை)

பிரமானந்தமென்னும் முதலாவது அத்தியாயத்தில் 6-வது செய்யுளில் "சுகவகை மூன்று சிவம் வித்தைவிடயச் சுகம்" என மூன்று ஆனந்தத்தையே பிரதிஞ்ஞை செய்து ஆன்மானந்தமென்னும் இரண்டாவது அத்தியாயத்தில் அம்மூன்று ஆனந்தத்தினும் வேருக ஆன்மானந்தத்தை நிருபித்தலால் அதற்கு விரோதமாகின்றது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

திகழுமுன் யோகவா னந்தஞ் செப்பெது
புகழுமான் மானந்த மென்று போற்றலா
மிகழுசத் வயமிதற் கெங்ஙனுங் கொலோ
மகிழ்பிர மத்துவ மென்னின் மாணகேள்.

(ப—ரை) திகழும் முன்யோக ஆனந்தம் செப்பு எது = விளங்காநின்ற முதலத்தியாயத்தில் யோகானந்தமாக சொல்லப்பட்டது ஆன்மானந்தம் என்று போற்றலாம் = எதுவோ அதனையே, புகழும் ஆன்மானந்தம் = சிறந்த ஆன்மானந்தமாகக் கொள்ளலாம், எப்படி பிரதிஞ்ஞைசெய்யப் பெற்ற பிரம்மானந்தத்திற்கே யோக ஜன்னியசாக்ஷாத்கார விஷயத்

* அத்வைத வடிவ ஆனந்தத்தினைப் பிரதிபாதிக்கும் பிரகரணம் அத்வைதானந்தமெனப்படும்.

தன்மையால் யோகானந்தத் தன்மையும் நிருபாதிகத் தன்மையால் நிசானந்தத்தன்மையும் சொல்லப்பட்டதோ அப்படியே அதற்கே கௌணான்மா மித்தியான்மா முக்கியான்மாக்களின் விவேசனத்தால் அறியப்படுந்தன்மையை விவக்ஷித்து ஆன்மானந்தத் தன்மை சொல்லப்பட்டதுஎன்பது கருத்து. [அற்றேல் சஜாதீயமான கௌணான்மாவாகிய மனைவி மைந்தரினின்றும் மித்தியான்மாவாகிய தேகாதியினின்றும் விஜாதீயமான ஆகாசாதியினின்றும் வேறுயுள்ளதும் துவிதத்தோடு கூடியதுமான ஆன்மானந்தத்திற்கு முதல் அத்தியாயத்திற் சொல்லிய அத்துவிதீய யோகானந்தத் தன்மை சம்பவியாது என்று வினவுகின்ருன்] இகழும் சத்வயம் இதற்கு = தாழ்வான துவைதத்தோடு கூடிய ஆன்மானந்தத்திற்கு, மகிழ்பிரம்மத்துவம் எங்ஙன் ஆம் கொல் = உயர்வான அத்துவிதீய யோகானந்தத் தன்மை எப்படியாகும், என்னின் = என்று வினவின், [சஜாதீயமாகக் கருதப்பட்ட கௌணான்மாவாகிய மைந்தராதியும் மித்தியான்மாவாகிய தேகாதியும் தைத்ரீய சுருதியிற் சொல்லப்பட்ட செகத்தினுள் அடங்கினபடியாலும் ஆகாசம்முதலான சகத்தும் ஆன்மானந்தத்தினும் வேருக இன்மையாலும் அத்துவிதீய பிரமத்தன்மை அதற்குப் பொருந்தும் என்று வெகுமானத்தோடு உத்தரங் கூறுகின்ருர்] மாணகேள் = சீட உத்தரங் கூறுதும் கேட்பாய்.

மாணவ என்பது மாண என கடைக் குறையாயிற்று 1

(இதுவுமது)

ஏகா னந்தந் தன்னினய லின்று மறையுந் தயித்திரியம்
ஆகா சாதி தனதுடலீ றதனு லத்து விதசிவத்வம்
ஏகா தஃதின் பத்திலிருந் தேமற் றெழுமச் சுகத்திடத்தே
நோகா திருக்கு மதிலயிக்கு நுவன்ற சுகநின் றயலெங்ஙனே 2

(ப—ரை) தைத்திரியம் அறையும் = ("அந்த இந்த ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று" என்பது முதலிய) தைத்திரிய சுருதியால் சொல்லப்படுகின்ற, ஆகாச ஆதி தனது உடல் ஈறு = ஆகாசம் முதல் தனது தேகபரியந்தமானசகத்து, ஏக ஆனந்தந்தன்னின் அயல் இன்று = தனது காரணமான முக்கிய ஆன்மானந்தத்தினும் வேறில்லை, அதனுல் அத்துவித சிவத்வம்

ஏகாது = அக்காரணத்தினுல் ஆன்மானந்தத்திற்கு அத்துவித பிரமத் தன்மை நீங்காது. [அற்றேல் கூறிய சுருதி வாக்கியத்தில் ஆன்மாவிற்குக் காரணத் தன்மை கேட்கப்படுகின்றது ஆனந்தத்திற்கு அன்று என்ரு சங்கித்து அதனைப்பிரதிபாதிக்கின்றதும் அதே சுருதியிலுள்ளதுமான "ஆனந்தத்தினின்றே இப்பூதங்கள் உண்டாகின்றன" என்பது முதலிய வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்ருர்] அஃது இன்பத்தில் இருந்தே எழும் = அவ்வாகாசாதி சகத்து ஆனந்தத்தினின்றே உண்டாகும். அச்சுகத்திடத்தேநோகாது இருக்கும் = அவ்வானந்தத்திலேயே நிலைபெற்றிருக்கும். அதில் லயிக்கும் = அவ்வானந்தத்திலேயே ஒடுங்கும். [பலிதத்தைக் கூறுகின்ருர்] நுவன்ற சுகநின்று அயல் எங்ஙன் = கூறிய ஆனந்தத்தினின்றும் சகத்து வேருக எப்படி ஆகும் எ—று.

ஈண்டு இவ்வநுமானம் சூசிப்பிக்கப்பட்டது. சகத்து ஆனந்தத்தினின்றும் வேறன்று. அதன் காரியமாவதால், எது எதன் காரியமோ அது அதனினும் வேறன்று. மண்ணின் காரியமான கடாதி மண்ணினும் வேறல்லாதது போல்.

ஆம், ஏ—அசைநிலைகள்.

எங்ஙன் என்பது எஙன் என இடைக்குறையாயிற்று. 2

(அ—கை)

குயவனினின்று முண்டானகுடத்திற்கு அவனினும் பேதத்தைக் காண்டலால், ஏதுவிய பிசாரியாம் என்ரு சங்கித்து குயவன் நிமித்த காரணமாவதாலும் ஆனந்தம் உபாதான காரணமாவதாலும் ஏதுவிய பிசாரி அன்றெனப் பரிகரிக்கின்ருர்.

குயவனினி னுதிதகட மயலதென
வினவியிடல் குலமதல விதுமுதலதே
நயமணென வயலதல குயவனென
கடதிதியு நசிவுமொரு தலமதிலுமே
குயவனிடை யுளதுமல வவைமணிடை
புலமதென குலவுமவை சுருதிமுதலே
யுயுமுதலு மயன்முவிதம் விவர்திபரி
ணமிதுவக லுரியதல விருகடையுமே. 3

(ப—ரை) குயவனின் உதித இன்கடம் = குயவனில் நின்றும் உண்டான இனிமையான குடம், அயலது என வினவியிடல் = குயவனில் நின்றும் வேறு என்று சங்கித்தல், குலமது அல = பொருத்த மன்று, நயமன் எனஇது முதலது = மிருதுவான மிருத்திகை போன்று ஆனந்தம் உபாதான காரணமாம், குயவன் என அயலது அல = குயவன் போன்று நிமித்தகாரணமன்று, [குலாலன் உபாதான காரணம் ஏன் ஆகிறதில்லை என்று சங்கித்து திதிலயங்களினுதார வடிவ உபாதானத்தின் லக்ஷணமின்மையினால் எனக் கூறுகின்றார்] கடதிதியும் நசிவும் = குடத்தினிருப்பும் நாசமும், ஒரு தலமதிலும் குயவனிடை உளதும் அல = ஓரிடத்தும் குலாலனிடத்தில் இருப்பது இன்றாம், ஆகையால் உபாதானமின்று, [அப்படியாயின் அவையெங்கே உள்ளன எனிற் கூறுகின்றார்] அவை மண்ணிடைபுலமது = கடத்தின் அத்திதி நாசங்கள் மிருத்திகையில் பிரத்தியக்ஷத்தால் காணப்படு கின்றன, [இவ்வாறு திருஷ்டாந்தத்தில் ஆகுக பிரகிருதத்தில் என்னை வந்தது என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்] என முதல் குலவும் = அது போன்று அதாவது கடத்திற்கு மண் உபாதானமாவது போன்று சகத்திற்கு ஆனந்தமும் உபாதான காரணமாக விளங்கும், [ஆனந்தம் சகத்தின் உபாதான காரணமென்பதில் ஏதுவைக் கூறுகின்றார்] அவை சுருதி = சகத்தின் திதிலயங்களை சுருதி போதித்தலால், [ஆனந்தத்திற்கு தனது சம்மதமான சகத்தினுபாதானத் தன்மையைக் கூறுதற்கு அதன் அவாந்தர பேதத்தைக் கூறுகின்றார்] முதலும் விவர்தி பரிணமி துவகல் மூவிதம் அயல் = உபாதான காரணமும் விவர்த்தம் பரிணாமி ஆரம்பகம் என மூன்று விதமாகப் பிரிவாகும், [அவற்றுள் விவர்த்த காரணத்தை மிஞ்சச் செய்வதற்காக அன்னிய பக்ஷங்களை தூஷிக்கின்றார்] இருகடையும் = இறுதியில் சொல்லிய ஆரம்ப பரிணாமம் என்னும் இரண்டு பக்ஷங்களும், உரியது அல = நிரவயவ வஸ்துவில் தகுதியன்று, அவகாசமுடையனவல்ல என்பது பொருள் எ—று.

சகத்தின் திதிலயங்களுக்கு "ஆனந்தத்திலிருந்தே" என்பது முதலிய வாக்கியத்தில் ஆனந்தத்தை காரணமாகவுடையதாந் தன்மை கேட்கப்படுவதால் என்பார், அவை சுருதி என்றார்.

ஏகாரம் நான்கும் அசைநிலைகள். 3

(அ—கை)

அவ்வாரம்பம் பரிணமம் என்னும் இரண்டு பக்ஷங்களுக்கு அவகாசமின்மையைத் தெரிவிப்பதற்காகவே முதலில் ஆரம்பவாதியின் மதத்தை அநுவாதஞ் செய்கின்றார்.

ஆரம்பநல் வாதிய ரொன்றினிலொன்
றாமென்றுரை யாடுவர் நூறனினே
பேரம்பட மாகலி னூல்படமோ
பேதம்பின மானவ வத்தைபொருள்
சேரம்பரி ணமிதை கீரததி
சீர்மண்கட மாடணி யாவதுபோ
லாரம்பணி மானவ வத்தையய
லவிர்தந்துற லோவிவர் தம்மதுவே. 4

(ப—ரை) ஆரம்ப நல்வாதியர் = வைசேஷிகர் முதலானவர். ஒன்றினில் = காரியத்தையபேக்ஷித்து அன்னியமான கார்ணத்தினின்றும், ஒன்று ஆம் = காரணத்தையபேக்ஷித்து அன்னியமான காரியம் உண்டாம், என்று உரையாடுவர் = என்று கூறுவர், [எதனுல் இவ்வாறு கூறுகின்றனர் எனிற் கூறுகின்ருர்,] நூல் தனின்பேர் அம்படம் ஆகலின் = தந்துவிலிருந்து பெரிய அழகிய வஸ்திரம் உண்டாவதைக்காண்டலின், [தந்துவிலிருந்து படத்தினுற்பத்தியைக் காண்டலினுல் காரியகாரணங்களுக்கு பேதம் எப்படி சித்தித்தது எனிற் கூறுகின்ருர்] நூல் படமோபேதம் = தந்துவும் வஸ்திரமும் பரஸ்பரம் வேரும், விருத்தமானபரிணமமுடைமையாலும், விருத்தமான அருத்தக் கிரியையயுடைமை யாலும் என்பதுகருத்து, [இப்போதுபரிணமத்தின் சொருபத்தைக் கூறுகின்ருர்] பொருள் பினமான அவத்தைசேர் அம் பரிணமிதை = ஒரேவஸ்து (முன்னவஸ்தையைவிடுதல்வாயிலாக) வேறு அவஸ்தையை அடைதல் நல்லபரிணமமாம், [அதைதிருஷ்டாந்தத்தில் காட்டுகின்ருர்] கீரததி = பால்தயிராவதுபோலவும், சீர்மண்கடம் = நல்ல மிருத்திகை குடமாவது போலவும், ஆடு அணி ஆவது போல் = சுவர்ணம் ஆபரணமாவது போலவும் ஆம், [இப்போது விவர்த்தத்தின் லக்ஷணத்தை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்ருர்] ஆரம்பணிமான = இரச்சு சர்ப்பமாகத் தோற்றுவது போல், அவத்தைஅயல் அவிர்தந்துறலோ விவர்தம்மது = (முன்னவஸ்தையை விடாது வேறு அவஸ்தையின் தோற்றமோ விவர்த்தமாம் எ—று.

ஒகாரம் பிரிநிலையில், அஃதாவது ஆரம்பம் பரிணாமமென்னும் இரண்டு பக்ஷங்களினின்றும் வேற்றுமையையறிவித்தற் பொருட்டாம். பால் முதலியவற்றிற்கு பால் முதலிய வியவகார யோக்கியதையை விட்டு தயிர் முதலிய வியவகார யோக்கியதையினடைவுபரிணாமம் இரச்சு வடிவமாகவிருக்கும் திரவியமே சர்ப்ப வடிவமாகத் தோற்றுதல், விவர்த்தமாம் என்பது கருத்து.

விவர்த்தம் என்பது விவர்தம் என இடைக்குறையாயிற்று.

ஏ, ஏ — இரண்டும் அசை.

அது பகுதிப்பொருள் விகுதி. 4

(அ—கை)

ஆனால் விவர்த்தமாகின்ற இரச்சு முதலியவற்றிற்கு சாவயவத் தன்மையைக் காண்டலால் நிரவயவவஸ்துவில் அதுவும் பொருந்தாது என்று சங்கித்து நிரவயவ ஆகாசாதியிலும் அந்த விவர்த்தத்தைக் காண்டலால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்.

இவ்வமிச மிலததினு மியையுநப
தலமலின மிலகறனி னுலதனினுற்
செவ்வமிச மிலவினிதில் விவர்தசகங்
கோடலாஞ் செறிமாயை கற்பிகையதா
மெவ்வணம தைந்த்ரஜா லிகவாற்ற
லாகுமோ யெழிலாற்றல் சத்தனயலன்
றவ்வணங் காண்டலி னபேதமில
தடைகாணு மாற்றலிலி னஃதெதற்கே. 5

(ப—ரை) நபதல மலினம் இலகல் தனினுல் = ஆகாசத்தில் கொப்பரைகவிழ்த்தாற்போன்றஆகாரமும்நீலவர்ணமும்(ஆகாசத்தின் சொருபத்தையறியாதவரால்) ஆரோபிக்கப்படுவதால், இது = கூறிய இவ்விவர்த்தம், அமிசம் இலததினும் இயையும் = நிரவயவவஸ்துவிலும் பொருந்தும், [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] அதனினுல் = நிரவயவ வஸ்துவிலும் விவர்த்தம் சம்பவித்தலால், செவ் அமிசம் இல இனிதில் = சிறந்த நிரவயவ ஆனந்தத்தில், விவர்த சகம் கோடல் ஆகும் = கற்பிக்கப்பட்டதாக சகத்தையங்கீகரிக்கலாம், [ஆனால் அத்துவிதீய ஆனந்தத்தில் சகத்தின் கற்பனை பொருந்தாது கற்பனைக்கு காரணம்

இன்மையால் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்.] செறிமாயை கற்பிகையாம் = பிரமத்திலுள்ள மாயாசத்தி கற்பனைக்குக் காரணமாம், [சத்தி கற்பனைக்குக் காரணமாதல் எங்கே காணப்பட்டது எனிற் கூறுகின்றார்] எவ்வணம் ஐந்தரஜாலிக ஆற்றல் ஆகுமோ = எப்படி இந்திர ஜாலக்காரனிடத்திலுள்ள மணிமந்திராதி வடிவ மாயா சத்தி கந்தருவ நகராதியைக் கற்பிப்பதாமோ அப்படி ஆகும், [அற்றேல் ஆனந்த வடிவஆன்மாவினும் வேருகமாயையையங்கீகரிக்கின், துவைதத்தினடைவாம் என்று சங்கித்து அதற்கு அநிர்வசநீயத்தன்மையால் மித்தியாத்தன்மையைக் கூறுதற்குபின் சொல்லப்போகிற இலௌகிக அக்கினியிலுள்ளசத்திக்கு முதலில்பேதமாகவாவது அபேதமாகவாவது நிருவசனஞ் செய்ய முடியாமையைக் காட்டுகின்றார்] ஆற்றல் எழில் சத்தன் அயல் அன்று = (அக்கினியிலிருப்பதும் கொப்பளத்தையுண்டு பண்ணுவதுமான) சத்திஅழகியஅக்கினியினின்றும் பின்னமாகஇன்று, [ஏதுவெனிற் கூறுகின்றார்] அவ்வணம் காண்டலின் = அவ்வாறு பேதமாக இல்லாமையை நன்கு காண்டலின், அக்கினியாதி சொருபத்தினும் வேருக அறியப்படாமையால் என்பது கருத்து [சத்தி அக்கினியாதியின் சொருபமுமன்றெனக் கூறுகின்றார்] அபேதம் இல = அபேதமுமின்று, [அதிலும் ஏதுவைக் கூறுகின்றார்] தடை காணும் = பிரதிபந்தம் காணப்படுவதால், [பிரதிபந்தத்தைக் காண்டல் இருக்குக சத்திக்கு பேதமும் இன்ருகுக, என்னை தோஷமெனிற் கூறுகின்றார்] ஆற்றல்இலின் அஃதுஎதற்கு = சத்தியில்லையாயின் பிரதிபந்தம் எதற்கு ஆகும் எ—று.

மணி மந்திராதிகளால் சத்தியின் காரியமான கொப்பளம் முதலியவற்றிற்கு பிரதிபந்தத்தைக் காண்டலால் சொருபத்தினும் வேருக சத்தி அங்கீகரிக்கத்தக்கது. பிரத்தியக்ஷத்தால் சித்தித்துள்ள அக்கினியாதியின் சொருபத்திற்கு பிரதிபந்தம் சம்பவியாது ஆகையால் அதனினும் வேருக சத்தியை அங்கீகரியாவிடின் பிரதிபந்தம் திருவிஷயமாம் என்பது கருத்து. இது வமிசமென்பது எதுகை நோக்கி இவ்வமிசம் எனத் திரிந்தது. 5

ஏ—அசை.

(அ—கை)

அற்றேல் அதீந்திரியமான சத்திக்கு எப்படிப் பிரதிபந்தம் அறிய முடியும் என்று சங்கித்துக்கூறுகின்றார்.

சத்திகாரி யானுமேய மாதலா லகாரியந்
 தடையதாகு மெரியழற்கண் டாகமற்ற காலையின்
மொத்தமந்தி ராதியான பிரதிபந்த மாகுமான்
 முனிவர்தன் குணங்களான் மறைந்ததேவ வான்மநற்
சத்தியை யுணர்வரீதி னுச்சசத்தி பல்விதந்
 தக்கஞான கிரியையிச்சை வடிவதாகு மெனமறை
சத்தமாடு நித்தபூன்ற வத்வயச் சருவமா
 சத்திமான் பரப்பிரம மெனவசிட்டர் சாற்றினர். 6

(ப—ரை) சத்தி காரிய அநுமேயம் ஆதலால் = அதீந்திரியமாயினும் ஆற்றல்காரியமாகியலிங்கத்தால்அநுமிக்கத்தக்கதாயிருத்தலின், அகாரியம் = (காரணமிருக்கும்போது) காரியத்தின் அனுற்பத்தியால், தடையது ஆகும் = பிரதிபந்தம் அறியப்படும், [கூறிய பொருளை திருஷ்டாந்தத்தைக் காட்டலால் வெளியாக்குகின்றார்] எரி அழற் கண் தாகம் அற்றகாலையில் = உலகில் சொரூபமாக சொலிக்கின்ற அக்கினியினால் தாகாதிவடிவ காரியமுண்டாகாதபோது, மொத்த மந்திர ஆதியான பிரதிபந்தம் ஆகும் = தொகுதியாகிய மந்திரம் முதலியவைகள் தடைகளாகும், [இவ்வாறு இலௌகிகசத்தியை சொரூபத்தாலும் பிரமாணத்தாலும் கூறி இப்போது மாயா சத்தியின் இருப்பில் "அவர்கள் தியான யோகத்தையடைந்தவராய் தனது குணங்களால் மறைபட்டதேவான்மசத்தியைப்பார்த்தார்கள்" என்னும் சுவேதாசுவதர உபநிஷத்து வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்றார்] முனிவர் = (காலம் சுபாவம் முதலிய காரணவாதங்களில் தோஷ தெரிசனமுடையவராய் சகத்காரணத்தை அறியும் வேட்கையால் தியானயோகத்தையடைந்தவராய்) மகரிஷிகளாகிய அதிகாரிகள், தன் குணங்களால் மறைந்த = தனது காரியவடிவ தூலசூக்கும சரீரங்களால் மூடப்பெற்ற, நல்தேவ ஆன்ம சத்தியை = சொப்பிரகாசசிதான்மாவாய் பிரத்தியகபின்னமாயுள்ள பிரம்மத்தின் மாயாவடிவ சத்தியை, உணர்வர் = சாக்ஷாத்கரித்தார்கள், [அதே உபநிஷத்திலுள்ள "பிரம்மத்தின் மேலான சத்தி சுவாபாவிகமாகவும் ஞான பலகிரியை வடிவங்களாகவும் நாநாப்பிரகாரமாக கேட்கப்படுகிறது" என்னும் வேறு வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்றார்] ஈதின் உச்ச சத்தி பல்விதம் = இந்தப்பிரமத்தினுடைய மேலான சகத்காரண வடிவ மாயா

சத்தி அநேகப் பிரகாரம் கேட்கப்படுகின்றது, [பல்விதத்தையே கூறுகின்ருர்] தக்க ஞான கிரியை இச்சை வடிவது ஆகும்=சிறந்த ஞானமும் கிரியையும் இச்சையுமே சொரூபமாகும், என மறைசத்தம் ஆடும்=என்று வேதம் கூறுகின்றது, [மாயாசத்திகேவலம் சுருதிப் பிரசித்தமன்று மற்ரு ஸ்மிருதிப் பிரசித்தமுமாமெனக் கூறுகின்ருர்] நித்தபூன்ற அத்வய=நித்தியமாயும் பரிபூரணமாயும் அத்துவிதமாயும், சருவமாசத்திமான்பரபிரமம் என=எல்லா சத்திகளையும் உடையதாயும் பரப்பிரம்மம் உள்ளது என்று, வசிட்டர் சாற்றினர் = வசிஷ்டமகரிஷி வாசிட்டமெனப் பெயரிய கிரந்தத்தில் கூறியுள்ளார் எ—று.

ஆல்—அசை.

நித்த பூன்ற அத்வய என்பதனுல் பிரம்மத்தின் பாரமார்த்திக வடிவம் கூறப்பட்டது.

சருவசத்திமான் என்பதனுல்அதற்கேசோபாதிகவடிவம் கூறப்பட்டது.

அழற்கண் என்பது ஏழனுருபு ஐந்தாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. 6

(அ—கை)

மாயையைப் பிரதிபாதிக்கின்ற வசிட்டமகரிஷியின் வாக்கியத்தையே கூறுகின்ருர்.

சத்தி யாதினுல் விரிவினைச் சத்தது சிவணும்
ஒத்த வாங்கது மொளிர்வினை யொன்றியே யுலவுஞ்
சுத்த ராமகேண் மலநிறை துவக்குக ளிவற்றிற்
சித்த தாகிய பிரமசித் சத்தியே திகழும். 7

(ப—ரை) சத்து அது=பரப்பிரமம், சத்தியாதினுல் விரிவினை சிவணும்=எப்போது எந்தச் சத்தியால் விகாசத்தையடையுமோ, ஒத்த அதும் ஒளிர்வினை ஒன்றியே உலவும்=அப்போது பொருந்திய அந்தச் சத்தியும் பிரகாசத்தை அடைந்தே விளங்கும், [இப்போது அந்தப் பிரகாசத்தையே விஸ்தரிக்கின்ருர்] சுத்தராமகேள் = பரிசுத்தமுடைய ராமாகேட்பாய், மலநிறைதுவக்குகள் இவற்றில் = (தேவதிரியக்கு மனுஷியாதி வடிவ) மலம் நிறைந்துள்ள சரீரங்களில், சித்தது ஆகிய பிரம சிற்சத்தியே திகழும்=சேதனவடிவ பிரமத்தின் ஞான சத்தியே விளங்கும் எ—று.

சிற்சத்தி = சேதனத்துவ வியவகாரத்திற்குக் காரணமான சத்தி.
துவக்கு — ஆகுபெயர். பிரகாசம் = அபிவியத்தி.
ஆங்கு — அசை. 7

(இதுவுமது)

வாதவுபல சலவனல வானநாசப் பொருள் களிலே
நீதியசைவு கடினமொடு நெகிழ்வு தாகஞ் சூனியமும்
பாதமெனுஞ்சத் திகண்முறையே பதியு மண்ட மதனூடே
யோதுபெரிய வுரகமுற லுறழத் தனின்மாட் டுலகுளதாம். 8

(ப—ரை) வாத உபல சல அனல வான நாசப் பொருள் களில் = காற்று கல் நீர் நெருப்பு ஆகாசம் அழிவுடைய வஸ்து ஆகிய இவைகளில், அசைவு கடினம் ஒடு நெகிழ்வு தாகம் சூனியமும் பாதம் எனும் சத்திகள் = சலன சத்தியும் கடின சத்தியும் திரவ சத்தியும் வெம்மை சத்தியும் சூனிய சத்தியும் விநாச சத்தியும் ஆகிய இவைகள், நீதிமுறையே பதியும் = நியமமாய் கூறிய ஒழுங்கின்படியே பொருந்தியுள்ளன. [அபிவியத்தமற்ற வஸ்துவின் இருப்பில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்] அண்டமதனூடு ஓதுபெரிய உரகம் உறல் உறழ = முட்டையினுள் சொல்லாநின்ற பெரிய பாம்பு இருத்தல் போல, தனின் மாட்டு உலகு உளது = ஆன்மாவில் சகத்து இருக்கின்றது எ—று.

ஏ, ஏ, ஆம் — அசைநிலைகள்.

சலன சத்தி = சலனத்திற்கேதுவான சத்தி, மற்றவைகளிலும் இவ்வாறே உணருக.

ஒளிர்வினை ஒன்றியேயுலவும் என்று முற்செய்யுளின் கூற்றால் அபிவியத்தமின்றிய காலத்திலும் பிரம்மத்தில் சகத்தினிருப்பு தெரிவிக்கப்பட்டது. இங்கு இஃது இரகசியம்:— (க) நித்தியம், (உ) நைமித்திகம், (ங) பிராகிருதிகம், (ச) ஆத்தியந்திகம் என்னும் பேதத்தால் பிரளயம் நான்கு வகைத்தாம்.

க. சுழுத்தியில் சகல பதார்த்தங்களுக்கும் அவித்தையில் இலயமுண்டாகின்றது. அது நித்தியப் பிரளயமாம்.

உ. ஆயிரம் சதுர்யுக அளவுள்ள பிரம்மதேவனது பகல் குறையுங்கால் உண்டாகின்ற ஆயிரயுகங்களின் இரவு வடிவ நிமித்

தத்தால் சகலப் பிராணிகளின் சரீரத்தோடு மூன்று லோகங்களின் நாசமுண்டாகின்றது. அது நைமித்திகப் பிரளயமாம்.

௩. பிர்மாவின் நூறு வருஷங்களாகிய ஆயுள் முடிந்த காலத்தில் பஞ்சமகா பூதங்கள், அகங்காரம், மகதத்துவம் என்பவற்றிற்குத் தமது உபாதானமாகிய பிரகிருதியில் இலயமுண்டாகின்றது. அது பிராகிருதிகப் பிரளயமாம்.

௪. தத்துவ ஞானத்தினுல் காரண சகித சகலப் பிரபஞ்சத்திற்கும் எந்தப் பாதம் உண்டாகின்றதோ, அது ஆத்தியந்திகப் பிரளயமாம். அதனையே ஆத்தியந்திக நிவிருத்தியென்றும் கூறுவர்.

முதல் மூன்று பிரளயங்களில் உபாதானத்தோடு காரியத்தின் அபாவமுண்டாகிறதில்லை. ஆனுல் உபாதானத்தின்கண் காரியம் சம்ஸ்கார வடிவமாக நிலைக்கின்றது. மறுபடியும் காலாந்தரத்தில் அதன் உற்பத்தி உண்டாகின்றது. ஆதலால் அஞ்ஞான திருஷ்டியினுல வெளிப்படாத தசையிலாவது வெளிப்பட்ட தசையிலாவது ஜகத்தின் இருப்பிருக்கின்றது.

நான்காவது பிரளயத்தில் உபாதானத்தோடு காரியத்தின் நாசமுண்டாகின்றது. மறுபடியும் அதன் உத்பத்தியுண்டாகிறதில்லை. ஆதலால் ஞான திருஷ்டியினுல் வெளிப்படாத தசையிலாவது வெளிப்பட்ட தசையிலாவது ஜகத்தின் இருப்பு இல்லை. ஆனுல் காரணத்தோடு ஜகத்தின் மூன்று காலத்திலும் அத்தியந்தா பாவம் இருக்கின்றது. 8

(அ—கை)

சகத்து விசித்திரமாயிருப்பதிலும் திருஷ்டாந்தங் கூறுகின்றுர்.

பலபத்திர லதைபுஷ்பமும் படர்கோடுவி டபவே
ரிலகத்தரு சிறுவித்தினி லியையத்தகை யிதுவும்
பொலிசித்தினி னிலைபெற்றிடம் பொழுதொத்தசித்
ரதையால்
சிலவத்தல வமயத்திலின் சிலசத்திக ளதிலாம். 9

(ப—ரை) பல பத்திர லதை புட்பமும் = பழமும் இலையும் கொடியும் மலரும், படர் கோடு விடபவேர் = விரிந்த நுனிக் கிளை

களும் அடிமரமும் வேரும், இலகு அத்தரு = ஆகிய இவைகளோடு கூடி விளங்கா நின்ற அம்மரம், சிறு வித்தினில் = நுட்பமான விதையில், இயை அத்தகை = எப்படி பொருந்தியுள்ளதோ அப்படி, இதுவும் = இந்தச் சகத்தும், பொலிசித்தினில் நிலைபெற்று = விளங்கா நின்ற பிரம்மத்தில் திதியடைந்து, ஒத்த இடம் பொழுது சித்ரதையால் = தக்க தேச காலங்களின் விசித்திரத் தன்மையால், சில அத்தல அமயத்தினில் = ஒரு தேச விசேஷத்தில் ஒரு கால விசேஷத்தில், சில சத்திகள் அதில் ஆம் = சில சத்திகள் பிரம்மத்தி னின்றும் எழும் எ—று.

எல்லா சத்திகளுக்கும் ஒரே காலத்தில் அபிவியத்தி ஏன் உண்டாவதில்லை என்னும் சங்கையை இடம் பொழுது என்பதாதியால் நிவர்த்தி செய்தனர். அஃதாவது சத்திகளின் அபிவியத்தியில் தேச காலங்களின் விசித்திரத் தன்மை ஏதுவாமென்பது பொருள். 9

(அ—கை)

அச்சத்திகளுக்கு ஒரே காலத்தில் அபிவியத்தியின்மையில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்.

பூத லத்தினிற் சாலிபோ லதுபுட மாகுஞ்
சீதை நாயக சருவக நித்தியோ திதமா
சேத னன்மனு மனனபுற் சத்தியைச் சிறிது
போது தாங்குற வதுபுரை மனமெனப் புகல்வார் 10

(ப—ரை) பூதலத்தினில் சாலிபோல் = பிருதிவியினின்றும் பயிர்கள் உண்டாவது போல், அதுபுடமாகும் = அச்சத்தி வெளியாகும், [இப்போது சகத்திற்குக் கற்பனை மாத்திரவடிவத்தைக் காண்பிப்பதற்காக அதனைக் கற்பிக்கின்ற மனதின் சொரூபத்தை முதலில் காட்டுகின்றார்] சீதைநாயக = ஸ்ரீராமா, சருவக நித்திய உதிதமாசேதன ஆன்மனும் = வியாபகமும் எப்போதும் பிரகாசிக்கின்றதும் பெரியதுமாகிய சிதான்மாவும், புல்மனன சத்தியை சிறிது போது தாங்குற = சொற்ப சங்கற்ப சத்தியைக் கொஞ்ச காலம் தரிக்க, அது புரைமனம் எனப் புகல்வார் = அப்போது அவ்வான்மாவை குற்றத்தோடு கூடிய மனம் என்று சொல்லுவார்கள் எ—று.

எப்படிப்பூமியிலுள்ள எல்லாபீஜங்களுக்குள்ளே சிலபீஜத்திற்கே ஓர் தேசத்தில் ஓர் காலத்தில் அங்குரோற்பத்தியாம் எல்லாவற்றிற்கும் அன்று அதுபோல் என்பார் பூதலத்தினிற் சாலிபோல் என்றார்.

மா = பெரிய,

தேசகால வஸ்து பரிச்சேதமின்றியது என்பது பொருள்,

மாயையின் பரிணாமமும் தன்னையும் பிறவற்றையும் அறிவிப்பது மாயிய மனன சத்தியை எப்போது தரிக்கின்றதோ அப்போது நித்திய சந்தோதித அவ்வியவாத்மா மனமென்று சொல்லப்படும். 10

(அ—கை)

இப்போது கற்பனையின் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

ஆதியின் மனதுண் டாகுமங் கதற்பி
னரந்தைவீ டவைகளின் றிருட்டி
சாதுபின் புவனப் பெயரிய பிரபஞ்
சத்தின துதயமா மிவைமுன்
னோதுறு நலவித் திதிபெரு நிலையை
யுற்றுள ததி திரமாகச்
சோதிநற் சுபக பாலருக் குணர்த்துந்
தொல்கதை போலென மிழற்றும். 11

(ப—ரை) ஆதியில் மனது உண்டாகும் = முதலில் மனன சத்தியின் உல்லாசத்தால் மனது உண்டாகிறது, அதன்பின் அரந்தை வீடு அவைகளின் திருட்டி = அதற்குப் பிறகு பந்தமோக்ஷங்களின் கற்பனைகள் உண்டாகின்றன, சாது = நற்குணமுடைய மைந்தா, பின் = அதன் பிறகு, புவனப் பெயரிய பிரபஞ்சத்தினது உதயமாம் = பந்த திருஷ்டியிலேயே புவனம் என்னும் பேருள்ள மலையாறு கடலாதி வடிவ பிரபஞ்சத்தின் கற்பனை உண்டாகும், இவை முன் ஓதுறு நல இத்திதி = இவை முதலாக சொல்லா நின்ற சகத்தின் நல்ல நிலை, பெருநிலையை உற்றுளது = ஸ்திரத்துவத்தையடைந்துள்ளது, [கற்பிதமும் வாஸ்தவமாகப் பிரதீதியாவதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] சோதிநல் சுபக = தேஜஸையும் நல்ல அழகினையும் உடைய ஸ்ரீராமா, பாலருக்கு அதிதிரமாக் உணர்த்தும் தொல்கதை போல் என = குழந்தைகளுக்கு

செவிலித் தாயானவள் மிகவும் திடமாக அறிவிக்கின்ற பழய கதை உண்மையாகத் தோற்றுவதுபோல் என்று, மிழற்றும் = சொல்லப்படும். 11

(அ—கை)

வாசிட்டத்திலுள்ள அந்தக் கதையினையே சொல்லுகின்றார்.

அறிவறு பாலன் வினோதம துறவே
யரியதாத் திரிசுப கதையை
யறிவுறப் புகல்வ டிண்புய சிறந்தோ
ரரையனின் குமரரோர் மூவர்
செறிவரோ ரிடத்திற் பிறந்தில ரிருவர்
சிறுகரு வினுமில னொருவ
னறநெறி யவர்கண் முற்றினு மசத்தா
மரியமா நகரிலே யுறைவோர். 12

(ப—ரை) அறிவு அறுபாலன் வினோதமது உற = பகுத்துணர்வின்றிய குழந்தை சந்தோஷத்தையடைதற்பொருட்டு, அரியதாத்திரி சுபகதையை அறிவுறபுகல்வள் = நல்ல செவிலித்தாய் நல்ல அதாவது மனதிற்கு ரம்மியமான கதையையுணரும்படி கூறுவள், திண் புய = வலிய தோளினையுடையவனே, சிறந்தோர் = சோபையுடையவரும், அரையனின் குமரர் = அரசபுத்திரரும், ஓர் மூவர் = ஆகிய ஒப்பற்ற மூன்று பேர்கள், ஓர் இடத்தில் செறிவர் = ஒரு தேசத்தில் இருக்கின்றார்கள், இருவர் பிறந்திலர் = மூவருள் இரண்டு பேர்கள் சனித்திலர், ஒருவன் சிறு கருவினும் இலன் = ஒருத்தன் சிறிய கருப்பத்திலுமில்லை, அறநெறியவர்கள் = தரும மார்க்கத்தினையுடையவராய், முற்றினும் அசத்தாம் அரிய மாநகரில் உறைவோர் = அத்தியந்தம் அசத்தாகிய அழகிய பட்டணத்தில் வசிக்கின்றார்கள் எ—று. 12

(இதுவுமது)

விமலவா சயரா மவர்கடம் விரிந்த
சூனிய நகரினின் றகன்றே
கமனமார் காலை யம்பர மதனிற்
கனிதுனுந் தருக்களைக் கண்டார்

குமரவவ் வரைய குமரர்மூ வருமே
குலவுமா கேடக மாடி
யமவின்று மாங்கு வருநக ரதனி
லமர்ந்துள ரின்பமா யெனவே. 13

(ப—ரை) விமலஆசயர்ஆம்அவர்கள் = தூயமனமுடையவரான அக்குமாரர்கள், தம் விரிந்த சூனியநகரில் நின்று அகன்று = தமது விசாலமான அசத்துப் பட்டணத்திலிருந்து புறப்பட்டு, கமனம் ஆர்காலே = போகும் போது, அம்பரமதனில் கனிதுனும் தருக்களைக் கண்டார் = ஆகாசத்தில் பழங்கள் நிறைந்துள்ள விருக்ஷங்களைப் பார்த்தார்கள், குமர = புத்திர, அவ்அரையகுமரர் மூவரும் = அரசபுத்திரரான அந்த மூன்று பேர்களும், குலவும் ஆகேடகம் ஆடி = விளங்கா நின்ற வேட்டையாடி, வருநகரதனில் = இனியுண்டாகும் பட்டணத்தில், இன்றும் இன்பமாய் அமர்ந்துளர் = இப்போதும் சுகமாய்த் தங்கியிருக்கின்றார்கள், எனவே = என்று இந்தப் பிரகாரம் எ—று. அடுத்த கவியோடு முடியும்.

அம்மா என்பது ஓரசைச் சொல். அது எதுகை நோக்கி அம என இடைக்குறையாயிற்று.

அம்மா, ஆங்கு, ஏ, ஏ, ஏ—அசைநிலைகள். 13

(இதுவுமது)

கவினுறு பால கதைநற்றாத் திரியாற்
கழறவிவ் வகைரகு நாத
அவிசார மதியாற் பாலனற் றுணிபை
யடைந்தன னின்னண மிந்த
அவசமு சார ரசனையோர் வில்லா
வகத்தினர்க் கறைந்த மாபாலர்
சிவணிய கதைபோன் மெய்ந்நிலை மேவித்
திகழ்வுறு மென்றுண ருதியால். 14

(ப—ரை) கவின் உறு பாலகதை = இனிமையான பாலகாக்கியாயிகை, நல்தாத்திரியால் கழற = நல்ல செவிலித்தாயால் கூறப்பெற,

ரகுநாத=ஸ்ரீராமா, இவ்வகை=கூறிய பிரகாரம், அவிசாரமதியால்= விசாரமின்றிய புத்தியால், பாலன் நல்துணிபை அடைந்தனன் = சிறுவன் நல்ல நிச்சயத்தைப் பெற்றான் [திருஷ்டாந்தத்தில் சித்தித்த பொருளை தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்] இன்னணம் = இந்தப் பிரகாரம், ஓர்வு இல்லா அகத்தினர்க்கு = விசாரமின்றிய சித்தத்தினையுடைய மனிதருக்கு, அறைந்த மாபாலர் சிவணியகதை போல் = கூறிய சிறு குழந்தைகள் கேட்ட ஆக்கியாயிகைபோல், அவசமுசார ரசனை = வீணாகிய உலக கற்பனை, மெய்நிலை மேவி திகழ்வுறும்=உண்மை நிலையையடைந்து விளங்கும், என்று உணருதி=என்றறிவாய் எ—று.

ஆல்—அசை நிலை. 14

வசிட்டர் சொல்லியதை முடிக்கின்றார்.

என லாதிய காதைக ளாலிகழும்
வினை மாயையென் சத்தியின் வித்தரத்தை
யுனி யோதினன் வேதனுளத்த ளித்தோன்
பினு மாற்றலை யேநனி பேசிடுவாம். 15

(ப—ரை) எனல் ஆதிய காதைகளால் = என்பது முதலிய உபாக்கியானங்களால், இகழும் வினை மாயை என் சத்தியின் வித்தரத்தை=தாழ்வான தொழிலினையுடைய மாயையாகிய சத்தியின் விரிவை, வேதன் உளத்து அளித்தோன் உனி ஓதினன்=பிர்மாவின் மானச புத்திரனான வசிஷ்டன் விசாரித்துக் கூறினன், [இவ்வாறு மாயையினிருப்பில் பிரமாணத்தைக் கூறி அதன் அநிர்வசனீயத் தன்மையைக் கூறுதற்கு பிரதிஞ்ஞை செய்கின்றார்] பினும் ஆற்றலையே நனிபேசிடுவாம்=மேலும் சத்தியையே நன்றாகக் கூறுவாம் எ—று. 15

(அ—கை)

காரியத் தினினிவ் வாற்றலய லாசிரய
நேர்காணும் போடமெரி யத்தினநு மேயம்வலியா
மூரிவட்ட வயிருகிருதி யானகல சம்மூடு
காரியம தோசைமுத லைந்து குணமார்

பார தாசிரய மாற்றலிவ ணத்தகைய
தோபாக சத்தியிடம் பருமைமுத லானவிலையால்
ஆர வாரமுமின் றெவ்வண்ம தவ்வணமதா
மாதலா விஃதசிந்திய முரைப்ப வெளிதோ. 16

(ப—ரை) இவ் ஆற்றல் ஆசிரயம் நேர் = இந்த மாயா சத்தி ஆதாரம்போல அதாவது தனது ஆசிரயமான பிரமத்தினும் வேருவது போன்று, காரியத்தினின் அயல் = தனது காரியமான சகத்தினின்றும் வேருகும், [மாயா சத்திக்குக் காரியத்தினும் ஆசிரயத்தினும் விலக்ஷணத் தன்மையை திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துகின்ருர்] போடம் எரிகாணும் = நெருப்பிலுள்ள சத்தியின் காரியமான கொப்பளமும் ஆசிரயமான நெருப்பும் பார்க்கப்படுகின்றது, அத்தின் வலி அநுமேயமாம் = அதன்கண் சத்தியோ காரியத்தால் அநுமிக்கத் தக்கதாம், ஆகையால அவைகளினும் அது விலக்ஷணம் என்பது பொருள், [கூறிய நியாயத்தை மிருத்திகையின் சத்தியிலும் பொருத்து கின்ருர்] வட்ட மூரி வயிறு ஆகிருதியான கலசம் = உருண்டையான பெரிய உதரத்தினை சொரூபமாக உடைய குடம், மூடுகாரியமது = சத்தியின் காரியமாகும், ஓசை முதல் ஐந்து குணம் ஆர் பாரது = சத்தம் முதலிய ஐந்து குணங்களோடு கூடிய மிருத்திகை, ஆசிரயம் = சத்தியின் ஆதாரமாம், இவண் ஆற்றல் அத்தகையதோ = மிருத்திகை யிலுள்ள சததி அப்படிப்பட்டதா, இரண்டினும் விலக்ஷணமென்பது பொருள், [விலக்ஷணத்துவத்தையே கூறுகின்ருர்] பாக = அழகிய மைந்தா, சத்தியிடம் பருமை முதலான இலை = குடத்திற்கேதுவான சத்தியின்கண் பருமை முதலிய குடத்தின் தருமங்களில்லை, ஆரவாரமும் இன்று = மிருத்திகையின் தருமங்களான சத்தம் முதலியவைகளும் இல்லை, ஆகையால் விலக்ஷணம், [அப்படியாயின் அது எப்படிப் பட்டது எனிற் கூறுகின்ருர்] எவ்வணமது அவ்வணமது ஆம் = எப்படியோ அப்படியாம், [எவ்வணம் அவ்வணம் என்று சொல்லியதை வெளிப்படுத்துகின்ருர்] ஆதலால் = காரியத்தினும் ஆசிரயத்தினும் விலக்ஷணமாவதால், இஃது அசிந்தியம் = இந்தச் சத்தி சிந்திக்கத் தகாதது, [அப்படியாயின் அசிந்தியமே அதன் சொரூபமாகும் என்று சங்கித்துக் கூறுகின்ருர்] உரைப்ப எளிதோ = கூறமுடியுமோ எ—று.

பேதமாகவாவது அபேதமாகவாவது அசிந்தியமாகவாவது இன்னும் எவ்விதத்தாலாவது நிருவசனம் செய்யத் தகாதது என்பது பொருள்.

ஆல்—அசை. ஈண்டு சத்தியை மூடு என்ருர். 16

(அ—கை)

அற்றேல் மண்வடிவ காரண சொரூபத்தினும் வேருக சத்தி இருக்குமானுல் காரண சொரூபம் போன்று ஏன் தோற்றுகிறதில்லை என்று சங்கித்துக் கூறுகின்ருர்.

சத்தி காரியம துற்பனம தாகுமுன
மேசாரு மண்மறைவு குயவன்முத லுதவியதனுற்
சத்தி காரியம தாகுமறி வில்லவர்க
ளோசற்ப்பிரு துத்வமுதற் காரியம தீறுகுணமோ
டொத்த மண்டனையு மொற்றுமை புரிந்துகலச
மோதுகின்றனர் குயத்தொழிலின் முன்ன மமிச
மெத்தனைக் கடமதன்று பினர்ப்பரு மையுருண்
மையேயு காலையணி கும்பதையும் பம்பியிடுமே. 17

(ப—ரை) சத்தி காரியமது உற்பனமது ஆகுமுனம் மண் மறைவு சாரும்=சத்தியானது காரியமுண்டாவதற்கு முன்பு மண்ணில் மறைந்துள்ளது, ஆகையால் தோன்றுவதில்லை, [மறைவுபட்டு இருக்குமேல் பின்னரும் அதற்கு அபிவியத்தியுண்டாகலாகாது என்று சங்கித்து தயிரில் மறைந்துள்ள வெண்ணை முதலானது கடைதலாதியால் வெளிப்படுவதுபோல் குலாலாதி வியாபாரத்தால் அதற்கு அபிவியத்தி கூடும் என்று கூறுகின்ருர்] குயவன் முதல் உதவியினுல்=குலாலன் தண்டம் சக்கிரம் முதலியவைகளினுடைய சகாயத்தால், சத்தி காரியமது ஆகும்=மண்ணிலுள்ள சத்தி கடமாகப் பரிணமிக்கும், [அற்றேல் காரணத்தினும் வேருக சத்தியின் காரியம் இருக்குமாயின் காரிய காரணங்களின் பேதம் ஏன் தோற்றுகிறதில்லை என்று சங்கித்து பேதப்பிரதீதிக்கு ஏதுவான விசாரமின்மையால் எனக் கூறுகின்ருர்] அறிவு இல்லவர்கள்=அவிவேகிகளாயுஜனங்கள்' சற்ப்ருதுத்வ முதல் காரியமது ஈறு=நல்ல பருமத்துவம் முதல் விகார

பரியந்தத்தையும், குணமோடு ஒத்த மண்தனையும் = சத்தம் முதலிய குணங்களோடு கூடிய காரணமான மிருத்திகையையும், ஒற்றுமை புரிந்து கலசம் ஓதுகின்றனர் = அவிசாரத்தால் ஒன்றாகச் சேர்த்து கடமென்று கூறுகின்றார்கள், [கூறிய கடவியவகாரம் அவிசாரத்தால் தோன்றியது என்பது எப்படியென்று சங்கித்துக் கூறுகின்றார்] குயத் தொழிலின் முன்னம் = குலால வியாபாரத்திற்குப் பூருவம், எத்தனை அமிசம் அது கடம் அன்று = எவ்வளவு அம்ஸமுள்ளதோ அது கடமல்ல.

குலால வியாபாரத்திற்கு முன்னுள்ளதும் கடமின்றியதும் ஆன மண்ணின் அம்ஸத்தை கடமாக வியவகரிக்காமையால் கடவியவகாரம் அவிசாரத்தால் தோன்றியது என்பது கருத்து, [அப்படியாயின் கடம் யாதெனிற் கூறுகின்றார்] பினர் = குலால வியாபாரத்திற்குப் பின்பு, பருமை உருண்மை ஏயுகாலை = மிருத்திகை பிருதுபுத்ந உதரா காரத்தையடையும்போது, அணிகும்பதையும் பம்பியிடும் = அழகிய கடத்தன்மையும் விளங்கும் எ—று.

ஏ, ஓ, ஏ—அசை நிலைகள்.

குலால வியாபாரத்திற்குப் பின் உண்டாகும் பருமை உருண்மை வடிவத்திற்கே கட சத்தத்தின் வாச்சியத் தன்மை உசிதமாம். அதன் உற்பத்தியின் பின்னரே கட சத்தத்தின் பிரயோகத்தைக் காண்டலால் என்பது கருத்து. 17

(அ—கை)

ஆனால் பாரமார்த்திக கடத்திற்கு அநிர்வசனீய சத்தியின் காரியத்தன்மை பொருந்தாது என்று சங்கித்து கடத்திற்கும் பாரமார்த்திகத்தன்மை அசித்தமாமெனக் கூறுகின்றார்.

கடமணிற் பிறிதுமல கழிவுறிற் புலனிலதில்
இடபினத் ததுவுமல விதுமணிற் புலன்முளமில்
படுமையொத் திதுசொலவில் பகருசத் திஜமதனில்
புடமறப் படுவெனுரை புடமுறக் கடமெனுரை. 18

(ப—ரை) கழிவுறில் புலன் இலதில் = மிருத்திகை நீங்கும் போது கடத்தைக் காணாமையால், கடம் மணில் பிறிதும் அல =

குடம் மிருத்திகையினும் வேறல்ல, இது மணில் முனம்புலனில் = இக்கடம் மிருத்திகையில் பிண்டாவஸ்தையில் காணுமையால், இட பினத்ததுவும் அல = அபின்னமுமன்று. அதனில் படுமை ஒத்து இது சொலஇல் = ஆகையால் சத்தியைப் போன்று கடம் அநிர்வசனீயமாம் [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] அதனில் பகரு சத்திஜம் = அநிர்வசனீயமாதலால் சொல்லாநின்ற சத்தியின் காரியமாம், [அற்றேல் சத்தியும் காரியமும் ஆகிய இரண்டும் அநிர்வசனீயமாயின் சத்தியென்றும் காரியமென்றும் பேதவியவகாரம் எதனை முன்னிட்டது எனிற் கூறுகின்றார்] புடம் அற = வியத்தமின்மையால், படுஎன் உரை = சத்தியென்று சொல்லப்படும், புடம் உற = வியத்தத்தன்மையை அடைய, கடம் என் உரை = கடமென்று சொல்லப்படும் எ—று.

இடபினம் = அபின்னம்.

இட என்பது அகரத்தைப்போல் எதிர்மறையையுணர்த்துஞ்சொல். 18

(அ—கை)

முன்பு அபிவியத்தமின்றிய மாயா சத்தி பின்பு அபிவியத்த மாகிறது என்பது உலகில் பிரசித்தமாயுள்ள மாயையின் சொரூபத்திற் காணுமே என்று சங்கித்துக் கூறுகின்றார்.

கனவிந்திர சாலம்பெறு கருமாயைமுன் வெளியில்
பினர்கந்தருவ சேஞதிய பெருரூபமாய் வெளியாம்
இனமிவண மாயாமய மியைகாரிய விறிசை
மனவந்துறு மணின் மெய்ம்மையை மறைகூறிய
தறியே. 19

(ப—ரை) கன இந்திரசாலம் பெறுகரு மாயை = சிறந்த இந்திர ஜாலத்தையடைவதில் காரணமும் இந்திர சாலக்காரனிடத்தில் இருப்பதும் ஆன மாயாசத்தி, முன் = மணிமந்திராதிகளின் பிரயோகத் திற்குப் பூருவம், வெளி இல் = வியத்தமின்றும், பினர்கந்தர்வ சேஞதிய பெருரூபமாய் வெளியாம் = மணியாதிகளின் பிரயோகத்தின் அனந்தரம் கந்தருவ சேனை முதலிய தூலவடிவமாய் வியத்தமாகும், [சத்தியின் காரியமான கடாதி மித்தையாம். சத்தியின் ஆதாரமான மண் முதலியது சத்தியமாம் என்பது சாந்தோக்கிய சுருதியிலும் கூறப்பட்டுளது எனக் கூறுகின்றார்] இனம் = மேலும், இவணம் =

இந்தப் பிரகாரம், மாயாமயம் இயைகாரிய விறிசை = மாயையின் காரியமாயுள்ள கடாதிக்கு மித்தியாத்துவத்தையும், மனவந்துறு மணின் மெய்ம்மையை = காரியத்தின் ஆதாரமாகவரும் மிருத்திகையின் சத்தியத்துவத்தையும், மறைகூறியது = "விகாரம் வாக்கினாலேயே ஆரம்பிக்கப்படுகின்றது. நாமதேய மாத்திரம் மிருத்திகையே சத்தியம் என்னும் சுருதி சொல்லிற்று, அறி = அதை உணருவாய் என்று.

மாயாமயம் இயை என்பது ஏதுகர்ப்ப விசேஷணம். அதாவது, மாயாமயமாவதால் காரியம் மித்தையாம். ஏ—அசை.

விறிசு = பொய், இன்னம், இவ்வண்ணமென்பவை இனம் இவணம் என இடைக்குறையாயிற்று. 19

(அ—கை)

இப்போது "வாக்கினால் ஆரம்பிக்கப்படுகிறது" என்பது முதலாக சொல்லப்பட்ட வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்றார்.

வாயதாடுமுரை யார்விகாரமது நாமமேயிஃத வாய்மையே
தோயலாதிகுண மேயுகேவலமண் வாய்மையாகும்வெளி
[தோன்றிலா
தாயவாதரவு மூவிலாதியிரு காலபேதபரி யாயமா
னேயமானதிரு தீயமானவது வோவுளேபுகு நன்னீதீயே.20

(ப—ரை) விகாரமது = கடாதிகாரியம், வாயது ஆடும் = வாக்கிந்திரியத்தால் உச்சரிக்கப்படுகின்ற, உரை ஆர் நாமமே = சொல் வடிவ நாமமாத்திரமாம், இஃது அவாய்மையே = இக்காரியம் சத்தியம் அன்று, தோயல் ஆதிகுணம் ஏயு கேவல மண்வாய்மை ஆகும் = பரிசம் முதலிய குணங்களோடு கூடிய கேவலமிருத்திகை சத்தியமாம், [சத்தி அதன் காரியங்களின் மித்தியாத்தன்மையிலும் அவற்றின் ஆதாரத்தின் சத்தியத் தன்மையிலும் காரணம் கூறுகின்றார்] வெளி = வியத்தமான கடாதிகாரியமும், தோன்றிலாது = அவ்வியத்தமான அதன் காரண சத்தியும், ஆதரவு = அவைகளின் ஆதாரமான மிருத்திகையும், ஆயமூவில் = ஆகிய மூன்றினுள், ஆதி இரு = முதலிற் சொல்லிய காரியம் சத்தியாகிய இரண்டற்கும், காலபேத பரியாயம் = தமது சம்பந்தியாகிய காலங்களுக்குப் பேதமுண்மையால் கிரமமாக

இருத்தலாம், ஞேயமான திருதீயம் ஆன அதுவோ = விரும்பத் தகுந்த மூன்ருவதான அவ்விரண்டினுதாரமோ, நல் நீதி உள்புகும் = நன்ருக அவ்விரண்டினுள்ளும் தொடர்ந்திருக்கும் எ—று.

அபிப்பிராயமிதுவாம்:-சத்தியும் காரியமும் ஓர்போதிருத்தலால் மித்தையாம். அவற்றினுதாரம் மூன்று காலத்திலும் தொடர்ந்து இருத்தலால் சத்தியமாம்.

ஆல், ஏ—அசை நிலைகள். 20

(அ—கை)

இப்போது காரியத்தின் அசத்தியத் தன்மையில் மூன்று ஏதுவைக் கூறுகின்ருர்.

உரியதத் துவமற் ருெளிர்ந்திடும் வியத்த
முற்பத்தி நாசமு முறுமால்
அருமுற்பத் தியினை யுற்றபினதன்ற
னரும்பெயர் மனித்தரால் வாக்கால்
வரவும் பெற்றுடுமற் றழியினும் வியத்தம்
வதியுமிப் பெயர்நரர் வாக்கில்
விரியுமிப் பெயர்கொண் டிலக்கிடப் பெறலால்
வியத்தமவ் வடிவமாய் விளம்பும். 21

(ப—ரை) வியத்தம் = வியத்த சத்தவாச்சிய கடாதி காரியம், உரிய தத்துவம் அற்று ஒளிர்ந்திடும் = யோக்கிய வடிவமின்றி அசத்தாகவே விளங்குகின்றது, இஃது ஓர் ஏது. உத்பத்தி நாசமும் உறும் = அப்படியே தோற்றத்தையும் அழிவையும் அடைவதாகத் தோற்றுகின்றது, இஃது இரண்டாவது ஏது. அரும் உற்பத்தியினை உற்றபின் = அரிய பிறப்பினை அடைந்தபின்பு, அதன்றன் அரும் பெயர் மனிதரால் வாக்கால் வரவும் பெற்றிடும் = அக்கடத்தின் அரிய நாமம் ஜனங்களால் வாக்கிந்திரியத்தால் வருதலையும் அடையும் அதாவது வியவகரிக்கப்படுகின்றது, இஃது மூன்ருவது ஏது. உற்பத்தியின் பின்பு வாக்கிந்திரியத்தால் உண்டான நாம வடிவமாக வியவகரிக்கப்படுகின்றது என்பது பொருள், மேலும், வியத்தம் அழியினும் = காரியம் நாசமாயினும், இப்பெயர் நரர் வாக்கில் வதியும் =

காரியத்தின் அபின்னமான நாமம் சத்தத்தைப் பிரயோகிக்கும் மனிதருடைய முகத்தில் இருக்கின்றது. [அதனால் என்னை எனிற் கூறுகின்றார்] வியத்தம் விரியும் இப்பெயர்கொண்டு இலக்கிடப் பெறலால்=கடாதி காரியம் வாக்கால் விரிகின்ற நாமத்தால் விளக்கப் படுதலால், அவ்வடிவாய் விளம்பும்=பெயர்வடிவாக சொல்லப்படும் எ—று.

விவாத விஷயமான கடம், கடசத்த வடிவமாம். கடசத்தத்தால் வியவகரிக்கப்படுவதால் கடசத்தம்போன்று, என்பது அபிப்பிராயம்.

ஆல், மற்று—அசை நிலைகள். 21

(அ—கை)

இவ்வாறு மூன்று ஏதுவை சாதித்து இப்போது அநுமானஞ் செய்யும் விதத்தைக் குறிப்பிக்கின்றார்.

தத்துவ மாகா தாதலி னானுந்
தணர்தலை யேகா தாதலினானு
மொத்துறு வாசா ரம்பண நாமத்
துற்றிட லானுங் காரியரூப
மித்தைய தாயுறு மட்புரை தரவே
மிளிர்தருகாலையு முன்பினு மொன்றாய்த்
தத்துவ மாயவி நாசிய தாமண
தாம்பொருள் சத்திய மாயறைதருமே. 22

(ப—ரை) தத்துவம் ஆகாது ஆதலினானும்=வாஸ்தவ வடிவம் இன்மையானும், தணர்தலை ஏகாது ஆதலினானும் = விநாசத்தை விடாமையானும் விநாசியென்பது பொருள், ஒத்துறுவாசாரம்பண நாமத்து உற்றிடலானும்=பொருந்தாநின்ற வாக்கிந்திரிய ஜன்னிய சத்தமாத்திரமாக உண்மையானும், மண்புரைதர=மிருத்திகை போல, காரியரூபம் மித்தையதாய் உறும் = வியத்த கடாதியின் பருமை உருண்மை வடிவம் பொய்யாம், [இவ்வாறு காரியத்திற்கு அசத்தியத் தன்மையையுபபாதனஞ்செய்து இப்போது அதன் அதிஷ்டான வடிவ மிருத்திகைக்கு சத்தியத்தன்மையையுபபாதனஞ் செய்கின்றார்] மிளிர்

தரு காலேயும் = வியத்தமாகிய ஸ்திதி காலத்திலும், முன் = வியத்தத்தினது உற்பத்தியின் பூருவகாலத்திலும், பினும் = வியத்த நாசத்தின் உத்தர காலத்திலும், ஒன்ருய் = ஏக ஆகாரமாய், தத்துவ மாய் = வாஸ்தவமாய், அவிநாசியதாம் மணதாம் பொருள் = அழிவின்றி யதாயுள்ள மிருத்திகையாகிய வஸ்து, சத்தியமாய் அறைதரும் = சத்தியமென்று சொல்லப்படும் எ—று.

மூன்று ஏதுக்களிலும் மட்புரை என்பது வியதிரேக திருஷ்டாந்தமாம்.

காரியத்தின் அசத்தியத்தன்மையில் இங்ஙனம் அநுமானமாம். கடாதிவடிவ காரியம் அசத்தியமாக யோக்கியமாம். வாஸ்தவ வடிவ மின்மையால், எது அசத்தியமன்றே அது அவாஸ்தவமுமன்று. கடாதிக்கு உபாதானமான மிருத்திகை போல என்பது கேவல வியதிரேகி அநுமானமாம். இவ்வாறு விநாசியாதலால் வாக்கிந்திரிய ஜன்னிய சப்தமாத்திர சொரூபமாதலால் என்னும் ஏனைய இரண்டு ஏதுக்களிலும் பொருத்தத்தக்கது.

காரணத்தின் சத்தியத்தன்மையில் இங்ஙனம் அநுமானமாம் விவாத விஷயமான மிருத்திகை வடிவ வஸ்து, சத்தியமாக யோக்கிய மாம். வாஸ்தவமாதலால், ஆன்மாவைப்போல, இவ்வாறு மூன்று காலத்திலும் ஓர் வடிவாயிருத்தலால் அவிநாசியாவதால் என்னும் ஏனைய ஏதுக்களிலும் பொருத்தத்தக்கது. 22

(அ—கை)

அற்றேல் கடாதி காரியம் அசத்தியமாமேல் அது கற்பிக்கப் பட்ட வெள்ளி முதலியவைபோல அதிஷ்டான ஞானத்தால் நிவர்த்தியாக வேண்டும் என்று வினவுகின்ருன்.

கடம் விகாரம் வியத்தமென் முப்பெயர்
கதித மாம்பொரு ளாமது பொய்யெனு
அடைவி னுடிடின் மண்ணுணர் வாகியு
மகலி லாததிங் கென்னெனி னேவகோ
வடநி வாரண மேயது யாதினு
லஃதின் மெய்ம்மை யகன்றது நிற்குநேர்
இடவி வாறிவண் ஞானஜ நூக்கமே
யியையும் பாசன மில்லத தல்லவால். 23

(ப—ரை) கடம் விகாரம் வியத்தம் என் முப்பெயர் = கடம் விகாரம் வியத்தம் என்னும் இந்த மூன்று நாமங்களால், கதிதமாம் பொருளது பொய் எனு=சொல்லப்படுகிற வஸ்து மித்தையாமென்று, அடைவில் நாடிடின் = முறையே கருதிடின் அதாவது காரியம் காரணத்தினும் வேறாக இன்று என அங்கீகரிக்கின், மண் உணர்வு ஆகியும்=அதிஷ்டானவடிவ மிருத்திகை ஞானமுண்டாகியும், அகல் இலாதது இங்கு என் எனின் = நிவர்த்தியாகாதது ஈண்டு எதனால் என்று வினவின், [நிவிருத்தியாயிற்று எனப் பரிகரிக்கின்றார்] அட= பயலே, அது நிவாரணமே=கடம் நிவர்த்தியாயினதே, [அதில் யுக்தியைக் கூறுகின்றார்] யாதினால் = யாதொரு காரணத்தினால், அஃதின் மெய்ம்மை நிற்கு அகன்றது = அக்கடத்தின் சத்தியத்துவ புத்தி உனக்கு நீங்கினது, ஆகையால் அது நிவிருத்தியாயினதே என்பது பொருள். [ஆனால் கற்பிக்கப்பட்ட இரஜதம் முதலியவற்றிற்கே நிவிருத்தி காணப்படுகின்றது. சத்தியத்துவ புத்தியின் நீக்கமன்று' என்றாசங்கித்து அது நிருபாதிகப் பிராந்தியாவதால் அவ்வாறு இருக்குக. ஈண்டு சோபாதிகப் பிராந்தியிலோ சத்தியத்துவ புத்தியின் நீக்கமே நிவர்த்தியாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்] இவண்=ஈண்டு சோபாதிகப் பிராந்தி ஸ்தலத்தில், நேரிட = ஒத்த தான, இவாறு = இப்படி சத்தியத்துவ புத்தியின் நீக்கமே, ஞான ஜநூக்கம் இயையும்=அதிஷ்டான யதார்த்த ஞானத்தாலுண்டான நிவர்த்தியாகும், பாசனம் இல்லது அது அல்ல = சொருபத்தின் அப்பிரதீதி நிவர்த்தி சத்தத்தின் பொருளல்ல எ—று.

ஓ, ஆல், ஆம்—அசைகள்.

அகோ என்பது வியப்பில் வந்தது. 23

(அ—கை)

இவ்வாறு சத்தியத்தன்மை புத்தியின் விநாசமே நிவர்த்தியாம் என்பது எங்கே காணப்பட்டது எனிற் கூறுகின்றார்.

நீரிற் கீழ்முக மாகப்பு மானனி
நிகழினும் மெய்யி னுலிலை யாவர்க்குந்
தீர மேயவ னைப்புரை சாயையிற்
சேரு மாசைய தேயிலை யாண்டுமே

தீர வித்தகைப் போதத்தி லத்வைதத்
தேர்ச்சி யர்க்குப் புமர்த்ததை சம்மதஞ்
சேரு மண்வடி வத்தை விடாமையாற்
றிண் கடத்தில் விவர்த்ததை திண்ணமே. 24

(ப—ரை) நீரில் கீழ்முகம் ஆகபுமான் நனி நிகழினும்= ஜலத்தில் அதோ முகமாகப்புருஷன் மிகவும் விளங்கினும், மெய்யினல் இலே=வாஸ்தவமாயின்ரும், [அதில் யுக்தியைக் கூறுகின்ருர்] யாவர்க்கும் = விவேகியோ அவிவேகியோ எப்படிப்பட்டவர்க்கும், சாயையில்=அதோமுக புருஷனிடத்தில், தீரம் மேயவனேப்புரை= கரையிலுள்ள புருஷனிடத்திற்போல, சேரும் ஆசை அது= பொருந்தா நின்ற ஆதரவு அஃதாவது சத்தியத்துவ அபிமானம், யாண்டும் இலே=ஓர் தேசத்தும் ஓர் காலத்தும் உண்டாவதில்லே, [ஆனல் ஆரோபிக்கப்பட்டதின் அசத்தியத்தன்மை ஞான மாத்திரத் தால் புருஷார்த்தம் சித்தியாது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்] தீர இத்தகைப் போதத்தில்=திடமான இப்படிப்பட்ட ஞானத்தில், அத்வைத தேர்ச்சியருக்கு = அத்துவித நிச்சயமுடையவருக்கு, புமர்த்ததை சம்மதம்=புருஷார்த்தத்துவம் உடன்பாடாம், (அத்வைத வாதத்தில் ஆன்மானந்தத்தினும் வேருன அனேத்தும் மித்தையாம் என்று நிச்சயிக்கின் அத்துவிதீய ஆனந்தத்தின் அபிவியத்தி வடிவ புருஷார்த்தம் சித்திக்கிறது என்பது பொருள்) [அற்றேல் கடம் மண்ணின் விவர்த்தமாக சித்திக்கின் மண் ஞானத்தால் கடம் சத்தியம் என்னும் புத்தி நிவர்த்தியாகும். அதுவோ இது பரியந்தம் சித்திக்க வில்லே என்ருசங்கித்துக் கூறுகின்ருர்] சேரும் மண் வடிவத்தை விடாமையால் = தொடர்ந்துள்ள மிருத்திகையின் சொரூபத்தைப் பரித்தியாகஞ் செய்யாமையால், திண்கடத்தில் விவர்த்ததை திண்ணம் = கெட்டியான குடத்தில் மண்ணின் விவர்த்தத் தன்மை சித்தமாம் எ—று. 24

(அ—கை)

கடத்தில் மண் சொரூபத்தின் பரித்தியாகமின்றேனும் கடம் மண்ணின் பரிணமமாக ஏன் ஆகாது என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

பாலுருவெனப் பரிணம மதிற்பண்டை வடிவை
மேலதுவிடு மிருத்துபொன் னிவைகட மதனில்
கோலகுண்டலந் தனிற்குறைந் தொழிந்திடா வாகு
மாலுருங்கட மரிதரின் மண்டன்மை யதுவோ. 25

(ப—ரை) பால் உரு என = பால் தயிராகப் பரிணமிக்குங் காலத்தில் அதன் சொரூபம் கெடுவதுபோல், பரிணமம் அதில்=மண் கடமாகப் பரிணமித்தலில், மேல் அது பண்டை வடிவை விடும் = மண் பூருவ ரூபத்தைத் தியாகஞ் செய்யும், [அற்றேல் விவர்த்தத்தில் பூருவ ரூபத்தை விடாமை எங்கே காணப்பட்டது என்றுசங்கித்து மண்ணிலும் பொன்னிலும் காணப்படுகிறது எனக் கூறுகின்றார்] கடமதனில் = மண்ணின் விவர்த்தமான கடமுண்டாகுமிடத்தும், கோல குண்டலந்தனில் = பொன்னின் விவர்த்தமான அழகிய குண்டலமுண்டாகுமிடத்தும். மிருத்திகை பொன் இவை = அவை களின் காரணங்களான மண்ணும் பொன்னுமாகிய இவைகள், குறைந்து ஒழிந்திடா ஆகும் = குறைந்து நிவர்த்தியாகாவாம், [அற்றேல் கடத்திற்கு மண்ணின் விவர்த்தத் தன்மை பொருந்தாது, கடம் நாசமானபிறகு மண் காணப்படாமையால் என்று வினவுகின்றான்] மால் உறும் கடம் மரிதரின் = அநிர்வசநீயமாகிய கடம் நாசமாயின், மண் தன்மை அது நேரல் இன்று = மிருத்திகைத் தன்மை பொருந்துவதாக இல்லை, [மிருத்திகைத் தன்மையின்மையில் வாதி ஏதுவைக் கூறுகின்றான்] கபாலங்கள் காணலின் = கபாலங்(ஓடு)களைக் காண்டலினெனின். 25

(அ—கை)

கபாலங்களுக்கும் நாசமுண்டான பின்பு மிருத்திகைத் தன்மை பிரதீதியாமெனப் பரிகரிக்கின்றார்.

நேரலின்று கபாலங்கள் காணலி னேர்த
ராதி வகைபொடி யாயிடிற்
பாரின் மண்வடி வுண்டுசாம் பூநதப்
படிவமோ மிகவேபுட மாயிடுங்
கீர மாதியி லேபரி ணமமாங்
கீரபாவ் மிலாமையி னேயவைக்
கேரிலித் துணை யான்மிரு தாதிகட்
கென்கெடுங்கொ றிட்டாந்ததை யானதே. 26

(ப—ரை) இவகை நேர் தராது = இவ்வாறு சங்கித்தல் சரியன்று, பொடியாயிடின் = கபாலங்கள் சூர்ணமாயின், பாரில் மண்

வடிவு உண்டு=உலகில் மிருத்திகை ரூபமுளது, [பொன்னிலோ இச் சங்கைக்கே அவகாசமின்று எனக் கூறுகின்றார்] சாம்பூநத படிவமோ மிகபுடம் ஆயிடும்=பொன்னின் வடிவமோ அத்தியந்தம் ஸ்பஷ்டமாம், [அற்றேல் பரிணாமத்தில் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்ட பால் மண் பொன் முதலியவைகளுக்குள் மண்ணும் பொன்னும் விவர்த்தத்திற்குத் திருஷ்டாந்தமாக அங்கீகரிக்கப்படுமேல் அவை போன்று பாலும் விவர்த்தத்திற்குத் திருஷ்டாந்தமாக ஆகும் என்றாசங்கித்துக் கூறுகின்றார்] அவைக்கு க்ஷீரபாவம் இலாமையின் = தயிராக பரிணமித்த பால் முதலியவைக்கு பாற்றன்மை பரித்தியாகமாவதால், க்ஷீரம் ஆதியில் பரிணாமம் ஆம்=பால் முதலியவற்றில் பரிணாமம் கூடும், [அப்படியாயின் பால் போன்றே கடம் குண்டலம் முதலிய வேறு அவஸ்தையையடைகின்ற மண் பொன் என்பவைகளும் விவர்த்தத்திற்குத் திருஷ்டாந்தமாகா என்றாசங்கித்துக் கூறுகின்றார்] ஏர் இல் இத்துணையால்=சிறப்பு இன்றிய இவ்வளவு மாத்திரத்தால், அஃதாவது பால் முதலியவைகளின் பரிணாமித்தன்மையால், மிருது ஆதிகட்கு திட்டாந்ததையானது என் கெடும்=மண் முதலியவை களுக்கு விவர்த்தத்தின் திருஷ்டாந்தத் தன்மை எவ்வாறு நாசமாகும் எ—று.

அபிப்பிராயமிதுவாம்:— பாலுக்கு முன் வடிவத்தின் தியாக வாயிலாக வேறு அவஸ்தையின் அடைவு இருத்தலால் பரிணாமித் தன்மையேயாம். மண் பொன்னுகளுக்கோ வேறு அவஸ்தையின் உத்பத்தி இருப்பினும் முன் வடிவத்தின் தியாகமின்மையின் விவர்த்தத் தன்மையுமாம். 26

(அ—கை)

அற்றேல் மண்ணிற்கும் பொன்னிற்கும் பரிணாம விவர்த் தங்களை அங்கீகரிப்பது போன்று ஆரம்பகத் தன்மையும் ஏன் அங்கீகரிப்பதில்லை என்றாசங்கித்துக் கூறுகின்றார்.

வாதியாரம்பர்க் குக்காரி யத்திலே
வாய்த்திடுமட் கிருகுணப் பான்மையே
ஓதுரூப பரிசமதாதிக ளுரைப்பர்
காரிய காரண வேறதாய்

சீதவாருணி மண்பொ னிரும்பெனத்
திரயமாகத் திட்டாந்தம தோதினர்
ஆதலாற்பொரு ளியாவினுங் காரிய
மநிருதமென் றுரவாசனை செய்கவே. 27

(ப—ரை) ஆரம்பவாதியர்க்கு = ஆரம்பத்தைக் கூறும் நையாயிகருக்கு, காரியத்திலே = கடாதிவடிவ காரியத்தில், மட்கு இரு குணப்பான்மை வாய்த்திடும் = மிருத்திகை முதலான திரவியத்திற்கு காரிய வடிவத்தாலும் காரண வடிவத்தாலும் இருமடங்குத் தன்மை நேரும், (அவ்வாறாகவே கனம் முதலியவைக்கும் இருமடங்குத் தன்மை நேரும் என்பது கருத்து) [இந்த இருமடங்குத் தன்மையின் பிராப்தி எதனாலென்றாசங்கித்துக் கூறுகின்றார்] ஓது ரூபபரிசமது ஆதிகள் = சொல்லா நின்ற வடிவம் ஊறு முதலிய குணங்களை, காரிய காரண வேறதாய் உரைப்பர் = காரியத்திலும் காரணத்திலும் வெவ்வேறாய்க் கூறுவர், [அற்றேல் மண்ணும் பொன்னும் ஆகிய இரண்டே விவர்த்தத்தில் திருஷ்டாந்தமாமோ எனின் அன்றெனக் கூறுகின்றார்] சீத ஆருணி = குளிர்மையுடையவரும் அருண மகரிஷியின் புத்திரரும் ஆகிய உத்தாலகமகரிஷி, மண் பொன் இரும்பு என திரயமாக திட்டாந்தமது ஓதினர் = மிருத்திகை சுவர்ணம் அயஸ் என்று மூன்றாக உதாரணத்தைக் கூறினர், உத்தாலக மகரிஷி "எவ்வாறு ஒரே மட்பிண்டத்தால்" என்று ஆரம்பித்து "கருத்த இரும்பே சத்தியம்" என்பது பரியந்தமான வாக்கியக் கூட்டத்தால் காரியத்தின் மித்தியாத்தன்மையில் மண் பொன் இரும்பு என மூன்று திருஷ்டாந்தம் கூறினர் என்பது பொருள். [எதன் பொருட்டு இவ்வாறு மூன்று திருஷ்டாந்தங்களைக் கூறினர் என்றாசங்கித்துக் கூறுகின்றார்] ஆதலால் = எதனால் இவ்வாறு மண் முதலிய அநேக வஸ்துக்களில் கடாதி காரியங்களுக்கு மித்தியாத் தன்மை காணப்பட்டதோ அதனால், பொருள்யாவினும் = பூத பௌதிக சகல வஸ்துக்களிலும், காரியம் அநிருதம் என்று உர வாசனை செய்க = காரியம் பொய் என்று திடமாக சம்ஸ்காரத்தைச் சம்பாதிக்க வேண்டும் எ—று. ஏகாரம் இரண்டும் அசை. 27

(அ—கை)

அற்றேல் காரியத்தின் மித்தியாத் தன்மையின் அநுசந்தானமும் எற்றிற்கு என்றாசங்கித்துக் காரணத்தின் ஞானத்தால் காரியத்தின் ஞானம் சித்திக்கும் பொருட்டு என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

காரணத்துணர் வாலுணர் வாதலுங்
காரியத்தி னெனவவ ரோதினுர்
ஆருசத்திய ஞானம தாகவீண்
டந்ருத ஞானமதாவது மெங்ஙனே
யோரின் மண்ணெடு கூடுவிகாரத்திற்
குலகதிட்டியி னற்காரி யத்துவஞ்
சீரிதின்மெய்ம் மணங்கிச மீதினிற்
சேருஞானமுங் காரண ஞானத்தால். 28

(ப—ரை) காரணத்து உணர்வால் = மண் முதலிய காரணத்தின் ஞானத்தால், காரியத்தின் உணர்வு ஆதலும் = கடாதி காரியங்களின் ஞானமுண்டாதலையும், என அவர் ஓதினுர் = "சௌம்மிய எப்படி ஒரு மட்பிண்டத்தால் மண்ணின் காரியமாகிய அனைத்தும் அறியப் பட்டதாக ஆகுமோ" என்பது முதலிய வாக்கியக் கூட்டத்தால் உத்தாலகர் கூறினுர், [அற்றேல் மண் பொன் முதலிய பாரமார்த்திக காரணத்தின் ஞானத்தால் அதனின் விலக்ஷணமான கடாதி வடிவ காரியத்தின் ஞானம் பொருந்தாது என்று வினவுகின்ருன் ]ஆருசத்திய ஞானமது ஆக = நிறைந்த யதார்த்த வஸ்துவின் உணர்வு உண்டாக அதனுல், ஈண்டு அந்ருத ஞானமது ஆவது எங்ஙன் = இவ்வுலகில் பொய்ப் பொருளின் உணர்வு உண்டாவது எப்படி, [காரியத்திற்கு மெய்யும் பொய்யுமாகிய இரண்டு அம்ஸமிருத்தலால் காரணத்தின் ஞானத்தால் காரியத்திலுள்ள மெய்யம்ஸத்தின் ஞானம் உண்டாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்] ஓரின் = விசாரிக்குமிடத்து, உலக திட்டியினுல் = உலகப்பிரதீதியால், மண்ணெடு கூடும் விகாரத்திற்கு காரியத்துவம் = மிருத்திகையோடு கூடிய கற்பித கடாதிக்கே காரிய சத்தவாச்சியத் தன்மையாம், [இவ்வாருகுக இவ்வளவால் காரண ஞானத்தால் காரிய ஞானம் சம்பவிக்கிறதில்லை என்னும் சங்கைக்கு யாது சமாதானம் உண்டாயிற்று என்ருசங்கித்து காரியத்திலுள்ள பொய்யம்ஸத்தின் ஞானமின்றேனும் அதிலுள்ள மெய்யம்ஸத்தின் ஞானம் உண்டாகவே செய்யுமெனப்பரிகரிக்கின்ருர்] இதில் = காரியமாகிய கடத்தில், சீர் மெய் மண் அங்கிசம் = சிறந்த வாஸ்தவமாகிய யாதொரு மிருத்திகை அம்ஸமுளதோ, ஈதினின் ஞானம் = இந்த வாஸ்தவ அம்சத்தின் ஞானம், காரண ஞானத்தால் சேரும் = காரணமாகிய மண்ணின் ஞானத்தால் உண்டாகும் எ—று உம்—அசை. 28

(அ—கை)

அற்றேல் காரியத்திலுள்ள மெய் அம்ஸம் போன்று பொய் அம்ஸமும் அறியத்தக்கதாம் என்றுசங்கித்துப் பிரயோசனமின்மை யால் அங்ஙனமன்றெனப் பரிகரிக்கின்றார்.

கூறு பொய்யறிய லாகலாவதல
கூறு பொய்யறியி னென்பயன்
ஆறு மெய்யறிவ தாம்பு
மர்த்தமல வந்ருதவம்ச வவபோதனங்
கூறின் மெய்யறிவி னுல்விகாரமதி
கோலு மண்மதியின் மண்டனிற்
கூறு மெய்யறிவ தாமெனப்
பெறுமென் கோடலற்புதம தீங்கரோ. 29

(ப—ரை) பொய் கூறு அறியல் ஆகல் ஆவது அல = அநிரு தாம்ஸம் அறியத்தக்கதன்று, பொய் கூறு அறியின் என்பயன் = அநிருதாம்ஸத்தையறிவதனுல் யாது பிரயோசனம், இல்லை என்பது பொருள், [பிரயோசனத்தினபாவத்தையே தெரிவிக்கின்றார்] ஆறுமெய் அறிவது புமர்த்தம் = ஒழுக்கத்தோடு கூடிய தத்துவ ஞானம் அதாவது மெய்யம்ஸத்தின் ஞானம் புருஷார்த்த சாதனமாம், அநிருத அம்ஸ அவ போதம் அல = பொய்க் கூற்றின் உணர்வு புருஷார்த்த சாதன மன்று, [அற்றேல் காரண ஞானத்தால் காரிய ஞானம் உண்டாகிறது என்னுமிது கேட்பவனது புத்தியில் சமத்காரத்திற்கு ஏதுவாகிறது என்னுமபிப்பிராயத்தால் சொல்லப்பட்டது என்பது சம்பவியாது என்று வினவுகின்றான்] மெய் அறிவினுல் விகாரமதி கோலும் கூறின் = காரணமாகிய மிருத்திகை முதலியவற்றின் ஞானத்தால் காரியத்திலுள்ள மிருத்திகை முதலிய சத்தியாம்ஸத்தின் ஞானம் உண்டாமென்று சொல்லின், மண் மதியின் மண்தனின் மெய் அறிவது ஆம் எனகூறு பெறும் = மிருத்திகையின் ஞானத்தால் மிருத்திகையின் சொரூபம் அறியப்பட்டது என்று சொல்லப்பட்டதாகும், இவ்வாறுகும் போது ஈங்கு அற்புதம் கோடல் என் = ஈண்டு ஆச்சரியத்தைக் கொள்ளுதல் என்னை எ—று.

சத்தத்தாலேயே ஆச்சரியமாம், அருத்தத்தாலன்று என்பது பொருள்.

அரோ—முன்னிலையசை. அம், ஆம்—அசைநிலை.

புமர்த்தம் என்பது அன்மொழித் தொகை.

ஆறு = ஒழுக்கம். 29

(அ—கை)

இப்படிப்பட்ட விவேகமுடையவருக்கு அற்புதமின்றேனும் அஃதின்றியவருக்கு அற்புதமுண்டாமெனப் பரிகரிக்கின்றார்.

சத்தியங்கா ரியங்களில்வத் துவினமிச முதலின்
றனுவதென வறிந்தவர்க்குப் புதுமைசெயா தொழிக
இத்தலத்தி லஞ்ஞனுக்கு நீக்கமெதாற் றருக்க
ரிருட்பரிணா மியர்லௌகி கருமேக முதலின்
சத்தறிவிற் சருவமதி கேட்டுவிசு மயத்தைச்
சாருவரே யத்துவிதந் தனின்மீட்ப தனுக்கே
நித்தமறை யிதிலேக வுணர்வினெலா வுணர்வை
நிகழ்த்தியது நாஞுத்வ நிகழ்விழைவா லலவே. 30

(ப—ரை) சத்தியம் = நீ சொல்லுவது உண்மை தான், காரியங்களில் வத்துவின் அமிசம் முதலின் தனுவது என அறிந்தவர்க்கு = காரியகடாதிகளிலுள்ள வாஸ்தவக் கூறு காரண மிருத்திகை முதலிய வற்றின் வடிவமாமென்று உணர்ந்தவர்க்கு,புதுமை செயாது ஒழிக = அற்புதத்தைச் செய்யாது நீங்குக. இத்தலத்தில் அஞ்ஞனுக்கு எதால் நீக்கம் = இவ்வுலகில் விவேகமின்றியவனுக்கு உளதாகும் அற்புதம் எவ்வேதுவால் நிவர்த்தியாம், அஞ்ஞனுக்கு அற்புதமுண்டாமென்பது பொருள். [அஞ்ஞனுக்கு அற்புதமுளதாகுமென்று சொல்லிய பொருளையே விஸ்தரிக்கின்றார்] தருக்கர் = ஆரம்ப வாதியரும், இருள் பரிணாமியர் = மயக்கமுடைய பரிணாம வாதியரும், லௌகிகரும் = உலகினரும், ஏகமுதலின் சத்து அறிவில் சருவ மதி கேட்டு = ஒரு காரணத்தின் யதார்த்த ஞானத்தால் சகல காரியங்களின் ஞானம் உண்டாம் என்னும் வாக்கியத்தைக் கேட்டு, விசுமயத்தை சாருவர் = ஆச்சரியத்தையடைவார்கள், [அற்றேல் சுருதியை அநுசரித்த பொருளை விடுத்து இவ்வாறு வியாக்கியானஞ் செய்வதில் யாது

காரணம் என்ருசங்கித்து சுருதிக்கு அதில் தாற்பரியமின்மையால் எனக் கூறுகின்ருர்] இதில் அத்துவிதந்தனில் = இந்த அத்வைத ஆன்ம விஞ்ஞானத்தில், மீட்பதனுக்கே = சீடனை அபிமுகப்படுத்து வதற்கே, நித்த மறை = அனுதியாகிய சாந்தோக்கிய சுருதி, ஏக உணர்வின் எலா உணர்வை நிகழ்த்தியது = ஒரு காரணத்தின் விஞ்ஞானத்தால் சகல காரியங்களின் விஞ்ஞானத்தைக் கூறியது. நானுத்துவ நிகழ்விழைவால் அல = சகல காரியங்களின் விஞ்ஞானத்தின் இச்சையாலன்று எ—று.

அசத்து சடதுக்க வடிவ அநேக அநாத்ம பதார்த்தங்களின் ஞானத்திஞல் பரம புருஷார்த்தம் சித்தியாமையால் அநேக காரியங்களினது ஞானத்தின் பொருட்டுச் சுருதியானது ஒன்றன் ஞானத்தால் அநேகங்களின் ஞானம் சொல்லவில்லை; ஆனுல் பிரஹ்ம வடிவ காரணத்தினது ஞானத்தின்கண் பிரவிருத்தியின் பொருட்டுப் பிரஹ்மத்தினது ஞானத்தின் ஸ்துதி செய்யப்படுகின்றது, இதனுலேயே இந்த வாக்கியம் அர்த்தவாத வடிவமாகக் கொள்ளப் பட்டிருக்கின்றது.

ஆரம்பம் என்பது சமவாயி அசமவாயி நிமித்தம் என்னும் காரணங்களினின்றும் வேருகிய காரியத்தின் உற்பத்தியாம், அதனை எவர் கூறுகின்றனரோ அவர் ஆரம்பவாதியர் எனப்படுகின்றனர்.

முன்வடிவத்தை விடுதலால் வேறு வடிவத்தின் அடைவு வடிவ பரிணமத்தை எவர் கூறுகின்றனரோ அவர் பரிணமவாதியர் எனப் படுகின்றனர்.

கூறிய இரண்டு பிரக்கிரியையும் அறியாதவராய் உலக வியவகார மாத்திரத்தில் தற்பரராஞேர் இலௌகிகர் எனப்படு கின்றனர்.

இம் மூவருக்கும் ஒரு காரணத்தின் ஞானத்தால் அநேக காரியங்களின் ஞானமுண்டாகிறது என்னும் வாக்கியத்தைக் கேட்ட லால் ஆச்சரியமுண்டாகிறது என்பது பொருள்.

நிகழ்வு = விளக்கம் ஞானமென்பது பொருள்.

நிகழ்வு என்பது ஈறு கெட்டது.

ஏ—அசை.

(அ—கை)

இப்போது ஒன்றன் ஞானத்தால் எல்லாவற்றின் ஞானத்தில் திருஷ்டாந்தத்தைக் காண்பிக்கின்ற "சௌம்மிய எப்படி ஒரு மட் பிண்டத்தால் எல்லா மண் மயமும் அறியப்பட்டதாக ஆகுமோ" என்னும் வாக்கியத்தின் பொருளை நிரூபித்தல் வாயிலாக தார்ஷ் டாந்தத்தைக் காண்பிக்கின்ற "எதனால் கேட்கப்படாதது கேட்கப் பட்டதாமோ நினைக்கப் படாதது நினைக்கப் பட்டதாமோ அறியப் படாதது அறியப்பட்டதாமோ அவ்வுபதேசத்தினை குருவினிடத்துக் கேட்டனையா" என்னும் வாக்கியத்தின் பொருளைக் காண்பிக்கின்றவ ராய் பிரகிருதத்தில் திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

ஒருமணுண் டையினுணர்வு தனினெலா மிருண்மயதீ
யுறழவோர் பிரம வுணர்வால்
வருமரும் புவனமதி யுளதுசித் தினிமைவடி
வதுசிவ நாம வடிவே
யுருசகஞ் சச்சிதினி மையினிலக் கணபிரம
முரைதருந் தாப நியமே
யருணர்பெற் றிடுகுமர ரறைவருண் மையினுருவை
யறியவே வீர விறையால். 31

(ப—ரை) ஒரு மண் உண்டையின் உணர்வுதனின் = (கடசரா வாதிகளின் உபாதானமாயுள்ள) ஒரு மட்பிண்டத்தின் ஞானத்தால், எலா மிருண்மயதீ உறழ = அதன் விகாரங்களான சகல கடாதிகளின் ஞானம் உண்டாதல் போல், ஓர் பிரம உணர்வால் = (சருவத்திற்கும் உபாதானமாயுள்ள) ஒரு பிரம்மத்தின் ஞானத்தால், அரும்புவன மதி வரும் = அதன் காரியமாகிய சிறந்த சருவ சகத்தின் ஞானமும் உண்டாகும், என்றறியத்தக்கது, [அப்படியானால் பிரம்மத்தினதும் சகத் தினதும் சொரூபத்தையறியாத போது பிரம்ம ஞானத்தால் சகத்தின் ஞானமுண்டாகிறதென்பதை அறிய முடியாது என்றுசங்கித்து அதனை யறியும் பொருட்டு அவ்விரண்டன் சொரூபத்தைத் தெரிவிக்கின்றார்] சிவம் உளது சித்து இனிமை வடிவது = பிரம்மம் சச்சிதானந்த சொரூபமுடையது, சகம் நாம வடிவே உரு = பிரபஞ்சம் நாம ரூபத்தையே சொரூபமாகவுடையது, [பிரம்மம் சச்சிதானந்த வடிவ

முடையதென்பதில் யாதுபிரமாணம் என்ருசங்கித்து தாபநீயம் முதலிய சுருதிகள் பிரமாணமாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்] தாபநீயம் "ஈதனைத்தும் சச்சிதானந்த மாத்திரப் பிரம்மமே" என்பது முதலிய உத்தர தாப நீய சுருதி, சத்சித் இனிமை இலக்கண பிரமம் உரை தரும் = சச்சிதானந்த சொருபமாக பிரமத்தைப் பிரதி பாதிக்கும், [முதலிய சத்தத்தால் விவக்ஷிக்கப்பட்ட வேறு சுருதிகளையுந் தெரிவிக் கின்ருர்.] அருணர் பெற்றிடு குமரர் = அருண மகரிஷியின் புத்திரரான உத்தாலகமகரிஷி,வீர இறையால் அறிய = சிறந்த ஞான தேசிகரது கிருபையால் தன்னை சாக்ஷாத்கரிக்க, உண்மை உருவை அறைவர் = சத்து ரூபத்தைக் கூறினர் எ—று.

சாந்தோக்கிய சுருதியில் "சௌமிய ஈதனைத்தும் முன்பு சத்தாகவேயிருந்தது" என்பது முதலியவற்ருல் சத்துரூபப் பிரம்மம் நிரூபிக்கப்பட்டது என்பது. 31

(இதுவுமது)

பிரமம் பிரஞ்ஞான மெனப் பிறங்கு
மருக் கைய றிந்திடு மந்தணரே
ஒரு மைச்சுக மோதுஞ் சனற்குமரன்
தெரி யிவ்வணம் வேற்றிடந் தேறியரோ. 32

(ப—ரை) அருக்கை அறிந்திடும் அந்தணர் = இருக்கு வேதத்தையுணர்ந்திடும் பிராமணர்கள், பிரஞ்ஞானம் பிரமம் என பிறங்கும் = இவ்வான்மாவே பிரம்மமென்று கூறுவர், சனற்குமரன் ஒருமை சுகம் ஓதும் = சனற் குமாரர் அத்துவிதீய பிரம்மமே ஆனந்தமாம் என்று கூறினர் [கூறிய நியாயத்தை வேறிடத்தும் அதிதேசஞ் செய் கின்ருர்.] இவ்வணம் வேற்றிடம் தேறிதெரி = இந்தப் பிரகாரம் வேறிடங்களிலும் விசாரித்து அறிவாய் எ—று.

ஏ—அசை. அரோ—முன்னிலையசை.

இருக்கின் சாகையை அத்தியயனஞ் செய்பவர் ஐதரேய உப நிடதத்தில் "பிரஞ்ஞை பிரதிஷ்டை" "பிரஞ்ஞானம் பிரம்மம்" என்று பிரஞ்ஞான வடிவத்தை பிரமத்திற்கு தெரிவிக்கின்ருர்கள்.

இவ்வாறு முன் கூறிய சாந்தோக்கிய சுருதியிலேயே சனற்குமாரர் என்னும் குருநாதரென்னும் சிஷ்யர் பொருட்டு "பூமவஸ்துவே அறிய இச்சிக்கத்தக்கது" என்றாரம்பித்து எது பூமாவோ அது சுகம்" என்று பூம சத்தவாச்சிய பிரம்மத்திற்கு ஆனந்தரூபத்தைக் கூறினாரென்பது பொருள்.

வேற்றிடம் = தைத்திரீயம் முதலான சுருதிகளிலும் "ஆநந்தம் பிரம்மம் என்று அறிக" என்பது முதலிய வாக்கியங்களால் ஆநந்தாதி வடிவம் கூறப்பட்டதெனக் காண்க என்பது கருத்து. 32

(அ—கை)

சச்சிதானந்தங்களிற் சுருதிகளைத் தெரிவித்தது போன்று நாமரூபங்களிலும் சுருதியைத் தெரிவிக்கின்றார்.

எல்லாவடிவ மெணிநாம மியற்றி நிற்கும்
எல்லாவுரு நாமத்தை யான்வெளி யாக்குவேனென்
சொல்லார்மறை யான்முனந் தோற்றற்கவ் யாகிருத
நல்லோய்பி னிரண்டுவிதம் வெளிநாடு மன்றே. 33

(ப—ரை) எல்லா வடிவம் நாமம் எணி = சர்வ ரூபங்களையும் பெயர்களையும் சிந்தித்து, இயற்றி நிற்கும் = சர்வ ரூபங்களையும் பெயர்களையும் உண்டாக்கி நிற்கின்றது. எல்லா உரு நாமத்தையான் வெளியாக்குவேன் = (இந்தச் சீவரூபத்தால் பிரவேசித்து) சர்வ நாம ரூபங்களையும் நான் வெளிப்படுத்துவேனாக, என் சொல் ஆர்மறையால் = என்று கூறுகின்ற சுருதியால், சகத்தின் நாமரூபம் தெரிவிக்கப்பட்டது என்பது பொருள், [அப்பொருளிலேயே வேறு சுருதியைத் திருஷ்டாந்தமாகக் கூறுகின்றார்] தோற்றற்கு முனம் அவ்யாகிருதம் = சிருஷ்டிக்குப் பூருவம் இந்தச் சகத்து அவ்வியத்த நாம ரூபமாய் இருந்தது, நல்லோய் = நற்குணமுடையவனே, பின்னிரண்டு விதம் வெளி நாடும் = சிருஷ்டி காலத்தில் வாச்சிய வாசகத் தன்மையால் வியக்தமாயிற்று, என்று பிரகதாரண்ணிய சுருதியில் கூறப்பட்டுளது எ—று, அன்று, ஏ—அசை. 33

(அ—கை)

இப்போது "இது முன்பு அவ்யாகிருதமாயிருந்தது" என்பதில் உள்ள அவ்யாகிருத சப்தத்தின் பொருளைக் கூறுகின்றார்.

பிரமக்க ணசிந்திய சத்தியிம் மாயையின்பேர்
வருமவ்யா கிருதமென விக்கிரியம் வாயாப்
பிரமத்தது பற்பல விகாரத்தைப் பேணுகிற்கு
மருமாயை பகுதிமா யாவிமகேச் சுரன்றேர். 34

(ப—ரை) இன் பிரமக்கண் அசிந்திய சத்தி இம்மாயை = இன்ப வடிவ பிரமத்தினிடத்து நினைக்கத் தகாத சத்தி வடிவ யாதொரு மாயை உளதோ அது, அவ்வியாகிருதம் என ப் பேர் வரும் = (மேற்கூறிய வாக்கியத்தில்) அவ்வியாகிருத சத்தத்தால் சொல்லப்படும். [நாம ரூபத்தால் வியத்தமாகிறது என் ப த ன் பொருளைக் கூறுகின்றார்] விக்கிரியம் வாயா பிரமத்து அது = நிருவிகார பிரமத்திலுள்ள அந்த மாயா சத்தியானது, பற் பல விகாரத்தை பேணுகிற்கும் = அநேகப் பிரகாரமான பூத பௌதிகப் பிரபஞ்ச ரூபத்தால் பரிணமத்தை அடைகின்றது. [மாயை பிரமத்தில் இருக்கிறதென்பதில் பிரமாணத்தைக் கூறுகின்றார்] மருமாயை பகுதி = பிரமத்தில் பொருந்தியுள்ள முன் சொல்லிய மாயா சக்தியைப் பிரகிருதியெனவும், மாயாவிமகேச்சுரன் = மாயைக்கு ஆசிரயத் தன்மையால் மாயையுடைய பிரமத்தை மகேஸ்வரனெனவும் அதாவது மாயையின் நியாமகனெனவும், தேர் = அறிவாய் எ—று.

சகல சகத்தும் எதனால் செய்யப்படுகிறதோ அது பிரகிருதி.
உபாதான காரணமென்பது பொருள். 34

(அ—கை)

இப்போது மாயாவிசிஷ்டப் பிரமத்தின் முதற்காரியத்தைக் கூறுகின்றார்.

முதல்வரு விகார நபமதுள பாதி
முதமுமதன் ரூபம் வெளியதே
யதுபொயது மூன்று மலவெளி வராமுன்
னணுவுமிலை யாகு மழியினே
வதுபினுமி லாகு முதல்கடையி லியாதிங்
கறவிலைய தாகு மதுகொலோ
வதுநிகழு காலை தனினுமது போல
வமையுமிறை வீர வருளினன். 35

(ப—ரை) முதல்வரு விகாரம் நபம் = பிரம்மத்தினின்றும் ஆதியில் உண்டாகும் காரியம் ஆகாசமாம், [அதற்குக் காரணத்தினின்றும் வந்த ரூபத்திரயத்தைக் கூறுகின்றார்.] அது உளபாதி முதமும் ஆம் = அவ்வாகாசம் சச்சிதானந்த வடிவமாம், [அதனது அசாதாரண வடிவத்தைக் கூறுகின்றார்] அதன் ரூபம் வெளியது = அவ்வாகாசத்தின் சொரூபம் அவகாசமாம், [அதற்கு முன்னுள்ள ரூபத்திரயத்தினின்றும் வேற்றுமையைக் கூறுகின்றார்] அதுபொய் = அவ் அவகாசம் மித்தையாம், அது மூன்றும் அல = அச்சச்சிதானந்தம் மூன்றும்பொய்அன்றுமற்றே வாஸ்தவமாம், [ஆகாசத்தின் நான்காவது வடிவமான அவகாசத்தின் மித்தியாத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்]வெளிவரா முன் அணுவும் இலை ஆகும் = அவகாசம் வியத்த ஆவதற்கு முன்பு அற்பமுமில்லை, அழியின்பினும் அது இலாகும் = நாசத்தின் பின்னரும் அவகாசமின்றாம், [அற்றேல் உற்பத்தி விநாசங்களின் மத்தியில் தோற்றுகிற அவகாசத்திற்கு அசத்தியத்தன்மை எப்படி என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்] இங்கு முதல் கடையில் யாது அற இலையது ஆகும் = ஈண்டு ஆதியிலும் அந்தத்திலும் எந்த வஸ்து அத்தியந்தம் இருப்பதின்றே, அது நிகழுகாலைதனினும் = அந்தவஸ்து வர்த்தமான காலத்திலும், வீர இறை அருளினன் அது போல அமையும் = வீரசேகர ஞானதேசிகரது கிருபையால் அசத்தாகவே பொருந்தும், அசத்தேயாம் என்பது பொருள் எ—று.

எப்படிப் பழுதையில் பாம்பும் அதன் ஞானமும் ஆதியிலும் அந்தத்திலும் இல்லையோ, அதனால் இடையில் தோற்றிக் கொண்டு இருக்கினும் இல்லையோ, அது போலச் சிருஷ்டிக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் இல்லாததாகிய அவகாசம் இடையில் தோற்றினும் இல்லாததாகவேயிருக்கின்றது. கொல், ஓ—அசைகள். 35

(அ—கை)

கூறிய பொருளில் ஸ்ரீ கிருஷ்ண பகவானது வாக்கியத்தைப் பிரமாணமாக்குகின்றார்.

குந்திமைந் தனுக்குநந்த கோபன் மைந்த னுந்துரு
தந்தமுந்தி யுந்துறும் நனந்தலைக் கண் பாரத
செந்து ப்ருந்த மென்றனன் சிறந்தமண் புரைந்திட
விந்தநின் றிலங்கு மின்ப மென்றுமொன்று மந்தரே. 36

(ப—ரை) குந்தி மைந்தனுக்கு = அருச்சுனனுக்கு, நந்த கோபன் மைந்தன்=ஸ்ரீ கிருஷ்ணபகவான், பாரத=பரத வம்சத் தோனே, செந்து பிருந்தம் = பிராணிக் கூட்டம், தந்த முந்தி உந்துரு=உற்பத்திக்கு முன்பு அவ்வியத்தமாம், நனந்தலைக்கண் உந்துறும் = மத்திய காலத்தில் வியத்தமாம் (அந்தியத்திலும் அவ்வியத்தமாம்) என்றனன்=என்று உபதேசித்தருளினன், [சத்து முதலிய மூன்றும் அவகாசத்தின்கண் இருப்பதில் யாது பிரமாணம் என்ருசங்கித்து அநுபூதியே பிரமாணமாமெனக் கூறுகின்ருர்] மண் புரைந்திட=கடாதிகளில் காலத் திரயத்திலும் மிருத்திகை தொடர்ந் திருப்பது போல், சிறந்த இந்த நின்று இலங்கும் இன்பம்=மேலான இந்த சச்சிதானந்தம் மூன்றும், என்றும் அந்தர் ஒன்றும் = எப்போதும் அவகாசத்தின் உள்ளே தொடர்ந்திருக்கும் எ—று. ஏ—அசை. 36

(அ—கை)

அற்றேல் ஆகாசத்தை விட்டு சத்து முதலிய மூன்றும் எப்படி அநுபவிக்கப்பட்டது என்ருசங்கித்துக் கூறுகின்ருர்.

புரையறு நிசதனில் சதுமுத
லியவதன் புகலனு பூதியதாம்
புரைமறை வுறவவ ணினவென
விலகுறும் புகலெனில் சூனியமே
பெருகுக வவிதமு மொளிர்தரு
மஃதுள பெறுமவ கையினேனே
யுரைநொது மலினது சுகமித
மஹிதமி லுளவது நிசசுகமே. 37

(ப—ரை) புரை அறு நிசதனில்=அவகாசமற்ற தனது ஆன்மாவில், புகல் சது முதலிய ,அதன் அநுபூதியது ஆம்=கூறிய சச்சிதானந்தத்தின் அநுபவமாம், [இதனையே உபபாதனஞ் செய் கின்ருர்] புரை மறைவு உற=அவகாசம் மறைந்து போக, (விஸ்மிருத மாக என்றபடி) அவண் நின என இலகுறும் = அவ்வாகாசத்தில் நினக்கு என்ன விளங்குகின்றது, புகல்=கூறுவாய், சூனியமே

எனில் = சூனியமே விளங்குகின்றது என்று சொல்லில், [உடன்பட்டுப் பரிகாரங் கூறுகின்றார்] பெருகுக = அவ்வாறு ஆகுக, [சத்தத்தால் சூனியமாகுக. பொருளாலோ அவகாசத்தின் அபாவ வடிவ விசே ஷணத்திற்கு விசேஷ்யமாகத் தோன்றுவது ஒன்று உளது என உடன்படத்தக்கது எனக் கூறுகின்றார்] அவிதமும் ஒளிர் தரும் = அப்படிப்பட்ட சூனியமும் விளங்குகிறது. [இவ்வாறாக பிரகிருதத்தில் என்ன வந்தது என்று சங்கித்து விசேஷியத்தன்மையால் விளங்கு வதின் சொரூபம் உடன்படத்தக்கதெனக் கூறுகின்றார்] அவனையி னானே = சூனியம் விளங்குதலினாலேயே, அஃதுஉளபெறும் = விசேஷிய வஸ்து உண்மையாகும், [அதற்கு சுக வடிவத்தைக் கூறுகின்றார்] உரை நொதுமலின் அது சுகம் = சொல்லா நின்ற உதாசீனத் தன்மை யால் அவ்வஸ்து ஆனந்த வடிவமாம், [அற்றேல் அநுகூலத்தன்மை யற்ற வஸ்து சுக வடிவம் எப்படியாகும் என்று சங்கித்துக் கூறுகின்றார்] இதம் அகிதம் இல்லது நிச சுகமே உளது = எது அநுகூலமும் பிரதி கூலமும் இன்றியதோ அது நிசானந்தமேயாம் எ—று.

உதாசீனத் தன்மை = உதாசீன விருத்திக்கு விஷயமாந்தன்மை.

உளவது என்பதில் உள பிரித்துக் கூட்டப்பட்டது.

உள என்பதில் துவ்வீறு கெட்டது. 37

(அ—கை)

அந்நிசானந்தத்தினையேயுபபாதனஞ் செய்கின்றார்.

இன்பதீ யிதம் பெறில் லெரிந்ததீ யெதிர்ந்திடி
லின்பமாந் தனதிரண்டி லெங்குந் தன்றுன் பின்றுதன்
னின்ப மோங்கி டின்கணத்தி னின்புதுன் பிறந்துறு
மன்பனே மனங்க ணத்த தவைகணத்த தாகுமால். 38

(ப—ரை) இதம் பெறில் இன்பதீ = அநுகூலமாயின் சுக புத்தி யாம், எதிர்ந்திடில் எரிந்ததீ = பிரதிகூலமாயின் துக்க புத்தியாம், இரண்டு இல் தனது இன்பமாம் = சுக புத்தியும் துக்க புத்தியுமாகிய இரண்டுமில்லாதபோது நிசானந்தமாம். [அற்றேல் நிசானந்தம் போன்று நிச துக்கமும் ஏன் உண்டாவதில்லை என்று சங்கித்து துக்கத்தில் நிசவடிவசித்தியின்மையால் அங்ஙனமன்றெனக்

கூறுகின்றார்] தன் துன்பு எங்கும் இன்று = நிசதுக்கம் ஓரிடத்தும் இல்லை, [அற்றேல் நிசானந்தத்திற்கு எப்போதும் ஆனந்தத்தன்மை யுண்மையால் எப்போதும் சந்தோஷமே உண்டாக வேண்டும் சோகம் உண்டாகலாகாது என்றாசங்கித்து அந்நிசானந்தம் நித்தியமாயினும் அதனை கிரகிக்கும் மனது க்ஷணிகமாவதால் மனதின் காரியங்களான சுக துக்கங்களும் க்ஷணிகமாமெனக் கூறுகின்றார்] தன் இன்பம் ஓங்கிடின் = நிசானந்தம் விருத்தியாயின், கணத்தின் இன்பு துன்பு இறந்துறும் = ஒரு க்ஷணத்தில் சந்தோஷ விஷாதங்கள் நாசமாகும், அன்பனே மனம் கணத்தது = பிரியமைந்தா மனோவிருத்தி க்ஷணிகமாம் ஆதலால், அவை கணத்த ஆகும் = இன்ப துன்பங்களும் க்ஷணிகமாம் எ—று.

ஆல்—அசை. 38

(அ—கை)

நிசான்ம வடிவ திருஷ்டாந்தத்தில் சித்தித்த பொருளை ஆகாச வடிவ தாஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்.

இவண மம்பரந் தன்னினு
    மின்பமா மிருந்திலங் குதலேலு
மிவண மம்பவ னம்முத
    லுடல்கடை யிரும்பொருள் களிலோர்க
சிவணு மம்பரி சங்கதி
    வளியுருச் சிகிக்கெரிப் பொளியாகு
முவண மம்பிற்குத் திரவதை
    பூவுர முறுமென நிலையாமே. 39

(ப—ரை) இவணம் = இந்தப்பிரகாரம் அஃதாவது தனது ஆன்மாவில் சொல்லிய பிரகாரம், அம்பரந்தன்னினும் இன்பம் ஆம் = ஆகாசத்திலும் ஆனந்தமுளது, இருந்து இலங்குதல் ஏலும் = சத்தாகி விளங்குதல் உமக்கும் சம்மதமாம், ஆதலால் சத்தும் சித்தும் உபபாதனஞ் செய்யத் தக்கவையன்று என்பது பொருள், [ஆகாசத்தில் பிரதிபாதித்த பொருள் வாயுமுதல் தேகபரியந்தமான வஸ்துக்களில் உடன்படத் தக்கதெனக் கூறுகின்றார்] இவணம் பவனம் முதல் உடல் கடை இரும் பொருள்களில் ஓர்க = இவ்வாறு வாயு முதலாக

தேகமீருக உள்ள சகல வஸ்துக்களிலும் சச்சிதானந்தமுளதென பாவனை செய்க, [அவற்றில் வாயு முதலியவைகளின் அசாதாரண தருமங்களைத் தெரிவிக்கின்றார்] சிவணும் பரிசம் கதிவளி உரு = பொருந்தாநின்ற பரிசமும் கமனமும் வாயுவின் சொரூபமாம், சிகிக்கு எரிப்பு ஒளி ஆகும் = வன்னிக்கு உஷ்ணமும் பிரகாசமும் சொரூபமாம், உவண அம்பிற்கு திரவதை = உயர்ந்த ஜலத்திற்கு நெகிழ்வு வடிவமாம், பூ உரம் உறும் = பிருதிவி திண்மை வடிவமாகும், என நிலையாம் = என்று நிச்சயமாம் எ—று.

அம் இரண்டும், ஏகாரமும் அசைச் சொற்கள். 39

(இதுவுமது)

ஓடதியன் னம்வபுவுஞ் சிறந்ததான
வுருவமுடைத் திவ்வணமே யுசிதமாக
நாடுகவவ் வவ்வுருவம் விதம்பல்வேறு
நாமவுருத் தமிற்சமமாய் நற்சற்சித்தின்
பாடுமொரு வருக்கும்விசம் வாதமின்று
மதத்துவமா நாமவுரு வவ்விரண்டும்
பீடுபிறப் பிறப்புடைத்தாங் குமிழிமுன்போற்
பெருங்கடலிற் பிரமமதின் மதியாற்காணே. 40

(ப—ரை) ஓடதி அன்னம் வபுவும் சிறந்தது ஆன உருவம் உடைத்து = செடிகளும் உணவும் தேகமும் அசாதாரணமான ஆகாரத்தையுடையன, இவ்வணம் உசிதம் ஆக அவ் அவ் உருவம் நாடுக = இவ்வாறு யோக்கியமாக அந்த அந்த அசாதாரண வடிவத்தை மனதால் பாவனை செய்க, [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] பல்விதம் வேறும் நாம உருத்தம்மில் = அநேகப் பிரகாரம் பின்னமாயுள்ள நாம ரூபங்களில், சமம் ஆய் நல்சற்சித்து இன்பு ஆடும் = ஒரே பிரகாரமாய் நல்ல சச்சிதானந்தங்கள் இருக்கின்றன, ஒருவருக்கும் விசம் வாதம் இன்றும் = யாருக்கும் ஒவ்வாமையின்று, சம்மதமாமென்பது பொருள், [அப்படியாயின் தோற்றுகின்ற நாம ரூபங்களுக்கு யாது கதி என்று சங்கித்து கற்பிதத் தன்மையே கதியெனக் கூறுகின்றார்.] நாம உரு அவ் இரண்டும் அதத்துவமாம் = பெயரும் வடிவமுமாகிய அவ் இரண்டும் மித்தையாம், [மித்தியாத்துவத்தில் ஏதுவைக் கூறுகின்றார்]

பீடு பிறப்பு இறப்பு உடைத்து ஆம்= நாம ரூபம் துன்பமயமான ஜன்ம நாசமுடையது, பெரும் கடலில் குமிழி முன்போல் = பெரிய சமுத்திரத்தில் புற்புதம் முதலானது போன்று, பிரமமதில் மதியால் காண் = பிரம்மத்தில் புத்தியால் மித்தையாகப் பார்ப்பாய் எ—று.

ஏ—அசை.

எப்படி சமுத்திரத்தில் அலை, திவலை, நுரை, குமிழிகள் சமுத்திரத்தினும் பின்னமுமன்றே அபின்னமுமன்றே பின்ன பின்னமும் அன்றே அதனால் அநிர்வசனீயமாய் உற்பத்தி விநாசமுடையதாய் இருத்தலால் சமுத்திரத்தில் கற்பிதமாமோ அப்படி நாமரூபமும் அநிர்வசனீயமாதலாலும் உற்பத்தி விநாசமுடையனவாயிருத்தலாலும் பிரமத்தில் கற்பிதமாம். 40

(அ—கை)

நாம ரூபங்களின் மித்தியாத் தன்மையால் என்னையெனிற் கூறுகின்றார்.

சச்சிதின்ப விப்பூரணப் பிரமஞ்சா க்ஷாதேற்
றச்சுயமதே மென்மெலப் பெயருருத் தணரும்
சச்சதுவிடு மத்துணை தரிசனஞ் சமையுஞ்
சச்சிரண்டையுந் தணருவன் றரிசனத் தளவே. 41

(ப—ரை) சத்சித் இன்ப இப்பூரண பிரமம் சாக்ஷாதேல் = சச்சிதானந்த இந்தப் பரிபூரணப் பிரமம் பிரத்தியக்ஷமாயின், தத்பெயர் உரு மென்மெல சுயமதே தணரும் = அந்த நாமரூபம் பையப்பைய தானே நீங்கும், [பிரம்ம ஞானத்தின் திடத்தன்மை துவைதத்தின் திரஸ்காரத்தால் உண்டாவதால் சிரவணாதி போன்று துவைதத்தின் திரஸ்காரமும் செய்யத்தக்கதெனக் கூறுகின்றார்.] எத்துணை சச்சுவிடும் அத்துணை = எவ்வளவு எவ்வளவு அற்பமாகிய சகத்து நீங்கும் (அஃதாவது உபேக்ஷிக்கப்படுமோ) அவ்வளவு அவ்வளவு, அது தரிசனம் சமையும் = பிரம்மம் பிரத்தியக்ஷமாம், தரிசனத்து அளவே = பிரம்மத்தின் சாக்ஷாத்காரம் எவ்வளவு அவ்வளவே, சச்சு இரண்டையும் தணருவன் = அற்பமாகிய நாமரூபம் இரண்டினையும் விடுவான் எ—று.

எத்துணை என்ற பதம் வடமொழி மூலத்தை அநுசரித்து வருவிக்கப்பட்டது. 41

(அ—கை)

பிரம்ம ஞானமும் துவைதத்தின் திரஸ்காரமுமாகிய இரண்டின் அப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார்.

அப்பயில்வினு லரும்வித்தை சுத்திதை
யாம்பொழு துயிரேய்ந்தே
யிப்புருடனின் முத்தனெப் படியினு
மித்தனு விருந்தேக
வப்பொருட்சிந்தை கதனமன் யோன்னிய
மதனையே யுணர்வாற்ற
லிப்படியொரு பரத்துவம் பிரமவப்
யாசமென் றறிவாரே. 42

(ப—ரை) அப்பயில்வினல்=அவ்விரண்டின் அப்பியாசத்தால், அரும்வித்தை சுத்திதை ஆம்பொழுது = பிரம்ம ஞானம் நன்ருய்த் திடமாகும் போது. இப்புருடன் உயிர் ஏய்ந்தே இன்முத்தன் = இந்தப் புருஷன் சீவிப்பவனுகியே இனியமுத்தனுவன், இத்தனு எப்படியினும் இருந்து ஏக=வாத்தமானதேகம் எவ்விதமாவது இருந்து ஒழிக, [இப்போது பிரம்மாப்பியாசத்தின் சொரூபத்தைக் கூறுகின்ருர்.] அப் பொருள் சிந்தை=பிரம்மத்தையே மனனஞ்செய்தலும், கதனம் = (பிரமத்தையே) சொல்லுதலும், அதனையே அன்னியோன்னியம் உணர்வு ஆற்றல் = பிரமத்தையே பரஸ்பரம் அறிவித்தலும், இப்படி ஒரு பரத்துவம் = அவ்விதமே பிரமத்தில் முக்கியமாய் நிலைத்தலும், பிரமஅப்யாசம் என்று அறிவார் = பிரம்மத்தின் பயிற்சியென்று அறிஞர்கள் உணருகின்ருர்கள் எ—று. 42

(அ—கை)

அற்றேல் அனுதிகாலந் தொடங்கித் தோற்றுகின்ற துவைதப் பிரபஞ்சம் ஓர்போதைய. ஞானப்பியாசந்தால் எப்படி நிவர்த்தியாகும் என்ருசங்கித்து நீண்டகாலம் நிரந்தரம் ஆதர பூருவகமாகச் செய்யும் அப்பியாசத்தால் பிரபஞ்சம் அநாதி காலத்ததாயினும் அவசியம் நிவர்த்தியாமெனக் கூறுகின்ருர்.

அளவிறந்த வாதனைநீள் காலமாக
வனவரத மாதரவோ டப்யாசத்தான்
மௌவிறந்து விடுமியாவு மண்ணினுற்றன்
மிளிர்வதெனப் பிரமசத்தி மித்தையாக்கு

மளவிறந்த தல்லதிங்கே யுயிர்க்கணுய
வரியதுயில் சொப்பனமு. மா நிகாச
மளவிறந்த சொப்பனகா ரிணியா நித்ரை
யாற்றலுயிர்ப் பாற்போல வகண்டத்தேயும். 43

(ப—ரை) அளவு இறந்த வாதனை யாவும் = அனுதிகாலமாயிருப்பதும் அளவில்லாததுமான சமுசாரவாசனை அனைத்தும், நீள்காலம் ஆக அனவரதம் ஆதரவோடு அப்பியாசத்தால் = நெடுங்காலமாய் இடைவிடாமல் பிரியத்தோடு செய்கின்ற பிரமப்பயிற்சியால், மெள்ள இறந்துவிடும் = பைய நசித்துப்போகும். [அற்றேல் ஒரே பிரகாரமான பிரமத்திற்கு அநேகப் பிரகாரமான சகத்தின் காரணத் தன்மை பொருந்தாது என்ருசங்கித்து மாயையோடு கூடிய பிரமத்திற்குப் பொருந்தும் எனக் கூறுகின்ருர்.] மண்ணின் ஆற்றல் மிளிர்வது என = மிருத்திகையின் சத்தி அநேகப் பிரகாரமான காரியங்களுக்குக்காரணமாக விளங்குவது போல், பிரமசத்தி அளவிறந்தது மித்தையாக்கும் = பிரமத்தின் மாயாசத்தியும் அளவில்லாத அநிருத காரியங்களையுண்டாக்கும், [அற்றேல் மிருத்திகையின் சத்தி சத்தியமாவதால் அநேக காரியங்களுக்கு ஏதுவாம் ஆதலின் திருஷ்டாந்தம் விஷமமாம் என்ருசங்கித்து வேறு பக்ஷத்தைக் கூறுகின்ருர்] அல்லது இங்கே உயிர்க்கண் ஆய அரிய துயில் சொப்பனமும் நிகாசம் ஆம் = அல்லது ஈண்டு சீவனிடத்துள்ள அரிய நித்திரையும் அதனுற் கற்பிதமான கனவும் திருஷ்டாந்தமாம், [திருஷ்டாந்தத்தை விஸ்தரிக்கின்ருர்] நித்ரை ஆற்றல் = தூக்கமாகியசத்தி, உயிர்ப்பால் அளவிறந்த சொப்பன காரிணியாம் போல் = சீவனிடத்து அளவில்லாத துர்க்கடமான கனவுப் பொருள்களைச் செய்வது போல், குளகம். 43

(அ—கை)

தார்ஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர்.

இம்மாயை சிருட்டிதிதி முடிவையாக்கு
மிருங்கனவிற் கங்கதியை யினியதன்னின்
கம்மாய்வைக் கடிகையினின் வற்சரௌகங்
கழிந்தமைந்த ராதிகளைக் காணுமீட்டுஞ்

செம்மீதீ தலவாகு மென்னுநேமஞ்
சிவணுதங் கெஃதெதுதான் சிறப்பாயெங்ங
னம்மாவெங் ஙனங்காணு மங்ஙனங்ங
னஃதஃதே யமைவாக வமையுமன்றே. 44

(ப—ரை) அகண்டத்து ஏயும் இம்மாயை = பிரம்மத்திலுள்ள இந்த மாயாசக்தி, சிருட்டிதிதி முடிவை ஆக்கும்=விசித்திர சகத்தின் உற்பத்தி திதி லயங்களைச் செய்யும், [துர்க்கடப் பொருள்களைச் செய்யுந்தன்மையையேயுணர்த்துகின்றார்] இரும்கனவில் கம்கதியை= பெரிய சொப்பனத்தில் ஆகாச கமனத்தையும், இனிய தன்னின் கம்மாய்வை=அழகிய தனதுசிரச்சேதனத்தையும்,கடிகையினில் வற்சர ஓகம்=ஒரு நாழிகையில் வருஷக் கூட்டத்தையும், கழிந்த மைந்தர் ஆதிகளை=இறந்த புத்திராதிகளையும், மீட்டும் காணும் = மறுபடியும் பார்ப்பான், [சொப்பனத்தின் துர்க்கடத் தன்மையில் ஏதுவைக் கூறு கின்றார்.] ஈதுசெம் ஈதுஅலவாகும் என்னும நேமம்=இது பொருத்தம் உடைத்து இது பொருத்தமுடைத்தன்று என்னும் வியவஸ்தை. அங்கு சிவணுது=சொப்பனத்தில் பொருந்தாது. எது எது சிறப்பாய் எங்ஙன் எங்ஙன் காணும்=எந்த எந்த வஸ்து விசேஷமாய் எப்படி எப்படி பார்க்கப்படுகின்றதோ, அஃது அஃது அங்ஙன் அங்ஙன் அமைவாக அமையும் = அந்த அந்த வஸ்து அப்படி அப்படியே பொருத்தமாய் இருக்கும் எ—று.

அம், அன்று, ஏ, தான்—அசைகள்.

அம்மாவென்னும் இடைச்சொல் வியப்பில் வந்தது. 44

(அ—கை)

கூறிய பொருளை கைமுதிக நியாயத்தால் வெளிப்படுத்துகின்றார்.

இத்தகைய மகிமைநித் திரையின்சத்திக் கிரும்புலன
தாங்காலே யெண்ண வொண்ணு
வித்தகைய மகிமையெனன் மாயாசத்திக் கென்புதுமை
யணையுறுவோ னிடத்தி லேதா

னித்திரைபல் விதமான கனவை நீட்டி
நிகழுதல்போற் பிரமமெனு நிருவிகார
வத்துவிடை யீதுவிகா ரங்கடம்மை வளம்பெறவே
புரிந்துநிதம் வருத்து மன்றே. 45

(ப—ரை) நித்திரையின் சத்திக்கு இத்தகைய மகிமை = தூக்கத்தின் ஆற்றலுக்கு இப்படிப்பட்ட மகத்துவம், இரும்புலனது ஆம்காலை = நன்கு அறியப்படும் போது, மாயாசத்திக்கு = மாயையாகிய ஆற்றலுக்கு, எண்ண ஒண்ணு இத்தகைய மகிமை எனல் = சிந்திக்கத் தகாத இப்படிப்பட்ட மகத்துவத்தைச் சொல்லுதலில், என் புதுமை = யாது ஆச்சரியம், [பிரயத்தினமின்றிய பிரமத்தில் உள்ள மாயையின் சகத்காரணத்தன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] அணையுறுவோனிடத்தில் = படுத்திருக்கும் புருஷனிடத்தில், நித்திரை பல்விதமான கனவை நீட்டி நிகழுதல் போல் = தூக்கம் அனேகப் பிரகாரமான சொப்பனத்தையுண்டாக்கி விளங்குதல் போல், பிரமம் எனும் நிருவிகாரவத்துவிடை = பிரம்ம வடிவ கூடத்த வஸ்துவில், ஈது விகாரங்கள் தம்மை வளம்பெறவே புரிந்து நிதம் வருத்தும் = இந்த மாயையானது காரியங்களை விசாலமாகச் செய்து எப்போதும் துன்பத்தைச் செய்யும் எ—று. தான், அன்று, ஏ—அசை. 45

(அ—கை)

மாயையால் சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களைக் கூறுகின்றார்.

கானிலாக் கினிசலமு மூர்வியண்டங் கணிலோக
மியமானர் கல்லே முன்று
மானிகா ரியங்களுயிர் மதியினூடே யறிவினிழல்
பதிபிம்பித் தமர்வ தாகும்
ஊனசே தனசேத னத்தினூடே யுளவிலகின்
புருப்பிரம மொருமை மேவும்
ஈனமா நாமவுரு வேறுவேரு யிரும்பேத
மடைந்திடுமென் றிதயத் தோர்வாய். 46

(ப—ரை) கஅனில அக்கினிசலம் ஊர்வி = ஆகாசமும் காற்றும் நெருப்பும்நீரும்மண்ணும், அண்டம் = பிரம்மாண்டமும், கணிலோகம் =

பதினுன்காக கணிக்கப்படுகின்ற லோகங்களும், இயமானர் = சீவர்களும், ஆனிகல்லேமுன்னும் = கெடுகின்ற சிலே முதலானவைகளுமாகிய இவைகள், காரியங்கள் = மாயையின் காரியங்களாம், [பஞ்சபூதங்களின் காரியத்தன்மை சமமாயிருக்க சிலவற்றிற்கு சேதனத்தன்மையும் சிலவற்றிற்கு சடத்தன்மையும் எதனுலென்று ஆசங்கித்துக் கூறுகின்ருர்.] உயிர்மதியினூடு = சீவர்களது அந்தக்கரணங்களில், அறிவின் நிழல் பதிபிம்பித்து அமர்வது ஆகும் = சேதனத்தின் சாயை பிரதிபிம்பித்துள்ளது, (சேதனத்தின் பிரதிபிம்பத்தால் சேதனத்தன்மையும் அஃதின்மையால் சடத்தன்மையுமாமென்பது பொருள்) [சேதனு சேதனப்பிரிவு பிரம்மத்தால் செய்யப்பட்டதாக ஏன் ஆகாது என்ருசங்கித்து பிரமம் சருவத்திற்கும் உபாதானத்தன்மையால் சருவத்திலும் சமமாவதால் அங்ஙனமன்றெனக் கூறுகின்ருர்] ஊன சேதன சேதனத்தினூடு = தாவர ஜங்கமங்களில், உளஇலகு இன்பு உருபிரமம் ஒருமை மேவும் = சச்சிதானந்த வடிவ பிரமம் சமானமாம், ஈனம் ஆம் நாம உரு வேறுவேருய் = இழிவாகிய நாம ரூபங்கள் தனித்தனியாய், இரும்பேதம் அடைந்திடும் = மிகவும் வேற்றுமையைப் பெறும், என்று இதயத்து ஓர்வாய் = என்று புத்தியில் அறிவாய் எ–று.

ஏ—இரண்டும் அசைநிலைகள்.

ஊன சேதனம் = கெட்ட சேதனம், அதாவது அசேதனம். 46

(அ—கை)

பிரமம் தாவர ஜங்கமங்களில் சமமாயிருப்பதில் காரணங் கூறுகின்ருர்.

ஆடை யிடந்தனி லோவிய நின்றென
வார்பிர மந்தனி லுருநாம
மோடிவை வந்துறு மோய விரண்டுமு
ளோதறி வின்பம தியதாமே
யூடுச லந்தன தோமுக வங்கம
தோர்பொறி பம்பினு மதைநூறி
மாடுதி ரந்தன தாகவி டந்தனின்
மாமன மொன்றுறு மதுபோலே. 47

(ப—ரை) ஆடையிடந்தனில் = வஸ்திரத்தில், ஓவியம் நின்று என = சித்திரமிருப்பதுபோல், ஆர் பிரமந்தனில் உருநாமம் இவை வந்துறும் = பரிபூரண பரமான்மாவில் நாமரூபப் பிரபஞ்சங்கள் கற்பிதமாகியுள்ளன, (பிரமம் சருவ கற்பனைக்கும் ஆதாரமாவதால் சருவகதமாம் என்பது பொருள்) [அது எப்படி அறியப்படுகிறது என்றுசங்கையுண்டாக கற்பிதநாம ரூபங்களை விடின் அதிஷ்டானப் பிரம்மம் அறியப்படுகிறதெனக் கூறுகின்றார்] இரண்டும் ஓய = நாம ரூபங்களிரண்டையும் உபேக்ஷை செய்ய, ஓது உள் அறிவு இன்பம் மதி ஆம் = சொல்லாநின்ற சச்சிதானந்தத்தின் ஞானமுண்டாம், [கூறிய பொருளில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] சலமூடு தன் அங்கமது அதோமுக ஓர் பொறி பம்பினும் = நீரில் தனது தேகமானது தலைகீழாகக் காணப்படினும், அதை நூறி = அதோமுக தேகத்தை உபேக்ஷித்து, தீரம்மாடு தனது ஆக இடந்தனில் = ஊர்த்துவ முகமாக கரையிலுள்ள தனது தேகத்தில், மாமனம் ஒன்றுறும் அதுபோல் = என்னுடையது என்னும் புத்தியுண்டாகும்; அதுபோல் ஆன்மாவிலும் ஆம் எ—று. அது பகுதிப்பொருள் விகுதி.

ஓடு இசைநிறையில் வந்தது.

தீரமென்பது திரமென இசையை நோக்கிக் குறுகிற்று. 47

(அ—கை)

இப்போது சருவஜனங்களுக்கும் பிரசித்தமாயுள்ள வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

ஆயிர சிந்தனை யாலுற ரும்பொரு
ளாடினு மங்கஃ தனைவோரால்
தோயில சந்தத மாமென விங்குரு
தூபெய ரொன்றற வுளவாமே
மீயயல் சிந்தனை வேறு கணங்கண
மீளக தங்கத மிலையாமே.
நேய மிகுந்தொழி லேபகி ரங்கென
நீறு படுங்குரு வருளானே. 48

(ப—ரை) ஆயிர சிந்தனையால் உறு அரும்பொருள் ஆடினும் = ஆயிரக்கணக்கான மனோராச்சியத்தால் பொருந்தாநின்ற வஸ்துக்கள்

இருப்பினும், அங்கு அஃது அனேவோரால் சந்ததம் தோயில ஆம் என = மனோராச்சியத்திலுள்ள வஸ்து எல்லோராலும் எப்போதும் உபேக்ஷிக்கப்படுகிறது போல், இங்கு தூஉரு பெயர் = ஈண்டும் நல்ல நாமரூபங்களே, ஒன்று அறல் உளவாம் = அத்தியந்தம் உபேக்ஷித்தல் தகுதியாம், [பிரபஞ்சத்தின் விசித்திரத் தன்மையில் திருஷ்டாந்தங் கூறுகின்றார்] கணம் கணம் அயல் வேறு மீசிந்தனே = ஒவ்வொரு க்ஷணமும் வெவ்வேறான மிக்க மனோராச்சியம் உண்டாகிறது, கதம் கதம் மீள இலையாம் = சென்றது சென்றது மீண்டும் வருவதில்லை, [தார்ஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்] நேயமிகும் பகிர்தொழில் = அன்பின் மிகுதியால் செய்யப்படுகின்ற வெளிவியவகாரமும், அங்கு என குரு அருளால் நீறுபடும் = அவ்வாறே தேசிகன் கிருபையால் நாசமாகும் எ—று. ஆம் பிரித்துக் கூட்டப்பட்டது.

ஏகாரம் மூன்றும் அசைநிலைகள். 48

(அ—கை)

அதனையே விஸ்தரிக்கின்றார்.

பாலியமெவ் வனத்திலுரு வதுபோ லெவ்வனமும்
பழிகிழத்தி னிலைமரித்த பிதுர்மறித்து மிலையால்
தோலுகத தினம்வருவ தேயிலையோர் கணத்தே
துலையிலவு கிகத்தின்மனோ ராச்சியத்தி னயலாய்
மேலதெனை யதனுனே யிஃதிலங்கு கினுமே
மிளிரதுண்மை மதிவிடுக லவுகிகத்தைக் கருதா
யேலுன்மதி தடையிலதா மின்சிலசிந் தனத்தே
யெழினடனு மெனநடிப்பா யிலவுகிகத் தைச்செயுமே.
49

(ப—ரை) பாலியம் தோலு எவ்வனத்திலுரு = குழந்தைப் பருவம் அழகிய தருணப் பருவத்தில் இன்றும், அது போல் எவ்வனமும் பழி கிழத்தின் இலை = அப்படியே தருணப் பருவமும் பழிக்கத்தக்க முதுமைப்பருவத்தில் இன்றும், மரித்த பிதுர் மறித்தும் இலை = இறந்த தகப்பன் மீண்டும் வருவதின்றும், கத தினம் வருவதே இலை = சென்ற நாள் மீண்டும் வருவதே இன்றும், [துவைதத்தின் க்ஷணிகத்துவத்தை முடிக்கின்றார்] ஓர் கணத்தே துலை இலவுகிகத்தில் = ஒரு

க்ஷணத்தில் விநாசமாகும் இலௌகிகப் பிரபஞ்சத்தில், மனோராச்சியத்தின் அயலாய் மேலது எனே=மனோராச்சியத்தைப் பார்க்கிலும் வேருக விசேஷம் யாது. [க்ஷணிகத் தன்மையை சாதித்தலில் பிரயோஜனத்தைக் கூறுகின்ருர்] அதனுன்=மனோராச்சியத்தினும் பிரபஞ்சத்தில் விசேஷமின்மையால், இஃது இலங்குகினும்=இப்பிரபஞ்சம் பிரதீதியாயினும், மிளிர் அது உண்மை மதிவிடுக=விளங்கா நின்ற அப்பிரபஞ்சத்தின் சத்தியத்துவ புத்தியை ஒழிப்பாய், [பிரபஞ்சத்தையுபேக்ஷிக்கின் யாது பயன் என்ருசங்கித்து பிரமத்தில் புத்தி நிலேக்கின்றதெனக் கூறுகின்ருர்] லவுகிகத்தை கருதாயேல் = பிரபஞ்சத்தையுபேக்ஷை செய்யின், இன்சிவ சிந்தனத்து=இனிமையான பிரமவிசாரத்தில், உன்மதி தடை இலதாம்=உன்னுடைய புத்தி விக்கினமின்றியதாகும், [அப்படியாயின் ஞானிக்கு வியவகாரம் எப்படி சித்திக்கும் என்ருசங்கித்துக் கூறுகின்ருர்] எழில் நடன் என = அழகிய கூத்தாடியைப் போன்று, நடிப்பு ஆய்=உட்பற்றின்றி நடனமாகவே, இலவுகிகத்தை செய்யும்=பிரபஞ்ச வியவகாரத்தைச் செய்வான் எ—று. ஆல், ஏ—அசை.

எப்படி நடன் தனது வயிறு வளர்த்தற் பொருட்டுப் புலியின் வேஷத்தைத் தரித்துச் சிறுவர்களே பயமுறுத்துகின்ருனே, ஆனல் அவர்களுள் எவரையும் புசிக்க் விரும்புகிறதில்லேயோ, ஸ்திரீயின் வேஷத்தைத் தரித்து நான் ஸ்திரீயென்று சொல்லுகின்றவனுனலும் தன்னே ஸ்திரீயென்று மதித்துப் புருஷனது இச்சையைச் செய்கிறது இல்லேயோ, ஆனல் இதனே மேலுக்குக் காட்டுகின்ருனே, அதுபோல ஞானி தேகேந்திரியங்களினுல் "நான் மனிதன்,பிராஹ்மணன், பார்க்கின்றேன், கேட்கின்றேன், செய்கின்றேன், புசிக்கின்றேன், சுகி, துக்கி, அறிகின்றேன், அறியேன்" என்னும் இவை முதலிய வியவகாரத்தை மேலுக்குச் செய்கிறவனுயினும், உள்ளே அசங்க நிர்விகார கர்த்திருத்வாதி தர்மமின்றிய பிரத்தியக பின்ன பிரஹ்ம வடிவமாகத் தன்னே மதிக்கின்ருன். ஆதலால் வியவகாரம் செய்கின்றவனுயினும் ஞானி நிர்விகாரமாயிருக்கின்ருன். 49

(அ—கை)

அற்றேல் ஞானிக்கு வியவகாரத்தை உடன்படின் விகாரித் தன்மை நேரும் என்ருசங்கித்து புத்தி விகாரமுடையதாயினும் அதன் சாக்ஷியாகிய ஆன்மா நிருவிகாரமாம் என திருஷ்டாந்தத்தோடு கூறுகின்ருர்.

நீரோடினுங் கீழுறு நீள்சிலை நேர்நிலைப்பாம்
பேரோடுருப் பேரினுங் கூடத்த பிரமம்பேரா
வாராவெளி யாடியில் வத்துள மாகம்மாகு
மாரார்பிர மத்தள வில்லுல கார்விண்ணுமே. 50

(ப—ரை) நீர் ஓடினும்=மேலே சலம் பிரவகிக்கினும், கீழ் உறு நீள் சிலை=பிரவாகத்தின் கீழே உள்ள பெரிய கல்லானது, நிலைப்பு ஆம் நேர்=சலனமின்றி இருப்பது போல், பேர் ஓடு உரு பேரினும்=நாமரூபங்கள் விகாரமுடையனவாயினும், கூடத்த பிரமம் பேரா=நிருவிகார ஆன்மா விகாரமுடையதாகாது. (புத்தி சமுசாரத்திற் சுழலினும் ஞானி சுழலான் என்பது பொருள்) [அற்றேல் அகண்டப் பிரமத்தில் அதனினும் விலக்ஷணமான சகத்தின் பிரதீதி எப்படிப் பொருந்துமென்றாசங்கித்து துவாரமின்றிய கண்ணாடியில் அவகாசத்தோடு கூடிய வஸ்து எவ்வாறு பிரதீதியாகின்றதோ அப்படிக் கூடும் எனக் கூறுகின்றார்.] வெளிவாரா ஆடியில்=துவாரமின்றிய கண்ணாடியில், வத்து உளஆர்மாகம் ஆகும்= பொருளைத் தன்னுள்ளேயுடைய பெரிய ஆகாசம் பிரதீதியாகும், அது போல், ஆர் பிரமத்து=பரிபூரண சச்சித்கனப் பிரமத்தில், அளவு இல் உலகு ஆர் விண் ஆம்=நாநா சகத்தோடு கூடிய ஆகாசம் பிரதீதியாகும் எ—று. ஆர்=நிறைவு. 50

(அ—கை)

அற்றேல் பிரமம் அதிருசியமாயின் எப்படி சகத்து பிரதீதியாகும் என்றாசங்கித்து சச்சிதானந்தத்தின் பிரதீதி வாயிலாகவே சகத்தின் பிரதீதியாம் என திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்.

ஆடி கண்ணுறா ததனதுள்ளுள
　　தமைய நோக்கலே யிலைகொ லங்ஙனே
யூடு சச்சிதா னந்த முணர்கிலா
　　துருவ நாமம தொளிர்வ தெங்ஙனே
யீடில் சச்சிதா னந்த முதலிலே
　　யிலங்கி லோபின ரினியிவ் வளவினே
யோடு மதியினை நியம மாற்றியே
　　யூர்த்வ முருவநா மங்களிற் றளேல். 51

(ப—ரை) ஆடி கண் உருது=கண்ணுடியைப் பாராமல், அதனது உள் உளது அமைய நோக்கலே இலே=அக்கண்ணுடியினுள் பிரதிபிம்பித்திருக்கின்ற வஸ்துக்களைப் பொருந்தப் பார்க்கவே முடியாது, அங்ஙனே ஊடு சச்சிதானந்தம் உணர்கிலாது=அப்படியே அனைத்தினும் தொடர்ந்துள்ள சச்சிதானந்தப் பிரமத்தை அறியாமல், உருவநாமமது ஒளிர்வு எங்ஙன்=நாமரூபங்களின் பிரதீதி எப்படி உண்டாகும், [அற்றேல் நாமரூபங்களும் பிரதீதியாகின்றபடியால் எப்படி நிஷ்பிரபஞ்சப் பிரமத்தின் பிரதீதியுண்டாம் என்ருசங்கித்து அதனையறியும் உபாயத்தைக் கூறுகின்ருர்] ஈடு இல் சச்சிதானந்தம் முதலிலே இலங்கில்=உவமையற்ற சச்சிதானந்தப் பிரமம் முன்பு விளங்கின், இனி பின்னர் இவ்வளவினே=அதன் பின்னர் பிரம்ம மாத்திரத்திலேயே, ஓடும் மதியினை நியமம் ஆற்றியே=நாமரூபங்களிற் செல்லும் புத்தியினைத்தகைந்து, ஊர்த்வம் உருவ நாமங்களில் தளேல்=அனந்தரம் நாமரூபங்களில் புத்தியைச் செலுத்தலாகாது எ—று.

புத்தியினைத் தகைதல்=புத்தியால் கிரகித்தல், சச்சிதானந்தப் பிரமத்தில் கற்பிக்கப்பட்ட நாமரூப வடிவ பிரபஞ்சத்தில் சச்சிதானந்த மாத்திரத்தை புத்தியால் கிரகித்து நாமரூபங்களில் புத்தியை தரிக்க லாகாது என்பது பொருள்.

கொல், ஏ, ஓ—அசைநிலைகள். 51

(அ—கை)

திரண்டபொருளைக் கூறுகின்ருர்.

இவ்வண மாக நிர்ச்சகப் பிரம
 மிலங்குசத் தின்பிலக் கணமாம்
இவ்விதந் துவித மிரிந்தவா னந்தத்
 திருஞ்சனஞ் சிரமிளைப் பொழிக
செவ்விய பிரமா னந்தமென் னூலின்
 றிருதியோத் தியாயஞ் செப்பினமால்
ஒவ்வுமத் துவித வானந்த மேயா
 முலக மித்யாத்வ சிந்தையினுல். 52

(ப—ரை) இவ்வணம் ஆக=இவ்வாருகவே, நிர்ச்சகப் பிரமம்

சத்து இலங்கு இன்பு இலக்கணம் ஆம் = நிஷ்பிரபஞ்ச கேவலப் பிரமம் சச்சிதானந்த லக்ஷணமுடையதாக ஆகிறது, இவ்விதம் துவிதம் இரிந்த ஆனந்தத்து = இந்தப் பிரகாரமாயுள்ள இந்த அத்துவிதானந்தத்தில், இரும்சனம் சிரம் இளைப்பு ஒழிக = பெருமை பொருந்திய ஜிஞ்ஞாசுக்கள் நெடுங்காலம் இளைப்பாறுக, [இப்போது அத்தியாயத்தின் பொருளை முடிக்கின்றார்] செவ்விய பிரமானந்தம் என் நூலின் = சிறந்த பிரமானந்தமெனப் பெயரிய கிரந்தத்தில், திருதிய அத்தியாயம் செப்பினம் = மூன்றாவது அத்தியாயம் கூறினோம், உலக மித்தியாத்வ சிந்தையினால் = பிரபஞ்சம் பொய்யென்று அநுசந்தானஞ் செய்தலால், அத்துவித ஆனந்தமே ஒவ்வும் = அத்துவித சுகமேயுண்டாகும் எ—று.

ஆம், ஆல்—அசை. 52

பதின்மூன்றாவது அத்வைதானந்தம் முற்றிற்று.

ஆகக் கூடுதல் செய்யுள் 736.

உ

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## பதினூன்காவது பிரகரணம்.

## வித்தியானந்தம்*

(அ—கை)

இப்போது முன் நடந்ததும் இனி நடப்பதுமான கிரந்தங்களுக்கு சம்பந்தத்தைக் கூறுகின்றார்.

யோகினு லான்ம விவேகத்தாற் றுவித
யூகமித் யாத்வசிந் தையினால்
ஏகமாம் பிரம வானந்தங் காண்போற்
கினிவித்தி யானந்த மிசைப்பாம்
போகவின் பெனவித் தையினின்ப மதுவும்
புந்தியின் விருத்திரு பமதாஞ்
சோக மில்லாமை முதல்வடி வதனாற்
சொல்லுறு மிதுசதுர் விதமே. 1

(ப—ரை) யோகினால் = ஆனந்த பஞ்சகத்தில் முதல் பிரகரணத்திற்கூறிய யோகத்தாலும், விவேகத்தால் = இரண்டாவது பிரகரணத்திற்கூறிய ஆன்ம விவேகத்தாலும், யூக துவிதமித்யாத்வ சிந்தையினால் = மூன்றாவது பிரகரணத்திற்கூறிய உத்தியால் பிரபஞ்சத்தின் பொய்மையறு சந்தானத்தாலும், ஏகம் ஆம் பிரம ஆனந்தம்

* வித்தையாகிய தத்துவ ஞானத்தினால் உண்டாகின்ற நால்வகை ஆனந்தங்களைப் பிரதிபாதிக்கும் பிரகரணம் வித்தியானந்தம் எனப்படும்.

காண்போற்கு = அத்துவித பிரமசுகத்தைப் பார்ப்பவற்கு, இனி வித்தியானந்தம் இசைப்பாம் = இனிமேல் வித்தியானந்தத்தைக் கூறுவாம், [வித்தியானந்தத்தின் சொருபத்தைக் கூறுகின்றார்] போக இன்பு என = விஷயானந்தம் போன்று, வித்தையின் இன்பம் அதுவும் புந்தியின் விருத்தி ரூபமது ஆம் = வித்தியானந்தமும் மதியின் பரிணாம வடிவ விருத்தி ரூபமாம், [அதன் அவாந்தர பேதத்தைக் கூறுகின்றார்] இது = இந்த வித்தியானந்தம், சோகம் இல்லாமை முதல் வடிவதனால் = துக்காபாவம் முதலிய வடிவத்தால், சதுர் விதம் சொல் உறும் = நான்கு விதமாகச் சொல்லப்படும் எ—று. 1

(அ—கை)

வித்தியானந்தத்தின் நான்கு விதத்தையே காட்டுகின்றார்.

இடர்கெடல் காம வடைவகங் கிருத
வின்கிருத் தியனடை வடைந்தோன்
ஒடுவிவை நான்கு விதமதா யுரைக்கு
முறுந்துய ரிகபர மெனவே
படுமிரு வகையா யைகிக நூக்கம்
பகர்வுறும் பருவன மொழியே
திடனிஃ துளனென் றறிதரிற் றனேயே
திண்ணைதை விழைந்தெத னசைக்காய். 2

(ப—ரை) இடர் கெடல் = சருவதுக்க நிவர்த்தி, காம அடைவு = சருவ ஆனந்தப் பிராப்தி, அகம் கிருத கிருத்தியன் = தான் செய்யத்தக்கன அனைத்தையும் செய்தவன், இன் அடைவு அடைந்தோன் ஒடு இவை = நான் இனிமையான அடையத்தக்கன அனைத்தையும் அடைந்தவன் என்னுமிவைகள், நான்கு விதமது ஆய் உரைக்கும் = நான்கு பிரகாரமாகச் சொல்லப்படும், [நிவர்த்திக்கத்தகுந்த துக்கத்தைப் பகுக்கின்றார்] உறும் துயர் இகபரம் எனவே இரு வகையாய் படும் = தீவினையாற் பொருந்தா நின்ற துக்கம் இகலோகத்திலுள்ளதும் பரலோகத்திலுள்ளதும் என இரண்டு விதமாக சொல்லப்படும், [இகலோக துக்கத்தின் நிவர்த்தி பிரகதாரண்ணியக வாக்கியத்தால் கூறப்படுகின்றதெனக் கூறுகின்றார்] பருவனமொழி = பிரகதாரண்ணியக வாக்கியம், ஐகிகநூக்கம் பகர்வுறும் = இகலோக

துக்கத்தின் நிவர்த்தியைக் கூறுகின்றது. [அச்சுருதி வாக்கியத்தைப் படிக்கின்றார்] திடன் இஃது உளன் என்று = கூடஸ்தனை இந்த ஆன்மாவே யானாகின்றேன் என்று, தனை அறிதரில் = ஆன்மாவை சாக்ஷாத்கரிக்கின், திண் எதை விழைந்து = சீவர்களைக் கெடுப்பதில் வலிமையுள்ள எவ்விஷயங்களை இச்சித்து, எதன் நசைக்கு ஆய் = எவனது காமத்தின் பொருட்டு, உடலினை உடற்றும் = சரீரத்தினைப் பின்பற்றி வருந்துவன் எ—று.

அடுத்த பாட்டிலுள்ள உடலினை உடற்றும் என்னும் வாக்கியம் ஈண்டு தொடர்புபற்றி சேர்க்கப்பட்டது.

பரு = பிருகத், வனம் = ஆரண்யகம், மொழி = வாக்கியம். 2

(அ—கை)

ஆன்மாவில் சோக சம்பந்தத்தைக் காண்பிப்பதற்காக ஆன்மாவின் பேதத்தைக் கூறுகின்றார்.

உடலினை யுடற்றுஞ் சீவநற் பரமென்
றுரைத்திடு மிருவகை யான்மா
உடறிரி வகையொ டறிவினொற் றுமையா
லுயிரெனப் போத்ருதை மருவுந்
திடபர மான்மாச் சச்சிதா னந்தந்
திகழுரு நாமமோ டியைந்தே
அடருபோக் யதையை யடைவுறு மவற்றி
னரும்பிரி வுணரிலில் லிரண்டே. 3

(ப—ரை) ஆன்மா சீவ நல் பரம் என்று இருவகை உரைத்திடும் = ஆன்மா சீவான்மாவென்றும் நல்ல பரமான்மாவென்றும் இரண்டுவிதமாகச் சொல்லப்படும், [ஆன்மாவிற்கு சீவத்தன்மையில் நிமித்தங்கூறுகின்றார்] திரிவகை உடலொடு அறிவின் ஒற்றுமையால் = தூலம் சூக்ஷ்மம் காரணம் என்னும் மூவித சரீரங்களோடு சேதனத்தின் தாதான்மியப் பிராந்தியால், உயிர் என = சேதனம் சீவனாகி நின்று, போத்ருதை மருவும் = புசிப்பவனாந் தன்மையை அடையும், (சைதன்னியத்திற்கு சரீரத்திரயங்களோடு தாதான்மியப் பிராந்தியுண்டாகும்போது சேதனம் போக்தாவாகிறது. அந்த

போக்தாவே சீவன் என்று சொல்லப்படுகின்றுன் என்பது பொருள்) [இப்போது பரமான்மாவின் சொருபத்தைக் கூறுகின்றுர்] திட பரமான்மா சச்சிதானந்தம்=நித்திய பரமான்மா சச்சிதானந்த சொருபமாம், [அப்பரமான்மாவிற்கு போக்கியத்தன்மையின் பிராப்திப் பிரகாரத்தைக் கூறுகின்றுர்] திகழ் உரு நாமமோடு இயைந்து= விளங்கா நின்ற (நாமரூப கற்பனைக்கு அதிஷ்டானமாவதால்) நாமரூபங்களோடு தாதான்மியத்தன்மையையடைந்து, அடரு போக்யதையை அடைவுறும்=நெருங்கிய போக்கியத் தன்மையைப் பொருந்தும், [போத்திருத்து வாதியின் அபாவத்தில் காரணங்கூறுகின்றுர்] அவற்றின் அரும் பிரிவு உணரில்=சரீரத்திரயம் ஜகத்து ஆகிய அவ்விரண்டினினின்றும் அறிதற்கரிய பேதத்தை அறிந்தால், இரண்டு இல்=போத்திரு போக்கியம் என்னுமிரண்டுமின்றும் எ—று.

ஏ, ஏ—அசை நிலைகள். 3

(அ—கை)

கூறிய பொருளை விஸ்தரிக்கின்றுர்.

போத்துருப் பொருட்டுப் போக்கியம் விழைந்து
புற்கலந் தபிப்பன்ரு பங்கள்
காத்திர மூன்றிற் றிதிபெறுந் தனக்கோ
காய்ச்சலில் விடமந்தா துறவாந்
தீத்திர ஞேய்க ரூலவா கத்தே
திதசுரங் காமமே முதல
காத்திர நடுக்கா மிரண்டினெண் விரையோ
காரண மெனக்கழ றுவரால். 4

(ப—ரை) போத்துருப் பொருட்டு = புசிப்பவனுக்காக, போக்கியம் விழைந்து=விஷயங்களை விரும்பி, புற்கலம்தபிப்பன்= சரீரத்தைப் பின்பற்றி வருந்துவன், தாபங்கள் காத்திரம் மூன்றில் திதி பெறும் = ஜொரங்கள் தேகத்திரயத்தில் நிலைத்திருக்கும், தனக்கோ காய்ச்சல் இல்=ஆன்மாவிற்கோ ஜொரமின்றும், [எந்த சரீரத்தில் எந்த ஜொரமுள்ளது என்ருசங்கித்து தூலதேகத்திலுள்ள ஜொரங்களைக் காண்பிக்கின்றுர்] தாது விடமம் உற ஆம்=வாதம்

பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்று தாதுக்களும் விஷமத் தன்மையை அடைய அதனால் உண்டாவனவாகிய, தீத்திரள் நோய்கள் = சுவாலைக் கூட்டம் போன்ற வியாதிகள், தூல ஆக்கத்தேதித சுரம் = தூல தேகத்திலுள்ள சுரங்களாம், [இலிங்க தேக காரண தேகங் களிலுள்ள சுரங்களைக் கூறுகின்றார்] காமமே முதல் = விருப்பு வெறுப்பு முதலியவைகள், நடுகாத்திரக்கு ஆம் = சூக்ஷ்ம சரீரத்தில் உள்ள வியாதிகளாம், இரண்டின் ஒண் விரையோ = தூல சூக்ஷ்ம சரீரங்களிலுள்ள இருவித வியாதிகளுக்குப் பீஜமாகிய மிகுந்த வாசனையோ, காரணம் என கழறுவர் = காரண சரீரத்திலுள்ள வியாதி என்று கூறுவார்கள் எ—று. 4

ஆல்—அசை.

(அ—கை)

இப்போது உதாரணமாகக் கூறிய சுருதியின் தாற்பரியத்தைச் சொல்லுதல் வியாஜத்தால் முற்கூறிய பொருளையே விஸ்தரிக்கின்றார்.

அத்துவித வானந்த நெறியானே
பரமான்மா வறிய லாகின்
வத்துவெனப் போக்கியத்தைப் பாராளுய்
ஞானியெதை வாஞ்சிப் பானல்
ஒத்தபனி ரெண்டினுரைப் படியேயிவ்
வுயிரதுதா னுணர லாயின்
இத்தனுவி லெவ்வுணியு மிலவேயில்
லெனிற்சுரத்தை யேய்த லெங்கே. 5

(ப—ரை) அத்துவித ஆனந்த நெறியானே = அத்து விதானந்தமெனப் பெயரிய மூன்ருவது அத்தியாயத்திற் கூறிய மார்க்கத்தால், பரமான்மா அறியலாகின் = (மாயையின் காரியமான நாமரூபங்களினின்றும் வேருகச்) சச்சிதானந்தப் பிரமம் அறியப்படின், போக்கியத்தை வத்து என பாராளுய் = போக்கியமாகிய சருவப் பிர பஞ்சத்தையும் வாஸ்தவமென்று அறியாதவனுய் அதாவது மித்தையாகப் பார்ப்பவனுய், ஞானி எதை வாஞ்சிப்பான் = பரமான்மாவையறிந்தவன் எவ்விஷயத்தை இச்சிப்பான், [ஆன்மா னந்தமெனப் பெயரிய இரண்டாவது அத்தியாயத்திற் சொல்லிய

முறைப்படி சீவான்மவடிவ அசங்க கூடஸ்த சைதன்னியம் அறியப் பட்டபோது இச்சிப்பவனில்லாமையால் சுராதிசம்பந்தமில்லையெனக் கூறுகின்றார்] ஒத்த பனிரண்டின் உரைப்படியே=பொருத்தமான பனிரெண்டாவது அத்தியாயத்திற் கூறிய பிரகாரமே, இவ்வுயிரது தான் உணரலாயின்=இச்சீவான்மா அறியப்படுமாயின், இத்தனுவில் எவ்வுணியும் இலவே இல் எனில்=இத்தேகத்தில் யாதொரு போத்தாவும் இல்லவே இல்லை என்றால், சுரத்தை எய்தல் எங்கே= வியாதியை அடைவது எப்படி, ஜுரம் பொருந்துவதின்றுமென்பது பொருள் எ—று. ஆல்—அசை. 5

(அ—கை)

இப்போது பரலோக சம்பந்தியான சுரத்தைக் காண்பிக்கின்றார்.

மின்னுமறம் பாபமெனு மிருநினைவே
யனுராமுஷ் மிகம தாகும்
பன்னினமுன் னோத்ததினே தபித்திடா
தெனவிவனைப் பரமாஞ் சிந்தை
மன்னிமறைப் பன்னமிசை யறலுரு
ததினறிஞன் வயின்ஞா னத்தின்
பின்னருறு மாகாமி கருமமுரு
தெனப்பெரியோர் பேசு வாரே. 6

(ப—ரை) மின்னும் அறம் பாபம் எனும் இரு நினைவே= விளங்கா நின்ற புண்ணிய பாபமென்கின்ற இரண்டுகளின் சிந்தையே, ஆமுஷ்மிகம் அனுர் ஆகும்=பரலோக துக்கமாம். [அத்துக்கத்தின பாவம் யோகானந்தமென்னும் முதலத்தியாயத்தில் தயிரியன் என்னும் 5-வது செய்யுளில் நிரூபிக்கப்பட்டதெனக் கூறுகின்றார்.] பரமாம் இவனை சிந்தை மன்னிதபித்திடாது என=மேலாகிய இவ் அறிஞனை புண்ணிய பாவக் கவலை நெருங்கி வருத்தாது என்று, முன் ஓத்ததின் பன்னினம் = முதலத்தியாயத்தில் தயிரியன் என்னும் செய்யுளால் கூறினோம், [ஆனால் ஞானிக்கு பிராரத்த கருமத்தை விஷயமாகவுடைய சிந்தை இல்லாதொழிக, ஆகாமிய கரும விஷயக சிந்தை அவசியமுண்டாகுமென்றுசங்கித்து "எப்படி தாமரையிலையில்" என்பது முதலிய சுருதியால் ஞானியினிடத்து ஆகாமிய கருமத்தின்

சம்பந்தத்தை நீக்குதலால் அதன் விஷயகமான சிந்தையும் இல்லை எனக் கூறுகின்றார்] மரைப்பன்ன மிசை அறல் மன்னி உருது அதின் = தாமரையிலையில் ஜலம் பொருந்தி ஒட்டாதது போல், அறிஞன் வயின் = ஞானியிடத்து, ஞானத்தின் பின்னர் உறும் ஆகாமி கருமம் = ஆன்ம ஞானத்தின் அனந்தரம் செய்யப்படுகின்ற ஆகாமிய கருமமானது, உருது என பெரியோர் பேசுவர் = பற்ருது என்று மகான்கள் கூறுவார்கள் எ—று.

ஏ, ஏ—அசைநிலைகள்.

அது பகுதிப்பொருள் விகுதி. 6

(அ—கை)

"எப்படி நாணற்புல்லின் பஞ்சு அக்கினியில் போடப்பட்டு தகிக்கப்படுகின்றதோ அப்படி இவ்வறிஞனுடைய எல்லாப் பாபங்களும் தகிக்கப்படுகின்றன" என்னும் சுருதியை ஆசிரயித்து சஞ்சித கரும விஷயகமான சிந்தையும் ஞானிக்கு இல்லையெனக் கூறுகின்ருர்.

ஈடிகைப்புற் பஞ்சுகணத் தெரிந்துவிடு
மெழுநாவா லெனஞா னத்தால்
நீடுமிவன் பழையவினை நீருகு
மருச்சுஞ நிறைகொ டீத்தான்
காடுறுமெவ் விறகினையும் பொடிப்பபோல்
ஞானவழல் கரும மெல்லாம்
நாடுபொடி படுத்துமெவற் ககங்கிருதி
நணுகாதோ நலிவு ருதோ. 7

(ப—ரை) ஈடிகைப் புல் பஞ்சு = நாணற்புல்லினது பஞ்சானது, எழுநாவால் கணத்து எரிந்து விடும் என = அக்கினியால் ஒரு க்ஷணத்தில் தகிக்கப்படுவது போல், ஞானத்தால் இவன் நீடும் பழைய வினை நீறு ஆகும் = பிரம்ம சாக்ஷாத்காரத்தால் இந்த ஞானியினுடைய நீண்ட காலமாகவுள்ள சஞ்சிதகருமங்களனைத்தும் சாம்பலாகும், [கூறிய பொருளில் ஸ்ரீ கிருஷ்ணபகவானது வாக்கியத்தையும் பிரமாணமாக்குகின்ருர்] அருச்சுஞ, நிறை கொள் தீ = பூரணமாக உள்ள அக்கினி, காடு உறும் எவ்விறகினையும் பொடிப்ப

போல் = காட்டிலுள்ள எவ்வித கட்டைகளையும் சாம்பலாகச் செய்வது போல், ஞான அழல் நாடு கருமம் எல்லாம் பொடி படுத்தும் = பிரம்ம ஞானமாகிய அக்கினி கருதா நின்ற வினைகளனைத்தையும் சாம்பலாகச் செய்யும், எவற்கு அகங்கிருதி நணுகாதோ = (சாஸ்திரம் ஆசாரியரது உபதேசம் நியாயம் என்னுமிவைகளால் ஸம்ஸ்கரிக்கப் பட்டமனதுடைய) எப்புருடனுக்கு நான் கருத்தா என்னும் அபிமானம் பொருந்துவதின்றோ, எவன் நுண்மதி நலிவு உறாதோ = எவனுடைய சூக்ஷ்ம புத்தியானது மெலிதலை அடையாதோ எ—று.

இது குளகம். பிற்கவியிலுள்ள எவனுண் மதி என்பது ஈண்டு சேர்க்கப்பட்டது.

மெலிதலாவது நான் இக்கருமத்தைச் செய்வேன் அதன் பயனைப் புசிப்பேன் என்னும் அநுசந்தான வடிவப் பற்று. 7

(இதுவுமது)

எவனுண்மதி யவனடைய நூறிடினும்
நூறவிலை யிடற மாட்டான்
உவமையறு மனைசனகன் வதந்தேயங்
குழவியத்தி யொப்பாம் வேறே
பவமுறுத பதங்காதா முககாந்தி
பாறுதாம் பழிப்பில் லாற்கிங்
கவவுஞரின் மையதெனவே சருவகா
மாப்தியது மறைந்த தாமே. 8

(ப—ரை) அவன் = அப்படிப்பட்ட புருடன், அடைய நூறிடினும் = சகல பிராணிகளையும் கொன்றானாயினும், நூற இலை = அவன் கொல்லவில்லை, இடறமாட்டான், = தீவினையின் பயனால் கட்டுப்பட மாட்டான், (நூறிடினும் நூறவில்லையெனல் விரோதமா மென்னற்க, உலக திருஷ்டியால் நூறிடினும் சாஸ்திர திருஷ்டியால் நூறவில்லையென்பது பொருள். [இதே பொருளில் "மாதாவைக் கொல்வதாலும் பிதாவை கொல்வதாலும் திருடுவதாலும் குழவியைக் கொல்வதாலும் ஞானிக்குப் பாபமில்லை முக காந்தியும் கெடுவதில்லை" என்னும் கௌஷீதகி சுருதியின் வாக்கியத்தைப் பொருளால் படிக் கின்றார்] உவமை அறும் அனைசனகன் வதம் = நற்குணங்களிற்

சமானமின்றிய மாதாபிதாக்களின் கொலேயும், தேயம் = பொன் முதலியவற்றைத்திருடுதலும், குழவி அத்தி = சிசுவைக் கொல்லுதலும், ஒப்பாம் வேறுபாவம் = இவைகளுக்கு சமானமான மற்ற தீவினேகளும், அமுதபதம்காதா = முத்தியை நாசஞ்செய்யா, முககாந்தி பாருது = முகத்தின் ஒளியும் நாசமாகாது, [கூறிய நான்குவித பயன்களுள்ளே இரண்டாவது பயனேக் கூறுகின்ருர்] பழிப்பு இல்லாற்கு = நிந்தையற்ற வித்துவானுக்கு, 'இங்கு அவஅஞர் இன்மையது எனவே = ஈண்டு இழிந்த துக்காபாவம் போன்றே, சருவ காம ஆப்தியதும் அறைந்தது ஆம் = எல்லா ஆனந்தங்களின் அடைவும் சுருதியாற் கூறப் பட்டுள்ளது எ—று.

காதுதல் = கொல்லுதல். ஆகாரம்—எதிர்மறை.
பாவமென்பது பவமென எதுகை நோக்கிக் குறுகிற்று.
ஏகாரமிரண்டும் அசை. 8

(அ—கை)

சருவ காமாப்தியாகிய இப்பொருளில் ஐதரேய சுருதி வாக்கியத்தைப் பொருளாற் படிக்கின்ருர்.

இவன்சருவ காமமுற்று மிருதமில னேயா
யிருந்திடுவ னென்பதனு னெவையயின்று நடித்து
நவயுவதி வாகனங்க ளிதரரொடும் ரதியை
நண்ணியுட றனேநினேயா னுயிர்வினேயா லோம்பும்
இவனேயொருங் குறுவனெலாக் காமமுமே யிலேயா
மேதிலா னென்னவே சன்மகன்மங் களினுல்
புவிபுகழ்சு ரோத்திரிய ஞிடத்திலிருப் பனவே
போகங்கள் யுகபன்முறை வருச்சிதங்க ளன்றே. 9

(ப—ரை) இவன் சருவ காமம்உற்று = இந்த ஞானியானவன் எல்லா ஆனந்தங்களேயும் அடைந்து, மிருதம் இலனே ஆய் இருந் திடுவன் = அமிருதனுகவே இருக்கின்றனன், என்பதனுன் = என்னும் வாக்கியத்தால், (சருவ காமாப்தி கூறப்பட்டுள்ளது) ["புசிப்பவனுய் விளேயாடுபவனுய் ஸ்திரீகளோடாவது வாகனங்களோடாவது ஞானி களோடாவது அஞ்ஞானிகளோடாவது சினேகிதர்களோடாவது இரமிப்பவனுய் சனங்களின் சமீபத்திலுள்ள இச்சரீரத்தை நினேயான்"

என்னும் சாந்தோக்கிய சுருதி வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்றார்]எவை அயின்று=எவ்வித நல்ல உணவுகளையும் புசித்து, நடித்து = விளையாடி, நவயுவதி வாகனங்கள் இதரரொடும் ரதியை நண்ணி=புதிய தருண ஸ்திரீ குதிரை முதலிய வாகனங்கள் மற்றும் உள்ள வஸ்துக்கள் ஆகிய இவைகளோடும் சுகத்தையநுபவித்து, உடல்தனை நினையான் = தேகத்தைக் கருதான், உயிர் வினையால் இவனை ஓம்பும்=பிராணன் பிராரத்த கருமத்தால் இந்த ஞானியைப் பாதுகாக்கும், [கூறிய பொருளிலேயே தைத்திரீய சுருதி வாக்கியத் தைப் பொருளால் படிக்கின்றார்] எலாக் காமமும் ஒருங்கு உறுவன்= சருவ ஆனந்தங்களையும் ஒரே காலத்தில் அடைவான், [அற்றேல் கருமபலனை போகத்தை அங்கீகரிக்கின் சன்மமும் பிராப்தியாகும் என்றாசங்கித்துக் கூறுகின்றார்] ஏதிலான் என்ன = அன்னியனை அஞ்ஞனுக்குப் போன்று, கன்மங்களினால் சன்மம் இலையாம் = நல்லதும் கெட்டதுமான வினைகளால் பிறப்பு இன்றாம், (ஞானத்தால் சஞ்சித கன்மம் தகிக்கப்பட்டபடியால்) என்பது கருத்து, புவிபுகழ் சுரோத்திரிய னிடத்தில் = உலகமெலாம் துதிக்கின்ற பிரம ஞானியின் கண், போகங்கள் முறைவருச்சிதங்கள் = விஷயாநுபவங்கள் கிரமத்தை விட்டனவாய், யுகபன் இருப்பன = ஒரே காலத்தில் உள்ளனவாம் எ—று. அன்றும், ஏகாரம் நான்கும் அசைநிலைகள். 9

(அ—கை)

இப்போது தைத்திரீய பிரகதாரண்ணியக வாக்கியத்தைச் சுருக்கிப் பொருளால் படிக்கின்றவராய் சாருவபௌவுமன் முதல் இரண்ணியகருப்ப பரியந்தமான சீவர்களிடத்திலுள்ள ஆனந்தங்கள் அனைத்தும் ஞானியினிடத்தில் எப்படி சம்பவிக்கும் என்று சங்கித்து சருவ ஆனந்தங்களும் ஞானியினால் அறியப்பட்ட பிரம்மத்தின் அம்ஸமாவதால் சம்பவிக்குமெனக் கூறுகின்றார்.

இளமையு மெழிலுங் கல்வியு மிசைந்தே
யின்றிநோய் திடமனத் தவனாய்
முளைபடை யுளனாய்த் தனநிறை தரணி
முழுதையு மளிப்பவ னாகி

யுளவெலா மநுட போகங்க ளோடு
மொன்றிய திருத்தமன் னவன்றான்
களிசுக மெதனைக் கதுவுவ னதையுங்
கதுவுவன் பிரமவித் துரனே. 10

(ப—ரை) இளமையும் = தருணவஸ்தையையும், எழிலும் = அழகையும், கல்வியும் = வித்தையையும், இசைந்து = அடைந்து, நோய் இன்றி = வியாதியில்லாதவனாய், திட மனத்தவன் ஆய் = ஸ்திர சித்தமுடையவனாய், படை உளன் ஆய் = சதுர்வித சைதன்னியங்களையுடையவனாய், முனை தனம் நிறை தரணி முழுதையும் அளிப்பவன் ஆகி = பயிர்களும் சுவர்ணம் முதலிய பொருள்களும் நிறைந்து உள்ள பூமி முழுவதையும் காப்பவனாய், உள எலா மனுட போகங்களோடும் ஒன்றிய திருத்த மன்னவன் = இருக்கின்ற சருவ மனுஷிய போகங்களோடும் பொருந்தினவனாய்ச் சந்தோஷமுற்ற சாருவ பௌமனானவன், களிசுகம் எதனைக் கதுவுவன் = எந்தப் பெரிய ஆனந்தத்தையடைவனோ, உரன் பிரமவித்து அதையும் கதுவுவன் = திடப் பிரம்மஞானி அச்சுகத்தையும் அடைவான் எ—று. 10

தான், ஏ—அசைநிலைகள்.

(அ—கை)

அற்றேல் சாருவ பௌமனுக்கும் சுரோத்திரியப் பிரம்ம நிஷ்டனுக்கும் விஷயப் பிராப்தி சமமில்லாமையால் எப்படி ஆனந்தம் சமம் ஆகும் என்று சங்கித்து நிரபேக்ஷத்தன்மை சமமாயிருத்தலால் ஆனந்தம் சமமாம் எனக் கூறுகின்றார்.

இருவருக்கு மர்த்யபோக விச்சையில்லை யென்பதால்
வருதிருத்தி யொவ்வும்போக வாஞ்சையின்மை யிறைக்குமற்
றொருவனுக்கு மோர்வினற்சு ரோத்திரியத் தன்மையாற்
சுருதிநூலி னலேபோக தோடநோக்கி னனரோ. 11

(ப—ரை) இருவருக்கும் மர்த்ய போக இச்சை இல்லை = சுரோத்திரியப் பிரம்ம நிஷ்டன் கூறிய லக்ஷணமுள்ள அரசன் ஆகிய இரண்டு பேருக்கும் மநுட சம்பந்தியான போகங்களில் ஆசை இன்றாம், என்பதால் வருதிருத்தி ஒவ்வும் = இக்காரணத்தால் வாரா

நின்ற சந்தோஷம் சமமாம், [நிரபேக்ஷத்தன்மையின் சமத்துவத்தில் ஏதுவைக் கூறுகின்றார்] இறைக்கு போக வாஞ்சை இன்மை = அரசனுக்கு விஷயானுபவத்தால் ஆசையின்றாம். மற்றொருவனுக்கும் ஓர்வினால் வாஞ்சை இன்மை = சுரோத்திரியப் பிரம்ம நிஷ்டனுக்கும் விசாரத்தால் ஆசை இன்றாம், [ஓர்வினால் என்று சொல்லிய பொருளையே விஸ்தரிக்கின்றார்] சுரோத்திரியத் தன்மையால் = வேதங் களைப் படித்தமையால், சுருதி நூலினால் போக தோடம் நோக்கினான் = வேத சாஸ்திரங்களால் விஷயங்களிலுள்ள குற்றங்களைக் கண்டனன் எ—று. வாஞ்சை இன்மை இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

போக வாஞ்சையின்மை என்பதை போகத்தால் வாஞ்சை இன்மை என மூன்றாம் வேற்றுமையை விரித்துக்கொள்க.

ஏ, அரோ—அசை. 11

(அ—கை)

விஷயங்களிலுள்ள குற்றங்கள் எந்த சாகையில் யாரால் நிரூபிக்கப்பட்டன என்றாசங்கித்து பிருகத்ரதன் என்னுமரசனால் மைத்திராயணீயமெனப் பெயரிய சாகையில் கதைகளால் சொல்லப் பட்டன எனக் கூறுகின்றார்.

பிருகத் திரத னெனுமி றைவன்
பிறங்கு கதைகள் பலவாலே
மருவத் தோடங் களைம லர்ந்தான்
மலமா முடலின் றோடமதை
திரிசித் தமதின் போக்கி யத்தின்
றிகனு னுவா ந் தோடமதைக்
கருநாய் கான்ற பாய சத்தே
காம மிலையாங் கறிவினர்க்கே. 12

(ப்—ரை) பிருகத்து இரதன் எனும் இறைவன் = பிருகத்ரதன் எனப்பெயரிய அரசன், பிறங்கு கதைகள் பலவால் = விளங்கா நின்ற சரித்திரங்கள் அநேகங்களால், மருவு அத்தோடங்களை மலர்ந்தான் = விஷயங்களிற் பொருந்தியுள்ள அக்குற்றங்களைக்கூறினான், [அதனையே கூறுகின்றார்] மலம் ஆம் உடலின் தோடமதை = மலம் நிறைந்துள்ள

தேகத்தின் குற்றங்களேயும், திரிசித்தமதின் தோடமதை=சுழலுகின்ற மனதின் குற்றங்களேயும், திகழ் போக்கியத்தின் நாளுவாம் தோடம் அதை=விளங்காநின்ற விஷயங்களின் அநேகப்பிரகாரமான குற்றங் களேயும், மலர்ந்தான்=கூறினன், [விவேகிக்கு காமத்தின் அநுற்பத் தியில் வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்] கருநாய் கான்ற பாயசத்தே=கரியநாய் வாந்திசெய்த பாயசத்தில்,காமம் இலஆங்கு= ஒருவருக்கும் ஆசை உண்டாகாதது போன்று, அறிவினர்க்குக் காமம் இலே=விவேகிகளுக்கு விஷயங்களில் விருப்பமின்றும் எ—று.

மலர்ந்தான் என்பது இரண்டிடத்தும் கூட்டப்பட்டது.
காமமிலே என்பதும் தோடமதை என்பதும் அவ்வாறே.
ஏகாரம் இரண்டும் அசைநிலேகள். 12

(அ—கை)

சாருவ பௌமனேக் காட்டிலும் சுரோத்திரியனுக்கு மேன்மை யைக் கூறுகின்றார்.

காம மின்மைசம மாயினும் மனிவண்
காணு சாதனம தார்தலில்
ஆமனர்ச் செறியும் பாவி நாசபய
மாருஞ் சோத்திரிய னுக்கிரு
தோமு மின்றதனின் ஞானி யின்பமகிழ்
தோன்ற லின்பதினு மேலதே
நாம கந்தருவ வின்ப வாஞ்சையிறை
நண்ணு ஞானியிடை நண்ணுமோ. 13

(ப—ரை) காமம் இன்மை சமம் ஆயினும் = விஷயங்களில் ஆசையில்லாமை இருவருக்கும் ஒவ்வுமாயினும், மன் இவண் காணு சாதனமது ஆர்தலில்=அரசன் ஈண்டு காணப்படுகின்ற போக சாதனங் களேச் சம்பாதித்தலில், அனர் செறியும் = துன்பத்தை அடைவன், பாவி நாசபயம் ஆரும்=எதிர்காலத்தில் போக சாதனங்கள் நாசம் ஆகுமே என அச்சத்தையும் அடைவன், சோத்திரியனுக்கு இரு தோமும் இன்று = பிரம நிஷ்டனுக்கு இரண்டு குற்றமுமின்றும், அதனின்=அக்காரணத்தால், ஞானி இன்பம் மகிழ் தோன்றல்

இன்பதினும் மேலது = அறிஞனது ஆனந்தம் மனைவி முதலியவற்றால் மகிழ்வையடையும் மன்னனது ஆனந்தத்தைப் பார்க்கிலும் உயர்வாம், [சுரோத்திரியனுக்கு வேறு மேன்மையைக் கூறுகின்றார்] நாம கந்தருவ இன்ப வாஞ்சை இறை நண்ணும் = உயர்வான கந்தருவ ஆனந்தத்தில் இச்சை அரசனுக்கு உண்டாகும், ஞானியிடை நண்ணுமோ = அறிஞனிடத்தில் அவ்விச்சை பொருந்துமோ, பொருந்தாது என்பது பொருள் எ—று.

சருவ பூமியையும் ஆளுந்தன்மையானது சாதன சாத்தியமும் பின்பும் அதன் நாச பீதியும் என இரு தோஷத்தோடு கூடினமையாலும் சுரோத்திரியனிடத்து அவ்விரு தோஷமின்மையாலும் ஞானியின் இன்பம் மேலதே என்றார்.

ஆம், ஏ—அசைநிலைகள். 13

(அ—கை)

இப்போது கந்தருவானந்தம் இருவிதமாமெனக் காண்பிப்பதற்காக கந்தருவரது பேதத்தைக் கூறுகின்றார்.

கற்பமிதின் மனுடனா யறப்பாகச்
சிறப்பினாற் கந்தர் வத்வ
நற்பெறுவன் மாநுடகந் தருவனும்
பூர்வகற்ப நன்மை யாற்றிக்
கற்பமுத லதனிலே பவிக்குமேற்
கந்தருவக் கவினுந் தன்மை
அற்பமறு மத்தகைய னிவண்டேவ
கந்தருவ னறைவா ரன்றே. 14

(ப—ரை) கற்பம் இதில் மனுடன் ஆய் = இந்தக் கற்பத்தில் மனிதனாய் இருந்து, அறப்பாகச் சிறப்பினால் = புண்ணிய கருமத்தின் பரிபாக விசேஷத்தால், நல் கந்தருவத்வம் பெறுவன் = நல்ல கந்தருவ தேகத்தையடைபவன், மாநுடகந்தருவன் ஆம் = மனுட கந்தருவன் என்று சொல்லப்படுவான், பூர்வகற்பம் நன்மை ஆற்றி = முன் கற்பத்தில் புண்ணியத்தைச் செய்து, அப்புண்ணிய விசேஷத்

தால், கற்பமுதலதனில் கந்தருவக் கவினுந்தன்மை பவிக்குமேல்= இக்கற்பத்தின் ஆதியிலேயே அழகிய கந்தருவ தேகமுண்டாகுமேல், அற்பம் அறும் அத்தகையன்=இழிவின்றிய உயர்வான அப்படிப்பட்ட புருஷனை, இவண் தேவ கந்தருவன் அறைவார் = ஈண்டு தேவ கந்தருவனென்று பெரியோர் கூறுவர் எ—று.

அன்று, ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். 14

(அ—கை)

சிரலோக வாசிகளான பிதுருக்களின் ஆனந்தத்தைத் தெரிவிக்கும் பொருட்டு சிரலோக பிதுருக்களைக் கூறுகின்றார்.

அக்கினிஷ்வாத் தாதியராஞ் சிரவாசிப்
பிதுர்க்களுல கதனி லேய்ந்தோர்
தக்ககற்ப மாதியினே தேவதையைச்
சார்ந்தோரா சான தேவர்
இக்கற்பத்திற் பரிமேத முதல்வினைக
ளியற்றிமகத் திடத்தை யேய்ந்தே
கக்கலறு மாசான தேவரா
லேத்துறுவர் கருமதேவர். 15

(ப—ரை) உலகதனில் ஏய்ந்தோர் = பிதிருலோகத்தில் பொருந்தினராய், சிரவாசி அக்கினிஷ்வாத்தாதியர்=நெடுங்காலம் வசிப்பவரான அக்கினிஷ்வாத்தர் முதலியோர்,பிதுர்க்கள்=பிதுர்க்கள் என்று சொல்லப்படுவார், [தேவர்களது மூவித ஆனந்தத்தினது ஞானத்தின் பொருட்டு தேவபேதத்தைக் கூறுகின்றார்] கற்பம் ஆதியினே தக்க தேவதையைச் சார்ந்தோர் = இந்தக் கற்பத்தின் முதலிலேயே சிறந்த தேவத்துவத்தை அடைந்தவர்கள், ஆசான தேவர் = ஆசான தேவரென்று சொல்லப்படுவார், இக்கற்பத்தில் பரிமேதம் முதல் வினைகள் இயற்றி=இந்தக் கற்பத்தில் அஸ்வமேதம் முதலிய புண்ணிய கருமத்தைச் செய்து, மகத்து இடத்தை ஏய்ந்து=சொர்க்கம் முதலிய மகத்தான பதவியை அடைந்து, கக்கல் அறும் ஆசான தேவரால் ஏத்துறுவர் கருமதேவர் = குற்றமின்றிய சிறந்த ஆசான தேவராலும் பூசிக்கத்தக்கவர் கருமதேவர் எனப்படுவர் எ—று. சிரம்=நீண்டகாலம். ஏ—அசைநிலை. 15

(இதுவுமது)

எமனக் கினிமுக் கியதே வர்களா
மெழிலிந் திரனங் குருயா ரறியார்
சமைநற் பிரஜா பதிவ்ராட் பிரமா
சற்சூத் திரமான் மனெனப் பெயரோன்
மமவெப் புவிநற் பதியா திபிர
மாவத் தமென்மேல் விழைவுற் றவராம்
அமைசத் தமுஞ்சித் தமுமே யறியா
வான்மச் சுகமீ ததனிற் பரமே. 16

(ப—ரை) எமன் அக்கினி முக்கிய தேவர்கள் ஆம் = எமதருமன் அக்கினி பகவான் முதலானவர்கள் முக்கிய தேவர்களாவார்கள், எழில் இந்திரன் அம்குரு யார் அறியார் = சிறந்த தேவேந்திரனையும் அழகிய பிரஹஸ்பதியையும் உணராதவர் எவர், (இந்திரனும் பிரகஸ்பதியும் முக்கிய தேவர்களாக பிரசித்தராம்) என்பது பொருள். சமைநல் பிரஜாபதிவ்ராட் = பொறுமையுடைய நல்ல பிரஜாபதியென்பவர் விராட்டு புருஷராவர், பிரமாசற் சூத்திரம் ஆன்மன் எனப் பெயரோன் = பிரமா என்பவன் நல்ல இரண்ணியகருப்பனென்னும் நாமமுடையவனும், [சாருவ பௌமன் முதல் இரண்ணியகருப்ப பரியந்தமாயுள்ள அனைவருக்கும் சுரோத்திரியப் பிரம்ம நிஷ்டனினும் வைகல்யம் தோன்றுதற் பொருட்டுக் கூறுகின்றார்] மம எப்புவி நல்பதி ஆதிபிரமா அந்தம் = நீர் சூழ்ந்த சகல பிருதிவிக்கும் பதியாகிய அரசன் முதல் இரண்ணியகருப்ப பரியந்தமான அனைவரும், மென்மேல் விழைவு உற்றவர் ஆம் = உத்தரோத்தரம் நூறு மடங்கு ஆனந்தம் உடையவர் ஆவர். [இவ்வெல்லாவற்றினும் அதிக ஆனந்தத்தைக் கூறுகின்றார்] ஈது ஆன்மச்சுகம் = இவ்வான்மானந்தம், அமை சத்தமும் சித்தமும் அறியா = அமைதியான வாக்கிற்கும் மனதிற்கும் அவிஷயமாம், அதனில் பரம் = அக்காரணத்தினால் கூறிய பதினொரு விதஆனந்தத்தினும் மேலானதாம் எ—று.

மம = நீர். ஏ—அசைநிலை. 16

(அ—கை)

இப்போது அனைவரது ஆனந்தங்களும் சுரோத்திரியப் பிரம நிஷ்டனிடத்தில் உள்ளன. அவனுக்கு அவைகளில் விருப்பம் இன்மையால் எனக் கூறுகின்றார்.

அவரவர்தங் காமியமாஞ் சருவசுகங்
களிலெதனு லமர்ஞா னிக்குச்
சுவையிலையங் கதனுனே யவருடைய
வச்சுகங்கள் சுஞ்ஞா னிக்குண்
டுவமையறு சருவகா மாப்தியிது
வுரைத்தனமற் றுணர்சி தான்ம
நவமதனுற் றன்றேக மெனவெவற்றும்
போகமதை நாடு வானுல். 17

(ப—ரை) அவர் அவர் காமியம் ஆம் சருவ சுகங்களில்= அவரவர்களால் விரும்பத் தக்கனவாகிய எல்லா ஆனந்தங்களிலும், அமர்ஞானிக்கு எதனுல் சுவை இலை=ஆன்மானந்தத்தில் அமருகின்ற அறிஞனுக்கு யாதொரு காரணத்தால் விருப்பமில்லையோ, அதனுனே அவருடைய அச்சுகங்கள் சுஞ்ஞானிக்கு உண்டு=அக்காரணத்தினுல் கூறிய பதினேரு பேருடைய ஆனந்தங்கள் நன்கறிந்தவனுக்கு இருக்கின்றன, [உபபாதனஞ் செய்த பொருளை முடிக்கின்றுர்] உவமைஅறு இது சருவ காமாப்தி உரைத்தனம்= சமானமற்ற இந்த சருவகாமாப்தியெனப் பெயரிய பயனைக் கூறினம், [இப்போது சருவ காமாப்தியில் வேறு பக்ஷத்தைக் கூறுகின்றுர்] நவம் உணர்சிதான்ம அதனுல்=சிறந்த சாக்ஷி சைதன்னிய ரூபத்தால், தன் தேகம் என=தனது சரீரத்திற் போல, எவற்றும் போகமதை நாடுவான்=சருவ தேகங்களிலும் போகங்களைக் காண்பான் எ—று.

மற்று, அங்கு, ஆல்—அசைநிலைகள்.

எப்படி தனது தேகத்தில் ஆனந்தாகார புத்திக்கு சாக்ஷியாய் இருத்தலால் ஆனந்தமுளதோ அப்படி இதர தேகங்களிலும் ஆனந்தாகார புத்திக்கு சாக்ஷியாயிருத்தலால் ஆனந்தமுளது என்பது பொருள். 17

(அ—கை)

அற்றேல் கூறிய பிரகாரத்தால் அஞ்ஞனுக்கும் சருவானந்தப் பிராப்தி உளது என்றுசங்கித்து எல்லா தேகங்களிலும் எல்லா புத்திகளுக்கும் நான் சாக்ஷியாயிருக்கின்றேனென்று ஞானமின்மையால் அங்ஙனமன்றெனக் கூறுகின்றுர்.

அஞ்ஞனுக்கு மீதுளதே யறியாமை
யாற்றிருத்தி யடைவு ருதாந்
தஞ்ஞனெவ னவன்சருவ காமமுணு
மெனமறையுஞ் சாற்ற லாகுந்
தஞ்ஞனன்றித் தன்சருவான் மதையைநிதஞ்
சாமமதாற் றனே பாடும்
தஞ்ஞனக மன்னமவ்வா றன்னமுண்ப
னெனச்சாமஞ் சாற்று மன்றே. 18

(ப—ரை) அஞ்ஞனுக்கும் ஈது உளதே = அஞ்ஞானத்தோடு கூடிய புருடனுக்கும் சாக்ஷி சிதான்மா இருக்கின்றதே ஆயினும், அறியாமையால் திருத்தி அடைவுருது = சாக்ஷிசிதான்மாவின் ஞானமின்மையால் சந்தோஷம் பொருந்துவதின்றும், [கூறிய பொருளில் தைத்திரீய சுருதியைப் பிரமாணமாக்குகின்றார்] எவன் தஞ்ஞன் அவன் சருவகாமம் உணும் என = எவன் இருதய குகையிலுள்ள ஆன்மாவையறிவனே அப்புருடன் எல்லாப் போக்கியங்களையும் புசிப்பன் என்று, மறை சாற்றல் ஆகும் = தைத்திரீய சுருதி கூறுகின்றது, இப்போது சருவ காமாப்தியில் மூன்றுவது பிரகாரத்தைக் கூறுகின்றார்] அன்றி தஞ்ஞன் தன் சருவான்மதையை = அன்றியும் தன்னையுணர்ந்தவன் தனது எல்லா வடிவமாயிருக்குந் தன்மையை நிதம் சாமமதால் பாடும் = எப்போதும் சாமகானத்தால் பாடுவான், [அதனையே கூறுகின்றார்.] தஞ்ஞன் அகம் அன்னம் என = தன்னை யறிந்த அறிஞனவன் நானே அன்னமெனவும், அவ்வாறு அன்னம் உண்பன் என = அப்படியே அன்னத்தைப் புசிப்பவன் எனவும், சாமம் சாற்றும் = சாமமொழியைப் பாடுவான் எ—று.

"இவ்வுலகங்களில் நிட்காமரூபனாய் சஞ்சரிக்கின்றவன்" என்பது முதலிய வசனங்களால் கூறப்பட்டுளது என்பது பொருள்.

தன்ஞன் என்பது தஞ்ஞன் எனத்திரிந்தது. தன் = தன்னை, ஞன் = அறிபவன், என-என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

உம்—இடைச்சொல்.

ஆம்—அன்று—தான்—ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். 18

(அ—கை)

சென்றகிரந்தத்தால் சித்தித்தபொருளைச் சுருக்கிக்கூறுகின்றார்.

துக்கவபா வமுங்காம வாப்தியுமென்
றிரண்டுமிங்ஙன் சொல்ல லாய
துக்கிருத கிருத்தியமா மன்னியமு
மடைந்ததடை வதுவுங் காண்க
தொக்கிரண்டுந் திருப்திதீ பத்தினம்மா
னன்ருகச் சொல்ல லாய
தக்கவிக ளேயீண்டும் புத்திவிசுத்
தியின்பொருட்டா யனுசந் திக்க. 19

(ப—ரை) துக்க அபாவமும் காமஆப்தியும் என்று இரண்டும்= சருவதுக்க நிவர்த்தியும் சருவானந்தப் பிராப்தியும் ஆகிய இரண்டும், இங்ஙன் சொல்லல் ஆயது=இவ்வாறு கூறப்பட்டது, அன்னியம் கிருதகிருத்தியமும் அடைந்தது அடைவதும் காண்க = அவற்றின் வேருன செய்யத் தக்கனவற்றை செய்து முடிந்தமையும் அடையத் தக்கனவற்றையடைந்து முடிந்தமையும் அறிக, [இவ்விரண்டும் திருத்தி தீபத்தில் காணத்தக்கது எனக்கூறுகின்ருர்.] தொக்கு இரண்டும் = தொகுத்துக் கூறிய கிருதகிருத்தியமும் பிராப்தப் பிராப்பியமும் ஆகிய இரண்டும், திருப்தி தீபத்தில் நம்மால் நன்ருகச் சொல்லல் ஆயது = திருப்தி தீபமெனப் பெயரிய ஏழாவது பிரகரணத்தில் நம்மால் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது, அக்கவிகளே ஈண்டும் புத்திவி சுத்தியின் பொருட்டாய் அநுசந்திக்க = அவ் விடத்திலுள்ள செய்யுள்களேயே இவ்விடத்தும் அந்தக்கரணத் தூய்மையின் பொருட்டு அநுசந்தானஞ் செய்க எ—று.

அகரச்சுட்டு—எதுகை நோக்கி வந்தது.

ஆம்—அசை. உம்—பிரித்துக்கூட்டப்பட்டது. 19

இவ்விடத்தில் திருப்தி தீபத்திலுள்ள அனுசந்தானஞ் செய்யத் தக்க கவிகளிவையாம்:-

படியிதுற நாக மருவ திருவாண
பலிதமுறவே யிவன் றனக்
கடியின்வெகு வேலே யுளவது வெலாமு
மமைதி பெறலான தின்றரோ. 134

அஞ்ஞனுக்கு மீதுளதே யறியாமை
யாற்றிருத்தி யடைவு ருதாந்
தஞ்ஞனெவ னவன்சருவ காமமுணு
மெனமறையுஞ் சாற்ற லாகுந்
தஞ்ஞனன்றித் தன்சருவான் மதையைநிதஞ்
சாமமதாற் றனே பாடும்
தஞ்ஞனக மன்னமவ்வா றன்னமுண்ப
னெனச்சாமஞ் சாற்று மன்றே. 18

(ப—ரை) அஞ்ஞனுக்கும் ஈது உளதே=அஞ்ஞானத்தோடு கூடிய புருடனுக்கும் சாக்ஷி சிதான்மா இருக்கின்றதே ஆயினும், அறியாமையால் திருத்தி அடைவுருது=சாக்ஷிசிதான்மாவின் ஞான மின்மையால் சந்தோஷம் பொருந்துவதின்றும், [கூறிய பொருளில் தைத்திரீய சுருதியைப் பிரமாணமாக்குகின்றார்] எவன் தன்ஞன் அவன் சருவகாமம், உணும் என=எவன் இருதய குகையிலுள்ள ஆன்மாவையறிவனே அப்புருடன் எல்லாப் போக்கியங்களையும் புசிப்பன் என்று, மறை சாற்றல் ஆகும்=தைத்திரீய சுருதி கூறு கின்றது. இப்போது சருவ காமாப்தியில் மூன்றாவது பிரகாரத்தைக் கூறுகின்றார்] அன்றி தன்ஞன் தன் சருவான்மதையை=அன்றியும் தன்னையுணர்ந்தவன் தனது எல்லா வுடிவமாயிருக்குந் தன்மையை நிதம் சாமமதால் பாடும் = எப்போதும் சாமகானத்தால் பாடுவான், [அதனையே கூறுகின்றார்.] தன்ஞன் அகம் அன்னம் என = தன்னை யறிந்த அறிஞனவன் நானே அன்னமெனவும், அவ்வாறு அன்னம் உண்பன் என=அப்படியே அன்னத்தைப் புசிப்பவன் எனவும், சாமம் சாற்றும்=சாமமொழியைப் பாடுவான் எ—று.

"இவ்வுலகங்களில் நிட்காமரூபனாய் சஞ்சரிக்கின்றவன்" என்பது முதலிய வசனங்களால் கூறப்பட்டுளது என்பது பொருள்.

தன்ஞன் என்பது தஞ்ஞன் எனத்திரிந்தது. தன் = தன்னை, ஞன் = அறிபவன், என-என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

உம்—இடைச்சொல்.

ஆம்—அன்று—தான்—ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். 18

(அ—கை)

சென்றகிரந்தத்தால் சித்தித்தபொருளைச் சுருக்கிக்கூறுகின்றார்.

துக்கவபா வமுங்காம வாப்தியுமென்
றிரண்டுமிங்ஙன் சொல்ல லாய
தக்கிருத கிருத்தியமா மன்னியமு
மடைந்ததடை வதுவுங் காண்க
தொக்கிரண்டுந் திருப்திதீ பத்தினம்மா
னன்ருகச் சொல்ல லாய
தக்கவிக ளேயீண்டும் புத்திவிசுத்
தியின்பொருட்டா யனுசந் திக்க. 19

(ப—ரை) துக்க அபாவமும் காமஆப்தியும் என்று இரண்டும்= சருவதுக்க நிவர்த்தியும் சருவானந்தப் பிராப்தியும் ஆகிய இரண்டும், இங்ஙன் சொல்லல் ஆயது=இவ்வாறு கூறப்பட்டது, அன்னியம் கிருதகிருத்தியமும் அடைந்தது அடைவதும் காண்க = அவற்றின் வேருன செய்யத் தக்கனவற்றை செய்து முடிந்தமையும் அடையத் தக்கனவற்றையடைந்து முடிந்தமையும் அறிக, [இவ்விரண்டும் திருத்தி தீபத்தில் காணத்தக்கது எனக்கூறுகின்ருர்.] தொக்கு இரண்டும் = தொகுத்துக் கூறிய கிருதகிருத்தியமும் பிராப்தப் பிராப்பியமும் ஆகிய இரண்டும், திருப்தி தீபத்தில் நம்மால் நன்ருகச் சொல்லல் ஆயது = திருப்தி தீபமெனப் பெயரிய ஏழாவது பிரகரணத்தில் நம்மால் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது, அக்கவிகளே ஈண்டும் புத்திவி சுத்தியின் பொருட்டாய் அநுசந்திக்க = அவ்விடத்திலுள்ள செய்யுள்களையே இவ்விடத்தும் அந்தக்கரணத் தூய்மையின் பொருட்டு அநுசந்தானஞ் செய்க எ—று.

அகரச்சுட்டு—எதுகை நோக்கி வந்தது.

ஆம்—அசை. உம்—பிரித்துக்கூட்டப்பட்டது. 19

இவ்விடத்தில் திருப்தி தீபத்திலுள்ள அனுசந்தானஞ் செய்யத் தக்க கவிகளிவையாம்:-

படியிதுற நாக மருவ திருவாண
பலிதமுறவே யிவன் றனக்
கடியின்வெகு வேலை யுளவது வெலாமு
மமைதி பெறலான தின்றரோ. 134

கிருதகி ருத்திய மிதுதா னெதிர்மறை
கிளர்தரு தேர்தன் முனஞ்செய்தே
தெரிதரு மற்றிவ னிவ்வகை யாகிய
செறிதரு மகிழ்வனு தினமார்வன்
றுரிசுறு மறிவிலர் கான்முளை முதனச்
சுதல்கொடு வேண்டிய வாபவநேர்க
பரசுக மிகுபரி பூரண ஞநான்
பவமுற லேதிச் சையினாலே. 135

பரலோ கேச்சை புணர்ந்தவர் கருமம்
பண்ணு நிற்குக வெந்நாளு
மிருமா நிலமுழு துருவா கியயா
னெவ்வா றேதெத ஞற்செய்கே
னுரியோ ரிங்கெவ ரவர்நூல் கற்குக
வோதா நிற்குக முதுவேதங்
கரைதீர் கிரியை யகன்றமை யாலதி
காரம தென்ப தெனக்கெங்கே. 136

நித்திரை பிச்சை முழுக்கொடு சௌச
நிகழ்தர வேநய வேறுற்றே
னத்தகை காண்பவர் கற்பித் திடினெற்
கயலோர் கற்பனை யாலென்னுங்
கொத்துறு குன்றிமு னயலா ரோபித
கொழுமன லால்வெந் திடுமோதா
னித்திற நான்பிற ராரோ பித்திடு
மிழிபவ தருமங் களைமேவேன். 137

தத்துவ மறியார் கேட்டிடல் கடனுந்
தனையறி தருயா னேன்கேட்கே
னுத்த வயிர்ப்புளர் சிந்தித் திடல்கட
னுறுதிய துளனேன் சிந்திக்கேன்
சித்தத் திரிபுளர் தெளிதரல் கடனுந்
திரிபில தேலே னேதியானஞ்
செத்திடு முடனு னென்றிடு திரிபைச்
சிறிதொரு காலுஞ் சேரேனன். 138

மானுட ஞெனன லாதி வழக்கிவ்
வகைவரு திரிபை யகன்றேயுந்
தானெடு நாட்பழ குதலால் வருவா
தனையாற் கற்பித மாமன்றே
மோனைய தாம்வினை நாசம தாகிடின்
மொய்விவ காரங் கிலமாகு
மானியுரு தெனின் வினையிது தியான
மாயிர மாற்றினு மழியாதே. 139

விவகா ரத்தி னடக்கம் விரும்பிடின்
மேவு தியான நினக்கா
விவர் விவகாரம் வாதிப் பதல
வெனக்கா ணகமேன் றியானிக்கேன்
அவமுறு விட்சே பங்களெ னக்கில
யாதலி ஞற்று சமாதியுமின்
றெவமுறு விட்சே பங்கள் சமாதியு
மேலும் விகார மனக்காமே. 140

நித்திய வனுபவ ரூப வெனக்கிங்
னிகழநுபவம் வேறே யேதோ
வத்திர மறசெய் வனசெய் தனவா
மடைவ வடைந்தன துணிவீதே
யித்திர ஞலகிய ஞாலிய லாகுத
லேலனைய விவகா ரமதேனும்
மொய்த்திடு செயனுகர் வற்ற வெனக்கு
முன்வினை யின்படி முடிவாமாமே. 141

இனிநான் கிருத கிருத்திய னேனு
மிவ்வுல கருள்புரி காதவிஞற்
றனிநா லியல்வழி யேசென் றிடுகேன்
ருனத ஞலெற் கானியெஞே
நனிதே வார்ச்சனை முழுகுதல் சவுச
நல்விர வாதியி னணுகவுடல்
தொனி தாரமது செபிக்குக வல்லது
சொல்லுக வுபநிடமே வாக்கே. 142

வீண்டு தியானிக் குகமன மல்லது
மேதகு பேரின் பதின்மூழ்க
திண்டு கடீர்கரி நானிதி லொன்றுஞ்
செய்யேன் செய்விப் பவனுகேன். 143

இந்த மகான்செய் வனசெய் தேனுவ
வேய்ந்து மகிழ்ச்சி யிலையந்தவனுய்ச்
சந்தத முந்தன் தூய்மன தாலித்
தகையறு சந்தானஞ் செய்வான். 153

தன்னிய னுன்றன் னியனு னித்தந்
தன்வடி வினைநே ரினிலோர்கேன்
றன்னிய னுன்றன் னியனு னேரே
தகுபிர மானந் தங்காண்கேன்
றன்னிய னுன்றன் னியனு னின்றே
சமுசா ரத்துய ரேகாணேன்
றன்னிய னுன்றன் னியனு னெங்கோ
தனதறி யாமை யிறந்ததுவே. 154

தன்னிய னுன்றன் னியனு னெற்குத்
தான்செய வேண்டுவ தொன்றின்றுந்
தன்னிய னுன்றன் னியனு னின்றே
சார்வன முழுதுஞ் சார்ந்ததுவாந்
தன்னிய னுன்றன் னியனு னுலகிற்
சமமே தெனது திருத்திக்கே
தன்னிய னுன்றன் னியனுன் றன்னியன்
றன்னியன் மீளவு மீளவுமே. 155

ஓகோ புண்ணிய மோகோ புண்ணிய
முறுதியின் வாய்த்தது வாய்த்ததுவே
யோகோ விந்தப் புண்ணிய முடைநா
மோகோ புண்ணிய முடைநாமே
யோகோ சாத்திர மோகோ சாத்திர
மோகோ குருகுரு வோகோகோ
வோகோ ஞானம் மோகோ ஞானம்
மோகோ சுகமோ கோசுகமே. 156

இந்த வித்தியானந்தப் பிரகரணத்திலுள்ள வீரசுப்பையா சுவாமிகளால் மொழிபெயர்க்கப்பட்ட 20-வது செய்யுள் முதல் 31-வது செய்யுள் வரையுமுள்ள 12 செய்யுள்களும் திருப்தி தீபத்திலுள்ள ஷை கூறிய செய்யுள்களும் ஒரே பொருளையுடையனவாயிருத்தலாலும் ஓர் பொருளை ஒரே சொல்லால் அநுசந்தானஞ் செய்தல் எளிதாகையாலும் மூலத்தில் ஒரே சொல்லாயிருத்தலாலும் திருப்தி தீபத்திலுள்ள கவிகளையேயீண்டு சேர்த்து இந்தப் பிரகரணத்தில் உள்ள 12 கவிகளும் வேண்டியதில்லை என்று கருதி விடுவிக்கப்பட்டன.

(அ—கை)

இந்த அத்தியாயத்தின் பொருளை முடிக்கின்றார்.

பெயர்பெ றும்பிர மானந்த நூறனிற் பிறங்கும்
உயர்ந்த வித்தியா னந்தமாஞ் சதுர்த்தவோத் துரைத்தேம்
பயன தன்னுத யம்வரை பயிற்சியே பயில்க
செயம்வ ருங்குரு வீரசே கரன்திரு வருளால். 20

(ப—ரை) பிரமானந்தப் பெயர் பெறும் நூல் தனில் = பிரமானந்தமென்னும் நாமதேயத்தைப் பெற்ற கிரந்தத்தில், பிறங்கும் உயர்ந்த வித்தியானந்தம் ஆம் சதுர்த்தஓத்து உரைத்தேம் = விளங்கா நின்ற மேலான வித்தியானந்தமென்னும் நான்காவது அத்தியாயத்தைக் கூறினேம், பயனதன் உதயம்வரை பயிற்சியே பயில்க = வித்தியானந்தமாகிய பிரயோசனத்தினுற்பத்தி பரியந்தம் அப்பியாசத்தைச் செய்க, வீரசேகரன் குரு திரு அருளால் செயம் வரும் = (முன்பு கோவிலூர் ஆண்டவன் சன்னதியில் எழுந்தருளியிருந்து அனைவருக்கும் ஞானோபதேசஞ் செய்து இப்போது திருக்களரில் இலிங்கவடிவமாய் எழுந்தருளியிருக்கும்) வீரசேகரன் எனப்பெயரிய ஆசாரியரது அனுக்கிரகத்தால் வெற்றி உண்டாகும் எ—று.

பதினன்காவது வித்தியானந்தம் முற்றிற்று.

திருப்தி தீபத்திலிருந்து எடுத்து இவ்விடம் சேர்க்கப்பட்ட முழுக்கவிகள் 11-ம் அரைக்கவிகள் 3-ம் ஆக பதினன்கும் சேர்ந்து 34

ஆகக்கூடுதல் செய்யுள் 769.

௳

ஓம் தத் ஸத்.

கணபதி துணை.

# ஸ்ரீ பஞ்சதசி.

## பதினைந்தாவது பிரகரணம்

## * விஷயானந்தம்

(அ—கை)

ஐந்தாவது அத்தியாயத்தின் பிரதிபாதிக்கத்தகுந்த பொருளைக் கூறுகின்றார்.

இனியி வண்பிர மானந்தக் கூறுரு வினதாய்ப்
பனும்வி டயவா னந்தமே பகருவ மினிதாய்
மனுமஃ தெழில் வாயினல் வடிவதா மறையுந்
தனிய தனுடை யமிசமாந் தன்மையே சாற்றும். 1

(ப—ரை) இனியிவண் = இனிமேல் ஈண்டு. பிரமானந்தக்கூறு உருவினதாய் பனும்விடயவானந்தம் பகருவம் = பிரமானந்தத்தின் அம்சவடிவினதாய்ச் சொல்லும் விடயானந்தத்தைக் கூறுவாம். [அற்றேல் விஷயானந்தம் உலகில் பிரசித்தமாயிருத்தலால் மோக்ஷ சாஸ்திரத்தில் நிரூபித்தல் அசங்கதமாமென்று சங்கித்து அது உலகில் பிரசித்தமாயினும் பிரம்மானந்தத்தின் ஏகதேசமாதலால் பிரம ஞானத்தில் உபயோகியாம் ஆதலின் சங்கதமாமெனக் கூறுகின்றார்] இனிதாய்மனும் அஃது = இன்பவடிவாய் இருக்கும்

*விஷயத்தின் பிராப்தி முதலிய நிமித்தத்தால் அந்தர் முகமாகிய விருத்திகளில் பிம்பவடிவ பிரம்மானந்தத்தின் எந்தப் பிரதிபிம்பம் உண்டாகின்றதோ அதுவிஷயானந்தமெனப்படும். அதனைப் பிரதான மாகப் பிரதிபாதித்தலின் இப்பிரகரணம் விஷயானந்தமெனப்படும்.

அவ்விடயானந்தம், எழில் நல்வாயில் வடிவது ஆம் = பிரம்மானந்தத்தின் துவார வடிவமாம், அஃதாவது பிரம்மானந்தத்தின் ஞானத்திற்குச் சாதனமாம். [பிரம்மானந்தத்தின் ஏகதேசம் விஷயானந்தமென்பதில் பிரமாணமென்னையென்று சங்கித்துக் கூறுகின்றார்] மறையும் தனி அதனுடைய அமிசம் ஆம் தன்மை சாற்றும் = சுருதியும் விஷயானந்தம் ஒப்பற்ற பிரம்மத்தின் கூறுகுந்தன்மையைக் கூறுகின்றது எ—று.

சங்கதம் = பொருத்தம். ஏகாரம் இரண்டும் அசை. 1

(அ—கை)

அச்சுருதியையே பொருளாற் படிக்கின்றார்.

அகண்ட வேகர சான்மக மாயதி யாதோ
திகழ்ந்த வீதிதன் பரமவா னந்தமாய்த் திகழு
நிகழ்ந்த வன்னிய பூதங்க ளாயவை நெடிதே
புகழ்ந்த வீதுடை மாத்திரை தன்னையே புசிக்கும். 2

(ப—ரை) யாது அகண்ட ஏகரச ஆன்மகம் ஆயது = எந்த வஸ்து அபரிச்சின்ன அத்துவிதீய ஆனந்த வடிவமாக உள்ளதோ, திகழ்ந்த ஈது இதன் பரம ஆனந்தமாய்த் திகழும் = விளங்காநின்ற இவ்வஸ்துவே இச்சீவனது நிரதிசய சுக வடிவாய் விளங்கும், நிகழ்ந்த அன்னிய பூதங்கள் ஆயவை = விளங்காநின்ற ஏனைய பிராணிகள், நெடிதுபுகழ்ந்த ஈதுடை மாத்திரை தன்னையே புசிக்கும் = மேலானதாகக்கூறிய பிரத்தியக்கு வடிவ பிரம்மத்தினுடைய ஆனந்த லேசத்தையே உண்ணும், ஆசிரயத்துச் சீவிக்கின்றன என்பதுபொருள் எ—று. ஓ, ஏ—அசைகள். 2

(அ—கை)

இப்போது விஷயானந்தம் பிரம்மானந்தத்தின் லேசமாம் என்பதைத் தெரிவிக்கும் பொருட்டு அதன் உபாதியாயுள்ள அந்தக்கரண விருத்திகளைப் பகுக்கின்றார்.

சாந்தமே கோர மூடமே யென்னுத்
தனிமன விருத்திமூன் றாகும்
ஏந்துவை ராகம் பொறுமையௌ தார்ய
மென்பன சாந்தமாம் விருத்தி

மாந்தருக் காசை நேயமி ராக
மன்னுலோ பாதிய கோரம்
வீந்திடு மோகம் பயமுதன் மூட
விருத்தியென் றறைந்திடப் படுமே. 3

(ப—ரை) தனிமனவிருத்தி=ஒப்பற்ற அந்தக்கரண விருத்திகளானவை, சாந்தம் கோரம் மூடம் என்ற மூன்று ஆகும்=சாத்துவிகமான சாந்தவிருத்தியும் இராஜசமான கோரவிருத்தியும் தாமசமான மூடவிருத்தியும் என மூன்று விதமாம், [அந்தச் சாந்தியாதி விருத்திகளையே தெரிவிக்கின்றார்] மாந்தருக்கு ஏந்துவைராகம் பொறுமை ஔதார்யம் என்பன சாந்தமாம் விருத்தி = மனிதர்களுக்குச் சிறந்த வைராக்கியம் க்ஷமை உதாரம் என்னும் இக்குணங்கள் சத்துவ குணத்தின் பரிணமங்களான சாந்த விருத்திகளாம், ஆசை நேயம் இராகம் மன்னுலோபாதிய கோரம் = திருஷ்ணை சிநேகம் இராகம் பொருந்தாநின்ற லோபம் முதலிய குணங்கள் இரசோகுணத்தின் பரிணமங்களான கோரவிருத்திகளாம். வீந்திடும் மோகம் பயம் முதல் மூடவிருத்தி என்று அறைந்திடப்படும்=நன்ஞானத்தால் கெடுகின்ற விபரீத ஞானம் அச்சம் முதலியவை தமோகுணத்தின் பரிணமங்களான மூட விருத்திகளென்று சொல்லப்படும் எ—று.

ஏ—மூன்றும் அசைநிலைகள். 3

(அ—கை)

கூறப்பட்ட நானாவிதமான விருத்திகளிலும் பிரம்மத்தின் சைதன்னிய வடிவம் தோன்றுகிறதெனக் கூறுகின்றார்.

இவ்வெலா விருத்தி களிலெழிற் பிரமத்
தினதறி வியற்கையி னிழலாஞ்
செவ்விதிற் சாந்த மவற்றினிற் சுகமுஞ்
செறிதரு மிஃதுரு வுதொறும்
வவ்வுறும் பிரதி வடிவினை யென்ன
வழங்குறு மோத்துச்சூத் திரஞ்செய்
அவ்விறை யுவமை சூரிய னெனவா
மாதிய சூத்திரித் தனரே. 4

(ப—ரை) இவ் எலா விருத்திகளில்=கூறிய சாந்தியாதி சகல விருத்திகளிலும், எழில் பிரமத்தினது அறிவு இயற்கையின் நிழல் ஆம்=சிறந்த பிரம்மத்தின் சேதன சுபாவத்தின் பிரதிபிம்பம் உண்டாகும், [சாந்த விருத்திகளில் விசேஷத்தைக் கூறுகின்றார்] செவ்இதில் சாந்தமவற்றினில் = சிறந்த இந்த சாந்தம் முதலிய சாத்துவிக விருத்திகளில், சுகமும் செறிதரும் = ஆனந்தமும் பிரதிபிம்பிக்கும். [கூறிய பொருளில் சுருதி வாக்கியத்தைப் பொருளால் படிக்கின்றார்] இஃது உருவுதொறும் பிரதி வடிவினை வவ்வுறும் = இப்பரமான்மா அந்தக்கரணங்கள் தோறும் பிரதிபிம்பத்தை நண்ணும், என்று ஒத்து வழங்குறும்=என்று சுருதி கூறுகின்றது. [அதிலேயே வியாச சூத்திரத்தின் ஏகதேசத்தைப் படிக்கின்றார்] சூத்திரஞ் செய் அவ்இறை = பிரம்ம சூத்திர கருத்தாவாகிய பிரசித்தமான வியாச பகவான், சூரியன் உவமை எனவாம் ஆதிய=சூரியன் திருஷ்டாந்தம் ஆம் என்பன முதலியவைகளை, சூத்திரித்தனர் = சூத்திரமாகச் செய்தனர் எ—று. ஏ—அசை. 4

(அ—கை)

தனது வடிவத்தால் ஏகமாயிருக்கும் வஸ்துவிற்கு உபாதியின் சம்பந்தத்தால் நானாத்துவத்தில் சுருதியைப் படிக்கின்றார்.

ஒன்றதே பூத வாத்துமா பூத
மொவ்வொன்றி லொன்றுநீர் மதிபோல்
ஒன்றதாய்ப் பலவா யாகியே காணு
முதகம்புக் குறுமதி யிதுதான்
குன்றலா மறலி லினிதினிற் றெரியாக்
குளிர்நிரு மலசல மதிலோ
நன்றதா யிலங்கு மஃதெனச் சிவமு
நலிவிருத் திகளிலீர் வகையே. 5

(ப—ரை) ஒன்றதே பூத ஆத்துமா=ஒரே பரமான்மா, பூதம் ஒவ்வொன்றில்=ஒவ்வொரு பிராணிகளிடத்தும், ஒன்றும்=நிலைத்து இருக்கின்றது, நீர்மதி போல்=சல சந்திரனைப் போல், ஒன்றதாய் பலவாயாகியே காணும்=ஏகமாயும் நானாவாயும் பார்க்கப்படுகின்றது, (ஒரே சந்திரன் நிருபாதிகத் தன்மையால் ஏகமாயும் சோபாதிகத்

தன்மையால் நாஞவாயும் தோன்றுகிறது என்பது பொருள்) [அற்றேல் ஓரிடத்தில் பிரமத்தின் சேதன மாத்திரப் பிரதீதியும் மற்றோரிடத்தில் சேதன ஆனந்தங்களின் பிரதீதியும் ஆம் என்று இவ்விதம் விபாகஞ் செய்தல் பொருந்தாது. பிரம்மம் நிரவயமாதலால் என்ருசங்கித்து சந்திர திருஷ்டாந்தத்தால் பரிகரிக்கின்ருர்] உதகம் புக்குறு இதுமதி= சலத்தில் பிரவேசிக்கும் பிரசித்தமான இந்தச் சந்திரன், குன்றல் ஆம் அறலில் = கலங்கிய ஜலத்தில், இனிதினில் தெரியா = நன்ருய்த் தோன்ருவாம், குளிர் நிருமல சலமதில் நன்றதாய் இலங்கும் = சீதள சொச்ச நீரில் பஷ்டமாகத் தோற்றும், [கூறிய பொருளை தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்ருர்] அஃது என = அதுபோல், சிவமும் நலி விருத்திகளில் = பிரம்மமும் விநாசமாகின்ற அந்தக்கரணவிருத்திகளில், ஈர்வகை = இரண்டு விதமாம் எ—று.

தான், ஓ—அசை நிலைகள். 5

(அ—கை)

அதனையே உபபாதனஞ் செய்கின்ருர்.

கோர மூடந் தமினே குலவு மலினத் தானே
யாரு மானந் தாம்ஸ மதுவு மறைவ தாகு
நேருங் கிஞ்சின் மலமி னீர்மை யால வண்டான்
சேருஞ் சேத ஞம்ஸஞ் சேருஞ் சாயை தானே. 6

(ப—ரை) கோர மூடந்தமின் = இராஜசதாமசங்களான கோர மூடவிருத்திகளில், குலவு மலினத்தான் = மலினத்தன்மை இருப்பதால், ஆரும் ஆனந்த அம்ஸம் மறைவது ஆகும் = பரிபூரண சுகத்தின் அம்ஸம் மறைந்து போகும், கிஞ்சில் மலம் இல் நேரும் நீர்மையால் = சொற்ப சொச்சத்தன்மை சம்பவித்தலால். சேரும் அவண் சேதஞம்ஸம் சாயை சேரும் = பாப வசத்தாற் பொருந்தாநின்ற அக்கோர மூட விருத்திகளில் சைதன்னியாம்ஸத்தின் பிரதிபிம்பம் உண்டாகும் எ—று.

தான், தான், உம், ஏகாரம் மூன்றும் அசை நிலைகள்.

அது பகுதிப்பொருள் விகுதி. 6

(அ—கை)

அற்றேல் சந்திரனுக்கு உபாதியாயுள்ள நீர் இருவிதமாய்

இருத்தலால் ஓரம்ஸத்தின் தோற்றம் பொருந்தும். பிரகிருதத்திலோ உபாதியாயுள்ள அந்தக்கரணம் ஒன்றுவதால் ஓரம்ஸத்தின் தோற்றம் பொருந்தாது என்றாசங்கித்து வேறு திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

அலது நிமல நீரா மதினும் வன்னி யின்றன்
உலவுஞ் சூடு காந்தி யுலவு றுதங் கதுபோன்
றிலகு சித்தின் மாத்தி ரத்தி னெழுச்சி யேயாம்
வலிய காட்ட மதிலோ வனியின் றுக வொளிர்வே. 7

(ப—ரை) அலதும் = அன்றியும், நிமல நீரதின் = சொச்ச சலத்தில், வன்னியின் தன் சூடு உலவும் = அக்கினியின்து உஷ்ணம் தோன்றும், அங்கு காந்தி உலவுறுது = அந்நீரில் பிரகாசம் தோன்றாது, அதுபோன்று இலகுசித்தின் மாத்திரத்தின் எழுச்சியே ஆம் = அதுபோல் கோரமூடவிருத்திகளில் விளங்காநின்றசைதன்னிய மாத்திரத்தின் தோற்றமாம், ஆனந்தத்தின் தோற்றமின்று எ—று.

நாலாவது வரி பிற்கவியோடு அன்வயமாம்.

உம் பிரித்துக் கூட்டப்பட்டது.

ஆம்—அசை நிலை. 7

(அ—கை)

இப்போது சாந்தவிருத்திகளில் சித்தும் ஆனந்தமும் தோற்றுவதில் வேறு திருஷ்டாந்தம் கூறுகின்றார்.

என்னு மிரண்டு மெழல்போ லேயே சாந்த மதினே
மன்னி யறிவின் பெழலாம் வத்து வியலைப் பற்றிச்
சொன்ன வுபயங் களின்கண் டுலியம் விவத்தை யாகு
நன்ன ரனுப வம்போ னணுகு நேமந் தானே. 8

(ப—ரை) வலிய காட்டமதிலோ = உறுதியான கட்டையிலோ, வனியின்தாக ஒளிர்வு என்னும் இரண்டும் எழல்போல் = அக்கினியின் உஷ்ணமும் பிரகாசமும் ஆகிய இரண்டும் தோற்றுதல் போல், சாந்தம் அதின் மன்னி அறிவு இன்பு எழல் ஆம் = சத்துவத்தின் பரிணாமமான சாந்தவிருத்தியில் நெருங்கி சிதானங்கள் உதயமாகின்றன, [ஆனால் இவ்வாறான வியவஸ்தை எதனால் செய்யப்பட்டது என்றாசங்கித்துக்

கூறுகின்றார்]வத்து இயலைப்பற்றி விவத்தை = பொருளின் தன்மையை அநுசரித்து செய்யப்படும் வியவஸ்தையானது, சொன்னவுபயங்களின் கண்துலியம் ஆகும் = சொல்லிய திருஷ்டாந்த தார்ஷ்டாந்தமாகிய இரண்டின்கண்ணும் சமானமாம், [அதில் நியாமகம் என்னையென்று சங்கித்துக் கூறுகின்றார்] நன்னர் அனுபவம்போல் நேமம் அணுகும் = நல்ல அநுபவத்தின் அனுசாரமாகவே நியாமகம் கற்பிக்கப்படுகின்றது எ—று. வன்னி என்பது வனி என இடைக்குறையாயிற்று.

ஏகாரம் நான்கும், தான்—அசைநிலைகள். 8

(அ—கை)

அனுபவத்தையே காண்பிக்கின்றார்.

காண லின்று கோரமூட மீதிலின்பக் காட்சி தான்
காணுமோ ரிடத்தோர் சாந்தமூடு மின்பக் காட்சியே
பூணு மிற்பூ வாதியூடு காம மேலப் போதவண்
பேணு ராசசேச்சை கோர மாத லாலின் பில்லையே. 9

(ப—ரை) கோரம் மூடம் ஈதில் = கோரமூட விருத்திகளில், இன்பக்காட்சி காணல் இன்று = சுகாநுபவம் பார்க்கப்படுவதில்லை, [சாந்த விருத்தியிலும் எந்த சுகப் பிரகாசம் உளதோ அதுவும் ஓரிடத்து ஒரு சுக விசேஷமாகிறது எனக் கூறுகின்றார்] சாந்தமூடும் = சாந்த விருத்தியிலும், ஓரிடத்து ஓர் இன்பக்காட்சி காணும் = சிலவிடத்து ஓர்சுக விசேஷம் காணப்படுகின்றது, (பெரிய சிறிய விஷயங்களின் அடைவு வடிவ வேறு வேறு இடங்களில் சுகத்தின் அதிகமும் குறைவும் காணப்படுகின்றன) என்பது பொருள். [முன்சொல்லிய கோர மூடவிருத்திகளில் சுகத்தின் அபாவத்தையே சுட்டிக் காட்டுகின்றார்] இல்பூ ஆதியூடு காமம் பூணுமேல் = கிரகம் க்ஷேத்திரம் முதலிய விஷயங்களில் இச்சையுண்டாகுமேல், அப்போது அவண் பேணு ராசச இச்சை = அப்பொழுது அவ்விடத்தில் கருதப் படுகின்ற இரஜோகுணத்தின் பரிணாமமான இச்சையானது, கோரம் ஆதலால் இன்பு இல்லை = கொடுமை வடிவமாயிருத்தலால் சுகம் இன்றாம் எ—று.

தான், ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். 9

(இதுவுமது)

சித்தியாமோ வின்றோ வென்று
வொன்றுந் துன்பஞ் சேணது
சித்தியாதே லோங்குந் தண்டிற்
சீற்ற மாறிற் றுவேடமாஞ்
சத்தி யின்றேன் மாற்றவாம்
விஷாத மஃதோ தாமத
மெத்த துன்பங் கோபமாதி
யின்ப சங்கை மேவுமோ. 10

(ப—ரை) சித்தி ஆமோ இன்றோ என்று துன்பம் ஒன்றும்= விஷயஜன்னிய சுகம் சித்திக்குமோ சித்திக்காதோ என்று துக்கம் உண்டாம், சித்தியாதேல் = சுகம் சித்திக்காவிடின், அதுசேண் ஓங்கும்= அத்துக்கம் மிகவும் அதிகரிக்கும், தண்டில் சீற்றம்=சுகத் திற்குத் தடை ஏற்படுமேல் குரோதமுண்டாம்.[சுகத்தின் அபாவத்தில் வேறு காரணத்தையுங் கூறுகின்றார்] மாறில் துவேடம் ஆம்=அல்லது பிரதிகூலத்தால் துவேஷமுண்டாம், (அவ்விடத்தில் பிரதிகூலதுக்கம் இருத்தலால்) என்பது பொருள். [பரிகாரஞ் செய்யமுடியாவிடின் விஷாதமுண்டாம், அதுவும் தமோகுணத்தின் பரிணாமமாவதால் அதில் சுகம் இல்லை எனக் கூறுகின்றார்] மாற்ற சத்தி இன்றேல்= தடையை நிவர்த்திக்க ஆற்றல் இல்லையாயின், விஷாதம் ஆம் = துக்கம் உண்டாம், அஃது தாமதம் = அந்த விஷாதம் தமோகுணத்தின் பரிணாமமாம், கோபம் ஆதி மெத்த துன்பம் ஆம் = குரோதம் முதலியவைகளில் மகத்தான துக்கமாம், இன்ப சங்கை மேவுமோ= சுகத்தின் சந்தேகமுமின்றாம் எ—று. 10

ஆம் ஈரிடத்தும் கூட்டப்பட்டது.

(இதுவுமது)

வெட்டவா கிடைப்பிற் சாந்தமா மகிழ்ச்சி
விருத்தியுண் டாண்டின்ப மகத்தாந்
தொட்டயில் காலோ மகத்தரங் கிடைப்பத்
தொடங்குகாற் கிஞ்சிலே யாகும்

விட்டிடின் மகத்தின் றமமெனு மதனே
வித்தியா னந்தமீ துரைத்தேம்
பட்டவா கமையௌ தாரிய மதனிற்
படுத்திடிற் சினமுமுலோ பமுமே. 11

(ப—ரை) வேட்டவா கிடைப்பிற் = விரும்பியவண்ணம் வஸ்துக்கள் கிடைப்பின், சாந்தம் ஆம் மகிழ்ச்சி விருத்தி உண்டு = சத்துவ குணத்தின் பரிணும வடிவ சாந்தமாகிய சந்தோஷ வடிவ அந்தக்கரணவிருத்தி உண்டாகின்றது, ஆண்டு மகத்து இன்பம் ஆம் = அவ்விடத்தில் அதிகமான ஆனந்தம் உண்டாகின்றது, தொட்டு அயில்காலே = பொருந்தி அனுபவிக்குங் காலத்திலோ, மகத்தரம் = மகத்தினுமதிகமான சுகமாம், கிடைப்பத் தொடங்குகால் = இஷ்ட வஸ்துவின் பிராப்தியில், கிஞ்சிலே ஆகும் = அற்ப சுகமேயாம், விட்டிடின் = விராக பூருவகம் விஷயங்களைத் தியாகஞ் செய்யின், மகத்தின் தமம் = மகத்தரத்தினும் அதிக சுகமாம், எனும் அதனை வித்தியானந்தமீது உரைத்தேம் = என்னுமிவ் விஷயத்தை வித்தியானந்தமெனப்பெயரிய 14-வதுபிரகரணத்தில் கூறிவந்துளேம், கமைஔதார்யம் அதனில் = பொறுமையும் உதாரமுமாகிய இவைகளில், சினமும் உலோபமும் படுத்திடில் = முறையே குரோதமும் லோபமும் நீங்குதலால், பட்டவா = அவ்வாறேயாம், அதாவது மகத்தம சுகமாம் எ—று.

வேட்ட என்பது எதுகையைக் குறித்து வெட்ட எனக்குறுகிற்று.

பட்டம் = வழி

11

(இதுவுமது)

எவ்வெச் சுகமோ வஃதஃதே
யினிய பிரம நிழலுதலால்
ஒவ்வு முளிற்சேர் விருத்திகளி
லுதன்றன் றடையி லெழினிழலாஞ்
செவ்வை யிருப்பொ டறிவுசுக
மெனமூன் றியல்பு சிவத்தினுக்காம்
அவ்வுண் மையதா மிருச்சிலையி
லனிய மிரண்டு மாகாதே 12

(ப—ரை) எவ் எவ் சுகமோ அஃது அஃது=உலகில் யாதொரு யாதொரு ஆனந்தமுளதாமோ அவ்வவ்வானந்தம், நிழலுதலால் இனிய பிரமமே = ஆன்மா பிரதிபிம்பித்தலால் ஆனந்தவடிவ ஆன்மாவேயாம், அஃதாவது அது அது பிரமானந்தத்தின் அம்ஸமாம், [இவ்வாறு பொறுமை முதலிய அந்தர்முக விருத்திகளில் பிரமானந்தம் பிரசித்தமாமெனக் கூறுகின்றார்] ஒவ்வும் உளில் சேர் விருத்திகளில்= பொருந்தா நின்ற அந்தர் முக விருத்திகளில், உதன்றன்=இவ் ஆன்மாவினுடைய, தடை இல் எழில் நிழல் ஆம்=விக்கினமின்றி அழகிய பிரதிபிம்பமுண்டாகும், [இப்போது யாண்டும் பிரம்ம சொரூபத்தின் அநுபவத்தைக் காண்பிக்கும் பொருட்டு அதன் சொரூபத்தை நினைப்பூட்டுகின்றார்] சிவத்தினுக்கு=பிரம்மத்திற்கு, செவ்வை இருப்பொடு அறிவு சுகம் என மூன்று இயல்பு ஆம்= சிறந்த சத்தும் சித்தும் ஆனந்தமும் என மூன்று வடிவமாம், மிருத் சிலையில் அவ் உண்மையது ஆம்=மண் கல் முதலியவைகளில் பிரமத்தின் சத்து மாத்திரம் தோற்றும், அனியம் இரண்டும் ஆகாது= சித்தும் ஆனந்தமும் தோற்றாது எ—று. ஏ—அசை.

மிருத்சிலை மிருச்சிலை என வியாகரண விதியால் புணர்ந்தது. 12

(இதுவுமது)

கோர மூடமதி விருத்தி மீதிலுள
தறிவி ரண்டுமே குலாவிடும்
சேரு மூன்றும்வெளி சாந்த மீதிவகை
சேர்ந்த வொண்சிவமை செப்பினும்
சேர லின்றியது ஞான யோகமதினு
லிரண்டு முனஞ் செப்பினும்
ஓரல் யோகமுத லோத்திரண்டி னனி
ஞான மானதையு மோர்கவே. 13

(ப—ரை) கோர மூட மதி விருத்தி மீதில் = கோரமும் மூடமுமான அந்தக்கரண விருத்திகளில், உளது அறிவு இரண்டும் குலாவிடும் = சத்தும் சித்துமாகிய இரண்டும் தோற்றும், சாந்தம் மீது மூன்றும் வெளி சேரும்=சாந்த விருத்தியில் சச்சிதானந்தம் மூன்றும் தோற்றும், [இவ்வாறு பிரபஞ்ச சகித பிரம்மம் கூறப்பட்டதெனக் கூறுகின்றார்] இவ்வகை சேர்ந்த ஒண் சிவம்

செப்பினும்=இந்தப் பிரகாரம் பிரபஞ்ச விசிட்டப் பிரமத்தைக் கூறினும், [நிஷ்பிரபஞ்சப் பிரமம் எவ்வாற்ருல் அறியப்படும் என்ருசங்கித்துக் கூறுகின்ருர்] சேரல் இன்றியது ஞான யோகமதினல்= பிரபஞ்சத்தோடு சேராத பிரமம் ஞானத்தாலும் யோகத்தாலும் அறியப் படும், இரண்டும் முனம் செப்பினும்=ஞானத்தையும் யோகத்தையும் பூருவம் கூறினும், [யாண்டு சொல்லப்பட்டன என்ருசங்கித்து யோகம் முதலாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டதெனக் கூறுகின்ருர்] முதல் ஓத்து யோகம் ஓரல்=யோகானந்தமென்னும் முதல் அத்தி யாயத்தில் யோகத்தின் விசாரம் உளது, [அதன் பின்னுள்ள இரு அத்தியாயங்களில் ஞானம் சொல்லப்பட்டதெனக் கூறுகின்ருர்] இரண்டில் நனி ஞானம் ஆனதையும் ஓர்க=ஆன்மானந்தம் அத்வை தானந்தம் என்னும் இரண்டு அத்தியாயங்களில் மிகவும் ஞானம் சொல்லப்பட்டமையை அறிக எ—று.

ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். 13

(அ—கை)

அற்றேல் சச்சிதானந்தங்கள் பிரமத்தின் வடிவமாமேல் மாயைக்கு யாது வடிவம் என்ருசங்கித்துக் கூறுகின்ருர்.

சடம சத்துத் துன்பமென விம்மூன்று
மாயையுருச் சசவி ஷாணங்
கொடும சத்துச் சடங்காட்டங் கன்முதலி
லுளதாகுங் கோர மூடச்
சடைம தியிற் றுன்பமென மாமாயை
விரிந்திலகுஞ் சாந்த மாதி
அடர்ம தியின் விருத்தியினெற் றுமையானே
மிசிரசிவ மறைந்த தாமே. 14

(ப—ரை) சடம் அசத்து துன்பம் என இம் மூன்றும் மாயை உரு= சடமும் அநிருதமும் துக்கமும் ஆகிய மூன்றும் மாயையின் வடிவமாம், சசவிஷாணம் அசத்து கொளும்=முயற்கோடு மாயையின் துச்சவடிவ அசத்துவத்தை ஏற்கும், காட்டம் கல் முதலில் சடம் உளதாகும்=கட்டை சிலை முதலியவைகளில் மாயையின் சடத்துவம் இருக்கும், [துக்கம் எவ்விடத்தில் உளது என்ருசங்கித்துக்

கூறுகின்றார்]சடைகோரமுடமதியில் துன்பம் = தொகுதியான கோரமும் மூடமுமாகிய புத்தி விருத்திகளில் மாயையின் துக்க வடிவமாம், [இவ்வாறு எல்லாவிடங்களிலும் மாயை தோற்றுகிறதெனக் கூறுகின்றார்] என மாமாயை விரிந்து இலகும் = இவ்விதம் பெரிய மாயை விஸ்தாரமாய் விளங்கும், [சாந்தம் முதலிய விருத்திகளில் பிரமம் கலந்திருப்பதில் காரணமென்னேயெனிற் கூறுகின்றார்] சாந்தம் ஆதி அடர் மதியின் விருத்தியின் ஒற்றுமையான் = சாந்தம் முதலிய நெருங்கிய புத்தி விருத்தியோட பேதமாயிருத்தலால், மிசிரசிவம் அறைந்தது ஆம் = விசிட்டப் பிரமம் கூறப்பட்டது எ—று.

ஏகாரம் இரண்டும் அசை.

கொளும் என்பது எதுகை நோக்கி கொடும் எனத்திரிந்தது. 14

(அ—கை)

இவ்வாறு விசிஷ்டப் பிரமத்தைப் பிரதிபாதித்தல் எதன் பொருட்டு என்றுசங்கித்து பிரம்மத்தினது தியானத்தின் பொருட்டு எனக் கூறுகின்றார்.

இவ்வகை நிலைபெற வீண்டு யாவன்றான்
செவ்விய பிரமத்தின் சிந்தை வேட்பனோ
அவ்விவ னரசிருங் காதி காதியெஞ்
சவ்வறி வுளபடி யனுசந் திக்கவே. 15

(ப—ரை) இவ்வகை நிலை பெற = இவ்வாறு பிரம்ம மாயைகளின் சொருபம் ஸ்திதியடையவே அஃதாவது சித்திக்குங்கால், ஈண்டு யாவன் செவ்விய பிரமத்தின் சிந்தை வேட்பனோ = இவ்வுலகில் எப்புருடன் சிறந்த பிரமத்தின் தியானத்தை விரும்புவனோ, அவ் இவன் = அந்த இப்புருடன், நரசிருங்க ஆதிகாதி = மனிதக்கோடு முதலியவற்றைத்தள்ளி, எஞ்சு = எஞ்சிய ஏனைய கடாதி வஸ்துக்களில், உளபடி அவ்அறிவு அநுசந்திக்க = யோக்கியப்படி அந்தப் பிரமத்தைத் தியானஞ் செய்க எ—று.

மனிதக்கோடு முதலியவற்றை ஒழித்து வேறிடத்தில் தியானஞ் செய்யத்தக்கது என்பது பொருள். 15

தான், ஏ—அசைநிலைகள்.

(அ—கை)

வேறிடத்தில் என்று சொல்லப்பட்டது வேறிடமாவது யாது அதில் எவ்வாறு தியானஞ் செய்வது எனிற் கூறுகின்றார்.

உபல முதலி ஞம வுருவ மிரண்டை யொழித்தே
நிபமில் சத்தை யேதா னினைக விடரை நீக்கிச்
சபல கோர மூட மதியின் விருத்தி தமிலே
உபமை யிலதா முண்மை யுணர்வை யோர்த
[லுரித்தே. 16

(ப—ரை) உபலம் முதலில் = கல் முதலியவற்றில், நாம உருவம் இரண்டை ஒழித்து = கல் என்பன முதலிய நாமங்களையும் கடினத்தன்மை முதலிய வடிவங்களையும் விட்டு, நிபம் இல் சத்தையே நினைக = உவமையற்ற இருப்பு மாத்திரத்தைத் தியானஞ் செய்க, [கோர மூடபுத்தி விருத்திகளில் துக்கத்தை விட்டு இருப்பையும் விளக்கத்தையும் சிந்தனை செய்க எனக் கூறுகின்றார்] சபல மதியின் கோர மூட விருத்திதமில் = சஞ்சலமான புத்தியின் கோர மூட விருத்திகளில், இடரை நீக்கி = துக்கத்தைப் பரித்தியாகஞ் செய்து, உபமை இலதாம் உண்மை உணர்வை ஓர்தல் உரித்து = இணையற்ற இருப்பையும் விளக்கத்தையும் சிந்தித்தல் தகுதியாம் எ—று.

ஏகாரங்கள் மூன்றும், தான்—அசை நிலைகள். 16

(அ—கை)

சாத்துவிக விருத்திகளில் சச்சிதானந்தங்கள் மூன்றும் தியானஞ் செய்யத் தக்கனவெனக் கூறுகின்றார்.

நவில்வகை சச்சிதா னந்த மூன்றையுஞ்
செவியசாந் தங்களிற் சிந்தை யேசெய
முவகையிச் சிந்தைகண் முறையிற் கீழொடுஞ்
சவிசெயு மத்திமோத் தமுமு மாகுமே. 17

(ப—ரை) செவிய சாந்தங்களில் = சிறந்த சாத்துவிக விருத்திகளில், நவில் வகை = கூறிய வண்ணம், சச்சிதானந்தம் மூன்றையும் சிந்தைசெய = இருப்பு விளக்கம் இன்பம் மூன்றையும் தியானஞ் செய்க,

[இத்தியானங்கள் சமானமாமோவெனின் அன்றெனக் கூறுகின்றார்] சவிசெயும் மூவகை இச்சிந்தைகள் = சிறப்பைச் செய்கின்ற மூன்று விதமான இத்தியானங்கள், முறையில் கீழொடு மத்திம உத்தமமும் ஆகும் = கிரமமாக கனிஷ்டமும் மத்திமமும் உத்கிருஷ்டமும் ஆம் எ—று. ஏ—இரண்டும் அசை

மூவகை என்பது முவகை என எதுகை நோக்கி வந்தது.

அஃதாவது:- கடாதிகளில் பிரமத்தின் சத்துரூப மாத்திரத்தைத் தியானஞ் செய்தல் கனிஷ்ட(அதம)த்தியானமாம், கோர மூட விருத்திகளில் சத்து ரூபத்தையும் சித்து ரூபத்தையும் தியானஞ் செய்தல் மத்திமத்தியானமாம், சாந்த விருத்திகளில் சத்து சித்து ஆனந்தம் என்னும் மூன்றையுந் தியானஞ் செய்தல் உத்தமத்தியானமாம். 17

(அ—கை)

இப்போது நிர்க்குணப் பிரமத்தியானத்தில் அதிகாரமில்லாத புருடர்களின் அநுக்கிரகத்தின் பொருட்டு விசிட்டப் பிரம்மத்தின் தியானத்தில் அதிகாரமாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

மந்தற்குத் தொழிலினை வழங்கு ஞான்றினுஞ்
சிந்தனை மிசிரமாஞ் சிவத்தின் மேலதாய்
இந்தவா புகலவே யிவண் விடயவா
னந்தமா கியவிது நாட்ட லாயதே. 18

(ப—ரை) மந்தற்கு = மந்த மதியினையுடைய புருடனுக்கு, தொழிலினை வழங்கு ஞான்றினும் = வியவகாரஞ் செய்யுங்காலத்திலும், மிசிரம் ஆம் சிவத்தின் சிந்தனை மேலதாய் புகலவே = விசிட்டப் பிரமத்தின் தியானத்தை உத்கிருஷ்டமாய்க் கூறுதற் பொருட்டே, இவண் விடய ஆனந்தமாகிய இது = ஈண்டு விஷயானந்தம், இந்தவா நாட்டல் ஆயது = இவ்விதம் நிறுவப்பட்டது, கூறப்பட்டதென்பது பொருள் எ—று.

ஏ—அசை.

எந்த மந்த மதியுடைய அதிகாரிக்கு விசாரத்தின் வலியால் விருத்தி முதலிய பிரபஞ்சத்தினை நிஷேதித்து சச்சிதானந்தப் பிரம்மத்தினை அறிதற்குச் சத்தியில்லையோ அவன் விருத்தி முதலிய பிரபஞ்ச வியவகாரத்தில் சச்சிதானந்தத்தினைக் கிரமமாகச் சிந்தித்துப்

பின் அப்பியாச பலத்தால் எங்கும் சச்சிதானந்தப் பிரம்மத்தினை அறியக் கூடும். இக்காரணத்தால் இங்கு விஷயானந்தம் சொல்லப் பட்டிருக்கிறதென்பது கருத்து. 18

(அ—கை)

இவ்விதம் விருத்தியோடு கூடிய தியானத்திரயத்தைக் கூறி விருத்தியற்ற தியானத்தைக் கூறுகின்றார்.

நொதுமலினோ மதிவிருத்தித் தளர்ச்சியினால்
வாதனையி னுவலா னந்தத்
ததிகமகா வுத்தமஞ்சிற் சிந்தனநால்
வகைத்தியான மறைந்திட் டேமால்
விதிசுதியா னமன்றுணர்வு யோகங்க
ளாற்பிரம வித்தை யஃதே
முதுசுதியா னத்தொருமை பெறுமுளத்தில்
வித்தையதூஉ முதிரு மாமே. 19

(ப—ரை) நொதுமலினோ மதி விருத்தி தளர்ச்சியினால் = உதாசீன அவஸ்தையின்கண்ணோ புத்தி விருத்திகளின் சிதிலத் தன்மையால், நுவல் வாதனையின் ஆனந்தத்து சிற்சிந்தனம் = சொல்லானின்ற வாசனானந்தத்தில் பிரம்மத்தைத் தியானித்தல், அதிக மகா உத்தமம் = இந்த மூவித தியானத்தினும் மிகவும் அத்தியந்தம் மேலானதாம், [கூறிய பொருளை முடிக்கின்றார்.] நால்வகைத் தியானம் அறைந்திட்டேம் = நான்கு வித தியானத்தைக் கூறினேம், [இந்த பிரம சிந்தனம் தியானத்தின் அவாந்தர பேதமாம் எனின் அன்றெனக் கூறுகின்றார்] விதிசுதியானம் அன்று = கூறிய பிரம்ம சிந்தனம் சாஸ்திர முறையை அநுசரித்துள்ள நல்ல தியானம் அல்ல, [அப்படியாயின் இது என்னையென்றாசங்கித்துக் கூறுகின்றார்] உணர்வு யோகங்களால் அஃது பிரம வித்தையே = ஞானவடிவத்தாலும் யோக வடிவத்தாலும் அது பிரம்மஞானமேயாம், [இப்பிரமவித்தை எப்படி உற்பன்னமாம் என்றாசங்கித்துக் கூறுகின்றார்] முது சுதியானத்து = நீண்ட காலமாகச் செய்கின்ற நல்ல தியானத்தால், ஒருமை பெறும் உளத்தில் = ஏகாக்கிரத்தையடைந்துள்ள சித்தத்தில், வித்தையது முதிரும் ஆம் = பிரம ஞானம் திடமாகும் எ—று.

நான்குவித தியானமாவன:- கல் முதலியவற்றில் சத்து ரூபத்தியானமும், கோர மூட விருத்திகளில் சத்துரூப சித்துரூபங்களின் தியானமும், சாந்த விருத்தியில் சத்துரூப சித்துரூப ஆனந்த ரூபங்களின் தியானமும், உதாசீன அவஸ்தையில் அவிருத்திகத் தியானமுமாம். ஆல், ஏ—அசை. 19

(அ—கை)

பிரம சிந்தனம் பிரம வித்தையாமென்பதில் ஏதுவைக் கூறுகின்றார்.

வித்தையின்க ணுண்மையறி வானந்த
  மகண்டமதாம் விமல வேக
ஒத்தரச வடிவதனை மிலைந்திலங்கு
  மயலாயோ வொளிரா பேதம்
வைத்துறுமு பாதியின்றன் வர்ச்சனத்தாற்
  சாந்தமொடும் வயங்குங் கோரம்
சத்துபல முதலியவும் பேதகவு
  பாதிகளாய்ச் சமத மாமே. 20

(ப—ரை) வித்தையின்கண் உண்மை அறிவு ஆனந்தம்=பிரம ஞானத்தில் சச்சிதானந்தங்கள் மூன்றும், விமல ஒத்த அகண்ட மது ஆம் ஏகரச வடிவதனைமிலைந்து=பரிசுத்தமாய் சமமாயுள்ள அகண்டை கரசவடிவத்தையடைந்து, இலங்கும்=விளங்கும், பேதம் வைத்துறும் உபாதியின்றன் வர்ச்சனத்தால்=பேதத்தைச் செய்யும் உபாதிகளின் விடுபாட்டால், அயலாய் ஒளிரா=பேதமாய் விளங்கா, [பேதத்தைச் செய்யும் உபாதியின் விடுபாட்டால் என்று சொல்லப் பட்டது அந்த பேதத்தைச் செய்யுமுபாதிகளையே கூறுகின்றார்] சாந்தம் ஒடு வயங்கும் கோரம்=சத்துவ குணத்தின் பரிணாமமான சாந்தியாதி விருத்திகளும் விளங்கா நின்ற இரஜோகுணத்தின் பரிணாமமான கோர விருத்திகளும், சத்து உபலம் முதலியவும்= கெட்டியான கல் முதலியவைகளும், பேதக உபாதிகளாய் சமதம் ஆம்=ஆன்மாவை பேதப்படுத்துமுபாதிகளாய்க் கருதப்பட்டுள்ளன எ—று.

சம்மதமென்பது சமதமென இடைக்குறையாயிற்று.
ஏ, ஓ—அசை. 20

(அ—கை)

இவ்வுபாதிகளின் நீக்கம் எவ்வுபாயத்தல் ஆம் என்றுசங்கித்துக் கூறுகின்றார்.

அருமியோ கத்தேனும் விவேகத்தேனு மகலலுபா
திகளிவைக்கா மவிருந் தானே
நிருபாதி யத்துவிதப் பிரமதத்வ நிகழுங்காற்
றிரிபுடிதா னிகழ்வ தின்றாம்
பிரிவிலதாற் பூமாவா னந்தம் பேசும்
பிரமசுகப் பேர்நூற்கண் விடயானந்த
ஒருவோத்தைந் துரைத்தனமிவ் வாயிலாக வுட்பிரவே
சித்தினிதா யுயர்ந்து வாழ்க. 21

(ப—ரை) அரும் யோகத்தேனும்=பெறுதற்கரிய யோகத்தாலாவது, விவேகத்தேனும்=விசாரத்தாலாவது, உபாதிகளிவைக்கு அகலல் ஆம்=சாந்தி முதலிய இவ்வுபாதிகளுக்கு நிவர்த்தியுண்டாம், [திரண்ட பொருளைக் கூறுகின்றார்] தானே அவிரும் நிருபாதி அத்துவிதப்பிரமதத்வம் நிகழுங்கால்=சுயம் பிரகாசமாய் உபாதியற்றதாய் அத்துவிதமாயுள்ள பிரமதத்துவம் விளங்கும்போது, திரிபுடி நிகழ்வது இன்றாம்=திரிபுடி தோற்றுவதில்லை, பிரிவு இலதால்=திரிபுடியின் தோற்றமின்மையால், பூமா ஆனந்தம் பேசும்=அபரிச்சின்ன வியாபகப் பிரம்மம் சுகமென்று சொல்லப்படுகின்றது, [கிரந்தத்தை முடிக்கின்றார்] பிரம சுகப் பேர் நூற்கண்=பிரமானந்தம் எனப் பெயரிய கிரந்தத்தில், ஒரு விடயானந்த ஐந்து ஓத்து உரைத்தனம்=ஒப்பற்ற விஷயானந்தமென்னும் ஐந்தாவது அத்தியாயத்தைக் கூறினேம், இவ்வாயிலாக உள் பிரவேசித்து=இந்த விஷயானந்தமாகிய மார்க்கத்தால் ஆன்ம வடிவ சொரூப சுகத்தில் நுழைந்து, இனிதாய் உயர்ந்து வாழ்க=ஆனந்தமாய் மேலாய் சீவிக்குக எ—று.

தான்—அசை. 21

(அ—கை)

பிரமவா னந்தமாம் பெரிய வீதினல்
அரியரன் சந்தத மடைக வேயுவப்
பொருதமை யடைமல மொழிம னத்தராஞ்
சருவவின் னுயிரையுஞ் சார்ந்து காக்கவே. 22

(ப—ரை) பெரிய பிரம ஆனந்தம் ஆம் ஈதினால்=மேலாகிய பிரம்மானந்தமென்னுமிதனால். அரி அரன் சந்ததம் உவப்பு அடைக=விஷ்ணுவும் சிவனும் எப்போதும் பிரீதியை அடைக, ஒரு தமை அடை=ஒப்பற்ற தம்மை சரணமாக அடைந்துள்ளவரும், மலம் ஒழி மனத்தர் ஆம்=சுத்த மனதுடையவருமாகிய, சருவ இன் உயிரையும்=எல்லாப் பிராணிகளையும், சார்ந்து காக்க=(நெருங்கி) அணைத்து இரக்ஷிக்குக எ—று. 22

ஏ, ஏ—அசைநிலைகள்.

பதினைந்தாவது விஷயானந்தம் முற்றிற்று.

(அ—கை).

ஆனந்த பஞ்சகத்தின் மொழி பெயர்ப்பாசிரியர் தமது குருமூர்த்தியைத் துதிக்கின்றார்.

வேத நாயக னாகிய வீரசே கரன்றன்
பாத தாமரை யகர்நிசி நெஞ்சினிற் பதித்தே
நீதி யேயுற நிகழ்த்துமா னந்தபஞ் சகத்தைச்
சோதி யாமவன் பாதவர்ப் பணஞ்செய்து துதிப்பாம். 23

(ப—ரை) வேதநாயகனாகிய வீரசேகரன் பாத தாமரை=மறைகளுக்குத் தலைவனாகிய விநாயகப் பெருமானது திருவுருவமாகிய வீரசேகரனென்னும் குருமூர்த்தியின் திருவடிக் கமலங்களை, அகர் நிசி நன்கு நெஞ்சினில் பதித்து=இரவும் பகலும் இருதயத்தில் ஒழுங்காகச் தியானித்து, நீதி உற நிகழ்த்தும் ஆனந்த பஞ்சகத்தை=ஒழுங்காகச் செய்துள்ள ஆனந்த பஞ்சகமெனப் பெயரிய கிரந்தத்தை, சோதியாம் அவன் பாத அர்ப்பணம் செய்து துதிப்பாம்=சுயம் பிரகாச வடிவ அக்குருமூர்த்தியின் திருவடிகளில் அர்ப்பித்துப் புகழ்வாம் எ—று.

ஏகாரம் இரண்டும் அசைநிலைகள்.

பதித்து நிகழ்த்தும் பஞ்சகத்தை அர்ப்பணஞ் செய்து துதிப்பாம் எனக் கூட்டுக.

குருமூர்த்தியின் பக்தி வல்லமையாலேயே நன்கு முடிந்தது என்பார் வேத நாயகனாகிய வீரசேகரன்றன் பாத தாமரையகர் நிசி நெஞ்சினிற்பதித்து என்றார். அவர் செய்த அநுக்கிரகத்திற்குப் பிரதி கைம்மாறு வேறென்றுங் காணாமையின் அர்ப்பணஞ் செய்து துதிப்பாம் என்றார்.

அகர் = பகல். நிசி = இரவு. 23

ஆகக் கூடுதல் செய்யுள். 791

ஸ்ரீ பஞ்சதசிப் பிரகரணம் மூலமும் உரையும் முற்றிற்று.

ஸ்ரீ சற்குருநாதன் துணை.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ பஞ்சதசியின்

## முதற்குறிப்பகராதி

ஸ்ரீ பஞ்சதசிச் செய்யுளின்

முதற்குறிப்பகராதி

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ பஞ்சதசீ.

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 8 | பிரத்தியக்கரன்மா | பிரத்தியக்கான்மா |
| 8 | 21 | அபரிசின்ன | அபரிச்சின்ன |
| 67 | 10 | (அனுமானத்தாலும்) | அனுமானத்தாலும் |
| 75 | 19 | வாஸ்தவ் | வாஸ்தவ |
| 92 | 11 | சத்தின் | சத்தத்தின் |
| 94 | 24 | தருமங்களில் | தருமிகளில் |
| 99 | 18 | ணதுவிருத்தி | ணநுவிருத்தி |
| 107 | 17 | குறைத்திடுவ | குரைத்திடுவ |
| 117 | 23 | தின்மை | தன்மை |
| 121 | 25 | தீங்கா | நீங்கா |
| 153 | 11 | களிலும் | களிலும், |
| 159 | 15 | நிரோவடிவ | நிரோதவடிவ |
| 163 | 16 | பிரதிபாதிப்பதற் | பிரதிபாதிப்பதிற் |
| 190 | 23 | பூதங்களின் | சரீரங்களின் |
| 191 | 9 | பரமான்வில் | பரமான்மாவில் |
| 192 | 1 | பரமான்வில் | பரமான்மாவில் |
| 215 | 20 | நீதான் | நீநான் |
| 217 | 14 | தாதான்மியத்தியாச | தாதான்மியாத்தியாச |
| 224 | 20 | நிடமாகிய | திடமாகிய |
| 227 | 28 | கேட்டோம் | கேட்டேம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 229 | 24 | மனோமய | மனமய |
| 229 | 12 | (இதுவுமது) | (அ—கை) |
| 233 | 23 | சங்க | சங்கற்ப |
| 247 | 19 | சங்கைக் | சங்கைக்கு |
| 249 | 9 | (கலப்பு | (சமத்தன்மை |
| 261 | 15 | மாயைப் | மாயையைப் |
| 272 | 15 | கற்பம | கற்பம் |
| 274 | 8 | வொணுவியல் | வெண்ணவொணுவியல் |
| 289 | 3 | பிரரேணம் | பிரேரணம் |
| 297 | 2 | 0 | திருப்தி தீபத்தின் |
| 306 | 9 | சுழுத்தி | மோக்ஷ |
| 318 | 16 | மிருந்தது | மிருந்ததது |
| 332 | 3 | சீவனுன | சீலனுன |
| 362 | 27 | தவரினும் | தவிரினும் |
| 365 | 2 | ளிலுள்ள | களிலுள்ள |
| 373 | 20 | விக்ஷேப் | விக்ஷேப |
| 379 | 31 | பிரமம | பிரமம் |
| 381 | 6 | ன றவாலே | ன றிவாலே |
| 392 | 11 | பொருந்தாது | பொருந்தாதது |
| 393 | 25 | இரண்டறகும் | இரண்டற்கும் |
| 404 | 16 | எ—று | என்பதுபொருள் |
| 407 | 2 | அத்துவீதிய | அத்துவிதீய |
| 408 | 25 | பிரகண | பிரகரண |
| 409 | 5 | அத்துவீதிய | அத்துவிதீய |
| 410 | 14 | வாக்கியங்கட்கு | வாக்கியங்கட்கும் |
| 414 | 10 | மாறுபோதம் விபரீத மாம = சுத்தியாதி ரூபத்வத்தைப் பரித்தி யாகஞ்செய்து | |
| 437 | 28 | 29 | 92 |
| 451 | 22 | யாதென்றும் | யாதொன்றும் |
| 454 | 4 | உயயமும | உபயமும் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 467 | 24 | முடியும். பரி | முடியும்பரி |
| 479 | 12 | மாருயி | மாருயிரி |
| 484 | 27 | பாடடது | பட்டது |
| 496 | 32 | ஞனன | ஞான |
| 504 | 19 | ஆனந்தம் | ஆனந்தத்தை |
| 504 | 19 | ஸ்பஷ்டம் | ஸ்பஷ்டமாக |
| 506 | 14 | இந்தக்கரும | இந்தத்தரும |
| 511 | 31 | சிதாபாதன் | சிதாபாசன் |
| 517 | 18 | ஒளிவும் | ஒழிவும் |
| 530 | 15 | விவரஞ்தி | விவரஞ்தி |
| 531 | 30 | தற்பித | கற்பித |
| 559 | 7 | இதத்து | இகத்து |
| 560 | 26 | பரியந்தமாக | பரியந்தமாக, |
| 563 | 31 | அந்த | அந்தந்த |
| 583 | 5 | சுக்ஷு | சக்ஷு |
| 585 | 26 | பரமபுருஷ | பரபுருஷ |
| 586 | 27 | திட்டனு | நிட்டனு |
| 592 | 14 | விஷயமாகமை | விஷயமாகாமை |
| 607 | 3 | பாகப்பிண்ட | போகப்பிண்ட |
| 620 | 7 | உபாயல் | உபாயம் |
| 627 | 19 | ஞானத்தன்மை | ஞாதத்தன்மை |
| 653 | 12 | யீட்டில் | யீற்றில் |
| ஷை | 18 | நாரதசுருக்ம் | நாரதருக்கும் |
| ஷை | 19 | பிரதிப்பாதிப்பது | பிரதிபாதிப்பது |
| 658 | 24 | மருவுறும் | மருவுறும் = |
| 660 | 27 | றுனரி | றுணரி |
| 663 | 14 | வுவமனும் | உவமனும் |
| 664 | 28 | அனந்தவ | அனந்த |
| 665 | 12 | விடமது | விடமமது |
| 672 | 9 | உழல் உரு | உழல்வுரு |
| 700 | 8 | விருத்தகளின் | விருத்திகளின் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 701 | 15 | யாதென்றையும் | யாதொன்றையும் |
| 706 | 26 | நாசம்இலை | நாசம் இல் |
| 747 | 4 | ஆன்மாவின்றும் | ஆன்மாவினின்றும் |
| 750 | 3 | யேநவோர்வு | நேயவோர்வு |
| 756 | 5 | அதனை | அதை |
| 769 | 32 | (முன்னவஸ்தையை | முன்னவஸ்தையை |
| 775 | 27 | வமயத்திலின் | வமயத்தினின் |
| 783 | 26 | முளமின் | முனமில் |
| 802 | 12 | ஆவதற்கு | மாவதற்கு |
| 808 | 16 | வாத்தமான | வர்த்தமான |
| 829 | 8 | சைதன்ய | சைன்னிய |
| 836 | 17 | இப்போது | [இப்போது |
| 839 | 10 | நினக்கா | நினக்காக |
| 847 | 28 | சிதானங்கள் | சிதானந்தங்கள் |

இந்தப் புஸ்தகம் புனவாசல் மடத்தின் வெளியீடு.
இதன் விலை ரூ. 6—0—0
கிடைக்குமிடங்கள்:—
மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகள்,
சாதுக்கள் மடம்,
வேதாரண்யம், (தஞ்சை ஜில்லா).

ஷண்முகானந்த சுவாமிகள்,
தக்ஷிணாமூர்த்தி மடாலயம்,
திருவாரூர்.

இனி வேதாந்த சித்தாந்தலேசங்கிரகம் உரையுடன் வெளிவரும்.

கருணாநிதி மின்சக்தி அச்சகம், வேலூர் (சேலம்).